உ

ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுரஸுந்தர்யை நம:



# ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமம்

(மூலம் நாகரத்திலும், தமிழிலும்.)



"ஸௌந்தர்ய லஹரீ"யை குறிப்புகளுடன்
தமிழில் மொழிபெயர்த்த

G. V. கணேச அய்யர், B. A., B. L.,

அவர்களால் எழுதப்பட்ட குறிப்புகளுடன் கூடியது.

1938.

விலை ரூ. 4—0—0.] [தபாற் செலவு வேறு.

உ

ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுரஸுந்தர்யை நம:

# பொருளடக்கம்.



## படங்கள்.

॥ श्रीः ॥

॥ श्रीललिता महात्रिपुरसुन्दर्यै नमः ॥



चतुर्भुजे चन्द्रकलावतंसे कुचोन्नते कुङ्कुमरागशोणे ।
पुण्ड्रेक्षुपाशाङ्कुशपुष्पबाणहस्ते नमस्ते जगदेकमातः ॥

(By Courtesy Sri Brahma Vidya Vimarsini Sabha)

॥ श्रीः ॥

॥ श्रीललिता महात्रिपुरसुन्दर्यै नमः ॥



चतुर्भुजे चन्द्रकलावतंसे कुचोन्नते कुङ्कुमरागशोणे ।
पुण्ड्रेक्षु पाशाङ्कुशपुष्पबाणहस्ते नमस्ते जगदेकमातः ॥

*(By Courtesy Sri Brahma Vidya Vimarsini Sabha.)*

உ

ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுர ஸுந்தர்யை நம:

# நமது விக்ஞாபனம்.

## (Publishers' Note).

ஸர்வேச்வரனான பகவானுடைய அநுக்ரஹத்தினால் தமிழ் மொழிபெயர்ப்புடன் கூடிய பாஷ்யத்துடன் ஸ்ரீலலிதாஸஹஸ்ர நாம கிரந்தத்தின் முத்ரண கைங்கர்யமானது நிர்விக்னமாகப் பூர்த்தியாகிவிட்டதை ஆஸ்திக ஸமூஹத்திற்கு மகிழ்ச்சியுடன் விக்ஞாபித்துக்கொள்ளுகிறோம்.

ஸ்ரீ ஜனார்தன முத்ராசாலையானது நமது நிர்வாஹத்திற்கு வந்தது முதல், அது பண லாபத்தைப் பெரிதாக நினைக்காமல் பொது நன்மைக்கான பல நற்கார்யங்களைச் செய்துவருகிறது. ஏற்கனவே, ஸௌந்தர்யலஹரீ, மூகபஞ்சசதி போன்ற உயர்ந்த கிரந்தங்களை அச்சிட்டு வெளிப்படுத்தி ஆஸ்திக ஸமூஹத்திற்குத் தொண்டு செய்திருப்பதுபோல், தற்போது மிக உத்தமக் கிரந்தமாகிய ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாம பாஷ்ய மொழி பெயர்ப்பு புஸ்தகத்தை அச்சிட்டு வெளிப்படுத்தியிருக்கிறது.

ஸ்ரீமான் ஜி. வி. கணேசய்யர் அவர்கள் ஆர்யதர்மம் பத்திரிகையின் கௌரவ ஆசிரியர் பதவியை ஏற்றதும், அப் பத்திரிகை மூலம் ஆஸ்திகர்களுக்கு அரிய விஷயங்களை வெளியிட விரும்பி ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமத்தை, ஸ்ரீ பாஸ்கரராய பாஷ்யத்திற்கிணங்க இனிய தமிழ் நடையில் பல அபூர்வ விவரணங்களுடன் பிரசுரிக்கத் தொடங்கினர். இந்த மொழி பெயர்ப்பு விஷயத்தில் அவர் எடுத்துக்கொண்ட பரிச்ரமமும், காட்டிக்கொண்ட திறமையும் வெகு அதிகமாகும். ஸ்ரீ பாஸ்கர ராயருடைய பாஷ்யத்தை மொழி பெயர்ப்பதென்றால் எளிதான கார்யமல்ல. மிகக் கம்பீரமான நடையில் ஸகல சாஸ்திர தத்வங்களை வெளியிடுவதும், மிக்க அபூர்வமான

பொருள்சுவை நிறைந்ததாயுமுள்ள அந்த பாஷ்யத்தை ஸ்ரீமான் அய்யர் அவர்கள் வெகு எளிதாயும், தெளிவாயும், ஸாதாரண மக்கள் கூட அதன் மஹிமையை உணரக்கூடிய வழியிலும் வெகு ஜாக்ரதையுடன் மொழிபெயர்க்கலானுர்.

பாஷ்யத்தில் சொல்லப்பட்ட அநேக அபூர்வ விவரணங்களை வெளியிட்டிருப்பது தவிர, தாமாகவே தமது ஆராய்ச்சி மூலமாகப் பற்பல கிரந்தங்களிலிருந்தும் அநேக விஷயங்களை எடுத்தெழுதி பாஸ்கர பாஷ்யத்திற்கே புதிய சோபையைக் கொடுத்திருக்கிருரென்பது மிகையாகாது. ஆர்யதர்மத்தில் இவைகளைப் படித்த அநேக பிரபல பண்டிதர்கள் இந்த மொழி பெயர்ப்பு சாதுர்யத்தை மிகவும் வியந்துகொண்டாடியதை நாம் அறிவோம். இது ஆர்யதர்மத்தில் பிரசுரமாகிய காரணத்தால் அப்பத்திரிகைக்கும் அபிமானிகள் அதிகரித்தார்கள்.

இதுவரையில் இந்த பாஷ்யத்திற்கு இவ்வளவு தெளிவான நடையில் தமிழ் மொழிபெயர்ப்பு ஏற்படவில்லை. ஸம்ஸ்கிருத பாஷா பரிசயம் இல்லாத தேவீ பக்த சிகாமணிகள் பலரும் ஸ்ரீ அம்பாளின் மஹிமையையும், ஸ்ரீ பாஸ்கரராயருடைய அபூர்வ வ்யாக்யாநத்தின் சுவையையும் யதார்த்தமாக அறிய ஸ்ரீமான் கணேசய்யர் செய்துள்ள உபகாரம் ஸாமான்யமானதல்ல.

ஆர்யதர்மத்தில் இதைப் படிப்பதில் அம்பிகா பக்தர்கள் அளவுகடந்த உத்ஸாஹம் காட்டியதிலிருந்து, இந்த மொழி பெயர்ப்பைத் தனிப்புஸ்தகமாக வெளியிடலாமாவென்ற யோஜனை உதித்தது. இதை பத்திரிகை மூலம் அறிவித்ததும், அநேக அபிமானிகள் இதைப் பூர்ணமாக ஆதரித்து முன் பணம் அனுப்பியும், வேறு வழியிலும் நமக்கு உத்ஸாஹமும் தைர்யமும் ஊட்டினுர்கள். இதைக்கொண்டு அச்சிடும் வேலை சிறிது ஆரம்பித்ததும், நமது தௌர்பாக்யவசத்தால் ஸ்ரீமான் கணேசஅய்யரின் பௌதிக உடலானது திடீரென மறைய நேரிட்டது. இதனுல் பலர் மனமொடிந்து வருந்தியது அளவில்லை. ஆயினும், ஸ்ரீமான் அய்யர் தாம் மறையும் முன்னரே தமது மனதிற்கு மிக உகந்ததான இந்த மொழிபெயர்ப்புக் கைங்கர்யத்தைப்

பூர்த்திசெய்து வைத்திருந்தார். அதன் பிரதிகள் யாவும் பூர்ணமாக நம்மிடம் அவரால் கொடுக்கப்பட்டிருந்தபடியால், ஸ்ரீமான் அய்யருடையவும், ஸ்ரீ அம்பிகா பக்தர்களுடையவும் மனோரதத்தைத் தலைக்கட்டிவைக்கும் பாக்யம் நமக்குக் கிடைத்தது.

இதில் ஸஹஸ்ரநாமாவளீ, அகராதிவரிசையில் நாமங்கள், பாஸ்கரராய சரித்திரம், ஸ்ரீ ந்ருஸிம்ஹானந்தருடைய பரிபாஷா ஸ்லோகங்கள், முகவுரை, முதலிய அநுபந்தங்களும் அச்சிடப் பட்டிருக்கின்றன.

கூடியவரையில் அச்சுப்பிழை முதலியவைகளைத் தவிர்க்க விசேஷ பரிச்ரமம் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆயினும் பெரிய புஸ்தகத்தில் தவறுதலால் சில பிழைகள் நேருவது ஸாதாரணமே. அவைகளைக் கூடியவரையில் திருத்தியிருக் கிறோம். மேலும், மூலத்திலும், வியாக்யானத்திலும், சிற்சில பிரசுரங்களை அநுஸரித்துச் சில பாடபேதங்களாலும் சிறிது சிரமம் நேர்ந்தது. அவைகளைக் கூடியவரையில் பாஷ்யத்தின் போக்கை அநுஸரித்து அச்சிட்டிருக்கிறோம். ஆயினும் இவ் விஷயமான குணதோஷங்களையும், வேறு ஆலோசனைகளையும் அபிக்ஞர்கள் நமக்கு எழுதினால் அவைகளை மறு பதிப்பில் கவனிக்க தயாராயிருக்கிறோம்.

புஸ்தகத்தின் விலை விஷயமாக நாம் எவ்வளவு ஸௌகர்யம் செய்யமுடியுமோ அதைச் செய்திருப்பதாக நினைக்கிறோம். புஸ்தகத்தின் பக்கங்களையும், அச்சியற்றுவதில் நேர்ந்த செலவு, சிரமங்கள் இவைகளையும், கடிதாசு விலையேற்றம் முதலியவை களையும் கவனிப்பவர்களுக்கு நாம் குறிப்பிட்ட விலை மிகவும் நியாயமானதென விளங்கும். எல்லாவித அதிகாரிகளும் இப் புஸ்தகத்தை பாராயணம் செய்து ஸ்ரீ அம்பாளின் அநுக்ரஹத் ததைப் பெறவேண்டுமென்ற முக்ய நோக்கத்துடனேயே விலையை நிஷ்கரித்துள்ளோம்.

இப் புஸ்தகத்திற்கு ஸ்ரீஅம்பாள் பக்த சிகாமணியும் ஸ்ரீ வித்யா விஷயமாக அநேக புஸ்தகங்களை வெளியிட்டு

உபகரித்து வருபருமான ஸ்ரீமான் அருட்கவி. ந. சுப்பிரமண்ய அய்யர் அவர்கள் அரிய கருத்துக்களடங்கிய முகவுரை ஒன்று எழுதி இப் புஸ்தகத்தை அலங்கரிக்க இசைந்ததற்கு நமது மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

இதை அச்சிடுவதில் நமக்குப் பல வழிகளிலும் உதவி புரிந்த நண்பர்களுக்கு நமது நன்றி உரித்தானது.

இப்புஸ்தகத்தை ஆஸ்திகர்கள் ஆதரித்து, நமது பரிச்ரமத்தையும் ஸபலமாக்கி, ஸ்ரீ அம்பாளுடைய அளவற்ற கிருபைக்குப் பாத்திரர்களாகும்படி பிரார்த்திக்கிறோம்.

கும்பகோணம்,
15—11—1938.

**Publishers.**

உ

ஸ்ரீலலிதா மஹாத்ரிபுர ஸுந்தர்யை நம:

# முன்னுரை.

## I. நூல் வரலாறு.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாம மென்னும் சிறந்த ஸ்தோத்திர மானது ஸ்ரீமத்பிரஹ்மாண்ட புராணத்தின் உத்தரகாண்டத்தில், ஸ்ரீ ஹயக்ரீவருக்கும் அகஸ்தியருக்கும் நடந்த ஸம்வாதரூப லலிதோபாக்கியானத்தில் உள்ளதாகும்.

ஸ்ரீ லலிதோபாக்கியானமானது, மந்த்ர கண்டம், நியாஸ கண்டம், பூஜாகண்டம், புரச்சரணகண்டம், ஹோமகண்டம், ரஹஸ்யகண்டம், ஸ்தோத்திரகண்டம் என்னும் பல பிரிவுகளை யுடையதாகும். இவற்றுள் ஸ்தோத்திர கண்டத்தில் சியாமளா, வாராஹி இவர்களின் ஸஹஸ்ர நாமங்களும், பஞ்சமீஸ்தவராஜம் முதலிய பல ஸ்தோத்திரங்களும் இந்த லலிதா ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரமும் கூறப்பட்டுள்ளன.

இது வசினீ, காமேச்வரி முதலிய வாக்தேவதைகளால் பர தேவதையின் ஆஜ்ஞையின்பேரில், பக்தர்களின் ஹிதத்திற்காகச் செய்யப்பட்டதாகும். இந்த ஸ்தோத்திரத்தைப் பக்தர்கள் அர்த் தாநுஸந்தானத்தோடு பாராயணஞ்செய்து அம்பாளைத்துதித்துத் தியானிக்கின் அம்பாள் வெகு சீக்கிரத்தில் பரம ப்ரீதியை யடைகின்றனள் என்பது சாஸ்திர ஸித்தாந்தமாம்.

பிரஹ்மாண்ட புராணமானது பதினெட்டு மஹா புராணங் களில் கடைசியதாகும். புராண கர்த்தாவாகும் ஸ்ரீ வேத வியாஸர் இந்த பிரஹ்மாண்ட புராணத்தில், ஸகல மந்த்ர சாஸ்திர விஷயங்களையும், பிரஹ்மவித்யா ஸ்வரூபத்தையும் நன்கு பிரதி பாதனஞ் செய்திருக்கின்றனர்.

## II. புராணங்களின் தத்துவம்:—

வேதத்தில் அதிகாரமில்லாதவர்களுக்கு வேதார்த்தத்தைத் தெரிவிப்பதற்கும், வேதத்திலுள்ள துரூஹமான சில விஷயங்களைச் சில ஆக்யாயிகைகளின் மூலமாய் விளக்குவதற்கும் தான் புராணங்கள் ஏற்பட்டன. ஆதலின் புராணங்கள் வேதத்தின் உப ப்ரஹ்மணமாம். வேதம் கர்மகாண்டம், உபாஸனா காண்டம், ஞானகாண்டமென மூன்று பெரும் பிரிவுகளையுடையது; கர்மகாண்டத்தின் உபப்ரஹ்மணங்கள் தர்ம சாஸ்திரங்களும், ஸ்ம்ருதிகளுமாம்; உபாஸனா—ஞானகாண்டங்களின் உப ப்ரஹ்மணம் புராணாதிகளாகும். ஆகவே புராணாதிகளுக்குப் பிரஹ்ம ஸ்வரூபத்தில் தாத்பர்யமே தவிர மற்றதிலன்று.

இந்த லலிதா ஸஹஸ்ரநாமமும், புராணாந்தர்க்கதமாயிருத்தலின் இதற்கும் பிரஹ்மத்தில்தான் தாத்பர்யமிருத்தல் வேண்டும். பிரஹ்மத்தை, ஸாதகன் தனக்கபேதமாய் அறிதற்கு நேர் ஸாதனமானது பிரஹ்மவித்தை அல்லது ஸ்ரீவித்யையாகும். ஸ்ரீவித்யா ஸ்வரூபிணியே லலிதாம்பாள், லலிதை, த்ரிபுரஸுந்தரி, பரை, பராபட்டாரிகை, பராஹந்தா, சித்சக்தி, ஸம்வித் முதலிய பெயர்கள் ஒரே அர்த்தத்தோடு கூடியனவாகும். ஸ்ரீவித்யையைப்பற்றி ஒரு விரிவான விமர்சம் இந்நூலில் செய்யப்பட்டுள்ளது. அதைச் சாவதானத்தோடு வாசித்தறிதலவசியம்.

## III. லலிதா ஸஹஸ்ரநாமம் வேத துல்யமே:—

இந்த லலிதா ஸஹஸ்ரநாமம் வசினீ முதலிய வாக்தேவதைகளாலியற்றப்பட்டதாகுமென முன்னர் கூறப்பட்டது. இந்த வாக்தேவதைகள் அம்பாளின் வாக்விபூதிகளேயாவர். பரா ஸ்வரூபிணியான பரதேவதையின் வாக்விபூதிகள் பஶ்யந்தீ, மத்தியமை, வைகரிகள். यस्य निश्वसितं वेदाः என்னும் பிரமாணப்படி வேதங்கள் பரமேஶ்வரனுடைய மூச்சுக்களாகும். உஶ்வாஸ நிஶ்வாஸ ரூப மூச்சுக்கள், பிராணவாயுவின் சலனத்தால் ஏற்படுகின்றன.

வைகரீ, மத்தியமை, பஶ்யந்தீ வாக்குகளுக்கும் பிராணஸ்பந்தமே காரணம். ஆதலின் உஶ்வாஸ நிஶ்வாஸங்களும் வாக்குகளும் ஒரே காரணத்தினின்றும் ஏற்படுவனவாயிருத்தலின்

...வற்றிற்குப் பரஸ்பரம் அபேதமுண்டு; எனவே பரதேவதையின் ...ரக்விபூதிகளாகும் வசின்யாதிகளாலியற்றப்பட்ட இந்த ஸஹஸ்ர ...ம ஸ்தோத்திரமும் பரமேச்வரனுடைய உச்வாச நிச்வாஸ ...மாகும் வேதமும் ஸமானமே; ஒன்றுக்கொன்று வேறு ...ட்ட தன்மையதன்று. வேதம், எங்ஙனம், பரவித்தை அபர ...த்தைகளோடு கூடி விளங்குகின்றதோ, இதுவும், அங்ஙனமே ...ர்க்குண ஸ்தோத்திர ரூப பரவித்தையோடும், ஸகுண ஸ்தோத் ...திர ரூப அபரவித்தையோடும்கூடி விளங்குகின்றது.

வேதத்தின் ருக்குக்களுக்கும் வாக்கியங்களுக்கும் எங்ஙனம் ...ஸர்வாநுக்ரமணிகை ஏற்பட்டுள்ளதோ, அங்ஙனமே, இதற்கும் ...சலாக்ஷரஸூத்திர மென்னும் ஒரு அநுக்ரமணிகை பிராசீனமாய் ...ஏற்பட்டுள்ளது. இந்த ஸூத்ரங்களை இயற்றிய பெரியார் இன் ...னார் என்று தெரியவில்லை. இது வசின்யாதிகளே இயற்றியிருக் ...கலாமென வொப்புவதில் யாருக்கும் ஆக்ஷேபமிராதென்று ...நினைக்கிறேன்.

## IV. ஸஹஸ்ர நாமத்தின் அமைப்பு:—

இந்த சலாக்ஷர ஸூத்திரங்கள் இருபத்தினான்கு. இவற்றுள் சில பரதேவதையின் ஆயிரம் நாமங்களுள் இத்தனை இத்தனை நாமாக்கள் இன்ன இன்ன அக்ஷரத்தோடு துவக்கப்பட்டுள்ள தெனத் தீர்மானிக்கின்றன. இந்த ஸ்தோத்திரத்திலுள்ள நாமாக் களெல்லாம் முப்பத்திரண்டு அக்ஷரங்களால் ஆரம்பிக்கப்படு கின்றன. இவ்விஷயம் இந்நூலின் இறுதியிலுள்ள "நாமங்களின் அகராதி வரிசை" யில் காண்க.

द्वात्रिंशद्भेदभिन्ना च य तां वंदे वरप्रदां ।
अकारादिक्षकारांतै र्वर्णैरत्यंत निर्मलैः ।
अशेषशब्दैर्या भाति तामामोदप्रदां नुमः ॥

என்னும் ஸூதஸம்ஹிதாப் பிரமாணத்தின்படி முப்பத்திரண்டு அக்ஷரங்களால் துவக்கப்பட்டிருப்பது அறியத்தக்கது. ஆரம் பிக்கப்படும் ஒவ்வோரெழுத்திற்கும் இத்தனை நாமாக்கள் என்றும் ஸூத்திரம் அளவிடுகின்றது.

அநாதியாயுள்ள சலாக்ஷர ஸூத்திரங்களின் விவரண ரூபமாயுள்ள பரிபாஷா ஸூத்திரங்கள் 40. இவை ஸ்ரீ ந்ருஸிம்ஹானந்த யஜ்வாவாலியற்றப்பட்டிருக்கின்றன. இவர்தான் இந்த பாஷ்யகர்த்தாவாகும் ஸ்ரீ பாஸுரானந்த நாதரென்னும் பாஸ்கரமகியின் வித்யாகுரு. ஸூத்ரங்களுக்கும் தற்காலம் அச்சிட்டுள்ள பாஷ்யத்திற்கும் சில நாமாக்களில் மாறுபாடுகள் காணப்படுகின்றன. अ காரத்தில் ஆரம்பமாகும் நாமாக்கள் (नट) 10 என்றும், ज காரத்தில் ஆரம்பிக்கப்படும் நாமாக்கள் (धूप) 19 என்றும் श காரத்தில் துவக்கப்படும் நாமங்கள் (धर्मे) 59 என்றும் स காரத்தில் ஆரம்பமாவன (खखोल्क) 122 என்றும் ஸூத்ரம் நிர்த்தாரணம் செய்கின்றது. ஆனால் இப்பொழுது இருக்கும் பாஷ்யத்தின்படி சில சில வேறுபாடுகள் காணப்படுகின்றன. अ என்னும் அக்ஷரத்தில் துவக்கப்படும் நாமாக்கள் 11 இருக்கின்றன. இதில் ஒரு நாமம் அதிகம். ज காரத்தில் ஆரம்பமாகும் பெயர்கள் 18 தான் இருக்கின்றன. இதில் ஒன்று குறைவு. ஆகலின் ஸூத்திரத்தின்படி ज காரத்திலுள்ள ஒரு நாமா अ கார நாமாவாய் மாறியிருத்தல் வேண்டுமென ஊகிக்கத்தக்கதாயிருக்கின்றது. "சிஞ்ஜானமணி மஞ்ஜீர மண்டித ஸ்ரீபதாம்புஜா" என்னும் நாமமானது ஸூத்திரப்படி "ஸிஞ்ஜான" என்று स கார நாமாக்களில் சேர்க்கப்பட்டுள்ளது; "சிஞ்ஜான"வென்று श காரவரிசையில் சேர்ப்பதுதான் ஸரியாகத் தோன்றுகின்றது. அன்றியும் முதலாவது பரிபாஷா ஸூத்திரத்தில் त्रिगुणैः என்று குண சப்தத்தோடு ஆரம்பிக்கப்படுவன மூன்று நாமாக்கள் அவை குணநிதி:, குணாதீதா, குணப்ரியா என்று குறிக்கப்பட்டிருக்கின்றன; ஆனால் குணப்ரியா என்றும் நாமம் இல்லை; இதற்குப்பதில் குருப்ரியா என்று இருக்கின்றது. இது ஒரு மாறுபாடு. இத்தகைய வெகு சொற்பமான வேறுபாடுகளால் ஒரு தோஷமும் இல்லை என்று ஸ்ரீ பாஸ்கரராயரே தமது பாஷ்யத்தின் இறுதியில் கூறியுள்ளார்.

இந்த ஆயிரம் நாமாக்களும் மந்த்ராத்மகமானவை. ஆகலின் ஒவ்வொரு மந்த்ரமும் இத்தனை இத்தனை எழுத்துக்களோடு கூடியவை யென்றும் ஸூத்திரங்கள் நிச்சயிக்கின்றன. இங்ஙனம் நிச்சயிப்பதோடு அவற்றின் வரிசைக்கிரமும் குறிப்பிடப்படு

கின்றது. ஆகலின் நாமாக்களின் வரிசைக்கிரமத்தை மாற்றவோ, அல்லது புது நாமாக்களை நுழைக்கவோ அல்லது உள்ள நாமாக்களை வேறுவிதமாய் மாற்றவோ சற்றும் முடியாது.

மந்த்ர ஸ்வரூபமாயுள்ள ஒவ்வொரு நாமாவும், பக்தியோடு ஜபம் செய்பவர்க்குப் பயனை யளிக்கின்றது. இவ்விஷயம் உத்தர பாகத்தில் நன்கு கூறப்பட்டுள்ளது.

இந்த ஆயிரம் நாமாக்கள் அடங்கிய முழு ஸ்தோத்திரமும் ஒரு பெரிய மாலா மந்த்ர ஸ்வரூபமானது. இந்த மந்த்ரத்திற்கு நான்கு வர்ணத்தாரும் அதிகாரிகளே.

இந்த ஆயிரம் நாமாக்களின் வரிசைக் கிரமத்தில் பிரஹ்மாபின்ன கூடஸ்த ஸ்வரூப சித்சக்தியின் தடஸ்த ஸ்வரூப லக்ஷணங்களின் அர்த்தம் ஒரு தொடர்ச்சியாய் அமைந்துள்ளதென்பது நுட்பமாய் ஆராய்ந்தறிபவர்க்குப் புலப்படாமற் போகாது.

சாரீரக மீமாம்ஸை என்னும் பிரஹ்ம ஸூத்திரத்தில், பிரஹ்மத்தை யறியும் வேட்கையுள்ள உத்தமாதிகாரிக்கு जन्माद्यस्य यतः என்றும், உபநிஷத்துக்களில் तज्जलानितिशान्त उपासीत என்றும், பிரஹ்மத்தின் தடஸ்த லக்ஷணமே கூறப்பட்டிருக்கின்றது. பிரஹ்ம காண்டமாகும் உபநிஷத்துக்களின் அர்த்தப் பிரதிபாத்தியமாகும் புராணங்களில் அந்தர்ப்பூதமான இந்த ஸஹஸ்ரநாமத்திலும் முதல் மூன்று நாமாக்களால் பிரபஞ்சத்தின் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களுக்குச் சித்சக்தியே காரணம் என்று கூறப்பட்டுள்ளது. அவை ஸ்ரீமாதா - ஸ்ரீமஹாராக்ஞீ, ஸ்ரீமத் ஸிம்ஹாஸநேஶ்வரீ - என்பனவாம். நான்காவது நாமம் முதல் 999-வது நாமம் வரையில் பரதேவதையின் பஞ்சகிருத்தியங்களுள் இறுதியதான திரோபாவ, அநுக்கிரஹங்கள் கூறப்பட்டிருக்கின்றன. ஜீவர்களுக்குப் பந்தமும் மோக்ஷமும், முறையே திரோபாவ அநுக்கிரஹங்களால் ஏற்படுகின்றனவாதலின், பந்த நிவர்த்தியின் பொருட்டும் ஆநந்த ப்ராப்தியின் பொருட்டுமான ஸாதனங்கள் விஸ்தாரமாய் இந்நூலில் கூறப்பட்டுள்ளன. கடைசியதான "லலிதாம்பிகா" என்னும் நாமமானது அபரோக்ஷ ஸாக்ஷாத்கார அநுபவத்தைக் கூறுகின்றது. இவ்விஷயம் ஸ்ரீமத் பரமஹம்ஸ, கோடகநல்லூர் ஸுந்தர ஸ்வாமி

களால் இயற்றப்பட்ட ஸ்வாநுபூதிரஸாயனத்தில் ஸ்ரீலலிதாநுபூதி பிரகரணத்தில் கன்கறிக. நிற்க, "சிதக்னி குண்டஸம்பூதா" வென்னும் நான்காவது நாமம் முதல் "சிவசக்த்யைக்கிய ரூபிணீ" என்னும் 999-வது நாமா வரையிலுமுள்ள அவாந்தர நாமாக்களையும் சற்று சீர்தூக்கிப் பார்ப்போமாயின் கீழ்க்குறித்த விஷயங்கள் வெளிப்படுகின்றன:—

| நாமாக்களின் ஸங்கியை. | கூறப்படும் விஷயம். |
|---|---|
| 4, 5. | பிரகாச ஸ்வரூபம். |
| 6. | விமர்சஸ்வரூபம். |
| 7—51. | ஸ்தூல ஸ்வரூப வர்ணனை. |
| 52, 53, 54. | பரதேவதை விளங்கும் ஸ்தானம். |
| 55—63. | ஸ்ரீபுரம் அம்பாள் விளங்கும்ஸ்தானம்முதலியன. |
| 64—84. | அம்பாள் சிதக்னி குண்டத்தில் அவதரித்துச் செய்த கார்யங்கள். இவற்றில் பரதேவதையின் பரம ரஹஸ்யார்த்தரூப வாஸனை கூறப்பட்டுள்ளது. |
| 85, 86, 87. | மந்த்ரரூப ஸூக்ஷ்ம ஸ்வரூபம். |
| 88, 89. | ஸூக்ஷ்மதரமாகும் காமகலா ஸ்வரூபம். |
| 90—112. | ஸூக்ஷ்மதமமாகும் குண்டலினீ ஸ்வரூபம். |
| 113—131. | ஸ்தூலம், பரம், ஸூக்ஷ்மம், ஸூக்ஷ்மதரம் ஸூக்ஷ்ம தமம் என்னும் ஐந்துவகையான ரூபங்களோடுள்ள பரதேவதையை அடையும் உபாயங்கள். |
| 132,133, 134. | பசுத்தன்மைக்கு அதீதமானவளெனல். |
| 135. | க்ஷணிகவிக்ஞானவாதியின் மத கண்டனம். |
| 136. | ஆகாரத்தோடு கூடியதென்று கூறும் வாதியின் கண்டனம். |
| 137. | சூன்யவாதி கண்டனம். |
| 138. | தார்க்கிக மத கண்டனம். |
| 139. | "அவயவத்தோடு கூடியது ப்ரஹ்மமென்னும்" வாதிகண்டனம். |

141. "ஸத்யகாமம் முதலிய குணங்களோடு கூடிய தென்னும்" வாதி கண்டனம்.
147. சார்வாக மத கண்டனம்.
151. துவைத மத கண்டனம்.
153—256. பரதேவதையின் விதிமுக நிஷேத முக லக்ஷணங்கள்.
257—274. பஞ்சாவஸ்தைகளிலுள்ள ஜீவர்களது அதிஷ்டானமாயும், பஞ்சப்பிரஹ்மங்களுக்கு அதிஷ்டானமாயுமுள்ள அம்பாளது ஸ்வரூபம்.
275—999. மந்த்ர சாஸ்திரம், யோக சாஸ்திரம், அத்வைத சாஸ்திரம், பக்தி சாஸ்திரம் முதலிய சாஸ்திரங்களின் பரமரஹஸ்ய தாத்பர்யங்கள், மனன நிதித்தியாஸன விஷயங்கள் முதலியவை கூறப்பட்டிருக்கின்றன.

இந்த ஸஹஸ்ர நாமாக்களின் ஆதிமுதல் அந்தம் வரையிலுள்ள தொடர்பைக் கூர்ந்து நோக்குவோமாயின், ஸமன்வயம் அவிரோதம், ஸாதனம், பலன் என நான்காக வகுக்கப்பட்டுள்ள பிரஹ்ம ஸூத்திரத்தின் அமைப்பு இதற்கும் ஏற்படுகின்றது.

1, 2, 3 தடஸ்த லக்ஷணம்.
4—131. ஸமன்வயம் - எல்லாம் சித்சக்தி ஸ்வரூபமேயெனல்.
132—256. அவிரோதம் - பிறமத கண்டனங்கள், பிரபஞ்சாதீத ஸ்வரூபம் முதலியன.
257—274. த்வம்பத தத்பத விசாரரூப ஸாதனம்.
275—999. பலவித சாஸ்திர ஸித்தாந்தங்களைக் கொண்டும், யுக்திகளைக்கொண்டும் மனன நிதித்யாஸங்களைச் செய்தல்.
1000. அபரோக்ஷ ஸாக்ஷாத்கார வடிவ பலன்.

(1) அத்வைத சாஸ்திர சம்பந்தமான நாமாக்கள்:— அமேயா, அஜா, ஆத்மவித்யா, ஏகாகினீ, அந்தர்முக ஸமாராத்யா, கேவலா, கூடஸ்த்தா, குணாதீதா, சின்மயீ, சிதி:, சிதேகரஸரூபிணீ, சித்சக்தி:, சேதனரூபா, க்ஞானவிக்ரஹா, தத்பதலக்ஷ்யார்த்தா,

தத், த்வம், அயீ, த்வைத வர்ஜிதா, தேசகாலாபரிச்சின்னா, நிராதாரா முதலிய பல நாமங்கள், நைஷ்கர்ம்யா, பரா, பிரஹ்மரூபா, பிரஹ்மாத்மைக்ய ஸ்வரூபிணீ, பூமரூபா, மோஹநாசினீ, மித்யாஜகதிஷ்டானா, முக்திதா, முக்தி நிலயா, வேத வேத்யா, வ்யாபினீ, சிவா, ஶ்ருதி ஸீமந்த ஸிந்தூரீக்ருத பாதாப்ஜதூளிகா, சிவங்கரீ, சாஶ்வதீ, ஸத்யாநந்தஸ்வரூபிணீ, ஸச்சிதாநந்தரூபிணீ, ஸர்வோபநிஷதுத்குஷ்டா முதலியனவாகும்.

(2) மந்த்ர சாஸ்திரத்திற்கும் ஸ்ரீவித்யைக்கும் ஸம்பந்தப்பட்ட நாமாக்களாவன:— அகுலா, ஆதிசக்தி, இச்சாசக்தி க்ஞானசக்திக் கிரியாசக்திஸ்வரூபிணீ, ஈ, உமா, ஓட்யாணபீட நிலயா, கதம்பவனவாஸினீ, காமாக்ஷீ கிரிசக்ர ரதாரூட தண்டநாத புரஸ்க்ருதா, காமேஶ்வர முகாலோக கல்பித ஸ்ரீ கணேஶ்வரா, கராங்குளி நகோத்பன்ன நாராயண தசாக்ருதி:, காமேஶ்வராக்னி நிர்த்தக்த ஸபண்டாஸுர ஶூன்யகா, முதலிய லலிதோபாக்யானம், தேவீபாகவதம் முதலியவற்றிற்குச் சம்பந்தப்பட்ட நாமாக்கள், குருமண்டல ரூபிணீ, குருப்ரியா, மநுவித்யா, சந்த்ர வித்யா, சித்கலா, க்ஞானமுத்ரா, ஞானஞேய ஸ்வரூபிணீ, தத்வாஸனா, த்ரிகோணாந்தர தீபிகா, த்ரிகண்டேசீ, த்ரிகோணகா, பஞ்சப்ரேதாஸனாஸீனா, பஞ்சக்ருத்ய பராயணா, ப்ரதிபன் முக்யராகாந்த திதிமண்டல பூஜிதா, பாசஹஸ்தா, பஞ்சஸங்க்யோபசாரிணீ, பிஸதந்துதனீயஸீ, பிந்துமண்டல வாஸினீ, பலிப்ரியா, பிந்துதர்ப்பண ஸந்துஷ்டா, பகமாலினீ, மஹாதந்த்ரா, மஹாமந்த்ரா, மஹாயந்த்ரா, மஹாயாக க்ரமாராத்யா, மேரு நிலயா, மந்த்ரஸாரா, ரஹஸ்தர்ப்பண தர்ப்பிதா, விமர்சரூபிணீ, வீரமாதா, ஸ்ரீவித்யா, ஸ்ரீஷோடசாக்ஷரீ வித்யா, ஸ்ரீசக்ரராஜநிலயா, ஸர்வ மந்த்ரஸ்வரூபிணீ, ஸாமரஸ்ய பராயணா, என்பனவாதிகளாம்.

இந்த ஸஹஸ்ரநாமமானது, ஸமயம், கௌலம், மிச்ரம் முதலிய எல்லா அவாந்தர மதங்களுக்கும் இடம் தந்து அவற்றைப் போஷிக்கின்றது.

(a) ஸமய மதத்தைக்கூறும் ஸமயாந்தஸ்தா, ஸமயாசார தத்பரா முதலிய நாமாக்களும் (b) கௌலமதத்தைக்கூறும் கௌள மார்க்க தத்பர ஸேவிதா, குலேஶ்வரீ, குலஸங்கேத பாலினீ

குலாம்ருதைக ரஸிகா முதலியனவும் இதில் அடங்கியிருக்கின்றன.

(3) யோக ஸம்பந்தமாய்ச் சில நாமாக்கள் இதில் கூறப்பட்டுள்ளன; அவையாவன:—மூலாதாரைக நிலயா, ப்ரஹ்மக்ரந்தி விபேதினீ, **101** முதல் **110** வரையிலுள்ள நாமாக்கள். விசுத்தி சக்ரநிலயா முதல் 62 நாமாக்கள் யோகினீ ந்யாஸக்ரமமாயுள்ளனவும், யோகினீ, யோகதா, யோக்யா, யோகாநந்தா முதலியனவுமாம். மேலே 101வதான மணிபூராந்தருதிதா என்னும் நாமமானது ஸமய மதரீதியான பாவனாயோகப் பிரதிபாத்யமானது. இதில் குண்டலினீ சக்தியின் பிரபோதமும், கிரந்தித்ரயங்களின் சேதனமும், மற்றும் கூறப்பட்டுள்ளன. யோக பாவனை ஸமய மத ரீதியாயும் கௌளமத ரீதியாயும் கூறப்பட்டிருக்கின்றன.

(4) பக்தி கம்யா, பக்தி வச்யா, பக்த ஸௌபாக்ய தாயினீ, பக்திப்ரியா, க்ஷிப்ரப்ரஸாதினீ, பக்த சித்த கேகீ கநா கநா, நாம பாராயண ப்ரீதா, லோபா முத்ரார்ச்சிதா, த்யான கம்யா, புலோம ஜார்ச்சிதா, வரதா, காமபூஜிதா முதலிய நாமாக்கள் உபாஸனா காண்டமாகும் பக்தி சாஸ்திர சம்பந்தமானவையாகும்.

(5) கர்மகாண்ட ஸம்பந்தமாயும் சில நாமாக்கள் இருக்கின்றன. அவை, க்ருதக்ஞா, சிஷ்டேஷ்டா, சிஷ்டபூஜிதா, ஸ்வாஹா, ஸ்வதா, சுபகரீ, ஸாம்ராஜ்ய தாயினீ, தீக்ஷிதா, யக்ஞரூபா, யக்ஞப்ரியா, யக்ஞகர்த்ரீ, யஜமானஸ்வரூபிணீ, தர்மாதாரா, வர்ணாச்ரம விதாயினீ, முதலியனவாம்.

இங்ஙனம் பூராயமாய் விசாரிக்கின், இந்த ஸஹஸ்ர நாமத்தில் இல்லாத விஷயமே கிடையாதென்று நன்கு புலப்படும்.

(6) அன்றியும், ஸகல சாஸ்த்ரார்த்த ஸாரமாய்ச் சில நாமாக்கள் உள்ளன. அவை, விச்வரூபா, பசுபாசவிமோசினீ, பரா, மூலப்ரக்ருதி, பராகாசா, பராபரா, ஸவ்யாப ஸவ்யமார்க்கஸ்தா, பிஸதந்து தனீயஸீ முதலியனவாம். இவற்றின் மஹிமை பாஷ்யத்தினால் நன்கு விளங்குவதாகும்.

இதில் பிரஹ்மத்தைச் சக்தியாய்க் கூறப்பட்டுள்ளது. இது தான் பிரஹ்ம சக்தி, ஆத்ம சக்தி, சித்சக்தி, என்பனவாதி பல

பெயர்களால் வழங்கப்படுகின்றது. ஆயினும் இது அநாமாக்யை—பெயரற்றது; ஆதலின் ரூபமற்றது. சித்சக்தியைப்பற்றி அதிகமாய் அறியவிரும்புபவர், இந்நூலிலேயே தனியாய்ச் சேர்க்கப்பட்டுள்ள "ஸ்ரீவித்யை" என்னும் பிரகரணத்தில் கண்டறியவும்.

இந்த ஸஹஸ்ரநாமப் பிரதிபாத்யமாகும் சித்சக்திக்கு எந்த லிங்கமும் கிடையாதாதலின் நிஷ்களம். லிங்க வ்யவஸ்தையற்ற சித்சக்தியை வாக்கினால் கூறுதல் முடியாத காரியம்; ஆகலின் பும், ஸ்த்ரீ, நபும்ஸகம் ஆகும் மூன்று லிங்கங்களிலும் பரதேவதை கூறப்பட்டுள்ளது அறியத்தக்கது.

எல்லா ஸஹஸ்ரநாமங்களிலும் தேவீஸஹஸ்ர நாமங்கள் சிரேஷ்டமானவை. அவற்றிலும் கங்கை, காயத்ரீ, ச்யாமளா, லக்ஷ்மீ, காளீ, பாலா, லலிதா, ராஜராஜேச்வரீ, ஸரஸ்வதீ, பவானீ என்னும் பத்து ஸஹஸ்ர நாமங்கள் மிகவும் சிறந்தவை. இவற்றுள்ளும் ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் பரம உத்க்ருஷ்டமானதாம்.

இந்த விஷயங்களெல்லாம் முதல் அத்தியாயத்தில் விஸ்தாரமாய்க் கூறப்பட்டுள்ளது. அங்கே அறியவும்.

## லலிதா ஸஹஸ்ர நாமத்தின் பாஷ்யங்கள்:—

1. விமர்சாநந்தீயம். இது ஸ்ரீமத் விமலாநந்தநாதரின் சிஷ்யராகும் விமர்சாநந்த நாதரால் இயற்றப்பட்டதாகும். இது வரையில் அச்சிடப்படவில்லை. கையெழுத்துப் பிரதி காஞ்சீபுரத்தில் கிடைத்தது. அடையார் புத்தகசாலையில் வைக்கப்பட்டிருக்கின்றது.

2. ஸ்ரீ வித்யாரண்ய ஸ்வாமிகளது பாஷ்யம். காச்மீர தேசத்தில் ஜம்மு என்னும் நகரத்துப் புத்தகசாலையில் இருக்கின்றது.

3. ஸ்ரீமத் பட்டநாராயணரால் இயற்றப்பட்டது ஒன்று.

4. ஸ்ரீ சங்கர பரம்பரையில் வந்த ஒரு சங்கராசார்யாள் இயற்றியது மற்றொன்று.

5. ஸ்ரீ பாஸ்கரானந்த நாதரால் இயற்றப்பட்டது ஒன்று;

பாபம் சேராதிருப்பதற்கும், அகாதமான ஸம்ஸாரஸாகரத்தைக் கடப்பதற்கும் ஈச்வரனுடைய அனுக்ரஹமிருந்தால்தான் முடியுமே தவிற கேவலம் மனுஷ்ய யத்னத்தினல் முடியாது. இந்த அனுக்ரஹத்தைச் செய்வதற்கும் நம்முடைய தாபங்களையும், பாபங்களையும் போக்குவதற்கும் ஸாமான்யமான தாயார்களால் முடியாது. அவர்களுக்கு ஸாதாரண கஷ்டங்களை நிவர்த்திக்க ஒருக்கால் முடிந்தாலும் முடியும். நம்முடைய தாபத்ரயங்களை ஒருங்கே தீர்ப்பதற்கும், ஸம்ஸாரபந்தத்திலிருந்து நம்மை விடுவித்து பரம புருஷார்த்தமாகிய மோக்ஷத்தைக் கொடுப்பதற்கும் ஸமஸ்த ஜீவராசிகளையும் படைத்தவளும் பரப்ரம்ஹ ஸ்வரூபிணியுமான ஜகன்மாதாவுக்குத்தான் முடியும். ஆதலால்தான் அம்பாளை 'ஸ்ரீமாதா' என்ற விசேஷமான பெயருடன் இந்த ஸ்ரீலலிதாஸஹஸ்ரநாம ஸ்தோத்திரமானது ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது.

'நானாயோனி ஸஹஸ்ர ஸம்பவ வசாத்
ஜாதா ஜனன்ய: கதி
ப்ரக்யாதா ஜனகா: கியந்த இதிமே
ஸ்யாத்ஸ்யந்தி சாக்ரே கதி |
ஏதேஷாம் கணனைவ நாஸ்தி மஹத:
ஸம்ஸார ஸிந்தோர் விதே:
பீதம் மாம் நிதராம் அனன்ய சரணம்
ரக்ஷானுகம்பாநிதே ||'

இதனுல்தான் பரப்ரம்ஹத்தை தாயாராகப் பாவித்து அம்பிகை, அம்பா, ஜகஜ்ஜனனி, ஜகன்மாதா என்பனவாதி பெயர்களால் சொல்லுகிறோம்.

## சிவ, சக்தி, விஷ்ணு அபேதத்வம்,

எப்படி சிவனும் சக்தியும் அபேதமென்று சொல்லுகிறோமோ, அப்படியே சக்தியும் விஷ்ணுவும் அபேதமேயாவர். சுத்தசைதன்யமான பரப்ரம்ஹமானது மாயாவசத்தினல், தர்மமென்றும் தர்மீ (தர்மத்தையுடையவன்) என்றும் இரண்டு விதமாய் ஏற்பட்டதென்றும், தர்மமென்பது மறுபடியும் புருஷ ரூபமாகவும், ஸ்த்ரீரூபமாகவும் பிரிந்ததென்றும் புருஷரூப தர்மமானது விஷ்ணுரூபத்துடன் லோகங்களை ரக்ஷிக்கிறதென்றும், ஸ்த்ரீரூப தர்மமானது பரமசிவ

னுடைய மஹிஷியாக இருக்கிறதென்றும், இம்மூன்று ரூபமும் சேர்ந்து அகண்டமான ப்ரம்ஹமாக இருக்கிறதென்றும் சைவமதம் கூறுகின்றது. இதைப்பற்றி அப்பய்ய தீக்ஷிதரவர்கள் தமது 'ரத்னத்ரய பரீக்ஷை'யில் விஸ்தாரமாகச் சொல்லியிருக்கிறார்கள்.

'நித்யம் நிர்தோஷகந்தம் நிரதிசய ஸுகம் ப்ரம்ஹசைதன்ய மேகம்
தர்மோ தர்மீதி பேதத்வயமிதி ச ப்ருதக்பூய மாயா வசேன |
தர்மஸ் தத்ரானுபூதி: ஸகலவிஷயிணீ ஸர்வகார்யானுகூலா
சக்திச்சேச்சாதிரூபா பவதி குணகணச்சாச்ரயஸ்த்வேக ஏவ ||
கர்த்ருத்வம் தத்ர தர்மீ கலயதி ஜகதாம் பஞ்சஸ்ருஷ்ட்யாதி க்ருத்யே
தர்ம: பும்ரூபமாத்யாத் ஸகல ஜகதுபாதானபாவம் பிபர்தி |
ஸ்த்ரீரூபம் ப்ராப்ய திவ்யா பவதி ச மஹிஷீ ஸ்வாச்ரயஸ்யா திகர்து:
ப்ரோக்தௌ தர்மப்ரபேதாவபி நிசமவிதாம் தர்மிவத் ப்ரம்ஹகோடீ ||'

இப்படியிருக்கும் அபேதத்தை மற்றொரு விதமாகவும் நிர்த்தேசிக்கலாம். பரமசிவனுக்குக் கோரம் அகோரமென்ற இரண்டு முகங்களுண்டென்றும், அதில் அகோரமான தக்ஷிணமுகமே அம்பாளுடையதென்றும், அதுவே விஷ்ணுவென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'யா தே ருத்ர சிவா தனூ: சிவா விச்வா ஹ பேஷஜீ
சிவா ருத்ரஸ்ய பேஷஜீ தயா நோ ம்ருட ஜீவஸே |' (ச்ருதி)
'ருத்ர யத் தே தக்ஷிணம் முகம் தேன மாம் பாஹி நித்யம் |'
(ச்ருதி)
'விஷ்ணு ரூபம் முகம் ரம்யம் அகோரம் தக்ஷிணம் மம |'
(சந்த்ரிகா)

'சிவா கோரா சேதி ச்ருதிஷு விதிதே யே மம தனூ
தயோராத்யா மூர்த்தி: பரமரணீயா த்வமஸி மே |
த்வமஸ்யர்தம் தேஹே த்வமஸி வதனம் தக்ஷிணமிதி
த்வயி ப்ரீயே யாவத்தவ பவதி தாவத் ச விதிதம் ||
யதேதத் வாமாங்கம் கனஜகனபீனஸ்தனபரம்
கதாசித் தச்சம்போர் பவதி கமலாகௌஸ்துபதாம் |
ஜகன்மாதர்யேவம் யதபசரிதம் தன் மகவதா
ஜகன்மாதா தேவ: ப்ரபவதி ஸ ஏவ க்ஷபயிதும் ||'
(நீலகண்ட விஜயம்)

'யோऽயம் சகாஸ்தி ககனார்ணவரத்ன காந்தி:
யோऽயம் ஸுராஸுரகுரு: புருஷ: புராண: |

யத்வா மமார்தமிதம் அந்தகஸூதனஸ்ய
தேவி த்வமேவ ஸ இதி ப்ரதிபாதயந்தி ||'

இதைப் பின்பற்றியே ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் அம்பாளுக்கு நாராயணீ, கோவிந்தரூபிணீ, விஷ்ணுரூபிணீ, வைஷ்ணவீ, முகுந்தா முதலான பெயர்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. மேலும் இருவருக்கும் மூலகாரணம் பரப்ரம்ஹமானதால் உடன் பிறந்தவர்களாகப் பாவித்து அம்பாளைப் 'பத்மநாப ஸஹோதரீ' என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

இங்ஙனம் சிவன், சக்தி, விஷ்ணுவென்றும் இம்மூவர்களுடைய அபேதமானது நிர்ணயிக்கப்பட்டிருப்பது அறியத்தக்கதாகும்.

## அம்பிகையின் உபாஸனா பேதங்கள்.

அம்பாளுடைய உபாஸனையானது பலவகைப்பட்டது. அவைகளில் முக்கியமானவை இரண்டு—தக்ஷிணமார்கம் வாம மார்க்கம். அவையிரண்டும் முறையே ஸமயமார்கமென்றும் கௌலமார்கமென்றும் சொல்லப்படும். அம்பாளுடைய பூஜையானது அந்தர்முகமாகவே செய்யப்படவேண்டுமென்றும், அதிலும் அம்பாளை ஸஹஸ்ராரகமலத்திற்கு அழைத்து வந்து அவ்விடத்தில் பூஜிக்கவேண்டுமென்றும், ஸமயமதத்தின் ஸித்தாந்தம். இதற்கு வேண்டிய மனோதிடமற்றவர்கள் பஹிர்முகமாகப் பூஜைசெய்தல் வேண்டும். இவர்களிற் சிலர் தங்கம் முதலியவைகளாலான தகடுகளில் ஸ்ரீசக்ரத்தை எழுதி அதோடு அபின்னமாக அம்பாளைப் பாவனைசெய்து பூஜிப்பார்கள். இவர்கள் மதம் மிச்ரம் என்று கூறப்படும்.

'யாவத் ஆந்தரபூஜாயாம் அதிகாரம் பவேன்னஹி |
தாவத் பாஹ்யாமிமாம் பூஜாம் ச்ரயேத் ஜாதே து தாம் த்யஜேத் ||'

கேவலம் பாஹ்ய பூஜையைச் செய்பவர்கள் கௌளர்கள் என்று கூறப்படுபவர்களாவர். பாஹ்ய பூஜையைச் செய்யும் போது ஆந்தரபாவத்தோடுள்ளவர்கள் பராபர வடிவ மிச்ர மதத்தை யநுஸரித்தவர்களாவர்.

4. ஆத்யக்ரந்தங்களாகிய 'ஸ்ரீலலிதாஸஹஸ்ரநாமம்' முதலியவைகளில் கௌலமார்கமும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

'கௌலமார்க தத்பர ஸேவிதா' 'ஸவ்யாபஸவ்யமார்க்கஸ்தா' 'சைதன்யார்க்ய ஸமாராத்யா,' 'ரஹோயாகக்ரமாராத்யா,' 'ரஹஸ்தர்பணதர்பிதா' 'பிந்துதர்பண ஸந்துஷ்டா' 'வீரகோஷ்டி ப்ரியா' (ஸ்ரீலலிதாஸஹஸ்ரநாமம்)

தவிர 'கௌலோபநிஷத்,' 'த்ரிபுரா மஹோபநிஷத்' முதலான உபநிஷத்துகளிலும் கௌலமார்கத்தைப்பற்றி விசேஷமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. (இவையிரண்டுக்கும் பாஸ்கரராயர் பாஷ்யம் எழுதியிருக்கிறார்.)

கௌலாசாரத்தை அவலம்பிப்பவர்களுக்கு விசேஷமான குணங்களிருக்கவேண்டும். அவையில்லாத ஸாதாரணமான மனுஷ்யர்களால் அதை அனுஷ்டிக்கமுடியாது. அனுஷ்டித்தால் அனர்த்தமாகமுடியும். அம்பாளுடைய உபாஸனையே 'தாளகராணாம் அஸுலபா' என்றபடி சபல சித்தத்தையுடையவர்களுக்கு ஸாத்யமல்ல.

'அயம் து பரம: கௌலமார்க: ஸம்யங் மஹேச்வரி |
அவிதாராவ்ரதஸமோ மனோ நிக்ரஹ ஹேதுக: ||
ஸ்த்திரசித்தஸ்ய ஸுலப: ஸபலஸ்தூர்ண ஸித்தித: |
அன்யஸ்ய விபலோ து:க ஹேதுஸ்யாத் பரமேச்வரி ||'

(பரமானந்த தந்த்ரம்)

'அயம் ஸர்வோத்தமோ தர்ம: சிவோக்த: ஸுகஸித்தித:
ஜிதேந்த்ரியஸ்ய ஸுலபோ நான்யஸ்யானந்த ஜன்மபி: ||
யத் ஊர்த்வரேதஸாம் ஸர்வத்யாகினும் அனிகேதினும் |
க்ஷணேன ஸ்ம்ருதமாத்ரேண மோஹமுத்பாதயத்யலம் ||
'இதோ மத்யமிதோ மாம்ஸம் பக்ஷ்யமுச்சாவசம் ததா |
தருண்யச்சாருவேஷாட்யா மதாருணவிலோசனா: |
தத்ர ஸம்யதசித்தத்வம் ஸர்வதாஹ்யதிதுஷ்கரம் |
பக்தி ச்ரத்தாவிஹீனஸ்ய கதம் ஸ்யாதேதீச்வரீ ||'

(த்ரிபுரார்ணவம்)

'தந்த்ராணும் அதி கூடாத்வாத் ஸத் பாவோऽப்யதி கோபித: |
ப்ராம்ஹணே வேதசாஸ்த்ரார்த்த தத்வக்ஞோ புத்திமான்வசீ ||

கூடதந்த்ரார்த்த பாவஸ்ய நிர்மந்த்யோத்தரண க்ஷம: |
கௌலமார்கேऽதிகாரீ ஸ்யாத் இதரோ து:கபாக் பவேத் || '

(பாவசூடாமணி)

அப்படி ஜிதேந்த்ரியத்வம் முதலான குணங்களில்லாதவர்கள் கௌலமார்கத்தில் ப்ரவேசிக்கவேண்டுமென்றால் முன்னதாக இதர தேவதைகளை இதர மார்க்கங்களால் உபாஸித்துவிட்டு அதனால் பரிபக்வமான அந்த:கரணத்தோடு கௌலமார்கத்தை ஆச்ரயிக்கவேண்டும்.

'அன்யாஸாம் தேவானும் து பூயோபூயோ நிஷேவணாத் |
பரிபக்வமனா: கௌலே லப்தப்ராமாண்யகோ நர: |
பாஹ்யேந்த்ரியாணி ஸம்யம்ய ப்ரவிசேதத்ர நேதர: ||

(குலஸாரம்)

கௌலதர்மத்தை அனுஷ்டிப்பது கத்திமுனையில் நடப்பது போலும், புலியின் கழுத்தைக் கட்டிக்கொள்வதுபோலும், ஸர்ப்பத்தை அணிவதுபோலும் பயங்கரமானதென்று சொல்லப் பட்டிருக்கிறது.

'க்ருபாண தாராகமனாத் வ்யாக்ரகண்டாவலம்பனாத் |
புஜங்கதாரணான்னூனம் அசக்யம் குலவர்த்தனம் || '

## ஸ்ரீவித்யையின் பேதங்கள்.

அம்பாளை ப்ரதிபாதிக்கும் சாஸ்த்ரத்திற்கு ஸ்ரீவித்யை யென்று சொல்லப்படுவதுடன், அம்பாளுடைய மந்த்ரத்திற்கும் ஸ்ரீவித்யை யென்று பெயர் சொல்லப்படும். உத்க்ருஷ்டமான வஸ்துக்களின் பெயர்களுக்கு முன்பாக ஸ்ரீ என்ற பதம் சேர்க்கப்படும். (ஸ்ரீமாதா, ஸ்ரீசக்ரம், ஸ்ரீநகரம் முதலியன.) புருஷரூபமான தேவதையையுடையதற்கு மந்த்ரமென்றும், ஸ்த்ரீ ரூபமான தேவதையையுடையதற்கு வித்யையென்றும் பெயர். அப்படியிருந்தபோதிலும் சிவ சக்தி ஸாமரஸ்யரூபமான பரப்ரம்ஹமானது அம்பிகா ரூபிணியாக இந்த வித்யையின் மூலமாக உபாஸிக்கப்படுவதால், ஸ்ரீ வித்யையை மந்த்ரமென்றும் அதுவே ஸகலவிதமான மந்த்ரங்களுக்குள் மிகவும் உயர்ந்த தென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸ்ரீவித்யைவ து மந்த்ராணும்' (ஸ்ரீலலிதாஸஹஸ்ரநாமம்)

இப்பேர்ப்பட்ட மஹிமை வாய்ந்த வித்யையானது பன்னிரெண்டு வகைப்படும். ஒவ்வொரு பேதமும் ஒவ்வொருவரால் (வேதத்திலிருந்து) கண்டுபிடிக்கப்பட்டதால், அவ்விதமான பேதங்கள் ஏற்பட்டன. இப்படி மந்த்ரங்களைக் கண்டுபிடித்து அதன் மூலமாக ஸித்தியடைந்தவர்களுக்கு (மந்த்ர த்ரஷ்டாக்களுக்கு) ரிஷிகள் என்று பெயர். ஸ்ரீ வித்யையின் பேதங்களுடைய ரிஷிகளின் பெயர்—

'மனு: சந்த்ர குபேரச்ச லோபாமுத்ரா ச மன்மத: |
அகஸ்த்திரக்னி: ஸூர்யச்ச இந்த்ர: ஸ்கந்த: சிவஸ்ததா |
க்ரோதபட்டாரகோ தேவ்யா த்வாதசாமீ உபாஸகா: ||

இவர்களில் அகஸ்தி: என்பவர் அகஸ்த்யர். க்ரோதபட்டாரகர் என்பவர் துர்வாஸர். லோபாமுத்ரை யென்பவள் அகஸ்த்யருடைய பத்னீ. லோபாமுத்ரையின் வித்யையே ஹாதி வித்யை யென்று சொல்லப்படும்.

ஸ்ரீவித்யை என்பது ஷோடசாக்ஷரீ என்றும், பஞ்சதசீ அதில் அடங்கியதென்றும் சொல்லப்படும். இதைப்பற்றி அபிப்ராயபேதமிருந்தாலும் பஞ்சதசீயானது இருவகையிலும் மிகவும் முக்யமான மந்த்ரமென்பது ஒப்புக்கொள்ளப்படும் விஷயம். இவ்விதமான பஞ்சதசியின் பேதங்களில் காதி, ஹாதி என்பவைதான் முக்யமான பேதங்கள். காதிவித்யைக்கு காமராஜர் ரிஷியாதலால் அதை காமராஜ வித்யையென்றும் சொல்லப்படும். ஹாதி என்பதற்கு லோபாமுத்ரா வித்யை என்று பெயர் என்பதாக ஏற்கனவேயே சொல்லப்பட்டது.

'தேவ்யா த்வெள மனுராஜௌ து வரிஷ்டௌ விந்த்யமர்தன |
லோபாமுத்ரா காமராஜாவிதி க்யாதிமுபாகதௌ |
ஹாதிஸ்து லோபாமுத்ரா ஸ்யாத் காமராஜஸ்து காதிக: ||'

அவைகளில் எது உயர்ந்தது என்பதைப்பற்றியும் அபிப்ராய பேதமிருந்தபோதிலும் காதி என்பதுதான் உயர்ந்தது என்பது ஸ்ரீலலிதாஸஹஸ்ரநாமத்தில்

'ஸ்ரீவித்யைவ து மந்த்ராணும் தத்ர காதிர் யதா பரா |'

என்று சொல்லப்பட்டிருப்பதுடன் ஸ்ரீலலிதாத்ரிசதியும் அதையனுஸரித்தே அமைக்கப்பட்டிருப்பதினுல் ஏற்படுகிறது.

இப்படி ப்ராதான்யமானது காதி வித்யைக்குச் சொன்ன போதிலும் வாஸ்தவத்தில் ஸகல வித்யைகளும் அபேதமாகையால் அவைகளுக்குள் தாரதம்யம் சொல்வதானது ப்ரசம்ஸாமாத்ரமென்று பாஸ்கரராயர் சொல்லியிருக்கிறார். இவருடைய அபிப்ராயத்தில் இந்த ஸ்தோத்ரத்தின் 'சிவ சக்தி: காம:' என்ற 32-வது ச்லோகத்தில் ஹாதி வித்யையானது சொல்லப்பட்டிருக்கிறதென்றும் அதனடுத்த ச்லோகத்தில் காதி வித்யை சொல்லப்பட்டதென்றும் மேலே சொல்லியபடி ஸகல வித்யைகளுடைய அபேதத்தைக் காட்டுவதற்காகவே ஆசார்யாள் இம்மாதிரி வரிசைமாற்றிச் சொன்னாரென்றும் அவரால் காட்டப்பட்டிருக்கிறது.

## ஸ்ரீவித்யையைப்பற்றிய நூல்கள்.

தேவியின் உபாஸனாமார்கமான ஸ்ரீவித்யையானது வேத சிரோபாகமான உபநிஷத்துக்களிலும் அவ்வித உபநிஷத் காண்டத்தின் சேஷமாக பரசுராம கல்பஸூத்ரம் முதலான கல்பஸூத்ரங்களிலும், யாமளாதி தந்த்ரங்களிலும், புராணங்களிலும் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. தேவீ ஸம்பந்தமான உபநிஷத்துக்கள் ஸுந்தரீ தாபினீ பஞ்சகம், பாவனோபநிஷத், கௌலோபநிஷத், குஹ்யோபநிஷத், மஹோபநிஷத், த்ரிபுரா மஹோபநிஷத், அருணோபநிஷத், பஹ்வ்ருசோபநிஷத், காளிகோபநிஷத், தாரோபநிஷத் முதலியவை. இவைகள் நான்கு வேதங்களிலும் கிடைக்கப்பெறுகின்றன.

புராணங்களில் தேவீபாகவதம், தேவீபுராணம், மார்கண்டேய புராணம், காளிகாபுராணம், த்ரிபுராரஹஸ்யம் முதலியவை. [பாகவதம் என்ற பெயரே தேவீபாகவதத்திற்குத்தான் உரித்ததென்று தேவீ உபாஸகர்கள் சொல்வார்கள்]. இவை தவிர, ப்ரம்ஹாண்ட புராணத்தின் உத்தரபாகத்திலடங்கியதாக ஸ்ரீலலிதாஸஹஸ்ரநாமம், ஸ்ரீலலிதாத்ரிசதீ, லலிதோபாக்யானம் முதலியனவும் பரதேவதையைப்பற்றிக் கூறும் நூல்களாகும்.

யாமளாதி தந்த்ரங்கள் கணக்கற்றவை.

இவைகளைத் தவிர ஸ்தோத்ரங்கள் 'ஸௌந்தர்யலஹரீ,'

'ஸுபகோதயம்,' †'லலிதாஸ்தவரத்னம்,' 'மஹிம்நஸ்தோத்ரம்,' 'லகுஸ்துதி,' 'மூகபஞ்சசதீ,' முதலியவை ஏராளமாயிருக்கின்றன.

இவ்விதமான மூலக்ரந்தங்கள் தவிர நிபந்த க்ரந்தங்கள் அனேகம் எழுதப்பட்டிருக்கின்றன. அவைகளில் சில—ப்ராண தோஷிணீ, சாக்தப்ரமோதம், சாக்தானந்ததரங்கிணீ, ப்ரஹத் ஜ்யோதிஷார்ணவம், ச்யாமாரஹஸ்யம்.

தனியாகவே எழுதப்பட்ட க்ரந்தங்கள் ப்ரபஞ்சஸாரம், சாரதாதிலகம், *வரிவஸ்யா ரஹஸ்யம், காமகலாவிலாஸம், முதலியவை. இவைகளைத் தவிர பூர்வீக க்ரந்தங்களுக்கு பாஷ்யங்கள் எழுதுவதின் மூலமாக அரிய பெரிய விஷயங்களை சில மஹான்கள் சொல்லியிருக்கிறார்கள். இவைகளில் முதன்மையானவை பாஸ்கரராயர் எழுதியவை—ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாம பாஷ்யம் (ஸௌபாக்ய பாஸ்கரம்), வாமகேச்வர தந்த்ரத்திலடங்கிய நித்யாஷோடசிகார்ணவத்தின் பாஷ்யம் (ஸேதுபந்தம்), வரிவஸ்யாரஹஸ்யத்தின் பாஷ்யம் (வரிவஸ்யாப்ரகாசம்).

ஸ்ரீ லக்ஷ்மீதரராலியற்றப்பட்ட ஸௌந்தர்யலஹரீ பாஷ்யமும், ஸுபகோதய பாஷ்யமும், சாரதாதிலகத்திற்கு ராகவபட்டரால் எழுதப்பட்ட பாஷ்யமும் மிகவும் விசேஷமானது. ஸ்ரீலலிதாத்ரிசதிக்கு சங்கரபகவத் பாதாளால் இயற்றப்பட்டதாகச் சொல்லப்படும் பாஷ்யம் ஒன்று உண்டு.‡

---

* ஸ்ரீ வரிவஸ்யா ரஹஸ்யம் வியாக்கியானத்தோடு தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு சென்னை ஸ்ரீபிரஹ்ம வித்யா விமர்சினீ ஸபையில் பிரசுரிக்கப்பட்டுள்ளது 178, லாயிட்ஸ் ரோட், ராயப்பேட்டை, சென்னை.

† லலிதாஸ்தவரத்தினமும் தமிழ் அர்த்தத்தோடு பிரசுரிக்கப்பட்டுள்ளது. மேல் கூறிய விலாஸத்தில் கிடைக்கும்.

‡ த்ரிசதீ பாஷ்யம் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. மேல் கூறிய விலாஸத்தில் கிடைக்கும்.

மேற்கண்ட மூன்று புஸ்தகங்களும் ஸ்ரீ ஜனார்தந அச்சுக்கூடம், (லிமிடெட்,) கும்பகோணம், என்ற இடத்திலும் கிடைக்கும்.

புர:சரண விஷயமாகவும் ஸபர்யா, விஷயமாகவும் பரசுராம கல்பஸூத்ரத்தை அனுஸரித்த நித்யோத்ஸவம், பாவனோப நிஷத்தை அனுஸரித்த பாவனோபநிஷத் ப்ரயோகம் முதலியவை அனேகமிருக்கின்றன.

அம்பிகையின் உபாஸனையைப்பற்றிய க்ரந்தங்கள் இப்படி நூற்றுக்கணக்காக இருந்தபோதிலும், அந்த உபாஸனையின் தத்வங்களையும், ரஹஸ்யங்களையும் தெளிவாக எடுத்துக்காட்டி அவ்வித உபாஸனையைத் தர்க்க, ந்யாய, மீமாம்ஸாதி சாஸ்த்ரங்களை யொட்டி ஸ்தாபித்தது பாஸ்கரராயரும், லக்ஷ்மீதரரும்தான். ஸமீபகாலத்தில் இவ்விதமான பேருபகாரம் செய்தவர் ஆர்தர் ஏவலன் என்ற மாறுபெயருடைய Sir John Woodroffe என்பவர். இவரது பிறப்பு வேறு தேசத்தில் ஏற்பட்டபோதிலும், இவர் பூர்வஜன்மத்தில் செய்த தவத்தின் பயனாக இந்த தேசத்திற்கு வேலையாகவந்து நமது சாஸ்த்ரங்களிலும், விசேஷமாக தேவி பரமான க்ரந்தங்களிலும் அன்யாத்ரு சமான ஞானத்தை ஸம்பாதித்துக்கொண்டு அதை நமக்கெல்லாம் போதிப்பதற்காக அனேக க்ரந்தங்களை வெளியிட்டிருக்கிறாரென்பது எல்லாருக்கும் தெரிந்தவிஷயம். இவர்கள் எல்லாரும் இம்மாதிரி ஜகன்மாதா வின் உபாஸனா தத்வங்களை நமக்குப் புகட்டி நாம் கடைத்தேறு வதற்காகச் செய்திருக்கும் அனுக்ரஹத்தை நாம் எந்நாளும் மறக்கமுடியாது.

பாஸ்கரராயரியற்றிய மேலேசொல்லிய மூன்று பாஷ்யங்களை ஸ்ரீவித்யையின் ப்ரஸ்தான த்ரயமென்று சொல்லப்படும். அம்பா ளுடைய அந்தர்முகமான உபாஸனையைப்பற்றியும், பொதுவாக ஸ்ரீவித்யையைப்பற்றியும் இம்மூன்று பாஷ்யங்களில் சொல்லப் படாத விஷயம் யாதொன்றுமில்லையென்று நிச்சயமாய் சொல்ல லாம்.

## ஸ்ரீவித்யையின் அதிரஹஸ்யத்வம்.

மிகவும் மஹிமை பொருந்தியதாகையாலும், பரமபுருஷார்த்த மான மோக்ஷத்தைக் கொடுப்பதாலும் ஸ்ரீ வித்யையை மிகவும் ரஹஸ்யமாய் வைத்துக்கொண்டு உபாஸனை செய்யவேண்டு

மென்று சொல்லப்பட்டிருக்கிறது. இதர வித்யைகள் வேசிகளைப் போலுள்ளனவென்றும் இந்த ஸ்ரீவித்யையானது குலஸ்த்ரீ யென்றும் சொல்லப்பட்டது.

'வேச்யா இவ ப்ரகடா: வேதாதி வித்யா:,
ஸர்வேஷு தர்சனேஷு குப்தேயம் வித்யா |'
(பரசுராமகல்பஸூத்ரம்)

'அன்யாஸ்து ஸகலா வித்யா: ப்ரகடா கணிகா இவ |
இயம் து சாம்பவீ வித்யா குப்தா குலவதூரிவ ||'
(குலார்ணவம்)

ஆகவே இந்த வித்யையை 'ஸ்வமாத்ரு ஜாரவத்' அதி ரஹஸ்யமாகக் காப்பாற்றவேண்டுமென்றும் 'ப்ராகட்யாத் நிரய:' என்ற கல்பஸூத்ர வசனப்படி அதை வெளியிட்டால் நரகமேற்படும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது, இதை அறியும்படியான யோக்யதையில்லாத சிஷ்யர்களுக்கு இதை சொல்லக்கூடாதென்று தாத்பர்யம்.

'ப்ரூயாத் சிஷ்யாய பக்தாய ரஹஸ்யமபி தேசிக: |
பவதா ந ப்ரதேயம் ஸ்யாத் அபக்தாய கதாசன |
ந சடாய ந துஷ்டாய நாவிச்வாஸாய கர்ஹிசித்'
(ஸ்ரீலலிதாஸஹஸ்ரநாமம்)

இந்தக் காரணத்தினாலேயேதான் ஸ்ரீவித்யோபாஸகனாக இருப்பவன் பிறருக்குத் தெரியாதபடி நடந்துகொள்ள வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'அந்த: சாக்த: | பஹி: சைவ: | லோகே வைஷ்ணவ: |'
(கௌலோபநிஷத்)

'அந்த: சாக்தா: பஹி: சைவா: ஸபாயாம் வைஷ்ணவா மதா: |
நாநாரூபதரா: கௌலா: விசரந்தி மஹீதலே'
(காளீவிலாஸதந்த்ரம்)

அதாவது, சக்தியின் உபாஸனையானது அந்த:கரணத்திற்கு மட்டும்தான் தெரியும்படியாக இருக்கவேண்டியது என்று தாத்பர்யம். உதாரணமாக:- ஸ்ரீ வித்யோபாஸகர்கள் நெற்றியில் புருவங்களுக்கு நடுவில் ஸ்ரீ பாதுகையின் அர்ச்சனையின் ப்ரஸாதமான ஸிந்தூரத்தை (குங்குமத்தை) எப்போதும் தரித்துக் கொள்ளவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'ப்ருவோர்மத்யே ஸ்ரீபாதுக்கார்ச்சனப்ரஸாத: | ஸிந்தூரம் |
(அகஸ்த்ய ஸூத்ரம்)

'கு சந்தனேன சாக்தானும் ப்ருமத்யே பிந்துரிஷ்யதே |'

ஆயினும் அப்படி தரிப்பதில் விபூதிதாரணம் முதலான சைவ சின்னங்களால் அதை மறைக்கவேண்டுமென்றும் சொல்லப் பட்டிருக்கிறது. சிவனும் சக்தியும் அபேதமாகையால் அவ் விதம் செய்யலாம். அதேமாதிரி,

'மாமேவ பௌருஷம் ரூபம் கோபிகா நயனாம்ருதம் |'
'கதாசித் லலிதேசானீ பும்ரூபா க்ருஷ்ண விக்ரஹா ||'

என்பவை முதலான வசனங்களின்படி அம்பாளும் விஷ்ணுவும் அபேதமாகையால் ஸபைகளில் விஷ்ணுவின் உத்கர்ஷத்தைப் பற்றிச் சொன்னபோதிலும் அதனால் அம்பாளுடைய உத்கர்ஷம் சொல்லப்படுகிறதே தவிர வேறல்ல.

## ஸ்ரீவித்யையின் அதிச்ரேஷ்டத்வம்

இப்பேர்ப்பட்ட விசேஷ மஹிமைபொருந்தியதான உபாஸனையானது, ஸாமான்யமான தபஸ்ஸினால் கிடைக்கக்கூடியதில்லையென்றும், கடைசி ஜன்மத்தில்தான் கிடைக்குமென்றும் சொல்லப் பட்டிருக்கிறது. அதாவது, அந்த உபாஸனையேற்பட்டு ஸித்தியடைந்துவிட்டால் மறுஜன்மம் கிடையாதென்று தாத்பர்யம்.

'யேனான்யதேவதா நாம கீர்த்திதம் ஜன்மகோடிஷு |
தஸ்யைவ பவதி ச்ரத்தா ஸ்ரீதேவீநாம கீர்த்தனே ||
சரமே ஜன்மனி யதா ஸ்ரீவித்யோபாஸகோ பவேத் ||
... ... ... ... ...
மந்த்ரராஜ ஜபச்சைவ சக்ரராஜார்ச்சனம் ததா |
ரஹஸ்யநாம பாடச்ச நால்பஸ்ய தபஸ: பலம் ||'
(ஸ்ரீலலிதாஸஹஸ்ரநாமம்)

'யஸ்ய நோ பச்சிமம் ஜன்ம யதி வா சங்கர: ஸ்வயம் |
தேனைவ லப்யதே வித்யா ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ |
இதி தந்த்ரேஷு பஹுதா வித்யாய மஹிமோச்யதே ||'
(ஸ்ரீலலிதாத்ரிசதீ)

அம்பாளுடைய உபாஸனு மார்கமும் மோக்ஷத்திற்கு ஒரே மார்கமுமான ஸ்ரீவித்யையே இந்தக் காரணத்தினுல் வித்யை என்ற பதத்திற்கு உரித்தானதென்றும் சில்பம் முதலான இதர சாஸ்த்ரங்கள் வித்யையென்று சொல்லக்கூடியவை அல்லவென்றும், ஸ்ரீவித்யையை அறிந்தவனே வித்வான் என்று அழைக்கத் தகுந்தவனென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

> 'ந சில்பாதி ஞானயுக்தே வித்வச்சப்த: ப்ரயுஜ்யதே |
> மோக்ஷைகஹேது வித்யா ஸா ஸ்ரீவித்யைவ ந ஸம்சய: |
> தஸ்மாத் வித்யாவிதேவாத்ர வித்வான் வித்வான் இதீர்யதே ||'
>
> (ஸ்ரீலலிதாத்ரிசதீ)

இந்த வித்யையின் ப்ரபாவமானது அதனுடைய குருசிஷ்ய பரம்பரையிலிருந்தே தெரிந்துகொள்ளக்கூடியதாக இருக்கிறது. ஆதியில் இந்த வித்யையானது பரமசிவனுல் தன்னுடைய ப்ரகாச, விமர்ச ரூபங்களாகிய சிவ, சக்தி ரூபங்களால் குருசிஷ்ய பாவமாக இருந்துகொண்டு வெளியிடப்பட்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

> 'குருசிஷ்ய பதே ஸ்தித்வா ஸ்வயமேவ ஸதாசிவ: |
> ப்ரச்னோத்தர பதைர் வாக்யை: தந்த்ரம் ஸமவதாரயத் ||''

இதேமாதிரியாக ஸௌந்தர்யலஹரீ 31-வது ச்லோகமாகிய 'சதுஷ் ஷஷ்ட்யா தந்த்ரை:,' என்பதிலும் சொல்லப்பட்டிருக்கிறது. 'சம்பு: பூஜயதே தேவீம் மந்த்ரசக்திமயீம் சுபாம் |' என்றபடி பரமசிவனே ஆதி நாதரென்றும், அம்பாளுடைய உபாஸகர்களில் முதலானவரென்றும், அம்பாளைக் குருமூர்த்தி: என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வளவு மஹிமைபொருந்தியிருப்பதினுலும், அதிரஹஸ்யமாயிருப்பதினுலும் தான் இந்த வித்யையானது

> 'கர்ணாத் கர்ணோபதேசேன ஸம்ப்ராப்தம் அவனீதலே |'

என்றபடி நாளதுவரையில் கர்ணபரம்பரையாகவே வந்திருக்கிறது.

## அம்பிகையின் ரூபபேதங்கள்.

அம்பிகையின் ரூபங்கள் அனந்தம். ஜகத்தின் பரிபாலனத்தைச் சேர்ந்த வெவ்வேறு கார்யங்களைச் செய்வதாக பாவனை

செய்யும்போது வெவ்வேறு ரூபங்களோடு இருப்பதாகச் சொல்லப்படும்.

'ஏகைவ சக்தி: பரமேச்வரஸ்ய
பின்ன சதுர்த்தா விநியோககாலே |
போகே பவானீ புருஷே ச விஷ்ணு:
கோபே ச காளீ ஸமரே ச துர்கா ||'

இதைத்தவிர அந்தந்த ஸ்தானபேதங்களையொட்டியும் ரூபபேதங்களுண்டு.

'லக்ஷ்மீம் ராஜகுலே ஜயாம் ரணபுவி க்ஷேமங்கரீமத்வனி
க்ரவ்யாத த்விப ஸர்ப்பாஜி சபரீம் காந்தாரதுர்கே கிரௌ |
பூதப்ரேத பிசாச ஜம்புகபயே ஸ்ம்ருத்வா மஹாபைரவீம்
வ்யாமோஹே த்ரிபுராம் தரந்தி விபதஸ் தாராம் ச தோயப்லவே||
(லகுஸ்துதி)

மேலும் அவரவர்கள் ப்ரார்த்திக்கும்படியான பலன்களை உத்தேசித்து வெவ்வேறு வர்ணங்களோடு அம்பாளிருப்பதாக பாவனை செய்யவேண்டும்.

'முக்தௌ த்யேயா சசிஜ்யோத்ஸ்னா தவளாக்ருதிரம்பிகா |
ரக்த ஸந்த்யக்ரோசி: ஸ்யாத் வசீகரண கர்மணி ||
கவித்வே விசதாகாரா ஸ்படிகோபல நிர்மலா |
தனலாபே ஸுவர்ணாபா சிந்த்யதே லலிதாம்பிகா||
ஸர்வஸம்பத்திலாபே து ச்யாமளாங்கீ விசிந்த்யதே |
நீலா ச மூகீகரணே பீதா ஸ்தம்பன கர்மணி' ||
(லலிதோபாக்யானம்)

அம்பாளுடைய நாமங்கள் எண்ணிக்கையற்றவை.

தேவீ நாமஸஹஸ்ராணி கோடிச: ஸந்தி கும்பஜ |'

என்றபடி இருக்கும் இந்த ஸங்க்யாதீதமான நாமங்களில் சிற்சில நாமங்களுக்குத் தக்கபடி ரூபபேதங்கள் உண்டு.

பரசிவாபின்னமான பராசக்தியானவள் ஸகலலோகங்களுக்கு அப்பாலும்,

'கபளீக்ருத நி:சேஷ தத்வக்ராமஸ்வரூபிணீ |'

என்றபடி ஸகல தத்வாதீதமாய் மஹாகைலாஸம், அபராஜிதம் முதலான பெயர்களையுடைய ஸர்வோத்தமமான லோகத்தில்

வீற்றிருக்கிறாள். அவளுடைய ரூபமானது ரஜஸ், தமஸ் இவை களின் சேர்க்கையில்லாமல் உறைந்த நெய் மாதிரி கனீபூதமான சுத்தஸத்வ ரூபமானது. இதர சிவ, சக்திகள் இம்மாதிரி சுத்த ஸத்வமூர்த்தியாக இல்லாமல் கொஞ்சமாவது ரஜஸ்தமோகுணங் களின் கலப்போடுகூடியவை. ஆகவே இந்த ரூபம்தான் ஸர் வோத்தமமானது. இவ்விதமான ஸ்வரூபத்தை கீழ்வருமாறு வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

'அதீதம் து பரம் தேஜ: ஸ்வஸம்விதுதயாத்மகம் |
ஸ்வேச்சாவிச்வ மயோல்லேக கசிதம் விச்வரூபகம் ||
சைதன்யமாத்மனோ ரூபம் நிஸர்கானந்த ஸுந்தரம் |
மேய மாத்ரு ப்ரமாமான ப்ஸரை: ஸம்குசத் ப்ரபம் ||
ச்ருங்காடரூபமாபன்னம் இச்சா ஞான க்ரியாத்மகம் |
விச்வாகார ப்ரதாதார நிஜரூப சிவாச்ரயம் ||
காமேச்வராங்க பர்யங்க நிவிஷ்டம் அதிஸுந்தரம் |
இச்சாசக்தி மயம் பாசம் அங்குசம் ஞானரூபிணம் ||
க்ரியாசக்திமயே பாணதனுஷீ ததத் உஜ்வலம் |
ஆச்ரயாச்ரயிபேதேன அஷ்டதாபின்ன தேஹமத் |
அஷ்டார சக்ரஸம்ரூடம் நவசக்ராஸனஸ்திதம் ||'

இவ்விதமான மூர்த்திதான் இந்த ஸஹஸ்ரநாமங்களாலும் வர்ணிக்கப்படுகிறது.

'கிராமாஹுர் தேவீம் த்ருஹிணக்ருஹிணீம் ஆகமவிதோ
ஹரே: பத்னீம் பத்மாம் ஹரஸஹசரீம் அத்ரிதனயாம் |
துரீயா காऽபி த்வம் துரதிகம நிஸ்ஸீம மஹிமா
மஹாமாயா விச்வம் ப்ரமயஸி ப்ரப்ரம்ஹ மஹிஷீ ||'

என்னும் ஸௌந்தர்யலஹரி ச்லோகம் இங்கு கவனிக்கத்தக்க தாகும்.

## அம்பிகையின் உபாஸனையின் பலன்கள்.

அம்பிகையானவள் அவ்யாஜகருணாரூபிணியாயும் ஜகன் மாதாவாகவுமிருக்கிறபடியால் அவளுடைய குழந்தைகளாகிய நாம் அவளை எப்படி உபாஸித்தாலும் அதை ஏற்றுக்கொண்டு நமக்கு அனுக்ரஹம் செய்வாள். உள்ளன்போடும், பக்தியோடும் உபாஸிக்கவேண்டியது முக்யமே தவிர, வேறு க்ரியாகலாபங்களை

யாவது அவற்றைப்பற்றிய ஞானத்தையாவது அம்பாள் தன் குழந்தைகளிடம் எதிர்பார்ப்பதில்லை. இந்த அபிப்ராயத்தை யொட்டியே ஆசார்யாளும்.

'ந மந்த்ரம் நோ யந்த்ரம் ததபி ச ந ஜானே ஸ்துதிமஹோ
ந சாஹ்வானம் த்யானம் ததபி ச ந ஜானே ஸ்துதிகதா: |
ந ஜானே முத்ராஸ்தே ததபி ச ந ஜானே விலபனம்
பரம் ஜானே மாத: த்வதனுஸரணம் க்லேசஹரணம் ॥'

என்று சொல்லியிருக்கிறார்கள். மேலும் அம்பாள் 'க்ஷிப்ர ப்ரஸாதினீ'—சீக்ரத்தில் ஸந்தோஷமடைந்து அனுக்ரஹம் செய்யும் ஸ்வபாவமுடையவள். இதே காரணத்தால் அம்பாளை 'ஸுகாராத்யா,' 'ஸுலபாகதி:' என்பதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. அம்பாளை உபாஸிப்பது ஸுலபமானதென்றும் உபவாஸாதி காயக்லேசங்களில்லாமலும், நியமநிர்பந்தங்களில்லாலும் அம்பாளை ஆராதிக்கலாமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'ரே மூடா: கிமயம் வ்ருதைவ தபஸா காய: பரிக்லிச்யதே
யக்ஞைர் வா பஹுதக்ஷிணை: கிமிதரே ரிக்தீக்ரியந்தே க்ருஹா: |
பக்திச்சேத் அவிநாசினீ பகவதீ பாதத்வயீ ஸேவ்யதாம்
உன்னித்ராம்புருஹாதபத்ரஸுபகா லக்ஷ்மீ: புரோதாவதி ॥'
(கடஸ்தவம்)

'தேஹக்ஷோபகரை: வ்ரதைர்பஹுவிதை: தானைச்சஹோமைர் ஜபை:
ஸந்தானைர் ஹயமேத முக்யஸுமகை: நானாவிதை: கர்மபி: |
யத் ஸங்கல்ப விகல்ப பாவமலினம் க்யாதம் பதம் தஸ்ய தே
தூராதேவ நிவர்ததே பரசரம் மாத: பதம் நிர்மலம் ॥'
(த்ரிபுரமஹிம்நஸ்தோத்ரம்)

அன்றியும், அம்பாள் ஆனந்தைகரூபிணியாயும் ச்ருங்காரரஸ ப்ரதானையாகவும் லலிதாம்பிகையாகவுமிருக்கிறபடியால் அவளுடைய பக்தர்கள் உபாஸனையின்போது ரமணீயமான காத்ரத்தோடும் ச்ருங்காரமான வேஷத்தோடும் ஸுகந்தமான வாக்கோடும் ப்ரஸன்னமான முகத்தோடும் இருக்கவேண்டுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'குங்குமாருணதேஹஸ்து ரக்தவஸ்த்ராதி ஸம்புத: |
தாம்பூல பூரிதமுக: மதிரானந்த சேதன: |
கர்பூரக்ஷோத திக்தாங்கோ ரக்தாபரணமண்டித: |
ரக்த புஷ்பாவ்ருதோ யோகீ ரக்தகந்தானுலேபன: ॥

ரக்தாஸ்தரோபவிஷ்டஸ்து லாக்ஷாருணக்ருஹே ஸ்தித: |
ஸர்வ ச்ருங்காரவேஷாட்ய: த்ரிபுரீக்ருதவிக்ரஹ: |
மன: ஸங்கல்ப ரக்தோ வா ஸாதக: ஸ்திரமானஸ: ||'
(நித்யாஷோடசிகார்ணவம்)

இவ்விதம் அனன்யசித்தத்தோடும் அம்பாளே சரண மென்ற பாவத்தோடும் உபாஸனைசெய்தால் ஸகலவிதமான புருஷார்த்தங்களையுமடையலாம். அம்பாளுடைய உபாஸகர்களுக்கு போகம், மோக்ஷம் இவையிரண்டும் கரஸ்தமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

யத்ராஸ்தி, போகே நச தத்ர மோக்ஷ:
யத்ராஸ்தி மோக்ஷோ நச தத்ர போக: |
ஸ்ரீஸுந்தரீ ஸாதக புங்கவானாம்
போகச்ச மோக்ஷச்ச கரஸ்த்த ஏவ ||

அம்பாள் ஒருவளே சதுர்வர்கமெனப்படும் சதுர்வித புருஷார்த்தங்களையும் ஒருங்கே கொடுக்கக்கூடியவள்.

'அத: பரம் ச தேவானாம் அர்ச்சனம் காரயேத் புத: |
கணேசம் பூஜயேத் யஸ்து விக்னஸ் தஸ்ய ந பாததே ||
ஆரோக்யார்த்தேऽர்ச்சயேத் ஸூர்யம் தர்மமோக்ஷாய மாதவம் |
சிவம் தர்மார்த்தமோக்ஷாய சதுர்வர்காய சண்டிகாம் ||'

அதிலும், நாம் வேண்டும் அளவுக்குமேல் கொடுக்கக்கூடிய கோமளமான ஹ்ருதயத்தோடு கூடியவள் ஜகன்மாதா.

பயாத் த்ராதும் தாதும் பலமபி ச வாஞ்ச்சா ஸமதிகம்
சரண்யே லோகானாம் தவ ஹி சரணாவேவ நிபுணௌ |'

அம்பாளே ஸகலவிதமான ஆபத்துக்களிலிருந்தும் காப்பாற்றக் கூடியவள்.

'ஆபதி கிம் கரணீயம் ஸ்மரணீயம் சரணயுகளமம்பாயா: |
தத் ஸ்மரணம் கிம் குருதே ப்ரம்ஹாதீனபி கிங்கரீ குருதே ||'

'காந்தார மத்ய த்ருடலக்னதயாவஸன்னா:
மக்னாச்ச வாரிதிஜலே ரிபுபிச்ச ருத்தா: |
யஸ்யா: ப்ரபத்ய சரணௌ விபதஸ்தரந்தி
ஸா மே ஸதாஸ்து ஹ்ருதி ஸர்வ ஜகத் ஸவித்ரீ ||

பந்தே வதே மஹதி ம்ருத்யுபயே ப்ரஸக்தே
வித்தக்ஷயே ச விவிதே ச மஹோபதாபே |
யத் பாதபூஜனமிஹ ப்ரதிகாரமாஹு:
ஸா மே ஸமஸ்தஜனனீ சரணம் பவானீ ||'

ஸகலவிதமான பாபங்களுக்கும் அம்பாளுடைய பாதஸ்மரணமே பரம ப்ராயச்சித்தமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'க்ருதஸ்யாகில பாபஸ்ய ஞானதோऽக்ஞானதோபி வா |
ப்ராயச்சித்தம் பரம் ப்ரோக்தம் பராசக்தே: பதஸ்ம்ருதி: ||'

ஆகவே அம்பாளைவிட உயர்ந்த தெய்வமில்லையென்பதும் அம்பாளை ஆராதித்தால் ஸகல தேவர்களும் த்ருப்தியடைகிறார்களென்பதும் சாக்தர்களுடைய ஸித்தாந்தம்.

இப்படி ஸகல தேவதாஸ்வரூபிணியாயும் ஸமானாதிக வர்ஜிதையாயும் இருக்கப்பட்ட மஹாராக்ஞியின் க்ருபையானது ஏற்பட்டுவிட்டால் நமக்கு என்னதான் கிடைக்காது!

'கிம் கிம் து:கம் தனுஜதளினி க்ஷீயதே ந ஸ்ம்ருதாயாம்
கா கா கீர்த்தி: குலகமலினி க்யாப்யதே ந ஸ்துதாயாம் |
கா கா ஸித்தி: ஸுரவரனுதே ப்ராப்யதே நார்ச்சிதாயாம்
கம் கம் யோகம் த்வயி ந சினுதே சித்தமாலம்பிதாயாம் ||'

(கடஸ்தவம்)

அம்பாள் இம்மாதிரி நாம் விரும்பியவற்றையெல்லாம் கொடுப்பதில் நம்முடைய க்ஷேமத்தையே மனதில்கொண்ட மாதாவாகையால் அவைகளை நாம் நமக்கு ஹிதமான வழியில் உபயோகப்படுத்த வேண்டுமென்ற அக்கரையோடு நமக்கு முதவில் ஞானத்தைக் கொடுப்பதாயும், பிறகு ஐச்வர்யத்தையும், அதை அனுபவிப்பதற்காக ஸௌந்தர்யமுள்ள சரீரத்தையும் கொடுப்பதாக ஆசார்யாளால் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸரஸ்வத்யா லக்ஷ்ம்யா விதிஹரி ஸபத்னோ விஹரதே
ரதே: பாதிவ்ரத்யம் சிதிலயதி ரம்யேண வபுஷா |'

அம்பாள் இப்படி இவையெல்லாம் கொடுப்பதின் காரணம் நமக்கு அவித்யையான பாசம் விலகிப்போய், உண்மையானதும்

பரமானந்தமயமானதுமான நம்முடைய பரப்ரம்ஹஸ்வரூபத்தை நாம் அறிந்து கடைத்தேற வேண்டுமென்ற கருணைதான். இந்த (பாசத்திலிருந்து விடுதலையடைவதான) முக்தியை நமக்கு இந்த ஜன்மத்திலேயே கொடுப்பதற்கும் அம்பாள் ஸித்தமாக இருக்கிறாளென்பதையும் மேலே சொல்லிய ச்லோகத்தின் உத்தரார்த்தத்தில் ஆசார்யாள் சொல்லியிருக்கிறார்கள்.

'சிரம் ஜீவன்னேவ க்ஷபித பசு பாச வ்யதிகர:
பரானந்தாபிக்யம் ரஸயதி ரஸம் த்வத் பஜனவான் ||'

ஸகலவிதமான மங்களங்களையும் நமக்குக் கொடுப்பதற்கு அம்பாள் எப்போதும் உத்யுக்தையாக இருக்கிறபடியால் நாம் ஒன்றையும் குறிப்பிடாமலேயே உபாஸித்துவந்தால் நமக்கு எல்லாம் கிடைக்கும். லோகமாதாவுக்கு நம்முடைய தாபத்ரயங்களெல்லாம் தெரியுமாகையாலும் அவளுடைய மனதானது கருணாம்ருத கல்லோலமாயிருப்பதாலும், நம்முடைய க்ஷேமத்திற்கு எது தேவையோ அதை நாம் கேட்காமலேயே கொடுப்பதற்கு ஸித்தமாக இருக்கிறாள். நாம் செய்யவேண்டியது ஒரே கார்யம் தான்—அம்பாளே சரணமென்பதான த்ருடபாவனையோடும் அனன்ய சித்தத்தோடும் ஆராதிக்கவேண்டும். அப்போது அம்பாள் நம்முடைய ஐஹிகமான ஸகல பாரங்களையும் தான் ஏற்றுக்கொள்வதுடன் முக்தியையும் கொடுப்பாள்.

'நிஷ்காமோ தேவதாம் நித்யம் யோऽர்ச்சயேத் பக்திநிர்பர: |
தாமேவ சிந்தயன்னாஸ்தே யதாசக்தி மனும் ஜபன் ||
ஸைவ தஸ்யைஹிகம் பாரம் வஹேன்முக்திம் ச ஸாதயேத் |
ஸதா ஸந்நிஹிதா தஸ்ய ஸர்வம் ச கதயேத ஸா ||'

இவ்விதம் சரணாகதி அடைந்தவனுடைய லக்ஷணமானது பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

ய: புமானகிலம் பாரம் ஐஹிகாமுஷ்மிகாத்மகம் |
ஸ்ரீதேவதாயாம் நிக்ஷிப்ய ஸதா தத்கதமானஸ: ||
ஸர்வானுகூல ஸர்வத்ர ப்ராதிகூல்யவிவர்ஜித: |
அனன்யசரணோ கௌரீம் த்ருடம் ஸம்ப்ரார்த்ய ரக்ஷணே |

ரக்ஷிஷ்யதீதி விச்வாஸஸ் தத்ஸேவைக ப்ரயோஜன: |
வரிவஸ்யா தத்பர: ஸ்யாத் ஸ ஏவ சரணாகத: ||'

இப்படி சரணாகதிபண்ணியவனை அம்பாளானவள் கன்றை விட்டுப்பிரியாமல் தொடர்ந்துபோகும் பசுமாதிரி வாத்ஸல்யத்துடன் அனுஸரித்து ரக்ஷிப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'வாத்ஸல்ய ஸஹிதா தேனு: யதா வத்ஸமனுவ்ரஜேத் |
ததானுகச்சேத் ஸா தேவீ ஸ்வபக்தம் சரணாகதம் ||'

இம்மாதிரி சதுர்வித புருஷார்த்தங்களையும் இந்த ஜன்மத்திலேயே நாம் அடையும்படி அனுக்ரஹம் செய்யக்கூடிய தெய்வம் அம்பாள் ஒருவளே என்பது பரம ஸித்தாந்தமாம். அத்தகைய பரதேவதையின் உபாஸனையை ப்ரதிபாதிக்கும் ஸ்தோத்ரங்களில் மிகச் சிறந்ததாயும், பரதேவதையின் உத்தரவின் பேரில் வாக் விபூதிகளாயுள்ள வசின்யாதிகளால் திருவாய் மலர்ந்தருளப்பட்டதாயும் உள்ள ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரமானது ஸர்வானந்தகரமென்பதிலும் பரமாஹ்லாதகரமென்பதிலும் ஸர்வோத்க்ருஷ்டமென்பதிலும் அபிப்ராயபேதமிருப்பதற்கு இடமேயில்லை. ஆகவே தேவி பக்தர்கள் யாவரும் இந்த ஸ்தோத்ர ரத்னத்தை தினந்தோறும் பாராயணம் செய்து நாமாக்களின் அர்த்தத்தை அனுஸந்தானம் செய்து உபாஸித்து அவளுடைய கருணைக்குப் பாத்ரர்களாவதற்கு முயற்சிப்பது அவர்களுடைய இன்றியமையாத கடமையாகும்.

ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுரஸுந்தர்யை நம:



श्रीभासुरानन्दापरनामधेय श्रीभास्कररायमखी

*(By Courtesy Sri Brahma Vidya Vimarsini Sabha.)*

உ

# பாஸ்கரராயரும் அவருடைய மகிமையும்.

---

* இவ்வாசிரியர் தம்மால் இயற்றப்பட்ட "ஸௌபாக்ய பாஸ்கர" மென்னும் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யத்தின் இறுதியில் மேற்படி பாஷ்யமானது விக்ரமாப்தம் (सौ[illegible]यामि [illegible]) 1785-க்குச் சரியான கி. பி. 1729-ல் காளயுக்தி, சைத்ரத்து, ஆஸ்வித சுக்ல நவமியன்று முடிவுபெற்றதாகவும், சேதுபந்தமென்னும் வியாக்கியானம் (शके[illegible]चापे) சகம் 1625-க்குச் சரியான கி. பி. 1733-ல் சிவராத்ரி. புண்யகாலத்தன்று பூர்த்தி செய்யப்பட்டதென்றும் கூறியிருக்கின்றனர். ஆதலின், பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பாதி பாஸ்கரராயரின் விளங்கலான காலமாயிருக்கலாமென யூகித்தல் வேண்டும். ஆகவே, இவரதுகாலம், பதினேழாம் நூற்றாண்டின் கடைசியிலிருந்து பதினெட்டாம் நூற்றாண்டின் மத்யகாலம் வரையில் இருக்கலாமென்று பல ஆராய்ச்சிகளின் மூலமாய்த் துணிந்து கூறலாம். உமாநந்த நாதரென்னும் ஜகந்நாத பண்டிதர் பாஸ்கர ராயரது சிஷ்யர். இவர் நித்யோத்ஸவமென்னும் ஒரு பத்ததியை (பூஜாகல்பத்தை) யியற்றித் தனது குருவாகிய பாஸ்கரராயரது அநுமோதத்தையும் பெற்றிருந்தார். அந்த பத்ததி க்ரந்தம், கலியாதி (रसार्णवकरिवेदमितेषु) 4876 வருஷங்களுக்குச் சரியான கி. பி. 1775-ஆண்டில் முடிவுபெற்றதாகத் தெரிகிறது. இதுவும், ஸ்ரீ பாஸ்கரராயரது காலத்தை ஒருவாறு நிர்மாணிக்கின்றது. ஆகவே, இவரது காலம் கி. பி. 1690 முதல் கி. பி. 1785 வரையில் இருக்கலாம், என்று ஒருவாறு நிர்மாணிக்கக்கூடும். *

---

* இக்குறிப்பிட்ட இடங்கள், சென்னை ஸ்ரீ பிரஹ்ம வித்யா விமர்சினி ஸபையாரால் வெளியிடப்பட்டிருக்கும் ஸ்ரீ வரிவஸ்யா ரஹஸ்யத்தின் முகவுரையிலிருந்து எடுக்கப்பட்டிருக்கிறது.

# பாஸ்கரராயரும் அவருடைய மகிமையும்.

* இவ்வாசிரியர் தம்மால் இயற்றப்பட்ட "ஸௌபாக்ய பாஸ்கர" மென்னும் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யத்தின் இறுதியில் மேற்படி பாஷ்யமானது விக்ரமாப்தம் (मोदच्छायामितायाम्) 1785-க்குக் சரியான கி. பி. 1729-ஆு காளயுக்தி, சரத்ருது, ஆஶ்வீஜ சுக்ல நவமியன்று முடிவுபெற்றதாகவும், ஸேதுபந்தமென்னும் வியாக்கியானம் (शकेशर्मचापे) சகம் 1625-க்குச் சரியான கி. பி. 1733ஆு சிவராத்ரி புண்யகாலத்தன்று பூர்த்தி செய்யப்பட்டதென்றும் கூறியிருக்கின்றனர். ஆதலின், பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பாதி பாஸ்கரராயரின் வியாபகமான காலமாயிருக்கலாமென யூகித்தல் வேண்டும். ஆகவே, இவரதுகாலம், பதினேழாம் நூற்றாண்டின் கடைசியிலிருந்து பதினெட்டாம் நூற்றாண்டின் மத்யகாலம் வரையில் இருக்கலாமென்று பல ஆராய்ச்சிகளின் மூலமாய்த் துணிந்து கூறலாம். உமாநந்த நாதரென்னும் ஜகன்னாத பண்டிதர் பாஸ்கரராயரது சிஷ்யர். இவர் நித்யோத்ஸவமென்னும் ஒரு பத்ததியை (பூஜாகல்பத்தை) யியற்றித் தனது குருவாகிய பாஸ்கரராயரது அநுமோதத்தையும் பெற்றிருந்தார். அந்த பத்ததி க்ரந்தம், கலியாதி (रसार्णवकरिवेदमितेषु) 4876 வருஷங்களுக்குச் சரியான கி. பி. 1775ஆுத்தில் முடிவுபெற்றதாகத் தெரிகிறது. இதுவும், ஸ்ரீ பாஸ்கரராயரது காலத்தை ஒருவாறு தீர்மானிக்கின்றது. ஆகவே, இவரது காலம் கி. பி. 1690 முதல் கி. பி. 1785 வரையில் இருக்கலாம், என்று ஒருவாறு தீர்மானிக்கக்கூடும். *

---

* இக்குறிப்பிட்ட இடங்கள், சென்னை ஸ்ரீ பிரஹ்ம வித்யா விமர்சினீ ஸபையாரால் வெளியிடப்பட்டிருக்கும் ஸ்ரீ வரிவஸ்யா ரஹஸ்யத்தின் முகவுரையிலிருந்து எடுக்கப்பட்டிருக்கிறது.

இம்மஹான் மஹாராஷ்ட்ர தேசத்தில் பாகா என்னும் ஊரில் அவதாரம் செய்தார். அவர் தகப்பனார் பெயர் கம்பீர ராயர். தாயார் பெயர் கோனும்பிகா. அவருடைய கோத்ரம் விச்வாமித்ர கோத்ரம்.

கம்பீர ராயர் பெரிய பண்டிதர். சீலவான். ஒரு சமயம் விஜய நகரத்து அரசர் இவரை தன் சபையில் மஹாபாரதத்தை ப்ரவசனம் பண்ணக்கேட்டு அவருடைய வித்வத்தையும் சக்தி யையும் கண்டு மகிழ்ந்து அவருக்கு 'பாரதீ' என்ற பரம்பரை யான பட்டம் அளித்தார்.

பாஸ்கர ராயருக்குத் தக்க வயது வந்தவுடன் அவர் தகப்ப ஞர் அவரை காசிக்கு அழைத்துக்கொண்டுபோய் அங்கே உப நயனம் செய்வித்து ந்ருஸிம்ஹாத்வரீ என்ற பெரியாரிடம் வித் யாப்யாஸம் செய்து வைத்தார். பால்யத்திலேயே தகப்பஞர் இவருக்கு ஸரஸ்வதி உபாஸனை செய்துவைத்ததால் இவர் வெகு சுலபமாக சமஸ்த வித்யைகளையும் அப்யாஸம் பண்ணிவிட்டார். தன் ஏழாவது வயதிலேயே ஸபேச்வரர் என்ற மஹா வித்வா ஞகிய அரசனுடைய மதிப்பை தன் புத்திசாலித்தனத்திஞல் அடைந்தார். கங்காதர வாஜபேயீ என்றவரிடம் கௌடதர்க்க சாஸ்த்ரத்தையும் அப்யாஸம் செய்தார். பிறகு ஆனந்தீ என்ற பெண்ணை விவாகம் செய்துகொண்டார். இவர்களுக்கு பாண்டு ரங்கன் என்ற குழந்தை பிறந்தது. அதர்வண வேதமானது அப்போது சரியாக அப்யாஸம் செய்யப்படாமலிருந்தபடியால் அதை இவர் ஸாங்கமாகக் கற்றுக்கொண்டு பிறருக்கும் சொல்லி வைத்தார். இவருடைய முயற்சியால் தேவீ பாகவதம் என்கிற மகா புராணத்திற்கும், ராமாயணத்தின் எட்டாவது காண்ட மாகிய அத்புத காண்டத்திற்கும் அதிகமான ப்ராபல்யம் ஏற் பட்டது.

இவருக்கு ஸ்ரீவித்யையை உபதேசம்செய்து பூர்ணபிஷேகம் செய்தவர் சிவதத்த சுக்லர் என்ற மஹான். பாஸ்கரராயருடைய தீக்ஷா நாமம் பாஸுராநந்த நாதர். பிறகு இவர் தன் பத்னி யாகிய ஆனந்தீக்கு ஸ்ரீவித்யையை உபதேசம் செய்து அவளுக்கு பத்மாவத்யம்பிகா என்று தீக்ஷாநாமம் கொடுத்தார். கூர்ஜர

தேசத்தில் விஜயம் செய்து வல்லபாசார்ய மதத்து வித்வான் ஒருவரை வாதத்தில் ஜெயித்தார். பிறகு மத்வ ஸம்ப்ரதாய வித்வான் ஒருவரையும் அதேமாதிரி ஜெயித்து அவருடைய உறவினர் பெண் பார்வதீ என்பவளை மணந்தார். காசியில் ஸோம யாகம் செய்துவிட்டு தன் சிஷ்யனான சந்த்ரஸேனன் என்ற அரசனின் வேண்டுகோளுக்கு இணங்கி க்ருஷ்ணா நதிக்கரையில் கொஞ்சகாலம் வாஸம் செய்தார். பிறகு தஞ்சாவூரை அக்காலத்தில் ஆண்டுவந்த போஸல வம்சத்து அரசரால் அழைக்கப்பட்டு தன்னுடைய வாஸத்திற்காக ஒரு அக்ரஹாரம் இனாமாகக் கொடுக்கப்பட்டார். தன் குருவாகிய கங்காதர வாஜபேயீ என்பவர் அப்போது சோழதேசத்தில் காவேரி நதியின் தென் கரையில் திருவாலங்காடு என்னும் ஊரில் இருந்ததால் அவருக்கு அருகில் இருக்க நினைத்து பாஸ்கர ராயர் அந்த ஊருக்கு எதிர் கரையில் இருந்த அக்ரஹாரத்தில் வசித்து வந்தார். அது காரணமாக அந்த ஊருக்கு பாஸ்கர ராஜபுரம் என்று பெயர் ஏற்பட்டது. அங்கே வெகுகாலம் அம்பாளுடைய உபாஸனையில் ஈடுபட்டு இருந்துகொண்டு கடைசியாக மத்யார்ஜுன க்ஷேத்ரத்திற்கு வந்து 95-வயதில் அம்பாளுடைய சரணாரவிந்தத்தை அடைந்தார்.

* பாஸ்கரர் மத்யார்ஜுனத்தில் வசித்துவருங்கால் ஒரு ஆச்சர்யமான விஷயம் நடந்தது. அதாவது:— ஸ்ரீ பாஸ்கர ராயர் அவர்கள் மத்யார்ஜுனமென்னும் திருவிடைமருதூரில் மஹாதானபுரத் தெருவில் உள்ள தனது க்ருஹத்தின் தெருத் திண்ணைமேல் மாலைவேலைகளில் சாய்ந்துகொண்டு தனது பாதங்களைத் தூணிற்கு முட்டவைத்து உட்காருவது வழக்கமாயிருந்தது. இங்ஙனமிருக்க, அவ்வூருக்கருகாமையிலுள்ள வேப்பத்தூரிலிருந்து ஒரு ஸந்நியாஸி பிரதிதினம் பாஸ்கரராயரது வீட்டின் வழியாக ஸ்ரீ மஹாலிங்கஸ்வாமி கோயிலுக்குப்போவது வழக்கம். பாஸ்கரராயர் அச்சந்நியாஸி போகும்போது எழுந்து க்ருஹஸ்த தர்மத்தின்படி யதிகளுக்குச் செய்யவேண்டிய மரியாதையைச் செய்ததில்லை. இதைக் கவனித்துவந்த அத்துறவிக்குப் பாஸ்கரராயரிடத்தில் த்வேஷம் ஏற்பட்டது. இங்ஙனமிருக்கையில், ஒரு நாள் பிரதோஷ ஸமயத்தில் அந்த

ஸந்நியாஸியும் பாஸ்கரராயரும், கோயிலில் ஸந்திக்கும்படி நேர்ந்தது. அப்போது ஸந்நியாஸி கோயிலில் கூடியிருந்த ஜனங்கள் முன்னிலையில் நமது பாஸ்கரரை யிழிவாகப் பேசிக்கண்டித்தனர். பாஸ்கரராயரும் சாந்தமாகத் தான் அச்சந்நியாஸியை இல்லற தர்மத்தின்படி நமஸ்கரித்திருந்தால் அத்துறவியின் சிரம் ஆயிரம் சுக்கலாக வெடித்திருக்கும்; அவரது பிராணனைக் காப்பாற்றுவதற்காகவே, தான் வணங்கவில்லையென்று அஜ்ஜனங்களுக்கு எடுத்துரைத்து அத்துறவியின் தண்டம், கமண்டலம், காஷாய வஸ்திரம் இவைகளை ஓரிடத்தில் வைத்து பாஸ்கரராயர் அவைகளுக்கு ஸாஷ்டாங்க வந்தனம் செய்தார். உடனே தண்ட கமண்டல காஷாயங்கள் ஆயிரம் சுக்கலாகப் போய்விட்டன. உடனே ஸந்நியாஸி நமது பாஸ்கரரின் மஹிமையை யுணர்ந்து, தான் அவரிடத்தில் த்வேஷித்ததற்கு மன்னிப்புக் கேட்டுக்கொண்டனர். அதுமுதல் பாஸ்கரராயர் அச்சந்நியாஸி வரும்போது தெருவில் இருப்பதில்லையாம். இது பாஸ்கரராயரின் மஹிமையைத் தெரிவிக்கின்றதல்லவா? இச்சம்பவத்தினால், சிலர் பாஸ்கரராயருக்கு அஹங்கார குணமுண்டென்று நினைத்தல் கூடும். இங்ஙனம் நினைப்பது பிசகு. *

பாஸ்கரராயருடைய மஹிமையைப் பற்றிய விருத்தாந்தங்கள் பல உண்டு. காசியில் இருந்துவந்த நாளில் இவர் வாமாசார ஸம்ப்ரதாயப்படி அம்பாளை உபாசித்துக்கொண்டு வருவதை அங்கே இருந்தபண்டிதர்களில் சிலர் பலமாக ஆக்ஷேபித்து வந்தார்கள். அப்படி ஆக்ஷேபித்து வருவதை அறிந்த பாஸ்கரராயர் தான் ஒரு மஹாயாகம் செய்யப்போவதாகச் சொல்லி அதற்கு அவர்களை அழைத்தார். அங்கே போய் அந்த ஸமயம் பாஸ்கரராயருடன் வாதம் செய்து ஜெயித்து அவரை வாமாசார மார்க்கத்திலிருந்து திருப்பிவிடலாமென்கிற எண்ணத்துடன் போன இந்த பண்டிதர்கள் அங்கே செய்யப்படும் யாகத்தினுடைய அபாரமான மகிமையையும் பாஸ்கரராயருடைய தபோபலத்தையும் காந்தியையும் கண்டு ஆச்சரியம் அடைந்தார்கள். ஆயினும் அவரை அவமானப்படுத்த எண்ணி மந்த்ர சாஸ்த்ர சம்பந்தமான கேள்விகளைக் கேட்க ஆரம்பித்தார்கள். பாஸ்கரராயரோ மந்த்ர சாஸ்த்ரத்தைக் கரை கண்டவராதலால்

அவர்கள் சொல்லும் கேள்விகளுக்கெல்லாம் சற்றும் தயங்காது பதிலளித்து வந்தார். இம்மாதிரி பண்டிதர்கள் வீண் பிரயாசைப் படுவதை அங்கே வந்திருந்த குங்குமானந்த ஸ்வாமி என்னும் மஹான் பார்த்து அவர்களை நோக்கி "வித்வான்களே! நீங்கள் படும் சிரமம் வீண்தான். இவரை உங்களால் ஜெயிக்க முடியாது. இவர் சாமான்யரல்ல. மேலும் இவர் பதில் சொல்லுவதாக நினைக்கவேண்டாம். இவர் தோள்களில் அம்பாள் ஆரூடையாக இருந்துகொண்டு உங்களுடைய கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லிக்கொண்டு வருவதால் நீங்கள் அபஜயம் அடையப் போவது நிச்சயம்" என்று சொல்லி அவர்களை நிறுத்தினர். அப்போது அவர்களில் முக்யமானவரும் பிரபல பண்டிதருமான நாராயணபட்டரென்பவர் அம்பாள் அப்படி பிரஸன்னமாக இருப்பதை தான் தர்சனம்பண்ண வேண்டுமென்று பிரார்த்திக்க குங்குமானந்தஸ்வாமி அவர் தர்சனம் செய்ய யோக்யரென்று நிச்சயித்து பாஸ்கரராயரால் அம்பாளுக்கு செய்யப்பட்ட அபிஷேக ஜலத்தால் நாரயணபட்டருடைய கண்களைத் துடைத்தவுடன் அவருக்கு சரியான த்ருஷ்டி ஏற்பட்டு அம்பாள் அங்கே ஸ்வாமிகள் சொன்னபடி ஆவிர்பவித்திருப்பதைக் கண்குளிரக் கண்டார். பிறகு அவரும் மற்ற பண்டிதர்களும் பாஸ்கரராயருக்கும் ஸ்வாமிகளுக்குக்கும் நமஸ்காரம்பண்ணி அஞ்சலிசெய்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டு அதுமுதல் பாஸ்கரராயரை மிகவும் பக்தியுடன் பாராட்டி வந்தார்கள்.

குங்குமானந்த ஸ்வாமி என்பவர் மிகவும் பிரபாவமுள்ள அம்பாள் பக்தர். பூர்வாச்ரமத்திலும் யதியான பிறகும் அம்பாளுடைய உபாஸனையைக் கைக்கொண்டு அம்பாள் ஸாக்ஷாத்காரம் அடைந்தவர். அந்த மஹிமையினுல் தன் சரீரத்தில் அவர் தரிக்கும் விபூதியானது குங்குமமாக மாறி வரும்படியான அனுக்ரஹம் உடையவர். இது காரணம்பற்றியே அவருக்கு குங்குமானந்த ஸ்வாமி என்று பெயர்.

இந்த சமயம் எதைப்பற்றிக் கேட்பது என்று அந்த பண்டிதர்களுக்கு சந்தேகம் வந்து ஒரு புராணத்திலும் இதிஹாஸத்திலும் வேறு கிரந்தத்திலும் சொல்லாத ஸமாசாரமாகிற

"மஹாசதுஷ்ஷஷ்டி கோடி யோகினி கணஸேவிதா" என்று லலிதா ஸஹஸ்ரநாமத்தில் வரும் நாமத்தில் சொல்லப்படும் 640,00,00,00 யோகினிகளுடைய உத்பத்தி, லக்ஷணம், சரித்ரம் முதலியவைகளை சொல்லும்படி கேட்டார்கள். உடனே பாஸ்கர ராயர் "நான் அவைகளைச் சொல்லுகிறேன். நீங்கள் எழுதிக் கொண்டு வரலாம்" என்று சொல்லி சிறிதும் தவருதலாவது தடங்கலாவது இல்லாமல் ஒவ்வொரு யோகினியின் நாமம், உத்பத்தி முதலியவைகளைச் சொல்லிவர எழுதியவர்கள் கை சளைத்ததே தவிற பாஸ்கர ராயர் சிரமமில்லாமல் சொல்லிக்கொண்டே வந்தாராம்.

மேலே சொல்லப்பட்ட மாதிரி பாஸ்கர ராயரைப்பற்றி கதைகள் எவ்வளவோ உண்டு.

தேவி உபாஸகர்களில் மிகவும் சிரேஷ்டர் என்றும், அம்பாளுடைய வரப்ரஸாதம் பெற்றவர் என்றும் அவைகளிலிருந்து நன்ருக ஏற்படுகிறது. இம்மாதிரி கதைகள் சம்பாவிதமா என்றும் சிலது நடந்திருக்க நியாயமில்லை யென்றும் சரித்திர ஆராய்ச்சி முறைமையில் ஏற்பட்டாலும் அம்மாதிரி நாம் பரிசோதனை செய்யத் தேவையில்லை. இம்மஹானிடத்தில் நமக்கிருக்கும் பக்தியானது இம்மாதிரி கதைகளால் குறைவுபடாமல் அதிகரிக்கும்படி செய்யப்பட்டு நம்முடைய மனதுக்கு ரஞ்ஜகமாக இருக்கும்வரையில் அவைகளை நாம் நம்புவதில் தோஷமில்லை. இதுவேதான் நம்முடைய பெரியோர்களின் சித்தாந்தமும். உதாரணமாக இப்போதிருக்கும் சங்கர விஜயங்களில் சில இடங்களில் ஒன்றுக்கொன்று ஒத்துமையில்லாமலும் சில கதைகள் அசம்பாவிதமாகவும் தோன்றக்கூடும். ஆயினும் நாம் அவற்றை ஒன்றையும் தள்ளிவிடவில்லையே.

* பாஸ்கரராயர் வைதிகமான ஸநாதனதர்மத்தை அநுஷ்டிப்பவராகும். ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யத்தின் ஆரம்பத்தில்

श्रीगम्भीररविपश्रितः पितुरभूद्यः कोनमाम्बोदरे ।
विद्याष्टादशकस्य मर्मभिदभू द्यः श्रीनृसिंहाद्गुरोः ॥

यश्च श्री शिवदत्त शुक्लचरणैः पूर्णाभिषिक्तोऽभव
त्स वेता त्रिपुरा त्रयीति मनुते तामेवनाथत्रयीम् ॥

என்னும் ஸ்லோகத்தில்: "யாருக்குக் கம்பீரராயரென்னும் மஹா பண்டிதரும் கோனமாம்பாவும் பெற்றோர்களோ, யாருக்குப் பதினெட்டு வித்தைகளின் மர்மங்களையுமறிந்த ஸ்ரீ நரஸிம்ஹானந்தர் குருவோ, யாருக்கு ஸ்ரீ சிவதத்த சுக்ல சரண ஸ்வாமிகள் பூர்ணாபிஷேகம் செய்துவைத்தனரோ (பாஸ்கர ராயராகும்) அவர், தக்ஷிணாக்னி, கார்ஹபத்தியம், ஆஹவநீயம் என்னும் முச்சுடர்களையும்; ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்களில் ஸ்வயம்ப்ரகாசமாய் விளங்கும் சிதக்னியாகும் த்ரிபுரஸுந்தரீ தேவியையும், ருக், யஜுஸ், ஸாமமென்னும் வேதங்களையும் பரமப்பிரமாணமாய் ஒத்துக்கொள்பவராவர்" என்று கூறப்பட்டிருக்கின்றது. ஆதலின் பாஸ்கரராயர் ஒரு சிறந்த வைதிகர்.

மேலும், இவர் ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதராலியற்றப்பட்ட "ரத்னத்ரய பரீக்ஷை" யென்னும் கிரந்தத்தில் பிரதிபாதனம் செய்யப்பட்ட அத்வைத ஸித்தாந்தத்தைத் தழுவின கொள்கையை யுடையவராவார்.

" नित्य निर्दोषगंधं निरतिशयसुखंब्रह्मचैतन्यमेकं
धर्मो धर्मीतिभेदद्वितयमितिपृथग्भूयमायावशेन । "

அழிவற்றதாயும், தோஷ (அஞ்ஞான)த்தின் வாஸனையுமற்றதாயும், ஒப்பும் உயர்வுமின்றிய ஆநந்தமே ஸ்வரூபமாயுடையதுமான ஏகசைதன்யமே பிரஹ்மமாகும். அதுவே (கற்பிதமான) தனது மாயையினால் தர்மம், தர்மி என இரண்டாகத் தோன்றிற்று—என்னும் ஸ்லோகம் ரத்னத்ரய பரீக்ஷையில் உள்ளது. இதை நமது பாஸ்கரராயர் தமது பாவனோபநிஷத் பாஷ்யத்தில் பிரமாணமாக எடுத்து ஆண்டிருக்கின்றனர். ஆதலின், இவர் பிரஹ்மம் ஒன்றே உள்ளது; மற்ற யாவும் கற்பிதமே என்னும் விவர்த்தவாதத்தை அநுஸரித்துள்ள சாங்கராத்வைதத்தின் கொள்கையை யுடையவரென நன்கு புலப்படுகின்றதல்லவா? அன்றியும், இவர் தம்மாலியற்றப்பட்ட குப்தவதீ யென்னும்

ஸ்ரீஸப்தஶதீ வ்யாக்யானத்தில் முதலில் ஸ்ரீ ஜகத்குரு சங்கராசார்ய ஸ்வாமிகளை ஸ்தோத்திரம் செய்துள்ளார். இதனாலும் இவர் சங்கராத்வைதியென்று ஏற்படுகின்றது. *

பாஸ்கரராயர் சுமார் 40-க்கு மேற்பட்ட கிரந்தங்களை செய்திருக்கிறார். அவைகளில் பெரும்பாலும் இப்போது கிடைக்கவில்லை. அவர் எழுதிய கிரந்தங்களின் விபரம் தெரிந்த வரையில் கீழே கண்டிருக்கிறது.

வேதாந்தம்:—1. சண்டபாஸ்கரம் 2. நீலாசலபேடிகா. மீமாம்ஸா:—1. வாத கௌதூஹலம் 2. பாட்ட சந்த்ரோதயம். வ்யாகரணம்:—1. ரஸிகரஞ்ஜனீ. ந்யாயம்.—1. ந்யாயகண்டனம். சந்தஸ்:—சந்தோ பாஸ்கரம் 2. சந்தஃ கௌஸ்துபம் 3. வ்ருத்த சந்த்ரோதயம் 4. வார்த்திகராஜம் 5. சோடவ்ருத்தி. காவ்யம்:—1. சந்த்ர சாலா 2. மதுராம்லம் 3. ஸுபாஷிதம். வேதம்:—1. வைதீக கோசம். ஸ்ம்ருதி:—1. ஸ்ம்ருதி தத்வம் 2. ஸஹஸ்ரபோஜனவிதி கண்டகா 3. சங்க சக்ராங்கன ப்ராயச்சித்தம் 4. ஏகாதசீ நிர்ணயம் 5. ப்ரதோஷ பாஸ்கரம் 6. த்ருச பாஸ்கரம் 7. குண்ட பாஸ்கரம். ஸ்தோத்ரம்:—1. சிவதண்டகம் 2. தேவீஸ்தவம் 3. சிவஸ்தவம் மந்த்ர சாஸ்த்ரம்:—1. சிவாஷ்டோத்தர சதநாம வ்யாக்யா 2. கத்யோதம் (கணபதி ஸஹஸ்ரநாம பாஷ்யம்) 3. சந்த்ரலாம்பா மாஹாத்ம்யடீகா 4. நாத நவரத்ன மாலா மஞ்ஜூஷா 5. பாவனோபனிஷத் பாஷ்யம், ப்ரயோகம் 6. ஸ்ரீஸூக்த பாஷ்யம் 7. கௌலோபனிஷத் பாஷ்யம் 8 த்ரிபுரோபனிஷத் பாஷ்யம் 9. ஸௌபாக்ய பாஸ்கரம் (லலிதா ஸஹ்ரநாம பாஷ்யம்) 10. ஸௌபாக்ய சந்த்ரோதயம் 11. வரிவஸ்யா ரஹஸ்யம், ப்ரகாசம் 12. த்ரிபுரஸுந்தரீ பாஹ்ய வரிவஸ்யா 13. ரத்னலோகம் (பரசுராம கல்பஸூத்ர பாஷ்யம்) 14. குப்தவதீ (ஸப்தசதீ பாஷ்யம்) 15. சதச்லோகி 16 மாலா மந்த்ரோத்தாரம் 17. ஸேது பந்தம் (வாமகேச்வர தந்த்ர பாஷ்யம்).

மேலே சொல்லப்பட்டிருக்கும் க்ரந்தங்களின் விரிவையும் விசேஷத்தையும் கவனித்தால் இம்மஹானுக்குத் தெரியாத வித்யை ஒன்றும் இல்லை, அப்யஸிக்காத சாஸ்த்ரம் யாதொன்றும்

கிடையாது என்று தீர்மானமாகச் சொல்லலாம். மேலும் அவருடைய கிரந்தங்களில் எடுத்துச் சொல்லப்பட்டிருக்கும் இதர க்ரந்தங்கள் எண்ணிக்கையற்றவை. அம்பாளுடைய பக்தி சிரோமணியாகையால் அவருடைய கோசரத்தில் அடங்காத விஷயம் யாதொன்றுமில்லை. இவ்வளவு மஹிமைகளையும் ஒருங்கே பொருந்திய இந்தப் பெரியவரை நமது ஆசார்யாள், அப்பய்யதீக்ஷிதர்வாள், இவர்களுக்குத்தான் அடுத்தபடியாகச் சொல்லலாம். விஷயங்களின் காம்பீர்யமும், பதரசனையும், வாத சக்தியும் வேறு சாமான்யமாகச் சொல்லமுடியாது. மந்த்ர சாஸ்த்ரத்தில் இருவருக்குத் தெரியாத விஷயம் யாதொன்று மில்லை. நமக்கெல்லாம் ஸ்ரீவித்யா விஷயத்தில் ஞானமும் கௌரவமும் உண்டாக்கியவர் இவர்தான்.

இவர் அத்வைத மதக்கொள்கையுடையவர். இவருடைய கிரந்தங்களில் நமது ஆசார்யாளைப் பற்றிச் சொல்லுகையில் பரம பக்தியையும் அவர்களுடைய அத்வைத மதக்கொள்கைகளைத் தான் பின்பற்றி யிருப்பதாயும் வெளியிட்டிருக்கிறார். அந்த மதத்தின் முக்கிய க்ரந்தங்களான ஆசார்யாள் பாஷ்யங்கள், பஞ்சபாதிகா, வார்த்திகம், விவரணம், பாமதீ, ஸம்க்ஷேப சாரீரகம், பஞ்சதசீ முதலியவைகளிலிருந்து தான் எழுதிய க்ரந்தங்களில் வெளியிட்டிருக்கிறார்.

இவருடைய மஹிமையைப்பற்றி இவருடைய சிஷ்யர்களில் ஒருவரும் பரசுராம கல்பஸூத்ரங்களை அனுசரித்து 'நித்யோத்ஸவம்' என்ற பூஜா பத்ததி எழுதியவருமான ஜகன்னாதரென்ற உமானந்த நாதர் 'ஸ்ரீ பாஸ்கர விலாஸம்' என்ற க்ரந்தத்தில் எழுதியபடி,

> அஸ்யாऽத்ருஷ்டோ நாஸ்தி பூமண்டலாம்சோ
> அஸ்யாऽஜ்ஞாதோ வித்யதே ந க்ஷிதீச: |
> அஸ்யாऽஸாத்யா நாஸ்தி வித்யா கிமன்யை:
> அஸ்யாகார: ஸா பரா சக்திரேவ ||

* இத்தகைய மஹான் தனது ஸர்வக்ஞத்தன்மையினாலும் பரதேவதையின் பூர்ண அநுக்ரஹத்தினாலும் மேற்கூறிய

கிரந்தங்களையியற்றி முமுக்ஷுக்களுக்கு உபகரித்ததேயன்றிப் பல ஆலயங்களையும் நிர்மித்து அவ்வாலயங்களில் நடக்க வேண்டிய நித்திய நைமித்திக பூஜைகளுக்கும், ஆராதனை முதலியவற்றிற்கும் வேண்டிய ஏற்பாடுகளும் செய்திருப்பதாகத் தெரிகின்றது.

அவையாவன:—

1. காசியில் ஸ்ரீ சக்ரேஶ்வரரின் ஆலயம்.
2. மூலஹ்ரதத்தில் ஸ்ரீ பாண்டுரங்கஸ்வாமி கோயில்.
3. கோங்கண தேசத்தில் ஸ்ரீ கம்பீரநாத ஸ்வாமியின் ஆலயம்.
4. இராமேஶ்வரத்தில் ஸ்ரீ வஜ்ரேஶ்வரராலயம்.
5. ஸம்நதி என்னும் க்ஷேத்ரத்தில் பாஸ்கரராயரது குல தேவதையாகும் சந்த்ரலாம்பா தேவியினது ஆலயம். (இது ஸ்ரீசக்ரவடிவமாய்க் கட்டப் பட்டுள்ளது.)
6. சோள தேசத்தில் ஸ்ரீ கஹோளேஶ்வர ஸ்வாமியின் ஆலயம்.

மேற்கூறிய கோயில்கள் யாவும் பாஸ்கரராயரால், அவர் காலத்திலேயே பிரதிஷ்டை செய்யப்பட்டனவாகும்.

அவரது காலத்திற்குப்பிறகு அவரது ஜ்யேஷ்டபத்னியாகும் பத்மாவதியம்மாளால் ஸ்ரீ பாஸ்கரராஜபுரத்தில் காவிரிநதிக் கரையில் ஸ்ரீ பாஸ்கரேஶ்வரேஸ்வரர் ஆலயம் நிர்மாணம் செய்யப்பட்டு நாளதுவரை நித்ய பூஜைகள் நடந்து வருகின்றன. *

---

௳

ஸ்ரீ லலிதாமஹாத்ரிபுரஸுந்தர்யை நம:

ஸ்ரீ ந்ருஸிம்ஹானந்தநாதர்
இயற்றிய

# பரிபாஷா ச்லோகங்கள்.

---

1. ஸ்ரீகம்பீர விபச்சித: பிதுரபூத்ய: -
        கோனமாம்போதரே
    வித்யாஷ்டாதசகஸ்ய மர்மபிதபூத் ய -
        ஸ்ரீந்ருஸிம்ஹாத் குரோ: |
    யச்ச ஸ்ரீசிவதத்த சுக்ல சரணை: -
        பூர்ணாபிஷிக்தோऽபவத்
    ஸ த்ரேதா த்ரிபுரா த்ரயீதி-
        மனுதே தாமேவ நாதத்ரயீம் ||

யாரொருவர் வித்வானான ஸ்ரீ கம்பீரராயர் என்ற பிதாவுக்கு கோனமாம்பாளுடைய உதரத்தில் பிறந்தாரோ, யாரொருவர் ஸ்ரீந்ருஸிம்ஹர் என்ற குருமூலமாய் அஷ்டாதச வித்யைகளின் மர்மத்தை பிளந்தாரோ (அறிந்தாரோ), யாரொருவர் ஸ்ரீ சிவதத்த சுக்லரென்ற குருசரணாளால் பூர்ணாபிஷிக்தராக ஆனாரோ, அப்பேர்ப்பட்டவர் அவ்விதமான நாதத்ரயத்தை த்ரேதாக்னிகளாகவும், த்ரிபுரங்களாகவும், த்ரயீயாகவும் எண்ணுகிறார்.

1. *இதில் பாஸ்கரராயரானவர், தன் (ஜன்மகுரு) பிதாவான கம்பீரராயரையும், வித்யாகுருவான ஸ்ரீந்ருஸிம்ஹானந்தநாதரையும், தீக்ஷாகுருவான ஸ்ரீ சிவதத்த சுக்லரையும் நமஸ்கரிக்கிறார்.*

2. *த்ரேதாக்னிகளென்பவை கார்ஹபத்ய, ஆஹவநீய, தக்ஷிணாக்னிகள். த்ரிபுரங்களென்பதைப்பற்றி 626வது நாமத்தில்*

பார்க்கவும். த்ரயீ என்பது (ருக், யஜுஸ், ஸாமங்களாகிய) வேதங்களைக் குறிக்கும்.

3. ந்ருஸிம்ஹானந்தரைப்பற்றிய மங்கள ச்லோகத்துடன் பாஸ்கரராயர் தன் வரிவஸ்யாரஹஸ்யத்தை ஆரம்பித்திருக்கிறார்.

2. குருசரண ஸநாதோ-
பாஸுரானந்த நாதோ
விவ்ருதிம் அதிரஹஸ்யாம்-
வீரவ்ருந்தைர் நமஸ்யாம் |
ரசயதி லலிதாயா: -
நாமஸாஹஸ்ரிகாயா:
குருக்ருத பரிபாஷா: -
ஸம்விவ்ருண்வன் அசேஷா: ||

பாஸுரானந்த நாதரானவர், குருசரணாால் காப்பாற்றப் பட்டவராய், தன் குருவான ந்ருஸிம்ஹானந்த நாதருடைய பரிபாஷைகள் எல்லாவற்றையும் விவரித்து, ஸ்ரீலலிதாம்பிகை யினுடைய ஸஹஸ்ரநாமத்திற்கு அதிரஹஸ்யமானதும், வீரர்களு டைய கூட்டங்களால் நமஸ்கரிக்கத் தக்கதுமான வ்யாக்யானத் தைச் செய்கிறார்.

1. பாஸுரானந்த நாதர் என்பது பாஸ்கரராயருடைய தீக்ஷாநாமம். பூர்ணாபிஷேகமானவுடன் குருவினால் சிஷ்யனுக்கு ஏற்படுத்தப்படும் நாமமானது ஆனந்தநாதரென்ற முடிவுடன் இருக்கவேண்டும். (பரசுராம கல்பஸூத்ரத்தைப் பார்க்கவும்.)

2. வீரர்களென்பதினால் (அம்பாளுடைய) பக்த ச்ரேஷ்டர் களைக் குறிக்கப்பட்டது. இந்த பதத்தைப்பற்றி 777-வது நாமத்தில் பார்க்கவும்.

3. ந்ருஸிம்ஹானந்தநாதரால் செய்யப்பட்ட பரிபாஷா ச்லோகங்கள் பின்னால் சொல்லப்படுகின்றன.

3. அஷ்டாபிர் வாங்மயானும் அதிபதிபிரமோ-
கோக்திபிர் தேவதாபி:
மாத்ராக்ஞப்தாபிர் அக்ர்யம் யதரசி லலிதா-
திவ்ய நாம்னும் ஸஹஸ்ரம் |
யத் ப்ரம்ஹாணீ ரமே ச ப்ரப்ருதி திவிஷதாம்-
விஸ்மயாதான தக்ஷம்
தத்ரைகஸ்யாபி நாம்ன: கதமிவ விவ்ருதிம்-
மாத்ருச: கர்த்து மீஷ்ட்டே ||

எந்த லலிதா நாமஸாஹஸ்ரமானது அமோகமான சொற்க ளோடு கூடியவர்களும், ஸ்ரீ மாதாவால் ஆக்ஞாபிக்கப்பட்டவர் களுமான வாக்தேவதைகள் எட்டுப்பெயர்களால் ஆதியில் செய்யப் பட்டதோ, எந்த ஸஹஸ்ரநாமமானது ப்ரம்ஹா, விஷ்ணு முதலான தேவர்களுக்கெல்லாம் ஆச்சர்யத்தை விளைவிக்கும் சக்தி வாய்ந்ததோ, அவ்விதமான ஸஹஸ்ர நாமத்தின் ஒரு நாமத்திற்குக்கூட என்னைப் போன்றவன் எப்படி வ்யாக்யானம் செய்யமுடியும்.

1. வாக்தேவதைகள் வசினீ முதலான எண்மர். அவர் களைப்பற்றியும் அவர்கள் அம்பாளுடைய கட்டளையின் பேரில் ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமத்தைச் செய்ததைப்பற்றியும் பின்னால் சொல்லப்படுகிறது.

2. இந்த ஸஹஸ்ரநாமத்தைக் கேட்டவுடன் ப்ரம்ஹா விஷ்ணு முதலான தேவர்களெல்லோரும் ஆச்சர்யமடைந்ததைப் பற்றியும் பின்னால் சொல்லப்படுகிறது.

3. ப்ரம்ஹாணீரமேச=ப்ரம்ஹாணீச, ரமேச, ப்ரம்ஹா ணீச=ப்ரம்ஹாவின் பத்னியுடைய பதி, அதாவது ப்ரம்ஹா ரமா=லக்ஷ்மீ அவளுடைய பதி ரமேசர்=விஷ்ணு.

4. ததாபி ஸ்ரீமாத்ரா-
தஹரகுஹரே ஸூத்ரதரயா

ஸமாதிஷ்டா வாசாம்-
அதிபதிஷு காப்யன்யதமிகா |
மதீட்ய ஸ்ரீநாதத்ரய-
சரண நிர்ணேஜனஜலை:
பவித்ரே ஜிஹ்வாக்ரே-
நடதி மமதா ஸா மம மதா ||

அப்படியிருந்தபோதிலும், ஸூத்ரதாரியான ஸ்ரீமாதாவால் ஹ்ருதயத்தில் ஏவப்பட்ட வாக்தேவதைகளில் ஒருவள், எனக்குப் பூஜ்யர்களான ஸ்ரீநாதத்ரயர்களுடைய பாதோதகத்தினுல் பரிசுத்தமாகச் செய்யப்பட்ட (என்) நாக்கின் நுனியில் நர்த்தனம் செய்துகொண்டிருக்கிருள். அவளை என் அஹம்கார ரூபமாக பாவித்திருக்கிறேன்.

1. இப்படி வ்யாக்யானம் செய்வதற்குத் தனக்கு சக்தியில்லாதிருந்தபோதிலும், தான் அந்தக் கார்யத்தில் ப்ரவர்த்தித்ததற்கு ஸமாதானம் இதில் சொல்லுகிருர்.

2. அம்பாளுடைய ஆக்ஞையின்பேரில் வசின்யாதி வாக்தேவதைகளில் ஒருவள் தனக்கு இதில் ஒத்தாசை செய்வதாகச் சொல்லுகிருர். அப்படிச் செய்வதை அவள் தன் நாக்கின் நுனியிலிருந்துகொண்டு நர்த்தனம் செய்வதாக வர்ணிக்கப்பட்டது.

3. அந்த நாக்கானது மேலே சொல்லிய ஸ்ரீநாதத்ரயர்களுடைய நிர்ணேஜனஜலத்தால் (பாதோதகத்தால், கால் கழுவின ஜலத்தால்) பரிசுத்தமாகச் செய்யப்பட்டிருப்பதாகச் சொல்லப்பட்டது.

4. அப்படி ஒத்தாசை செய்யும் வாக்தேவதையிடத்தில் தான் அபேதபாவனையோடு இருப்பதாகச் சொல்லுகிருர். தாதாத்ம்ய பாவனையேதான் உபாஸனையின் பராகாஷ்ட்டை யென்று சொல்லப்படும்.

5. ஆப்ராச: காமரூபாத் த்ருஹிணஸுதநத-
ப்லாவிதாத் ஆப்ரதீசோ

**காந்தாராத் ஸிந்து ஸார்த்ராத் ரகுவரசரிதாத்**
**ஆ ச ஸேதோரவாச: |**
**ஆகேதாராத் உதீச: துஹின கஹினத:**
**ஸந்தி வித்வத் ஸமாஜா:**
**யேயே தான் ஏஷ யத்ன: ஸுகயது ஸமஜான்**
**கச்சமத் கர்த்து மீஷ்ட்டே ||**

கிழக்கில் ப்ரம்ஹபுத்ராநதி ஓடும் காமரூபதேசம் வரையிலும், மேற்கில் ஸிந்துநதி ஓடும் காந்தார தேசம் வரையிலும், தெற்கில் ஸ்ரீராமரால் கட்டப்பட்ட ஸேது வரையிலும், வடக்கில் பனியி னுல் போகமுடியாத கேதாரம் வரையிலும் எந்தெந்த வித்வத் ஸமா ஜங்கள் இருக்கின்றனவோ அவைகளை இந்த (என்னுடைய) முயற்சியானது ஸுகம் (ஸந்தோஷம்) அடையச் செய்யட்டும். மந்தபுத்தியுடையவர்களை த்ருப்தி செய்ய யாரால்தான் முடியும்.

1. *காமரூபமென்பது தற்காலம் அஸ்ஸாம் என்பதான தேசம் என்று சொல்லப்படும்.*

2. *தான் எழுதும் பாஷ்யமானது வித்வான்களுக்கு ஸந் தோஷத்தைக் கொடுக்கட்டுமென்றும், அவ்விதம் அவர்களை ஸந் தோஷமடையச் செய்தாலேயே தான் க்ருதார்த்தனுக ஆகிவிடுவ தாகவும் இதின் தாத்பர்யமாகும்.*

*உலகத்தில் ஸகலவிதமான புருஷார்த்தங்களை அடைவ தற்கும் அம்பாளுடைய ஆராதனமானது முக்யமான ஸாதன மாகும். அவ்விதமான ஆராதனத்திற்கு அம்பாளுடைய ரஹஸ்யநாம ஸாஹஸ்ரத்தைச் சொல்வதானது இன்றியமையா தது. அது மிகவும் ரஹஸ்யமான ஸத்குரு சம்ப்ரதாயத்தின் மூலமாகவே அறியப்படக்கூடியதாகையால், அவ்வித ஸம்ப்ர தாயத்தை சிஷ்யர்களுடைய அனுக்ரஹார்த்தமாகக் காட்ட எண்ணம்கொண்ட என் குருசரணுளான ஸ்ரீந்ருஸிம்ஹானந்த நாதர்தான் எப்போதும் எவ்விதமான இடையூறுக்கும் உட்படா தவராக இருந்தபோதிலும், சிஷ்யர்களுக்கு போதிப்பதற்காக மங்களாசரணம் செய்கிருர். (இனி வரும் I, II முதலான அடையாளமுள்ள ச்லோகங்கள் ஸ்ரீந்ருஸிம்ஹானந்தருடையது.)*

त्रिपुरां कुलनिधिमीडेऽरुणश्रियं कामराजविद्धाङ्गीम् ।
त्रिगुणैर्देवैर्निनुतामेकान्तां बिन्दुगां महारम्भाम् ॥ ॥ १ ॥

I. த்ரிபுராம் குலநிதிம் ஈடே
அருணச்ரியம் காமராஜ வித்தாங்கீம் |
த்ரிகுணைர் தேவைர் நிநுதாம்
ஏகாந்தாம் பிந்துகாம் மஹாரம்பாம் ||

குலநிதியாயும், அருணமான காந்தியோடு கூடியவளாயும், காமராஜரோடு ஸாமரஸ்யமடைந்த சரீரத்தையுடையவளாயும், முக்குணங்களையுடைய தேவர்களால் நமஸ்கரிக்கப்பட்டவளாயும், அதி ரஹஸ்யமானவளாயும், பிந்துவை அடைந்தவளாயும், ப்ரபஞ்சத்தை நிர்மாணம் செய்பவளுமான த்ரிபுரையை நமஸ்கரிக்கிறேன்.

1. த்ரிபுரா—மூன்று புரங்களையுடையவள். இவை ஸ்ரீசக்ரத்திலிருக்கும் பூபுத்ரயத்தைக் குறிப்பவை. அல்லது மண்டல, கோண, ரேகா, மந்த்ராதி ஸமூஹங்களைக் குறிக்கும். அம்பாளைப்பற்றிய இவை ஒவ்வொன்றும் மும்மூன்றாக இருப்பதால் இந்தப் பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

'த்ரிகோணம் மண்டலம் சாஸ்யா பூபுரம் ச த்ரிரேககம் |
மந்த்ரோऽபி த்ர்யக்ஷர: ப்ரோக்த: ததா ரூபத்ரயம் புன: ||
த்ரிவிதா குண்டலீ சக்தி: த்ரிதேவானாம் ச ஸ்ருஷ்டயே |
ஸர்வம் த்ரயம் த்ரயம் யஸ்மாத் தஸ்மாத் து த்ரிபுரா மதா ||'

(காளிகா புராணம்)

இதைப்பற்றி 626-வது நாமத்தையும் பார்க்கவும்.

2. குல நிதி: என்றால் குலத்திற்கு பொக்கிஷம் போலிருப்பவள். குலம் என்பது ஸஜாதீயமான (ஒருவகைப்பட்ட) ஸமூஹத்தைக் குறிக்கும். 'ஸஜாதீயை: குலம் யூதம்'.

3. கடம் அஹம் ஜானாமி (கடத்தை நான் அறிகிறேன்) என்பதில் நான் என்பது மாதா (அளப்பவர்) அறிகிறேன் என்பது மானம் (அளக்கும் கருவி), கடம் என்பது மேயம்

(அளக்கப்படும் வஸ்து) இந்த மாத்ரு, மான, மேயமான த்ரிபுடியானது ஒரே ஞானவியமாக இருப்பதால் ஸஜாதீயமாக விருக்கிறது. இவ்விதம் கடமஹம் ஜானுமி என்பதானது ஞானுகாரமாக இருப்பதை ஆசார்யாளால்,

'ஜானுமீதி தமேவ பாந்தம் அனுபாத்யேயத் ஸமஸ்தம் ஜகத் |'
என்று தக்ஷிணுமூர்த்யஷ்டகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம் மான, மாத்ரு, மேயமாக இருக்கும் த்ரிபுடியெல்லாம் ஞானுகாரமான (சித்ரூபிணியான) அம்பாளுடைய ரூபமாயிருப்பதால் குலநிதி என்று சொல்லப்பட்டது.

4. 'ஸதாசிவ ஸமாரம்பாம் சங்கராசார்ய மத்யகாம் |
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம் ||'

என்பதுபோன்ற குருபரம்பராச்லோகங்களில் சொல்லப்பட்டபடி பரமசிவன் முதலாகத் தன்னுடைய ஆசார்யர் வகையிலிருக்கும் குருபரம்பரைக்கு குலம் என்று பெயர். இதேமாதிரி 'ஸங்க்யா வம்ச்யேன' என்ற ஸூத்ரத்திலும், மஹாபாஷ்யத்தில் 'வம்சோ த்விதா வித்யயா ஜன்மனு ச' என்றும், வம்சமென்பது ஜன்மத்தினுல் (பிறப்பினுல்) ஏற்படுவதைத் தவிர வித்யையினுல் ஏற்படுவதையும் குறிக்கும்.

5. குதம் என்பது ஆசாரத்தையும் குறிக்கும்.

'ந குலம் குலமித்யாஹு: ஆசார: குலமுச்யதே |
ஆசார ரஹிதோ ராஜன் நேஹ நாமுத்ர நந்ததி ||'

(பவிஷ்யோத்தர புராணம்)

6. ஸுஷும்ன மார்க்கத்திற்கும் குலம் என்று பெயர். கு: என்ற ப்ருத்வி தத்வமானது ஸுஷும்ணயின் அடிப்பாகத்திலிருக்கும் மூலாதார சக்ரத்திலிருப்பதால் அந்த சக்ரத்திற்கு குலம் என்று பெயர். அதோடு ஸுஷும்ணயானது ஸம்பந்தப் பட்டிருப்பதால் அதற்கும் குலம் என்று பெயர்.

7. அம்பாள் அருணுவர்ணமாக இருப்பதால் பாவனைசெய்வது ப்ரஸித்தம்.

'அருணும் கருணுதரங்கிதாக்ஷீம்' (த்யான ச்லோகம்)

'லௌஹித்யம் தத் விமர்ச: ஸ்யாத் |' (தந்த்ர ராஜம்)

'லௌஹித்யமேதஸ்ய ஸர்வஸ்ய விமர்ச: |' (பாவனோபநிஷத்)

8. காமராஜரென்பவர் பரமசிவன்:—அம்பாள் லலிதாம்பிகையாக ஆவிர்பவித்தபோது பரமசிவன் காமேச்வர ரூபத்துடன் தோன்றி லலிதாம்பிகையை மணம்புரிந்து கொண்டது முதலான வ்ருத்தாந்தங்களை லலிதோபாக்யானம் முதலியவற்றில் பார்க்கலாம்.

9. த்ரிகுணைர் தேவைர்—ஸத்வ, ரஜஸ், தமோகுணங்களை முறையேயுடைய விஷ்ணு, ப்ரம்ஹா, ருத்ரர்கள்.

'த்ரயாணும் தேவானும் த்ரிகுண ஜனிதானும் |' (ஸௌந்தர்யலஹரீ)

10. நிநுதாம் - விசேஷமாய் நமஸ்கரிக்கப்பட்டவள்.

11. ஏகாம்தாம் - முக்யமாக இருக்கப்பட்ட அப்பேர்ப்பட்ட ப்ரஸித்தமானவளை.

ஏகாந்தம் - ஏகாந்தமான (ரஹஸ்யமான) ஸ்வரூபத்தையுடையவள்.

ஏ என்பது அ, இ, என்ற இரு அக்ஷரங்கள் சேர்ந்து ஏற்படுகிறது. இவற்றில் அ என்பது 'அகாரோ ப்ரம்ஹ விஷ்ண்வீச கமடேஷு' என்ற விச்வகோச வசனத்தின்படி சிவனைக் குறிக்கும். இ என்பது 'இகாரோ மன்மத: ப்ரோக்த:' என்று அனேகார்த்தத்வனி மஞ்ஜரியில் சொல்லப்பட்டபடி மன்மதனைக் குறிக்கும். ஆகவே ஏ என்பது சிவகாமரை (காமேச்வரரை) குறிக்கும். அவருடைய காந்தையாகையால் அம்பாளுக்கு ஏகாந்தா என்று பெயர் ஏற்பட்டது.

12. பிந்துகாம்—ஸ்ரீசக்ரத்தின் நடுவிலிருக்கும் ஸர்வானந்தமய சக்ரத்திற்கு பிந்து என்று பெயர்.

13. மஹாரம்பாம்—மஹத்தான, (ப்ரம்ஹாண்டாதி ரூபமான) ஆரம்பத்தை (கார்யத்தை, முயற்சியை) உடையவள்.

14. இவ்விதமான அர்த்த புஷ்டியோடிருப்பதுடன் இந்த ச்லோகத்தின் பதங்கள் ஸஹஸ்ர நாமத்திய நாமங்களின் வகுப்பையும் குறிக்கின்றன. எண்ணிக்கைகளை அக்ஷரங்களால் குறிப்பதற்கு ஒரு வழியானது வரருசியால் சொல்லப்பட்டிருக்கிறது.

'கடப்ய வர்கபவைரிஹ பிண்டாந்த்யை ரக்ஷரை ரங்கா: |
நேத்ரே சூன்யம் ஞேயம் ததா ஸ்வரே கேவலே கதிதா ||'

இதை வரருசியின் கடபயாதி ஸங்க்யையென்று சொல்லப்படும். அதாவது க, ட, ப, ய என்றவைகளிலிருந்து மேலுக்கு மேல் வ்யஞ்ஜனங்களைச் சொல்லிக்கொண்டு போனால்,

| | | | | |
|---|---|---|---|---|
| क—1 | ख—2 | ग—3 | घ—4 | ङ—5 |
| च—6 | छ—7 | ज—8 | झ—9 | ञ—0 |
| ट—1 | ठ—2 | ड—3 | ढ—4 | ण—5 |
| त—6 | थ—7 | द—8 | ध—9 | न—0 |
| प—1 | फ—2 | ब—3 | भ—4 | म—5 |
| य—1 | र—2 | ल—3 | व—4 | श—5 |
| ष—6 | स—7 | ह—8 | | |

ञ न என்ற வ்யஞ்ஜனங்களும் எல்லா ஸ்வரங்களும் சூன்யத்தை (0) குறிக்கும்.

இவ்விதமான ஸங்கேதத்தைச் சொல்லும் பதங்கள் அனேக வ்யஞ்ஜனங்களுடைய சேர்க்கையாக இருந்தால் கடைசியிலிருக்கும் அக்ஷரங்கள்தான் ஸங்க்யையைக்குறிக்கும். தவிர, அவ்விதமான ஸங்கேதத்தின்படி வரும் எண்ணிக்கையை 'அங்கானும்வாமதோகதி:' என்றபடி திருப்பிச் சொல்லவேண்டும். உதாரணமாக पुर என்றால் 12 என்று ஆகிறது. ஆயினும் மேலே சொல்லிய விதியின்படி அது 21 என்பதைக் குறிக்கும்.

இவ்விதமான ஸங்கேதத்தைத்தவிர சில பதங்களே சில எண்ணிக்கைகளைக் குறிக்கும். அவற்றையும் கீழே காணலாம்.

த்ரிபுராம்—த்ரி என்று ஆரம்பிக்கும் த்ரிநயனு முதல் த்ரிகோணகா முடிய) நாமங்கள் 21.

குலநிதிம்—'நவ க்ரஹத்வார நிதி ப்ரஜேசா:' என்றபடி க்ரஹ, த்வார,நிதி முதலிய பதங்கள் 9 என்ற எண்ணிக்கையைக்

குறிக்கும். ஆகவே குல என்று ஆரம்பிக்கும் (குலாம்ருதைக ரஸிகா முதல் குலரூபிணீ முடிய) நாமங்கள் 9.

அருணைச்ரியம்—அருணா என்பது ஸூர்யனைக் குறிக்கும். ஸூர்யர்கள் பன்னிருவராகையால் (த்வாதசாதித்யர்களாகையால்) அருணா என்ற பதமானது 12 என்ற எண்ணிக்கையைக் குறிக்கும். ஆகவே ஸ்ரீ என்று ஆரம்பிக்கும் (ஸ்ரீமாதா முதல் ஸ்ரீசிவா முடிய) நாமங்கள் 12.

காமராஜ—ராஜர்களில் முக்யமாகச் சொல்லப்படுகிறவர்கள் பதினாறு பெயராகையால் ராஜ என்ற பதமானது 16 என்ற எண்ணிக்கையைக் குறிக்கும். ஆகவே காம என்று ஆரம்பிக்கும் (காமேச பத்த மாங்கல்ய ஸூத்ரசோபித கந்தரா முதல் காம கேளி தரங்கிதா முடிய) நாமங்கள் 16.

வித்தாங்கீம்—ध என்பது 9. ग என்பது 3. ஆகவே வி என்று ஆரம்பிக்கும் நாமங்கள் (விசுக்ர ப்ராணஹரண வாராஹீ வீர்ய நந்திதா முதல் விராகிணீ வரையில்) 39.

த்ரிகுணை:—குண என்று ஆரம்பிக்கும் நாமங்கள் மூன்று. (குணநிதி:, குணப்ரியா, குணாதீதா).

நிநுதாம்—நுத என்பது 60. ஆகவே நி என்று ஆரம்பிக்கும் நாமங்கள் (நிஜாருணப்ரபாபூர மஜ்ஜத் ப்ரம்ஹாண்ட மண்டலா முதல் நிராலம்பா வரையில்) 60.

ஏகாம்தாம்—தாம் என்று ஆரம்பிக்கும் நாமம் ஒன்று. (தாம்பூல பூரிதமுகீம்.)

பிந்துகாம்—ग என்பது 3. ஆகவே பிந்து என்று ஆரம்பிக்கும் நாமங்கள் (பிந்துமண்டலவாஸினீ, பைந்தவாஸனா, பிந்து தர்ப்பண ஸந்துஷ்டா) மூன்று.

மஹாரம்பாம்— र என்பது 2. भ என்பது 4. ஆகவே மஹா என்று ஆரம்பிக்கும் நாமங்கள் (மஹாலாவண்யசேவதி: முதல் மஹேசீ முடிய) 42.

ललिता नामसहस्रे छलार्णसूत्रानुयायिन्यः ।
परिभाषा भाष्यन्ते संक्षेपात्कौलिकप्रमोदाय ॥ ॥ २ ॥

II. லலிதா நாம ஸஹஸ்ரே
சலார்ண ஸூத்ரானுயாயின்ய: |
பரிபாஷா பாஷ்யந்தே
ஸம்க்ஷேபாத் கௌலிக ப்ரமோதாய ||

லலிதா ஸஹஸ்ர நாமத்தில் ச்சலாக்ஷர ஸூத்ரங்களை யனுஸரித்த பரிபாஷைகள் சுருக்கமாக கௌலிகர்களுடைய (ஸ்ரீ வித்யோபாஸகர்களுடைய) ஸந்தோஷத்திற்காகச் சொல்லப் படுகின்றன.

*ச்சலாக்ஷர ஸூத்ரங்கள் என்பவை 24. அவைகள் இந்த ஸஹஸ்ரநாமத்திய நாமங்களை பரிபாஷைகள் (ஸங்கேத பதங்கள்) மூலமாகப் பிரித்துத் தொகுப்பவை. அவற்றின் மூலமாக நாமங்களின் விபாகம் செய்வதானது தாமதமாயும் ச்ரமஸாத்யமாயுமிருக்குமாதலால் அவற்றை ஸுலபமாக அறியக் கூடிய வகையில் ஸ்ரீவித்யோபாஸகர்களுடைய ஸந்தோஷத்தை உத்தேசித்துத்தான் சொல்லுவதாக ஸ்ரீ ந்ருஸிம்ஹானந்தநாதர் சொல்லுகிறார். இப்படி இவர் செய்திருக்கும் ச்லோகங்கள் (த்ரிபுராம் குலநிதி மீடே என்பது முதல்) நாற்பது.*

III. पञ्चाशदेक आदौ नामसु सार्धद्व्यशीतिशतम्।
षडशीतिः सार्धान्ते सर्वे विंशतिशतत्रयं श्लोकाः ॥

பஞ்சாசத் ஏக ஆதௌ நாமஸு
ஸார்த்த த்வ்யசீதி சதம் |
ஷடசீதி: ஸார்த்தாந்தே
ஸர்வே விம்சதித்ரயம் ச்லோகா: ||

ஆதியில் (பூர்வபாகத்தில்) 51 ச்லோகங்கள். நாமங்களில் (நாமங்கள் அடங்கிய பாகத்தில்) 182½ ச்லோகங்கள். கடைசியில் (பலச்ருதி பாகத்தில்) 86½ ச்லோகங்கள். எல்லாம் சேர்ந்து 320 ச்லோகங்கள்.

*பலச்ருதி பாகத்தில் இந்த ஸஹஸ்ரநாம ஸம்பந்தமாக ஸஹஸ்ரபோஜனம் செய்யும் க்ரமம் சொல்லப்பட்டிருக்கிறது.*

அதை அனேக தினங்களில் பரவிச் செய்யும்போது, முதல் நாளில் பூர்வபாகத்திய 51 ச்லோகங்களையும் சொல்லவேண்டும். இந்த 51ல் அடங்கிய த்யானச்லோகமானது தினந்தோறும் சொல்லவேண்டியதாகையால், அதைக் குறிப்பதற்காக 'ஏக பஞ்சாசத்' என்று சொல்வதற்கு பதிலாக 'பஞ்சாசத் ஏக' என்று பிரித்துச் சொல்லப்பட்டது.

அடுத்த ச்லோகத்தில் பூர்வபாகத்தில் ச்லோகங்களை வகுத்துச் சொல்லப்படுகிறது.

IV. दशभूः सार्धनृपाला अध्युष्टं सार्धनवषडध्युष्टम् ।
मुनिसूत हयाम्बाश्वाम्बाश्वोक्तिर्ध्यानमेकेन ॥

தசபூ: ஸார்த்த ந்ருபாலா
அத்யுஷ்டம் ஸார்த்த நவ ஷடத்யுஷ்டம் |
முனிஸூத ஹயாம்பாச்வாம்பா
ச்வோக்திர் த்யான மேகேன ||

| | | |
|---|---|---|
| முனி (அகஸ்த்யர்) சொன்ன ச்லோகங்கள் | | தச—10. |
| ஸூதர் | ,, ,, | பூ:—1. |
| ஹய(க்ரீவ)ர் | ,, ,, | ஸார்த்த ந்ருபாலா—16½ |
| அம்பாள் | ,, ,, | அத்யுஷ்டம்—3½. |
| ஹய(க்ரீவ)ர் | ,, ,, | ஸார்த்த நவ—9½. |
| அம்பாள் | ,, ,, | ஷட்—6. |
| அச்வ ஹயக்ரீவர் | ,, ,, | அத்யுஷ்டம்—3½. |

த்யானம் ஏகேன - ஒரு ச்லோகத்தால் த்யானம்.

ந்ருபாலா: (ராஜர்க்ள்) பதினாறு என்பது ஏற்கனவே சொல்லப்பட்டது. அத்யுஷ்டம் என்றால் மூன்றரை (குண்டலினியானவள் இதனால்தான் அத்யுஷ்ட வலயங்களையுடையவள் என்று சொல்லப்படுவாள்.)

[இதற்குமேல், மேலே சொல்லப்பட்ட 51 ச்லோகங்களுக்கு வ்யாக்யானம் செய்யப்படுகிறது. அத்துடன் ஸ்ரீ பாஸுரானந்தரால் செய்யப்பட்ட ஸௌபாக்ய பாஸ்கரமென்ற பாஷ்யத்தில் உபோத்காத ப்ரகரணம் என்ற பாகம் முடிகிறது.

பாஸ்கரராயர் தான் எழுதிய பாஷ்யத்தை பன்னிரண்டு பாகங்களாகப் பிரித்து ஒவ்வொருபாகத்தை ஸூர்யனுடைய பன்னிரண்டு கலைகளின் பெயர்கள் ஒவ்வொன்ருல் குறிப்பிட்டிருக்கிருர். முதலாவது பாகமான உபோத்காத ப்ரகரணத்திற்கு முதலாவது கலையான தபினீ என்று பெயர். பிறகு நாமங்களின் பாஷ்யத்தில் முதல் நூறு அடங்கியதற்கு தாபினீ, இம்மாதிரி தூம்ரிகா, மரீசீ, ஜ்வாலினீ, ருசி:,ஸுஷும்ணு, போகதா, விச்வா, போதினீ, தாரிணீ என்று பாக்கி ஒன்பது நூறுகளடங்கிய பாகங்களுக்குப் பெயர்களிடப்பட்டிருக்கின்றன. கடைசியான பலச்ருதி பாகத்திய பாஷ்யத்திற்கு கடைசி கலையின் பெயராகிய க்ஷமா என்று பெயர்.]

இதற்குமேல் பரிபாஷையில் நாமங்களின் ஆரம்பாக்ஷரங்களின்படி நாமங்களை வகுத்துச் சொல்லப்போவதால் அவை 32 வகையாக ஏற்பட்டிருக்கின்றனவென்பதைக் காட்டுவதற்காக அக்ஷரங்கள் மொத்தம் 51ல் எவை யெவை நாமாரம்பத்திற்காக பொறுக்கப்பட்டிருக்கின்றன என்பதைச் சொல்லுகிருர்.

V· अक्षुशराच्छरवर्णांस्ततः समानांत्यमौ कचयोः ।
अथ मध्यान्यांस्तपयोर्द्वितीयमन्त्ये त्यजेन्नवमम् ॥

அக்ஷு சராத் சரவர்ணும்ஸ்தத:
ஸமானுன் த்யமௌ கசயோ: |
அத மத்யான்யாம்ஸ் தபயோர்
த்விதீய மந்த்யே தயஜேன்னவமம் ||

| | |
|---|---|
| அக்ஷு | அ முதலாக க வரையிலுள்ள டோஷச ஸ்வரங்களில் |
| சராத் | (சரங்கள், பாணங்கள், இஷுக்கள் ஐந்து என்றபடி). முதலான அ, ஆ, இ, ஈ, உ இவைகளைத்தவிர |
| சரவர்ணுன் | அடுத்த ஐந்து அக்ஷரங்களான ஊ, ரு, ரூ, லு, லூ இவைகளையும் |
| தத: | பாக்கியிருக்கும் ஏ, ஐ, ஓ, ஔ, அம், அ: என்ற 6ல் |
| ஸமான் | இரட்டைப்படையான ஐ, ஔ, அ: இம்மூன்றையும் (மெய்யெழுத்துக்களில்) |
| கசயோ: | க வர்கம், ச வர்கம் இவைகளில் |

அந்த்ய மேள { கடைசி இரண்டெழுத்துக்களாகிய घ ङ झ ञ இந்த நான்கையும்

அத — அடுத்ததான ட வர்கத்தில்

மத்யான்யான் — நடு எழுத்தாகிய ड தவிர பாக்கி எழுத்துக்களையும்

தபயோ: — த வர்கம், ப வர்கம் இவைகளில்

த்விதீயம் { இரண்டாவது எழுத்துக்களாகிய थ, फ இவ்விரண்டையும்

அந்த்யே — ய முதலான கடைசி 10 எழுத்துக்களில்

நவமம் — ஒன்பதாவதாகிய ळ என்பதையும்

த்யஜேத் — தள்ளிவிடவேண்டும்.

ஆக தள்ளுபடியான அக்ஷரங்கள் 5+3+4+4+2+1=19 போக பாக்கியான 32 எழுத்துக்கள் தான் அம்பாளுடைய நாமங்களின் ஆரம்பமாக உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. இதையேதான்,

'த்வா த்ரிம்சத் பேதபின்னா யா தாம் வந்தேऽஹம் பராத்பரம் |'

என்று ஸூதஸம்ஹிதையில் சொல்லப்பட்டிருக்கிறது.

VI. इत्थं शिष्टानुष्टुब्वर्णारब्धेषु नामसु च संख्याः ।
अर्व नट त्रि द्वीष्वेकद्वि चतुः कंजपानवरधीराः ॥

இத்தம் சிஷ்டானுஷ்டுப் வர்ணாரப்தேஷு
நாமஸு ச ஸங்க்யா: ||
அர்வ நட த்ரி, த்வீஷ் வேக
த்வி சது: கம்ஜ பான வரதீரா: ||

இப்படி பாக்கியான முப்பத்திரண்டு அக்ஷரங்களோடு ஆரம்பிக்கும் நாமங்களின் ஸங்க்யையைச் சொல்லுகிறோம். (பின் சொல்லப்படுவதில் ஒவ்வொருபதமும் ஒரோரு அக்ஷரத்தோடு ஆரம்பிக்கும் நாமங்களின் எண்ணிக்கையைக் குறிக்கும். அனுஷ்டுப் வ்ருத்தமானது 32 அக்ஷரங்களுடையதாகையால் இங்கு அனுஷ்டுப் என்பது 32 என்ற எண்ணிக்கையைக் குறிக்கும்).

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| अर्व | அர்வ | 40 | அதாவது | அ | என்று ஆரம்பிக்கும் நாமங்கள் | 40 |
| नट | நட | 10 | .... | ஆ | .... | ....10* |
| त्रि | த்ரி | 3 | .... | இ | .... | .... 3 |
| द्वे | த்வே | 2 | .... | ஈ | .... | .... 2 |
| इषु | இஷு | 5 | .... | உ | .... | .... 5 |
| एक | ஏக | 1 | .... | ஏ | .... | .... 1 |
| द्वे | த்வே | 2 | .... | ஓ | .... | .... 2 |
| चतुः | சது: | 4 | .... | அம் | .... | .... 4 |
| कंज | கம்ஜ | 81 | .... | க | .... | .... 81 |
| पान | பான | 1 | .... | ख | .... | .... 1 |
| वर | வர | 24 | .... | ग | .... | .... 24 |
| धीराः | தீரா: | 29 | .... | च | .... | .... 29 |

VII. किं धूपद्विस्तम्भछल भयमांसे पदे वरः सङ्गः ।
प्रकटगया जलवाटी धुसि धर्मेमाखखोल्कटीकाधीः ॥

கிம் தூபத்வி ஸ்தம்பச்சல
பய மாம்ஸே பதே வர: ஸங்க: |
ப்ரகட கயாஜல வாடீ துஸி
தர்மே மா ககோல்க டீகாதீ: ||

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| किं | கிம் | 1 | அதாவது | छ | என்று ஆரம்பிக்கும் நாமங்கள் | 1 |
| धूप | தூப | 19 | .... | ஜ | .... | .... 19* |
| द्वि | த்வி | 2 | .... | ड | .... | .... 2 |
| स्तंभ | ஸ்தம்ப | 46 | .... | त | .... | .... 46 |
| छल | சல | 37 | .... | द | .... | .... 37 |
| भय | பய | 14 | .... | ध | .... | .... 14 |
| मांसे | மாம்ஸே | 75 | .... | न | .... | .... 75 |

---

* 828ம் நாமம், வ்யாக்யானத்தில் "ஆக்ஞா" என்றிருப்பதால் "ஆ" நாமத்தில் 11 ஆகவும் "ஜ" நாமத்தில் 18 ஆகவும் அகராதி வரிசையில் கணக்கெடுக்கப்பட்டிருக்கிறது.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| पदे | பதே | 81 | .... | प | .... | .... 81 |
| वर: | வர: | 24 | .... | ब | .... | .... 24 |
| सङ्ग: | ஸங்க: | 37 | .... | भ | .... | .... 37 |
| प्रकट | ப்ரகட | 112 | ... | ம | .... | .... 112 |
| गया | கயா | 13 | .... | ய | .... | .... 13 |
| जल | ஜல | 38 | .... | ர | .... | .... 38 |
| वाटी | வாடீ | 14 | .... | ல | .... | .... 14 |
| धुसि | துஸி | 79 | .... | வ | .... | .... 79 |
| धर्मे | தர்மே | 59 | .... | श | .... | .... 59 |
| मा | மா | 5 | .... | ஷ | .... | .... 5 |
| खखोल्क | | 122 | .... | ஸ | .... | .... 122 |
| टीका | டீகா | 11 | .... | ஹ | .... | .... 11 |
| धी: | | 9 | .... | க்ஷ | .... | .... 9 |

(இவ்விதமாக நாமங்களைத் தொகுத்திருப்பதை 758 முத லுள்ள பக்கங்களில் பார்க்கவும்).

VIII. इत्थं नामसाहस्रं साधकलोकोपकारकं विहितम् ।
गुणगणसद्भावावाश्रित्य ब्रह्मणोऽम्बायाः ॥

இத்தம் நாமஸஹஸ்ரம்
ஸாதக லோகோபகாரகம் விஹிதம் ।
குண கண ஸத்பாவா வாச்ரித்ய
ப்ரம்ஹணோऽம்பாயா: ॥

இம்மாதிரி, ப்ரம்ஹஸ்வரூபிணியான அம்பாளுடைய குண கணங்களையும் ஸத், அஸத் பாவங்களையும் ஆச்ரயித்து இந்த நாம ஸஹஸ்ரமானது ஸாதகர்களுடைய லோகங்களுக்கு உபகாரமாகச் சொல்லப்பட்டது.

1. இத்தம்—மேலே சொல்லப்பட்டவிதமாய், அதாவது அக்ஷராரம்பத்தோடு கூடியதாய்.

2. ஸாதகலோகோபகாரகம்—அந்தந்த அக்ஷரத்திற்கு அபிமானி தேவதையான அம்ருதா, ஆகர்ஷிணீ, இந்த்ராணீ முதல் க்ஷமாவதீ வரையிலுள்ள தேவதைகள் ஸித்திக்கவேண்டு மென்று உபாஸிக்கிறவர்களை 'ஸாதகலோகங்கள்' என்று இங்கு சொன்னது. அந்தந்த அக்ஷரத்தோடு ஆரம்பிக்கும் நாமங் களின் கணக்குத் தெரிந்தாலேயே உடனே பாபத்திலிருந்து விடுவிக்கப்படுவதாக தாத்பர்யம். தவிர, ஓரோர் நாமமும் லலிதாம்பிகையைச் சொல்வதுடன் அதின் ஆரம்பாக்ஷரத்திற்கு அபிமானியான அம்ருதா முதலானவர்களையும் குறிக்கும்.

அல்லது, தேவியினுடைய கணக்கற்ற நாமங்களில் சீக்ர மாய் ஸாதகர்களுக்கு உபகாரம் செய்வதான நாமங்களையே வாக்தேவதைகள் இந்த ஸஹஸ்ரநாமத்தில் சேர்த்திருக்கிறார்கள் என்றும் சொல்லலாம்.

3. சப்தங்களுடைய ப்ரவ்ருத்தியானது குண, க்ரியா, ஜாதி, ரூடி என்ற நாலுவிதமான நிமித்தங்களால் ஏற்படும் என்று சொல்லப்படும். இவைகளில் ஒன்றுவது இருந்தால் தான் சப்தங்களுடைய ஸம்பந்தம் ஏற்படக்கூடும். நிர்குணமான ப்ரம்ஹத்தினிடத்திலோ தர்மலேசம் கூட இல்லாதபடியால் மேலே சொல்லப்பட்ட நிமித்தங்களுமில்லை, அவற்றினால் ஏற் படும் சப்த ப்ரவ்ருத்தியுமில்லை. ஆகவே ஸஹஸ்ரநாமங்கள் ஏற்படுவதற்குக் காரணமில்லையென்று சொல்லக்கூடிய ஆக்ஷே பணைக்கு 'குணகண ஸதஸத் பாவாவாச்ரித்ய' என்பதினால் ஸமா தானம் சொல்லப்படுகிறது. ['ப்ரம்ஹணோ அம்பாயா:' என்ப தினால் அம்பாள் ப்ரம்ஹரூபிணியென்பது குறிக்கப்பட்டது].

4. ப்ரம்ஹமானது ஸகளமென்றும் நிஷ்களமென்றும் இரண்டுவிதமென்பதாகச் சொல்லப்பட்டது. இதையே தான் ச்ருதியில்

'த்வே ப்ரம்ஹணீ வேதிதவ்யே பரம்சாபரம் ச |'

என்று சொல்லப்பட்டது. இவற்றில் நிஷ்களமானது பரம் என்றும், ஸகளமானது அபரம் என்றும் சொல்லப்படும். இந்த ஸகளமான அபரரூபமானது திரும்பவும் ஜகன்னியாமக (ஜகத்தை ஆக்ஞாபிக்கிற, அல்லது ஆளுகிற) ரூபமாகவும், ஜக தாத்மக (ஜகத்தான) ரூபமாகவும் இரண்டுவிதமாக இருக்கிறது.

இப்படி ப்ரம்ஹமானது ஜகன்னியந்தாவாகவும் தானே ஜகத்தாகவும் இருப்பது பலவிடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஜகன்னியந்தா ஜகதாத்மகச்ச |'
'சிவ: கர்த்தா சிவோ போக்தா சிவ: ஸர்வமிதம் ஜகத் |'
'தேவீ தாத்ரீ ச போக்த்ரீ ச தேவீ ஸர்வமிதம் ஜகத் |'
'ஸ்த்திதி ஸம்யம கர்த்தா ச ஜகதோऽஸ்ய ஜகத் ச ஸ: |'

ப்ரம்ஹத்தையே நிமித்தகாரணமென்றும், உபாதான காரணமென்றும் சொல்லப்படும். [குயவன் மண்ணினால் கடாதிகள் செய்யும்போது குயவனை நிமித்தகாரணமென்றும், மண்ணை உபாதானகாரணமென்றும் த்ருஷ்டாந்தமாகச் சொல்வது வழக்கம். மண்ணினால் செய்யப்படும் கடம் முதலியவை மண்ணின் பரிணாமங்கள் (ரூபாந்தரங்கள்) என்று சொல்லப்படும்.]

ஸோऽகாமயத பஹு ஸ்யாம் ப்ரஜாயேய'

என்ற ச்ருதிவாக்யத்தில் அகாமயத என்பதினால் நிமித்தமும் பஹு ஸ்யாம் என்பதினால் பரிணாமியான உபாதானமும் சொல்லப்பட்டது. இதே அர்த்தத்தில் 'ஆத்ம க்ருதே: பரிணாமாத்' என்ற ப்ரம்ஹஸூத்ரமும் சொல்லப்பட்டது.

5. ஜகதாத்மகமான ப்ரம்ஹமானது திரும்பவும் சர, அசர பேதமாக இரண்டுவிதமாயிருக்கிறது. சரமானது ஹிரண்யகர்ப்பன் முதலான பேதங்களாகவும், அசரமானது ஆகாசம் முதலான பேதங்களாகவும் அனேகவிதமாயிருக்கிறது.

6. ஜகன்னியந்தாவான ப்ரம்ஹமானது அதின் நியமன (ஆக்ஞா) ரூபங்களான ஸ்ருஷ்டி, ஸ்த்திதி, லய, திரோதான, அனுக்ரஹ பேதங்கள் அனேகவிதங்களாக இருப்பதால் அவற்றைப் பொருத்து ப்ரம்ஹ, விஷ்ணு, ருத்ரன் முதலான அனேகவிதங்களாக இருக்கிறது. இவ்விதங்களான ப்ரம்ஹத்தின் ரூப பேதங்கள் ஒவ்வொன்றும் தன் தன்னுடைய பக்தர்களுக்கு அனுக்ரஹம் செய்யும்பொருட்டு அந்தந்த பக்தர்களுடைய வாஸனையொட்டியும் செய்யவேண்டிய கார்யபேதங்களை யொட்டியும் அனந்தமான ரூபங்களைக் கொண்டிருப்பதால் அந்தந்த விசேஷங்களோடுகூடிய ரூபங்கள் கணக்கற்றவையாக இருக்கின்றன. இதைப் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

'யதினும் மந்த்ரிணும் சைவ ஞானினும் யோகினும் ததா |
த்யான பூஜா நிமித்தம் ஹி தனூர்க்ருண்ஹாதி மாயயா ||'

(ஸூப்ரபேதம்)

'மாயைகா பின்னரூபேண கமலாக்யா ஸரஸ்வதீ |
ஸாவித்ரீ ஸா ச ஸந்த்யா ச பூதா கார்யஸ்ய பேதத: ||'

(காளிகாபுராணம்)

'உமேதி கேசிதாஹுஸ்தாம் சக்திம் லக்ஷ்மீம் ததாऽபரே |
பாரதீத்யபரே சைனும் கிரிஜேத்யம்பிகேதி ச ||
துர்கேதி பத்ரகாளீதி சண்டீ மாஹேச்வரீதி ச |
கௌமாரீ வைஷ்ணவீ சேதி வாராஹீ ச ததா பரே ||
ப்ராம்ஹீதி வித்யாவித்யேதி மாயேதி ச ததா பரே |
ப்ரக்ருதிச்ச பரா சேதி வதந்தி பரமர்ஷய: ||'

(ஜகத்கர்த்ரியான சக்தியைப்பற்றி ப்நஹன்னாதீயம்)

'ஏகதா பஹுதா சைவ த்ருச்யதே ஜலசந்த்ரவத் |' (ச்ருதி)

'தேவ்யா வா ஏஷ வித்தாந்த: பரமார்த்தோ மஹாமதே |
ஏஷா வேதாச்ச யக்ஞாச்ச ஸ்வர்கச்ச ஸகலம் ஜகத் ||
தேவ்யா வ்யாப்தமிதம் விச்வம் ஜகத் ஸ்த்தாவர ஜங்கமம் |
இஜ்யதே பூஜ்யதே தேவை: அன்னபானாத்மிகா ச ஸா ||
ஸர்வத்ர சாங்கரீ தேவீ தனுபிர் நாமபிச்ச ஸா |
வ்ருக்ஷேஷூர் வ்யாம் ததா வாயௌ வ்யோம்ன்யப்
ஸ்வக்னௌ ச ஸர்வச: ||' (தேவீபுராணம்)

7. நிஷ்களமான ப்ரம்ஹமானது ஒரே விதம் தான். அது சின்மாத்ரமாயும், எவ்விதமான உபாதியுமில்லாமலும், ஞானம் ஒன்றினால்மட்டும் அடையக்கூடியதாயும் இருப்பது. இவ்வித மான ஸகல, நிஷ்கள ரூபங்களைப்பற்றி கூர்மபுராணத்தில் அம்பா ளால் தன் பிதாவான ஹிமவானுக்கு விஸ்தாரமாகச் சொல்லப் பட்டிருக்கிறது.

'அசக்தோ யதி மாம் த்யாதும் ஐச்வரம் ரூபம் அவ்யயம் |
ததாமே ஸகளே ரூபே காலாத்யேऽனந்தபேதினி ||
யத்தேவ ரூபம் மே தாத மனஸோ கோசரஸ்தவ |
தன்னிஷ்டஸ் தத்பரோ பூத்வா ததர்ச்சனபரோ பவ ||
யத் து மே நிஷ்களம் ரூபம் சின்மாத்ரம் கேவலம் சிவம் |
ஸர்வோபாதி வினிர்முக்தம் ஏகமேவாம்ருதம் பரம் |
ஞானேனைகேன தல்லப்யம் க்லேசேன பரமம் பதம் ||'

8. இவ்விதம் ப்ரம்ஹமானது ஸகுணமாயுமிருப்பதாலும் அவ்வித ஸகுணமான ப்ரம்ஹத்தில் ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி பூதங் களான தர்மங்கள் இருப்பதாலும் (அவ்வித தர்மங்களைக் குறிக் கும்) சப்தங்கள் (சக்தியினுல்) நேரிடவே ப்ரவ்ருத்திப்பதற்கு யாதொரு தடையும் கிடையாது. நிர்தர்மகமான ப்ரம்ஹத்தி னிடத்திலோ சப்தங்கள் நேராக ப்ரவ்ருத்திக்காமலிருந்தாலும் லக்ஷணையால் ப்ரவர்த்திக்கின்றன. ஏனென்ருல் விசிஷ்டமான ப்ரம்ஹத்திற்கும் கேவலமான ப்ரம்ஹத்திற்கும் தாதாத்ம்ய ரூபமான (சக்ய) ஸம்பந்தமிருப்பதால் அது முடியும். மேலும் ப்ரம்ஹமானது பாரமார்த்திகமான ஸத்தாவோடு கூடியதா யிருக்கையில் அதற்கு நம்மால் கல்ப்பிக்கப்படும் தர்மங்கள் அவ்விதமான ஸத்தாவையுடையவையல்ல. ஆகவே தனக்கு ஸமமான ஸத்தாவோடு கூடிய தர்மங்களில்லாமல் ப்ரம்ஹம் இருக்கிறபடியால் அதை நிர்தர்மகமென்று சொல்லப்படும். அவ் விதமான நிர்குண ப்ரம்ஹத்தினிடத்தில் (மேலே சொல்லிய) தர் மங்களின் கல்பிதமான ஸம்பந்தத்தை நாம் ஒப்புக்கொள்வதினுல் அது (ப்ரம்ஹமானது) எவ்விதத்திலும் பாதிக்கப்படுவதில்லை.

9. இதையே இன்னமொரு விதமாகவும் சொல்லலாம். கடங்களில், (அதீத) உடைந்துபோன கடங்களைப்பற்றியும், (அனுகத) இனி செய்யப்படப்போகும் கடங்களைப்பற்றியும், நமக்கு ஞானமிருக்கிறது. ஆயினும் அவ்விதமான கடங்கள் தற்காலத்தில் இல்லை. இப்படி, அதீதானுகதமான கடங்கள் தற் காலத்தில் இல்லாவிட்டாலும் அவற்றின் விஷயகமான ஞானத் திற்கு அவற்றுடன் இருக்கும் ஸம்பந்தம்போல், நிர்தர்மகமான ப்ரம்ஹத்தினிடத்தில் தர்மங்களுடைய ஸம்பந்தத்தை நாம் கல் பித்துக் கொள்வதில் யாதொரு தோஷமுமில்லை.

இதனுலேயே ஸ்ரீலலிதா த்ரிசதியில் அம்பாளை 'லக்ஷ்யார்த்த லக்ஷணுகம்யா' என்று சொல்லப்பட்டது.

10. இந்த ரீதியில் அம்பாளுடைய நாமங்கள்,

'தேவீ நாமஸஹஸ்ராணி கோடிச: ஸந்திகும்பஜ ।'

என்று பின்னுல் ஹயக்ரீவர் சொல்லுகிறபடி, எண்ணிக்கையற்றன வாக இருக்கின்றன. இதைப்பற்றி ஸௌரஸம்ஹிதையில் மாயை யைக் குறித்து யாக்ஞ்யவல்க்யருக்கு ஸூர்யன் சொல்வது.

'அஸ்யா நாமான்யனந்தானி தானிவர்ணயிதும் மயா |
ந சக்யானி முனிச்ரேஷ்ட கல்பகோடிசதைரபி || '

தேவீபாகவதத்திலும் பின்வருமாறு சொல்லப்பட்டது.

'அஸங்க்யாதானி நாமானி தஸ்யா ப்ரம்ஹாதிபி: ஸுரை: |
குணகர்மவிதானுத்யை: கல்பிதானி ச கிம் ப்ருவே || '

ஆகவே இதைப்பற்றி அதிகம் சொல்லவேண்டியதில்லை. ஸகல சப்தங்களும் ப்ரம்ஹத்தையே குறிக்கின்றன.

11. இதே காரணத்தால்தான் இந்த ஸஹஸ்ரநாமத்திலும் சில நாமங்கள் ஜீவனுடைய அவஸ்த்தா பேதங்களை யொட்டி விச்வரூபா (256), தைஜஸாத்மிகா (259), முதலானவை இருக்கின்றன. சில ஜீவ விசேஷண பரமாய் மாலினி (455) முதலானவை காணப்படுகின்றன. ஸ்த்தாவர விசேஷணபரமாய் மஹீ (718) முதலானவை சில. ஸகுண ப்ரம்ஹ விசேஷணபரமாய் முகுந்தா (838) முதலானவை சில. அந்தந்த சக்திபரங்களாய் ரமா (313) முதலானவை சில. அந்தந்த அவதார விசேஷத்தில் ஸம்பந்தப்பட்ட குணம் க்ரியை முதலானவைகளைக் குறிக்கின்றனவாக, 'பண்டாஸுரேந்த்ர நிர்முக்த சஸ்த்ர ப்ரத்யஸ்த்ர வர்ஷிணீ' (79) முதலியவை சில. நிர்குண ப்ரம்ஹபரமாய் பரம் ஜ்யோதி: (806) முதலியவை சில. இம்மாதிரி வேறுவிதமான பேதங்களையும் ஊஹித்தறியலாம்.

12. இவ்விதம் ஸகல சப்தங்களும் அம்பாளுடைய நாமங்களென்பதாகச் சொன்னால் இம்மாதிரி ஆயிரம் நாமங்களை (ஒரு ஸஹஸ்ரநாமத்தை) தனியாகக் கோர்ப்பது வீணான கார்யமென்று சிலர் சொல்லக்கூடும். அது அப்படியல்ல. அவற்றில் எந்தெந்த நாமங்களால் ஆதிகாலத்தியவர்களும் மஹா மஹிமையுள்ளவர்களுமான தேவீ பக்தர்கள் அம்பாளை ஸ்தோத்ரம் செய்து ஸந்தோஷமடையச் செய்து தங்கள் தங்கள் மனோரதங்களை அடைந்தார்களோ, அம்பாளுடைய வாக்கினாலேயே இந்த நாமத்திற்கு மாஹாத்ம்யம் ஏற்படட்டும் என்று வரனைப்பெறும்படி செய்தார்களோ, அல்லது அவ்விதமான வரனைத் தாங்களே கொடுத்தார்களோ, அவ்வித விசேஷங்களோடு கூடிய நாமங்

களைச் சேர்த்து எண்ணிச் சொல்வது ஸார்த்தமான (பலனோடு கூடிய) கார்யம்தான்.

13. மேலே சொல்லியதானது எல்லா ஸஹஸ்ரநாமங்களுக்கும் பொதுவாக இருந்தாலும் இந்த ஸஹஸ்ரநாமமானது மற்றெல்லாவற்றையும்விட மஹிமையுள்ளதென்பது அது அதிகமான ஜனங்களால் த்ருடமாகக் கைக்கொள்ளப்படுவதாலும், சீக்ரத்தில் பலத்தைக் கொடுப்பதாலும், மற்றவையால் ஸாத்யமில்லாத பலன்களைக் கொடுக்கும் சக்திவாய்ந்ததாலும் மற்றும் அனேக காரணங்களாலும் ஏற்படுகிறது. இதைப்பற்றி பூர்வ பாகத்திலும் பலச்ருதி பாகத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

14. நாமங்களின் ப்ரபாவங்களைப்பற்றிச் சொல்லுகையில் ஓரோர் நாமத்திற்கு ஓரோர் பலன் உண்டென்றும் அந்தந்த பலனை விரும்புகிறவர்கள் அந்தந்த நாமத்தைச் சொல்லவேண்டுமென்றும் அந்தந்த நாமமானது அதனுடைய சக்திக்குத் தக்கபடியான பலனைக் கொடுப்பதற்குத்தான் ஸாதகமாயிருக்குமென்றும் விஷ்ணு தர்மோத்தரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஏகஸ்யைவ ஸமஸ்தஸ்ய ப்ரம்ஹணோ த்விஜஸத்தம |
நாம்னாம் பஹுத்வம் லோகானாம் உபகாரகரம் ச்ருணு ||
நிமித்த சக்தயோ நாம்னாம் பேதின்யஸ் ததுதீரணாத் |
விபின்னான்யேவ ஸார்யந்தே பலானி த்விஜஸத்தம ||
யத் சக்திமன்நாம யஸ்ய தத் தஸ்மின்னேவ வஸ்துனி |
ஸாதகம் புருஷவ்யாக்ர ஸௌம்ய க்ரூரேஷு வஸ்துஷு ||'

இதிலிருந்து ஏற்படுவதென்னவென்றால் அன்னத்தை விரும்புகிறவன் அன்னதா (669) என்ற நாமத்தையும், வஸு காமனாக (செல்வத்தை விரும்புகிறவனாக) இருப்பவன் வஸுதா (670) என்ற நாமத்தையும், பயமடைந்தவன் பயாபஹா (121) என்ற நாமத்தையும், சத்ருக்களால் கட்டுண்டவன் பந்தமோசனீ (546) என்ற நாமத்தையும், இம்மாதிரி அந்தந்த பலனை விரும்புகிறவன் அதை அம்பாள் கொடுப்பதாகச் சொல்லும் நாமத்தை ஜபிக்கவேண்டுமென்று ஏற்படுகிறது.

15. விஷ்ணு தர்மோத்தர வசனம் இப்படியிருக்கையில், அம்பாளுடைய நாமகீர்த்தன ஸாமான்யத்தாலேயே (அதாவது நாமத்தை ஸாதாரணமாய்ச் சொன்னாலேயே) மேலே சொல்லிய

பயாபஹத்வம் (பயத்தைப் போக்குவது) முதலிய பலன்கள் இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. உதாரணமாக, வாயு புராணத்தில், அம்பாளுடைய நாமம் எதைச் சொன்னாலும் பந்தனத்திலிருந்து விடுதலையடையலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

'அரண்யே ப்ராந்தரே வாபி ஜலேவாபி ஸ்தலேபி வா |
வ்யாக்ர கும்பீர சோரேப்யோ பயஸ்த்தானே விசேஷத: ||
ஸ்வபன் திஷ்டன் வ்ரஜன்மார்கே ப்ரஜபன் போஜனே ரத: |
கீர்த்தயேத் ஸததம் தேவீம் ஸ வை முச்யேத பந்தனாத் ||'

இதே மாதிரியான நாமகீர்த்தன ஸாமான்யத்தாலேயே ஸகல சக்திகளுடைய அனுக்ரஹமுமேற்பட்டு அவர்களுடைய ஸமூஹத்தில் ப்ரஸித்தி யேற்படுவதாக வாமகேச்வர தந்த்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'மனஸா ஸம்ஸ்மரந்த்யஸ்யா: யதி நாமாபி ஸாதக: |
ததைவ மாத்ருசக்ரஸ்ய விதிதோ பவதி ப்ரியே ||'

ஆகவே இங்கு சொல்லப்பட்டிருக்கும் நாம சப்தமானது விஷ்ணு தர்மோத்தர வசனப்படி தனித்தனியான பலன்களையுடையதான பயாபஹா முதலிய நாம விசேஷங்களின் பலன்களை உபஸம்ஹாரம்செய்து (சேர்த்து) அவற்றுடன் கூடியதாயிருக்கிறது.

16. ஒரோர் நாம விசேஷத்தையொட்டி விசேஷ பலன்களிருப்பது காசீ கண்டத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

'உமா நாமாம்ருதம் பீதம் யேனேஹ ஜகதீதலே |
ந ஜாது ஜனனீ ஸ்தன்யம் ஸ பிபேத் கும்பஸம்பவ ||
உமேதி த்வ்யக்ஷரம் மந்த்ரம் யோऽஹர்நிசமனுஸ்மரேத் |
ந ஸ்மரேத் சித்ரகுப்தஸ்தம் க்ருதபாபமபி த்விஜ |

17. மேலே சொல்லிய காரணங்களினால்தான் (இந்த ஸஹஸ்ர நாமத்தின்) பல ச்ருதி பாகத்தில் இந்த ஸஹஸ்ரநாம ஸங்கீர்த்தனமானது ஸகலவித்மான பலன்களைக் கொடுக்குமென்று சொல்லப்பட்டது. இப்படி ஸகல பலன்களையுமே நாம ஸாஹஸ்ர கீர்த்தனமானது கொடுக்கையில் தனியான பலனை உத்தேசித்து 'ஸர்வரோக ப்ரசமனீ' முதலான நாமங்களை ஏன் சொல்லவேண்டுமென்ற ஸந்தேஹம் ஏற்படலாம். இந்த ஸந்

தேஹத்திற்கு ஸமாதானமாக அவ்விதம் சொல்வதானது அர்த்தவாதம் என்று சொல்வது முடியாது. ஏனென்றால் அர்த்தவாதமென்று ச்ருதி வாக்யங்களைப்பற்றிச் சொல்லலாமே தவிர புராண வசனங்களைப்பற்றிச் சொல்லக்கூடாதென்று சொல்லப்பட்டிருக்கிறது.

> 'புராணேஷு அர்த்தவாதத்வம் யே வதந்தி த்விஜாதமா: |
> தைர் அர்ஜிதானி புண்யானி தத்வதேவ பவந்தி வை ||
> ஸமஸ்த கர்ம நிர்மூல்ய ஸாதனானி நராதம: |
> புராணான்யர்த்தவாதானி ப்ருவன் நரகமச்னுதே ||'

(ப்ருஹன்நாரதீயம்)

இதற்கு ஸமாதானம் பின்வருமாறு சொல்லவேண்டியது.

18. அந்தந்த நாமத்தின் சக்திக்குத் தக்கவாறு வெவ்வேறு பலன் உண்டென்பது ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம். ஆகவே அவைகள் எல்லாவற்றையும் சேர்த்துச்சொன்னால் அது அவற்றின் பலன்களுடைய ஸமஷ்டியான (சேர்க்கையான) பலனோடு கூடியதாயிருக்கிறது என்று பலச்ருதி வாக்யத்தின் தாத்பர்யமாகிறது. இவ்விதம் சொல்வதானது முதலில் (நாமங்களைப்பற்றித் தனித்தனியாக) சொன்னதை அனுவாதம் பண்ணுவது (அதாவது, ஏற்கனவே சொன்னதை அனுஸரித்துச் சொல்வது) என்பதே தவிர வேறல்ல. அனுவாதம் என்பதும் அர்த்தவாதம் என்பதின் பொருளில் அடங்கியதாயிருந்தாலும் (அதாவது அனுவாதமும் அர்த்தவாதம்தான் என்று சொன்னாலும்) இங்கு அந்த அர்த்தவாதமானது ஏற்கனவே சொன்னதைத் திரும்பவும் ப்ரசம்ஸையாகச் சொல்லும் 'குணவாதம்' என்பதாகையால் முன்னே (ப்ருஹன்நாரதீயத்தில்) சொல்லிய நிஷேதவாக்யத்திற்கு விரோதமல்ல.

19. ஒரு விதியையோ, நிஷேதத்தையோ சொல்லும்போது அதைப்பற்றிச் சொல்வதானது ப்ரத்யக்ஷத்திற்கு விரோதமாயிருப்பதால் அதை குணவாதமென்று சொல்லப்படும். 'ப்ரஜாபதி: ஆத்மன: வபாம் உதகிதத்' என்ற ச்ருதிவாக்யத்தில் ப்ரஜாபதியானவர் தன்னுடைய வபையை எடுத்து யாகம் பண்ணினதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஒருவர் அப்படி தன்னுடைய வபையையே எடுத்துச் செய்யமாட்டாராகையால்

அந்த வாக்யம் ப்ரத்யக்ஷத்திற்கு விரோதமாயிருக்கிறது. ஆகவே அது வபாயாகத்தைப்பற்றிய ப்ரசம்ஸா வாக்யமே தவிர வேறல்ல. இது விதிவாக்யத்தைப்பற்றியகுணவாதம்.

'ப்ரதிமாஸு சிலாபுத்திம் குர்வாணோ நரகம் வ்ரஜேத் |'

என்ற ஒரு நிஷேத வாக்யமிருக்கிறது. அதாவது (கல்லில் செய்யப்பட்ட) ப்ரதிமைகளில் (அவை) கல் என்ற புத்தியோடிருந்தால் அப்பேர்ப்பட்டவன் நரகமடைவான் என்று சொல்லப்பட்டது. ஆனால் ப்ரதிமைகள் வாஸ்தவத்தில் கல்லினால் செய்யப்பட்டிருப்பதினால் மேலே சொல்லிய நிஷேதவாக்யமானது ப்ரத்யக்ஷத்திற்கு விரோதமாயிருக்கிறது. ஆகவே இந்த வாக்யத்தின் தாத்பர்யம்—சாதாரணமான கல்லில் தேவதை ஆவிர்பவிப்பதில்லை என்றிருக்கும் புத்தியுடன் ப்ரதிமையாக இருக்கும் கல்லை நினைக்கக்கூடாது என்பது. இது நிஷேத வாக்யத்தைப் பற்றிய குணவாதம்.

20. ஸாமான்யமான விதியைப்பற்றிச் சொல்லும் வாக்யமானது ஸ்பஷ்டமாக (தெளிவாகவாவது குறிப்பிட்டாவது) இல்லாதிருந்தால் அதிலடங்கிய அம்சத்தைப்பற்றி விசேஷமாகச் சொல்லும் விதி வாக்யத்தை அதோடு உபஸம்ஹாரம் செய்யலாம் என்றும்; ஸாமான்ய விதிவாக்யமானது ஸ்பஷ்டமாக இருந்தால் வேறு விசேஷ விதிவாக்யங்களை அதோடு உபஸம்ஹாரம் செய்யத் தேவையில்லை என்றும் சொல்லப்படும்.

'ஸாமான்ய விதி: அஸ்பஷ்ட: ஸம்ஹ்ரியேத விசேஷத: |
ஸ்பஷ்டஸ்ய து விதேர் நான்யை: உபஸம்ஹார ஸம்பவ: ||'

(தந்த்ர வார்த்திகம்)

உதாரணமாக— 'ஸர்வேப்ய: காமேப்ய: தர்சபூர்ணமாஸௌ' என்ற ச்ருதிவாக்யத்தில் ஸகலவிதமான காமங்கள் கிடைப்பதற்கும் தர்சபூர்ணமாஸங்களை அனுஷ்டிக்கவேண்டுமென்று ஸாமான்யமாகச் சொல்லப்பட்டது. இன்னொரு இடத்தில் 'தர்சபூர்ணமாஸாப்யாம் ஸ்வர்க காமோ யஜேத' என்று விசேஷமாகச் சொல்லப்பட்டது. இவ்விரண்டு விதிவாக்யங்களில் முதலாவது ஸாதாரணமான விதியைச் சொல்லுவது, அதாவது

ஸாதாரணமாகச் சொல்லுவது. ஸ்வர்கு காமங்களைப்பற்றி விரும்பப்படுகிறவைகளில் மிகவும் முக்யமானது. அது மென்பது முதலாவது வாக்யத்தில் அடங்கியதா என்பது ஸ்பஷ்டமாக இல்லாமையாலும், அதைப்பற்றித் தெரிந்துகொள்ளவேண்டியது அவச்யமாகையாலும், இரண்டாவது விசேஷ வாக்யமானது அனுவச்யமானதல்ல. அதையும் முதலாவது வாக்யத்துடன் பலாம்சத்தில் உபஸம்ஹாரம் செய்வது நியாயம்தான். மேலே சொல்லியபடி பலாம்சத்தில் உபஸம்ஹாரம் செய்வதானது நிஷேத வாக்யங்களுக்குத் தேவையில்லை.

21. உதாரணமாக 'ந ஹிம்ஸ்யாத் ஸர்வபூதானி' என்ற ச்ருதிவாக்யத்தில் ஸகல ப்ராணிகளையும் ஹிம்ஸைசெய்யக்கூடாது என்று சொல்லப்பட்டது. இன்னமொரு இடத்தில் 'ந ப்ராம் ஹணம் ஹன்யாத்' என்ற ச்ருதிவாக்யத்தில் ப்ராம்ஹணனைக் கொல்லக்கூடாது என்று சொல்லப்பட்டது. இவ்விரண்டு நிஷேதவாக்யங்களில் முதலாவதிலேயே ஸகல ப்ராணிகளையும் கொல்லக்கூடாதென்று தெளிவாகச் சொல்லப்பட்டுவிட்டபடி யால் ப்ராம்ஹணனைக் கொல்லலாமா என்ற ஸந்தேஹம் ஏற்படக் கூடிய நியாயமேயில்லை. அதினால் முதலாவது வாக்யத்துடன் இரண்டாவது வாக்யத்தை உபஸம்ஹாரம் செய்யத் தேவை யில்லை. ஆகவே விசேஷமான ஆகாங்க்ஷை (ஒன்றைப்பற்றிக் குறிப்பிட்டுத் தெரிந்துகொள்ளவேணுமென்ற விருப்பம்) இருந் தால்தான் உபஸம்ஹாரம் ஏற்படுமே தவிர அவ்விதமான ஆகாங் க்ஷைக்கு அவகாசமில்லாவிட்டால் உபஸம்ஹாரம் செய்யத் தேவையில்லை.

22. ப்ரக்ருத விஷயத்தில் நாமங்கள் ஒவ்வொன்றும் ஒரோர் பலனைக் கொடுக்கக்கூடியவை என்பது விஷ்ணுதர்மோத் தர வசனம். ஆனால் பாத்ம, வாயவீய புராணங்களில் அம்பா ளுடைய நாமஸாமான்ய கீர்த்தனத்தாலேயே ஸர்வ காமங்களும் கிடைக்குமென்பதாகச் சொல்லப்பட்டது. மேலும் இந்த 'ஸர்வ' என்ற பதத்தினாலேயே எவ்வகைப்பட்ட பலன்களும் சொல்லப்பட்டன என்றும், அந்தப் பதத்தாலேயே விதிவாக்ய மானது பூர்ணமாக இருக்கிறதென்றும், அனேக வாக்யங்களால் ஏற்படுகிறது. இந்த ஸஹஸ்ரநாமத்திலேயே,

'கீர்த்தயேன் நாமஸாஹஸ்ரம் இதம் மத் ப்ரீதயே ஸதா |
மத் ப்ரீத்யா ஸகலான் காமான் லபதே நாத்ர ஸம்சய: ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது. காளிகாபுராணத்தில்,

'யே ஸ்துவந்தி ஜகன்மாதர் பவதீம் அம்பிகேதி ச |
ஜகன்மயீதி மாயேதி ஸர்வம் தேஷாம் ப்ரவிஷ்யதி ||'

என்று சொல்லப்பட்டது. விஷ்ணுபுராணத்தில் விஷ்ணுவானவர் அம்பாளைப் பார்த்து,

'யே த்வாம் மாயேதி துர்கேதி வேதகர்பாம்பிகேதி ச |
பத்ரேதி பத்ரகாளீதி க்ஷேம்யா க்ஷேமங்கரீதி ச ||
ப்ராதச்சைவா பரான்ஹே ச ஸ்தோஷ்யந்த்யானம்ர மூர்த்தய: |
தேஷாம் ஹி ப்ரார்த்திதம் ஸர்வம் மத் ப்ரஸாதாத் பவிஷ்யதி ||'

என்று சொன்னதாகச் சொல்லப்பட்டது. யாக்ஞ்யவல்க்ய ஸ்ம்ருதியில்,

'ரூபம் தேஹி யசோ தேஹி பகம் பகவதி தேஹி மே |
புத்ரான் தேஹி தனம் தேஹி ஸர்வான் காமாம்ச்ச தேஹி மே ||'

என்பதான அம்பாளுடைய ப்ரார்த்தனை சொல்லப்பட்டது. தேவிபாகவதத்தில்,

'ந ததஸ்தி ப்ருதிவ்யாம் வா திவிப்ராப்யம் ஸுதுர்லபம் |
ப்ரஸன்னாயாம் சிவாயாம் யத் அப்ராப்யம் ந்ருபஸத்தம ||
தே மந்தாஸ்தேஞதி துர்பாக்யா ரோகைஸ்தே ஸமுபத்ருதா: |
யேஷாம் சித்தே ந விச்வாஸோ பவேத் அம்பார்ச்சனாதிஷு ||'

மேலும் ஹரிவம்சத்திலும்,

'ப்ரம்ஹா விஷ்ணுச்ச ருத்ரச்ச சந்த்ரஸூர்யாக்னி மாருதா: |
அச்விநௌ வஸவச்சைவ விச்வே ஸாத்யாஸ்த்ததைவ ச ||
மஹேந்த்ர: ஸஹபர்ஜன்யோ தாதா பூமிர்திசோ தச |
காவோ நக்ஷத்ரவம்ச்யாச்ச க்ரஹா நத்யோ ஹ்ரதாஸ்ததா ||
ஸரித: ஸாகராச்சைவ நாநா வித்யாதரோரகா: |
ததா நாகா: ஸுபர்ணாச்ச கந்தர்வாப்ஸரஸாம்கணா:—
க்ருத்ஸ்னம் ஜகதிதம் ப்ரீதம் தேவீநாமானுகீர்த்தனாத் ||'

என்று அம்பாளுடைய நாமகீர்த்தனத்தால் ஸமஸ்தமான லோகமும் ப்ரீதியடைவதாகச் சொல்லப்பட்டது.

XI

23. ஆகவே, அம்பாளுடைய எந்த நாமத்தைச் சொன்னாலும் ஸகல காமங்களும் கிடைக்குமென்பது பாத்ம, வாயவீய புராணங்களில் சொல்லப்பட்டது. இவ்விதமான தேவீநாம ஸாமான்யத்தை ஆச்ரயித்த விதியோடு 'யத் சக்திமன் நாம யஸ்ய' என்ற விஷ்ணுதர்மோத்தர வசனப்படி யிருக்கும் விதியைச் சேர்ப்பதில் விசேஷ நாமத்தினுடைய நாமாம்சமானது ஸ்வீகரிக்க (எடுத்துக் கொள்ளப்)படுகிறதே தவிர பலாம்சமானது ஸ்வீகரிக்கப் படுவதில்லை. பலாம்சமானது அம்பாளுடைய நாம ஸாமான்யத்திற்கே பூர்ணமாக இருப்பதால் அத்துடன் விசேஷ மான நாமத்தினுடைய பலாம்சத்தை ஸ்வீகரிக்கவேண்டிய தேவை கிடையாது.

24. ஸாமான்ய விதியில் சொல்லப்பட்டபடி அம்பாளுடைய நாம ஸாமான்யமே அன்னதா, வஸுதா முதலான விசேஷ நாமங்களின் பலன்களைக் கொடுக்குமென்று ஏற்படுவதால் ஸகல காமங்கள் கிடைப்பதற்கும் அன்னதா முதலான எந்த நாமத்தையும் சொல்லலாம் என்று ஏற்படுகிறது. அப்போது அன்னத்தை விரும்புகிறவன் அன்னதா என்ற நாமத்தைச் சொல்லவேண்டுமென்ற (விஷ்ணு தர்மோத்தர வசனப்படியுள்ள) விசேஷ விதியானது வ்யர்த்தமா என்ற கேள்வி ஏற்படலாம். இந்த கேள்வியானது மேலே சொல்லிய 'தர்ச பூர்ணமாஸாப்யாம் ஸ்வர்க காமோ யஜேத' என்ற வாக்யத்தைப் பற்றியும் ஏற்படும். இதற்கு ஸமாதானம் என்னவென்றால் தர்ச பூர்ணமாஸங்களைச் செய்வதில் ஸ்வர்கம் கிடைக்குமென்ற ஞானத்தோடு அனுஷ்டித்தால் ஸ்வர்கம் கிடைக்குமே தவிர வேறு விதமாகக் கிடைக்காது. மேலும் ஸ்வர்க பலகத்வமான ஞானமில்லாமல் செய்யப்பட்டு அதினால் ஸ்வர்கம் கிடைத்தாலும், ஸ்வர்கத்தில் தர தம பாவங்களிருப்பதையொட்டி ஸ்வர்க பலம் கிடைக்குமே தவிர, அவ்விதமான ஞானத்தோடு செய்வதினால் கிடைக்கும் ஸ்வர்கம் மாதிரி ஆகாது. விசேஷ பலத்தைக் கொடுக்கும் விதியை அனுஷ்டித்தால் அப்யுதயம் அதிகமாக ஏற்படும் என்பது தாத்பர்யம்.

அதே ஸமாதானமானது ப்ரக்ருதமான நாமங்களைப்பற்றிய கேள்விக்கும் பொருந்தும்.

25. பரமார்த்தமாயிருப்பதென்னவென்றால் — தந்த்ரங்களெல்லாம் ஸ்ம்ருதிகளுக்கு ஸமமாயிருந்தபோதிலும், மனு முதலான ஸ்ம்ருதிகள் (வேதங்களுடைய) கர்மகாண்ட சேஷமாயிருக்கையில் தந்த்ரங்கள் (வேதங்களின்) ப்ரம்ஹகாண்ட சேஷமாயிருக்கின்றன என்பது ஸித்தாந்தம். உத்தரமீமாம்ஸையில் சொல்லப்பட்ட தேவதாதிகரண ந்யாயத்தின்படி, தேவதைக்கு வெவ்வேறு விக்ரஹங்கள் (ரூபங்கள்) இருக்கின்றன என்பது தாந்த்ரிகர்கள் அங்கீகரிக்கும் விஷயம். ஆகவே அந்தந்த காமத்தைப் பூர்த்திசெய்வது என்பதான குணத்தோடு கூடியதாக ப்ரம்ஹத்தை த்யானிக்கவேண்டுமென்பதைக் காட்டுவதே மேலே சொல்லப்பட்ட விசேஷ விதியின் ப்ரயோஜனம் என்று ஏற்படுகிறது. இதையேதான் ச்ருதியில் 'அன்னாதோ வஸுதானோ விந்ததே வஸு ய ஏவம் வேத |' என்பதில் சொல்லப்பட்டது. [நிரம்ப அன்னத்தைக் கொடுப்பவர் அன்னாதர். வஸுவை (தனத்தை) யார் கொடுக்கிறாரோ அவர் வஸுதானர். இந்த ப்ரகாரங்களாக பரமேச்வரனை எவன் அறிகிறானோ (உபாஸிக்கிறானோ) அவன் அன்னத்தையும் வஸுவையும் அடைகிறான்.]

26. இன்னமொருவிதமான ஸமாதானமும் சொல்லலாம். நாமங்களுக்கு கௌண, முக்ய பேதங்களாக பலபேதம் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது ஒரே நாமமானது கௌணமான பலத்தைக் கொடுப்பதுடன் முக்யமான பலத்தையும் கொடுக்கும்.

'நாமானி ஸர்வாணி து கல்பிதானி
ஸ்வமாயயா நித்யஸுகாத்மரூபே |
ததாபி முக்யாஸ்து சிவாதி சப்தா:
பவந்தி ஸங்கல்பனயா சிவஸ்ய ||
முக்ய சப்த ஜபதோ முனீச்வரா:
ஸத்யமேவ பரமேச்வரோ பவேத் |
தஸ்ய வக்த்ர கமலே ஸதாசிவோ
ந்ருத்யதிஸ்ம பரமேசயா ஸஹ ||'

(ஸ்காந்தம்—ஸூதகீதை)

இந்த ந்யாயத்தின்படி ப்ரக்ருதமான நாமங்களைப்பற்றிச் சொல்லும்போது உதாரணமாக அன்னதா என்ற நாமத்தை எடுத்துக்கொள்வோம். அன்னதாயை நம: என்ற மந்த்ரத்திற்கு ஸகலவிதமான காமங்களையும் கொடுக்கும் சக்தி உண்

டென்று ஏற்கனவேயே சொல்லப்பட்டது. அதை பயஹரணம் (பயத்தைப் போக்குவது) என்பதான காமத்தை யுத்தேசித்து அதை ப்ரயோகம் செய்வதாக வைத்துக்கொள்வோம். அப்போது அந்த மந்த்ரத்தைச் சொன்னவுடன் அதின் கௌணதான 'பயாபஹத்வம்' என்ற அர்த்தத்தினால் அம்பாளுக்கு ஞாபகம் ஏற்பட்டபோதிலும் அன்னகாமனாயிருக்கும்போது ப்ரயோகம் செய்தால் அதின் முக்யமான 'அன்னதாத்ருத்வம்' என்ற அர்த்தத்தினால் அது அம்பாளுடைய ஞாபகத்திற்கு உடனே வந்து அம்பாளுடைய ப்ரஸாதமும் உடனே ஏற்படும். இதுதான் விசேஷமான அர்த்தங்களோடுகூடிய தனித்தனியான நாமங்களைச் சொல்வதின் ப்ரயோஜனம்.

IX. मन्त्राद्यो जयति गुणीनवचरणास्त्रींशद् र्घाभः ।
एकार्घ त्रयदेहो भूमद हारीत सप्तपालेशः ॥

மந்த்ராத்யோ ஜயதி குணீ
நவசரண ஸ்த்ரிம் சதர்த்தாப: |
ஏகார்த்த த்ரயதேஹோ
பூமதஹாரீத ஸப்தபால்லேச: ||

மந்த்ரங்களுக்கெல்லாம் ஆதி (மூல) காரணமாயும், குணத்தோடு கூடியவரும், எப்போதும் புதியதான பாதங்களையுடையவரும், பஞ்சதசாக்ஷரியின் ரூபத்தைப்போன்ற ரூபத்தையுடையவரும், முக்கியமானவரும், மூன்றரைச்சுற்றுகளுடைய குண்டலினி சக்தியைத் தன்னுடைய ஆத்மஸ்வரூபமாக உடையவரும், பூமியைப்போன்ற மஹத்தான மதத்தைப் போக்கடிப்பவரும், (ஜடையை தரித்தவரான) பரமசிவனுடைய பத பக்தியைக் கொடுப்பவரும் அவரோடு அபின்னமாயிருப்பவருமான ஸ்ரீ குருவானவர் ஸர்வோத்கர்ஷத்துடன் விளங்குகிறார்.

1. இந்த ச்லோகத்தில் ஸ்ரீ ந்ருஸிம்ஹானந்தநாதரானவர் சலாக்ஷர ஸூத்ரங்களில் சொல்லப்பட்ட ரீதியாக ஒவ்வொரு நாமத்திய அக்ஷரங்களின் எண்ணிக்கையை சொல்லத் துடங்குமுன் தன் குருவை ச்லேஷையாக ஸ்துதித்து நமஸ்கரிக்கிறார்.

2. மந்த்ராத்ய: — குருவை மந்த்ரங்களுக்கு மூலகாரணமாகச் சொல்லப்படும்.

'மோக்ஷஸ்ய மூலம் யத் ஞானம் தஸ்ய மூலம் மஹேச்வர: |
தஸ்ய பஞ்சாக்ஷரோ மந்த்ரோ மந்த்ரமூலம் குரோர் வச: ||'

அவ்விதமான மஹிமையுள்ள குரு ஸார்வபௌமரை மேலே வர்ணிக்கிறார்.

3. குணீ— வாஸ்தவத்தில் நிர்குணமாய் இருந்தாலும் வித்யையின் அவதாரம் ஏற்படுவதற்காக அனேக விதமான சரீரங்களை ஸ்வீகரித்திருப்பதை இந்தப் பதத்தினால் சொன்னது.

4. நவசரண:— நித்யமும் நூதனமாயிருக்கும் (ரக்த, சுக்ல வர்ணங்களோடு கூடிய) பாதங்களையுடையவர்.

'வந்தே குரு பத த்வந்த்வம் அவாங்மனஸ கோசரம் |
ரக்த சுக்ல ப்ரபா மிச்ரம் அதர்க்யம் த்ரைபுரம் மஹ: ||'

அல்லது, சரணம் என்ற பதத்திற்கு,

'பவித்ரம் சரணம் சக்ரம் லோகத்வாரம் ஸுதர்சனம் |'

என்ற கோசவசனத்தின்படி, சக்ரமென்று அர்த்தமுண்டு ஆகவே நவசரண: என்பதினால் த்ரைலோக்ய மோஹனம் முதலாக ஸர்வானந்த மயாந்தமான நவசக்ரங்களையுடைய சக்ர ராஜத்தோடு குருவானவர் அபின்னமாயிருப்பதைச் சொல்லப் பட்டது.

5. த்ரிம்சத் அர்த்தாப:—த்ரிம்சத் 30, அதில் அர்த்தம் (பாதி) 15. இதனால் ஸ்ரீவித்யையின் பஞ்சதசாக்ஷரங்கள் குறிக்கப்பட்டன. அவற்றின் ரூபத்தோடிருப்பவர், அல்லது அவற்றிற்கு ஸமமான ரூபத்தோடிருப்பவர் என்று சொல்லலாம்.

6. ஏக:—முக்யமானவர்.

7. அர்த்த த்ரயதேஹ:—$\frac{1}{2}+3=3\frac{1}{2}$ (அத்யுஷ்டம்). இவ்விதம் $3\frac{1}{2}$ குண்டலங்களின் ஆகாரமாயிருக்கும் ரூபத்தோடும் ஸர்வ தேவதைகளின் ரூபமாகவுமிருக்கும் குண்டலினீ சக்தியையே (தேஹ:) ஆத்மாவாக உடையவர்.

8. பூமதஹாரீ — பூமியைப்போல் பெரியதாயிருக்கும் (மஹா) மதத்தைப் போக்கடிப்பவர். அல்லது பூமா என்றால் ப்ரம்ஹானந்தம். அதைக் கொடுப்பவரும் அந்தக் காரணத்தால் மனோஹரமாயுமிருப்பவர் பூமதஹாரீ.

9. இதஸப்தபால்லேச:—ப்தா என்ற பதம் ஜடையைக் குறிக்கும். அதோடு கூடியவர் ஸப்தர்=பரமசிவன். அவருடைய பாதங்களை அடையச் செய்வது ஸப்தபால்லா=சிவபக்தி. அது கிடைக்கப்பெற்றவர் இதஸப்தபால்ல: அது காரணத்தால் ஈசனுமானவர் இதஸப்தபால்லேச:. அதாவது சிவபக்தியின் பலத்தால் அடையப்படுகிறவரான பரமசிவனோடு அபேதமாயிருப்பவர் என்று தாத்பர்யம்.

10. ப்தா என்ற ஏகாக்ஷரமானது ஜடையைக் குறிப்பது ப்ரஸித்தம்.

'ஸ ப்தா: ஸப்தாச்வ நன்னருண கிரணவிபா:
பாது பிப்ரத் த்ரினேத்ர: |'

மேற்கு ஸமுத்ரக் கரையில் க்ஷேத்ரம் கொண்டிருப்பதாக ஆதித்ய புராணத்தில் சொல்லப்பட்ட சிவமூர்த்திக்கு ஸப்த கோடீச்வரர் என்ற பெயர் ஏற்பட்டதும் இந்த அர்த்தத்தினால் என்று வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

'அத்யாப்யஸ்தி விபச்சிதாமபி மஹாஸந்தேஹ கோடித்வயம்
ய: ச்ருத்யா ஜகதீச்வரோ நிகதித: ஸப்த: கிமப்தோऽதஸ: |
தத்ரேச: ப்ரதமைவ கோடிரிதிகிம் நிச்சாயனாய ஸ்புடம்
நாம்னைவ ப்ரதிதோऽபவத் பரசிவ: ஸ்ரீஸப்த கோடீச்வர: ||'

(இங்கு ஸப்த: என்றால் ஜடையையுடையவர்—பரமசிவன். அப்த: என்றால் ஜடையில்லாதவர்—விஷ்ணு.)

11. இந்த ரீதியில் பின்னால் ஸ்ரீ ந்ருஸிம்ஹானந்தநாதரால் சொல்லப்பட்ட ச்லோகங்களையும் ச்லேஷையாக அர்த்தம் பண்ணலாம். ஆயினும் அதை பண்டிதர்கள் ஊஹிக்கக்கூடுமாகையாலும் ப்ரக்ருத விஷயமான நாமவிபாகத்திற்கு அது தேவையில்லாததாலும் அதை விட்டு விட்டு நாமவிபாகத்தைப் பற்றியவரையில் வ்யாக்யானம் சொல்லப்படும்.

12. மந்த்ராத்ய: என்பதினால் மந்த்ரங்களுக்கெல்லாம் முதலில் உச்சரிக்கவேண்டியதான ப்ரணவமானது சொல்லப்பட்டது.

'ஓம் காரோ வர்துளஸ்தாரோ மந்த்ராத்ய: ப்ரணவோ த்ருவ: |'

(மாத்ருகாகோசம்)

மந்த்ரங்களுக்கு முன்னும் பின்னும் ஓம்காரத்தைச் சொல்ல வேண்டுமென்றும், முதலில் சொல்லாவிட்டால் மந்த்ரமானது ஒழுகிவிடுமென்றும் கடைசியில் சொல்லாவிட்டால் பொங்கி வழிந்துவிடுமென்றும் காளிகாபுராணம் முதலியவைகளில் சொல்லப்பட்டது.

'ஸர்வத்யனோங்க்ருதம் பூர்வம் பரஸ்தாத் ச விசீர்யதே |'

தானம், யக்ஞம் முதலான ஸகல கார்யங்களையும் ஆரம் பிக்கும்போது ப்ரணவத்தைச் சொல்லவேண்டுமென்பதாக சாட்யாயனரால்,

'தான யக்ஞ தப ஸ்வாத்யாய ஜப த்யான ஸந்த்யோபாஸன
ப்ராணாயாம ஹோம தைவ பித்ர்ய மந்த்ரோச்சாரண
ப்ரம்ஹாரம்பாதீனி ப்ரணவமுச்சார்ய ப்ரவர்த்தயேத் |'

என்று சொல்லப்பட்டது. அதேமாதிரி காத்யாயனரால் ப்ரண வத்தைப்பற்றிச் சொல்லுகையில்,

'ப்ரம்ஹாரம்பே விராமே ச யாகஹோமாதிஷு சாந்திபுஷ்டி
கர்மஸு ச அன்யேஷ்வபி காம்ய நைமித்திகாதிஷு
ஸர்வேஷு வினியோகோஸ்ய |'

என்று சொல்லப்பட்டது. தால்ப்ய பரிசிஷ்டத்திலும்,

'ப்ரம்ஹ யக்ஞோ ஜபோ ஹோமோ தேவர்ஷிபித்ரு கர்ம ச |
அனோம்க்ருத்ய க்ருதம் ஸர்வம் ந பவேத் ஸித்திகாரகம் ||'

என்று ஓம்காரத்தைச் சொல்லாமல் செய்யப்பட்ட ஸகல கார்யங் களும் ஸித்தியைக் கொடுக்கமாட்டாது என்பதாகச் சொல்லப் பட்டது. இந்தக் காரணத்தால் ஸகல மந்த்ரங்களும் ஓம் காரத் தில் ஸம்புடிதமாக (அடங்கி) இருப்பதாக ச்ருதியில் 'ஓம் காரேண ஸர்வா வாக் ஸம்த்ருண்ணா' என்று சொல்லப்பட்டது.

13. மேலே சொல்லியதிலிருந்து மந்த்ரங்களைச் சொல்லு கையில் அவற்றிற்கு முன்னும் பின்னும் ப்ரணவத்தைச் சேர்த் துச் சொல்லவேண்டுமென்று ஏற்படுகிறது. ஆகவே இந்த ஸஹஸ்ரநாமத்திய நாமங்களைச் சொல்லும்போது ஒவ்வொரு நாமத்திற்கு முன்னும் பின்னும் ப்ரணவத்தைச் சேர்த்துச் சொல்லவேண்டும்.

14. இவ்விதம் ப்ரணவத்தைச் சேர்ப்பதற்கு ஒரு ஆக்ஷே பணை தோன்றக்கூடும். இந்த நாமங்கள் மந்த்ரங்களாயிருந்தால் தானே அவ்விதம் சேர்த்துச் சொல்லவேண்டும், இவை மந்த்ரங்க ளென்று எங்கே சொல்லியிருக்கிறது? இந்த விதியை ஸ்ரீ லலிதா த்ரிசதியின் நாமங்களுக்குச் சொல்லலாம். ஏனென்றால் அதில்,

'கேவலம் நாமபுத்திஸ்தே ந கர்த்தவ்யாதேஷு கும்பஜ |
மந்த்ராத்மகத்வம் ஏதேஷாம் நாம்னும் நாமாத்மதாபி ச ||'

என்று சொல்லப்பட்டபடி அவைகள் கேவலம் நாமங்கள் மட்டு மல்ல, மந்த்ரங்களாகவுமிருக்கின்றன என்று சொல்லப்பட்டிருக் கிறது. இந்த ஸஹஸ்ர நாமத்தில் அம்மாதிரிச் சொல்லவில்லையே என்ற ஸந்தேஹம் தோன்றலாம்.

15. இதற்கு ஸமாதானம் பின்வருமாறு. மந்த்ரங்களின் லக்ஷணத்தைச் சொல்லும் வாக்யங்களில் மந்த்ரங்களென்று ப்ரஸித்தியடைந்தவைகள் மந்த்ரங்கள் என்று சொல்லப்பட்டிருக் கிறது. இந்த ஸஹஸ்ரநாமம் மாதிரி நாமங்கள் சேர்ந்து வரும் மந்த்ரத்திற்கு மாலா மந்த்ரம் என்று தாந்த்ரிகள் சொல்வது ப்ரஸித்தம்.

'சிவ சங்கர ருத்ரேச மஹேச்வாம் ருடாவ்யய: |'

என்று வரும் நாமங்களின் வெறும் சேர்க்கைக்கு அம்மாதிரி யான ப்ரஸித்தி இல்லாததால் அவை வெறும் நாமங்களே. இந்தக் காரணத்தினால்தான் கணேச ஸஹஸ்ரநாமம் முதலிய வற்றில்,

'ஸஹஸ்ரநாம மந்த்ரோऽயம் ஜபிதவ்ய: சுபாப்தயே |'

என்று அவற்றில் வரும் நாமங்கள் மந்த்ரங்களென்று குறிப் பிட்டுச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகவே இம்மாதிரியான ஸஹஸ்ரநாமங்களான மாலா மந்த்ரங்களில் வரும் நாமங்களைச் சொல்லும்போது ஒவ்வொரு நாமத்திற்கு முன்னும் பின்னும் ப்ரணவத்தைக் சேர்க்கவேண்டும்.

16. ப்ரணவத்திற்கு வர்ண (ஜாதி) பேதத்தை யொட்டி ஸ்வரபேதங்கள் முதலியவை காளிகாபுராணத்தில் சொல்லப் பட்டிருக்கிறது.

'ஸ உதாத்தோ த்விஜாதீனாம் ராக்ஞாம் ஸ்யாத் அனுதாத்தக: |
ப்ரசிதச்சோரு ஜாதானாம் மனஸாபி ததா ஸ்மரேத் |
சதுர்தச ஸ்வரே யோஸௌ சேஷ ஔகார ஸம்ஜ்ஞக: |
ஸ சானுஸ்வார சந்த்ராப்யாம் சூத்ராணாம் ஸேதுருச்யதே ||
சூத்ராணாம் ஆதிஸேதுர்வா த்விஸேதுர்வா யத்ருச்சயா |
த்விஸேதவ: ஸமாக்யாதா: ஸர்வதைவ த்விஜாதய: ||'

இப்படி நாலு வர்ணங்களுக்குத் தக்கபடி ஸ்வரபேதங்கள் இருப்பதுடன், த்விஜர்கள் எல்லோரும் ப்ரணவத்தை முன்னும் பின்னும் சேர்த்துச் சொல்லவேண்டுமென்றும், சூத்ரர்கள் அவ்விதமாவது அல்லது முந்தி மட்டும் ப்ரணவத்தைச் சேர்த்தாவது சொல்லலாம் என்று சொல்லப்பட்டது.

இதுதவிர அந்தந்த வேத ஸம்பந்தமாக ப்ரணவத்தைச் சொல்லும்போது ஸ்வர வ்யவஸ்தை வெவ்வேறாக ஏற்பட்டிருக்கிறது.

17. இவ்விதம் ப்ரணவத்தைச் சொல்லிவிட்டு பாக்கி பதங்களால் ஸஹஸ்ரநாமத்திய முதல் 63 நாமங்களைக் கணக்கிடப்படுகிறது. இதேமாதிரியாக மற்ற பரிபாஷாச்லோகங்களில் பாக்கியிருக்கும் நாமங்களையெல்லாம் கணக்கிட்டுப் பிரித்து ஸ்ரீ ந்ருஸிம்ஹானந்தநாதர் சொல்லுகிறார். அவைகளை மொழிபெயர்த்துச் சொல்லப்போனால் மிகவும் விரிவாக ஆகுமாகையாலும் அவற்றை அனுஸரித்தே நாமங்கள் பிரிக்கப்பட்டு சொல்லப்படுவதாலும் அவை இங்கு அச்சிடப்படவில்லை. அவற்றைப்பற்றித் தெரிந்து கொள்ள விருப்பமுள்ளவர்களை பாஷ்யத்தின் மூலத்தைப் பார்த்துக்கொள்ளக் கோருகிறேன்.

18. பரிபாஷா ச்லோகங்கள் அமைந்திருப்பதைப் பற்றிய நியமங்கள் பின்வருமாறு.—

(a) ஏற்கனவே கடபயாதி ஸங்க்யையைப்பற்றிச் சொல்லுகையில் ञ, न என்ற இரண்டும் பூஜ்யத்தைக் குறிக்குமென்று சொல்லப்பட்டது. இங்கு அவை 10 என்ற எண்ணிக்கையைக் குறிக்கும். ஏனென்றால் இங்கு சொல்லப்படும் கணக்கில் 0 என்பதற்கு அடையாளம் தேவையில்லை. பத்து என்பதற்கோ அடையாளம் தேவையாக இருக்கிறது.

(b) கடபயாதி ஸங்க்யையில் வரும் க, காரம் முதலானவை களால் குறிக்கப்படும் ஸங்க்யையானது ஒரொரு நாமாவிலும் அடங்கியிருக்கும் அக்ஷரங்களிலுள்ள ஸ்வரங்களை ஆச்ரயித்தது.

(c) எண்ணிக்கையைக் குறிக்கும் एक, द्वि, त्रि முதலிய (விசேஷண) பதங்களுக்குப் பிறகு पाद அல்லது अर्ध என்ற (விசேஷ்ய) பதங்கள் வந்தால் அந்தந்த எண்ணிக்கையுள்ள पाद அல்லது अर्धத்தின் அக்ஷரங்களோடு கூடிய நாமங்களிருக்கின்றன என்று தெரிந்துகொள்ளவேண்டும். (இந்த ஸஹஸ்ரநாமமானது அனுஷ்டுப் ச்லோகங்களாலானது. அனுஷ்டுப் ச்லோகத்திற்கு 32 அக்ஷரங்களுண்டு. அதின் पाद என்பது ¼ பாகம், அதாவது 8 அக்ஷரங்களுடையது. இதையே சரணம் என்றும் சொல்லப் படும். ச்லோகத்தின் अर्ध மென்பது ½ பாகம், அதாவது 16 அக்ஷரங்களுடையது).

(d) மேலே சொல்லியபடி விசேஷ்ய ஸம்பந்தமில்லாமல் ஒரு பதமானது தனியாக வந்தால் அதின் ஒரோர் அக்ஷரமும் அதற்குக் கடபயாதி ஸங்க்யையின்படி இருக்கும் எண்ணிக்கை யுள்ள அக்ஷரங்களையுடைய ஒரோர் நாமத்தைக் குறிக்கும்.

(e) ச்லோகார்த்த ரூபமான நாமங்கள் ச்லோகத்தில் முதல் அர்த்தமோ இரண்டாவது அர்த்தமோ இருக்குமே தவிர முதல் அர்த்தத்தில் கொஞ்சமும் இரண்டாவது அர்த்தத்தில் கொஞ்சமு மாக இருக்காது. இதேமாதிரி மூன்று பாதம், ஐந்து பாதம் முதலியவையுடைய நாமங்கள் கிடையாது. மேலும் ஒரு அர்த்த மானது நாமமாயிருக்குமானால் அதைப் பிரித்து வெவ்வேறு நாமங்களிருப்பதாகச் சொல்லக்கூடாது.

(f) பாதமாகவாவது அர்த்தமாகவாவது நாமங்களிருந்தால் அவை முறையே 8 அக்ஷரங்களுடையவையென்றும், 16 அக்ஷ ரங்களுடையவையென்றும் ஏற்பட்டுப்போவதால் அவற்றிலடங் கிய அக்ஷரங்களின் கணக்குச் சொல்லப்படுவதில்லை. நாமத்திய அக்ஷரங்களின் கணக்கானது அந்த நாமம் பாதத்திற்காவது அர்த்தத்திற்காவது குறைவாயிருந்தால்தான் சொல்லப்படும்.

19. गुणी - ग என்றால் 3, ण என்றால் 5. இந்த எண்ணிக்கைகள் நாமங்களைக் குறிக்குமென்று வைத்துக்கொண்டால் திரும்பவும் அந்த நாமங்களின் அக்ஷரங்கள் எவ்வளவு என்ற கேள்வை ஏற்படும். ஆகவே இந்தப் பதத்தினால் முதலாவது நாமம் 3 அக்ஷரங்களுடையதென்றும், இரண்டாவது நாமம் 5 அக்ஷரங்களுடையதென்றும் ஏற்படுகிறது.

नव चरण:— அடுத்தாற்போலிருக்கும் நாமங்கள் ஒவ்வொன்றும் ஒரோர் பாதமாக (சரணமாக) ஒன்பது இருக்கின்றன.

त्रिंशदर्धा:— பிறகு அர்த்த ச்லோக ரூபமாக முப்பது நாமங்களிருக்கின்றன.

भ:— அடுத்த நாமம். 4 அக்ஷரங்களுடையது. (गूढगुल्फा)

एक— மேலே சொல்லிய நாமத்தின் 4 அக்ஷரங்கள் போக்கி பாக்கி (அந்த அர்த்தத்திலிருக்கும்) 12 அக்ஷரங்களுடையது ஒரு நாமம். (कूर्मपृष्ठ जयिष्णुप्रपदान्विता)

अर्धत्रय— அடுத்தாற்போல் அர்த்த ச்லோக ரூபமான மூன்று நாமங்கள்.

दे- அடுத்தது எட்டு அக்ஷரங்களுடையது (मरालीमन्दगमना)

हो- அடுத்தது எட்டு அக்ஷரங்களுடையது (महालावण्यशेवधिः)

| | | | |
|---|---|---|---|
| भू | 4 | .... | (सर्वारुणा) |
| म | 5 | .... | (अनवद्याङ्गी) |
| द | 8 | .... | (सर्वाभरणभूषिता) |
| हा | 8 | .... | (शिवकामेश्वराङ्कस्था) |
| री | 2 | .... | (शिवा) |
| त | 6 | .... | (स्वाधीनवल्लभा) |

सप्तपात् அடுத்தாற்போல் பாதரூபங்களான 7 நாமங்கள்

ले அடுத்தது 3 அக்ஷரங்களுடையது (कामाक्षी)

शः .... 5 .... (कामदायिनी)

இவ்விதம் முதல் அறுபத்துமூன்று நாமங்களும் அவைகளுடைய அக்ஷரங்களின் கணக்கும் சொல்லப்பட்டது.

20. இதேவிதமாக மற்ற பரிபாஷா ச்லோகங்களையும் பிரித்து அர்த்தம் சொல்லவேண்டும். சில சில இடங்களில் அர்த்தத்தைப்பற்றிய விசேஷ விதிகள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளெல்லாவற்றையும் இங்கே எழுதப்போனால் இடம் வளருமாதலால் அதைப்பற்றி அறிய விரும்புவோர்களை பாஷ்யத்தைப் பார்த்துக்கொள்ளும்படி கோரப்படுகிறது.

21. மேலே சொல்லப்பட்ட பரிபாஷா ச்லோகத்தில்,

1-முதல் 63-நாமங்கள் பிரிக்கப்படுகின்றன.

அடுத்த ச்லோகத்தில்,

64-முதல் 64-நாமங்கள் பிரிக்கப்படுகின்றன.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 128 | .... | 46 | .... | .... |
| .... | 174 | .... | 49 | .... | .... |
| .... | 223 | .... | 40 | .... | .... |
| .... | 263 | .... | 40 | .... | .... |
| .... | 303 | .... | 38 | .... | .... |
| .... | 341 | .... | 38 | .... | .... |
| .... | 379 | .... | 44 | .... | .... |
| .... | 423 | .... | 36 | .... | .... |
| .... | 459 | .... | 35 | .... | .... |
| .... | 494 | .... | 39 | .... | .... |
| .... | 533 | .... | 32 | .... | .... |
| .... | 565 | .... | 31 | .... | .... |
| .... | 596 | .... | 35 | ... | .... |
| .... | 631 | .... | 35 | .... | .... |
| .... | 666 | .... | 34 | .... | .... |
| .... | 700 | .... | 36 | .... | .... |
| .... | 736 | .... | 43 | .... | .... |
| .... | 779 | .... | 48 | .... | .... |
| .... | 827 | ... | 49 | .... | .... |
| .... | 876 | .... | 38 | .... | .... |
| .... | 914 | .... | 37 | .... | .... |
| .... | 951 | .... | 50 | .... | .... |

ஆக மொத்தம் 1000 நாமங்கள்.

நாமங்களின் பிரிவைப்பற்றிப் பரிபாஷா ச்லோகங்களில் மேலே சொல்லிய 'மந்த்ராத்யோ........லேச:' என்றதும் சேர்ந்த தால் அதையும் சேர்த்து நாமவிபாக ச்லோகங்களை கீழே சொல்லப்பட்டது.

22. நாமங்களின் பிரிவைப்பற்றிய பரிபாஷா ச்லோகங்கள்:—

IX. मन्त्राद्यो जयति गुणी नवचरणस्त्रिंशदर्थाभः ।
एकार्धत्रयदेहो भूमदहारीतसप्तपाल्लेशः ॥

மந்த்ராத்யோ ஜயதி குணீ
நவசரணஸ்த்ரிம்சதர்த்தாப: |
ஏகார்த்த த்ரய தேஹோ
பூமதஹாரீத ஸப்தபால்லேச: |

X. अर्ध चतुर्विंशति तनुदोद्भव....गुणगणोदशपात् ।
दम्भावहगोमेदा भावेह चतुर्गुणा गुणैर्गङ्गा ॥

அர்த்த சதுர்விம்சதி தனு—
தோத்பவ குணகணோ தசபாத் |
தம்பாவஹ கோமேதா பாவேஹ
சதுர்குணா குணைர் கங்கா ||

XI. राजा चतुर्बलेन्द्रो भूत्वा बलिरागमान् द्विदश ।
गुणगणगौण्यं गणगोमार्गे मार्गे मृगेण भवेत् ॥

ராஜா சதுர்பலேந்த்ரோ
பூத்வா பலிராகமான் த்விதச |
குண கண கௌண்யம்
கணகோமார்க்கே மார்க்கே ம்ருகேண பவேத் ||

XII. गुण भुवि गोमृग शृङ्गे मूलमघा भोगगौरवाभावे ।
स्थूणाङ्गमहान्तो द्विर्भव दूषित वाक्चतुर्विभाऽजोष्टौ ॥

குணபுவி கோம்ருக ச்ருங்கே
மூலமகா போககௌரவாபாவே |

ஸ்தூணாங்க மஹாந்தோ த்விர்பவ
துஷித வாக்சதுர்விபா அஜோஷ்டௌ ||

XIII. भुवि हि चतुर्देहार्धं चतुष्पदार्धं भवेदविभौ ।
पादत्रयगुणदो द्विर्गौणार्हो द्विर्विभागशरवीरः ॥

புவி ஹி சதுர்தேஹார்த்தம்
சதுஷ்பதார்த்தம் பவேதவிபௌ |
பாதத்ரயகுணதோ த்விர்கௌணார்ஹோ
த்விர்விபாகசரவீர: ||

XIV. दिवि भारत भुविताडघमृदुजंगम भोवदार्थ दिवा ।
वाक्चतुरं ग्रिर्व्यर्धीतत्फलमूलं तदेव वादबलम् ॥

திவிபாரத புவிதாடகம்ருது—
ஜம்கம போவதார்த்த திவா |
வாக்சதுரம்க்ரிர்வ்ர்த்யர்த்தா
தத்பல மூலம் ததேவ வாதபலம் ||

XV. राजतरेखितलिङ्गैरहरत्तैर्द्विर्विभूरतौ रेतः ।
हालामद भुविरक्तो गुणदंभो वाजिगीर्णं द्विः ॥

ராஜதரேகித லிங்கை—
ரஹரத்தைர் த்விர்விபூரதௌ ரேத: |
ஹாலாமத புவிரக்தோ
குணதம்போ வாஜிகீர்ணம் த்வி: ||

XVI. मृगजो द्विर्बालः खे जीवाभं पञ्चपादार्धम् ।
गुणभूवरतेजोर्धं रतिगुणलेशो दहेद्व्रणं दुरितम् ॥

ம்ருகஜோ த்விர்பால: க்கே
ஜீவாபம் பஞ்சபாதார்த்தம் |
குணபூவரதேஜோர்த்தம் ரதிகுணலேசோ
தஹேத்கணம் துரிதம் ||

XVII. द्वेद्वे चेद्वेद्वे भवदोहद भुविलेश शील जलमोहैः ।
ध्यर्थचतुर्भवगाः स्मो भुवि जलशोभा भगोलः खे ॥
த்வேத்வே சேத்வேத்வே பவ தோஹத
புவிலேச சீல ஜல மோஹை: |
த்வ்யர்த்த சதுர்பவகா: ஸ்மோ
புவி ஜலசோபா பகோல: கே ||

XVIII. दिवि कूटैरुदिते द्वे द्विर्द्वि र्गीर्णा विभाति नदी ।
चत्वारो रूढफलं शंभुर्भोजो बली राजा ॥
திவி கூடைருதிதே த்வே
த்விர்த்விர் கீர்ணா விபாதி நதீ |
சத்வாரோ ரூடபலம் சம்புர்போஜோ
பலீ ராஜா ||

XIX. गलफफशोभावेगः शंभोर्वेदे चतुर्होमः ।
भूर्द्विस्तात्राजैको मोदाङ्गण वासतो नतिहृत् ॥
கலப்பசோபாவேக:
சம்போர் வேதே சதுர்ஹோம: |
பூர்த்வி ஸ்தாத்ராஜைகோ
மோதாங்கண வாஸதோ நதிஹ்ருத் ||

XX. पञ्चपदी भाविचतुष्पदी द्विचरणीव शंभोर्वाक् ।
चतुरङ्घ्रि वशे पञ्चाङ्घ्रि भवे द्वैकं चतुष्पदं च मम ॥
பஞ்சபதி பாவிசதுஷ்பதீ
த்விசரணீவ சம்போர்வாக் |
சதுரங்க்ரி வசே பஞ்சாங்க்ரி பவே
த்வைகம் சதுஷ்பதம் ச மம ||

XXI. हेदाराः फलरेखारम्भविवादे तमों शोस्ति ।
खेदो देहे भीष्मो देवे वा त्र्यङ्घ्रि लिङ्गफले ॥
ஹேதாரா: பலரேகாரம்பவிவாதே
தமோம் சோஸ்தி |

கேதோ தேஹே பீஷ்மோ தேவே
வா த்ரையங்க்ரி லிங்க பலே ||

XXII. शंभोर्भाले मज्जज्जीवाभेदाच्चरे त्र्यंङ्घ्रिः ।
भवद्दृढभण्डो मन्दो गौणार्धं भूशिलाषाढे ॥

சம்போர் பாலேமஜ்ஜ—
ஜ்ஜீவாபேதாச்சரே த்ரயங்க்ரிः |
பவத்ருடபண்டோ மந்தோ
கௌணார்த்தம் பூசிலாஷாடே ||

XXIII. भेदभुवि त्र्यंङ्घ्रि भुवो गुणगणजार्धं विभेजेर्धं ।
भर्गो रोगेणैको मूलगुरोर्दण्डमुण्डशिला ॥

பேதபுவி த்ரயங்க்ரி புவோ
குணகணஜார்த்தம் விபேஜேர்த்தம் |
பர்கோ ரோகேணைகோ மூலகுரோர்—
தண்டமுண்டசிலா ||

XXIV. मन्दिरचरतां विभवः शैवो मार्गो महान् हितोऽनुगुणः ।
गौणीलीलाद्रीभावार्धविभेदा भवेदेव ॥

மந்திரசரதாம் விபவः சைவோ
மார்க்கோ மஹான் ஹிதோ அநுகுணः
கௌணீலீலாத்ரீபாவர்த்த-
விபேதா பவேதேவ ||

XXV. भूगीर्णाबलखेदालम्बारम्भाविभोर्वदेद्भावम् ।
हस्ती द्विर्वैकं वा भजते वातूलमन्दमृगान् ।

பூகீர்ணபலகேதாலம்பாரம்பா-
விபோர்வதேத்பாவம் |
ஹஸ்தீ த்விர்வைகம் வா பஜதே
வாதூல மந்த ம்ருகான் ||

XXVI. देहगुणाद्भवलेशाद्विस्तेरूपं दिवाभूरि ।
वारि गणे भावि गुणास्त्रिपदलताभाव जववादाः ॥

தேஹ குணாத் பவலேசாத்வி
ஸ்தேரூபம் திவாபூரி |
வாரி கணே பாவிகுணாஸ்த்ரி-
பதலதாபாவ ஜவவாதா: ||

XXVII. गौः शैवे विरते चतुरङ्घ्रितनुर्द्वि श्चतुर्बलं नेतुः ।
द्विर्मे गङ्गामाता रजश्चतुर्भावजलमदाद्भावैः ॥

கௌ: சைவே விரதே சதுரங்க்ரி
தநுர்த்வி ச்சதுர்பலம் நேதுः |
த்விர்மே கங்காமாதா ரஜ
ச்சதுர்பாவ ஜலமதாத் பாவை: ||

XXVIII. गुणभावे गीर्णे द्विश्चतुर्हृदां विभुगुणे भावाङ्गमखे ।
वरगुण चतुर्विभाजां खलमदभावान्तरङ्गखिलविभवाः ॥

குணபாவே கீர்ணே த்விச்சதுர்
ஹ்ருதாம் விபுகுணே பாவாங்கமகே |
வரகுண சதுர்விபாஜாம் கலமத
பாவாந்தரங்ககிலவிபவா: ||

XXIX. गुरुर्गीर्णे त्रिभजचतुर्गुणदंगो मृदुचतुर्मतांशार्धम् ।
द्विर्गुण गुणितां लिखितां चतुःखचरता दहेद्रुचिं रोषात् ॥

குருகீர்ணே விபஜ சதுர்குணதம்கோ
ம்ருது சதுர்மதாம்சார்த்தம் |
த்விர்குண குணிதாம் லிகிதாம் சது:க-
சரதா தஹேத்ருசிம் ரோஷாத் ||

XXX. चतुरर्धभवो देवो वदन्विभेदं विभागमार्गेण ।
गौणतरङ्गमतिः खलु शंभोर्वादं चरत्र्यङ्घ्रिः ॥

சதுரார்த்தபவோ தேவோ வதன்-
விபேதம் விபாக மார்க்கேண |
கௌணதரங்கமதி: கலு
சம்போர்வாதம் சரத்ரயங்க்ரி: ||

XXXI. खेचरता द्विर्भवदा देहे चैका भवेद्देवी ।
भगणे चतुर्गुणा भूर्भवभालशतेन गोमेदा ॥

கேசரதா த்விர்பவதா தேஹே
சைகா பவேத் தேவீ |
பகணே சதுர்குணா பூர்பவ
பாலசதேன கோமேதா ||

XXXII. गुणगणरविं खगेशं चतुर्हरन्तं चतुर्द्रुटामोदम् ।
गुणिहृदि विभजभवाद्गुरुवर्गं च नवचरणं गदन्तमिति ॥

குண கண ரவிம் ககேசம்
சதுர்ஹரந்தம் சதுர்த்ருடா மோதம் |
குணி ஹ்ருதி விபஜ பவாத்குருவர்கம்
ச நவசரணம் கதந்தமிதி ||

இவ்விதமான பரிபாஷா ச்லோகங்களை தன் குருவானவர் செய்ததின் உத்தேசம் பாஸ்கரராயரால் பின்வருமாறு சொல்லப் பட்டிருக்கிறது. இவை கொஞ்சமாவது நாம விபாகங்களைத் தெரிந்தவர்களுக்கு விசேஷமாக ஸந்தேஹம் வரும் இடங்களில் பிரித்துக் காட்டுவதற்காகச் செய்யப்பட்டதே தவிர ஒவ்வொரு நாமாவினுடைய அக்ஷரக்கணக்கைக் காட்டுவதற்காகச் செய்யப் பட்டதல்ல. பூர்ணமான ஞான முடையவர்களுக்குக்கூட நாம விபாகத்தைப்பற்றி ஸந்தேஹம் ஏற்படக்கூடிய இடங்களிருக்கிற படியால் சலாக்ஷர ஸூத்ரங்களும் அவச்யம்தானென்றும் பரிபாஷா ச்லோகங்களும் தேவைதானென்றும் ஏற்படுகிறது.

இம்மாதிரியான க்ரந்தங்கள் கொஞ்சமான (மத்யமமான) ஞானத்தையுடையவர்களுக்காக ஏற்பட்டிருக்கின்றனவே தவிர, பூர்ணமான ஞானத்தையுடையவர்களுக்காவது விஷயமே தெரியாதவர்களுக்காவது ஏற்பட்டவையல்ல என்று யோகவாஸிஷ்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'நாத்யந்தம் அக்ஞோ நாத ஞ: ஸோऽஸ்மின் சாஸ்த்ரேऽதிகாரவான்'

சலாக்ஷர ஸூத்ரங்கள் முழுவதும் இப்போது கிடைக்காவிட்டாலும் அவை இன்ன ஸ்வரூபமுள்ளவையென்று புரிந்துகொள்வதற்கும் அவை இவ்வளவு கடினமானவையென்று நாம் அறிவதற்கும், அந்த விஷயத்தில் ந்ருஸிம்ஹானந்த நாதர் என்ன விதமான பேருபகாரம் நமக்கு பரிபாஷா ச்லோகங்களால் செய்திருக்கிறரென்றும் அறிந்துகொள்வதற்கு சௌகர்யமாக ஒரே ஒரு ஸூத்ரம் மட்டில் பாஸ்கரராயருடைய பாஷ்யத்தில் அகப்படுகிறது. அது பின்வருமாறு:—

ॡ या यू टा ट्ट ख्ॄ री ड्ॄ क्ि को री यॄ फी ।

இதுவே சாயையென்றல் மூலஸூத்ரம் எப்படியிருக்குமென்று நாம் நினைத்துக் கொள்ளலாம்.

சலாக்ஷரங்களுடைய கணக்கு எப்படியென்றல் ஒவ்வொரு அக்ஷரத்திலிருக்கும்படியான அச் (vowel) ஆனது நாமத்திலடங்கிய அக்ஷரங்களையும், ஹல் (Consonant) ஆனது அவ்வளவு அக்ஷரங்களடங்கிய நாமங்கள் (வாருசியின் கடபயாதி ஸங்க்யையின்படி) எவ்வளவு என்றும் குறிக்கும். மேலே சொல்லிய ஸூத்ரமானது 'ஸதாசிவகுடும்பினீ' என்ற 911-வது நாமம் 'மானவதீ' என்ற 931-வது முடிய இருக்கும் நாமங்களைப்பற்றியது. இதை ஆராய்வோம். ॡ—ल् என்பது 3. ॠ என்பது 8. ஆகவே 8 அக்ஷரங்களையுடைய மூன்று நாமங்கள்—ஸதாசிவ குடும்பினீ, ஸ வ்யா பஸவ்ய மார்கஸ்த்தா, ஸர்வாப த்விநிவாரிணீ.

या—य् என்பது 1, आ என்பது இரண்டு. இரண்டு அக்ஷரங்களுடைய ஒரு நாமம் ஸ்வஸ்த்தா.

यू—6 அக்ஷரங்களுடைய ஒரு நாமம்—ஸ்வ பா வ மதுரா.

टा—2........................................................தீரா.

ट्ट—6...............................தீர ஸமர்ச்சிதா.

ख्ॄ—8.................இரண்டு நாமங்கள்.............சைதன்யார்க்ய ஸ மா ராத்யா, சைதன்ய குஸும ப்ரியா.

री—4 அக்ஷரங்களுடைய 2 நாமம்—ஸதோதிதா, ஸதா துஷ்டா,

ह्रृ—8..........................3................தருணுதித்ய பாடலா.
தக்ஷிணு தக்ஷிணுராத்யா, தரஸ்மேர முகாம்புஜா.

कि—3 அக்ஷரங்களுடைய 1 நாமம் - கௌலினீ

को—13.......................... 1 ........... கேவலான ர்க்ய
கைவல்யபததாயினீ

री—4.......................... 2 நாமம் - ஸ்தோத்ர ப்ரியா,
ஸ்துதி மதீ

यृ—8.......................... 1 நாமம் - ச்ருதி ஸம் ஸ்துத வை
பவா.

फी—4....................... 2........... மனஸ்வினீ, மானவதீ.

இந்த நாமங்களடங்கிய பரிபாஷா ச்லோகமானது-

........त्र्यङ्घ्रिः ॥

खेचरता द्विर्भवदा..............................
.................................गोमेदा ॥

.........த்ரயங்க்ரி: ॥

கேசரதா.............. |
.........கோமேதா ॥

त्र्यङ्घ्रिः-மூன்று பாதங்கள் 911, 912, 913.

खे— 2 அக்ஷரமுடையது 914.
च— 6............... 915.
र— 2............... 916.
ता— 6............... 917.

द्वि- இரண்டு பாதங்கள் 918, 919.
भ— 4 அக்ஷரமுடையது 920
व— ............... 921
दा— 8........... 922

दे— ............... 923

हे— ................. 924
च— 6............... 925 (கௌலினீ கேவலா)

एका— பாக்கி அந்த அடியிலுள்ளது ஒரே நாமம் 926

(அனர்க்யகைவல்ய பததாயினீ)

भ— 4 அக்ஷரமுடையது 927

वे— .................... 928

दे— 8............... 929

वी— 4............... 930

भ— 4............... 931

இவற்றில்,

'கௌலினீ கேவலானர்க்ய கைவல்ய பததாயினீ |'

என்ற அடியிலுள்ள நாமங்களைப் பிரிப்பதில் சலாக்ஷர ஸூத்ரத்திற்கும் பரிபாஷா ச்லோகத்திற்கும் வித்யாஸமிருப்பது கவனிக்கத்தக்கது. அதைப்பற்றி அந்த நாமங்களடங்கிய இடத்தில் பார்க்கவும்.

இவ்விதம் பரிபாஷா ச்லோகங்களை அனுஸரித்து நாமங்களைப் பிரித்து அவைகளுக்கு அர்த்தம் சொல்லத் தொடங்குமுன் நாமங்களைப்பற்றிப் பொதுவாக சில விஷயங்களை பாஸ்கரராயர் சொல்லுகிறார்.

1. ஸஹஸ்ரநாமத்தில் வரும் நாமங்கள் ஸ்த்ரீலிங்கம், புல்லிங்கம், நபும்ஸகலிங்கம் என்ற மூன்றுவகையான லிங்கங்களிலுமிருக்கின்றன. இந்த மூன்று லிங்கங்களிலும் அவை முறையே சித், ஆத்மா, ப்ரம்ஹம் என்ற விசேஷ்யங்களுக்கு விசேஷணங்களாக இருக்கின்றன. ஆயினும். இவ்விதமான லிங்கபேதமானது நாமங்களின் வார்த்தைகளை அனுஸரித்ததே தவிர, வாஸ்தவத்தில் ப்ரம்ஹமானது ஒருவிதமான லிங்கத்தோடு கூடியதுமல்ல.

'ந ஸ்த்ரீ ந ஷண்டோ ந புமான் அஜேது: |' (விஷ்ணுபாகவதம்)

'ந த்வமம்ப புருஷோ ந சாங்கனா
சித் ஸ்வரூபிணி ந ஷண்டதாபி தே |
நாபி பர்த்துரபி தே த்ரிலிங்கதா
த்வாம் வினா ந ததபி ஸ்ப்புரேதயம் ||'

2. இந்தக் காரணத்தினாலேயே தேவியை த்யானம் பண்ணும்போது நமக்கு இஷ்டப்பட்ட ரூபத்தோடிருப்பதாக த்யானம் செய்யலாமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'பும் ரூபம் வா ஸ்மரேத் தேவி ஸ்த்ரீரூபம் வா விசிந்தயேத் |
அதவா நிஷ்களம் த்யாயேத் ஸச்சிதானந்த லக்ஷணம் ||'

3. இப்படியிருக்கும் ப்ரம்ஹமானது விசேஷ்யமாக இருப்பதைக் காட்டுவதற்காக லிங்கத்ரய ஸாதாரணமான ப்ரணவமானது நாமங்களுக்கு ஆதியில் சொல்லப்படுகிறது. ஏனென்றால்,

'ஓம் தத் ஸத் இதி நிர்தேசோ ப்ரம்ஹணஸ் த்ரிவித: ஸ்ம்ருத: |'

என்றபடி ப்ரணவம் முழுவதுமே ப்ரம்ஹத்தைக் குறிக்குமென்று சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் ப்ரணவத்தினுடைய அம்சங்களான அகார, உகார, மகார, நாத, பிந்து என்பவை முறையே ப்ரம்ஹ, விஷ்ணு, ருத்ர, ஈச்வர, ஸதாசிவர்களைக் குறிப்பதால் ப்ரணவமானது அவர்கள் ஐவருடைய ரூபமாக இருக்கிறதென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'அகாரம் ப்ரம்ஹணோ ரூபம் உகாரம் விஷ்ணு ரூபவத் |
மகாரம் ருத்ர ரூபம் ஸ்யாத் அர்தமாத்ரம் பராத்மகம்: ||
வாச்யம் தத் பரமம் ப்ரம்ஹ வாசக: ப்ரணவ: ஸ்ம்ருத: |
வாச்ய வாசக ஸம்பந்த: தயோ: ஸ்யாத் ஔபசாரிக: ||'

(ப்ருஹன்னாரதீயம்)

வாச்ய, வாசக ஸம்பந்தமென்பது, சொல்லப்படும் வஸ்து, அதைச்சொல்லும் பதம் இவைகளுக்குள்ள ஸம்பந்தம். ஸாமான்யமாகச் சொல்லும்போது ஸம்பந்தமென்பது பேதமான இரண்டு வஸ்துக்களுக்குள் இருக்குமாகையால் மேலே சொல்லிய வாச்ய வாசக ஸம்பந்தமானது பேதபாவ கடிதமானது (பேதபாவத்தோடு பொருந்தியது). ஆயினும் மேலே வந்த ரூபம் என்ற பதமானது, வாச்ய வாசகங்களின், அபேதத்தைச் சொல்லுவதால் (அதாவது அகாரம் என்பது ப்ரம்ஹத்தோடு அபேதம், உகாரம் விஷ்ணுவோடு அபேதம் என்று இம்மாதிரி சொல்லுவதால்) ப்ரணவத்தின் அம்சங்களாகச் சொல்லப்படும் வாசகங்களுக்கும் ப்ரம்ஹா முதலான வாச்யங்களுக்கும் வாச்ய வாசக ஸம்பந்தமிருக்கிறது என்று சொல்லவதான ஔபசாரிகமானது (உபசாரமாகச் சொல்வது). அதாவது அமுக்யமானது (முக்யமானதல்ல), வ்யாவஹாரிகம் (பேச்சுக்காகச் சொல்வது) என்று சொல்லப்பட்டது. இதையேதான் புஷ்பதந்தருடைய சிவமஹிம்நஸ்தவத்தில்,

'ஸமஸ்த வ்யஸ்தம் த்வாம் சரணத! க்ருணுத்யோமிதிபதம் | '
என்று சொல்லப்பட்டது.

4. இவ்விதம் ப்ரணவமானது ப்ரம்ஹ (ரூப)மாயிருப்ப தால் அதுவும் ப்ரம்ஹத்தைப்போல் ஸர்வ வ்யாபியாக இருந்து ஸகல வஸ்துக்களையும் ஸகல வாசக பதங்களையும் குறிப்பதாயிருக் கிறது. ப்ரணவத்தினுடைய அர்த்தங்களைப்பற்றியும் ப்ரயோக பாஹுள்யத்தைப்பற்றியும் சொல்லும் வாக்யங்கள் ஏராளமாக இருக்கின்றன.

'ஞாதார்த்தம் ஞாதமித்யேவம் வக்தவ்யே ஸதி த்த்விஜ |
ஞமிதி ப்ராஹலோகோऽயம் தேன ஞாதஸ்ய வாசக: ||
அக்ஞாதார்த்தே ததாக்ஞாதம் இதி ப்ராப்தே து வாசகே |
ஞமிதி ப்ராஹ லோகோऽயம் தேன அக்ஞாதஸ்ய வாசக: ||
ஸம்திக்தார்த்தம் து ஸம்திக்தம் இதிப்ராப்தே து வாசகே |
ஞமிதி ப்ராஹ லோகோऽயம் தேன ஸம்திக்த வாசக: ||
ஆகாசாதி பதார்த்தானும் யே சப்தா வாசகா புவி |
விஞதானகிலான் சப்தான் லோக ஞமிதி பாஷதே ||
அத: ப்ரயோக பாஹுள்யாத் கடகுட்யாதி சப்தவத் |
ஆகாசாதி பதார்த்தானும் வாசக: ப்ரணவ: ஸ்ம்ருத: ||
ஸர்வாவபாஸகம் மந்த்ரம் இமம் ஜபதி யோத்விஜ: |
ஸர்வமந்த்ர ஜபஸ்யோக்த பலம் ஸ லபதேऽசிராத் || '

(ஸூதஸம்ஹிதை-யக்ஞவைபவகண்டம்.)

'ப்ரணவோ ஹி பரம் தத்வம் த்ரிவேதம் த்ரிகுணுத்மகம் |
த்ரிதேவதம் த்ரிதாமம் ச த்ரிப்ரக்ஞம் த்ரிரவஸ்த்திதம் ||
த்ரிமாத்ரம் ச த்ரிகாலம் ச த்ரிலிங்கம் கவயோ விது: |
ஸர்வமேதத் த்ரிரூபேண வ்யாப்தம் ஹி ப்ரணவேன து ||
அக்னி: ஸோமச்ச ஸூர்யச்ச த்ரிதாமேதி ப்ரகீர்த்திதம் |
அந்த: ப்ரக்ஞம் பஹி: ப்ரக்ஞம் கனப்ரக்ஞமுதாஹ்ருதம் ||
ஹ்ருத் கண்டே தாலுகே சேதி த்ரிஸ்த்தானமிதி கீர்த்யதே |
அகாரோகாரமகாரை. த்ரிமாத்ர உச்யதே ஸ து ||
கர்மாரம்பேஷு ஸர்வேஷு த்ரிமாத்ரம் தம் ப்ரகீர்தயேத் |
ஸ்த்தித்வா ஸர்வேஷு சப்தேஷு ஸர்வம் வ்யாப்தம் அனேன ஹி |
ந தேன ஹி விஞ கிஞ்சித் வக்தும் யாதி கிரா யத: || '

(ப்ருஹத் பாராசர ஸ்ம்ருதி)

கோபத ப்ராம்ஹணத்தில்,

'ஓம்காரம் ப்ருச்சாம: | கோ தாது:? கிம் ப்ராதிபதிகம்? கிம் நாமாக்யாதம்? கிம் லிங்கம்? கா விபக்தி:? க: ஸ்வர:? |'

என்பது முதலான வாக்யங்களால் ப்ரணவத்தின் ஸ்வரூபமானது பல பிரிவுகளால் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. ப்ரபஞ்ச ஸாரத்தின் ப்ரணவ படலத்திலும் அதற்கு பத்மபாதாசார்யாளால் எழுதப்பட்ட வ்யாக்யானத்திலும் ப்ரணவார்த்த தீபிகை முதலான இதர க்ரந்தங்களிலும் ப்ரணவத்தைப்பற்றி மிகவும் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

[நாம விபாகத்தைப்பற்றிச் சொல்லும் பரிபாஷா ச்லோகங்கள் மேலே சொல்லப்பட்டவைகளில் கடைசி ச்லோகத்தில் கவனிக்கவேண்டிய விஷயங்கள் சில இருப்பதால் அதைத் திரும்பவும் இங்கு எழுதப்படுகிறது.]

XXXII. गुणगणरविं खगेशं चतुर्हरन्तं चतुर्द्रुढामोदम् ।
गुणिहृदि विभजभवाद्गुरुवर्गं च नवचरणं गदन्तमिति ॥

குண கண ரவிம் ககேசம்
சதுர்ஹரந்தம் சதுர்த்ருடா மோதம் |
குணி ஹ்ருதி விபஜ பவாத்குருவர்கம்
ச நவசரணம் கதந்தமிதி ||

1. இந்த ச்லோகத்தின் கடைசி பதமாகிய 'इति' என்பது நாமங்களின் கணக்கு ஆயிரம் முடிந்ததைக் காட்டுவதாகிறது. பாக்கிப் பதங்கள் 951 முதல் கடைசிவரையிலுள்ள நாமங்களுடைய அக்ஷரங்களின் கணக்கைக் குறிப்பவை.

| | | | | |
|---|---|---|---|---|
| 2 | गु | 3 | அக்ஷரங்களையுடைய | शाश्वती |
| | ण | 5 | .... | शाश्वतैश्वर्या |
| | ग | 3 | .... | शर्मदा |
| | ण | 5 | .... | शंभुमोहिनी |
| | र | 2 | .... | धरा |
| | विं | 4 | .... | धरसुता |
| | ख | 2 | .... | धन्या |
| | गे | 3 | .... | धर्मिणी |

| | | | |
|---|---|---|---|
| शं | 5 | அக்ஷரங்களையுடைய | धर्मवर्धिनी |
| चतुर् | 4 | .... | 4 நாமங்கள் लोकातीता முதல் शमात्मिका முடிய |
| ह | 8 | .... | बन्धूककुसुमप्रख्या |
| र | 2 | .... | बाला |
| न्तं | 6 | .... | लीलाविनोदिनी |
| चतुर् | 4 | .... | 4 நாமங்கள் सुमङ्गली முதல் सुवासिनी முடிய |
| ह | 8 | .... | सुवासिन्यर्चनप्रीता |
| ढा | 4 | .... | आशोभना |
| मो | 5 | .... | शुद्धमानसा |
| दं | 8 | .... | बिन्दुतर्पणसंतुष्टा |
| गु | 3 | .... | पूर्वजा |
| णि | 5 | .... | त्रिपुरांबिका |
| ह्व | 8 | .... | दशमुद्रासमाराध्या |
| दि | 8 | .... | त्रिपुराश्रीवशंकरी |
| वि | 4 | .... | ज्ञानमुद्रा |
| भ | 4 | .... | ज्ञानगम्या |
| ज | 8 | .... | ज्ञानज्ञेयस्वरूपिणी |
| भ | 4 | .... | योनिमुद्रा |
| वा | 4 | .... | त्रिखण्डेशी |
| द्रु | 3 | .... | त्रिगुणा |
| रु | 2 | .... | अम्बा |
| व | 4 | .... | त्रिकोणगा |
| र्गं | 3 | .... | अनघा |
| च | 6 | .... | अद्भुतचारित्रा |

नव चरणं ஒன்பது பாதங்கள் वाञ्छितार्थप्रदायिनी முதல்
श्रीमत्त्रिपुरसुन्दरी முடிய

| | | | |
|---|---|---|---|
| ग | 3 | அக்ஷரங்களையுடைய | श्रीशिवा |
| द | 8 | .... | शिवशक्त्यैक्यरूपिणी |
| न्तम् | 5 | .... | ललिताम्बिका |

2. त என்பது 6 என்ற எண்ணிக்கையைக் குறிப்பது. லலிதாம்பிகா என்ற நாமமானது 5 அக்ஷரங்களோடிருந்தாலும் ப்ரணவத்தைச் சேர்ப்பதினால் 6 ஆவதால் त என்பதினால் குறிக்கப்பட்டது. இதின் காரணத்தைப்பற்றி பாஷ்யத்தின் மூலத்தைப் பார்க்கவும்.

3. மேலே சொல்லப்பட்ட ச்லோகத்திற்குப் பின் வருமாறு அர்த்தம் பண்ணலாம்.

| | |
|---|---|
| குணகண ரவிம் | குணகணங்களால் ஸூர்யனைப் போன்றதும் |
| க கேசம் | தேவர்களுக்கும் ஈசனாயிருப்பதும் |
| சதுர் ஹரந்தம் | (ஜராயுஜம் முதலான நாலுவிதமான யோனிகளால் ஏற்படும்) நாலுவிதமான க்லேசங்களை போக்குவதும் |
| சதுர் த்ருடா மோதம் | நான்குவிதங்களான (த்ருட ஆமோதங்களை—த்யான ஸாதகங்களை, அதாவது) புருஷார்த்தங்களைக் கொடுப்பதும் |
| குணி ஹ்ருதி | குணத்தால் விளங்கும் ஹ்ருதயத்தில் (மனதில்) |
| இதி | இந்த ப்ரகாரமாக (அதாவது ஸஹஸ்ர நாமாதி ரூபத்தால்) |
| கதந்தம் | தெளிவாகச் சொல்லுவதும் (உபதேசம் செய்வதும்) |
| பவாத் | பரமசிவன் முதலாக ஆரம்பிக்கும் |
| குருவர்கம் | (தன் குரு உள்பட இருக்கும்) நாத ஸமூஹத்தை |
| விபஜ | விசேஷமாக பஜி. |

4. இந்த ச்லோகத்தில் ஸ்ரீந்ருஸிம்ஹானந்த நாதர்,

'ஸதாசிவ ஸமாரம்பாம் சங்கராசார்ய மத்யமாம் |
அஸ்மத் ஆசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம் ||'

என்பதுபோன்ற ஆசார்ய பரம்பரையை பஜியென்று நிர்தேசம்

பண்ணுவதின் மூலமாகத்தான் தன்னுடைய குருபரம்பரையி லிருப்பவர்களை நமஸ்கரிக்கிறார்.

5. இத்துடன் நாமங்களைப்பற்றிய ச்லோகங்கள் முடிந் தாலும் அவற்றைப் பற்றிய சில விசேஷங்களைப் பின்வரும் ச்லோகங்களில் சொல்லுகிறார்.

6. நாமங்களின் கடைசியிலும் ப்ரணவத்தை உச்சரிக்க வேண்டுமென்பதை ஏற்கனவே சொல்லப்பட்டது. ப்ராம்ஹ ணதி ஜாதி பேதங்களை யொட்டிச் சொல்லப்பட்டிருக்கும். ஸ்வர வ்யவஸ்த்தையையும் மறந்துவிடக்கூடாது.

7. இப்படி ஆதியிலும் அந்தத்திலும் சேர்க்கப்படும் ப்ர ணவங்களானது நாமங்களின் அர்த்தத்தோடு சேர்ந்ததான அர்த்தத்தோடு இல்லாமலிருந்தபோதிலும் அவற்றைச் சேர்ப் பது தோஷமல்ல. அவை மங்களகரமானவை என்று சொல் லப்பட்டிருப்பதால் அதற்காகவேதான் சேர்க்கப்படுகின்றன.

'ஓம்காரச்சாதசப்தச்ச த்வாவேததௌ ப்ரம்ஹண: புரா |
கண்டம் பித்வா வினிர்யாதௌ தேன மாங்களிகாவுபௌ ||'

(ஓம் காரமும் அத என்ற சப்தமும் இவையிரண்டும் ஆதி யில் ப்ரம்ஹாவின் கண்டத்தைப் பிளந்துகொண்டு வெளிவந் தவையாகையால் மங்களகரமானவை.)

மேலும்,

'ஸ்ரவத்யனோம்க்ருதம் பூர்வம் பரஸ்தாச் ச விசீர்யதே |'

என்று சொல்லப்பட்டபடி எந்த மந்த்ரத்திற்கும் ப்ரணவத்தை முன்னும் பின்னும் சேர்க்கப்படாமலிருந்தால் ப்ரத்யவாயம் (குறைவு, பாபம்) ஏற்படுவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. சேர்த்தாலோ அத்ருஷ்டமான பலத்தைக் கொடுக்கக் கூடியது.

8. ஸாமான்யமான எந்த மந்த்ரத்தையும் அர்த்தத்துடன் உச்சரித்தால் விசேஷமான பலன் ஏற்படுகிறபடியாலும் இந்த நாமஸாஹஸ்ரத்தின் நாமங்களெல்லாம் ஏற்கனவே சொல்லப் பட்டபடி மந்த்ரங்களென்பதாகையாலும் இவைகளையும் அர்த் தம் தெரிந்துசொன்னால் விசேஷ பலன் உண்டு.

9. இப்படி ப்ரணவத்தைச் சேர்த்து நாமோச்சாரணம் செய்தால் அத்ருஷ்டமான பலன் ஏற்படுகையில் அவற்றில் ப்ர ணவமானது விசேஷணமாகவும் நாமமானது விசேஷ்யமாகவும்

இருக்கிறது. பதங்கள் இரண்டு சேர்ந்து ஒரு மஹாவாக்யமாக ஆகி சாப்தபோதம் ஏற்படுவதானால் அவற்றிற்கு பரஸ்பரம் ஆகாங்க்ஷை, யோக்யதை, ஆஸத்தி, தாத்பர்யஜ்ஞானம் இவை நாலும் இருந்தால்தான் ஏற்படும். ப்ரக்ருதமாக ப்ரணவமும்நாமமும்விசேஷண, விசேஷ்யமாயிருப்பதாலும் அவற்றிற்குள் மேலே சொன்ன மஹாவாக்ய லக்ஷணங்களெல்லாம் இருப்பதாலும் 'அஸ்தி' முதலான க்ரியைகளைச் சேர்த்தால் மஹாவாக்யமாக ஆகி சாப்தபோதம் ஏற்படும். இவ்விதமான மஹாவாக்யங்களில் 'அஸ்தி' முதலான க்ரியைகள் சொல்லப்படாமலிருந்தாலும் அவை தானாகவே கிடைக்குமென்று,

,அஸ்தி பவந்தீ பர: ப்ரதம புருஷேऽப்ரயுஜ்யமானேऽப்யஸ்தீ'

என்பதாக காத்யாயனரால் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தக் காரணத்தால் 'ஓம் ஸ்ரீமாதா' என்றால் 'ஓம் ஸ்ரீமாதா அஸ்தி'— மங்களகரமான ஸ்ரீமாதா இருக்கிறாள்—என்று அர்த்தமாகிறது. இதே மாதிரி எல்லா நாமங்களுக்கும் ஊஹித்துக் கொள்ள வேண்டியது.

XXXIII. श्री मणि सद्धींविविधगुडदरां देशैश्च पुष्टनादाभ्याम् ।
नामसु शतकारम्भा न स्तोभो नापि शब्दपुनरुक्तिः ॥

ஸ்ரீ மணி ஸத்ரீம் விவிதகுட
தராம் தேசைச்ச புஷ்டநாதாப்யாம் |
நாமஸு சதகாரம்பா ந ஸ்தோபோ
நாபி சப்த புநருக்தி: ||

நாமங்களில் ஒவ்வொரு சதகத்தின் (நூறு நாமங்களின்) ஆரம்ப நாமங்கள் श्री, मणि, सत्, ह्रीं, विविध, गुड, दरां, देश, पुष्ट, नाद என்ற அக்ஷரங்களை முதலாக உடையவை. இந்த ஸஹஸ்ர நாமத்தில் ஸ்தோப (அர்த்தமில்லாத) சப்தங்களின் ப்ரயோகமாவது புனருக்தி என்பதாவது கிடையாது.

1. சதகாரம்ப நாமங்கள் பின்வருமாறு— ஸ்ரீ மாதா, மணிபூராந்தருதிதா, ஸத்கதிப்ரியா, ஹ்ரீம்காரீ, விவிதாகாரா, குடான்ன ப்ரீதமானஸா, தராந்தோளித தீர்காக்ஷீ, தேசகாலா பரிச்சின்னா, புஷ்டா, நாதரூபிணீ.

2. மேலே சொல்லிய அக்ஷரங்களை முதலாக உடைய இதரநாமங்கள் (ஸ்ரீ கண்டார்த்த சரீரிணீ, மணிபூராப்ஜ நிலயா முதலியவை) இருந்தாலும் அவை சதகாரம்பத்திற்கு ஸமீபத்தி லிருக்காததால் அவை சதகாரம்ப நாமங்களோ என்ற ஸந்தேகம் ஏற்படக் காரணமில்லை. இப்படி சதகாரம்பத்திற்கு எட்டியிருக் கும் நாமங்களைத்தவிர சதக ஸமீபத்திலிருக்கும் (அந்த அக்ஷரங் களோடு கூடிய) நாமங்களையும் விலக்கிக்காட்டியிருக்கிறது. உதாரணமாக ஹ்ரீமதீ என்பதை விலக்குவதற்காக ஹ்ரீம் என்றும், தரஹாஸோஜ்வலன் முகீஎன்பதை விலக்குவதற்காக தராம் என்றும் இம்மாதிரி சதகாரம்ப நாமங்களின் அக்ஷரங் களை குறிப்பதாகச் சொல்லப்பட்டது.

3. சிலர் சதகாரம்ப நாமங்களைப்பற்றி லலிதோபாக்யான த்தில் அடியில்கண்டபடி சொல்லியிருப்பதாகச் சொல்வார்கள்.

'ஸ்ரீ மாதா மணிபூராந்தருதிதா ஸத்கதிப்ரதா |
ஹ்ரீம்காரீ விவிதாகாரா குடான்னப்ரீதமானஸா ||
தராந்தோளிததீர்காக்ஷீ ஸாவித்ரீ ரஸசேவதி: |
விக்ஞான கலிகா சேதி பதான்யேதான்ய ஸம்சயம் |
சதகாத்யானி நாமானீத்யவதார்யாணி ஸூரிபி: ||'

[இதில் சொல்லப்பட்ட வகுப்பிலும் ஸ்ரீ ந்ருஸிம்ஹானந்த நாதரால் செல்லப்பட்ட வகுப்பிலும் கடைசி மூன்றைத்தவிர பாக்கி நாமங்களெல்லாம் ஒன்ருக இருப்பது கவனிக்கத்தக்கது.] ஆயினும் அவ்விதமான வகுப்பைச் சொல்லும்போது வேறு விதமான வகுப்புகள் தப்பு என்று லலிதோபாக்யானத்தில் சொல்லப்படாததால் இந்த பரிபாஷா ச்லோகத்தில் சொல்லியதே ஏற்றுக்கொள்ளவேண்டியதாயிருப்பதுடன் இதை அனுஸரித்தே மேலே சொல்லப்பட்ட ச்லோகங்களை அர்த்தம் சொல்வதுதான் ந்யாயம்.

4. அர்த்தமில்லாத சப்தத்திற்கு ஸ்தோபமென்று பெயர். அவ்விதமான சப்தங்களை இதர ஸஹஸ்ர நாமங்களில் (ச்லோகங் களுடைய) பாதத்தைப் பூர்த்திசெய்வதற்காக மட்டும் சேர்த் திருப்பது ஸாதாரணமாய் யாரும் பார்த்திருக்கக்கூடும். அவ் விதமான ஸ்தோப ப்ரயோகம் யாதொன்றுமே இந்த ஸஹஸ்ர நாமத்தில் கிடையாது.

5. புனருக்தியானது சப்தத்தைப்பற்றியவரையில் கிடையாது என்று சொல்லப்பட்டது. அர்த்தத்தைப்பற்றி புனருக்தி யிருந்தாலும் (ஒரே அர்த்தத்தோடு கூடியதாக ஒன்றுக்கு மேல்பட்ட நாமங்களிருந்தாலும்)— உதாரணமாக அம்பா மாதா ஜனனீ, தேவேசீ ஸுரநாயிகா—அது நாமங்களின் மொத்தமான எண்ணிக்கை ஆயிரம் என்பதற்கு விரோதமாகமாட்டாது.

6. சில நாமங்களைப்பற்றி சப்தத்தில் புனருக்தியென்று தோன்றக் கூடியதைப் பரிஹாரம் செய்வதற்கான நான்குவித உபாயங்களை அடுத்த ச்லோகங்களில் சொல்லுகிறார்.

XXXIV. मतिवरदाकान्तादावकारयोगेन, रक्तवर्णादौ ।
आकारस्य, क्वचन तु पदयोर्योगेन भेदयेन्नाम ॥

மதிவரதாகாந்தாதாவகார யோகேன
ரக்தவர்ணாதௌ ।
ஆகாரஸ்யக்வசன து
பதயோர்யோகேன பேதயேன்னாம ॥

மதி, வரதா, காந்தா முதலியவைகளுக்கு முந்தி அகாரத்தைச் சேர்த்தும், ரக்தவர்ண முதலியவைகளுக்கு முந்தி ஆகாரத்தைச் சேர்த்தும், சிற்சில இடங்களில் முன்பின்வரும் பதங்களைச் சேர்த்தும் நாமங்களைப் பிரிக்கவேண்டும்.

1. மதி: என்பது முதலில் 'துஷ்டி: புஷ்டிர் மதிர்த்ருதி:' என்பதில் வருவதால் பிந்தி 'ஸ்வாஹாஸ்வதா மதிர் மேதா' என்ற இடத்தில் அது வரும்போது அதை அமதி: என்று பிரிக்கவேண்டும்.

2. 'வரதா வாமநயனா', 'விச்வகர்பா ஸ்வர்ணகர்பா வரதா வாகதீச்வரீ' என்ற இரண்டு இடங்களில் இரண்டாவது இடத்தில் வருவதை அவரதா என்று பிரிக்கவேண்டும்.

3. 'கலாவதீ கலாலாபா காந்தா காதம்பரீ ப்ரியா'
'கல்பனா ரஹிதா காஷ்டா காந்தார்த்த விக்ரஹா'
என்ற இரண்டு இடங்களில் இரண்டாவது இடத்தில் வருவதை அகாந்தா என்று பிரிக்கவேண்டும்.

4. இதேமாதிரி 'நித்யத்ருப்தா பக்தநிதி:' 'மூர்த்தாமூர்த்தா நித்யத்ருப்தா' என்பதாகவரும் வேறு இடங்களிலும் பிரிக்க

வேண்டுமென்பதை மூலத்தில் 'மதிவரதா காந்தாதெள' என்று குறிக்கப்பட்டது.

5. 'ரக்த வர்ணு' என்பது 'ரக்த வர்ணு மாம்ஸநிஷ்ட்டா' என்றும், 'விசுத்த சக்ர நிலயா ரக்தவர்ணுத்ரிலோசனு' என்றும் வருவதில் இரண்டாவதை அரக்தவர்ணு என்று பிரிக்காமல் அர்த்தத்திற்கு அனுகுணமாக ஆரக்தவர்ணு என்று பிரிக்க வேண்டும்.

6. இங்கும் மூலத்தில் வரும் 'ரக்தவர்ணுதெள' என்பதினுல்,

'ஸுமுகீ நளினீ ஸுப்ரூ: சோபனு ஸுரநாயிகா'

'ஸுவாஸின்யர்ச்சனப்ரீதா சோபனு சுத்தமானஸா'

என்பது முதலான வேறு இடங்களிலும் இம்மாதிரி ஆகாரத்தைச் சேர்த்துப் பிரிக்கவேண்டுமென்பது குறிப்பிடப்பட்டது.

7. இப்படிப் பிரித்துச் சொல்வதினுல் நீங்கக்கூடாத புனருக்தி இருக்குமிடங்களுக்கு மூன்ருவது உபாயம் சொல்லப்பட்டது. உதாரணமாக—மேலே சொல்லிய 'சோபனு' என்ற பதமானது.

'ஸுகாராத்யா சுபகரீ சோபனு ஸுலபா கதி:'

என்று மூன்ருவது இடத்தில் வரும்போது அதையும் அதற்கடுத்த இரண்டு பதங்களையும் சேர்த்து 'சோபனுஸுலபாகதி:' என்று ஒரே நாமமாகச் சொல்லப்பட்டது. இதே விதமாக 'கௌலினீ கேவலா' 'அஜாஜேத்ரீ' என்பவை முதலான இடங்களிலும் பதங்களைச் சேர்த்து நாமங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

8. இம்மாதிரியான (புனருக்தியின்) பரிஹாரங்களை விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தைப்பற்றியும் உபயோகப்படுத்தியிருக்கிறது. அங்கு 'ஸதஸத்க்ஷரமக்ஷரம்' என்று வருவதுபோல் இங்கும் 'மூர்த்தா மூர்த்தா' என்பது முதலாக நாமங்கள் சேர்ந்து வருகின்றன. புனருக்தியைப் பற்றிய ஸந்தேஹமானது இவை மாதிரி அடுத்தடுத்துவரும் நாமங்களில்தான் ஏற்படுமென்பதும் கிடையாது. ஒன்றுக்கொன்று எட்டிவரும் நாமங்களைப்பற்றியும் இவ்விதமான ஸந்தேஹம் ஏற்படக்கூடியதாக இருக்கும்.

9. பதங்கள் தனித்தனியாக இருக்கையில் அர்த்தத்துடனிருந்தாலும் அவற்றைச் சேர்த்து ஒரே நாமமாகச் செய்வது

'விச்வேதேவா:', 'அஹிர்புத்ன்ய:', 'நிதிரவ்யய:' இப்மாதிரி யான பதங்களிலும் பார்க்கலாம்.

XXXV. साध्वी तत्त्वमयीति द्वेधा त्रेधा बुधो भिद्यात् ।
हंसवती चानर्घ्ये त्यार्धान्तादेकनामैव ॥

சாத்வீ தத்வமயீதி த்வேதா
த்ரேதா புதோ பித்யாத் |
ஹம்ஸ்வதீ சானர்க்யே
த்யார்தான்தா தேகநாமைவ ||

ஸாத்வீ என்ற நாமத்தை இரண்டாயும், தத்வமயீ என்ற நாமத்தை மூன்றாயும் தெரிந்தவன் பிரித்துக்கொள்ளவேண்டும். ஹம்ஸவதீ, அனர்க்ய என்ற பதங்களிலிருந்து (அவை வரும்) அந்த அடிகள் பூராவும் ஓரோர் நாமம்தான்.

1. 'சாங்கரீ ஸ்ரீகரீ ஸாத்வீ' என்று ஏற்கனவே வந்திருப்பதால் திரும்பவும் 'ஸம்ப்ரதாயேச்வரீ ஸாத்வீ' என்று வரும் போது அதை ஸாது, ஈ என்று இரண்டு பதங்களாக (நாமங்களாக)ப் பிரிக்கவேண்டும்.

2. 'தத்வாதிகா தத்வமயீ' என்று ஏற்கனவே வந்திருப்பதால் திரும்பவும் 'தத்வாஸனு தத்வமயீ' என் வரும்போது அதை தத், த்வம், அயீ என்று மூன்று பதங்களாக (நாமங்களாக)ப் பிரிக்கவேண்டும்.

3. ஹம்ஸவதீ என்ற பதத்துடன் ஆரம்பித்து அந்த அடி (அர்த்தம்) முடியும்வரையில் ஒரே நாமம் என்று சொல்லப்பட்டது. அதாவது 'மஜ்ஜா ஸம்ஸ்த்தா ஹம்ஸவதீ முக்ய சக்தி ஸமன்விதா' என்பதில் மஜ்ஜாஸம்ஸ்த்தா என்பது ஒரு நாமம். அப்புறம் ஹம்ஸவதீ முதல் ஸமன்விதா முடிய ஒரே நாமம் என்று சொல்லப்பட்டது. இதில் புனருக்தி என்பது இல்லாவிட்டாலும் பதங்களைப் பிரிப்பதில் ப்ரமம் ஏற்படுமாகையால் அதற்காகக் குறிப்பிட்டுச் சொல்லப்பட்டது. (ஹம்ஸவதீ என்பது தனியான நாமமென்று சொல்லப்படப் போகிறதே என்பதற்காகச் சொல்லப்பட்டது)

4. இதேமாதிரி,

'கௌலினீ கேவலா னர்க்யா கைவல்ய பததாயினீ'

என்றிருப்பதில் கௌலினீ கேவலா என்பது ஒருநாமம். அனர்க்ய கைவல்ய பததாயினீ என்பது ஒரே நாமம். இதுவும் 'அனர்க்யா' என்பதை ஒரு நாமமாக பிரிவுபடக் கூடாது என்பதற்காகச் சொல்லப்பப்பட்டது. மேலும்,

'க்லீம்காரீ கேவலா குஹ்யா கைவல்யபததாயினீ'

என்று முந்தியே வந்திருப்பதால் இது புனருக்தி பரிஹாரமாகவும் ஆகிறது.

5. சலாக்ஷர ஸூத்ரங்கள் ந்யாயமூலமாக இருந்தபோதிலும் (ஒரு ந்யாயத்தை மூலமாகக் கொண்டிருந்தாலும்) அதைவிட ப்ரபலமான ந்யாயத்தினுல் அவற்றைக் கொஞ்சம் அநுஸரிக்காமலிருந்தாலும் தோஷமில்லையென்பது பரிபாஷா ச்லோகங்களிலிருந்து ஏற்படுகிறது. இதேமாதிரி ஸாமவேதத்திய நிதான ஸூத்ரங்களில் சந்தோவிசிதி ஸூத்ர பாஷ்யத்திலும் சலாக்ஷர பாடமானது ப்ரபலமான ந்யாயத்திற்கு விரோதமாயிருப்பதால் ஆதரிக்கவேண்டியதில்லையென்று சொல்லப்பட்டது.

6. ஆயினும் ப்ரபலமான ந்யாயத்திற்கு விரோதமாக இல்லாதிருக்கிறவரையில் சலாக்ஷர ஸூத்ரங்கள் முழுமையும் ப்ரமாணமாகையால் அவைகளை அநுஸரித்தே பரிபாஷா ச்லோகங்கள் ஏற்பட்டிருக்கின்றன. உதாரணமாக—காந்தா என்று வரும் இடங்கள் இரண்டில் புனருக்தி பரிஹாரமாக ஒரு இடத்தில் அகாரத்தை முந்திச் சேர்ப்பது என்று சொல்லப்பட்டது. அவ்விதம் சேர்த்துச் சொல்வது இரண்டு இடத்திலும் முடியுமென்றாலும் சேர்ப்பது இன்ன இடம் என்பது குறிக்கப்படாவிட்டாலும் சலாக்ஷர ஸூத்ரங்களில் 'கல்பனா ரஹிதா காஷ்டா காந்தா காந்தார்த்த விக்ரஹா' என்ற இடத்தில் சேர்ப்பது என்று சொல்லப்பட்டிருப்பதால் அதுவே அங்கீகரிக்கப்பட்டது. இதேமாதிரி 'கைவல்ய பததாயினீ' என்று வரும் இரண்டு இடங்களில் அதற்கு முந்திவரும் பதத்தைச் சேர்த்து ஒரே நாமமாகப் பண்ணுவது அந்த இரண்டு இடங்களிலும் முடியுமென்றாலும் 'கௌலினீ கேவலா' என்று வரும் இடத்தில் தான் சேர்ப்பது என்பதும் சலாக்ஷர ஸூத்ரங்களை அநுஸரித்து நிச்சயிக்கப்பட்டது.

XXXVI. शक्तिर्निष्ठा धाम ज्योतिः परपूर्वकं द्विपदम् ।
शोभनसुलभासुगतिस्त्रिपदैकपदानि शेषाणि ॥

சக்திர் நிஷ்டா தாமஜ்யோதி:
பரபூர்வகம் த்விபதம் |
சோபன ஸுலபா ஸுகதி
ஸ்த்ரி பதைகபதா நி சேஷாணி ||

சக்தி:, நிஷ்டா, தாம, ஜ்யோதி: என்ற நாலும் பர என்ற பதத்தை முன்னதாக உடையவையாய் ஒவ்வொன்றும் இரண்டு பதங்களுடைய நாமமாயிருக்கின்றன. சோபன ஸுலபா கதி: என்ற நாமமானது மூன்று பதங்களுடையது. பாக்கி நாமங்க ளெல்லாம் ஒரே பதமாக இருப்பவை.

1. பராசக்தி:, பராநிஷ்டா, பரம்தாம, பரம் ஜ்யோதி: என்ற நாலு நாமங்களும் இரண்டு பதங்களுடையவை. அவற்றில் பர என்ற பதம் விசேஷணமாகவும் ஜ்யோதி: முதலான பதங்கள் விசேஷ்யமாகவுமிருக்கின்றன, ‘கௌலினீ கேவலா’, ‘அஜா ஜேத்ரீ’ முதலான நாமங்கள் கௌலினி, கேவலா, அஜா, ஜேத்ரீ, என்ற ஸமானமான விபக்தியுள்ள பதங்களாக இருந்தாலும் ஸமாஸத்தினால் ஒரே பதமாகப் போய்விடுவதால் அவற்றை இரண்டு பதங்களுடைய நாமங்களாகச் சொல்வதற்கு ந்யாய மில்லை.

2. சோபன ஸுலபா கதி: என்பது மூன்று பதங்களை யுடைய ஒரே நாமம்.

3. பாக்கி நாமங்களெல்லாம் ஒரே பதமாக இருப்பவை யென்று சொல்லப்பட்டது. எந்த நாமமாவது ஒன்றுக்கு மேல்ப பட்ட பதங்களையுடையதாயிருந்தால் அப்போது அந்தந்த பத மானது நாமமாயிருக்கக்கூடுமா என்ற ஸந்தேஹம் ஏற்படக் கூடிய நாமங்களைப்பற்றித்தான் இரண்டு பதங்களுடையதா அல் லது மூன்று பதங்களுடையதா என்ற கேள்வி ஏற்படும். ஆகவே ‘அச்வாரூடாதிஷ்டிதாச்வகோடி கோடிபி: ஆவ்ருதா’ ‘மனோவா சாம் அகோசரா’ என்பவை முதலான நாமங்கள் இரண்டு பதங்களோடு கூடியிருந்தாலும் அவற்றிலுள்ள முதல்பதமானது வேறு விபக்தியோடிருப்பதால் நாமமாக இருக்கமுடியாது.

ஆனதினுல் அவையெல்லாம் ஒரே பதத்தையுடைய நாமங்களுக் குள்ளாகவே கணக்கிடப்பட்டுச் சொல்லப்பட்டது.

இனி லிங்க பேதங்களின்படி நாமங்களை வகுத்துச் சொல்லு கிருர்.

XXXVII. निधिरात्मा दम्भोलिः शेवधिरिति नाम पुंलिङ्गम् ।
तद्ब्रह्म धाम साधुज्योतिः क्लीबेऽव्ययं स्वधास्वाहा ॥

நிதிராத்மா தம்போளி: சேவதிரிதி
நாம புல்லிங்கம் |
தத்ப்ரம்ஹ தாம சாதுஜ்யோதி:
க்லீபே அவ்யயம் ஸ்வதாஸ்வாஹா ||

(1) குணநிதி:, ஆத்மா, ரோகபர்வததம்போளி :, மஹா லாவண்ய சேவதி: என்ற நாலு நாமங்களும் பும்லிங்கம் (2) தத், ப்ரம்ஹ, பரம்தாம, ஸாது, பரம்ஜ்யோதி: என்ற ஐந்து நாமங் களும் நபும்ஸகலிங்கம் (3) ஸ்வதா, ஸ்வாஹா என்ற இரண்டு நாமங்களும் அவ்யயங்கள். [(4) பாக்கி நாமங்களேல்லாம் ஸ்த்ரீ லிங்கம்.]

1. இந்த குணநிதி: முதலான நாலு நாமங்களும் பார் வைக்கு ஸ்த்ரீலிங்கமாகத் தோன்றினுலும் மேலே சொல்லியபடி பும்லிங்கமாகையால் குணநிதயே நம: முதலான ப்ரயோகம் உண்டே தவிர குணநித்யை நம. முதலான ப்ரயோகம் கிடை யாது. அவ்விதம் லிங்கத்தை ஸரியாகத் தெரிந்து சொல்வதி னுல் பலனில் பேதமுண்டு. இதேமாதிரி மந்த்ரங்களைச் சொல்லு வதில் அவற்றின் அர்த்தத்தை அனுஸந்தானம் பண்ணிச் சொன் னுல் பலனில் பேதமுண்டென்று சொல்லப்பட்டிருக்கிறது.

2. த்வம் என்ற பதமும் (நாமமும்) ஸ்த்ரீலிங்கமே.

3. ஸ்வதா, ஸ்வாஹா என்ற பதங்கள் அவ்யயமென்று சொன்னதினுல் ப்ரயோகத்தில் ஸ்வதா நம:, ஸ்வாஹா நம: என்று சொல்லவேண்டும். [இந்த இரண்டு நாமங்களுக்கும் வேறு அர்த்தங்களைச் சொல்லி ஸ்வதாயை நம:, ஸ்வாஹாயை நம: என்று ப்ரயோகம் செய்வதும் ஸரியானதுதான் என்றும் ஏற்கனவேயே சொல்லப்பட்டது.]

**XXXVIII.** आविंशतितः सार्धान्नानाफलसाधन त्वोक्तिः ।
तस्य क्रमशो विवृतिः षट् चत्वारिंशता श्लोकैः ॥

ஆவிம்ஶதித: ஸார்த்தாந்நா நாபல
ஸாதந த்வோக்தி: |
தஸ்யக்ரமஶோ விவ்ருதி:
ஷட் சத்வாரிம்ஶதா ஶ்லோகை: ||

இனி (நாமங்கள் முடிந்து) இருக்கும் பலச்ருதிபாகத்தில் முதல் 20½ ச்லோகங்களில் இந்த நாம ஸஹஸ்ர கீர்த்தனத்தினால் பஹுவிதமான பலன்கள் கிடைக்கக் கூடியதைச் சொல்லப்படுகிறது. அவ்விதம் வெவ்வேறான பலன்களை யுத்தேசித்து நாம கீர்த்தனமானது எப்படி யெப்படிச் செய்யவேண்டுமென்பதைப் பற்றி க்ரமமாக பாக்கி 46 ச்லோகங்களில் சொல்லப்படுகிறது.

1. பல ச்ருதி பாகமானது 86½ ச்லோகங்களுடையது. அவற்றில் முதல் 20½ ச்லோகங்களில் இந்த நாமஸஹஸ்ர கீர்த்தனத்தினால் ஏற்படக்கூடிய 'ஸர்வரோக ப்ரசமனம்' முதலான விவிதமான பலன்களைப்பற்றிச் சொல்லிவிட்டு அப்படிச் சொல்லப்பட்ட பலன்களின் க்ரமத்தை அனுஸரித்து அடுத்த 46 ச்லோகங்களில் அந்தந்த பலனை உத்தேசித்து நாமஸஹஸ்ர கீர்த்தனம் எப்படிச் செய்யவேண்டுமென்பதைப் பற்றிச் சொல்லப்படுகிறது.

2. ஸ்வர்கமடைய விரும்புகிறவன் தர்ச, பூர்ணமாஸ யாகங்கள் செய்யவேண்டுமென்று ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. அவற்றைச் செய்தால் ஸ்வர்கம் உடனே கிடைக்காமலிருந்தாலும் அவற்றைச் செய்தவுடன் அபூர்வம் என்ற பலன் ஏற்படுவதாகவும், யாகம் செய்தவன் இறந்தவுடன் அந்த அபூர்வ பலத்தின் மூலமாக ஸ்வர்கம் கிடைப்பதாகவும் மீமாம்ஸா சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அப்போது அந்த அபூர்வமானது ஸ்வர்க பலத்திற்கு த்வாரமாக ஆகிறது.

3. அதேமாதிரி, இந்த ஸஹஸ்ர நாமத்தைக் கீர்த்தனம் செய்தால்,

'ஸ்ரீமாது: ப்ரீதயே தஸ்மாத் அனிசம் கீர்த்தயேத் இதம் |'

என்று சொல்லப்பட்டபடி அம்பாளுடைய ப்ரீதியானது உடனே

ஏற்படுவதாகச் சொல்லப்பட்டது. அம்பாளுடைய ப்ரீதியால் அனேகவிதமான பலன்கள் உண்டாவதாகச் சொல்லப்படுவதால் அந்த ப்ரீதியானது (மேலே சொல்லிய அபூர்வம் மாதிரி) அவ் வித பலன்கள் உண்டாவதற்கு த்வாரமாக இருக்கிறது.

4. அல்லது, அம்பாளுடைய ப்ரீதியையே பலனாகவும் சொல்லலாம்.

XXXIX. नामस्मरणावश्यकतोक्तिः सार्धत्रयोदश श्लोकैः ।
उपसंहारः सार्धैः पञ्चभिरेकेन सूतोक्तिः ॥

நாமஸ்மரணாவச்யகதோக்தி:
ஸார்தத்ரயோதச ஶ்லோகை: |
உபஸம்ஹார: ஸார்தை:
பஞ்சபிரேகேன ஸூதோக்தி: ||

அம்பாளுடைய நாமஸ்மரணையின் ஆவச்யகமானது $13\frac{1}{2}$ ச்லோகங்களிலும் உபஸம்ஹாரமானது $5\frac{1}{2}$ ச்லோகங்களிலும் (ஹயக்ரீவரால்) சொல்லப்படுகிறது. கடைசி ஒரு ச்லோகம் ஸூதர் சொன்னது.

1. கடைசி ச்லோகமானது ஸூதரால் சொல்லப்பட்டது என்பதினாலும், ஏற்கனவே வந்த 'தசபூ: ஸார்த்த ந்ருபாலா:' என்ற IV-வது ச்லோகத்தில் பூர்வபாகத்திலடங்கிய ச்லோகங்களைச் சொன்னவர்களைப்பற்றிச் சொல்லுகையில் கடைசியாக ஹயக்ரீவர் பெயர் சொல்லப்பட்டதாலும், அதற்குப் பிறகு வேறு யார் சொன்னதாகவும் குறிப்பிடப்படாமலிருப்பதினாலும், பூர்வ பாகத்தில் கடைசியாக ஹயக்ரீவர் சொன்னதுமுதல் பலச்ருதி பாகத்தில் ஸூதர் சொன்ன கடைசி ச்லோகம் வரையில் வரும் ச்லோகங்களெல்லாம் (த்யானச்லோகம், நாமஸஹஸ்ரம் உள்பட) ஹயக்ரீவரால் சொல்லப்பட்டதாக ஏற்படுகிறது.

XL. इति परिभाषामण्डलमुदितं नरसिंहयज्वना विदुषा ।
सत्संप्रदायगमकं शिवभक्तानन्दनाय शिवम् ॥

இதி பரிபாஷா மண்டலமுதிதம்
நரஸிம்ஹயஜ்வநா விதுஷா |

ஸத்ஸம்ப்ரதாயகமகம்
சிவ பக்தாநந்தநாய சிவம் ||

இவ்விதம் சிவன், சிவா இருவர்களுடைய பக்தர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுப்பதற்காக (அவர்களை) ஸத் ஸம்ப்ரதாயத்தில் சேர்ப்பதும் மங்களகரமுமான இந்த பரிபாஷா மண்டலமானது வித்வானான நரஸிம்ஹ யஜ்வாவால் சொல்லப்பட்டது.

1. மண்டலமென்பது ஸ்ரீ ந்ருஸிம்ஹானந்த நாதரால் சொல்லப்பட்ட ச்லோகங்கள் நாற்பதையும் குறிக்கிறது.

2. விதுஷா என்பதினால் அஷ்டாதச வித்யைகளைத் தெரிந்து வரும் ஸ்ரீ வித்யோபாஸகருமான என்று ஸ்ரீ ந்ருஸிம்ஹானந்த நாதருக்கு விசேஷணமாகச் சொல்லப்பட்டது.

3. பக்தர்கள் மிகவும் துர்லபமான ஸத்ஸம்ப்ரதாயத்தைத் தேடுவார்களாதலால் அவர்கள் அதை அறியும்படிச் செய்வதாக இந்த பரிபாஷா மண்டலத்தைச் சொல்லப்பட்டது.

4. சிவம் என்பதினால் இந்த பரிபாஷா மண்டலமும் மற்ற எல்லாமும் மங்களகரமானதென்று சொல்லப்பட்டது.

இப்படி பரிபாஷா மண்டலத்தை வ்யாக்யானம் செய்து விட்டு பாஸ்கரராயர் தான் எழுதிய பாஷ்யத்தை முடித்து தான் அதை எழுதியதைப்பற்றி மேலே சொல்லப்படும் ச்லோகங்களில் சொல்லுகிறார்.

श्रीविश्वामित्रवंश्यः शिवभजनपरो भारतीसोमपीथी
काश्यां गम्भीरराजो बुधमणिरभवद्भास्करस्तस्य सूनुः ।
मोदच्छायामितायां शरदि शरदृतावाश्विने कालयुक्ते
शुक्ले सौम्ये नवम्यामतनुत ललितानामसाहस्रभाष्यम् ॥ १ ॥

ஸ்ரீவிச்வாமித்ரவம்ச்ய:
சிவபஜனபரோ பாரதீ ஸோமபீதி:
காச்யாம் கம்பீரராஜோ புதமணிரபவத்
பாஸ்கரஸ்தஸ்ய ஸூனு: |
மோதச்சாயாமிதாயாம் சரதி
சரத்ருதௌ ஆச்விநே காளயுக்தே

சுக்லே ஸௌம்யே நவம்யாம்

அதனுத லலிதாநாமஸாஹஸ்ரபாஷ்யம் ॥

ஸ்ரீ விச்வாமித்திர வம்சத்தைச் சேர்ந்தவரும் சிவனை பஜிப் பதிலேயே முயற்சியுள்ளவரும் பாரதீ என்ற பிருதையுடைய வரும், ஸோமயாகம் செய்தவருமான கம்பீரராஜரென்ற பெய ருடைய வித்வன்மணியானவர் காசியிலிருந்தார். அவருடைய பிள்ளையான பாஸ்கரனென்பவர் 1785 காளயுக்தி வருஷத்தில் சரத்ருதுவில் அர்ப்பிசி மாதத்தில் சக்லபக்ஷத்து நவமியான புதன்கிழமையில் லலிதா நாம ஸாஹஸ்ரத்தின் பாஷ்யத்தை எழுதினார்.

(மோதாச்சாயா என்பது கடபயாதி ஸங்க்யையின்படி 1785 ஆகிறது).

श्रुतिस्मृतिन्यायपुराणसूत्रकोशागमश्रीगुरुसंप्रदायात् ।
निश्चित्य निर्मथ्य कृतापि टीका शोध्यैव सद्भिर्मयि हार्दवद्भिः ॥ २ ॥

ச்ருதி ஸ்ம்ருதி ந்யாய புராண ஸூத்ர-
கோசாகம ஸ்ரீகுரு ஸம்ப்ரதாயாத் |
நிச்சித்ய நிர்மத்ய க்ருதாபி டீகா
சோத்யைவ ஸத்பிர்மயி ஹார்த்வத்பி: ॥

ச்ருதி, ஸ்ம்ருதி, ந்யாய புராண, ஸூத்ர, கோச, ஆகமங் களிலிருந்தும் ஸ்ரீ குருவினுடைய ஸம்ப்ரதாயத்திலிருந்தும் நிச்சயம் பண்ணி கடைந்தெடுத்து இந்த பாஷ்யமானது பண்ணப் பட்டிருந்தபோதிலும் அது என் மீது தயவோடி கூடிய ஸத்துக் களால் சரிபார்த்துத் திருத்தப்படுவதற்கு அர்ஹம் தான்.

प्रमादो मेऽवश्यं भवति मतिमान्द्यादलसतः
पदार्थन्यायानामपि दुरवगाहत्वनियमात् ।
परं त्वन्तः सन्तः सदयहृदया नाममहिमा-
प्यपूर्वस्तस्मान्मे न खलु खलपापोभयभयम् ॥ ॥ ३ ॥

ப்ரமாதோ மேऽவச்யம் பவதி
மதிமாந்த்யாத் அலஸத:

பதார்த்த ந்யாயாநுமபி
துரவகாஹத்வ நியமான் |
பரம் த்வந்த: ஸந்த:
ஸதயஹ்ருதயா நாமமஹிமா-
ப்யபூர்வஸ் தஸ்மான் மே
ந கலு கலபாபோபயபயம் ||

என்னுடைய புத்தியின் மந்தத்தினாலும் அஜாக்ரதையினாலும் பதங்களின் அர்த்தத்தைப்பற்றிய ந்யாயங்களை அறிவது ச்ரம ஸாத்யமாயிருப்பதினாலும் (நான் எழுதியதில்) தவறுதல் அவச்யம் ஏற்பட்டிருக்கும். ஆயினும் (இதைப்பார்க்கும்) ஸத்துக்கள் உள்ளாக தயவோடுகூடிய ஹ்ருதயத்தையுடையவர்கள் (ஆகையால் என் தவருதலைப் பாராட்டமாட்டார்கள்) நாமங்களின் மஹிமையானது அபூர்வமானது. ஆகையால் கெட்டவர்களால் ஏற்படும் பயமும் (தவறுதல் செய்ததால்) பாபம் ஏற்படுமோ என்ற பயமும் எனக்குக் கிடையாது.

1. இங்கு அபூர்வமென்ற பதமானது மீமாம்ஸா சாஸ்த்ரத்தில் அதற்குச் சொல்லப்பட்ட அர்த்தத்தோடு கூடியது. இதின் தாத்பர்யத்தை CXVI பக்கத்தில் பார்க்கவும்.

अम्ब त्वत्पदयोः समर्पितमिदं भाष्यं त्वया कारितं
त्वन्नामार्थविकासकं तव मुदे भूयादथ त्वां भजन् ।
यो नैनत्परिशीलयेन्न च पठेद्यः पुस्तकस्यापि वा
संग्राहं न करोति तस्य ललिते माभूद्भवत्यां मतिः ॥ ४ ॥

அம்ப த்வத் பதயோ: ஸமர்பிதமிதம்
பாஷ்யம் த்வயா காரிதம்
த்வன் நாமார்த்த விகாஸகம்
தவமுதே பூயாத் அத த்வாம் பஜன் |
யோ நைனத் பரிசீலயேன்ன ச
படேத் ய: புஸ்தகஸ்யாபி வா
ஸம்க்ராஹம் ந கரோதி
தஸ்ய லலிதே மாபூத் பவத்யாம் மதி: ||

தாயே! உன்னால் இயற்றும்படி செய்யப்பட்டதும் உன்னுடைய நாமங்களின் அர்த்தத்தை வெளிப்படுத்துவதுமான இந்த பாஷ்யமானது உன்னுடைய பாதங்களில் ஸமர்ப்பிக்கப்பட்டது. அது உனக்கு ப்ரீதியைக் கொடுப்பதாக இருக்கட்டும். ஹே லலிதே! உன்னை பஜிக்கிறவன் எவனாவது இதைப் பரிசீலனம் செய்யவில்லையோ, அல்லது வாசிக்கவில்லையோ அல்லது அதின் ப்ரதியையாவது கைக்கொள்ளவில்லையோ, அவனுக்கு உன்னிடத்தில் புத்தி செல்லாமலிருக்கட்டும்.

नामैकं मामनयन्नामसहस्राम्बुधेः परं पारम् ।
जलबिन्दुर्भवजलधेर्येषां ते मे जयन्ति गुरुचरणाः ॥ ॥ ५ ॥

நாமைகம் மாமனயத்
நாமஸஹஸ்ராம்புதே: பரம் பாரம் |
ஜலபிந்துர் பவஜலதே:
யேஷாம் தே மே ஜயந்தி குருசரணா: ||

யாருடைய ஒரு நாமமானது என்னை நாமஸஹஸ்ரம் என்பதான ஸமுத்ரத்தின் அக்கரைக்குக் கொண்டுவந்து சேர்த்ததோ, யாருடைய பாதோதகத்தின் ஒரு துளியானது என்னை ஸம்ஸாரமென்ற ஸமுத்ரத்தின் கரையேறும்படி செய்ததோ அப்பேர்ப்பட்ட (என்) ஸ்ரீ குருவின் பாதங்கள் ஸர்வோத்கர்ஷமாக விளங்குகின்றன.

ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுரஸுந்தர்யை நம:
சுபம்.

# இப்பாஷ்யத்தில் பெயர் குறிக்கப்பட்ட கிரந்தங்களின் அகராதிவரிசை.

அக்னி புராணம்
அனுத்தர த்ரிம்சிகா
அனேகார்த்தத்வனி மஞ்சரி
அமரம்
அம்பாஷ்டகம்
அம்பாஸ்தவம்
அருணோபநிஷத்
அஷ்டாவக்ரகீதை
ஆனந்தஸாகரஸ்தவம்
ஆபஸ்தம்பர்
ஆயுஷ்யஸூக்தம்
உத்தரசது: சதி
ஐதரேயம்
ஐதரேயஶ்ருதி
கல்ப ஸூத்ரம்
காடக ஸ்ம்ருதி
காண்வ ஶ்ருதி
காதிமதம்
காமிகாகமம்
காளிகாபுராணம்
காளிதாஸர்
காளீ புராணம்
குமாரஸம்ஹிதை
கூர்மபுராணம்
கடஸ்தவம்
கருடபுராணம்
குருகலா
கௌடபாதஸூத்ரம்
சித்தகனசந்திரிகா
சிந்தாமணிஸ்தவம்
சாந்தோக்யோபனிஷத்
ஞானார்ணவம்
தந்த்ரராஜம்.
தைத்திரேய ஆரண்யகம்
த்ரைபுர ஸூக்தம்
த்ரிசதீ
த்ரிபுராமஹிம்நஸ்தோத்திரம்
த்ரிபுரார்ணவம்
த்ரிபுராஸாரம்
த்ரிபுராஸித்தாந்தம்
த்ரிபுரோபநிஷத்
தத்தாத்ரேயஸம்ஹிதை
துர்க்காசந்த்ரகலாஸ்துதி
தேவிமஹிம்நஸ்தோத்திரம்
தேவீ பாகவதம்
தேவீ புராணம்
நவரத்னமாலா
நித்யாதந்த்ரம்
நித்யாஷோடசிகார்ணவம்
நித்யாஹ்ருதயம்
ந்ருஸிம்ஹ உபபுராணம்
ந்ருஸிம்ஹதாபநீயம்
ந்ருஸிம்ஹ புராணம்
பஞ்சராத்ராகமம்

பத்மபுராணம்
பரசுராமகல்பஸூத்ரம்
பரமானந்த தந்த்ரம்
பராசர உபபுராணம்
பராசரஸ்ம்ருதி
பராபஞ்சாசிகா
பாஞ்சராத்ர லக்ஷ்மீதந்த்ரம்
ப்ரஹதாரண்யகம்
ப்ரஹந்நாரதீயம்
போதஸாரம்
போதாயனர்
ப்ரம்ஹ வைவர்த்தம்
ப்ரம்ஹகீதை
ப்ரம்ஹஸூத்ரம்
ப்ரம்ஹாண்டபுராணம்
பகவதீ புராணம்
பகவத்கீதை
பவிஷ்யோத்தர புராணம்
பாகவதம்
பாரத்வாஜஸ்ம்ருதி
பைரவயாமளம்
பேட்காரிணீ தந்த்ரம்
மத்ஸ்யபுராணம்
மனுஸ்ம்ருதி
மல்லாரி மஹாத்ம்யம்
மஹார்த்த மஞ்சரி
மஹாபாரதம்
மஹாவாஸிஷ்டம்
மஹாவாஸிஷ்ட ராமாயணம்
மாத்ருகாவிவேகம்
மாகம்
மார்க்கண்டேயபுராணம்
மாலினீவிஜயதந்த்ரம்
முண்டகம்
மிருகேந்த்ரஸம்ஹிதை
மேதினீ கோசம்
மைலாரதந்த்ரம்
யக்ஞவைபவகண்டம்
யாக்ஞ்யவல்க்யஸ்ம்ருதி
யாதவகோசம்
யாஸ்கர்
யோகவாஸிஷ்டம்
யோகசாஸ்திரம்
யோகஸூத்ரம்
யோகினீ தந்த்ரம்
யோகினீ ஹ்ருதயம்
ரத்னத்ரய பரிக்ஷை
ரபஸவசனம்
ரஹஸ்யாகமம்
ராமாயணம்
ருத்ரயாமளம்
லகுஸ்துதி
லலிதாஸ்தவரத்னம்
லலிதோபாக்யானம்
லிங்கபுராணம்
லைங்கம்
வராஹபுராணம்
வரிவஸ்யா ரஹஸ்யம்
வஸிஷ்டஸூத்ரம்
வாஜநேயஸ்ருதி
வாதுளசுத்ததந்த்ரம்
வாமகேச்வர தந்த்ரம்
வாமன புராணம்
வாயவீயஸம்ஹிதை
வாயுபுராணம்
விச்வ:
விச்வகோசம்
வித்யாரத்னஸூத்ரம்

விருபாக்ஷபஞ்சாசிகா
விஷ்ணுதர்மோத்தரம்
விஷ்ணுபாகவதம்
விஷ்ணுபுராணம்
விஷ்ணுரஹஸ்யம்
விஷ்ணுஸ்ம்ருதி
வ்யாஸர்
வ்ரதகண்டம்
ஶக்தி ரஹஸ்யம்
ஶக்தி ஸூத்ரம்
ஶாண்டில்யபக்திஸூத்ரம்
ஶாரதா திலகம்
ஶிவபுராணம்
ஶிவமஹிம்நஸ்தோத்திரம்
ஶிவஸூத்ரம்
ஶிவஸ்தவம்
ஶிவஸூத்ரவார்த்திகம்
ஶிவானந்தலஹரி
ஶைவாகமம்
ஶ்யாமளாதண்டகம்
ஶ்யாமளா ரஹஸ்யம்
ஶ்ருதி
ஸகல ஜனனீஸ்தவம்
ஸங்கேதபத்ததி
ஸங்க்ஷேபசாரீரகம்
ஸப்தசதீ
ஸமயாசார ஸ்ம்ருதி
ஸம்வர்த்த ஸ்ம்ருதி
ஸாம்க்யபர்வசன ஸூத்ரம்
ஸாம்க்ய ஸப்ததி
ஸாம்க்யஸமாஸ ஸூத்ரம்
ஸ்காந்தம்
ஸ்பந்தசாஸ்த்ரம்
ஸ்வச்சந்த ஸங்க்ரணம்
ஸ்ம்ருதி
ஸ்வதந்த்ர தந்த்ரம்
ஸுந்தரீதாபனீயம்
ஸுப்ரபேதம்
ஸூதகீதை
ஸூதஸம்ஹிதை
ஸேதுபந்தம்
ஸௌந்தர்யலஹரீ
ஸௌபாக்யஸுதோதயம்
ஸௌரஸம்ஹிதை
ஹரிவம்சம்
ஹிரண்யகேசிஸூத்ரம்
ஹேமசந்த்ர:

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 8 | 8 | ஸுதாஸாகரமத்யஸ்தா | ஸுமேரு மத்ய ச்ருங்கஸ்த்தா |
| 27 | 17 | படநத் | படநாத் |
| 34 | 7 | க்ருதய | க்ருத்ய |
| 35 | 23 | கைளலினீ | கௌளினீ |
| 38 | 9 | ஸ்தோத்ா | ஸ்தோத்ர |
| 46 | 3 | பெரி | பெரிய |
| 53 | 15 | சொல்லட்டது. | சொல்லப்பட்டது. |
| 60 | 4 | பஞ்சக்ருதய | பஞ்சக்ருத்ய |
| 60 | 23 | ஸங்க்ஷேசாரீரகம் | ஸங்க்ஷேபசாரீரகம். |
| 62 | 16 | रागस्वरूप पाशाड्या | रागस्वरूप पाशाढ्या |
| 64 | 9 | ப்ரபாபுர | ப்ரபாபூர |
| 66 | 22 | க்ல்ப்த | க்ல்ருப்த |
| 74 | 17 | सोभोग्य | सौभाग्य |
| 82 | 9 | வித்யாநகரம | வித்யாநகரம் |
| 85 | 11 | सुधागरमध्यस्था | सुधासागरमध्यस्था |
| 90 | 3 | அச்வரூடா | அச்வாரூடா |
| 93 | 26 | ப்ரகாரத்தின் | ப்ராகாரத்தின் |
| 95 | 9 | என்றும் | என்னும் |
| 97 | 27 | ச்யாமாளாம்பா | ச்யாமளாம்பா |
| 109 | 2 | அமிதத்தை | அமிருதத்தை |
| 117 | 3 | ஸர்வாதிஷ்டானம் | ஸ்வாதிஷ்டானம் |
| 118 | 17 | பேதறம் | பேதனம் |
| 122 | 21 | ஸம்ருதா | ஸ்ம்ருதா |
| 129 | 19 | சராதா | சாரதா |
| 135 | 18 | அவயங்களோடு | அவயவங்களோடு |
| 141 | 5 | அசனி | அஶனி |
| 141 | 16 | அர்த்மிருந்தாலும் | அர்த்தமிருந்தாலும் |
| 157 | 18 | மரமசிவனுடைய | பரமசிவனுடைய |
| 157 | 23 | லஹ்மீ | லக்ஷ்மீ |
| 158 | 17 | ஸதிதிகர்த்தாவும் | ஸ்திதிகர்த்தாவும் |
| 159 | 26 | ஸ்மரனேயே | ஸ்மரணேயே |
| 162 | 16 | புத்திரூபியாயுமிருப்பவள் | புத்திரூபிணியாயுமிருப்பவள் |
| 166 | 2 | ஸாக்ஷியாக | ஸாக்ஷிணியாக |
| 169 | 16 | பாதங்குளீயகம் | பாதாங்குளீயகம் |

| பக். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 169 | 20 | 46 | 46 (மேல் லபனுக்குப் போகவேண்டியது) |
| 181 | 17 | தனம் | தானம் |
| 187 | 14 | வ்யஹரிப்பதாக | வ்யவஹரிப்பதாக |
| 187 | 17 | ஈக்வரனே | ஈச்வரனே |
| 190 | 19 | பராக்ஞன் | ப்ராக்ஞன் |
| 196 | 24 | அனுபவ்விக்தவர்களுக்குத்தான் | அனுபவித்தவர்களுக்குத் தான் |
| 197 | 7 | वह्मरूपा | व्रह्मरूपा |
| 213 | 30 | துளியையுடையவள் | தூளியையுடையவள் |
| 218 | 3 | ஸாக்ஷாத்கரத்தை | ஸாக்ஷாத்காரத்தை |
| 234 | 11 | கலாமாயீ | கலாமயீ |
| 245 | 5 | क्षयवृद्विनिर्मुक्ता | क्षयवृद्धिविनिर्मुक्ता |
| 256 | 10 | தாதாத்யத்தோடு | தாதாத்ம்யத்தோடு |
| 257 | 19 | லக்ஷ்யாந்தமான | லக்ஷ்யார்த்தமான |
| 263 | 4 | ஸரோவாம் | ஸரோவரம் |
| 272 | 17 | षाङ्गुण्यपरिपूरिता | षाड्गुण्यपरिपूरिता |
| 276 | 2 | பாமசிவன் | பரமசிவன் |
| 291 | 8 | பகவதாராதானம் | பகவதாராதனம் |
| 293 | 29 | श्चेतनारूपा | चेतनरूपा |
| 298 | 13 | ஸம்தியா | ஸம்த்யா |
| 304 | 3 | சொல்லப்படும் | சொல்லப்படுகிறாள். |
| 308 | 2 | என்னும் | என்றும் |
| 308 | 10 | மூஸஹத்தை | ஸமூஹத்தை |
| 345 | 18 | ப்ரம்ஹாந்த்ரத்திலிருப்பது | ப்ரம்ஹரந்தத்திலிருப்பது |
| 351 | 20 | கீர்த்தியுடையவள் | கீர்த்தியையுடையவள் |
| 357 | 7 | कलिकलमषनाशिनी | कलिकल्मषनाशिनी |
| 359 | 8 | 10வது | 26வது |
| 367 | 6 | ஆக்ஷரங்களின் | அக்ஷரங்களின் |
| 368 | 14 | சப்தப்ரஹ்ம்ஸ்வரூபிணியாக | ஸப்த ப்ரஹ்மஸ்வரூபிணியாக |
| 369 | 29 | ப்ரப்ஹாந்த்ரத்திலிருக்கும் | ப்ரம்ஹரந்த்ர த்திலிருக்கும் |
| 373 | 22 | ஸாமரஸ்வரூபமாக | ஸாமரஸ்யரூபமாக |
| 374 | 11 | ப்ரம்ஹாந்தரத்தில் | ப்ரம்ஹரந்த்ரத்தில் |
| 374 | 16 | ,, ன் | ,, ன் |
| 376 | 26 | உச்சிலிருந்தால் | உச்சியிலிருந்தால் |

| பக். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 381 | 15 | குஹர்கள் | குஹர்கள் என்று |
| 398 | 10 | பூமியிகும் | பூமியிலிருக்கும் |
| 402 | 2 | சப்தப்ரஹாத்மகமானதும் | சப்தப்ரஹ்மாத்மகமானதும் |
| 420 | 31 | ஸாமார்த்தியமுடையவள் | ஸாமர்த்தியமுடையவள் |
| 423 | 23 | ஜீணு | ஜீர்ணு |
| 430 | 31 | ஸதுர்லபமான | ஸுதுர்லபமான |
| 432 | 4 | ரஜ்பதாயினீ | ராஜ்யதாயினீ |
| 434 | 27 | ஸ்த்யஸங்கையாக | ஸத்யஸங்கையாக |
| 436 | 15 | பாண்டரஸூரன் | பாண்டாஸூரன் |
| 436 | 22 | புருஷார்த்தங்களைக் செய்பவள் | புருஷார்த்தங்களைச் செய்பவள் |
| 438 | 15 | கலாபாவம் | காலாபாவம் |
| 444 | 31 | விலயக்ஷணங்களோடு | விலக்ஷணங்களோடு |
| 445 | 7 | குஹ்ரோபநிஷத்தை | குஹ்யோபநிஷத்தை |
| 464 | 19 | தாந்த்ரகர்களுடைய | தாந்த்ரிகர்களுடைய |
| 467 | 4 | ஸாமாராத்யா | ஸமாராத்யா |
| 469 | 17 | ப்ராப்த | ப்ராரப்த |
| 476 | 5 | குறிக்கப்படுகிறவள். | குறிக்கப்படுகிறவைகள். |
| 476 | 23 | அகரங்களுடையதோ | அசரங்களுடையதோ |
| 483 | 20 | ஷேடாச | ஷோடச |
| 485 | 18 | பராமார்த்திகமான | பாரமார்த்திகமான |
| 485 | 31 | உன்முகத்வத்தோடிருப்பதை | உள்முகத்வத்தோடிருப்பதை |
| 488 | 1 | ப்ராகாசம் | பராகாசம் |
| 492 | 16 | ராஜ்பாரத்தோடிருப்பவள் | ராஜ்யபாரத்தோடிருப்பவள் |
| 496 | 30 | (ஸாஹம்பாவனே) | (ஸாஹம்பாவேன) |
| 498 | 18 | ஸத்வித்யைப்பற்றி | ஸத்வித்யையைப்பற்றி |
| 499 | 32 | விஷேஷமாக | விசேஷமாக |
| 511 | 23 | मूनिमानसहंसिका | मुनिमानसहंसिका |
| 511 | 24 | முனிதானஸஹம்ஸிகா | முனிமானஸஹம்ஸிகா |
| 522 | 3 | प्रतिष्ठा | प्रतिष्ठा |
| 524 | 10 | पञ्चाशत्पीठरूपिणी | पञ्चाशत्पीठरूपिणी. |
| 527 | 20 | தேவின் | தேவியின் |
| 528 | 30 | ஜனங்களில்லாத இடங்களிலிருப்பள் | ஜனங்களில்லாத இடங்களிலிருப்பவள் |

| பக். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 530 | 25 | சொல்லாம் | சொல்லலாம் |
| 539 | 9 | சாஸ்த்ரசாரா | சாஸ்த்ரஸாரா |
| 542 | 25 | सर्वोपनिषदुद्घुष्ठा | सर्वोपनिषदुद्घुष्टा. |
| 547 | 1 | काष्ठा | काष्ठा |
| 549 | 23 | அடுத்தது | அடுத்தடுத்து |
| 551 | 7 | முமுக்ஷுக்கள் | முமுக்ஷுக்கள் |
| 558 | 4 | சொல்லபப்பட்டது | சொல்லப்பட்டது |
| 572 | 18 | ஸமுகஹத்தை | ஸமூஹத்தை |
| 572 | 32 | முன்று பிந்துக்களின் | மூன்று பிந்துக்களின் |
| 574 | 32 | தத்ஸ்வரூபமாயிருப்பவள் | தத்வஸ்வரூபமாயிருப்பவள் |
| 577 | 7 | सदाशिवकुटुम्बिनी | सदाशिवकुटुम्बिनी |
| 592 | 26 | चैतन्यकुसुमप्रिता | चैतन्यकुसुमप्रिया |
| 597 | 9 | சிவஸூரத்தில் | சிவஸூத்ரத்தில் |
| 597 | 26 | கைளலினீ கேவலா | கௌலினீ கேவலா |
| 598 | 3 | अनर्घ्यकैवल्यफददायिनी | अनर्घ्यकैवल्यपददायिनी |
| 601 | 7 | சொல்லப்பட்டிருக்கிலது | சொல்லப்பட்டிருக்கிறது |
| 611 | 9 | பஞ்சசங்க்யோபசாரிணீ | பஞ்சஸங்க்யோபசாரிணீ |
| 612 | 2 | பஞ்சப்ரேதானரூடா | பஞ்சப்ரேதாஸனரூடா |
| 621 | 13 | குணத்யரத்தின் | குணத்ரயத்தின் |
| 621 | 24 | அவஸ்தைகளையுடைய | அவஸ்தைகளையுடைய |
| 629 | 6 | ப்ரஹாத்மைக்யாஹ | ப்ரம்ஹாத்மைக்யாஹ |
| 632 | 13 | ஸாரணமாக | ஸாதாரணமாக. |
| 652 | 20 | பாயா | பராயா |

## श्रीचक्रम्



बिन्दुत्रिकोणवसुकोणदशारयुग्म मन्वश्रनागदलसंयुतषोडशारम् ।
वृत्तत्रयं च धरणीसदनत्रयं च श्रीचक्रमेतदुदितं परदेवतायाः ॥

*(By Courtesy Brahma Vidya Vimarsini Sabha,)*

உ

ஸ்ரீ லலிதா மஹா த்ரிபுரஸுந்தர்யை நம:

# ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமம்.

## பூர்வ பாகம்.

அகஸ்த்ய உவாச—

அச்வாநந மஹாபுத்தே ஸர்வ சாஸ்த்ர விசாரத |
கதிதம் லலிதா தேவ்யா: சரிதம் பரமாத்புதம் ||

அகஸ்த்யர் தன்னுடைய குருவான ஹயக்ரீவரைப் பார்த்துச் சொல்லுகிறார்:—

ஹே! அச்வாநந! மஹா புத்தியுள்ளவரே! ஸர்வ சாஸ்த்ரங்களையும் நன்றாய்த் தெரிந்தவரே! ஸ்ரீ லலிதாம்பாளுடைய பரம அத்புதமான சரித்ரமானது தங்களால் எனக்குச் சொல்லப் பட்டது.

1. அகஸ்த்யர் என்ற பெயருடைய மஹர்ஷியானவர் மிகவும் மஹிமைவாய்ந்தவர் என்பது ப்ரஸித்தம். அவருடைய ப்ரபாவத்தைப்பற்றி வேத புராணங்களில் அனேக ஆச்சர்ய மான கதைகள் உண்டு. ஒரு ஸமயம் மைத்ராவருணர்கள் ஊர்வசியைப் பார்த்தபோது அவளுடைய அழகைக் கண்டு மோஹித்த அவர்களுடைய ரேதஸ் வெளிப்படவே அதில் ஒரு பாகம் ஒரு கடத்தில் விழுந்ததாகவும் அதிலிருந்து அகஸ்த்யர் உண்டானார் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் அவ ருக்கு கடோத்பவர், கும்பஜன்மா, கும்பமுனி, கும்பயோனி முதலிய பெயர்கள் ஏற்பட்டன. ரேதஸ்ஸின் மற்றோர் பாகம் ஜலத்தில் விழவும் அதிலிருந்து வஸிஷ்டர் உண்டானார் என்றும் சொல்லப்படும். அக: என்றால் பர்வதம். அதை (விந்த்யமலை) நிறுத்தியதினால் அகஸ்த்யர், அகஸ்தி: என்று இவருக்குப் பெயர் ஏற்பட்டது. இவரால் அப்படி நிறுத்தப்பட்டது விந்த்யபர்வதம்

श्रीचक्रम्



बिन्दुत्रिकोणवसुकोणदशारयुग्म मन्वश्रनागदलसंयुतषोडशारम् ।
वृत्तत्रयं च धरणीसदनत्रयं च श्रीचक्रमेतदुदितं परदेवतायाः ॥

(By courtesy Brahma Vidya Vimarsini Sabha.)

உ

ஸ்ரீ லலிதா மஹா த்ரிபுரஸுந்தர்யை நம:

# ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமம்.

## பூர்வ பாகம்.

அகஸ்த்ய உவாச—

அச்வாநந மஹாபுத்தே ஸர்வ சாஸ்த்ர விசாரத |
கதிதம் லலிதா தேவ்யா: சரிதம் பரமாத்புதம் ||

அகஸ்த்யர் தன்னுடைய குருவாகிய ஹயக்ரீவரைப் பார்த்துச் சொல்லுகிறார்:—

ஹே! அச்வாநந! மஹா புத்தியுள்ளவரே! ஸர்வ சாஸ்த்ரங்களையும் நன்றாய்த் தெரிந்தவரே! ஸ்ரீ லலிதாம்பாளுடைய பரம அத்புதமான சரித்ரமானது (தங்களால் எனக்கு)ச் சொல்லப் பட்டது.

1. *அகஸ்த்யர் என்று பெயரையுடைய மஹர்ஷியானவர் மிகவும் மஹிமைவாய்ந்தவர் என்பது ப்ரஸித்தம். அவருடைய ப்ரபாவத்தைப்பற்றி நமது புராணங்களில் அனேக ஆச்சர்யமான கதைகள் உண்டு. ஒரு ஸமயம் மைத்ராவருணர்கள் ஊர்வசியைப் பார்த்தபோது அவளுடைய அழகைக் கண்டு மோஹித்த அவர்களுடைய ரேதஸ் வெளிப்படவே அதில் ஒரு பாகம் ஒரு கடத்தில் விழுந்ததாகவும் அதிலிருந்து அகஸ்த்யர் உண்டானர் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அதினால் அவருக்கு கடோத்பவர், கும்பஜன்மா, கும்பமுனி, கும்பயோனி முதலிய பெயர்கள் ஏற்பட்டன. ரேதஸ்ஸின் மற்றோர் பாகம் ஜலத்தில் விழவும் அதிலிருந்து வஸிஷ்டர் உண்டானர் என்றும் சொல்லப்படும். அக: என்றால் பர்வதம். அதை (வளராமல்) நிறுத்தியதினால் அகஸ்த்யர், அகஸ்தி: என்று இவருக்குப் பெயர் ஏற்பட்டது. இவரால் அப்படி நிறுத்தப்பட்டது விந்த்யபர்வதம்.*

ஆக்ருதியில் கட்டைவிரல் பிரமாணமுள்ளவராக இருந்தாலும் தபோபலத்திலும் ஞானத்திலும் அவருக்கு ஸமானம் யாருமில்லை. பரமசிவனுக்கும் பார்வதிக்கும் கல்யாணம் நடந்த ஸமயத்தில் ஸமஸ்த தேவர்களும் மற்றும் எல்லாரும் கைலாஸத்திற்கு வந்தபோது, அந்த இடமானது இவர்களுடைய பாரத்தினால் தாழ்ந்துபோகவே, பகவான் அகஸ்த்யரைப் பார்த்து பூமி ஸமமாவதற்காக தெற்கே போகும்படி சொன்னதாகவும், அப்படிப்போகும் வழியில் விந்த்ய பர்வதமானது கர்வத்துடன் வளர்ந்துகொண்டு வழியை மறைக்கும்போது அதினுடைய கர்வத்தை யடக்கி வளராமல் செய்து விட்டுத் தெற்கே பொதியமலைக்கு வந்து அங்கே இருந்ததாகவும், கைலாஸத்தில் நடந்த திருக்கல்யாணத்தை அவர் பார்க்க முடியாமலிருந்ததற்காக பகவான் அவருக்குத் திரும்பவும் தன்னுடைய கல்யாணக் காட்சியை மதுரையில் கொடுத்ததாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. அவர் ஒரு ஸமயம் ஸப்த ஸமுத்ரங்களையும் பானம் பண்ணினதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. ராமாயணத்தில் வாதாபி, இல்வலன் இவர்களை ஸம்ஹாரம் பண்ணினதாகவும், ஸ்ரீராமர் இவருடைய ஆச்ரமத்துக்கு வந்து இவரை தர்சித்து இவரிடம் விஷ்ணுதனுஸ்ஸைப் பெற்றாரென்றும், யுத்தக்களத்தில் இவர் ஸ்ரீராமனுக்கு ஆதித்யஹ்ருதயம் உபதேசம் பண்ணினதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. தேவேந்த்ரனான நஹுஷனுடைய கர்வத்தைப் போக்கினவருமிவரே. ஸப்த ரிஷிகளில் இவர் ஒருவர். பரமசிவனுடைய ஆக்ஞையினால் இவர் தமிழை உலகத்திற்குக் கொடுத்தாரென்றும், இவரால் தமிழின் ஆதி க்ரந்தங்கள் இயற்றப்பட்டதாகவும் சொல்லப்படும். ஒரு ஸமயம் திருக்குற்றாலத்திலிருந்த ஸ்ரீ விஷ்ணுவை தரிசனம்செய்ய விரும்பிப் போனபோது அங்கிருந்த அர்ச்சகர்கள் ஆக்ஷேபிக்கவே, அவர் சிவன், விஷ்ணு இவர்களுடைய ஐக்யத்தைக் காட்டுவதற்காக ஒருதந்திரத்தினால் உள்ளேபோய் அங்கிருந்த விஷ்ணுமூர்த்தியைத் தழுவி லிங்காகாரமாகச் செய்தார் என்றும் ஒரு கதையுண்டு. அவர் இப்போதும் உயிருடன் பொதியமலையில் இருப்பதாகவும், பரிபக்வமுடையவர்களுக்கு தர்சனம் கொடுப்பதாகவும் சொல்லுகிறார்கள். இவருடைய கமண்டலு கவிழ்ந்ததினால் அதின் ஜலத்திலிருந்து காவேரி நதி ஏற்பட்டதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

2. ஹயக்ரீவர் விஷ்ணுவினுடைய அவதார புருஷர். முன் ஒரு காலத்தில் விஷ்ணுவானவர் யக்ஞஸம்ரக்ஷணம் முதலான வெகு கடினமான கார்யங்கள் செய்ததில் கண்விழித்து வெகு ச்ரமம் அடைந்திருந்தபோது களைப்பினால் நித்ரை வரவே தன்னுடைய சார்ங்கம் என்கிற தனுஸின் கோடியில் தன் சிரஸ்ஸை வைத்துக்கொண்டு நித்ரை செய்துகொண்டிருந்தார். தனுஸ்ஸானது நாண்பூட்டியிருந்தது. பகவானுடைய நித்ரை வெகு நாள் ஏற்படவே ப்ரும்ஹாதிகள் பாக்கிக் கார்யங்களை முடிப்பதற்காக பகவானை எழுப்பநினைத்து அதற்காக மார்க்கமொன்றும் தோன்றாமல் கலங்கியிருக்கும்போது, வெகுநாளாய் ஹவிர்பாகத்திற்கு ஆசைப்பட்டிருந்த வம்ரி (கரையான்) என்று சொல்லப்படும் க்ருமிகளுக்கு அவை கோரியபடி ஹவிர்பாகத்தைக் கொடுத்து அவற்றைக்கொண்டு அந்த நாண்கயிறு அறுக்கும்படி செய்தார்கள். அப்போது அவர்கள் எதிர்பார்க்காத விதமாயும் அதிக பயத்தையுண்டுபண்ணும்படியாகவும் தனுஸ்ஸானது தூக்கியடித்து நிமிர்ந்ததினால் பகவானுடைய சிரஸ் அறுபட்டுக் காணாமல்போய்விட்டது. அதினால் திகிலும் வருத்தமுமடைந்த தேவர்கள் அம்பாளைப் ப்ரார்த்திக்கவே, அம்பாள் அவர்களைப் பார்த்து ஒரு குதிரையின் தலையைக்கொண்டுவந்து சேர்த்துவைக்கச்சொன்னதாகவும், அப்படிச் சேர்த்ததினால் குதிரை முகத்துடன் விஷ்ணு திரும்பவும் உயிர்பெற்றெழுந்ததாகவும் இதின் வ்ருத்தாந்தம் முழுவதும் 'தேவிபாகவதத்தில்' முதல் ஸ்கந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் இவருக்கு ஹயக்ரீவர், அச்வானனர், ஹயமுகர் என்ற பெயர்கள் ஏற்பட்டன. பிறகு அவர் ஹயக்ரீவன் என்ற அஸுரனை ஸம்ஹாரம் செய்ததாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே அகஸ்த்யருக்கு இப்போது உபதேசம் பண்ணும் ஹயக்ரீவர் ஸாக்ஷாத் விஷ்ணு தான் என்பதான பூர்வ வ்ருத்தாந்த ஞாபகமாக அச்வானனர் என்று இங்கு சொல்லப்பட்டது. மேலும், அம்பாளுடைய உபாஸனையைப் பற்றிய ஸமஸ்த ரஹஸ்யங்களையும் அம்பாளே இவருக்கு உபதேசம் செய்ததாகச் சொல்லப்படுவதையும் அது குறிக்கிறது. ஆகவே இவரை மஹாபுத்தே! என்றும் ஸர்வசாஸ்த்ர விசாரத! என்றும் சொல்வது பொருத்தமானதே தவிர, வெறும் புகழ்ச்சியல்ல.

3. இவ்விதமான மஹிமையுள்ள குரு சிஷ்யர்கள் மூலமாகத்தான் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமமும், ஸ்ரீ லலிதா த்ரிசதியும் லோகத்தின் க்ஷேமத்திற்காக வெளியிடப்பட்டன. ஆகவே குரு, சிஷ்யன், உபதேசம் பண்ணப்பட்ட விஷயம் இவை மூன்றும் ஒன்றுக்கொன்று தான் பொருத்தம். மற்றவைகளோடு ஸமானமாகச் சொல்லமுடியாது.

4. அம்பாளுடைய உபாஸகர்களில் முக்கியமானவர்கள் பன்னிரண்டு பெயர்களென்றும், அவர்கள் செய்த உபாஸனா பேதங்களை அனுஸரித்து ஸ்ரீவித்யையானது பன்னிரண்டு வகை என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இவர்களில் அகஸ்த்யர் ஒருவர்.

'மனு: சந்த்ர: குபேரச்ச லோபா முத்ரா ச மன்மத: |
அகஸ்தி: அக்னி: ஸூர்யச்ச இந்த்ர. ஸ்கந்த: சிவஸ்ததா |
க்ரோதபட்டாரகோ தேவ்யா: த்வாதசாமீ உபாஸகா: ||'

(க்ரோதபட்டாரகர் என்பவர் துர்வாஸர். இவர் இயற்றிய லலிதாஸ்தவரத்னமும் தேவிமஹிம்ன ஸ்தோத்ரமும் அபார மஹிமையுடைய க்ரந்தங்கள். அகஸ்தியர் இயற்றியதாக ஸ்ரீ வித்யா விஷயமான ஸூத்ரங்கள் உண்டு.)

5. இப்படி ஸ்ரீவித்யோபாஸகர்களில் முக்கியமானவரான அகஸ்த்யர் தன் குருவான ஹயக்ரீவரிடமிருந்து (ப்ரம்ஹாண்ட புராணத்தில் அடங்கிய) மந்த்ர, ந்யாஸ, பூஜா, புரஸ்சரணை ஹோம, ரஹஸ்ய, ஸ்தோத்ரங்களென்கிற ஏழு கண்டங்களில் அம்பாளுடைய ப்ராதுர்பாவம் முதலான ரஹஸ்யங்களெல்லாம் கேட்ட பிறகும் பரம ரஹஸ்யமான நாம ஸாஹஸ்ரம் ஒன்று இருப்பதாகத் தன்னுடைய தபோபலத்தினால் நிச்சயம் செய்து கொண்டு, தான் அவருடைய பக்தராக இருந்தும் தனக்கு ஏன் அதை உபதேசிக்கவில்லை என்ற விஷயத்தில் ஸந்தேஹமடைந்து தன் குருவைச் கேட்ட வ்ருத்தாந்தமானது ஸூதரால் சொல்லப்படுகிறது.

6, 'லோகான் அதீத்ய லலதே லலிதா தேந சோச்யதே |'

என்று பத்மபுராணத்தில் சொல்லப்பட்டபடி ஸகல லோகங்களுக்கும் அதீதமாய் க்ரீடித்து (கொஞ்சி)க் கொண்டிருப்பதால்,

அம்பாளுக்கு லலிதா என்ற பெயர் ஏற்பட்டது. இந்த நாமத்திற்குஇதர அர்த்தங்களும் உண்டென்பது 'லலிதா தேந ச உச்யதே'— அதினுலும் லலிதா என்று சொல்லப்படுகிருள் என்று மேலே சொன்ன பாத்ம வசனத்திலிருந்து ஏற்படுகிறது. இந்தப் பெயரின் மற்ற அர்த்தங்களை இந்த ஸஹஸ்ரநாமத்தின் கடைசி நாமமாகிய 'லலிதாம்பிகா' என்பதில் பார்க்கவும்.

7. சக்தி, சிவன், இருவர்களுக்கும் பராசக்தி, ஸதாசிவன் என்ற ரூபங்களிலிருந்து படிப்படியாக அபகர்ஷத்தை (குறைவை)ச் சொல்லுகிறவைகளாய் அனேகம் ரூபங்களிருக்கின்றன. அவர்களுடைய லோகங்களும் அனேகவிதங்களாய் இருப்பதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. பரமசிவனேடு அபின்னமாக இருக்கும் மஹாசக்தியானவள் ஸகல லோகங்களுக்கு அதீதமாமாகவும், மஹாகைலாஸம், அபராஜிதம் முதலான பதங்களால் குறிக்கப்படுவதுமான ஸர்வலோகோத்தமமான லோகத்தில் வீற்றிருக்கிருள். அவளுடைய சரீரமானது கநீபூதமான (உறைந்த) நெய்மாதிரி, ரஜஸ்தமோ குணங்களின் சேர்க்கைச் சிறிதுமில்லாத சுத்த ஸத்வகநீபாவமானது. மற்றபடி இருக்கும் சிவ சக்தி ரூபங்களுக்கு ஸாத்வீக சரீரமானது இருப்பதில் அதில் ஸத்வகுணம் அதிகமாயிருந்தாலும் ரஜஸ்தமோ குணங்களின் சேர்க்கையானது அல்பமாகவாவது இருக்குமே தவிர, சுத்தஸத்வமாக இருப்பதில்லை. ஆகவே இதுதான் ஸர்வோத்தமமான பரப்ரஹ்மமூர்த்தி. இப்பேர்ப்பட்ட மூர்த்தியானது ரஹஸ்யமான பலவித பேதங்களையுடையதாக இருந்தாலும் அவற்றில் காமேச்வரீ என்று சொல்லப்பட்ட மூர்த்தியே தான் இந்த ஸஹஸ்ரநாமத்தில் சொல்லப்படுகிறது என்பதைக் காட்டவும் லலிதா என்ற பதமானது இங்கு சொல்லப்பட்டது. ச்ருங்காரத்தின் தன்மையை வெளிப்படுத்தும் (அல்லது ச்ருங்கார ரஸத்தை உத்தீபனம் பண்ணும்) க்ரியா விசேஷத்திற்கு லலிதம் என்று பெயராகையால் அதை உடையவளுக்கு லலிதா என்று பெயர். ஆகவே, இந்த மூர்த்தியானது ச்ருங்காரரஸ ப்ரதானை என்பதாக ஸூசிப்பிக்கப்பட்டது. அவள் க்ரீடை, ஜெயம் பெறும் நோக்கம், முதலியவற்றுடன் இருப்பதால் தேவீ என்றும் சொல்லப்பட்டது.

8. அப்பேர்பட்ட லலிதா தேவியினுடைய சரிதம், அதாவது, சிதக்நி குண்டத்திலிருந்து ப்ராதுர்பாவமானது முதல் ஸமஸ்த தேவர்களாலும் அனேகவிதமாக ஸ்தோத்ரங்கள் செய்யப்பட்டது வரையில் ஹயக்ரீவரால் சொல்லப்பட்டதை இங்கு குறிக்கப்பட்டது. இதின் விவரங்களைப் பின்வரும் ச்லோகங்களில் சொல்லப்படுகிறது.

9. 'பரமாத்புதம்'— அம்பாளுடைய சரித்ரமானது அதி உத்தமமானதென்பதும் இதற்கு முன் கேழ்க்கப்படாததென்பதும், உபமானம் யாதொன்றும் இல்லாததென்பதும், இந்தப் பதத்தினால் சொல்லப்பட்டது. அதினுடைய முக்கியமான அம்சங்களை மேலே சொல்லுகிறார்.

2. பூர்வம் ப்ராதுர்பவோ மாது:, தத: பட்டாபிஷேசநம்|
பண்டாஸுர வதச்சைவ விஸ்தரேண த்வயோதித: ||

அம்பாள் ஆதியில் ஆவிர்பவித்ததும், பிறகு (அம்பாளுடைய) பட்டாபிஷேகமும், பண்டாஸுரனை வதம் செய்ததும் தங்களால் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டது.

1. 'பூர்வம்' என்பதினால் தன்னிடம் இதற்கு முன் என்றும், அல்லது மேலே சொல்லப்பட்ட பட்டாபிஷேகம் முதலியவற்றிற்கு முன் என்றும் சொல்லலாம்.

2. ப்ராதுர்பாவம்— 'அஸத்வா இதமக்ர ஆஸீத்', 'ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்', 'நாஸதாஸீந்நோ ஸதாஸீத்' என்பவை முதலான ச்ருதிவாக்யங்களில் சொல்லப்பட்டதும், ஸ்ருஷ்டிக்கு முன்னதாக நிர்விசேஷ சின்மாத்ரமாக இருந்ததுமான பரப்ரம்ஹமானது முதல் முதலில் காமகலா ரூபமாக உண்டானதைச் சொன்னதாகவும் சொல்லலாம். [காமகலா ரூபத்தின் ரஹஸ்யங்களைப்பற்றி குருமுகமாகத் தெரிந்துகொள்ள வேண்டியது.]

3. அல்லது 4-வது நாமமான 'சிதக்நிகுண்ட ஸம்பூதா' என்பதில் சொல்லப்பட்டபடி, அம்பாள் சிதக்நிகுண்டத்திலிருந்து ஆவிர்பவித்ததைச் சொன்னதாகவும் சொல்லலாம். இதுவும் பின்னால் சொல்லப்படும் விஷயங்களில் அனேகமும்

லலிதோபாக்யானத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதுவும் இந்த ஸஹஸ்ரநாமமும் (அதற்கு முந்தியும் பிந்தியும் உள்ள பாகங்களும்) ப்ரம்மாண்ட புராணத்தில் உத்தர கண்டத்தைச் சேர்ந்தவை என்று சொல்லப்படும்.

4. 'பட்டம்' என்பது ஸகல புவனங்களுடைய ஸாம்ராஜ்யாதிகாரம். அது ஏற்பட்டதற்கு அடையாளமாகச் செய்யப்படும் கார்யங்களில் ஒன்றான அபிஷேகத்திற்கு பட்டாபிஷேகம் என்று பெயர்.

5 பண்டன் என்ற அஸுரனுடன் அம்பாள் யுத்தம்செய்தது (இந்த ஸஹஸ்ர நாமத்தில் சொல்லப்பட்டிருப்பதுடன்) லலிதோபாக்யானத்தில் விஸ்தாரமாக வர்ணிக்கப்பட்டிருப்பதை இங்கு சொல்லப்பட்டது. லலிதோபாக்யானமும் ஹயக்ரீவரால் அகஸ்த்யருக்குச் சொல்லப்பட்டது.

3. வர்ணிதம் ஸ்ரீபுரம் சாபி மஹாவிபவ விஸ்தரம் |
ஸ்ரீமத் பஞ்ச தசாக்ஷர்யா: மஹிமா வர்ணிதஸ்ததா ||

ஸ்ரீபுரம் (அதின்) மஹத்தான விபவங்களைப் பற்றிய விஸ்தாரத்துடன் வர்ணிக்கப்பட்டது. ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ மந்த்ரத்தின் மஹிமையும் (தங்களால்) வர்ணிக்கப்பட்டது,

1, அதற்கு ஸமானமில்லாததால், அம்பாளிருக்கும் புரத்திற்கே 'புரம்' என்று பெயர். ஏனென்றால் ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி விஷயகமான தர்மங்களோடு பூர்ணமாயிருப்பதால் அதுவே முக்யமாக 'புரம்' என்ற பதத்திற்கு உரித்தாயிருக்கிறது.

2. மேன்மையான வஸ்துக்களுடைய பெயர்களுக்குமுன் ஸ்ரீ என்ற பதத்தைச் சேர்த்துச் சொல்வது வழக்கம். அம்பாளுடைய புரமானது எல்லா புரங்களையும் விட ச்ரேஷ்டமானதால் ஸ்ரீபுரம் (ஸ்ரீ நகரம், ஸ்ரீமந் நகரம்) என்று சொல்லப்படும்.

3. ஸ்ரீபுரமானது மூன்று இடங்களில் இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ருத்ரயாமளத்தில் ஸகல ப்ரம்ஹாண்டங்களுக்கும் வெளியிலும் மேலாகவும்,

'அனேக கோடி ப்ரம்ஹாண்ட கோடீனாம் பஹிர் ஊர்த்வத: |

என்பது முதலான ச்லோகங்களில் அனந்த யோஜனை விஸ்தாரங்களை உடைய இருபத்தைந்து ப்ராகாரங்களால் சூழப்பட்டதாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது ஒன்று. மேருவின் சிகரத்தின் மேல் முந்தியதற்குச் சொல்லப்பட்ட லக்ஷணங்களோடு கூடியதாய் லலிதாஸ்தவரத்னத்தில் துர்வாஸரால் வர்ணிக்கப்பட்டது மற்றொன்று. க்ஷீரஸமுத்திர மத்தியில் இருப்பதாக ஸ்ரீ வித்யா ரத்ன ஸூத்ரபாஷ்யத்தில் சொல்லியிருப்பது மூன்றாவது. இந்த விஷயத்தைப் பற்றி 'ஸுதாஸாகரமத்யஸ்தா' என்ற 55-வது நாமம் முதல் ஸுதாஸாகரமத்யஸ்தா என்ற 61-வது நாமம் முடியப் பார்க்கவும்.

4. விஸ்தரம் என்றால் வார்த்தைகளின் கூட்டத்திற்குப் பெயர். ஸ்ரீபுரத்தின் மஹத்தான விபவங்கள் அனேக சப்த ராசிகளால் வர்ணிக்கப்பட்டதை 'மஹாவிபவ விஸ்தரம்' என்று சொல்லப்பட்டது.

5. 'ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ' - ஸ்ரீபீஜத்தோடு கூடிய பஞ்சதசாக்ஷரீ என்று அர்த்தம். பஞ்சதசாக்ஷரீ என்பது காதிவித்யை அல்லது ஹாதிவித்யையைக் குறிக்கும். அத்துடன் ஸ்ரீபீஜத்தைச் சேர்ப்பதானது 'சத்வா ரஈம் பிப்ரதி க்ஷேமயந்த:' என்ற ச்ருதிவாக்யத்தினால் ஸித்தமாகிறதென்றும், அது மிகவும் ரஹஸ்யமானதென்றும், குருமுகமாகத்தான் அறியப்படவேண்டும் என்றும் சிலர் சொல்லுவார்கள். இவ்வாறு சொல்லியிருப்பது தந்த்ரங்களில் காணப்படாததால் அதை ப்ராமாணிகர்கள் ஒப்புக்கொள்வதில்லை. மேலே சொல்லப்பட்ட ச்ருதியானது

'காமராஜாக்ய மந்த்ராந்தே ஸ்ரீ பீஜேன ஸமன்விதா |
ஷோடசாக்ஷர வித்யேயம் ஸ்ரீ வித்யேதி ப்ரகீர்த்திதா ||'

என்றபடி ஹயக்ரீவரால் உத்ருதமானதும் காமராஜ மந்த்ரத்தின் கடைசியில் ஸ்ரீபீஜத்தைச் சேர்ப்பதால் ஏற்படுவதுமான ஷோடசாக்ஷர வித்யையைக் குறிக்குமென்று மற்றவர்கள் சொல்லுவார்கள். ஆகவே இந்த இடத்தில் ஸ்ரீ என்பசானது சோபை முதலான அர்த்தங்களோடு கூடிய விசேஷணபதமே தவிர பீஜாக்ஷரமல்ல.

4. ஷோடா ந்யாஸாதயோ ந்யாஸா:
ந்யாஸகண்டே ஸமீரிதா: |

ஷோடா ந்யாஸங்கள் முதலிய ந்யாஸங்கள் ந்யாஸகண்டத்தில் சொல்லப்பட்டன.

1. ந்யாஸம் என்பது சரீரத்தின் அந்தந்த பாகத்தில் அந்தந்த தேவதையை இருக்கச்செய்வது, அதாவது அப்படியிருப்பதாக பாவனை செய்வது. ஷோடா ந்யாஸங்கள் (ஆறு ந்யாஸங்கள்) என்பவை கணேச, க்ரஹ, நக்ஷத்ர, யோகினீ, ந்யாஸ, பீடங்கள் என்றவைகளை ந்யாஸம் செய்கிறவை.

'கணேசை: ப்ரதமோ ந்யாஸோ த்விதீயஸ்து க்ரஹைர் மத: |
நக்ஷத்ரைஸ்து த்ருதீய. ஸ்யாத் யோகினீபி:சதுர்த்தக: ||
ராசிபி: பஞ்சமோ ஜ்ஞேய: ஷஷ்ட: பீடைர் நிகத்யதே |
ஷோடா ந்யாஸஸ்த்வயம் ப்ரோக்த: ஸர்வ த்ரைவாபராஜித: |'

இந்த ஆறு ந்யாஸங்கள் ஒவ்வொன்றும் அவாந்தர அபூர்வங்களென்றும் அவை ஆறும் சேர்த்துச்செய்தால் பரம அபூர்வமென்றும் சொல்லப்படும். இந்த பரம அபூர்வத்தை இவை ஆறும் சேர்ந்து செய்யும்போது கொடுப்பதால் அந்த ஆறையும் சேர்த்து ஷோடாந்யாஸம் என்று சொல்லப்படும். அது பூஷணமாலினீ முதலான பேதங்களால் அனேகவிதமானது.

2. "ஷோடா ந்யாஸாதயோ ந்யாஸா:" என்பதினால் மேலே சொல்லப்பட்ட ஷோடாந்யாஸத்தைத்தவிர சக்ர ந்யாஸம் முதலியவையும் சொல்லப்பட்டன.

3. ந்யாஸ கண்டமென்பது ஸமஸ்தமான ந்யாஸங்களையும் முக்யமாகச் சொல்லும் (க்ரந்த) பாகம்.

அந்தர்யாக க்ரமச்சைவ
பஹிர்யாக க்ரமஸ்ததா |
5. மஹா யாக க்ரமச்சைவ
பூஜாகண்டே ப்ரகீர்த்தித:|

பூஜாகண்டத்தில் அந்தர்யாகக்ரமம், பஹிர்யாக க்ரமம், மஹா யாகக்ரமம் இவையெல்லாம் சொல்லப்பட்டன.

1. அந்தர்யாகமென்பது மானஸீகமான தேவபூஜை, அல்லது பின்னால் ஸஹஸ்ரநாமத்தில் சொல்லப்படுகிறபடி குண்டலினீ சக்தியானவள் மூலாதாரத்திலிருந்து ஸஹஸ்ராரத்திற்குப் போவதை பாவனை செய்வது.

2. க்ரமம் என்பது செய்யவேண்டிய விதம்.

3. பஹிர்யாகம் என்பது பாத்ராஸாதனம் முதல் சாந்திஸ்தவம் வரையில் பஹிர்முகமான பூஜையில் செய்யும் க்ரியா ஸமூஹம்.

4. மேலே சொல்லிய பஹிர்யாகத்தை எட்டுவிதமான அஷ்டகங்கள் முதலியவற்றுடன் கூடிச்செய்வது மஹாயாகம். இவ்விரண்டைப்பற்றி பாஸ்கரராயருடைய 'வரிவஸ்யா ப்ரகாசம்,' என்பதின் பூஜாப்ரகரணத்தில் நிரூபணம் செய்யப்பட்டிருக்கிறது.

புரஸ்சரண கண்டே து ஜபலக்ஷணமீரிதம்||

புரஸ்சரண கண்டத்தில் ஜபத்தின் லக்ஷணத்தைப் பற்றிச்சொல்லப்பட்டது.

1. புர: - மந்த்ரோபாஸனைக்கு முன்னதாக (தீக்ஷைக்குப் பிறகு) சரணம் செய்யவேண்டிய க்ரியைக்கு புரஸ்சரணம் என்று பெயர்.

2. ஜபத்தின் லக்ஷணம் (அடையாளம்) என்பது-அவஸ்தாபஞ்சகம், சூன்ய ஷட்கம், விஷுவத் ஸப்தகம், சக்ர நவகம் இவைகளை விசேஷமாக பாவனை செய்வது. இவற்றைப்பற்றி 'வரிவஸ்யா ரஹஸ்ய'த்தில் சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கவும்.

6. ஹோமகண்டே த்வயாப் ப்ரோக்தோ
ஹோமத்ரவ்ய விதிக்ரம: |

ஹோமகண்டத்தில் ஹோமங்களைப்பற்றியும், அவற்றில் உபயோகப்படும் த்ரவ்யங்களைப்பற்றியும், அவற்றினுடைய விதிகளைப் பற்றியும், இருக்கும் க்ரமத்தைப்பற்றியும் தங்களால் சொல்லப்பட்டது,

சக்ர ராஜஸ்ய வித்யாயா:
ஸ்ரீ தேவ்யா தேசிகாத் மனோ: ||

7. ரஹஸ்யகண்டே தாதாத்ம்யம்
பரஸ்பரம் உதீரிதம் ||

சக்ரராஜத்திற்கும் (ஸ்ரீசக்ரத்திற்கும்), ஸ்ரீவித்யைக்கும், ஸ்ரீ தேவிக்கும் குருவுக்கும் தனக்கும் (உபாஸகனுக்கும்) பரஸ்பரம் இருக்கும் தாதாத்ம்யமானது ரஹஸ்யகண்டத்தில் சொல்லப்பட்டது.

1. சக்ரராஜம் என்பதினால் பிந்து முதலான நவ சக்ராத்மகமான ஸ்ரீ சக்ரம் சொல்லப்பட்டது. வித்யா என்பது பஞ்சதசீ அல்லது ஷோடசியைக் குறிக்கும். ஸ்ரீதேவி என்று த்ரிபுரஸுந்தரியைச் சொல்லப்பட்டது.

2. தாதாத்ம்யம் - தத் என்ற பதமானது 'ஓம் தத்ஸத் இதி நிர்தேசோ ப்ரம்ஹணஸ்த்ரிவித: ஸ்ம்ருத:' என்று கீதையில் சொன்னபடி ப்ரம்ஹத்தைக் குறிக்கும். அதையே ஸ்வரூபமாக உடைத்தாயிருப்பது ததாத்ம. அவ்வித பாவம் தாதாத்ம்யம். இதினால் ஸ்ரீசக்ரம், ஸ்ரீவித்யை, ஸ்ரீதேவி, ஸ்ரீ குரு, உபாஸகன் இவ்வைவரும் ஒரே ப்ரஹ்மஸ்வரூபமென்பதினால் அவர்கள் அபேதமென்பதும் காட்டப்பட்டது. இவ்விதமான தாதாத்ம்யத்தின் ப்ரகாரத்தைப் பற்றி வரிவஸ்யா ரஹஸ்யத்தில் சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கவும்.

> ஸ்தோத்ரகண்டே பஹுவிதா:
> ஸ்துதய: பரிகீர்த்திதா: ||

ஸ்தோத்ரகண்டத்தில் அனேகவிதமான ஸ்தோத்ரங்கள் சொல்லப்பட்டன.

1. பஞ்சமீஸ்தவராஜம் முதலான அனேக விசேஷமான ஸ்தோத்ரங்கள் இதில் சொல்லப்பட்டன.

8. **மந்த்ரிணீ தண்டிநீ தேவ்யோ:**
**ப்ரோக்தே நாமஸஹஸ்ரகே |**
**ந து ஸ்ரீ லலிதாதேவ்யா:**
**ப்ரோக்தம் நாம ஸஹஸ்ரகம் ||**

மந்த்ரிணீதேவி, தண்டினீ தேவி இவர்களுடைய நாம ஸஹஸ்ரங்கள் சொல்லப்பட்டன. ஆயினும் ஸ்ரீ லலிதா தேவியினுடைய நாமஸஹஸ்ரமானது சொல்லப்படவில்லை.

1. இவ்விதம் தனக்குச் சொல்லப்படாத ஒரு ஸஹஸ்ர நாமம் இருப்பதாக அகஸ்த்யர் தன் தபோபலத்தினால் தெரிந்து கொண்டதாக முதல் ச்லோகத்தின் குறிப்புகளில் சொல்லப் பட்டது.

2. மந்த்ரிணீ தேவி அம்பாளுடைய ஸமஸ்தமான ராஜ்ய பாரத்தையும் வஹிக்கும் மந்த்ரி பதவியிலிருப்பவள். ராஜாதி காரத்திற்குத் தேவையான மனனக்ரியை புத்தி ஸாமர்த்தியத் திற்கு-மந்த்ரமென்று பெயர். ராஜச்யாமளா முதலான வேறு பெயர்களுமுண்டு.

3. தண்டிநீ தேவி அம்பாளுடைய சதுரங்க ஸைன்யத் திற்கும் நாயகியாக இருப்பவள். (பிறரை அடக்கும் ஸாதனத் திற்கு - கருவிக்கு - தண்டமென்றுபெயர்) வாராஹீ முதலான வேறு பெயர்களுமுண்டு.

4. இவ்விருவர்களும் அம்பாளுக்கு மட்டும் அடுத்தபடி யானவர்களென்று சொல்லப்படுவார்கள். இவர்களுடைய பெயர்கள் மிகவும் மஹிமை பொருந்தியவைகளென்றும், அவற் றைச் சொன்னாலேயே விசேஷ பலன் உண்டென்றும் சொல்லப் படும்.

மந்த்ரிணீ தேவியின் முக்ய நாமங்கள் 16 பின்வருமாறு:—

‘ஸங்கீத யோகினி ச்யாமா ச்யாமளா மந்த்ரநாயிகா |
மந்த்ரிணீ ஸசிவேசானீ ப்ரதானேசீ சுகப்ரியா ||
வீணாவதீ வைணிகீ ச முத்ரிணீ ப்ரியகப்ரியா |
நீப ப்ரியா கதம்பேசீ கதம்பவன வாஸினீ |
ஸதாமதா ச நாமானி ஷோடசைதானி கும்பஜ ||’

தண்டிநீ தேவியின் முக்ய நாமங்கள் 12 பின்வருமாறு—

‘பஞ்சமீ தண்டநாதா ச ஸங்கேதா ஸமயேச்வரீ |
ததா ஸமயஸங்கேதா வாராஹீ போத்ரிணீ சிவா ||
வார்த்தாளீ ச மஹாஸேனா ப்யாக்ஞாசக்ரேச்வரீ ததா |
அரிக்னீ சேதி ஸம்ப்ரோக்தம் நாமத்வாதசகம் முநே ||’

இவர்களைப்பற்றி ஸஹஸ்ரநாமத்தில் சொல்லியிருப்பதையும் பார்க்கவும்.

5. இதுவரையில் சொல்லப்பட்ட ரஹஸ்ய விஷயங்கள் எல்லாவற்றையும் ஹயக்ரீவர் தனக்குச் சொல்லியிருந்தும்

ஸ்ரீ லலிதாம்பாளுடைய ஸஹஸ்ரநாமத்தைச் சொல்லாமலிருந்து விடவே அதற்கு இருக்கக்கூடிய காரணங்களை அகஸ்த்யர் மேலே சொல்லுகிறார்.

9. தத்ர மே ஸம்சயோ ஜாதோ
ஹயக்ரீவ தயாநிதே |
கிம் வா த்வயா விஸ்ம்ருதம் தத்
ஞாத்வா வா ஸமுபேக்ஷிதம் ||

ஹே ஹயக்ரீவ! தயாநிதே! அதில் (அம்பாளுடைய நாம ஸஹஸ்ரத்தைச் சொல்லாத விஷயத்தில்) எனக்கு ஸந்தேஹம் ஏற்பட்டிருக்கிறது. தாங்கள் (அதைச் சொல்லவேண்டுமென்பதை) மறந்து விட்டீர்களா, அல்லது தெரிந்துதான் உபேக்ஷையாக (அலக்ஷ்யமாக) இருந்து விட்டீர்களா?

10. மம வா யோக்யதா நாஸ்தி
ச்ரோதும் நாம ஸஹஸ்ரகம் |
கிமர்த்தம் பவதா நோக்தம்
தத்ர மே காரணம் வத ||

அல்லது ஒருவேளை நாம ஸஹஸ்ரத்தைக் கேட்க எனக்கு யோக்யதையில்லையா? தங்களால் அது சொல்லப்படாததற்குக் காரணம் சொல்லக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

1. அம்பாளுடைய நாம ஸஹஸ்ரத்தை அகஸ்த்யருக்கு ஹயக்ரீவர் சொல்லாததற்கு இருக்கக்கூடிய நாலு காரணங்களில் மூன்றை அகஸ்த்யர் இந்த இரண்டு ச்லோகங்களில் சொல்லுகிறார்.

2. சொல்லவேண்டியதென்பதை மறந்திருக்கக் கூடுமென்பது முதலாவது. ஆயினும் தன் குருவான ஹயக்ரீவர் ஸர்வக்ஞரானதால் அவ்விதம் மறந்திருக்க மாட்டாரென்று உடனே நிச்சயித்து மேலே சொல்லிய ஸந்தேஹ காரணத்தைத் தள்ளி விட்டு அடுத்ததாக இருக்கக்கூடிய காரணத்தை மேலே சொல்லு கிறார். அதாவது சொல்லவேண்டுமென்ற ஞாபகமிருந்தும் உபேக்ஷையாக இருந்துவிட்டாரோ என்பது. இஷ்டமானதில்

ப்ரவ்ருத்தியில்லாமலும் அனிஷ்டத்திலிருந்து நிவ்ருத்தியில்லாமலும் உதாஸீனமாக (நடுநிலைமையாக) இருப்பதற்கு உபேக்ஷை என்று சொல்லப்படும். அதுவும் காரணமாக இருக்காதென்று மேலே சொல்லப்படுகிறது.

3. மனுஷ்யர்களுக்குள் இருக்கக்கூடிய நாலு முறைகளாகிய மித்ர, சத்ரு, ப்ருத்ய (ஸேவக), உதாஸீன பாவங்களில் சிஷ்யனானவன் ப்ருத்ய பாவத்திலடங்கியவன். அவனுக்கு பக்தி, ஜிக்ஞாஸா (தெரிந்துகொள்ளவேண்டுமென்கிற ஆசை) இவையிருக்குமாகையால் அவனிடம் குருவானவர் உதாஸீனராக இருக்க நியாயமில்லை. அப்படியிருந்தால் குருவானவர் பரமக்ருபாளு என்று சொல்வதற்கு ஹானி ஏற்படுமல்லவா? ஆகையால் அந்தக் காரணமும் ஸரியல்ல என்று தள்ளிவிட்டு, மூன்றாவதான காரணத்தை மேலே சொல்லுகிறார்.

4. ஒருவேளை தனக்கு அந்த ஸஹஸ்ரநாமத்தை உபதேசம் பெறும்படியான யோக்யதையில்லையா என்பது மூன்றாவது காரணம். ('நாஸ்தி' என்ற பதத்தினால் தத்ஸமயம்-தற்காலம், இல்லை என்று ஸந்தேஹப்பட்டது. ஒரு போதுமே கிடையாது என்ற அத்யந்த அபாவம் சொல்லப்படவில்லை. அப்படியிருந்தால் மேலே சொல்லப்படும் நான்காவது காரணம் ஏற்பட ந்யாயமில்லை.) தற்காலம் யோக்யதையில்லாதிருந்தாலும் க்ருபாளுவான குருவானவர் தன் கருணையினால் ப்ருத்யனான தன் சிஷ்யனுக்கு அனுக்ரஹம் செய்து அவனுக்கு யோக்யதையை உண்டாகச் செய்யலாம். எப்படி ஸூர்யனானவன் தாமரை மொட்டாக இருந்தாலும் அதைத் தன்னுடைய கிரணங்களினால் மலரும்படிச் செய்கிறானோ, அம்மாதிரி குருவானவர் விவேக வைராக்யங்களோடு கூடிய வேதாந்த வாக்யங்களால் சிஷ்யனுடைய ஞானத்தை மலரும்படிச் செய்கிறார் என்று சொல்லப்பட்டது.

'தத்தத் விவேக வைராக்ய யுக்த வேதாந்த யுக்திபி: |
ஸ்ரீகுரு: ப்ராபயத்யேவ ந பத்மமபி பத்மதாம் ||
ப்ராபய்ய பத்மதாமேனம் ப்ரபோதயதி தத்க்ஷணாத் |
தஸ்மாத் ஸர்வப்ரயத்னேன ஸேவ்ய: ஸ்ரீகுருபாஸ்கர: ||'

(போதஸாரம்)

(இதில் 'ந பத்மம் அபி பத்மதாம்' என்று சொன்னதினால் யோக்யதையில்லாத சிஷ்யனிடத்திலும் யோக்யதை உண்டு பண்ணி குருவாகிய ஸூர்யன் அவனுடைய புத்தியை மலரும்படி செய்வது சொல்லப்பட்டது.)

ஆகவே குருவானவர் உபதேசம் பெறும்படியான யோக்யதையையும் கொடுத்து உபதேசம் செய்யும் ஸ்வபாவ முடையவராகையால் தனக்கு ஒருவேளை யோக்யதையில்லாமலிருப்பதால் ஹயக்ரீவர் நாம ஸாஹஸ்ரத்தைத் தனக்குச் சொல்லவில்லை என்ற மூன்றாவது காரணத்தையும் அகஸ்த்யர் தானே தள்ளி விட்டு வேறு (நாலாவதான) காரணம் என்ன இருக்கலாம்? என்று தீர்மானம்பண்ண முடியாதவராய் 'கிமர்த்தம்............வத' என்று கேட்கிறார்.

ஸூத உவாச:—

ஸூதர் சொல்லலுற்றார்.

1. முன்னொருகாலம் நைமிசாரண்யத்தில் மஹாஸத்ர யாகம் நடந்தபோது அங்கு வந்திருந்த சௌனகாதி மஹர்ஷிகளுடைய வேண்டுகோளுக்கிணங்கி ஸூதரானவர் ப்ரம்ஹாண்ட் புராணத்தைச் சொன்னதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அகஸ்த்ய, ஹயக்ரீவ ஸம்பாஷணையை அவர் மேலே சொல்லத் தொடங்கினார்.

11. இதி ப்ருஷ்டோ ஹயக்ரீவோ
முனினா கும்ப ஜன்மனா |
ப்ரஹ்ருஷ்டோ வசனம் ப்ராஹ
தாபஸம் கும்பஸம்பவம் ||

இந்தமாதிரி (கும்ப ஜன்மாவாயும் முனியுமான) அகஸ்தியரால் கேழ்க்கப்பட்ட ஹயக்ரீவரானவர் மிகுந்த மகிழச்சியடைந்தவராய் (கும்பஸம்பவரான) அவரைப் பார்த்துச் சொல்லலானார்.

1. 'நாப்ருஷ்ட: கஸ்யசித் ப்ரூயாத் இதி வேதானுசாஸனம் |' என்ற பாரத வசனப்படி கேட்காத சிஷ்யனுக்கு விஷயங்களைச் சொல்வது கூடாது என்று சொல்லப்படும். அதே ச்லோகத்தின் பின்பாதியான,

'அப்ருஷ்டஸ் தஸ்ய தத் ப்ரூயாத் யஸ்ய நேச்சேத் பராபவம்॥'

என்பதில் சொன்னது—கேட்பதற்கு ஸாமர்த்யமில்லாதபோதி லும் ச்ரத்தையுள்ளவனாக இருந்தால் அவ்விதமான சிஷ்யனுக்கு (அவன்) கேட்காமலேயே சொல்லலாம் என்று தாத்பர்யம். ச்ரத்தையில்லாதவனுக்கு உபதேசம் செய்தால் மஹத்தான ஹானி ஏற்படுமென்று அனேக வாக்யங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ச்ரத்தயா அக்நி: ஸமித்யதே ச்ரத்தயா ஹூயதே ஹவி: |' (ச்ருதி)
'அச்ரத்தா பரம: பாப்மா ச்ரத்தா ஹி பரமம் தப: |
தஸ்மாத் அச்ரத்யா தத்தம் ஹவிர் நாச்னந்தி தேவதா: ||
இஷ்ட்வா தத்வாபி வா மூர்க்க: ஸ்வர்கம் ந ஹி ஸ கச்சதி |
சங்கா விஹத சாரித்ரோ ய: ஸ்வாபிப்ராயமாச்ரித: |
சாஸ்த்ராதிக: ஸ்ம்ருதோ மூர்க்கோ தர்மதந்த்ரோபரோதனாத் ||'
(போதாயனர்)

ஆகவே ச்ரத்தையில்லாதவன் கேட்டாலும் சொல்லக் கூடாது என்பதினால் அப்பேர்ப்பட்டவன் கேட்காமலிருந்தால் சொல்லவே கூடாது என்பதும் ஏற்படுகிறது. ச்ரத்தையிருக்கும் பக்ஷத்தில் அவ்விதமான சிஷ்யன் கேட்பதற்கு ஸாமர்த்யமில்லா திருந்தாலும் குருவானவர் அவனிடமிருந்து கேள்வியை அபேக்ஷிக்காமலேயே உபதேசம் செய்யவேண்டுமென்றும் ஏற்படுகிறது.

2. அகஸ்த்யர் செய்த சுச்ரூஷையினால் ஹயக்ரீவருக்கு அவர் மீது அதிகமான ப்ரியம் ஏற்பட்டு இருந்ததினால் உபதேசம் செய்யவேண்டுமென்கிற ஆசையிருந்தது. ஆனால் பக்தி பூர்வகமாய் அவரிடமிருந்து கேள்வி வராததினால் ஹயக்ரீவர் 'நாப்ருஷ்ட: ப்ரூயாத்' (கேட்கப்படாமலிருந்தால் சொல்லக்கூடாது) என்ற வாக்யத்தின் நிஷேதத்திற்கு பயந்து உபதேசம் செய்ய முடியவில்லையே என்ற கவலையிருந்தது. மேலும் அகஸ்த்யர் ச்ரத்தையோடிருப்பதுடன் கேட்பதிலும் ஸாமர்த்யமுடையவராயிருந்தபடியால் அவர் தன்னை ஏன் இதுவரையில் கேட்கவில்லையென்றதினால் அந்தக் கவலை அதிகரித்திருந்தது. இவ்விதம் காலதாமதம் ஏற்பட்டதினால் சங்கடமுடைய மனதோடிருந்த ஹயக்ரீவர் அகஸ்த்யரிடமிருந்து எதிர்பார்த்த

கேள்வியானது வந்தவுடன் ஹயக்ரீவர் கவலை நீங்கி அதிகமான மகிழ்ச்சியடைந்தார் என்று 'ப்ரஹ்ருஷ்ட:' என்பதினால் சொல்லப்பட்டது.

3. 'தாபஸ:' என்ற பதத்தினால் யக்ஞம் முதலான தபஸ்ஸுகளால் ஸமஸ்தமான பாபங்களும் போய் ஞானம் பெற வேண்டுமென்கிற ஆவல் ஏற்பட்டதையும் அதினால் ச்ரத்தை இருப்பதையும் ஆகவே யோக்யதை இருப்பதையும் குறிக்கப்பட்டது.

4. 'கும்பஸம்பவ:' என்ற பதத்தினால் சித்தவ்ருத்தி நிரோதம் ஏற்படுவதற்குக் காரணபூதமான வாயுவ்ருத்தி நிரோத ஸாமர்த்தியம் அகஸ்தியருக்கு இருப்பதையும், அதினாலும் அவருக்கு யோக்யதை இருப்பதையும் குறிக்கப்பட்டது. ரேசகம், பூரகம் இவைகள் எல்லோரும் ஸுலபமாகச்செய்யக்கூடியதாகையாலும் ச்வாஸத்தை அடக்குவதான கும்பகமானது ச்ரமஸாத்யமானதாலும் அதைக் குறிப்பிட்டு இங்கு சொன்னதற்குக் காரணம். (கும்ப-கும்பகத்தில், ஸம்-வெகுகாலம், பவ:-ஸ்திதி நிலை உடையவர் கும்பஸம்பவர்).

12. லோபாமுத்ரபதேऽகஸ்த்ய
ஸாவதாநமநா: ச்ருணு ।
நாம்னாம் ஸஹஸ்ரம் யன்னோக்தம்
காரணம் தத் வதாமி தே ॥

லோபாமுத்ரையின் பதியான ஹே ! அகஸ்த்ய ! அதிக கவனமான மனதுடன் கேள். ஸஹஸ்ரநாமம் உனக்கு நான் இது வரையில் ஏன் சொல்லவில்லை என்பதற்குக் காரணம் சொல்லுகிறேன்.

1. அகஸ்த்யருடைய பத்னிக்கு லோபாமுத்ரா என்று பெயர். மஹா பதிவ்ரதை. முன் சொன்ன (அம்பாளுடைய) பன்னிரண்டு உபாஸகர்களில் ஒருவர். பஞ்சதசாக்ஷரியின் பேதங்களில் ஒன்றான ஹாதிவித்யையின் ரிஷியாக (த்ரஷ்டாவாக) சொல்லப்பட்டவள். அம்பாளுக்கு அவளிடத்தில் அத்யந்த

பிரியம். லலிதா த்ரிசதியின் அவதாரிகையில் அம்பாள் ஹயக்ரீவரைப் பார்த்து த்ரிசதியை அகஸ்த்யருக்கு உபதேசம் பண்ணும்படி ஆக்ஞாபிக்கையில், அதற்கு அவர் லோபாமுத்ரையின் பதியாக இருப்பது ஒரு காரணமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'பத்ன்யஸ்ய லோபாமுத்ராக்யா மாமுபாஸ்தேऽதி பக்தித: I
அயம் ச நிதராம் பக்த: தஸ்மாத் அஸ்ய வதஸ்வ தத் II'

(இவருடைய பத்னியான லோபாமுத்ரையெனப்படுகிறவள் என்னை விசேஷமான பக்தியுடன் உபாஸிக்கிறாள். இவரும் என்னுடைய பரமபக்தர். ஆகையால் நீர் அதை இவருக்குச் சொல்லும்.) பர்த்தாவுக்கு ப்ரியமான தேவதையை பத்னியானவள் ஆராதிப்பது அனுகூலமான தாம்பத்யத்தை (பதி, பத்னிகளுடைய வாழ்க்கையை) கொடுப்பதுடன், அவளுக்கும் உபாஸ்தி செய்வதற்கு வேண்டிய யோக்யதையையும் கொடுக்கும். இத்துடன் பதிக்கு உபாஸ்ய தேவதையிடமிருக்கும் பக்தி விசேஷத்தினால் பத்னியின் ஆனுகூல்யமும் ஏற்படும். இவ்விரண்டும் அகஸ்த்யர், லோபாமுத்ரை இவர்களிடமிருப்பது மேலே சொல்லிய த்ரிசதீ ச்லோகத்திலிருந்து ஏற்படுகிறது

2. அல்லது, அப்பேர்ப்பட்ட விசேஷமான பக்தையாகிய லோபாமுத்ரையின் பதி என்பதினால் அகஸ்த்யருக்கும் ஸ்ரீவித்யை உபதேசமாகியிருக்குமென்றும், அதினால் அவருக்கு இந்த ஸஹஸ்ரநாமத்தைக் கேட்கும்படியான யோக்யதை உண்டென்றும் 'லோபாமுத்ராபதே' என்ற பதத்தினால் சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம். ஏனென்றால் கேவலம் பக்தி, தெரிந்துகொள்வதற்காகக் கேட்பது என்ற இவை இரண்டுமட்டும் உபதேசம் பெறுவதற்குப் போதாது. அவையிருந்தும் ஸ்ரீவித்யோபாஸ்தி இல்லாவிட்டால் உபதேசம் செய்பவரை யோகினிகள் சபித்துவிடுவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே (உபதேசம் பெறுவதற்கு வேண்டிய) வித்யாதிகாரமும் அகஸ்த்யருக்கு இருப்பதாக இந்தப் பதத்தினால் சொல்லப்பட்டது.

3. அல்லது, லோபாமுத்ரா என்ற பதமானது அந்தப் பெயருடைய வித்யையையும் ஸ்ரீமத் த்ரிபுரஸுந்தரியையும் குறிக்கும். அவ்விதமான லோபாமுத்ரையையே பதியாக

(உபாஸ்யமாக) உடையவர் லோபாமுத்ராபதி என்றும் சொல்ல லாம். ஆனால் அகஸ்த்யருடைய பெயராலேயே ஒரு வித்யை இருக்கையில், அவரை இன்னொரு வித்யையின் உபாஸகராகச் சொல்லலாமா என்ற ஸந்தேஹம் ஏற்படக்கூடும். ஆயினும் பஞ்சதசாக்ஷரியின் பேதங்கள் அனேகமிருந்தாலும் அவையெல் லாம் ஒரே தேவதையைக் குறித்த மந்த்ரங்களாகையால் அபேதமென்றுதான் சொல்லவேண்டும். (இதை பாஸ்கரராய ரானவர் பாஷ்யத்தின் மூலத்தில் அனேக ச்ருதி ப்ரமாணங் களைக் கொண்டு காட்டியிருப்பதுடன், ஸேதுபந்தத்தில் மிகச், தெளிவாக இதைப்பற்றிச் சொல்லியிருக்கிறார்.)

ஸாவதான மனா:— அவதானமுள்ள மனதையுடையவ னாய், அவதானம் என்பது இதர விஷயங்களில் ஸஞ்சாரம் செய் யாமலிருப்பது. ஸ்வாரஸ்யமில்லாத காரணங்களே இதுவரை யில் அகஸ்த்யருடைய மனதில் தோன்றியிருப்பதாலும், அவற் றினின்று வேறுபட்டதும் அவருக்குத் தோன்றாததுமான ஒரு காரணத்தைத் தான் சொல்லப்போவதாலும் அது அகஸ் தியருடைய மனதில் நன்றாய்ப் பதியவேண்டுமாகையால் ஹயக் ரீவர் அவரை ஸாவதான மனத்துடன் இருக்கும்படி சொல்லு கிறார்.

13. ரஹஸ்யமிதி மத்வாஹம்
நோக்தவாம்ஸ்தே ந சான்யதா ।
புனச்ச ப்ருச்சஸே பக்த்யா
தஸ்மாத் தத் தே வதாம்யஹம் ॥

அது ரஹஸ்யமென்று நினைத்து நான் உனக்குச்சொல்லவில்லை யே தவிர வேறுவிதமான காரணமில்லை. திரும்பவும் நீ பக்தியோடு கேட்பதினால் நான் அதை உனக்குச் சொல்லுகிறேன்.

1. ஒரு விஷயமானது வெளிப்படையானதாக இருந்தால் அதைச் சொல்வதற்கு ப்ரச்னம் (கேட்பது), பக்தி இவையிருக் கின்றனவா அல்லவா என்று பார்க்கத் தேவையில்லை. அது ரஹ ஸ்யமானதாயிருந்தால் தான், அவை இரண்டும் இருக்கின்றனவா

என்ற கேள்வி ஏற்படும். இவ்விதம் பக்திபூர்வகமான ப்ரச்னத்திற்கும் உபதேசத்திற்கும் இருக்கும் ஸம்பந்தமானது இந்த ச்லோகத்தில் வெளியிடப்பட்டது.

2. தே - (கேட்காமலிருந்த) உனக்கு என்று அர்த்தம். ந அன்யதா - நீ சொன்ன காரணங்களுக்காக அல்ல. அவை உனக்கே அஸ்வாரஸ்யங்களாகத் தோன்றிவிட்டனவே! என்று தாத்பர்யம் பக்த்யா - பக்திபூர்வகமாய், தஸ்மாத் - பக்திபூர்வகமான ப்ரச்னம் இல்லையென்ற இடையூறு நீக்கப்பட்டதால், தத் - லலிதா நாமஸஹஸ்ரம்.

14. ப்ரூயாத் சிஷ்யாய பக்தாய
ரஹஸ்யமபி தேசிக: ।
பவதா ந ப்ரதேயம் ஸ்யாத்
அபக்தாய கதாசன ॥

15. ந சடாய ந துஷ்டாய நாவிச்வாஸாய கர்ஹிசித்

குருவானவர் ரஹஸ்யமான விஷயத்தையும் பக்தியுள்ள சிஷ்யனிடத்தில் சொல்லலாம். ஆகையால் உன்னாலும் இது பக்தியில்லாதவனிடம் ஒருபோதும் சொல்லப்படக்கூடாது. வஞ்சகனிடத்திலும், துஷ்டனிடத்திலும், நம்பிக்கையில்லாதவனிடத்திலும் ஒருபோதும் சொல்லப்படக்கூடாது.

1. தத்வம் தெரிந்துகொள்ளவேணுமென்ற ஆசையோடு கூடிய சிஷ்யர்களுடன் குருவானவர் இருக்கும்போது, ஒரு சிஷ்யன் ஏதாவது ரஹஸ்யமான விஷயத்தைத் தனக்குச் சொல்லவேண்டுமென்று பிரார்த்தித்தால், அப்போது அங்கேயிருக்கும் மற்றவர்களும் சிஷ்யர்களாக இருந்தபோதிலும், குருவானவர் அந்த சிஷ்யனுக்குத் தனியாக (இதரர்கள் இல்லாத இடத்தில்) உபதேசம் செய்யவேண்டுமென்பதை 'சிஷ்யாய' என்ற பதத்தினுல் குறிக்கப்பட்டது. (உபதேசம் செய்யும்போது குருவைத் தவிர்த்து சிஷ்யன் மட்டும் தான் இருப்பதைச் சொல்லப்பட்டது.)

2. இவ்விதம் உபதேசம் செய்யும் நியமத்தைச் சொல்லி விட்டுப் பிறகு அகஸ்த்யர் தான் திரும்பவும் பிறர்களுக்கு உப தேசம் செய்யும்போது அதின்படி நடந்துகொள்ளவேண்டு மென்பதை ஹயக்ரீவர் சொல்லுகிறார்.

3. 'சிஷ்யாய பக்தாய'—இதிலிருந்து சிஷ்யன் கேட்டா லும் அவன் பக்தியில்லாதவனாயிருந்தால் உபதேசம் செய்யக் கூடாது என்று ஏற்படுகிறது. மேலும், பக்தியிருந்தும் கேட்கும் ஸாமர்த்யமில்லாததினால் கேட்காதிருக்கும் சிஷ்யனுக்கு (அவன் கேட்காவிட்டாலும்) உபதேசம் செய்யலாமென்பதும் ஸித்திக் கிறது.

4. அபக்தன் (பக்தியில்லாதவன்) யார் என்பதைச் சொல் லும் ச்ருதி வாக்யத்தை அனுஸரித்து அவனுடைய லக்ஷணங் களை மேலே சொல்லுகிறார். 'ந சடாய ந துஷ்டாய ந அவிச்வா ஸாய' என்று.

5. 'வித்யா ஹ வை ப்ராம்ஹணம் ஆஜகாம, கோபாய மா சேவதிஷ்டே ஹமஸ்மி | அஸூயகாயான்ருஜவேயதாய ந மா ப்ரூயா, வீர்யவதீ ததா ஸ்யாம் ||' என்பது ச்ருதிவாக்யம். (வித்யையானது ப்ராம்ஹணனிடம் வந்து என்னை நீ ரஹஸ்யமாக வைத்துக் காப்பாற்று. உனக்கு நான் எதையும் கொடுக்கக் கூடிய களஞ்சியமாக இருக்கிறேன். என்னை நீ அஸூயையுள்ள வனுக்கும், ஸத்யமில்லாதவனுக்கும், ச்ரத்தையில்லாதவனுக்கும் சொல்லாதே. அப்போதுதான் நான் வீர்யத்தோடு இருப்பேன் என்று சொன்னதாக ச்ருதியில் சொல்லப்பட்டது.)

6. மேலேவந்த ச்ருதிவாக்யத்தில் சொல்லப்பட்ட அயத னென்பவனை இங்கு சடனென்றும், அஸூயகனென்பவனை இங்கு துஷ்டனென்றும், அன்ருஜு என்பவனை அவிச்வாஸ னென்றும் சொல்லப்பட்டது. தான் விஷயத்தை குரு மூல மாகவே தெரிந்துகொண்டபோதிலும், அது தனக்கு ஏற்கனவே தெரிந்த விஷயமென்றுவது, இப்போது குருவினிடம் உபதேசம் பெற்றபோதும் தான் புரிந்துகொள்ளவில்லையென்றுவது காட்ட முயல்கிறவனை சடனென்றும் அயதனென்றும் சொன்னது.

குருவினிடம் விஷயத்தைத் தெரிந்துகொண்டதை அவர் முன்பாகக் காட்டியும் அவர் சொல்லியதைப் பற்றிப் பிறவிடங்களில் தூஷித்துக் குற்றம் சொல்லிக்கொண்டு திரிகிறவனை துஷ்டனென்றும், அஸூயகனென்றும் சொன்னது. குருவினால் சொல்லப்பட்டவையெல்லாம் யதார்த்தம் என்பதான நம்பிக்கையில்லாதவனை அவிச்வாஸனென்றும், அன்ருஜு என்றும் சொன்னது. (அல்லது, அயதன்—அந்த:= சுத்தியில்லாதவன்—என்பவனை இங்கு துஷ்டன் என்று சொன்னதாகவும் சொல்லலாம்.)

ஸ்ரீ மாத்ரு பக்தி யுக்தாய
ஸ்ரீ வித்யா ராஜவேதினே ||

16. உபாஸகாய சுத்தாய தேயம் நாமஸஹஸ்ரகம் |

ஸ்ரீ மாதாவினிடத்தில் பக்தியுள்ளவனும், ஸ்ரீ வித்யா ராஜத்தைத் தெரிந்தவனும், உபாஸகனும், சுத்தனுமாக இருப்பவனுக்குத்தான் இந்த ஸஹஸ்ரநாமத்தை கொடுக்கலாம் (சொல்லலாம்).

1. முந்திய ச்லோகத்தில் உபதேசத்திற்கு அர்ஹமில்லாதவர்களைப் பற்றிச் சொல்லிவிட்டு, ஸம்ப்ரதாயமானது தொடர்ச்சியாக வராமல் போய்விடப்போகிறதே என்பதற்காக இந்த ச்லோகத்தில் உபதேசத்திற்கு அர்ஹமாயிருப்பவர்களைப்பற்றிச் சொல்லப்பட்டது.

2. பக்தி தந்த்ரத்தில் 'ஸா பராநுரக்திரீச்வரே' என்பது முதலான அதிகரணங்களில் நிர்ணயிக்கப்பட்ட லக்ஷணங்களோடு கூடிய சித்த வ்ருத்திக்கு பக்தியென்றுபெயர். அவ்விதமான பக்தியுடையவனை ('ஸ்ரீமாத்ரு பக்தியுக்தாய' என்று) சொன்னதினால் பக்தியில்லாதவர்களைத் தள்ளப்பட்டது.

3. கேவலம் பக்திமட்டுமிருந்தால் போதாதென்பதைக் குறிப்பதற்காக, பின்னும் சில விசேஷணங்கள் சொல்லப்பட்டன. ஸ்ரீ வித்யா ராஜமான பஞ்சதசியை குருமுகமாக அறிந்திருக்க வேண்டும். நித்ய, நைமித்திகங்களான கர்மாக்களை ஆசரிப்பதின் மூலமாக எங்கிலும் தேவியோடு அபேத பாவனையுள்ள

மானஸிக க்ரியைக்கு உபாஸ்தியென்றும், அவ்வித உபாஸ்தியுடையவனை உபாஸகனென்றும் சொல்லப்படும். சுத்தனென்பதினால் சாட்யம் முதலான தோஷங்களில்லாதவனைச் சொல்லப்பட்டது.

4. இந்த ஸஹஸ்ரநாமமானது மிகவும் ரஹஸ்யமானதாலும், மிகவும் முக்யமானதாலும், அதினால் அம்பாளுடைய ப்ரீதி ஏற்படுவதினால் அத்யாவச்யமானதாலும், அதை உபதேசம் செய்யும் விஷயத்தில் மேலே சொல்லிய நிர்பந்தங்கள் ந்யாயமானவை என்று (நாமங்களின் ஆரம்பம் வரையிலுள்ள) மேலே வரும் ச்லோகங்களில் காட்டுகிறார்.

யானி நாமஸஹஸ்ராணி ஸத்ய:
ஸித்திப்ரதானி வை ॥

17. தந்த்ரேஷு லலிதா தேவ்யா:
தேஷு முக்யமிதம் முனே ।

ஹே முனே! தந்த்ரங்களில் உடனே ஸித்தியைக் கொடுப்பதாகச் சொல்லப்பட்ட ஸஹஸ்ர நாமங்களில் லலிதாதேவியின் இந்த ஸஹஸ்ரநாமமானது முக்யமானது.

1. அம்பாளுடைய நாம ஸஹஸ்ரங்கள் கோடிக்கணக்கானவை என்பதாக

'தேவீ நாம ஸஹஸ்ராணி கோடிச: ஸந்தி கும்பஜ ।'

என்று இதின் பலச்ருதி பாகத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது. அவை 64 தந்த்ரங்களிலும், புராணங்களிலும் காணப்படுகின்றன. அவைகளுக்குள் உடனே பலத்தைக் கொடுப்பவையென்பதாக, பத்து ஸஹஸ்ர நாமங்களைப்பற்றி ஷ்டி ச்லோகத்தின் பின்பாதியில்,

'தேஷு முக்யம் தசவிதம் நாம ஸாஹஸ்ரம் உச்யதே ॥'

என்று சொல்லப்பட்டது. இந்த பத்து ஸஹஸ்ர நாமங்களின் பெயர்கள் அந்தந்த ரூப விசேஷத்தின் பெயர்களின் முதல் எழுத்துக்களைச் சேர்த்து,

'ஏதே தசஸ்தவா சங், கா, ச்யா, ல, கா, பா, ல, ரா, ஸ, பா |'
என்பதாகச் சொல்லப்பட்டது. அதாவது, கங்கா, காயத்ரீ, ச்யாமளா, லக்ஷ்மீ, காளீ, பாலா, லலிதா, ராஜராஜேச்வரீ, ஸரஸ்வதீ, பவானீ ஸஹஸ்ரநாமங்கள். அவற்றிற்குள் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமமே மிகவும் ச்ரேஷ்டமானதென்று இங்கு சொல்லப்பட்டது.

ஸ்ரீ வித்யைவ து மந்த்ராணாம்—
    தத்ர காதிர்யதா பரா ||
18. புராணாம் ஸ்ரீபுரமிவ சக்தீனாம் லலிதா யதா |
ஸ்ரீ வித்யோபாஸகானாம்ச
    யதா தேவோ வர: சிவ: ||
19. ததா நாம ஸஹஸ்ரேஷு
    வரமேதத் ப்ரகீர்த்திதம் |

ஸமஸ்தமான மந்த்ரங்களுக்குள் ஸ்ரீ வித்யை எப்படி ப்ரதானமோ, அந்த ஸ்ரீ வித்யையின் பேதங்களிலும் காதி என்று சொல்லப்படும் மந்த்ரமானது ப்ரதானமோ, புரங்களில் ஸ்ரீபுரம் எப்படியோ, சக்திகளுக்குள் லலிதை எப்படியோ, ஸ்ரீ வித்யையின் உபாஸகர்களுக்குள் பரமசிவன் எப்படி ச்ரேஷ்டமானவரோ, அதேமாதிரி, ஸஹஸ்ரநாமங்களில் இதுதான் முக்யமானதேன்று சொல்லப்பட்டிருக்கிறது.

1. புருஷ தேவதையைக் குறித்தது 'மந்த்ரம்' என்றும் ஸ்த்ரீ தேவதையைக் குறித்தது 'வித்யை' என்றும் சொல்லப்படும். இவ்விதம் மந்த்ரம், வித்யை என்பவைகளின் பேதமிருந்த போதிலும், மந்த்ரங்களுக்குள் ஸ்ரீ வித்யையானது ச்ரேஷ்டமானது என்று சொன்னதற்குக் காரணம், ஸ்ரீ வித்யையின் மூலமாய் உபாஸிக்கப்படும் தைவமானது சிவ, சக்திகளின் ஸாமரஸ்ய ரூபமாயிருப்பதால், ஸ்ரீ வித்யையும் வித்யை, மந்த்ரம் இந்த உபயாத்மகமாக இருக்கிறது என்பது.

2. இந்தக் காரணத்தினாலே தான் அம்பாளை த்யானம் செய்யும்போது இஷ்டப்படி புருஷ ரூபமாகவும், ஸ்த்ரீ ரூபமாகவும்

அல்லது நிஷ்களமாகவும் இருப்பதாக த்யானம் பண்ணலா மென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'பும் ரூபம் வா ஸ்மரேத் தேவி ஸ்த்ரீ ரூபம் வா விசிந்தயேத் |
அதவா நிஷ்களம் த்யாயேத் ஸச்சிதானந்த லக்ஷணம் ||'

இதை அநுஸரித்து (இந்த ஸஹஸ்ரநாமம் போன்ற) மாலாமந்த்ரத்திலடங்கிய மந்த்ரங்களும் ஸ்த்ரீ, பும் பேதங்களுடையவையாக இருக்கின்றன. உதாரணமாக, இந்த ஸஹஸ்ரநாமத்தில் குணநிதி: என்பது முதலான பும்லிங்க நாமங்களும், ஸ்ரீமாதா என்பது முதலான ஸ்த்ரீ லிங்க நாமங்களும், பரம் ஜ்யோதி: முதலான நபும்ஸக லிங்க நாமங்களுமிருக்கின்றன.

3. மந்த்ரங்களின் அக்ஷரங்களுடைய கணக்குப்படி அவைகளுக்குப் பெயர் உண்டு. ஒரு அக்ஷரமுடையது பிண்டம், இரண்டு அக்ஷரங்களுடையது கர்த்தரீ, மூன்று முதல் ஒன்பது அக்ஷரங்களுடையவை பீஜம், பத்து முதல் இருபது அக்ஷரங்களுடையவை மந்த்ரம், அதற்கு மேல்பட்டவைகளெல்லாம் மாலா.

'மந்த்ரா: ஏகாக்ஷரா: பிண்டா: கர்த்தர்யோ த்வ்யக்ஷரா: மதா: |
வர்ணத்ரயம் ஸமாரப்ய நவார்ணவதி பீஜகா: ||
ததோ தசார்ணமாரப்ய யாவத் விம்சதி மந்த்ரகா: |
தத ஊர்த்வம் கதா மாலா: தாஸு பேதோ ந வித்யதே ||'

(நித்யா தந்த்ரம்)

இதிலிருந்து பஞ்சதசியானது கூட த்ரயாத்மகமாக இருந்தபோதிலும், (பதினைந்து ஸ்வரங்களோடு கூடிய) பதினைந்து அக்ஷரங்களுடையதாகையால், மந்த்ரம் என்று ஏற்படுகிறது. ஆகவே மந்த்ரங்களுக்குள் ஸ்ரீ வித்யையானது ச்ரேஷ்டமானது என்று சொல்வதானது, இந்த அர்த்தத்திலும் பொருத்தமென்று ஏற்படுகிறது.

4. காதி: - க என்ற அக்ஷரத்தை தன் பெயரில் முதலாக உடையவள். காளீ சக்தி என்று சொல்லலாம் அல்லது தந்த்ர ராஜத்தில்,

'காதி ஸம்க்ஞா பவத் ரூபா ஸா சக்தி: ஸர்வஸித்தயே |'

என்று சொல்லப்பட்ட காதி என்ற சக்தியோடு அபின்னமாயிருப்பவள் என்றும் சொல்லலாம்.

5. ஏற்கனவே சொல்லப்பட்டபடி ஸ்ரீ வித்யையின் பேதங்கள் பன்னிரண்டில், (க என்ற அக்ஷரத்தை முதலெழுத்தாக உடைய) காதி என்பதும், (ஹ என்ற அக்ஷரத்தை முதலெழுத்தாக உடைய) ஹாதி என்பதும் முக்யமானவை. அவ்விரண்டிற்குள்ளும் காதி என்பதுதான் முக்யமானதென்று இங்கு சொல்லப்பட்டது.

6. காதி வித்யையானது அதர்வண வேதத்திலிருக்கும் த்ரைபுரஸூக்தத்தில்,

'காமோ யோனி: கமலா வஜ்ரபாணி:
குஹா ஹஸா மாதரிச்வாப்ர மிந்த்ர: |
புனர்குஹா ஸகலா மாயயா ச
புரூச்யேஷா விச்வமாதா திவித்யா ||'

என்ற ருக்கில் குறிக்கப்பட்டிருக்கிறது.

7. வெவ்வேறு தந்த்ரங்களில் வெவ்வேறு வித்யைகள் குறிக்கப்பட்டிருந்தபோதிலும், அவைகளால் உபாஸிக்கப்படும் தைவம் ஒன்றேயாதலால், அந்த வித்யைகளும் ஒன்றே. ஆயினும் அந்தந்த வித்யையின் உபாஸகர்களுடைய ருசியை அனுஸரித்து, அவைகளுக்கு தாரதம்யம் இருப்பதை இங்கு 'தத்ர காதிர் யதா பரா' என்பதினால் சொல்லப்பட்டது. காதி வித்யையின் ச்ரேஷ்டத்தைப்பற்றி இங்கு சொல்லப்பட்டிருப்பதுடன் அதற்கு வேறு காரணங்களுமிருக்கின்றன. இவற்றைப்பற்றி பாஷ்யத்தின் மூலத்திலும், வரிவஸ்யா ரஹஸ்யம், ஸேதுபந்தம் என்ற க்ரந்தங்களிலும் பாஸ்கரராயர் விவரமாக பரிசீலனை செய்திருப்பதால், தேவையுள்ளவர்கள் அவற்றில் பார்த்துக்கொள்ளலாம்.

8. உபாஸிக்கப்படும் தேவதையோடு அபேத பாவத்தை அடைவதுதான் உபாஸனையின் பரமமான பலன். பரமசிவன் எப்போதும் அம்பாளுடன் ஸாமரஸ்ய பாவத்தையடைந்து அபேதமாயிருப்பதால், அவரை ஸ்ரீ வித்யோபாஸகர்களில் முக்யமானவரென்று இங்கு சொல்லப்பட்டது. மேலும், அவரே அம்பாளை உபாஸிப்பதாக,

'சம்பு: பூஜயதே தேவீம் மந்த்ர சக்திமயீம் சுபாம் |'

என்று சொல்லப்பட்டிருப்பதுடன் குருமண்டலத்தில் அவருடைய பெயரே ஆதியாகச் சொல்லப்பட்டு வருகிறது. இதனால்

தான் அவருக்கு ஆதிகுரு, ஆதிநாதர், என்பதான பெயர்களும் ஏற்பட்டது.

9. தேவியோடு அபின்னமாயிருப்பதாக, த்ருடமாய் அநுஸந்தானம் பண்ணுவதினால், குருவுக்கு தேவியோடு அபேதபாவம் ஏற்படுகிறது. ஆகவே அவ்விதமான அநுஸந்தானத்தில், பலத்தினால் சிஷ்யனுக்கு குருவோடு அபேதபாவ மேற்பட்டவுடன் அதின் மூலமாக, அவனுக்கும் தேவியோடு அபேதபாவம் ஏற்படும். உபாஸனையின் முக்ய பலனான அபேதபாவமானது இவ்விதம் குருவின் மூலமாகவேதான் ஏற்படக்கூடியதென்பதான ஸித்தாந்த ரஹஸ்யத்தை இங்கு,

'ஸ்ரீவித்யோபாஸகானும் ச யதா தேவோ வர: சிவ: |'
என்பதினால் குறிக்கப்பட்டது.

10. சிவன் என்று சொல்லப்பட்டவர் ஸாமான்யமான (குணியான) ருத்ரன் முதலானவர்களல்ல என்பதைக் காட்டுவதற்காக, 'வர: சிவ:'—அதாவது, பரமசிவன் என்று சொல்லப் பட்டது.

யதாஸ்ய படநாத் தேவீ ப்ரீயதே லலிதாம்பிகா ||
20. அந்ய நாம ஸஹஸ்ரஸ்ய
பாடாந்ந ப்ரீயதே ததா |
ஸ்ரீமாது: ப்ரீதயே தஸ்மாத்
அநிசம் கீர்த்தயேத் இதம் ||

லலிதாம்பிகையானவள் (பக்தன்) இந்த ஸஹஸ்ரநாமத்தைச் சொன்னால், ப்ரீதி அடைகிற அளவு, மற்ற நாம ஸஹஸ்ரத்தைச் சொல்வதினால் அடைகிறதில்லை.

ஆகையால் (மேலேசொல்லிய காரணங்களினால்) அம்பாளுடைய ப்ரீதி ஏற்படுவதற்காக, இந்த ஸஹஸ்ரநாமத்தையே எப்போதும் கீர்த்தனம் பண்ணவேண்டும்.

1. நாம ஸஹஸ்ரங்களுக்குள் இந்த ஸஹஸ்ரநாமம் தான் முக்யமானதென்று (முந்திய ச்லோகத்தில்) சொல்லியிருப்பதற்குக் காரணம் இதில் சொல்லப்படுகிறது. அம்பாளுடைய ப்ரீதியை ஸம்பாதிப்பதற்கு, இதற்கு ஸமமான ஸாதனம்

(உபாயம்) வேறு யாதொன்று மில்லையாகையால், இதின் முக்யத்வம் ஏற்படுகிறது.

2. 'யதா' என்பதினால், எல்லையில்லாத ப்ரீதி ஏற்படுவது சொல்லப்பட்டது.

3. 'அந்ய நாமஸஹஸ்ரம்' என்பதினால் சிவன், விஷ்ணு முதலான இதர தேவதைகளுடைய நாமஸஹஸ்ரம், அல்லது இதைத்தவிர்த்து வேறு இருக்கும் (அம்பாளுடைய) நாமஸஹஸ்ரம் என்றும் சொல்லலாம்.

4. இதற்குமேல் நாமஸஹஸ்ரத்தைப் படனம் பண்ணு வதைப்பற்றி, 'ஸ்ரீமாது: ப்ரீதயே..........கீர்த்தயேத் இதம்' என்று சொல்லுகிறார். கிடைக்கவேண்டிய பலன் ஸ்ரீ மாதாவி னுடைய ப்ரீதி. அது கிடைப்பதற்கு ஸாதனம் கீர்த்தனம். அந்த கீர்த்தனத்தில் கர்மாவாக இருப்பது நாமஸஹஸ்ரம். இங்கு சொல்லப்பட்ட விஷயங்கள் இரண்டு. அதாவது அம்பாளுடைய இந்த நாமஸஹஸ்ரத்தைக் கீர்த்தனம் செய்யவேண்டியது. அதினால் அம்பாளுடைய ப்ரீதியை ஸம்பாதிக்கவேண்டியது. இந்த இரண்டு விதிகளையும் சேர்த்து, மஹாவாக்யமாக இந்த நாமஸஹஸ்ரத்தின் கீர்த்தனையினால், அம்பாளுடைய ப்ரீதியை ஸம்பாதிக்கவேண்டியது என்று தீர்மானமாக ஏற்படுகிறது.

5. கீர்த்தனம் என்பது வார்த்தைகளை வெளியிட்டுச் சொல்வதான வாசிகத்தையும், அவைகளை மனதினால் ஸ்மரிப்பதான மானஸிகத்தையும் குறிக்கும். நாமங்களைச் சொல்வதினால் ஏற்படுவது மாதிரி, நாமங்களை ஸ்மரித்தாலேயே பலன் ஏற்படுகிறது என்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

6. 'அநிசம்' என்பதினால் உயிருள்ளவரையில் கீர்த்தனம் பண்ணவேண்டுமென்று சொல்லப்பட்டது. ஆகையினால் இந்த நாமஸஹஸ்ரத்தின் கீர்த்தனமானது அக்னிஹோத்ரம் மாதிரி நித்யம், காம்யம், என்ற இருவிதமான ரூபங்களுள்ள கர்மா என்று ஏற்படுகிறது.

இவ்விதம் கேவலம் நாம கீர்த்தனத்திற்கே இருக்கும் பலனைச் சொல்லிவிட்டு அதை இதர கர்மாக்களுடன் சேர்ந்து செய்வதினால் ஏற்படும் பலனைப்பற்றி இனி சொல்லுகிறார்.

21. பில்வபத்ரை: சக்ரராஜே,
யோऽர்ச்சயேத் லலிதாம்பிகாம் |
பத்மைர் வா துளஸீபத்ரை:,
ஏபிர் நாமஸஹஸ்ரகை: ||

22. ஸத்ய: ப்ரஸாதம் குருதே,
தத்ர ஸிம்ஹாஸநேச்வரீ |

பில்வபத்ரங்கள், அல்லது தாமரஸபுஷ்ப்பங்கள் அல்லது துளஸீதளங்கள் இவைகளைக்கொண்டு இந்த ஸஹஸ்ரநாமங்களால் லலிதாம்பாளை ஸ்ரீ சக்ரத்தில் யார் அர்ச்சனை செய்கிறானோ அப்போது அவனுக்கு ஸிம்ஹாஸநேச்வரியான அம்பாள் உடனே அனுக்ரஹம் செய்கிறாள்.

1. 'தத்ர ஸிம்ஹாஸநேச்வரீ' என்பதற்கு பதிலாக 'ஸ்ரீமத் ஸிம்ஹாஸநேச்வரீ' என்ற பாடாந்தரம் உண்டு.

2. ஏற்கனவே சொல்லப்பட்டபடி பூஜையென்பதானது அந்தர்யாகமென்றும் பஹிர்யாகமென்றும் இருவகைப்பட்டிருந்த போதிலும் இவ்விரண்டு விதமான பூஜனங்களிலும் பில்வ பத்ரங்கள் முதலான ஸாதனங்களினால் சக்ர ராஜம் முதலான அதிகரணங்களில் (இடங்களில்) பூஜை செய்யவேண்டியது என்று தாத்பர்யம்.

3. நாம ஸஹஸ்ரகை:— அர்ச்சனத்தை ஆச்ரயித்திருக்கும் ஆயிரம் நாமங்களின் கீர்த்தனத்தினால் அம்பாளுடைய ப்ரஸாதமானது ஏற்படுவதாக பாவிக்கவேண்டும். எல்லா மஹிமையும் நாம கீர்த்தனத்திற்குத் தான்.

4. ஸ்ரீ சக்ர பூஜையில் துளஸீ, பில்வபத்ரங்களை உபயோகிக்கக் கூடாது என்பதாக

"துளஸீ பில்வபத்ராணி தாத்ரீபத்ராணி பார்வதி |
அர்ச்சனே சக்ர ராஜஸ்ய நோசிதான்யேவ ஸர்வதா ||

என்று ருத்ரயாமளத்தில் சொல்லியிருந்தபோதிலும் இங்கே இந்த ஸஹஸ்ரநாமங்களால் ஸ்ரீசக்ரத்தில் அந்த பத்ரங்களைக் கொண்டு பூஜை செய்வதானது விசேஷ பலனோடு கூடியிருப்பதாகச் சொல்லப்பட்டிருப்பதால், ருத்ரயாமளத்தில் சொல்லப்

பட்ட நிஷேதமானது ஸ்ரீ சக்ரத்தில் செய்யப்படும் வேறுவிதமான பூஜைகளைப் பற்றியது என்பது ஏற்படுகிறது.

5. ஸத்ய: ப்ரஸாதம் குருதே— அம்பாள் உடனேயே ப்ரஸாதத்தைச் செய்கிருள் என்பதினுல் பக்தனும் உடனேயே ப்ரஸாதத்தை எதிர்பார்க்கலாமென்றும் ஏற்படுகிறது.

சக்ராதிராஜ மப்யர்ச்ய
ஜப்த்வா பஞ்சதசா॥க்ஷரீம் |
23. ஜபாந்தே கீர்த்தயேந்நித்யம்
இதம் நாம ஸஹஸ்ரகம் ||

தினந்தோறும் ஸ்ரீசக்ரத்தை அர்ச்சித்து பஞ்சதசாக்ஷரியை ஜபம் செய்து அந்த ஜபத்திற்குப் பிறகு இந்த நாமஸஹஸ்ரத்தை சொல்லவேண்டியது.

1. 'ஸ்ரீமாது: ப்ரீதயே தஸ்மாத் அநிசம் கீர்த்தயேத்'— அம்பாளுடைய ப்ரீதிக்காக இதை எப்போதும் சொல்லவேண்டும்— என்று ஏற்கனவே சொன்னதில் அம்மாதிரி உயிருள்ளவரையில் கீர்த்தனம் செய்வது எப்படியென்று இதில் சொல்லப்பட்டது.

2. தினந்தோறும், அர்ச்சனை செய்து அதற்குப் பிறகு நித்யஜபம் முடிந்த பிறகு நாமஸஹஸ்ர கீர்த்தனம் ஒரு தடவை செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டது. அர்ச்சனை, ஜபம், நாமகீர்த்தனம் இவை ஒவ்வொன்று மட்டும் செய்தால் தனித்தனியான பலன் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே இவை மூன்றும் செய்தால் எது எதற்குப் பிறகு செய்யவேண்டுமென்ற காலத்தின் சேர்க்கையானது மட்டும் இங்கு சொல்லப்பட்டதே தவிர ஒன்றைச் செய்துவிட்டுத்தான் அதற்குமேல் மற்றொன்றைச் செய்யலாமென்பது சொல்லப்படவில்லை. ஒருக்கால் முதலிரண்டும் செய்யமுடியாமலிருந்தால் நாமகீர்த்தனம் மட்டும் செய்யலாமா, அப்படிச்செய்தால் என்ன பலன் என்பது அடுத்தாற்போல் சொல்லப்படுகிறது.

ஜப பூஜாத்யசக்தோऽபி
படேந்நாம ஸஹஸ்ரகம் |

24. ஸாங்கார்ச்சநே ஸாங்க ஜபே
யத் பலம் தத் அவாப்நுயாத் ||

ஜபம். பூஜை முதலானவைகளைச் செய்ய அசக்தனுயிருந்தாலும் இந்த நாமஸஹஸ்ரத்தைச் சொல்லவேண்டும். அப்படிச் சொன்னால் ஸமஸ்த அங்கங்களோடு கூடிய அர்ச்சனம், ஜபம் இவைகளைச் செய்வதினால் என்ன பலன் ஏற்படுமோ அந்த பலனை அடையலாம்.

1. ஜப பூஜாதிகளென்பதினால் ந்யாஸம் முதலியவைகளும் சேர்த்துச் சொல்லப்பட்டன.

2. உபாஸனைக்கு அர்ச்சனம், ஜபம், நாம கீர்த்தனம் இவையெல்லாம் அங்கங்கள். உபாஸனையானது அங்கி. இவையெல்லாம் நித்யகர்மாக்களாகச் சேர்க்கப்பட்டிருக்கையில் அசக்தத்தினால் ஜபாதிகளைச் செய்யமுடியாமலிருக்கும்போது (அவைகளுக்கு அடுத்ததான காலம் என்பது ஏற்படாமலிருந்தாலும்) நாமஸங்கீர்த்தனத்தைச் செய்யவேண்டிய காலமென்பது இருப்பதால் அதை அவச்யம் செய்தாகவேண்டுமென்றே இங்கு சொல்லப்பட்டது.

3. ஆனால் இவ்விதம் நாமஸங்கீர்த்தனம் மட்டும் செய்தாலே ஜப, பூஜாதிகளின் பலன் ஏற்படும் என்று சொன்னது சக்தர்களைக் குறித்தா, அசக்தர்களைக் குறித்தா என்று விசாரிக்கும்போது சக்தனுயிருந்தால் எல்லாம் நித்யகர்மாவாகையால் செய்துதான் தீரவேண்டும். அசக்தனுயிருந்தால் அவன் ஒன்றையும் செய்ய முடியாது. செய்யும்படி சொல்வது நியாயமும் பிரயோஜனமுமற்ற காரியம். ஆகவே இது யாரைப்பற்றி என்றால்— ந்யாஸம், அர்ச்சனை, ஜபம், நாமகீர்த்தனம் இவை நான்கில் ஒன்றைத்தான் செய்வதற்கு சக்தியிருந்தால் எவைகளை விட்டுவிட்டு எதைச் செய்வது என்று வரும்போது, அப்போது, முதல் மூன்றையும் விட்டுவிட்டு, நாமகீர்த்தனத்தை மட்டும் செய்தால் மற்ற மூன்றையும் செய்வதின் பலனும் கிடைக்கும் என்று சொல்லப்பட்டது. அதாவது, நாமகீர்த்தனமானது மற்ற மூன்றுக்கும் ப்ரதிநிதி என்பதாகச் சொல்லப்பட்டது.

4. இதேமாதிரி ஸத்ரயாகம் செய்ய தீக்ஷையோடிருக்கும்

போது அது செய்யமுடியாமல் இடைஞ்சல் ஏற்பட்டால் விச்வஜித் என்ற யாகம் செய்யலாம் என்பதாக

'யதி ஸத்ராய தீக்ஷிதாநாம் ஸாம்யுத்திஷ்டா ஸேத் ஸோமமபஜ்ய விச்வஜிதா யஜேத |'

என்று ஒரு வாக்யமிருக்கிறது. அப்போது ஸத்ரயாகத்திற்கு விச்வஜித் யாகமானது ப்ரதிநிதியென்று சொல்லப்பட்டது. ஆயினும் அப்படி ப்ரதிநிதியாயிருந்தாலும் விச்வஜித் யாகத்தை செய்தால் ஸத்ரயாகம் செய்த பலன் உண்டு என்று சொல்லப்படாததினால் அதினுடைய பலன் ஏற்படாது. இந்த இடத்திலோ, நாமகீர்த்தனம் செய்தால் மற்ற மூன்றையும் செய்வதின் பலனும் கிடைக்குமென்று சொல்லப்பட்டதினால் இதினுடைய ப்ரதிநிதித்வமானது விசேஷமானதென்று ஏற்பட்டது.

5. அங்கங்களோடு கூடியது ஸாங்கம். ஆவரணபூஜனத்தோடு கூடிய ப்ரதான தேவதையின் பூஜனமானது ஸாங்கார்ச்சனம் என்றும், குல்லுகா, ஸேது, மஹாஸேது ஜபங்களுடன் கூடிய ஸ்ரீவித்யா ஜபத்திற்கு ஸாங்க ஜபமென்றும் பெயர்.

6. நாமகீர்த்தனத்தினால் ந்யாஸம், ஸாங்கார்ச்சனம், ஸாங்கஜபம் இவைகளின் பலன் கிடைப்பதற்கு அவ்விதமான பலனும் கிடைக்கவேண்டுமென்ற உத்தேசத்துடன் நாமகீர்த்தனம் செய்யவேண்டுமென்பது தாத்பர்யம்.

இதற்குமேல், நாமகீர்த்தனமானது உபாஸனைக்கு அவைகல்பிகமான (விகல்பமில்லாத) அங்கமென்பது சொல்கிறது.

உபாஸநே ஸ்துதீ ரந்யா:
படேத் அப்யுதயோ ஹி ஸ: ||

25. இதம் நாம ஸஹஸ்ரம் து
கீர்த்தயேந் நித்யகர்மவத் |

அம்பாளுடைய உபாஸனையில் இதர ஸ்துதிகளையும் சொல்லலாம். அப்படிச் சொன்னால் விசேஷ பலன் உண்டு. ஆயினும் (நித்ய கர்மாவைப்போல்) இந்த நாம ஸஹஸ்ரத்தை கீர்த்தனம் செய்யவேண்டும்.

1. இந்த இதர ஸ்துதிகளும் உபாஸனையின் அங்கங்கள் தான். இவை த்ரைலோக்ய மோஹன கவசம் முதலியவை. இவைகளையும் சொன்னால் பலத்தில் விசேஷம் உண்டு. சொல்லா விட்டால் (அங்கங்கள் குறைந்ததினால் ஏற்படக்கூடிய) தோஷம் யாதொன்றுமில்லை. இவ்விதமான ஸ்தோத்ரங்களைப்பற்றி அவை களைச் சொன்னலொழிய ஸித்தி ஏற்படாது என்று,

'நவலக்ஷ ப்ரஜப்தாபி தஸ்ய வித்யா ந ஸித்யதி |'

என்பது முதலாக அந்தந்த ப்ரகரணங்களில் சொல்லப்படுவதில் ஸித்தி என்பது அந்தந்த ஸ்தோத்ரத்தைச் சொல்வதினால் உண் டாகும் அப்யுதயத்தோடு கூடிய வித்யா பலன் என்று அர்த்தமே தவிர, அவைகளைச் சொல்லாமல் ஸ்ரீவித்யையை மட்டுப் ஜபித்தால் பலனே ஏற்படாது என்று அர்த்தமல்ல.

2. இந்த ஸஹஸ்ரநாம கீர்த்தனமானது அவ்விதமான அங்கமல்ல, ஸந்த்யாவந்தனம் முதலிய நித்யகர்மாவைப் போன் றது என்று சொல்லப்பட்டது. அதை எப்படி நித்யமும் செய்வ தில் விட்டுவிடமுடியாதோ, அதே மாதிரி இதுவும் விட்டுவிட முடியாது என்று தாத்பர்யம். ஆயினும் நித்யகர்மாவைப்போலி ருக்கையில் அதுமாதிரி க்ரத்வர்த்தமாக மட்டுமிராமல் நாம கீர்த்தனமானது புருஷார்த்தமாயுமிருப்பதால் உபய ரூபமான தென்பதை மறக்கக்கூடாது.

3. [காதிர வ்ருக்ஷத்தில் (கருங்காலியில்) செய்யப்பட்ட யூபத்தை வைத்துக்கொண்டு க்ரது (யாகம்) செய்யவேண்டு மென்று ஒரு ச்ருதி வாக்யமிருக்கிறது. இதற்கு வேறு ப்ரயோஜ னம் இங்கு சொல்லப்படவில்லையாகையால் அது க்ரத்வர்த்த மென்று சொல்லப்படும். இன்னமொரு இடத்தில் வீரியத்தை விரும்புகிறவன் காதிர யூபத்தைக்கொண்டு யாகம் செய்யவேண்டு மென்ற ச்ருதிவாக்யமிருப்பதால் அது புருஷார்த்தமென்றும் சொல்லப்படும். ஆகவே காதிர யூபத்தைக்கொண்டு யாகம் செய்தால் க்ரத்வர்த்தம், புருஷார்த்தம் இரண்டும் ஆகும். பொது வாக நித்ய கர்மாக்களை க்ரத்வர்த்தமென்று சொல்லப்படும். நாமஸாஹஸ்ர கீர்த்தனமோ க்ரத்வர்த்தம், புருஷார்த்தம் என்ற உபயரூபமாகவுமிருப்பதாக இங்கு சொல்லப்பட்டது.]

தேவியின் உபாஸனையில் ஸ்ரீ சக்ர பூஜனம், ஸ்ரீ வித்யா ஜபம், இந்த ஸஹஸ்ரநாம கீர்த்தநம் அவை மூன்றும் விடமுடியாத அங்கங்கள் என்பதை த்ருடப்படுத்தித் திரும்பவும் சொல்லுகிறார்:—

சக்ர ராஜார்ச்சநம் தேவ்யா:
ஜபோ நாம்நாம் ச கீர்த்தநம் ||
26. பக்தஸ்ய க்ருதய மேதாவத்
அந்யத் அப்யுதயம் விது: |

அம்பாளுடைய ஸ்ரீ சக்ரார்ச்சனம், ஜபம், இந்த நாமங்களின் கீர்த்தனம் இவை வரையில் உபாஸகனால் அவச்யம் செய்யப்பட வேண்டியவை. மற்றதெல்லாம் (ச்ரேயஸ்கரம் (அப்யுதயத்தைச் செய்கிறவை) என்று அறிவார்கள். (அறியவேண்டும்).

இம்மாதிரி நாமகீர்த்தனத்தை சக்ரராஜார்ச்சனம், ஸ்ரீவித்யையின் ஜபம் இவைகளோடு சேர்த்துச் சொல்வதினால் இவைகளுக்கு அது ஸமமானதென்று தோன்றக் கூடிய ஸந்தேஹமானது அடுத்தாற்போல் பரிஹரிக்கப்படுகிறது.

பக்தஸ்யாவச்யகமிதம்
நாம ஸாஹஸ்ர கீர்த்தநம் ||
27. தத்ர ஹேதும் ப்ரவக்ஷ்யாமி
ச்ருணு த்வம் கும்பஸம்பவ |

இந்த நாமஸஹஸ்ரத்தின் கீர்த்தனமானது பக்தனுக்குஅவச்யமான கார்யம். அதற்குக் காரணத்தை விரிவாகச் சொல்லுகிறேன். கேள். ஹே அகஸ்த்ய !

1. 'ஆவச்யகம்' என்பது மேலே சொல்லிய பூஜை, ஜபம் இவைகளையும் விட அவச்யம் என்று அர்த்தம். அதற்குக் காரணம் ஏற்கனவே சொல்லப்பட்டபடி நாமஸங்கீர்த்தனத்தினாலேயே அந்த பூஜை, ஜபம் இவைகளுடைய பலன் ஏற்படுகிறது என்பது.

2. அம்மாதிரியான விசேஷபலன் கொடுக்கக் கூடிய மஹிமையானது இந்த ஸஹஸ்ரநாமத்திற்கு எப்படி வந்தது என்பதைக் காட்டுவதற்காக பூர்வ வ்ருத்தாந்தத்தைச் சொல்லி அதின்

மூலமாக இந்த ஸஹஸ்ரநாமத்தில் ப்ரதிபாதிக்கப்படும் தேவதை யான லலிதாம்பிகையானவள் ஸமஸ்தமான சிவசக்தி கணங்க ளாலும் உபாஸிக்கத் தகுந்தவளென்றும் அதினால் ஸர்வோத்தம மானவளென்றும் அறியச் செய்கிறார்.

இப்பேர்ப்பட்ட மஹத்தான வ்ருத்தாந்தத்தைத் தான் விரி வாகச் சொல்லப்போவதால் 'ப்ரவக்ஷ்யாமி' என்றும், அதை வெறும் புகழ்ச்சி (அர்த்தவாதம்) என்று அகஸ்த்யர் நினைத்து உபேக்ஷையாக இருந்து விடக்கூடாது என்று எச்சரிக்கையாக 'ச்ருணு' என்றும் ஹயக்ரீவரால் சொல்லப்பட்டது. தான் சொல்லப்போவதில் அகஸ்த்யர் தன் கவனத்தைச் செலுத்த வேண்டும் என்பது அவருடைய உத்தேசம்.

புரா ஸ்ரீ லலிதா தேவீ

பக்தாநாம் ஹிதகாம்யயா ||

28. வாக்தேவீர் வசிநீ முக்யா:

ஸமாஹூயேதமப்ரவீத் |

முன்னொருகாலத்தில் ஸ்ரீ லலிதா தேவியானவள் தன் பக்தர் களுக்கு ஹிதத்தைச் செய்யவேண்டுமென்கிற விருப்பங்கொண்டு வசினீ முதலான வாக்தேவிகளைக் கூப்பிட்டு பின் வருமாறு சொன்னாள்.

1. முதலாகச் சொல்லப்படுகிறவள் முக்யா. வசினியை முக்யையாக உடையவர்கள் வசினீ முக்யா: — அதாவது, வசினீ முதலான வாக்தேவிகள். இவர்கள் பெயர் வசினீ, காமேச்வரீ, மோதினீ, விமலா, அருணா, ஜயினீ, ஸர்வேச்வரீ, கௌலினீ. இவர்களைச் சேர்த்து 'வசின்யஷ்டகம்' என்று சொல்வதுண்டு. இவர்கள் வாக்குக்கு அதிஷ்டான தேவதைகள்.

2. அவாப்த ஸமஸ்த காமனையாக (ஸகல காமங்களையு மடைந்து, அதாவது, விரும்பவேண்டியது யாதொன்றுமில்லா மல்) இருக்கும் அம்பாள் இந்த ஸ்தோத்ரத்தை ஏன் செய்யச் சொல்ல விரும்பவேண்டுமென்பதற்கு 'பக்தாநாம் ஹிதகாம்யயா' என்பதினால் ஸமாதானம் சொல்லப்பட்டது.

3. வசனீ முக்யா: என்பதினாலேயே வாக்தேவிகளைக் குறி க்குமாதலால் வாக்தேவீ: என்று இன்னம் ஒருதடவை சொன்ன

தற்குக் காரணம் என்னவென்றால்— தேவ: (தேவீ) என்ற பதமானது தீவ்யதி என்பதிலிருந்து வந்த பதம். இந்த தீவ்யதி என்பதினால் க்ரீடை, விஜிகீஷா (ஜெயிக்க விரும்புவது) த்யுதி (ப்ரகாசிப்பது), ஸ்துதி, வ்யவஹாரம், மோதம் (ஸந்தோஷப் படுவது), காந்தி, கதி முதலியவைகள் குறிக்கப்படும். (ஸ்வப்னம் என்பதும் குறிக்கப்பட்டாலும் தேவதைகளுக்கு ஸ்வப்னமென் பதுகிடையாதாகையால் இங்கு அது சேர்ந்ததல்ல). வாக்கினால் க்ரீடிப்பவர்கள், ஜெயிக்க விரும்புகிறவர்கள், ப்ரகாசிப்பவர்கள், ஸ்துதிப்பவர்கள், என்ற இந்த ரீதியில் சொல்லக்கூடுமாதலால் வாக்தேவீ: என்று சொன்னால் இவையெல்லாம் குறிக்கப்படும்.

4. இப்படி வாங்மயமான விஷயத்தில் அவர்கள் மட்டுமே ஸ்வாதந்த்ர்யமுடையவர்களாகையால், தான் செய்யச் சொல்லப்போகும் ஸ்தோத்ரத்தைப் பற்றி அம்பாள் அவர்களி டம் சொன்னது.

வாக்தேவதா வசின்யாத்யா:
ச்ருணுத்வம் வசனம் மம ||

ஹே வசனீ முதலான வாக்தேவதைகளே ! நான் சொல்வ தைக் கேளுங்கள்.

1. நீங்கள் வாக்தேவதைகளாயிருப்பதால் என்னுடைய வசனத்தைக் கேளுங்கள். அதாவது, நீங்கள் வாக்குக்கு ஈச்வரிக ளாக இருப்பதினால் நான் சொல்வதைக்கேட்பதற்கு உங்களுக்கு மட்டும் தான் அதிகாரம் உண்டு என்று தாத்பர்யம். இதனால் அவர்கள் ப்ரோத்ஸாகப்படுத்தப்படுகிறார்களென்பதும் அறிய வேண்டியது.

வசின்யாதிகள் உபாஸகர்களான தேவதைகளாக இருந்தா லும் அவர்கள் வாகீச்வரிகளாக எப்படி ஏற்பட்டார்கள் என்பது மேலே சொல்லப்படுகிறது.

29. பவத்யோ மத் ப்ரஸாதேந
ப்ரோல்லஸத் வாக்விபூதய: |
மத் பக்தாநாம் வாக்விபூதி
ப்ரதாநே விநியோஜிதா: ||

நீங்கள் எல்லோரும் என்னுடைய அனுக்ரஹத்தால் விசேஷமாய் விளங்குகிற வாக்விபூதியோடு கூடியிருக்கிறீர்கள். என்பக்தர்களுக்கு வாக்விபூதியைக் கோடுப்பதற்கு (என்றால்) நியமிக்கப்பட்டிருக்கிறீர்கள்.

1. விபூதி என்பது ஐச்வர்யம். வசின்யாதி தேவதைகளுக்கு அம்பாளுடைய அனுக்ரஹத்தால் வாக்கைப் பற்றிய ஐச்வர்யம் கிடைத்ததின்பேரில் அந்த வாக்விபூதியைத் தன் பக்தர்களுக்கும் கொடுப்பதற்காக அவர்களுக்கு அதிகாரம் அம்பாளால் கொடுக்கப்பட்டது.

2. ப்ரோல்லஸத் வாக்விபூதய:- ப்ரகர்ஷத்துடனும் உத்கர்ஷத்துடனும் விளங்குகிற வாக்விபூதியோடு கூடியவர்கள். ப்ரகர்ஷமென்றால் மற்றவைகளைப்போல் இல்லாமல் (அவைகளை விட உயர்ந்தது) என்றும், உத்கர்ஷமென்றால் ஸர்வோத்தமமானதென்றும் அர்த்தம். அதிலிருந்து, ஸர்வோத்தமமான தேவதையாகிய ஸ்ரீ லலிதாம்பாளுடைய அனுக்ரஹத்தால் கிடைத்த வித்யையும் ஸர்வோத்தமமாய் இருக்குமாகையால் அவ்வித வித்யையையுடைய வசின்யாதிகளே ஸர்வோத்தமமான ஸ்தோத்ரத்தைச் செய்வதற்கு அதிகாரிகள் என்றும் த்வனிக்கிறது.

3. அம்பாளுடைய அனுக்ரஹத்தினால் வாக்விபூதியை உடையவர்களில் நகுலீ, வாகீச்வரீ முதலான தேவிகளுமிருக்கையில் அவர்களை என் இந்த ஸ்தோத்திரம் பண்ணுவதில் நியமிக்கவில்லையென்றால் அவர்கள் அம்பாளுடைய பக்தர்களுக்கு வாக்விபூதியைக் கொடுப்பதற்கு அதிகாரம் கொடுக்கப்படவில்லை. அம்பாளுடைய பக்தர்களுடன் வாதம் செய்கிற விரோதிகளுடைய வாக்கை ஸ்தம்பனம் (தடை) செய்கிறதற்குத் தான் அவர்களுக்கு அதிகாரம் அம்பாளால் கொடுக்கப்பட்டது. [இதைப் பற்றிப் பின்னால் பலச்ருதி பாகத்தில் சொல்லப்பட்டிருக்கிறதைப் பார்க்கவும்.] நாமஸஹஸ்ரமானது வாக்விபூதி ரூபமானது. அம்பாள் 'பக்தானாம் ஹிதகாம்யயா' என்று ஏற்கனவே சொல்லப்பட்டபடி பக்தர்களுக்கு ஹிதம் செய்யும் விருப்பத்தோடு வாக்விபூதி ரூபமான இந்த ஸஹஸ்ரநாமத்தை செய்யச்சொல்ல எண்ணமுடையவளாகையால் அதற்கு நகுலீ முதலானவர்களை

நியமித்தால் வசின்யாதிகளுடைய அதிகாரத்திற்கு பங்கம் ஏற்படும். அதினால்தான் நகுலீ முதலானவர்களைக் கூப்பிடவில்லை.

வசின்யாதிகள் ஏற்கனவேயே அம்பாளைப்பற்றிய ஸ்தோத்ரங்கள் அனேகம் செய்திருக்கையில் இப்போது நூதனமாக ஒரு ஸ்தோத்ரம் ஏன் செய்யவேண்டும் என்பதைப் பற்றி மேலே சொல்லுகிறார்.

30. மச் சக்ரஸ்ய ரஹஸ்யக்ஞா:
மம நாம பராயணா: |
மம ஸ்தோத்ரா விதாநாய
தஸ்மாத் ஆக்ஞாபயாமி வ: ||

நீங்கள் என்னுடைய ஸ்ரீ சக்ரத்தின் ரஹஸ்யங்களை அறிந்தவர்கள். என்னுடைய நாமங்களில் எப்போதும் கவனம் செலுத்தி வருகிறீர்கள். ஆகையால் என்னுடைய ஸ்தோத்ரத்தைச் செய்யும்படி உங்களை நான் கட்டளையிடுகிறேன்.

1. பிந்து முதலாக பூபுரம் வரையிலுள்ள சக்ரத்தின் வாஸனா மயமான ரூபத்தை சக்ர ரஹஸ்யமென்று சொல்லப்பட்டது. அல்லது பின்வருமாறும் சொல்லலாம்.

2. தன்னுடைய ஸம்வித்தையே விஷயமாக உடையதும் இதர விஷயங்களில் தோற்றம், உணர்ச்சியில்லாததுமான ப்ரம்ஹத்தின் ஸ்வரூபத்திற்கு விமர்சரூபம் என்று பெயர். அதற்கு சடாலென்று அசைவது மாதிரியும், முழுகி எழுந்திருப்பது மாதிரியும், திடீரென்று துடிப்பு ஏற்படுவது மாதிரியும் உணர்ச்சி உண்டாகும்போது அந்த அவஸ்தைக்கு பூர்ணாஹம்பாவமென்றும் துர்யாவஸ்தை என்றும் பெயர். அப்போது அதற்கு அனந்தவிதமான சக்திகளுண்டு. அந்த சக்திகளுடைய ஸமூஹத்திற்கு சக்ரம் என்று பெயர். அந்த சக்ரத்தின் அநுஸந்தானமானது குருமுகமாக மட்டும் தெரிந்துகொள்ளக் கூடியதான ரஹஸ்யமான விஷயம். இந்த ரஹஸ்யமான அநுஸந்தானம் தெரிந்தால் தன்னைத் தவிர்த்து வேறாக இருக்கும் ஸகலமும் தனக்குள்ளேயே உபஸம்ஹாரம் (லயம்) அடைகிறது.

'சக்தி சக்ராநுஸந்தானே விச்வஸம்ஹார: |'
குருருபாய: |' (சிவஸூத்ரம்.

இவ்விதமான அம்பாளுடைய சக்தி சக்ர ரஹஸ்யத்தை வசின்யாதி தேவதைகள் தெரிந்திருப்பதாக இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

3. இவ்விதமான சக்ர ரஹஸ்யமானது இதர ஸ்தோத்ரங்களில் சொல்லப்படவில்லை. அந்த ரஹஸ்யத்தைத் தெரிந்தவர்களென்று இங்கு அம்பாள் வசின்யாதி தேவிகளைச்சொன்னதினுல், தான் அவர்களைச் செய்யச்சொல்லும் ஸ்தோத்ரத்தில் அதைப் பற்றியும் வெளியிடவேண்டுமென்று அம்பாளுக்கு அபிப்ராயம் என்பதாக ஏற்படுகிறது.

4. சக்ர ரஹஸ்யமானது அருணோபநிஷத், குஹ்யோபநிஷத், த்ரிபுரோபநிஷத், முதலியவைகளில் சொல்லப்பட்டிருப்பதால் அதைச் சொல்வதற்காக புதிதாய் ஒரு ஸ்தோத்ரம் செய்யச் சொல்லவேண்டியது அவச்யமா என்ற கேள்விக்கு அடுத்தாற்போல் 'மம நாம பராயணா:' என்பதினுல் ஸமாதானம் சொல்லப்படுகிறது.

5. நாமமென்பது தேவதையைச் சொல்வதும் வர்ணிப்பதும் அந்த தேவதையின் மந்த்ர ரூபமாகவும் இருக்கும் பதத்திற்குப்பெயர். இதை ஸ்ரீமத் ஆசார்யாள் 'ஸௌந்தர்ய லஹரி'யில் 'சிவ: சக்தி: காம:' என்ற மந்த்ரோத்தார ச்லோகத்தில் மந்த்ராக்ஷரங்களைக் குறித்துவிட்டு கடைசியில்,

'பஜந்தே வர்ணாஸ்தே தவ ஜனனி நாமாவயவதாம் |'

என்பதில் சொல்லியிருக்கிறார்கள். ஆகவே நாமோபதேசம் என்ற வ்யாஜத்தின் மூலமாக (நாமோபதேசம் செய்வதின் மூலமாக) சக்ர ரஹஸ்யத்தைச் சொல்வதும் மந்த்ரங்களை உத்தாரணம் செய்வதும் இந்த நாம ஸஹஸ்ரத்திலிருக்கின்றன. தவிர மேலே சொல்லிய உபநிஷத்துக்களிலும்கூட இல்லை. அப்பேர்ப்பட்ட அபூர்வமான ஸ்தோத்ரம் செய்வதில், நாம ஞானம் பொருந்தியவர்களான அவர்களுக்குத்தான் அதிகாரம் உண்டு என்பது 'மம நாம பராயணா:' என்பதினுல் காட்டப்பட்டது.

6. ஆகவே, இந்த அபூர்வமான லக்ஷணங்களையுடைய ஸ்தோத்ரத்தைச்செய்ய வசின்யாதி தேவதைகளுக்கு மட்டும் யோக்யதை இருக்கிறதென்பதற்கு ஐந்து காரணங்கள் சொல்லப்பட்டன. அதாவது அவர்கள் வாக்கின் தேவதைகளானபடியாலும்,

அம்பாளுடைய் ப்ரஸாதத்தினால் ஸர்வோத்கர்ஷமான வாக் விபூதியை உடையவர்களானபடியாலும், அம்பாளால் தன் பக்தர்களுக்கு வாக் விபூதியைக் கொடுப்பதற்கு நியமிக்கப்பட்டிருப்பதாலும், அம்பாளுடைய சக்ரத்தின் ரஹஸ்யங்களை அறிந்தவர்களானபடியாலும், அம்பாளுடைய மந்த்ரமயமான நாமங்களில் பராயணர்களாக இருக்கிறபடியாலும், அவர்கள் தான் அம்பாளால் இந்த ஸ்தோத்ரம் செய்யச்சொல்லபட்டார்களே தவிர வேறு பிறர்கள் சொல்லப்படவில்லை. இது தான்

'மம ஸ்தோத்ர விதாநாய தஸ்மாத் ஆக்ஞாபயாமி வ: |'

என்பதினால் சொல்லப்பட்டது.

அம்பாளால் ஆக்ஞாபிக்கப்பட்ட கார்யம் மேலே சொல்லப் படுகிறது.

31. குருத்வம் ஆங்கிதம் ஸ்தோத்ரம்
மம நாம ஸஹஸ்ரகை: |
யேந பக்தை: ஸ்துதாயாமே
ஸத்ய: ப்ரீதி: பரா பவேத் ||

பக்தர்கள் எதைச் சொல்லி என்னை ஸ்துதி பண்ணினால் எனக்கு உடனே பரம ப்ரீதி ஏற்படுமோ அப்பேர்பட்டதும், ஆயிரம் நாமங்களுடையதும், என்னுடைய பெயரால் அங்கிதமானது (அடையாளமிடப்பட்டது)மான ஸ்தோத்ரத்தைச்செய்யுங்கள்.

1. அதாவது, மேலே சொல்லிய லக்ஷணங்களையுடைய நாமங்கள் ஆயிரத்தையுடைத்தும், அதினால் ஸஹஸ்ரநாமம் என்று குறிக்கப்படுவதும், என்னுடைய (லலிதா என்ற) பெயரால் அடையாளமிடப்பட்டதுமான ஸ்தோத்ரத்தைச் செய்யுங்கள் என்று தாத்பர்யம்.

2. கடைசி ச்லோகத்தில் பெயரை வைப்பதற்கு அங்கனம் என்று பெயர். ப்ரக்ருத ஸ்தோத்ரத்தில், அம்பாளுடைய நாமங்கள் எண்ணிக்கையற்றவையாக இருந்தபோதிலும் அவைகளிலெல்லாம் லலிதா என்பதுதான் முக்யமானது. இதர நாமங்களான பவானீ முதலியவைகள் (குணீயான) ஸாமான்யமான ருத்ரன் முதலானவர்களுடைய பத்னிகளின் பெயர்களாகவும், ப்ரயோகிக்கப்படுவதால் அவைகள் ஸாதாரண நாமங்களே.

த்ரிபுரஸுந்தரீ என்பதும் கூட இதர தந்த்ரங்களில் நித்யா தேவதைகளில் ஒருவளுக்குப் பெயராகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த லலிதா என்ற நாமமோ அம்பாளுடைய அஸாதாரண நாமம். இதனால்தான், அதை இந்த நாமஸஹஸ்ரத்தின் கடைசி நாமமாகவும், பலச்ருதி பாகத்தின் கடைசி ச்லோகத்திலும் ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கிறது. இதையே தான் 'மம நாமாங்கிதம்' என்று இங்கு சொல்லப்பட்டது.

ஹயக்ரீவ உவாச:—

(இதுவரையில் அம்பாள் சொன்னதைச் சொல்லிவிட்டு மேலே நடந்தவற்றை) ஹயக்ரீவர் சொல்லத் தொடங்கினார்.

32. இத்யாக்ஞப்தா வசோ தேவ்ய:
ஸ்ரீ தேவ்யா லலிதாம்பயா |
ரஹஸ்யைர் நாமபிர் திவ்யை:
சக்ரு: ஸ்தோத்ரமநுத்தமம் ||

இப்படி லலிதாம்பாளான ஸ்ரீ தேவியால் கட்டளையிடப்பட்ட வாக்தேவிகள் ரஹஸ்யமானதும், திவ்யமானதுமான நாமங்களால் மேம்பாடில்லாத ஒரு ஸ்தோத்ரத்தைச் செய்தார்கள்.

1. சக்ரராஜ ரஹஸ்யம், மந்த்ரோத்தார ரஹஸ்யம் முதலிய ரஹஸ்யங்கள் அடங்கியவையாகையால் 'ரஹஸ்யைர் நாமபி:' என்று சொல்லப்பட்டது. இவ்வித ரஹஸ்யங்களைப் பற்றி ஏற்கனவேயே சொல்லப்பட்டு விட்டதால் அவைகளைத் திரும்பவும் சொல்லாமல் இங்கு 'ரஹஸ்யை:' என்று மட்டும் குறிப்பிடப்பட்டது.

33. ரஹஸ்ய நாம ஸாஹஸ்ரம்
இதி தத் விச்ருத: பரம் |

அந்த ஸ்தோத்ரமானது 'ரஹஸ்ய நாம ஸாஹஸ்ரம்' என்று அதிகமான ப்ரஸித்தியடைந்தது.

1. அந்த ஸ்தோத்ரத்திற்குப் பெயரே 'ரஹஸ்ய நாம ஸாஹஸ்ரம்' என்றிருப்பதுடன் மேலே சொல்லிய ரஹஸ்யங்களோடு கர்பிதமாக (நிரம்பி) இருப்பதால் அதற்கு ரஹஸ்ய நாம ஸாஹஸ்ரம் என்று பெயர் பொருத்தமாக இருப்பதும்

சொல்லப்பட்டது. அந்தப் பெயரோடு கூடி அது மிகவும் ப்ரஸித்தியடைந்தது.

**ததः கதாசித் ஸதஸி ஸ்தித்வா**
**ஸிம்ஹாஸநேऽம்பிகா ।**
**34. ஸ்வ ஸேவாவஸரம் ப்ராதாத்**
**ஸர்வேஷாம் கும்பஸம்பவ ॥**

ஹே கும்பஸம்பவ! பிறகு ஒரு ஸமயம் அம்பிகையானவள் ஸதஸில் (ஸபையில்) ஸிம்ஹாஸனத்தின்மேல் வீற்றிருந்துகொண்டு தன்னை ஸேவிப்பதற்கு எல்லாருக்கும் அவகாசம் கொடுத்தாள்.

1. தன்னை எல்லோரும் பார்ப்பதற்காக, ஸிம்ஹாஸனத்தின் மீது அம்பாள் வீற்றிருந்ததாக இங்கு சொல்லப்பட்டது. (ஸிம்ஹாஸனம் என்பதைப்பற்றி மூன்றுவது நாமத்தில் சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கவும்.)

**ஸேவார்த்தம் ஆகதாஸ் தத்ர**
**ப்ரம்ஹாணீ ப்ரம்ஹகோடய: ॥**
**35. லக்ஷ்மீ நாராயணநாம் ச**
**கோடய: ஸமுபாகதா: ।**
**கௌரீகோடி ஸமேதாநாம்**
**ருத்ராணுமபி கோடய: ॥**

அங்கு, அம்பாளுடைய ஸேவைக்காக ப்ரம்ஹாணிகளோடு கூடிய ப்ரம்ஹாக்களும், லக்ஷ்மிகளோடு கூடிய நாராயணர்களும், கௌரிகளோடு கூடிய ருத்ரர்களும் கோடிக்கணக்காக வந்திருந்தார்கள்.

1. ப்ரம்ஹ—வேதங்களை, அனதி—சப்திக்கும்படி செய்கிறவர் ப்ரம்ஹாண: (அதாவது, ப்ரம்ஹாவானவர் தன்னுடைய நாலு முகங்களாலும் நாலுவேதங்களையும் சொல்லுகிறுர் என்று அர்த்தம்) அவருடைய பத்னீ ப்ரம்ஹாணீ.

'ப்ரம்ஹாணீத்ய பராசக்தி: ப்ரம்ஹணோத் ஸங்க சாமினீ ।'

(ஸ்வச்சந்த ஸங்க்ரஹம்)

2. அல்லது, ப்ரம்ஹாவை ஆனயதி—ஜிவித்திருக்கும்படி செய்கிறவள் ப்ரம்ஹாணீ. எந்த அர்த்தத்திலும் ப்ரம்ஹாவின் பத்னியான ஸரஸ்வதியானவள் குறிக்கப்படுகிருள்.

3. 'ப்ரம்ஹாணீ ப்ரம்ஹகோடய:' என்றால் ப்ரம்ஹாணிகளின் கோடிகளோடு கூடிய ப்ரம்ஹாக்களின் கோடிகள் என்று அர்த்தம். 'கோடய:' என்பதினால் அனேகம் கோடிகள், அதாவது கோடிக்கணக்கான கோடிகள் என்று சொல்லப்பட்டது. கோடி கோடியை ஜலதி என்று சொல்லப்படும். இதனால் ஜலதிக் கணக்கான ப்ரம்ஹாணிகளும், அதே கணக்கான ப்ரம்ஹாக்களும் அங்கு வந்திருந்ததாக ஏற்படுகிறது.

4. இம்மாதிரி கோடி கோடிக்கணக்கான ப்ரம்ஹாக்களாலும், ப்ரம்ஹாணிகளாலும் அம்பாள் சூழப்பட்டிருப்பதாக ருத்ர யாமளத்தில் ஸர்வமங்களா த்யான ப்ரகரணத்தில்,

' ஆவ்ருதம் ப்ரம்ஹஸஹித ப்ரம்ஹாணீ கோடி கோடிபி: | '

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

5. அதேவிதமாக கோடி கோடிக்கணக்காய் லக்ஷ்மிகளுடன் நாராயணர்களும், கௌரிகளுடன் ருத்ரர்களும் வந்திருந்ததாகச் சொல்லப்பட்டது.

6. கௌரீ கோடி ஸமேதாநாம் ருத்ராணாமபி கோடய: | '

என்பதினால் ஒரொரு ருத்ரனும் கோடிக்கணக்கான கௌரிகளுடன் வந்திருந்ததாக அர்த்தம் செய்யக்கூடாது. ஏனென்றால் மற்ற இருவகைகளைப்பற்றிச் சொல்லிய எண்ணிக்கைக்கு அது விரோதமாகும். 'ருத்ராணாம்' என்பதினால் கோடிக்கணக்கான கௌரிகளுடன் கூடிய, கோடிக்கணக்கான ருத்ரர்களுடைய கோடிகள் என்று அர்த்தம் செய்யவேண்டும்.

7. இவ்விதம் சொல்லப்பட்ட கோடி, ஜலதி முதலான எண்ணிக்கைகளெல்லாம் அனந்தமான (முடிவில்லாத) எண்ணிக்கையைக் குறிப்பவை. ப்ரம்ஹாண்டங்களுக்குக் கணக்குக் கிடையாது. ஆகவே ஒவ்வொரு ப்ரம்ஹாண்டத்தினுடைய ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் முதலிய கார்யங்களுக்கு அதிகாரிகளான ப்ரம்ஹ, விஷ்ணு, ருத்ரர்களுடைய கணக்கும் அளவில் அடங்காது.

8. இப்படி மஹத்தான கூட்டத்தை ஒருங்கே கூட்டுவதின் காரணம் ஸகல ப்ரம்ஹாண்டங்களிலும் இந்த நாம ஸஹஸ்ரத்தைப் பரவச்செய்து, அதை ப்ரஸித்தமாகச் செய்யவேண்டுமென்பது.

36. மந்த்ரிணீ தண்டி நீ முக்யா:
ஸேவார்த்தம் யா: ஸமாகதா: |
சக்தயோ விவிதாகாரா: தாஸாம்
ஸங்க்யா ந வித்யதே ||

மந்த்ரிணீ, தண்டினீ இவர்களைத் தலைமையாக உடையவர்களும், நானாவிதமான ரூபங்களையுடையவர்களுமான எந்த சக்திகள் அம்பாளை ஸேவிப்பதற்காக வந்திருந்தார்களோ, அவர்களுடைய கணக்கு கிடையாது.

1. அதாவது, கணக்கிலடங்காத சக்திக் கூட்டங்கள் வந்திருந்ததாகச் சொல்லப்பட்டது.

2. தந்த்ரங்களில் சக்திகளுடைய பெயர்கள் அனேகம் சொல்லப்பட்டிருக்கின்றன.

'பராசக்திச்சாதிசக்தி: இச்சா ஞான க்ரியா பலா |
பாலான்னபூர்ணா பகளா தாரா வாக்வாதினீ பரா ||
காயத்ரீ சைவ ஸாவித்ரீ ஸித்தலக்ஷ்மீ: ஸ்வயம்வரா |
நகுலீ துரகாரூடா குருகுல்லா ச ரேணுகா ||
ஸம்பத்கரீ ச ஸாம்ராஜ்யலக்ஷ்மீ: பத்மாவதீ சிவா |
துர்க்கா பத்ராக்ருதி: காளீ காளராத்ரி: ஸுபத்ரிகா |
சின்னமஸ்தா பத்ரகாளீ காளகண்டீ ஸரஸ்வதீ ||

(ருத்ரயாமளம்)

3. ஏற்கனவேயே கோடி கோடிக் கணக்கென்பதாக எண்ணிக்கையற்ற ப்ரம்ஹாதிகளைச் சொன்னபோதிலும் அந்த மாதிரியே எண்ணிக்கையற்ற அண்டங்கள் ஒவ்வொன்றிலும் (ஸஜாதீயமான) ஒரோர் பாலா சக்தியிருப்பதால் எண்ணிக்கையற்ற பாலா சக்திகளிருப்பதாக ஏற்பட்டது. திரும்பவும் பரஸ்பரம் விஜாதீயமான சக்திகளின் கணக்கே எண்ணிக்கையிலடங்காதிருப்பதால் சக்திகளின் மொத்தக் கணக்கானது அவர்களின் பெயர்களைக் குறித்துச் சொல்லமுடியாத கார்யமாகையால் கோடி கோடியென்றுகூடச் சொல்லாமல் 'தாஸாம் ஸங்க்யா ந வித்யதே' என்று இங்கு சொல்லப்பட்டது. எண்ணிக்கையற்ற அண்டங்கள் ஒவ்வொன்றிலும் எண்ணிக்கையற்ற பாலா முதலான சக்திகள் இருப்பதால் சக்திகளின் மொத்தக் கணக்கானது அளவிடமுடியாமலிருக்கிறது.

4. அல்லது, வந்திருந்த சக்திகளின் பெயர் கணக்கி லடங்காதது என்றும் சொல்லலாம்.

5. (ஸம்க்யா என்பதற்கு கணக்கு என்றும், நன்ருகச்சொல் வது—அதாவது, பெயரைச் சொல்வது—என்றும் அர்த்தம் உண்டு.) 'ஸம்க்யா ந வித்யதே'—என்பதினுல் பெயரைச் சொல் லுகிறவன் கிடையாது என்றும் தாத்பர்யம்.

37. திவ்யௌகா மானவௌகாச்ச
ஸித்தௌகாச்ச ஸமாகதா: |
தத்ர ஸ்ரீ லலிதாதேவீ
ஸர்வேஷாம் தர்சநம் ததௌ ||

தேவர்களும், மானவர்களும், ஸித்தர்களும் ஓகக்கணக்காக அங்கு வந்திருந்தார்கள். அங்கு (அப்போது) ஸ்ரீ லலிதாதேவி யானவள் எல்லோருக்கும் தன்னுடைய தர்சனத்தைக்கொடுத்தாள்.

1. திவ்யா:— ஸ்வர்க்கத்திலிருப்பவர்கள், திக்பாலகர் கள் முதலான தேவர்கள்.

மானவா:— புண்யபுருஷர்களான விச்வாமித்ரர் முதலான ப்ரம்ஹர்ஷிகள்.

ஸித்தா:— ஸனக, நாரதாதி யோகிகள்.

இம்மூன்று வகுப்பார்களும் ஓகக்கணக்காக அம்பாளுடைய ஸதஸுக்கு வந்திருந்ததாகச் சொல்லப்பட்டது. இதேமாதிரி

'அனேக கோடி திக்பாலை: சந்த்ரார்க்க வஸுகோடிபி: |
ஸனகாத்யைச்ச யோகீந்த்ரை: ஸித்தர்ஷீணாம் ச கோடிபி: |
நாரதாதி மஹௌகாணும் கோடிபி: பரிவாரிதாம் ||'

என்று ருத்ரயாமளத்திலும் சொல்லப்படிருக்கிறது.

2. ஓகம் என்பது (லக்ஷம், கோடி இவைபோல்,) ஒரு எண்ணிக்கையைக் குறிக்கும். ஸமுத்ரமென்பதை லக்ஷம் மடங்கு பெருக்கினுல் ஓகம் என்பது வரும். ஜ்யோதி: சாஸ்திரம், வாயு புராணம் முதலானவைகளில் எண்ணிக்கைகளைச் சொல்லுமிடங் களில் இந்த பதமானது சொல்லப்படவில்லையாகிலும் ராமா யணத்தில் யுத்தகாண்டத்தில்

'சதம் சதஸஹஸ்ராணும் கோடிமாஹுர் விபச்சித: |'

என்று ஆரம்பித்து

'சதம் ஸமுத்ரஸாஹஸ்ரம் மஹௌகமிதி விச்ருதம் |'
என்று இதைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது.

சங்கு என்பதே பெரி எண்ணிக்கை. அதிலிருந்து லக்ஷம் லக்ஷமாகப் பெருக்கிக்கொண்டுபோனால் வரும் எண்ணிக்கைகள்

மஹாசங்கு, வ்ருந்த, மஹாவ்ருந்த, பத்ம, மஹாபத்ம, கர்வ, மஹாகர்வ, ஸமுத்ர, மஹௌகமென்பவற்றில் கடைசியாக ஓகமென்பது சொல்லப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி விபரமாகத் தெரியவேண்டுமென்றால் பாஷ்யத்தின் மூலத்தைப் பார்த்துக்கொள்ளலாம்.

3. ஓகமென்பதற்கு ஸம்ப்ரதாயக்ரமமான உபதேசம் என்றும் அர்த்தமுண்டு. இந்த அர்த்தத்தில் குருபரம்பரையை த்வ்யௌகம், மானவௌகம், சித்தௌகம் என்று மூன்றுவிதமாக பிரிக்கலாம். காதியென்ற காமராஜ வித்யா பரம்பரையில் திவ்யௌகம் என்பது பரப்ரகாசானந்தநாதர்முதலிய ஏழு பரமகுருக்களையும், மானவௌகம் என்பது ககனானந்தநாதர் முதலிய எட்டு பராபர குருக்களையும், ஸித்தௌகம் என்பது போகானந்தநாதர் முதலிய நாலு அபர குருக்களையும் குறிக்கும். ஸ்ரீ வித்யையின் இதர பேதங்களாகிய லோபாமுத்ராவித்யை முதலியவைகளில் இந்த மூன்று குருபரம்பரையின் பெயர்கள் வெவ்வேறாகச் சொல்லப்பட்டிருப்பதை ஞானார்ணவம், நித்யோத்ஸவம், முதலிய கிரந்தங்களில் பார்க்கலாம். என்னவென்றாலும் திவ்யாதி குரு க்ரமமானது குருவின் உபதேசத்தால் அறிய வேண்டியது. (ஓகம் முதலான எண்ணிக்கையைக் குறிக்கும் பதங்கள் சொல்லப்பட்டிருந்தபோதிலும் அவைகள் எண்ணிக்கையற்றதான கூட்டங்களைக் குறிக்குமேதவிர கணக்காக இவ்வளவுதானென்று அர்த்தமில்லை.)

38. தேஷு த்ருஷ்ட்வோ பவிஷ்டேஷு
ஸ்வேஸ்வே ஸ்த்தாநே யதாக்ரமம் |

அப்படி அம்பாளுடைய தர்சனமானவுடன் எல்லோரும் க்ரமப்படி தங்கள் தங்களுக்குரித்தான இடங்களில் உட்கார்ந்த பிறகு,

1. விச்வகர்ம சாஸ்திரத்தில் ராஜாவினுடைய வலதுபாகத்தில் ராஜகுமாரனும் இடது பாகத்தில் அஷ்ட மந்திரிகளும்

இம்மாதிரி பிறர்களும் இன்னின்ன இடத்தில் உட்காரவேண்டு மென்பதும் சொல்லப்பட்டிருக்கிறது. அம்மாதிரி இவர்களெல் லோரும் உட்கார்ந்ததை 'யதாக்ரமம்' என்று இங்கு குறிக்கப் பட்டது.

தத்ர ஸ்ரீலலிதா தேவீ
கடாக்ஷா க்ஷேப நோதிதா: ||

39. உத்தாய வசினீமுக்யா:
பத்தாஞ்ஜலிபுடாஸ் ததா |
அஸ்துவந் நாமஸாஹஸ்ரை:
ஸ்வக்ருதைர் லலிதாம்பிகாம் ||

அப்போது ஸ்ரீ லலிதாதேவியினுடைய கடைக்கண் பார்வை யின் அசைப்பினுல் ஆக்ஞை செய்யப்பட்ட வசினீ முதலான வாக்தேவிகள் ஸபையில் எழுந்து அஞ்ஜலி பந்தத்துடன் தாங்கள் செய்த நாம ஸஹஸ்ரங்களால் லலிதாம்பிகையை ஸ்தோத்ரம் செய்தார்கள்.

40. ச்ருத்வா ஸ்தவம் ப்ரஸந்நாபூத்
லலிதா பரமேச்வரி |
ஸர்வே தே விஸ்மயம் ஜக்மு:
யே தத்ர ஸதஸி ஸ்திதா: ||

அந்த ஸ்தோத்ரத்தைக் கேட்டு லலிதா பரமேச்வரியானவள் ஸந்தோஷமடைந்தாள். இன்னம் அந்த ஸதஸிலிருந்த (ப்ரம் ஹாணீ முதலான) எல்லோரும் (அதைக்கேட்டு) ஆச்சர்யம் அடை ந்தார்கள்.

1. இப்படி ஸந்தோஷம், ஆச்சர்யம் இவையிரண்டும் ஒரு ங்கே ஏற்பட்டதற்குக் காரணம் - இந்த நாம ஸஹஸ்ரத்தில் சப் தம், அர்த்தம் இவைகள், அலங்காரம் முதலான அழகுகளோடு பூர்ணமாயிருப்பதும், ஒருவிதமான தோஷமுமில்லாதிருப்பதும் தான். விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் 'க்ஷேத்ரக்ஞோऽக்ஷர ஏவ ச' என்பவைகளில் நிரர்த்தகமான அவ்யய ப்ரயோகங்களும், நூறு நாமங்கள் வரையில் இரண்டு, மூன்று, நான்குதடவைகள்கூட நாமங்கள் திரும்பித்திரும்பி வருவதும் காணப்படுகின்றன.

அம்மாதிரியான ஸ்தோப (நிரர்த்தக) ப்ரயோகமும் புனருக்தியும் இந்த ஸஹஸ்ரநாமத்தில் கிடையாது. விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்குத் தான் எழுதிய பாஷ்யத்தில் ஸ்ரீமத் ஆசார்யாள் இவ்விதமான புனருக்தி தோஷத்தைப் போக்குவதற்காக ஒரே நாமமானது பல இடங்களில் வரும்போது அந்தந்த இடத்தில் அதற்கு வெவ்வேறான அர்த்தம் சொல்லியிருந்தாலும் அது புனருக்தி தோஷத்திற்கு பரிஹாரமாக ஏற்படமாட்டாது. அங்கங்கே வெவ்வேறான அர்த்தத்தைக்கோடிருந்தாலும் பதம் ஒன்றாயிருப்பதினால் அந்த தோஷமானது நீக்கப்படாமல் தான் இருந்துவருகிறது. மேலும் பல அர்த்தங்களையுடைய ஒரே நாமமானது அனேக இடங்களில் வந்தால் அப்படி வரும்போது தான் அவ்விதமான அர்த்தபேதங்களைச் சொல்லவேண்டுமென்பதும் அவச்யமில்லை. ஒரே இடத்திலிருக்கும் நாமத்தையே பல தடவை உச்சாரணம் பண்ணினாலேயே அவ்வித அர்த்தபேதங்களைச் சொல்லக்கூடும். ஆகவே ஒரே நாமமானது பல இடங்களில் வரும்போது அந்தந்த இடங்களில் அதற்கு வெவ்வேறான அர்த்தங்கள் சொல்லியபோதிலும் புனருக்தி தோஷம் இருக்கத்தான் செய்யும்.

2. மேலும் இந்த ஸ்தோத்ரமானது ஏற்கனவே சொல்லியபடி சக்ர ரஹஸ்யங்கள், மந்த்ரோத்தாரங்கள் முதலான ரஹஸ்ய அர்த்தாந்தரங்களை ஆச்சர்யப்படும் விதமாகப் பிரதிபாதிப்பதாயிருக்கிறது. இவைகள் குருமுகமாகவே தெரிந்துகொள்ளவேண்டியவைகளானாலும் வித்வான்களுடைய மனதிற்கு த்ருப்தி யுண்டாவதற்காக (பாஷ்யத்தில்) அங்கங்கே கொஞ்சம் கொஞ்சம் காட்டப்பட்டிருக்கின்றன.

41. ததః ப்ரோவாச லலிதா
ஸதஸ்யாந் தேவதாகணாந் ।
மமாக்ஞயைவ வாக்தேவ்ய:
சக்ரு: ஸ்தோத்ர மநுத்தமம் ॥

42, அங்கிதம் நாமபிர் திவ்யை:
மம ப்ரீதிவிதாயகை: ।

அப்போது ஸதஸிலிருக்கும் தேவதா கணங்களைப் பார்த்து லலிதாம்பாளானவள் (பின்வருமாறு) சொல்லலானாள்:—

இந்த மேம்பாடில்லாததும் எனக்கு ப்ரீதியுண்டுபண்ணுகிற திவ்ய நாமங்களால் அங்கிதமாயுமிருக்கப்பட்ட ஸ்தோத்ரத்தை வாக்தேவிகள் என்னுடைய ஆக்ஞையால் செய்தார்கள்.

1. இந்த ஸ்தோத்ரத்தைக் கேட்டு ஆச்சர்யமடைந்த தேவதா கணங்களைப்பார்த்து அவர்கள் அடைந்த ஆச்சர்யத்திலிருந்து தெளிவிப்பதற்காக அம்பாள் 'மமாக்ஞயைவ............ விதாகை:' என்று சொன்னது.

2. வாக்தேவதைகள் இந்த ஸ்தோத்ரத்தைத் தங்கள் புத்தியின் தோற்றத்தினால் செய்துவிடவில்லையென்றும், தன்னுடைய ஆக்ஞையின் பேரில் செய்தார்களென்றும், ஆகையால் அதில் ஆச்சர்யப்படவேண்டிய காரணம் யாதொன்றுமில்லை என்றும் அம்பாள் சொன்னதின் பாவம்.

தத் படத்வம் ஸதா யூயம்
ஸ்தோத்ரம் மத் ப்ரீதி வ்ருத்தயே ||

43. ப்ரவர்த்தயத்வம் பக்தேஷு
மம நாமஸஹஸ்ரகம் |

ஆகையால் நீங்கள் என்னுடைய ப்ரீதியானது அதிகரிப்பதற்காக இதை எப்போதும் சொல்லுங்கள். இந்த நாமஸஹஸ்ரத்தை என் பக்தர்களுக்குள் பரவச்செய்யுங்கள்.

1. நாமஸஹஸ்ரத்தைச் சொல்வது முதலாவது விதி. அதினுடைய முக்யமான ப்ரயோஜனம் அம்பாளுடைய ப்ரீதி ஏற்படுவதும் அதிகப்படுவதும். இம்மாதிரி ஏற்கனவே

'ஸ்ரீ மாது: ப்ரீதயே தஸ்மாத் அனிசம் கீர்த்தயேத் இதம் | '

என்று இதற்கு அனுவாதமாகச் சொல்லப்பட்டிருந்தபோதிலும் வக்தா (சொல்லுகிறவர்) ச்ரோதா (கேட்கிறவர், சொல்லப்படுகிறவர்) இவர்கள் வேறாக இருப்பதால் செய்யச்சொல்லப்படுவது ஒரே கர்மாவாக இருந்தாலும் அந்த வாக்யமும் விதிவாக்யந்தான். ஆனால் இது இரண்டாவது விதி. (ஸ்ரீவித்யா தீக்ஷையடைந்தவர்களே பக்தர்கள் என்று இங்கு சொல்லப்பட்டது.)

2. இந்த ஸ்தோத்ரத்தை பக்தர்களுக்குள் பரவச்செய்யும் இந்த ஸம்ப்ரதாயமானது நீடித்திருக்கவேண்டுமென்பதற்காக மேலே சொல்லப்படுகிறது.

இதம் நாமஸஹஸ்ரம் மே
யோ பக்த: படதேऽஸக்ருத் ॥
44. மம ப்ரியதமோ ஜ்ஞேய:
தஸ்மை காமாந் ததாம்யஹம் ।

எந்த பக்தன் இந்த நாமஸஹஸ்ரத்தை ஒருதடவை (யாவது) சொல்லுகிறனோ அவன் எனக்கு அத்யந்தம் ப்ரியப்பட்டவன். அவன் விரும்பியவற்றையெல்லாம் நான் அவனுக்குக் கொடுக்கிறேன்.

1. (ஸக்ருத்) ஒரு தடவை சொல்வதினாலேயே அம்பாளுடைய அனுக்ரஹம் இவ்விதமாக ஏற்படுமானால், (அஸக்ருத்) பலதடவை ஆவ்ருத்தி பண்ணினால் மிகுதியான பலன் ஏற்படும் என்பது இதின் மூலமாகச் சொல்லப்பட்டது. இதிலிருந்து பலச்ருதிபாகத்தில் சொல்லப்படும் காம்யப்ரயோகங்களில் (இத்தனை தடவை ஆவ்ருத்தி பண்ணவேண்டுமென்று சொல்லப்படாமலிருந்தாலும்) உத்தேசித்த காமங்கள் ஏற்படும்வரையில் ஆவ்ருத்தி செய்யவேண்டுமென்பது ஏற்படுகிறது.

முதலாவது விதியில் 'ஸதா' (எப்போதும்) இந்த நாமஸஹஸ்ரத்தைச் சொல்லவேண்டுமென்று சொன்னதைப் பற்றித் திரும்பவும் சொல்லுகிறார்.

ஸ்ரீசக்ரே மாம் ஸமப்யர்ச்ய
ஜப்த்வா பஞ்சதசாக்ஷரீம் ॥
45. பச்சாந் நாமஸஹஸ்ரம் மே
கீர்த்தயேந் மம துஷ்டயே ।

ஸ்ரீசக்ரத்தில் என்னை விசேஷமாக அர்ச்சனை செய்துவிட்டு பஞ்சதசாக்ஷரியை ஜபம்செய்து பிறகு எனக்கு ப்ரீதி உண்டு பண்ணுவதற்காக இந்த நாமஸஹஸ்ரத்தைக் கீர்த்தனம் செய்ய வேண்டும்.

1. இது ஏற்கனவே சொல்லியபடி நித்யகர்மாவாகச் செய்யவேண்டியதைக் குறிப்பது.

இவ்விதம் சக்ரார்ச்சனம், பஞ்சதசீ ஜபம் இவற்றோடு செய்யப்படும் நாம கீர்த்தனத்தின் பலனைப்பற்றிச் சொல்லிவிட்டு

முதலிரண்டும் செய்யமுடியாதவன் நாம கீர்த்தனம் மட்டும் செய்தானேயாகில் அதற்கிருக்கும் பலனைப்பற்றித் திரும்பவும் சொல்லுகிறார்.

மாம் அர்ச்சயது வா மா வா
வித்யாம் ஜபது வா ந வா ||

46. கீர்த்தயேந் நாமஸாஹஸ்ரம்
இதம் மத் ப்ரீதயே ஸதா |

என்னை (ஸ்ரீசக்ரத்தில்) அர்ச்சனம் பண்ணினாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, என்னுடைய வித்யையை ஜபம் பண்ணினாலும் சரி, பண்ணாவிட்டாலும் சரி, என்னுடைய ப்ரீதியின் நிமித்தம் இந்த நாம ஸஹஸ்ரத்தை எப்போதும் கீர்த்தனம் செய்ய வேண்டும்.

1. அதாவது, ஜபார்ச்சனாதிகள் செய்வதற்கு அசக்தனாயிருப்பவன், இந்த நாம ஸஹஸ்ர கீர்த்தனம் செய்தாலேயே இதின் மூலமாக அவற்றின் பலனையும் கிடைக்கப் பெறுகிறான் என்று சொல்லப்பட்டது.

மத் ப்ரீத்யா ஸகலாந் காமாந்
லபதே நாத்ர ஸம்சய: ||

47. தஸ்மாந் நாமஸஹஸ்ரம் மே
கீர்த்தயத்வம் ஸதாதராத் |

(இப்படி உண்டாகும்) என்னுடைய ப்ரீதியினால் பக்தனானவன் ஸமஸ்தமான காமங்களையும் (விரும்பியவற்றையெல்லாம்) அடைகிறான். அதில் ஸந்தேஹமில்லை. ஆகையால் நீங்களெல்லோரும் என்னுடைய இந்த நாம ஸஹஸ்ரத்தை எப்போதும் ஆதரவுடன் (பக்தி, மர்யாதையுடன்) கீர்த்தனம் செய்யுங்கள்.

ஹயக்ரீவ உவாச :—

(இப்படி அம்பாள் சொன்னதைச் சொல்லிமுடித்து மேலே) ஹயக்ரீவர் சொல்லலானார்:—

இதி ஸ்ரீ லலிதேசாநீ
சாஸ்திதேவாந் ஸஹாநுகான் ||

இம்மாதிரி ஸ்ரீலலிதேசானியானவள் பரிவாரங்களோடுகூடிய ஸமஸ்தமான தேவர்களையும் பார்த்து கட்டளையிடுகிருள்.

1. ஈசான: என்ருல் ஆளுகிறவன். ப்ரபு என்று அர்த்தம் லலிதாம்பிகையானவள் ஸமஸ்த ப்ரபஞ்சத்திற்கும், ஸகல ப்ராணி களுக்கும் யஜமானியாக இருந்து ஆளுகிறபடியால் 'லலிதேசானீ' என்று சொல்லப்பட்டது.

2. கட்டளையிட்டாள் என்று சொல்லாமல், சாஸ்தி-கட்டளை யிடுகிருள் என்று சொன்னதினுல், இச்சா ரூபிணியான அம்பா ளுடைய கட்டளையானது மேலுக்குமேல் வருகிற எல்லோராலும் சாச்வதமாகக் கீழ்ப்படியவேண்டியதாயிருப்பதால் அப்போது தேவர்களுக்குச் செய்த ஆக்ஞையானது இப்போதும் இனியும் அமுலில் இருக்கிறதென்பது குறிக்கப்பட்டது.

இதேமாதிரியான ப்ரயோகமானது

'ஆக்ருச்ய புத்ரம் அகவான் யதஜாமிளோऽபி
நாராயணேதி ம்ரியமாண இயாய முக்திம் |'

என்றதிலும் காணப்படுகிறது.

48. ததாக்ஞயா ததாரப்ய
ப்ரம்ஹ விஷ்ணு மஹேச்வரா: |
சக்தயோ மந்த்ரிணீ முக்யா:
இதம் நாம ஸஹஸ்ரகம் ||

49. படந்தி பக்த்யா ஸததம்
லலிதா பரிதுஷ்டயே |

அதுமுதல் அம்பாளுடைய ஆக்ஞையின்படி ப்ரம்ஹா, விஷ்ணு, மஹேச்வரர், மந்த்ரிணீ முதலான சக்திகள் எல்லோரும் லலிதாம்பாளுடைய ப்ரீதி ஏற்படுவதற்காக இந்த நாம ஸஹஸ் ரத்தை பக்தியுடன் எப்போதும் சொல்லிவருகிருர்கள்.

தஸ்மாத் அவச்யம் பக்தேந
கீர்த்தனீயமிதம் முநே ||

ஆகையினுல் ஹே முனியே! இந்த நாம ஸஹஸ்ரமானது பக்தனுல் அவச்யம் சொல்லப்படவேண்டும்.

1. நாம ஸஹஸ்ரம் ஏற்பட்டதைப் பற்றிய வ்ருத்தாந்தத் தைச் சொல்வதற்கு முன்,

'தத்ர ஹேதும் ப்ரவக்ஷ்யாமி ச்ருணு த்வம் கும்பஸம்பவ |'
என்று ஆரம்பித்து இதுவரையில் நாம ஸாஹஸ்ர கீர்த்தனம் செய்யவேண்டியது அவச்யமானது என்பதற்குக் காரணத்தை சொல்லிவிட்டார்.

இனி அவ்வித விசேஷமான மஹிமை பொருந்திய நாம ஸஹஸ்ரத்தைச் சொல்லப்போவதால் அதைத் தான் ஆரம்பிப்பதைப்பற்றியும், அப்படிச் சொல்வதை அகஸ்த்யர் ச்ரத்தையுடன் கேட்கவேண்டுமென்பதைப்பற்றியும் மேலே சொல்லுகிறார்.

50. ஆவச்யகத்வே ஹேதுஸ்தே
மயா ப்ரோக்தோ முனீச்வர |
இதானீம் நாம ஸாஹஸ்ரம்
வக்ஷ்யாமி ச்ரத்தயா ச்ருணு ||

(இந்த ஸ்தோத்ரத்தைக் கீர்த்தனம் செய்யவேண்டியதின்) ஆவச்யகத்திற்குக் காரணமானது என்னால் சொல்லப்பட்டது. ஹே முனீச்வர! இப்போது அம்பாளுடைய நாம ஸாஹஸ்ரத்தைச் சொல்லுகிறேன். அதை ச்ரத்தையுடன் கேள்.

இதற்கு மேல் ஹயக்ரீவர் அம்பாளுடைய த்யானத்தைப் பற்றிய ச்லோகத்தைச் சொல்லிவிட்டு நாம ஸாஹஸ்ரத்தைச் சொல்லுகிறார்.

நாம ஸாஹஸ்ரமானது ஏற்கனவே சொல்லியபடி மாலா மந்த்ரமாக இருப்பதால் அதைக் கீர்த்தனம் செய்வதற்கு முன்னும் பின்னும் (இதர மந்த்ரங்களை ஜபம் பண்ணும்போது செய்வதுபோல்) ஸங்கல்பம், அங்கந்யாஸ கரந்யாஸங்கள், த்யானம், பஞ்ச பூஜை முதலியவைகளைச் செய்யவேண்டும். இவையெல்லாம் குருமுகமாகத் தெரிந்துகொள்ளவேண்டியதாயிருந்தபோதிலும் பாஷ்யத்தின் மூலத்தில் சொல்லியிருப்பவைகள் கீழே சொல்லப்படுகின்றன.

அஸ்ய ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்ர மாலா மந்த்ரஸ்ய வசின்யாதிப்யோ வாக்தேவதாப்ய: ருஷிப்யோ நம: (சிரஸி)
அனுஷ்டுப் சந்தஸே நம: (முகே)
ஸ்ரீமஹாத்ரிபுரஸுந்தர்யை தேவதாயை நம: (ஹ்ருதயே)

க...............பீஜாய (நாபௌ)
ஸ................சக்தயே (குஹ்யே)
ஹ................கீலகாய (பாதயோ:)
சதுர்வித புருஷார்த்த ஸித்யர்த்தே ஜபே விநியோக:
(ஸர்வாங்கே)

பஞ்சதசியின் கூடத்ரயத்தையாவது, பாலா மந்த்ரத்தின் பீஜ த்ரயத்தையாவது இரண்டுதடவை சொல்லி கரந்யாஸ, ஷடங்கந்யாஸங்களைச் செய்துவிட்டு (கீழே சொல்லப்படும்) த்யான ச்லோகத்தைச் சொல்லி பஞ்சபூஜைசெய்து நாம ஸஹஸ்ரத்தைச் சொல்லவேண்டும்.

ந்யாஸம் முதலியவைகளைப் பற்றித் தெரியவேண்டுமானல் ப்ரபஞ்சஸாரம், சாரதா திலகம், அதற்கு ராகவபட்டரால் எழுதப்பட்ட பதார்த்தாதர்சம் என்ற பாஷ்யம், வரிவஸ்யா ரஹஸ்யம் முதலியவற்றைப் பார்க்கவும்.

---

## அத த்யானச்லோக:

### த்யான ச்லோகம்.

ஸிந்தூராருண விக்ரஹாம்,
 த்ரிநயநாம், மாணிக்ய மௌளிஸ்ஃபுரத்
தாராநாயகசேகராம்,
 ஸ்மிதமுகீம், ஆபீன வக்ஷோருஹாம் |
பாணிப்யாம் அலிபூர்ண ரத்னசஷகம்
 ரக்தோத்பலம் பிப்ரதீம்,
ஸௌம்யாம், ரத்ன கடஸ்த
 ரக்த சரணாம், த்யாயேத், பராம், அம்பிகாம் ||

ஸிந்தூரம் போன்ற சிகப்பான சரீரமுடையவளும், மூன்று நேத்ரங்களையுடையவளும்,மாணிக்ய கசிதமான கிரீடத்தில் சோபித்துக்கொண்டிருக்கும் சந்த்ரனை சிரோபூஷணமாக உடையவளும், சிரித்த முகத்தோடு கூடியவளும், பருத்த குசங்களையுடையவளும், மத்யத்தினால் நிரம்பியதும், ரத்னமயமானதுமான குடத்தையும், சிவந்த நிறமுடைய உத்பல புஷ்பத்தையும், கைகளில் வைத்திருப்பவளும், ப்ரஸன்னமான முகத்தையுடையவளும், ரத்னங்கள் நிரம்பிய குடத்தின்மேல் வைக்கப்பட்ட சிவந்த பாதங்களையுடையவளும், ஸர்வோத்க்ருஷ்டமானவளுமான அம்பாளை த்யானம் செய்யவும்.

1. மௌளி என்பது உத்தமமாயிருப்பதையும் குறிக்குமாகையால் மாணிக்யம் போல் ச்ரேஷ்டமான (தாராநாயகசேகராம்) என்றும் சொல்லலாம்.

2. 'அலி' என்றால் மத்யம். 'அலி பூர்ணம்' என்றால் மத்யத்தினால் பூர்ணம் என்று அர்த்தம்.

3. 'அலி' என்றால் தேனீக்கும் பெயர். மதுவினால் (தேனால்) நிரம்பி இதின் வாஸனையினால் இழுக்கப்பட்ட தேனீக்களோடு இருப்பதால் அவைகளால் பூர்ணமாகப்பட்டது போல் தோன்றுவது 'அலிபூர்ணம்' என்றும் சொல்லலாம்.

4. 'உத்பலம்'—நெய்தல் புஷ்பம் அல்லது தாமரைப் புஷ்பம்.

5. 'மாணிக்ய மௌளிம் ஸ்புரத்', 'மணிபூர்ண ரத்ன சஷகம்', 'ரத்னோத்பலம்', 'ரத்ன கடஸ்த்த ஸவ்ய சரணும்' என்ற பாடாந்தரங்கள் 'சாரதா திலக'த்தில் காணப்படுகின்றன.

---

இதி ஸ்ரீப்ரம்ஹாண்டபுராணே உத்தரகண்டே
ஸ்ரீஹயக்ரீவாகஸ்த்ய ஸம்வாதே
ஸ்ரீ லலிதாநாமஸஹஸ்ரா பூர்வபாகோ நாம
ப்ரதோமாऽத்யாய: ||

" ஸ்ரீலலிதாஸஹஸ்ரநாமம்
பூர்வபாகம் முற்றிற்று"

---

உ

ஓம் ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுரஸுந்தர்யை நம:

# ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்.

**श्रीमाता**

**ஸ்ரீமாதா** (1)

ஸர்வோத்க்ருஷ்டமான தாயாராக இருப்பவள்.

1. லோகத்தில் துக்க தசையில் தாயாரை ஸ்மரிப்பது பிரஸித்தமான விஷயம். ஆயினும் நாம் எடுத்திருக்கும் அனேக ஜன்மங்களில் அனேகம் தாயார்கள் இருந்தபோதிலும் அவர்கள் நம்முடைய தாபத்ரயாத்மகமாகிய துக்கங்களைப் போக்கடிக்க முடியாதவர்களாகையால் அந்த ஸாமர்த்தியமுள்ள ஸர்வோத்தமமான ஜகன்மாதாவைத்தான் 'மாதா' என்று சொல்லமுடியும். எல்லாவிதமான தாயார்களையும்விட உத்க்ருஷ்டமானவளாகையால் 'ஸ்ரீமாதா' என்று பெயர்.

''நாநாயோனி ஸஹஸ்ர ஸம்பவவசாத் ஜாதா ஜனன்ய: கதி
ப்ரக்யாதா ஜனகா: கியந்த இதி மே ஸேத் ஸ்யந்தி சாக்ரேசதி ।
ஏதேஷாம் கணனைவ நாஸ்தி மஹத: ஸம்ஸார ஸிந்தோர் விதே:
பீதம் மாம் நிதராம் அநந்ய சரணம் ரக்ஷானுகம்பாநிதே ॥

(தேவீ மஹிம்ந ஸ்தோத்ரம்)

2. ஸ்ரீ-லக்ஷ்மியினுடைய அல்லது ஸரஸ்வதியினுடைய மாதா - தாயார். 'ஸ்ரீ' என்கிற பதத்திற்கு லக்ஷ்மி, ஸரஸ்வதி முதலான அர்த்தங்கள் உண்டு. ஆனால் இந்த இடத்தில் அம்பாள் அவர்களுக்கு ஸமானமான ருத்ராணி அல்ல. அவர்களையெல்லாம் உண்டாக்கினவளாயும், பரமசிவ மஹிஷியாயும் பராபட்டாரிகையாகவும் இருக்கிற ரூபத்தைச் சொல்லப்பட்டிருக்கிறது.

3. 'மா' என்பதற்கு அளக்கிறது என்று அர்த்தம். 'லக்ஷ்மியை அளக்கும்படியான வஸ்து' என்று பொருள். அளக்கப்படுவதைவிட அளக்கிறவஸ்து ச்ரேஷ்டமாகையால் அம்பாள் அனவதிக ஸ்ரீ ரூபமான 'மோக்ஷஸ்வரூபி' என்று அர்த்தம்.

4. 'ஸாஹி ஸ்ரீரம்ருதா ஸதாம்' என்ற ச்ருதியில் சொன்ன பிரகாரம், ஸ்ரீ என்று அர்த்தமான வேதங்களை ப்ரும்ஹாவுக்கு சொல்லியதால் 'ஸ்ரீ மாதா' என்றும் பெயர்.

"யோ ப்ரும்ஹாணம் விததாதி பூர்வம் யோவை
வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை" (ச்ருதி)

5. வேதத்தை முதல் முதலாக வெளிப்படுத்தியவள். அதாவது வியாஸரூபா என்றும் அர்த்தம்.

6. ஸ்ரீ-விஷத்தை, மாதா–(கண்டத்தில்) தரித்துக்கொண்டிருக்கிறவள். (ஸ்ரீகண்டன் என்று பரமசிவனுக்குப் பெயர். அவரோடு அபின்னமாக இருப்பதால் அம்பாளுக்கும் அதே பெயர்.)

7. மஹத்தானவர்களையோ, மஹத்தான வஸ்துக்களையோ சொல்லும்போது அந்தப் பெயருக்கு முன் 'ஸ்ரீ' என்ற பதம் சேர்க்கப்படுவது வழக்கம். ஸ்ரீ சக்ரம், ஸ்ரீ சைலம், ஸ்ரீ வித்யா முதலியவைகளில் காணலாம். அதேமாதிரி இன்னாருடைய தாயார் என்று இல்லாமல் எல்லாவற்றிற்கும் அம்பாள் தாயாராக (ஜனனியாக) இருப்பதால் அவளை 'ஸ்ரீமாதா' என்று சொல்லப்பட்டது.

"யாதோவா இமானி பூதானி ஜாயந்தே" (ச்ருதி)

8. 'ஈசான' 'ஈச்வர' என்ற பதங்கள் பரமசிவனைத்தவிர வேறு ஒருவரையும் குறிப்பிடாததுபோல் 'மாதா' என்று பெயர் ஸாக்ஷாத் த்ரிபுரஸுந்தரி என்று அர்த்தமே தவிற வேறல்ல.

9. 'லகுஸ்துதி'யிலிருக்கும் 'மாயாகுண்டலினீக்ரியா மதுமதீ' என்ற மந்த்ரோத்தார ச்லோகத்தை அனுஸரித்து 'மாதா' என்பது ஒரு மந்த்ரமாகையால் அந்த மந்த்ர ஸ்வரூபமாக இருப்பவள்.

## श्रीमहाराज्ञी
## ஸ்ரீமஹாராக்ஞீ (2)

ஸர்வோத்க்ருஷ்டமான ராணியாக இருப்பவள், அதாவது ஸகல ப்ரபஞ்சத்தையும் பரிபாலனம் செய்பவள்.

1. ச்ருதியிலும் 'யேன ஜாதானி ஜீவந்தி' என்று இந்த அர்த்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

2. இதில் அடங்கியிருக்கும் மந்த்ர விசேஷங்களை குருமுகமாகத் தெரிந்துகொள்ளவேண்டியது.

## श्रीमत्सिंहासनेश्वरी

## ஸ்ரீமத் ஸிம்ஹாஸனேச்வரீ (3)

ஸர்வோத்க்ருஷ்டமான ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருப்பவள்.

1. மிருகங்களுக்குள் சிங்கம் பிரதானமாகையால், அரசர்கள் உட்காரும் ஆஸனமானது சிங்கம்போன்ற உருவங்களின் மேல் வைக்கப்பட்டிருக்கும். அதனால் 'ஸிம்ஹாஸனம்' என்று பெயர். அம்பாள் ப்ரபஞ்ச ஸாம்ராஜ்யலக்ஷ்மியோடு கூடிய ஸிம்ஹாஸனத்துக்கு ஈச்வரீ, ஸிம்ஹாஸனத்தில் இருப்பவள்.

2. ஸிம்ஹத்தையே ஆஸனமாக உடையவள், 'ஸிம்ஹவாஹினி' என்று அர்த்தம்.

ஸிம்ஹம் ஆருஹ்ய கன்யாத்வே நிஹதோ மஹிஷோऽனயா |
மஹிஷக்னீ ததோ தேவீ ததா ஸிம்ஹாஸனேச்வரீ ||

(தேவீபுராணம்)

2. 'பச்யகன்' என்ற பதம் 'கச்யபன்' என்றும், 'வச்' என்பதிலிருந்து 'சிவ' என்றும் மாற்றக்கூடியதுபோல் 'ஸிம்ஹ' என்ற பதத்தை 'ஹிம்ஸ' என்றும் மாற்றலாம். அந்த விதத்தில் 'ஹிம்ஸாஸனேச்வரீ'—ஜகத்தையெல்லாம் ஸம்ஹாரம் பண்ணும்படியான சக்தியுள்ளவள் என்று அர்த்தம்.

'யத் ப்ரயந்தி அபிஸம்விசந்தி' (ச்ருதி)

4. சைதன்ய பைரவி முதல், ஸம்பத்ப்ரதா பைரவி முடிய எட்டு மந்த்ரங்கள் உண்டு. அவைகள் 5 ஸிம்ஹாஸனங்களாக நாலு திக்குகளில் நாலும், நடுவில் ஒன்றுமாகவும் இருப்பதாக ஞானார்ணவ தந்த்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது அந்த ஸிம்ஹாஸனங்களுக்கெல்லாம் ஈச்வரீ என்று மந்த்ரபரமாக அர்த்தம் உண்டு.

5. அம்பாள் 'மஹாராக்ஞீ' யென்று சொல்லப்பட்டாலும், ராஜாவுக்கு லக்ஷணம் ஸிம்ஹாஸனம் ஆனபடியாலும் அடுத்தாற்போல் 'ஸிம்ஹாஸனேச்வரீ' என்ற நாமம் சொல்லப்பட்டது.

முதல் மூன்று நாமங்களாகிற ஸ்ரீமாதா, ஸ்ரீமஹாராக்ஞீ ஸ்ரீமத் ஸிம்ஹாஸனேச்வரீ, இவைகளில் முறையே அம்பாளா கிற ப்ரும்ஹத்தினுடைய ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் இம் மூன்று கர்த்ருத்வமும் சொல்லப்பட்டிருக்கிறது. 'பஞ்சக்ருத்ய பராயணு' என்று பின்னால் சொல்லப்பட்டபடி, பாக்கி இரண்டா கிய 'திரோதானம், அனுக்ரஹம்' இவைகளை 'சிவசக்த்யைக்ய ரூபிணீ' என்ற நாமம் முடிய இனிவரும் நாமங்களால் வர் ணிக்கப்படுகிறது. புராணங்களில் இருக்கும் அம்பாளுடைய அவதார வர்ணனையைப் பெரும்பாலும் அனுஸரித்து திரோ தான அனுக்ரஹமாகிற பந்தமோக்ஷங்களுக்கு ப்ரும்ஹ ஸ்வரூபிணியாகிய அம்பாள்தான் கர்த்தா என்பதைச் சொல்லப் பட்டிருக்கிறது.

## चिदग्निकुण्डसंभूता
## சிதக்னி குண்ட ஸம்பூதா (4)

சிதக்னி குண்டத்தில் ஆவிர்ப்பவித்தவள்.

1. சித் - கேவலமான ப்ரும்ஹம் அதாகிற அக்னிகுண் டம் - அவித்யையாகிற இருட்டுக்கு விரோதியானதால் - அதில் ஸம்பூதா - ஆவிர்ப்பவித்தவள். சக்தி, சக்தியுள்ளவன் இவையிர ண்டும் அபேதமாக இருப்பதுபோல், கேவலம் ப்ரும்ஹஸ்வரூபி யாயிருப்பவள்.

"அந்தர் நிரந்தர நிரிந்தனம் ஏதமானே மோஹாந்தகார பரிபந்தினி ஸம்விதாக்னௌ"

"சித்சக்தி: பரமேச்வரஸ்ய விமலா சைதன்ய மேவோச்யதே."

(ஸங்க்ஷேபசாரீரகம்)

2. 'சித்' - ஞானம் என்பதே அக்னிக்கு ஸமமானதென்று பிரஸித்தம். அந்த குண்டத்திலிருந்து உதித்தவள்.

ஞானக்னி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே அர்ஜுன'

(பகவத்கீதை)

3. ப்ரும்ஹாண்ட புராணத்தில் சொல்லப்பட்டபடி பண் டாசுரனால் பீடிக்கப்பட்ட தேவர்களால் மூட்டப்பட்ட அக்னி குண்டத்திற்கு 'சிதக்னி குண்டம்' என்று பெயர். அதில் ஆவிர்ப் பவித்தவள்.

'குண்டம் யோஜன விஸ்தாரம் ஸம்யக் க்ருத்வா அதிசோபனம்'

## देवकार्यसमुद्यता
## தேவகார்ய ஸமுத்யதா (5)

தேவர்களுடைய கார்யத்தைச்செய்வதில் முயற்சியுடையவள்.

1. நித்யையான அம்பாள் எதற்காக அவதாரம் எடுக்க வேண்டுமென்பதற்குக் காரணம் சொல்லப்படுகிறது. தேவர்களுடைய கார்யம்—பண்டாஸுரன், மஹிஷாஸுரன் முதலிய அஸுரர்களை ஸம்ஹாரம் செய்வது—அதற்காக ஆவிர்ப்பவித்தவள்.

'தேவானும் கார்யஸித்யர்த்தம் ஆவிர்பவதி ஸாயதா |
உத்பன்னேதி ததா லோகே ஸாநித்யா ப்யபிதீயதே || (ஸப்தசதீ)

2. இந்த இரண்டு நாமங்களால் அம்பாளுடைய சித்த ஸ்வரூபத்தைச் சொல்லிவிட்டு விமர்சரூபத்தை வர்ணிக்க ஆரம்பிக்கப் படுகிறது.

## उद्यद्भानु सहस्राभा
## உத்யத் பானு ஸஹஸ்ராபா (6)

'ஸஹஸ்ரம்' என்ற பதத்திற்கு, 'கணக்கில் அடங்காதது' என்று அர்த்தம் உண்டு.

1. பானு ஸஹஸ்ர — கணக்கில்லாத கிரணங்களையுடைய (பானு - கிரணம்) ஸூர்யன் உதிக்கும்போது இருக்கும், ஆபா - (சிகப்பு) நிறத்தோடு கூடியவள்.

2. பானு - ஸூர்யன் என்கிற அர்த்தத்தில் கணக்கில்லாத ஸூர்யன்கள் ஏககாலத்தில் உதித்தால் என்ன காந்தி இருக்குமோ அம்மாதிரி காந்தி உடையவள்.

இந்த இரண்டுவிதத்திலும் அம்பாளுடைய காந்தியையும் சிகப்பு நிறத்தையும் சொல்லப்பட்டிருக்கிறது.

ஸ்வாத்மைவ தேவதா ப்ரோக்தா லலிதா விச்வவிக்ரஹா |
லௌஹித்யம் தத்விமர்ச: ஸ்யாத் உபாஸ்திரிதி பாவனா ||
(ஸ்வதந்த்ர தந்த்ரம்)

ஸ்வயம் ஹி த்ரிபுராதேவீ லௌஹித்யம் தத்விமர்சனம்
(வாமகேச்வர தந்த்ரம்)

இம்மாதிரி ப்ரகாசம், விமர்சம் இவ்விரண்டின் ஸாமரஸ்யத்தோடு கூடிய அம்பாளுக்கு ஸ்தூலம், ஸூக்ஷ்மம், பரம் என்ற மூன்று வித ரூபங்கள் உண்டு. கர சரணாதி அவயவங்களோடுகூடியது ஸ்தூல ரூபம். மந்த்ரமயமாக இருப்பது ஸூக்ஷ்மம். வாஸனாமயமாக இருப்பது பரம். ஸூக்ஷ்ம ரூபம் திரும்பவும் மூன்று விதம். இவையில் ஸ்தூல ரூபத்தை இனி சொல்லப்படுகிறது.

## चतुर्बाहु समन्विता
## சதுர் பாஹு ஸமந்விதா (7)

நான்கு கைகளுடன் கூடியவள்.

1. த்யானத்தில் சொல்லப்படும் அவயவ மந்த்ரங்களுக்கும் உபலக்ஷணமாகச் சொல்லலாம். அதாவது அச்வாரூடா, ஸம்பத்கரீ, மந்த்ரிணீ, வாராஹீ இந்த நால்வரையும் அம்பாளுடைய நாலு கைகளாகவும் சொல்லலாம்.

கைகளைப்பற்றிச் சொன்னதால் அவைகளிலிருக்கும் ஆயுதங்களைப்பற்றி அடுத்தாற்போல் சொல்லப்பட்டிருக்கிறது.

## रागस्वरूप पाशाढ्या
## ராக ஸ்வரூப பாசாட்யா (8)

இச்சாரூபமான பாசாயுதத்துடன் கூடியவள்.

1. பாசம் என்பது ஒரு வஸ்துவைப் பிடித்து இழுப்பதற்காகப் போடும் கயிறு. இதைக் கையில் வைத்துக்கொண்டிருப்பது ஸ்தூல ரூபம். இது இடதுகைகளிரண்டில் கீழ்க்கையில் இருப்பதாகச் சொல்லப்படும். இதற்கு அதிஷ்டான தேவதை அச்வாரூடா.

2. ராக - அனுராக என்கிற சித்தவ்ருத்தி விசேஷம், இச்சை, ஆசை என்று அர்த்தம். அதையே வாஸனாமய ரூபத்தில் பாசமாக அம்பாள் கைக்கொண்டு விளங்குகிறாள்.

## क्रोधाकाराङ्कुशोज्ज्वला
## க்ரோதாகாராங்குசோஜ்வலா (9)

க்ரோதம் - த்வேஷம் என்கிற சித்தவ்ருத்தி. அந்த ரூபமான அங்குசத்தோடு ஜ்வலிக்கின்ற கையை உடையவள்.

1. 'ஆகாரம்' என்றால் ஸவிஷயகமான ஞானம். ஆகவே க்ரோதம், ஞானம் இவைகளான அங்குசத்தோடு கூடியவள்.

2. ஸ்தூல ரூபத்தில் அங்குசத்தை(கண்டரக்கோடாலியை) அம்பாள் தன் வலதுகைகளிரண்டில் கீழ்க்கையில் வைத்துக் கொண்டிருக்கிறாள். இதற்கு அதிஷ்டான தேவதை ஸம்பத்கரீ.

## मनोरूपेक्षु कोदण्डा

## மனோரூபேக்ஷு கோதண்டா (10)

மனஸ் – ஸங்கல்பம், விகல்பம் இந்த க்ரியைகளை உடையது – அதாகிற இக்ஷுகோதண்டா – கரும்புவில்லையுடையவள்.

ஸ்தூல ரூபத்தில் புண்ட்ரேக்ஷு கோதண்டத்தை (செங்கரும்பு வில்லை) இடதுகைகளிரண்டில் மேல் கையில் அம்பாள் வைத்துக்கொண்டிருக்கிறாள். அதற்கு அதிஷ்டான தேவதை மந்த்ரிணீ.

## पञ्चतन्मात्रसायका

## பஞ்சதன்மாத்ரஸாயகா (11)

ஐந்து தன்மாத்ரைகளை (சப்த, ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்தம்) பாணங்களாக உடையவள்.

ஸ்தூல ரூபத்தில் ஐந்துவிதமான புஷ்ப(ங்களாகிய)பாணங்களை அம்பாள் தன் வலது மேல்கையில் வைத்துக்கொண்டிருக்கிறாள். இதற்கு அதிஷ்டான தேவதை தண்டநாதா என்கிற வாராஹீ. இந்த புஷ்பங்கள் - கமலம், கைரவம், சிவந்த கல்ஹாரம் சிவந்த இந்திவரம், ஸஹகாரம். இவைகளின் குணம் - ஹர்ஷணம், ரோசனம், மோஹனம், சோஷணம், மாரணம்.

'இச்சா சக்தி மயம் பாசம் அங்குசம் ஞானரூபிணம் ।
க்ரியா சக்திமயே பாணதனுஷீ ததத் உஜ்வலம் ॥

என்றபடி பாசம் என்பது இச்சா சக்தி, அங்குசம் என்பது ஞானசக்தி, பாணம் தனுஸ் இவையிரண்டும் க்ரியா சக்தி.

இந்த நாலு ஆயுத நாமங்களிலும் அந்தந்த ஆயுதத்தின் மந்த்ரமானது ரஹஸ்யரூபமாக சொல்லப்பட்டிருப்பதை குருவினிடம் தெரிந்துகொள்ளவேண்டியது.

அம்பாளுக்கு மன்மதனைப்போல கரும்புவில்லும் புஷ்ப பாணங்களும் சொல்லப்பட்டிருப்பது கவனிக்கத் தக்கது. ச்ருங்கார ரஸப்ரதானையாகையால் காமேச்வரீ என்ற அம்பாளுக்கு 'லலிதா' என்ற பெயராதலால் அழகான வஸ்துக்கள் அம்பாளுக்கு ஆயுதமாக இருப்பது பொருத்தமானது.

'லலிதேதி நாமயுக்தம் தவகில திவ்யா நவா வ்ருதய: I
தனுர் ஐக்ஷவம் அஸ்த்ராண்யபி: குஸுமானி ததாகிலம் லலிதம் II

## निजारुण प्रभापूर मज्ज द्ब्रह्माण्डमण्डला

## நிஜாருண ப்ரபாபூர மஜ்ஜத் ப்ரம்ஹாண்ட மண்டலா (12)

தன்னுடைய சிகப்பான காந்தியின் ப்ரவாஹத்தினுல் ப்ரும்ஹாண்டங்களினுடைய மண்டலங்களை முழுகச் செய்கிறவள்.

அம்பாள் செம்பஞ்சுக்குழம்பு நிறமாக த்யானிக்கப்படுவது வழக்கம்.

'யதேதத் தவத் ரூபம் ஸகலம் அருணபம்'
'அருணம் கருண தரங்கிதாக்ஷீம்'
'ஸிந்தூராருண விக்ரஹாம் த்ரிநயனாம்'

இனி அம்பாள் சிதக்னி குண்டத்திலிருந்து ஆவிர்பவித்த பிரகாரம் சிரஸ் முதல் பாதபத்மம் வரையில் அம்பாளுடைய ஸ்தூல ரூபம் வர்ணிக்கப்படுகிறது. (பஞ்சதசியிலும் வாக்பவ கூடம் முதலிலிருக்கிற பிரகாரம் அதின் ஸ்தானமாகிற சிரஸ்ஸிலிருந்து ஆரம்பிப்பதும் பொருத்தமாக இருக்கிறது.)

## चम्पकाशोक पुन्नाग सौगन्धिक लसत्कचा

## சம்பகாசோக புன்னுக ஸௌகந்திக லஸத்கசா (13)

சம்பகம், அசோகம், புன்னுகம், ஸௌகந்திகம் இவைகளின் புஷ்பங்களுடன் சோபிக்கிற கூந்தலை உடையவள்.

அம்பாளுடைய கூந்தலுக்கு இயற்கையாகவே வாஸனை இருப்பதால் தரிக்கப்படும் புஷ்பங்கள் அலங்காரமாக இருக்கின்றனவே தவிர, அவைகளால் வாஸனை உண்டுபண்ணவேண்டிய அவச்யமில்லையென்றும் அர்த்தம்.

ஜானுவி புஷ்ப கந்தான் ப்ரமர த்வம் ப்ரூஹி தத்வம் மே ।
தேவ்யா: கேச கலாபே கந்த: கேனோபமீயேத ॥

## कुरुविन्द मणिश्रेणी कनत्कोटीरमण्डिता

### குருவிந்த மணிச்ரேணீ கனத்கோடீரமண்டிதா (14)

பத்மராகங்களின் கோர்வைகளால் ப்ரகாசிக்கின்றகிரீடத்தால் அலங்கரிக்கப்பட்டவள்.

குருவிந்தமணி என்கிற பத்மராகமானது அதின் தியான மாத்திரத்தால் காமம், அனுராகம், மங்களம்,விஷ்ணுபக்திஇவை களை அதிகரிக்கும்படி செய்யும் தன்மை உடையது. இங்கே சொல்லப்பட்ட காரணம் அதோடு கூடிய கிரீடத்தை உடைய வளாக அம்பாளை த்யானம்செய்தால் பக்தி அதிகரிக்கும் என்பது ஸூசனை செய்யப்பட்டிருக்கிறது.

## अष्टमी चन्द्रविभ्राज दलिकस्थलशोभिता

### அஷ்டமீ சந்த்ர விப்ராஜத் அலிகஸ்தல சோபிதா (15)

அஷ்டமீ திதியில் இருக்கும் சந்த்ரனைப்போல் - அர்த்த சந்த்ரனைப்போல் - பிரகாசிக்கிற நெற்றியுடன் சோபிக்கிறவள்.

## मुखचन्द्र कलङ्काभ मृगनाभि विशेषका

### முகசந்த்ர களங்காப ம்ருகநாபி விசேஷகா (16)

சந்த்ர மண்டலத்தில் களங்கம் காணப்படுவதுபோல் தன் முகமாகிற சந்த்ர மண்டலத்தில் களங்கத்துக்கு ஸமானமான கஸ்தூரி திலகத்தை உடையவள்.

## वदनस्मर माङ्गल्य गृहतोरण चिल्लिका

### வதனஸ்மர மாங்கல்ய க்ருஹதோரணசில்லிகா (17)

ஸ்மர மாங்கல்ய க்ருஹ - மன்மதனுடைய மங்களகரமான வீடு (அரண்மனை) க்கு ஸமானமான முகத்தில்அந்தஅரண்மனையில் கட்டப்பட்டிருக்கும் தோர்சீலைபோல் இருக்கும் புருவங்களை உடையவள்.

## वक्त्रलक्ष्मी परीवाह चलन्मीनाभलोचना

**வக்த்ர லக்ஷ்மீ பரீவாஹ சலன் மீனாப லோசனா (18)**

தன் முகத்தினுடைய ஸௌந்தர்ய (காந்தி) ப்ரவாஹத்தில் ஓடும் மீன்கள்போல் இருக்கும் கண்களை உடையவள்.

மீன் தன் குஞ்சுகளைப் பால்கொடுத்து வளர்ப்பதில்லையென்றும், அவைகளைத் தன் கண்களால் பார்ப்பதினாலே வளர்க்கிறதென்றும் சொல்வதுண்டு. அந்தமாதிரி அம்பாள் ஸமஸ்த லோகத்தையும் தன் கண்பார்வையாலேயே ரக்ஷித்துவருவதால் 'மீன் போன்ற கண்களையுடையவள்' (மீனாக்ஷி) என்று சொல்வதுபோல், 'மீனாபலோசநா' (மீனலோசநீ) என்று இங்கு சொல்லப்பட்டு இருக்கிறது.

## नवचम्पक पुष्पाभनासादण्ड विराजिता

**நவ சம்பக புஷ்பாப நாஸாதண்ட விராஜிதா (19)**

புதிதாக (அல்லது கொஞ்சம்) மலர்ந்திருக்கும் சம்பக புஷ்பத்தைப்போன்ற மூக்கினால் அதிகமான சோபையுடையவள்.

## ताराकान्ति तिरस्कारि नासाभरण भासुरा

**தாராகாந்தி திரஸ்காரி நாஸாபரண பாஸுரா (20)**

சுக்ர நக்ஷத்திரத்தின் காந்தியைத் தோற்கடிக்கிற காந்தியோடு கூடிய (மாணிக்ய முக்தகசிதமான) மூக்குத்தியுடன் விளங்குகிறவள்.

## कदम्बमञ्जरी क्लृप्तकर्णपूर मनोहरा

**கதம்ப மஞ்ஜரீ க்ல்ப்த கர்ணபூர மநோஹரா (21)**

கதம்பத்தின் துளிர்களை தன் காதுகளில் (கர்ணப்பூ மாதிரி) தரித்திருக்கும் மனோஹரமான ரூபத்தை உடையவள்.

## ताटङ्क युगलीभूत तपनोडुप मण्डला

**தாடங்க யுகளீபூத தபனோடுப மண்டலா (22)**

ஸூர்யன் சந்த்ரன் இவர்களை இரு காதுகளில் தாடங்கங்களாய் (ஓலைகளாய்) தரித்துக்கொண்டிருப்பவள்.

‘ஸூர்ய சந்த்ரௌ ஸ்தனௌ தேவ்யா: தாவேவ நயனே ஸ்ம்ருதே।
உபௌ தாடங்க யுகளம் இத்யேஷா வைதிகீ ச்ருதி: ||

ஸுமங்கலிகளுக்கு தாடங்கம் விசேஷமான ஆபரணம். அம்பாளுடைய தாடங்கத்தின் மஹிமையைப்பற்றி நமது ஆசார்யாள் ‘ஸௌந்தர்ய லஹரி’யில் சொல்லுகையில் அந்த மஹிமையால்தான் பரமசிவன் ஹாலாஹல விஷத்தை சாப்பிட்ட போதிலும், உயிருக்கு ஹானி ஒன்றும் ஏற்படவில்லை என்பதாக வர்ணித்திருக்கிறார்கள்.

ஸுதாமப்யாஸ்வாத்ய ப்ரதிபய ஜராம்ருத்யுஹாரிணீம்
  விபத்யந்தே விச்வே விதிசதமகாத்யா திவிஷத:।
கராளம் யத்க்ஷ்வேளம் கபளிதவத: காலகலனா
  ந சம்போஸ்தன்மூலம் தவ ஜனனி தாடங்க மஹிமா ||

## पद्मराग शिलादर्श परिभावि कपोलभूः
## பத்மராக சிலாதர்ச பரிபாவி கபோலபூ: (23)

நிர்மலமாயும் ப்ரதிபிம்பத்தைக் காட்டக்கூடியதாயும் இருப்பதில் பத்மராக ரத்னத்தில் செய்யப்பட்ட கண்ணாடியை அதிசயித்த கன்னங்களை உடையவள்.

## नवविद्रुमबिम्बश्री न्यक्कारि दशनच्छदा
## நவவித்ரும பிம்ப ஸ்ரீ ந்யக்காரி தசனச்சதா (24)

புதியதான பவழம், கோவைப்பழம் இவைகளின் காந்தியை தாழ்த்துகின்ற (அவைகளைவிட அழகான) உதடுகளை உடையவள். (நாமத்தில் ‘ரதனச்சதா’ என்றும் சொல்வதுண்டு.)

## शुद्धविद्याङ्कुराकार द्विजपङ्क्ति द्वयोज्ज्वला
## சுத்தவித்யாங்குராகார த்விஜ பங்க்தி த்வயோஜ்வலா (25)

சுத்த வித்யையின் துளிர்கள் (அல்லது முளைகள்) போன்ற பல் வரிசைகளோடு சோபிக்கிறவள்.

1. ‘த்விஜ’ என்பதற்கு பல் என்றும், பக்ஷி என்றும் ப்ராம்மணன் என்றும் அர்த்தம். ஒரு தடவை முளைத்து விழுந்து

பிறகு முளைப்பதினாலும், முட்டையாகப் பிறந்து திரும்பவும் அந்த முட்டையிலிருந்து வெளிப்படுவதாலும், உபநயனம் இரண்டாவது பிறப்பாகச் சொல்லப்படுவதாலும், இவைமூன்றும் இம்மாதிரி 'த்விஜ' என்ற பதத்திற்கு அர்த்தமாகிறது.

2. 'ஸாபவதி சுத்தவித்யா யா இதம்தாஹம்தயோர் அபேதம்' என்ற வாக்கியத்திற்கு தத்தாத்ரேய ஸம்ஹிதை முதலியவைகளில் ஸ்ரீ வித்யையே சுத்தவித்யை என்று சொல்லப் படுகிறது. அதற்கு ஷோடசாக்ஷரீ மந்த்ரம் அங்குரமாக (முளை யாக) இருக்கிறது. அவற்றில் முளையொன்றுக்கு இரண்டு தளம் இருப்பதால் 32 தளமாகிறதென்றும் அவைகளே அம்பாளுடைய பல்வரிசைகளாக இருக்கின்றனவென்றும் அர்த்தம்.

3. 'வித்யாஹவை ப்ராம்ஹணம் ஆஜகாம' என்றபடி வேதம் முதலான வித்யைகள் ப்ராம்ஹணனை ஆச்ரயித்து இருக் கின்றன. அவன் அவைகளைத் தெரிந்துகொண்டு பிறருக்குச் சொல்லிக்கொடுத்து விஸ்தாரப்படுத்துவதால் அம்மாதிரி சொல் லப்பட்டிருக்கிறது. அதனால் ப்ராம்ஹணர்கள் 'வித்யாங்குராள்'. அதேமாதிரி (சுத்த) நிர்மலமாயும் வித்யைகளுக்கு அங்குரமா யுள்ள ப்ராம்ஹணர்களுடைய பங்க்தி த்வயத்தினால் சோபிக் கிறவள் என்று அர்த்தம் சொல்லலாம். 'ப்ராம்ஹணோஸ்ய முகம் ஆஸீத்' என்றபடி ப்ராம்ஹணர்கள் அம்பாளுடைய முகத் திலிருந்து உதித்தவர்களாகையால் தந்தங்களே மூர்த்தீகரித்து வந்ததாகவும் சொல்லலாம்.

4. சுத்தவித்யை முதல் அனுத்தரா பர்யந்தம் 32 வித தீக்ஷைகள் தந்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. 'தீக்ஷா ஜன்ம த்ருதீயம் ஸ்யாத்' என்றபடி தீக்ஷையானது மூன்றாவது பிறப்பு என்று சொல்லப்படுகிறது. மாதாவினிடமிருந்து ஜனனம், உபநயனம், பிறகு தீக்ஷை என்று மூன்று பிறப்பில், தீக்ஷை மூன்றாவதாக இருந்தாலும், உபநயனத்திலிருந்து தீக்ஷை இரண் டாவது பிறப்பாகச் சொல்லப்படுமாகையால் மேலே சொல்லிய தீக்ஷைகளையும் 'த்விஜபங்க்தி' என்றும் சொல்லலாம். 32 ஆக இருப்பதால் 32 பல்களுக்கு ஸமானமாக 'த்விஜபங்க்தித்வயம்' என்று வரும்.

5. சுத்தவித்யா என்றால் 'த்ர்யக்ஷரீ' மந்த்ரத்திற்கும் அர்த்தம். அது உபதேசம் ஆனபிறகுதான் மேலே சொல்லிய தீக்ஷைகள் அடையவேண்டியதாகையால் அவற்றிற்கு முளை போல் இருப்பதால் மேலே சொல்லிய 'த்விஜபங்க்தி த்வய' த்தினுடைய ஆகாரமானது (ரூபமானது) 'சுத்தவித்யாங்குர' மாகவுமிருக்கிறது என்றும் அர்த்தம். ஸம்ப்ரதாயக்ரமமாக 32 தீக்ஷைகளையும் பெற்ற மஹான்களுக்குத்தான் அம்பாளுடைய அனுக்ரஹம் கிடைக்குமென்று ஸூசனை செய்யப்பட்டிருக்கிறது.

## कर्पूर वीटिकामोद समाकर्षिदिगन्तरा

## கர்பூர வீடிகா மோத ஸமாகர்ஷி திகந்தரா (26)

(தன்னுடைய முக கமலத்திலிருக்கும்) கர்பூரவீடிகா என்கிற தாம்பூல விசேஷத்தினுடைய வாஸனையினால் தன்னிடம் இழுக்கப்பட்ட திக்குகளை உடையவள்.

1. பத்து திக்குகளுடைய தேவதைகள் அம்பாள் முகத்திலிருக்கும் தாம்பூலத்திற்கு ஆசைப்பட்டு, அது கிடைக்காததினால் அதின் வாஸனையாவது நமக்கு கிடைக்கட்டும் என்று ஒருவருக்கொருவர் போட்டிபோட்டுக்கொண்டு பிறருக்குத் தெரியாமல் அம்பாளையே சூழ்ந்துக்கொண்டு எப்போதும் இருப்பதாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

2. 'ஸமாகர்ஷித்' என்பதற்கு வாஸனையோடு கூடியதாய் செய்யப்பட்டது என்றும் சொல்லலாம். அம்பாளுடைய கர்பூர வீடிகையினுடைய வாஸனையானது பத்து திக்குகளிலும் பரவி அவைகளை பரிமளிக்கும்படி செய்கிறது என்று தாத்பர்யம்.

3. கர்பூரவீடீ என்பது

ஏலா லவங்க கர்பூர கஸ்தூரீ கேஸராதிபி:।
ஜாதீபலதளை: பூகை: லாங்கல் யூஷணநாகரை:।
சூர்ணை: கதிரஸாரைச்ச யுக்தா கர்பூர வீடிகா॥

4. அம்பாளுடைய முகத்திலிருக்கும் விடீரஸத்தின் மஹிமையைப்பற்றி ஆசார்யாள் சொல்வது.

கவித்வ பரிபாடீம் அகாதிப ஸூதா
கோடிகுலாத் அதிகதாடீம் உதாரமுக வீடீரஸேன தனுதாம்॥
(அம்பாஷ்டகம்)

5. அம்பாளுடைய விடீரஸம்தான் காளிதாஸனுடைய கவித்வ சக்திக்கு ஆதாரம் என்பது ப்ரஸித்தமான விஷயம்.

## निजसल्लाप माधुर्य विनिर्भर्त्सित कच्छपी

*நிஜஸல்லாப மாதுர்ய விநிர்பர்த்ஸித கச்சபீ* (27)

தன்னுடைய பேச்சின் இனிமையினால் கச்சபீ என்கிற வீணையைக்கூட தோற்கடித்தவள்.

1. 'கச்சபீ' என்பது ஸரஸ்வதீ தேவியின் வீணைக்குப் பெயர். (விச்வாவஸு என்னும் கந்தர்வனுடையது ப்ருஹதீ, தும்புருவுடையது கலாவதீ, நாரதருடையது மஹதீ).

2. லோகத்தில் நாதத்தில் எவற்றையும்விட இனிமையானது வீணை என்பது பிரஸித்தம். அதிலும் வாக் தேவதையான ஸரஸ்வதியின் வீணையைப்பற்றிச் சொல்லவேண்டியதில்லை. அதையும்விட இனிமையாக இருக்கிறது அம்பாளுடைய பேச்சு. ஆசார்யாளும் இதைப்பற்றி சொல்லியிருக்கிறார்கள்.

> 'விபஞ்ச்யா காயந்தீ விவிதம் அபதானம் பசுபதே:
> த்வயாரப்தே வக்தும் சலிதசிரஸா ஸாதுவசனே।
> ததீயைர் மாதுர்யை: அபலபித தந்த்ரீ கலரவாம்
> நிஜாம் வீணாம் வாணீ நிசுளயதி சோளேன நிப்ருதம்॥
>
> (ஸௌந்தர்யலஹரீ)

## मन्दस्मित प्रभापूर मज्जत्कामेश मानसा

*மந்தஸ்மித ப்ரபாபூர மஜ்ஜத் காமேச மானஸா* (28)

தன்னுடைய ம்ருதுவான புன்சிரிப்பினுடைய காந்தியின் ப்ரவாஹத்தால் காமேச்வரருடைய மனதை முழுகச்செய்கிறவள்.

1. 'ஸ்மித' என்றாலேயே புன்சிரிப்பு. 'மந்தஸ்மித' என்பது அதிலும் விசேஷமானது.

2. 'மஜ்ஜத்' என்ற பதம் உபயோகிக்கப்பட்டதற்குக் காரணம், முழுகிப்போய்விடுவோமே, அதைவிட்டு வெளியேற வேண்டாமா என்று தோன்றியபோதிலும், அந்த ப்ரவாஹத்திலேயே அமிழ்ந்து இருக்கவேணுமென்கிற ஆசையும் இருப்பதினாலே முழுகினதும் முழுகாததுமாக அப்படியே காமேச்வரர் இருந்துகொண்டிருக்கிறதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

3. அம்பாள் சிதக்னிகுண்டத்திலிருந்து லலிதாம்பாளாக ஆவிர்ப்பவித்த பிறகு, பரமேச்வரன் காமேச்வரராக வந்து இருவருக்கும் விவாஹம் நடந்தது லலிதோபாக்யானத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அம்பாளுக்கும் காமேச்வரி, என்று பெயர். இருவருடைய ஸௌந்தர்யம் அன்யாத்ருசம். அம்பாள் காமேச்வரருடைய மடியில் உட்கார்ந்திருப்பதாகவும், அந்த ஆனந்தத்தில் ஈடுபட்டு காமேச்வரர் எப்போதும் இருப்பதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. இருவரும் ஒரே (சிகப்பு) நிறம், சந்த்ர கலாதரர்கள், பாசாங்குச இக்ஷுகோதண்ட புஷ்ப பாணங்களை உடையவர்கள், ச்ருங்கார ரஸப்ரதானமானவர்கள்.

4. 'காமேச' என்பதற்கு காமகலா ரூபமாக இருக்கிற வரும் ராஜராஜேச்வரருமான பரமசிவன் என்றும் அர்த்தம்.

## अनाकलित सादृश्य चिबुकश्री विराजिता

அனாகலித ஸாத்ருச்ய சிபுகஸ்ரீ விராஜிதா (29)

(வாக் தேவதைகள் முதல் யாராலும்) ஒப்பிட்டுச் சொல்ல முடியாத முகவாய்கட்டின் அழகோடு ப்ரகாசிக்கிறவள்.

'கதம்காரம் ப்ரூமஸ் தவ சுபுகம் ஔபம்ய ரஹிதம்' (ஸௌந்தர்யலஹரீ)

## कामेश बद्धमाङ्गल्य सूत्रशोभितकन्धरा

காமேச பத்த மாங்கல்ய ஸூத்ர சோபிதகந்தரா (30)

விவாக காலத்தில் காமேச்வரரால் கட்டப்பட்ட ஸௌபாக்யாபரணமான திருமங்கல்யத்தினால் சோபிதமான கழுத்தை உடையவள்.

## कनकाङ्गद केयूर कमनीय भुजान्विता

கனகாங்கத கேயூர கமனீய புஜான்விதா (31)

ஸ்வர்ணமயமான தோள்வளைகளால் அலங்கரிக்கப்பட்ட (சதுர்) புஜங்களை உடையவள்.

1. கனக - ஸ்வர்ணமயமான, அங்கத - கைவளை, கேயூர - தோள்வளை, என்றும் அர்த்தம் உண்டு.

'கேயூராங்கத ஹார கங்கண முகாலங்கார விப்ராஜிதாம்'

## रत्नग्रैवेय चिन्ताक लोलमुक्ता फलान्विता

### ரத்ன க்ரைவேய சிந்தாக லோல முக்தா பலான்விதா (32)

ரத்னகசிதமான கண்டாபரணத்தினுடைய பதக்கத்தோடும், ஆடிக்கொண்டிருக்கிற முத்துமாலைகளோடும் கூடியவள்.

'க்ரீவா' என்றால் கழுத்து. க்ரைவேயம் என்றால் கழுத்தில் போடும் ஆபரணம்.

1. ரத்ன க்ரைவேய - ரத்னகசிதமான கண்டாபரணத்தினுடைய, சிந்தாக - (ஸ்வர்ண) பதக்கத்தோடும், லோல - ஆடிக்கொண்டிருக்கிற, தொங்கிக்கொண்டிருக்கிற, முக்தா பலான்விதா - முத்து மாலைகளோடும் கூடியவள்.

2. 'க்ரைவேய சிந்தாக' - கழுத்துவரையில்தான் த்யானம் பண்ண சக்தியுள்ளவர்கள் அதாவது தஹராகாசத்தில் அம்பாளுடைய ஸ்வரூபத்தை த்யானம் பண்ணமுடியாதவர்கள், மத்யமாதிகாரிகள்.

'லோல' - சஞ்சலமான மனதுடையவர்கள் அதம அதிகாரிகள். முக்த - முக்தர்கள், உத்தம அதிகாரிகள்.

இந்த மூன்றுவிதமான பக்தர்களுக்கும் 'ரத்ன பூதான்யா பலானி' - ப்ரார்த்திக்கப்பட்ட அல்பபலம், அதிகபலம் இவை எவற்றையும் 'அன்விதா'-கொடுக்கக்கூடிய சக்தியை உடையவள்.

## कामेश्वर प्रेम रत्न मणि प्रतिपणस्तनी

### காமேச்வர ப்ரேம ரத்ன மணி ப்ரதிபணஸ்தனீ (33)

காமேச்வரருடைய ப்ரேமையாகிற ரத்னத்திற்கு பதிலாகக் கொடுத்த ரத்னங்களாகிற ஸ்தனங்களை உடையவள்.

1. அம்பாள் காமேச்வரருடைய ப்ரேமரத்னத்தைத் தன் ஸ்தன ரத்னங்களால் வாங்கியிருப்பதாக அர்த்தம்.

2. தான் வாங்கும் ப்ரேமையாகிற ஒரு ரத்னத்திற்கு, தன் ஸ்தனங்களாகிற இரண்டு ரத்னங்களை அம்பாள் கொடுத்ததிலிருந்து பதிலுக்குப் பதில் மட்டுமில்லாமல் இரட்டிப்பாகக் கொடுத்ததினால் அம்பாளுடைய ப்ரேமாதிசயமும், பாதிவ்ரத்யாதிசயமும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

## नाभ्यालवाल रोमालि लताफलकुचद्वयी
## நாப்யாலவால ரோமாளி லதாபலகுசத்வயீ (34)

தொப்புளாகிற பாத்தியிலிருந்து கிளம்பியிருக்கும் மயிர் வரிசையாகிற கோடிக்கு பழங்களோ என்று தோன்றுகிற இரண்டு ஸ்தனங்களை உடையவள்.

நாபீ (தொப்புள்) ஆகிற, ஆலவால - பாத்தியிலிருந்து கிளம்பியிருக்கும், ரோமாளி லதா-மயிர் வரிசையாகிற கொடிக்கு, பல - பழங்களோ என்று தோன்றுகிற, குசத்வயீ - இரண்டு ஸ்தனங்களை உடையவள்.

'ஸ்தன முகுள ரோமாவலி லதாகலாவாலம்' (ஸௌந்தர்யலஹரீ)
லஸத்வ்ருத்த கம்பீர நாபீ ஸரஸ்தீர சைவால
சங்காகா ச்யாம ரோமாவலீ பூஷணே (ச்யாமளாதண்டகம்)

## लक्ष्य रोम लताधारता समुन्नेय मध्यमा
## லக்ஷ்ய ரோம லதாதாரதா ஸமுன்னேய மத்யமா (35)

(மேலே சொன்ன) ரோமலதையானது தெரிவதினால் மட்டும் ஊஹிக்கவேண்டிதாயிருக்கிற இடுப்பை உடையவள்.

உத்தம ஜாதி ஸ்திரீகளுக்கு இடுப்பு மிகவும் சிறியதாயிருக்கும் என்பது வர்ணனை. கண்ணுக்குத் தெரியாதபடி அவ்வளவு சிறியதாக இடுப்பு இருந்தபோதிலும், அது இருப்பதானது, ரோமலதை இருப்பதினால் ஊஹிக்கவேண்டிதாயிருக்கிறது.

'மித்யா த்ருஷ்டார்த மத்ய பாகம் தே' (நவரத்னமாலா)

## स्तन भार दलन्मध्य पट्टबन्ध वलित्रया
## ஸ்தன பார தளன்மத்ய பட்ட பந்த வளித்ரயா (36)

ஸ்தனங்களின் பாரத்தினால் முறிந்துபோய் விடுமோ என்று தோன்றக்கூடிய (மத்ய ப்ரதேசம்) இடுப்புக்கு கட்டப்பட்ட ஸ்வர்ண பட்டங்கள் போல் தோன்றுகிற, (த்ரிவலீ) மூன்று மடிப்புகளை உடையவள்.

உத்தம ஜாதி ஸ்திரீ புருஷர்களுக்கு நெற்றியிலும் கழுத்திலும் வயிற்றிலும் மும்மூன்று கோடுகள் போன்ற மடிப்புகள்

இருக்குமென்றும், அவை மகத்தான ஸௌபாக்யத்திற்கு அடையாளமென்றும், ஸாமுத்ரிகா சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

"லாலாடே ச களே சைவ மத்யேசாபி வளித்ரயம் |
ஸ்திரீபும்ஸயோர் இதம் ஞேயம் மஹா ஸௌபாக்ய ஸூசகம் ||"

## अरुणारुण कौसुम्भ वस्त्र भास्वत्कटीतटी
## அருணாருண கௌஸூம்ப வஸ்த்ர பாஸ்வத் கடீதடீ (37)

அருணாருண - மிகவும் சிவந்த, அல்லது ஸூர்யனுடைய ஸாரதியான அருணனைப்போல் சிவந்த கௌஸூம்ப (குஸூம்பா) வஸ்த்ரத்தோடு ப்ரகாசிக்கும் இடையை உடையவள்.

## रत्न किङ्किणिकारम्य रशनादामभूषिता
## ரத்ன கிங்கிணிகாரம்ய ரசனாதாம பூஷிதா (38)

ரத்னமயமான கிங்கிணி மணிகளோடு மனோஹரமாக இருக்கும் இடுப்புக்கொடி (மேகலா ஸூத்ரம், ஒட்டியாணம்)யால் அலங்கரிக்கப்பட்டவள்.

'சாரு சிஞ்ஜத்கடீஸூத்ர' (ச்யாமளாதண்டகம்.)

## कामेशज्ञात सौभाग्य मार्दवोरुद्वयान्विता
## காமேசக்ஞாத ஸௌபாக்ய மார்தவோருத்வயான்விதா (39)

காமேச்வரரால் மட்டும் தெரிந்துகொள்ளப்பட்ட (பார்க்கப்பட்ட) அழகு, ம்ருதுத்வம். இவைகளையுடைய துடைகளோடு கூடியவள்.

## माणिक्य मुकुटाकार जानुद्वय विराजिता
## மாணிக்ய முகுடாகார ஜானுத்வய விராஜிதா (40)

ஒரோர் மாணிக்யத்தினால் செய்யப்பட்ட மகுடம் (தொப்பி) போல் இருக்கும் முழங்கால் சில்லுகளுடன் பிரகாசிக்கிறவள்.

## इन्द्रगोप परिक्षिप्त स्मर तूणाभजङ्घिका

## இந்த்ரகோப பரிக்ஷிப்த ஸ்மர தூணபஜங்கிகா (41)

மினு மினுப் பூச்சிகளால் அலங்கரிக்கப்பட்ட (கசிதமான) மன்மதனுடைய அம்புராத்தூணிகள் போன்ற முழங்கால்களை உடையவள்.

அதாவது, அவை பரமசிவனை ஜயிப்பதற்காக மன்மதனுல் ஏற்படுத்தப்பட்ட அம்புராத்தூணிகள் என்று வர்ணிக்கப் பட்டிருக்கிறது.

'பராஜேதும் ருத்ரம் த்விகுண சரகர்பௌ கிரிஸுதே
நிஷங்கௌ ஜங்கே தே விஷம விசிகோ பாடம் அக்ருத'
(ஸௌந்தர்ய லஹரீ.)

'அனங்க தூணீர சங்காகரோதார ஜங்காலதே' (ச்யாமளா தண்டகம்)

## गूढगुल्फा

## கூட குல்ப்பா (42)

உருட்சியான (மாம்ஸலங்களான, பருத்த) குதிகால்களை உடையவள்.

## कूर्म पृष्ठ जयिष्णु प्रपदान्विता

## கூர்ம ப்ருஷ்ட ஜயிஷ்ணு ப்ரபதான்விதா (43)

ஆமையினுடைய முதுகு ஓட்டைவிட அழகாய் வளைந்திருக்கும் புறங்கால்களோடு கூடியவள்.

'பதம்தே கீர்த்தீனும் ப்ரபதம் அபதம் தேவி விபதாம்
கதம் நீதம் ஸத்பி: கடின கமட கர்பர துலாம்'
(ஸௌந்தர்யலஹரீ)

## नखदीधिति संछन्न नमज्जन तमोगुणा

## நகதீதிதி ஸம்ச்சன்ன நமஜ்ஜன தமோகுணா (44)

தன் பாதங்களில் இருக்கும் நகங்களின் காந்தியினுல் தன்னை நமஸ்கரிக்கும் ப்ரும்ஹா விஷ்ணு முதலியவர்களுடைய (தமோ குணம்) அக்ஞானமாகிற இருட்டைப் போக்கடிக்கிறவள்.

அம்பாளுடைய பாதங்களின் த்யானத்தால் அக்ஞான நாசம் ஏற்படுகிறது என்று அர்த்தம்.

'சரணௌ பத்மஸங்காசௌ அஸ்யா: ஸ்வச்ச நகோஜ்வலௌ |
ஸுராஸுராணாம் நமதாம் கிரீடமணி காந்திபி: ||
விசித்ர வர்ணைர் ஹாஸ்யந்தி ஸ்வச்சாயாம் ப்ரதிபிம்பிதை: ||
ப்ரவிச்ய நாசயிஷ்யந்தி தேஷாம் ஹார்தம் தமோகுணம்' ||
(பத்மபுராணம்)

## पदद्वय प्रभाजाल पराकृत सरोरुहा
## பதத்வய ப்ரபாஜால பராக்ருத ஸரோருஹா (45)

தன் இரு பாதங்களுடைய காந்தி ஸமூஹத்தினால் தாமரைப் புஷ்பத்தைத் தோற்கடிப்பவள்.

## शिञ्जान मणि मञ्जीर मण्डित श्रीपदाम्बुजा
## சிஞ்ஜாந மணி மஞ்ஜீர மண்டித ஸ்ரீ பதாம்புஜா (46)

சப்திக்கின்ற மணிகளையுடைய பாதஸரங்களால் அலங்கரிக் கப்பட்ட ஸ்ரீயுடைய பாதபத்மங்களோடு கூடியவள்.

## मरालीमन्द गमना
## மராளீமந்த கமனா (47)

(பெண்) ஹம்ஸம்போல் மேதுவான நடையை உடையவள்.

அன்னபக்ஷி சாதாரணமாகவே மெதுவாக நடக்கும் ஸ்வ பாவமுடையது. அதிலும் பெண் அன்னமானது இன்னும் மெது வாக நடக்குமாகையால், அதற்கு ஸமானம் என்று சொல்லப் பட்டது.

அம்பாளுடைய கிருஹத்திலிருக்கும் அன்னபக்ஷிகள் அம்பா ளுடைய நடையின் அழகைப் பார்த்து, அம்மாதிரி நடக்க ஆசைப்பட்டு, கூடவே வருவதாகவும், அதை அவைகளுக்குச் சொல்லிக்கொடுப்பதுபோல் அம்பாளுடைய பாதஸரத்தின் மணிகள் சப்திக்கின்றன என்றும் ஆசார்யாள் வர்ணித்திருக் கிறார்கள்.

பதன்யாஸ க்ரீடா பரிசயமிவாரப்து மனஸ:
ஸ்கலந்தஸ்தே கேலம் பவன கலஹம்ஸா ந ஜஹதி |
அதஸ்தேஷாம் சிக்ஷாம் ஸுபகமணி மஞ்ஜீர ரணிதச்
சலாத் ஆசக்ஷாணம் சரண கமலம் சாருசரிதே ||

(ஸௌந்தர்ய லஹரீ)

## महालावण्यशेवधिः

## மஹா லாவண்ய சேவதி: (48)

அழகுக்கெல்லாம் ஒரு களஞ்சியமாக இருப்பவள்.

'ஸௌந்தர்ய ஸார ஸீமந்தா' என்றபடி, அம்பாள் ஸௌந்தர்யத்திற்கு இருப்பிடமென்றும், அவளுடைய ஸௌந்தர்யத்தைவிட அதிசயித்த ஸௌந்தர்யம் வேறு ஒருவருக்கும் இல்லையென்றும் அர்த்தம்.

'த்வதீயம் ஸௌந்தர்யம் துஹினகிரிகன்யே துலயிதும்
கவீந்த்ரா: கல்பந்தே கதமபி விரிஞ்சி ப்ரப்ருதய: |
யதாலோகௌத்ஸுக்யாத் அமரலலனா யாந்தி மனஸா
தபோபிர் துஷ்ப்ராபாம் அபி கிரிச ஸாயுஜ்ய பதவீம் ||'

என்று ஸௌந்தர்யலஹரியில் சொன்னபடி அம்பாளுடைய ஸௌந்தர்யத்தைப் பார்த்து, ரம்பை, ஊர்வசி, திலோத்தமை முதலியவர்கள் கூட அதை அனுபவிக்க ஆசைப்பட்டு, அது பரமசிவனுக்குமட்டுமே கிடைக்கக்கூடியதாகையால், தாங்களும் பரமசிவனாயிருக்கக்கூடாதாவென்று நினைக்கிறதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. லோகத்தில் புருஷன் ஸ்திரீயைப் பார்த்தும், ஸ்திரீ புருஷனைப்பார்த்தும், ஸௌந்தர்ய வசத்தினால் ஆசைப்படுவது ஸாமான்யம். அதைவிட ஒரு ஸ்திரீ மற்றொரு ஸ்திரீயினுடைய ஸௌந்தர்யத்தைப் பார்த்தும், புருஷன் மற்றொரு புருஷனுடைய ஸௌந்தர்யத்தைப் பார்த்தும் ஆசைப்படுவது, ஸௌந்தர்ய விசேஷத்தைக் காட்டக்கூடியது. 'பும்ஸாம் மோஹன ரூபாய' 'பும்ஸாம் த்ருஷ்டி சித்தாப ஹாரிணம்' என்றபடி ஸ்ரீ ராமனை தண்டகாரண்ய வாஸிகளான ரிஷிகள் பார்த்து, அவரது அழகைக்கண்டு மயங்கி, அதை அனுபவிக்க வேண்டி அவர் உத்திரவின் பேரில், அவர் ஸ்ரீ கிருஷ்ணாவதாரமெடுத்தபோது கோபிகைகளாகப் பிறந்தார்கள் என்பது ப்ரஸித்தம்.

**सर्वारुणा** (49)

**ஸர்வாருணா**

தன்னுடைய வஸ்த்ரம், ஆபரணம், புஷ்பம், காந்தி முதலிய எல்லாம் சிவந்த நிறமாக உடையவள்.

*ப்ரத்யக்ர குங்கும ரஸா கலிதாங்கராகம்*
*ப்ரத்யங்க தத்த மணிபூஷண ஜால ரம்யம் |*
*தாம்பூல பூரித முகம் தருணேந்து சூடம்*
*ஸர்வாருணம் கிமபி வஸ்து மமாவிரஸ்து ||*

(ஆனந்தஸாகரஸ்தவம்)

**अनवद्याङ्गी** (50)

**அநவத்யாங்கீ**

ஸுலக்ஷணங்களாய் (குற்றம், தோஷம் ஒன்றும் சொல்ல முடியாததாய்) இருக்கும் அவயவங்களை உடையவள்.

**सर्वाभरणभूषिता** (51)

**ஸர்வாபரண பூஷிதா**

ஸமஸ்தமான ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவள்.

அம்பாள் தரிக்கும் ஆபரணங்கள், காளிகா புராணத்தி லும், கல்ப ஸூத்திரத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் ஆபரணங்கள் ஸ்திரீகளுக்கு ஏற்பட்டவையாகையாலும், அம்பா ளுக்கு உபயோகப்படாத ஆபரணங்கள், ப்ரயோஜனமற்றவை யாகையாலும், ஸகலவிதமான ஆபரணங்களும் அம்பாளுக்குப் போடப்பட்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

2. இதுவரையில் அம்பாளுடைய ஸ்தூல ரூபத்தை வர்ணித்துவிட்டு இனி அம்பாள் இருக்குமிடத்தைப்பற்றி சொல் லப்படுகிறது.

**शिवकामेश्वराङ्कस्था** (52)

**சிவகாமேச்வராங்கஸ்தா**

தன் பர்த்தாவாகிய சிவகாமேச்வரருடைய (இடது) துடை யின்மேல் இருப்பவள்.

1. 'காம' என்றால் கமநீயமான (அழகான) ரூபத்துடன் இருப்பவன். காமேச்வரர் ஸௌந்தர்யத்தில் அம்பாளுக்கு ஸமானமானவர் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

2. அல்லது விரும்பிய ரூபத்தை எடுக்கக்கூடியவன் என்றும் அர்த்தம். இது மன்மதனிடத்திலிருப்பதால் அவனுக்கு 'காம' என்று பெயர். காமேச்வரரும் ச்ருங்கார ரஸப்ரதானராதலா லும், காமனைவிட ஸௌந்தர்யத்தில் அதிகமானவராதலாலும் அந்தப் பெயர் அவருக்கு உரியது.

3. காம என்றால் ப்ரக்ஞானம் என்றும் ச்ருதியில் சொல் லப்படிருக்கிறது. அந்த இடத்தில் பரமசிவனைப்பற்றி அம்மாதிரி சொல்லியிருக்கிறது.

4. "ஆத்மைவ இதமக்ர ஆஸீத் ஏக ஏவ ஸோ அகாமயத ............ ஏதாவாந் வை காம:" என்று ப்ருஹதாரண்யகத்தில் சொன்னபடி, ஜகத்தை ஸ்ருஷ்டி பண்ண விரும்பிய ஈச்வரனுக்கு, காம: என்று பெயர்.

5. சிவனும் காமனுமாக இருக்கிற ஈச்வரன் 'சிவகாமேச் வர:' ஸாதாரண ருத்ரன் மன்மதன் இவரல்ல என்று வேற்றுமை காட்டப்பட்டிருக்கிறது.

(அம்பாளுக்கு சிவகாமஸுந்தரீ என்று பெயர் இருப்பதும் இதனால்தான்).

## शिवा

## சிவா (53)

"வசகாந்தௌ சிவ: ஸ்ம்ருத:" என்றபடி பரப்ரும்ஹத்தினு டைய இச்சாரூபமாக இருப்பவள்.

1. சிவனோடு அபேதமாக இருப்பவள்—இங்கே 'சிவன்' என்பது சைவாகமங்களில் சொல்லப்பட்டபடி, ஜீவேசத்வாதிர ஹிதமாய், ஸச்சிதானந்த ரூபமாய் இருக்கும் கேவலமான பர ப்ரும்ஹத்தைக் குறிக்கிறது.

2. (சிவம்) மங்களத்தைச் செய்கிறவள்.

3. அம்பாளிடத்தில் ஸர்வமும் (சேதே) லயிக்கிறது என்பதால் சிவா.

4. சோபநமான (மங்களகரமான) குணங்கள் அம்பாளிடத்தில் இருப்பதால் சிவா.

5. 'சிவ' என்பதற்கு சமனம் (சாந்தம்) பண்ணுகிறவர் என்றும் அர்த்தம்.

'ஸமாப்வந்தி மே ஸர்வே தாநவாச்சாமராச்சயே |
சிவங்கரோऽஸ்மி பூதாநாம் சிவத்வம் தேநமே ஸுரா; ||
'த்ரிலோசநம் நீலகண்டம் ப்ரசாந்தம்'

6. சிவனோடு அபின்னமாக இருப்பவள்.

'யதா சிவஸ் ததா தேவீ யதா தேவீ ததாசிவ: |
தஸ்மாத் அபேத புத்யைவ சிவேதி கதயந்த்யுமாம் |
உமாசங்கரயோர் பேத: நாஸ்த்யேவ பரமார்த்தத: |
த்விதாஸௌ ரூபமாஸ்தாய ஸ்தித ஏகோ ந ஸம்சய: ||'
'பரமாத்மா சிவ: ப்ரோக்த: சிவா ஸைவ ப்ரகீர்த்திதா'
'ஸா சிவா பரமா தேவி சிவாபின்ன சிவங்கரீ'

8. (சிவம்) மோக்ஷத்தைக் கொடுக்கிறவன்.

'சிவா முக்தி: ஸமாக்யாதா யோகிநாம் மோக்ஷதாயினீ |
சிவாய ஜயதே தேவீ ததோலோகே சிவா ஸ்ம்ருதா ||'
'பாவகஸ்யோஷ்ணதேவேயம் பாஸ்கரஸ்யேவ தீதிதி: |
சந்த்ரஸ்ய சந்த்ரிகேவேயம் சிவஸ்ய ஸஹஜா சிவா ||'

## स्वाधीनवल्लभा

### ஸ்வாதீன வல்லபா - (54)

தனக்கு அதீனராய் (தன் வசப்பட்டவராய்) இருக்கிற (காமேச்வரராகிய) பர்த்தாவை உடையவள்.

1. அம்பாளாகிற சக்தியின் ஒத்தாசையில்லாவிட்டால் சிவனால் ஒன்றும் செய்யமுடியாது என்று அர்த்தம்.

'சக்தோ யயா ஸ சம்பு: புக்தௌ முக்தௌ ச பசுகணஸ்யாஸ்ய |
தாமேநாம் சித்ரூபாம் ஆத்யாம் ஸர்வாத்மநாஸ்மி நத: |'
'ஜகத் காரணம் ஆபன்ன :சிவோ யோ முனிஸத்தமா: |
தஸ்யாபி ஸாபவத் சக்தி: தயா ஹீனோ நிரர்த்தக: ||'

ஆசார்யாளும் 'ஸௌந்தர்ய லஹரி'யில் முதல் ச்லோகத்திலும் இதே விஷயத்தை சொல்லியிருக்கிறார்:—

'சிவ: சக்த்யா யுக்தோயதி பவதி சக்த: ப்ரபவிதும்
நசேத் எவம் தேவோ நகலு குசல: ஸ்பந்திதுமபி |'
அதஸ்த்வாம் ஆராத்யாம் ஹரிஹரவிரிஞ்சாதிபிரபி
ப்ரணந்தும் ஸ்தோதும் வா கதம் அக்ருதபுண்ய: ப்ரபவதி ||

2. யாருடைய அனுக்ரஹத்தால் ஸ்திரீகள் தங்கள் பதிகளை அடைகிறார்களோ, அப்பேர்ப்பட்டவள்.

ஸுகன்யை ச்யவனரை அடைந்ததும், சசிதேவியானவள் இந்த்ரனை அடைந்ததும், அம்பாளைப் பிரார்த்தித்ததினால்தான் என்பது தேவி பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதே மாதிரி ருக்மிணியானவள் அம்பாளைப் பிரார்த்தனைசெய்து ஸ்ரீ கிருஷ்ணனை பதியாக அடைந்தாள் என்பதும் (விஷ்ணு) பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'பத்ப்யாம் வினிர்யௌ த்ரஷ்டும் பவான்யா: பாதபல்லவம்'
என்றபடி ருக்மிணியானவள் அம்பாளுடைய கோவிலுக்குவந்து சொன்னது:—

"நமஸ்யே த்வாம் அம்பிகே பீக்ஷணம் ஸ்வஸந்தானயுதாம் சிவாம் |
பூயாத் பதிர்மே பகவான் க்ருஷ்ணஸ்தத் அனுமோததாம் ||"

இம்மாதிரி அம்பாள் தன் புருஷனை காமேச்வரரைத் தனக்கு ஆதீனமாக உடையவள் என்றும், அவரோடு அபின்னமானவள் என்றும், ஆகவே அம்பாளுக்கு முக்யமான இடம் தன் புருஷனுடைய மடியென்றும், சொல்லிவிட்டு, அம்பாள் இருக்கக் கூடிய வேறு ஸ்தானங்களைப்பற்றிச் சொல்லப்படுகிறது.

## सुमेरुमध्यशृङ्गस्था

## ஸுமேரு மத்ய ச்ருங்கஸ்த்தா (55)

'ஸுமேரு' என்றால் மேருபர்வதத்திற்குப் பெயர். அதினுடைய நடுவிலிருக்கும் உச்சியிலிருப்பவள். அல்லது மேருபர்வதத்தினுடைய நடுவிலிருக்கும்(ஸு)சோபனமான உச்சியிலிருப்பவள்.

'மேரு: ஸுமேரு: ஹேமாத்ரி:' என்று சொல்லப்பட்ட இந்த ஸுமேரு என்னும் பர்வதமானது கைலாஸத்திற்கும் அப்பால் இருக்கிறதென்றும், அது தங்கமயமான பர்வதம் (ஸ்வர்ணசைலம்) என்றும், அதற்கு நான்கு உச்சிகள் என்றும் அவைகளில் முக்கோணம் போன்ற மூன்று உச்சிகளில்

ப்ருமஹா, விஷ்ணு, ருத்ரன், மூவரும் இருப்பதாகவும், அவை நடுவில் 400யோஜனை உயரமுள்ள நாலாவது உச்சியில் அம்பாள் தன்னுடைய ஸ்ரீநகரத்தில் இருப்பதாகவும், இன்னும் பலவிஷயங்களும் துர்வாஸ மஹர்ஷியால் 'லலிதாஸ்தவரத்னம்' என்கிற 'ஆர்யாத்விசதி' என்னும் க்ரந்தத்தில் வெகு அழகாக சொல்லப் பட்டிருக்கிறது.

## श्रीमन्नगरनायिका

### ஸ்ரீமன் நகரநாயிகா (56)

ஸ்ரீமத் - லக்ஷ்மீ விலாஸத்தோடு கூடிய, நகர - வித்யாநகரம அதினுடைய நாயிகா - அதிபதியாய் இருப்பவள்.

1. இன்ன நகரம் என்று சொல்லப்படாவிட்டாலும், மேலே 'ஸ்ரீமாதா' என்ற நாமத்திற்குச் சொல்லியதுபோல், இங்கே 'நகரம்' என்றால் ஸ்ரீவித்யா நகரம் என்று அர்த்தம்.

2. அந்த நகரம் இரண்டு இடத்தில் இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. லலிதாஸ்தவரத்னத்தில் சொல்லியபடி மேருவின் மத்ய ச்ருங்கத்தில் இருப்பது ஒன்று.

'தத்ர சதுச்சத யோஜந பரிணாஹம் தேவசில்பிநா ரசிதம் |
நாநாஸால மநோஜ்ஞம் நமாம்யஹம் நகரம் ஆதிவித்யாயா: ||

(லலிதாஸ்தவரத்னம்)

இன்னொரு நகரம் ருத்ரயாமளத்தில் சொல்லியபடி ஸமஸ்த ப்ருமஹாண்டத்திற்கும் வெளியில், ஸுதா ஸமுத்ரத்தின் நடுவிலிருக்கும் ரத்ன (மணி) த்வீபத்தில் இருப்பது. இதுவே ச்யாமளாதண்டகத்தில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

'அனேககோடி ப்ருமஹாண்ட கோடீநாம் பஹிர் ஊர்த்வத: |
ஸஹஸ்ரகோடி விஸ்தீர்ணம் ஸுதாஸிந்தோஸ்து மத்யமே |
ரத்னத்வீபே ஜகத்வீபே சதகோடி ப்ரவிஸ்தரே |
பஞ்சவிம்சதி தத்வாத்ம பஞ்சவிம்சதி வப்ரகை: |
த்ரிலக்ஷ யோஜநோத்துங்கை:ஸ்ரீவித்யாயா: புரம் சுபம்'

(ருத்ரயாமளம்)

4. 'ஸ்ரீமன் நகரம்' என்பது ஸ்ரீசக்ரம் என்றும் அர்த்தம் பண்ணப்பட்டிருக்கிறது. ஆகவே ('ஸ்ரீசக்ரநாயிகா') என்று சொல்லலாம்.

## चिन्तामणि गृहान्तस्था

## சிந்தாமணி க்ருஹாந்தஸ்தா (57)

சிந்தா (மணி) ரத்னங்களால் நிர்மிக்கப்பட்ட க்ருஹத்தில் இருப்பவள்.

1. "சிந்தாமணிகணரசிதம் சிந்தாம் தூரீகரோது மே ஸதனம்" (லலிதாஸ்தவ ரத்னம்).

2. சிந்தா (மணி) ரத்னத்திற்கு ஆகர்ஷண சக்தியும் எல்லாம் கொடுக்கும் சக்தியும் உண்டென்று சொல்லப்படும்.

3. இந்த சிந்தாமணி க்ருஹம் ஸ்ரீநகரத்தில் அம்பாள் இருக்கும் இடம்.

4. சிந்திதமான அர்த்தங்களைக் கொடுப்பதால் மந்த்ரங்களுக்கு சிந்தாமணிகளென்றும், அவைகளை நிர்மாணிக்கும் இடமாகையால் சிந்தாமணி க்ருஹம் என்றும் சொல்லலாம்.

## पञ्चब्रह्मासनास्थिता

## பஞ்ச ப்ரும்ஹாஸந ஸ்திதா (58)

பஞ்ச ப்ரும்ஹாஸனத்தில் உட்கார்ந்திருப்பவள்.

ப்ரும்ஹா, விஷ்ணு, ருத்ரன், ஈசானன் இவர்கள் ஆக்னேயாதி மூலைகளில் கால்களாகவும் ஸதாசிவன் மேல்பலகையாகவும், உடைய கட்டிலில் அம்பாள் காமேச்வரரோடு இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இவர்கள் ஐந்துபேருக்கும் பஞ்ச ப்ரும்ஹாக்கள் என்றும், பஞ்சப்ரேதங்கள் என்றும் பெயர். இங்கேஅம்பாளுடையமஞ்சத்தை'பஞ்சப்ரும்ஹாஸனம்'என்றும் பின்னால் 249வது நாமத்தில் 'பஞ்சப்ரேதாஸனம்' என்றும் 947 வது 'பஞ்சப்ரேத மஞ்சம்' என்றும் சொல்லியிருக்கிறது. நாலு கால்களாயிருப்பவர்கள் முடியிலும், அடியிலும் கால்போலவும் நடுவில் தங்கள் ரூபத்தோடும் கூடியவர்கள். ஆனாலும் அம்பாளை த்யானம் செய்வதால் தங்களுடைய சக்தி ரூபத்துடனும், மூடிய கண்களுடன் நிச்சலமாகவும் இருந்துகொண்டிருப்பார்கள். இவர்கள் இப்படிக் கட்டில் கால்களாக இருந்துகொண்டிருப்பதற்குக் காரணம், அப்படியாவது அம்பாளுடைய ஸமீபத்தில் இருந்து

கொண்டு அத்யந்த ஸாமீப்ய ஸேவை செய்யவேண்டுமென்கிற எண்ணம்தான்.

'சிவாத்மகே மஹாமஞ்சே மஹேசாநோப பர்ஹணே |
அதிரம்யதலே தத்ர கசிபுச்ச ஸதாசிவ: |
ப்ருதகாச்ச சுரவஷ்பாதா: மஹேந்த்ரச்ச பசத்க்ரஹ: |
தத்ராஸ்தே பரமேசானீ மஹாத்ரிபுரஸுந்தரீ |
(பைரவயாமளம்)

'தத்ர ஸ்ரீ லலிதாதேவ்யா: பஞ்ச ப்ரும்ஹ மயம் மஹத் |
ஜாகர்த்தி மஞ்சரத்னம் ச ப்ரபஞ்ச த்ரய மூலகம் |
தஸ்ய மஞ்சஸ்ய பாதாஸ்து சத்வார: பரிகீர்த்திதா: ||
ப்ரும்ஹ விஷ்ணு மஹேசானேச்வர ரூபத்வம் ஆகதா: |
தேஷாமுபரி மஞ்சஸ்ய பலகஸ்து ஸதாசிவ:| (லலிதோபாக்யானம்)

## महा पद्माटवी संस्था

## மஹா பத்மாடவீ ஸம்ஸ்த்தா (59)

பெரிய தாமரைப் புஷ்பங்களுடைய காட்டில் இருப்பவள்.

இந்த மஹா பத்மாடவி மேருவில் இருப்பதாக லலிதா ஸ்தவரத்னத்திலும், ஸுதா ஸமுத்ரத்தில் இருப்பதாக ருத்ரயாமளத்திலும் வர்ணிக்கப்பபட்டிருக்கிறது. ப்ரும்ஹ ரந்த்ரத்தில் இருக்கும் ஸஹஸ்ரதள கமலத்திற்கு பத்மாடவி என்று பெயர். அதில் இருப்பவள்.

'ஷண்ணமப்யுபரி கமலாநாம்......மஹா பத்மாடவ்யாம்'
[ஸௌந்தர்யலஹரி]

'தஸ்மாத் ஊர்த்வம் குலம் பத்மம் ஸஹஸ்ராரம் அதோமுகம் |
.....மஹா பத்மவனம் சேதம்' (ஸ்வச்சந்த தந்த்ரம்)

## कदम्बवन वासिनी

## கதம்பவந வாஸிநீ (60)

கதம்ப வ்ருக்ஷங்களடர்ந்த வனத்தில் இருப்பவள்.

1. சிந்தாமணி க்ருஹத்தைச் சுற்றி மணி மண்டபமும் அதைச்சுற்றி கதம்பவனமும் இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'பிந்துஸ்தானம் ஸுதாஸிந்து பஞ்சயோன்ய:ஸுரத்ருமா: |
தத்ரைவ நீபச்ரேணீ ச தந்மத்யே மணிமண்டபம் |
தத்ர சிந்தாமணி மயம் தேவ்யா மந்திரம் உத்தமம் |

(பைரவயாமளம்)

2. ஸ்ரீபுரத்தில் 25 தத்வங்களின் ஸ்வரூபங்களாய் உலோகங்கள் ரத்னங்கள் இவைகளாலாக்கப்பட்ட 25 மதில்கள் இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அவைகளில் தங்கம், வெள்ளி இந்த மதில்களுக்கு நடுவில் கதம்பவனம் இருக்கிறது.

காதம்ப விபின வாடீம் அனயோர்மத்ய புவி கல்பிதாவாஸாம் |

(லலிதாஸ்தவரத்னம்)

## सुधासागरमध्यस्था

### ஸுதா ஸாகர மத்யஸ்தா (61)

அம்ருத ஸமுத்ரத்தின் மத்தியில் இருப்பவள்.

இது பல இடங்களில் இருப்பதாக சொல்லப்பட்டிருக்கிறது.

1. 'யோவைதாம் ப்ரும்ஹணோ வேத அம்ருதேனாவ்ருதாம் புரீம்' என்று ச்ருதியில் சொல்லம்படுவது.

2. ஸஹஸ்ரார பத்மத்தில் இருக்கும் சந்த்ரமண்டலத்தில் பிந்துஸ்தானத்தில் இருப்பது. 'பிந்துஸ்தானம் ஸுதாஸிந்து:' (பைரவயாமளம்)

3. சாந்தோக்யோபனிஷத்தில் அபராஜிதம் என்கிற நகரத்தில் இருப்பதாகச் சொல்லப்படும் ஸமுத்ரம்போன்ற இரண்டு அம்ருத மடுவுகள்.

4. 'அநாவ்ருத்தி: சப்தாத்' என்ற ப்ரும்ஹஸூத்ரத்திற்குச் சொல்லப்பட்ட பாஷ்யத்தில் இதர ஸுதா ஸமுத்ரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இவையெல்லாம் இந்த நாமத்தில் சேர்ந்தவை.

மேலே கண்ட நாமங்களில் சொல்லிய விஷயங்களை ஆசார்யாள் 'ஸௌந்தர்யலஹரி'யில் சொல்லியிருப்பது.

ஸுதா ஸிந்தோர் மத்யே ஸுரவிடபிவாடீ பரிவ்ருதே
மணி த்வீபே நீபோபவனவதி சிந்தாமணிக்ருஹே |
சிவாகாரே மஞ்சே பரமசிவ பர்யங்க நிலயாம்
பஜந்தி த்வாம் தன்யா: கதிசந சிதானந்தலஹரீம் ||

## कामाक्षी

### காமாக்ஷி (62)

அழகான கண்களை உடையவள். காமேச்வரரையே (கண்ணுக்குக்) கண்ணாக உடையவள். தன் கண்களாலேயே தன்னுடைய பக்தர்களுக்கு ஸகலவிதமான அபீஷ்டங்களையும் கொடுப்பவள்.

'ஸர்வக்ஞா ஸாக்ஷி பாவேன தத் தத் காமான் அபூரயத் ।
தத் த்ருஷ்ட்வா சரிதம் தேவ்யா: ப்ரும்ஹா லோகபிதாமஹ: ।
காமாக்ஷீதி ததா நாம ததௌ காமேச்வரீதி ச ।

(ப்ரும்ஹாண்ட புராணம்)

1. கா - ஸரஸ்வதி, மா - லக்ஷ்மீ, இவர்களைக் கண்களாய் உடையவள்.

2. காஞ்சீபுரத்தில் அதிஷ்டானமுடைய அம்பாளுக்கு 'காமாக்ஷீ' என்ற இந்த மகிமையுள்ள பெயர்.

காமாக்ஷியை கடாக்ஷ ஸதகம், மந்தஸ்மித சதகம், பாதாரவிந்த சதகம், ஆர்யா சதகம், ஸ்துதி சதகம் என்று 500 ச்லோகங்களில் வெகு அழகாகவும் ஆனந்தகரமாகவும் மூக கவி வர்ணித்திருப்பது ப்ரஸித்தமான விஷயம்.

## कामदायिनी

### காமதாயினீ (63)

விரும்பிய மனோரதங்களைக் கொடுப்பவள்.

1. காம - காமேச்வரரை, தன் பக்தர்களுக்கு, தாயினீ - கொடுப்பவள், அதாவது அவருடன் அபேதமாக இருக்கும் தன்மையைக் கொடுக்கிறாள்.

2. காம - மன்மதனை, த்யதி - நாசம் செய்கிறவர், அதாவது காமதர் - பரமசிவன். அவரால் அயினீ - மங்களத்தோடு கூடியவள்.

3. பிதா முதலானவர்களால் பரம்பரையாக ஆர்ஜிதம் பண்ணப்பட்ட ஸ்வத்துக்கு 'தாயம்' என்று பெயர். காம - காமேச்வரரையே, தாயமாக உடையவள். அதாவது அனாதிகாலமாக அவரோடு அபின்னமாய் இருப்பவள்.

இனிமேல் அம்பாள் ஸ்தூலரூபத்தில் செய்த கார்யங்களை வெளிப்படையாக வர்ணித்துக்கொண்டு அதிலேயே அம்பாளுடைய பரமான ரஹஸ்யரூபத்தை ஸூக்ஷ்மமாகவும் சொல்லப் படுகிறது. 64 முதல் 84 உள்பட நாமங்களில் அம்பாள் லலிதாம்பிகையாக ஆவிர்பவித்தது முதல், பண்டாஸுர ஸம்ஹாரம் செய்து மன்மதனை உயிர்பெறச் செய்தது முடிய, 'லலிதோபாக்யான'த்தில் விஸ்தாரமாக வர்ணிக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

## देवर्षिगण संघात स्तूयमानात्म वैभवा

## தேவர்ஷிகண ஸங்காத ஸ்தூயமானாத்ம வைபவா(64)

தேவர்கள், ரிஷிகள் இவர்களுடைய ஸமூஹங்களால் ஸ்தோத்ரம் செய்யப்பட்ட (தன்னுடைய) ஸ்வரூபத்தின் வைபவத்தை உடையவள்.

1. 'வைபவம்' என்றால் வ்யாபகத்வம், எங்கும் பரவியிருக்கிறது என்றும் பொருள். அம்பாள் ஸர்வ வ்யாபியாக இருப்பதை ஸ்தோத்ரம் செய்தார்கள் என்றும் சொல்லலாம்.

2. 'ஸங்காதஸ்தூயமான' என்று சேர்த்து, பஹுப்ரகாரமாக என்றும், அர்த்தம் பண்ணலாம்.

3. 'ஸங்காத' என்று ஒருவித நரகத்திற்குப் பெயர். அதிலிருந்து விடுவிக்கும்படி தேவர்ஷிகணங்களால் ஸ்துதி செய்யப்பட்டவள்.

4. ஸங்காத' என்பதை 'ஸம்யக், காத' என்று பிரித்து இனி பண்டாஸுரனுடன் நடக்கப்போகும் பெரிய யுத்தத்தை உத்தேசித்து ஸ்தோத்ரம் பண்ணப்பட்டதாகவும் சொல்லலாம். இனி வரும் நாமங்கள் அதைப் பற்றியிருப்பதால் அதுவும் பொருத்தமாகும்.

5. 'தேவர்ஷிகண' என்பதைப் பின்வருமாறு பிரித்து அர்த்தம் செய்யலாம். தேவ - ப்ரும்ஹா முதலானவர்கள், ரிஷி - வஸிஷ்டாதி ரிஷிகள், தேவர்ஷி - நாரதர் முதலியவர்கள், கண - ஆதித்யன் முதலிய கணங்கள், இவர்கள் எல்லோராலும் ஸ்துதிக்கப்பட்டவள்.

6. அம்பாளுடைய பரரூபஸம்பந்தமான அர்த்தம் - ஸர்வ வ்யாபியாயும் ஸமஸ்த அநுபவத்தோடு கூடியதும், ஸர்வவிதமான ப்ரேமாஸ்பதமாகவும் (அதாவது ஸத், சித், ஆனந்தரூபமாக) இருக்கும் சைதன்ய ஸ்வரூபமே ஆத்மா என்று சொல்லப் பட்டிருக்கிறது.

தஸ்ய சைதன்யம் ஆத்மேதி ப்ரதமம் ஸூத்ரம் ஈரிதம் I
ஞான பந்த இதீதம் து த்விதீயம் ஸூத்ரம் ஈரிதா: II

(அக்நிபுராணம்)

இப்படி தேவர்ஷிகணங்களால் ஸ்துதிக்கப்பட்ட ஆத்மஸ்வரூபமானது 'ஸ்வாத்மைவ தேவதா ப்ரோக்தா லலிதா விச்வ விக்ரஹா' என்று அக்னிபுராணத்தில் சொன்னபடி அம்பாளுடைய அபின்ன ரூபமானதால் அந்தவிதமாக அம்பாளுடைய வைபவம்,விபுத்வம், அனந்தமான சக்தியுடன் இருக்கும்படியான ப்ரபாவம் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

## भण्डासुर वधोद्युक्त शक्तिसेना समन्विता

## பண்டாஸுர வதோத்யுக்த சக்திஸேனா ஸமன்விதா (65)

பண்டாஸுரனை ஸம்ஹாரம் செய்ய ஸன்னத்தமாக இருக்கும் சக்திகளுடைய ஸைன்யத்தோடு கூடியவள்.

1. அல்லது அந்தவிதமான சக்திகளுடன் அபின்னமாக இருப்பவள்.

'பண்டாஸுர ஹனனார்த்தம் ஏகைவ அனேகா'

(கௌடபாதஸூத்ரம்)

2. 'பண்டாஸுரன்' என்னும்படியான ஆணவமலம். அதை நாசம் செய்யவேண்டிய சக்தி - ஸாமர்த்தியத்தின் ஸமூகத்தோடு கூடியவள்.

3. பூர்வம் மன்மதன் பரமசிவனுடைய நேத்ராக்னியினால் பஸ்மீகரிக்கப்பட்டபோது, அந்த பஸ்மத்தை கணபதியானவர் விளையாட்டாக திரட்டி புருஷ ரூபமாகச் செய்ததும், அப்படி உண்டானவன் பரமசிவனை ஸ்தோத்திரம் பண்ணி வரம்பெற்றதும், அதைப் பார்த்து ப்ரும்ஹா 'பண்ட, பண்ட' (நல்லது, நல்லது) என்று சொன்னதும், அதனால் அவனுக்கு பண்டன்

என்று பெயர்வந்ததும், லலிதோபாக்யானத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ருத்ரனுடைய கோபாக்னியினால் அவன் உண்டானதினால், அவன் க்ரூர ஸ்வபாவமானவனும், அஸுரனாகவும் ஏற்பட்டான்.

ருத்ர கோபானலாத் ஜாதோ யதோ பண்டோ மஹாபல: |
தஸ்மாத் ரௌத்ர ஸ்வபாவச்ச தானவச்சாபவத்தத: |

அவன் வரப்ரஸாதத்தினால் அபாரமான சக்தியை அடைந்து தேவர்களையும் மூன்று லோகங்களையும் தன் ஆளுகைக்கு உட்படுத்தி, அதிகமான ஹிம்ஸை செய்துவந்தான். இதர அஸுரர்கள் செய்ததைவிட, அவன் தன் தபோ பலத்தினால் ஸமஸ்தமானபிராணிகளுடைய சுக்ல சோணிதங்களை அபஹரித்து, எல்லோரையும் இந்த்ரிய பலம் இல்லாமல் செய்து, ஸஹிக்கமுடியாத கஷ்டத்தை செய்துவந்ததினால், அவனை ஸம்ஹாரம் செய்யவேண்டியது அத்யாவசியமாயிற்று.

## संपत्करी समारूढ सिंधुरव्रज सेविता

## ஸம்பத்கரீ ஸமாரூட ஸிந்துரவ்ரஜ ஸேவிதா (66)

ஸம்பத்கரீ தேவியின் ஆக்ஞைக்கு உள்பட்ட யானைகளின் கூட்டத்தால் ஸேவிக்கப்பட்டவள்.

1. ஸம்பத்கரீ தேவியானவள் அம்பாளுடைய சதுரங்க பலத்தில் கஜஸைன்யத்திற்கு அதிகாரியாக நியமிக்கப்பட்டவள். அம்பாளுடைய ஆயுதங்களில், அங்குசத்திலிருந்து ஆவிர்பவித்தவள். ஸம்பத்கரியின் வாஹனமான யானைக்கு 'ரணகோலாஹலம்' என்று பெயர்.

2. சுபகஸம்பத்மயமான சித்தவ்ருத்திக்கு 'ஸம்பத்கரீ' என்று பெயர். அதற்கு ஆதாரமான சப்தாதி விஷயங்களை கஜங்களுக்கு ஸமானமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அவைகளால் ஸேவிக்கப்பட்டவள் என்றும் அர்த்தம்.

'இந்த்ரியார்த்தான் கஜான் பூர்வே சன்னும்னைவ ஸமர்ச்சயேத்'

3. ஞானம் (அறிவு), ஞாத்ரு (அறிகிறவன்), ஞேயம் (அறியப்படும் பொருள்) இம்மூன்றுக்கும் த்ரிபுடீ என்று பெயர். இம்மூன்றினுடைய விக்யாஸங்களைத் தெரிந்துகொண்டு, அவைகளை ஸம்பந்தப்படுத்தும் ஞான ரூபமான சித்தவ்ருத்திக்கு 'சுபகஸம்பத்கரீ' என்று பெயர்.

## अश्वारूढाधिष्ठिताश्व कोटि कोटिभिरावृता

## அச்வாரூடாதிஷ்டிதாச்வ கோடி கோடிபிராவ்ருதா (67)

அச்வரூடா தேவியின் ஆக்ஞைக்குள்பட்ட கோடி கோடிக் கணக்கான குதிரைகளால் சூழப்பட்டவள்.

1. அச்வாரூடா தேவி அம்பாளுடைய சதுரங்க பலத்தில், குதிரை ஸைன்யங்களுக்கு அதிகாரியாக நியமிக்கப்பட்டவள். அம்பாளுடைய ஆயுதங்களில் பாசத்திலிருந்து ஆவிர்பவித்தவள். அச்வாரூடா தேவியின் குதிரைக்கு 'அபராஜிதம்' என்று பெயர்.

2. இந்த்ரியங்களை அச்வங்களாகச் சொல்லி, அவைகளின் மேல் மனஸ் ஆரூடமாக (ஏறி) இருப்பதாகச் சொல்லப்படும். இந்த்ரியங்களின் மூலமாக மனதானது, தன்னுடைய ஸங்கல்ப விகல்பாத்மகமான வ்யாபாரங்களைச் செய்வதனால் அம்மாதிரி சொல்லியது. மனதுக்கு அடங்கிய இந்த்ரியங்களாகிற குதிரைகளால் சூழப்பட்டவள். அதாவது அனந்தமான இந்த்ரியங்களுக்கு அதிஷ்டாத்ரி, எஜமானி என்று பொருள்.

> 'இந்த்ரியாணாம் அதிஷ்டாத்ரீ பூதானாம் சாகிலேஷு யா |
> பூதேஷு ஸததம் தஸ்யை வ்யாப்த்யை தேவ்யை நமோ நம: ||
> (ஸப்தசதீ)

இதற்குமேல் அம்பாள், மந்த்ரிணீ, தண்டினீ இவர்களுடைய ரதங்களைப்பற்றிச் சொல்லப்படுகிறது. அம்பாளுடைய ஸமீபத்தில் இருக்கும்படியான சக்திகளில் முக்யமானவர்கள் மந்த்ரிணீ, தண்டினீ என்றவர்கள். இவர்களுக்கு மேல்ஸ்தானம் வகிப்பது அம்பாளைத்தவிர வேறு யாருமில்லை. இவர்களுடைய உத்தரவு இல்லாமல் அம்பாளைப் பார்க்கமுடியாது என்றும் சொல்லப்படும். மற்ற ஸம்பத்கரீ, அச்வாரூடா முதலிய ஸமஸ்த சக்திகளும் இவ்விருவர்களுக்கு உள்பட்டுத்தான். இவர்களுடைய ப்ரபாவமானது அபாரம். இவர்கள் எப்போதும் அம்பாளுடைய ஸன்னிதியில் இருப்பதாகவும், ஒருபோதும் பிரியாமல் அம்பாளுடைய ஸேவையில் ஈடுபட்டிருப்பதாகவும் சொல்லியிருக்கிறது. மந்த்ரிணீ தேவதை அம்பாளுக்கு ப்ரதான மந்திரி ஸ்தானம் வஹிப்பவள். ஸங்கீதத்திற்கு அதிஷ்டானதேவதை

ராஜ ச்யாமளா என்றும், ஸங்கீத ச்யாமளா என்றும் பெயர். அம்பாள் மந்த்ரிணியிடம் தன்னுடைய ராஜ்யபாரம் முழுவதையும் ஒப்புவித்திருப்பதாகப் பின்னால் வரும் 'மந்த்ரிணீ ந்யஸ்த ராஜ்யதூ:' என்ற (786வது) நாமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அம்பாளுடைய இக்ஷு கோதண்டத்திலிருந்து உத்பவமானவள் மந்த்ரிணீ.

அதேமாதிரி முக்யமான சக்தி தேவதை வாராஹீ. அம்பாளுடைய ஸர்வ ஸைன்யத்திற்கும் அதிகாரியானவள். அதினால் தண்டநாதா என்று பெயர். வார்த்தாளீ என்றும் பெயர். பஞ்ச பாணத்திலிருந்து உத்பவமானவள். வாராஹ முகத்தையுடையவள். துஷ்ட நிக்ரஹ, சிஷ்ட அனுக்ரஹ சக்தியைப் பரிபூர்ணமாக அம்பாளால் கொடுக்கப்பட்டவள். இவர்களுக்கும் அம்பாளுக்கும் ரதங்கள் உண்டு. அம்பாளுடைய ரதம், சக்ர ராஜ ரதம். மந்திரிணியுடையது கேய சக்ர ரதம். வாராஹியினுடைய ரதம், கிரி சக்ர ரதம். இம்மூன்றும் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாமல் யுத்தகளத்தில் சேர்ந்து இருந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இருவரும் அம்பாளுடைய பார்ச்வ தேவதைகளானபடியால் அம்மாதிரி சேர்ந்திருப்பதற்குக் காரணம்.

"சக்ரராஜ ரதோயத்ர தத்ர கேய ரதோத்தம: |
யத்ர கேய ரதஸ்தத்ர கிரி சக்ர ரதோத்தம: |
ஏதத் ரதத்ரயம் தத்ர த்ரைலோக்யமிவ ஜங்கமம் |"

இந்த மூன்று ரதங்களின் பெயரைக்கேட்டாலேயே ஜயம் உண்டென்று சொல்லப்பட்டிருக்கிறது.

## चक्रराज रथारूढ सर्वायुध परिष्कृता

## சக்ரராஜ ரதாரூடா ஸர்வாயுத பரிஷ்க்ருதா (68)

சக்ரராஜ ரதத்தில் ஆரூடமாயிருக்கும்படியான ஸமஸ்த ஆயுதங்களினால் அலங்கரிக்கப்பட்டவள்.

1. யுத்த காலத்தில் தேவீ ஸமீபத்தில் ஸர்வாயுதங்களும் சக்ரராஜ ரதத்தில் பூர்ணமாய் வைக்கப்பட்டிருந்தன என்று அர்த்தம். அம்பாளுடைய ரதத்தின் கொடிக்கு 'ஆனந்த த்வஜம்' என்று பெயர். ரதத்திற்கு 9 தட்டு, 10 யோஜனை உயரம், 4 யோஜனை விஸ்தாரம்.

2 சக்ரராஜம் என்பதற்கு, 'ஸ்ரீசக்ரம்' என்றும் சொல்லலாம். சக்ரராஜ ரதத்திற்கு 9 தட்டுகள் மாதிரி, ஸ்ரீசக்கிரத்திற்கும் 9 பிரிவுகள் உண்டு. அதாவது த்ரைலோக்ய மோஹனம், ஸர்வாசா பரிபூரகம், ஸர்வஸம்க்ஷோபணம், ஸர்வ ஸௌபாக்ய தாயகம், ஸர்வார்த்தஸாதகம், ஸர்வரக்ஷாகரம், ஸர்வரோக ஹரம், ஸர்வஸித்திப்ரதம், ஸர்வானந்தமயம் (பிந்து, அம்பாள் இருக்குமிடம்.) அதில் இருக்கும்படியான ஆயுதங்கள் - ஆத்மக் ஞானம் அடைவதற்கு ஸாதனங்கள் என்று அர்த்தம். ஸ்ரீசக்ரத்தில் அம்பாளை உபாஸனை பண்ணினால் ஆத்மக்ஞானம் அடைவது நிச்சயம் என்றும், சக்ரஸித்தி ஏற்படுகிறதுதான் யோகம் முதலிய சாஸ்திரங்களில் சொல்லப்படும் ஸாதனங்களுக்கெல்லாம் பிரயோஜனம் என்று பொருள்.

3. சக்ரராஜம்—ஷட் சக்கரங்களை, ரத – ஆகாரமாக உடையது 'சக்ரராஜ ரதம்.' அல்லது 'சக்ரேசத்வம்' அவைகளை, ஆரூட—அடக்குவதற்கு அல்லது பேதிப்பதற்கு வேண்டிய, ஸர்வாயுத – சமஸ்த கர்மாதி ரூபங்களான ஸாதனங்கள்; அதாவது சுத்த வித்யை என்று அர்த்தம். அதனால் பரிஷ்க்ருதா-அலங்கரிக்கப்பட்டவள்.

''சுத்த வித்யோதயாத் சக்ரேசத்வ ஸித்தி:''
'யதா யோகீ ததா தஸ்ய சக்ரேசத்வம் அனுத்தரம் |
மாஹேச்வர்யா: ஸமாவேசோத்கர்ஷாத் ஸித்யதி யோகிந: | '

## गेय चक्र रथारूढ मन्त्रिणी परिसेविता

## கேய சக்ர ரதாரூட மந்த்ரிணீ பரிஸேவிதா (69)

கேய சக்ரம் என்கிற ரதத்தில் ஆரோஹணம் செய்திருக்கும் மந்த்ரிணீ தேவியால் (சுற்றிவந்து) ஸேவிக்கப்பட்டவள்.

1. இந்த ரதத்திற்கு 7 தட்டுகள் இருப்பதாகச் சொல்லப்படும்.

2. கேய - ப்ரஸித்தமான, சக்ர - சக்ரத்தையுடைய, ரதம்-ரதமான ஸூர்ய மண்டலம். அதில் ஆரூடர்களான - இருக்கும்படியான, மந்த்ரிணீ - ஸ்ரீ வித்யோபாஸகர்களான யோகினிகளால் ஸேவிக்கப்பட்டவள்.

3. கேய - முக்யமான, சக்ரரதா - சக்ராகாரமானரதத்தில் இருப்பவளான ஸ்ரீ த்ரிபுரஸுந்தரீ அம்பாளை, ஆரூட - புத்தியில் விஷயீகரணம், அல்லது அநுஸந்தானம் செய்யும், மந்த்ரிணீ - மந்த்ரஸித்தி உடையவர்களால், ஸேவிக்கப்பட்டவள்.

தன்னையும் அம்பாளையும் அபேதமாக அநுஸந்தானம் செய்வது தந்த்ர ராஜத்தில் சொல்லியிருப்பதை குருமுகமாக தெரிந்துகொள்ளவேண்டியது.

## किरि चक्र रथारूढ दण्डनाथ पुरस्कृता

## கிரி சக்ர ரதாரூட தண்டநாத புரஸ்க்ருதா (70)

கிரி சக்ரம் என்கிற ரதத்தில் ஆரோஹணம் செய்திருக்கும் தண்டநாதையை முன்னிட்டிருப்பவள்.

1. 'கிரி' என்றால் வராஹம். தண்டநாதையின் ரதம் வராஹ ரூபமாக இருக்கிறதினால் அதற்கு 'கிரி சக்ர ரதம் என்று பெயர்.

2. வாராஹிக்கு தண்டநாதை என்று பெயர்.

'ஸர்வதா தண்டபாணித்வாத் தண்ட நாதேதி கீயதே |'

3. கிரி - கிரணங்கள், அதாவது ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம் இவைகளுடைய, சக்ரம் - ஸமூஹமாகிற ரதத்தில், ஆரூடா-அதில் ஏறியிருந்தவளாக இருந்தாலும், தண்டநாத - யமனால், அபுரஸ்க்ருதா - ஸ்வாதீனம் செய்யப்படாதவள். இதின் தாத்பர்யம் = யோகியானவன் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயத்தில் அகப்பட்டவனாயிருந்தாலும் யம யாதனைக்கு உள்பட்டவன் அல்ல என்பது.

'தத் ப்ரவ்ருத்தாவபி அகிராஸ: ஸ்வ ஸம்வேத்த்ரு பாவாத்'

## ज्वाला मालिनि काक्षिप्त वह्नि प्राकार मध्यगा

## ஜ்வாலா மாலிநி காக்ஷிப்த வன்ஹி ப்ராகார மத்யகா (71)

ஜ்வாலாமாலினியால் சுற்றிப்போடப்பட்ட அக்னி ப்ரகாரத்தின் நடுவில் இருப்பவள்.

1. பஞ்சதச நித்யைகள் பின்னால் வரும் 'ப்ரதிபன்முக ராகாந்த திதி மண்டல பூஜிதா' என்ற(610வது)நாமத்தில் சொல்லப்பட்டபடி, சாந்த்ராயண மாதத்தின் பதினைந்து திதிகளுடைய

தேவதைகள். அவர்கள் பெயர் - காமேச்வரீ. பகமாலினி, நித்ய க்லின்னா, பேருண்டா, வன்ஹிவாஸினீ, வஜ்ரேச்வரி, சிவதூதீ, த்வரிதா, குலஸுந்தரி, நித்யா, நீலபதாகா, விஜயா, ஸர்வ மங்களா, ஜ்வாலாமாலினீ, சித்ரா. அம்பாளே பதினாறுவது நித்யையாகச் சொல்லப்படும். இவர்களில் பதினைந்து நித்யை யான ஜ்வாலாமாலினி 'வத்னே த்வம் வன்ஹிரூபாஸி ஜ்வாலா மாலா மயாக்ருதி:' என்று சொல்லப்பட்டபடி அக்னி ஜ்வாலா மாயமாக இருக்கப்பட்டவள்.

2 பண்டாஸுர யுத்தத்தில் அவனால் சக்தி ஸேனை களுக்கு இரவில் யாதொரு கெடுதியும் நேரிடாமலிருப்பதற்காக அம்பாள் ஜ்வாலாமாலினியை 100 யோஜனை விஸ்தாரம், 30 யோஜனை உயரமுள்ள ஒரு நெருப்புக்கோட்டையாக இருக்கும் படி சொல்லி, அதற்குள் தன் ஸைன்யங்களுடன் இருந்ததாக லலிதோபாக்யானத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

3 ஜ்வாலா மாலிகளால் ஏற்படப்பட்ட நெருப்புப் பொறி களுக்கு நடுவில் இருப்பவள். ஏற்கனவே சொல்லப்பட்டபடி ஸ்ருஷ்டி முதலான கர்த்ருத்வம் இருந்தபோதிலும், அந்தக் காரியங்களால் விகாரம் அடையாதவள், பாதிக்கப்படாதவள், அதாவது தன்னுடைய சக்தியினால் ஸ்ருஷ்டி முதலிய கார்யங் களைச் செய்தபோதிலும் அவற்றில் அகப்படாதவள். கர்த்ருத்வம் கார்யம் என்று இரண்டு அவஸ்தைகள் உண்டு. இவைகளில் கார்யம் நச்வரமாகப்போனாலும், கர்த்ருத்வ சக்தியானது அழி வில்லாமல் நிர்விகாரமாக இருப்பதைச் சொல்லப்பட்டிருக்கிறது. 'ஞானாக்னி: ஸர்வ கர்மாணி பஸ்மஸாத் குருதே அர்ஜுந' என்ற படி ஞானியானவன் அக்ஞானத்தைப் போக்குகிற சிதக்னி (ஞானாக்னி)க்கு நடுவில் இருக்கிறான். ஆயினும் பிரபஞ்சத்தில் நடக்கும் கார்யங்களாகிற நெருப்புப் பொறிகளால் தாக்கப்படு கிறான். இந்தமாதிரி உள்ளும் புறமும் ஜ்வாலா மாலைகளால் ஏற்பட்ட வன்ஹி ப்ராகாரங்கள்—நெருப்புப் பொறிகளுக்கு நடுவில், மத்யக—நடுவான (நிர்விகாரமான) நிலைமையை உடைய வளாகிறாள் என்று அர்த்தம்.

4 ஜ்வாலா மாலிகா:, சக்தி த்ரிகோணங்கள் ஐந்து. இவைகளோடு ஆக்ஷிப்த - ஸாமாஸ்யம் அடைந்த (கலந்த), வன்ஹி—

ப்ராகாரா: - சிவத்ரி கோணங்கள் நாலு, இவைகளுக்கு மத்யகா- மத்யஸ்தானமாகிற பிந்துவில் இருப்பவள்.

> 'சதுர்பி: சிவசக்ரைச்ச சக்தி சக்ரைச்ச பஞ்சபி: |
> நவ சக்ரைச்ச ஸம்பித்தம் ஸ்ரீசக்ரம் சிவயோர்வபு: || '

என்றபடி, ஸ்ரீசக்ரமானது கீழ்நோக்கிய ஐந்து (சக்தி) சக்ரங்கள், மேல் நோக்கிய நாலு (சிவ) சக்ரங்கள் இவைகள் கலந்ததினால் ஏற்படுகிறது. (சிவயோர்வபு: என்பதினால் ஸ்ரீசக்ரமானது சிவன், சக்தி இவர்களுடைய ஐக்யமான ரூபம் என்று அர்த்தம்). அவைகளுக்கு நடுவில் இருக்கும் ஸர்வானந்தமயம் என்றும் பிந்துவானது அம்பாளுடைய ஸ்தானம்.

## भण्डसैन्य वधोद्युक्त शक्तिविक्रम हर्षिता

## பண்டஸைன்ய வதோத்யுக்த சக்தி விக்ரம ஹர்ஷிதா (72)

பண்டாஸுரனுடைய ஸைன்யத்தை வதம் செய்வதில் முயற்சியுடைய (நகுலீ முதலிய) சக்திகளுடைய பராக்ரமத்தினால் ஸந்தோஷம் அடைந்தவள்

பண்ட - ஜீவாத்மாவினுடைய, ஸைன்ய - அனுகுணமாக இருக்கும் த்வைத பாவனைகள் (தன்னை பரமாத்மாவிடமிருந்து பேதமாக நினைக்கும் சித்தவ்ருத்திகள்), அவைகளுடைய வதம் - அவைகளை நாசம் செய்வது, அதில் உத்யுக்தமாய் இருக்கும் சக்திகளுடைய - அத்வைத வ்ருத்தி ரூபமான சக்திகளுடைய முன்னேற்றத்தைப் பார்த்து ஸந்தோஷப்படுகிறவள்.

> 'தத் அபரிஜ்ஞானே ஸ்வசக்தி வ்யாமோஹித ஸம்ஸாரித்வம்'

என்று சக்தி ஸூத்திரத்தில் சொல்லியபடி ஆத்ம சக்தியைப் பற்றிய ஞானம் ஏற்படாதவரையில், ஜீவன் ஸம்ஸாரத்தில் தன்னுடைய பேதபாவனைகளால் வ்யாமோஹிக்கப்பட்டிருக்கிறான். ஆத்மானந்தம் கொஞ்சம் ஏற்பட்டாலும் அவனுக்கிருக்கும் அக்ஞானமாகிற ஆவரணம் நாசமாகிறது. இம்மாதிரி அந்தர்முக வ்ருத்திகள், பஹிர்முக வ்ருத்திகளை நாசம் செய்வதைப்பார்த்து பரமாத்மாவாகிய அம்பாளுக்கு ப்ரியம் ஏற்படுகிறதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

## नित्यापराक्रमाटोप निरीक्षण समुत्सुका

## நித்யாபராக்ரமாடோப நிரீக்ஷண ஸமுத்ஸுகா (73)

(மேலே சொல்லப்பட்ட) நித்யா தேவதைகளுடைய பராக்ரம மானது அதிகரித்ததைப் பார்ப்பதில் ச்ரத்தை உடையவள் (பார்த்து ஸந்தோஷம் அடைந்தவள்).

1 பண்டாஸுர யுத்தத்தில் ஒரு ஸமயம் ராத்ரியில் தமனகன், சித்ரகுப்தன் முதலிய அஸுர ஸேனாதிபதிகள், அம்பாளுடைய சக்ரராஜரதத்தைச் சூழ்ந்து கபட யுத்தம் செய்ய வந்தபோது, திதி நித்யா தேவதைகள் அம்பாளுடைய முன்னிலையில் தங்கள் பராக்ரமத்தைக்காட்டி, அஸுர ஸேனாதிபதிகளை ஸம்ஹாரம் பண்ணினதை இங்கே சொல்லப்பட்டிருக்கிறது.

'தாச்ச நித்யா: கலக்வாண கங்கணைர் யுதி பாணிபி: |
ஆக்ருஷ்யமாண கோதண்டா: தேனிரே யுத்தம் அத்புதம்' ||

2 நித்யா - அனுதினமிருக்கமான (சாச்வதமான) ஆத்ம சக்திகள், பராக்ரமாடோப - (அந்தர்முகமான ஆத்ம ஞானத்தினால்) அதிகரித்துவருவது, அதைப் பார்க்கப் பார்க்க ஸந்தோஷம் அடைகிறவள். ஆத்மாவினுடைய சக்திகள் அப்யாஸம் பண்ணாததினால் நசித்துவிடுகின்றனவென்றும், அந்தராத்மக் ஞானம் கொஞ்சம் ஏற்பட்டுவிட்டால் அது மேலுக்குமேல் வளர்ந்துவரும் என்று அர்த்தம்.

'ஸர்வா ஏவ கலா ஜந்தோ: அனப்யாஸேன நச்யதி |
இயம் ஞானகலா த்வந்த: ஸக்ருத் ஜாதாபி வர்த்தே ||'

(யோக வாஸிஷ்டம்)

## भण्ड पुत्र वधोद्युक्त बालाविक्रम नन्दिता

## பண்ட புத்ர வதோத்யுக்த பாலாவிக்ரம நந்திதா (74)

பண்டாஸுரனுடைய புத்ரர்களை வதம் செய்வதில் உத்யுக்தமாக (முயற்சியோடு) இருந்த பாலாம்பிகையினுடைய பராக்ரமத்தைக்கண்டு மகிழ்ந்தவள்.

1. பாலா அம்பாளுடைய புத்ரீ. ஒன்பது வயதுள்ளவள். அம்பாளைபோல் ஸௌந்தரியம், சக்தி இவைகளை உடையவள். பாலாம்பிகையினுடைய உபாஸனை மிகவும் விசேஷமான மஹிமையுடையதாகச் சொல்லப்படும். அம்பாளுடைய பரிபூர்ண ப்ரேமை

பாலாம்பிகையிடத்தில் இருப்பதினால் குழந்தையான பாலாம்பிகையினுடைய ப்ரீதியைப் பெற்றால் அம்பாளுடைய தயவும் தானாகவே ஏற்பட்டுவிடும்

2 பண்டாஸுர யுத்தத்தில் பண்டனுடைய புத்ரர்களான சதுர்பாஹு, உபமாயன் முதலிய முப்பதுபேருடன் யுத்தம் செய்ய பாலாம்பிகை, அம்பாள் எவ்வளவு தடுத்தும், போன பிறகு, குழந்தை க்ஷேமமாகவும் ஜயத்துடனும் திரும்பி வர வேண்டுமே என்கிற கவலையுடன் அம்பாள் இருந்தபோது, மந்த்ரிணியும், தண்டநாதையும் யஜமானியின் குழந்தையின் சௌர்யத்தையும், பண்டபுத்ரர்களை வதம் செய்ததையும்பார்த்து அந்த ஸந்தோஷ ஸமாசாரத்தை அம்பாளிடம் ஓடோடியும் வந்து சொன்னபோது, தன் குழந்தையினுடைய வ்ருத்தாந்தத்தைக் கேட்க அம்பாளுக்கு அளவில்லா ஆனந்தம் ஏற்பட்டதாம்.

'தாபிர் நிவேத்யமானானி ஸா தேவீ லலிதாம்பிகா |
புத்ர்யா புஜாபதானானி ச்ருத்வா ப்ரீதிம் ஸமாயயௌ ||'

3 அம்பாள், ச்யாமா, வார்த்தாளீ இம்மூவருக்கும் அங்கதேவதை, உபாங்கதேவதை, ப்ரத்யங்கதேவதை என்று மூன்று தேவதைகள் உண்டு. அம்பாளுக்கு அங்கதேவதை பாலா, உபாங்கதேவதை அன்னபூர்ணா, ப்ரத்யங்க தேவதை அச்வாரூடா. அதேமாதிரி மந்த்ரிணிக்கு அங்கதேவதை லகு ச்யாமா, உபாங்கதேவதை வாக்வாதினீ, ப்ரத்யங்கதேவதை நகுலீ. வாராஹியினுடைய அங்கதேவதை லகுவார்த்தாளீ, உபாங்கதேவதை ஸ்வப்னவார்த்தாளீ, ப்ரத்யங்க தேவதை திரஸ்கரிணீ.

## मान्त्रिण्यम्बा विरचित विषङ्ग वध तोषिता

## மந்த்ரிண்யம்பா விரசித விஷங்க வத தோஷிதா (75)

(மந்த்ரிணீ) ச்யாமாளாம்பா, விஷங்கன் என்கிற அஸுரனை வதம் செய்ததினால் ஸந்தோஷம் அடைந்தவள்.

## विशुक्रप्राणहरण वाराही वीर्य नन्दिता

## விசுக்ரப்ராணஹரண வாராஹீ வீர்ய நந்திதா (76)

விசுக்ரன் என்கிற அஸுரனுடைய ப்ராணனைப் போக்கடித்த (வதம் செய்த) வாராஹியினுடைய வீர்ய (சௌர்ய)த்தினால் மகிழ்ச்சியடைந்தவள்.

1. விஷங்கன், விசுக்ரன் இவர்கள் இருவரும் பண்டாஸுரனுடைய ஸஹோதரர்கள். அவனால் தன்னுடைய இரு புஜங்களிலிருந்து ஸ்ருஷ்டிக்கப்பட்டவர்கள். இருவரும் மிகவும் பராக்ரமசாலிகள்.

'புரா பண்டாஸுரோ நாம ஸர்வ தைத்ய சிகாமணி: |
பூர்வதேவான் பஹூவிதான் ய: ஸ்ரஷ்டும் ஸ்வேச்சயா படு: |
விசுக்ரம் நாம தைதேயவர்க ஸம்ரக்ஷண க்ஷமம் |
சுக்ரதுல்ய விசாரக்ஞம் தக்ஷாம்ஸேன ஸஸர்ஜ ஸ: |
வாமாம்ஸேன விஷங்கம் ச ஸ்ருஷ்டவான் ப்ராதராவுபௌ |'

2. லலிதோபாக்யானத்தில் மந்த்ரிணீ விசுக்ரனையும், வாராஹீ விஷங்கனையும், ஸம்ஹாரம் பண்ணினதாக மாற்றிச் சொல்லியிருந்தபோதிலும் ஸஹஸ்ர நாமத்தில் சொல்லியதுதான் ப்ரமாணம்.

3. 'பண்டபுத்ரர்கள்' என்பது ஆணவ மலம் என்று பொருள். விஷங்க – விருத்தமான, ஸங்கம் – விஷயங்களில் பற்றுதல். விசுக்ர – விருத்தமான (மறைக்கப்பட்ட) சுக்ர (தேஜஸ்), அதை உடையது ஜீவத்வ பாவம். இம் மூன்றையும் ஸம்ஹாரம் செய்ததாகச் சொல்லும் பாலா, மந்த்ரிணீ, வாராஹீ இவை அந்தர்முகமான வ்ருத்திகள். இவையால் மேலே சொல்லிய ஆணவ மலம் முதலியவை நாசம் அடைவதினால் ஆத்மாவுக்கு ஸந்தோஷம் ஏற்படுகிறது. ('ஸ்வாத்மைவ தேவதா ப்ரோக்தா லலிதா விச்வ விக்ரஹா' என்றபடி ஆத்மாவையே அம்பாளாகச் சொல்லப்பட்டிருக்கிறது.)

## कामेश्वर मुखालोक कल्पित श्रीगणेश्वरा

## காமேச்வர முகாலோக கல்பித ஸ்ரீ கணேச்வரா (77)

காமேச்வரருடைய முகத்தைப் பார்த்ததினாலேயே ஸ்ரீகணேச்வரரை ஸ்ருஷ்டித்தவள்.

## महागणेश निर्भिन्न विघ्न यन्त्र प्रहर्षिता

## மஹா கணேச நிர்பின்ன விக்ன யந்த்ர ப்ரஹர்ஷிதா (78)

மஹா கணேசரால் விக்ன யந்த்ரம் நாசமடைந்ததைப் பார்த்து ஸந்தோஷப்பட்டவள்.

1. பண்டாஸுரன் இதர அஸுரர்களைவிட சக்தி அதிகம் உள்ளவன் என்று ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கிறது. எதிரிகளுடைய ஸ்தூல ரூபம், ஸூக்ஷ்ம ரூபம் இவ்விரண்டையும் நாசம் பண்ணும்படியான அஸ்த்ர சஸ்த்ர பலம், மந்த்ர பலம் இவையுடையவன். இவனுக்கு விசுக்ரன் உதவியுமிருந்ததினால் இவன் ஜயிக்கமுடியாத பல கார்யங்களைச் செய்யமுடிந்தது. (தேவதைகளுக்கு ஒத்தாசை செய்யும் ப்ருஹஸ்பதியைவிட அஸுர குருவாகிய சுக்ரன் ஸாமர்த்யமுடையவன், அல்லது அவருக்குக் குறைந்தவனல்ல. அந்த சுக்ரனுக்கு ஸமானமான ஸாமர்த்யமுடையவன் விசுக்ரன்.)

2. இவர்கள் தங்களுடைய மந்த்ர சக்தியினால் அம்பாளுடைய ஸைன்யத்திற்கு அனேக உபத்திரவங்கள் செய்து கடைசியாக விசுக்ரன் 'ஜயவிக்னம்' என்கிற யந்த்ரத்தைத் தயார்செய்து அதை அம்பாள் ஸைன்யமிருக்குமிடத்தில் (ஏவல் தகடு வைப்பது மாதிரி)வைத்துவிடவே, ஸமஸ்த சக்தி ஸைன்யமும் தங்கள் யுத்த உத்ஸாஹத்தை இழந்து சோர்ந்துபோய் விக்ன யந்த்ரத்தின் மாயையில் இருக்கும்போது, அம்பாள் காமேச்வரரைப்பார்த்து புன்னகை செய்ததின்பேரில், அம்பாளுடைய மந்தஸ்மிதத்தின் காந்தியிலிருந்து மஹா கணபதி ஆவிர்பவித்து, விக்ன யந்த்ரத்தை உடைத்துப் பொடி பண்ணினர் என்றும், அதன் பிறகு சக்தி ஸைன்யம் முன்மாதிரி உத்ஸாஹத்தோடு யுத்த ஸன்னஹமாக இருந்தார்கள் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'தத: ஸா லலிதா தேவி காமேச்வர முகம் ப்ரதி |
தத்தாபாங்கா ஸமஹஸத் நாதி வ்யக்த ரதாவளி |
தஸ்யா மந்தஸ்மித ருச: குஞ்சராக்ருதிமான் முகே |
கடக்ரோட களத்தான: கச்சித் தேவோ வ்யஜ்ரும்பத | '

3. காமேச்வர—கேவல நிர்குணமான சிவஸ்வரூபம், அதினுடைய முகாலோக—தக் அனுபவத்தினால் (அதை அடை வதினால்) கல்பித - உண்டுபண்ணப்பட்ட, ஸ்ரீ கமேச்வரா-புர்ய ஷ்டகத்தின் ஈச்வரத்தோடு கூடியிருப்பவள்.

4. 'புர்யஷ்டகம்' என்பது (1) பஞ்ச காமேந்த்ரியங்கள் (2) பஞ்ச ஞானேந்த்ரியங்கள். (3) மனஸ், புத்தி, அஹங்காரம் சித்தம், இன்னான்கு. (4) பஞ்ச ப்ராணன்கள். (5) பஞ்ச பூதங்கள். (6) காமம். (7) கர்மா. (8) அவித்யை இவை களுடைய ஈச்வரத்வம் என்பது சிதானந்தகனாத்மகமாய், பரமாய் பூர்ணமான தன்மயத்தை அடைவது. மேலே சொல்லிய புர்யஷ்டகத்திற்குக் கட்டுப்பட்ட ஜீவனானவன் தன்னுடைய ஆத்மஸ்வரூப ஞானம் அடைந்தவுடன் அந்த சித்ஸ்வரூபத்தில் கலந்து ஜீவன் முக்தனாகிறான்.

'புர்யஷ்டக ப்ரமாத்ருத்வ அபிமான களனாத் அலேலா |
தத்வரூபம் ஸமாவிஷ்ட: சிதானந்த கனாத்மகம் |
தத ஏவ பர: பூர்ண: ஸம்யக் தந்மயதாம் கத: |

## भण्डासुरेन्द्र निर्मुक्त शस्त्र प्रत्यस्त्र वर्षिणी

### பண்டாஸுரேந்த்ர நிர்முக்த சஸ்த்ர ப்ரத்யஸ்த்ர வர்ஷிணீ (79)

பண்டாஸுரனால் விடப்பட்ட அஸ்த்ர சஸ்த்ரங்களை நாசம் பண்ணும் அஸ்த்ர சஸ்த்ரங்களை வர்ஷிக்கிறவள்.

1. முக்யமான ஸேனாதிபதிகளும், ஸைன்யமும் நாசமான பிறகு பண்டாஸுரன் அம்பாளுடன் யுத்தம் செய்தது சொல்லப் பட்டிருக்கிறது.

2. சஸ்த்ரம் என்பது கையில் பிடித்துக்கொண்டு அடிப்பது; அஸ்த்ரம் என்பது கையால் விடப்பட்டு ப்ரயோகம் செய்வது.

3. விக்னயந்த்ரம், பண்டாஸுர அஸ்த்ரங்கள் இவை யெல்லாம் ஆத்மக்ஞானம் ஏற்படாதபோது இருக்கும் அவித்யை யின் வ்ருத்தி ரூபங்கள். ப்ரத்யஸ்த்ரம் என்பது ஆத்மக்ஞானம் அடைந்திருக்கும் நிலைமை.

## कराङ्गुलि नखोत्पन्न नारायण दशाकृतिः

## கராங்குளி நகோத்பன்ன நராயண தசாக்ருதி: (80)

மஹாவிஷ்ணுவினுடைய தசாவதாரங்களேயும் தன்னுடைய நகக் கண்களிலிருந்து ஆவிர்பவிக்கும்படி செய்தவள்.

1. அம்பாள் பண்டாஸுரனுடன் யுத்தம் செய்தபோது பண்டாஸுரன் 'ஸர்வாஸுராஸ்த்ரம்' என்னும் அஸ்த்ரத்தி னுல், ஸோமக, ராவண, பலி, ஹிரண்யாக்ஷன் முதலிய பலிஷ்ட ரான அஸுரர்களை உண்டுபண்ணி, அவர்கள் அம்பாளுடன் யுத்தம் செய்யத் தொடங்கவே, அம்பாள் தன்னுடைய (வலது கைக் கட்டைவிரல் முதல் இடது கை சுண்டுவிரல் முடிய) பத்து விரல்களின் நகக் கணுக்களிலிருந்து மஹாவிஷ்ணுவின் பத்து அவதாரங்களையும் ஆவிர்பவிக்கும்படி செய்து அவர்களால் மேலே சொல்லப்பட்ட அஸுரர்களை ஸம்ஹாரம் செய்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

2. 'நாராயண' என்ற பதம் ஜீவன், ஈச்வரன், இவர்களைக் குறிக்கும். 'தசாக்ருதி:' என்பதை ஜீவனுடைய தசை, ஈச்வர னுடைய க்ருதி என்று நாராயண பதத்தின் அர்த்தத்தை ஒட்டி அர்த்தம் சொல்லலாம். ஜீவனுடைய தசைகள் ஐந்து—ஜாக்ர தா, ஸ்வப்ன, ஸுஷுப்தி, துரீயம், துரீயாதீதம். ஈச்வரனு டைய க்ருதிகள் ஐந்து— ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோ தானம், அனுக்ரஹம். இந்தப் பத்தையும் அம்பாள் தன் நகக் கணுக்களிலிருந்து உண்டுபண்ணுகிறுள் என்பது, அவ்வளவு அனு யாஸமாகச் செய்கிறுளென்பதைக் குறிக்கிறது.

## महा पाशुपतास्त्राग्नि निर्दग्धासुरसैनिका

## மஹா பாசுபதாஸ்த்ராக்னி நிர்தக்தாஸுர ஸைநிகா. (81)

மஹா பாசுபதாஸ்த்ரத்தின் அக்னியினுல் பண்டாசுரனுடைய ஸைந்யங்களை அடியோடு கொளுத்தியவள்.

1. 'ருத்ராதய: பிசாசாந்தா: பசவ: பரிகீர்த்திதா: ।
தேஷாம் பதித்வாத் ஸர்வேசோ பவ: பசுபதிர் மத: ॥

என்றபடி, ருத்திரர்களுக்கும் மேல்பட்ட ஸர்வேச்வரனுக்கு பசுபதி என்று பெயர். அவருடைய அஸ்த்ரம் பாசுபதாஸ்த்ரம். இங்கு சொல்லப்பட்ட மஹா பாசுபதாஸ்த்ரம் அதற்கும் மேல் பட்ட வேறு அஸ்த்ரம், அவருடையது.

2. மஹா பாசுபதாஸ்த்ரம் என்பது அப்யாஸாதிசயத்தி னல் மேலுக்குமேல் ஏற்படும் அத்வைத வ்ருத்திகள். அவை களின் அக்னியினல் கொளுத்தப்படும் அஸுரஸேனையென்பது அவித்யையினல் ஏற்படும் வ்ருத்திகள்.

## क्रामेश्वरास्त्र निर्दग्ध सभण्डासुर शून्यका

## காமேச்வராஸ்த்ர நிர்தக்த ஸபண்டாஸுர சூன்யகா (82)

மஹா காமேச்வராஸ்த்ரத்தினல் பண்டாஸுரனையும் அவ னுடைய பட்டணமான சூன்ய நகரத்தையும் அடியோடு கொளுத் தியவள்.

1. மஹா காமேச்வராஸ்த்ரம் என்பது மஹா பாசுபதாஸ் த்ரத்தையும் விட மஹிமையுடையது. அதனல் பண்டாஸு ரன் ஸமூலமாக அழிக்கப்பட்டதோடு அவனுடைய பட்டண மும் அழிந்துபோய் 'சூன்யகம்' என்ற பெயரைப்பொட்டி சூந்ய மாகவே போயிற்று.

'அநைக சேஷிதம் துஷ்டம் நிஹதாசேஷ பாந்தவம் ।
க்ரோதேந ப்ரஜ்வலந்தம் ச ஜகத் விப்லவ காரிணம்' ।
மஹாஸுரம் மஹாஸத்வம் பண்டம் சண்ட பராக்ரமம் ।
மஹாகாமேச்வராஸ்த்ரேண ஸஹஸ்ராதித்ய வர்ச்சஸா ।
கதாஸும் அகரோத் மாதா லலிதா பரமேச்வரீ ।
ததஸ்த்ர ப்ரஹிதைர் ஜ்வாலை: சூன்யகம் தஸ்ய பத்தனம் ।
ஸஸ்த்ரீகம் ச ஸபாலம் ச ஸகோஷ்ட தனதான்யகம் ।
நிர்தக்தம் ஆஸீத் ஸஹஸா ஸ்தலமாத்ரம் அசிஷ்யத ।
சூன்யகம தத்புரம் நாம சூன்யம் ஆஸீத் யதார்த்தத: ।

2. இதுவரையில் வந்த நாமங்களில் ஜீவதசையிலேயே ஆத்மஸாயுஜ்யமடைந்தவன் சிவதுல்யமான ஸ்திதியில் இருப்ப தைச் சொல்லிவிட்டு, அப்பேர்ப்பட்ட உத்க்ருஷ்டமான ஸ்திதி யை அடைந்த பிறகு பாக்கியிருப்பது என்னவென்று இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

'காமேச்வர' என்பவர் சிதாத்மா. 'ஆத்மநஃ காமாய ஸர்வம் ப்ரியம் பவதி' என்றபடி எல்லாவற்றையும் விரும்புவதாலும், எல்லாவற்றாலும் விரும்பப்படுவதாலும், சிதாத்மாவுக்கு காமேச்வரத்வம் ஸித்திக்கிறது. 'பண்டாசுரன்' என்பது த்வைத (பேத) வ்ருத்தியுடைய ஜீவாத்மா. காமேச்வராஸ்த்ரம் என்னும்படியான சிதக்னியினால் பண்டாசுர (த்வைத பாவத்தோடு கூடிய ஜீவ)னுடைய பேத வ்ருத்திகள் கொளுத்தப்பட்டு ஜீவன் ஜீவாத்மாவுடன் ஸாயுஜ்யமடைந்து 'ஜீவன் முக்தன்' ஆனபிறகு பாக்கி நிற்கும் லிங்க சரீரமானது எரிந்த துணிபோல் ஆக்ருதியோடு இருப்பதைத் தவிர வாஸ்தவத்தில் சூன்யமாகப் போய் விடுகிறது. சின்மயமான ஸ்வரூபமே பாக்கியிருக்கிறது என்று அர்த்தம். அம்மாதிரி பண்டாசுரனை வதம் செய்வதற்காக தேவர்களால் ஸ்தோத்ரம் பண்ணப்பட்ட அம்பாள், அவர்கள் கோரிக்கைப்படி அந்த அஸுரனை ஸம்ஹாரம் செய்தபிறகு, அதினால் ஸந்தோஷமடைந்த தேவர்களால் திரும்பவும் ஸ்தோத்ரம் செய்யப்பட்டதை அடுத்த நாமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## ब्रह्मोपेन्द्र महेन्द्रादि देवसंस्तुत वैभवा

## ப்ரும்ஹோபேந்த்ர மஹேந்த்ராதி தேவஸம்ஸ்துத [வைபவா (83)

ப்ரும்ஹா, விஷ்ணு, இந்திரன் முதலிய தேவர்களால் (நன்றாக) ஸ்தோத்ரம் செய்யப்பட்ட பராக்ரமத்தோடு கூடியவள்.

1. ப்ரும்ஹா முதலானவர்களால் அந்தர்முகமாக தங்களுக்குள் கண்டு அறியப்பட்ட விபுத்வம் (அபரிச்சின்னத்வம், ஸர்வாத்மத்வம்) உடையவள். அவர்களால் அறியப்பட்ட ஆத்ம ரூபமானவள்.

## हरनेत्राग्नि संदग्ध काम संजीवनौषधिः

## ஹரநேத்ராக்னி ஸம்தக்த காம ஸஞ்ஜீவநௌஷதிः (84)

பரமசிவனுடைய நெற்றிக் கண்ணின் அக்னியினால் பஸ்மீ
பூதனான மன்மதனுக்கு ஸஞ்ஜீவனம் என்ற ஓஷதிமாதிரி இருந்
தவள். (மன்மதனை உயிர்பெறும்படி செய்தவள்.)

1. ஸஞ்ஜீவனீ என்னும் மூலிகையானது இறந்தவனைப்
பிழைப்பிக்கும் சக்தியுடையது. 'ஜீவாது' என்றும் பெயர்.

2. பண்டாஸுரவதம் ஆனபிறகு ப்ரும் ஹாதிகளால்
ப்ரார்த்திக்கப்பட்டதின் பேரில் அம்பாள் மன்மதனை உயிர்
பெறும்படி செய்தது லலிதோபாக்யானத்தில் சொல்லியிருப்ப
தை இந்த நாமம் குறிக்கிறது.

3. 'பித்ரா நிர்பர்த்ஸிதோ பால: மாத்ரைவ ஆச்வாஸ்ய
தே கில' என்றபடி (ஜகத்துக்கெல்லாம்) தகப்பனாரான பரமசிவ
னால் மன்மதன் தண்டனை அடைந்தபோதிலும், (ஜகத்துக்கெல்
லாம்) மாதாவான அம்பாளால் அந்த தண்டனையிலிருந்து விடு
விக்கப்பட்டதானது தகப்பனாரால் அதட்டப்பட்ட குழந்தை
யானது தாயாரால் ஸமாதானப்படுத்தப்படுகிற உலக வழக்கத்
தை ஸூசிப்பிக்கிறது.

4. 'ஹரௌ ருஷ்டே குருஸ்த்ராதா குரௌ ருஷ்டே ந
கச்சன' என்றபடி ஈச்வரன் கோபம்கொண்டாலும் அதிலிருந்து
குரு காப்பாற்றுவார் என்று சொல்வதுண்டு. அம்பாளுக்கு
(பின்னால் சொல்லப்பட்ட) குருமூர்த்தி என்று நாமம் உண்டு.
அப்படி குருவின் மூர்த்தியான அம்பாள் ஈச்வரனுடைய கோ
பத்திற்கு பாத்ரமான மன்மதனைக் காப்பாற்றியது இந்த நாமத்
தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'குருசிஷ்ய பதே ஸ்தித்வா ஸ்வயமேவ ஸதாசிவ: ।
ப்ரச்னோத்தர பதைர் வாக்யை: தந்த்ரம் ஸமவதாரயத் ।

என்றபடி ஈச்வரன் தன் ப்ரகாச விமர்சரூபங்களான சிவன்,
சக்தி இவர்களுடைய ஸம்பாஷணை ரூபமாக ப்ரச்னோத்தரங்க
ளால் ஸகல தந்த்ர சாஸ்த்ரத்தையும் ஜகத்திற்கு வெளியிட்டார்
என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதிலிருந்தும் அம்பாள் குரு
என்பது விளங்குகிறது.

6. 'ஸ்ரீ வித்யோபாஸகானாம் ச யதா தேவோ வர: சிவ:
என்றபடி அம்பாளுடைய உபாஸகர்களில் முதலானவர்

பரமசிவன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் அவருக்கு குரு மண்டலத்தில் ஆதினாதர் என்றும் பெயர். மேலும் 'சக்த்யா வினா சிவே ஸூக்ஷ்மே நாம தாம நவித்யதே' என்பதிலிருந்தும் ஆசார்யாள் ஸௌந்தர்யலஹரியில் 'சிவ: சக்த்யா யுக்தோ' என்ற முதல் ச்லோகத்தில் சொல்லியிருக்கிறபடி, சக்தியே சிவனுக்கு இன்றியமையாதவளானபடியாலும் இச்சா சக்தி ரூபிணியான அம்பாளுடைய ஏவலால் பரமசிவனுடைய கர்த்ருத்வம் ஏற்படுகிறபடியாலும் அம்பாள்தான் குரு என்று ஏற்படுகிறது.

7. ஆத்மஸ்வரூபத்தை அபஹரணம் பண்ணுவது 'ஹர', அதற்கு நேதா - வழிகாண்பிப்பது— அதாவது மூல அக்ஞானம் அது அக்னிபோல் எங்கும் சூழ்ந்துகொண்டிருப்பதால் 'ஹர நேத்ராக்னி' என்று ஏற்படுகிறது. அந்த மூல அக்ஞானம் அதிகமாக இருக்கிறபடியால் அதனால், ஸம்தக்த — நன்றாகக் கொளுத்தப்பட்ட, காம - ஜீவபாவத்தையடைந்த காமேச்வர ஸ்வரூபமான ஆத்மா, அதற்கு ஸம்-நன்றாக, அதாவது அக்ஞானமாகிற ஆவரணத்தைப் போக்கடிப்பதினால் நன்றாக,ஜீவன் - தன்னுடைய பரமாத்ம ஸ்வரூபத்தை அடைவதற்கு, ஔஷதி: - மூலிகையாக இருப்பவள். வித்யாரூபிணியான அம்பாளை உபாஸிப்பதினால் அவித்யை நீங்கி தன்னுடைய ஸ்வரூபத்தை அடைகிறதான மோக்ஷம் ஏற்படும் என்று அர்த்தம்.

8. மன்மதன் ஆதியில் தேஹத்துடனும், பின்னால் பரமசிவனால் எரிக்கப்பட்டபோது தேஹமில்லாமலும் இருந்துகொண்டிருந்ததினால் இன்னொரு விசேஷம் தெரிகிறது. ஆத்மாவானது ஆதியில் பரமாத்ம ஸ்வரூபமாக இருந்து, பிறகு அவித்யாவசத்தினால் சரீரத்தை அடைந்தாலும் அந்த அவித்யையிலிருந்து நிவ்ருத்தியானவுடன் சரீரம் என்னும் பற்றில்லாமல் ப்ருஹ்மத்தோடு ஐக்யத்தை அடைகிறது. ஆகவே ப்ருஹ்ம ஸ்வரூபத்தை அடைவது யோகிகளுக்குப் புதிதல்ல.

> 'யத் சிவத்வம் அமுக்ஷயோக்தம் நாபூர்வம் தத்தயோகின: |
> ஸ்வபாவ ஏவ தன்மாயாசக்தி ப்ரோத்தாபிதான்னிஜாத் |
> நானா விகல்ப தௌராத்ம்யாத் பராபூதமிவ ஸ்வத: |
> விம்ருஷ்டம் குருவிர்திஷ்ட ப்ரோக்தோபாய க்ரமேண தத் |
> சிவத்வம் வ்யக்தம் ஏதீதி சிவேனோதீரிதம் சிவம் | '

(சிவஸூத்ர வார்த்திகம்.)

இதுவரையில் பண்டாஸுரவதமாகிற அம்பாளுடைய ஸ்தூலரூபத்தின் காரியங்களைச் சொல்லிவருகையில், அந்த ஸம்பந்தமான நாமங்களில் அம்பாளுடைய பரமான ரூபத்தை இரண்டாவது (உள்ளடங்கிய, ரஹஸ்யமான) அர்த்தமாகச் சொல்லிக்கொண்டு வரப்பட்டது. ஏனென்றால் அந்த பரமான ரூபம் ஸூக்ஷ்மத்திற்கும் ஸூக்ஷ்மமானது. அதனால் அம்மாதிரி ரஹஸ்யமாகச் சொல்லவேண்டியிருந்தது.

இனி, அம்பாளுடைய ஸ்தூலரூப அபின்னமான ஸூக்ஷ்ம ரூபத்தை வர்ணிக்கப்படுகிறது. அது ஸூக்ஷ்மம், ஸூக்ஷ்மதரம், ஸூக்ஷ்மதமம் என்று மூன்றுவகைப்பட்டது. பஞ்சதசீவித்யாஸ்வரூபம் ஸூக்ஷ்மம். காமகலாக்ஷர ரூபம் ஸூக்ஷ்மதரம். குண்டலினீ ரூபம் ஸூக்ஷ்மதமம். இனி அடுத்துவரும் மூன்று நாமங்களில் ஸூக்ஷ்மரூபம் சொல்லப்படுகிறது.

### श्रीमद्वाग्भव कूटैक स्वरूप मुखपङ्कजा

### ஸ்ரீமத் வாக்பவ கூடைக ஸ்வரூப முகபங்கஜா. (85)

ஞானப்ரதம் முதலிய மாஹாத்ம்யத்தோடு கூடிய பஞ்சதசியில் முதல் பாகமும், ஐந்து அக்ஷரங்களோடு கூடியதுமான, வாக்பவம் என்னும் கூடமே முச்யமான தன்னுடைய ரூபமாக இருக்கிற முகபங்கஜ (வதநகமல)த்தை உடையவள்.

ஸ்ரீமத் - ஞானப்ரதம் முதலிய மாஹாத்ம்யத்தோடு கூடிய, வாக்பவ கூட - பஞ்சதசியில் முதல்பாகமும் ஐந்து அக்ஷரங்களோடு கூடியதுமான 'வாக்பவம்' என்னும் கூடமே, ஏக - முக்யமான, ஸ்வ - தன்னுடைய ரூபமாக இருக்கிற, முகபங்கஜ (வதநகமல)த்தை உடையவள்,

### कण्ठाधः कटिपर्यन्त मध्यकूट स्वरूपिणी

### கண்டாத: கடிபர்யந்த மத்யகூட ஸ்வரூபிணீ (86)

கழுத்துக்குக் கீழ் இடுப்புவரையில் இருக்கும் மத்யபாகமான (பஞ்சதசியின் மத்யபாகமாகிறதும் ஆறு அக்ஷரங்களையுடைய)துமாகிய காமராஜகூடத்தை தன்னுடைய ரூபமாக உடையவள்.

### शक्तिकूटैकतापन्न कट्यधोभाग धारिणी

சக்தி கூடைகதாபன்ன கட்யதோபாகதாரிணீ (87)

சக்திகூட - பஞ்சதசியின் கடைசிபாகமாகிறதும், நான்கு அம் சங்களோடு கூடியதுமாகிய சக்திகூடத்தோடு, ஏகதா ஆபன்ன - ஐக்யத்தை அடைந்த, கட்யதோபாக - இடுப்புக்குக் கீழ் உள்ள பாகத்தை, தாரிணீ - தரிக்கிறவள், உடையவள்.

அம்பாளுடைய முக்கியமந்த்ரமாகிய பஞ்சதசியின் மூன்று பாகங்களையும் அம்பாளுடைய ஸ்தூலரூபத்திற்குப் பொருத்த மானதாகக் காட்டப்பட்டிருக்கிறது.

வாக்காம சக்தி கூடை: அவயவ்சோ விக்ரஹோ மாது: ।
ப்ரதிபாத்யோ அத்ர ஆகண்டாத் ஆமத்யாத் ஆசபாதாக்ராத் ॥
(வரிவஸ்யா ரஹஸ்யம்)

இதில் வாக்பவகூடமானது ஸகல வித்யாப்ரதம், ஸமஸ்த மான ஞானத்தையும் கொடுக்கக் கூடியது. இச்சாசக்தி ஸ்தா னம் காமராஜகூடம், விரும்பப்பட்ட ஸகலவிதமான வஸ்துக் களைக் கொடுக்கக்கூடியது, ஞானசக்தி ஸ்தானம். சக்திகூடம் ஸ்ருஷ்டி முதலிய சக்திகளைக் கொடுக்கக் கூடியது, க்ரியாசக்தி ஸ்தானம்.

'காமஸ்தே ஹ்ருதிவஸதீதி காமராஜம்
ஸ்ரஷ்ட்ருத்வாத் தததனு தவாம்ப சக்திகூடம்'

இம்மூன்று கூடங்களைப்பற்றியும் அவைகளின் ஸூக்ஷ்மார்த்தங் களைப் பற்றியும் சக்தி மஹிம்னஸ்தோத்திரத்திலும், வரிவஸ்யா ரஹஸ்யத்திலும் மற்ற க்ரந்தங்களிலும் காணலாம்.

मूलमन्त्रात्मिका

மூலமந்த்ராத்மிகா (88)

சதுர்வித புருஷார்த்தங்களுக்கும் மூலகாரணமாயுள்ள பஞ்ச தசாக்ஷர மந்த்ரமே ஸ்வரூபமாக உடையவள்.

மந்த்ரம் என்பதற்கு மனனம் (அனுஸந்தானம்) அல்லது ஆவ்ருத்தி பண்ணுவதினால் காப்பாற்றுவது என்று அர்த்தம்.

मूलकूटत्रयकलेबरा

மூலகூடத்ரயகளேபரா (89)

மேலே சொல்லியபடி மூலமந்திரமாகிற பஞ்சதசியின் மூன்று கூடங்களுக்கு ஸமமான (ஸ்தூலரூப) சரீரத்தை உடையவள். அல்லது அவைகளையே ஸூக்ஷ்மரூபத்தில் சரீரமாக உடையவள்.

1. உண்மையில் இந்த நாமத்திலும் இதற்கு முந்தியதிலும் வரும் 'மூல' என்ற பதம் 'காமகலா' என்று அர்த்தம். காமகலைக்கும் மூன்று பாகங்கள் உண்டென்பதாகவும், அவைகள் க்ரமமாய் பஞ்சதசாக்ஷரியின் மூன்று பாகங்களையும் சரீரத்தின் மேலே சொல்லிய மூன்று பிரிவுகளையும் குறிக்கும் என்பதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

> பிந்துனு முகம் பிந்துத்வயேந குசௌ ஸபரார்த்தௌ
> யோனிம் க்ருத்வா காமகலாம் இதி த்யாத்வா
>
> (கல்பஸூத்ரம்)

> 'முகம் பிந்தும் க்ருத்வா குசயுகம் அதஸ்தஸ்ய தத் அதோ
> ஹரார்தம் த்யாயேத்யோ ஹரமஹிஷி தே மன்மதகலாம்,
>
> (ஸௌந்தர்யலஹரி)

காமகலாக்ஷரத்தின் ரஹஸ்யங்கள் குருமுகமாகத் தெரிந்து கொள்ள வேண்டியவைகள்.

ஆகவே இந்த இரண்டு நாமங்களிலும் அம்பாளுடைய காமகலாக்ஷர ரூபமான ஸூக்ஷ்மதர ரூபத்தைச் சொல்லப்பட்டிருக்கிறது.

இம்மாதிரி ப்ரும்ஹாண்டத்தில் (வெளியில்) அந்தர்கதமாக இருக்கும்படியான அம்பாளுடைய ரூபத்தை வர்ணித்துவிட்டு பிண்டாண்டமாகிய சரீரத்தில் அந்தர்கதமாக இருக்கும் 'குண்டலினீ' என்று பெயரோடுகூடிய அம்பாளுடைய ஸூக்ஷ்மதமமான ரூபத்தை வர்ணிக்க ஆரம்பிக்கப்படுகிறது.

இந்த குண்டலினீ சக்தியானது மூலாதார சக்ரத்தில் ஸர்ப்பம் போன்று மூன்றரை வளையரூபமாகத் தூங்கிக்கொண்டிருப்பதாகவும், யோகாப்யாஸத்தினால் எழுப்பப்பட்டு மேலே ஸுஷும்னா மார்க்கமாகக் கிளம்பி ஆறு சக்ரங்களையும் ப்ரம்ஹ, விஷ்ணு, ருத்ர, க்ரந்திகளையும் அக்னி, ஸூர்ய சந்த்ரமண்டலங்களையும், பேதனம் செய்து மேலே ஸஹஸ்ரார பத்மம் என்னும்

இடத்திற்குப்போய் அங்கே அந்த பத்மத்தின் மத்யபாகமாகிய சந்த்ரமண்டலத்திலிருக்கும் அமிதத்தைப் பெருகச்செய்து திரும்பவும் அதே வழியாகத் தன்னிருப்பிடமாகிய மூலாதாரத்திற்கு வந்து முன்போல் இருப்பதாகவும் சொல்லப்படுகிறது. யோகாப்யாஸம் இல்லாதவர்களும் தங்களுடைய பாவனையின் உறுதியால் இந்த அனுபவத்தை அடையலாம்.

'ஸுதாதாரா ஸாரை: சரணயுகளாந்தர் விகளிதை:
ப்ரபஞ்சம் ஸிஞ்சந்தீ புநரபி ரஸாம்நாய மஹஸ: ।
அவாப்ய ஸ்வாம் பூமிம் புஜகநிபம் அத்யுஷ்டவலயம்
ஸ்வம் ஆத்மானம் க்ருத்வா ஸ்வபிஷி குலகுண்டே குஹரிணி' ॥

(ஸௌந்தர்யலஹரி)

'பிஸதன்வீ தடிதாபா மூலாதாரஸ்த பத்மச்ருங்காடாத் ।
பித்வா மூலஹ்ருதாக்ஞாகத வன்ஹிரவீந்து மண்டலத்ரிதயம் ॥
வ்யோமனி சித்சசி மண்டலமத்யே த்வகுலேன ஸங்கம்ய ।
உபயாங்க ஸங்கஜன்யம் ப்ரவாஹயந்தீ ஸுதாபூரம் ॥
ஸ்வயமபி தத்பானவசாத் மத்தா பூத்வா புனச்ச தேனைவ ।
மார்கேண பராவ்ருத்ய ஸ்வஸ்மின் ஸ்தானே ஸுகம் ஸ்வபிதி' ॥

(வரிவஸ்யா ரஹஸ்யம்)

(இது பின்வரும் நாமங்களில் விஸ்தாரமாகச் சொல்லப்படுகிறது)

## कुलामृतैकरसिका

## குலாம்ருதைக ரஸிகா (90)

குலாம்ருதத்திலேயே அதிகமான ரஸத்தை உடையவள். அதாவது அதைப் பானம் பண்ணுவதில் அதிக ப்ரியமுள்ளவள்.

1. மேலே சொல்லியபடி குண்டலினீ சக்தியினுல் ஸஹஸ்ரார பத்மத்திலிருக்கும் சந்த்ரமண்டலத்திலிருந்து பெருகும்படி செய்யப்படும், அம்ருதப்ரவாஹமானது குலாம்ருதம். அதை அந்த குண்டலினீ சக்தியும் பானம் பண்ணி மயங்கிப்போய் திரும்பவும் ஸுஷும்ன மார்க்கமாக மூலாதாரபத்மத்திற்கு வந்து முன்போல் அதின் தளங்களிலுள்ள த்ரிகோணத்தின் மேல்பாகத்தில் அதோமுகமாயும் மூன்றரை வளையாகாரமாகவும் தூங்குகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸ்வயமபி தத் பானவசாத் மத்தா பூத்வா' (வரிவஸ்யா ரஹஸ்யம்)

2. ஸஹஸ்ரார பத்மமானது கீழ் நோக்கி இருப்பதாகவும், அதிலுள்ள சித் சந்த்ரமண்டலத்தில் அகுல குண்டலினீ இருப்பதாகவும், அத்துடன் கீழிருந்து வரும் குண்டலினீ சக்தி சேருவதினால் (உபயாங்க ஸம்யோகத்தால்) அம்ருத ப்ரவாஹம் ஏற்படுவதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

குலாங்கனா ஏஷா அப்யத ராஜவீதீ:
ப்ரவிச்ய ஸங்கேத க்ருகாந்தரேஷு ।
விச்ரம்ய விச்ரம்ய வரேண பும்ஸா
ஸங்கம்ய ஸங்கம்ய ரஸம் ப்ரஸூதே ॥
(சிந்தாமணி ஸ்தவம்)

3. 'குலம்' என்பது ஸஜாதீய ஸமூஹம் என்று அர்த்தம். அதாவது ஒரே மாதிரி ஸம்பந்தமுள்ள வஸ்துக்களுக்குப் பெயர். இங்கே ஞாத்ரு, ஞேய, ஞானம் இம்மூன்றின் சேர்க்கை (த்ரிபுடி) யை சொல்லப்பட்டிருக்கிறது. (தெரிந்துகொள்கிறவன் ஞாதா, தெரிந்துகொள்ளப்படும் வஸ்து ஞேயம், தெரிந்துகொள்வது ஞானம்) இந்த த்ரிபுடியைத் தான் ஆசார்யாள் 'ஜானுமீதி தமேவபாந்தம் அநுபாத்யேதத் ஸமஸ்தம் ஜகத்' என்றதில் சொன்னது. இதையே குலம் என்றும் சொல்லப்பட்டது.

'மேய மாத்ரு மிதிலக்ஷணம் குலம் ப்ராந்ததோ வ்ரஜதியத்ரவிச்ரமம்'
(சித்ககன சந்த்ரிகா)

(மேயம் - அளக்கப்படும் வஸ்து, மாத்ரு - அளக்கிறவள், மிதி - அளப்பது. இதுவும் மேலே சொல்லிய ஞேய, ஞாத்ரு, ஞானம் மாதிரி ஒரு த்ரிபுடி)

மேல் நோக்கியும் கீழ்நோக்கியும் சரீரத்தில் முப்பத்திரண்டு பத்மங்கள் இருப்பதாகவும், அதில் அடிபாகத்தில் இருப்பதற்கு 'அகுலம்' என்றும், அதற்கு மேல் இருப்பவைகளுக்கு 'குலம்' என்றும் 'ஸ்வச்சந்தஸங்க்ரஹம்' முதலிய க்ரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

5. 'கு' என்றால் ப்ருதிவீ தத்வம். அதின் இருப்பிடமாகிய மூலாதார சக்ரத்தையும் அல்லது அத்துடன் ஸம்பந்தப்பட்டு இருப்பதினால் ஸுஷும்னா மார்க்கத்தையும் 'குலம்' என்று சொல்லலாம். அந்த ஸுஷும்னையின் மேல் உச்சியிலிருக்கும் ஸஹஸ்ராரத்திலிருந்து பெருகும் அம்ருதமானது 'குலாம்ருதம்'.

'ஸிவார்க்க மண்டலம் பித்வா த்ராவயந்தீந்து மண்டலம் ।
தத் உத்பூதாம்ருத ஸ்யந்தி பரமானந்த நந்திதா ।
குலயோஷித் குலம் த்யக்த்வா பரம் வர்ஷணம் எத்ய ஸா '।

(பைரவயாமளம்)

மேலே சொல்லியதில் 'குலஸ்திரீயானவள் குலத்தைவிட்டுப் போய்' என்பதில் 'குலம்' என்பது குலமார்க்கமாகிய ஸுஷும்ன மார்க்கம். குலஸ்திரீயென்பது குண்டலினீ சக்தி.

6. 'சரீரம் குலம் இத்யுக்தம்' என்று ஸ்வச்சந்தஸங்க்ரஹத்தில் சொன்னபடி சரீரத்தையே குலம் என்றும், அதிலுள்ள ஸஹஸ்ராரத்திலிருந்து பெருகும் அம்ருதத்தை குலாம்ருதம் என்று சொல்லலாம்.

## कुलसंकेतपालिनी

## குல ஸங்கேத பாலினீ (91)

'குலம்' ஸம்பந்தமான (ஸங்கேத) ரஹஸ்யங்களை பசு ஜனங்களுக்கு (அதாவது அவைகளைத் தெரிந்துகொள்ளக்கூடிய யோக்யதை இல்லாதவர்களுக்கு) தெரிந்துபோகாமல் காப்பாற்றுகிறவள்.

1. அதாவது, அம்பாளுடைய உபாஸனா ரஹஸ்யங்கள் ஸம்ப்ரதாயத்தை ஒட்டி குரு சிஷ்ய பரம்பரையாய்த் தான் தெரிந்துகொள்ள முடியுமென்று அர்த்தம்.

2. 'குல புஸ்தகானி கோபாயேத்' என்று கல்பஸூத்திரத்தில் சொன்னபடி அம்பாளுடைய உபாஸனையைப் போதிக்கும் சாஸ்திரத்திற்கும் 'குலம்' என்று பெயர். அவைகளின் ரஹஸ்யங்கள்.

3 'ந குலம் குலமித்யாஹு: ஆசார: குலமுச்யதே ।
ஆசார ரஹிதோ ராஜன் நேஹ நாமுத்ர விந்ததி' ।।

என்று சொன்னபடி ஆசாரத்துக்கும் 'குலம்' என்று பெயர். அந்த ஆசாரத்தின் ரஹஸ்யங்கள்.

4. அம்பாளுடைய உபாஸனையின் ஸங்கேதங்கள் சக்ர ஸங்கேதம், மந்த்ர ஸங்கேதம், பூஜாஸங்கேதம், என்று மூன்று வகை.

5. 'ஸங்கேதம்' என்றால் ரஹஸ்யமாகக் கூடும் இடம் என்றும் அர்த்தம். ஆகவே 'ஸஹஸ்ராரே பத்மே ஸஹ ரஹஸி

பத்யா விஹரஸே' என்று ஆசார்யாள் சொன்னபடி ஸஹஸ்ரார பத்மமானது குலஸங்கேத ஸ்தலம் ஆகிறது.

## कुलाङ्गना
## குலாங்கநா (92)

பாதிவ்ரத்யம் முதலிய குணங்களால் பூர்ணமாக இருக்கும் வம்சத்திற்கு 'குலம்' என்று பேயர். அதைச் சேர்ந்த ஸ்திரீ (குலாங்கனை) யானவள் எப்படி மறைந்து இருப்பாளோ அந்த மாதிரி அவித்யை (யாகிற ஜவனிகை) யினல் மறைக்கப்பட்டவளாகையால் அம்பாளை 'குலாங்கநா' என்று சொல்லப்பட்டது.

1. அம்பாளுடைய உபாஸனையான ஸ்ரீவித்யை மிகவும் ரஹஸ்யமானது என்றும், பிறருக்கு ஸாமான்யமாக வெளியிடப்படாதது என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'அன்யாஸ்து ஸகலா வித்யா: ப்ரகடா கணிகா இவ ।
இயம் து சாம்பவீ வித்யா குப்தா குலவதூரிவ' ॥ (குலார்ணவம்)
வேச்ய இவ ப்ரகடா வேதாதி வித்யா: ஸர்வேஷு
தர்சனேஷு குப்தேயம் வித்யா (கல்பஸூத்ரம்)

## कुलान्तस्था
## குலாந்தஸ்தா (93)

1. ஏற்கனவே சொல்லப்பட்ட 'மாத்ரு, மான, மேய' ரூபமாகிய 'குலம்' என்பதின் நடுவில் 'மான' ரூபமாக இருப்பவள், அல்லது குலசாஸ்த்ர ப்ரகாரம் 'ஞாத்ரு, ஞான, ஞேய' ரூபமாகிய த்ரிபுடியில் 'ஞேய' ரூபமாக இருப்பவள்.

'குலம் ஜநபதே க்ருஹே ।
ஸஜாதீயகணே கோத்ரே தேஹேபி கதிதம் குலம்'

என்றபடி குலம் என்பது நகரம், வீடு, தேஹம், வம்சம் இவைகளைக் குறிக்கும். அந்த அர்த்தத்தில் மேலே சொல்லிய எல்லா இடங்களிலும் பூஜிக்கப்பட்டு இருப்பவள்.

'பூஜநீயா ஜனைர்தேவீ ஸ்தானே ஸ்தானேபுரே,புரே ।
க்ருஹே க்ருஹே சக்திபரை: க்ராமே க்ராமே வனேவனே' ॥
(பவிஷ்யோத்தர புராணம்)

## कौलिनी

## கௌலினீ (94)

'குலம்' என்றால் சக்தி என்றும், 'அகுலம்' என்றால் சிவன் என்றும், அவ்விருவர்களுடைய ஸாமரஸ்யம் (சேர்க்கை) கௌலம் என்றும் சொல்லப்படும். அந்த ரூபமாக இருப்பவள் 'கௌலினீ'.

1. ஸுஷும்னையின் உச்சியில் ஒரு ஸஹஸ்ரதள கமலம் இருப்பதுபோல் அதற்கு அடியிலும் ஒரு (சிகப்பு நிறமுள்ள) ஸஹஸ்ரதள கமலம் இருப்பதாகச் சொல்லப்படும். அதற்கு 'குலம்' என்று பெயர். அதின் இதழ்களில் குல சக்திகள் இருப்பதாகவும், நடுவில் குலதேவியாகிய அம்பாள் இருப்பதாகவும், ஸ்வச்சந்த தந்த்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியிருப்பதால் 'கௌலினீ' என்று பெயர்.

குலம் சக்திரிதி ப்ரோக்தம் அகுலம் சிவ உச்யதே ।
குலே அகுலஸ்ய ஸம்பந்த: கௌலம் இத்யபீயதே ॥

2. பாஹ்யாகாசத்தில் (வெளிப்படையாக) சக்ரத்தை ஏற்படுத்தி அதைப் பூஜை செய்வதான ஸமஸ்த கார்யங்களுக்கும் 'குலம்' எனப்படும். அந்தமாதிரி உபாஸிக்கப்படுகிறதினால் 'கௌலினீ'.

## कुलयोगिनी

## குலயோகினீ (95)

மேலே சொன்ன 'குலம்' என்பதுடன் ஸம்பந்தம் உடையவள்.

## अकुला

## அகுலா (96)

ஸுஷும்னையின் உச்சியில் இருக்கும் ஸஹஸ்ரார பத்மத்திற்கு 'அகுலம்' என்று பெயர். அந்த ரூபத்தை உடையவள். அல்லது அதில் இருப்பவள்.

1. ஆகவே ஸுஷும்னையின் மேலும் கீழும் ஸஹஸ்ரதள பத்மங்கள் இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

இது ஸ்வச்சந்த ஸங்க்ரஹத்தில்,

'அதச்சோர்த்வ: ஸுஷும்ணயா: ஸஹஸ்ரதள ஸம்யுதம் |
பங்கஜத்வயம் ஈசானி குலாகுலமயம் சுபம் ||'

என்கிற ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

2. இன்னொரு அர்த்தத்தில் தேஹம், வம்சம் முதலியவை யில்லாதவள் என்பதால் 'அகுலா'.

**समयान्तस्था**

**ஸமயாந்தஸ்தா** (97)

சிவ சக்திகளுடைய ஸாம்யமான ரூபத்தோடு இருப்பவள்.

1. தஹராகாசத்தில் (அந்தர்முகமாக) சக்ரத்தை பாவனை செய்து அதற்குச் செய்யும் பூஜை முதலிய உபாஸனைகளுக்கு 'ஸமய' என்று பெயர். (பஹிர்முகமாக சக்ரத்தை வைத்துப் பூஜை செய்வது 'குலம்' என்று பெயர் என்பது ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கிறது. ஸமயபதம் அந்தர்முகமான மானஸீக சக்ரபூஜை). அது ஸகல யோகிகளாலும் ஸர்வோத்க்ருஷ்டமான தென்று ஒரே மனதாக நிச்சயிக்கப்பட்டு அனுஷ்டிக்கப்பட்ட தாகையால் ஸமயம் என்று பெயர். இந்த ஸமயமானது 'சுபாகம பஞ்சகம்' 'ஸமய பஞ்சகம்' என்றவஸிஷ்ட, சுக, ஸனக, ஸனந்தன, ஸனத்குமார தந்த்ரங்களில் சொல்லப்பட்டிருக் கிறது. இந்தவிதமான ஸமய பஞ்சகத்தில் சொல்லப்பட்டவள் (ப்ரதிபாதிக்கப்பட்டவள்) 'ஸமயாந்தஸ்தா'.

2. சிவன், சக்தி இவ்விருவர்களும் ஸாம்யமாய்—ஸமான மாயிருப்பதால் சிவனுக்கு ஸமய: என்றும், சக்திக்கு ஸமயா என்றும் பெயர். இந்த ஸாம்யமானது (ஸாம்ய பஞ்சகம்) ஐந்து விதம். சக்ரம் முதலியவைகளின் பூஜையில் ஸமமாக இருப்பது அதிஷ்டான ஸாம்யம், ஸ்ருஷ்டி முதலிய க்ரியைகளில் ஸமமாக இருப்பது அனுஷ்டான ஸாம்யம், ந்ருத்யம் முதலிய க்ரியைகளில் ஸமமாக இருப்பது அவஸ்தான ஸாம்யம், சிவ, சிவா, பைரவ பைரவீ, முதலிய நாமங்களால் நாமஸாம்யம், சிகப்பு நிறம் முத லியவைகளால் ரூபஸாம்யம். இம்மாதிரி சிவ சக்திகளுடைய ஸாம்யமான ரூபத்தோடு இருப்பவள். ['அந்த' என்ற பதத் திற்கு ஸ்வரூபம் என்றும் அர்த்தம்.]

3. ஸ்ரீசக்ரமானது இம்மாதிரி பாஹ்யாகாசம் தஹராகாசம் அந்த இரண்டுவிதமான ஆகாசத்திலும் ஏற்படுத்தி உபாஸனை செய்யப்படுவதால் அதற்கு 'வியத் சக்ரம்' என்றும் பெயர் (வியத்-ஆகாசம்).

## समयाचारतत्परा

## ஸமயாசார தத்பரா (98)

ஸமாயாசாரத்தில் ஈடுபட்டவள். அதாவது மேலேசோல்லிய ஸமயமார்க்கமாக உபாஸனை செய்வதால் ஸந்தோஷம் அடைகிறவள்.

1. இந்த ஸமய மார்க்கத்தினுடைய ஆசார (உபாஸனுக்ரம)மானது ருத்ரயாமளத்தில் பத்து படலங்களில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. பின் வருமாறும் சொல்லப்படும்.

2. ஸாதகனானவன் தீக்ஷையடைந்த பிறகு தன் குருவினுடைய கடாக்ஷத்தால் ஷட்விதைக்ய ஸந்தானம், சதுர்விதைக்ய ஸந்தானம் முதலியவைகளால் பாவனுதார்ட்யம் ஏற்பட்ட பிறகு மஹாநவமியில் 'மஹாவேதா' என்ற ஸம்ஸ்காரம் பெற்றபின்,

> ஸுதாப்தௌ நந்தனோத்யானே ரத்னமண்டப மத்யகாம் |
> பாலார்க மண்டலாபாஸம் சதுர்பாஹாம் த்ரிலேசானும் ||
> பாசாங்குச சராம்ச்சாபம் தாரயந்தீம் சிவாம் ச்ரியம் |
> த்யாத்வாச ஹ்ருத்கதம் சக்ரம் வ்ரதஸ்த: பரமேச்வரீம் ||
> பூர்வோக்த த்யானயோகேன ஸஞ்சிந்த்ய ஜபமாசரேத்' |

என்று சொல்லப்பட்டபடி அம்பாளை த்யானம் செய்யும் போது, அம்பாளான குண்டலினீ சக்தியானவள் மேலே சொல்லியபடி மூலாதார பத்மத்திலிருந்து கிளம்பி, அதையும் ஸ்வாதிஷ்டான சக்ரத்தையும் பேதித்து, மணிபூர சக்ரத்தில் ப்ரத்யக்ஷமாவாள். அங்கே அவளை அர்க்யம், பாத்யம் முதல் பூஷணம் வரையிலுள்ள உபசாரங்களைச்செய்து அனாஹத சக்ரத்திற்கு அழைத்துவந்து, அங்கே தூபம் முதல் தாம்பூலம் வரையிலுள்ள உபசாரங்களைச்செய்து விசுத்தி சக்ரத்திற்கு அழைத்துவந்து, அங்கே ஸிம்ஹாஸனத்திலிருக்கச்செய்து, சந்த்ரகலா ரூபமான சுத்த ஸ்படிக நிறமுடைய மணிகளால் பூஜித்து, அங்கிருந்து ஆக்ஞா சக்ரத்திற்கு அழைத்துவந்து, நீராஜனம் செய்து,

அங்கிருந்து ஸஹஸ்ரார கமலத்திற்கு அழைத்துவந்து, அங்கே நடுவிலிருக்கும் சித்சந்த்ர மண்டலத்தில் ஸதாசிவருடைய ஸமீபம் சேர்ப்பித்து, அவர்களைச்சுற்றி படுதாவைப்போட்டு தான் ஸமீபத்திலிருந்துகொண்டு, அம்பாள் அங்கிருந்து திரும்பவும் மூலாதார கமலத்திற்கு வரும் ஸமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருப்பது என்பது ஸமாயாசார ரஹஸ்யம். இதின் ஸூக்ஷ்மங்களை குருமுகமாகத் தெரிந்துகொள்ள வேண்டியது.

3. இவ்விதமான ஸமயாசார உபாஸனையைப்பற்றி ஆசார்யாளுடைய 'ஸௌந்தர்யலஹரி'யிலும், அதற்கு லக்ஷ்மீதரர் இயற்றிய பாஷ்யத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. பின்வரும் நாமங்களிலும் குண்டலினீ சக்தியானவள் மேல் நோக்கிக் கிளம்பி ஸஹஸ்ரார கமலம் அடைந்து அம்ருதஸ்ராவம் செய்வது முதலிய மேலே சொல்லிய விஷயங்கள் வர்ணிக்கப்படுகின்றன.

## मूलाधारैकनिलया

## மூலாதாரைக நிலயா (99)

மூலாதாரத்தில் முக்யமான ஸ்வபாவமான இருப்பிடத்தை உடையவள்.

1. சரீரத்தில் மேருதண்டம் என்று சொல்லப்படும் முதுகு எலும்பில் ஸுஷும்னா என்ற நாடி இருப்பதாகவும், அதன் அடிஸ்தானத்திலிருந்து கடைசிக்குள் ஆறு சக்ரங்கள் இருப்பதாகவும் சொல்லப்படும். அடியிலிருந்து சொல்லுகையில் மூலாதாரம் என்பது குதஸ்தானம், லிங்கஸ்தானம் இவைகளுக்கு நடுவிலும், ஸ்வாதிஷ்டானம் என்பது லிங்கத்தின் மூலப்ரதேசத்திலும், மணிபூரம் என்பது நாபிப்ரதேசத்திலும், அனுஹதம் என்பது ஹிருதய ப்ரதேசத்திலும், விசுத்தி என்பது கண்டப்ரதேசத்திலும், ஆக்ஞா என்பது புருவங்களின் மத்தியப்ரதேசத்திலும் இருப்பதாகச் சொல்லப்படும். [இவை ஆறுக்கும் மேல் ஸஹஸ்ரார சக்ரம் இருக்கிறது.] இவைகளை பத்மம் என்றும் கமலம் என்றும் சொல்வதும் வழக்கம். இந்த ஆறு சக்ராத்மகமான ப்ரதேசத்தை குலம் என்றும் சொல்லப்படும். 'மூலா தாராதிகம் சக்ர ஷட்கம் குலமிதி ஸ்மிருதம்.' இவைகள் வகையே இரண்டு இரண்டு ஒரோர்கண்டமாகச்சொல்லப்படும். ஒரோர்கண்டத்தின்

மேல் ஒரு கிரந்தி (முடிச்சு) இருக்கிறது. இந்த கண்டங்கள் அக்னி, ஸூர்ய, சந்த்ராத்மகமானவை. முதல் கண்டமாகிய அக்னி கண்டத்தில் மூலாதாரம், ஸர்வாதிஷ்டானம் இவை யிரண்டும் அடங்கியவை. அதற்குமேல் இருக்கும் முடிச்சு ப்ரும்ஹ கிரந்தி என்று பெயர், அக்னி ஸ்தானம். அதற்கு அடுத்த கண்டமாகிய ஸூர்யகண்டத்தில், மணிபூரம், அனாஹதம், இவை யிரண்டும் அடங்கியவை. அதற்குமேல் இருக்கும் முடிச்சுக்கு விஷ்ணு க்ரந்தி என்று பெயர், ஸூர்ய ஸ்தானம். அதற்குமேல் இருக்கும் கண்டமாகிய சந்த்ர (ஸோம) கண்டத்தில் விசுத்தி, ஆக்ஞா இவையிரண்டும் அடங்கியவை. அதற்குமேலிருக்கும் முடிச்சுக்கு ருத்ர க்ரந்தி என்று பெயர், ஸோமஸ்தானம். அதற்குமேல் ஸஹஸ்ரார பத்மம். அது இருக்கும் கண்டத்திற்கு துரீய கண்டம் என்று பெயர். இதேமாதிரி விபாகம் ஷோடசீ மந்த்ரத்திற்கும் உண்டென்றும், வாக்பவம், காமராஜம், சக்தி இந்த மூன்று கூடங்களும் அக்னி, ஸூர்ய, ஸோமகண்டங்களாகவும், ஷோடசியின் துரீய கூடத்தை துரீய கண்டமாகவும் மூன்று ஹ்ருல்லேகைகளை மூன்று க்ரந்திகளாகவும் சொல்லப் படும். இதினுடைய மற்ற விபரங்கள் ரஹஸ்யமாகையால் குருமுகமாகத் தெரிந்துகொள்ளவேண்டியவை. சில பின்னால் வரும் 475, 534 நாமங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன.

2. மூலாதார பத்மம் என்பது நாலு இதழ்களுடன் கூடியது. அதில் இருக்கும் கர்ணிகையின் நடுவில் குல குண்டம் என்று சொல்லப்பட்ட பிந்துவில் தன் முகத்தை மறைத்துக் கொண்டு (அம்பாள் ரூபமான) குண்டலினீ சக்தியானது எப் போதும் உரங்கிக்கொண்டிருப்பதாக ஏற்கனவே சொல்லப்பட் டிருக்கிறது.

3. ஆகவே மூலாதாரத்தில், ஏக - முக்யமான ஸ்வபாவ மான, நிலயா - இருப்பிடத்தை உடையவள்.

4. குண்டலினீ சக்திக்கு ஆதார (இருப்பிட)மாக இருப்ப தாலும் ஸுஷும்னையின் மூலமாக இருப்பதாலும் மூலாதாரம் என்று பெயர்.

**ब्रह्मग्रन्थिविभेदिनी**

**ப்ரும்ஹ க்ரந்தி விபேதிநீ** (100)

மேலே சொல்லிய ப்ரும்ஹ க்ரந்தி என்பதை பேதனம் செய்து (பிளந்துகொண்டு) மேலே வந்தவள்.

1. *இந்த நாமம் முதல், ஏற்கனவே சொல்லியபடி குண்டலினீ சக்தியானவள் ஷட் சக்ரங்களேயும் மூன்று க்ரந்திகளேயும் பேதனம் செய்து, ஸஹஸ்ராரம் வந்து, அம்ருதவர்ஷம் செய்வது முதலியவை சொல்லப்படுகின்றன.*

**मणिपूरान्तरुदिता**

**மணிபூராந்தருதிதா** (101)

மணிபூரபத்மமானது பத்து தளமுடையது. ஸமய பூஜையில் அங்கே அம்பாளை மணிகளால் (ரத்னங்களால்) அலங்காரம் செய்யப் படுவதால் அதற்கு மணிபூரம் என்று பெயர். அதில் அம்பாள் ஆவிர்ப்பவிப்பதால் மணிபூராந்தர் உதிதா.

**विष्णुग्रन्थिविभेदिनी**

**விஷ்ணுக்ரந்தி விபேதிநீ** (102)

மேலேசொல்லிய விஷ்ணுக்ரந்தியை பேதநம் செய்பவள்.

**आज्ञाचक्रान्तरालस्था**

**ஆக்ஞா சக்ராந்தராளஸ்தா** (103)

*ஆக்ஞா சக்ரபத்மமானது இரண்டு தளமுடையது. ஆக்ஞை செய்பவராகிய ஸ்ரீ குருவின் ஸ்தானமாகையால் அதற்கு அப் படிப் பெயர். மேலும் அதுவரையில் செய்யப்பட்ட மனோ நிக்ரஹத்தினல் ஈஷத் (கொஞ்சம்) ஞானம் ஏற்படுவதால் ஆக்ஞா என்றும் பெயர்.* அதினுடைய அந்தராளத்தில் (அதற்குள்) இருப் பதினல் ஆக்ஞா சக்ராந்தராளஸ்தா.

**रुद्रग्रन्थिविभेदिनी**

**ருத்ர க்ரந்தி விபேதிநீ** (104)

மேலே சொல்லிய ருத்ரக்ரந்தியை பேதநம் செய்பவள்.

இந்த மூலாதார, ஸ்வாதிஷ்டான, மணிபூர, அநாஹத, விசுத்தி, ஆக்ஞா சக்ரங்கள் முறையே ப்ருதிவீ, அப்பு (ஜலம்), அக்னி, ஸூர்யன், வாயு, ஆகாசம் இவைகளின் ரூபமாகவும், அக்னி கண்டத்தை ப்ரும்ஹக்ரந்தியென்றும், ஸூர்ய கண்டத்தை விஷ்ணுக்ரந்தியென்றும், ஸோமகண்டத்தை ருத்ரக்ரந்தியென்றும், சொல்லப்பட்டிருக்கிறது.

ப்ருதிவ்யாப்ய சக்ர த்விதயம் ப்ரும்ஹக்ரந்தி பதோதிதம் |
வன்ஹிஸூர்யமயம் சக்ர த்வயம் தேஜோமயம் மஹத் |
விஷ்ணுக்ரந்தி பதேனோக்தம் தைஜஸம் ஸர்வஸித்திதம் ||
வாய்வாகாசத்வயீ ரூபம் சக்ரத்விதயம் உத்தமம் |
ருத்ரக்ரந்தி பதேனோக்தம் மங்களாயதனம் மஹத் ||

(தத்தாத்ரேய ஸம்ஹிதை)

## सहस्राराम्बुजारूढा

## ஸஹஸ்ராராம்புஜாரூடா (105)

ஸஹஸ்ர (கணக்கில்லாத) தளங்களையுடையது ஸஹஸ்ரார பத்மம். ப்ரும்ஹ ரந்த்ரத்தின் கீழ் இருப்பது. அந்த பத்மத்தின் மேல் எழுந்தருளியிருப்பவள் (அங்கு வரும்படி செய்யப்பட்டவள்.)

## सुधासाराभिवर्षिणी

## ஸுதா ஸாராபி வர்ஷிணீ (106)

மேலே சொல்லியபடி ஸஹஸ்ரார பத்மத்தின் நடுவிலிருக்கும் சந்த்ரமண்டலத்திலிருந்து அம்ருதத்தை (ஸமஸ்த நாடிகளிலும்) பெருகும்படி செய்கிறவள்.

ஸுதாதாரா ஸாரை: சரணயுகளாந்தர் விகளிதை:
ப்ரபஞ்சம் ஸிஞ்சந்தீ.................. (ஸௌந்தர்யலஹரீ)

1. இம்மாதிரி அம்ருதப்ரவாஹம் ஆவதைப்பற்றி

:அம்ருதஸ்ய தாரா பஹுதா தோஹமானம் |
சரணம் நோ லோகே ஸுதிதாம் ததாது' |

என்றும் ச்ருதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது. 2. 'ஸுதா தாராபிவர்ஷிணீ' என்றும் இந்த நாமம் சொல்லப்படும்.

## तटिल्लतासमरुचिः

## தடில்லதாஸமருசி: (107)

மின்னல் கொடிக்கு ஸமமான காந்தியுள்ளவள்.

'வித்யுல்லேகேவபாஸ்வரா' என்று ச்ருதி.

## षट्चक्रोपरि संस्थिता

## ஷட்சக்ரோபரி ஸம்ஸ்திதா (108)

ஏற்கனவே சொல்லப்பட்ட ஆறு சக்ரங்களுக்கும் மேல் (ஸஹஸ்ரார பத்மத்தில்) வீற்றிருப்பவள்.

## महासक्तिः

## மஹாஸக்தி: (109)

'மஹ' என்றால் உத்ஸவம் என்று அர்த்தம். அதில் ஆஸக்தி (அதிக ப்ரியம்) உடையவள்.

இங்கே உத்ஸவம் என்று சொல்லப்பட்டது சிவசக்தி ஸமா யோகம்.

1. இம்மாதிரி ஷட்சக்ரபேதனம் செய்து ஸஹஸ்ரார பத்மத்திற்கு குண்டலினீ ரூபமான அம்பாள் வந்தவுடன், அங்கிருக்கும் தன் பதியாகிய பரமசிவனை அடைந்து, அவருடன் க்ரீடித்துக் கொண்டிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

மஹீம் மூலாதாரே கம் அபி மணிபூரே ஹுதவஹம்
ஸ்திதம் ஸ்வாதிஷ்டானெ ஹ்ருதி மருதம் ஆகாசம் உபரி ।
மனோபி ப்ரூமத்யே ஸகலமபி பித்வா குலபதம்
ஸஹஸ்ராரே பத்மே ஸஹ ரஹஸி பத்யா விஹரஸே ॥
(ஸௌந்தர்யலஹரீ)

'வரேண பும்ஸா, ஸங்கம்ய ஸங்கம்ய ரஸம் ப்ரஸூதே'
(வரிவஸ்யா ரஹஸ்யம்)

## कुण्डलिनी

## குண்டலினீ (110)

குண்டலினீ ஸ்வரூபாக இருப்பவள். குண்டலினீ சக்தியானவள் மூன்றரைச் சுற்று (குண்டலங்) களுடைய ஸர்ப்பம் போன்ற வடிவமுடையவள்.

1. மூலாதாரத்திலிருக்கையில் தூங்கிக்கொண்டிருக்கும் ஸர்ப்பம்போல் ச்வாஸம் விட்டுக்கொண்டிருப்பவள். ஜீவசக்தியான குண்டலினியின் இந்த ச்வாஸம் தான் ப்ராணன். இரு காதுகளையும் அழுத்தி மூடிக்கொண்டால் இந்த ச்வாஸத்தின் சப்தமானது கேட்குமென்றும் அப்படிக் கேட்காதிருந்தால் மரணம் ஸமீபித்துவிட்டதற்கு அடையாளமென்றும் சொல்லப் பட்டிருக்கிறது.

மூலாதாரஸ்த வன்ஹ்யாத்ம தேஜோ மத்யே வ்யவஸ்திதா ।
ஜீவசக்தி: குண்டலாக்யா ப்ராணகாரா அத தைஜஸீ ॥
ப்ரஸுப்த புஜகாகாரா த்ரிராவர்த்தா மஹாத்யுதி: ।
மாயா சீர்ஷா நதந்தீம் தாம் உச்சரத் யனிசம் கசே ॥
ஸூக்ஷ்மை மத்யதேசே ஸா யதி கர்ணத்வயஸ்ய து ।
பிதாய ந ச்ருணோத்யேனம் த்வனிம் தஸ்ய ததா ம்ருதி: ॥

(தந்த்ர ராஜம்)

3. வாக்பவ பீஜத்திற்கும் குண்டலினீ என்று பெயராகை யால் அந்த ரூபமாக இருப்பவள்.

## बिसतन्तुतनीयसी

## பிஸதந்து தனீயஸீ (111)

தாமரைத் தண்டிலிருக்கும் நூல் போன்ற மெல்லியதான ஆக்ருதியை உடையவள்.

1. 'நீவார சூகவத் தன்வீ பீதா பாஸ்வத்யணூபமா என்று ச்ருதி. இம்மாதிரி 'குலாம்ருதை ரஸிகா' என்ற நாமம் முதல் இந்த நாமம் வரையில் குண்டலின்யாத்மகமான அம்பாளுடைய ஸூக்ஷ்மதம ரூபத்தை வர்ணிக்கப்பட்டது. எல்லாம் வாமகேச்வ தந்த்ரத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

புஜங்காகார ரூபேண மூலாதாரம் ஸமாச்ரிதா ।
சக்தி: குண்டலினீ நாம பிஸதந்து நிபா சுபா ॥
மூலகந்தம் பணக்ரேண தம்ஷ்ட்ரா கமல கந்தவத் ।
முகேன புச்சம் ஸம்க்ருஹ்ய ப்ருஹ்மரந்த்ரம் ஸமாச்ரிதா ॥
பத்மாஸன கதஸ் ஸ்வஸ்த்தோ குதம் ஆகுஞ்ச்ய ஸாதக: ।
வாயும் ஊர்த்வகதம் குர்வன் கும்பகாவிஷ்ட மானஸ:
வாய்வாகாத வசாத் அக்னி: ஸ்வாதிஷ்டான கதோ ஜ்வலன் ।
ஜ்வலனாகாத பவன காதை: உன்னித்ரிதோ அஹிராட் ॥
ப்ருஹ்மக்ரந்திம் ததோ பித்வா விஷ்ணுக்ரந்திம் பினத்யத: ।
ருத்திர க்ரந்திம் விபித்யைவ் கமலானி பினத்தி ஷட் ॥
ஸஹஸ்ர கமலே சக்தி: சிவேந ஸஹ மோததே ।
ஸா ச அவஸ்தா பரா ஞேயா ஸைவ நிர்வ்ருதி காரணம் ॥

2. குண்டலினீ சக்தியானவள் மூலாதாரத்திலிருந்து கிளம்பும்போது பிறந்த குழந்தைபோல் சப்தம் செய்வதால் அங்கே குமாரீ, என்றும், அநாஹத சக்ரத்திற்கு மேலிருக்கும்

ஸூர்ய ஸ்தானத்திற்குப் போகும்போது அங்கே இருக்கும் உஷ்ணத்தினால் பக்குவமாகி தருந்த வயதுள்ளவளாய் (தருணியாய்) இருப்பதால், அங்கே தருணீ என்றும், ஸஹஸ்ரார பத்மத்தில் தன் பதியாகிய பரமசிவனை அடைவதால் அங்கே பதிவ்ரதை என்றும், சொல்லப்படுவது வழக்கம்.

யத் குமாரீ மந்த்ரயதே யத் யோஷித் யத் பதிவ்ரதா |
அரிஷ்டம் யத் கிம் ச க்ரியதே அக்னிஸ் தத் அனுவேததி ||

(தைத்திரீய ஆரண்யகம்)

## भवानी
## பவானீ

(112)

1. 'பவ' என்றால் மஹாதேவர், ஸம்ஸாரஸாகரம், மன்மதன் என்று அர்த்தம். இவர்களுக்கு (ஆனயதி) உயிரைக் கொடுப்பதால் பவானீ என்று அம்பாளுக்குப் பெயர்.

ருத்ரோ பவோ பவ: காமோ பவ: ஸம்ஸாரஸாகர: |
தத் ப்ராணனாத் இயம் தேவீ பவானீ பரிகீர்த்திதா ||

(தேவீ புராணம்)

2. பரமசிவன் ஸமஸ்த ப்ராணிகளையும் உண்டுபண்ணி ரக்ஷிப்பதால் பவ என்று பெயர்.

'பவனாத் பாவனாத் சைவ பூதானாம் ஸ பவ: ஸ்ம்ருத:'

3. பரமசிவனுடைய அஷ்ட மூர்த்திகளில் ஜல மூர்த்தியானவர் பவர். அவருடைய பத்னீ பவானீ. (பவஸ்ய தேவஸ்ய பத்னீ).

4. 'தஸ்மாத் ஆபோ பவ: ஸம்ருதா' என்றபடி பவ என்று ஜலத்திற்குப் பெயர். ஜீவன ரூபமான ஜலத்திற்கு உயிரைக் கொடுப்பவள். பவானீ.

5. ஸ்தானேச்வர க்ஷேத்திரத்திலிருக்கும் அம்பாளுக்கு 'பவானீ' என்று பெயர். அந்த ரூபமாக இருப்பவள்.

6. 'பவானீ' என்பதற்கு "நான் ஆவேனாகவும்" என்று அர்த்தம். பக்தன் அம்பாளைப் பார்த்து 'பவானீ'! த்வம் (நீ,) உன்னுடைய தாஸன் ஆகிய என்மீது கருணையான பார்வையை செலுத்தக் கூடாதா என்று சொல்ல ஆரம்பித்து 'பவானித்வம்' என்ற முதல் இரண்டு வார்த்தைகளைக் கேட்டவுடனேயே

அம்பாள், இதென்ன இவன் நாமாக ஆவேனுகவும் என்ற மஹா வாக்கியத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிருனே என்று நினைத்து: பரம கருணை தோன்றி அப்போது அவனுக்கு ப்ரும்ஹாதிகளுக்கெல்லாம் கிடைப்பதற்கரிய தன்னுடைய ஸாயுஜ்ய பதவியைக் கொடுக்கிருள் என்று ஆசார்யாள் வர்ணித்திருக்கிருர்கள்.

பவானி த்வம் தாஸே மயி விதர த்ருஷ்டிம் ஸகருணம்
இதி ஸ்தோதும் வாஞ்சன் கதயதி பவானி த்வம் இதி ய: |
ததைவ த்வம் தஸ்மை திசஸி நிஜஸாயுஜ்ய பதவீம்
முகுந்த ப்ரும்ஹேந்த்ர ஸ்புட மகுட நீராஜித பதாம் ||
(ஸௌந்தர்யலஹரி)

இம்மாதிரி அம்பாளுடைய ஸ்தூல, பர, ஸூக்ஷ்ம, ஸூக்ஷ்மதர, ஸூக்ஷ்மதமமாகிய ரூப பஞ்சகத்தை வர்ணித்துவிட்டு அதை அடையும் உபாயங்கள் சில நாமங்களால் சொல்லப்படுகின்றன.

## भावनागम्या
## பாவநாகம்யா (113)

பாவனையினுல் அடையக்கூடியவள்.

1. இம்மாதிரி பாவனை மூலமாக அம்பாளை உபாஸனைசெய்யக்கூடிய வழியை 'பாவநோபநிஷத்' திலும் அதற்கு பாஸ்கரராயர் இயற்றிய பாஷ்யத்திலும் சொல்லியிருப்பதைப்பார்க்கவும்.

2. பாவனை என்பது சப்தத்தைப் பற்றியது என்றும் அர்த்தத்தைப்பற்றியது என்றும் இரண்டுவிதம். சப்த ஸம்பந்தமான பாவனையானது குருவினுடைய உபதேசப்ரகாரம் வைதிக மந்த்ரங்களால் உபாஸிப்பது. அந்த ஸம்பந்தமான பாவனையானது ப்ரவ்ருத்தி, அவைகளினுடைய அர்த்தத்தை அனுஷ்டானம் பண்ணுவதைப் பொறுத்தது. இதைப்பற்றி பாஸ்கரராயருடைய 'வாதகௌதூஹலம்' என்ற க்ரந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

3. இன்னும் ப்ராம்ஹீ, மாஹேச்வரீ அக்ஷர பாவனைகள் என்று மூன்று விதமாகவும், ஸகளம், ஸகளநிஷ்களம், நிஷ்களம் என்று மூன்றுவிதமாகவும் பிரித்துச் சொல்லப்படும். இவைகளின் விபரங்களை தீக்ஷிதர்வாளுடைய 'ரத்னத்ரய பரீக்ஷயி' லும் 'யோகினீ ஹ்ருதய'த்திலும் காணலாம்.

4. 'பாவனா' என்பதற்கு கர்ம மார்க ப்ரவ்ருத்தி என்று அர்த்தம். 'அகம்யா' என்பதாகப் பிரித்து, அதினால் அடைய முடியாதவள் என்றும், 'கம்யா' என்று பிரித்து கர்மமார்க ப்ரவ்ருத்தியினால் ஏற்படும் சித்த சுத்தியினால் அடையக்கூடியவள் என்றும் சொல்லலாம்.

5. 'பாவனா தார்ட்யாத் ஆக்ஞா ஸித்தி:' என்று கல்ப ஸூத்திரத்தில் சொல்லியபடி த்ருடமான பாவனையினால் அம்பாளுடைய ஸாக்ஷாத்காரம் ஏற்படும் என்று அர்த்தம்.

## भवारण्यकुठारिका

### பவாரண்ய குடாரிகா (114)

பவ (ஸம்ஸாரமாகிற) ஆரணியத்திற்கு கோடாலிபோன்றவள்.

காடானது மேலுக்குமேல் முளைக்கும் மரங்களுடன் அடர்ந்து இருப்பதுமாதிரி, ஸம்ஸாரம் என்பது ஓயாமல் ஏற்பட்டுக்கொண்டு கஷ்டமான அனுபவத்தோடுகூடியிருப்பதால் காட்டுக்கு ஸமானமாகச் சொல்லப்பட்டது. அம்பாளுடைய ஞானம் ஏற்பட்டால் ஸம்ஸாரபந்தம் அற்றுவிடும் என்று அர்த்தம்.

## भद्रप्रिया

### பத்ரப்ரியா (115)

மங்களத்தில் ப்ரியமுள்ளவள், அதாவது பக்தர்களுக்கு ஸமஸ்த மங்களங்களையும் கொடுப்பதில் ப்ரியமுள்ளவள்.

## भद्रमूर्तिः

### பத்ர மூர்த்தி: (116)

மங்களமான ரூபத்தை உடையவள்.

'ப்ரும்ஹ தன் மங்களம் விது:' என்று விஷ்ணு புராணத்திலும், 'மங்களானாம் ச மங்களம்' என்று பாரதத்திலும் சொல்லப்பட்டபடி, அம்பாள் ஸர்வ விதமான மங்களங்களுக்கும் இருப்பிடம், 'மங்களாயதனம்'.

## भक्तसौभाग्यदायिनी

### பக்த ஸௌபாக்யதாயினீ (117)

பக்தர்களுக்கு ஸகலவிதமான ஸௌபாக்கியத்தையும் கொடுப்பவள்.

1. 'பகம்' என்றால் ஸ்ரீ, காம, மாஹாத்ம்ய, வீர்ய, யத்ந, அர்க (ப்ரகாசம்), கீர்த்தி இவைகளுக்குப் பெயர். இவைகளுக்கெல்லாம் லலிதாம்பாள் இருப்பிடமாகையால் 'ஸுபகா' என்று பெயர். அவளுடைய தன்மை 'ஸௌபாக்யம்.'

2. மங்களகரமான கார்யங்களில் உபயோகப்படுத்துவதால்,

இக்ஷவஸ் தருராஜஸ் ச நிஷ்பாவா ஜீர தான்யகே |
விகாரவத் ச கோக்ஷீரம் கௌஸும்பம் குஸுமம் ததா |
லவணம் ச அஷ்டமம் தத்வத் ஸௌபாக்யாஷ்டகம் உச்யதே ||'

என்று அக்னி புராணத்தில் சொல்லியபடி கரும்பு, அச்வத்த வ்ருக்ஷம், முளைவிட்ட ஜீரகம், கொத்துமல்லி இரண்டும், பசும்பால் (அதின் பேதங்களான தயிர், வெண்ணெ, நெய்உள்பட) மஞ்சள் நிறமான வஸ்துக்கள் புஷ்பம், உப்பு இவை எட்டுக்கும் 'ஸௌபாக்யாஷ்டகம்' என்று சொல்லப்படும்.

3. ஸுஷ்டு = சிறந்த, பாக்கியம் = நியதி:, அதிருஷ்டம், அதை உடைய பாவம் 'ஸௌபாக்கியம்' அதை பக்தர்களுக்குக் கொடுப்பவள். அதாவது பக்தர்களுக்கு எதிர்பார்க்காத ஐச்வர்யங்களைக் கொடுப்பவள்.

## भक्तिप्रिया
## பக்திப்ரியா (118)

பக்தியில் ப்ரியமுள்ளவள்.

அதாவது பக்தியால் உபாஸனை செய்தால் அம்பாளுடைய ப்ரியம் ஏற்படும் என்று அர்த்தம்.

1. பக்தி என்பது முக்யம், ஸாமான்யம் (கௌணம்) என்று இருவகை. முக்ய பக்தி என்பது ('ஸா பரானுரக்திரீச்வரே' என்று பக்தி ஸூத்ரத்தில் சொல்லியிருப்பதுபோல்) ஈச்வரனிடத்தில் அனுராகம் என்ற சித்த விருத்தியோடு கூடியிருப்பது. இதைப்பற்றி சொல்லும்போது, அழிஞ்சில் மரத்தின் விரையானது தாய் மரத்தையும், ஊசியானது காந்தத்தையும், பதிவ்ரதையானவள் தன் பதியையும், கொடியானது மரத்தையும், நதியானது ஸமுத்ரத்தையும், ஸ்வபாவமாக வந்தடைவதுபோல், மனதானது பரமாத்வை அடைவது தான்

பக்தி என்று ஆசார்யாள் 'சிவானந்த லஹரி'யில் சொல்லியிருக்கிறார்கள்.

அங்கோலம் நிஜபீஜஸந்ததி: அயஸ்காந்தோபலம் ஸூசிகா
ஸாத்வீ நைஜவிபும் லதா க்ஷிதிருஹம் ஸிந்துஸ்ஸரித்வல்லபம் |
ப்ராப்னோதீஹ யதாததா பசுபதே: பாதாரவிந்தத்வயம்
சேதோவ்ருத்திருபேத்ய திஷ்டதிஸதா ஸா பக்திரித்யுச்யதே |

2. ஸாமான்ய பக்தி என்பது ஸேவாரூபமான பக்தி. இது ஸ்மரணம், கீர்த்தனம் முதலிய பலவகைப்பட்டது. எட்டு விதம் என்ற கருட புராணத்திலும், ஒன்பதுவிதமென்று பாகவதத்திலும், பத்துவிதமென்று ப்ருகன்னாரதீயத்திலும் இம்மாதிரியாக பலவகையாகச் சொல்லப்படும்.

ச்ரவணம் கீர்த்தனம் விஷ்ணோ: ஸ்மரணம் பாதஸேவனம் |
அர்ச்சனம் வந்தனம் தாஸ்யம் ஸக்யம் ஆத்மநிவேதனம் ||

## भक्तिगम्या
## பக்திகம்யா (119)

பக்தியோடு உபாஸனை செய்வதால் ப்ரத்யக்ஷமாகிறவள், அல்லது பக்திமார்க்கத்தால் அடையக்கூடியவள்.

1. பரமாத்மாவை ஸாதாரணமாக நேரிடப்பார்க்க முடியாத போதிலும் பக்தியினுடைய உறுதியால் பரமாத்மாவின் ஸ்வரூபத்தைப் பார்க்கலாமென்று அநேக இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

'பராஞ்சி கானி வ்யத்ருணத் ஸ்வயம்பூ:
தஸ்மாத் பராக் பச்யந்தி நாந்தராத்மன் |
கச்சித் தீர: ப்ரத்யகாத்மானம் ஐக்ஷத்
ஆவ்ருத்தசக்ஷு: அம்ருதத்வமிச்சன் || (ச்ருதி)
'யோகினஸ்தம் ப்ரபச்யந்தி பகவந்தம் ஸநாதனம்'
'பக்த்யாது அனன்யயா சக்ய: அஹம் ஏவம் விதோ அர்ஜுன |
ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேன ப்ரவேஷ்டும் ச பரந்தப ||
(கீதை)

2. பக்தி என்பது ஒரு மார்க்கமாக (வழியாக) இருப்பதால் அந்த வழியாகப்போனால் அடையக்கூடிய (கம்யமான) இடமாகிற அம்பாளை 'பக்திகம்யா' என்று சொல்லப்பட்டது.

3. பக்தி என்பதற்கு லக்ஷணம் என்று அர்த்தம். இந்த விதத்தில் 'பக்திகம்யா' என்றால் உள்ளபடியாகத் தெரியாததாக இருந்தாலும் லக்ஷணங்களினால் அறியக்கூடிய ஸ்வரூபத்தை உடையவள் என்று அர்த்தம். ப்ரும்ஹத்தைச் சொல்லும் ஸத்யம், ஞானம் முதலிய பதங்கள் ப்ருஹ்மத்தினுடைய லக்ஷணங்களைச் சொல்லுகின்றனவே தவிர, உண்மையான ரூபத்தைச் சொல்லவில்லை. அதனால்தான் லலிதாத்ரிசதியில் அம்பாளை "லக்ஷணா கம்யா" என்று சொன்னது.

4. இவ்விதமாக 'கம்யா' என்ற பதத்திற்கு ப்ரத்யக்ஷமாகிறவள், அடையப்படுகிறவள், அறியப்படுகிறவள் என்று மூன்றுவிதமான அர்த்தம்.

## भक्तिवश्या

## பக்திவச்யா (120)

பக்திக்குக் கட்டுப்பட்டவள், அல்லது பக்தியினால் வசமாகக் கூடியவள், பக்தபராதீனா.

1. பக்தியினுடைய பெருமையைப்பற்றி ஆசார்யாள் சிவானந்த லஹரியில் சொல்லும்போது, கண்ணப்பநாயனார் பரமசிவனை பூஜைசெய்கையில் செருப்பை பூஷணமாகவும், உமிழ் நீரை அபிஷேக ஜலமாகவும், எச்சில் பண்ணப்பட்ட மாம்ஸத்தை நிவேதனமாகவும், உபயோகப்படுத்தியிருந்தும் அவர் ஒன்று மறியாத வேடனாயிருந்தும், அவர் உண்மையான பக்தியோடு கூடியிருந்தபடியால், அவர் செய்த அபசாரமான கார்யங்களை பரமசிவன் உத்க்ருஷ்டமாக ஏற்றுக்கொண்டு அவருக்குப் ப்ரத்யக்ஷமானது, பக்தியின் மஹிமையையும் அதற்கு ஈச்வரன் கட்டுப்படுவதையும் காட்டுவதாகச் சொல்லியிருக்கிறார்.

'மார்காவர்த்தித பாதுகா பசுபதே: அங்கஸ்ய கூர்ச்சாயதே
கண்டூஷாம்பு நிஷேசனம் புரரிபோ: திவ்யாபிஷேகாயதே ।
கிஞ்சித் பக்ஷிதமாம்ஸசேஷ கபளம் நவ்யோபஹாராயதே
பக்தி: கிம் ந கரோத்யஹோ வனசரோ பக்தாவதம்ஸாயதே ॥

2. உண்மையான பக்திமட்டும் ஒருவனுக்கிருக்குமேயாகில், பகவான் அவனிடம் எந்தக் குறைவு இருந்தாலும் அதை கவனியாது அவனுக்கு அனுக்ரஹம் செய்வாரென்று சொல்லப் பட்டிருக்கிறது.

'வ்யாதஸ்ய ஆசரணம் த்ருவஸ்யசவய: வித்யா கஜேந்த்ரஸ்ய கா
கா ஜாதி: விதுரஸ்ய யாதவபதே: உக்ரஸ்ய கிம் பௌருஷம் ।
குப்ஜாயா: கமனீயரூபம் அதிகம் கிம் தத்ஸுதாம்னோ தனம்
பக்த்யா துஷ்யதி கேவலம் நது குணை: பக்திப்ரிய: கேசவ: ॥

## भयापहा

## பயாபஹா (121)

பயத்தைப் போக்குகிறவள்.

எந்தக் காரணத்தால் பயமேற்பட்டாலும் அம்பாளை ஸ்மரணம் செய்து அம்பாளுடைய நாமாவைச் சொன்னால், அதிலிருந்து நிவாரணம் செய்கிறாள் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

'அரண்யே ப்ராந்தரே வாபி ஜலே வாத ஸ்தலேபிவா ।
வ்யாக்ர கும்பீர சோரேப்ய: பயஸ்த்தானே விசேஷத: ।
ஆதிஷ்வபி ச ஸர்வேஷு தேவீநாமானி கீர்தயேத் ॥

ப்ருஹ்மானந்தத்தை அடைந்தவனுக்கு ஒருவிதமான பயமும் இல்லையென்று ச்ருதிவாக்யம்.

'ஆனந்தம் ப்ருஹ்மணோ வித்வான் ந பிபேதி குதச்சன'

3. ஸம்ஸாரமே பயங்கரமானது என்றும், அதிலிருந்து அம்பாள் விடுவிக்கிறாள் என்றும் அர்த்தம்.

ஸம்ஸார ஸிந்தோர் விதே:

'பீதம் மாம் நிதராம் அனன்ய சரணம் ரக்ஷ அனுகம்பாநிதே |
ப்ரஸீத பரதேவதே மமஹ்ருதி ப்ரபூதம் பயம், விதாரய,

(தேவீமஹிம்நஸ்தோத்ரம்)

## शांभवी

## சாம்பவீ (122)

சம்புவினுடைய பத்னீ, அல்லது சாம்பவர் (பரமசிவனுடைய பக்தர்) களுடைய மாதா.

1. யோகசாஸ்திரங்களில் சாம்பவீ முத்திரையென்று ஒருவிதமான முத்ரை சொல்லப்பட்டிருக்கிறது.

அந்தர் லக்ஷ்யம் பஹிர்த்ருஷ்டி: நிமேஷோன்மேஷவர்ஜிதா |
ஏஷாஸா சாம்பவீமுத்ரா ஸர்வதந்த்ரேஷு கோபிதா ||

2. கல்பஸூத்ரத்தில் சாக்ததீக்ஷை, சாம்பவீ தீக்ஷை மந்த்ர தீக்ஷையென்று மூன்றுவகை சொல்லப்பட்டிருக்கிறது.

3. 'அஷ்டவர்ஷா ச சாம்பவீ' என்று தேவீபாகவதத்தில் சொல்லியபடி எட்டு வயதுள்ள கன்யாரூபமாக இருப்பவள்.

**शारदाराध्या**

சாரதாராத்யா (123)

சாரதையினால் பூஜிக்கப்பட்டவள்.

1. 'சாரதா' என்றால் ஸரஸ்வதீ அல்லது வசின்யாதி வாக்தேவதைகள்.

2. சரத்காலதில் ஆராதிக்கப்பட்டவள். சரத்காலமென்பது இலையுதிர்காலம். அற்பிசி, கார்த்திகை மாதங்கள் (இஷச் சோர்ஜச்ச சரத்ருது) சரத்ருது. இந்த ருதுவில் வரும் நவராத்ரிக்கு சாரத நவராத்ரி என்றும், வஸந்த காலத்தில் வரும் நவராத்ரிக்கு வாஸந்த நவராத்ரி என்றும், இந்த இரண்டு நவராத்ரிகளும் அம்பாளுக்கு விசேஷ பூஜாகாலம் என்றும் சொல்லப்படும்.

'சரத்காலே மஹா பூஜா க்ரியதே யாச வார்ஷகீ (சப்தசதீ)

3. 'சாரத' என்றால் விசாரதர்கள், பண்டிதர்கள் அல்லது சாலீனம் என்ற ஆச்ரம விசேஷத்தை அடைந்தவர்கள். இவர்களால் பூஜிக்கப்பட்டவள்.

4. சாரதா, ஆராத்யா என்று பிரித்து 'சாராதா' என்ற பெயரை உடையவள் என்று சொல்லலாம்.

சரத்காலே புராயஸ்மாத் நவம்யாம் போதிதா ஸுரை: |
சாரதா ஸா ஸமாக்யாதா பீடே லோகே ச நாமத: ||
(காளிகா புராணம்)

ஆசார்யாளால் ச்ருங்கேரியில் ஸ்தாபனம் பண்ணப்பட்ட அம்பாளுக்கு சாரதா என்ற பெயரும், அந்த பீடத்திற்கு சாரதா பீடமென்ற பெயரும் உலகப்ரஸித்தம்.

5. ஆராத்யா என்ற பதத்திலிருக்கும் ஆ என்ற பதத்தை அ, ஆ என்று பிரித்து

'அகாரோ வாஸுதேவஸ் ஸ்யாத் ஆகாரஸ்து பிதாமஹ:'

என்றபடி விஷ்ணு, பிரும்ஹா, இவர்களால் பூஜிக்கப்பட்டவள் என்று சொல்லலாம்.

## शर्वाणि

**சர்வாணீ** (124)

1. பரமசிவனுடைய அஷ்ட மூர்த்திகளில் பூமி ரூபமாக இருக்கும் மூர்த்திக்கு 'சர்வ:' என்று பெயர். அவருடைய பத்னீ (சர்வஸ்ய தேவஸ்ய பத்னீ.)

## शर्मदायिनी

**சர்மதாயினீ** (125)

ஸுகத்தைக் கொடுக்கிறவள்.

1. பக்தர்களுக்கு சர்ம (ஸுக)த்தைக் கொடுப்பதால் சர்ம தாயினீ என்று பெயர்.

*ஸுகம் ததாதி பக்தேப்ய: தேனைஷா சர்மதாயினீ*

(தேவீபாகவதம்)

## शांकरी

**சாங்கரீ** (126)

சங்கருடைய பத்னீ.

1. சம் – ஸுகம், அதைச் செய்கிறவர் சங்கரர்.

2. ஒவ்வொரு ஸ்ருஷ்டியினுடைய ஆதி, மத்யம், அந்தம் இந்த எல்லாக் காலங்களிலும் பரமசிவனுடனேயே அம்பாள் இருப்பதாகவும், அப்போது அம்பாளை தேவர்கள் விஷ்ணு மாயா என்றும், யோக நித்ரா என்றும், ஜகன்மயீ என்றும், சாங்கரீ என்றும், ருத்ராணீ என்றும் ஸ்தோத்ரம் செய்வதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

*'ப்ரதிஸர்க ஆதிமத்யாந்தம் அஹம் சம்பும் கிராகுலம் |*
*ஸ்திரீ ரூபேண அனுயாஸ்யாமி ப்ராப்ய தக்ஷாத் அஹம் தனும்' ||*
*ததஸ்து விஷ்ணுமாயாம் மாம் யோகநித்ராம் ஜகன்மயீம் |*
*சாங்கரீதி ஸ்துவிஷ்யந்தி ருத்ராணீதி திவௌகஸ: ||*

## श्रीकरी

**ஸ்ரீகரீ** (127)

ஸ்ரீயைக் கொடுக்கிறவள்.

1. ஸ்ரீ என்ற பதத்திற்கு ஸம்பத்து, லக்ஷ்மீ, மங்களம், சோபை, காம்பீர்யம், அழகு ஒளி முதலிய அர்த்தங்கள் உண்டு.

2. 'ஸ்ரீதர:, ஸ்ரீகர:, ஸ்ரீமான்' என்று விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தில் சொல்லப்பட்டபடி ஸ்ரீ விஷ்ணுவுக்கு ஸ்ரீகர: என்று பெயர். அம்பாளும் ஸ்ரீ விஷ்ணுவும் அபின்னமாகையால் அம்பாளுக்கும் ஸ்ரீகரீ என்று பெயர். பின்னால் நாராயணீ (298), முகுந்தா (838), கோவிந்த ரூபிணீ(267), வைஷ்ணவீ (892), விஷ்ணு ரூபிணீ (893) இந்த நாமங்களையும் பார்க்கவும்.

## साध्वी

## ஸாத்வீ (128)

பதிவ்ரதையாக இருப்பவள்.

1. அம்பாளுடைய பாதிவ்ரத்யத்தின் மஹிமையையும் பெருமையையும் பற்றி மிகவும் விசேஷமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸாத்வீத்யனன்ய ஸாமான்ய பாதிவ்ரத்யேன கீயஸே'

(தேவீபாகவதம்)

2. அம்பாள் தன் பிதாவான தக்ஷப்ரஜாபதியால் தன் புருஷனிடம் காட்டப்பட்ட அலக்ஷ்யத்திற்காகத் தன் உயிரையே விட்டுவிட்டுப் பிறகு பார்வதியாக அவதாரம் செய்தது பிரஸித்தம்.

3. காலத்ரயத்திலும் வேறு புருஷனை அடையாதது அம்பாளுக்கு விசேஷமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. லக்ஷ்மீ, ஸரஸ்வதீ இவர்களைப் பற்றியோ வென்றால், தனம் உள்ளவனை லக்ஷ்மீக்குப் பதியாகவும், வித்யை உள்ளவனை ஸரஸ்வதிக்குப் பதியாகவும், கவிகள் சொல்வது வழக்கம். ஆகவே லக்ஷ்மீக்கும், ஸரஸ்வதிக்கும் அனேகம் பதிகள் இருக்கையில் அம்பாள் மட்டும் தன் புருஷனை பரமசிவனைத்தவிர வேறு யாரையும் அடைந்ததில்லை யாதலால், அம்பாளுடைய பாதிவ்ரத்யமானது மற்றவர்களுடையதைவிட விசேஷ மஹிமை பொருந்தியதென்று ஆசார்யாள் வர்ணித்திருக்கிறார்கள்.

களத்ரம் வைதாத்ரம் கதிகதி பஜந்தே ந கவய:
ச்ரியோதேவ்யா: கோ வா ந பவதி பதி: கைரபி தனை: |
மஹாதேவம் ஹித்வா தவ ஸதி ஸதீனும் அசரமே
குசாப்யாம் ஆஸங்க: குரவகதரோரப்யஸுலப: ||
(ஸௌந்தர்யலஹரீ)

## शरच्चन्द्रनिभानना

*சரச்சந்த்ர நிபானனு* (129)

சரத்காலத்து சந்த்ரனுக்கு ஸமானமான முகத்தையுடையவள்.

## शातोदरी

*சாதோதரீ* (130)

நுட்பமான (அல்லது அழகான) இடையை உடையவள்.

1. நூற்றுக் கணக்கான குகைகளிருப்பதால் ஹிமவானுக்கு சதோதரன் என்று பெயர், ஆகவே அவருடைய பெண்ணை அம்பாளுக்கு 'சாதோதரீ என்று பெயர்.'

## शान्तिमती

*சாந்திமதீ* (131)

(பக்தர்களுடைய அபராதங்களைப் பாராட்டாமல்) பொருமையுடன் கூடியவள்.

## निराधारा

*நிராதாரா* (132)

ஆதாரம் (இருப்பிடம்) இல்லாதவள்.

1. அல்லது, மூலாதாரத்திலிருந்து கிளம்பியவள்.

2. ஸர்வஜகத்துக்கும் அம்பாள் ஆதாரமாக இருப்பதால் அம்பாளுக்கு ஆதாரம் யாதொன்றுமில்லை, தேவையுமில்லை.

3. நிராதாரமென்கிற பூஜா விசேஷத்தின் ஸ்வரூபமாக இருப்பவள். பராசக்தியினுடைய பூஜை பாஹ்யம், ஆந்தரம் என்று இரண்டுவிதமென்றும், அதில் பாஹ்யம் என்பது வைதிகம், தாந்த்ரிகம் என்று இரண்டுவிதமென்றும், ஆந்தரமான பூஜை ஸாதாரம், நிராதாரம் என்று இரண்டுவகையென்றும்,

ஸூதஸம்ஹிதை முதலிய க்ரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஸாதாரம் என்பது, குருவின் உபதேசப்படி மந்த்ரமயமான மூர்த்தியாக அம்பாளை பாவனைசெய்து ஆராதனம் செய்வது. நிராதார பூஜையென்பது அம்மாதிரி ஞானத்தினால் ஏற்படும் அம்பாளுடைய ரூபத்தில் மனதை லயம் செய்வது. இவற்றில் எல்லாம் நிராதார பூஜையென்பதுதான் மிகவும் சிரேஷ்டமென்றும், ஸம்ஸாரபந்தம் அற்றுப்போவதற்கு, ஸர்வ ஸாக்ஷிணியாயும் ஆத்மரூபிணியாயும் இருக்கும் பராசக்தியை நிராதார பூஜா மார்க்கமாக ஆராதனம் செய்வதுதான் உபாயமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

இனி வரும் நாமங்களில் மேலே சொல்லியபடி நிராதார பூஜாமார்க்கமாக அடையக்கூடிய ஸம்வித்ஸ்வரூபிணியான அம்பாளை வர்ணித்து, அம்மாதிரி அடையும் வழியையும் அடைந்த பிறகு ஏற்படும் ப்ரயோஜனங்களையும் சொல்லப்படுகிறது.

## निरञ्जना

## நிரஞ்ஜநா (133)

மாசற்றவள்.

1. அஞ்ஜநம் என்றால் (கருப்பு) மை, இங்கே அவித்யையென்று அர்த்தம். அவித்யையினால் ஞானம் மறைபட்டு, மனதில் இருள் சூழ்ந்து கொள்வதினால், அவித்யையை கருப்பு மைக்கு ஸமானமாகச் சொல்லப்பட்டது. அம்பாள் அவித்யை, மாயை இவைகளினுடைய ஸம்பந்தமில்லாதவள் என்று அர்த்தம்.

2. 'நி, ரஞ்ஜனு' என்று பிரித்து அதிகமான ஸந்தோஷத்தை உடையவள் என்றும் சொல்லலாம்.

## निर्लेपा

## நிர்லேபா (134)

(கர்மஸம்பந்தத்தால் ஏற்படும்) மேற்பூச்சு இல்லாதவள்.

1. அதாவது ஞானஸ்வரூபிணியானதால் கர்ம ஸம்பந்தம் யாதொன்றும் இல்லாதவள்.

'நமாம் கர்மாணி லிம்பந்தி' (கீதை)

2. அம்பாளுடைய ஞானம் ஏற்பட்டுவிட்டால் கர்மாவின் பற்றுதல் யாதொன்றும் பக்தனுக்குக் கிடையாது என்று சொல்லப்பட்டிருக்கிறது.

'லிப்யதே ந ஸ பாபேன பத்மபத்ரமிவாம்பஸா (கீதை)

3. லேபம் என்றால் மேலே பூசப்படும் வஸ்து, சந்தனம் முதலியது.

## निर्मला

*நிர்மலா* (135)

(ஆணவ) மல ஸம்பந்தம் இல்லாதவள்.

அவித்யையே மலம் என்று சொல்லப்படும்.

## नित्या

*நித்யா* (136)

பூத, பவிஷ்யத், வர்த்தமானமாகிய காலத்ரயத்திலும் அழிவில்லாதவள், எப்போதும் இருப்பவள்.

'அவிநாசீ அரே அயமாத்மா' (ச்ருதி)

'அவிநாசி து தத் வித்தி யேன ஸர்வமிதம் ததம் (கீதை)

2. அல்லது திதி நித்யா ரூபமானவள், கால நித்யா ரூபமானவள், நித்யா மந்த்ர ரூபமானவள்.

## निराकारा

*நிராகாரா* (137)

ஆகாரத்தோடு கூடாதவள். ஆக்ருதி இல்லாதவள்.

1. ஸம்வித் ரூபிணீயாகிய பராசக்தியானவள் ஜகமெங்கிலும் வியாபித்திருப்பதால், அவளுக்கு குண ஸம்பந்தமான உருவம் என்பது இல்லை என்று அர்த்தம்.

## निराकुला

*நிராகுலா* (138)

கலக்கமற்றவள்.

1. அவித்யைக்கு காரண பூதையானாலும் அதனால் ஏற்படும் கலக்கமானது அம்பாளுக்கும் கிடையாது. அவளுடைய பக்தர்களுக்கும் கிடையாது என்று அர்த்தம்.

2. அல்லது கலக்கமுள்ள மனதுடையவர்களுக்கு எட்டாதவள் என்றும் சொல்லலாம்.

3. ஆகுல என்பதற்கு அபாவம் சூன்யம் என்ற அர்த்தத்தில் அம்மாதிரி இல்லாதவள், எங்கும் நிறைந்தவள் என்று சொல்லலாம்.

## निर्गुणा

## நிர்குணா (139)

(ஸத்வ, ரஜஸ், தமோ) குணங்கள் இல்லாதவள்.

'ஸாக்ஷீ சேதா கேவலோ நிர்குணச்ச' (ச்ருதி)

1. குணங்கள் சரீரத்தை ஸம்பந்தித்திருப்பதாலும், அம்பாள் சித் ரூபிணீயானதாலும் குணங்களால் பாதிக்கப்படாதவள் என்று அர்த்தம்.

## निष्कला

## நிஷ்களா (140)

அம்சங்களோடு (அதாவது அவயங்களோடு) கூடியிருக்காதவள்.

1. நிர்குணமாக அம்பாளை பாவனைசெய்வது நிஷ்களா த்யானம் என்று பெயர்.

'த்யானம் யா நிஷ்களா சிந்தா நிராதாரா நிராச்ரயா |
நது த்யானம் சரீரஸ்ய முக ஹஸ்தாதி கல்பனா ||'

## शान्ता

## சாந்தா (141)

சாந்தியை உடையவள்.

1. 'ச' என்ற அக்ஷரத்தை அந்தமாக உடைய அம்ருத பீஜத்தின் ஸ்வரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

## निष्कामा

## நிஷ்காமா (142)

விருப்பம் யாதொன்றுமில்லாதவள்.

1. 'அவாப்தாகில காமாயா: த்ருஷ்ணா கிம் விஷயா பவேத்' என்று தேவீபாகவதத்தில், சொல்லியபடி அம்பாள் பரிபூர்ணையானவளாகையால் அவள் அபேக்ஷிக்கும்படியானது யாதொன்றுமில்லையென்று சொல்லப்பட்டது.

## निरुपप्लवा

## நிருபப்லவா (143)

அழிவில்லாதவள்.

1. அல்லது 'நிர், உப, ப்லவ,' என்று பிரித்து அதிகமாக ஸமீபத்திலிருக்கும் பிண்டாண்டமாகிற சரீரத்தில், அம்ருத ஸ்ராவம் உண்டுபண்ணுகிறவள் என்று அர்த்தம் பண்ணலாம்.

(ஸுதா ஸாராபி வர்ஷிணீ, 106.)

## नित्यमुक्ता

## நித்யமுக்தா (144)

எப்போதும் பந்தம் யாதொன்றுமில்லாதவள்.

1. அல்லது தன்னுடைய பக்தர்கள் நித்யமுக்தர்களாக இருக்கிறபடியால் 'நித்யமுக்தா.'

2. நித்ய முக்தர்களுடைய லக்ஷணமாகிய மோக்ஷஸ்வரூபிணியாக இருப்பவள்.

## निर्विकारा

## நிர்விகாரா (145)

விகாரங்கள் (மாறுபாடுகள்) யாதொன்றுமில்லாதவள்.

1. விகாரங்கள் இருபத்திமூன்று விதங்களென்று ஸாங்க்ய மதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதன் விபரங்களை ஸாங்க்ய தத்வ கௌமுதி முதலிய க்ரந்தங்களில் பார்க்கவும்.

## निष्प्रपञ्चा

நிஷ்ப்ரபஞ்சா (146)

பிரபஞ்சத்திற்கு உள்படாதவள்.

1. 'பிரபஞ்சம்' என்ற பதத்திற்கு லோகம், விஸ்தாரம், தோற்றம் முதலிய அர்த்தங்கள் உண்டு. இம்மாதிரி கட்டுப்பாடு களுக்கு உள்படாததினால் 'நிஷ்ப்ரபஞ்சா' என்று அம்பாளுக்குப் பெயர்.

## निराश्रया

நிராச்ரயா (147)

ஆச்ரயம் யாதோன்றும் இல்லாதவள்.

1. அம்பாள் ஸகல வஸ்துக்களும் ஆச்ரயிக்குமிடமாயிருப் பதால், அம்பாள் ஆச்ரயிக்கும்படியான இடம் யாதொன்றுமில்லை என்று அர்த்தம்.

'விச்வம் ப்ரதிஷ்டிதம் யஸ்யாம் தஸ்யா: குத்ர ப்ரதிஷ்டிதி:'

## नित्यशुद्धा

நித்யசுத்தா (148)

(காலத்ரயத்திலும் மாலின்யம் இல்லையாகையால்), எப்போதும் சுத்தமாக இருப்பவள்.

'அஸ்பர்சச்ச மஹான் சுசி:' (ச்ருதி)

'அத்யர்த மலினோ தேஹோ தேஹீ சாத்யந்த நிர்மல:' (ஸ்ம்ருதி)

## नित्यबुद्धा

நித்யபுத்தா (149)

எப்போதும் ஞானத்தோடு இருப்பவள்.

1. அதாவது அம்பாள் சித்ரூபிணியாகையால் அவளிடத்தில் ஞானம் எப்போதும் குடிகொண்டிருப்பதைச் சொல்லப் பட்டது.

2. 'நித்யசுத்தா', 'நித்யபுத்தா' என்ற இரண்டு நாமங்களில் வரும் சுத்த, புத்த இவ்விருவர்களும் ஜைனர்களுடைய மதத்தில் தீர்த்தங்கரர்களென்கிற அவதார புருஷர்களென்றும்,

அவர்கள் அம்பாளை உபாஸனை செய்ததினால் நித்யமுக்தர்களாக ஆனார்களென்றும், இந்த இரண்டு நாமங்களில் சொல்லப்பட்டதாகவும் அர்த்தம் பண்ணலாம். ஷட் தர்சனங்களிலடங்கிய ஜைன மதத்திலும் அம்பாளுடைய உபாஸனை சொல்லப்பட்டிருக்கிறது. அந்த மதத்தில் உபாஸிக்கப்படும் 'தாரா' என்ற தேவதையானவள் அம்பாள்தானென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

## निरवद्या

## நிரவத்யா (150)

குற்றமொன்றும் இல்லாதவள்.

1. 'அவத்யம்' என்பதற்கு பாபம், குற்றம், குறை என்று அர்த்தம்.

2. அவத்யமென்பது அவித்யையின் காரணமாக ஏற்படுவதால் அது அம்பாளிடத்தில் இருப்பதற்கு நியாயமில்லை,

'நிரவத்யம் நிரஞ்ஜனம்' (ச்ருதி)

3. 'அவத்யம்' என்பது ஓர் நரகத்தின் பெயர். அம்பாளுடைய பக்தர்கள் அந்த நரகத்திலிருந்து விடுவிக்கப்படுவதால் 'நிரவத்யா' என்று அம்பாளுக்குப் பெயர்.

தஸ்மாத் அஹர்நிசம் தேவீம் ஸம்ஸ்மரேத் புருஷோ யதி ।
ந யாத்யவத்யம் நரகம் ஸம்க்ஷீணசேஷபாதக: ॥ (கூர்மபுராணம்)

## निरन्तरा

## நிரந்தரா (151)

இடைவெளி இல்லாதவள்.

1. 'அந்தர' என்ற பதத்திற்கு இடைவெளி, அவகாசம், முடிவு, வஸ்த்ரம், மறைவு, பேதம் முதலிய பலவித அர்த்தங்கள் உண்டு.

## निष्कारणा

## நிஷ்காரணா (152)

காரணமில்லாது இருப்பவள்.

1. அம்பாளே ஸர்வ ஜகத்துக்கும் காரணபூதையாகையால் அவளுக்குக் காரணமான வஸ்து யாதொன்றுமில்லை என்று அர்த்தம்.

"ஸகாரணம் கரணாதிபாதிபோ ந சாஸ்ய கச்சித் ஜனிதா ந சாதிப:"

2. காரணத்ரவ்யத்தைப் பூர்ணமாக உடையவள், அதாவது அதனால் ஏற்படும் ஆனந்தத்தோடு கூடியவள் என்று அர்த்தம்.

"மஹாபத்மவனாந்தஸ்த்தாம் காரணானந்த விக்ரஹாம்"

## निष्कलङ्का

### நிஷ்களங்கா (153)

களங்கம் (பாபம்) ஸம்பந்தமில்லாதவள்.

'சுத்தம் அபாப வித்தம்.' (ச்ருதி)

## निरुपाधिः

### நிருபாதி: (154)

உபாதி யாதொன்றும் இல்லாதவள்.

1. செம்பரத்தைப் புஷ்பமானது நிலைக்கண்ணாடியினிடம் கொண்டுபோனால் தன்னுடைய சிகப்பு நிறத்தைக் கண்ணாடியில் காட்டுவதானது உபாதியென்பதற்கு ஒரு த்ருஷ்டாந்தம். அதே மாதிரி அவித்யையானது சித்தத்தில் பேத பாவனையை உண்டு பண்ணுவதும் உபாதி. சுத்த சைதன்ய ரூபிணியான அம்பாளிடம் அவித்யையினால் ஏற்படும் உபாதி யாதொன்றும் இல்லாதபடியால் அம்பாளுக்கு 'நிருபாதி:' என்று பெயர்.

2. உபாதி என்பது ஸகண்டோபாதி என்றும், அகண்டோபாதி என்றும் இரண்டுவகை.

## निरीश्वरा

### நிரீச்வரா (155)

பிறர் ஆளுகைக்கு உள்படாதவள்.

1. அம்பாள் ஸமஸ்த லோகத்திற்கும் ஈச்வரியாகையால் அம்பாளுக்கு மேற்பட்ட ஆளுகை வேறுயாருக்கும் இல்லை.

2. ஈச்வரன் உண்டென்று சொல்லும் உத்தர மீமாம்ஸா சாஸ்த்ரம், ஈச்வரன் இல்லையென்று சொல்லுகிற ஸாங்க்ய சாஸ்த்ரம், இவையிரண்டின் ரூபமாக இருப்பதால் அம்பாளுக்கு 'நிரீச்வரா' என்று பெயர்.

இனி வரும் நாமங்களில் காம, க்ரோத, லோப, மோஹ, மதமாத்ஸர்யம் ஆகிய அரிஷட்வர்கமென்ற குணங்கள் ஆத்மாவின் ஸ்வபாவத்தைச் சேர்ந்ததில்லை என்றும், அவற்றை ஜெயித்தால்தான் ஆத்மரூபிணியான அம்பாளுடைய ஸாக்ஷாத்காரம் ஏற்படும் என்பதைச் சொல்லப்படுகிறது.

## नीरागा

## நீராகா (156)

ஆசை (இச்சை) யாதோன்றும் இல்லாதவள்.

1. அதாவது அம்பாள் அவாப்த ஸமஸ்த காமனையானதால், அவள் விரும்பக்கூடியது யாதொன்றுமில்லை.

2. ராகமென்றால் ஆசை. சாண்டில்யபக்திஸூத்ரங்களில் பக்தியையும் ராகமென்று சொல்லியிருப்பதால், அந்த அர்த்தத்தில் அம்பாள் பக்திக்கு உறைவிடமாதலாலும், அம்பாள் பக்தி பண்ணும்படியானவர் வேறு யாருமில்லையாதலாலும், அம்பாளுக்கு 'நீராகா' என்று பெயர்.

3. நீரம் என்றால் ஜலம். அக என்றால் பர்வதம். இந்த இரண்டு ரூபமாகவும் இருப்பதால் 'நீராகா.'

## रागमथना

## ராகமதனா (157)

(தன்னுடைய பக்தர்களுக்கு வைராக்யத்தைக் கொடுத்து) ராகத்தை போக்கடித்துவிடுகிறவள்.

## निर्मदा

## நிர்மதா (158)

கர்வம் இல்லாதவள்.

## मदनाशिनी

### மத நாசினீ (159)

கர்வத்தைப் போக்கடிப்பவள்.

1. மதன என்றால் ஊமத்தம்பூ என்றும் அர்த்தம். அதை அசனீ - சாப்பிடுபவள். அதாவது அதில் பிரியமுள்ளவள்.

ஊமத்தம்பூவுக்கு பல விசேஷங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அது தங்கம் பண்ணுவதில் (ரஸவாதத்தில்) உபயோகப்படுவது வழக்கம். தங்கத்தின் பெயர்கள் அதற்கும் உண்டு. பரமேச்வரனால் சிரஸில் தரிக்கப்படுவதாகவும் சொல்லப்படும்.

'மஹேசஸ்த்வாம் தத்தே சிரஸி ரஸராஜஸ்ய ஜயினீ
விசுத்திஸ் த்வத் ஸங்காத் கனகமயம் ஏதத் த்ரிபுவனம்'

## निश्चिन्ता

### நிச்சிந்தா (160)

கவலையில்லாதவள்.

1. சிந்தா என்பதற்கு ஸாமான்யமாக நினைவு என்று அர்த்மிருந்தாலும், இந்த இடத்தில் துக்கம் உண்டுபண்ணும் நினைவு என்று பொருள். அது பிணங்களைக்கொளுத்தும் சிதையை விட கஷ்டமானது என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஏனென்றால் சிதையானது ஜீவன்போன சரீரத்தைக் கொளுத்துவதாலும், சிந்தையானது உயிருடன் இருக்கும் சரீரத்தையேகொளுத்துவதாலும், சிந்தையானது சிதையைவிட கடுமையானது.

'சிந்தா சிதாஸமா ஞேயா சிந்தா வை பிந்துநாதிகா |
சிதா தஹதி நிர்ஜீவம் சிந்தா தஹதி ஜீவிதம் ||

2. சிந்தா என்றால் சூது, வஞ்சனை, மோசம் என்றர்த்தம். இந்த இரண்டு அர்த்தத்திலும் அம்பாளுக்கு சிந்தை கிடையாதாகையால் 'நிச்சிந்தா'

## निरहंकारा

### நிரஹங்காரா (161)

அஹங்காரம் இல்லாதவள்.

1. அஹங்காரமென்பது ஸத்வ, ரஜஸ், தமோகுணங்களை அநுஸரித்து வைகாரிகம், தைஜஸம், பூதாதி என்று மூன்று விதம்.

निर्मोहा

நிர்மோஹா (162)

மோஹம் (மயக்கம், ப்ரமை) இல்லாதவள்.

मोहनाशिनी

மோஹநாசினீ (163)

பக்தர்களுடைய மோஹத்தை அழிப்பவள்

1. பக்தர்களுக்கு ஏகத்வம் (எல்லாம் பரப்ரும்ஹம்) என்கிற ஞானத்தைக் கொடுத்து அவர்கள் மனதிலிருக்கும் மோஹத்தைப் போக்கடித்துவிடுகிறாள் என்று அர்த்தம்.

'தத்ர கோ மோஹ: க: சோக: ஏகத்வம் அனுபச்யத: (ச்ருதி)

निर्ममा

நிர்மமா (164)

மமதை இல்லாதவள்

1. மமதை என்பது 'இது என்னுடையது' என்று பிரித்துச் சொல்லும் பேத புத்தியினால் ஏற்படும் எண்ணம். எல்லாமே அம்பாளுடையதாக இருப்பதால் அம்பாளுக்கு பேதபுத்தி என்பது கிடையாது.

ममताहन्त्री

மமதாஹந்த்ரீ (165)

(மேலே சொல்லப்பட்ட) மமதையென்பதைப் போக்கடிப்பவள்.

निष्पापा

நிஷ்பாபா (166)

பாபம் யாதொன்றும் இல்லாதவள்

## पापनाशिनी

பாபநாசினீ (167)

பாபத்தைப் போக்கடிப்பவள்

1. பக்தர்கள் தன்னுடைய மந்த்ரத்தை ஜபம் பண்ணுவதினால் அவர்களுடைய ஸமஸ்தமான பாபங்களையும் போக்கடிப்பவள். எப்பேர்ப்பட்ட பாபங்களைச் செய்திருந்தாலும் அம்பாளை உபாஸித்தால் அவையெல்லாம் நாசமடைகின்றனவென்று சொல்லப்பட்டிருக்கிறது.

மேரு பர்வத மாத்ரோபி ராசி: பாபஸ்ய கர்மண: |
காத்யாயனீம் ஸமாஸாத்ய நச்யதி க்ஷணமாத்ரத: ||
துர்கார்ச்சன ரதோ நித்யம் மஹாபாதக ஸம்பவை: |
தோஷைர் ந லிப்யதே வீர பத்மபத்ரமிவாம்பஸா ||

(பத்மபுராணம்)

ச்சித்வா பித்வா ச பூதானி ஹத்வா ஸர்வமிதம் ஜகத் |
ப்ரணம்ய சிரஸா தேவீம் ந ஸ பாபைர் விலிப்யதே ||
ஸர்வாவஸ்த்தா கதோவாபி யுக்தோ வா ஸர்வபாதகை: |
துர்க்காம் த்ருஷ்ட்வா நர: பூத: ப்ரயாதி பரமம் பதம் ||

(தேவீபாகவதம்)

வர்ணாச்ரம விஹீனானாம் பாபிஷ்டானாம் ந்ருணாமபி |
யத்ரூப த்யான மாத்ரேண துஷ்க்ருதம் ஸுக்ருதாயதே ||

(ப்ரும்மாண்ட புராணம்)

## निष्क्रोधा

நிஷ்க்ரோதா (168)

கோபமில்லாதவள்

1. சத்ருக்கள் யாரும் இல்லாததால் கோபம் ஏற்பட வேண்டியகாரணமே அம்பாளுக்கு இல்லை.

'ந மே தவேஷ்யோஸ்தி ந ப்ரிய: (கீதை)

## क्रोधशमनी

க்ரோத சமனீ (169)

கோபத்தை சமநம் செய்பவள்

1. கோபமுடையவன் செய்யும் தானம், யக்ஞம், தபஸ், உபாஸனை முதலியவையெல்லாம் பச்சை மண்ணாலாகிய (சுடாத) கலயத்தில் எடுத்த ஜலம் மாதிரி கைகூடாமல் போய்விடுமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'க்ரோதயுக்தோ யத் யஜதியத் ஜுஹோதி யதர்சதி |
ஸ தஸ்ய ஹரதே ஸர்வம் ஆமகும்போ யதோதகம் ||
(ஆபஸ்தம்பர்)

## निर्लोभा
## நிர்லோபா (170)

பேராசை (உலோபித்தனம்) இல்லாதவள்

1. அம்பாள் அத்யந்தமான உதார ஸ்வபாவமுடையவளாதலால் 'நிர்லோபா' என்று பெயர்.

## लोभनाशिनी
## லோபநாசினீ (171)

பக்தர்களுடைய உலோபித்தனத்தைப் போக்கடிப்பவள்.

1. லோபமானது ஸகலவிதமான நல்ல குணங்களையும் அழித்துவிடும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

## निःसंशया
## நிஸ்ஸம்சயா (172)

ஸந்தேஹமில்லாதவள்

## संशयघ्नी
## ஸம்சயக்னீ (173)

(பக்தர்களுடைய) ஸந்தேஹத்தைப் போக்கடிப்பவள்

1. தந்த்ர ராஜத்தில் குரு சிஷ்யர்களைப் பற்றிச் சொல்லுகையில் 'அஸம்சய:ஸம்சயச்சித்' என்று வர்ணித்திருக்கிறபடி, குருவானவர் தான் ஸந்தேஹமற்றவராகவும் சிஷ்யனுடைய ஸந்தேஹத்தைப் போக்கடிப்பவராகவும், இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அம்பாளும் குருவும் அபேதமாகையால் இங்கேயும் இந்த இரண்டு நாமங்களால் சேர்ந்தாற்போல் அம்பாளை வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

## निर्भवा

நிர்பவா (174)

(ஆதி) உத்பத்தி இல்லாதவள்

'அனாதிமத் பரம் ப்ரும்ஹ' (கீதை)

## भवनाशिनी

பவநாசினீ (175)

ஸம்ஸார பந்தத்தைப் போக்கடிப்பவள்

1. அம்பாளுடைய உபாஸனையினால் ஸம்ஸாரபந்தமானது அற்றுப்போய்விடுவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

அஹம் வை மத்பரான் பக்தான் ஐச்வரம் யோகமாச்ரிதான் |
ஸம்ஸார ஸாகராத் அஸ்மாத் உத்தராம்யசிரேண து ||
(தேவீபாகவதம்)

2. ப்ருஹஜ்ஜாபாலோபநிஷத்தில் சொல்லப்பட்ட பவநாசினீ என்று பெயரையுடைய நதீ ரூபமாக இருப்பவள்.

## निर्विकल्पा

நிர்விகல்பா (176)

விகல்பம் இல்லாதவள்

1. விகல்பம் என்பது ஒரு வஸ்து உண்மையில் இல்லாதிருக்கையில் அதன் பெயரின் சப்தத்தினால் அதைப்பற்றி ஏற்படும் ஞானம்.

'சப்தமாத்ரானுபாதீ வஸ்து சூன்யோ விகல்ப:' (யோகஸூத்ரம்)

1. அம்பாளுக்கு விகல்பமான ஞானம் இல்லை என்பது அம்பாள் விஷய ஸம்பந்தமில்லாததும், நித்யமுமான ஞானரூபிணீயென்று அர்த்தம்.

2. விகல்பம் என்பது விருத்தமான (எதிரிடையான) கக்ஷி என்றும் அர்த்தம். இங்கே அம்பாளை 'நிர்விகல்பா' என்று சொன்னது அம்பாளுக்கு எதிரிடையான வஸ்து அல்லது கக்ஷி யாதொன்றும் இல்லையென்று அர்த்தம். அதாவது ஸமஸ்தமும் அம்பாளோடு அபின்னமாக இருப்பதால் அம்பாளைத் தவிர்த்த கக்ஷி யாதொன்றும் இல்லை.

## निराबाधा

## நிராபாதா (177)

கலக்கமில்லாத (புத்தியுடைய)வள்.

1. முத்துச் சிப்பியின் வெளுப்பான காந்தியைப் பார்த்து அதை வெள்ளி என்று நினைப்பது மனதினுடைய கலக்கம். அது வெள்ளியல்ல, முத்துச்சிப்பி என்று தெரிந்தவுடன் அந்தக் கலக்கமானது மறைந்து விடுகிறது. அம்பாளைத் தவிர வேறு இரண்டாவது வஸ்து கிடையாதாகையால் அம்மாதிரி கலக்கம் யாதொன்றுமில்லாதவள்.

## निर्भेदा

## நிர்பேதா (178)

பேதமில்லாதவள்.

1. வேற்றுமையான புத்தி ஏற்படக்கூடிய வஸ்து அம்பாளுக்கு யாதொன்றுமில்லையாகையால் 'நிர்பேதா.'

'த்வம் ஹி ஸா பரமா சக்தி: அனந்தா பரமேஷ்டினீ |
ஸர்வபேத வினிர் முக்தா ஸர்வபேத விஞசினி || ' (கூர்ம புராணம்)

2. சக்தி, சக்தியுள்ளவர் (சிவன்) இவ்விருவர்களும் வெவ்வேறு என்று சிலர் உண்மை தெரியாததினால் சொன்னாலும் தத்வ சிந்தையுள்ள யோகிகள் அவர்கள் அபேதம் என்று தெரிந்துகொண்டிருக்கிறார்கள்.

'சக்தி சக்தி மதோர் பேதம் வதந்த்யபரமார்த்தத: |
அபேதம் சானுபச்யந்தி யோகினஸ் தத்வசிந்தகா:' || (கூர்ம புராணம்)

## भेदनाशिनी

## பேத நாசினீ (179)

பேத புத்தியைப் போக்கடிப்பவள்.

1. அதாவது பக்தர்களுக்கு தத்வ ஞானம் உண்டுபண்ணி பேத புத்தியை அகற்றுபவள்.

## निर्नाशा

## நிர்நாசா (180)

அழிவில்லாதவள்.

'ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ருஹ்ம' (ச்ருதி)

## मृत्युमथनी

## ம்ருத்யு மதநீ (181)

பக்தர்களுக்கு மரணம் இல்லாமல் செய்பவள்.

1. காலனுக்குக் காலனான பரமேச்வரனுடைய சக்தியான அம்பாள், மார்க்கண்டேயர் விஷயத்தில் அவர் செய்ததுபோல தன்னுடைய பக்தர்களுக்கு மரண பயம் ஏற்படாமல் காப்பாற்றுவாள் என்று அர்த்தம். அம்பாளுடைய பக்தன் உபாஸனையின் விசேஷத்தால் அம்பாளுடைய தாதாத்ம்யத்தை அடைவதினால் அவனுக்கு மரணம் ஏது?

'அத சஸ்மாத் உச்யதே மாம்ருதாத் இத்யம்ருதத்வம் ப்ராப்னோதீத்யக்ஷயத்வம் ப்ராப்னோதி நித்யத்வம் ப்ராப்னோதி ஸ்வயம் ருத்ரோபவதி' (த்ரிபுரோபநிஷத்)

## निष्क्रिया

## நிஷ்க்ரியா (182)

(செய்யவேண்டிய) க்ரியை யாதொன்றுமில்லாதவள்.

1. க்ரியைகள் விஹிதம் நிஷித்தமென்றும் இருவகை. விஹிதம் என்பது அவச்யம் செய்யவேண்டியவை. நிஷித்தமென்பது செய்யக்கூடாதவை. இவை இரண்டும் அம்பாளுக்குக் கிடையாது.

2. க்ரியை என்பது இல்லாமலேயே கர்த்ருத்வம், ஸர்வேச்வரியான அம்பாளுக்கு உண்டென்று சொல்லப்பட்டிருக்கிறது. மணமுள்ள புஷ்பமானது வேறு ஒன்றும் செய்யாமல் தான் இருப்பதினாலேயே மனதுக்கு மாறுதலை உண்டுபண்ணுவதுமாதிரி, பரமேச்வரன் தான் ஒருவிதமான க்ரியையும் செய்யாமல் உலகத்தை நடத்திவருகிறாரென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'யதா ஸந்நிதி மாத்ரேண கந்த: க்ஷோபாய ஜாயதே |
மனஸோ நோபகர்த்ருத்வாத் ததா ஸௌ பரமேச்வர: ||'

(விஷ்ணு புராணம்)

**निष्परिग्रहा**

**நிஷ்பரிக்ரஹா** (183)

பரிஜனங்கள் யாரும் இல்லாதவள்.

1. பரிக்ரஹம் என்றால் சொத்து, பரிஜனம், பரிசு என்று அர்த்தம். இவை யாதொன்றும் அம்பாளுக்குக் கிடையாதென்று சொல்லப்பட்டது.

**निस्तुला**

**நிஸ்துலா** (184)

ஒப்பில்லாதவள்.

1. அம்பாள் இன்னதற்கு ஸமானம் என்று சொல்லக் கூடிய வஸ்து யாதொன்றுமில்லையாகையால் 'நிஸ்துலா.'

'ஹேது த்ருஷ்டாந்த வர்ஜிதம்' (த்ரிபுரோபநிஷத்)

**नीलचिकुरा**

**நீலசிகுரா** (185)

நீல நிறமுள்ள கூந்தலையுடையவள்.

**निरपाया**

**நிரபாயா** (186)

(அபாயம்) நாசமில்லாதவள்.

**निरत्यया**

**நிரத்யயா** (187)

வரம்புகடக்காதவள்.

1. ஈச்வரன் தர்மங்களுக்கு வரம்பு ஏற்படுத்தி அவைகளை மீறி ஜனங்கள் நடக்காதபடி ரக்ஷிக்கிறார் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

"தர்மஸேதூனும் வக்தா கர்தா அபிரக்ஷிதா" (பாகவதம்)

தான் ஈச்வரனுகயிருப்பதை முன்னிட்டு அவரே ஓரோர் ஸமயம் தான் ஏற்படுத்திய வரம்பு கடந்து நடந்ததாகச் சொல்லப்பட்டபோதிலும், அம்பாளைப்பற்றி அம்மாதிரி சொல்ல முடியாது.

## दुर्लभा

**துர்லபா** (188)

(யோகிகளுக்குக்கூட) ச்ரமப்பட்டுக் கிடைக்கக்கூடிய (பதவி யுடைய)வள்.

## दुर्गमा

**துர்கமா** (189)

கிட்டமுடியாதவள்.

1. யோகிகளால்கூட வெகு கஷ்டத்தினுல் கிடைக்கக் கூடிய பதவியை உடையவளாகையால் பிறரால் கிட்டக்கூடப் போகமுடியாதவள்.

2. 'அதுர்கமா' என்று பிரித்து ஸுலபமாக அடையக் கூடியவள். அதாவது ஸௌலப்ய குணத்தையுடைவள் என்றும் அர்த்தம் பண்ணலாம். மேலும் அம்பாள் துர்கமன் என்ற அஸுரனை ஸம்ஹாரம் செய்தபடியால் 'அதுர்கமா'.

## दुर्गा

**துர்கா** (190)

துர்காரூபமாக இருப்பவள், அல்லது துர்கா என்ற பெயரோடு கூடியவள்

1. துர்கமன் என்ற அஸுரனைக் கொன்றதால் 'துர்கா' என்று அம்பாளுக்கு பெயர் ஏற்பட்டது.

"தத்ரைவச வதிஷ்யாமி துர்கமாக்யம் மஹாஸுரம் |
துர்காதேவீதி விக்யாதம் தன்மே நாம பவிஷ்யதி ||

2. இந்திரன் முதலிய தேவர்களை கஷ்டங்களிலிருந்தும் சத்ருபயத்திலிருந்தும் காப்பாற்றியதால் துர்கா என்று பெயர் வந்ததாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

"ஸுபலாதிபயே துர்கே தாரிதா ரிபுஸங்கடே
தேவா: சக்ராதயோ யேன தேன துர்காப்ரகீர்திதா'

(தேவிபுராணம்)

3. முன்னொருக்கால் ஸுபாகு என்னும் அரசனுடைய வேண்டுகோளுக்கிணங்கி காசியில் துர்கா ரூபமாக அம்பாள் இருப்பதாகச் சொல்லப்பட்டிக்கிறது.

'நகரே அத்ர த்வயா மாத: ஸ்தாதவ்யம் ஸர்வதா சிவே |
துர்காதேவீதி நாம்னைவ த்வம் சக்திரிஹ ஸம்ஸ்திதா ||
(தேவீபாகவதம்)

4. பீமரதி என்ற ஆற்றின் கரையில் இருக்கும் ஸன்னதி என்னும் க்ஷேத்திரத்தில் இருக்கும் அம்பாளுக்கு துர்கா என்று பெயர்.

5. 'நவ வர்ஷா பவேத் துர்கா' என்றபடி ஒன்பது வயதுள்ள கன்யா ரூபமாக இருப்பவள்.

## दुःखहन्त्री

## துःகஹந்த்ரீ (191)

ஸாம்ஸாரிகமான துக்கத்தைப் போக்கடிப்பவள்.

'து:கேனாத்யந்த விமுக்தச்சரதி' (ச்ருதி)

## सुखप्रदा

## ஸுகப்ரதா (192)

ஸுகத்தைக் கொடுப்பவள்.

1. அதாவது ஐஹிக ஆமுஷ்மிகங்களான ஸகல ஸுகங்களையும் அளவில்லாமல் கொடுப்பவள் என்று அர்த்தம்.

'ரஸம் ஹ்யேவாயம் லப்த்வா ஆனந்தீ பவதி' (ச்ருதி)

இதைப்பற்றி பத்ம புராணத்தில் புஷ்கர கண்டத்தில் கடைசி ஆறு அத்யாயங்களில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கவும்.

## दुष्टदूरा

## துஷ்டதூரா (193)

துஷ்டர்களால் அடையமுடியாதவள்.

1. துஷ்டர்கள் என்றால் தோஷமுடையவர்கள், குதர்க்கம் செய்பவர்கள்.

'ந பஜந்தி குதர்க்கஜ்ஞா தேவீம் விச்வேச்வரீம் சிவாம்'
(தேவீ பாகவதம்)

## दुराचारशमनी

துராசார சமநீ (194)

துராசாரத்தை அடக்குபவள்.

1. துராசாரம் என்பது சாஸ்த்ரவிருத்தமான நடவடிக்கை. சாஸ்த்ரங்களில் விதி ரூபமாக இன்னவற்றைச் செய்யவேண்டு மென்றும் நிஷேத ரூபமாக இன்னவற்றைச் செய்யக்கூடா தென்றும் நடவடிக்கையைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. செய்யவேண்டியவற்றைச் செய்யாமலும் செய்யக்கூடாததைச் செய்தாலும் ஏற்படும் ஸகல பாபங்களையும் அம்பாளுடைய நாம பாராயணமானது போக்கடித்துவிடுகிறதாகப் பின்னால் பலச்ருதி அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'நித்யகர்ம அனனுஷ்டானாத் நிஷித்த கரணாத் அபி |
யத் பாபம் ஜாயதே பும்ஸாம் தத்ஸர்வம் நச்யதி த்ருவம் ||'

## दोषवर्जिता

தோஷவர்ஜிதா (195)

(ராகம் த்வேஷம் முதலிய) தோஷங்கள் இல்லாதவள்.

## सर्वज्ञा

ஸர்வக்ஞா (196)

எல்லாம் அறிந்தவள்.

'ஸர்வக்ஞா ஸர்வ வேத்ருத்வாத்'. (தேவீ புராணம்)

## सान्द्रकरुणा

ஸாந்த்ர கருணா (197)

அதிகமான கருணையோடு கூடியவள்.

## समानाधिकवर्जिता

ஸமானாதிக வர்ஜிதா (198)

தனக்கு ஸமானமாவது மேலானதாவது யாருமில்லாதவள்.

'ந தத்ஸமச்சாப்யதிகச்ச த்ருச்யதே (ச்ருதி)

## सर्वशक्तिमयी

## ஸர்வ சக்தி மயீ (199)

ஸகலவிதமான சக்தியையும் உடையவள்.

1. அல்லது பாலா, பகளா முதலிய ஸகல சக்திகளோடு அபின்னமாக இருப்பவள்.

2. அல்லது ஸகல தேவர்களுடைய சக்தி ஸமூஹ ரூபமானவள். அதாவது எல்லா தேவர்களுக்கிருக்கிற சக்திகளும் அம்பாளுடைய விபூதிகள் என்றும் அம்பாளுடைய அனுக்ரஹத்தால் அந்தந்த சக்திகளை அந்தந்த தேவதைகள் அடைந்திருக்கிறார்களென்றும் அர்த்தம். அம்பாளுடைய சக்தியில்லாவிட்டால் அசைவதற்குக்கூட அவர்களால் முடியாது என்று சொல்லப் பட்டிருக்கிறது.

மதீயா: சக்திலேசா யே தத்தத் தேவ சரீரகா: |
ஸம்பூயதே மமாபூவன் ரூபம் பரமசோபனம் ||
ஆயுதானி ச தேவானும் யானி யானி ஸுரேச்வர |
மச்சக்தயஸ் ததாகாரா; ஆயுதானி ததாபவன் ||

இதைப்பற்றி ஸப்தசதியில் உத்தம சரிதத்தில் சொல்லியிருப்பதைப் பார்க்கவும்.

3. 'ஸர்வ' என்றால் அகண்டமான, அளவிடமுடியாத என்றும் அர்த்தம்.

## सर्वमङ्गला

## ஸர்வ மங்களா (200)

ஸமஸ்தமான மங்களங்களோடு கூடியவள்.

1. அதாவது அவற்றை யுடைத்தாயிருப்பதால் அவைகளைத் தன்னுடைய பக்தர்களுக்குக் கொடுப்பவள்.

ஸர்வாணி ஹ்ருதயஸ்தானி மங்களானி சுபானி ச |
ஈப்ஸிதானி ததாதீதி தேன ஸா ஸர்வமங்களா ||
சோபனானி ச ச்ரேஷ்டானி யா தேவீ தததே ஹரே |
பக்தானும் ஆர்த்திஹாரணீ தேனேயம் ஸர்வமங்களா ||

(தேவீபுராணம்)

## सद्गतिप्रदा

**ஸத் கதிப்ரதா** (201)

நல்ல கதியைக் கொடுப்பவள்.

1. 'ஸத்கதி' என்றால் ஸ்வர்கம் முதல் மோக்ஷம் வரையி லுள்ள இடங்கள் என்று அர்த்தம். அல்லது (ஸத்) ப்ரும் ஹத்தை அடையும்படியான (கதி) மார்க்கத்தை அதாவது ஞானத்தைக் கொடுப்பவள் என்றும் அர்த்தம் பண்ணலாம்.

2. ஸத்துக்கள் அடையும்படியான தன்னுடைய பதவி யைக் கொடுப்பவள் என்றும் சொல்லலாம்.

'கதிஸ்த்வம் மதிஸ்த்வம் த்வமேகா பவானி'

3. பத்மபுராணத்தில் அம்பாளைப் பூஜை செய்து அந்தந்த பதவியை அடையும்படியான மார்க்கங்களைப்பற்றி நாலு அத்யா யங்களில் சொல்லியிருப்பதைப் பார்க்கவும்.

## सर्वेश्वरी

**ஸர்வேச்வரீ** (202)

எல்லாருக்கும் ஈச்வரீ.

(மேலே சொல்லியபடி எல்லாரையும் நல்லகதிக்குக் கொண்டு போய்ச் சேர்க்கிறபடியால்) எல்லாருக்கும் ஈச்வரீ.

1. 'ஸமானாதிக வர்ஜிதா' என்றபடி அம்பாளுக்கு ஸமானம் அல்லது மேல்பட்டவர் யாருமில்லையாகையால் அம்பாளே எல்லாருக்கும் ஈச்வரீ என்று ஏற்பட்டது.

## सर्वमयी

**ஸர்வமயீ** (203)

எங்கும் வ்யாபித்திருப்பவள். அல்லது எல்லா ரூபத்தோடும் இருப்பவள்.

1. க்ஷிதி (பூமி) முதல் சிவன் வரையிலுள்ள தத்வங் களோடு அபின்னமாக இருப்பவள்.

2. அம்பாளை அடைவதற்கு ஆறு வழிகள் (அத்வாக்கள்) இருப்பதாகச் சொல்லப்படும். அவையாவன பதாத்வா, புவ

ணுத்வா, வர்ணுத்வா, தத்வாத்வா, கலாத்வா. மந்த்ராத்வா. இருநூற்றிருபத்திநாலு புவனங்களிருப்பதாகவும் அவைகளை பகவானுடைய (சிவனுடைய) ரோமங்களாக பாவனை செய்து உபாஸிப்பது புவனுத்வா என்றும், ஐம்பது எழுத்துக்களை பகவானுடைய தோலாக பாவனை செய்து உபாஸிப்பது வர்ணுத்வா என்றும், ஸப்தகோடி மஹாமந்த்ரங்களால் உபாஸனை செய்வது மந்த்ராத்வா என்றும், அம்மாதிரி மந்த்ரங்களின் சேர்க்கையினுல் ஏற்படும் பதங்களால் உபாஸனை செய்வது பதாத்வா என்றும், ப்ரிதிவீ முதல் சிவபர்யந்தமிருக்கும் தத்வங்களோடு அபின்னமாக பாவனைசெய்து உபாஸிப்பது தத்வாத்வா என்றும் சொல்லப்படும். இவைகளைப்பற்றி 991-வது நாமமான 'ஷடத்வாதீதரூபிணி' என்ற நாமத்திலும்சொல்லப்பட்டிருக்கிறது.

3. இவைகளில் 'சிவாத்யவனி பர்யந்தம்' என்ற தத்வங்களோடு அபின்னமாக இருப்பதால் அம்பாளை 'ஸர்வமயீ' என்று இங்கே சொன்னது.

## सर्वमन्त्रस्वरूपिणी

## ஸர்வ மந்த்ர ஸ்வரூபிணீ (204)

ஸமஸ்த மந்த்ரங்களின் ஸ்வரூபமாக இருப்பவள்.

1. மேலே சொல்லிய மந்த்ராத்வாவினுல் உபாஸனை செய்யப்படுவது இங்கு சொல்லப்பட்டது.

2. மந்த்ரங்கள் ஸப்த கோடிக்கணக்கானவைகள் என்று சொல்லப்படும்.

3. அம்பாள் ஸர்வ மந்த்ரஸ்வரூபிணியாக இருப்பது 'வித்யாயா: பூர்வோத்தராப்யாம் அனேகாஜாதா' என்ற கௌடபாத ஸூத்ரத்திலும் அதின் வ்யாக்யானத்திலும் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

## सर्वयन्त्रात्मिका

## ஸர்வயந்த்ராத்மிகா (205)

ஸமஸ்த யந்த்ரங்களுக்கும் ஆத்மஸ்வரூபமாக இருப்பவள்.

1. யந்த்ரங்கள் கட, அர்கள முதலிய பலவகைப்பட்டவை.

## सर्वतन्त्ररूपा

### ஸர்வதந்த்ரரூபா (206)

ஸகல தந்த்ரங்களுமே தன்னுடைய ரூபமாக இருப்பவள்.

1. அல்லது ஸகலவிதமான தந்த்ரங்களும் அம்பாளைக் குறித்தே இருக்கிறபடியாலும் அம்பாளையே நிரூபிக்கிறபடியாலும் "ஸர்வதந்த்ரரூபா" என்று சொன்னது.

பஹுதாப்யாகமைர் பின்ன: பந்தான: ஸித்திஹேதவ: |
த்வய்யேவ நிபதந்த்யேதே ஸ்ரோதஸ்விந்ய இவார்ணவே ||

2. ஸமஸ்த தந்த்ரங்களும் அம்பாளுடைய சரீரத்தில் அவயவங்களாக இருப்பதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

காமிகம் பாதகமலம் யோகஜம் குல்பயோர் யுகம் |
பதத்வயாங்குளீரூபே காரண ப்ரஸ்ருதாஹ்வயே ||

முதலிய ச்லோகங்களால் காமிகாகமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## मनोन्मनी

### மனோன்மனி (207)

மனோன்மனீ ரூபமாக இருப்பவள்.

1. புருவங்களுக்கு மத்யஸ்தானத்திலிருந்து ப்ரம்ஹரந்த்ரம் வரை இருக்கும் ஸ்தானங்களில் எட்டாவது ஸ்தானம் மனோன்மனீ என்று பெயர். அவை இந்து, ரோதினீ, நாத, நாதாந்த, சக்தி, வ்யாபினீ, ஸமனு, உன்மனீ அல்லது மனோன்மனீ, மஹாபிந்து என்பன. இவற்றில் மனோன்மனீயின் லக்ஷணம்:—

யா சக்தி: காரணத்வேன ததூர்த்வம் சோன்மனீ ஸ்ம்ருதா |
நாத்ர காலகலாமானம் நதத்வம் ந சதேவதா ||
ஸுநிர்வாணம் பரம் சுத்தம் ருத்ரவக்த்ரம் தத் உச்யதே |
சிவசக்திரிதி க்யாதா நிர்விகல்பா நிரஞ்ஜனா ||

2. வாமதேவாய நமோ ஜ்யேஷ்டாய நம: என்ற ச்ருதி வாக்யத்தில் சொல்லப்பட்ட மனோன்மனன் என்ற சிவனுடைய சக்திக்கு மனோன்மனீ என்று பெயர்.

3. மனமானது உன்மனீ பாவம் அடையும்போது தெரியப் பட்டவள் என்றும் அர்த்தம்.

ஸகல விஷயங்களுடைய பற்றுதலைவிட்டு ஹ்ருதய கமலத்திலிருக்கும் பரப்ரும்ஹத்தை த்யானம் பண்ணும்போது ஏற்படும் நிலைமைக்கு உன்மனீ பாவம் என்று பெயர்.

> நிரஸ்த விஷயாஸங்கம் ஸன்னிருத்தம் மனோ ஹ்ருதி
> யதாயாத்யுன்மனீபாவம் ததா தத் பரமம் பதம் ||
>
> (த்ரிபுரோபனிஷத்)

4. மனோன்மனீயென்று ஒருவிதமான முத்ரா விசேஷத்தின் பெயர். அதோடு அபின்னமாக இருப்பவள். அந்த முத்ரையின் லக்ஷணம் கண்கள் மூடாமலும் திறக்காமலும் ப்ராணவாயுவானது ரேசகம், பூரகம் இவையில்லாமலும் மனதானது ஸங்கல்பம், விகல்பம் இவையில்லாமல் உன்மனீ பாவம் அடைந்து அம்பாளுடைய ஸ்வரூப த்யானமாகவே இருப்பது என்று சொல்லப்பட்டது.

> 'நேத்ரே யயோன்மேஷ நிமேஷ யுக்தே
> வாயுர்யயா வர்ஜித ரேசபூர: |
> மனச்ச ஸங்கல்ப விகல்ப சூன்யம்
> மனோன்மனீ ஸா மயி ஸந்நிதத்தாம் ||

த்யான த்யாத்ரு த்யேயங்களாகிற வித்யாஸம் போய் விட்டால் மனதுக்கு இருக்கும் பாவமானது உன்மனீ என்று பெயர்.

> த்யான த்யாத்ரு த்யேய பாவோ யதா நச்யதி நிர்பரம் |
> ததோன்மனத்வம் பவதி ஞானம்ருத நிவேஷணாத் ||
>
> (ப்ருஹந்நாரதீயம்)

5. அல்லது, தன்னை த்யானம் பண்ணுவதால் பக்தர்களுடைய மனதுக்கு உன்மனீ பாவம் (உத்க்ருஷ்டமான ஞானத்தோடு கூடியிருக்கும் தன்மை) உண்டுபண்ணுவதால் அம்பாளுக்கு 'மனோன்மனீ' என்று பெயர்.

## माहेश्वरी

**மாஹேச்வரீ** (208)

மஹேச்வரரான பரமசிவனுடைய பத்னீ.

'யோ வேதாதௌ ஸ்வர: ப்ரோக்த: வேதாந்தே ச ப்ரதிஷ்டித: |
தஸ்ய ப்ரக்ருதிலீனஸ்ய ய: பர: ஸ மஹேச்வர: ||'

என்கிற ச்ருதிவாக்யத்தினால் குறிக்கப்பட்ட மஹேச்வரரான பரமசிவன் த்ரிகுணாதீதமானதும் நிர்குணமானதுமான ஸ்வரூபமுடையவர் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

தமஸா காலருத்ராக்யோ ரஜஸா கனகாண்டஜ: |
ஸத்வேன ஸர்வகோ விஷ்ணு: நைர்குண்யேன மஹேச்வர: ||

(லிங்க புராணம்)

'மஹேச்வர' என்ற பதத்திற்கு ஸமஸ்த பூதங்களுக்கும் மஹேச்வரர் அல்லது, மஹத்தானவர்களுக்கெல்லாம் ஈச்வரர் என்று அர்த்தம்.

## महादेवी

## மஹாதேவீ (209)

மஹதீயாயிருக்கும் தேவி.

1. மஹதீ என்பதினால் அளவிடமுடியாத பெரிய சரீரத்தையுடையவள் என்று அர்த்தம்.

'ப்ருஹதஸ்ய சரீரம் யத் அப்ரமேயம் ப்ரமாணத: |
தாதுர் மஹேதிபூஜயாம் மஹாதேவீ தத: ஸ்ம்ருதா' ||

(தேவீபுராணம்)

2. மஹாதேவராகிய பரமசிவனுடைய பத்னீ.

3. கண்டகியில் சக்ரதீர்த்தமென்பதில் அதிஷ்டானமாயிருக்கும் தேவியின் பெயர் மஹாதேவீ.

## महालक्ष्मी

## மஹாலக்ஷ்மீ (210)

மஹதீயான லக்ஷ்மீ ஸ்வரூபமாக இருப்பவள்.

1. அல்லது மஹாவிஷ்ணுவின் பத்னியான மஹாலக்ஷ்மீ ரூபமாக இருப்பவள். (அவளோடு அபின்னமாக இருப்பவள்.)

2. கரவீரக்ஷேத்ர (கோலாபுர)த்திலிருக்கும் தேவிக்கு மஹாலக்ஷ்மீ என்று பெயர்.

'சாலாக்ராமே மஹாதேவீ, கரவீரே மஹாலக்ஷ்மீ.' (பாத்மம்)

3. அம்பாளுடைய அம்சமான மஹாலக்ஷ்மீ தேவியானவள் மஹாலன் என்ற பெயருடைய அஸுரனை ஸம்ஹாரம் பண்ணினதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'மஹாலநாமகம் தைத்யம் ஸ்யதி க்ஷபயதீதி ச |
மஹாலஸா மஹாலக்ஷ்மீரிதி ச க்யாதிமாகதா' || (மைலாரதந்த்ரம்)

4. அம்பாளுக்கு மஹாலக்ஷ்மீ என்று பெயர் இருப்பதாகப் பல இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

தஸ்யாங்க மண்டலாரூடா சக்திர் மாஹேச்வரீ பரா |
மஹா லக்ஷ்மீரிதிக்யாதா ச்யாமா ஸர்வ மனோஹரீ ||
(சிவபுராணம்)

ச்ரியம் லக்ஷ்மீம் அம்பிகாம் ஔபலாங்காம் (ஆயுஷ்யஸூக்தம்)

ஸர்வஸ்யாத்யா மஹாலக்ஷ்மீ: த்ரிகுணா ஸா வ்யவஸ்த்திதா
(மார்க்கண்டேய புராணம்)

5. 'த்ரயோதசே மஹாலக்ஷ்மீ' என்றபடி பதின்மூன்று வயதுடைய கன்யா ரூபமாக இருப்பவள்.

## मृडप्रिया

## ம்ருடப்ரியா (211)

ம்ருடனாகிய பரமசிவனுக்கு ப்ரியமானவள்.

1. விச்வத்துக்கு ஸ்திதிகர்த்தாவும் ஸத்வ குணத்தோடு கூடியவருமான சிவனுக்கு ம்ருடனென்று பெயர்.

'ஜனஸுகக்ருதே ஸத்வோத்ரிக்தௌ ம்ருடாய நமோநம:'
(சிவமஹிம்நஸ்தவம்)

## महारूपा

## மஹாரூபா (212)

மஹத்தான ரூபத்தையுடையவள்.

1. பரப்ரம்ஹத்துக்கு புருஷ, வ்யக்த, அவ்யக்த காலமாகிய நான்கு அம்சமான ரூபங்களிருப்பதாகவும் அந்த ரூபங்கள் அந்தந்த விபாகத்துக்குத் தக்கபடி ஸ்திதி, ஸர்கம், அந்தம் வ்யக்தி ஸத்பாவங்களுக்கு ஹேதுக்களென்றும் இந்த நாலு ரூபங்களைக் கடந்த மஹாரூபம்தான் பரப்ரம்ஹமென்றும் விஷ்ணு புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'பரஸ்ய ப்ரம்ஹணோ ரூபம் புருஷ: ப்ரதமம் த்விஜ |
வ்யக்தாவ்யக்தே ததைவான்யே ரூபே காலஸ்ததா பரம் |
ப்ரதான புருஷவ்யக்த காலானும் பரமம் ஹி யத் |
பச்யந்தி ஸூரய: சுத்தம் தத்விஷ்ணோ: பரமம் பதம் ||
ப்ரதான புருஷவ்யக்த காலாஸ்து ப்ரவிபாகச: |
ரூபாணி ஸ்திதி ஸர்காந்தவ்யக்தி ஸத்பாவஹேதவ:' ||

இம்மாதிரி ரூபசதுஷ்டயத்தைக் கடந்த உத்க்ருஷ்டமான ரூபத்தை யுடையவள் மஹாரூபா.

## महापूज्या

## மஹாபூஜ்யா (213)

மஹதீயாயும் பூஜ்யையாயுமிருப்பவள்.

1. இதரர்களால் பூஜை செய்யப்படுகிறவர்களான சிவன் முதலானவர்களாலும்கூட ஆராதிக்கப்பட்டவள் என்றர்த்தம். அம்பாளை சிவன், ப்ரும்ஹா, விஷ்ணு, குபேரன் முதலியவர்கள் பூஜிக்கும் பிரகாரங்களும் அவர்கள் அப்படி பூஜை செய்யும் அம்பாளுடைய ரூபங்களும் விஸ்தாரமாக பத்மபுராணம் தேவிபாகவதம் இவைகளில் சொல்லப்பட்டிருக்கிறது.

## महापातकनाशिनी

## மஹாபாதகநாசினீ (214)

ப்ரம்மஹத்தி முதலிய மஹபாபங்களையெல்லாம் போக்கடிப்பவள்.

1. ஸௌபாக்ய ரத்னகரம் முதலிய க்ரந்தங்களில் ப்ராயச்சித்த ப்ரகரணத்தில் அந்தந்தப் பாபங்களுக்குத்தக்கபடி செய்ய வேண்டிய அம்பாளுடைய ஜப விசேஷங்களைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது.

2. அம்பாளுடைய பாதஸ்மரணையே ஸகல பாபங்களுக்கும் ப்ராயச்சித்தமாக இருக்கிறதென்று சொல்லப்பட்டது.

கருதஸ்யாகில பாபஸ்ய ஞானதோऽஞானதோபிவா |
ப்ராயச்சித்தம் பரம் ப்ரோக்தம் பராசக்தே: பதஸம்ருதி: ||

இதேமாதிரியாகவே அம்பாளுடைய இந்த ஸஹஸ்ரநாமத்தின் ஒரு நாமத்திற்கிருக்கும் பாப நிவர்த்தன சக்தியளவு பாபம்

செய்ய இந்தப் பதினாலு லோகங்களாலும் முடியாதென்று பலச்ருதி அத்யாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

அத்ரைக நாம்னோ யா சக்தி: பாதகானாம் நிவர்த்தனே |
தன்னிவர்த்யம் அகம் கர்த்தும் நாலம்லோகா: சதுர்தச ||

## महामाया

### மஹாமாயா (215)

(ப்ரம்ஹாதிகளுக்கும்கூட மோஹத்தை உண்டுபண்ணுவதால்) மஹாமாயாரூபிணியாக இருப்பவள்.

இதையேதான் மார்க்கண்டேய புராணத்தில்

'ஞானினாமபி சேதாம்ஸி தேவீ பகவதீ ஹிஸா |
பலாத் ஆக்ருஷ்ய மோஹாய மஹாமாயா ப்ரயச்சதி ||

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

2 மாயை என்பதற்கு க்ருபை என்ற அர்த்தத்தில் க்ருபை நிறைந்தவள் என்றும் சொல்லலாம்.

## महासत्वा

### மஹாஸத்வா (216)

மஹத்தாக இருக்கிற ஸத்வத்தோடு கூடியவள்.

1. ஸத்வம் என்பது குணம், பலம், இருக்கும் தன்மையென்று அர்த்தம். அம்பாள் மஹத்தான குணத்தை உடையவள், அல்லது மஹத்தான பலத்தையுடையவள், அல்லது மஹத்தான ஸ்திதியை உடையவள் என்று அர்த்தம்.

## महाशक्तिः

### மஹாசக்தி: (217)

மஹத்தான சக்தியை உடையவள்.

1. ஸகல ஜகத்தையும் நிர்வஹிக்கும்படியானதும் எங்கும் பரவினதும் விவிதமானதுமான சக்தியை (ஸாமர்த்யத்தை) யுடையவள் என்று அர்த்தம்.

2. சக்தி என்பதற்கு பலம், ஆயுதம் என்ற அர்த்தமுமுண்டு.

3. இந்த நாமத்தை 'மஹாசக்தி:' என்றும் முன்வந்த 109-வது நாமத்தை 'மஹாஸக்தி:' என்றும் சொல்லியிருப்பதை கவனிக்கவும். இந்த ஸஹஸ்ர நாமத்தில் புநருக்தி (ஒரே பதத்தைத் திரும்பவும் சொல்லுகிறது) என்ற தோஷம் கிடையாதாகையால் இம்மாதிரி வித்யாஸமாகச் சொன்னது.

## महारतिः

**மஹாரதி:** (218)

(பக்தர்களாகிய ஞானிகளுக்கு) மஹத்தான ஆனந்தத்தைக் கொடுப்பவள்.

## महाभोगा

**மஹாபோகா** (219)

மஹத்தான ஆபோகங்களுடன் கூடியவள்.

*மஹத்தான ஆபோகங்களுடன் (ப்ருதிவி முதலிய ரூப விஸ்தாரங்களுடன் கூடியவள்.)*

*அல்லது 'போக' என்று பிரித்து மஹத்தான ஸுகம் அல்லது தனம் உடையவள் என்றும் சொல்லலாம்.*

## महैश्वर्या

**மஹைச்வர்யா** (220)

மஹத்தாயிருக்கிற ஐச்வர்யத்துடன் (அல்லது விபூதியுடன்) கூட இருப்பவள்.

## महावीर्या

**மஹாவீர்யா** (221)

மஹத்தான வீர்யத்தோடு கூடியவள்.

1. *வீர்யம் என்பதற்கு சுக்ரம், ப்ரபாவம், தேஜஸ், ஸாமர்த்யம் என்று பொருள். இவைகளை மிகவும் அதிகமாக உடையவள்.*

## महाबला

**மஹாபலா** (222)

மஹத்தான பலத்தை உடையவள்.

1. பலம் என்பதற்கு வாஸனை, ரஸம், ரூபம், ஆத்மா முதலிய அர்த்தங்கள் உண்டு.

2. பலம் என்றால் காக்கைக்குப் பெயர். மஹான்களான புஸுண்டன் முதலான காக்கைகள் அம்பாளுடைய ப்ரஸாதத்தினால் முக்தர்களாக ஆனதை யோகவாஸிஷ்டத்தில் (புஸுண்டனாலேயே) சொல்லப்பட்டிருப்பதால் அம்பாள் மஹாபலா என்ற பெயருடையவளாகிறாள்.

'ப்ராதர: சண்டதனயா: வாயஸா ஏகவிம்சதி |
ப்ராத்ருபி: ஸஹ ஹம்ஸீபி: ப்ராம்ஹீ பகவதீ ததா |
சிரம் ஆராதிதா அஸ்மாபி: ஸமாதி விரமே ஸதி |
ப்ரஸாதபரயா காலே பகவத்யா தத: ஸ்வயம் |
ததைவானுக்ரஹீதாஸ்மோ யேன முக்தா வயம் ஸ்திதா: ||'

## महाबुद्धिः

## மஹாபுத்தி: (223)

மஹதீயாயும் புத்திரூபியாயுமிருப்பவள்.

1. 'யஸ்மின் விக்ஞாதே ஸர்வம் இதம் விக்ஞாதம்ஸ்யாத்' என்ற ச்ருதிவாக்யப்படி யாரைத் தெரிந்துவிட்டால் தெரிய வேண்டியது யாதொன்றும் பாக்கியிருக்காதோ அவருக்கு 'மஹதி' என்று பெயர்.

2. மஹத்தான புத்தியானது எந்த தேவியின் ப்ரஸாதத்தினால் கிடைக்கப்படுமோ அந்த தேவிக்கு மஹாபுத்தி: என்று பெயர்.

## महासिद्धिः

## மஹாஸித்தி: (224)

மஹதீயாயும் ஸித்திரூபிணியாயும் இருப்பவள்.

1. மஹதீ என்ற பதத்தின் பொருள் முந்திய நாமத்தில் சொல்லப்பட்டது.

2. ஸித்திகள் என்பவை அணிமா, மஹிமா, லகிமா, கரிமா ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசித்வம், வசித்வம், என்ற அஷ்டமஹா

ஸித்திகள். இவைகளைத் தவிரவும் ஸித்திகள் ஸ்கந்தபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன.

3. மேலே சொல்லப்பட்ட மஹாஸித்திகள் அம்பாளுடைய ப்ரஸாதத்தினால் கிடைப்பதால் அம்பாளுக்கு மஹாஸித்தி: என்று பெயர்.

## महायोगेश्वरेश्वरी
## மஹாயோகேச்வரேச்வரீ (225)

மஹா யோகேச்வரர்களுக்கும் ஈச்வரீயாக இருப்பவள்.

## महातन्त्रा
## மஹாதந்த்ரா (226)

மஹத்தான தந்த்ர சாஸ்த்ரங்கள் தன்னைப்பற்றி உடையவள்.

## महामन्त्रा
## மஹாமந்த்ரா (227)

மஹத்தான மந்த்ரங்கள் தன்னைப்பற்றியவையாக உடையவள்.

## महायन्त्रा
## மஹாயந்த்ரா (228)

மஹத்தான யந்த்ரங்களையுடையவள். (அவைகளின் மூலமாக ஆராதிக்கப்பட்டவள்.)

1. அம்பாளைப்பற்றி மஹிமை பொருந்தியவையும் விசேஷமான பலன்களைக் கொடுக்கக் கூடியவையுமான தந்த்ர சாஸ்த்ரங்கள் குலார்ணவம், ஞானார்ணவம் முதலியவை. மந்த்ரங்கள் பாலா, பகளா, முதலியவை. யந்த்ரங்கள் பூஜாசக்ர, பத்மசக்ர, அம்ருதகட, மேரு, லிங்கம் முதலியன.

2. இவைகளைத்தவிர ஓரோர் தந்த்ர, மந்த்ர, யந்த்ர, விசேஷத்தையும் அம்பாளுக்கு முக்யமானவையென்று சொல்லப்படுவதால் அவைகளைத்தான் இங்கு மஹா என்ற விசேஷத்தினால் சொல்லப்பட்டது என்று சொல்லலாம். இந்த அர்த்தத்தில்

ஸ்ரீவித்யையை மஹா மந்த்ரமென்றும் ஸித்தவஜ்ர யந்த்ரத்தை மஹாயந்த்ரமென்றும் சொல்லப்படும். 'ஸ்வதந்த்ரம்' என்று பெயரோடுகூடிய தந்த்ர சாஸ்த்ரத்தை இங்கு மஹா தந்த்ர மென்று சொல்லப்பட்டது. அம்பாள் பரமசிவனைக்குறித்து 'தாங்கள் எனக்கு ஸகல தந்த்ரங்களையும் சொன்னீர்கள். அவைகள் ஒன்றையொன்று அவலம்பித்திருப்பதினால் எனக்கு புத்திக்கலக்கம் ஏற்படுகிறது. ஆகையால் நிரபேக்ஷமான ஒரு தந்த்ர சாஸ்த்ரத்தை எனக்குத் தாங்கள் சொல்லவேண்டும்' என்று கேட்க அதற்கு பதிலாக பரமசிவன் 'ஸ்வதந்த்ரம்' என்னும் தந்த்ர சாஸ்த்ரத்தை உபதேசம் செய்தார் என்று சொல்லப்பட்டது. ஸௌந்தர்ய லஹரியிலும் இந்த விஷயத்தைப் பற்றிச் சொல்லியிருக்கிறது.

'சதுஷ் ஷஷ்ட்யா தந்த்ரை: ஸகலமபிஸந்தாய புவனம்
ஸ்திதஸ் தத்தத் ஸித்திப்ரஸவ பரதந்த்ர: பசுபதி: |
புனஸ் த்வன் நிர்பந்தாத் அகில புருஷார்த்தைக கடனா
ஸ்வதந்த்ரம் தே தந்த்ரம் க்ஷிதிதலம் அவாதீதரத் இதம் ||'

## महासना

## மஹாஸனா (229)

மஹத்தான ஆஸனத்தையுடையவள்.

1. க்ஷிதி (ப்ருதிவி) முதலிய முப்பத்தாறு தத்வங்களும் அம்பாளுக்கு ஆஸனமாக இருப்பதாக,

'ஏஷா பகவதீ ஸர்வ தத்வான்யாச்ரித்ய திஷ்டதி'

என்று தேவீபாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## महायागक्रमाराध्या

## மஹாயாகக்ரமாராத்யா (230)

மஹாயாகத்தினுடைய க்ரமத்தினால் (மஹாயாகம் செய்வதின் மூலமாக) ஆராதிக்கத்தகுந்தவள்.

மஹாயாகமென்பது ப்ராம்ஹீ முதலிய மாத்ருகா தேவதைகளின் அம்சங்களான அக்ஷோப்யா முதலான அறுபத்திநாலு யோகினிகளுடைய பூஜையுடன் கூடிய யாகம். இதர ப்ரயோகங்

களைவிட அதிசீக்ரமாக பலத்தைக் கொடுக்கக்கூடியதென்று சொல்லப்படும்.

2. பாவனோபநிஷத்தில் சொல்லியிருப்பதும் மிகவும் ரஹஸ்யமானதும் சிவயோகிகளால் மட்டும் செய்யக்கூடியதுமான ப்ரயோகத்திற்கு மஹாயாகமென்று பெயர். தேவி ஸம்மந்தமான உபநிஷத்துக்களில் பாவனோபநிஷத்தானது முக்யமான உபநிஷத். சிறியதாக இருந்தாலும் பாவனையை ஏற்படுத்தக்கூடிய மிகவும் அரிய விஷயங்கள் அடங்கியது. அதற்கு ஒரு பாஷ்யமும் அதில் சொல்லிய பாவனமார்க்கத்திற்கு ஒரு ப்ரயோகமும் பாஸ்கரராயர் எழுதியிருக்கிறார். விபரங்களை அவைகளில் பார்க்கவும்.

## महाभैरवपूजिता

## மஹாபைரவபூஜிதா (231)

மஹாபைரவரால் பூஜிக்கப்பட்டவள்.

1. லோகத்திற்கு பரணம் (ஸ்ருஷ்டி) ரமணம் (ஸ்திதி) வமனம் (ஸம்ஹாரம்) செய்வதால் பரமசிவனுக்கு பைரவர் என்று பெயர். மஹாபைரவரால் அம்பாள் பூஜிக்கப்பட்டதை பத்ம புராணத்தில் சொல்லிருப்பது,

> சம்பு: பூஜயதே தேவீம் மந்த்ர சக்திமயீம் சுபாம் |
> அக்ஷமாலாம் கரே க்ருத்வா ந்யாஸேனைவ பவோத்பவ: ||

2. காளமேக ஸமச்சாய: ஸ்கந்தே சூலகபாலப்ருத் |
> த்விபுஜச்ச த்ரிநேத்ரச்ச ஸ்மயமான முகாம் புஜ: ||

என்று பைரவருடைய த்யானம்.

3. இதிலும் இதற்கு முந்திய நாமத்திலும் மஹாசம்புநாதராகிய மஹாபைரவர் மஹாயாகக்ரமத்தினால் சிதக்னி குண்டத்தில் ஆஹுதிபண்ணி ஸ்ரீ லலிதாம்பிகையை ஆவிர்ப்பவிக்கும்படி செய்ததைக் குறிக்கப்பட்டது. இதைப்பற்றி லலிதோபாக்யானத்தில் விஸ்தாரமாகச் சொல்லியிருப்பதைப் பார்க்கவும்.

## महेश्वरमहाकल्पमहाताण्डवसाक्षिणी

## மஹேச்வர மஹாகல்ப மஹாதாண்டவ ஸாக்ஷிணீ (232)

மஹாகல்ப காலத்தில் மஹேச்வரரால் செய்யப்படும் மஹா தாண்டவத்திற்கு ஸாக்ஷியாக இருப்பவள்.

1. மஹாகல்பம் என்பது மஹாப்ரளயகாலம். அப்போது மஹேச்வரர் ஸகல லோகங்களையும் ஸம்ஹாரம் செய்து தான் ஏகசேஷமாக இருப்பதினால் ஏற்பட்ட ஆனந்தத்தினால் தாண்டவம் செய்கிறாரென்றும் அந்த ஸமயம் அம்பாள் மட்டுமே ஸாக்ஷியாக இருப்பதாகவும் சொல்லப்படும். இம்மாதிரி ஈச்வரனுடைய மஹாதாண்டவத்தின் போது அம்பாளே ஏகஸாக்ஷிணியாக இருப்பதை பஞ்சதசீ ஸ்தவத்திலும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

'கல்போப ஸம்ஹரண கல்பித தாண்டவஸ்ய
தேவஸ்ய கண்டபரசோ: பரபைரவஸ்ய |
பாசாங்குசைக்ஷுவ சராஸன புஷ்ப பாணை:
ஸா ஸாக்ஷிணீ விஜயதே தவ மூர்த்திரேகா ||

2. புருஷர்கள் செய்யும் நர்த்தனத்திற்கு தாண்டவமென்றும் ஸ்திரீகள் செய்யும் நர்த்தனத்திற்கு லாஸ்யமென்றும் பெயர். மஹேச்வரன் மஹாதாண்டவம் செய்யும்போது அம்பாளும் லாஸ்யநடனம் செய்கிறாளென்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி இருவரும் நர்த்தனம் செய்யும்போது கருணாரூபிணியான அம்பாளுடைய வேண்டுகோளின் பேரில் பரமசிவனுக்கும் கருணைபிறந்து இருவரும் லோகங்களைத் திரும்பவும் ஸ்ருஷ்டி செய்வதற்காக அனுக்ரஹரூபமான நர்த்தனம் செய்கிறார்களென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

"கல்போபஸம்ஹரண கேளிஷு பண்டிதானி
சண்டானி கண்டபரசோரபி தாண்டவானி |
ஆலோகனேன தவ கோமளிதானி மாத:
லாஸ்யாத்மனா பரிணமந்தி ஜகத்விபூத்யை ||" (அம்பாஸ்தவம்)

"தவாதாரே மூலே ஸஹ ஸமயயா லாஸ்யபரயா
நவாத்மானம் மன்யே நவரஸ மஹாதாண்டவநடம் |
உபாப்யாம் ஏதாப்யாம் உதயவிதிம் உத்திச்ய தயயா
ஸனாதாப்யாம் ஜக்ஞே ஜனகஜனனீமத் ஜகதிதம் ||"
(ஸௌந்தர்ய லஹரீ)

3. இம்மாதிரி ஸம்ஹார காலத்தில் சிவதம்பதிகளுடைய அத்யத்புதமும் அதிபயங்கரமுமான ந்ருத்யத்தை மஹாவாஸிஷ்டத்தில் மிகவும் விஸ்தாரமாக வர்ணித்திருப்பதைப் பார்க்கவும்.

## महाकामेशमहिषी

மஹாகாமேச மஹிஷீ (233)

மஹாகாமேச்வரருடைய மஹிஷீயாக இருப்பவள்.

1. ஒரு ராஜாவோடு ராஜ்யாபிஷேகம் பெற்ற பத்னிக்கு (பட்ட) மஹிஷீ என்று பெயர். பரமசிவனோடு அபின்னரான மஹாகாமேச்வரருடைய பட்ட மஹிஷியாக அம்பாளைச் சொல்லப்பட்டது.

## महात्रिपुरसुन्दरी

மஹாத்ரிபுரஸுந்தரீ (234)

மஹதீயாயும் த்ரிபுரையாயும் ஸுந்தரியாயுமிருப்பவள்.

1. மாத்ரு, மான, மேயங்களாகிய த்ரிபுடியே ஒரு நகரமாக இருப்பது த்ரிபுரம். அதின் ஸ்வரூபமாக (தாதாத்ம்யத்தோடு) இருப்பவள் த்ரிபுரா. (இதர அர்த்தங்களுக்கு மேலே வரும் 626-வது நாமமான 'த்ரிபுரா' என்பதில் பார்க்கவும்.)

## चतुःषष्ट्युपचाराढ्या

சதுஃ ஷஷ்ட்யுபசாராட்யா (235)

அறுபத்திநாலுவகையான உபசாரங்களை தனமாக உடையவள்.

1. இந்தக் கணக்குடைய உபசாரங்களை பரசுராம கல்ப ஸூத்திரத்தில் காணலாம். பாஸ்கர ராயர் எழுதிய பூஜாப்ரகரணத்திலும் அவைகளைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ரீ சங்கர பகவத்பாதர்களால் எழுதியதாகச் சொல்லப்படும் இவைகளடங்கிய ஸ்தோத்ரம் ஒன்று உண்டு.

2. இந்த அறுபத்திநாலு உபசாரங்களுடன் இன்னும் எட்டு அதிகமாகச் சேர்த்து எழுபத்திரெண்டு உபசாரங்களென்றும் சிலர் சொல்வதுண்டு. ஆயினும் ப்ரதானமாகவும் அம்பாள்

ஸம்பந்தமாகவும் இருப்பவை மேலே சொல்லிய அறுபத்நி நாலுதான்.

3. இந்த உபசாரங்கள் என்பது அம்பாள் நேராக (ப்ரத்யக்ஷமாக) வந்திருப்பதாகப் பாவனை செய்து உத்க்ருஷ்டமான மர்யாதைகளைச் செய்வது தான்.

4. இந்த அறுபத்நிநாலும் பின்வருமாறு சொல்லப்படும். அம்பாளை ஆவாஹனம் (வரவேற்பு) செய்து இவைகளை க்ரமமாக ஒவ்வொன்றையும் தனித்தனியான உபசாரமாகச் செய்ய வேண்டும்:— 1. பாத்யம். 2. ஆபரணாவரோபணம் (ஆபரணங்களைக் கழற்றி வைப்பது.) 3. ஸுகந்த தைலாப்யங்கம். 4. மஜ்ஜன சாலாப்ரவேசம். 5. மஜ்ஜன மண்டபமணிபீடோபவேசனம். 6. திவ்ய ஸ்நானீயோத்வர்தனம். (வாஸனைப் பொடிகளைப் பூசுவது.) 7. உஷ்ணோதக ஸ்நானம். 8. கனக கலச ச்யுத ஸகல தீர்த்தாபிஷேகம். (புண்ய தீர்த்தங்கள் எல்லாவற்றையும் தங்கக் குடங்களால் ஸ்நானம் செய்வது) 9. தௌத வஸ்த்ர பரிமார்ஜனம். (தோய்த்து சுத்தமான வஸ்த்ரத்தால் உடம்பைத் துடைத்துக்கொள்வது) 10. அருணா துகூல பரிதானம். (சிகப்புப் பட்டு தரிப்பது.) 11. அருணா துகூல குசோத்தரீயம். (சிகப்புப் பட்டில் ரவிக்கை.) 12. ஆலேப மண்டப ப்ரவேசனம். 13. ஆலேப மண்டப மணி பீடோப வேசனம். 14. சந்தன, அகரு, குங்கும, ஸங்கு, ம்ருகமத, கர்பூர, கஸ்தூரீ, கோரோசனாதி, திவ்யகந்த ஸர்வாங்கீண விலேபனம் (இவை முதலான லோக ப்ரஸித்தமான த்ரவ்யங்களை உடம்புமுழுவதும் பூசிக்கொள்ளுதல். ஸங்கு என்பது வாஸனையுள்ள ஒருவித மரம். ம்ருகமதம் என்பது கஸ்தூரியில் ஒருவிதம், அல்லது ஜவ்வாது என்றும் சொல்லலாம்.) 15. கேச பாஸ்ய காலாகருதூபம். (கேச கலாபத்தை க்ருஷ்ணா அகருவின் புகையினால் மணக்கச் செய்வது.) 16. மல்லிகா, மாலதீ, ஜாதீ, சம்பக, அசோக, சதபத்ர, பூக, குட்மளீ, புன்னாக, கல்ஹார முக்ய ஸர்வர்து குஸுமமாலா: (இவை முதலான ஸகல ருதுக்களிலும் புஷ்பிக்கும் ஸுகந்த புஷ்பங்களின் மாலைகளை தரித்தல்.) 17. பூஷண மண்டப ப்ரவேசனம். 18. பூஷண மண்டப மணி பீடோபவேசனம். 19. நவமணி மகுடம். 20. சந்த்ர சகலம். 21. ஸீமந்த ஸிந்தூரம். 22. திலக ரத்னம்.

(ரத்னத்தைத் திலகமாக தரித்தல்) 23. காலாஞ்ஜனம். (கருப்புமை) 24. பாளீயுகளம். (மூக்கின் இருபக்கத்திலும் வாளியை தரித்தல்) 25. மணிகுண்டலயுகளம். (காதில் ரத்னகுண்டலம்) 26. நாஸாபரணம். (மூக்குத்தி) 27. அதரயாவகம். (உதடுகளுக்கு லாக்ஷா ரஸம் தடவிக்கொள்ளுதல்) 28. ப்ரதமபூஷணம். (மாங்கல்ய ஸூத்ரம்) 29. கனக சிந்தாகம். (தங்க அட்டிகை) 30. பதகம். 31. மஹாபதகம். 32. முக்தாவளி. 33. ஏகாவளி. (இருபத்தேழு முத்துக்கள் கோர்த்தமாலை) 34. சன்னவீரம். (இருபக்கமும் பூணூல் மாதிரி தரிக்கும் பூஷணம்) 35. கேயூர யுகள சதுஷ்டயம். (ஒவ்வொரு கையிலும் இரண்டு கேயூரங்களாக நாலு கைகளிலும்) 36. வளயாவளி (வளையல்களின் அடுக்குகள்) 37. ஊர்மிகாவளி (மோதிரங்களின் அடுக்குகள்) 38. காஞ்சீதாம (சலங்கை ஒட்டியாணம்) 39. கடி ஸூத்ரம். (அரைஞாண்) 40. ஸௌபாக்யாபரணம். 41. பாதகடகம் (கால் காப்பு) 42. ரத்ன நூபுரம் (ரத்னங்களாலான கால் சிலம்பு, தண்டை) 43. பாதங்குளீயகம் (கால் விரல்களிலணியும் மெட்டி, பீலி முதலியவை) 44. ஏக கரே பாசம் (ஒரு கையில் பாசம்) 45. அன்யகரே அங்குசம் (மற்றொரு கையில் அங்குசம்) இதரகரே புண்ட்ரேக்ஷு சாபம். (ஒரு கையில் செங்கரும்பு 46. வில்) 47. அபரகரே புஷ்பபாண: (மற்றொரு கையில் புஷ்பபாணங்கள்) 48 ஸ்ரீமன் மாணிக்ய பாதுகே. 49. ஸ்வஸமான வேஷாபி: ஆவரண தேவதாபி: ஸஹ மஹா சக்ராதிரோஹணம் (தன்னைப்போலவே அலங்காரங்களையுடைய ஆவரண தேவதைகளுடன் ஸ்ரீ சக்ரத்தில் ஏறுவது.) 50. காமேச்வராங்க பர்யங்கோபவேசனம். (காமேச்வரருடைய மடியில் வீற்றிருப்பது) 51. அம்ருதாஸவ சஷகம். (அம்ருத ரூபமான மதுவுடன் கூடிய கடம்.) 52. ஆசமனீயம். 53. கர்பூரவீடிக (வாஸனை த்ரவ்யங்களோடு கூடிய வெத்திலை விடயம்) 54. ஆனந்தோல்லாஸ விலாஸ ஹாஸம். (ஆனந்தம் ஏற்பட்டிருப்பதை வெளிக்காட்டும் சிரிப்பு) 55. மங்களாரார்திகம். (மங்கள ஹாரதி) 56. சத்ரம். (குடை) 57. சாமரயுகளம். 58. தர்பணம். (கண்ணாடி த என்கிற அக்ஷரத்தை ம்ருதுவாக உச்சரிக்கவேண்டும்.) 59. தாள வ்ருந்தம். (விசிறி) 60. கந்தம். 61. புஷ்பம், 62. தூபம். 63. தீபம். 64. நைவேத்யம். (ஆபோசனம், பானீயம்,

உத்தராபோசனம், ஹஸ்தப்ரக்ஷாளனம், கண்டூஷம், ஆசமனம் கர்பூரவிடிகா உள்பட)

5. அம்பாள் வந்தவுடன் ஆபரணங்களைக் கழற்றி, ஸுகந்த தைலத்தால் அப்யங்கனம் செய்துகொண்டவுடன் (மஜ்ஜன சாலா) ஸ்நானம் பண்ணும் இடத்திற்கு அழைத்துப் போகவேண்டும். அங்கே இருக்கும் மணிபீடத்தில் அம்பாளை விற்றிருக்கச் செய்யவேண்டும். பிறகு ஆலேப மண்டபம் (ஸுகந்த த்ரவ்யங்கள், புஷ்பமாலைகள் இவை முதலியவற்றை தரித்துக்கொள்ளும் இடம்) பூஷண மண்டபம் (ஆபரணங்கள் முதலியவை தரித்துக்கொள்ளும் இடம்) இவைகளுக்கு அழைத்து வந்து அங்கங்கே இருக்கும் மணிபீடத்தில் வீற்றிருக்கச் செய்து அங்கங்கே செய்யவேண்டிய உபசாரங்களைச் செய்யவேணும். பிறகு ஸ்ரீ சக்ரத்தில் ஆரோஹணம் முதலிய உபசாரங்கள் நடைபெறவேண்டும்.

6. அம்பாளுடைய ஆயுதங்கள் நாலு கரங்களிலிருப்பவை ஏற்கனவேயே "ராகஸ்வரூபபாசாட்யா" முதலான நான்கு நாமங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அங்குசம் புஷ்ப பாணங்கள் இவை வலது கைகளிரண்டிலும், பாசம் இக்ஷுகோ தண்டம் இவை இடது கைகளிரண்டிலும் இருப்பவை. அம்பாளுடைய கைகளில் மேலாக இருக்கும் வலது இடதுகைகளில் முறையே பாணங்களும் இக்ஷுகோதண்டமும், கீழாக இருக்கும் வலது, இடது கைகளில் முறையே அங்குசமும் பாசமும் இருப்பதாக பாஸ்கரராயர் சொல்லியிருக்கிறார். இதற்கு மாறாக தக்ஷிணாமூர்த்தி ஸம்ஹிதையில் அங்குசமும் பாசமும் மேலாகவும் பாணங்களும் இக்ஷுகோதண்டமும் கீழாகவும் இருப்பதாகச் சொல்லப்பட்டது.

'தக்ஷிணத: கரே பாணான் வாமதஸ்து சராஸனம் ।
வாமோர்த்வே பாசமாரக்தம் தக்ஷோர்த்வே து ஸ்ருணிம் பரம் ॥

ஆகவே அவரவர்கள் குருவினுபதேசப்படி அநுஸந்தானம் செய்யவேண்டியது. எப்படியிருந்தபோதிலும் அங்குசமும் பாணங்களும் வலது கைகளிலும் பாசமும் இக்ஷுகோதண்டமும் இடதுகைகளிலுமிருப்பதாக பாவனை செய்வதைப்பற்றி ஸந்தேகமில்லை.

7. பாசத்தைப் பவழம் மாதிரி சிகப்பாகவும் அங்குசத்தை வெள்ளிமாதிரி நிறத்தோடும். பஞ்ச புஷ்பபாணங்களை அந்தந்த புஷ்பத்தின் நிறத்தோடும் கோதண்டத்தை செங்கரும்பாகவும் தியானிக்க வேண்டும்.

8. இம்மாதிரி பாவனை பண்ணி ஸமஸ்தமான உபசாரங்களைச் செய்வதில் மேலே சொல்லிய த்ரவ்யங்கள் கிடைக்காவிட்டால் குஸுமம் அல்லது அக்ஷதைகளை அவைகளாக மனதால் பாவனை செய்து பூஜை செய்யலாமென்று சொல்லப்பட்டது.

'தத்தச் த்ரவ்யேணோபசாரான் அபாவே குஸுமாக்ஷதை: ।
மனஸா பாவயன் குர்யாத் தேன பூஜா பலம் பவேத் ॥

சுத்த வெள்ளையான அக்ஷதைகளால் பூஜை செய்யக் கூடாது. குங்குமப்பூ அல்லது மஞ்சள் அல்லது குங்குமம், அல்லது சிகப்பு சந்தனம் கலந்ததும், லக்ஷணமானதும், அரிசியாலானதும், சுத்தமானதும், முழுவதுமான அக்ஷதைகள் தான் உபயோகிக்கப்படவேண்டும்.

'ச்வேதாக்ஷதைர் ந பூஜாஸ்யாத் த்ரிபுரா பரமேச்வரீ ।
காச்மீரைர் வா ஹரித்ரைர்வா (குங்குமைர்வாऽபி) ரக்த சந்தன
[பங்ககை: ।
ரஞ்ஜிதான் சாலிஜான் சுத்தான் அகண்டான் அர்பயேத் புத: ॥

இப்படி புஷ்பம், அக்ஷதை இவைகளை பிரதிநிதியாக வைத்துப் பூஜை செய்வதில் முக்கியமான உபசார பஞ்சகமாகிய கந்த புஷ்ப, தூப, தீப, நைவேத்தியங்களுக்கு பிரதிநிதியேகிடையாது. அப்படி பிரதிநிதிகளால் பூஜை செய்தால் பலனே கிடையாது.

உபசாரன் அலாபேது புஷ்பாத்யைர் மனஸா ஸ்மரேத் ।
கந்த புஷ்ப தூப தீப நைவேதயான்யத் மஹேச்வரி ।
கந்தாதி பஞ்சகாபாவே பூஜா வ்யர்த்தைவ ஸர்வதா ॥

[சதுஷ்ஷஷ்ட்யுபசாரங்களைப்பற்றி சற்று விஸ்தாரமாகச் சொன்னதற்கு வாசகர்களை க்ஷமிக்கும்படியாகக் கோருகிறேன். இவைகளை வாசித்து மனதில் அநுஸந்தானம் பண்ணினாலேயே லோகமாதாவுக்கு பூஜை செய்தது மாதிரி ஏற்படுமாகையாலும் அதுவேதான் ஸ்ரீவித்யைக்கு முக்கிய பிரயோஜனமாகையாலும் இந்த விபரங்களை எழுதத் துணிந்தேன். அம்பாளுடைய ஸ்வரூ

பத்தை அநுஸந்தானம் பண்ணி இந்த உத்க்ருஷ்டமான ஸபர்யை யைச் செய்வதுதான் தேவியின் பக்தர்களுடைய முக்யமான கடமை. அதுதான் அவர்களுடைய உபாஸனையின் முடிவு.]

## चतुःषष्टिकलामयी
## சதுஷ்ஷஷ்டி கலாமயீ (236)

அறுபத்திநாலு கலைகளின் ஸ்வரூபமாக இருப்பவள்.

1. இவைகளைப்பற்றி வெவ்வேறு விதமாக சார்ங்கதரருடைய கதாகோசம், ஸ்ரீதரருடைய லக்ஷ்மீ பீடிகா முதலிய க்ரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இவைகளை பாஸ்கர ராயர் பரிசீலனை செய்து தொகுத்திருப்பது பின்வருமாறு:—

'அஷ்டாதச லிபிபோத: தல்லேகன சீக்ரவாசனே சித்ரம் |
பஹுவித பாஷா ஞானம் தக்கவிதா ச்ருதநிகாதிதா த்யூதம் |
வேதா உபவேதா: சத்வார: சாஸ்த்ராங்கஷட்கே த்வே |
தந்த்ரபுராண ஸ்மிருதிகம் காவ்யாலங்கார நாடகாதித்வே |
சாந்தி வச்யாகர்ஷண வித்வேஷோச்சாட மாரணானி ச ஷட் |
கதி ஜலத்ருஷ்ட்யக்ன்யாயுத வாக்ரேத: ஸ்தம்பஸப்தகம் சில்பம் |
கஜ ஹய ரத நர சிக்ஷா: ஸாமுத்ரிக மல்ல ஸூதகாருடகா: |
தத்தத் ஸூஷிராநத்தகனேந்த்ர ஜாலந்ருத்தானி கீதரஸவாதௌ |
ரத்ன பரீக்ஷா சௌர்யம் தாதுபரீக்ஷாப்யத்ருச்யத்வம் |

1. பதினெட்டு விதமான பாஷைகளின் எழுத்துக்களைத் தெரிவது. 2. அவைகளை எழுதுவது. 3. அவைகளை வேகமாக வாசிப்பது. 4. சித்ரமெழுதுவது. 5. அநேகவிதமான பாஷை களைத் தெரிவது. 6. அவைகளில் கவனம் செய்வது. 7. அவை களில் ப்ரஸங்கம் செய்வது. 8. சூதாட்டம், 9—12. நாலு வேதங்கள். 13—16. உபவேதங்கள் நாலு. 17—28. சாஸ்தி ரங்கள் பனிரெண்டு. 29. தந்த்ர, புராண, ஸ்மிருதிகள் 30. காவ்ய அலங்கார நாடகங்கள். 31—36. சாந்தி, வச்ய, ஆகர்ஷண, வித்வேஷண, உச்சாடன, மாரண ப்ரயோகங்கள். 37—43 கதி (நடப்பது) ஜல, த்ருஷ்டி, அக்னி, ஆயுத, வாக், ரேதஸ், இவை களை ஸ்தம்பனம் செய்வது. 44. சில்பம். 45—48. கஜ, ஹய, ரத, நர, சிக்ஷைகள் (இவைகளைபழக்குவது) 49. ஸாமுத்ரிகா சாஸ்த்ரம். 50. மல்ல சாஸ்த்ரம் (குஸ்தி முதலியன) 51. ஸூத

சாஸ்த்ரம் (சாப்பிடும் வஸ்துக்களைத் தயார் செய்வது) 52. காருட ப்ரயோகங்கள் (விஷங்களை இறக்குவது). 53. ததம் (தந்தி வாத்யங்கள் வாசிப்பது). 54. ஸுஷிரம் (பில்லாங்குழல் முதலிய காற்று வாத்யங்கள் வாசிப்பது). 55. ஆனந்தம் (ம்ருதங்கம் முதலியவை வாசிப்பது). 56. கனம் (வெண்கலத்திலான தாளம் முதலியவை அடிப்பது).

'ததம் வீணாதிகம் வாத்யம் ஆனத்தம் முராஜாதிகம் |
வம்சாதிகம் து ஸுஷிரம் காம்ஸ்யதாளாதிகம் கனம் ||'

57. இந்த்ர ஜாலம். 58. ந்ருத்தம். 59. கீதம் (பாடுவது.) 60. ரஸவாதம். 61. ரத்னபரீக்ஷை. 62. சௌர்யம் (திருடுவது). 63. தாது பரீக்ஷை (நாடி பரீக்ஷை). 64. அத்ருச்யத்வம் (மறைந்துபோகிறது).

2. இவைகளில் சிலவற்றிற்குப் பதிலாகப் பின்வருபவைகளைச் சொல்வது வழக்கம். நகைகள் செய்வது, புஷ்பமாலைக் கட்டுவது, வாஸனைப்பொடி தயார் செய்வது, புருஷர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் யௌவனம் உண்டுபண்ணும் ஸாமக்ரியைகள் தயார்செய்வது, பொம்மலாட்டம், புதிர்போடுவது, அந்தாதி கூறுவது, ஸமஸ்யை பூர்த்திசெய்வது, கச்சுவேலை, விடுகட்டுவது, தலையைவாரிப் பின்னுவது, எண்ணெதேய்ப்பது, கோழி முதலியவைகளின் சண்டை முறையத்தெரிவது, பூ முதலியவை வைத்து ஆருடம் சொல்லுவது, பிறர் மனதிலிருப்பதை அறிவது, மாறுவேஷம் போடுவது, பட்டம் பறக்கவிடுவது, குழந்தை பொம்மைகள், யந்த்ரங்கள் முதலியவை செய்வது படுக்கை தலையணை முதலியவை தயார் செய்வது, படுக்கையைப் போடுவது, மரங்களுக்கு வைத்யம் செய்வது, கிளிமுதலியவைகளைப் பேசப் பழக்குவது, உடம்பைப் பிடித்து விடுவது முதலானவை. இவைகளில் பெரும்பாலும் மிகவும்சில்லரையான விஷயங்களைப்பற்றியிருப்பதினால் பாஸ்கரராயர்எழுதியதையே நாம் ஒப்புக்கொள்ளலாம்.

3. கலைகள் என்பது தந்த்ர சாஸ்த்ரங்களைக் குறிப்பதாகவும் சொல்லலாம். இவைகள் அறுபத்திநாலு என்று சொல்லப்படும். இவைகளின் விபரத்தை வாமகேச்வர தந்த்ரத்திலும் அதின் ஒரு பாகத்திற்கு பாஸ்கரராயர் எழுதியிருக்கும் ஸேது

பந்தம் என்கிற வ்யாக்யானத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. ஸௌந்தர்யலஹரியிலும் இந்தக் கணக்கை

'சதுஷ் ஷஷ்ட்யா தந்த்ரை: ஸகலமதிஸந்தாய புவனம்
ஸ்தித: தத்தத் ஸித்திப்ரஸவ ப்ரதந்த்ரை: பசுபதி; |'

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

அவைகளில் அம்பாளை ப்ரதானமாகச் சொல்லியிருப்பதால் "சதுஷ்ஷஷ்டி கலாமயீ" என்று பெயர்.

## महाचतुःषष्टिकोटियोगिनीगणसेविता
## மஹா சதுஷ்ஷஷ்டிகோடி யோகினீ கணஸேவிதா (237)

மஹா சதுஷ் ஷஷ்டிகோடி யோகினீ கணங்களால் ஸேவிக்கப்பட்டவள்.

1. அம்பாளுடைய ஸ்ரீசக்ரத்தில் முதலாவது ஆவரண மாகிய த்ரைலோக்ய மோஹனசக்ரத்தில் ப்ராம்ஹீ முதலான எட்டு மாத்ருகா சக்திகளிருக்கிறார்கள். அவர்கள் ஒவ்வொருவருக்கும் அவரவருடைய அம்சமாக அக்ஷோப்யா முதலிய எட்டு யோகினீகளுண்டு. ஆக இவர்கள் அறுபத்திநாலு சக்திகளாகிறார்கள். திரும்பவும் இந்த அறுபத்திநாலு சக்திகள் ஒவ்வொருவருக்கும் அவரவருடைய அம்சமாக கோடியோகினீ களிருக்கிறார்கள். ஆக அறுபத்திநாலுகோடி. இப்படிக் கணக் குடையவும் மஹத்தாயுமிருக்கும் யோகினீகளால் ஸேவிக்கப் பட்டவள் என்று அர்த்தம்.

2. ஆயினும் பின்வருமாறு தந்த்ர ராஜத்தில் சொல்லி யிருப்பதைத்தான் இங்கு சொல்லப்பட்டதாக எடுத்துக்கொள்ள வேணும். அதின்படி மேலே த்ரைலோக்ய மோஹனசக்ரத்தி லிருப்பதாகச் சொன்னது மாதிரி பாக்கி எட்டு சக்ரங்களிலு மிருப்பதாகவும் ஆக யோகினீகளின் கணக்கு ஒன்பது தடவை அறுபத்திநாலு (ஐந்நூற்றி எழுபத்தாறு) கோடியென்றும் சொல்லப்பட்டது. [இதைத்தான் மஹத் என்ற பதத்தினால் இங்கே குறிக்கப்பட்டது.]

'லலிதா சக்ர நவகே ப்ரத்யேகம் சக்தய: ப்ரியே |
சதுஷ்ஷஷ்டி மிதா: கோட்ய: ||'

3. இந்த நாமம் ஸம்பந்தமானதாய் பாஸ்கர ராயரைப் பற்றிய ஒரு கதையுண்டு. இவர் காசியிலிருந்துகொண்டிருக்கும் நாளில் அங்கே இருந்த பண்டிதர்களில் சிலர் இவர் வாமாசாரப் படி அம்பாளை உபாஸித்து வருவதை பலமாக ஆக்ஷேபித்து வந்தார்கள். இது தெரிந்த பாஸ்கரராயர் அவர்களைத் தான் செய்யும் மஹா யாகமொன்றுக்கு வரும்படி யழைக்க, அவர்கள் அதற்கு வந்து அங்கே அவரைக் கேள்விகள் கேட்டு வாதத்தில் அவரைத் தோற்கடித்து விடவேண்டுமென்று எண்ணங்கொண்டார்கள். அந்த ஸமயம் எதைப்பற்றிக் கேட்பது என்று அவர்கள் ஆலோசனை செய்து கடைசியாக ஒரு புராணத்திலும் இதிஹாஸத்திலும் வேறு க்ரந்தங்களிலும் சொல்லப்படாததும் இந்த நாமத்தில் சொல்லப்பட்ட அறுபத்திநாலுகோடி யோகினிகளைப் பற்றியதுமான அவர்களுடைய உத்பத்தி, லக்ஷணம், சரித்ரம் முதலியவைகளைப்பற்றிச் சொல்லும்படி கேட்டார்கள். உடனே பாஸ்கரராயர் அதைத்தான் சொல்லிக்கொண்டுவருவதாகவும் அவர்கள் அதை எழுதிக்கொண்டுவரலாமென்றும் சொல்லிவிட்டு சிறிதும் தவறுதலாவது தடங்கலாவது இல்லாமல் ஒவ்வொரு யோகினீயின் நாமம், உத்பத்தி முதலியவைகளைச் சொல்லிக் கொண்டு வரவும் எழுதியவர்கள் கை சளைத்ததே தவிர பாஸ்கர ராயர் சிறிதும் ச்ரமமே யில்லாமல் சொல்லிக்கொண்டுவந்தாராம். (இதைப்பற்றிய அதிக விபரங்களுக்கு "பாஸ்கரராயரும் அவருடைய மகிமையும்" என்பதில் பார்க்கவும்).

## मनुविद्या

**மனுவித்யா** (238)

மனுவினால் உபாஸிக்கப்பட்ட வித்யாரூபிணியாக இருப்பவள்.

## चन्द्रविद्या

**சந்த்ரவித்யா** (239)

சந்த்ரனால் உபாஸிக்கப்பட்ட வித்யாரூபிணியாக இருப்பவள்

1. 'மனு: சந்த்ர: குபேரச்ச லோபாமுத்ரா ச மன்மத: ।
அகஸ்திரக்னி: ஸூர்யச்ச இந்த்ர: ஸ்கந்த: சிவஸ்ததா ।

க்ரோத பட்டாரகோ தேவ்யா: த்வாதசாமீ உபாஸகா: ||

என்றபடி மனு முதலிய பன்னிரண்டு உபாஸகர்கள் பன்னிரண்டு விதமாக ஸ்ரீவித்யாரூபிணியான அம்பாளை உபாஸனை செய்த தால் ஸ்ரீவித்யையின் ப்ரஸ்தாரங்கள் அவர்கள் பெயருடைய தாக பன்னிரண்டு உண்டு. அவைகளின் விபரத்தை ஞானார்ணவ தந்த்ரத்தில் பார்க்கவும்.

லோபாமுத்ரா என்பவள் இங்கு அகஸ்தி: என்று சொல்லப்பட்ட அகஸ்த்யருடைய பத்னீ. அவள் தன்னை பக்தியுடன் உபாஸிப்பதாக அம்பாளே ஸ்ரீ லலிதா த்ரிசதியில் சொல்லியிருப்பது:—

'பத்ன்யஸ்ய லோபாமுத்ராக்யா மாமுபாஸ்தே அதிபக்தித: |

லோபாமுத்ரையின் வித்யையானது பஞ்சதசாக்ஷரீயின் ஒரு பேதமாகிய ஹாதி வித்யை க்ரோதபட்டாரகர் என்பவர் துர்வாஸ மஹரிஷி, அத்ரிமகரிஷி, அனஸூயை இவர்களின் பிள்ளை. தத்தாத்ரேயருடைய ஸஹோதரர். இவர் செய்த லலிதாஸ்தவரத்னமென்ற ஆர்யாத்விசதீ, த்ரிபுராமஹிம்ந ஸ்தோத்ரம் இவை இரண்டும் அம்பாளுடைய பக்தர்களால் அவச்யம் வாசிக்கப்படவேண்டியவை.

## चन्द्रमण्डलमध्यगा

## சந்த்ர மண்டல மத்யகா (240)

சந்த்ர மண்டலத்தின் நடுவிலிருப்பவள்.

1. ஸஹஸ்ராரகமலத்தில் சந்த்ரமண்டலமிருப்பதாகவும் அந்த சந்த்ரமண்டலமானது எப்போதும் பூர்ணமான கலைகளுடனிருப்பதாகவும் சொல்லப்படும். அதுவே ஸ்ரீ சக்ரமென்பது ரஹஸ்யமான விஷயம்.

2. குண்டலினீ சக்தியானவள் ஏற்கனவேசொல்லப்பட்டபடி ஷட் சக்ர பேதனம்செய்து ஸஹஸ்ரார கமலத்திற்கு வந்து அங்கிருக்கும் சந்த்ரமண்டலத்தின் மத்தியில் பரமசிவனைச் சேருவதால் சந்த்ரமண்டலத்தின் மத்யத்திற்கு வருபவள் என்றும் இந்த நாமத்திற்கு அர்த்தம் பண்ணலாம்.

3. ஸாயங்கால ஸந்த்யாவந்தனத்திலும் ஆயுஷ்கரம் முதலிய ப்ரயோகங்களிலும் அம்பாளை சந்த்ரமண்டலத்திலிருப்பதாக

த்யானம் செய்து உபாஸிக்கவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஆயுஷ்கர ப்ரயோகத்தைப்பற்றி இந்த ஸஹஸ்ர நாமத்திய பலச்ருதி அத்யாயத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

4. பரமசிவன் அக்னியினுடைய சிகையிலிருப்பதாகவும் அம்பாள் சந்த்ரமண்டலத்திலிருப்பதாகவும் (பரமசிவனாலேயே அம்பாளுக்கு) சிவ புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது:—

'அஹம் அக்னி சிரோ நிஷ்ட: த்வம் ஸோம சிரஸி ஸ்திதா |
அக்னீஷோமாத்மகம் விச்வம் ஆவாப்யாம் ஸமதிஷ்டிதம் ||'

## चारुरूपा

சாரு ரூபா (241)

ஸௌந்தரமான ரூபத்தையுடையவள்.

## चारुहासा

சாருஹாஸா (242)

அழகான புன்சிரிப்பையுடையவள்.

1. அம்பாளுடைய த்ருஷ்டியின் லேசமே ஸூர்யனாகவும் அம்பாளுடைய புன்சிரிப்பின் துளியானது சந்த்ரனாகவுமிருப்பதாகச் சொல்லப்பட்டது.

'அம்ப தவதக்ஷ்ணோ: அணுரம்சுமாலீ
தவைவ மந்தஸ்மித பிந்துரிந்து: |'

## चारुचन्द्रकलाधरा

சாரு சந்த்ர கலாதரா (243)

அழகிய சந்த்ர கலையை (சிரஸில்) தரித்திருப்பவள்.

1. பரமசிவன் மாதிரி அம்பாளுடைய சிரஸிலும் சந்த்ரகலை இருப்பதாகச் சொல்லப்படும்.

2. சாரு (வளர்வு, தேய்வு இல்லாத) சந்த்ரகலா, (சித்ரூபமான ஸாதாக்ய தத்வமாகிய) சந்த்ரகலைக்கு ஆதாரமாக இருப்பவள். அம்பாள் பஞ்சவிம்சதி தத்வராகிய ஸதாசிவனுடன்

அபின்னமாகக் கலந்து இருபத்தாராவதாகிய ஸாதாக்யமெனப் படும் தத்வத்திற்கும் அம்பாள்தான் ஆதாரம் என்று இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

3. முன்னொரு காலத்தில் காசி ராஜனுக்கு சசிகலை (சந்த்ரகலை) என்ற பெண் இருந்ததாகவும், அவளுடைய ஸ்வப்னத்தில் அம்பாள் தோன்றி அவளைத் தன்னுடைய பக்தனான ஸுதர்சனன், என்ற அரசகுமாரனை கல்யாணம் செய்துகொள்ளும்படி சொன்னதாகவும், அதேமாதிரி அவ் விருவர்களுக்கும் அமபாளுடைய அனுக்ரஹத்தினால் கல்யாணம் நடந்ததாகவும், தேவீ பாகவதத்தில் ஒரு கதையுண்டு. இதை யொட்டி சந்த்ரகலையினுடைய க்ஷேமத்திற்கு ஆதாரபூதையான வள் என்றும் அர்த்தம் சொல்லலாம்.

'ஸ்வப்னே தஸ்யா: ஸமாகத்ய ஜகதம்பா நிசாந்தரே |
உவாச வசனம் சேதம் ஸமாச்வாஸ்ய ஸுகம் ஸ்திதா ||
வரம்வரய ஸுச்ரோணி மம பக்தம் ஸுதர்சனம் |
ஸர்வ காமப்ரதம் தேऽஸ்து வசனான் மம பாமினீ ||'

## चराचरजगन्नाथा

சராசர ஜகன்னாதா (244)

ஜங்கம, ஸ்தாவராத்மகமான ஜகத்திற்கெல்லாம் ஈச்வரியாக இருப்பவள்.

## चक्रराजनिकेतना

சக்ர ராஜ நிகேதனா (245)

(த்ரைலோக்ய மோஹனம் முதலான ஒன்பது சக்ரங்க ளடங்கிய) ஸ்ரீ சக்ரத்தை வாஸஸ்தானமாக உடையவள்.

## पार्वती

பார்வதீ (246)

பர்வத ராஜனான ஹிமவானுடைய புத்ரீ.

**पद्मनयना**

பத்ம நயனு (247)

தாமரஸ புஷ்பங்கள்போன்ற கண்களையுடையவள்.

**पद्मरागसमप्रभा**

பத்மராக ஸமப்ரபா (248)

பத்மராகமென்ற ரத்னத்திற்கு ஸமானமான காந்தியை உடையவள்.

1. அல்லது, பத்மத்தினுடைய சிகப்புக்கு ஸமமான காந்தியை உடையவள் என்றும் சொல்லலாம்.

2. 'த்ராயஸ்வ குண்டலினி குங்கும பங்கதாம்ரே'
என்று சொன்னபடி குண்டலினீ சக்தியானவள் குங்குமப் பூவைப்போன்ற நிறமுடையவளென்று சொல்லியிருப்பதால் அதையே இந்த நாமத்தில் சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

**पञ्चप्रेतासनासीना**

பஞ்சப்ரேதாஸனுஸீனு (249)

பஞ்சப்ரேதங்களாலாகிய ஆஸனத்தில் வீற்றிருப்பவள்.

1. ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன், ஈசானன், ஸதாசிவன் இவர்கள் ஐந்துபேரும் தங்களுடைய சக்திகளான வாமா, ஜ்யேஷ்டா, ரௌத்ரீ முதலானவர்களுடன் சேர்ந்திராவிட்டால் அவர்கள் ஒன்றும் செய்வதற்கு முடியாமல் ப்ரேதங்களாக இருக்கிறார்களென்று சொல்லப்படும். இவர்களில் முதல் நால்வர் கட்டில் கால்களாகவும் ஸதாசிவன் மேல் பலகையாகவும் இருப்பதாகவும் இப்படி இவர்களாகிய கட்டிலின்மீது அம்பாள் வீற்றிருப்பதாகச் சொல்லப்படும்.

2. இதைப்பற்றி ஞானார்ணவத்தில் சொல்லியிருப்பது:—

பஞ்சப்ரேதான் மஹேசான ப்ரூஹிதேஷாம் து காரணம் |
நிர்ஜீவா அவிநாசாஸ்தே நித்யரூபா: கதம்வத ||'

என்று அம்பாள் கேழ்க்க பரமசிவன் சொல்லுவது:—

"ஸாதுப்ருஷ்டம் த்வயா பத்ரே பஞ்சப்ரேதாஸனம் கதம் |
ப்ரம்ஹா விஷ்ணுச்ச ருத்ரச்ச ஈச்வரச்ச ஸதாசிவ: |
பஞ்சப்ரேதா வராரோஹே நிச்சலா ஏவதே ஸதா |
ப்ரம்ஹண: பரமேசானீ கர்த்ருத்வம் ஸ்ருஷ்டிரூபகம் |
வாமா சக்திஸ்து ஸாஜ்ஞேயா ப்ரம்ஹாப்ரேதோ நஸம்சய: |
சிவஸ்ய காரணம் நாஸ்தி சக்தேஸ்து காரணம் யத: |"

என்று ஆரம்பித்து

'ஸதாசிவோ மஹாப்ரேத: கேவலோ நிச்சல: ப்ரியே |'
சக்தியா விநாக்ருதோ தேவி கதம்சிதபி நக்ஷம: ||'
3. 'சிவோபி சவதாம் யாதி குண்டலின்யா விவர்ஜித: |'
'சக்தியா வினா சிவே ஸூக்ஷமே நாமதாம வித்யதே |'
'சிவ: சக்த்யா யுக்தோ யதிபவதி சக்த: ப்ரபவிதும்
நசேதேவம் தேவோ நகலு குசல: ஸ்பந்திதுமபி |'

என்று சொல்லப்பட்டபடி சக்தியோடு சேர்ந்திராவிட்டால் சிவனால் யாதொன்றும் முடியாது என்பதுதான் இதின் தாத்பர்யம். கட்டில் கால்களுக்கு மேல் பலகையாகச் சொல்லப்பட்ட ஸதாசிவன் தத்வங்களில் எல்லாவற்றிற்கும் மேற்பட்டதான இருபத்தைந்தாவது தத்வம். அவருடன் சக்தி சேர்ந்தால் இருபத்தியாறுவது தத்வமாகிய ஸாதாக்ய தத்வமாகிறது. இது அவர்களிருவர்களுடைய ஸாமரஸ்யரூபம். இதில் அவர்கள் அபின்னமாக இருக்கிறார்கள்.

## पञ्चब्रह्मस्वरूपिणी

## பஞ்சப்ரம்ஹஸ்வரூபிணீ (250)

பஞ்சப்ரம்ஹங்களின் ஸ்வரூபமாக இருப்பவள்.

1. மேலேசொல்லிய ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன், ஈச்வரன் ஸதாசிவன் இவர்களை பஞ்ச ப்ரம்ஹங்களென்றும் சொல்வதுண்டு. அதாவது அவர்கள் பரப்ரம்ஹத்தினிடமிருந்து மாயையின் விலாஸத்தினால் ஏற்படுவதால் அவர்கள் ப்ரம்ஹத்தின் கோடியில் அடங்கியவர்களாக ஆகிறார்கள். இப்படிப்பட்ட பஞ்சப்ரம்ஹங்களின் ஸ்வரூபமாக அம்பாள் இருப்பதாகச் சொல்லப்பட்டது.

'நிர்விசேஷமபி ப்ரம்ஹ ஸ்வஸ்யின் மாயாவிலாஸத: |
ப்ரம்ஹா விஷ்ணுச்ச ருத்ரச்ச ஈச்வரச்ச ஸதாசிவ: |
இத்யாக்யாவசத: பஞ்ச ப்ரம்ஹரூபேண ஸம்ஸ்திதம் | '

(த்ரிபுராஸித்தாந்தம்)

2. அல்லது, பரமசிவனுடைய பஞ்சமுகங்களாகிய ஈசான தத்புருஷ, அகோர, வாமதேவ, ஸத்யோஜாதர்களை பஞ்ச ப்ரம்ஹங்களென்று சொல்லலாம். அதேமாதிரி க்ஷேத்ரக்ஞ, ப்ரக்ருதி, புத்தி, அஹம்காரம், மனஸ் இவையைந்தையும், சப்த, ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்தம் இவையைந்தையும் ப்ரம்ஹஸ்வரூபங்களென்றும் அவைகளிலிருந்து ப்ருதிவி, அப்பு, தேஜஸ் வாயு, ஆகாசங்களாகிய பஞ்சமஹாபூதங்கள் உண்டாவதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. இம்மாதிரி ஸ்வரூபங்களையுடையவளென்றும் சொல்லலாம்.

3. ஸத்யக்ஞானாதி லக்ஷணங்களை யுடையவரும் விகாரமில்லாமல் சுத்தனுமிருக்கும் சிவன் தன்னுடைய (ஸ்ருஷ்டி முதலான) சக்தியுடன்கூடி ஐந்துவிதமாக இருப்பதாகச் சொல்லப்பட்டது. அதாவது ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதனம், அனுக்ரஹம் இந்த பஞ்ச க்ருத்யங்களைச் செய்யும் சக்தியோடுகூடி, ஸத்யோஜாதர் முதலிய ரூபங்களோடு கூடியிருப்பதாகச் சொல்லப்பட்டது.

'ஏக ஏவசிவ: ஸாக்ஷாத் ஸத்யக்ஞானாதி லக்ஷண: |
விகார ரஹித: சுத்த: ஸ்வசக்தியா பஞ்சதா ஸ்தித: || '

4. இம்மாதிரியே விஷ்ணுவும் பஞ்சரூபங்களோடு கூடியிருப்பதாக கருடபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'லோகானுக்ரஹக்ருத் விஷ்ணு: ஸர்வதுஷ்ட விநாசன: |
வாஸுதேவஸ்ய ரூபேண ததாஸம்கர்ஷணேன ச ||
ப்ரத்யும்னஸ்ய ஸ்வரூபேண அனிருத்தாக்யேன ச ஸ்தித: |
நாரயண ஸ்வரூபேண பஞ்சதா ஹ்யவஸ்த்தித: || '

5. மேலே சொல்லிய பஞ்சவித ஸ்வரூபங்களெல்லாம் அம்பாளுடைய ரூபங்களென்றும் அம்பாள் பேசும் வார்த்தைகளே வேதங்களென்றும் கண்களின் காந்தியின் லேசமே ஸூர்யனென்றும் புன்சிரிப்பினுடைய அழகின் துளியே சந்த்ரனென்றும் ஆசார்யாள் வர்ணித்திருக்கிறார்கள்.

'பும்பாவ லீலா புருஷாஸ்து பஞ்ச
யாத்ருச்சிகம் ஸம்லபிதம் த்ரயீதே |
அம்ப த்வதக்ஷ்ணோ: அணுரம்சுமாலீ
தவைவ மந்தஸ்மித பிந்துரிந்து: || '

### चिन्मयी
### சின்மயீ (251)

சைதன்யமே ரூபமாக இருப்பவள்.

1. சித் என்றால் ஞானம். கேவலம் ஞான ரூபிணியாக அம்பாள் இருப்பதாகச் சொல்லப்பட்டது.

### परमानन्दा
### பரமானந்தா (252)

உத்க்ருஷ்டமான ஆனந்தமே ஸ்வரூபமாக உடையவள்.

1. அகண்டாகாரமுடைய பரப்ரம்ஹமானது ஸுகஸ்வ ரூபமென்பது ச்ருதியிலும் 'யோவை பூமா தத் ஸுகம்' என்று சொல்லப்பட்டது.

### विज्ञानघनरूपिणी
### விக்ஞான கனரூபிணீ (253)

(கனீபூதமான) கனமாக இருக்கும் சைதன்யத்தின் ஸ்வ ரூபமாக இருப்பவள்,

1. அல்லது சைதன்யத்தின் ஸாரமாக (ததேகரஸமாக) இருப்பவள் என்றும் சொல்லலாம்.

'விக்ஞானகன ஏவைதேப்யோ பூதேப்ய. ஸமுத்தாய' (ச்ருதி)

2. 'யோவிக்ஞானே திஷ்டன் விக்ஞானமந்தரோ யமயதி' என்ற ச்ருதி வாக்யத்தில் விக்ஞானமென்ற பதத்திற்கு ஜீவன் என்று அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது. விக்ஞானமென்றால் ஜீவன்களுடைய (ஸமஷ்டி) கூட்டம். அந்த ஸமஷ்ட்யாத்மகமான ரூபத்தையுடையவள் என்று அர்த்தம். அதாவது ஸமஷ்ட்யாத் மகரான ஹிரண்ய கர்ப்பருடைய ரூபத்தையுடையவள். 'ஏதஸ் மாத் ஜீவகனாத்' என்ற ச்ருதி வாக்யத்தை இமமாதிரிதான் அர்த்தம் பண்ணப்பட்டிருக்கிறது.

## ध्यानध्यातृध्येयरूपा

### த்யான த்யாத்ரு த்யேயரூபா (254)

த்யானம் செய்வது, த்யானம் செய்பவர், த்யானம் செய்யப்படுகிறவர் இம்மூன்று ரூபமாகவும் இருப்பவள்.

1. 'த்யை சிந்தாயாம்' என்று சொன்னபடி த்யானம் என்றால் மனதில் ஏற்படும் ஞானத்தைக் குறிக்குமாகையால் அம்பாள் ஞான, ஞாத்ரு, ஞேய ஸ்வரூபிணியாக இருப்பதாக இங்கு சொல்லப்பட்டது.

## धर्माधर्मविवर्जिता

### தர்மாதர்ம விவர்ஜிதா (255)

தர்மம், அதர்மம் இவைகளோடு கூடியிருக்காதவள்.

1. இஷ்டமான பலன்களைக் கொடுக்கும் கார்யங்கள் தர்மமென்றும் (அதற்கு எதிராக) அனிஷ்டமான (விரும்பப்படாத) பலன்களைக் கொடுக்கும் கார்யங்கள் அதர்மமென்றும் சொல்லப்படும். இவைகளைப்பற்றி வேதத்தில் விதிகளென்றும், நிஷேதங்களென்றும் இருவகையான வாக்யங்களிருக்கின்றன. விதிகளென்பது இன்னென்ன கார்யங்கள் செய்யவேண்டுமென்று சொல்லுகிறவைகள். 'ஜ்யோதிஷ்டோமேன ஸ்வர்க்ககாமோ யஜேத' 'ஸத்யம் வத தர்மம் சர' முதலியவைகள். அவைகளைச் செய்தால் இஷ்ட ப்ராப்தி, ச்ரேயஸ் முதலியவை உண்டாகும் என்ற சொல்லப்படும். நிஷேதங்களென்பது இன்னின்னவை செய்யக்கூடாது என்று சொல்லுகிறவைகள். 'ப்ராம்ஹணோ ந களஞ்ஜம் பக்ஷயேத் ந ஸுராம் பிபேத்' முதலியவைகள். இவைகளைச் செய்யக்கூடாதென்றும் செய்தால் அனிஷ்டம் (கெடுதல்) ஏற்படுமென்றும் சொல்லப்படும். இப்படி வேதத்திலிருக்கும் விதி, நிஷேத ரூபங்களான வாக்யங்களை அனுஸரித்து நடப்பது தர்மமென்றும் அவைகளுக்கு மாறாக நடப்பது அதர்மமென்றும் சொல்லப்படும்.

2. அந்தந்த தேசங்களில் பரம்பரையாக அனுஷ்டிக்கப்படுவதும் சாஸ்த்ரத்திற்கு விருத்தமாக இல்லாததுமான ஆசாரத்திற்கும் தர்மமென்று பெயர்.

'தேசே தேசே ய ஆசார: பாரம்பர்யக்ரமாகத: |
ஆம்னாயைரவிருத்தச்ச ஸ தர்ம: பரிகீர்த்தித: ||'

3. இம்மாதிரி கர்மாக்களெல்லாம் திர்யக் ஜந்துக்களான மனிதர்களுக்கு மட்டும் ஏற்பட்டதாகையாலும் தேவர்களுக்கு அவ்வித கர்மாக்கள் கிடையாததாகையாலும் அம்பாளை அவைகளிலிருந்து 'விவர்ஜிதா' என்று சொல்லப்பட்டது.

4. தர்மா தர்மஸ்ய வாச்யஸ்ய விஷாம்ருத மயஸ்யச'

என்ற தந்த்ர ராஜவசனத்திற்கு வ்யாக்யானம் செய்திருப்பதை அனுஸரித்து தர்மாதர்ம பதங்களுக்கு பந்தம், மோக்ஷம் என்றும் அர்த்தம் சொல்லலாம். அவையிரண்டும் அம்பாளுக்குக் கிடையாது என்று சொல்லப்பட்டது.

'ந நிரோதோ நசோத்பத்தி: நபந்தோ நசஸாதக: |
ந முமுக்ஷுர் நசவைமுக்தி இத்யேஷா பரமார்த்த: ||'

5. தர்ம என்பதனால் தர்மமென்றகுணத்தையுடையவஸ்து (தர்மி) என்றும், அதர்ம என்ற பதத்திற்கு தர்மமென்ற குணமென்றும் அர்த்தம் சொல்லலாம். அம்பாள் இவையிரண்டுமல்லவென்று இந்த நாமத்தில் சொல்லப்பட்டது. அதாவது அம்பாள் ஜகத்தோடு அத்யந்தம் அபின்னமாக இருப்பதாக அர்த்தம்.

6. தர்மாதர்ம பதங்கள் சக்தி சிவாக்ஷரங்களைக் குறிக்குமென்றும் அவைகளால் விசேஷமாக அபிவ்ருத்தி அடைந்தவள். அதாவது பஞ்சதசீ ஸ்வரூபமாக இருப்பவள் என்றும் அர்த்தம் சொல்லலாம். இந்த விஷயத்தைப்பற்றி ஸ்ரீலலிதா த்ரிசதியின் பலச்ருதி பாகத்திலும் பாஸ்கரராயரியற்றிய வரிவஸ்யா ரஹஸ்யம், ஸேதுபந்தம் இவைகளிலும் சொல்லியிருப்பதைப் பார்க்கவும்.

இனிமேல் வரும் பத்தொன்பது நாமங்களில் ஜீவன், ஈசுவரன் இவர்களின் பேதங்களைப்பற்றிச் சொல்லுகையில் அம்பாள் அவை இரண்டோடு தாதாத்ம்யமாக இருப்பதும் சொல்லப்படுகிறது.

## विश्वरूपा

**விச்வரூபா** (256)

விச்வன் எனப்படும் ஸ்வரூபமாக இருப்பவள்.

1. அல்லது (விச்வமென்ற) ஸமஸ்த ஜகத்திலும் பரவியிருப்பவளென்றும் சொல்லலாம். அதையே ரூபமாக உடையவள். எங்கும் நிறைந்த வஸ்து. எப்படி வாழையானது தனது இலை, பட்டை இவைகளிலிருந்து வித்யாஸமாக இல்லாமல் அவைகளின் ரூபமாகவே இருப்பதுபோல பரப்ரம்ஹமானது ஸகல ப்ரபஞ்சத்திலுமிருப்பதால் அவைகளின் ரூபமாகவே இருப்பதாகச் சொல்லப்பட்டது.

'யதா ஹி கதலீ நாம த்வக் பத்ரான்யா ந த்ருச்யதே |
ஏவம் விச்வஸ்ய நான்யத்வம் த்வத்ஸ்தா ஈச்வர த்ருச்யதே ||'
(விஷ்ணு புராணம்)

'வடபத்ர சயானாய விஷ்ணவே பாலரூபிணே |
ச்லோகார்தேன ததா ப்ரோக்தம் பகவத்யா அகிலார்த்ததம் |
ஸர்வம் கல்விதமேவாஹம் நான்யதஸ்தி ஸநாதன ||'
(தேவீ பாகவதம்)

2. பரப்ரம்ஹத்திலிருந்து வேறுபட்டதாக இருக்கும் ஜீவபாவத்தை பசுபாவமென்று சொல்லப்படும். எப்படி (ச்வா) நாயானது மிகவும் கீழ்ப்பட்ட ஜந்துவாகச் சொல்லப்படுமோ அம்மாதிரி இந்த பசுபாவத்தை ச்வபாவமென்றும் ச்வரூபமென்றும் சொல்லப்படும். (நீசர்களை ஸேவிக்கிற தொழிலையும் ச்வவ்ருத்தி என்று சொல்வது வழக்கம்.) அம்பாளுடைய அநுக்ரஹத்தினால் இந்த ச்வரூபமானது (விகதமாக) விடுபட்டுப் போய் (பதிபாவம்) ஈச்வரனோடு தாதாத்ம்யம் ஏற்படுவதால் அம்பாளை விச்வரூபா என்று சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

பரப்ரம்ஹமமானது ஸகல ஜீவன்களிலும் சித்ரூபமாக இருப்பது யாவரும் ஒப்புக்கொள்ளும் விஷயம். அப்படியிருப்பதில் அந்த சைதன்யமானது ஒருவிதமான பேதமில்லாமலிருந்தாலும் ஜீவன் மூலமாகத் தெரியும்போது வெவ்வேறு விதமாக இருப்பதாகத் தெரிகிறது. ஜீவனானவன் வெளிப்ரபஞ்சத்தில்

வ்யவஹாரம் பண்ணும்போது விழித்துக்கொண்டிருப்பதான ஜாக்ரதாவஸ்தையிலிருக்கிறான். அப்போது அவனுக்கு பாஹ்ய வஸ்துக்களில் ப்ரக்ஞையிருக்கிறது. அவைகளை இந்திரியங்கள், மனது இவை மூலமாக அனுபவிக்கிறான். அதற்கடுத்தாற்போல் தூங்கும்போது ஸ்வப்னம் ஏற்படுகிறது. அப்போது இந்திரியங்கள் அடங்கியிருந்தாலும் மனதினால் ப்ரபஞ்சத்தில் இருப்பது போலவும் அதின் வ்யஹாரங்களில் தான் கலப்பதுபோலவும் அவனுக்கு அனுபவம் ஏற்படுகிறது. அந்த ப்ரக்ஞையிருக்கிறது. அப்போது ஏற்படும் அனுபவங்கள் அவனுக்கு எவ்வளவு உண்மையாகத் தோன்றினாலும் அவைகள் வாஸ்தவத்தில் நடைபெற்றவையல்ல. இந்த நிலைமையை ஸ்வப்னாவஸ்தை யென்றும் அந்த அவஸ்தையிலிருக்கும் ஜீவனுக்கு தைஜஸனென்றும் பெயர்.

இதற்கடுத்தாற்போல் ஸ்வப்னமேயில்லாத தூக்கத்தை யடையும்போது மனதும் அடங்கிவிடுகிறது. அப்போது மனதில் உண்டாகும் அனுபவங்களும் கிடையாது. அதிலிருந்து விழித்த பிறகு 'அப்பாடா! நன்றாய் தூங்கினேன், எனக்கு ஒன்றுமே தெரியவில்லை' என்று சொல்லுகிறான். இம்மாதிரி ஸ்வப்னமே யில்லாத அவஸ்தைக்கு ஸுஷுப்தி யென்று பெயர். இந்த அவஸ்தையிலிருக்கும் ஜீவனுக்கு ப்ராக்ஞனென்று பெயர். அப்போது ஜீவனுக்கு ஒன்றுமே தெரியாத நிலைமையேற்படுகிறது. இது ப்ரம்ஹானந்த அனுபவத்திற்கு முதல்படியாக ஆகிறது. ஆயினும் அவித்யையின் ஸம்பந்தம் இருப்பதால் அது சூன்யமான அனுபவத்தோடு இருக்கிறது. இதற்கடுத்தாற்போல் ஸமாதி யோகத்தால் ஏற்படக்கூடிய நிலைமைக்கு (நாலாவது) துரீய அவஸ்தை யென்றுபெயர் (அதற்குத் தனிப்பெயர் கிடையாது.) அப்போது ஜீவனுக்கு பரப்ரம்ஹத்துடன் அர்தஸாம்யம் (பாதி சேர்ந்திருப்பது) ஏற்படுகிறது. இந்த நிலைமையில் இருப்பதைத்தான் சிவதுல்ய: என்பதாக 'தத்பரச்ச சிவதுல்யோ ஜாயதே' என்ற சிவஸூத்ரத்தில் சொன்னது இதற்கு மேற்பட்ட அவஸ்தையில் பூர்ண ஜீவன் பூர்ண சிவனுடன் அபின்னமாகக் கலந்துவிடுவதால் பரமஸாம்ய மேற்படுகிறது. இதைத்தான் 'நிரஞ்ஜன: பரமம் ஸாம்யமுபைதி' என்று ச்ருதியில் சொன்னது. இந்த

நிலைமையை துரியாதீதம் (நான்காவதையும் கடந்தது) என்று சொல்லப்படும்.

4. மேலே சொல்லியபடி ஜாக்ராவஸ்தையிலிருக்கும் ஸகல ஜீவன்களுக்கும் சேர்க்கையான ஜீவாத்ம ரூபத்திற்கு வைச்வானரன் என்று பெயர்.) பிண்டாண்டமான சரீரத்திலிருக்கும் ஜீவன் ஜாக்ரதாவஸ்த்தையிலிருக்கையில் விச்வன் என்று சொல்லப்படுவதுபோல் ப்ரம்ஹாண்டத்திலிருக்கும் ஆத்ம ஸமூஹத்தை வைச்வானரன் என்று சொல்வது) அதேமாதிரி தைஜஸ ரூபமான ஜீவாத்மாக்களின் ஸமஷ்டி ரூபத்திற்கு ஹிரண்ய கர்பனென்றும் ப்ராக்ஞரூபமான ஜீவாத்மாக்களின் ஸமஷ்டி ரூபத்திற்கு ஈச்வரன்என்றும் பெயர்.

5. மேலே சொல்லியபடி ஜீவனுக்கு இருக்கும் ஐந்து அவஸ்தைகளிலும் அவன் ஐந்துவிதமான கோசங்களின் மூலமாக வ்யஹரிப்பதாகச் சொல்லப்படும். அவையாவன அன்னமய, ப்ராணமய, மனோமய, விக்ஞானமய, ஆனந்தமய கோசங்கள்.

6. ஜகத்பிதாவான ஈச்வரனை புருஷனென்றும் சக்தியை ப்ரக்ருதியென்றும் சொல்வது வழக்கம். இந்த ப்ரக்ருதியானது வ்யக்தமாக இருப்பது விக்ருதி. இந்த விக்ருதிகளைத்தான் தத்வங்களென்று சொல்வது. இம்மாதிரி ப்ரக்ருதியிலிருந்து ஏற்படும் விக்ருதிகள் இருபத்தொன்றுவிதம். அவை மனஸ், பஞ்ச ஞானேந்த்ரியங்கள், பஞ்சகர்மேந்த்ரியங்கள், பஞ்ச தன்மாத்ரைகள், பஞ்சபூதங்கள். இவைகளால்தான் ப்ரபஞ்சமே ஏற்படுகிறது. இவைகளின் மூலமாகத்தான் ஜீவனானவன் வ்யவஹாரம் செய்கிறான்.

7. இப்படி வ்யவஹாரம் பண்ணும் ஜீவனுக்கு காரண, ஸூக்ஷ்ம, ஸ்தூலங்களென்று மூன்று சரீரங்களிருப்பதாக ஸாதாரணமாகச் சொல்வது வழக்கம். இந்த சரீரங்களில் அபிமானியும் அக்ஞானமாகிற உபாதியோடும் கூடியிருப்பதினால் தான் ஜீவனானவன் தான் பரப்ரஹ்மமாக இருந்தும் அதிலிருந்து வேறுபட்டவனாக நினைக்கிறான். இம்மாதிரியான அபிமானம், அக்ஞானம், அவித்யையைத்தான் பாசமென்றும் அதனால்

கட்டுப்பட்ட ஜீவனைப் பசுவென்றும் அவைகளுக்குக் கட்டுப்படாமல் அவைகளுக்கு யஜமானனாக இருக்கும் ஈசுவரனைப் பதியென்றும் சொல்லப்படும். பசுவாகிய ஜீவனானவன் இந்தப் பாசத்திலிருந்து விடுபட்டுவிட்டால் பதியாக ஆகிவிடுகிறான், என்று சொல்லப்பட்டது.

'பாசபத்தோ பவேத் ஜீவ: பாசமுக்த: ஸதாசிவ:, (குலார்ணவம்)

8. மேலே சொல்லிய காரண சரீரமானது மற்றைய ஸூக்ஷ்ம ஸ்தூலசரீரங்களுக்கு காரணமாக இருப்பதால் அதற்கு அம்மாதிரிப்பெயர். இது ப்ரக்ருதி மயமான சரீரம். இது ஜீவனானவன் முக்தியடையும்வரையில் அவனுக்கிருந்து முக்தியடையும்போது அதிலிருந்து விடுபட்ட ஜீவனானவன் பரப்ரம்ஹத்துடன் ஐக்யமாகிறான்.

ஜீவனானவன் ஸுஷுப்தியவஸ்தையிலிருக்கும்போது இந்தக்காரண சரீரத்தின் மூலமாக வ்யவஹரிக்கிறான். காரண சரீரத்திலிருந்து ஸூக்ஷ்ம சரீரம் ஏற்படுகிறது. இதையே லிங்க சரீரமென்றும் புர்யஷ்டகமென்றும் சொல்லப்படும். இதின் அம்சங்களின் வரிசையாவன— அந்த: கரணமாகிய மனஸும் பாஹ்யகரணங்களான இந்த்ரியங்களும் அவைகளால் அறியப்படும் தன்மாத்ரைகளும். இந்த்ரியங்கள் இருவகை—ச்ரோத்ர, த்வக், சக்ஷுஸ், ஜிஹ்வா, நாஸிகைகளான ஞானேந்த்ரியங்கள் ஐந்தும், வாக், பாணி, பாத, பாயு, உபஸ்தங்களான கர்மேந்திரியங்கள் ஐந்தும், ஆகப் பத்து இந்த்ரியங்கள். இந்த இந்த்ரியங்கள் எல்லாம் மனதிற்குக் கட்டுப்பட்டவை. அவைகளின் மூலமாக மனதானது பாஹ்யமான ஜகத்தில் ஸம்பந்தப்படுகிறது. ஆயினும் இந்த்ரியங்களெல்லாவற்றிற்கும் மனதானது யஜமானனாகையால் அவைகளின் ஒத்தாசையில்லாமலேயே தனக்கு இஷ்டமான கார்யங்களை ஸாதித்துக்கொள்ளும்படியான சக்தி அதற்கு உண்டு. ஜீவனானவன் ஸ்வப்னவஸ்தையிலிருக்கும்போது இந்த ஸூக்ஷ்ம சரீரத்தின் மூலமாக வ்யவஹரிக்கிறான்.

9. ஸ்தூலரூபமான ஜகத்தை ஜீவனானவன் ஐந்துவிதங்களால் அறிகிறான். இந்த விதங்கள் கேட்பது, தொடுவது, பார்ப்பது, ருசிபார்ப்பது, முகருவது. இவ்வைந்து விதமாக பஞ்சபூதாத்மகமான ஜகத்தை ஜீவனானவன் அறிகிறான். இந்த

அறிவுகளுக்கு தன்மாத்ரைகளென்று பெயர். இந்த அறிவுகள் ஐந்துவிதம்-பஞ்சதன்மாத்ரைகள். அவையாவன சப்த, ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்தம். பஞ்சபூதங்களான ப்ரிதிவி, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம். ப்ரிதிவியை மேலே சொல்லிய ஐந்து அறிவுகளாலேயும் தெரிந்துகொள்ளலாம். அப்புவுக்கு (சுத்த ஜலத்திற்கு) வாஸனை கிடையாதாகையால் அதற்கு கந்த தன்மாத்ரையைத் தவிர பாக்கியெல்லாம் உண்டு. ஆகவே ப்ருதிவியை அறியக்கூடிய தன்மாத்ரை கந்தமாகையால், ப்ரிதிவிக்கு கந்தம் தன்மாத்ரையென்று சொல்லப்படும். [பாக்கி தன்மாத்ரைகளிலிருந்தபோதிலும் கந்தத்தின் மூலமாக விசேஷமாக அறியப்படுவதால் அம்மாதிரி சொல்லப்பட்டது.] இம்மாதிரியே அப்புவுக்கு ரஸம் தன்மாத்ரை, தேஜஸுக்கு ரூபம் தன்மாத்ரை, வாயுவுக்கு ஸ்பர்சம் தன்மாத்ரை, ஆகாசத்திற்கு சப்தம் தன்மாத்ரை.

10. இம்மாதிரியான தன்மாத்ரைகளுக்கு இந்திரியங்கள் தான் காரணம், ஆதாரம். இந்திரியங்களுக்கு மனஸ் தான் ஆதாரமென்றும் காரணமென்றும் ஏற்கனவே சொல்லப்பட்டது. மனஸ், இந்த்ரியங்கள், தன்மாத்ரைகள் இவை அடங்கிய சரீரத்தை ஸூக்ஷ்ம சரீரமென்று சொல்லப்படும்.

11. மேலே சொல்லிய பஞ்சதன்மாத்ரைகள் பஞ்ச பூதங்களுக்கு ஆதாரமாகவும், காரணமாகவுமிருக்கின்றன. இந்த பஞ்ச பூதாத்மகமான தேஹத்தை ஸ்தூல தேஹமென்று சொல்லப்படும். இதின் மூலமாகத்தான் ஜீவனானவன் தான் ஜாக்ராவஸ்த்தையிலிருக்கும்போது லோகத்தில் வ்யவஹாரம் பண்ணுகிறான். [பாஹ்ய கரணங்களால் அறியப்படும் வஸ்துவை பூதமென்று சொல்லப்படும்.]

12. ஸ்தூல தேஹத்தின் மூலமாக வ்யவஹாரம் பண்ணும் ஜீவனுக்கு விச்வன் என்றும், ஸூக்ஷ்ம தேஹத்தின் மூலமாக வ்யவஹாரம் பண்ணும் ஜீவனுக்கு தைஜஸன் என்றும், காரண சரீரத்தின் மூலமாக வ்யவஹாரம் பண்ணும் ஜீவனுக்கு ப்ராக்ஞன் என்றும் பெயர்.

13. ப்ரக்ருதியிலிருந்து ப்ருதிவி வரையில் தத்வங்கள் ஏற்படுவதைச்சொல்வது ஸ்ருஷ்டி க்ரமமென்றும், ப்ருதிவியிலிருந்து

ஆரம்பித்த தத்வங்கள் மேலுக்குமேல் ஸூக்ஷ்மமாகி கடைசியில் ப்ரக்ருதியில் லயமாவதைச் சொல்வது ஸம்ஹார க்ரமமென்றும், சொல்லப்படும். ஸ்ருஷ்டி க்ரமமாகச் சொல்லிக்கொண்டு வருகையில் ஆதியில் தமஸ் ஏற்படுகிறது. பிறகு மஹத் என்று சொல்லப்படும் புத்தியானது ஏற்படுகிறது. அப்போது அஹம் என்ற ஒருவிதமான பற்றுமில்லாததாக இருக்கிறது. அதற்கு பிறகு அஹம் என்ற நினைவுடன் ஜீவன் இருக்கிறான். அதற்கு மேல் பஞ்ச தன்மாத்ரைகளும், பஞ்ச ஞான சக்திகளும், பஞ்ச கர்ம சக்திகளும் ஏற்படுகின்றன. பஞ்ச ஞான சக்திகள் தனித் தனியாகப் பஞ்ச ஞானேந்த்ரியங்களையும் சேர்ந்தாற்போல் அந்த: கரணத்தையும் உண்டாக்குகின்றன. அதேமாதிரி பஞ்ச கர்ம சக்திகள் தனித்தனியாகப் பஞ்ச கர்மேந்திரியங் களையும் சேர்ந்தாற்போல் ப்ராணனையும் உண்டாக்குகின்றன. பஞ்ச தன்மாத்ரைகள் பஞ்ச பூதங்களாக வெளித்தோன்று கின்றன. இதில் சைதன்யமானது தனித்தனியான ஸ்தூல பூதங்களுடைய உபாதிகளோடு கூடியிருக்கும்போதும், ஸூக்ஷ்ம பூதங்களுடைய உபாதிகளோடு கூடியிருக்கும்போதும், காரண உபாதிகளோடு கூடியிருக்கும்போதும் முறையே விச்வன், தைஜஸன், ப்ராக்ஞன் என்ற பெயர்களால் சொல்லப்படுகிறது. இந்த விச்வ, தைஜஸ, ப்ராக்ஞர்களின் ஸமஷ்டி ரூபங்கள் முறையே வைச்வானரென்றும், ஹிரண்யகர்ப்பனென்றும், ஈச்வரனென்றும் பெயருடையவையென்று ஏற்கனவேயே சொல்லப்பட்டது. பரமாத்மாவானது அந்த: கரணமாகிற காரண ரூபத்தில் தோன்றும்போது ஹிரண்யகர்ப்பன் என்று பெயர். ப்ராணன் என்கிற காரண ரூபத்தில் தோன்றும்போது ஸூத்ராத்மா என்று பெயர். இந்த அந்த: கரணம், ப்ராணன் இவையிரண்டும் வேறுபடாமல் சேர்ந்திருக்கும்போது அப் போது தோன்றும் பரமாத்மாவை அந்தர்யாமீ என்று சொல்லப் படும். இந்த ஹிரண்யகர்ப்பன், ஸூத்ராத்மா, அந்தர்யாமீ இம் மூவரையும்தான் முறையே ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன் என்று சொல்லப்படும்.

இம்மாதிரி பிரிவைத்தான் உபநிஷத்துக்களை அனுஸரிப்ப வர்கள் ஒப்புக்கொள்ளுவார்கள். அவர்கள் ஜாக்ரத், ஸ்வப்ன,

ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகள்தானென்றும், ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரமென்ற மூன்று க்ரியைகள்தானென்றும், சொல்லுவார்கள். தாந்த்ரிகர்களோ இவைகளுடன் துரீயம், துரீயாதீதமென்ற இரண்டு அவஸ்த்தைகளையும், திரோதானம், அனுக்ரஹமென்ற இரண்டு க்ரியைகளையும் சேர்த்துச் சொல்வார்கள். ஆக இவர்கள் மதத்தின்படி பஞ்சவிதமான அவஸ்த்தைகளும் பஞ்சவிதமான க்ரியைகளுமிருப்பதாகச்சொல்லப்படும். ஸுஷுப்தியில் ஜீவனுனவன் பரப்ரம்ஹத்தோடு முற்றிலும் கலந்துவிடுகிறதில்லையென்றும், அதற்குமேல் துரீயம், துரீயாதீதம் என்ற இரண்டு அவஸ்தைகளிருப்பதற்குக் காரணமும் ஏற்கனவேயே சொல்லப்பட்டது ஸுஷுப்தியில் ஜீவனுனவன் காரணசரீரத்துடன் வ்யவஹாரம்செய்வதுபோல் துரீயாவஸ்த்தையில் ஜீவன் வ்யவஹாரம் பண்ணும் சரீரத்திற்கு மஹாகாரணசரீரமென்று பெயர். அதற்கு மேல் துரீயாதீத அவஸ்தையில் ஜீவனுனவன் எவ்வித உபாதியும் அவஸ்தையுமில்லாமல் பரப்ரம்ஹத்தோடு ஐக்கியமாகிவிடுகிருன் அதைத்தான் பின்வரும் நாமங்களில் சொல்லப்பட்டது.

(இந்த விஷயத்தையொட்டி இன்னம் அதிகமாக பாஷ்யத்தின் மூலத்தில் சொல்லப்பட்டிருந்தபோதிலும் அது மிகவும் ஸூக்ஷ்மமான விஷயமாகையால் விரிவுக்கஞ்சி இத்துடன் நிறுத்தப்பட்டது.)

## जागरिणी

## ஜாகரிணீ (257)

ஜாகராவஸ்தையிலிருக்கும் ஜீவனோடு அபின்னமாக இருப்பவள்.

1. ஸ்தூல சரீராபிமானியாகிய விச்வனெனப்படும் ஜீவனுனவன் ஜாகராவஸ்தையிலிருப்பதால் அவளை ஜாகரீ என்று சொல்லப்படும்.

## स्वपन्ती

## ஸ்வபந்தீ (258)

ஸ்வப்நாவஸ்தையிலிருக்கும் ஜீவனுடன் அபின்னமாக இருப்பவள்.

**तैजसात्मिका** (259)

**தைஜஸாத்மிகா**

(மேலே சொல்லிய) தைஜஸனுகிய ஜீவன்களுடைய ஸமஷ்டி ரூபமான ஹிரண்யகர்ப ஸ்வரூபமாக இருப்பவள்.

**सुप्ता** (260)

**ஸுப்தா**

ஸுஷுப்தியவஸ்தையிலிருக்கும் ஜீவனுடன் அபின்னமாக இருப்பவள்.

**प्राज्ञात्मिका** (261)

**ப்ராக்ஞாத்மிகா**

(மேலே சொல்லிய) ப்ராக்ஞனுகிய ஜீவன்களுடைய ஸமஷ்டி ரூபமான ஈச்வர ஸ்வரூபமாக இருப்பவள்.

ஸுஷுப்தியிலிருக்கும் ஜீவனானவன் கண்விழித்தவுடன் 'எனக்கு ஒன்றுமே தெரியவில்லை. ஸுகமாகத் தூங்கினேன்' என்று சொல்லும்போது அவனிடமிருக்கும் அவித்யை யின் மூன்று வ்ருத்திகள் வெளியாகின்றன. அதாவது அக்ஞானம் (ஒன்றும் தெரியாமலிருப்பது) அஹம்கா (நான் என்று வேறுபட்டு நினைப்பது) ஸுகம், இம்மூன்றும் இருக்கும் படியான அவஸ்தைக்கு ஸுஷுப்தியென்று பெயர்.

**तुर्या** (262)

**துர்யா**

(மேலே சொல்லிய) துரீயாவஸ்தையிலிருக்கும் ஜீவனோடு அபின்னமாக இருப்பவள்.

1. ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி அவஸ்தைகளையும், அவைகளில் வ்யவஹாரம் பண்ணும் ஜீவபேதங்களையும், நன்ருகப் பகுத்தறிவதனுல் உண்டாகும் சுத்தவித்யா என்பது உதயமாகும் அவஸ்தைக்கு துரீயாவஸ்தை என்று பெயர். இந்த அறிவை யடைந்தவன் மற்ற மூன்று அவஸ்தைகளிலிருந்தபோதிலும் அவைகளால் பாதிக்கப்படாமலிருப்பான் என்று சொல்லப் பட்டது.

த்ரிஷு தாமஸு யத்போக்யம் போக்தா யச்ச ப்ரகீர்த்தித: |
வித்யாத் ததுபயம் யஸ்து ஸ புஞ்ஜானோ ந லிப்யதே ||'

(ஸ்பந்த சாஸ்த்ரம்)

இந்த நிலைமையையடைந்த யோகிகளுக்கு அந்த அவஸ்தை தான் உண்மையானது என்றும் மற்ற மூன்றும் உண்மையல்ல வென்றும் தோன்றும்.

'துர்யம் நாம பரம் தாம ததா போகச் சமர்க்ரியா |
பேதேऽபி ஜாக்ருதாதீனும் யோகிநஸ்தஸ்ய ஸம்பவேத் ||'

'ஜாக்ரத் ஸ்வப்ன ஸுஷுப்தி பேதேऽபி துர்யாபோகஸம்பவ: |'

இந்த துரீயாவஸ்தையிலேற்படும் ஆனந்தமானது 'த்ரிஷு சதுர்த்தம் தைலவத் ஆஸேச்யம்,' என்றபடி மற்ற மூன்று அவஸ்தைகளிலும் (விதைக்குள் தைலம் பரவியிருப்பதுபோல) பரவியிருக்கும்.

2. இந்த அவஸ்தையிலிருப்பவனும் மஹாகாரண சரீராபிமானியாயுமிருக்கும் ஜீவனுக்கு துர்யனென்று பெயர். துர்ய ஜீவன்களுடைய தனித்தனியான ரூபமாகவும் ஸமஷ்டி ரூபமாகவும் அம்பாள் இருப்பதினால் 'துர்யா' என்று பெயர்.

3. இம்மாதிரியான துரீயாவஸ்தையை அடையும் மார்க்கத்தைப்பற்றி 'மன: ஸ்வசித்தேன ப்ரவிசேத்' என்ற சிவ ஸூத்திரத்திலும் அதின் வார்த்திகத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

4. 'சிவமத்வைதம் சதுர்த்தம் மன்யந்தே' என்ற ச்ருதி வாக்யத்தில் சொல்லப்பட்ட ப்ரஸித்த ஸ்வரூபமுடைய தேவதையைக் குறித்ததாகவும் சொல்லலாம். அல்லது துரீயானந்த நாதரென்ற குருவுக்கு ப்ரஸன்னமானதினால் துர்யா என்று அம்பாளுக்குப் பெயர் வந்ததாகவும் சொல்லலாம்.

'துரீயானந்த நாதஸ்ய ப்ரஸன்னத்வாத் வரானனே |
துர்யேதி நாம விக்யாதம் தஸ்ய தேவ்யா நிரந்தரம் ||'

(த்ரிபுரா ஸித்தாந்தம்)

5. எப்படி ஸதாசிவனெனவர் ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன் முதலானவர்களாக இல்லாமல் அவர்களுக்கு மேல்பட்டவராக

இருப்பதுமாகிரி அம்பாள் ஸரஸ்வதி, லக்ஷ்மீ, பார்வதி முதலான வர்களாக இல்லாமல் மஹாமாயா என்ற துரீயஸ்வரூபமாக இருப்பதாக ஆசார்யாளால் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

'கிராமாஹுர் தேவீம் த்ருஹிண க்ருஹிணீம் ஆகமவிதோ
ஹரே: பத்னீம் பத்மாம் ஹரஸஹசரீம் அத்ரிதனயாம் |
துரீயா காபி த்வம் துரதிகம நிஸ்ஸீம மஹிமா
மஹாமாயா விச்வம் ப்ரமயஸி பரப்ரம்ஹ மஹிஷி ||'

(ஸௌந்தர்யலஹரீ)

## सर्वावस्थाविवर्जिता

## ஸர்வாவஸ்த்தா விவர்ஜிதா (263)

ஸர்வ விதமான அவஸ்தைகளோடும் கூடியிருக்காதவள்.

1. துரீயாவஸ்த்தையையும் கடந்த (துரீயாதீதமான) அவஸ்தை ஒன்று ஜீவனுக்கு உண்டென்று ஏற்கனவே சொல்லப்பட்டது. அப்படிப்பட்ட அவஸ்தையிலிருக்கும் ஜீவன் களோடு ப்ரத்யேகமாகவும் ஸமஷ்டியாகவும் அம்பாள் அபின்ன மாக இருப்பது இங்கு சொல்லப்பட்டது. இந்த துரீயாதீதமான ஸ்வரூபமானது வாஸ்தவத்தில் யாதொரு விதமான அவஸ்தைக் கும் உள்பட்டதாக இல்லாததினால் அதை ஸர்வாவஸ்தா விவர்ஜிதமான ரூபமென்று சொல்லப்பட்டது. அது துரீயத்தையும் கடந்ததாகையாலும் அதில் ஜீவனானவன் அவஸ்த்தா ரஹிதனாயிருக்கும் பரப்ரம்ஹத்துடன் ஒன்றறக் கலந்துவிடுவதால் அதற்கு துரீயாதீதம் என்பதைத் தவிர வேறு பெயர் கிடையாது. இது துரீயத்தை கடந்ததாகையாலும் துரீயமானது ஜாக்ரத், ஸ்வப்ன ஸுஷுப்தி அவஸ்தைகளைக் கடந்ததாகையாலும் இதை அவ்விதமான ஸகல அவஸ்தை களையும் கடந்ததென்று சொல்லப்பட்டது. மேலும் இந்த துரீயாதீத ஸ்வரூபம் வந்தவுடன் முந்திய அவஸ்தைகளுக்குத் திரும்புவது ஏற்பட்டதாகையால் அவைகளிலிருந்து (விவர்ஜித) விடுவிக்கப்பட்டதாகச் சொல்லப்பட்டது. பெயருக்கு மாத்ரம் தான் அதை (துரீயாதீதமான) அவஸ்தையென்று சொல்வது.

2. இந்த ஐந்தாவதான அவஸ்தையானது துரீயாவஸ்தை யில் த்ருடமாக இருப்பது ஏற்பட்டபிறகு ஜீவனுக்கு உண்டாகும்.

'தூர்யாவஷ்டம் பதோ லப்யம் துர்யாதீதம் பரம் பதம் |'

'தூர்யாப்யாஸ ப்ரகர்ஷேண துர்யாதீதாத்மகம் பதம் |
ஸம்ப்ராப்த: ஸாதக: ஸாக்ஷாத் ஸர்வலோகாந்தராத்மனு |
துல்ய: சிவேன சின்மாத்ர ஸ்வச்சந்தானந்த சாலினா ||'

3. இந்த துரீயாதீத நிலைமையிலிருக்கும் ஜீவனுடைய லக்ஷணங்களைப்பற்றி பின்வருமாறு வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

'சரீரவ்ருத்திர் வ்ரதம், கதா ஜப:, தானம் ஆத்மக்ஞானம்'

(சிவஸூத்ரம்)

தன்னுடைய ஆத்மாவை சிவனுடன் அனுஸந்தானம் பண்ணுவதின் மூலமாக சிவ பூஜையைச் செய்வதினுல் அவன் சரீரத்தை தரிப்பது (சிவ பூஜாத்மகமான) வ்ரதத்தை அனுஷ்டிப்பதற்கே தவிற வேறு துச்சமான ப்ரயோஜனத்திற்காக அல்ல. இதை உத்தேசித்தேதான்,

'அந்தருல்லஸித ஸ்வச்ச சக்தி பீயூஷ போஷிதம் |
பவத் பூஜோப போகாய சரீரமிதமஸ்து மே ||'

என்று பட்டோத்பவரால் சரீரம் வேண்டுமென்று பிரார்த்திக்கப்பட்டது.

4. மேலும் அவனுடைய சித்தமானது ஸத்யத்தையே கடைப்பிடித்ததாகையால் அவன் ஸாதாரணமாகப் பேசும் வார்த்தைகள்கூட ஜப ரூபமாக இருக்கிறதாகச் சொல்லப்பட்டது.

'நிர்விசார வைசாரத்யே அத்யாத்ம ப்ரஸாத:'
'ருதம் பரா தத்ர ப்ரக்ஞா' [யோகஸூத்ரம்.]

4. "யத்ஹி மனஸா த்யாயதி தத்வாசா வததி" என்று ச்ருதியில் சொல்லப்பட்டபடி அவன் சொல்லும் எல்லா வார்த்தைகளும் யதார்த்த ரூபமாகயிருப்பதால் மந்த்ரரூபமாக இருக்கின்றன. இந்தக் காரணத்தால்தான் ஸாதுக்கள் உபதேசம் என்று செய்யாவிட்டாலும் அவர்கள் ஸாதாரணமாகப் பேசும் வார்த்தைகளே உபதேசங்களாக இருப்பதால் அவர்களை அடைந்து கடைத்தேறவேண்டுமென்று யோகவாஸிஷ்டத்தில் சொல்லப்பட்டது.

'ஸதா ஸந்தோऽபிகந்தவ்யா யத்யப்யுபதிசந்தி நோ |
யா ஹி ஸ்வைரகதாஸ்தேஷாம் உபதேசா பவந்தி தா: |'

5. பிறர்களுக்கு ஆத்மோபதேசத்தைச் செய்வதையே தானமாக அவர்கள் கைக்கொண்டிருப்பதாகச் சொல்லப் பட்டது. ஆத்ம ஸாக்ஷாத்காரம் என்கிற மஹத்தான தனம் அவனுக்கு கிடைத்தவுடன் அதை அவன் பிறர்களுக்கு தானம் செய்யத் தயாராக இருக்கிறான்.

'ப்ரோக்த சைதன்ய ரூபஸ்ய ஸாக்ஷாத்கரணமாத்மன: |
யத்தத்க்ஞானம் ததேவாஸ்ய தானம் யத்தேன தீயதே ||'

துர்யாதீதமான அவஸ்தையிலிருக்கும் ஜீவனானவன் பாஹ்ய லோகத்தில் செய்யும்படியான ஸகலவிதமான கார்யங்களும் அம்பாளுடைய பூஜாப்ரகாரமாக இருக்குமென்று ஆசார்யாளா லும் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஜபோ ஜல்ப: சில்பம் ஸகலமபி முத்ராவிரசனா
கதி: ப்ராதக்ஷிண்யக்ரமணம் அசனாத்யாஹுதி விதி: |
ப்ரணம: ஸம்வேச: ஸுகமகிலம் ஆத்மார்பணத்ருசா
ஸபர்யா பர்யாயஸ்தவ பவது யன்மே விலஸிதம் ||'

(ஸௌந்தர்ய லஹரீ)

6. இதேமாதிரியாகத்தான் வார்திகத்திலும் சொல்லப் பட்டிருக்கிறது.

'இதிப்ரோக்தம் வ்ரதம் குர்வன் ஜபம் சர்யாம் ச பாலயன் |
சிவதுல்ய: ஸதா ஸ்வாத்மா சிவாராதன தத்பர: ||
அயமேவ மஹாயோகீ மஹாமந்த்ர துரந்தர: |
அந்தேவாஸி ஜனஸ்யாந்த: தத்வதஸ்தத்வபோதக: ||'

7. இந்த அவஸ்தையானது வர்ணனைக்கு கோசரமில்லா தது, அதின் ஸ்வரூபம் அதை அனுபவித்தவர்களுக்குத்தான் தெரியும்.

'ஆனந்தைக கனத்வம் யத்வாசாம்பி ந கோசரோ ந்ருணாம் |
துர்யாதீதாவஸ்தா ||' (வரிவஸ்யா ரஹஸ்யம்)

இம்மாதிரி அவித்யையினால் வசப்பட்டிருக்கும் ஜீவனுடைய ஐந்துவிதமான பேதங்களைச் சொல்லிவிட்டு மாயை (அவித்யை) யை வசப்படுத்தியிருக்கும் ஈச்வரனுடைய பேதங்களை அவரவர் களுடைய க்ருத்யங்களின் பேதங்கள் ப்ரகாரம் வர்ணிக்கத் துடங்குகிறார்.

**सृष्टिकर्त्री**

**ஸ்ருஷ்டிகர்த்ரீ** (264)

ஸ்ருஷ்டியைச் செய்கின்றவள்.

ஸ்ருஷ்டி, அதாவது லோகங்களை நிர்மாணம் செய்வது ரஜோகுணப்ரதானராகிய ஈச்வரனுடைய கார்யம், அதை அம்பாள் செய்கிறதாக இங்கு சொல்லப்பட்டது.

**ब्रह्मरूपा**

**ப்ரம்ஹரூபா** (265)

ப்ரம்ஹா என்ற ரூபமாக இருப்பவள்.

சதுர் முகத்தோடு கூடிய ப்ரம்ஹாவானவர் பரப்ரம்ஹத்தினுடைய மூன்று சக்திகளில் ஒருவரென்பது.

ப்ரம்ஹ விஷ்ணு சிவா ப்ரம்ஹன் ப்ரதானு ப்ரம்ஹ சக்தய: |

என்று விஷ்ணுபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

**गोप्त्री**

**கோப்த்ரீ** (266)

காப்பாற்றுகிறவள்.

கோபனம் என்பது லோகங்களுக்கு ஸ்திதியைக்கொடுப்பது. அது ஸத்வகுணப்ரதானரான ஈச்வரனுடைய கார்யம். அதை அம்பாள் செய்வதாக இங்கு சொல்லப்பட்டது.

**गोविन्दरूपिणी**

**கோவிந்த ரூபிணீ** (267)

(கோவிந்தராகிய) விஷ்ணு என்ற ரூபமாக இருப்பவள்.

1. உமாதேவியும் விஷ்ணுவும் ப்ரக்ருதியின் அம்சங்களென்பது

'ப்ரக்ருத்யா: ப்ரதமோ பாக: உமாதேவீ யசஸ்வினீ |

வ்யக்த: ஸர்வமயோ விஷ்ணு: ஸ்திரீஸம்ஞோ லோகபாவன: ||'

என்று நாரதரால் ஹரிவம்சத்தில் சொல்லப்பட்டது.

கோவிந்த என்ற பதத்திற்கு அனேக அர்த்தங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. பகவான் கிருஷ்ணாவதாரத்தில் பசுக்களுக்கெல்லாம் இந்திரனாக இருந்ததால் கோவிந்தன் என்ற பெயர் என்பதாக.

அஹமிந்த்ரோ ஹி தேவானாம் த்வம் கவாம் இந்த்ரதாம் கத: |
கோவிந்த இதி நாம்னா த்வாம் புவி காஸ்யந்தி மானவா: ||

என்று (பாரதம்) மோக்ஷதர்மத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. வாக்கின் (சப்தத்தில்) விசேஷத்தை தெரிந்தவராதலால் கோவிந்தன் என்று பெயர் வந்ததாக.

கௌரேஷாது ததாவாணீ தாம் ச விந்தயதே பவான் |
கோவிந்தஸ்து ததோ தேவ முனிபி: கத்யதே பவான் ||

என்று ஹரிவம்சத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'கோவிந்தோ வாஸுதேவே ஸ்யாத்கவாத்யக்ஷே ப்ருஹஸ்பதௌ' என்றபடி கோவிந்த: என்ற பதமானது ப்ருஹஸ்பதியையும் குறிக்குமாகையால் அவர் ரூபமாக இருப்பவளென்றும் சொல்லலாம்.

## संहारिणी

## ஸம்ஹாரிணீ (268)

ஸம்ஹாரம் செய்பவள்

ஸம்ஹாரமென்பது லோகங்களை பரமாணுக்களாக த்வம்ஸம் செய்வது. இது தமோகுண ப்ரதானராகிய ஈச்வரனுடைய கார்யம். அதை அம்பாள் செய்வதாக இங்கு சொல்லப்பட்டது.

## रुद्ररूपा

## ருத்ர ரூபா (269)

ருத்ரன் என்ற ரூபமாக இருப்பவள்.

1. ருத்ரன் என்பவர் மேலே சொல்லிய க்ருத்யத்தை செய்யும் ஈச்வரனுடைய ரூபம்.

2. ருத்ரன் என்ற பதத்திற்கு அனேக அர்த்தங்கள் உண்டு.

'ருஜம் த்ராவயதே தஸ்மாத் ருத்ர: பசுபதி: ஸ்ம்ருத:'

என்று சிவரஹஸ்யத்திலும்.

'ருத் துக்கம் து:கஹேதுர்வா தத் த்ராவ்யதி ய: ப்ரபு: |
ருத்ர இத்யுச்யதே தஸ்மாத் சிவ: பரமகாரணம் ||'

என்று வாயவீய ஸம்ஹிதையிலும் சொன்னபடி துக்கத்தைப் போக்கடிப்பதினால் ருத்ரன் என்று பெயர்.

2. ருத் என்பதற்கு அழுவது, ரோதனம் செய்வது என்று அர்த்தம். மஹா ப்ரளய காலத்தில் ருத்ரனுடைய ஸூர்யனுகிற நேத்ரத்திலிருந்து உண்டாகும் கண்ணீரானது மழையாகப் பெய்வதாகச் சொல்லப்பட்டது.

'ஸோரோதீத் யதரோதீ தத்ருத்ரஸ்ய ருத்ரத்வம்' (ச்ருதி)

ப்ரம்ஹாவினுடைய நெற்றியிலிருந்து ருத்ரன் உண்டானுரென்றும் அப்போது பலமாகவும் பயங்கரமாகவும் ரோதனம் செய்தாரென்று

'துஷ்டயர்த்தே ப்ரம்ஹண: புத்ரோ லலாடாத் உத்தித: ஸ்வயம் |
அருதத் ஸுஸ்வரம் கோரம் ஜகத: ப்ரப்ரவ்யய: ||'

என்று பாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

தேஹத்திலிருக்கும் ப்ராணன்களுக்கும் ருத்ரனென்று பெயர்.

'ப்ராணு வாவ ருத்ரா ஏதே ஹீதம் ஸர்வம் ரோதயந்தீ'
(சாந்தோக்யோபனிஷத்)

## तिरोधानकरी

## திரோதானகரீ (270)

மறைத்துவிடுகிறவள்.

1. மேலே சொல்லியபடி ஸகல லோகங்களையும் பரமாணுக்களாக ஸம்ஹாரம் பண்ணிய பிறகு அந்த பரமாணுக்களையும் பாக்கியில்லாமல் த்வம்ஸம் செய்து அவைகளை மறைத்து ப்ரக்ருதியில் லயம் அடையும்படிச் செய்வது திரோதானம். [எரிந்து கொண்டிருக்கும் விளக்கை அணைத்தால் அந்த ஜோதிஸ் மறைந்துபோவதை இதற்கு உபமானமாகச் சொல்லப்படும்.]

இது கனதரமான (மிகவும் அதிகமான) சுத்த ஸத்வ குணத்தை ப்ரதானமாகவுடைய ஈச்வர ரூபத்தின் கார்யம். இதை அம்பாள் செய்வதாகச் சொல்லப்பட்டது.

2. திரஸ்கரிணீ என்று சொல்லப்படும் சக்தி விசேஷ ரூபமாக அம்பாள் இருப்பதாகவும் சொல்லலாம். பக்தி இல்லாத வர்களுக்கு அம்பாளுடைய ஸாக்ஷாத்காரம் ஏற்படாமலிருக்கும் படி மறைத்துவிடுவதாக திரஸ்கரிணீயைப்பற்றிச் சொல்லப் படும்.

'அபக்தானும் ச ஸர்வேஷாம் திரோதானகரீ யத: |
ஸ்ரீஸ் திரஸ்கரிணீ தஸ்மாத் ப்ரோக்தா ஸத்யம் வரானனே ||'

(திரிபுரா ஸித்தாந்தம்)

## ईश्वरी

(271)

### ஈச்வரீ

ஈச்வர ரூபமாக இருப்பவள்.

மேலே சொல்லிய திரோதானமென்ற க்ருத்யத்தைச் செய்யும் அதிகாரமுடையவர் ஈச்வரன். இவர் கனதரமான சுத்த ஸத்வகுணத்தையே ப்ரதானமாக உடையவர். [பொது வாக ஈச்வரனென்ற பெயர் ஆதிபுருஷரான ஸர்வேச்வரனைக் குறிப்பதாகயிருந்தாலும் இங்கு அவருடைய சக்திபேதங்களை யனுஸரித்து தனியான அர்த்தமுடைய பெயராக இருக்கிறது.] திரோதான சக்தியையுடைய ஈச்வரனோடு அபின்னமாக அம்பாள் இருப்பதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

2. ஈச்வரத்வம் என்பதின் அர்த்தம் பராஹந்தா ஸர்வ கர்த்ருத்வம், ஸ்வதந்த்ரதை.

'ஈச்வரதா கர்த்ருத்வம் ஸ்வதந்த்ரதா சித்ஸ்வரூபதா சேதி |
ஏதே சாஹந்தாயா: பர்யாயா: ஸத்பிருச்யந்தே ||'

(விருபாக்ஷ பஞ்சாசிகா)

அம்மாதிரி அம்பாள் இருப்பதால் ஈச்வரீ என்று பெயர். இப்படி அம்பாள் ஈச்வரனுடைய பராஹந்தா ரூபமாக இருப் பதை

"புரஸ்தாத் ஆஸ்தாம் ந: புரமதிது ராஹோ புருஷிகா"

என்று ஆசார்யாளால் ஸௌந்தர்யலஹரியில் சொல்லப்பட்டது.

सदाशिवा

ஸதாசிவா (272)

ஸதாசிவரூபமாக இருப்பவள்.

अनुग्रहदा

அனுக்ரஹதா (273)

அனுக்ரகத்தைச் செய்பவள்.

1. பாக்கியில்லாமல் த்வம்ஸம் செய்யப்பட்டு திரோதான மடைந்த ஜகத்தைத் திரும்பவும் ஸ்ருஷ்டிப்பதற்காக பரமாணு முதலான ரூபமாக உண்டாகும்படி செய்வதை அனுக்ரஹம் என்று சொல்லப்படும். இது மேலே சொல்லிய ஸதாசிவனுடைய க்ருத்யம். இவ்விதமான அனுக்ரஹம் என்பதைச் செய்யும் ஸதாசிவனோடு அம்பாள் அபின்னமாக இருப்பதால் ஸதாசிவா, அனுக்ரஹதா என்ற பெயர்கள் ஏற்பட்டன.

2. ஸதாசிவன் மிகவும் உயர்ந்ததான (உத்க்ருஷ்டமான) சுத்த ஸத்வகுண ப்ரதானரான ஈச்வரனுடைய ரூபம்.

3. திரோதானம், அனுக்ரஹம் இவையிரண்டுக்கும் முறையே பந்தம், மோக்ஷம் என்ற அர்த்தங்கள் உண்டு. இவையிரண்டுக்கும் ஈச்வரன், ஸதாசிவன் இவர்கள் காரணம் என்பதாக இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

पञ्चकृत्यपरायणा

பஞ்சக்ருத்ய பராயணா (274)

(மேலே சொல்லிய) ஐந்துவிதமான க்ருத்யங்களிலும் மிகுந்த முயற்சி யுடையவள்.

1. அல்லது, அவைகளில் மிகவும் ப்ரியமுள்ளவளென்றும் சொல்லலாம். அவைகள் அம்பாளை ஆச்ரயித்திருப்பதாகவும் சொல்லலாம்.

''பாராயணம் அபீஷ்டம் ஸ்யாத் தத்பராச்ரயயோரபி''

2. மேலே சொல்லிய ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அனுக்ரஹம் இவைகளை பஞ்சக்ருத்யங்கள் என்று

சொல்லப்படும். இவைகளுக்கு பரப்ரம்ஹமானது காரண மென்று சொல்லப்பட்டிருக்கிறது.

"ஜகஜ்ஜன்ம ஸ்திதித்வம்ஸ திரோதானைக காரணம் |
பூத பௌதிக பாவானாம் நியமஸ்யைததேவ ஹி ||
(மிருகேந்த்ர ஸம்ஹிதா)

"பஞ்சவிதம் தத்க்ருத்யம் ஸ்ருஷ்டி: ஸ்திதிஸம்ஹ்ருதீ திரோபாவ:
தத்வத் அனுக்ரஹகரணம் ஜகத: ஸததோதிதஸ்யாஸ்ய ||"

3. இவை யெல்லாவற்றையும் ஈச்வரரூபபேதங்களான ப்ரம்ஹா, விஷ்ணு முதலானவர்கள் அம்பாளாகிற சக்தியின் ஒத்தாசையினால்தான் செய்கிறார்களென்றும் அம்பாள் ஸகல ஜகத்தையும் அஹம், மம என்கிற பாவங்களான மாயாபாசத்தால் கட்டிவிடுகிறாளென்றும் அந்த பாசத்திலிருந்து விடுவிக்கப்பட வேண்டுமென்று (மோக்ஷம் அடையவேண்டுமென்று) விரும்பும் மஹான்கள் அதற்காக அம்பாளை உபாஸனை செய்கிறார்களென்றும் சொல்லப்பட்டது.

"ஸா விச்வம் குருதே காமம் ஸா பாலயதி பாலிதம் |
கல்பாந்தே ஸம்ஹரத்யேவ த்ரிரூபா விச்வமோஹினீ ||
தயா யுக்த: ஸ்ருஜேத் ப்ரம்ஹா விஷ்ணு: பாதி தயான்வித: |
ருத்ர: ஸம்ஹரதே காமம் தயா ஸம்மிளிதோ ஜகத் ||
ஸா பத்னாதி ஜகத் க்ருத்ஸ்னம் மாயாபாசேன மோஹிதம் |
அஹம் மமேதி பாசேன ஸுத்ருடேன நராதிப ||
யோகினோ முக்தஸங்காச்ச முக்திகாமா முமுக்ஷவ: |
தாமேவ ஸமுபாஸந்தே தேவீம் விச்வேச்வரீம் சிவாம் ||
(தேவீபாகவதம்)

4. இம்மாதிரி பஞ்சக்ருத்யங்களை அததினுடைய அதிகாரியானவர் அம்பாளுடைய அனுமதியைப் பெற்றுக்கொண்டு செய்வதாகவும் அந்த ஆக்ஞையை அம்பாள் தன் புருவங்களை க்ஷணமாத்ரம் அசைப்பதினால் வெளியிடுகிறாளென்றும் ஆசார்யாளால் 'ஸௌந்தர்ய லஹரி'யில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

"ஜகத்ஸூதே தாதா ஹரிரவதி ருத்ர: க்ஷபயதி
திரஸ்குர்வன்னேதத் ஸ்வமபி வபுரீச: ஸ்தகயதி |
ஸதாபூர்வ: ஸர்வம் ததிதமனுக்ருண்ஹாதி ச சிவஸ்
தவாக்ஞாம் ஆலம்ப்ய க்ஷணசலிதயோர் ப்ரூலதிகயோ: ||

5. சக்தி ஸூத்ரங்களிலும் இம்மாதிரியே,

'ததாபி தத்வத் பஞ்சவிதக்ருத்யானி கரோதி'
என்று சொல்லப்பட்டிருக்கிறது.

## भानुमण्डलमध्यस्था
## பானுமண்டல மத்யஸ்த்தா (275)

ஸூர்ய மண்டலத்தின் மத்தியிலிருப்பவள்.

1. அம்பாளுடைய த்யானப்ரகாரங்களில் அம்பாள் ஸூர்யமண்டலத்தின் நடுவில் இருப்பதாக த்யானம் செய்வது ஒன்று.

'ஸூர்யமண்டல மத்யஸ்தாம் தேவீம் த்ரிபுரஸுந்தரீம் |
பாசாங்குச தனுர்பாணான் தாரயந்தீம் சிவாம் பஜே ||'

2. ஸந்த்யாகாலத்தில் அம்பாளை ஸூர்யமண்டலத்திலிருப்பதாக த்யானம் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

3. ஸூர்யமண்டலத்தில் தெரியும் ஹிரண்மயனான புருஷன் பரமேச்வரன் என்பதாக "ய ஏஷோऽந்தராதித்யே ஹிரண்மய; புருஷோத்ருச்யதே என்ற வேதாந்த ஸூத்திரத்தின் தாத்பர்யம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதே விதமாக கூர்மபுராணத்திலும் ஹிமவான் அம்பாளை ஸ்தோத்ரம் பண்ணும் போது,

"அசேஷ வேதாத்மகம் ஏக வேத்யம் ஸ்வதேஜஸா பூரிதலோகபேதம் |
த்ரிலோக ஹேதும் பரமேஷ்டிஸம்க்ஞம் நமாமிரூபம் ரவிமண்டலஸ்த்தம்||"
என்று சொல்லியிருக்கிறார்.

4. அனாஹத சக்ரத்தை பானுமண்டலம் என்று சொல்வதுண்டு.

## भैरवी
## பைரவீ (276)

(பரமேச்வரனாகிய) பைரவருடைய பத்னீ.

1. ஸ்திரீகள் பயந்த ஸ்வபாவமுள்ளவர்களாகையால் பீருக்களென்று சொல்வது வழக்கம். அவர்களுடைய ஸமஷ்டி (சேர்க்கை)யான ரூபமாக அம்பாள் இருப்பதால் பைரவி என்று பெயர். ஸ்திரீ லிங்கத்தையுடைய ஸகல வார்த்தைகளும் அம்

பாளைக் குறிக்குமென்று லிங்க புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'அர்த்த: சம்பு: சிவா வாணீ திவா சம்பு: சிவா நிசா |
ஸ்திரீ லிங்கஸப்த வாச்யா யா: ஸர்வா கௌர்யா விபூதய: ||'

2. த்ரிபுராம்பிகா சக்ரேச்வரீ மந்த்ரத்தின் மத்யகூடத்தில் ரகாரத்தை எடுத்துவிட்டால் அதை பைரவீ என்று சொல்லப்படும். ஆகவே அந்த மந்த்ராத்மிகையாக அம்பாள் இருப்பதாக இங்கு சொல்லப்பட்டதாகச் சொல்லலாம்.

3. 'த்வாதசாப்தா து பைரவீ' என்றபடி பன்னிரண்டு வயதுள்ள கன்யா ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

## भगमालिनी
## பகமாலினீ (277)

பகமாகிற மாலையை உடையவள்.

1. பகமென்ற பதத்திற்கு அநேக அர்த்தங்களுண்டு.

'ஐச்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய தர்மஸ்ய யசஸ: ச்ரிய: |
ஞான விக்ஞான யோச்சைவ ஷண்ணாம் பக இதீரித: ||'

(காளிகா புராணம்)

'பகம் ஐச்வர்ய மாஹாத்ம்ய ஞான வைராக்ய யோனிஷு ||
யசோ வீர்ய ப்ரயத்னேச்சா தர்ம ஸ்ரீரவி முக்திஷு ||'

1. பூர்ணமான ஐச்வர்யம், தர்மம், யசஸ், ஸ்ரீ, ஞானம், விக்ஞானம், மாஹாத்ம்யம், வைராக்யம், யோனி, வீர்யம், ப்ரயத்னம், இச்சா, ஸூர்யன், முக்தி இவைகள் பகமென்ற பதத்தால் குறிக்கப்படுகிறவை. இவைகளோடு அம்பாள் கூடியிருப்பதால் அவைகளை தரிப்பதாக பகமாலினீ என்று சொல்லப்பட்டது.

2. பகத்தோடுகூடிய ஸகல பதார்த்தங்களும் அம்பாளுடைய அம்சங்களென்றும் லிங்கத்தோடுகூடிய ஸகல பதார்த்தங்களும் சிவனுடைய அம்சங்களென்றும் லிங்க புராணம் தேவீ பாகவதம் முதலியவைகளில் சொல்லப்பட்டிருக்கிறது.

'யே யே பதார்த்தா லிங்காங்காஸ்தே தே சர்வ விபூதய: |
அர்த்தா பங்காங்கிதா யே யே தே தே கௌர்யா விபூதய: ||'

3. இதி நித்யா தேவதைகளில் பகமாலினீ என்ற தேவதை ஒருவள் உண்டு. அந்த ரூபமாக அம்பாள் இருப்பதாக இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம். இந்த தேவதையின் மந்த்ரத்திலும் இவளுடைய பரிவார தேவதைகளின் மந்த்ரங்களிலும் பக சப்தமானது அடிக்கடி வருவதால் பகமாலினீ என்று பெயர் ஏற்பட்டது.

**पद्मासना**

**பத்மாஸனா** (278)

பத்மத்தை ஆஸனமாக உடையவள்.

1. அம்பாள் ப்ரம்ஹா ரூபமாக இருப்பதாலும், ப்ரம்ஹா பத்மத்தை ஆஸனமாக உடையவராக இருப்பதாலும், அம்பாளுக்கு பத்மாஸனா என்று பெயர்.

2. அல்லது, ப்ரக்ருதி மயமான இலைகளோடும் விகாரமயமான இதள்களோடும் ஸம்வித்தாகிய தண்டோடும் கூடிய பத்மத்தைப்பீடமாக உடையவளென்றும் சொல்லலாம்.

3. அல்லது, பக்தர்களுக்கு பத்மாவை (லக்ஷ்மியை) பங்கிட்டுக் கொடுப்பவளென்றும் அர்த்தம் சொல்லலாம்.

'அஸௌ பாக்யம் தத்தே பரம ஸுக போகாஸ்பதமயம்
விசித்ரம் தத்கேஹம் பவதி ப்ருது கார்தஸ்வர ப்ருதம் |
கிவிஷ்ட: பல்யங்கே ஸ கலயதி காந்தார தரணம்
ப்ரஸாதம் கோபம் வா ஜனனி பவதீ யத்ர குருதே ||'

(இந்த ச்லோகத்தின் பதங்களைத் தகுந்தவாறு பிரிப்பதினால் அம்பாளுடைய ப்ரஸாதம், கோபம் இவைகளால் ஏற்படக்கூடிய ப்ரயோஜனங்களைச் சொல்லுவதாக இரண்டு விதமாகவும் பிரித்து அர்த்தம் சொல்லலாம்.)

4. பத்மனென்றால் சூரபத்மனைச் சொல்லப்படும். (சூர) பத்மனை ஸம்ஹாரம் பண்ணியதால் பத்மாஸனா என்று பெயர்.

5. பிந்துவுக்கு பத்மம் என்று பெயர் உண்டு. அதில் வீற்றிருப்பவள் பத்மாஸனா.

6. 'பத்மம் ஸ்யாத் அம்புஜ வ்யூஹ நிதி ஸம்க்யாஹி பிந்துஷு' என்றபடி பத்மம் என்ற பதத்திற்கு இருக்கும் இதர அர்த்தங்களிலும் இம்மாதிரியாகவே சொல்லலாம்.

## भगवती (279)
## பகவதீ

ஐச்வர்யத்தோடு கூடியவள்.

1. பகமென்ற பதத்தினுடைய அர்த்தங்களை 'பகமாலினீ' என்ற 277-வது நாமத்தில் சொல்லப்பட்டது. பகத்தையுடையவள் பகவதீ.

2. அம்பாளுக்கு பகவதீ என்ற பெயர் வந்ததற்குக்காரணம் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

'உத்பத்திம் ப்ரளயம் சைவ பூதானாம் கதிமாகதிம் |
அவித்யா வித்யயோஸ் தத்வம் வேத்தீதி பகவத்யஸௌ ||'
(தேவீபாகவதம்)

'பூஜ்யதே யா ஸுரை: ஸர்வை: தாம்ச்சைவபஜதே யத: |
ஸேவாயாம் பஜதிர்தாது: பகவத்யேவ ஸா ஸ்ம்ருதா ||'
(சக்தி ரஹஸ்யம்)

## पद्मनाभसहोदरी (280)
## பத்மநாப ஸஹோதரீ

பத்மநாபனான விஷ்ணுவுடன் பிறந்தவள்.

1. நித்யமானதும், நிர்தோஷமானதும், நிரதிசயமான ஸுகஸ்வரூபமானதும் சைதன்ய ஸ்வரூபமானதுமான பரப்ரம்ஹமானது தர்ம:, தர்மீ என்று இரண்டு பிரிவாக இருக்கிறது. அதில் தர்ம: என்பது ஸகல விஷயங்களை அநுபவிப்பதும் ஸகல கார்யங்களுக்கு அனுகூலமானதுமான இச்சா சக்தியேயாகும். இதையுடையவர் தர்மீ. தர்ம: என்பது திரும்பவும் ஆண், பெண் என்ற இரு பிரிவாகி விஷ்ணு, சக்தி என்று ஏற்பட்டது. விஷ்ணுவானவர் ஸகல ஜகத்திற்கும் உத்பாதனம் செய்பவராகவும் சக்தியானவள் பரமசிவனுடைய மஹிஷியாகவும் ஆனார்கள். ஆகவே இம்மூவர்களும் ஒருங்கு சேர்ந்ததுதான் அகண்டமான பரப்ரம்ஹமென்பது சைவமத ரஹஸ்யம். இந்த விஷயம் கூர்ம புராணம் முதலியவைகளில் சொல்லப்பட்டு அப்பைய தீக்ஷிதரவர்களால் 'ரத்ன த்ரய பரீக்ஷை'யில் விஸ்தாரமாக நிரூபணம் செய்யப்பட்டிருக்கிறது.

'நித்யம் நிர்தோஷகந்தம் நிரதிசய ஸுகம் ப்ரம்ஹசைதன்யமேகம்
தர்மோ தர்மீதி பேதத்வயமிதி ச ப்ருதக்பூய மாயாவசனே |
தர்மஸ் தத்ராநுபூதி: ஸகல விஷயிணீ ஸர்வ கார்யானுகூலா
சக்திச்சேச் சாதிரூபா பவதி குணகணச்சாச்ரயஸ் த்வேக ஏவ ||
கர்த்ருத்வம் தத்ர தர்மீ கலயதி ஜகதாம் பஞ்ச ஸ்ருஷ்ட்யாதி
[க்ருத்யே
தர்ம: பும் ரூபமாத்யாத் ஸகல ஜகதுபாதான பாவம் பிபர்தி |
ஸ்த்ரீ ரூபம் ப்ராப்ய திவ்யா பவதி ச மஹிஷீ ஸ்வாச்ரயஸ்யாதிகர்து:
ப்ரோக்தௌ தர்மப்ரபேதாவபி நிகம விதாம் தர்மிவத்
[ப்ரம்ஹகோடீ ||
(ரத்ன த்ரய பரீக்ஷை)

2. இதே அபிப்பிராயத்தோடுதான் 'பூர்வ ஜன்மத்தில் ஹிமவானுடைய பத்னியாகிய மேனுவுக்குப் பிறந்த பார்வதியானவள் இந்த ஜன்மத்தில் க்ருஷ்ணனுடைய ஸஹோதரியாக தேவகியிடம் சுபத்ரையென்று பிறந்தாள்' என்பதாக ப்ரம்ஹ புராணம் புருஷோத்தம க்ஷேத்ர மாஹாத்ம்யத்தில் சொல்லப் பட்டது.

'யா மேனு குக்ஷி ஸம்பூதா ஸுபத்ரா பூர்வ ஜன்மனி |
க்ருஷ்ணேன ஸஹ தேவக்யா: ஸாஸ்மின் ஜன்மனி குக்ஷிகா ||'

'ஸுபத்ரா ப்ராண நாதாய ஜகன்னாதாய மங்களம்.' என்பதில் இதற்கு மாறுபாடாகச் சொல்லியிருப்பதாகத் தோன்றினாலும் அங்கே ஸுபத்ரா என்று சொல்லப்பட்டது. லக்ஷ்மீயாகையால் ஏற்கனவேயே சொன்னதற்கு விரோதமில்லை.

3. இதேமாதிரியாக "காத்யாயனீதி யா ஜாதா கம்ஸ சத்ரோஸ் ஸஹோதரீ' என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

4. முன்னொருக்கால் காஞ்சீ க்ஷேத்ரத்தில் ப்ரம்ஹா வானவர் அம்பாளைக் குறித்துத் தபஸ் பண்ணும்போது அம்பாள் தன் ஸஹோதரனான விஷ்ணுவுடன் ஆவிர்பவித்தாள் என்று சொல்லும்போதும் இவ்விதமாகத்தான் சொல்லப்பட்டிருக் கிறது.

'காஞ்சீ க்ஷேத்ரே புரா தாதா ஸர்வலோக பிதாமஹ: |
ஸ்ரீதேவீ தர்சனார்த்தாய தபஸ்தேபே ஸுதாருணம் ||
ஆத்மைக்யத்யான யுக்தஸ்ய தஸ்ய ப்ரதபதோ முனே: |

ப்ராதுர் பபூவ த்ரிபுரா பத்ம ஹஸ்தா ஸலோதரா ||
பத்மாஸனே ச திஷ்டந்தீ விஷ்ணுனா ஜிஷ்ணுனா ஸஹ || '

5. 'பத்மாஸனா பகவதீ பத்மநாப ஸஹோதரீ' என்ற நாமங்களில் பஞ்சதசாக்ஷரியின் ஒருபேதமான காதிவித்யையின் முதலாவது கூடமான வாக்பவ கூடமானது சொல்லப்பட்டிருக்கிறது. இது மந்த்ர பரமாகையால் அதிகாரமுடையவர்கள் பாஷ்யத்தின் மூலத்தைப் பார்த்துக்கொள்ளவும்.

## उन्मेषनिमिषोत्पन्नविपन्नभुवनावली
## உன்மேஷ நிமிஷோத்பன்ன விபன்ன புவனாவளீ

(281)

கண்களைத் திறப்பதினாலும் மூடுவதினாலும் (முறையே) உற்பத்தி நாசம் இவைகளையடையும் லோகங்களின் பங்க்தி களோடு கூடியவள்.

1. அதாவது அம்பாள் தன் கண்ணைத் திறப்பதினால் ஸமஸ்தமான லோகங்களும் ஏற்படுகின்றனவென்றும், கண்களை மூடிவிட்டால் அந்தலோகங்கள் அழிந்துபோகின்றனவென்றும், சொல்லப்பட்டது. வாஸ்தவத்தில் தேவர்களுக்கு கண்களை மூடுதல் என்பது கிடையாதாகையால் அவர்களுக்கு அனிமிஷாள் என்று பெயர். ஆகவே அம்பாள் தன் கண்களை மூடுவதென்பது இல்லையென்றாலும் ப்ராணிகளுடைய கர்ம வசத்தினால் அவைகளுடைய உற்பத்தி ஏற்படுகிறது. அதாவது அம்பாளுடைய இச்சாமாத்ரத்தினால் லோகங்களுடைய ஸ்ருஷ்டி, நாசம், இவைகள் ஏற்படுகின்றன என்பது தாத்பர்யம்.

'இச்சயைவ ஜகத்ஸர்வம் நிகிரத்யுத் கிரத்யபி | '
'இச்சாமாத்ரம் ப்ரபோ: ஸ்ருஷ்டி:'
"த்ருஷ்டத்ருச்யத்ருசி லக்ஷணம் ஜகத்
ப்ராக் ஸ்ம்ருதேஸ்த்வயி ததம்பஸம்ஹ்ருதம் |
உன்மிஷத்யபி புனஸ்த்வதாத்மகே
த்வல்லயே நிமிஷதி த்வதிச்சயா || '

(காளிதாஸர்)

விச்வோன் மேஷதசாயாம் தேசிக நாதஸ்ய யாவானவஸர: |
காலாவஸ்த்தாப்ரதிதோ விச்வநிமேஷேऽபி தாவானேவ பவதி ||

(மஹார்த்த மஞ்ஜரீ )

2. இதே அர்த்தத்தையனுஸரித்துச் சொல்லுகையில் லோகங்களுடைய க்ஷேமத்திற்காகவும் அவைகள் நசித்துப் போகாமலிருக்க வேண்டியும் அம்பாள் தன் கண்களை மூடுவதில்லை என்று ஆசார்யாளால் ஸௌந்தர்ய லஹரியில் வர்ணிக்கப் பட்டிருக்கிறது.

நிமேஷோன் மேஷாப்யாம் ப்ரளய முதயம் யாதி ஜகதீ
தவேத்யாஹு: ஸந்தோ தரணிதர ராஜன்ய தனயே |
த்வதுன்மேஷாத் ஜாதம் ஜகதிதமசேஷம் ப்ரளயத:
பரித்ராதும் சங்கே பரிஹ்ருத நிமேஷாஸ்தவ த்ருச: ||

## सहस्रशीर्षवदना

## ஸஹஸ்ர சீர்ஷவதனு (282)

கணக்கில்லாத சிரஸ், முகம் இவைகளை உடையவள்.

1. ஸஹஸ்ரம் என்ற பதத்திற்கு இங்கு சரியாக ஆயிரம் என்ற அர்த்தமல்ல. அனந்தம், கணக்கில்லாதது என்று அர்த்தம். இதே மாதிரித்தான் 'ஸஹஸ்ர சீர்ஷா புருஷ: ஸஹஸ்ராக்ஷ: ஸஹஸ்ரபாத்' என்பதிலும் அர்த்தம்.

2. பரப்ரம்ஹமானது:—

'ஸர்வத: பாணிபாதம் தத் ஸர்வதோ ऽக்ஷிசிரோமுகம் |
ஸர்வத: ச்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்டதி ||'

என்று கீதையில் சொல்லப்பட்டிருக்கிறது.

இதே மாதிரி அம்பாளைப்பற்றி,

'ஸஹஸ்ர நயனுராமா ஸஹஸ்ர கரஸம்யுதா |
ஸஹஸ்ர சீர்ஷசரணு பாதி தூராதஸம்சயம் ||'

என்று தேவீ பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## सहस्राक्षी

## ஸஹஸ்ராக்ஷீ (283)

கணக்கிலடங்காத கண்களையுடையவள்.

## सहस्रपात्

## ஸஹஸ்ரபாத் (284)

கணக்கிலடங்காத பாதங்களையுடையவள்.

1. ப்ரயோகத்தில் இந்த நாமத்தை ஸஹஸ்ரபதே நம: என்று சொல்லவேண்டும்.

2. உன்மேஷ நிமிஷோத்பன்ன விபன்ன புவனுவளீ முதல் ஸஹஸ்ரபாத் வரையில் இருக்கும் நாமங்களில் காதிவித்யையின் இரண்டாவது மூன்ருவது கூடங்கள் சொல்லப்பட்டிருக்கும் விபரத்தை பாஷ்யத்தின் மூலத்தில் பார்க்கவும்.

## आब्रह्मकीटजननी

## ஆப்ரம்ஹகீட ஜனனீ (285)

ப்ரம்ஹா முதல் புழுவரையிலிருக்கும் ஸகல ஜீவன்களுக்கும் ஜனனீயாக இருப்பவள் (ஸகலத்தையும் உண்டுபண்ணுகிறவள்.)

1. ப்ரம்ஹா என்பவர் ஸர்வ ஜீவன்களுடைய ஸமஷ்டியும் ஸ்தூலதமமானதுமான ஹிரண்யகர்ப்பனென்ற ஜீவன். கீட மென்பது மிகவும் ஸூக்ஷ்மமாயும் வைத்ய தந்த்ரத்தில் கசேரு, மகேரு என்று இரு பிரிவானதுமான ஸ்தம்பமென்று சொல்லப் படும் ஜீவ விசேஷம். இப்படி ஜீவன்களில் ஆதியிலிருப்பதை யும் கடைசியிலிருப்பதையும் சொல்லியதினுல் மத்தியிலிருக்கும் படியான ஸகலவிதமான ஜீவன்களையும் குறிக்கப்பட்டது. ப்ரம் ஹாதி ஸ்தம்பாந்தமான ஸகல ஜீவ ஜாதங்களுக்கும் ஜனனீ என்று அர்த்தம்.

## वर्णाश्रमविधायिनी

## வர்ணுச்ரம விதாயினீ (286)

வர்ணம், ஆச்ரமம் இவைகளைப் பிரிவுசெய்து ஸ்தாபித்தவள்.

1. மேலே சொல்லியபடி ஜீவன்கள் நிர்மிக்கப்பட்ட பிறகு அவைகளுக்கு ஸன்மார்க்கத்தைக் காட்டுவதற்காக அம்பாள் தன்னுடைய ஆக்ஞைகளாகிய வேதங்களின் ரூபமாக ஏற்பட் டாள். வேதங்கள் அம்பாளுடைய ஆக்ஞைகள் என்பது அடுத் தாற்போல் வரும். 'நிஜாக்ஞா ரூபநிகமா' என்ற நாமத்தில் சொல்லப்பட்டது.

அவைகள் கர்ம காண்டமென்றும் ப்ரம்ஹ காண்டம் (ஞான காண்டம்) என்றும் இரண்டு பிரிவையுடையவைகள்.

ஜீவன்களில் தேவர்களுக்கும், திர்யக் ஜந்துக்களான மிருகாதி களுக்கும் கர்மாக்கள் கிடையாதாகையால் மனுஷ்யர்களுக்கு மட்டும் இருக்கும் கர்மாக்களைப்பற்றி அவரவர்களுடைய வர்ணாச்ரமங்களை அனுசரித்து அம்பாள் சட்டங்கள் ஏற்படுத்தி வ்யவஸ்தையை விதாயம் செய்ததாக இங்கு சொல்லப்பட்டது.

2. இதைப்பற்றி விஸ்தாரமாக கூர்ம புராணத்தில் அம்பாளால் தன் பிதாவான ஹிமவானுக்குச் சொல்லப்பட்டிருக் கிறது.

'அத ஸா தஸ்ய வசனம் நிசம்ய ஜகதோऽரணி: |
ஸஸ்மிதம் ப்ராஹ பிதரம் ஸ்ம்ருத்வா பசுபதிம் பதிம் ||
ச்ருணுஷ்வ சைதத் பரமம் குஹ்யம் ஈச்வரகோசரம் |
உபதேசம் கிரிச்ரேஷ்ட ஸேவிதம் ப்ரம்ஹவாதிபி: ||'

என்று ஆரம்பித்து ஸாதனங்களைச் சொல்லிவிட்டு

'த்யானேன கர்மயோகேன பக்த்யா ஞானேன சைவ ஹி |
ப்ராப்யாஹம் தே கிரிச்ரேஷ்ட நான்யதா கர்மகோடிபி: ||'

என்பதாகச் சொல்லி பிறகு கர்மயோகத்தைப்பற்றிச் சொல்லு கையில்

'ச்ருதி ஸ்ம்ருத்யுதிதம் ஸம்யக் கர்ம வர்ணாச்ரமாத்மகம் |
அத்யாத்ம ஞான ஸஹிதம் முக்தயே ஸததம் குரு |
தர்மாத் ஸம்ஜாயதே பக்தி: பக்த்யா ஸம்ஞாயதே பரம் |
ச்ருதி ஸ்ம்ருதிப்யாம் உதிதோ தர்மோ யக்ஞாதிகோ மத: |
நான்யதோ ஞாயதே தர்ம: வேதாத் தர்மோ ஹி நிர்பபௌ ||
தஸ்மான் முமுக்ஷுர் தர்மார்த்தம் மத்ரூபம் வேதமாச்ரயேத் |
மதாக்ஞயைவ குப்த்யர்த்தம் வேதானாம் பகவானஜ: |
ப்ராம்ஹணாதீன் ஸஸர்ஜாத ஸ்வேஸ்வே கர்மண்யயோஜயத் |'

3. வர்ணங்கள் ப்ராம்ஹண, க்ஷத்திரிய, வைச்ய, சூத்ரர்க ளென்று நாலுவிதம். ஆச்ரமங்கள் ப்ரம்ஹசாரீ, க்ருஹஸ்தன், வானப்ரஸ்தன், ஸன்யாஸி, என்று நாலுவிதம்.

## निजाज्ञारूपनिगमा

## நிஜாக்ஞா ரூப நிகமா (287)

தன்னுடைய ஆக்ஞா ரூபங்களான வேதங்களையுடையவள்.

1. அதாவது வேதங்களிலிருக்கும் வாக்யங்கள் அம்பாளு டைய ஆக்ஞா ரூபமாக இருப்பதாகச் சொல்லப்பட்டது.

கிடைக்கவேண்டிய பலன், அதைப் பெறும் மார்க்கம், அதற்குச் செய்யவேண்டிய க்ரியைகள், இவைகளை வேதம் தெரிந்தவர்கள் அதிலிருக்கும் வாக்யங்களின் சப்தங்களை பாவனை செய்வதின் மூலமாக நன்றாக அறிந்துகொண்டு அதின்படி நடப்பார்கள். இப்பேர்ப்பட்ட ஆக்ஞா ரூபமான வாக்யங்கள் வேதங்களில் ஒரு பாகமான கர்ம காண்டத்தில் இருக்கின்றன.

'மமைவாக்ஞா பராசக்தி: வேத ஸம்ஞா புராதனீ |
ருக்யஜுஸ் ஸாமரூபேண ஸர்காதௌ ஸம்ப்ரவர்ததே ||'

(கூர்ம புராணம்)

2. சைவ தந்த்ரங்கள் இரு பிரிவாக வேதங்களை யனுசரித்தவைகளான காமிகம் முதலான இருபத்தெட்டும், வேத விருத்தங்களான காபால, பைரவ தந்த்ரங்கள் முதலியவைகளும் இருக்கின்றன. அவைகளில் வைதிகமான தந்த்ரங்கள் நிகமங்களென்றும் அவை பரமேச்வரனுடைய முகத்திலிருந்து வெளிக் கிளம்பினபடியால் அவருடைய ஆக்ஞா ரூபங்களென்றும், சொல்லப்படும். வேத விருத்தமான தந்த்ரங்கள் பரமேச்வரனுடைய நாபிக்குக் கீழிருந்து வெளிவந்தபடியால் அவை ஆக்ஞா ரூபங்களென்றும் சொல்வதற்கில்லை. [பரமேச்வரனுடைய பஞ்சமுகங்களில் ஸத்யோஜாதத்திலிருந்து காமிகம் முதலான ஐந்தும், வாமதேவத்திலிருந்து தீப்தம் முதலான ஐந்தும், அகோரத்திலிருந்து விஜயம் முதலான ஐந்தும், தத்புருஷத்திலிருந்து வைரோசனம் முதலான ஐந்தும், ஈசானத்திலிருந்து ப்ரோத்கீதம் முதலிய எட்டும், வெளிவந்ததாகச் சொல்லப்படும்.]

'ஸத்யோ ஜாத முகாத் ஜாதா: பஞ்சாத்யா: காமிகாதய: |
வாமதேவ முகாத் ஜாதா: தீப்தாத்யா: பஞ்ச ஸம்ஹிதா: ||
அகோரவக்த்ராத் உத்பூதா: பஞ்சாப்தி விஜயாதய: |
பும்வக்த்ராதபி ஸம்பூதா: பஞ்ச வைரோசனாதய: ||
ஈசானவதனாத் ஜாதா: ப்ரோக்கீதாத்யஷ்ட ஸம்ஹிதா: |
ஊர்த்வ ஸ்ரோதோபவா ஏதே நாப்யத: ஸ்ரோதஸ: பரே ||'

(தேவீ பாகவதம்)

3. 'குரு சிஷ்யபதே ஸ்தித்வா ஸ்வயமேவ ஸதாசிவ: ||
ப்ரச்னோத்தர பதைர் வாக்யை: தந்த்ரம் ஸமவதாரயத் ||'

என்று சொன்னபடி ஸதாசிவனானவர் தன்னோடு அபின்னமாக இருக்கும் சக்தியுடன் குரு சிஷ்ய க்ரமமாக ஸம்பாஷணை செய்து

அந்த ப்ரகாரமாக தந்த்ரங்களை வெளியிட்டாரென்று சொல்வதுண்டு. அவைகளில் சிவன் குருவாகவும் அம்பாள் சிஷ்ய பரமாக்வும் வெளியிடப்பட்டவைகள் நிகமங்களென்றும் பெயர். இப்பேற்பட்ட நிகமங்கள் அம்பாளுடைய ஆக்ஞா ரூபமாக இருப்பதாக இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

## पुण्यापुण्यफलप्रदा

## புண்யா புண்ய பலப்ரதா (288)

புண்யம், அபுண்யம் (பாபம்) இவைகளுடைய பலனைக் கொடுப்பவள்.

1. மேலே சொல்லியபடி அம்பாள் வர்ணாச்ரம தர்மங்களை விதாயம் செய்த பிறகு அவைகளை அனுஸரித்து நடப்பதினால் ஏற்படும் விசேஷ பலன்களை உறுதி பண்ணுவதற்காக அந்த விதாயங்களில் விதிரூபமான (இன்னதைச் செய்யவேண்டுமென்று சொல்லும்) வாக்யங்களை அனுஸரிப்பதால் எற்படும் புண்யத்தின் பலனையும், அவைகளில் நிஷேத ரூபமான (இதைச் செய்யக் கூடாது என்று சொல்லும்) வாக்யங்களை மீறி நடப்பதால் ஏற்படும் பாபத்தின் பலனையும் அம்பாளே கொடுப்பதாக இங்கு சொல்லப்பட்டது.

2. புண்யத்தின் பலன் ஸ்வர்க்கானுபவம், பாபத்தின் பலன் நரகானுபவம். இவை இரண்டும் முறையே விதி நிஷேதங்களைச் செய்வதால் ஏற்படுமென்று சொல்லப்பட்டது.

'யே ந குர்வந்தி தத் தர்மம் ததர்த்தம் ப்ரம்ஹணா க்ருதா: |
நிரயாம்ஸ்தேஷு சமன: பாதயேத் தான் மதாக்ஞயா ||
தர்மம் குர்வந்தி வேதோக்தம் யே மத் பக்திபராயணா: |
ஸ்வர்காதிஷு சசீசாத்யா: தான் நயந்தி மதாக்ஞயா ||'

(கூர்ம புராணம்)

## श्रुतिसीमन्तसिन्दूरीकृतपादाब्जधूलिका

## ச்ருதி ஸீமந்த ஸிந்தூரீக்ருத பாதாப்ஜ தூளிகா (289)

ச்ருதிகளாகிற ஸ்திரீகள் தங்களுடைய தலைமயிரின் வகுட்டில் தரிக்கும் ஸிந்தூரமாக இருக்கும் (தன்னுடைய) பாத கமலங்களின் துளியையுடையவள்.

1. வேதங்களாகிற ஸ்திரீகள் அம்பாளுடைய பாத கமலங்களை எப்போதும் வணங்கியிருப்பதாகவும், அப்படி வணங்கும்போது அவர்களுடைய சிரஸானது அம்பாளுடைய பாதங்களில் படுவதினால் அந்த பாதங்களிலிருக்கும் தூளியானது வணங்கியிருக்கும் ஸ்திரீகளின் தலைமயிரின் வகுட்டில் தரிக்கப் படும் ஸிந்தூரம் மாதிரி யிருப்பதாகவும் இங்கு சொல்லப்பட்டது. பாதங்களில் செம்பஞ்சுக்குழம்பு பூசியிருப்பதினால் அதிலிருக்கும் தூளியும் சிகப்பு நிறமாக மாறுவதால் ஸிந்தூரம் மாதிரித் தோன்றுவது பொருத்தமாக இருக்கிறது. மேலும் தாமரை புஷ்பங்களில் மகரந்தம் இருப்பதுபோல் அம்பாளுடைய பாத கமலங்களில் தூளியிருப்பதாக 'பாதாப்ஜ தூளிகா' என்று சொன்னது. ச்ருதி என்ற பதமும் ஸ்திரீலிங்க பதமானதால் ச்ருதிகளை ஸ்திரீகளாகச் சொல்லுவதும் பொருத்தமாக இருக் கிறது.

2. மேலே வேதங்களில் க்ரியைகள் ஸம்பந்தமாக இருக் கும் கர்மகாண்டத்தைப்பற்றிச் சொல்லிவிட்டு இது முதல் அதற்கு மேல்பட்ட பாகமாகிய ஞானகாண்டத்தைப்பற்றிச் சொல்ல ஆரம்பிக்கிறார். அந்த ஞானகாண்டத்தில் ஸித்தவஸ்து வான பரப்ரம்ஹத்தைப்பற்றி ப்ரதிபாதிக்கப்பட்டிருப்பதும் அம்பாளுடைய ஆக்ஞையால்தானென்று சொல்லப்பட்டது.

3. ஞானகாண்டமாகிய உபநிஷத்துக்களை வேதங்களுக்கு சிரோபாகமென்றும், வேதாந்தமென்றும், சொல்வது வழக்கம். எப்படி சரீரத்திற்கு ஸீமந்த ப்ரதேசமானது எல்லாவற்றிற்கும் மேல்பட்டதோ அம்மாதிரி ஞானகாண்டமும் வேதங்களுக்குள் மேல்பட்டதாகையால் உபமானத்தின் பொருத்தம் அதிகமாக ஏற்படுகிறது.

4. ச்ருதிகளுக்கும் அம்பாளுடைய ஸ்வரூபத்தின் லேசம் தான் தெரியப்படுகிறதென்பதை "தூளி" என்ற பதத்தினால் சொல்லப்பட்டது. வேதங்கள் ப்ரம்ஹத்தின் ஸ்வரூபத்தைப் பற்றிச் சொல்லும்போது அது இன்னதென்று நேரிடச்சொல்ல முடியாமல் (நேதி) அது இன்னதல்லவென்றுதான் சொல்ல முடிகிறபடியால் அம்பாளுடைய பாதாப்ஜத்தின் தூளிமட்டும் கிடைக்கப்பெற்றதாகச் சொல்லப்பட்டது. ஈச்வரியின் பாதங்

களை பக்தியுடன் வணங்கிவிட்டு பயத்துடனும் லஜ்ஜையுடனும் எட்டி நின்றுகொண்டிருக்கும் பரிஜனங்கள்போல வேதங்களாகிற ஸ்திரீகள் அம்பாளை வணங்கிவிட்டு அந்த சரணங்களிலிருக்கும் தூளியை அனுக்ரஹமாகப் பெற்றுக்கொண்டு அம்பாளுடைய ஸ்வரூபம் தெரியவில்லையேயென்ற லஜ்ஜையுடனும் பயத்துடனும் எட்டிநின்றுகொண்டிருப்பதாக இங்கு வர்ணிக்கப்பட்டது. அந்த தூளிபோன்ற லவலேசமான ஞானமும் அம்பாளுடைய அனுக்ரஹ வசத்தினால்தான் கிடைப்பதாகவும் சொல்லப்பட்டது. இதையே பாஸ்கரராயர் தானியற்றிய சிவஸ்தவத்தில் சொல்லியிருக்கிறார்.

> ஸர்வக்ஞா:ச்ருதயோபி யா: பரசிவ த்வத்ப்ராணரூபா: ப்ரியா:
> ச்ருங்கக்ராஹிகயா த்ரபாப்ருத இவ த்வாம் ந ப்ராஜல்பந்திதா:
> அன்யானேவ து நேதிநேதி பஹுசோ வாசா நிஷேதந்திசேத்
> கோSன்யஸ்த்வாம் இதமித்தமித்யனுவதேத் தத்ராபி மாத்ருக்ஜன:]|

5. அம்பாளுடைய பாததூளியின் மஹிமையைப்பற்றி ஆசார்யாள் 'ஸௌந்தர்யலஹரி'யில் 'தனீயாம்ஸம் பாம்ஸும் தவ சரண பங்கேருஹ பவம்' முதலான ச்லோகங்களில் விசேஷமாக வர்ணித்திருப்பதையும் பார்க்கவும்.

## सकलागमसंदोहशुक्तिसंपुटमौक्तिका
## ஸகலாகம ஸந்தோஹ சுக்தி ஸம்புட மௌக்திகா (290)

ஸமஸ்தமான வேதங்களின் கூட்டமாகிற முத்துச்சிப்பிக்கு உள்ளிருக்கும் முத்தாகிய நாஸாபரணத்தை உடையவள்.

1. அதாவது, 'யதோ வாசோ நிவர்தந்தே அப்ராப்ய மனஸா ஸஹ' என்ற ச்ருதி வாக்கியத்தின்படி வேதங்களில் அம்பாளுடைய முகத்திற்கு ஸமீபத்திலிருக்கும் மூக்குத்தி, முத்து, முதலியவைகள் சொல்லப்படுகின்றனவே தவிர அம்பாளுடைய ஸ்வரூபமானது சொல்லப்படவில்லை என்பது தாத்பர்யம். ஸ்தூலமாயிருக்கும் வஸ்துவைக்காட்டி அதிலிருந்து அதற்கு அருகாமையிலிருக்கும் ஸூக்ஷ்மமான வஸ்துவைத் தெரிந்து கொள்ளுவது என்பதை ஸதூலாருந்ததீ ந்யாயம் என்று சொல்லப்படும். அம்மாதிரி வேதங்கள் ஸதூலமாகத் தோன்றும் நாஸா

பரணத்தைச் சொல்லுவதைத் தவிர ஸூக்ஷ்மமான அம்பாளுடைய ஸ்வரூபத்தைச் சொல்லமுடியாமலிருப்பதால் வேதங்களாகிற ஸம்புடத்தில் (முத்துச் சிப்பிக்குள்) அம்பாளுடைய நாஸாபரணம் தான் அடங்கியிருப்பதாக இங்கு சொல்லப்பட்டது. முத்துச் சிப்பிக்குள் முத்து இருப்பதுபோல் வேதங்களாகிற முத்துச்சிப்பிக்குள் அம்பாளுடைய முத்து மூக்குத்தியானது இருப்பதாகச் சொல்லப்பட்டது.

2. அல்லது, வேதங்களாகிற முத்துச்சிப்பிக்குள் (ஸம்புடத்திற்குள் இருப்பதுபோல்) இருக்கும் முத்து மாதிரி இருப்பவள் என்றும் சொல்லலாம். அதாவது வேதங்கள் அம்பாளுடைய ஸ்வரூபத்தைப் பற்றிச் சொல்வதினுல் முத்துச்சிப்பிக்குள் முத்து இருப்பதுபோல் வேதங்களின் ஸமூஹமாகிற முத்துச்சிப்பிக்குள் முத்துப்போலிருப்பவளென்று தாத்பர்யம்.

3. முந்திய நாமமாகிய 'ச்ருதி ஸீமந்த ஸிந்தூரீக்ருத பாதாப்ஜ தூளிகா' என்பதில் த்ரைவர்ணிகர்களாகிய ப்ராம்ஹண, க்ஷத்ரிய, வைச்யர்களால் அம்பாள் உபாஸிக்கப்படுவதைப்பற்றிச் சொல்லிவிட்டு இந்த நாமத்தில் ஸகல ஆகமங்களாலும் ப்ரதிபாதிக்கப்பட்டவளென்று சொல்வதினுல் நான்காவது வர்ணத்தவர்களாகிய சூத்ரர்களுள்பட எல்லோராலும் அம்பாள் உபாஸிக்கப்படுகிறுளென்பதைப்பற்றிச் சொல்லப்பட்டதென்றும் சொல்லலாம்.

'யத் வேதைர் கம்யதே ஸ்தானம் தத் தந்த்ரைரபி கம்யதே |
ப்ரம்ஹ க்ஷத்ரிய விட் சூத்ராஸ் தேன ஸர்வேऽதிகாரிண: ||'

(ருத்ரயாமளம்)

## पुरुषार्थप्रदा

## புருஷார்த்தப்ரதா (291)

(தர்மார்த்த காம மோக்ஷங்களாகிய) சதுர்வித புருஷார்த்தங்களைக் கொடுப்பவள்.

1. இதர தேவர்கள் ஓரோர் பலத்தைத்தான் கொடுப்பார்களென்றும், நான்கு புருஷார்த்தங்களைக்கொடுக்கும் சக்தியானது அம்பாளுக்கு மட்டும்தான் இருக்கிறதென்றும், ஆகவே அம்பாளுடைய ஆராதனையில்லாவிட்டால் போகம் மோக்ஷம் இவையிரண்டும் சேர்ந்து கிடைக்காது என்று சொல்லப்பட்டிருக்கிறது.

கணேசம், பூஜயேத் யஸ்து விக்னஸ்தஸ்ய ந பாதகே |
ஆரோக்யார்த்தேऽர்சயேத் ஸூர்யம் தர்மமோக்ஷாய மாதவம் | '
சிவம் தர்மார்த்த மோக்ஷாய சதுர்வர்காய சண்டிகாம் ||'

(பத்மபுராணம், புஷ்கா கண்டம்)

'யேऽர்ச்சயந்தி பராம் சக்திம் விதினா ऽவிதினபிவா |
ந தே ஸம்ஸாரிணோ நூனம் முக்தா ஏவ ந ஸம்சய : |
தஸ்மாத் அசேஷ வர்ணனும் த்ரிபுராராதனம் வினா |
ந ஸ்தோ போகாபவர்கௌ து யௌகபத்யேன குத்ரசித் ||;

(ப்ரம்ஹாண்ட புராணம்)

2. 'புருஷோ வை ருத்ர ;' என்ற ச்ருதிவாக்யப்படி புருஷனுகிய ருத்ரனுனவர் யாருடைய ஒத்தாசையின் பேரில் பக்தர்களுக்கு அர்த்தங்களைக் கொடுக்கிருரோ அப்பேர்ப்பட்ட அம்பாளுக்கு புருஷார்த்தப்ரதா' என்று பெயர். அதாவது, நிஷ்கலமான ப்ரம்ஹமானது உபாஸிக்கப்படுவதும், அவ்வித உபாஸனைக்குப் பலத்தைக் கொடுப்பதும், அம்பாளுக்குக் கட்டுப்பட்டு இருக்கிறது (அம்பாளிடம் ஆயத்தமாயிருக்கிறது) என்று தாத்பர்யம்.

## பூர்ணா

## பூர்ணு (292)

நிறைந்திருப்பவள்.

1. பரப்ரம்ஹமாகிய அம்பாளைத்தவிர மற்றவையெல்லாம் தேசம், காலம், வஸ்து என்பதான வறையறைகளுக்குள் அடங்கியவையென்றும், பரப்ரம்ஹமொன்றே எவ்வகையிலும் நிறைந்தது என்றும் சொல்லப்படும்.

பூர்ணமத : பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ண முதச்யதே |
பூர்ணஸ்ய பூர்ண மாதாய பூர்ணமே வாவ சிஷ்யதே ||'

2. பூர்ணு என்ற பதத்திற்கு பஞ்சமீ, தசமீ, பஞ்சதசீ. திதிகளென்று அர்த்தமுண்டு. சுக்லபக்ஷ சதுர்தசீ ராத்ரிக்கும் பூர்ணு என்று பெயருண்டு. இந்த திதிகளின் ஸ்வரூபமாக இருப்பவள் பூர்ணு.

3. பூர்ணு என்று பெயரையுடைய நதியின் ஸ்வரூபமாக இருப்பவள்.

**भोगिनी** (293)
**போகினீ**

போகத்தை உடையவள்.

1. போகமென்பது ஸுகத்தினுடைய ஸாக்ஷாத்கரத்தை அடைவது, ஸுகத்தை அநுபவிப்பது.

2. போகினீ என்றால் நாக கன்யகைக்கும் பெயர். அந்த ஸ்வரூபமாக இருப்பவளென்றும் சொல்லலாம்.

**भुवनेश्वरी** (294)
**புவனேச்வரீ**

சதுர்தச புவனங்களுக்கும் ஈச்வரியாக இருப்பவள்.

1. புவனமென்ற பதத்திற்கு ஜலம் என்றும் அர்த்தம் உண்டு.

2. ஹ்ரீம்கார பீஜத்திற்கு புவனேச்வரீ பீஜமென்று பெயருண்டு. அதற்கு தேவதையாக இருப்பவள் அல்லது அந்த மந்த்ரத்தின் ஸ்வரூபமாக இருப்பவள் புவனேச்வரீ. (இந்த மந்த்ரமானது ஹ்ருல்லேகா பீஜமென்றும், மாயாபீஜமென்றும், சிந்தாமணி பீஜமென்றும், லஜ்ஜா பீஜமென்றும், பலவிதமான பெயர்களுடைய உத்க்ருஷ்டமான மந்த்ரம்)

3. தாந்த்ரிகர்களுடைய குரு பரம்பரைகள் மூன்றுவிதம், திவ்யௌகம், ஸித்தௌகம், மானவௌகம்—இம்மாதிரி மூன்று பரம்பரைகள் அல்லது ஓகங்களென்று சொல்லப்படும். இவர்களில் மானவௌகத்தில் புவனானந்தநாதரென்ற குரு ஒருவர் உண்டென்றும், அவரிடம் ப்ரீதியடைந்து அவருக்கு ப்ரசன்னமானதினால் அம்பாளுக்கு புவனேச்வரீ யென்று பெயர் வந்ததாகவும் சொல்லப்படும்.

'புவனானந்தநாதஸ்ய ப்ரஸன்னத்வாத் மஹேச்வரீ |
புவனேஷ்வதி விக்யாதா சாம்பவீ புவனேச்வரீ ||'

(த்ரிபுரா ஸித்தாந்தம்)

4. புவனேச்வரீ பீஜத்திலிருந்து ஸகல புவனங்களும் ஏற்பட்டிருக்கின்றனவென்றும், ஆகவே அம்பாளுக்கு புவனேசீ யென்றும் புவனாதீச்வரீயென்றும் பெயர் வந்ததாகவும் தக்ஷிணா

மூர்த்தி ஸம்ஹிதையில் விபரமாகச் சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கவும்.

## अम्बिका

## அம்பிகா (295)

தாயாராக இருப்பவள்.

1. அம்பா, அம்பிகா என்ற பதங்கள் தாயாரை பிரியத்துடன் கூப்பிடும் வார்த்தைகள். லோகங்களுக்கெல்லாம் அம்பாள் தாயாராக (ஜனனியாக) இருப்பதால் அம்பிகா என்று பெயர்.

2. அம்பிகா என்ற பதத்திற்கு ஜகன்மாதா, பாரதீ (ஸரஸ்வதீ), ப்ருத்வீ என்ற அர்த்தங்களும், இச்சா, ஞான, க்ரியா சக்திகளுடைய ஸமஷ்டி ரூபமான ருத்ராணி என்ற அர்த்தமும் உண்டு. அந்த ரூபங்களாக அம்பாள் இருப்பதாகவும் சொல்லலாம்.

3. 'அம்பிகா கைதவே ஸித்தே நித்ராயாம் நிசி கீர்த்யதே' என்றபடி அம்பிகா என்ற பதத்திற்கு இரவு என்றும், நித்ரை என்றும் அர்த்தங்களுண்டு.

'ராத்திரி ரூபா மஹாதேவீ திவாரூபோ மஹேச்வர:'
என்று ஸ்காந்தம் நவராத்ர ப்ரதீபத்தில் சொல்லியபடி பரமசிவன் பகல் ரூபமாகவும், அம்பாள் ராத்ரி ரூபமாகவும், இருப்பதாகச் சொல்லப்படும். அம்பாள் நித்ராரூபமாக இருப்பதைப் பின் வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

'யா ஹ்யேஷா கஹ்வரீ மாயா நித்ரேதி ஜகதி ஸ்திதா |
தஸ்யாஸ்தனுஸ் தமோத்வாரி நிசா திவஸ நாசினீ |
ஜீவிதார்தஹரீ கோரா ஸர்வ ப்ராணி ப்ருதாம்புவி ||
நைதயா கச்சிதாவிஷ்டோ ஜ்ரும்பமாணோ முஹுர் முஹு: |
ஸக்த: ப்ரஸஹிதும் வேகம் மஜ்ஜன்னிவ மஹார்ணவே ||'

(ஹரிவம்சம்)

'விச்வேச்வரீம் ஜகத்தாத்ரீம் ஸ்திதி ஸம்ஹார காரிணீம் |
ஸ்தௌமி நித்ராம் பகவதீம் விஷ்ணோரதுல தேஜஸ ||'
'யா தேவீ ஸர்வ பூதேஷு நித்ராரூபேண ஸம்ஸ்திதா |
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம: ||

(தேவீ மாஹாத்ம்யம்)

## अनादिनिधना

## அநாதிநிதநா (296)

ஆதி, அந்தம் இல்லாதவள்.

1. ஆதி என்றால் ஜனனம். நிதனம் என்றால் மரணம், இவை யிரண்டுமில்லாதவள் அனாதிநிதனா.

2. வரருசியின் கடபயாதி ஸங்க்யையின்படி ஆதி (அனாதி) சப்தமானது 80 என்பதைக் குறிக்கும். 80 விதமான நிதனங்கள் (மரண ஸாதனங்கள்) சொல்லப்பட்டிருக்கின்றன. அம்பாளுடைய உபாஸனையினால் இந்த 80 விதமான நிதனங்கள் (அனாதி நிதனங்கள்) பக்தர்களுக்கு ஏற்படாமலிருப்பதினால் அம்பாளுக்கு அனாதிநிதனா என்று பெயர். அம்பாளுடைய பக்தனுக்கு அழிவில்லையென்று ஆசார்யாளாலும் சொல்லப்பட்டிருக்கிறது.

'சிரம் ஜீவன்னேவ க்ஷபித பசுபாச வ்யதிகர: |
பராநந்தாபிக்யாம் ரஸயதி ரஸம் த்வத் பஜனவான் ||'

(ஸௌந்தர்யலஹரீ)

3. நிதன (மரண) ஸாதனங்கள் பாசங்களென்றும், வதங்களென்றும் இருவகை. அவற்றில் பாசங்கள் 52 விதங்களென்றும், வதங்கள் 28 விதங்களென்றும் ஆக நிதான ஸாதனங்கள் 80 என்றும் விஷ்ணு புராணம், லிங்க புராணம், ஸாங்க்ய தந்த்ரம், ஸாங்க்ய காரிகை முதலியவைகளில் சொல்லப்பட்டிருக்கிறது. இதர விபரங்களை அவற்றில் பார்க்கவும்.

## हरिब्रह्मेन्द्रसेविता

## ஹரி ப்ரம்ஹேந்திர ஸேவிதா (297)

விஷ்ணு, ப்ரம்ஹா, இந்திரன் இவர்களால் ஸேவிக்கப்பட்டவள்.

1. ஸ்ரீநகரத்தில் அம்பாளுடைய வாஸஸ்தானமாகிற சிந்தாமணி க்ருஹத்தைச் சுற்றியிருக்கும் ப்ராகாரங்களில் 18, 17 ப்ராகாரங்களுக்கு மத்தியில் விஷ்ணுவும், 17 16 ப்ராகாரங்களுக்கு நடுவில் ப்ரம்ஹாவும், 15, 14 ப்ராகாரங்களுக்கு நடுவில் இந்த்ரன் முதலான திக்பாலகர்களும் இருந்துகொண்டு அம்பாளை ஸதா த்யானம் செய்துகொண்டிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'ப்ரம்ஹா விஷ்ணுஸ் ததா சம்பு: வாஸவோ வருணோ யம: |
வாயுரக்னி: குபேரச்ச த்வஷ்டா பூஷாச்விநௌ பக: ||
ஆதித்யா வஸவோ ருத்ரா விச்வேதேவா மருத்கண: |
ஸர்வே த்யாயந்தி தாம் தேவீம் ஸ்ருஷ்டிஸ்தித்யந்த காரிணீம் | '

(தேவீபாகவதம்)

ஸ்ரீநகரத்தை வெகு அழகாகவும் விஸ்தாரமாகவும் லலிதா ஸ்தவரத்னத்திலும், லலிதோபாக்யானத்திலும் வர்ணித்திருப்பதைப் பார்க்கவும்.

2. இப்படி ஹரி ப்ரம்ஹேந்திராதிகளாலும் அம்பாள் உபாஸிக்கப்படுவதால் அம்பாளுடைய பக்தர்களுக்கு இவர்களை உபாஸிக்கவேண்டியது அவசியமில்லை யென்பதும் இந்த நாமத்தின் தாத்பர்யமென்று சொல்லலாம். ஒரு யாசகன் எதையும் தரக்கூடிய சக்தியுள்ள ஒருவனிருக்கும்போது அவனிடம் போய் யாசிப்பானே தவிர மற்ற யாசகர்களை அடையமாட்டானல்லவா? அம்மாதிரி ஸகலவிதமான புருஷார்த்தங்களையும் கொடுக்கக்கூடிய அம்பாளைச் சரணமடைந்தவன், அம்பாளிடமிருந்து (தன் மாதிரி) அனுக்ரஹத்துக்காக காத்துக்கொண்டிருக்கும் இதர தேவர்களை உபாஸிப்பது அவசியமில்லை என்று சொல்லப் பட்டது. இதே அபிப்பிராயத்தைப் பரமசிவபரமாக ஆசார்யாளும் பாஸ்கரராயரும் சொல்லியிருக்கிறார்கள்.

'ஸஹஸ்ரம் வர்த்தந்தே ஜகதி விபுதா: க்ஷுத்ரபலதா:
ந மன்யே ஸ்வப்னே வா ததநுஸரணம் தத்க்ருத பலம் |
ஹரி ப்ரம்ஹாதீனாமபி நிகட பாஜாம் அஸுலபம்
சிரம் யாசே சம்போ சிவ தவபதாம்போஜ பஜனம் ||'

(சிவானந்த லஹரீ)

த்வத் தத்தைச்வர்ய பாஜ: பரமசிவ கதம்காரமன்யான் அமர்த்யான்
யாசே தேஹீதி சக்ர த்ருஹிண ஹரிமுகான் பிக்ஷுகான் பிக்ஷுகோ஽ஹம்!

(சிவஸ்தவம்)

## நாராயணி

நாராயணீ (298)

நாராயணீ என்ற பெயரையுடையவள்.

1. நாராயணன் என்றபதத்திற்கு சிவன் என்றும், விஷ்ணு என்றும் அர்த்தங்களுண்டு. அவரோடு ஸம்பந்தமுடையவள்

நாராயணீ. நாராயணன் என்ற பதம் சிவனைக் குறிப்பதாக வைத்துக்கொண்டால் அவருடைய பத்னீ என்ற முறையில் அம்பாளை நாராயணீ என்று சொல்லலாம். அல்லது, நாராயணன் என்ற பதம் விஷ்ணுவைக் குறிப்பதாக வைத்துக்கொண்டால் அம்பாள் அவருடைய ஸஹோதரீ என்பதாலும் அவரோடு அபின்னமாக இருப்பதாலும் அம்பாளை நாராயணீ யென்று சொல்லலாம்.

2. நரனெனப்படும் ப்ரம்ஹத்தினிடமிருந்து ஜலம் உண்டானதால் அதற்கு நாரமென்று பெயர். அதில் சயனிப்பதால் விஷ்ணுவுக்கு நாராயணன் என்று பெயர்.

'ஆபோ நாரா இதி ப்ரோக்தா ஆபோ வை நரஸூனவ: |
அயனம் தஸ்ய தா யஸ்மாத் தேன நாராயண: ஸ்ம்ருத: ||'

(மனுஸ்ம்ருதி)

3. நரனென்றால் ஜீவனுக்குப் பெயர். அயனம் என்றால் அடையும் இடம், கடைசியில் போய்ச்சேருமிடம் (நான்ய: பந்த்தா வித்யதே'யனாய) இந்த அர்த்தத்தில் சிவனைக் குறிப்பதாகச் சொல்லப்படும்.

'நராணும் அயனம் யஸ்மாத் தஸ்மான்னாராயண: ஸ்ம்ருத: |'

(ப்ரம்ஹவைவர்த்தம்)

4. 'நயதீதி நர: ப்ரோக்த: பரமாத்மா ஸநாதன:'

என்று தேவீபாகவதத்தில் சொன்னபடி ஜீவன்களை வழி காட்டி அழைத்துக்கொண்டு போவதால் பரமாத்மாவுக்கு நரன் என்று பெயர். அவரோடு ஸம்பந்தம்பட்டவர்களான, அல்லது அவரிடத்திலிருந்து உண்டானவர்களான ஜீவன்கள், நாரா: அவர்கள் கடைசியாகப்போய்ச் சேர்வதினால் பரமாத்மாவுக்கு நாராயணன் என்று பெயர்.

'நராத் ஜாதானி தத்வானி நாராணீதி விதுர் புதா: |
தான்யேவ சாயனம் தஸ்ய தேன நாராயண: ஸ்ம்ருத: ||'

(மஹாபாரதம்)

5. இப்பேர்ப்பட்ட துரீயமான பரப்ரம்ஹத்தை,

'ஸ: ஸ்ரீபதி: ஸோऽபி ச பார்வதீபதி:'

என்று காசி கண்டத்தில் சொல்லியிருக்கிறது. (அல்லது லக்ஷ்மீ, பார்வதீ இருவரும் அபேதமென்பதான அர்த்தத்துடன் இம்மாதிரி சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.)

6. 'நாராயணீ ஸஹசராய நம: சிவாய'
என்பதற்கு வியாக்யானம் செய்திருப்பதையொட்டி நாராயண
ஞன விஷ்ணுவின் ஸஹோதரியானபடியால் அம்பாளுக்கு நாரா
யணீ என்று பெயர் வந்ததாகவும் சொல்லலாம். அம்பாளுக்கு
'விஷ்ணு ஸ்வஸா' என்றும் (280வது நாமமான) பத்மநாப
ஸஹோதரீ என்றும் பெயர்களுண்டு.

7. நாராயணஞன விஷ்ணுவும் அம்பாளும் அபேதமான
படியால் அம்பாளுக்கு நாராயணீ என்று பெயர்.

'அஹம் நாராயணோ கௌரீ ஜகன்மாதா ஸனுதனீ |
விபஜ்ய ஸம்ஸ்திதோ தேவ: ஸ்வாத்மானம் பரமேச்வர: ||
ந மே விது: பரம் தத்வம் தேவாத்யா ந மஹர்ஷய: |
ஏகோऽஹம் வேத விச்வாத்மா பவானீ விஷ்ணுரேவ ச || ;

(கூர்மபுராணம்)

அம்பாளும் விஷ்ணுவும் அபேதமென்கிற விஷயத்தைப்
பற்றி நீலகண்ட தீக்ஷிதரவர்கள் இயற்றிய 'நீலகண்ட விஜயசம்பூ'
வில் அனேக இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

'சிவா கோரா சேதி ச்ருதிஷு விதிதே யே மம தனூ
தயோராத்யா மூர்த்தி: பரமரமணீயா த்வமஸி மே |
த்வமஸ்யர்த்தம் தேஹே த்வமஸி வதனம் தக்ஷிணமிதி
த்வயி ப்ரீயே யாவத் தவ பவதி தாவச்ச விதிதம் ||'

'அமும் யம் வீக்ஷத்வே புருஷம் அரவிந்தேக்ஷணமஸௌ
ஸவித்ரீ ஸர்வேஷாமபி ச பவதாம் மத் ப்ரியதமா |
மதாக்ஞாம் அஸ்யாக்ஞாம் மம பஜனமேதஸ்ய பஜனம்
விஜானந்தோ யூயம் வினமத ததாஸ்மின் மயி யதா ||'

'பவானிதி பவானீதி பச்ய பேத: கியானயம் ||
விக்ரஹம் ப்ராப்தயோரேகம் விச்லேஷ: க இவாவயோ: ||'

இவ்விதமான அபேதமானது மிகவும் ப்ரஸித்தமாகச்
சொல்லப்பட்ட விஷயம், இந்த ஸஹஸ்ரநாமத்திலேயே 'கோவி
ந்த ரூபிணீ,' 'முகுந்தா', 'விஷ்ணு ரூபிணீ முதலிய நாமங்களில்
சொல்லப்பட்டிருக்கிறது.

'கதாசித் லலிதேசானீ பும் ரூபா க்ருஷ்ண விக்ரஹா |
வேணுநாதவினோதேன கரோதி விவசம் ஜகத் ||'
யோऽயம் சகாஸ்தி ககனார்ணவ ரத்ன காந்தி:
யோऽயம் ஸுராஸுரகுரு: புருஷ: புராண: |

யத்வா மமார்தமிதம் அந்தகஸூதனஸ்ய
தேவி த்வமேவ ஸ இதி ப்ரதிபாதயந்தி ||'

8. 'நாராயணீ ஸுபார்ச்வே து த்ரிகூடே பத்ரஸுந்தரீ' என்று பத்மபுராணத்தில் சொல்லியபடி ஸுபார்ச்வ க்ஷேத்திரத்தி லிருக்கும் அம்பாளுக்கு நாராயணீ என்று பெயர்.

## नादरूपा

## நாதரூபா (299)

நாதத்தில் ரூபத்தையுடையவள்.

1. ஹ்ரீம்காரம் முதலியவைகளில் பிந்துவுக்மேல் எட்டு வர்ணங்கள் (அக்ஷரபேதங்கள்) ஒன்றைவிட ஒன்று ஸூக்ஷ்ம மாக இருப்பதாகச் சொல்லப்படும். அவை அர்தசந்த்ர, ரோதினீ, நாத, நாதாந்த, சக்தி, வ்யாபினீ, ஸமனா, உன்மனீ. இவற்றில் மூன்றாவதான நாதத்தை மஹாஸ்வச்சந்ததந்த்ரத்தில்

'ரோதின்யாக்யம் யதுக்தம் தே நாதஸ்தஸ்யோர்த்வ ஸம்ஸ்தித: |
பத்மகிஞ்ஜல்கஸங்காச: ஸூர்யகோடி ஸமப்ரப: ||

என்று ஆரம்பித்து வர்ணித்துவிட்டு அங்கு இருக்கும் அம்பாளு டைய ரூபத்தை,

தஸ்யோர்த்ஸங்க கதாம் ஊர்த்வகாமினீம் பரமாம் சிவாம் |

என்பதாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

2. அல்லது, நாதத்தையே ரூபமாக உடையவளென்றும் சொல்லலாம்.

## नामरूपविवर्जिता

## நாமரூபவிவர்ஜிதா (300)

நாமரூபங்களிலிருந்து விடுபட்டவள்.

1. அதாவது நாமரூபங்களைக் கடந்தவள், அவற்றுக்கு அப்பாலிருப்பவள் என்று அர்த்தம்.

2. ஜகத்தானது சித், அசித் இவைகளுக்குள் அடங்கிய தாய் ஐந்து விதமான பிரிவுகளாக இருக்கிறது. அவை ஸத், சித் ஆனந்தம், நாமம், ரூபம். இவற்றில் முதல் மூன்றும் பரப்ரம்ஹ தின் ரூபம். மற்ற இரண்டும் ஜகத்தின் ரூபம்.

'அஸ்தி பாதி ப்ரியம் நாம ரூபம் சேத்யம்ச பஞ்சகம் |
ஆத்ய த்ரயம் ப்ரம்ஹரூபம் ஜகத்ரூபம் ததோத்வயம் |

நாமரூபங்களானது மித்யையான ஜகத்தைச் சேர்ந்தவை யாகையால் பரப்ரம்ஹமான அம்பாள் அவற்றைக் கடந்திருப்ப தாகச் சொல்லப்பட்டது.

3. ஆகாசோ ஹவை நாம நாமரூபயோர் நிர்வஹிதா
தே யதந்தரா தத் ப்ரம்ஹ'

என்று சாந்தோக்யத்தில் சொன்னபடி சித்சக்தி ரூபமான ஆகா சத்தினால் நாமரூபங்கள் நீங்கிவிட்டால் பாக்கியிருப்பது ப்ரம்ஹ மென்று சொல்லப்பட்டது.

## ह्रींकारी
## ஹ்ரீம்காரீ (301)

ஹ்ரீம் என்ற (புவனேச்வரீ) பீஜாஸ்வரூபமாக இருப்பவள்.

1. ஹ்ரீ என்றால் லஜ்ஜை, வெட்கம். அதைச் செய்பவள் ஹ்ரீம்காரீ. அம்பாள் ஸகல ஜீவன்களிலும் லஜ்ஜாரூபமாக இருந்துகொண்டிருப்பதாக

'யா தேவீ ஸர்வபூதேஷு லஜ்ஜா ரூபேண ஸம்ஸ்திதா |
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம: ||

என்று தேவிமாஹாத்மியத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

2. ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களைச் செய்வதால் ஹ்ரீம் காரீ என்று அம்பாளுக்குப் பெயர் என்பதாக ஸ்வதந்த்ர தந்த்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

3. 'ஹ்ரீம்' என்பதே அம்பாளுடைய நாமங்களில் ஒன்று என்பதை ஸ்ரீ லலிதாத்ரிசதியில் காணலாம்.

4. பஞ்சதசி மந்த்ரத்தில் சிவாக்ஷரங்களென்றும் சக்த் யக்ஷரங்கள் என்றும் இருப்பதாகச் சொல்லப்பட்டு ஹ்ரீம்கார பீஜமானது உபயாத்மகமென்று (சிவசக்தி ஸம்மேளனமான தென்று) சொல்லப்பட்டிருக்கிறது. இதின் விபரங்களை ஸ்ரீ லலி தாத்ரிசதியில் பார்க்கவும்.

## ह्रीमती
## ஹ்ரீமதீ (302)

லஜ்ஜையோடு கூடியவள்.

1. அம்பாளைப்பற்றி ச்ருதியில் 'லஜ்ஜாமதீ துஷ்டிரிஷ்டாச புஷ்டி என்று சொல்லப்பட்டிருக்கிறது.

## ह्रद्या (303)

### ஹ்ருத்யா

ஹ்ருதயத்திலிருப்பவள்.

1. அதாவது பக்தர்களுடைய (முநீச்வரர்களுடைய) ஹ்ருதய கமலத்திலிருப்பவள்.

2. அல்லது ரமணீயமானவள் என்றும் சொல்லலாம்.

## हेयोपादेयवर्जिता (304)

### ஹேயோபாதேய வர்ஜிதா

உபேக்ஷிக்கவேண்டியது, ஒப்புக்கொள்ள வேண்டியது, இவை ஒன்றும் இல்லாதவள்.

1. ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி இவைகளைச் சொல்லும் சாஸ்த்ரங்கள் அவித்யையின் காரணமாக அறிவில்லாதவர்களுக்கு ஏற்பட்டவைகளானதாலும் அம்பாள் (சின்மயமாய்) ஞானஸ்வரூபிணியாக இருக்கிறபடியாலும் அவைகளுக்கு அம்பாளிடம் யாதொரு ஸம்பந்தமுமில்லையென்பது தாத்பர்யம்.

## राजराजार्चिता (305)

### ராஜராஜார்ச்சிதா

ராஜராஜனால் உபாஸிக்கப்பட்டவள்.

1. மனு, குபேரன் இவர்களுக்கு ராஜராஜன் என்று பெயர். அம்பாளுடைய உபாஸகர்களில் முக்யமாகப் பன்னிரண்டு பெயர்களிருப்பதாகவும் அவர்களில் மனு, சந்த்ரன், குபேரன் இவர்கள் சேர்ந்தவர்களென்றும் ஏற்கனவே வந்த 'மனுவித்யா', 'சந்த்ரவித்யா' என்ற நாமங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தப் பன்னிரண்டு உபாஸகர்களும் பன்னிரண்டு விதமாக அம்பாளை உபாஸனை செய்தார்களென்றும் அதிலிருந்து ஸ்ரீ வித்யையானது பன்னிரண்டு பேதங்களோடு கூடியது

என்றும் அவைகளின் விபரங்களும் 'ஞானார்ணவம்' முதலிய க்ரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

2. மேலே சொல்லியதை அநுஸரித்து, மனு, குபேரன், இவர்களால் உபாஸிக்கப்பட்ட ஸ்ரீவித்யையின் பேதங்களின் ரூபமாக இருப்பவளென்றும் அர்த்தம் சொல்லலாம்.

3. அம்பாளுடைய சிந்தாமணி க்ருஹத்தைச் சுற்றியிருக்கும் ப்ராகாரங்களில் 14, 15-ப்ராகாரங்களுக்கு நடுவில், மாணிபத்ரன் முதலான யக்ஷகணங்களுடன் குபேரன் இருந்துகொண்டு அம்பாளை உபாஸிப்பதாக 'லலிதாஸ்தவ ரத்ன'த்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'தல்லோக பூர்வபாகே தனதம் த்யாயாமி சேவதிகுலேசம் |
அபி மாணிபத்ர முக்யான் அம்பா சரணாவலம்பினோ யக்ஷான் ||'

## राज्ञी
## ராக்ஞீ (306)

ராணியாக இருப்பவள்.

1. அம்பாள் ராஜராஜேஸ்வரரான மஹாகாமேச்வரருடைய பட்ட மஹிஷியானதால் ராக்ஞீ என்று பெயர்.

## रम्या
## ரம்யா (307)

ஸௌந்தர்யத்தையுடையவள்.

## राजीवलोचना
## ராஜீவலோசனா (308)

ராஜீவத்தைப்போன்ற கண்களையுடையவள்.

1. ராஜீவமென்ற பதத்திற்கு,

'ராஜீவாக்யா ம்ருகே மத்ஸ்யே பத்மே ராஜோபஜீவினி'

என்றபடி மான், மீன், தாமரஸபுஷ்பம் என்ற அர்த்தங்களுண்டு. மான் மீன் இவைகளின் கண்களைப்போன்ற, அல்லது தாமரையைப் போன்ற கண்களையுடையவள் என்று அர்த்தம்.

2. ராஜீவபதத்திற்கு ராஜாவை அண்டியிருப்பவள் என்றும் அர்த்தமுண்டு. தன் புருஷனான ராஜராஜேஸ்வரரை (மஹா

காமேச்வரரை) அண்டியிருக்கும் பக்தர்களை அனுகூலமாகப் பார்ப்பதினால் அம்பாளுக்கு ராஜீவலோசனா என்று பெயர் வந்ததாகவும் சொல்லலாம்.

## रञ्जनी

## ரஞ்ஜனீ (309)

(பக்தர்களை) ஸந்தோஷப்படுத்துகிறவள்.

1. அல்லது தான் ஸமீபத்திலிருப்பதால் தன்னுடைய நிறத்தினால் சுத்தஸ்படிகம் போன்ற நிறத்தையுடைய பரமசிவனை சிகப்பு நிறமுள்ளவராக அம்பாள் செய்வதால் ரஞ்ஜனீ என்று பெயர் வந்ததாகவும் சொல்லலாம். அம்பாளுடைய நிறம் சிகப்பு என்பது 'அருணாம் கருணாதரங்கிதாக்ஷீம்', 'ஜபாகுஸுமபாஸுராம்' 'ஜபாபுஷ்ப நிபாக்ருதி:' என்று பல இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

## रमणी

## ரமணீ (310)

(பக்தர்களோடு) விளையாட்டாகப் பழகுகிறவள்.

1. 'ஜக்ஷன் க்ரீடன் ரமமாண:' என்று சாந்தோக்யத்தில் சொல்லப்பட்டிருப்பதைக் கவனிக்கவும்.

## रस्या

## ரஸ்யா (311)

ஆஸ்வாதிக்கத் தகுந்தவள்.

1. பரப்ரம்ஹமானது 'ரஸோ வை ஸ:' என்று ச்ருதியில் சொன்னபடி ஸர்வோத்க்ருஷ்டமான ரஸஸ்வரூபமானபடியால் அம்பாளை 'ரஸ்யா' என்று சொன்னது.

## रणत्किङ्किणिमेखला

## ரணத் கிங்கிணி மேகலா (312)

ஒலிக்கும் சலங்கைகளுடன் கூடிய ஒட்டியாணத்தையுடையவள்.

1. இதேமாதிரி ஆசார்யாளாலும் 'க்வணத் காஞ்சீதாமா' என்று ஸௌந்தர்யலஹரியில் அம்பாளை வர்ணிக்கையில் சொல்லப்பட்டிருக்கிறது.

'க்வணத் காஞ்சீதாமா கரிகளபகும்ப ஸ்தனநதா
பரிக்ஷீணா மத்யே பரிணத சரச்சந்த்ர வதநா |
தனுர் பாணான் பாசம் ஸ்ருணிமபி ததானா கரதலை:
புரஸ்தாத் ஆஸ்தாம் ந: புரமதிது ராஹோ புருஷிகா ||

## रमा

ரமா (313)

லக்ஷ்மீ ஸ்வரூபமாக இருப்பவள்.

ஸூதஸம்ஹிதையிலும் இம்மாதிரி 'லக்ஷ்மீ வாகாதிரூபேண நர்த்தகீவ விபாதி யா' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

## राकेन्दुवदना

ராகேந்து வதநா (314)

பூர்ண சந்த்ரன்போன்ற முகத்தையுடையவள்.

## रतिरूपा

ரதிரூபா (315)

ரதியின் ரூபமாக இருப்பவள்.

1. ரதியானவள் காமனுடைய பத்நியாகையாலும் அம்பாள் காமேச்வரருடைய பத்னியாகையாலும் ரதிரூபா என்று சொல்லப்பட்டது.

2 ராமா, ராகேந்துவதநா என்ற நாமங்களிலிருந்து ரதிரூபா எனப்படும் காமகலாக்ஷரம் ஏற்படுவதாகச் சொல்லப்படும்.

## रतिप्रिया

ரதிப்ரியா (316)

ரதியினிடத்தில் ப்ரியமுள்ளவள்.

1. ரதி: என்றால் ஸம்போகம் என்ற அர்த்தமும் உண்டு.

## रक्षाकरी
(317)

**ரக்ஷாகரீ**

காப்பாற்றுகிறவள்.

1. ரக்ஷை என்றால் பஸ்மத்திற்கும் பெயர். அம்பாள் ஸ்திதி (ரக்ஷணம்) ஸம்ஹாரம் (பஸ்மீகரணம்) இவைகளைச் செய்வதால் ரக்ஷாகரீ என்று பெயர்.

## राक्षसघ्नी
(318)

**ராக்ஷஸக்நீ**

ராக்ஷஸர்களை ஸம்ஹாரம் செய்கிறவள்.

1. 'ஸந்தாவதீ புவன ஸந்தாரணே' என்றபடி அம்பாள் ஸகல புவனங்களையும் காப்பாற்றுகிறதாக பிரதிக்ஞை செய்திருக்கிறதுபோல அவற்றிற்குக் கெடுதல் செய்ய எத்தனிக்கும் ராக்ஷஸர்களை ஸம்ஹாரம் செய்யவும் அவதரிப்பதாகச் செய்திருக்கும் ப்ரதிக்ஞையை தேவீ மாஹாத்ம்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'இத்தம் யதா யதா பாதா தானவோத்தா பவிஷ்யதி |
ததா ததாऽவதீர்யாஹம் கரிஷ்யாம்யரி ஸம்க்ஷயம் ||

## रामा
(319)

**ராமா**

ஸ்திரீ மாத்ரமான ஸ்வரூபத்தையுடையவள்.

1. லோகத்திலிருக்கும்படியான ஸமஸ்த ஜீவராசிகளிலும் ஸ்திரீலிங்கவாச்யமானவை யெல்லாம் அம்பாளுடைய அம்சங்களென்றும், பும்லிங்க வாச்யமானவைகளெல்லாம் பரமசிவனுடைய அம்சங்களென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆக ஸ்திரீ புருஷர்களெல்லாரும் முறையே அம்பாள், பரமசிவன் இவர்களுடைய விபூதிகள் (ஆவிர்பாவங்கள்) என்று சொல்லப்படும்.

'ஸ்திரீலிங்கம் அகிலம் கௌரீ' (லிங்கபுராணம்)
'சங்கர: புருஷா: ஸர்வே ஸ்திரிய: ஸர்வா மஹேச்வரீ |
பும்லிங்க சப்தவாச்யா யே தே ச ருத்ரா: ப்ரகீர்த்திதா: |

ஸ்த்ரீலிங்க சப்தவாச்யா யா: ஸர்வா கௌர்யா விபூதய: ||
ஏவம் ஸ்த்ரீபுருஷா: ப்ரோக்தா: தயோரேவ விபூதய: ||'

(லிங்கபுராணம்)

'யத்கிஞ்சித் த்ரிஷு லோகேஷு ஸ்த்ரீரூபம் தேவி த்ருச்யதே |
தத்ஸர்வம் த்வத்ஸ்வரூபம் ஸ்யாத் இதி சாஸ்த்ரேஷு நிச்சய: ||'

(ப்ராம்ஹவைவர்த்தம்)

இதேமாதிரி லக்ஷ்மீ, ஸ்ரீவிஷ்ணு இவர்களைப்பற்றி விஷ்ணுபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'தேவதிர்யங் மனுஷ்யாதௌ பும்நாம்நி பகவான் ஹரி: |
ஸ்த்ரீ நாம்நி லக்ஷ்மீர் மைத்ரேய நாநயோர் வித்யதே பரம் ||'

2. இந்தக்காரணத்தினுல் தான் ஸ்திரீகளிடத்தில் அன்புடனும் மரியாதையுடனும் நடந்துகொள்ளவேண்டுமென்றும் அவர்களை சந்தோஷப்படுத்த வேண்டுமென்றும் அவர்கள் ஸந்தோஷப்பட்டால் தேவர்களெல்லோரும் ஸந்தோஷமடைந்து குலம் வ்ருத்தியடையுமென்றும் அப்படிக்கில்லாமல் அவர்களை துக்கமடையும்படிச் செய்தால் தேவர்களுக்குக் கோபமேற்பட்டு குலமே நசித்துவிடுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸ்த்ரீயஸ்துஷ்டா: ஸ்த்ரீயோருஷ்டா துஷ்டாருஷ்டாச்ச தேவதா:
வர்தயந்தி குலம் துஷ்டா: நாசயந்த்யபமானிதா: ||'

(ப்ருஹத் பராசரஸ்ம்ருதி)

இதேமாதிரி மனுஸ்மிருதி முதலியவைகளிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

3. யோகிகள் அம்பாளுடைய த்யானத்திலும் உபாஸனையிலும் ரமிப்பதால் (ஸந்தோஷமாக முயற்சிப்பதால்) அம்பாளுக்கு ராமா என்று பெயர் வந்ததாகவும் சொல்லலாம்.

## रमणलम्पटा

## ரமணலம்படா (320)

தன்னுடைய பதியுடன் ரமிப்பதில் ஆசையுடையவள்.

1. அம்பாள் ஸமஸ்த ஸ்திரீகளுடைய ரூபமாக இருப்பதால் அந்தந்த புருஷனுடன் ரமிப்பதில் ஆசையுள்ளவளாக இருப்பது அம்பாளுடைய அம்சமாக இருப்பதின் காரணமாகத்தான் என்று சொல்லப்பட்டது. அதாவது ஸ்திரீகளுடைய பாதிவ்

ரத்யமானது அவர்கள் 'ஸதீனும் அசரமே' என்று சொல்லப்பட்ட அம்பாளுடைய அம்சமாக இருப்பதினுல்தான் ஏற்படுகிறது என்று தாத்பர்யம்.

2. ரமணம் என்றுல் ஸம்போகம், க்ரீடை என்று அர்த்தம்.

## काम्या

(321)

காம்யா

விரும்பப்படுகிறவள்.

1. முமுக்ஷுக்கள் ஞானத்தின் மூலமாக அம்பாளுடைய ஸாயுஜ்யத்தை அடைய விரும்புவதால் அம்பாளுக்கு காம்யா என்று பெயர்.

2. அல்லது, கிருஷ்ண பக்ஷத்து துவாதசி இரவுக்கு காம்யா என்று பெயர். அதின் ஸ்வரூபமாக அம்பாள் இருப்பதால் காம்யா என்று அம்பாளுக்குப் பெயர்வந்ததாகவும் சொல்லலாம்.

## कामकलारूपा

(322)

காமகலா ரூபா

காமகலா ரூபமாக இருப்பவள்.

1. காம கலையைப்பற்றி ஏற்கனவே வந்த 89வது நாமமாகிய 'மூலகூடத்ரயகளேபரா' என்பதில் சொல்லப்பட்டிருக்கிறது. அதின் பாகங்கள் மூன்று பிந்துக்களும் ஹார்த்த கலையுமென்பதும் அங்கே சொல்லப்பட்டது. அவைகளில் முதலாவது பிந்துவுக்கு காமமென்றும் கடைசியாகிய ஹார்த்த கலைக்கு கலா என்றும் பெயரிருப்பதினுல் அவை நாலும் சேர்ந்ததற்கு காம கலையென்று பெயர், இது அம்பாளுடைய ஸூக்ஷ்மதரமான ரூபம். இதனுடைய ஸ்வரூபத்தைப்பற்றியும் மற்ற விபரங்களைப் பற்றியும் 'காமகலா விலாஸம்' என்ற க்ரந்தத்தில் பார்க்கவும்.

2. காமேச்வரருடையவும் காமேச்வரியுடையவும் ஸாமரஸ்ய ரூபமாக இருப்பதால் அம்பாளுக்கு காமகலா என்று பெயர் வந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'தஸ்ய காமேச்வராக்யஸ்ய காமேச்வர்யாச்ச பார்வதி |
கலாக்யா ஸவிலாஸா ச க்யாதா காமகலேதி ஸா ||'

(திருபுரா ஸித்தாந்தம்)

3. காமா என்று பெயருடனும் கலா ரூபமாகவுமிருப்பதால் அம்பாளுக்கு காமகலா என்று பெயர் வந்ததாகவும் சொல்லலாம். அம்பாளுக்கு காமா என்று பெயர் வந்ததற்குக் காரணம் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

'காமார்த்தமாகதா யஸ்மாத் மயா ஸார்த்தம் மஹாகிரௌ |
காமாக்யா ப்ரோச்யதே தேவீ நீலகூட ரஹோகதா ||
காமதா காமினீ காம்யா காந்தா காமாங்கதாயினீ |
காமாங்கநாசினீ யஸ்மாத் காமாக்யா தேன கத்யதே ||'

(காளீ புராணம்)

## कदम्बकुसुमप्रिया

### கதம்ப குஸும ப்ரியா (323)

கதம்ப புஷ்பங்களில் ப்ரியமுடையவள்.

## कल्याणी

### கல்யாணீ (324)

மங்கள ஸ்வரூபமானவள்.

1. சுபாத்மகமான வாக்குக்கு கல்யா என்று பெயர். அதை உண்டுபண்ணுவதால் அம்பாளுக்கு கல்யாணீ என்று பெயர்.

2. மலயாசலத்திலிருக்கும் அம்பாளுக்கு கல்யாணீ என்று பெயர் என்பதாக 'கல்யாணீ மலயாசலே' என்று பத்ம புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## जगतीकन्दा

### ஜகதீகந்தா (325)

ஜகத்திற்கு மூலகாரணமாக இருப்பவள்.

1. கந்தமென்றால் மூலமான கிழங்கு, பூர்ணம் செய்யும் வஸ்து, நீருண்ட மேகம் என்ற அர்த்தங்களுண்டு.

'கந்த: ஸ்யாத் பூரணே ஸஸ்யமூலே ஜலதரேऽபிச'

(யாதவ:)

## करुणारससागरा

### கருணாரஸஸாகரா (326)

கருணா ரஸத்தையுடைய ஸாகரம் போன்றவள்.

1. ரஸம் என்றால் ஜலம். கருணையென்ற ஜலத்தோடு கூடிய ஸமுத்ரம்போல் அம்பாள் இருப்பதால் கருணாரஸஸாகரா என்று பெயர். அதாவது ஸாகரங்களைவிட அதிகமாக கருணா ரஸத்தையுடையவள், அபாரமான கருணையோடு கூடியவள், என்று தாத்பர்யம்.

## कलावती (327)

## கலாவதீ

கலைகளையுடையவள்.

கலைகளைப்பற்றி ஏற்கனவே வந்த 236-வது நாமமாகிய 'சதுஷ்ஷஷ்டி கலாமயீ' என்ற நாமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## कलालापा (328)

## கலாலாபா

கலைகளையே ஸம்பாஷணமாக உடையவள்.

1. அம்பாள் ஸாதாரணமாகப் பேசும் வார்த்தைகளே (மேலே சொல்லிய) கலைகள் ரூபமாக இருப்பதாகச் சொல்லப் பட்டது. இவ்விதமாகவே ஆசார்யாளும்.

'ஸமுன் மீலத் ஸம்வித் கமல மகரந்தைக ரஸிகம்
பஜே ஹம்ஸத்வந்த்வம் கிமபி மஹதாம் மானஸசரம் |
யதாலாபாத் அஷ்டாதசகுணித வித்யா பரிணதி:
யதாதத்தே தோஷாத் குணமகிலம் அத்ப்ய: பய இவ ||

என்று ஸௌந்தர்ய லஹரியில் சொல்லியிருக்கிறார்கள்.

2. அல்லது மதுரமான பேச்சை உடையவள் என்றும் அர்த்தம் சொல்லலாம். அம்பாளுடைய பேச்சின் இனிமையைப்பற்றி ஏற்கனவே வந்த 27-வது நாமமாகிய 'நிஜஸல்லாப மாதுர்ய விநிர்பர்த்ஸித கச்சபீ' என்பதில் சொல்லப்பட்டிருக்கிறது.

3. கம் என்றால் ப்ரம்ஹம். லாலா என்றால் எச்சில். அம்பாளுடைய க்ருபையிருந்தால் எச்சில் வருவதுபோல் அவ்வளவு ஸுலபமாக ப்ரம்ஹத்தை அடையமுடிவதாலும் லாலா

ஜலப்ராபமாக ப்ரம்ஹத்தை அடையக்கூடுமாகையாலும் அம்பாளுக்கு கலாலாபா என்று பெயர் வந்ததாகவும் சொல்லலாம்.

## कान्ता

**காந்தா** (329)

அழகுள்ளவள்.

1. அல்லது மேலே சொல்லியபடி கம் என்ற பதத்திற்கு ப்ரம்ஹம் என்று அர்த்தமிருப்பதாலும் அம்பாள் முடிவில் ப்ரம்ஹஸ்வரூபமாக இருப்பதாலும், காந்தா என்று பெயர் வந்ததாகவும் சொல்லலாம்.

2. கிருஷ்ண பக்ஷத்திய ஏகாதசியின் ராத்திரிக்கு காந்தா என்று பெயர். அந்த ஸ்வரூபமாக அம்பாள் இருப்பதால் காந்தா என்று பெயர்.

## कादम्बरीप्रिया

**காதம்பரீப்ரியா** (330)

உத்தமமான மத்யத்தில் ப்ரியமுள்ளவள்.

1. மத்யம் முதலியவைகளை மஹாதேவிக்கு நிவேதனம் செய்து விட்டுப் பிறகு ஸ்வீகரிக்கலாமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'பரிஸ்ருதம் ஜஷமாத்யம் பலம் ச
பக்தானி யோனீ: ஸுபரிஷ்க்ருதானி |
நிவேதயன் தேவதாயை மஹத்யை
ஸ்வாத்மீக்ருத்ய ஸுக்ருதீ ஸித்திமேதி || (த்ரிபுரோபனிஷத்)

இம்மாதிரி உபாஸனையானது அவைகளை வழக்கமாக ஸ்வீகரிப்பவர்களுக்குத்தான் ஏற்பட்டது என்று சொல்வதும் உண்டு.

## वरदा

**வரதா** (331)

வரங்களைக் கொடுப்பவள்.

1. அதாவது ப்ரம்ஹா, விஷ்ணு முதலான பக்தர்களுக்கெல்லாம் அவர்கள் விரும்புகிற ஸகலவிதமான வரன்களையும் அம்பாள் கொடுப்பதாகச் சொல்லப்பட்டது.

2. கைகளால் காட்டப்படும் முத்ரைகளில் பயம், ஆபத்து இவைகளிலிருந்து காப்பாற்றுவதாகக் காட்டும் முத்ரைக்கு அபயதமென்றும் ஸகல அபீஷ்டங்களையும் கொடுப்பதாகக் காட்டும் முத்ரைக்கு வரதமென்றும் பெயர். அபய முத்ரை வலதுகையினுலும் வரதமுத்ரை இடதுகையினுலும் காட்டப்படுவது வழக்கம்.

3. தேவர்கள், அசுரர்கள், முனீச்வரர்கள் முதலிய எல்லாருக்கும் தேவையான ஸகல வரன்களையும் கொடுப்பதாக அம்பாள் தன் கையினுல் எப்போதும் காட்டிக்கொண்டிருப்பதாக மத்ஸ்யபுராணம் பத்மபுராணம் இவைகளில் சொல்லப்பட்டிருக்கிறது.

'யச்சாஹம் உத்தவானஸ்யா உத்தானகரதாம் ஸதா |
உத்தானே வரத: பாணி ஏஷ தேவ்யா: ஸதைவ து |
ஸுராஸுர முனிவ்ராத வரதேயம் பவிஷ்யதி ||

லோகத்தில் ஸாதாரணமாகக் கொடுப்பது கைகளாலாகையால் இங்கு அம்பாள் வரன்களைக்கைகளால் கொடுப்பதாகச்சொல்லப்பட்டது. வாஸ்தவத்தில் அம்பாள் கோரிய வரன்களையெல்லாம் கொடுப்பதினுல் வரதா என்று பெயர் ஏற்பட்டதே தவிர கையினுல் வரத முத்ரையைக் காட்டுவதினுல் அல்ல. அம்பாளுடைய ரூபத்தை த்யானம் செய்யும்போது அபயவரத முத்ரைகளுடன் த்யானம் செய்வது வழக்கமல்ல. அம்பாளுடைய நாலுகைகளிலும் பாசாங்குச சாபபாணங்களிருப்பதாகவே த்யானம் செய்வது வழக்கம். ஏனென்றுல் இதர தேவதைகள் மாதிரி தான் அபயம் வரம் இவைகளைக் கொடுப்பதைத் தன் கைகளின் அபிநயத்தின் மூலமாகக் காட்டவேண்டிய அவசியம் அம்பாளுக்கு இல்லையென்றும் அவைகளைக் கொடுப்பதற்கு அம்பாளுடைய பாதங்களே ஸாமர்த்யமுடையவைகளாக இருக்கின்றனவென்றும் தாத்பர்யம். இதர தேவதைகள் தங்கள் கைகளால் கொடுப்பதை அம்பாள் தன் கால்களாலேயே கொடுக்கிருள்என்றும் அதிலும் அம்பாள் ஒருவளே வேண்டப்பட்ட அளவுக்கு அதிகமாகவே வரன்களைக்கொடுக்கிருளென்றும் சொல்லப்பட்டது. இதையேதான் ஆசார்யாள்.

'த்வதன்ய: பாணிப்யாம் அபயவரதோ தைவதகண:
த்வமேகா நைவாஸி ப்ரகடித வராபீத்யபிநயா |

'பயாத் த்ராதும் தாதும் பலமபி ச வாஞ்சாஸமதிகம்
சரண்யே லோகானாம் தவ ஹி சரணாவேவ நிபுணௌ ||'
என்று 'ஸௌந்தர்யலஹரி'யில் வர்ணித்திருக்கிறார்கள்.

4. அம்பாளுக்கு வரதா என்ற பெயர் வந்ததைப்பற்றி
'வரார்த்திப்ய: ஸதாதிப்ய: காமான் பூரயதீச்வரீ |
தாதுர் வ்ருஞ் வரணே ப்ரோக்தஸ் தேன ஸா வரதா ஸ்ம்ருதா ||
என்று தேவீ பாகவதத்திலும்
'நவம்யாம் ச ஸதா பூஜ்யா இயம் தேவீ ஸமாதினா |
வரதா ஸர்வலோகானாம் பவிஷ்யதி ந ஸம்சய: ||'
என்று வராஹ புராணத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

## वामनयना
## வாமநயனா (332)

அழகான கண்களையுடையவள்.

1. அல்லது அழகான ப்ரமாணங்களோடு கூடியவள் என்று சொல்லலாம். [ப்ரமாணம் என்ற பதத்திற்கு அறிவும் விதம், ஆக்ருதி, ஆக்ஞை முதலான அர்த்தங்களுண்டு.]

2. அல்லது வாமம் எனப்படும் உபாஸனா மார்க்கத்தில் பக்தர்களை அழைத்துக்கொண்டு போவதால் வாமநயனா என்று பெயர் வந்ததாகவும் சொல்லலாம்.

3. கர்மாவுக்கு ஏற்படும் பலனுக்கு வாமமென்று பெயர். கர்மாவின் பலன்களை அடையும்படி செய்வதால் அம்பாளுக்கு வாமநயனா என்று பெயர் வந்ததாகவும் சொல்லலாம். ஏற்கனவே வந்த 'புண்யா புண்ய பலப்ரதா' என்ற நாமத்தையும் த்ரிசதியில் வரும் 'கர்ம பலப்ரதா' என்ற நாமத்தையும் இங்கு கவனிக்கவும்,

## वारुणीमदविह्वला
## வாருணீமத விஹ்வலா (333)

வாருணீ என்ற மத்யத்தைப் பானம் செய்வதினால் ஏற்படும் ஆனந்தத்தினால் மெய் மறந்திருப்பவள்.

1. வாருணீ என்பது பேரீச்சையிலிருந்து உண்டாகும் ஒருவிதமான மத்யம். அது வருணனுக்கு ப்ரியமானதால் அதற்கு வாருணீ என்று பெயர். 'விஹ்வல' என்றால் பாஹ்ய

பதார்த்தங்களை மறந்திருப்பது. இதனால் அம்பாள் ஸ்வாத்மானந்தத்தில் ஈடுபட்டிருப்பதைச் சொல்லப்பட்டது. இதையே தான் பின்னால் வரும் 878-வது நாமமான 'ஸ்வாத்மாராமா' என்பதில் சொல்லப்பட்டிருக்கிறது.

2. 'உபாயஸ்தே ஸ்வயம் காந்த்யா யோ வாருண்யா ச மூர்த்தயா' என்று விஷ்ணு புராணத்தில் சொல்லியபடி ஆதிசேஷனை வாருணி மத்யத்தினால் உபாஸனை செய்வதால் அவருக்கு வாருணிமான் என்று பெயர். அவர் பதினாலு லோகங்களையும் தன் ஆயிரம் தலைகளால் தாங்கிக்கொண்டிருப்பதாகச் சொல்லப்படும். அப்படிச் சுமந்துகொண்டிருப்பதில் அவருக்கு விஹ்வலம் (களைப்பு மயக்கம்) ஏற்படாமலிருக்கும்படி அம்பாள் செய்வதால் வாருணி மத விஹ்வலா என்று பெயர்.

வாருணிமத், அவிஹ்வலா என்று பதத்தைப் பிரிக்க வேண்டும்.

அம்பாளுடைய பாததூளிகளில் ஒன்றைக்கொண்டு ப்ரம்ஹா வானவர் ஸகல லோகங்களையும் ஸ்ருஷ்டிக்கிறார் என்றும் அந்த லோகங்களை சௌரியானவர் (ஆதிசேஷன்) தன் ஆயிரம் தலைகளினால் எப்படியோ கஷ்டப்பட்டுக்கொண்டு (கதமபி) தாங்கிக்கொண்டிருக்கிறார் என்றும் ஆசார்யாள் ஸௌந்தர்யலஹரியில் வர்ணித்திருக்கிறார்கள்.

"தனீயாம்ஸம் பாம்ஸும் தவசரண பங்கேருஹபவம்
விரிஞ்சிஸ் ஸஞ்சின்வன் விரசயதி லோகானவிகலம் |
வஹத்யேனம் சௌரி: கதமபி ஸஹஸ்ரேண சிரஸாம்
ஹரஸ் ஸம்க்ஷுத்யைனம் பஜதி பஸிதோத் தூளனவிதிம் ||"

இப்படித் தாங்குவதில் ஆதிசேஷனுக்கு ஒருவிதமான ச்ரமமும் ஏற்படாமலிருக்கும்படி அம்பாள் அனுக்ரஹம் செய்திருப்பதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டதாக வைத்துக் கொள்ளலாம்.

3. அல்லது, ஆதிசேஷன் எப்படி கொஞ்சமும் களைப்பில்லாமல் ஸகல லோகங்களையும் தாங்குகிறானோ அம்மாதிரியே களைப்பு மயக்கம் முதலியவை இல்லாதவள் என்றும் சொல்லலாம்

4. தேகத்திலிருக்கும் நாடிகளில் வாருணீ என்று (வாயுவை தேவதையாக உடைய) ஒரு நாடீ உண்டு.

அதை யோகாப்யாஸத்தினல் வசப்படுத்திக்கொண்டவருக்கு வாருணீமான் என்று பெயர். இப்படி வாருணியை ஜயித்த யோகிகளான பக்தர்களுக்கு விஹ்வலம் ஏற்படாமல் செய்வதால் அம்பாளுக்கு இந்தப்பெயர் வந்ததாகவும் சொல்லலாம்.

"அசச் சோர்த்வம் ஸ்திதாநாடீ வாருணீ ஸர்வகாமினீ |
பூஷா திக்தேவதா ப்ரோக்தா வாருணீ வாயுதேவதா ||"

(யோகசாஸ்த்ரம்)

## विश्वाधिका
## விச்வாதிகா (334)

விச்வத்திற்கெல்லாம் மேல்பட்டவள், உத்க்ருஷ்டமானவள்.

1. விச்வமென்ற பதமானது ப்ருதவீ முதல் சிவனேடு முடியும் ஸகல தத்வங்களையும் குறிக்கும். அம்பாளானவள் இந்த தத்வங்களையெல்லாம் கடந்ததும் சிவபக்தி ஸாமரஸ்யமான ஸாதாக்ய தத்வஸ்வரூபிணியானதால் விச்வாதிகா என்று பெயர்.

## वेदवेद्या
## வேதவேத்யா (335)

வேதங்களால் அறியத்தகுந்தவள்.

1 'வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய:' என்று ச்ருதியில் சொன்னபடி ருக், யஜுஸ், ஸாம, அதர்வணங்களாகிற வேதங்களால் அம்பாள் அறியத்தகுந்தவளாகையால் இந்தப் பெயர் ஏற்பட்டது.

2. அம்பாளிருக்கும்படியான சிந்தாமணிக்ருஹத்திற்கு நாலு திக்குகளிலும் நாலு வாசற்படிகளாக நாலு வேதங்களு மிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

"சிந்தாமணிக்ருஹபூமிர் ஜ்ஞாத் ஆம்நாய சதுர்த்வாரா |"

(லலிதாஸ்தவ ரத்னம்.)

இந்த வாசற்படிகள் வழியாகப் போனலொழிய அம்பாளு டைய தர்சனம் கிடைக்காதாகையால் அம்பாள் (வேதைக வேத்யா) வேதங்களால் மட்டும் அறியப்படுகிருள் என்று ஏற்படுகிறது. இதையேதான்

'ருசாம் ப்ராசீ மஹதீ திருச்யதே
　　தக்ஷிணமாஹுர் யஜுஷாமபாராம் |
அதர்வணாம் அங்கிரஸாம் ப்ரதீசீம்
　　ஸாம்னாம் உதீசீ மஹதீ திருச்யதே ||'
என்று ச்ருதியில் சொன்னது.

3. அல்லது ருக், யஜுஸ், அதர்வண, ஸாமவேதங்களுக்கு முறையே தேவதைகளான சுத்த வித்யை முதலானவை, ஸௌபாக்யவித்யை முதலானவை, லோபாமுத்ரா வித்யை முதலானவை, துரீயாம்பா முதலானவை இந்த வித்யைகளால் அறியப்படுவதால் அம்பாளுக்கு வேதவேத்யா என்று பெயர் வந்ததாகவும் சொல்லலாம்.

## विन्ध्याचलनिवासिनी

## விந்த்யாசல நிவாஸினீ (336)

விந்த்யமெனப்படும் பர்வதத்தில் இருப்பவள்.

1. விந்த்யாசலத்திலிருக்கும் அம்பாளுடைய ரூபத்திற்கு விந்த்யாதி வாஸினீ என்று பெயர் என்பதாக பத்ம புராணத்தில் அம்பாளுடைய க்ஷேத்திரங்களைச் சொல்லுகையில் சொல்லப் பட்டிருக்கிறது.

'த்ரிகூடே ச ததாஸீதா விந்த்யே விந்த்யாதிவாஸினீ |

2. அம்பாள் விந்த்யாசலத்தில் தான் இருப்பதாகவும் அந்த ரூபத்தில் அஸுரர்களை ஸம்ஹாரம் பண்ணப்போவதாகவும் சொன்னதாக தேவீ மாஹாத்ம்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

"வைவஸ்வதேந்தரே ப்ராப்தே அஷ்டாவிம்சதிமே யுகே |
சும்போ நிசும்பச்சைவான்யௌ உத்பத்ஸ்யேதே மஹாஸுரௌ ||
நந்தகோபக்ருஹே ஜாதா யசோதா கர்பஸம்பவா |
ததஸ்தௌ நாசயிஷ்யாமி விந்த்யாசல நிவாஸினீ || "

இதேமாத்ரி

'வைவஸ்வதேந்தரே தௌ ச புன: சும்பநிசும்பகௌ |
உத்பத்ஸ்யேதே வரான் மத்தௌ தேவோபத்ரவகாரிணௌ ||
நந்தகோபகுலேஜாதா யசோதா கர்பஸம்பவா |
தாவஹம் நாசயிஷ்யாமி நந்தாக்யா விந்த்யவாஸினீ ||'
என்று பாஞ்சராத்ர லக்ஷ்மீ தந்த்ரத்திலும் சொல்லியிருக்கிறது.

## विधात्री

## விதாத்ரீ (337)

(ஜகத்தை) தாங்குகிறவள்.

1. அல்லது ஜகத்தைப் போஷிக்கிறவள் என்றும் அர்த்தம் சொல்லலாம்.

'தாத்ரீ மாதா ஸமாக்யாதா தாரணாச் சோபகீயதே' |

(தேவீபாகவதம்)

அம்பாளுக்கு தாத்ரீ, ஜகத்தாத்ரீ என்ற பெயர்களும் உண்டு.

2. (விதாதா எனப்படும்) ப்ரம்ஹாவினுடைய பத்னீ ஸ்வரூபமாக அம்பாள் இருப்பதனால் விதாத்ரீ என்று பெயர் என்றும் சொல்லலாம்.

3. அம்பாளுக்கு தாத்ரீ பலம் (நெல்லிக்கனி) விசேஷமான ப்ரியமுள்ள வஸ்துவாகையால் விதாத்ரீ என்ற பெயர் வந்ததாகவும் சொல்லலாம்.

## वेदजननी

## வேதஜனனீ (338)

வேதங்களை உத்பாதனம் பண்ணினவள் (உண்டு பண்ணினவள்.)

1. வேதங்கள் ப்ரம்ஹத்தினிடமிருந்து உண்டானவை என்பது அநேக வாக்யங்களால் ப்ரதி பாதிக்கப்பட்டிருக்கிறது.

'யஸ்ய நிச்வஸிதம் வேதா:'

'அஸ்ய மஹதோ பூதஸ்ய நிச்வஸிதம் எதத்ருக்வேதோ யஜுர்வேத:'

'ருச: ஸாமானி ஜக்ஞிரே'

2. அம்பாளுடைய ஸ்வரூபமான குண்டலியினிடமிருந்து ஸகல சப்தங்களும் உண்டானவையென்றும் அதனால் அம்பாளுக்கு வேதமாதா என்ற பெயர் வந்ததாகவும்,

'யத: ச்ருங்காடகாகார குண்டலின்யா: ஸமுத்கதா: |

ஸ்வராச்ச வ்யஞ்ஜனனீதி வேதமாதா தத: ஸ்ம்ருதா' ||

என்று தேவிபாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## विष्णुमाया

## விஷ்ணு மாயா (339)

விஷ்ணுவினுடைய மாயா ரூபிணியாக இருப்பவள்.

1. தேசா, காலம் முதலிய கட்டுக்களுக்கு அடங்காமல் எங்கும் வ்யாபித்திருப்பதினால் விஷ்ணு என்று பெயர். அவரை யும் சூழ்ந்து கட்டில் அடக்குவதால் அம்பாளுக்கு விஷ்ணுமாயா என்று பெயர்.

2. அல்லது, விஷ்ணுவினுடைய மாயை என்று அர்த்தம் சொல்லலாம்.

'தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா' |

(பகவத்கீதை)

அம்பாளை விசேஷமாக விஷ்ணுமாயா என்ற பெயரால் தேவீ மாஹாத்ம்யத்தில் அனேக இடங்களில் சொல்லப்பட்டி ருக்கிறது.

'யா தேவீ ஸர்வபூதேஷு விஷ்ணுமாயேதி சப்திதா |
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:' ||

3. விஷ்ணு மாயையானது ஸகல வஸ்துக்களுக்கும் அவை யவைகளுடைய (ஸத்வ ரஜஸ்தமோ) குணங்களின் பேதங்கள் ப்ரகாரம் வ்யக்தம், அவ்யக்தம் என்பதான பேதத்திற்குக் காரணமாக இருப்பதாகச் சொல்லப்பட்டது.

'அவ்யக்த வ்யக்த ரூபேண ரஜஸ் ஸத்வ தமோ குணை: |
விபஜ்ய யார்த்தம் குருதே விஷ்ணுமாயேதி ஸோச்யதே' ||

(காளிகா புராணம்)

## विलासिनी

## விலாஸினீ (340)

விலாஸத்தோடு கூடியவள்.

1. விலாஸமென்ற பதத்திற்கு கேளி, விளையாட்டு, காமோ த்தீபன நடத்தைகள் என்று அர்த்தம்.

2. 'நித்யா விலாஸினீ தோக்த்ரீ' என்றபடி விலாஸினீ என்பது ஒருவிதமான பீட சக்திக்குப் பெயர். அந்த ரூபமாக அம்பாள் இருப்பதால் விலாஸினீ என்று பெயர்.

3. 'வபயோரபேத:' என்றபடி பிலாஸினீ என்றும் இந்த நாமத்தைச் சொல்லலாம். ப்ரம்ஹரந்த்ரத்தை பிலம் என்று சொல்வது உண்டு. அது மோக்ஷத்திற்கு துவாரமென்றும் அதை அடைத்துக்கொண்டு ப்ரம்ஹாணீ என்ற ஒரு சக்தியானவள் இருப்பதாகவும் சொல்லப்படும். அந்த சக்தி ரூபமாக அம்பாள் இருப்பதால் விலாஸினீ என்று பெயர் வந்ததாகச் சொல்லலாம்.

'தத்ர ப்ரம்ஹவிலம் ஞேயம் ருத்ர கோட்யர்புதைர் வ்ருதம்' ||
'ப்ரம்ஹாணீத்யபரா சக்தி: ப்ரம்ஹரந்த்ரஸங்க காமினீ |
த்வாரம் ஸா மோக்ஷமார்கஸ்ய ரோதயித்வா வ்யவஸ்திதா' ||
(ஸ்வச்சந்த தந்த்ரம்)

## क्षेत्रस्वरूपा

## க்ஷேத்ரஸ்வரூபா (341)

க்ஷேத்திரத்தை தன்னுடைய நிஜமான ரூபமாக உடையவள்.

1. க்ஷேத்திரமென்பது அம்பாள் இருக்கும்படியான காமரூபம் முதலான திவ்ய க்ஷேத்திரங்களைக் குறிக்கும். தக்ஷப்ரஜாபதியின் யாகத்தை அழித்தபிறகு பரமசிவன் தன்னுடைய பத்னியாகிய ஸதீதேவியின் சரீரத்தைத் தோளின்மேல் போட்டுக்கொண்டு துக்காக்ராந்தராக அலையும்போது ஸமஸ்ததேவர்களும் ஒன்றும் தோன்றாதவர்களாக மஹா விஷ்ணுவையடைந்து வேண்டிக்கொள்ளவே அவர் ஸதீதேவியின் சரீரம் இருக்கும் வரையில் பரமசிவன் அம்மாதிரி இருப்பாரென்று உணர்ந்து தன்னுடைய சக்ராயுதத்தால் அந்த சரீரத்தை துண்டம் துண்டமாகப் பண்ணினாரென்றும், அந்தத்துண்டுகள் விழுந்த இடங்களெல்லாம் ஒவ்வொன்றும் ஓரோர் க்ஷேத்ரமாக ஏற்பட்டதென்றும் சொல்லப்படும்.

2. அல்லது, க்ஷேத்திரமென்பது ப்ருதிவீ முதல் சிவாந்தமான முப்பத்தாறு தத்வங்களடங்கிய சரீரத்தையும் குறிக்கும். ஜீவனை க்ஷேத்ரக்ஞனென்றும் சொல்லப்படும். இந்தப் பிரிவையே ப்ரக்ருதி, புருஷன் என்றும் சொல்வதுண்டு.

'பிபர்தி க்ஷேத்ரதாம் தேவீ த்ரிபுராந்தகவல்லபா |
க்ஷேத்ரக்ஞத்வம் அஜோ தத்தே பகவான் அந்தகாந்தக:' ||
(லிங்கபுராணம்)

3. ஸமஸ்த ஜீவராசிகளையும் அறிந்தவரும் ஸகல ஜீவன்களிலும் இருப்பவருமான பரமாத்மாவை க்ஷேத்ரக்ஞனென்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ ஸம்பந்தத்தை பகவத்கீதையில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறதையும் பார்க்கவும்.

'இதம் சரீரம் வஸுதே க்ஷேத்ரமித்ய பிதீயதே |
ஏதத்யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரக்ஞமிதி தத் வித: ||
க்ஷேத்ரக்ஞம் சாபிமாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத ||
(விஷ்ணுஸ்ம்ருதி)

'சதுர்விம்சதி தத்வானி க்ஷேத்ரசப்தேன ஸூரய: |
ஆஹு க்ஷேத்ரக்ஞசப்தேன போக்தாரம் புருஷம் ததா' ||
(லிங்கபுராணம்)

'அவ்யக்தம் க்ஷேத்திரமுத்திஷ்டம் ப்ரம்ஹா க்ஷேத்ரக்ஞ உச்யதே | '
(வாயுபுராணம்)

'க்ஷேத்ராக்யானி சரீராணி தேஷாம் சைவ யதா ஸுகம் |
தானி வேத்தி ஸ யோகாத்மா தத: க்ஷேத்ரக்ஞ உச்யதே' ||
(ப்ரம்ஹபுராணம்)

'யோऽஸ்யாத்மன: காரயிதா தம் க்ஷேத்ரக்ஞம் ப்ரசக்ஷதே |
ய: கரோதி து கர்மாணி ஸ பூதாத்மோச்யதே புதை: |
ஜீவஸம்ஞோऽந்தராத்மான்ய: ஸஹஜ: ஸர்வதேஹினம் |
யேன வேதயதே ஸர்வம் ஸுகம் து:கம் ச ஜன்மஸு ||
தாவுபௌ பூதஸம்ப்ருக்தௌ மஹான் க்ஷேத்ரக்ஞ ஏவ ச |
உச்சாவசேஷு பூதேஷு ஸ்திதம் தம் வ்யாப்யதிஷ்டத: ||
அஸம்க்யா மூர்தயஸ்தஸ்ய நி: பதந்தி சரீரத: |
உச்சாவசானி பூதானி ஸம்ததம் சேஷ்டயந்தி யா: ||
(மனுஸ்ம்ருதி)

## क्षेत्रेशी

## க்ஷேத்ரேசீ (342)

க்ஷேத்ரேசனுகிய பரமசிவனுடைய பத்னீ.

## क्षेत्रक्षेत्रज्ञपालिनी

### க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ பாலினீ (343)

க்ஷேத்திரம், க்ஷேத்ரக்ஞன் இவர்களிருவரையும் பரிபாலிப்பவள்.

## क्षयवृद्धिनिर्मुक्ता

### க்ஷயவ்ருத்தி விநிர்முக்தா (344)

க்ஷயம், வ்ருத்தி இவைகளில்லாதவள்.

1. க்ஷயம் என்பது குறைவது வ்ருத்தி என்பது அதிகப்படுவது. இவையிரண்டும் க்ஷேத்ரத்தோடு ஸம்பந்தப்பட்ட பாவங்கள். அம்பாள் க்ஷேத்ரங்களுக்கு அதிஷ்டாதாவாக இருந்தாலும் அப்பேர்ப்பட்ட பாவங்களால் பாதிக்கப்படாமலிருப்பது இங்கு சொல்லப்பட்டது. இதையேதான்,

நைனம் சிந்தந்தி சஸ்த்ராணீ நைனம் தஹதி பாவக: |
ந சைனம் க்லேதயந்த்யாபோ ந சோஷயதி மாருத: ||

முதலான வாக்கியங்களால் பகவத்கீதை முதலிய சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

2. அல்லது, இவையிரண்டும் கர்மாவின் பலன்கள் என்று சொல்லப்படுவதாலும் அம்பாள் கர்மாவின் ஸம்பந்தமேயில்லாமலிருக்கிறபடியாலும் இந்தப்பெயர் வந்ததாகவும் சொல்லலாம். இதையேதான்,

'ஏஷ நித்யோ மஹிமா ப்ராம்ஹணஸ்ய
ந கர்மணா வர்ததே நோ கனீயான்' (காடகஸ்ருதி)

'ஸ ந ஸாதுனா கர்மணா பூயான்னோ ஏவாஸாதுனா கனீயான்'
(வாஜஸநேயஸ்ருதி)

என்று ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

## क्षेत्रपालसमर्चिता

### க்ஷேத்ரபால ஸமர்ச்சிதா (345)

க்ஷேத்ரபாலரால் நன்றாய் ஆராதிக்கப்பட்டவள்.

1. முன்னொருக்கால் தாருகனென்ற அசுரனை ஸம்ஹாரம் செய்வதற்காக காளியானவள் சிவனால் நிர்மிக்கப்பட்டாளென்

றும், அந்த அஸுரனை ஸம்ஹாரம் செய்த பிறகும் காளியின் கோபாக்னியானது தணியாமல் லோகங்களையெல்லாம் நாசம் செய்துவிடும்போலிருந்ததைப் பார்த்த பரமசிவன் தான் ஒரு சிறு குழந்தையாக ரூபம் எடுத்துக்கொண்டு காளியின் ஸன்னிதியில் அழுதுகொண்டிருந்ததாகவும், அப்போது காளியானவள் அழுகிற குழந்தையைப் பார்த்துக் கைகளிலெடுத்து ஸ்தன்ய பானம் செய்வித்ததாகவும் அப்போது குழந்தையான பரமசிவன் காளியின் ஸ்தன்யத்தோடு அவளுடைய கோபத்தையும் பானம் செய்துவிடவே காளியின் கோபம் அடங்கிவிட்டதாகவும் லிங்கபுராணம் முதலியவைகளில் சொல்லப்பட்டிருக்கிறது. இப்பேர்ப்பட்ட சிவனுடைய அவதாரத்திற்கு க்ஷேத்ரபாலன் என்றுபெயர், அம்பாளுடைய பக்தர்களுக்குக் கெடுதல் வராமல் காப்பாற்றுகிறவர்களில் ஒருவரென்று பலச்ருதி அத்யாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஸஹஸ்ரநாம ஜபம் செய்கிறவர்களுடைய தனத்தை எவனுவது அபகரித்தானேயாகில் அவன் யாராயிருந்தாலும் சரி, எங்கே இருந்தாலும் சரி அவனை க்ஷேத்ர பாலன் ஸம்ஹாரம் செய்துவிடுவாரென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'தனம் யோஹாதே சோரை: நாமஸாஹஸ்ர ஜாபின: |
யத்ர குத்ர ஸ்திதம் வாऽபி க்ஷேத்ர பாலோ நிஹந்தி தம் ||

2. க்ஷேத்ரம் என்றால் யாகசாலைக்குப் பெயர். அதைக் காப்பாற்றுகிறவன் க்ஷேத்ரபாலன். அவனால் அர்ச்சிக்கப்பட்டவள் க்ஷேத்திரபால ஸமர்ச்சிதா என்றும் அர்த்தம் பண்ணலாம்.

## त्रिजया

## விஜயா (346)

எப்போதும் ஜயத்தோடு கூடியவள்.

1. 'விஜயம் சைவ காச்மீரே' என்றபடி காச்மீர தேசத்திலிருக்கும்படியான சிவனுடைய மூர்த்திக்கு விஜயனென்று பெயர் என்பதாக தேவீபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ரூபத்தோடு இருப்பதால் அம்பாளுக்கு விஜயா என்று பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

2. அம்பாளுக்கு இந்தப் பெயர் ஏற்பட்டதற்குக் காரணம்,

'விஜித்ய பத்மநாமானம் தைத்யராஜம் மஹாபலம் |
த்ரிஷு லோகேஷு விக்யாதா, விஜயா சாபராஜிதா' ||

என்று தேவீபுராணம் நிர்வசனுத்யாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

3. சில்பசாஸ்த்ரத்தில் விஜயா என்ற பிரஸித்தமான ஒரு க்ருஹ விசேஷத்தைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ரூபமாக இருப்பதால் விஜயா என்று பெயர்.

4. விஜயா என்பது ஒரு முஹூர்த்த விசேஷத்திற்கும் பெயர். புரட்டாசி மாதம் சுக்ல பக்ஷம் தசமியன்று ஸாயங்காலத்திற்குப் பிறகு நக்ஷத்திரங்கள் உதயமாகும் தருணத்திற்கு விஜயா என்று பெயர் என்றும், அப்போது ஆரம்பமாகும் ஸகல காரியங்களும் ஜயமாக முடியுமென்றும் முஹூர்த்த சிந்தாமணியில் சொல்லப்பட்டது.

'ஆச்வினஸ்ய ஸிதே பக்ஷே தசம்யாம் தாரகோதயே |
ஸ காலோ விஜயோ ஜ்ஞேய: ஸர்வகார்யார்த்த ஸித்தித:' ||

அதே விதமாக அன்று தினம் ஸாயங்காலத்திற்குப் பிறகு நக்ஷத்திரங்கள் உதயமாகும் தருணத்திற்கு (11-வது முஹூர்த்தத்திற்கு) விஜயா என்று பெயர் என்றும் இந்த விஜயா என்ற முஹூர்த்தத்தில் தான் (விஜயதசமி யன்று) அம்புபோடுவது என்பதாகக் கொண்டாடப்படுவது என்றும், அதில் ஆரம்பித்த ஸகல காரியங்களும் ஸித்தியாகுமென்றும் விஜயம் பெற விரும்புவோர்கள் அப்போது யாத்திரையை ஆரம்பிக்கவேண்டுமென்றும் ரத்னகோசத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஈஷத் ஸந்த்யாம் அதிக்ராந்த: கிஞ்சி துன்னித்ரதாரக: |
விஜயோ நாம காலோऽயம் ஸர்வ கார்யார்த்த ஸாதக: ||
ஏகாதசோ முஹூர்த்தோயோ விஜய: பரிகீர்த்தித: |
தஸ்மின் யாத்ரா விதாதவ்யா ஸர்வைர் விஜயகாங்க்ஷிபி: ||

அம்பாள் இப்பேர்ப்பட்ட காலரூபிணியாக இருப்பதால் விஜயா என்று பெயர்.

**विमला**

**விமலா** (347)

மல ஸம்பந்தம் (மாலின்யம்) இல்லாதவள்.

1. அவித்யையினால் ஏற்படும் மலத்தினுடைய ஸம்பந்தம் யாதொன்றும் அம்பாளுக்கு இல்லையாகையால் விமலா என்று பெயர்.

2. 'விமலா புருஷோத்தமே' என்று பத்மபுராணத்தில் சொல்லியபடி தேவீக்ஷேத்ரங்களில் ஒன்றான புருஷோத்தம க்ஷேத்திரத்திலிருக்கும் அம்பாளுக்கு விமலா என்று பெயர்.

3. சில்ப சாஸ்திரத்தில் விமலா என்பது ஒரு க்ருஹ விசேஷத்தின் பெயர்.

த்ருவம் தான்யம் ஜயம் சாந்தம் விபுலம் விஜயம் ததா |
ஸுமுகம் விமலம் நந்தம் நிதனம் ச மனோரமம் ||

என்பதாக க்ருஹ விசேஷங்களின் பெயர்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

**वन्द्या**

**வந்த்யா** (348)

நமஸ்கரிக்கத்தகுந்தவள்.

**वन्दारुजनवत्सला**

**வந்தாரு ஜன வத்ஸலா** (349)

பக்த ஜனங்களுக்கு அனுக்ரகம் செய்பவள்.

1. அதாவது, பக்தர்களை குழந்தைகளைப்போல் பிரியத்துடன் போஷிப்பவள் என்று அர்த்தம்.

**वाग्वादिनी**

**வாக்வாதினீ** (350)

வாக்கை (வார்த்தையை)ச் சொல்லுகிறவள்.

1. அல்லது, சொல்லும்படி செய்கிறவள், அல்லது வாக்வாதினீ என்ற தேவதா ரூபமாக இருப்பவள்.

சப்தானும் ஜனனீத்வமேவ புவனே வாக்வாதினீத்யுச்யஸே'

(லதுஸ்துதி)

'ஸர்வேஷாம் ச ஸ்வபக்தானும் வாத ரூபேண ஸர்வதா |
ஸதந்த்ரத்வாத்வா ச விக்யாதா லோகே வாக்வாதினீதி ஸா ||

(த்ரிபுராஸித்தாந்தம்)

## वामकेशी

### வாமகேசீ (351)

அழகான கூந்தலையுடையவள்.

1. பரமசிவனுக்கு வாமகேச்வரரென்றும் வாமேச்வரரென்றும் பெயர்கள் உண்டு. ஆகவே அவருடைய பத்னிக்கு வாமகேசீ என்று பெயர்.

2. 'ஜடே வாமேச்வரம் வித்யாத்' என்றபடி அந்த க்ஷேத்ரத்தில் இருக்கும் பரமசிவனுக்கு வாமேச்வரர் என்று பெயர் என்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

3. வாமகேசரால் (பரமசிவனால்) சொல்லப்பட்ட ஒரு தந்த்ரத்திற்கு வாமகேச (அல்லது வாமகேச்வர) தந்த்ரம் என்று பெயர். அதில் அம்பாள் ப்ரதிபாதிக்கப்பட்டிருப்பதால் வாமகேசீ என்று பெயர் என்பதாகவும் சொல்லலாம்.

## वह्निमण्डलवासिनी

### வன்ஹிமண்டல வாஸினீ (352)

அக்னியினுடைய மண்டலத்திலிருப்பவள்.

1. அக்னிமண்டலமானது மூலாதாரத்திலும் பரமாகாசத்திலும் இருப்பதாகச் சொல்லப்படும்.

2. வன்ஹி என்றபதமானது மூன்று என்ற எண்ணிக்கையையும் குறிக்கும். ஆகவே வன்ஹி மண்டலமென்பது ஷட்சக்ரங்களுடைய பாகங்களான ஸோமஸூர்யாக்னி மண்டலங்களையும் பஞ்சதசாக்ஷரியின் மூன்று மண்டலங்களையும் குறிக்கும்.

## भक्तिमत्कल्पलतिका

### பக்திமத் கல்பலதிகா (353)

பக்தர்களுக்கு கல்பகக்கொடி போன்றவள்.

1. கல்பகக்கொடியானது எப்படித்தன்னை ஆச்ரயித்தவர்களுக்கு கோரியவற்றையெல்லாம் கொடுக்குமோ அதேவிதம் அம்பாள் தன்னுடைய பக்தர்களுக்கு எல்லா அபீஷ்டங்களையும் கொடுப்பதால் அதற்கு ஸமானமென்று சொல்லப்பட்டது.

2. ஆசார்யாள் அம்பாளுடைய பாதங்களின் ப்ரபாவத்தை வர்ணிக்கையில் அவை பக்தர்களுடைய விருப்பத்திற்கு அதிகமாகவே கொடுக்கும் சக்தியையுடையவையென்றும் கல்ப விருக்ஷமானது (ஒன்றுமே தேவையில்லாமல்) ஸ்வர்க்கத்திலிருக்கும் தேவர்களுக்கு அவர்கள் வேண்டுகிற வஸ்துக்களை தன்னுடைய (துளிர்களாகிற) கைகளால் கொஞ்சமாகக் கொடுப்பது மாதிரியல்லாமல் யாவருக்கும் தாராளமாகக் கொடுக்கும் சக்தியோடும் கூடியவையென்று வர்ணித்திருக்கிறார்கள்.

'பயாத் த்ராதும் தாதும் பலமபி ச வாஞ்சாஸமதிகம்
சரண்யே லோகானாம் தவ ஹி சரணாவேவ நிபுணௌ |
'பதம் தே காந்தீனாம் கர கமல ஸங்கோச சசிபி:
தருணாம் திவ்யானாம் ஹஸத இவதே சண்டி சரணௌ |
பலானி ஸ்வஸ்த்தேப்ய: கிஸலய கராக்ரேண ததாம்
தரித்ரேப்யோ பத்ராம் ச்ரியமனிசம் அன்ஹாய ததெள' ||

3. கல்ப என்றபதமானது அனேகமாக சற்றேறக்குறைய என்று அர்த்தம் கொடுக்கும். ஆகவே அபூர்ணமான பக்தியுடையவர்களை பக்தி மத்கல்பாளென்று சொல்லலாம். அப்பேர்ப்பட்டவர்களுக்கு தன்னிடத்திலிருக்கும் அபூர்ணமான பக்தியை (கொடி படருவதுபோல்) அம்பாள் விஸ்தாரப்படுத்துவதால் பக்திமத் கல்பலதிகா என்று பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

4. லதை என்று கஸ்தூரிக்குப்பெயர் உண்டு. தன்னிடம் அபூர்ணமான பக்தியுடையவர்களுடைய பக்தியை (கஸ்தூரி போல்) பரிமளிக்கும்படி செய்வதால் அம்பாளுக்கு இந்தப் பெயர் என்பதாகவும் சொல்லலாம்.

5. க்ரமம் தெரியாமலும் அர்த (பாதி) பக்தியுடனும் தன்னை உபாஸனை செய்கிறவர்களுக்குங்கூட அம்பாள் ஜன்மாந்தரத்தில் க்ரமத்துடனும் பூர்ணபக்தியுடனும் தன்னை உபாஸனை

செய்யும்படியான சக்தியைக்கொடுக்கிருளென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'அக்ரமேணூர்த பக்த்யா வா பவான்யா: க்ருதமர்சனம்:
ஜன்மாந்தரே க்ரமப்ராப்த்யை பூர்ணபக்தியை ச கல்பதே ||'

(சக்திரஹஸ்யம்)

## पशुपाशविमोचिनी

## பசுபாச விமோசினீ (354)

பசுக்களை பாசத்திலிருந்து விடுவிப்பவள்.

1. (நானும் பரப்ரம்ஹமும் ஒன்று என்பதான) அபேத ஞானரூபமான வித்யையில்லாதவர்களை பசுக்களென்று சொல்லப்படும்.

'யோऽன்யாம் தேவதாம் உபாஸ்தேऽன்யோऽஸாவன்யோ
ऽஹமஸ்மீதி ந ஸ வேத யதா பசு:' (ச்ருதி)

2. பாசம் என்பது பேதபாவத்தைக் கொடுக்கும் அவித்யை, மாயை. இந்தப் பாசத்தினுல் ஜீவனுனவன் பஞ்சபூதாத்மகமான தேஹத்தைத் தான் என்று நினைத்து (மாடு தாம்புக்கயிற்ருல் கட்டுப்பட்டிருப்பதுபோல்) அதோடு கட்டுப்பட்டிருக்கிருன். இப்பேர்ப்பட்ட ஜீவனுக்கு ஞானத்தைக் கொடுத்து அபேத ஞானம் ஏற்படச்செய்து (தாம்புக்கயிற்றை அவிழ்த்து மாட்டை விடுவிப்பதுபோல்) பாசத்திலிருந்து அம்பாள் விடுவிப்பதால் பசுபாசவிமோசினீ என்று பெயர் ஏற்பட்டது

3. பசுக்களாகிற ஜீவன்களுக்கெல்லாம் பரமசிவன் பதியாக இருப்பதால் அவருக்கு பசுபதியென்று பெயர். அபேத ஞானம் ஏற்படுவதின்பேரில் பாசமானது விடுபட்டுப்போனுல் ஜீவனுன பசுவானவன் (பரமசிவனுகிய) பதியாகவே ஆகிவிடுகிருன் என்று சொல்லப்பட்டது.

'பாசபத்தோ பவேத் ஜீவ: பாசமுக்த: ஸதாசிவ: |

4. பாசம் என்ற பதத்தைப் பிரித்து பானம், அசனம் (சாப்பிடுவது) என்று அர்த்தம்பண்ணி இந்த விருப்பங்களோடு ஜீவன் இருக்கும்வரையில் அவனைப்பசு என்று சொல்லப்படும்.

5. இன்னும் பசு, பதி, பாசம் என்ற பதங்களுக்கிருக்கும் ஸூக்ஷ்மமானதும் விசேஷமானதுமான அர்த்தங்கள்

வ்யாக்யானத்தின் மூலத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்தப் பதங்கள் சைவ சாஸ்த்ரங்களில் விசேஷமாகப் பிரயோகிக்கப் படுகிறவை.

**संहृताशेषपाखण्डा**

**ஸம்ஹ்ருதாசேஷ பாகண்டா** (355)

ஸகலவிதமான பாகண்டிகளையும் ஸம்ஹாரம் செய்தவள்.

1. வேத பாஹ்யமானதும் வேதவிருத்தமானதுமான ஆசாரத்தையுடையவர்களை பாகண்டிகள் என்று சொல்வது வழக்கம். அவர்களோடு த்விஜர்கள் பேசக்கூட கூடாதென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'வேத பாஹ்ய வ்ரதாசாரா: ச்ரௌதஸ்மார்த்த பஹிஷ்க்ருதா: |
பாகண்டின இதி க்யாதா: ந ஸம்பாஷ்யா த்விஜாதிபி: ||

(லிங்கபுராணம்)

2. இதேவிதமாக புராணம், நியாயம், மீமாம்ஸை, தர்ம சாஸ்திரம், வேதாங்கங்கள் 6, வேதங்கள் 4, இந்தப்பதினாலு தான் வித்யைக்கும் தர்மத்திற்கும் இருப்பிடமென்றும் இவற்றிற்கு பாஹ்யமாக (வெளியில்) இருப்பவையெல்லாம் பாகண்டமென்றும் புத்தியின் கல்பனையினால் ஏற்பட்டவையென்றும், அவைகளால் புத்தியின் குழப்பம் (மோஹம்) ஏற்படுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'புராண ந்யாய மீமாம்ஸா தர்மசாஸ்த்ராங்க மிச்ரிதா |
வேதா: ஸ்தானானி வித்யானாம் தர்மஸ்ய ச சதுர்தச ||
ஏதத்ஸத்யம் இத: சான்யத் பாகண்டம் புத்திகல்பிதம் |
தைத்யானாம் மோஹனார்த்தாய மஹாமோஹனே நிர்மிதம்' ||

(ப்ராம்ஹவைவர்தம்)

3. பா என்றால் வேதத்திற்குப் பெயர். அதைக் கண்டிக்கிறவன் பாகண்டன்.

4. 'பாஷண்டா' என்ற பாடாந்தரத்திலும் மேலே சொல்லிய அர்த்தங்கள் தான்.

**सदाचारप्रवर्तिका**

**ஸதாசார ப்ரவர்த்திகா** (356)

ஸதாசாரத்தில் ப்ரவர்த்திக்கும்படி செய்பவள்.

1. மேலே சொல்லியபடி அம்பாள் பாகண்டிகளை ஸம்ஹாரம் செய்வதால் எல்லாரையும் ஸதாசாரத்தை அனுஸரிக்கும்படி செய்கிருள். என்பதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

2. ஸதாசாரமென்ருல் உத்தமமான ஆசாரம், அல்லது ஸாத்துக்களுடைய (சிஷ்டர்களுடைய) ஆசாரம், அல்லது ப்ரம்ஹத்தை அடையக்கூடிய ஆசாரம் என்று அர்த்தம்.

3. வேதத்தினுடைய கர்மகாண்டத்தில் தர்மத்தையும் ப்ரம்ஹகாண்டத்தில் (ஞானகாண்டத்தில்) அத்வைதமான பரப்ரம்ஹத்தையும் அவைகளை அடையக்கூடிய மார்க்கங்களை புராணுதிகளிலும் வெளியிட்டு அவைகளை யாவரும் அனுஷ்டிக்கவேண்டுமென்று அம்பாள் கட்டளையிட்டிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

‘அஷ்டாதச புராணுனி வ்யாஸேன கதிதானிது |
நியோகாத் ப்ரம்ஹணே ராஜன் தேஷு தர்ம: ப்ரதிஷ்டித: ||
அன்யான் யுப புராணுனி தச்சிஷ்யைர் வ்யாக்ருதானிது |
யுகே யுகே து ஸர்வேஷாம் கர்தா வை தர்மசாஸ்த்ரவித் ||
சிக்ஷா கல்போ வ்யாகரணம் நிருக்தம் சந்த ஏவ ச |
ஜ்யோதி: சாஸ்த்ரம் ந்யாயவித்யா ஸர்வேஷாம் உபப்ரும்ஹணம் ||
ஏவம் சதுர் தசைதானி வித்யா ஸ்த்தானுனி ஸத்தம |
சதுர்வேதை: ஸஹோக்தானி தர்மோ நான்யத்ர வித்யதே ||
ஏவம் பைதாமஹம் தர்மம் மனுவ்யாஸாதய: பரம் |
ஸ்த்தாபயந்தி மமாதேசாத் யாவத் ஆபூதஸம்ப்லவம் ||

(கூர்ம புராணம்)

## तापत्रयाग्निसंतप्तसमाह्लादनचन्द्रिका

## தாபத்ரயாக்னி ஸம்தப்த ஸமாஹ்லாதன சந்த்ரிகா (357)

தாபத்ரயங்களாகிற அக்னியினுல் தஹிக்கப்பட்டவர்களை உத்ஸாஹப்படுத்துவதில் சந்த்ரிகை போன்றவள்.

1. மனுஷ்யர்களை மூன்றுவிதமான தாபங்கள் (தாபத்ரயங்கள்) கஷ்டப்படுத்துவதாச் சொல்லப்படும். அவை (1) ஆத்யாத்மிகம்-மனேபுத்தியஹங்கார சித்தங்களாகிற மனனேந்த்ரியங்கள்.4,

பஞ்சஞானேந்த்ரியங்கள், பஞ்ச கர்மேந்த்ரியங்கள் இவைகளடங்கிய சரீரத்தை ஒட்டியது. (2) ஆதிபௌதிகம் - மேலே சொல்லிய இந்த்ரியங்களின் விஷயங்களாகிய பஞ்ச பூதங்களால் ஏற்படுகிறது. (3) ஆதிதைவிகம் - தேவதைகளால் ஏற்படுவது. இம்மூன்று தாபங்கள்தான் ஸம்ஸாரம் என்பதின் லக்ஷணங்கள். இவைகளால் கடுமையாக தஹிக்கப்படும் ஜீவனை அம்பாள் தன் கருணையாகிற நிலவினுல் அவனுடைய தாபத்தைப் போக்கி ஸந்தோஷப்படுத்துகிருள் என்று இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

## तरुणी (358)

### தருணீ

நித்ய யௌவனத்தோடு கூடியவள்.

1. 'அஜரோ ऽம்ருத:' என்று ச்ருதியில் சொன்னபடி பரப்ரம்ஹமானது ஜராமரணவர்ஜிதமாக இருக்கிறபடியால் இங்கே அம்பாளை நித்ய யௌவனமுடையவளென்று சொல்லப்பட்டது.

## तापसाराध्या (359)

### தாபஸாராத்யா

தபஸ்விகளால் ஆராதிக்கப்பட்டவள்.

1. அல்லது தாப, ஸாரா, ஆத்யா என்று பிரித்து தாபத்தின் மூலகாரணமாகிற ஸம்ஸாரத்திற்கு ஸாரபூதமாகிறபடியால் விசேஷமாக த்யானம் செய்யப்படுகிறவள் என்றும் சொல்லலாம்.

## तनुमध्या (360)

### தனுமத்யா

மெல்லியதான இடையை உடையவள்.

1. அம்பாளுடைய மத்யப்ரதேசத்தைப்பற்றி ஏற்கனவே வந்த 35-வது நாமமாகிய,

'லக்ஷ்ய ரோமலதாதாரதா ஸமுன்னேய மத்யமா'

என்பதில் சொல்லப்பட்டிருக்கிறதைப் பார்க்கவும்.

2. 'மாம் பாது நிவாயாஸ்தீரே நிவஸந்தீ
பில்வேச்வர காந்தா தேவீ தனுமத்யா'

என்று சொன்னபடி காஞ்சீதேசத்தில் தனுமத்யா என்ற பெய ரோடு அம்பாள் இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

3. தனுமத்யா என்ற பெயரையுடைய ஒரு வ்ருத்த விசேஷரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம், (இதின் விப ரங்களை சந்தஸ் சாஸ்த்ரங்களில் பார்க்கவும்.)

## तमोपहा

## தமோபஹா (361)

அவித்யையாகிற இருட்டைப் போக்கடிப்பவள்.

1. அவித்யையை உபாஸிக்கிறவர்கள், அதாவது, ஸ்ரீவித் யையை உபாஸிக்காதவர்கள் பயங்கரமாயிருக்கும் இருட்டை அடைவார்களென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'அந்தம்தம: ப்ரவிசந்தி யேऽவித்யாம் உபாஸதே' (ச்ருதி)

'அந்தம்தம: ப்ரவிசந்தி யேऽவித்யாம் ஸமுபாஸதே |
இதி ச்ருதிரபாஹைதான் அவித்யோபாஸகான் புன: |
வித்யான் யோபாஸகானேவம் நிந்தத்யாரண்யக ச்ருதி:' ||

(ஸ்ரீ லலிதா த்ரிசதி)

## चितिः

## சிதி: (362)

சித் (ஞான) ஸ்வரூபமாக இருப்பவள்.

1. அவித்யைக்கு சத்ருவாக இருக்கும் ஞானத்திற்கு சித் என்று பெயர்.

2. சித் என்பது ஸ்வதந்த்ர சக்தியோடும் ப்ரபஞ்சத்தின் ஸ்திதிக்கு ஹேதுவாயும் இருப்பதாக 'சிதி: ஸ்வதந்த்ரா விச் வஸித்திஹேது:' என்று சக்தி ஸூத்ரத்தில் சொல்லப்பட்டிருக் கிறது.

3. ஜீவித்திருப்பதில் ஆசையுள்ளவர்களுக்கு ஜீவனைக் கொடுப்பதால் அம்பாளுக்கு 'சிதி:' என்று பெயர் என்பதாக மஹா வாஸிஷ்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸைஷா சிதிரிதி ப்ரோக்தா ஜீவனாத் ஜீவிதைஷிணும்' |

## तत्पदलक्ष्यार्थी

### தத்பத லக்ஷ்யார்த்தா (363)

தத் என்ற பதத்தினால் குறிக்கப்படுகிறவள்.

1. 'தத் த்வமஸி' முதலான மஹா வாக்யங்களில் வரும் 'தத்' என்ற பதத்திற்கு ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி முதலான காரியங்களைச் செய்யும் ரூப பேதங்களையுடைய ப்ரம்ஹமென்பது வாச்யார்த்தம். அதே பதத்திற்கு க்ருத்ய ரஹிதமாயும் கேவலம் சுத்தஸ்வரூபமாயுமிருப்பதான ப்ரம்ஹமென்பது லக்ஷ்யார்த்தம். இதே ரூபபேதங்களையுடைய ப்ரம்ஹமும் கேவல சுத்த ஸ்வரூப மான ப்ரம்ஹமும் தாதாத்யத்தோடு (ஒன்ருக) இருப்பவை. இப்படி தத் என்ற பதத்தினால் லக்ஷ்யார்த்தமாகக் குறிக்கப்படும் ப்ரம்ஹஸ்வரூபமாக அம்பாள் இருப்பதால் 'தத்பத லக்ஷ்யார்த்தா' என்று பெயர்.

## चिदेकरसरूपिणी

### சிதேக ரஸரூபிணீ (364)

சித் என்பதோடு ஏகரஸமான (அபேதமான) ரூபங்களோடு கூடியவள்.

1. அல்லது, சித் என்பதை ஏக (முக்யமான) ரஸமாக உடைய ரூபங்களோடு கூடியவள் என்றும் சொல்லலாம்.

2. இந்த ரூபங்கள் ஆனந்தம், சைதன்யம் முதலியவை. கேவலமான (சுத்தமான) ப்ரம்ஹத்திற்கும் இவ்வித ஆனந்தம் சைதன்யம் முதலிய விசேஷணங்கள் உண்டு. ஆயினும் இந்த விசேஷணங்கள் ப்ரம்ஹத்தினின்று அபேதமாக இருப்பதை இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

## स्वात्मानन्दलवीभूतब्रह्माद्यानन्दसंततिः

### ஸ்வாத்மானந்த லவீபூத ப்ரம்ஹாத்யானந்த ஸந்ததி: (365)

தன்னுடைய ஆத்மானந்தத்தில் லவப்ராயமாக இருக்கும் ப்ரம்ஹா முதலியவர்களின் ஆனந்த பரம்பரையை யுடையவள்.

1. அதாவது, அம்பாளுடைய ஆத்மரூபமான ஆனந்தமானது ஸமுத்ரம்போல் அபாரமானதென்றும் ப்ரம்ஹா முதலானவர்களுடைய ஆத்மரூபமான ஆனந்தமானது அதின் ஒரு துளி (லவம்) போன்றதென்றும் தாத்பர்யம்.

2. ப்ரம்ஹாதிகள் என்பதினுல் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் முதலான கர்த்ருத்வங்களால் பேதரூபமாய் இருக்கும் ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன் இவர்களைக் குறிக்கப்பட்டது.

3. தைத்தரீயோபநிஷத்தில் மானுஷானந்தத்திலிருந்து ஆரம்பித்து மேலுக்கு மேலான ஆனந்தங்களைச் சொல்லிவருகையில் ப்ரஜாபதி (ப்ரம்ஹா) முதலானவர்களுடைய ஆனந்தத்தைச் சொல்லும்போது அதெல்லாம் பூர்ணமான (அபரிச்சின்னமான) ஆனந்தமல்லவென்றும் அபரிச்சின்னமான ப்ரம்ஹானந்தமே எல்லாவற்றிற்கும் மேலானதென்றும் அதை அடைவதேதான் உத்தமமான புருஷார்த்தமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

4. இதையேதான் ச்ருதியில் 'ஏதஸ்யைவ ஆனந்தஸ்ய அன்யானி பூதானி மாத்ராம் உபஜீவந்தி' என்று சொல்லப் பட்டது.

5. ஆகவே இந்த இரண்டு நாமங்களில் அம்பாள் தத்பத லக்ஷ்யார்த்தமான பரப்ரம்ஹ ஸ்வரூபமென்றும் அம்பாளுடைய ஆத்மானந்தத்திற்கு ஸ்ருஷ்ட்யாதி கர்மாக்களுக்கு அதிகாரிகளான ப்ரம்ஹா முதலானவர்களுடைய ஆனந்தமானது லேசம் கூட ஸமானமல்லவென்றும் சொல்லப்பட்டது.

**परा**

**பரா** (366)

பரா என்ற சப்தத்தின் ஸ்வரூபமாக இருப்பவள்.

1. இது முதல் வரும் நாமங்களில் அம்பாள் சப்தப்ரம்ஹத்தோடு அபின்னமாக இருப்பதைச் சொல்லப்பட்டிருக்கிறது.

2. ப்ரளயகாலத்தில் (அதற்குப்பிறகு) ஸ்ருஷ்டிக்கப்படும்படியான ப்ராணிகளுடைய (பூர்வ) கர்மாவானது பரிபாகம் அடையாமலிருக்கிறது. அம்போது அந்த கர்மாவோடு அபின்னமாக இருக்கும் மாயையினுல் சூழப்பட்ட ப்ரம்ஹமானது கனீபூதமாக (உறைந்து) இருப்பதாகச் சொல்லப்படும். பிறகு

காலக்ரமத்தில் கர்மாவானது பரிபாகமடைய ஆரம்பிக்கவே அந்த கனீபூதமாக இருக்கும் தன்மையானது மாறுதல் அடைந்து அப்போது ப்ரம்ஹத்திற்கு இருக்கும் அவஸ்த்தையை விசிகீர்ஷா (க்ரியையில் இச்சையோடு கூடியது) என்று சொல்லப் படும். பிறகு கர்மாவானது பூராவாகப் பரிபாகமடையும் போது ப்ரம்ஹமானது (அவ்விதம் பரிபாகமடைந்த கர்மாவோடு அபின்னமாக இருக்கும்) மாயையோடு கூடியதாக இருக்கிறது. அப்போது ப்ரம்ஹத்தை அவ்யக்தம் (வெளியில் தெரியாது) என்று சொல்லப்படும். இவ்விதமான அவ்யக்த ப்ரம்ஹமே ஜகத்திற்கு மூலகாரணமாக இருப்பதால் அதைக் காரணபிந்து என்று சொல்வதுண்டு.

3. இவ்விதமான காரணபிந்துவிலிருந்து கார்யபிந்துவும், கார்யபிந்துவிலிருந்து நாதமும், நாதத்திலிருந்து பீஜமும் உண்டாகின்றன. இம் மூன்றையேதான் பர, ஸூக்ஷ்ம, ஸ்தூலங்களென்றும் சொல்லப்படும். இவையின் ரூபங்கள் சித் அம்சமும், சித் அசித்துக்களின் மிச்ரமும் (கலப்பும்), அசித் அம்சமும் ஆகும்.

"காலேன பித்யமானஸ்து ஸ பிந்துர் பவதி த்ரிதா |
ஸ்தூல ஸூக்ஷ்ம பரத்வேன தஸ்ய த்ரைவித்யமிஷ்யதே |
ஸ பிந்துநாத பீஜத்வ பேதேன ச நிகத்யதே ||"

(ரஹஸ்யாகமம்)

4. மேலே சொல்லிய காரணபிந்து, கார்யபிந்து, நாதம், பீஜம் இவைகளுக்கு அவ்யக்த ப்ரம்ஹம், ஈச்வரன், ஹிரண்யகர்பன் விராட் இவர்களும், சாந்தா, வாமா, ஜ்யேஷ்டா, ரௌத்ரீ இவர்களும், அம்பிகை, இச்சா, ஞான, க்ரியா சக்திகளும் அதிதைவத ஸ்வரூபங்கள். அதேவிதமாக அவைகளுக்கு காமரூப, பூர்ணகிரி, ஜாலந்தர, ஓட்யாண பீடங்கள் அதிபௌதிக ஸ்வரூபங்கள். அத்யாத்மிகமாகச் சொல்லுகையில் காரணபிந்துவானது குண்டலினீ ரூபமாக மூலாதாரத்திலிருக்கிறது. இதையேதான்,

'சக்தி: குண்டலினீதி விச்வஜனன வ்யாபார பத்தோத்யமாம்
ஞாத்வேத்தம் ந புனர் விசந்தி ஜனனீகர்பேऽர்பகத்வம் நரா: |'

என்று லகுஸ்துதியில் சொல்லியிருப்பதும்போல் அனேக இடங்களில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

5 இப்படி மூலாதாரத்தில் குண்டலினீரூபமாகவும் யாதொரு பிரிவுமில்லாமலுமிருக்கும் காரணபிந்துவானது கார்யபிந்து முதலிய (மேலே சொல்லிய) மூன்றையும் உண்டுபண்ண முயலும் போது அது பேதிக்கப்பட்டு (வெடித்து அல்லது மலர்ந்து) அந்த ஸமயம் அதிலிருந்து அவ்யக்தமானதும் சப்தப்ரம்ஹமென்று சொல்லப்படுவதுமான ஒருவித ஓசையானது உண்டாகிறது.

'பிந்தோஸ் தஸ்மாத் பித்யமாநாத் அவ்யக்தாத்மா ரவோऽபவத் |
ஸ ரவ: ச்ருதிஸம்பன்னை: சப்தப்ரம்ஹேதி கீயதே ||'

இவ்வித ஓசையானது காரணபிந்துவோடு தாதாத்ம்யமாக இருப்பதால் எங்கும் பரவியிருந்தபோதிலும் மூலாதாரத்தில் தான் முதல் முதலாக வெளிப்படுகிறது. தேஹத்தில் ப்ராண வாயுவானது மூலாதாரத்தில் தான் முதலில் உதயமாகிறதென்றும் பேசவேண்டுமென்கிற ஆசையுண்டாகும்போது அந்த முயற்சியினால் தூண்டப்பட்ட வாயுவானது எங்கும் நிறைந்த சப்தப்ரம்ஹமாக ஏற்படுகிறதென்றும் சொல்லப்பட்டது.

'தேஹேऽபி மூலாதாரேஸ்மின் ஸமுதேதி ஸமீரண: |
விவக்ஷோரிச்சயோத்தேன ப்ரயத்னேன ஸுஸம்ஸ்க்ருத: |
ஸ வ்யஞ்ஜயதி தத்ரைவ சப்தப்ரம்ஹாபி ஸர்வகம் ||'

இம்மாதிரி காரணபிந்துவாத்மகமான சப்தப்ரம்ஹமானது ஆவிர்பவித்தபோதிலும் தான் உற்பத்தியான இடத்திலேயே (மூலாதாரத்தில்) அசைவற்று (நிஷ்பந்தமாக) இருக்கிறது. இதையேதான் பரா வாக்கென்று சொல்லப்படும்.

6. பின்பு இந்த சப்தப்ரம்ஹமானது வாயுவினால் மேலே வரும்போது நாபிக்கு ஸமீபம் வந்தவுடன் அங்கே விமர்சரூபமான (ஆராய்ந்து பார்க்கும் ஸ்வபாவமுள்ள) மனஸ்ஸுடன் கலந்து ஸாமான்ய ஸ்பந்தத்துடன் (கொஞ்சமான சலனத்துடன்) கூடிய கார்யபிந்துமயமாக ஆகிறது. அப்போது அதை பச்யந்தீவாக்கென்று சொல்லப்படும்.

7. பிறகு அந்த சப்தப்ரம்ஹமானது அதேமாதிரி வாயுவினால் நாபியைத்தாண்டி அதற்குமேல் ஹ்ருதய பர்யந்தம் வந்தவுடன் அங்கு நிச்சயாத்மகமான (தீர்மானம் செய்யும் சக்தியையுடைய) புத்தியுடன் கலந்து விசேஷமான ஸ்பந்தத்துடன் கூடிய நாதமயமாக ஆகிறது. அப்போது அதை மத்யமாவாக்கென்று

சொல்லப்படும். அதற்கப்புறம் அந்த சப்தப்ரம்ஹமானது அதேமாதிரியாக வாயுவினல் கழுத்து முதலிய ஸ்தானங்களின் வழியாகவந்து வாயின் மூலமாக வெளியேவருகிறது. அப்போது அது அகராதி வர்ணங்களின் (அக்ஷரங்களின்) ரூபத்துடனும் காதினல் கேட்கக்கூடியதாகவும் பீஜாத்மகமாகவும் இருக்கிறது. அதைத்தான் வைகரீ வாக்கென்று சொல்வது.

'மூலாதாரே பரா ப்ரோக்தா பச்யந்தீ நாபிஸம்ஸ்திதா |
மத்யமா புத்திஸம்யுக்தா அஷ்டஸ்த்தானேஷு வைகரீ ||'

8. இதையேதான்,

'மூலாதாராத் ப்ரதமமுதிதோ யச்ச பாவ: பராக்ய:
பச்சாத் பச்யந்த்யத ஹ்ருதயகோ புத்தியுங் மத்யமாக்ய: |
வ்யக்தே வைகர்யத ருருதிஷோரஸ்ய ஜந்தோ: ஸுஷும்ணு
பத்தஸ் தஸ்மாத் பவதி பவனே ப்ரேரிதா வர்ணஸம்க்ஞா ||'

என்று ஆசார்யாளாலும்,

'மூலாதாரே ஸமுத்பன்ன: பராக்யோ நாதஸம்பவ: |
ஸ ஏவோர்த்வதயாநீத: ஸ்வாதிஷ்டானே விஜ்ரும்பித: ||
பச்யந்த்யாக்யாம் அவாப்னேதி ததைவோர்த்வம் சனை: சனை: |
அனாஹதே புத்திதத்வஸமேதோ மத்யமாபித: ||
ததா தயோர்த்வனுன்ன: ஸன் விசுத்தௌ கண்டதேசத: |
வைகர்யாக்ய:................ ||'

என்று நித்யாதந்த்ரத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

9. இம்மாதிரி வாக்கானது நாலுவிதமாக இருக்க, முதல் மூன்று இருப்பதைத் தெரியாதவர்கள் ஸ்தூலமாகத் தெரியும் வைகரீ என்பதே வாக்கென்று சொல்லுகிறது வழக்கம்.

'தஸ்மாத் யத்வாசோ நாப்தம் தன் மனுஷ்யா உபஜீவந்தி'

(ச்ருதி)

'சத்வாரி வாக்பரிமிதா பதானி
தானி விதுர் ப்ராம்ஹணு யே மனீஷிண: |
குஹா த்ரீணி நிஹிதா நேங்கயந்தி
துரீயம் வாசோ மனுஷ்யா வதந்தி ||'

(ச்ருதி)

10. மேலே சொல்லியதிலிருந்து தத் பதமானது பரா வாக்காக வைத்துக்கொண்டாலும் அது அவ்யக்தமானதும் நிர்குணமானதுமான ப்ரம்ஹத்தைக் குறிக்காது என்று ஏற்படும் போது ஸாமான்யமான வைகரீவாக்காக இருக்கும் தத்

பதமானது அப்பேர்ப்பட்ட ப்ரம்ஹத்தைக் குறிக்காதல்லவா. ஆகையால் தான் அம்பாளை 'தத்பத லக்ஷ்யார்த்தா! என்று மூந்தி சொல்லப்பட்டது.

11. பரா என்றால் மேல்பட்டவள் என்றும் அர்த்தம். பாக்கி மூன்றுவிதமான பச்யந்தீ, மத்யமா, வைகரீ வாக்குக் களுக்கு மேல்பட்டதான வாக் ஸ்வரூபாக அம்பாளிருப்பதால் பரா என்று பெயர் என்பதாகவும் சொல்லலாம்.

12. ஸ்ரீ பரானந்த நாதர் என்பவருக்கு ப்ரஸன்னமான தினாலும், பரானந்தம் என்ற தந்த்ரத்தில் ப்ரஸித்தமாகச் சொல லப்பட்டிருப்பதாலும், பக்தர்களிடத்தில் விசேஷமான ப்ரஸாதத் தோடு (அனுக்ரஹத்தோடு) இருப்பதாலும் அம்பாளுக்கு பரா என்று பெயர் என்பதாக த்ரிபுராஸித்தாந்தத்தில் சொல்லப்பட் டிருக்கிறது.

'ஸ்ரீ பரானந்தநாதஸ்ய ப்ரஸன்னத்வாத் பரேதி ஸா |
பரானந்தாபிதே தந்த்ரே ப்ரஸித்தத்வாச்ச ஸா பரா |
ப்ராஸாத ரூபிணி சேதி பரச ஸா சாம்பவீ பரா ||'

## प्रत्यक्चितीरूपा

### ப்ரத்யக் சிதீரூபா (367)

உள்நோக்கியிருக்கும்படி திருப்பும் சித் ரூபமாக இருப்பவள்.

1. அதாவது ஸ்வாத்மாபிமுகமாக இருக்கும்படி செய்வ தும் சித் ரூபமானதும் அவ்யக்தமென்று சொல்லப்படுவதுமான ப்ரம்ஹ ஸ்வரூபமாக இருப்பவளென்று அர்த்தம்.

## पश्यन्ती

### பச்யந்தீ (368)

பச்யந்தீ என்ற வாக் ஸ்வரூபமாக இருப்பவள்.

1. அல்லது எதையும் பார்க்கிறபடியால் பச்யந்தீ என்று பெயர். அம்பாள் ஸகலத்தையும் தன்னிடமே பார்க்கிறபடி யால் பச்யந்தீ என்றும் (செய்யவேண்டியதான) கரணங்களுக்கு மேலெழுந்திருப்பதால் உத்தீர்ணா என்றும் பெயர்களையுடையவ ளென்றும் ஸௌபாக்ய ஸுதோதயத்தில் சொல்லப்பட்டிருக் கிறது.

'பச்யதி ஸர்வம் ஸ்வாத்மனி காரணம் ஸரணிமபி யதுத்தீர்ண |
தேனேயம் பச்யந்தீத்யுத்தீர்ணேத்யப்யதீர்யதேமாதா ||'

## परदेवता

(369)

### பரதேவதா

உத்க்ருஷ்டமான தேவதையாக இருப்பவள்.

## मध्यमा

(370)

### மத்யமா

மத்யமா என்ற வாக் ஸ்வரூபமாக இருப்பவள்.

1. பச்யந்தீபோல் சற்றுக் கிளம்பியதோடு நிற்காமலும் வைகரீபோல் மிகத்தெளிவாகவும் ஸகல அவயவங்களோடு இல்லாமலும் இருப்பதால் மத்யமா என்று பெயர்.

'பச்யந்தீவ ந கேவலம் உத்தீர்ணா நாபி வைகரீவ பஹி: |
ஸ்புடதரநிகிலாவயவா வாக்ரூபா மத்யமா தயோராஸ்மாத் ||'

## वैखरीरूपा

(371)

### வைகரீரூபா

வைகரீ என்ற வாக் ஸ்வரூபமாக இருப்பவள்.

1. வைகரீ என்ற பதத்திற்கு விசேஷமாய்க் கடினமானது என்று அர்த்தம். பரா முதலான வாக்கின் நாலு ரூபங்களில் அது ஸ்தூலமானதும் கனமான பாவத்தோடும் இருப்பதால் வைகரீ என்று பெயர்.

2. வை-நிச்சயமாய், கம்-காதின் த்வாரத்தை, ராதி-அடைகிறது, என்று இந்த பதத்திற்கு ஸௌபாக்யஸுதோதயத்தில் அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது.

3. விகரமென்ற ப்ராண (வாயுவி)னால் ப்ரேரிக்கப்படுவதால் வைகரீ என்று பெயர் என்பதாக யோகசாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ப்ராணேன விகராக்யேன ப்ரேரிதா வைகரீபுன: |'

## भक्तमानसहंसिका

### பக்தமானஸ ஹம்ஸிகா (372)

பக்தர்களுடைய மனதில் ஹம்ஸம் போலிருப்பவள்.

1. 'மானஸ' என்பதினால் மானஸ ஸரஸ் (மானஸ ஸரோவரம்) என்று பெயருடைய ஏரியையும் சொல்லப்பட்டது. பூர்வம் ப்ரம்ஹாவானவர் தன்னுடைய மனதால் ஒரு ஸரஸ்ஸை ஸ்ருஷ்டித்தாரென்றும் அதற்கு (அந்தக் காரணத்தால்) மானஸ ஸரஸ் என்று பெயர் என்பதாகவும் அது கைலாஸ சிகரத்திலிருப்பதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

'கைலாஸ சிகரே ராம மனஸா நிர்மிதம் ஸர: |
ப்ரம்ஹணா ப்ராகிதம் யஸ்மாத் ததபூன் மானஸம் ஸர: ||'

அங்கே எண்ணிக்கையற்ற ஹம்ஸ பக்ஷிகள் இருப்பதாகவும் அவை எங்கு போனாலும் திரும்பவும் (முக்யமாக வர்ஷா காலத்தில்) அந்த ஸரோவரத்துக்கே வர ஆசையுடையவைகளாக இருப்பதாகவும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

'மேகச்யாமா திசோ த்ருஷ்ட்வா மானஸோத்ஸுக சேதஸாம் |
கூஜிதம் ராஜஹம்ஸானாம் நேதம் நூபுரசிஞ்ஜிதம் ||'
'யஸ்யாஸ்தோயே க்ருதவஸதயோ மானஸம் ஸன்னிக்ருஷ்டம் |
நாத்யாஸ்யந்தே வ்யபகதசுச: த்வாமபி ப்ரேக்ஷ்ய ஹம்ஸா: | '

2. பக்தர்களுடைய மனதாகிற மானஸ ஸரஸ்ஸில் அம்பாள் ஒரு ஹம்ஸம்போல் இருப்பதாக இங்கு சொல்லப்பட்டது.

3. இதே விதமாக ஆசார்யாளும் 'ஸௌந்தர்யலஹரீ'யில் வர்ணித்திருப்பது கவனிக்கத்தகுந்தது.

ஸமுன்மீலத் ஸம்வித்கமல மகரந்தைக ரஸிகம்
பஜே ஹம்ஸத்வந்த்வம் கிமபி மஹதாம் மானஸசரம் |
யதாலாபாத் அஷ்டாதசகுணித வித்யா பரிணதி:
யதாதத்தே தோஷாத் குணமகிலம் அத்ப்ய: பய இவ ||

4. பக்தர்களைத் தவிர பிறருக்குத் தெரியாமலிருப்பதால் 'ஹம்ஸிகா' என்று சொல்லப்பட்டது.

## कामेश्वरप्राणनाडी

### காமேச்வர ப்ராண நாடீ (373)

மஹா காமேச்வரருடைய ஜீவநாடியாக இருப்பவள்.

1. லோகங்களுடைய ஸம்ஹார காலத்தில் இதர தேவர்கள் (அம்ருதத்தை சாப்பிட்டிருந்தபோதிலும்) நாசமடைகிறார்களென்றும் பரமசிவன் மிகக்கொடியதான ஹாலாஹல விஷத்தைச் சாப்பிட்டபோதிலும் அவருக்கு யாதொரு விதமான ஹானியும் ஏற்படவில்லையேன்றும் அது அம்பாளுடைய தாடங்கங்களின் மஹிமையால் தானென்றும் ஆசார்யாள் வர்ணித்திருக்கிறார்கள்.

'ஸுதாமப்யாஸ்வாத்ய ப்ரதிபயஜராம்ருத்யுஹரிணீம்
விபத்யந்தே விச்வே விதிசதமகாத்யா திவிஷத: |
கராளம் யத் க்ஷ்வேளம் கபளிதவத: காலகலனா
ந சம்போஸ் தன்மூலம் தவ ஜனனி தாடங்க மஹிமா || '

(ஸௌந்தர்யலஹரீ)

1. இதையேதான் ச்ருதியிலும்,

'யாதே ருத்ர சிவாதனூ, சிவா விச்வா ஹ பேஷஜீ,
சிவா ருத்ரஸ்ய பேஷஜீ, தயாநோ ம்ருட ஜீவஸே | '

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

## कृतज्ञा
## க்ருதக்ஞா (374)

செய்யப்பட்ட கார்யங்களையெல்லாம் அறிகிறவள்.

1. அதாவது, ப்ராணிகள் செய்யும் ஸகலவிதமான ஸுக்ருதங்கள், துஷ்க்ருதங்கள் எல்லாம் அம்பாளுக்குத் தெரியுமென்று தாத்பர்யம்.

2. ப்ராணிகள் செய்யும் ஸகல கார்யங்களுக்கும் ஸூர்யன், சந்த்ரன், யமன், காலம், பஞ்சமஹாபூதங்கள் இவை ஒன்பதும் ஸாக்ஷிகளென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸூர்ய: ஸோமோ யம: காலோ மஹாபூதானி பஞ்ச ச |
ஏதே சுபாசுபஸ்யேஹ கர்மணோ நவ ஸாக்ஷிண: || '

அம்பாள் இந்த ஒன்பது ஸர்வ ஸாக்ஷிகளோடு அபின்னமாக இருப்பதால் 'க்ருதக்ஞா' என்று பெயர்.

3. அல்லது, நாம் (நல்ல) கார்யங்களாகிற உபகாரம் செய்தால் ப்ரத்யுபகாரமாக ஞானத்தை அம்பாள் கொடுப்பதால்

இந்தப்பெயர் வந்ததாகவும் சொல்லலாம். அம்பாளுக்கு க்ருதக்ஞதை இருப்பதாக தாத்பர்யம்.

4. அல்லது, ஸ்வதஸ்ஸித்தமான ஞானத்தோடு இருப்பதால் இந்தப் பெயர் என்பதாகவும் சொல்லலாம்.

5. அல்லது, க்ருதயுகத்தைப்போல் பூர்ணமான ஞானத்தோடு இருப்பவள் என்றும் சொல்லலாம். இதர யுகங்களைக் காட்டிலும் க்ருதயுகத்தில் தர்மம் பூர்ணமாக இருந்ததுபோல் ஜனங்களுக்கு ஞானமும் பூர்ணமாக இருந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

6. த்யூத சாஸ்த்ரத்தில் (சொக்கட்டான் ஆட்டத்தில்) க்ருத, த்ரேதா, த்வாபர, கலி என்பதான நாலு ஆட்டங்கள் உண்டு. அவைகளுக்கு முறையே 4, 3, 2, 1 என்று லக்கமிருந்தாலும் ஆட்டக்கணக்கில் 10, 6, 3, 1 என்று கணக்கிடப்படும். (ஒவ்வொன்றுக்கும் அதின் பிந்தி வருகிறவைகளின் எண்ணிக்கையும் சேர்த்துக்கொள்ளப்படும்.)

'தே வா ஏதே பஞ்சான்யே பஞ்சான்யே தச ஸந்தஸ் தத்க்ருதம்'

(ச்ருதி)

ஆகவே க்ருதமென்கிற ஆட்டத்தில் ஜயித்தவனே மற்ற மூன்று ஆட்டங்களிலும் ஜயித்தவனாக எண்ணப்படும்.

'க்ருதாயவிஜிதாயாதரேSயா: ஸம்யந்தி' (ச்ருதி)

க்ருதம் என்னும் ஆட்டமானது பாக்கி ஆட்டங்களையெல்லாம் எப்படி வ்யாபித்திருக்கிறதோ அம்மாதிரி அம்பாளுடைய ஞானமானது ஸர்வ வ்யாபகமாகவும் ஸர்வ விஷயகமாகவும் இருப்பதால் 'க்ருதக்ஞா' என்று பெயர் என்பதாகவும் சொல்லலாம்.

7. மேலே சொல்லிய க்ருதம் என்ற ஆட்டத்தைத் தெரிந்தவளாகையால், க்ருதக்ஞா' என்று பெயர் வந்ததாகவும் சொல்லலாம். பரமசிவன் அம்பாளுடன் சொக்கட்டான் ஆடும்போது அம்பாளுக்கு க்ருதம் என்று எதையும் ஜயிக்கக்கூடியதான ஆட்டம் தெரியுமாதலால் அம்பாள் தான் வெற்றிபெறுவாள் என்று தாத்பர்யம்.

## कामपूजिता

## காமபூஜிதா (375)

மன்மதனுல் உபாஸிக்கப்பட்டவள்.

அம்பாளுடைய முக்யமான உபாஸகர்கள் பன்னிருவரில் மன்மதன் ஒருவனென்பது ஏற்கனவே வந்த 'மனுவித்யா' 'சந்த்ரவித்யா,' 'ராஜராஜார்ச்சிதா' என்ற நாமங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆசார்யாளும்,

'ஸ்மரோபி த்வாம் நத்வா ரதிநயன லேஹ்யேன வபுஷா |
முனீனும் அப்யந்த: ப்ரபவதி ஹி மோஹாய மஹதாம் ||
'தனு: பௌஷ்யம் மௌர்வீ மதுகரமயீ பஞ்சவிசிகா:
வஸந்தஸ் ஸாமந்தோ மலயமருதாயோதன ரத: |
ததாப்யேகஸ் ஸர்வம் ஹிமகிரிஸுதே காமபிக்ருபாம்
அபாங்காத்தே லப்த்வா ஜகதிதம் அனங்கோ விஜயதே ||'

என்று ஸௌந்தர்யலஹரியில் சொல்லியிருக்கிறார்கள்.

2\. மன்மதன் ஸ்ரீவித்யையான வித்யாரத்னத்தை அடைந்ததைப்பற்றி,

'புத்ரோ நைர்ருத்யா வைதேஹ அசேதா யச்ச சேதன: | ஸ தம் அவிந்தத்' என்பது முதலான வாக்யங்களால் அருணோபநிஷத்தில் சொல்லியிருப்பதைப் பார்க்கவும்.

## शृङ्गाररससंपूर्णा

## ச்ருங்காரரஸ ஸம்பூர்ணு (376)

ச்ருங்கார ரஸத்தைப் பூர்ணமாக உடையவள்.

1\. அம்பாளுடைய ரூபவிசேஷங்களில் லலிதாம்பிகையானவள் ச்ருங்கார ரஸப்ரதானமான மூர்த்தியென்பது முக்யமான விஷயம். இதைப்பற்றி பின்வரும் 'லலிதாம்பிகா என்ற கடைசி நாமத்தில் சொல்லப்படும்.

2\. பின்னுல் வரும் நாமங்களில் ஜாலந்தரபீடம், ஓட்யாண பீடம் இவை சொல்லப்படுவதால் முந்தி வந்த 'காமபூஜிதா' என்ற நாமத்தில் காமகிரி பீடமும் இந்த நாமத்தில் பூர்ணகிரிபீடமும் சொல்லப்பட்டதாகச் சொல்லலாம்.

3. சப்தப்ரம்ஹத்தினுடைய ரூபங்களான காரணபிந்து, கார்யபிந்து, நாதம், பீஜம் இவை சரீரத்தில் முறையே காமகிரி, பூர்ணகிரி, ஜாலந்தர, ஓட்யாண பீடங்களில் அதிபூதமாக வ்யாபித்திருப்பதாக ஏற்கனவே வந்த 'பரா' என்ற நாமத்தில் சொல்லப்பட்டது. இந்த பீடங்கள் முறையே மூலாதாரம், அனுஹதம், விசுத்தி, ஆக்ஞா ஸ்தானங்களிலிருப்பதாகச் சொல்லப்படும்.

'குதமேட்ராந்தராளஸ்த்தம் மூலாதாரம் த்ரிகோணகம் |
யதேதத் காமரூபாக்யம் பீடம் காம பலப்ரதம் ||
த்வாதசாரம் மஹாசக்ரம் அமலானஹதாஹ்வயம் |
ததேதத் பூர்ணகிர்யாக்யம் பீடம் தவ வரானனே ||
கண்டகூபே விசுத்யாக்யம் யச்சக்ரம் ஷோடசாச்ரகம் |
பீடம் ஜாலந்தரன்னும திஷ்டத்யத்ர மஹேச்வரீ ||
ஆக்ஞா நாம ப்ருவோர்மத்யம் த்விதளம் சக்ரமுத்தமம் |
ஓட்யாணுக்யம் மஹாபீடம் உபரிஷ்டாத் ப்ரதிஷ்டிதம் ||

இந்த பீடங்களில் அம்பாள் இருப்பதாகவும் அவைகளில் பூஜிக்கப்படுவதாகவும் இந்த நாமங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

4. ச்ருங்க என்றால் கொம்பு என்று அர்த்தம் கொம்புகள் ஸாதாரணமாக இரண்டாகையால் ச்ருங்க என்ற பதம் இரண்டைக் குறிக்கும். ஆர என்றால் தளம், இதள். ரஸ என்ற பதமானது (ஷட்ரஸங்களாகையால்) ஆறைக்குறிக்கும். ஆகவே ச்ருங்க, ஆர, ரஸ என்று பிரித்து (2×6) பன்னிரெண்டு தளங்களையுடைய அனுஹத சக்ரத்தில் (ஸம்பூர்ண) நன்ராய் வீற்றிருப்பவள் என்று அர்த்தம் என்பதாகவும் சொல்லலாம்.

## जया

## ஜயா (377)

ஜயஸ்வரூபமாக இருப்பவள்.

1. 'ஜயா வராஹசைலே து' என்ற பத்ம புராணத்தில் சொல்லியபடி வராஹசைலத்திலிருக்கும் அம்பாளுக்கு ஜயா என்று பெயர்.

## जालन्धरास्थिता

### ஜாலந்தரஸ்திதா (378)

ஜாலந்தரமென்கிற பீட விசேஷத்திலிருப்பவள்.

1. 'ஜாலந்தரே விஷ்ணுமுகீ' என்ற பத்ம புராண வசனப்படி ஜாலந்தரமெனப்படும் தேவீ க்ஷேத்ரத்திலிருக்கும் அம்பாளுக்கு விஷ்ணுமுகீ என்று பெயர்.

## ओड्याणपीठनिलया

### ஓட்யாண பீடநிலயா (379)

ஓட்யாணமென்கிற பீட விசேஷத்திலிருப்பவள்.

## बिन्दुमण्डलवासिनी

### பிந்து மண்டலவாஸினீ (380)

பிந்துவாகிய மண்டலத்தில் வஸிப்பவள்.

1. நவசக்ராத்மகமான ஸ்ரீ சக்ரத்தில் நடுவிலிருக்கும் ஸர்வானந்தமய சக்ரமானது பிந்து என்று சொல்லப்படும்.

2. பிந்து என்றால் வெளுப்பு என்று அர்த்தம் பண்ணி ப்ரம்ஹரந்த்ரத்தை பிந்து மண்டலமென்றும் அதில் அம்பாள் இருப்பதை இங்கு சொல்லப்பட்டதென்றும் சிலருடைய அபிப்ராயம்.

## रहोयागक्रमाराध्या

### ரஹோயாகக்ரமாராத்யா (381)

ரஹோயாகத்தினுடைய ப்ரயோகத்தின் மூலமாக ஆராதிக்கப்பட்டவள்.

1. ரஹோயாகமென்பது ரஹஸ்யத்தில் (தனிமையில், ஏகாந்தமாக) செய்யப்படும் யாகமென்று அர்த்தம். கனகுண்டலினீ அதிஷ்டானமாக இருக்கும் சிதக்னியில் புண்யம் முதலான அஷ்ட ஹோமங்களால் செய்யப்படும் யாகத்தை ரஹோயாகமென்று சொல்லப்படும். அந்த ப்ரயோகத்தால் ஆராதிக்கப்படுகிறவள் ரஹோயாகக்ரமாராத்யா.

2. குண்டலினீ சக்தியானவள் ஷட்சக்ரபேதனம் செய்து ஸஹஸ்ரார பத்மத்திற்கு வந்து அங்கே பரமசிவனுடன் ரஹஸ்யத்தில் சேர்ந்து க்ரீடிப்பதாக,

'ஸஹஸ்ராரே பத்மே ஸஹ ரஹஸி பத்யா விஹரஸே'

என்று ஆசார்யாள் 'ஸௌந்தர்யலஹரி'யில் வர்ணித்திருக்கிறார்கள்.

3. மோக்ஷமானது சாஸ்த்ரங்களின் சப்தத்தில் மட்டும் கவனம் செலுத்துகிறவனுக்காவது, ரம்யமான வீடு முதலியவைகளில் பிரியமுடையவனுக்காவது, போஜனம், வஸ்த்ரங்கள் இவைகளில் தத்பரனாக இருப்பவனுக்காவது, லோகவிஷயங்களில் பற்றுதல் உடையவனுக்காவது கிடையாதென்றும், ஏகாந்தசீலத்துடனும் த்ருடமான வ்ருதத்துடனும் ப்ரீதியையுண்டாக்கும் விஷயங்களிலிருந்து நிவ்ருத்தியுடனும் அத்யாத்மயோகத்தில் முயற்சியுடனும் அஹிம்ஸையை எப்போதும் கைக்கொண்டும் இருப்பவனுக்கே மோக்ஷம் கிடைக்குமென்று ஆபஸ்தம்பர் சொல்லியிருக்கிறார்.

'ந சப்தசாஸ்த்ராபிரதஸ்ய மோக்ஷோ
ந சைவ ரம்யாவஸத ப்ரியஸ்ய |
ந போஜனாச்சாதன தத்பரஸ்ய
ந லோகசித்தக்ரஹணே ரதஸ்ய ||
ஏகாந்தசீலஸ்ய த்ருடவ்ரதஸ்ய
மோக்ஷோ பவேத் ப்ரீதி நிவர்தகஸ்ய |
அத்யாத்மயோகே நிரதஸ்ய ஸம்யக்
மோக்ஷோ பவேத் நித்யமஹிம்ஸகஸ்ய ||

4. ஸ்ரீவித்யையே மிகவும் ரஹஸ்யமானதென்றும் அதினுடைய உபாஸனையும் மிகவும் ரஹஸ்யமாகச் செய்யப்பட வேண்டுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'வேச்யா இவ ப்ரகடா வேதாதிவித்யா:
ஸர்வேஷு தர்சனேஷு குப்தேயம் வித்யா'

(பரசுராம கல்பஸூத்ரம்)

'யதி ப்ரவிசேத் மிதோ சரித்வா ப்ரவிசேத்'

(அருணோபனிஷத்)

'அந்த: சாக்தா: பஹி: சைவா: ஸபாயாம் வைஷ்ணவோ மதா: |
நாநாமூர்த்திதரா: கௌலா: விசரந்தி மஹீதலே' ||

(ச்யாமாரஹஸ்யம்)

## रहस्तर्पणतर्पिता

## ரஹஸ்தர்பண தர்பிதா (382)

ரஹஸ்யமான தர்பணத்தால் ஸந்தோஷிக்கப்பட்டவள்.

1. மந்த்ரத்தினுடைய அர்த்தத்தை நன்ருய்த் தெரிந்து கொள்ளுதலே ரஹஸ்தர்பணம் என்று சொல்லப்படும் (த்ருப்தியைக் கொடுக்கும் கர்மாவுக்கு தர்பணம் என்று பெயர்).

2. மேலே சொல்லிய ரஹோயாகம், ரஹஸ்தர்பணம் இவைகளைப் பின்வருமாறு வர்ணிக்கப்பட்டிருக்கிறது. "உள்ளுக்குள்ளே இடைவிடாமலும் விறகில்லாமலே வளர்ச்சியுடன் எரிந்துகொண்டிருப்பதும் மோஹமாகிற அந்தகாரத்திற்கு சத்ருவுமாயும் அத்புதமான காந்தி ஸமூஹத்தை விளைவித்துக் கொண்டிருப்பதுமான ஸம்விதக்னி (ஞானக்னி)யில் ப்ருத்வீ முதல் சிவன் வரையிலுள்ள தத்வங்களடங்கிய விச்வத்தை (ஜகத்தை) ஆஹுதி பண்ணுகிறேன்"

'அந்தர் நிரந்தர நிரிந்தன மேதமானே
மோஹாந்தகார பரிபந்தினி ஸம்விதக்னௌ |
கஸ்மிம்ச்சித் அத்புத மரீசி விகாஸ பூமௌ
விச்வம் ஜுஹோமி வஸுதாதி சிவாவஸானம் ||'

'ப்ரகாச விமர்சங்களாகிற கைகளிலிருக்கும் உன்மனீயாகிற ஸ்ருக்கினால் (யாகத்தில் உபயோகிக்கப்படும் கரண்டியினால்) தர்மம், அதர்மம், கலை இவைகளாகிற நெய்யை பூர்ணாக்னியில் ஆஹுதி செய்கிறேன்.'

'ப்ரகாசாமர்சஹஸ்தாப்யாம் அவலம்ப்யோன்மனீ ஸ்ருசம் |
தர்மாதர்மகலாஸ்னேஹம் பூர்ணவன்ஹௌ ஜுஹோம்யஹம் ||'

## सद्यःप्रसादिनी

## ஸத்ய: ப்ரஸாதினீ (383)

அனுக்ரஹத்தை உடனே கொடுப்பவள்.

1. அதாவது, பக்தன் மேலே சொல்லிய ரஹோயாகம், ரஹஸ்தர்பணம் இவைகள் செய்தால் அம்பாள் உடனே ஸந்தோஷப்பட்டு அவனுக்கு அனுக்ரஹம் செய்வதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

2. இதேமாதிரி பரமசிவனுக்கு 'ஆசுதோஷ:'—சீக்கிரத்தில் ஸந்தோஷமடைகிறவர்—என்று ஒரு நாமமுண்டு. அதாவது, பரமசிவனுக்கு பக்தனிடத்தில் வெகு சீக்கிரம் ஸந்தோஷம் ஏற்பட்டுவிடுமென்று அர்த்தம். இந்த விஷயத்தைப்பற்றி பாகவதத்தில் தசம ஸ்கந்தம் உத்தரார்த்தத்தில் 88-வது அத்யாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறதைப் பார்க்கவும்.

## विश्वसाक्षिणी

## விச்வஸாக்ஷிணீ (384)

ஸகலத்தையும் ஸாக்ஷாத்தாய்ப் பார்ப்பவள்.

1. அதாவது, ஜகத்தையெல்லாம் எவ்விதமான மறைவின் இடஞ்சலில்லாமலும் ஸ்வரூபாத்மகமான அறிவுடனும் அம்பாள் பார்த்துக்கொண்டிருப்பதாக இங்கு சொல்லப்பட்டது.

## साक्षिवर्जिता

## ஸாக்ஷிவர்ஜிதா (385)

தனக்கு ஸாக்ஷி யாருமில்லாதவள்.

1. அதாவது, அம்பாள் ஸர்வஸாக்ஷிணியாக இருப்பதால் அவளுக்கு ஸாக்ஷ்யந்தரம் கிடையாதென்று இங்கு சொல்லப்பட்டது.

## षडङ्गदेवतायुक्ता

## ஷடங்கதேவதாயுக்தா (386)

ஆறு அங்கங்களின் சக்தி தேவதைகளால் சூழப்பட்டவள்.

1. ஷடங்கங்கள்—ஆறு அவயவங்கள்—ஹ்ருதயம், சிரஸ், சிகை, நேத்ரம், கவசம், அஸ்த்ரம். இவைகளைத்தான் ஷடங்கந்யாஸத்தில் சொல்லப்படுவது. இவைகளின் தேவதைகளை ஆவரண (சூழ்ந்திருக்கும்) தேவதைகளாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'அதாங்காவரணம் குர்யாத் ஸ்ரீ வித்யா மனுஸம்பவம் |
ஷடங்காவரணத் பாஹ்யஸமீபே க்ரமதோऽர்சயேத் |
பரிவாரார்ச்சனம் பச்சாத் ஆதாவங்காவ்ருதி: ப்ரியே' ||

(ஞானர்ணவம்)

2. ஸர்வக்ஞதை, த்ருப்தி, அனுதியான ஞானம், ஸ்வதந்த்ரதை, எப்போதும் குறைவில்லாத சக்தி, அனந்தமாக இருப்பது இவை ஆறும் மஹேச்வரனை பரமசிவனுக்கு அங்கங்களென்று தேவீபாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸர்வக்ஞாதா த்ருப்திரனுதிபோத: ஸ்வதந்த்ரதா நித்யமலுப்தசக்தி:|
அனந்ததா சேதி விதேர்விதிக்ஞா: ஷடாஹுரங்கானி மஹேச்வரஸ்ய' ||

இப்படி ஷடங்கங்களின் தேவதையாக இருக்கும் ப்ரமசிவனுடன் அம்பாள் கூடியிருப்பதால் 'ஷடங்கதேவதாயுக்தா' என்று பெயர்.

3. சிக்ஷை, கல்பம், வ்யாகரணம், நிருக்தம், சந்தஸ், ஜ்யோதிஷம் இந்த ஷடங்கங்களின் அபிமானி தேவதைகளால் சூழப்பட்டிருக்கும் ச்ருதியின் ஸ்வரூபமாக அம்பாள் இருப்பதை இந்த நாமத்தில் சொல்லப்பட்டதாகவும் வைத்துக்கொள்ளலாம்.

## षाड्गुण्यपरिपूरिता
## ஷாட்குண்யபரிபூரிதா (387)

ஷட்விதமான குணங்களோடு நிரம்பியிருப்பவள்.

1. காமந்தகீய நீதிசாஸ்த்ரத்தில் ஸந்தி (பிற அரசர்களுடன் சேர்தல்), விக்ரஹ (யுத்தம் செய்தல்,) யான (படைகளுடன் போகுதல்), ஆஸன (படைகளோடு பாசறையிலிருத்தல்), த்வைதீபாவ (அணிவகுத்தல்), ஸமாச்ரய (ஒத்தாசையாகப் பிறரை ஆச்ரயித்தல்) என்பதாக ராஜாவுக்கு ஆறு குணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

2. புராணங்களில் ஐச்வர்யம், தர்மம், யசஸ், ஸ்ரீ, ஞானம், வைராக்யம் என்பதாக ஆறு குணங்கள் ப்ரஸித்தமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

## नित्यक्लिन्ना
## நித்யக்லின்னா (388)

எப்போதும் தயையோடு கூடியவள்.

1. க்லின்ன என்றால் நனைந்த என்று அர்த்தம். இங்கு அம்பாள் ஹ்ருதயமானது எப்போதும் தயையினால் (கருணையினால்) நனைந்திருப்பதாகச் சொல்லப்பட்டது.

2. பஞ்சதச திதிநித்யா தேவதைகளுக்குள் நித்யக்லின்னா என்று பெயரையுடைய (மூன்றாவது திதியின்) நித்யையோடு அம்பாள் அபின்னமாக இருப்பதை இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம். இந்த நித்யாதேவதையைப்பற்றி கருட புராணத்தில்,

'நித்யக்லின்னாமதோ வக்ஷ்யே த்ரிபுராம் புக்திமுக்திதாம்' என்பது முதலான ச்லோகங்களிலும் தந்த்ர ராஜதந்த்ரத்திலும் சொல்லியிருப்பதைப் பார்க்கவும்.

## निरुपमा

## நிருபமா (389)

ஸாத்ருச்யம் (உவமை) இல்லாதவள்.

1. ப்ரம்ஹத்தைப்பற்றிச் சொல்லுகையில் 'ந தஸ்ய ப்ரதிமாஸ்தி' என்று ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

## निर्वाणसुखदायिनी

## நிர்வாண ஸுகதாயினீ (390)

இன்னதென்று வர்ணிக்கமுடியாத ஸுகமாகிய முக்தியை கொடுப்பவள்.

1. பாண, வாண என்ற பதங்கள் இரண்டும் ஒன்றே 'ஏதத்பாணம் அவஷ்டப்ய' என்ற ச்ருதிவாக்யத்தில்வரும் பாண என்ற பதமானது சரீரத்தைக் குறிக்குமென்று வேதாந்திகள் சொல்வார்கள். அதேமாதிரி 'கீர்வாண' என்பதில் வரும் வாண என்ற பதமானது சரீரத்தைக் குறிக்குமென்று மீமாம்ஸகர்கள் சொல்வார்கள். ஆகவே 'நிர்வாண' என்றால் சரீரமில்லாதது, அதாவது இன்னது என்பதாகக் குறிப்பிடமுடியாதது என்று அர்த்தம். மோக்ஷம் ஒன்றுதான் நிர்வாணமான ஸுகமானதால் அதை அம்பாள் கொடுப்பதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

2. இதையேதான் அம்பாளால் தன் பிதாவான ஹிம வானுக்குச் சொல்லப்படுகிறது.

'மாம் அனுத்ருத்ய பரமம் நிர்வாணம் அமலம் பதம் |
ப்ராப்யதே நஹி சைலேந்த்ர ததோ மாம் சரணம் வ்ரஜ ||
ஏகத்வேன ப்ருதக்த்வேன ததா சோபயதோऽபி வா ||
மாமுபாஸ்ய மஹாராஜ ததோ யாஸ்யஸி தத்பதம் ||

(கருடபுராணம்)

## नित्याषोडशिकारूपा

## நித்யாஷோடசிகாரூபா (391)

ஷோடச திதிநித்யா தேவதைகளின் ரூபமாக இருப்பவள்.

1. ப்ரதமை முதல் பூர்ணிமை வரையிலுள்ள பதினைந்து திதிகளுக்கும் அதிஷ்டான தேவதைகளாக பதினைந்து திதிநித்யா தேவதைகளிருப்பதாகவும் அவர்களெல்லோரும் அம்பாளுடைய அங்கதேவதைகளென்றும் ஸாக்ஷாத் அம்பாளே பதினாறுவது நித்யாதேவதையென்றும் சொல்லப்படும்.

ஆத்யாயா லலிதாயா: ஸ்யு: அன்யா: பஞ்சதசாங்ககா: |
லலிதாங்கித்வரூபேண ஸர்வாஸாம் ஆத்மவிக்ரஹா ||'

(தந்த்ர ராஜம்)

இவர்களுடைய பெயர்கள்:—

'அத காமேச்வரீ நித்யா நித்யாச பகமாலினீ |
நித்யக்லின்னாபி ச ததா பேருண்டா வன்ஹிவாஸினீ ||
மஹாவித்யேச்வரீ தூதீ த்வரிதா குலஸுந்தரீ |
நித்யா நீலபதாகா ச விஜயா ஸர்வமங்களா ||
ஜ்வாலாமாலினிகா சித்ரேத்யேதா பஞ்சதசோதிதா: ||

இவர்கள்—

'ஏதா தேவீஸ்வரூபா: ஸ்யு: மஹாபலபராக்ரமா: |
ப்ரதமா முக்ய திதிதாம் கதா வ்யாப்த ஜகத்ரயா: ||
காலரூபா வர்தமானா: காலக்ராஸ விசக்ஷணா: |
ப்ரம்ஹாதீனாம் அசேஷாணாம் சிரகாலமுபேயுஷாம் ||
தத்தத்கால சதாயுஷ்ய ரூபா தேவ்யாக்ஞயா ஸ்திதா: |
நித்யோத்யதா நிராதங்கா ஸ்ரீதேவ்யங்கஸ்ய ரக்ஷகா: |
ஸேவந்தே ஜகதாம் ருத்யை லலிதாம் ஸ்வைக்ய ரூபிணீம் ||

(லலிதோபாக்யானம்)

1. அம்பாள் த்ரிபுரஸுந்தரீ என்ற பெயருடன் பதினறு வது நித்யையாக விளங்குகிருள். இந்த பதினறு நித்யைகளைப் பற்றி தந்த்ரராஜத்திலும் நித்யாஷோடசிகார்ணவத்திலும் விஸ் தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறதைப் பார்க்கவும்.

2. ஷோடசீ என்பது அம்பாளுடைய மந்த்ரம் (ஸ்ரீவித்யை) மேலும் அது அக்னிஷ்டோமம் போன்ற ஒருவிதமான க்ருஹ யாகத்தையும் குறிக்கும். நித்யமான (குறைவில்லாத) ஷோட சிக (மென்கிற க்ரது விசேஷ)த்தால் பூர்ணமாக ரூபிக்கப்படுவ தால் (ப்ரீதியடைவதால்) அம்பாளுக்கு 'நித்யாஷோடசிகா ரூபா' என்று பெயர் வந்ததாகவும் சொல்லலாம்.

3. கோடி வாஜபேயம், ஷோடசம் முதலான யாகங்களைச் செய்வதால் எப்படி அம்பாளுக்கு ப்ரியம் ஏற்படுமோ அந்த ப்ரிய மானது ஷோடசாக்ஷரியை ஒரு தடவை சொல்வதனுல் ஏற் படுவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'கோடிபிர் வாஜபேயாளும் யதா ஷோடசகோடிபி: |
ப்ரியதேऽம்பா ஸதைகேன ஷோடச்யுச்சாரணேன ஸா ||

(சக்திரஹஸ்யம்)

## श्रीकण्ठार्धशरीरिणी

## ஸ்ரீ கண்டார்த்த சரீரிணீ (392)

பரமசிவனுடைய பாதி சரீரத்தையுடையவள்.

1. ஸ்ரீயை (விஷத்தை) கண்டத்தில் உடையவராகையால் பரமசிவனுக்கு ஸ்ரீகண்டன் என்று பெயர்.

2. பரமசிவனைப் பாதிசரீரமாக உடையவள், அல்லது அவ ரோடு அபின்னமான பாதிசரீரத்தையுடையவளென்றும் இந்த நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம்.

3. இப்படி பரப்ரம்ஹமானது பதி, பத்னீ ரூபமாக இரண் டாய் ஏற்பட்டதை ப்ருஹதாரண்யகத்தில் 'ஆத்மைவேதமக்ர ஆஸீத்' என்ற வாக்யத்தால் ஆரம்பித்து 'ஸ இமமேவாத்மானம் த்வேதாऽபாதயத் தத: பதிச்ச பத்னீ சாபவதாம்' என்று சொல் லப்பட்டிருக்கிறது.

4. அல்லது ஸ்ரீகண்டன்போல் தன்னுடைய சரீரத்தின் பாதிகளை உடையவள் என்றும் சொல்லலாம். பரமசிவன் ஸ்வ பாவமாக வெளுப்பு நிறமும் விஷமிருக்குமிடமாகிய கண்டத்தில் கறுப்பு நிறத்தோடும் இருப்பதுமாதிரி அம்பாளுடைய சரீர மானது ஒரு பக்கம் வெளுப்பு நிறமுடைய கௌரீரூபமாகவும் மற்றொரு பக்கம் கறுப்பு நிறமுடைய காளிரூபமாகவும் இருப்ப தாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

தத்ர யாஸா மஹாபாகா சங்கரஸ்யார்த்தகாயினீ |
காயார்தம் தக்ஷிணம் தஸ்யா: சுக்லம் வாமம் ததாऽஸிதம் ||
ஆத்மானம் விபஜஸ்வேதி ப்ரோக்தா தேவீ ஸ்வயம்புவா |
ததைவ த்விவிதா பூதா கௌரீ காளீதி ஸா த்விஜா ||

(வாயு புராணம்)

5. மாத்ருகா கோசத்தின்படி ஸ்ரீகண்ட என்ற பதமான அ என்கிற அக்ஷரத்தைக் குறிக்கும். அதுவே,

'அகாரோ வை ஸர்வா வாக் ஸைஷா ஸ்பர்சோஷ்மபிர் வ்யஜ்யமானா பஹ்வீ நானாரூபா பவதி'

என்று ச்ருதியில் சொன்னபடி க முதலான அக்ஷரங்களுடன் சேர்ந்து நானாரூபங்களாக வெளிப்படுகிறது. (அதாவது அகார ரூபமானதும் பரா என்று சொல்லப்படுவதுமான முதலாவது, வாக்கானது வைகரீ வாக்காக ஏற்படுகிறது என்று அர்த்தம்.) அம்பாள் வாக்ரூபமாக இருப்பதாலும் மேலே சொல்லியபடி ஸ்ரீகண்டமெனப்படும் அகாரமானது அக்ஷரங்களுக்கு பாதியாக இருப்பதாலும அம்பாளை ஸ்ரீகண்டார்த சரீரிணீ என்று சொல்ல லாம்.

'வாகுத்பூதா பராசக்திர்யா சித்ரூபா பராபிதா |
வந்தே தாமனிசம் பக்தயா ஸ்ரீ கண்டார்த சரீரிணீம்

(ஸூதஸம்ஹிதை)

6. பாதிசரீரத்தையுடைய அம்பாளானவள் மற்றைய பாதி சரீரத்தையுடைய ஸ்ரீ கண்டனால் பூர்த்திசெய்யப்பட்டதாகவும் ஸூதஸம்ஹிதையில் சொல்லப்பட்டிருக்கிறது ஆகவே ஸ்ரீகண் டனுடைய அர்தசரீரத்தால் பூர்த்திசெய்யப்பட்ட சரீரத்தை யுடையவள் என்றும் அர்த்தம் சொல்லலாம்.

'இச்சா ஸம்ஞா சயா சக்தி: பரிபூர்ண சிவோதரா |'

7. சைவசாஸ்த்ரங்களில் சொல்லப்படும் மாத்ருகாந்யாஸத்தில் பூர்ணோதரீ முதலான சக்திகளால் பாதிபாகமும் ஸ்ரீகண்டன் முதலான சிவமாத்ருகைகளால் பாதிபாகமும் செய்யப்படுவதை இங்கு குறிக்கப்பட்டதாகவும் சொல்லலாம்.

8. ஸ்ரீகண்டமெனப்படும் அகாரத்தை எழுதும்போது அதில் பாதியானது (அம்பாளுடைய அபின்னசரீரமான) காமகலாக்ஷரமாக இருப்பதால் ஸ்ரீகண்டத்தினுடைய அர்த்தத்தை சரீரமாக உடையவள் என்னும் அர்த்தம் சொல்லலாம்.

## प्रभावती

### ப்ரபாவதீ (393)

ப்ரபைகளோடு கூடியவள்.

1. அணிமா முதலான ஆவரண தேவதைகளை ப்ரபைகள் என்று இங்கு சொன்னது. அவை அம்பாளுடைய சரீரத்திலிருந்து கிளம்பிய மயூகங்கள் (கிரணங்கள்) என்றும் அவை அம்பாளைச் சூழ்ந்திருப்பதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸ்வதேஹோத்பூதாபிர் க்ருணிபிரணிமாத்யாபிரபித:
நிஷேவ்யே நித்யே ... ... |' (ஸௌந்தர்யலஹரீ)
'அணிமாதிபிராவ்ருதாம் மயூகை:'

## प्रभारूपा

### ப்ரபாரூபா (394)

ப்ரபையையே ரூபமாக உடையவள்.

1. ப்ரபையாகிற கிரணமும் அதின் ப்ரகாசமும் அவைகளையுடைய வஸ்துவின் குணங்களே தவிற வேறான த்ரவ்யமல்லவென்று சொல்லப்படும்.

'கிரணோ குணோ ந த்ரவ்யம், தேஷாம் ப்ரகாசோ குணோ ந ஸ த்ரவ்யம் |;

இப்பேர்ப்பட்ட குண, குணீ இவைகளுடைய அபேதத்தை இங்கு சொல்லப்பட்டது.

2. ப்ரபைகளாகிற அணிமாதிதேவதைகளை தன்னுடைய ஸ்வரூபமாக உடையவள் என்று அர்த்தம். இதேமாதிரி 'மனோமயோ பாரூப:' என்று ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

**प्रसिद्धा**

**ப்ரஸித்தா** (395)

எல்லாராலும் அறியப்பட்டவள்.

1. எல்லாராலும் 'நான்' என்று சொல்லிக்கொள்ளப்படும் வஸ்துவாக அம்பாளிருப்பதால் ப்ரஸித்தா என்று பெயர்.

'தாம் அஹம் ப்ரத்யய வ்யஜாத் ஸர்வே ஜானந்தி ஜந்தவ: |'
'ஸர்வ சைதன்ய ரூபாம் தாம் ஆத்யாம் வித்யாம் ச தீமஹி |'
(தேவீபாகவதம்)

**परमेश्वरी**

**பரமேச்வரீ** (396)

ஸர்வோத்க்ருஷ்டமான ஈச்வரீ (ஸ்வாமினீ)யாக இருப்பவள்

**मूलप्रकृतिः**

**மூலப்ரக்ருதி:** (397)

ஸகலத்திற்கும் ஆதிகாரணமான ப்ரக்ருதிரூபமாக இருப்பவள்

1. மூலமென்றால் ஸ்ரீவித்யாமந்த்ரத்தையும் குறிக்கும். அதற்கு காரணபூதமானவையும் ப்ரகாசம், விமர்சம் என்று சொல்லப்படுவதுமான இரண்டு அக்ஷரங்களின் ரூபமாக அம்பாளிருப்பதால் இந்தப்பெயர் வந்ததாகவும் சொல்லலாம்.

2. ப்ரக்ருதியென்பது விகாரங்கள் (மாறுதல்கள்) இல்லாத வஸ்து. அந்த ப்ரக்ருதியானது விகாரங்களோடு கூடினால் அதற்கு விக்ருதியென்று பெயர். இப்படி விகாரங்கள் அடையாத ஆதி காரண வஸ்துவை மூலப்ரக்ருதியென்று சொல்லப்படும். இந்த மூலப்ரக்ருதியைப்பற்றி ஸாங்க்ய மதத்தில் ப்ரஸித்தமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

3. குண்டலினீ சக்தியையே மூலப்ரக்ருதியென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'மஹதாதி ஸப்தகரூப ஸம்ஷம்ஜ்ஞ வேஷ்டிதா
குண்டலின்யேவ அஷ்டப்ரக்ருதிரூபா மூலப்ரக்ருதிருச்யதே |
(ம்ருகேந்த்ர ஸம்ஹிதை)

அம்பாள் குண்டலினீ சக்தியாக இருப்பதால் மூலப்ரக்ருதி யென்று பெயர்.

4. ப்ருதிவீ முதல் ஆகாசாந்தமானவைகளில் அதது அதற்கு முந்தினதிலிருந்து உண்டானதாகச் சொல்லப்படும். அதாவது ப்ருதிவீ ஜலத்திலிருந்தும் ஜலமானது அக்னியிலிருந்தும் இம்மாதிரி மேலுக்குமேல் உண்டானவைகள். கடைசியான ஆகாசத்திற்கு 'ஆத்மன ஆகாச: ஸம்பூத:' என்ற ச்ருதிவாக்யப்படி ஆத்மாவே ப்ரக்ருதி. இந்த ஆத்மாவே ப்ரம்ஹம். அதற்கு ப்ரக்ருத்யந்தரம் கிடையாதாகையால் அதுவே மூலஸ்தானமான முதலான தான, மூல) ப்ரக்ருதியென்று சொல்லப்படும்.

'ப்ராதுராஸீஜ்ஜகன்மாதா வேதமாதா ஸரஸ்வதீ |
யஸ்யா ந ப்ரக்ருதி: ஸேயம் மூலப்ரக்ருதி ஸம்க்ஞிதா |
தஸ்யாமஹம் ஸமுத்பன்ன: தத்வைஸ்தைர் மஹதாதிபி: ||

(பாஞ்சராத்ராகமம்)

5. ஜகத்தானது மூலப்ரக்ருதியிலிருந்து விக்ருதிரூபமாக ஸ்ருஷ்டியடைகிறதென்றும் பிறகு அவ்வித விக்ருதிரூபமானது அதற்கு மூலமான ப்ரக்ருதியில் அடங்குவதை ப்ரளயமென்றும் சொல்லப்படும். ஆகவே ஸ்ருஷ்டி, ப்ரளயம், கொஞ்சம் லயமாக இருக்கிறகாலம், பிறகு ஸ்ருஷ்டி, இம்மாதிரி சுற்றிச்சுற்றி ஜகத்தானது ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது. ஆகவே இப்போதிருக்கும் ஜகத்தானது முந்தி ப்ரளயகாலத்தில் லயித்துப்போன ஜகத்துக்களுக்குப் பிந்தியதாகவும் இனி ஏற்படப்போகும் ஜகத்துக்களுக்கு முந்தியதாகவும் இருக்கிறது.

6. ஜீவன்கள் செய்யும் கர்மாக்களானது காலக்ரமத்தில் பரிபாகமடையும்போது அவைகளில் பரிபாகம் அடைந்தவைகள் அவைகளை அனுபவிப்பதினால் தீர்ந்துபோகின்றன. அம்மாதிரி பரிபாகமடையாத பாக்கி கர்மாக்களின் வாஸனையானது ஒருங்கே சேர்ந்து அவித்யா ரூபமாக இருந்துகொண்டு ப்ரளய காலத்தில் சுத்த சைதன்யரூபமானதும் நிஷ்களமானதுமான பரமாத்மாவினிடத்தில் லயத்தையடைந்து இருக்கிறது. இந்த அவித்யையானது பூர்வஸ்ருஷ்டிகளில் விஷயானுபவங்களிலிருக்கும்படியான ஆசையினால் செய்யப்பட்ட கர்மாக்களால் ஏற்பட்டு

அவ்விதமான ஆசையை மேலுக்குமேல் உண்டுபண்ணிக் கொண்டிருக்கிறது. இப்படி விஷயானுபவத்தில் இருக்கப்பட்ட ஆசையினுல்தான் லோகஸ்ருஷ்டியே ஏற்படுகிறது.

7. இப்படி விஷயானுபவத்தில் இருக்கப்பட்ட ஆசையின் சேர்க்கையான அவித்தையானது ஸகல ப்ரபஞ்சத்தையும் தனக்குள் அடக்கிக்கொண்டு அந்த ஆசைக்குக் காரணமான கர்மாவானது பரிபாகம் அடையும் வரையில் நிஷ்களமான பரமசிவனிடத்தில் லயமடைந்திருக்கிறது. இதையேதான் அவ்யக்தமென்றும் மாயை என்றும் சொல்லப்படும். பரமசிவனே ஸ்வப்ரதிஷ்டமாய் (வேறு ஆதாரத்தை அபேக்ஷிக்காதவராய்) நிஷ்களமாய் (மாறுதல்கள் இல்லாமல்) பரப்ரம்ஹமாக இருப்பவர். இப்பேர்ப்பட்ட ப்ரம்ஹத்தை புருஷனென்றும் சொல்வதுண்டு.

'ப்ரளயே வ்யாப்யதே தஸ்யாம் சராசரமிதம் ஜகத் |
'ஜகத்ப்ரதிஷ்டா தேவர்ஷே ப்ருதிவ்யப்ஸு ப்ரலீயதே |
தேஜஸ்யாப: ப்ரலீயந்தே தேஜோவாயௌ ப்ரலீயதே ||
வாயு: ப்ரலீயதே வ்யோம்னி தத் அவ்யக்தே ப்ரலீயதே |
அவ்யக்தம் புருஷே ப்ரம்ஹன் நிஷ்களே ஸம்ப்ரலீயதே ||'

(விஷ்ணுபுராணம்)

8. மேலே சொல்லப்பட்ட லயமென்பது முக்தியடையும் போது ஏற்படும் அத்யந்தமான நாசம் போன்றதல்ல. ஸுஷுப்தியின்போது அந்த: கரணத்தினுடைய வ்ருத்திகள் எப்படி அடங்கியிருக்குமோ அம்மாதிரி ப்ரளயகாலத்தில் மாயையின் வ்ருத்திகள் உதயமாகாமலிருப்பதால் அது அப்போது அத்யந்தம் நிர்விகல்பமான பரமாத்மாவினுடைய ப்ரகாசம் படுவதினுல் ப்ரகாசத்தோடு இருந்தாலும் ப்ரகாசமில்லாததுபோல் தோன்றும்.

9. இப்படி மாயையானது பரமசிவனிடத்தில் லயித்திருக்கையில் அதனிடம் (ஏற்கனவே சொன்னபடி) ஜீவன்களுடைய கர்மாக்களில் அனுபவிக்கப்படாமல் பாக்கியிருந்த கர்மாக்கள் அதில் லயமடைந்திருக்கின்றன. அவ்வித கர்மாக்கள் காலக்ரமத்தில் பரிபக்வமடையும்போது அவைகளுடைய பலனைக் கொடுப்பதற்காக பரமசிவனுடைய மனதில் ஸ்ருஷ்டிக்க வேண்டுமென்பதான மாயா வ்ருத்தியானது ஏற்படுகிறது.

இம்மாதிரியான மாயையின் அவஸ்த்தையையே ஈக்ஷண, காம, தபஸ், விசிகீர்ஷா முதலான பதங்களால் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸ ஈக்ஷத லோகான்னு ஸ்ருஜா' (ஐதரேயம்)
'ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேய' (சாந்தோக்யம்)
'ஸோऽகாமயத பஹு ஸ்யாம் ப்ரஜாயேய' (தைதரீயம்)
'தபஸா சீயதே ப்ரம்ஹ' (முண்டகம்)

## अव्यक्ता
## அவ்யக்தா (398)

வ்யக்தமாகத் தெரியாத ரூபத்தோடு கூடியவள்.

1. மேலே சொல்லியபடி பரப்ரம்ஹத்திற்கு (விசிகீர்ஷா) ஸ்ருஷ்டிக்க வேண்டுமென்கிற எண்ணம் ஏற்படும்போது மாயையானது அடையும் ரூபத்தை அவ்யக்தம் என்று சொல்லப்படும்.

2. ஸாம்க்ய மதத்தின்படி ஸகல ப்ரபஞ்சமும் ப்ரக்ருதியிலிருந்து உண்டாகிறதென்றும் இவ்விதமாக ப்ரக்ருதியின் விகாரங்களை ஸாக்ஷியாகவும் தனக்கு மாறுபாடில்லாமலும் பார்த்துக் கொண்டு புருஷன் என்பது இருப்பதாகவும் சொல்லப்படும். ஜகத்தானது இருபத்தைந்து தத்வங்களடங்கியது என்றும், முதல் இருபத்திநாலு தத்வங்கள் ப்ரக்ருதியிலிருந்து உண்டாகின்றனவென்றும் கடைசி (இருபத்தைந்தாவது) தத்வமான புருஷன் என்பது ப்ரக்ருதியிலிருந்து வேறுபட்டதாகவும் அதற்கு ஸாக்ஷிமாதிரி பார்த்துக்கொண்டிருப்பதாகவும் ஸாம்க்யர்கள் சொல்லுவார்கள். இவ்வித பகுத்தறிவை அடைந்து ப்ரக்ருதியின் பாசங்களிலிருந்து புருஷ தத்வத்தை விடுவிப்பதே ஸாங்க்ய மதத்தின் முக்ய உத்தேசம் வேதாந்திகள் சொல்லுகிறபடி ஜகத்தினுடைய ஸ்ருஷ்டிக்கு காரணமாக ஈச்வரன் ஒருவர் இருக்கிறார் என்பதை இந்த மதம் ஒப்புக்கொள்ளுகிறதில்லை. அசேதனமானதும் அனாதிகாலமாக இருப்பதும் முடிவில்லாததுமான ப்ரக்ருதியிலிருந்தே ஜகத்தானது ஏற்படுகிறதென்பதே இவர்களுடைய முக்யமான கொள்கை. மேலே சொல்லிய தத்வங்களின் ஸம்க்யையை அடிப்படையாக சொல்லுவதால் இந்த மதத்திற்கு ஸாம்க்யமதம் என்று பெயர்.

3. இந்த ப்ரக்ருதியை ப்ரதானமென்றும் அவ்யக்தமென்றும் ஸாம்க்யர்கள் சொல்லுவார்கள்.

'ஸூக்ஷ்மம் அலிங்கம் அசேதனம்
அனாதிநிதனம் ததா ப்ரஸவதர்மி |
நிரவயவம் ஏகமேவ ஹி
ஸாதாரணம் ஏதத் அவ்யக்தம் |'

(ஸாம்க்ய ஸப்ததி)

அனாதிமத்யம் மஹத: பரம் த்ருவம்
ப்ரதானம் அவ்யக்தம் உசந்தி ஸூரய: |'

இந்த ப்ரக்ருதியானது குணத்ரயங்களுடைய (ஸமஷ்டி) சேர்க்கையான ரூபமுடையதென்று சொல்லப்படும்.

'ஸத்வாதீனாம் அதத்தர்மத்வம் தத்ரூபத்வாத் |'

இவ்வித அவ்யக்தமென்ற ப்ரக்ருதியை இங்கு சொல்லப் பட்டதாகவும் வைத்துக்கொள்ளலாம்.

4. அவ்யக்தமென்ற பதமானது ப்ரம்ஹத்தையும் குறிக்கும். 'ததவ்யக்தமாஹ ஹி' என்ற வேதாந்த ஸூத்திரத்திற்கு அர்த்தம் சொல்லும்போது,

'ந சக்ஷுஷா க்ருஹ்யதே நாபி வாசா
நான்யைர் தேவைஸ் தபஸா கர்மணா வா'

என்ற சுருதிவாக்யத்தை அனுஸரித்து மேலே சொல்லிய விதமாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

5. விஷ்ணுவுக்கு அவ்யக்தமென்று பெயர் இருப்பதால் விஷ்ணு ஸ்வரூபமாக அம்பாளிருப்பதை இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

'ப்ரதான மவ்யயம் யோனி: அவ்யக்தம் ப்ரக்ருதிஸ்தம: |
விஷ்ணோரேதானி நாமானி நித்யம் ப்ரபவ தர்மிண: ||'

(லிங்க புராணம்)

## व्यक्ताव्यक्तस्वरूपिणी

## வ்யக்தாவ்யக்த ஸ்வரூபிணீ (399)

வ்யக்தமானதும் அவ்யக்தமானதுமான ஸ்வரூபத்தோடு கூடியவள்.

1. எல்லாவற்றிற்கும் முதலாக வ்யக்தமாக ஏற்படுவதி ஞல் மஹத் தத்வத்தை வ்யக்தமென்று சொல்லப்படும். [எவற் றையும் விட மஹத் (பெரிய) தாகையால் அதற்கு மஹத் என்று பெயர்.] (வ்யக்த, ஆவ்யக்த என்று பிரித்து) அந்த மஹத்தி லிருந்து உண்டான அஹம்காரமானது எங்கும் வ்யக்தமாக இருப்பதால் ஆவ்யக்தமென்று சொல்லப்படும். இப்படி மஹத், அஹம்காரம் இவைகளுடைய ஸ்வரூபத்தோடு கூடியவள் என் றும் அர்த்தம் சொல்லலாம்.

2. வ்யக்தா, அவ்யக்த ஸ்வரூபிணீ என்று இந்த நாமத்தை இரண்டாகப் பிரித்து சிலர் சொல்லுவார்கள். [இதற்காக அவர் கள் பின்னுல் வரும் ப்ரம்ஹ (822), ஜனனீ (823) என்ற நாமங் களை ப்ரம்ஹஜனனீ என்று சேர்த்து ஒரே நாமமாகச் சொல்லு வார்கள்.] அப்போது, வ்யக்தா என்பதற்கு (அஹந்தாத்மக மான) வ்யக்தமான ரூபத்தோடு கூடியவள் என்று அர்த்தம். அம்பாள் த்ரிபுரஸுந்தரீ ரூபத்தில் பராஹந்தா (எல்லாவற்றிற் கும் மேலானதான அஹம்கார) ரூபிணியாக இருப்பதால் அஹம் காரம் என்ற தத்வத்தில் அபிவ்யக்தமாக இருக்கிருள். ஆகவே அம்பாளுக்கு வ்யக்தா என்று பெயர்.

3. பூதங்களால் ஏற்படும் விகாரங்களோடு கூடியது வ்யக்தமான ரூபம். அவ்வித விகாரங்களுக்கு உள்படாதது அவ்யக்தமான ரூபம். இந்த இரண்டுவிதமான ரூபங்களும் அம்பாளுக்கு இருப்பதை இங்கு சொல்லப்பட்டிருக்கிறது.

'பூதபாவ விகாரேண த்விதீயேன ஸத் உச்யதே |
வ்யக்தம் தேந விஹீனத்வாத் அவ்யக்தம் அஸத் இத்யபி ||'

(லிங்கபுராணம்)

[இதில், மேலே சொல்லியபடி விகாரங்கள் ஏற்படுவதால் வ்யக்தமாகத் தெரியும் ரூபத்தை ஸத் என்றும் விகாரங்களுக்கு உள்படாமலிருக்கும் அவ்யக்த ரூபத்தை அஸத் என்றும் சொல் லப்பட்டது.]

4. வ்யக்தமென்றுல் க்ஷரம் (நாசமடையும் தன்மையுடை யது) என்றும் அவ்யக்தமென்றுல் அக்ஷரம் (அழிவில்லாதது) என்றும் அர்த்தம் சொல்லப்படும்.

'உக்தம் அக்ஷரம் அவ்யக்தம் வ்யக்தம் க்ஷரம் உதாஹ்ருதம் | '

(மத்ஸ்ய புராணம்)

5. தவிரவும், வ்யக்தமென்றால் (வ்யஷ்டி) தனியானதென்றும் அவ்யக்தமென்றால் (ஸமஷ்டி) சேர்க்கையானதென்றும் அர்த்தமுண்டு.

'ஸமஷ்டிம் விதுரவ்யக்தம் வ்யக்தம் வ்யஷ்டிம் முனீச்வரா: | '

(ந்ருஸிம்ஹ புராணம்)

6. தத்வங்களில் முதல் இருபத்திமூன்று தத்வங்களை வ்யக்தமென்றும் அவ்யக்தமென்றால் பராப்ரக்ருதியென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

த்ரயோ விம்சதி தத்வானி வ்யக்த சப்தேந ஸூரய: |
வதந்த்யவ்யக்த சப்தேந ப்ரக்ருதிம் ச பராம் ததா || '

(ப்ரம்ஹாண்ட புராணம்)

7. இந்த நாமத்திலிருக்கும் 'வ்யக்தாவ்யக்த' என்ற பதத்தை வ்யக்த, அவ்யக்த, வ்யக்தாவ்யக்த என்று மூன்றாகப் பிரித்து அம்மாதிரியான பேர்களையுடைய லிங்கங்களைக் குறிப்பிட்டதாகவும் சொல்லலாம். இவ்வித மூன்று லிங்கங்களைப் பற்றி,

'ஸ்வாயம்புவம் பாணலிங்கம் சைலலிங்கமிதி த்ரிதா |
கீர்த்திதம் வ்யக்தமவ்யக்தம் வ்யக்தாவ்யக்தமிதி க்ரமாத் ||
வ்யக்தம் புக்திப்ரதம் முக்திப்ரதமவ்யக்தமுச்யதே |
புக்திமுக்திப்ரதம் லிங்கம் வ்யக்தாவ்யக்தம் ப்ரசக்ஷதே ||
த்வித்ரிஸ்துலாம் ஸமாரூடம் வ்ருத்திமேதி ந ஹீயதே |
தத் பாணலிங்கமுதிதம் சேஷம் சைலம் விதுர் புதா: || '

என்று ப்ரம்ஹவைவர்த புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

8. மலம், கர்மா முதலானவைகளின் பாசத்தினால் கட்டுப்பட்டிருப்பவர்களிடத்தில் சக்தியானவள் அவ்யக்தமாக (மறைந்து) இருப்பதாகவும் மலபரிபாகத்தையுடையவர்களிடத்தில் வ்யக்தமாக (தெரியும்படியாக) இருப்பதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

வ்யாபினீ பரமா சக்தி: பதிதேத்யுச்யதே கதம் |
ஊர்த்வாத் அதோகதி: பாதோ மூர்தஸ்யாஸர்வகஸ்ய ச ||

ஊத்யம் ஸா வ்யாபினீ நித்யா ஸஹஜா சிவவத் ஸ்த்திதா |
கிம் த்வியம் மலகர்மாதி பாசபத்தேஷு ஸம்வ்ருதா ||
பக்வதோஷேஷு ஸுவ்யக்தா பதிதேத்யுபசர்யதே || '

(சக்தீ ரஹஸ்யம்)

## व्यापिनी

### வ்யாபினீ (400)

எங்கும் வ்யாபித்திருப்பவள்.

1. அதாவது, மேலே 'மூலப்ரக்ருதி' யென்ற நாமத்தில் சொல்லப்பட்ட ஆறுவிதமான ஸ்ருஷ்டிகளில் பரிணமித்திருப்பதாலும், ஸர்வ ஜகத்திலும் வ்யாபித்திருப்பதாலும் அம்பாளுக்கு வ்யாபினீ என்று பெயர்.

## विविधाकारा

### விவிதாகாரா (401)

வெவ்வேறுவிதமான ரூபங்களையுடையவள்.

1. அதாவது, மேலே 'மூலப்ரக்ருதி' யென்ற நாமத்தில் சொல்லப்பட்ட ப்ராக்ருத, கௌமார, வைக்ருத ஸ்ருஷ்டிகளாகிய விவிதமான ஆகாரங்களையுடையவள் என்று அர்த்தம்.

## विद्याविद्यास्वरूपिणी

### வித்யாவித்யா ஸ்வரூபிணீ (402)

வித்யை, அவித்யை இவையிரண்டையும் தன்னுடைய ரூபங்களாக உடையவள்.

1. வித்யையென்றால் ஸ்வாத்மரூபமான ஞானம், அவித்யையென்றால் (அவ்விதமான ஞானம் ஏற்படுவதற்கு முன்னால் இருக்கும்) கடைசி வ்ருத்தியின் ரூபமான ஞானம். இவையிரண்டும் அம்பாளுடைய ஸ்வரூபங்களாக இருப்பதாக இங்கு சொல்லப்பட்டது. இவையிரண்டையும் உடையவன் அவித்யையினால் ம்ருத்யுவை ஜெயித்து, வித்யையினால் அம்ருதத்வம்(இறவாதிருப்பது) அடைகிறானென்பதாக

'வித்யாம் சாவித்யாம் ச யஸ்தத்வேதோபயம் ஸஹ |
அவித்யயா ம்ருத்யும் தீர்த்வா வித்யயாऽம்ருதமச்னுதே ||'
என்று ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

2. அம்பாளுக்கு இம்மாதிரி இரண்டு ஸ்வரூபங்களிருப்பதை

'தஸ்ய சக்தி: பரா விஷ்ணோர் ஜகத்கார்ய பரிக்ஷமா |
பாவாபாவ ஸ்வரூபா ஸா வித்யாவித்யேதி கீயதே ||'

என்று ப்ருஹன்னாரதீயத்திலும்,

'ப்ரம்ஹைவ ஸாதி துஷ்ப்ராபா வித்யாவித்யாஸ்வரூபிணீ |'
என்று தேவீபாகவதத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த இரண்டு ரூபங்களில் வித்யாரூபத்தால் ஜந்துவானது விடுவிக்கப்படுகிறதென்றும் அவித்யாரூபத்தால் கட்டுப்படுகிறதென்றும் சொல்லப்பட்டது.

'வித்யாவித்யேதி தேவ்யா த்வே ரூபே ஜானீஹி பார்த்திவ |
ஏகயா முச்யதே ஜந்து: அன்யயா பத்யதே புன: ||' (தேவீ பாகவதம்)

3. ப்ரம்ஹம்வேறு, ஜீவன்வேறு என்பதாக ப்ராந்திரூபமான ஞானத்தை அவித்யையென்று சொல்லப்படும். அவ்விதமான ப்ராந்தியானது கடைசியாகக் குறைந்து அபேதபுத்தி ஏற்படுவதற்கு மிந்தியுள்ள (சரமவ்ருத்தி ரூபமான) ஞானத்தை வித்யையென்று சொல்லப்படும். ஸ்வ என்றால் (பரப்ரம்ஹாத்மகமான) ஆத்மஞானம். அம்பாள் வித்யா, அவித்யா, ஸ்வ என்பதான மூன்றுவித ரூபங்களோடு இருப்பதை இங்குசொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

'ப்ராந்திர் வித்யா பரம்சேதி சிவரூபமிதம் த்ரயம்
அர்த்தேஷு பின்னரூபேஷு விக்ஞானம் பிராந்திருச்யதே ||
ஆத்மாகாரேண ஸம்வித்திர் புதைர்வித்யேதி கத்யதே |
விகல்ப ரஹிதம் தத்வம் பரமித்யபிதீயதே ||' (லிங்க புராணம்)

## महाकामेशनयनकुमुदाह्लादकौमुदी

## மஹாகாமேச நயனகுமுதாஹ்லாதகௌமுதீ (403)

மஹாகாமேச்வரருடைய கண்களாகிற குமுதபுஷ்பங்களை ஸந்தோஷமடைய (மலர)ச் செய்யும் சந்த்ரிகையாக இருப்பவள்.

1. மஹாகாமேசரென்றால் மஹானும் காமேசராயுமிருப்பவர் என்றும் சொல்லலாம். லலிதாம்பிகாரூபிணியான அம்பாளுக்கு காமேச்வரியென்றும் மஹாகாமேச்வரியென்றும் பெயர் இருப்பதுபோல் பரமசிவனுக்கும் காமேசர் (காமேச்வரர்) என்றும் மஹாகாமேசர் (மஹாகாமேச்வரர்) என்றும் பெயர்கள் உண்டு.

2 அல்லது, மஹாகாமனும் ஈசனுயுமிருப்பவர் மஹாகாமேசர். (காம என்றால் இச்சை, ஆசை)

3. மஹாகாமேசர் அம்பாளைப்பார்த்தவுடன் அதினால் உண்டாகும் ஸௌகாதிசயத்தினால் பரந்தகண்களோடு இருப்பதை சந்த்ரிகையைக்கண்ட குமுதபுஷ்பங்கள் மலர்வதற்கு ஸமானமாக இங்கு வர்ணிக்கப்பட்டது.

4. குமுதமென்றால் கைரவம், ரக்தபங்கஜம்—செந்தாமரை. கார்த்திகைமாதத்து பூர்ணிமைக்கும் பெயர்.

> 'குமுதம் கைரவே ரக்தபங்கஜே குமுத: கபௌ |
> கௌமுத: கார்த்திகேமாஸி சந்த்ரிகாயாம் ச கௌமுதீ ||'

5. குத்ஸிதமான ப்ரீதியோடு கூடியவர்கள் குமுதர்கள் அதாவது விஷயங்களில் ஆசையுள்ளவர்கள். [விஷயங்கள் நச்வரமாக இருப்பதினால் அவைகளிலிருக்கும் ப்ரீதியானது குத்ஸிதமாய் (நிந்திக்கத்தகுந்ததாய்) இருக்கிறது] மேலும் குமுத என்பதற்கு இரக்கப்படத்தக்கவன் (க்ருபணன்) என்றும் அர்த்தமுண்டு. இங்கே அவர்கள் துச்சமான விஷயஸௌகத்தில் ஆசையுடையவர்களாக இருப்பதால் இரக்கப்படத்தக்க ஸ்திதியிலிருக்கிறார்கள்.

6. ஆஹ்லாதம் என்றால் (ஆ—எங்கும் நிறைந்த, ஹ்லாத-ஸௌகாதிசயம், அதாவது) மோக்ஷம்.

7. ஆகவே, மஹாகாமேசரிடத்தில் (நயன) சேர்ப்பிப்பதினால் குமுதர்களுக்கு ஏற்படும் ஆஹ்லாத (மோக்ஷ)த்திற்கு ப்ரகாசம் செய்கிறவள் என்று அர்த்தம் ஏற்படுகிறது. அதாவது, குருட்டுத்தனமாக விஷயஸௌகங்களில் ஆசையோடிருப்பவர்களிடம் அம்பாள் இரக்கப்பட்டு அவர்களை சிவனிடம் சேர்ப்பிவித்து அதன் மூலமாக அவர்களுக்கு மோக்ஷம் கிடைப்பதற்கு

(பாதையில் வெளிச்சத்தைக்காட்டும் சந்த்ரிகைபோல்) ப்ர காசிப்பவள் என்று இந்த நாமத்தின் தாத்பர்யம்.

**भक्तहार्दतमोभेदभानुमद्भानुसंततिः**

**பக்தஹார்த தமோபேத பானுமத் பானுஸம்ததி:** (404)

பக்தர்களுடைய ஹ்ருதயத்திலிருக்கும் இருட்டைப் போக்கடிப்பதில் ஸூர்யனுடைய கிரணபரம்பரை போன்றவள்.

1. பானு என்றால் கிரணம் என்று அர்த்தம். பானுமான் (பானு) என்றால் ஸூர்யன் என்று அர்த்தம்.

2. பக்தர்களுடைய மனதைச் சூழ்ந்திருக்கும் அக்ஞானத்தை இங்கு இருட்டுக்கு ஒப்பிடப்பட்டது. அதை அம்பாள் போக்குவதால் ஸூர்யனுடைய கிரணங்களுக்கு ஸமானமாக அம்பாளைச் சொல்லப்பட்டது.

**शिवदूती**

**சிவதூதீ** (405)

சிவனை தூதனாக உடையவள்.

1. பிறருக்கு ஸம்தேசம் (ஸமாசாரம், சேதி) கொண்டு போகும் (அல்ப) மனிதனுக்கு தூதன் என்றுபெயர்.

2. சும்ப, நிசும்பர்களுடன் அம்பாள் யுத்தம் துடங்குவதற்கு முன்பாக அவர்களிடம் சிவனை அம்பாள் தூதனாக அனுப்பியதை தேவீ மஹாத்ம்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறதைப் பார்க்கவும்.

'யதோ நியுக்தோ தௌத்யேன தயா தேவ்யா சிவ: ஸ்வயம் |
சிவதூதீதி லோகேऽஸ்மின் தத: ஸா க்யாதிமாகதா ||

3. புஷ்கரமென்கிற தீர்த்தத்தில் இருக்கும் அம்பாளுக்கு சிவதூதீ என்று பெயர் என்பதாக பத்மபுராணம் புஷ்கரகண்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'அத தேऽன்யா: ப்ரவக்ஷ்யாமி புஷ்கரே யா வ்யவஸ்த்திதா |
சிவதூதீ ததா வேதீ க்ஷேமா க்ஷேமங்கரீ ஸதா ||'

## शिवाराध्या

## சிவாராத்யா

(406)

சிவனால் உபாஸிக்கப்பட்டவள் (உபாஸிக்கத்தகுந்தவள்)

1. பரமசிவன் அம்பாளை உபாஸித்து த்யானயோகபலத்தினால் அர்தநாரீச்வரராக ஆனதாய் ப்ரம்ஹாண்ட புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'சிவோऽபி யாம் ஸமாராத்ய த்யானயோகபலேன ச |
ஈச்வர: ஸர்வஸித்தீனாம் அர்தநாரீச்வரோऽபவத்॥'

2. பரமசிவனால் உபாஸிக்கப்பட்ட சதுஷ்கூடவித்யையின் ஸ்வரூபமாக இருப்பவள் என்றும் அர்த்தம் சொல்லலாம்.

## शिवमूर्तिः

## சிவமூர்த்தி:

(407)

சிவனையே தன்னுடைய மூர்த்தியாக உடையவள்.

1. சிவன். சக்தி இவர்களுடைய அபேதத்தை இங்கு சொல்லப்பட்டது.

'ஏகோருத்ர: ஸர்வபூதேஷு கூட:
மாயா ருத்ர: ஸகலோ நிஷ்களச்ச |
ஸ ஏவ தேவீ ந ச தத்விபின்னா
ஹ்யேதத் ஞாத்வைவாம்ருதத்வம் வ்ரஜந்தி॥'

2. மங்களமயமான மூர்த்தியை உடையவள் என்றும் அர்த்தம் சொல்லலாம்.

3. சிவ என்றால் மோக்ஷம் என்றும் அர்த்தமுண்டு. ஆகவே மோக்ஷமே ரூபமாக உடையவள் என்றும் இந்த நாமத்துக்கு அர்த்தம் சொல்லலாம். ஆத்ம ஸ்வரூபத்தைத் தெரிந்து கொள்வதே மோக்ஷமென்பதாகச் சொல்லப்படும். இதை ஸௌர ஸம்ஹிதையில் பதினாலாவது அத்யாயத்தில்,

'அத முக்தே: ஸ்வரூபம் தே ப்ரவக்ஷ்யாமி ஸமாஸத: | '

என்று ஆரம்பித்து கடைசியாக,

'தஸ்மாத் ஆத்மஸ்வரூபைவ பரா முக்திரவித்யயா |
ப்ரதிபத்தா விசுத்தஸ்ய வித்யயா வ்யஜ்யதேऽனகII'

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

## शिवंकरी
## சிவம்கரீ (408)

(தன்னுடைய பக்தனுக்கு) மங்களத்தைச் செய்பவள்.

1. அல்லது, அவித்யையென்பதான பாசத்தை அகற்றி அவனை (முக்தர்கள் அடைவதான) சிவஸ்வரூபமாகச் செய்து விடுகிருள் என்றும் சொல்லலாம்.

'பாசபத்தோ பவேத் ஜீவ: பாசமுக்த: ஸதாசிவ: |'
'விஞேதாய சைதன்யமேகம் விபஜ்ய
த்விதா தேவி ஜீவச்சிவச்சேதி நாம்ஞ |
சிவஸ்யாபி ஜீவத்வமாபாதயந்தீ
புனர் ஜீவமேனம் சிவம் வா கரோஷி ||'

## शिवप्रिया
## சிவப்ரியா (409)

சிவனுடைய ப்ரியையாக இருப்பவள்.

1. அல்லது, சிவனைத்தனக்கு ப்ரியனுக உடையவள் என்றும் சொல்லலாம்.

## शिवपरा
## சிவபரா (410)

சிவனைவிட உத்க்ருஷ்டமாக இருப்பவள்.

1. சிவன் சக்த்பதீனனுக இருப்பதால் சக்தியையே உத்க்ருஷ்டமாகச் சொல்லப்படும். இதையேதான் ஆசார்யாள் 'சிவ: சக்த்யாயுக்தோ' என்பதான ஸௌந்தர்யலஹரீ முதல் ச்லோகத்தில் நிரூபணம் செய்திருக்கிருர்கள்.

2 அல்லது, தன் பதியாகிய பரமசிவனையே பரமாக (ஸர்வோத்க்ருஷ்டமாக) எண்ணியிருப்பதால் அம்பாளுக்கு சிவபரா என்று பெயர் என்பதாகவும் சொல்லலாம்.

3. அல்லது, தன்னுடைய பக்தர்களுக்கு சிவனை ப்ரதிபாதனம் செய்வதால் இந்தப்பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

## शिष्टेष्टा

## சிஷ்டேஷ்டா (411)

சிஷ்டர்களையே (தன்னுடைய) இஷ்டர்களாக உடையவள்.

1. அல்லது, சிஷ்டமான (விஹிதமான) கர்மாக்களை தன்னுடைய இஷ்டங்களாக (ப்ரியங்களாக) உடையவள் என்றும் சிஷ்டமான கர்மாக்கள் செய்வதினால் பூஜிக்கப்பட்டவள் என்றும் சொல்லலாம். அவனவனுக்கு ஏற்பட்ட கர்மாக்களைச் செய்வதே மிகவும் உத்க்ருஷ்டமான பகவதாராதானம் என்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸ்வஸ்வ வர்ணாச்ரமைர் தர்மை: ஸம்யக் பகவதர்பிதை: |
யத்பூஜனம் ந தத் கந்தமால்யாதீனும் ஸமர்பணை:||'
'ஆசாரப்ரபவோ தர்ம: தர்மஸ்ய ப்ரபுராச்யுத: |'

2. சிஷ்டர்களால் பூஜிக்கப்பட்டவள்என்றும் சொல்லலாம்.

3. சிஷ்டர்களுடைய லக்ஷணம் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

'ந பாணிபாதசபலோ ந நேத்ரசபலோ பவேத் |
ந ச வாகங்கசபல இதி சிஷ்டஸ்ய கோசர: ||
பாரம்பர்யாகதோ யேஷாம் வேத: ஸபரிப்ரும்ஹண: |
தே சிஷ்டா ப்ராம்ஹணா ஞேயா: ச்ருதிப்ரத்யக்ஷஹேதவ: ||

(வஸிஷ்ட ஸூத்ரம்)

## शिष्टपूजिता

## சிஷ்டபூஜிதா (412)

சிஷ்டர்களால் பூஜிக்கப்பட்டவள்.

## अप्रमेया

## அப்ரமேயா (413)

அளவிடமுடியாதவள்.

1. அல்லது, அ என்ற அக்ஷரத்தால் குறிக்கப்படும் ப்ராம்ஹா, விஷ்ணு முதலானவர்களால் (அளவிடப்பட்டவள், அதாவது) அறியப்பட்டவள் என்றும் சொல்லலாம்.

2. (அப்பு) ஜலத்தில் இருப்பவள் அப்ரமேயா. இம்மாதிரியே 'மம யோனிரப்ஸ்வந்த: ஸமுத்ர:' என்று ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

## स्वप्रकाशा

## ஸ்வப்ரகாசா (414)

ஸ்வயம் ப்ரகாசமாக இருப்பவள்.

1. அதாவது, தன்னோடு அபின்னமான ப்ரகாசத்தோடு கூடியவள் என்று அர்த்தம். ப்ரம்ஹத்திற்கு ப்ரகாசம் கொடுக்கும் வஸ்து யாதொன்றும் கிடையாதாகையாலும் அதைப்பார்க்கும்படியான (அதனின்று வேறான) வஸ்து யாதொன்றும் இல்லாதாகையாலும் அதை ஸ்வயம் ஜ்யோதிஸ், ஸ்வப்ரகாசம் என்று சொல்லப்படும்.

'அத்ராயம் புருஷ: ஸ்வயம்ஜ்யோதி:' (ச்ருதி)

2. (ஸு+அப்+ப்ரகாசா) அதிகமான ஜலங்களில் ப்ரகாசத்தை (தோற்றத்தை)யுடையவள் என்றும் அர்த்தம் சொல்லலாம்.

## मनोवाचामगोचरा

## மனோவாசாமகோசரா (415)

மனதுக்கும் வாக்குக்கும் எட்டாதவள்.

1. அதாவது, அவைகளுக்கு விஷயமாக இல்லாதவள் என்று அர்த்தம்.

'யதோ வாசோ நிவர்தந்தே
அப்ராப்ய மனஸா ஸஹ |' (ச்ருதி)

'யாதீதகோசரா வாசாம் மனஸாம் சாவிசேஷணா |
ஞானிஞான பரிச்சேத்யா வந்தே தாம் ஈச்வரீம் பராம் ||'

(விஷ்ணு புராணம்.)

2. அல்லது, மனதுக்கும் வாக்குக்கும் எட்டும்படியான விஷயம் யாதொன்றும் தன்னிடமில்லாதவள் என்றும் சொல்லலாம்.

3. 'மனோவாசாம்' என்பதனால் மனதுமுதலான ஏகாதச இந்த்ரியகணங்களையும் பரா முதலான வாக்குகளையும் குறிப்பிட்டது.

4. இந்த நாமத்தை 'அமனோவாசாமகோசரா' என்று சொல்லி அமனோவாசாம+கோசரா என்று பிரித்து மனோவாக்குகளை ஆமங்களாய் (அபக்வமாய், பக்வமில்லாமல்) உடையவர்களல்லாதவர்களுக்கு கோசரமாக இருப்பவள் என்றும் அர்த்தம் சொல்லலாம். அதாவது அம்பாள் பரிசுத்தமான மனது வாக்கு இவைகளையுடையவர்களுக்குத்தான் கோசரமாக இருக்கிறாள் என்று தாத்பர்யம்.

## चिच्छक्तिः
## சிச்சக்தி: (416)

சித் எனப்படும் சக்தி ஸ்வரூபமாக இருப்பவள்.

1. அவித்யை என்பதை போக்கடிக்கும் ஸாமர்த்யத்தையுடைய வித்யைக்கு சித் என்று பெயர். இதற்கே சைதன்யமென்றும் பெயர்.

'த்வே அக்ஷரே பரம்ஹபரே அனந்தே
வித்யாऽவித்யே நிஹிதே யத்ரகூடே |
க்ஷரம் த்வவித்யா ஹ்யம்ருதம் து வித்யா
வித்யாऽவித்யே ஈசதே யஸ்து ஸோऽன்ய: ||' (ச்ருதி)

2. இப்பேர்ப்பட்ட சித்சக்தியானது ஸகல பூதங்களுக்குள்ளும் இருக்கிறதென்றும் அது இல்லாத ப்ராணியானவன் சக்தி ஹீனனாக சவத்திற்கு ஸமானமாக இருப்பானென்றும் இந்த சித் சக்தியே அம்பாள் ஸ்வரூபமென்றும் தேவீபாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'வர்ததே ஸர்வபூதேஷு சக்தி: ஸர்வாத்மனா ந்ருப |
சவவத் சக்திஹீனஸ்து ப்ராணீ பவதி ஸர்வதா |
சிச்சக்தி: ஸர்வபூதேஷு ரூபம் தஸ்யாஸ்ததேவ ஹி ||'

## चेतनारूपा
## சேதனாரூபா (417)

சைதன்ய ரூபிணியாக இருப்பவள்.

1. ஸகல பூதங்களுக்குள்ளிருக்கும் சேதனசக்தியானது அம்பாளுடைய ஸ்வரூபமென்பது தேவீமாஹாத்மியத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'யா தேவீ ஸர்வபூதேஷு சேதனேத்யபிதீயதே |
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோநம: ||

பரமேச்வரனுடைய விமலமான சித்சக்தியானது சைதன்யமென்று சொல்லப்படும் என்பதாக

'சித்சக்தி: பரமேச்வரஸ்ய விமலா
சைதன்யமேவோச்யதே ||'

என்று ஸம்க்ஷேபசாரீரகத்திலும்

சக்தி சைதன்ய ஸ்வரூபமென்று 'சைதன்யஸ்வரூபா சக்தி:' என்பதாக கௌடபாதருடைய (ஸ்ரீவித்யாரத்ன) ஸூத்ரத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

2. இதேமாதிரி தேவீபாகவதம் முதல் ச்லோகத்தில்,

'ஸர்வசைதன்ய ரூபாம் தாம் ஆத்யாம் வித்யாம் ச தீமஹி |
புத்திம் யா ந: ப்ரசோதயாத் ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது. [இதையேதான் த்ரிசரண (மூன்று பாதங்களையுடைய) காயத்ரீ என்று சொல்லப்படும்.

'காயத்ர்யா ச ஸமாரம்ப: தத்வை பாகவதம் விது: |'

என்று மத்ஸ்யபுராணத்தில் சொல்லியபடி காயத்ரியோடு ஆரம்பிக்கும் க்ரந்தத்திற்குத்தான் பாகவதம் என்று பெயர் என்பதாகச் சொல்லப்படுவதாலும் மேலே சொல்லியபடி த்ரிசரண காயத்ரியோடு தேவீபாகவதமே ஆரம்பிப்பதாலும், அதற்கே தான் பாகவதம் என்ற பெயர் உரியது என்பதாகச் சொல்லப்படும்.]

3. 'ஸைஷா ஆனந்தஸ்ய மீமாம்ஸா பவதி' என்ற ச்ருதி வாக்யத்தில் வரும் ஸா என்ற பதத்திற்கு சித்ரூபமான சக்தி என்று அர்த்தம் என்பதாக சங்கராரண்யர் அவருடைய வித்யாரத்னம் என்பதான வ்யாக்யானத்தில் காட்டியிருக்கிறார்.

## जडशक्तिः
## ஜடசக்தி: (418)

ஜடமான ப்ரபஞ்சத்தின் சக்தியாக இருப்பவள்.

1. அதாவது, ஜகத்தை ஸ்ருஷ்டிப்பதற்காக உபயோகப்படும் மாயையின் பரிணாம (மாற்றுருவ) விசேஷத்தை ஜடசக்தி யென்று சொல்லப்படும். அதுவே ஸ்ருஷ்டிக்கும் சக்தியையும் குறிக்கும். ஸூர்யனிடத்தில் எப்படி உஷ்ணமிருக்கிறதோ அம்மாதிரி ப்ரம்ஹத்தினிடத்தில் ஸருஷ்டிக்கும் சக்தியிருக்கிறதென்றும் அதை ஸாமான்யமாக நம்முடைய சிற்றறிவினால் தெரிந்து கொள்ள முடியாதென்றும் ப்ரம்ஹமேதான் ஸ்ருஷ்டிக்கும் வஸ்துவாக ஆகிவிடுகிறதென்றும் விஷ்ணுபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'சக்தய: ஸர்வபாவானாம் அசிந்த்ய ஞானகோசரா: |
சதசோ ப்ரம்ஹணஸ்தாஸ்து ஸர்காத்யா பாவசக்தய: ||
பவந்தி தபஸாம் ச்ரேஷ்ட பாவகஸ்ய யதோஷ்ணதா |
நிமித்தமாத்ரமேவாஸௌ ஸ்ருஜ்யானாம் ஸர்க கர்மணி ||
ப்ரதானகாரணீ பூதா யதோ வை ஸ்ருஜ்யசக்தய: |
நிமித்தமாத்ரம் முக்த்வைகம் நான்யத் கிஞ்சிதபேக்ஷதே |
நீயதே தபஸாம் ச்ரேஷ்ட ஸ்வசக்த்யா வஸ்துதஸ்துதாம் ||'

## जडात्मिका
## ஜடாத்மிகா (419)

தெரியும்படியான (ஆத்ம) ஸ்வரூபத்தை யுடையவள்.

1. ஜடமான ப்ரபஞ்சமானது மாயையின் ஸ்வரூபத்தினுடைய பரிணாம விசேஷமென்பதாக மேலே சொல்லப்பட்டிருக்கிறது.

## गायत्री
## காயத்ரீ (420)

காயத்ரீரூபமாக இருப்பவள்.

1. 'காயத்ரீ சந்தஸாம் மாதா' என்றபடி ஸகலவேதங்களுக்கும் மாதாவாக காயத்ரீ மந்த்ரத்தைச் சொல்லப்படும். ஸாதாரணமாக ஜபிக்கப்படும் காயத்ரீ மந்த்ரத்திற்கு மூன்று பாதங்களிருக்கின்றனவென்றும் ஸம்பூர்ணமான காயத்ரிக்கு (இவையுள்பட) நான்கு பாதங்களுண்டென்றும் முதல் மூன்று பாதங்கள் முறையே ருக், யஜுஸ், ஸாமவேதங்களின்

ஸாரமென்றும் நான்காவது (துரீய) பாதம் அதர்வணவேதத்தின் ஸாரமென்றும் அது மிகவும் விசேஷமானதினால் அதைத் தெரிந்துகொள்ள திரும்பவும் உபதேசமாக வேண்டுமென்றும் சொல்லப்படும்.

2. காயத்ரியின் முதல் மூன்று பாதங்களை ப்ரம்ஹா வானவர் ருக், யஜுஸ், ஸாமவேதங்களிலிருந்து ஸாரமாக (கறந்து)எடுத்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'த்ரிப்ய எவ து வேதேப்ய: பாதம் பாதமுதூதுஹத் |
தத் இத்ய்ருசோऽஸ்யா: ஸாவித்ர்யா: பரமேஷ்டீ ப்ரஜாபதி: ||
(மனு ஸ்ம்ருதி)

3. காயந்தம் த்ராயதே யஸ்மாத் காயத்ரீ தேன கத்யதே |'

என்ற காயத்ரீ கல்பவசனப்படி தன்னைப்பாடுபவனை (ஜபிப்பவனை) காப்பாற்றுவதினால் காயத்ரீ என்று பெயர் ஏற்பட்டதாகச் சொல்வது தவிர இதரகாரணங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன.

'காயனுத் கமனுத்வாபி காயத்ரீ த்ரிதசார்சிதா' (தேவீ புராணம்)
'காயதி ச த்ராயதே ச' (சாந்தோக்யம்)
'காயத்ரீ காயனுத்மத்வாத்' (மஹா வாஸிஷ்ட ராமாயணம்)

4. அம்பாள் காயத்ரீரூபிணியாக இருப்பது பத்மபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'விசேஷாத் புஷ்கரே ஸ்நாத்வா ஜபேன்மாம் வேதமாதரம் |
அஷ்டாக்ஷரா ஸ்திதா சாஹம் ஜகத்வ்யாப்தம் மயாத்விதம் ||'

5. முன்னொரு காலத்தில் ப்ரம்ஹா யாகம் செய்யும்போது தன்னுடைய பத்னியாகிய ஸரஸ்வதியை அழைத்ததாகவும் அப்போது ஸரஸ்வதீ தன்னுடன் அங்கே கூட இருந்த லக்ஷ்மீ முதலானவர்களுடன் வருவதாகச் சொல்லி தாமதித்ததாகவும் அதனால் கோபமடைந்த ப்ரம்ஹாவானவர் காயத்ரீயென்ற பெயரையுடைய கோபகன்யை (யாதவஸ்த்ரீ)யை ஸ்ருஷ்டித்து அந்த விருத்தாந்தத்தை விஷ்ணுவுடன் சொன்னதாகவும் பிறகு விஷ்ணுவின் சொல்லைக்கேட்டு அவளை காந்தர்வ விவாஹம் செய்துகொண்டதாகவும் ஆகவே காயத்ரீ தேவியானவள் ப்ரம்ஹாவினுடைய இளைய ஸம்ஸாரமென்றும் பத்ம புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'தாவத் ப்ரம்ஹா ஹரிம் ப்ராஹ யக்ஞார்த்தம் ஸத்வரம் ச ந:
தைவீ சைஷா மஹாபாக காயத்ரீ நாமத: ப்ரபோ ||
ஏவமுக்தே ததா விஷ்ணு: ப்ரம்ஹாணம் ப்ரோக்தவானிதம் |
ததேனும் உத்வஹஸ்வாத்ய மயா தத்தாம் தவ ப்ரபோ ||
காந்தர்வேண விவாஹேன விகல்பம் மா க்ருதாச்சிரம் |
க்ருஹாண கோபகன்யாயா அஸ்யா: பாணிமனுகுலம் |
காந்தர்வேண ததோ கோபீம் உபயேமே பிதாமஹ: ||'

அவ்விதமான காயத்ரீ என்று பெயரையுடைய கோப கன்யாரூபிணியாக அம்பாளிருப்பதாக இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

6. 24 அக்ஷரங்களையுடைய சந்தஸ் விசேஷத்திற்கு காயத்ரீ என்று பெயர். அது பரமாத்ம ஸ்வரூபமென்று சொல்லப்படும்.

'காயத்ரீ சந்தஸாமஹம்' (கீதை)
'காயத்ரீ சந்தஸாமஸி' (கூர்ம புராணம்)

## व्याहृतिः (421)

## வ்யாஹ்ருதி:

வ்யாஹ்ருதி ரூபமாக இருப்பவள்.

1. வ்யாஹ்ருதியென்றால் உச்சாரணம். அந்த ரூபமாக அம்பாள் இருப்பதாக இங்கு சொல்லப்பட்டது.

மயாபிவ்யாஹ்ருதம் யஸ்மாத் த்வம் சைவ ஸமுபஸ்த்திதா |
தேன வ்யாஹ்ருதிரித்யேவம் நாம தே வித்திமேஷ்யதி ||'
(வாயு புராணம்)

2. வ்யாஹ்ருதி என்றால் சில மந்த்ர விசேஷங்களுக்குப் பெயர். அவை மூன்று என்றும் அவை முறையே ருக், யஜுஸ் ஸாமவேதங்களிலிருந்து ப்ரம்ஹாவால் எடுக்கப்பட்டவையென்றும் சொல்லப்படும்.

'அகாரம் சாப்யுகாரம் ச மகாரம் ச ப்ரஜாபதி: |
வேதத்ரயாத் நிரதுஹத் பூர்புவ: ஸ்வரிதீதி ச ||'
(மனு ஸ்ம்ருதி )

இவை மூன்றும் ப்ரணவத்தை முன்னிட்டு ஸாவித்ரீயுடன் சேர்ந்து ஸந்த்யாகாலத்தில் ஜபிக்கப்படும். ['பூராதி

ஸப்தவ்யாஹ்ருதீனும்' என்றபடி மேலே சொல்லிய மூன்றுடன் இன்னும் நாலுசேர்த்து, ஆக ஏழு வ்யாஹ்ருதிகள் இருக்கின்றன வென்றும் சொல்லப்படும்.]

## संध्या

(422)

ஸம்த்யா

ஸம்த்யா ரூபமாக இருப்பவள்.

1. ஸம்த்யா என்றால் நன்றாக தியானிக்கப்படுகிறவள் என்று அர்த்தம். அதாவது, அபேத பாவனையோடு உபாஸிக்கப்படுகிறவள் என்று தாத்பர்யம்.

2. ஸூர்யமண்டலத்திலிருக்கும் ப்ரம்ஹசைதன்யத்தை நாம் உபாஸிக்கும்போது அதோடு நாம் அபின்னமாக இருப்பதாக பாவனைசெய்து உபாஸிக்கவேண்டுமென்றும் அப்படி அபேதபாவனை செய்வதுதான் ஸம்தியா என்ற பதத்தின் அர்த்தம் என்றும் அப்படி உபாஸிக்கப்படும் ப்ரம்ஹமும் காயத்ரீயும் அபேதமென்றும் ஆகவே (ஸந்த்யா காலங்களில் நாம் உபாஸிக்கும்) காயத்ரீ ரூபிணியான அம்பாளும் பரப்ரம்ஹமும் ஒன்று என்றும் சொல்லப்படும்.

ஸம்த்யேதி ஸூர்யகம் ப்ரம்ஹ ஸம்த்யானுத் அவிபாகத: |
ப்ரம்ஹாத்யை: ஸகலைர் பூதை: ததம்சை: ஸச்சிதாத்மன: ||
தஸ்யா தாஸோऽஹமஸ்மீதி ஸோऽஹமஸ்மீதி யா மதி: |
பவேத் உபாஸகஸ்யேதி ஹ்யேவம் வேதவிதோ விது: ||'

(மஹா பாரதம்)

'ந பின்னும் ப்ரதிபத்யேத காயத்ரீம் ப்ரம்ஹணா ஸஹ |
ஸாஹமஸ்மீத்யுபாஸீத விதினா யேனகேனசித் ||' (வ்யாஸர்)

'ப்ரம்ஹாத்யாகாரபேதேன யா பின்னா கர்மஸாக்ஷிணீ |
பாஸ்வதீச்வர சக்தி: ஸா ஸம்த்யேத்யபிஹிதா புதை:

(பாரத்வாஜ ஸ்ம்ருதி)

'காயத்ரீ ஸசிராஸ்துரீயஸஹிதா ஸந்த்யாமயீத்யாகமை:
ஆக்யாதா த்ரிபுரே த்வமேவ மஹதாம் சர்மப்ரதா கர்மணாம்

(லகு ஸ்துதி)

3. பகல், இரவு, இவைகள் கூடும் ஸமயத்திற்கு ஸம்தி என்று பெயர். இந்த ஸமயங்களில் உபாஸிக்கப்படும் தேவதைக்கு

ஸம்த்யா என்று பெயர் என்பதாகவும் சொல்லப்படும். இந்த ஸம்த்யா தேவதையின் வரலாறு பின்வருமாறு.

4. ஒரு ஸமயம் ப்ரம்ஹாவானவர் நன்றாக த்யானம் செய்யும்போது ஓர் அழகிய கன்யகை உண்டானாள் என்றும் அம்மாதிரி உண்டானதினால் அவளுக்கு ஸம்த்யா என்பதாகப் பெயரென்றும் அவளே ஸம்த்யா காலங்களுக்கு தேவதையென்றும் அவள் வெகு கடுமையான தபஸ் செய்து தன் சரீரத்தை விட்டுவிட்டுப் பிறகு (வஸிஷ்டருடைய பத்னியான) அருந்ததியாக ஆனாளென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'ததா தன் மனஸோ ஜாதா சாருரூபா வராங்கனா |
நாம்னா ஸம்த்யேதி விக்யாதா ஸாயம் ஸம்த்யா ஜயந்திகா ||
ப்ரம்ஹணோ த்யாயதோ யஸ்மாத் ஸம்யக் ஜாதா வராங்கனா |
அத: ஸம்த்யேதி லோகேऽஸ்மின் அஸ்யா: க்யாதிர்பவிஷ்யதி ||'

(காளிகா புராணம்)

'யா ஸா ஸம்த்யா ப்ரம்ஹஸுதா மனோஜாதா புராபவத் |
தபஸ்தப்த்வா தனும் த்யக்த்வா ஸைவ பூதா ஹ்யருந்ததீ ||'

(பகவதீ புராணம்)

இப்பேர்ப்பட்ட ப்ரம்ஹாவினுடைய மானஸபுத்ரியாகிய ஸம்த்யாவோடு அம்பாள் அபின்னமாக இருப்பதை இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

5. எப்படி சரீரத்தில் இடா, பிங்களா, ஸுஷும்னா என்ற மூன்று நாடிகளும் சேர்ந்திருக்கின்றனவோ அம்மாதிரி மஹாகாளீ, மஹாலக்ஷ்மீ, ஏகவீரா என்ற மூவர்களும் சேர்ந்த ரூபமாக அம்பாளிருப்பதால் ஸம்த்யா என்று பெயர் என்பதாக ரேணுகா புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'இடைகாஸ்ய மஹாகாளீ மஹாலக்ஷ்மீஸ்து பிங்களா |
ஏகவீரா ஸுஷும்ணேயம் ஏவம் ஸம்த்யா த்ரயாத்மிகா ||'

6. 'ஏகவர்ஷா பவேத் ஸம்த்யா' என்று தௌம்யர் கன்யா ப்ரகரணத்தில் சொன்னபடி ஒருவயதுப் பெண்ணுக்கு ஸம்த்யா என்று பெயராகையால் அப்பேர்ப்பட்ட கன்யா ஸ்வரூபமாக அம்பாள் இருப்பதாக இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

## द्विजबृन्दनिषेविता

## த்விஜப்ருந்த நிஷேவிதா (423)

த்விஜர்களுடைய கூட்டங்களால் நன்றாக உபாஸிக்கப் பட்டவள்.

1. அதாவது ப்ரம்ஹ, க்ஷத்ரிய, வைச்யர்களாகிய இரு பிறப்பையுடையவர்களால் (நன்றாக த்யானம் செய்யப்பட்டு) உபாஸிக்கப்படுகிறவள் என்று அர்த்தம்.

2. ஸம்த்யா தேவதையை ஸதாகாலமும் த்விஜர்கள் உபாஸிக்கவேண்டுமென்பதாக ரேணுகாபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸம்த்யைகா ஸர்வதா தேவைர் த்விஜைர் வந்த்யா மஹாத்மபி: |
ஆஸனே சயனே யானே போஜனே ரேணுகைவ ஹி ||'

3. வ்யாஹ்ருதி:, ஸம்த்யா, த்விஜப்ருந்த நிஷேவிதா என்ற இம்மூன்று நாமங்களிலும் அவஸ்த்தா த்ரயத்தை (ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தியென்ற மூன்று அவஸ்த்தைகளை)சொன்னதாகவும் அர்த்தம் பண்ணலாம். வ்யாஹ்ருதியென்பதானது உச்சாரணரூபமான வாக்கின் வ்யாபாரமானதால் ஜாக்ரதாவஸ்த்தையைக் குறிக்கும். ஸம்த்யா என்பது ஜாக்ரத். ஸுஷுப்தி இந்த இரண்டு அவஸ்த்தைகளின் ஸம்தியில் (நடுவில்) ஏற்படுவதால் ஸ்வப்னாவஸ்த்தையைக் குறிக்கும். (இம்மாதிரியாகத்தான் 'ஸம்த்யே ஸ்ருஷ்டிராஹஹி' என்ற ப்ரம்ஹஸூத்ரத்திற்கு அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது.)

4. த்விஜ என்றால் பக்ஷிகளுக்குப் பெயர் [தாயின் வயற்றிலிருந்து ஒரு தடவை முட்டையாகப் பிறந்த பிறகு திரும்பவும் அந்த முட்டையிலிருந்து பிறப்பதால் (உண்டாவதால்) அது இரு பிறப்பையுடையதாக ஆகிறது.] ஜீவர்களை பக்ஷிகளுக்கு ஒப்பிடப்பட்டு அவர்கள் அம்பாளை அபேத பாவனையோடு நன்றாக உபாஸித்து லயமடைவதால் மூன்றாவதுநாமமானது ஸுஷுப்தி அவஸ்த்தையைக்குறிக்கும். எப்படி பக்ஷிகளானது அங்குமிங்கும் பறந்ததினால் ஏற்பட்ட ச்ரமத்தால் களைத்துப்போய் தன் இரக்கைகளை ஒடுக்கிக்கொண்டு கூட்டிற்குள் புகுமோ அம்மாதிரி ஜீவனுவன் ப்ரம்ஹத்தினிடம் லயமடைந்து தூங்கிக்கொண்டு ஒரு

கார்யமும் செய்ய விரும்பாமலும் ஒரு விதமான ஸ்வப்னம் அடையாமலுமிருக்கின்றான் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

'தத்யதா அஸ்மின்னாகாசே ச்யேனோ வா ஸுபர்ணோ வா
விபரிபத்ய ச்ராந்த: ஸம்ஹத்ய பக்ஷௌ ஸம்லயாயைவ த்ரியத
ஏவமேவாயம் புருஷ ஏதஸ்மா அந்தாய தாவதி
யத்ர ஸுப்தோ ந கம்சன காமம் காமயதே ந கம்சன
ஸ்வப்னம் பச்யதி |' (ப்ருஹதாரண்யகம்)

இவ்விதமான மூன்று அவஸ்த்தைகளிலும் அம்பாள் உபாஸிக்கப்படுவதை இந்த நாமங்களில் சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

## तत्त्वासना

## தத்வாஸனா (424)

தத்வங்களையே ஆஸனமாக உடையவள்.

1. ப்ருத்வீ முதல் சிவன் வரையிலுள்ள தத்வங்கள் இருபத்தைந்து என்று சிலரும் முப்பத்தாறு என்று சிலரும் சொல்வார்கள்.

2. தத்வங்களை (அஸ்யதி) தள்ளிவிடுகிறாள், அதாவது அவைகளுக்கு அதீதமாக இருக்கிறாள் என்று அர்த்தம் சொல்லலாம்.

## तत्

## தத் (425)

புத்தியை விபரிவர்தனம் (சுழல்வது) பண்ணும் சக்தியாக இருப்பவள்.

1. தத் என்ற பதத்திற்கு புத்தியை சுழலும்படி செய்யும் சக்தி என்று அர்த்தம். அம்பாள் ஸகல ஜனங்களுடைய புத்தியிலும் சுழலும்படி செய்துகொண்டிருப்பதினால் இந்தப்பெயர் ஏற்பட்டது. இதேமாதிரி விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் வரும் 'யத் தத் பதமனுத்தமம்' என்ற நாமங்களுக்கு ஆசார்யாளால் அர்த்தம் பண்ணப்பட்டிருக்கிறது.

2. ப்ரயோகத்தில் 'தஸ்யை நம:' என்று சொல்ல வேண்டும்.

त्वम्

த்வம் (426)

த்வம் (நீ) என்று சொல்லக்கூடியவள்.

1. [மேலே சொல்லிய சிவாத்யவனி பர்யந்தமான முப்பத்தாறு தத்வங்களில் கடைசி தத்வமான பரசிவ தத்வத்தை பராஸம்வித் என்றும் சொல்லப்படும். இது நிர்குணமானதும் நிஷ்களமானதுமான பரப்ரம்ஹம். இப்படி இது நிர்விகாரமாக இருந்தபோதிலும் ஸ்ருஷ்ட்யோன் முகமான சக்தியோடு கூடியதாகவும் இருக்கிறது. ஆகவே நிர்விகாரமான சிவதத்வமும் ஸ்ருஷ்டியின் விகாரங்களுக்குக் காரணபூதமான சக்தி தத்வமும் மேலே சொல்லிய பராஸம்வித்தில் அடங்கியிருக்கின்றன. இந்த இரண்டு தத்வங்களும் அபேதமாக அங்கே இருக்கின்றன. ஆகையால்தான் அம்பாளை பரப்ரம்ஹ ஸ்வரூபிணியாகச் சொல்லும்போது 'ப்ரகாச விமர்சஸாமரஸ்ய ரூபிணீ' என்று சொல்லப்பட்டிருக்கிறது. பரகாசரூபமாக இருப்பவர் காமேச்வரர். விமர்ச ரூபமாக இருப்பவள் காமேச்வரீ. இந்த ஸாமரஸ்யரூபமானது அஹம் (நான்), இதம் (இது) என்பவைகளும் ஏதத் (இது), தத் (அது) என்பவைகளும் வித்யாஸமில்லாமல் கலந்திருக்கும் நிர்விகல்பஞானமயமானது. அம்பாளுடைய இந்த ரூபத்தைத்தான் த்ரிசதியில் 'ஏதத் தத் இத்யனிர்தேச்யா' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

2. இவ்வாறு அனன்யோன்முகமான அஹம் ப்ரத்யய ரூபத்தை முந்திய நாமத்திலும் விமர்சரூபத்தை இந்த நாமத்திலும் சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்,

3. இந்த 'தத்வமயீ' என்ற பதமானது திரும்பவும் 907-வது நாமமாக வருவதை உத்தேசித்து இங்கே அதை தத், த்வம், அயீ என்று மூன்று நாமங்களாகப் பிரித்து அர்த்தம் செய்யப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது.

4. ப்ரயோகத்தில் இந்த நாமத்தை 'தஸ்யை நம:' என்று சொல்லவேண்டும்.

## अयी

## அயீ (427)

அயீ என்று சொல்லப்படுகிறவள்.

1. இந்த பதமானது ஒருவரை ப்ரியத்தோடு (கோமளமாக) பேசும்போது (அழைக்கும்போது) சொல்லப்படும் பதம். ஒருவரை வேண்டிக்கொள்ளும்போதும் சொல்லப்படும். அம்பாள் ஸகலலோகஜனனியாகையால் அவளுடைய குழந்தைகளாகிய நாம் அம்பாளை அயீ என்று சொல்வது பொருத்தமாகும்.

2. அய: என்றால் (சுபத்தைக்கொடுக்கும்) அத்ருஷ்டம் என்று அர்த்தம். அம்பாள் அந்த ரூபமாக இருப்பதால் அயீ என்று பெயர் என்பதாகவும் சொல்லப்படும்,

3. ப்ரயோகத்தில் இந்த நாமத்தை 'அய்யை நம:' என்று சொல்லவேண்டும்.

## पञ्चकोशान्तरस्थिता

## பஞ்சகோசாந்தரஸ்த்திதா (428)

பஞ்சகோசங்களுக்கு நடுவிலிருப்பவள்.

1. இந்த பஞ்சகோசங்களென்பவைகள் பஞ்சபஞ்சிகா பூஜனத்தில் சொல்லப்பட்ட மந்த்ரவிசேஷங்கள். இந்த ஐந்து பஞ்சிகைகள் பஞ்சகோசங்கள், பஞ்ச லக்ஷ்மிகள், பஞ்ச கல்பலதைகள், பஞ்ச காமதேனுக்கள், பஞ்ச ரத்னங்கள். பஞ்ச கோசங்களின் பெயர்கள்.

'ஸ்ரீ வித்யா ச பரம்ஜ்யோதி: பரா நிஷ்களசாம்பவீ |
அஜபாமாத்ருகா சேதி பஞ்சகோசா: ப்ரகீர்திதா: ||'

இதைப்பற்றிய மற்ற விபரங்களை ஞானார்ணவத்தில் பார்க்கவும்.

2. இவ்விதமான பஞ்சகோசங்களென்கிற மந்த்ர விசேஷங்களோடு அபின்னமாக இருக்கும் தேவதைகளை ஸ்ரீ சக்ரத்தில் அர்ச்சிக்கும்போது பரம்ஜ்யோதி, பரா, நிஷ்களசாம்பவீ, அஜபா என்ற நாலு தேவதைகள் வெளியிலிருக்கும் ஸ்ருஷ்டி

முதலான சக்ரங்களில் வ்யஷ்டி, ஸமஷ்டி பேதத்தால் பூஜிக்கப் படுகிறார்கள். ஸ்ரீ வித்யாவானவள் ஸ்ரீசக்ரத்தின் மத்தியிலிருக் கும் பிந்து என்பதாகச் சொல்லப்படும். ஆகவே மேலே சொல்லி யிருக்கும் ஐந்து கோசங்களின் நடுவில் பிந்து ஸ்த்தானத்திலிருக் கும் ஸ்ரீவித்யா ரூபிணியாக அம்பாளிருப்பதால் இம்மாதிரி பெயர் ஏற்பட்டது.

3. அல்லது—நம்முடைய சரீரத்தில் அன்னமய, ப்ராண மய, மனோமய, விக்ஞானமய, ஆனந்தமயங்களென்கிற ஐந்து கோசங்களிருப்பதாகச் சொல்லப்படும். இவைகளில் அன்ன மயம் ப்ராணமயத்திலும், ப்ராணமயம் மனோமயத்திலும் இப்படி அதது அதற்கு மேற்பட்டதைச் சூழ்ந்ததாக (ஒன்றுக்குள் ஒன் ருக) இருப்பவை. ஆகவே மத்தியிலிருப்பது ஆனந்தமய கோசம். இதோடு அபேதமாக அம்பாளிருப்பதால் பஞ்ச கோசாந்தரஸ்த்திதா என்று பெயர்.

4. மேலே சொல்லப்பட்டபடி ஆனந்தமயகோசமே ப்ரம்ஹமென்று ஆனந்தமயாதிகரணத்தில் வ்ருத்திகாரரால் சொல்லப்பட்டிருக்கிறது. ஆசார்யாளோ, ஆனந்தமயகோச மானது சோதிக்கப்படவேண்டிய கோசங்களில் சேர்த்துச் சொல்லப்பட்டிருப்பதால் அசுத்தமானதென்று ஏற்படுகிறதாக வும் ஆகவே அது ப்ரம்ஹம் அல்லவென்றும் ப்ரம்ஹமானது அதினின்றும் வேறானதென்பதாகவும் எடுத்துக்காட்டியிருக்கி றார்கள். இந்த அபிப்ராயத்தின்படி ஆனந்தமயகோசமானது பராகாசாத்மகமான ப்ரம்ஹத்தினுடைய சரீரமாக இருக்கும் சித்சக்தியின் ரூபமாக இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இம்மாதிரியேதான் ஸ்ரீ கண்டபாஷ்யத்திலும் அதின் டீகை முதலானவைகளிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

5. கடைசியில் சொல்லப்பட்ட அபிப்ராயத்தின்படி இந்த நாமத்திற்கு 'ஐந்து கோசங்களுக்கும் நடுவிலிருப்பவள்' என்று அர்த்தம் சொல்லவேண்டும். அதாவது ஆனந்தமயகோசத் தைத் தவிர்த்ததாகவும் அதை ஸம்பூர்ணமாகச் செய்துகொண் டும் ஸர்வஸாக்ஷியாகவும் ஸத்ய, ஞான ரூபமாகவும் ப்ரம்ஹம் இருக்கிறதென்று தாத்பர்யம்.

'ததானந்தமயச்சாபி ப்ரம்ஹணான்யேன ஸாக்ஷிணு |
ஸர்வோத்தரேண ஸம்பூர்ணே ப்ரம்ஹ நான்யேன கேனசித் ||
யதிதம் ப்ரம்ஹ புச்சாக்யம் ஸத்யக்ஞானத்வயாத்மகம் |
ஸரஸ: ஸர்வதா ஸாக்ஷாத் நான்யதா ஸுரபுங்கவா: ||'

(ப்ரம்ஹ கீதை)

இவ்விதமான ப்ரம்ஹஸ்வரூபிணியாக அம்பாள் இருப்பதை க்ரோதபட்டாரக (துர்வாஸ)ரால் சொல்லப்பட்டிருக்கிறது.

'அன்னப்ராணமயை: ப்ரபோத பரமானந்தை: சிர: பக்ஷயுக்
புச்சாத்ம ப்ரகடைர் மஹோபநிஷதாம் வாக்யை: ப்ரஸித்திக்ருத: |
கோசை: பஞ்சபிரேபிரேவ பவதீம் எதத் ப்ரலீனமிதி
ஜ்யோதி: ப்ரஜ்வலதுஜ்வலாத்மசபலாம் யோ வேத ஸ ப்ரம்ஹவித் ||'

## निःसीममहिमा

## நிஸ்ஸீம மஹிமா (429)

எல்லைகடந்த மஹிமையோடு கூடியவள்.

1. ப்ரயோகத்தில் இந்த நாமாவை நிஸ்ஸீம மஹிம்னே நம: என்றும் நிஸ்ஸீம மஹிமாயை நம: என்றும் சொல்லலாம்.

## नित्ययौवना

## நித்யயௌவனா (430)

காலத்ரயத்திலும் யௌவனத்தோடு கூடியவள்.

## मदशालिनी

## மதசாலினீ (431)

மதத்தால் சோபிக்கிறவள்.

1. இதர விஷயங்களுடைய ஒட்டுதலில்லாமலும் ஆனந்த மொன்றையே விஷயமாக உடையதுமான நிலைக்கு மதம் என்று பெயர்.

## मदघूर्णितरक्ताक्षी

## மதகூர்ணிதரக்தாக்ஷீ (432)

மதத்தால் சுற்றிக்கொண்டிருக்கும் சிவந்த கண்களையுடையவள்.

1. பாஹ்ய விஷயங்களில் விமுகமாக இருப்பதற்கு கூர்ண னம் என்று பெயர்.

**मदपाटलगण्डभूः** (433)

**மதபாடலகண்டபூ:**

மதத்தினால் வெண்சிவப்பாக இருக்கும் கன்னங்களையுடையவள்.

1. மதமென்றால் மத்யத்திற்கும் பெயர். அதைப்பானம் செய்வதினால் பாடலமான கன்னங்களையுடையவள் என்று அர்த்தம்.

2. மதமென்றால் கஸ்தூரிக்குப் பெயர். பாடலமென்றால் பாதிரிப்பூவுக்குப் பெயர். ஸ்திரீகள் தங்கள் காதுகளில் புஷ்பங்களை அலங்காரமாக தரிப்பது வழக்கம். அவைகளுக்கு கர்ணவதம்ஸம் என்று பெயர். சில வேளைகளில் புஷ்பத்திற்குப் பதிலாக வாஸனைத்ரவ்யங்களால் புஷ்பம் மாதிரி சித்ரம் எழுதிக் கொள்வதுமுண்டு.

3. கண்டப்ரதேசம் என்பதால் கன்னம், பொட்டு எல்லாவற்றையும் சேர்த்துச் சொல்லப்படும். ஆகவே கஸ்தூரியினால் சித்ரிக்கப்பட்ட பாதிரிபுஷ்பங்களையுடைய கண்டப்ரதேசங்களையுடையவள் என்று இந்த நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம்.

**चन्दनद्रवदिग्धाङ्गी** (434)

**சந்தனத்ரவதிக்தாங்கா**

சந்தனத்தினுடைய த்ரவத்தால் (அரைத்த சந்தனத்தால்) பூசப்பட்ட அங்கங்களையுடையவள்.

**चाम्पेयकुसुमप्रिया** (435)

**சாம்பேய குஸுமப்ரியா**

சம்பக புஷ்பத்தில் ப்ரியமுடையவள்.

**कुशला** (436)

**குசலா**

ஸாமர்த்தியசாலியாக இருப்பவள்.

1. அம்பாள் ஸ்ருஷ்டி முதலியவைகளைச் செய்வதில் ஸாமர்த்யத்தோடு இருப்பதால் குசலா என்று சொன்னது.

2. (குசம்) ஜலத்தை (லாதி) பெற்றுக்கொள்ளுகிருள் என்பதினுல் குசலா என்று பெயர் என்பதாகவும் சொல்லலாம்.

3. (குத்ஸித) வெறுக்கப்பட்ட (சல:) சந்த்ரனை தன்முன்னுக உடையவள் என்றும் அர்த்தம் உண்டு. அதாவது அம்பாளுடைய காந்தியின் அதிசயத்தினுல் சந்த்ரன்கூட வெறுக்கும்படி யிருக்கிருன் என்று தாத்பர்யம்.

## कोमलाकारा

## கோமளாகாரா (437)

ஸுகுமாரமான அவயவ வின்யாஸத்தையுடையுவள் (அழகான அங்கங்களையுடையவள்.)

## कुरुकुल्ला

## குருகுல்லா (438)

குருகுல்லா என்ற தேவியின் ரூபத்தோடு கூடியவள்.

1. குருகுல்லா தேவியானவள் ஸ்ரீ நகரத்தில் அஹம்காரம், சித்தம் என்ற இரண்டு ப்ராகாரங்களுக்கு நடுவில் விமர்சமயமாகிற வாபியில் அதிஷ்டானமாக இருப்பவள்.

இந்த தேவியைப்பற்றி,

'குருவிந்த தரணி நிலயாம் குலாசலஸ்பர்தி குசநமன் மத்யாம் |
குங்கும விலிப்தகாத்ரீம் குருகுல்லாம் மனஸி குர்மஹே ஸததம் ||'

என்பதாக லலிதாஸ்தவரத்னத்தில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. தந்த்ர ராஜத்திலும் இருபத்திரண்டாவது படலத்தில் இந்த தேவியைப்பற்றி சொல்லப்பட்டிருக்கிறது.

2. பாவனேபநிஷத்திலும்,

'வாராஹி பித்ருரூபா குருகுல்லா பலிதேவதா மாதா |'

என்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது தேஹத்திலிருக்கும் இந்த்ரியங்கள், புத்தி முதலியவைகளில் ஸம்பந்தப்பட்டிருக்கிறவையும் தகப்பனுர், தாயார் என்னும்படியான அம்சங்களோடு கூடியவையுமான அஸ்தி முதலியவை, மாம்ஸம் முதலியவை இவைகளை முறையே வாராஹீயாகவும் குருகுல்லாவாகவும் பாவனை

செய்யவேண்டும். இவர்களில் வாராஹீ (ஸ்த்ரீ தேவதையாக இருந்தாலும் முகம் புருஷரூபமாக இருப்பதால்) பிதா என்னும் குருகுல்லாவை மாதா என்றும் சொல்லப்படும். இதின் அர்த் தங்களையும் மற்ற விபரங்களையும் பாவனோபநிஷத்திற்கு பாஸ்கர ராயர் எழுதிய பாஷ்யம், ப்ரயோகம் இவைகளில் பார்க்கவும்.

## कुलेश्वरी

## குலேச்வரீ (439)

குலத்திற்கு ஈச்வரியாக இருப்பவள்.

1. ஒரே ஜாதியைச் சேர்ந்த மாத்ருமானமேயங்களின் மூஸஹத்தை குலம் என்று சொல்லப்படும். இதைப்பற்றி ஏற் கனவே வந்த 'குலாம்ருதைகரஸிகா' முதலிய நாமங்களில் சொல்லியிருப்பதைப் பார்க்கவும்.

## कुलकुण्डालया

## குலகுண்டாலயா (440)

குலகுண்டமெனப்படும் இடத்தை ஆலயமாக உடையவள்.

1. தாமரையின் நடுவிலிருக்கும் கந்தத்தில் (பொட்டில்) ஒரு சிறு த்வாரம் இருப்பதுபோல் மூலாதாரபத்மத்திலும் நடு வில் த்வாரம்போன்றதாய் இருக்கும். பிந்துவை குலகுண்டம் என்று சொல்லப்படும். குண்டலினீ சக்தியானவள் அந்த கந் தத்தைச்சுற்றி தன் உடலை மூன்றரைச் சுற்றாகச் சுற்றிக்கொண்டு தலையை மேலே சொல்லிய குலகுண்டமென்ற த்வாரத்தில் வைத் துக்கொண்டு எப்போதும் உறங்கிக்கொண்டிருப்பதாகச் சொல் லப்படும். இதையே ஆசார்யாளும் 'ஸௌந்தர்ய லஹரீ'யில்,

> 'அவாப்ய ஸ்வாம் பூமிம் புஜகநிபம் அத்யுஷ்ட வலயம்
> ஸ்வமாத்மானம் க்ருத்வா ஸ்வபிஷி குலகுண்டே குஹரிணி ॥'

என்று சொல்லியிருக்கிறார்கள்.

2. ஆலயமென்றால் பூராவாக (ஸுஷுப்திபோல்) அடை யும் இடம், என்று அர்த்தம். குண்டலினீ சக்தியானவள் குல குண்டத்தில் உறங்கிக்கொண்டிருப்பதாக மேலே சொல்லியிருப்ப தால் அது அவளுக்கு ஆலயமாக இருக்கிறது.

**कौलमार्गतत्परसेविता**

**கௌலமார்க தத்பர ஸேவிதா (441)**

கௌலமார்கத்தில் தத்பரர்களாயிருப்பவர்களால் ஸேவிக்கப்பட்டவள்.

1. அவரவர்களுடைய (குல) வம்சபரம்பரையாக வந்த வழியை கௌலமார்கம் என்று சொல்லப்படும். இப்பேர்ப்பட்ட பரம்பராக்ரமமாக வந்த மார்கமாகவே அனுஷ்டிப்பதில் முயற்சியுடையவர்களால் ஸேவிக்கப்பட்டவள் என்று இந்த நாமத்தின் தாத்பர்யம்.

'யஸ்ய யஸ்ய ஹி யா தேவீ குலமார்கேண ஸம்ஸ்த்திதா |
தேன தேன ச ஸா பூஜ்யா பலிகந்தானுலேபனை: ||'
'நைவேத்யைர் விவிதைச்சைவ பூஜயேத் குலமார்கத: |'

2. ஸ்ரீவித்யையை உபாஸிப்பதில் ஸமயமதம், கௌலமதம், மிச்ரமதம் என்பதாக மூன்று மதங்கள் உண்டு. முதலாவது மதம் சுக, வஸிஷ்ட, ஸனக, ஸனந்தன, ஸனத்குமார ஸம்ஹிதைகளாகிற சுபாகமபஞ்சகத்தில் சொல்லப்பட்டு வைதிகமான (வேதத்தில் சொல்லப்பட்டதான) மார்கத்தைக்கொண்டது. (இதையேதான் ஸமயாசாரமென்றும் சொல்வது) மிச்ரமதமென்பது சந்த்ரகலா, ஜ்யோத்ஸ்னவதீ, கலாநிதி, குலார்ணவம், குலேச்வரீ, புவனேச்வரீ, பார்ஹஸ்பத்யம், தூர்வாஸமதமென்பதான தந்த்ராஷ்டகத்தில் சொல்லப்பட்டது. கௌலமதமென்பது மேலே சொல்லிய தந்த்ரங்களைத் தவிற இதர (அறுபத்திநாலு) தந்த்ரங்களில் சொல்லப்படுகிறது. (ஸமயமதம், கௌலமதம் இவையிரண்டையும் அனுஸரித்துக் கலந்திருப்பதால் மிச்ரமதம் என்று பெயர் ஏற்பட்டது.)

3. இம் மூன்று மதங்களும் அதிகாரி பேதங்களையொட்டி ஏற்பட்டவை. வைதிகர்களால் (த்விஜர்களால்) ஆதரிக்கப்படவேண்டியது ஸமயமதம். மிச்ரமதத்திற்கு மூன்று வர்ணத்தார்களாகிய த்விஜர்களும், சூத்ரர்களும் அதிகாரிகள். இந்த மதத்தில், த்விஜர்களை உத்தேசித்து ஸவ்யமார்கத்தால் (ப்ரதக்ஷிணக்ரமமாக) ஸகல அனுஷ்டானங்களும் சொல்லப்பட்டிருப்பதோடு சூத்ரர்களையும் மிச்ரஜாதிகளையும் உத்தேசித்து அபஸவ்யமார்கமாக வாமாசாரமும் சொல்லப்பட்டிருக்கிறது.

மேலே சொல்லிய அறுபத்திநாலு தந்த்ரங்களில் காணப்படும் மார்கமான கௌலமதத்திற்கு சூத்ரர்கள் முதலானவர்கள் தான் அதிகாரிகள்.

4. இப்மாதிரியான மதபேதங்களைப்பற்றி விசேஷமான ஆதாரங்களுடன் விஸ்தாரமாகச் சொல்லியிருப்பதை 'ஸௌந்தர்ய லஹரீ'க்கு லக்ஷ்மீதரர் எழுதிய வ்யாக்யானத்தில் பார்க்கவும்.

## कुमारगणनाथाम्बा

## குமார கணநாதாம்பா (442)

குமாரன், கணநாதன் இவர்களுக்கு தாயாராக இருப்பவள்.

1. அதாவது, ஸ்கந்தர், கஜானனர் இவர்களுடைய ஜனனீ என்று அர்த்தம்.

2. (மாறனை) மன்மதனைப் பழித்த ஸௌந்தர்யத்தோடு கூடியவராகையால் ஸுப்ரம்ஹண்ய ஸ்வாமிக்கு குமாரன் என்று பெயர் ஏற்பட்டது.

3. (குத்ஸிதமான) வெறுக்கத்தகுந்த (மாறகணங்கள்) ஸ்மர விகாரங்களுடைய ஸமூஹங்களின் நாதர்களை, அதாவது விடபுருஷர்களை (கட்டுகிறவள்) கண்டிக்கிறவளாகையால் அம்பாளுக்கு குமாரகணநாதாம்பா என்று பெயர்.

4. குமாரரை அஹம்காரத்திற்கு தேவதையாகச் சொல்லப்படும்.

'புருஷோ விஷ்ணுரித்யுக்த: சிவோ வா நாம நாமத: |
அவ்யக்தம் து உமாதேவீ ஶ்ரீர்வா பத்மநிபேக்ஷணா |
தத் ஸம்யோகாதஹம்கார: ஸ ச ஸேனாபதிர் குஹ: ||'

(வராஹ புராணம்)

அதாவது, சிவன் (அல்லது விஷ்ணு) புருஷனென்றும் உமாதேவி (அல்லது ஸ்ரீதேவி) அவ்யக்தமென்றும் இவ்விருவர்களுடைய சேர்க்கையால் உண்டான அஹம்காரமானது ஸேனாதிபதியான குஹன் என்று சொல்லப்பட்டது.

5. ஆகவே, அஹம்காரத்தினுடைய கணங்களுக்கு நாதர்களாயிருப்பவர்களை (விசேஷமான மமதையுடையவர்களை)

அம்பாள் கட்டுப்படுத்தி கண்டிப்பதால் இந்தப் பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

**तुष्टिः**

**துஷ்டி:** (443)

த்ருப்தியோடிருப்பது என்பதை ரூபமாக உடையவள்.

1. இந்த நாமமுள்பட இனிவரும் ஏழு நாமங்களில் துஷ்டி முதலான குணங்கள் சொல்லப்பட்டு அவைகள் அம்பாளுடைய ஸ்வரூபமென்பதாகச் சொல்லப்படுகிறது. அவை ஸந்தோஷம், செழுமை, ஞானம், தைர்யம், சாந்தி, மங்களத்தோடிருப்பது, காந்தி என்றவை.

2. இதேமாதிரி தேவீமாஹாத்ம்யத்திலும்,

'த்வம் ஶ்ரீஸ்த்வம் ஈச்வரீ த்வம் ஹ்ரீ: த்வம் புத்திர்போதலக்ஷணா |
லஜ்ஜா புஷ்டிஸ்ததா துஷ்டிஸ்த்வம் சாந்தி: க்ஷாந்திரேவ ச ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதையே தேவீபாகவதத்திலும்,

'புத்தி: கீர்திர்த்ருதிர்லக்ஷ்மீ: சக்தி: ச்ரத்தா மதி: ஸ்ம்ருதி: |
ஸர்வேஷாம் ப்ராணினும் ஸாம்பா ப்ரத்யக்ஷம் தன்னிதர்சனம் ||'

என்று சொல்லப்பட்டது.

3. இவ்விதமான பெயர்களோடுகூடவே அம்பாள் சில க்ஷேத்ரங்களிலிருப்பதாக பத்மபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'துஷ்டிர் வஸ்த்ரேச்வரே ததா |
தேவதாருவனே புஷ்டி: த்ருதி: பிண்டாரக க்ஷேத்ரே |'

4. அம்பாள் துஷ்டிரூபமாக இருப்பதை,

'யா தேவீ ஸர்வபூதேஷு துஷ்டிரூபேண ஸம்ஸ்த்திதா |
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோநம: ||'

என்று தேவீ மாஹாத்ம்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதே மாதிரி ப்ரமசிவனைக் குறித்து மல்லாரி மாஹாத்ம்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'யோ தேவ: ஸர்வபூதேஷு தோஷரூபேண ஸம்ஸ்த்தித: |
நமஸ்தஸ்மை நமஸ்தஸ்மை நமஸ்தஸ்மை நமோநம: ||'

**पुष्टिः**

**புஷ்டி:** (444)

செழுமையாக (ஸம்ருத்தியாக) இருப்பதையே ரூபமாக உடையவள்.

**मतिः**

**மதி:** (445)

மதி (புத்தி, அறிவு) ரூபமாக இருப்பவள்.

1. போகங்களின் ஸம்பந்தத்தோடிருக்கும் புருஷனுக்கு அறிவானது ஒரு அளவுகோலாக இருந்துகொண்டு பகுத்தறியும் சக்தியைக் கொடுப்பதால் அதற்கு மதி என்று பெயரென்பதாக வாயுபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'பிபர்தி மானம் மனுதே விபாகம் மன்யதேऽபி ச ||
புருஷோ போகஸம்பத்தஸ்தேன சாஸௌ மதி: ஸ்ம்ருதா ||'

2. அம்பாள் மதிரூபமாக இருப்பதை ஸூதஸம்ஹிதை யிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

'யானு பூதிருதிதா மதி: பரா
வேதமான நிரதா சுபாவஹா |
தாமதீவ ஸுகதாம் வயம் சிவாம்
கேசவாதிஜன ஸேவிதாம் நும: ||

**धृतिः**

**த்ருதி:** (446)

தைர்யரூபமாக இருப்பவள்.

1. த்ருதியென்பது நிலைத்திருப்பது, உறுதி, தைர்யம் முதலியவைகளைக் குறிக்கும்.

**शान्तिः**

**சாந்தி:** (447)

சாந்தி (அமைதி) என்பதை தன் ரூபமாக உடையவள்.

1. வாயுவினுடைய ஒரு கலாவிசேஷத்திற்கும் சாந்தியென்று பெயர். இது மல, மாயா, விகாரங்களால் தத்தளித்துக் கொண்டிருக்கும் மனுஷ்யனுக்கு சாந்தியைக் கொடுத்து

அதிகாரத்திற்கு ஆஸ்பதமாக இருப்பதாய் சைவாகமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'மலமாயா விகாரௌக சாந்தி: பும்ஸ: புனர்யயா ||
ஸா கலா சாந்திரித்யுக்தா ஸாதிகாராஸ்பதம் பதம் ||'

மூக்கின் நுனியிலிருந்து பதினைந்து விரக்கடைக்கு அப்பால் ஷோடசமான கலையிருக்கிறதென்றும் அங்கே ஜீவனனது பரிசுத்தப்படுகிறதென்றும் அவ்விதமான கலையானது சாந்தியென்று பெயரையுடையது என்பதாகவும் ப்ருஹத்பாராசர ஸ்ம்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

'தச பஞ்சாங்குலவ்யாப்தம் நாஸிகாயா பஹி: ஸ்த்திதம் |
ஜீவோ யத்ர விசுத்யேத ஸா கலா ஷோடசீ ஸ்ம்ருதா ||
... ... ... ... ... ஸா ச சாந்தி: ப்ரகீர்த்திதா ||'

3. அம்பாள் சாந்திரூபிணியாக இருப்பதை,

'யா தேவீ ஸர்வபூதேஷு சாந்திரூபணே ஸம்ஸ்த்திதா |
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோநம: ||

என்பதாக தேவீமாஹாத்ம்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## स्वस्तिमती

## ஸ்வஸ்திமதீ (448)

உண்மையாக (அல்லது சோபனமாக) இருப்பவள்.

1. (ஸு-ஷ்டு) ஸரியாக, அழகாக (அஸ்தி:) ஸத்தா, இருக்கை, நிலை, இதையுடையவள் ஸ்வஸ்திமதீ.

2. எக்காலத்திலும் அழிவில்லாமலிருக்கிறபடியால் அம்பாளிருப்பதானது பாரமார்த்திகமான (ஸத்தா) இருக்கையாகச் சொல்லப்படும்.

(ஸத்தா-இருக்கை-யானது ப்ராதிபாஸிகமென்றும், வ்யாவஹாரிகமென்றும், பாரமார்த்திகமென்றும், மூன்று விதமாகச் சொல்லப்படும். பழுதைப்பார்த்து அதைப் பாம்பு என்று நினைக்கும்போது அவ்விதமான பாம்பினுடைய ஸத்தாவானது ப்ராதிபாஸிகம். ஒருபோதும் இல்லாததான வஸ்துவை இருப்பதாக நினைப்பதனுல் ஏற்படுவது. பாம்பு அல்ல, பழுதைதான் என்று தெரிந்தவுடன் அந்தப்பாம்பு மறைந்துவிடுகிறது. இதற்கடுத்தபடி ஸாதாரணமாக ப்ரபஞ்சத்தில் நாம் வ்யவஹாரம்

செய்யும்போது தெரியும் வஸ்துக்களுடைய ஸத்தாவானது வ்யாவஹாரிகம். இதுவும் உண்மையானதல்ல. இருப்பது போல் மிகவும் தெளிவாகத் தோன்றினாலும் வாஸ்தவமாக அவை முந்தியில்லாமலும் பிந்தி அழிந்துபோவதாலும் அவை களின் ஸத்தாவும் முந்தியதுமாதிரிதான். பரப்ரம்ஹம் ஒன்றே காலத்ரயத்திலும் இருப்பதால் அதினுடைய ஸத்தாவானது பார மார்த்திகம் என்று சொல்லப்படும். இவ்விதமாக ஸத்தாவை மூன்று விதமாகச் சொல்வதானது அத்வைத வேதாந்தத்தின் முக்யமான கொள்கையால் அதைப்பற்றிய விபரங்களை இங்கு எழுதுவது ஸாத்யமானதல்ல).

3. ஸ்வஸ்தியென்றால் அழிவில்லாதது என்று அர்த்தம்.

'ஸ்வஸ்தீத்யவிநாசி நாம' ... ... ... (யாஸ்கர்)

4. ஸ்வஸ்தி என்ற பதமானது ஆசீர்வாதம், க்ஷேமம், நிஷ்பாபம் (பாபமில்லாமை), புண்யம், மங்களம் இவைகளைக் குறிக்கும்போது சொல்லப்படும்.

## कान्तिः

## காந்தி: (449)

காந்தி ரூபமாக இருப்பவள்.

1. அம்பாள் காந்திரூபமாக இருப்பதை தேவீமாஹாத்ம்யத்தில்,

'யா தேவீ ஸர்வபூதேஷு காந்திரூபேண ஸம்ஸ்த்திதா |
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோநம: ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

2. பரப்ரம்ஹத்தினுடைய காந்தியினால் தான் ஸூர்ய சந்த்ராதிகளெல்லாரும் ப்ரகாசிக்கிறார்களென்பதாக ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர தாரகம்
நேமா வித்யுதோ பாந்தி குதோऽயமக்னி: |
தமேவ பாந்தமனுபாதி ஸர்வம்
தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி ||'

3. காந்தியென்ற பதத்தினால் இச்சா சக்தியைக் குறிப்பிட்டதாகச் சொல்லப்படும்.

(மேலே சொல்லப்பட்ட துஷ்டி முதலிய அம்சங்கள் யாரிடம் காணப்பட்டாலும் அவர்கள் அம்பாளுடைய க்ருபைக்கு விசேஷ பாத்ரர்களாக இருக்கிறார்கள் என்பதை நாம் இதிலிருந்து அறிந்து கொள்ளவேண்டிய முக்யமான விஷயமாக இருக்கிறது)

## नन्दिनी

## நந்தினீ (450)

நந்த (கோப)ருடைய பெண்ணாயிருப்பவள்.

1. மஹாமாயை நந்தகோபருக்குப் பெண்ணாகப் பிறந்த வ்ருத்தாந்தம் பாகவதம் தசமஸ்கந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

2. காமதேனுவின் வம்சத்திலுதித்த ஒரு பசுவுக்கும், கங்கைக்கும் நந்தினீ என்று பெயர். அந்த ரூபமாக அம்பாள் இருப்பதை இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம். (நந்தினிக்கு திலீபன் சுச்ரூஷை செய்ததைப்பற்றி ரகுவம்சத்தில் சொல்லப்பட்டிருப்பது பார்க்கத்தகுந்தது.)

## विघ्ननाशिनी

## விக்னநாசினீ (451)

இடையூறுகளை நாசம் செய்பவள்.

1. அதாவது வித்யைக்கு இடையூறுகளாயிருப்பவைகளை போக்கடிக்கும் ஸாமர்த்யமுடையவள் என்று அர்த்தம்.

## तेजोवती

## தேஜோவதீ (452)

தேஜஸ்ஸை உடையவள்.

1. ஆதித்யன் முதலான தேஜோவான்களுக்கெல்லாம் பரப்ரம்ஹமே ஆதாரமென்பதாக சொல்லப்பட்டிருக்கிறது.

'ஏதஸ்மின் கல்வக்ஷரே கார்கி
ஸூர்யாசந்த்ரமஸௌ வித்ருதௌ திஷ்டத:' || (ச்ருதி)

त्रिनयना (453)

த்ரிநயனா

மூன்று நேத்ரங்களையுடையவள்.

1. இந்த மூன்று நேத்ரங்கள் ஸோம, ஸூர்ய, அக்னி என்பதாக சொல்லப்படும்.

2. 'வௌஷட்' என்ற சப்தத்திற்கு 'த்ரிநயனா' என்று அடையாளம் (ஸம்ஜ்ஞை) என்பதாக நாமபாராயணத்தில் சொல்லப்படுவதால் அந்த ரூபமாக அம்பாள் இருப்பதாக இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

3. நயனமென்றால் அழைத்துப்போவது. ஒரு வஸ்துவைப் பற்றியோ ஒரு விஷயத்தைப்பற்றியோ நமக்கு அறிவு ஏற்படுத்துவதற்கு காரணமாக இருப்பதை ப்ரமாணம் என்று சொல்வது வழக்கம். இவ்விதம் நமது புத்தியை அழைத்துப்போய் முடிவோடு சேர்ப்பதால் ப்ரமாணங்களையே நயனங்கள் என்று சொல்வதுண்டு. இவ்விதமான ப்ரமாணங்கள் ருத்ரனுடைய கண்கள்போல் மூன்று என்று சாண்டில்ய ஸூத்ரத்தில்:

'த்ரீண்யேஷாம் நேத்ராணி சப்தலிங்காக்ஷபேதாத் ருத்ரவத்'

என்று சொல்லும்போது அவைகளை நேத்ரங்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ப்ரமாணங்கள் மூன்றுவகை-சப்தம், அனுமானம், ப்ரத்யக்ஷம். சப்தம் என்பதினால் ச்ரவணமும், அனுமானம் என்பதினால் மனனமும், ப்ரத்யக்ஷம் என்பதினால் நிதித்யாஸனமும் குறிக்கப்பட்டிருக்கின்றன.

'ப்ரத்யக்ஷம் சானுமானம் ச சாஸ்த்ரம் விவிதாகமம் |
த்ரயம் ஸுவிதிதம் கார்யம் தர்மசுத்திமபீப்ஸதா ||'

(மனு ஸ்ம்ருதி)

'த்ரிவிதம் ப்ரமாணம் |' (ஸாம்க்ய ஸமாஸ ஸூத்ரம்)

'ப்ரத்யக்ஷானுமானாகமா: ப்ரமாணானி |' (யோக ஸூத்ரம்)

4. மேலே சொல்லிய மூன்றுவிதமான ப்ரமாணங்களையுடையவள் (அதாவது, அவைகளால் அறியப்படுகிறவள்) த்ரிநயனா.

5. அல்லது மூன்று விதமான மார்க்கங்களில் (அதிகாரிகளுக்குத் தகுந்தபடி) அழைத்துப்போவதால் த்ரிநயனா

என்று பெயர். அம்பாளுடைய உபாஸனையில் தக்ஷிணமார்க்கம், உத்தரமார்க்கம், ப்ரம்ஹமார்க்கம் என்று மூன்று வழிகளிருப்ப தாக மேலே விபரமாகச் சொல்லப்படுகின்றன. அவைகளில் தன் பக்தர்களை அழைத்துப்போவதால் அம்பாளுக்கு இந்தப் பெயர் ஏற்பட்டது.

'தக்ஷிணம் சோத்தரம் லோகம் ததா ப்ரம்ஹாயனம் பரம் |
நயம் ஸன்மார்கவர்கம் ச நேத்ரீ த்ரிநயனா மதா ||' (தேவீ புராணம்)

## लोलाक्षी कामरूपिणी

## லோலாக்ஷீ காமரூபிணீ (454)

ஸ்திரீகளுடைய காமமாகிற ரூபத்தையுடையவள்.

1. இதே மாதிரியான பாவத்தைப் பற்றி இன்னொருவித மாக ஏற்கனவே வந்த 'ரமணலம்படா' என்ற 320-வது நாமத் தில் சொல்லியிருப்பதைப் பார்க்கவும்.

2. காமத்திற்கு அபிமானிதேவதை யோகேச்வரீ என்று சொல்லப்படுவதால் அந்த தேவதையின் ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம். காம, க்ரோத, லோப, மத, மோஹ, மாத்ஸர்ய, பைசுன்ய, அஸூயா என்ற எட்டு குணங்களுக்கும் எட்டு அபிமானிதேவதைகளுண்டென்றும் அவர்களுக்கு அஷ்ட மாதாக்கள் என்று பெயர் என்பதாகவும் வராஹபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'காம: க்ரோதஸ்ததா லோபோ மதோ மோஹச்ச பஞ்சம: ||
மாத்ஸர்யம் ஷஷ்டமித்யாஹு: பைசுன்யம் ஸப்தமம் ததா ||
அஸூயா த்வஷ்டமீ ஜ்ஞேயா இத்யேதா அஷ்டமாதர: |
காமம் யோகேச்வரீம் வித்தி க்ரோதம் மாஹேச்வரீம் ததா ||
லோபஸ்து வைஷ்ணவீ ப்ரோக்தா ப்ரம்ஹாணீ மத ஏவ ச |
மோஹ: ஸ்வயம்பூ: கல்யாணீ மாத்ஸர்யம் சேந்த்ராஜாம் விது: ||
யமதண்டதரா தேவீ பைசுன்யம் ஸ்வயமேவ ச |
அஸூயா ச வாராஹாக்யா இத்யேதா: பரிகீர்திதா: ||'

3. சிலர் இந்த நாமத்தை லோலாக்ஷீ, காமரூபிணீ என்று பிரித்து இரண்டு நாமங்களாகச் சொல்லுவார்கள்.

## मालिनी (455)

## மாலினீ

மாலையை தரித்திருப்பவள்.

1. மாலினீ என்ற பதத்திற்கு அனேக அர்த்தங்களுண்டு.

'மாலினீ வ்ருத்தபேதே ஸ்யாத் மாலாகாரஸ்த்ரியாமபி |
சம்பாநகர்யாம் கௌர்யாம் ச மந்தாகின்யாம் ச மாலினீ ||'

(விச்வ:)

ஒரு வ்ருத்த விசேஷம், கங்கை, சம்பா என்ற நகரம் இவை யெல்லாவற்றையும் குறிக்கும்.

2. ஐம்பத்தோரு அக்ஷரங்களின் (மாத்ருகைகளின்) அபிமானி தேவதைக்கு மாலினீ என்று பெயர். அந்தரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

3. வாமன புராணத்தில் பார்வதியின் விவாஹத்தைச் சொல்லும் ப்ரகரணத்தில் ஸப்தபதீ நடந்ததைப்பற்றிச் சொல்லுகையில் அம்பாளுடைய ஸகியான மாலினீ என்பவள் பரமசிவனுடைய பாதத்தைப் பிடித்துக்கொண்டதாகவும் அவர் காரணம் கேட்டு எதைக் கேட்டாலும் தருவதாகச் சொல்லவே மாலினீயானவள் அவர் பார்வதியிடம் அவருடைய ஸௌபாக்யம் முழுவதையும் கொடுக்கவேண்டுமென்று பிரார்த்தித்து அவர் அதற்கு ஸம்மதித்ததின் பிறகு தான் அவருடைய பாதத்தை விடுவித்ததாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

'ததோ ஹராங்கிரிர் மாலின்யா க்ருஹீதோ தாயகாரணாத் ||
கிம் யாசஸே ததாம்யேஷ முஞ்சஸ்வேதி ஹரோऽப்ரவீத் ||
மாலினீ சங்கரம் ப்ராஹ மத்ஸக்யை தேஹி சங்கர |
ஸௌபாக்யம் நிஜகோத்ரீயம் ததோ மோக்ஷமவாப்ஸ்யஸி ||
அதோவாச மஹாதேவோ தத்தம் மாலினி முஞ்ச மாம் ||'

இவ்விதமான மாலினீயின் ரூபமாக இருப்பவள் என்று சொல்லலாம்.

4. 'ஸப்தபிர் மாலினீ ஸா ஸ்யாத்' என்று கன்யா ப்ரகரணத்தில் தௌம்யர் சொன்னபடி மாலினீ என்றால் ஏழுவயதுள்ள கன்யகையைக் குறிக்குமாதலால் அவ்விதமான கன்யகாரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

## हंसिनी

**ஹம்ஸினீ** (456)

ஹம்ஸங்களையுடையவள்.

1. அம்பாளுடைய க்ருஹத்தில் ஹம்ஸ பக்ஷிகள் இருப்பதாகவும் அவை அம்பாளுடைய நடையினழகைப் பார்த்து அம்மாதிரி நடக்க ஆசைப்பட்டு பின்தொடர்ந்து போவதாகவும் அப்போது அம்பாள் காலிலணியப்பட்டிருக்கும் சலங்கைகளானது தங்கள் சப்தத்தினால் அந்த ஹம்ஸ பக்ஷிகளுக்கு சொல்லிக்கொடுப்பதுபோலிருப்பதாக ஆசார்யாளால் அம்பாளுடைய நடையின் அழகைப்பற்றி வர்ணிக்கையில் 'ஸௌந்தர்யலஹரீ'யில் சொல்லப்பட்டிருக்கிறது.

'பத ந்யாஸ க்ரீடா பரிசயமிவாரப்து மனஸ:
ஸ்கலந்தஸ் தே கேலம் பவனகலஹம்ஸா ந ஜஹதி |
அதஸ்தேஷாம் சிக்ஷாம் ஸுபகமணி மஞ்ஜீர ரணித
ச்சலாதாசக்ஷாணம் சரணகமலம் சாருசரிதே ||'

2. பரமஹம்ஸர்களென்ற யதிவிசேஷர்கள் அம்பாளிடம் அபேதமாக இருப்பதாலும் இந்தப்பெயர் வந்ததாக சொல்லலாம்.

3. ஹம்ஸமென்றால் அஜபாமந்த்ரத்தைக் குறிக்குமாதலாலும் அது அம்பாளுடைய மந்த்ரமாகையாலும் இந்தப் பெயர் வந்ததாகவும் சொல்லலாம்.

## माता
## மாதா (457)

ஜனனீயாக இருப்பவள்.

1. அம்பாள் ஸகல லோகப்ரபஞ்சத்திற்கும் ஜனனீயாக இருப்பதால் மாதா என்று பெயர்.

2 எல்லா மந்த்ரங்களும் அம்பாளிடமிருந்து உண்டாவதால் (அம்பாள் மாத்ருகாரூபமானதால்) மாதா என்று பெயர்.

'மந்த்ராணும் மாத்ரு பூதா ச மாத்ருகா பரமேச்வரீ |' (ஸ்காந்தம்)

3. நாமபாராயணத்தில் தசமீதிதி நித்யா தேவதையின் மந்த்ரத்திற்கு மாதா என்று ஸம்க்ஞை சொல்லப்பட்டிருக்கிறது. அந்த நித்யா தேவதை ரூபமாக அம்பாளிருப்பதால் மாதா என்று பெயர்.

4. 'மாதா காயாவரோஹணே' என்று பாத்மத்தில் சொன்னபடி காயாவரோஹண க்ஷேத்ரத்திலிருக்கும்

அம்பாளுக்கு மாதா என்று பெயர். அந்த ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

5. லக்ஷ்மீ பீஜத்திற்கு மாதா என்று பெயர் (ஸம்க்ஞை)

'ஸ்ரீர்மா ரமா ச கமலா மாதா லக்ஷ்மீச்ச மங்களா |' (விச்வ:)

## मलयाचलवासिनी (458)

மலயாசலவாஸினீ

மலயாசலத்தில் (மலயபர்வதத்தில்) வஸிப்பவள்.

1. மலயாலய பகவதீ என்ற அம்பாளுடைய ரூபவிசேஷத்தைப்பற்றி சாபரசிந்தாமணியில் ப்ரஸித்தமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

அந்த ரூபமாக அம்பாளிருப்பதை இங்கு சொல்லப்பட்டிருக்கிறது.

## सुमुखी (459)

ஸுமுகீ

சோபனமான (ப்ரகாசிக்கும்) முகத்தையுடையவள்.

1. ஞானத்தினால் முகத்தின் காந்தியானது அதிகரிக்குமென்று சொல்லப்படும். ப்ரம்ஹஞானமிருப்பதை முகத்தின் காந்தி விசேஷத்தினால் ஊஹிக்கப்படுவதாக ச்ருதியில் அனேக இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

'சோபதேSஸ்ய முகம் ய ஏவம் வேத |'

'ப்ரம்ஹவித இவ தே ஸௌம்ய முகமாபாதீ |'

2. ஷோடசியின் அங்கமாக உபாஸிக்கப்படும் தேவதா விசேஷத்திற்கும் ஸுமுகீ என்று பெயர்.

## नलिनी (460)

நளினீ

தாமரஸபுஷ்பம் போன்றவள்.

1. அம்பாளுடைய கர, சரண, முக, நேத்ராதி அவயவங்களெல்லாம் தாமரஸ புஷ்பத்திலிருந்து உண்டானது போல் இருப்பதால் அம்பாளையே தாமரஸ புஷ்பமாக இங்கு

சொல்லப்பட்டது. (கர கமலம், சரண கமலம், முக கமலம், நேத்ர கமலம் என்று வர்ணிப்பது ப்ரஸித்தம்.)

2. நளினீ என்று கங்கைக்குப் பெயர். அந்த ரூபமாக அம்பாளிருப்பதை இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம். 'நந்தினீ நளினீ கங்கா'

3. நளனென்ற ராஜாவானவன் அம்பாளை உபாஸித்து அம்பாளோடு தாதாம்யமடைந்ததினால் அம்பாளுக்கு இந்தப் பெயர் வந்ததாகவும் சொல்லலாம்.

## सुभ्रूः

## ஸுப்ரூ: (461)

அழகிய புருவங்களையுடையவள்.

1. அம்பாளுடைய புருவங்களின் அழகை ஆசார்யாள் பின்வருமாறு 'ஸௌந்தர்யலஹரீ'யில் வர்ணித்திருக்கிறார்கள்.

'புருவெள புக்னே கிஞ்சித் புவனபய பங்கவ்யஸனினி
த்வதீயே நேத்ராப்யாம் மதுகாருசிப்யாம் த்ருதகுணம் |
தனுர்மன்யே ஸவ்யேதரகா க்ருஹீதம் ரதிபதே:
ப்ரகோஷ்டே முஷ்டௌ ச ஸ்தகயதி நிகூடாந்தரம் உமே ||'

ஸகல புவனங்களுக்கும் அபயம் கொடுக்கும் தாயே! கொஞ்சமாக வளைந்திருக்கும் உன்னுடைய புருவங்கள் உனது கண்களாகிற வண்டுகளை நாண்கயிறாக உடைய மன்மதனுடைய வில்லைப்போலவும், அதை மன்மதன் (உனது நாஸாதண்டமாகிய) தனது வலது முழங்கையினால் பிடித்திருப்பதால் அப்படிப் பிடித்திருக்கும் முஷ்டியினால் மறைந்திருக்கும் நடுவுடன் கூடியதாகவும் தோன்றுகிறது.

## शोभना

## சோபனா (462)

மஹாஸௌந்தர்யவதியாக இருப்பவள்.

1. பின்னால் வரும் 972-வது நாமத்தை ஆசோபனா என்று சொல்லவேண்டும்.

**सुरनायिका** (463)

**ஸுர நாயிகா**

தேவர்களுக்கெல்லாம் ஈச்வரீ.

1. இதை 'மஹத்தரா மஹிமா தேவானும்' என்று ச்ருதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

**कालकण्ठी** (464)

**காலகண்டீ**

காலகண்டருடைய பத்னீ.

1. பரமசிவன் ஹாலாஹலவிஷத்தைப் பானம் செய்யும் போது அது அவருடைய கழுத்திலேயே நின்றுவிட்டதாலும் அந்த விஷத்தின் கரிய நிறம் அங்கே தெரிவதாலும் அவருக்கு காலகண்டனென்று பெயர் ஏற்பட்டது.

'பச்யதாம் தேவஸங்கானும் பிசாசோரகராக்ஷஸாம் |
த்ருதம் கண்டே விஷம் கோரம் காலகண்டஸ்ததோऽஸ்ம்யஹம் ||'
(வாயு புராணம்)

2. காலஞ்ஜரக்ஷேத்திரத்தில் பரமசிவன் காலகண்டரென்று உபாஸிக்கப்படுவதாக தேவீபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த க்ஷேத்ரத்தில் அதிஷ்டானமாயிருக்கும் அம்பாளே இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

3. மதுரமானதும் வெடிப்பாக இல்லாததுமான த்வனிக்கு கலமென்று பெயர். ஆகவே இனிமையான குரலையுடையவள் என்றும் சொல்லலாம். அம்பாளுடைய குரலின் இனிமையைப் பற்றி ஏற்கனவே 27-வது நாமமாகிய,

'நிஜஸல்லாப மாதுர்ய விநிர்பர்த்ஸித கச்சபீ'

என்றதில் சொல்லப்பட்டிருக்கிறது.

4. தாருகனென்ற அஸுரனை வதம் செய்வதற்காக பரமசிவன் காளியை ஸ்ருஷ்டித்தாரென்றும் காளிக்கு காலகண்டீ என்று பெயரென்பதாகவும் லிங்கபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸஸர்ஜ காளீம் காமாரி: காலகண்டீம் கபர்தினீம் |'

**कान्तिमती**

**காந்திமதீ** (465)

காந்தியோடு கூடியவள்.

**क्षोभिणी**

**க்ஷோபிணீ** (466)

கிளர்ச்சி (சுருசுருப்பு, தீவிரவுணர்ச்சி)உண்டுபண்ணுகிறவள்.

1. ஸ்ருஷ்டிகாலத்தில் பரமசிவனுடைய மனதில் ஸ்ருஷ்டிக்கும் விஷயமாக ப்ரக்ருதிரூபிணியான அம்பாள் ஒருவித உணர்ச்சி (க்ஷோபம்) உண்டுபண்ணுவதாக ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கிறது. அந்தக் காரணத்தால் அம்பாளுக்கு க்ஷோபிணீ என்று பெயர்.

'ப்ரக்ருதிம் புருஷம் சைவ ப்ரவிச்யாத்மேச்சயா ஹரி: |
க்ஷோபயாமாஸ பகவான் ஸர்ககாலே வ்யபாச்ரித: ||
(விஷ்ணு புராணம்)

2. மனிதனுடைய க்ஷோபத்தினால் (கலக்கத்தினால்) சில தேவ கணங்களை உண்டுபண்ணினதினால் இந்தப்பெயர் வந்ததாகவும் சொல்லலாம். முன்னொருக்கால் அம்பாளுடைய மூர்த்தித்ரயங்களில் ஒருவளான வைஷ்ணவியானவள் மந்தரபர்வதத்தில் தபஸ் செய்ததாகவும் அப்போது மனதில் ஒருவித கலக்கம் ஏற்பட்டு அதிலிருந்து கோடிக்கணக்கான ஸௌந்தரயுவதிகள் உண்டானதாகவும் வராஹ புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'யா மந்தரம் கதா தேவீ தபஸ்தப்தும் து வைஷ்ணவீ |
தஸ்யாஸ்தபந்த்யா: காலேன மஹதா க்ஷுபிதம் மன: ||
தஸ்மாத் க்ஷோபாத் ஸமுத்தஸ்த்து: குமார்ய: ஸௌம்யதர்சனா: |
நீலகுஞ்சித கேசாந்தா: பிம்போஷ்ட்ய: பத்மலோசனா: ||
இந்தீவரஸமா தாமநூபுராட்யா: ஸுவர்சஸ: |
ஏவம் விதா: ஸ்திரியோ தேவ்ய: க்ஷோபிதே மனஸி த்ருதம் |
உத்தஸ்த்து: சதஸாஹஸ்ரா: கோடிசோ விவிதானனா: ||'

**सूक्ष्मरूपिणी**

**ஸூக்ஷ்மரூபிணீ** (467)

ஸூக்ஷ்மமான(எளிதில் அறியமுடியாத)ரூபத்தையுடையவள்.

1. இம்மாதிரியே ச்ருதியில் 'ஸூக்ஷ்மாத் ஸூக்ஷ்மதரம் நித்யம்', 'அணோரணீயான்' என்று சொல்லப்பட்டது.

2. ஸூக்ஷ்மமென்று ஒருவிதமான ஹோமத்தைச் சொல்லப்படும். இதைப்பற்றி தந்த்ர ராஜத்தில்,

'நித்யா நித்யோதிதே மூலாதார மத்யேஸ்தி பாவக: |'

என்று ஆரம்பித்து,

'ஏவம் த்வாதசதா ஹோமம் அக்ஷரை: ஸ்யாதுதீரிதை: |'

என்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ஹோமவிசேஷத்தின் ரூபமாக இருப்பவள் என்று சொல்லலாம்.

3. ஏற்கனவே சொல்லப்பட்டபடி அம்பாளுக்கு இருக்கும் ஸ்தூல, ஸூக்ஷ்ம, பரமென்கிற ரூபங்களில் ஸூக்ஷ்ம ரூபத்தை இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

## वज्रेश्वरी

## வஜ்ரேச்வரீ (468)

வஜ்ரேச்வரீ என்ற தேவதா ரூபமாக இருப்பவள்.

1. வஜ்ரேச்வரீ ஷஷ்டீ திதியின் நித்யாதேவதை, ஜாலாந்தர பீடத்தின் அதிஷ்டானதேவதை.

2. ஸ்ரீநகரத்தின் பனிரெண்டாவது மதிலானது வஜ்ர மணி மயமானதென்றும் அதற்கும் பதினேழுவது மதிலுக்கும் நடுவில் வஜ்ரமயமான நதியொன்று இருக்கிறதென்றும் அந்த நதிக்கு அதிஷ்டான தேவதையாக வஜ்ரேச்வரீ தேவதை இருக்கிறதென்றும் துர்வாஸ மஹர்ஷியால் லலிதாஸ்தவரத்னத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'தத்ர ஸதா ப்ரவஹந்தீ தடினீ வஜ்ராபிதா சிரம் ஜீயாத் |
சடுலோர்மி ஜாட ந்ருத்யத் கலஹம்ஸீ குல கலக்வணித புஷ்டா ||
ரோதஸி தஸ்யா ருசிரே வஜ்ரேசீ ஜயதி வஜ்ர பூஷாட்யா |
வஜ்ர ப்ரதான தோஷித வஜ்ரிமுக த்ரிதச வினுத சாரித்ரா ||'

அவ்விதமான வஜ்ரேசீ ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

3. இந்த்ரனுக்கு வஜ்ராயுதமானது (அவனுடைய தபஸினால் ஸந்தோஷமடைந்த) அம்பாளால் கொடுக்கப்பட்டதாக ப்ராம்ஹாண்ட புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'தஜ்ஜலாத் உத்திதா தேவீ வஜ்ரம் தத்வா பலத்விஷே |
புனரந்தர்ததே ஸோபி க்ருதார்த்த: ஸ்வர்கமேயிவான் ||'

## वामदेवी
## வாமதேவீ (469)

வாமதேவருடைய பத்னியாக இருப்பவள்.

1. எல்லாராலும் வணங்கத்தக்கவராக இருப்பதால் பரம சிவனுக்கு வாமதேவரென்று பெயர்.

'தம் தேவா அப்ருவன்னயம் வை ந: ஸர்வேஷாம் வாம
இதி தஸ்மாத் வாமதேவ: | (ஐதரேய ச்ருதி)

2. வாமபாகத்தால் (சரீரத்தின் இடது பாகத்தில் அம்பாள் இருப்பதால்) ப்ரகாசிக்கிறதினுல் வாமதேவரென்றும் பெயர். அதாவது, அர்தநாரீச்வர ரூபத்தில் அம்பாள் பரமசிவனுடைய வாமபாகத்திலிருப்பதினுலும் அதினுல் அவர் ப்ரகாசிக்கிறதினுலும் வாமதேவர் என்ற பெயருக்குறியவராகிருர்.

3. பரமசிவனுடைய மூர்த்திகளில் (ஸதாசிவ வ்யூஹத்தில் அந்தர்கதமான மூர்த்திகளில்) வாமதேவர் ஒன்று. அவருடைய பஞ்சமுகங்களில் ஸத்யோஜாதர் மேற்கிலும் வாமதேவர் வடக்கிலும் தத்புருஷர் கிழக்கிலும் அகோரர் தெற்கிலும் ஈசானர் நடுவிலுமாக இருப்பதாகச் சொல்லப்படும்.

'குங்குமக்ஷோத ஸங்காசம் வாமாக்யம் வனவேஷத்ருத் |
வக்த்ரமுத்தரமீசஸ்ய ப்ரதிஷ்டாயாம் ப்ரதிஷ்டிதம் ||'
(சிவ புராணம்)

4. வாமா என்றுல் அழகான (ஸௌந்தரியான) ஸ்திரீ என்றும் அர்த்தம். ஆகையால் அழகான தேவீ என்றும் சொல்லலாம்.

5. வாம என்றுல் கர்மாக்களின் பலத்தைக் குறிக்கும். அவ்விதமான கர்மபலன்களுக்கு அதிஷ்டான தேவதையாக அம்பாளிருப்பதால் வாமதேவீ என்று பெயர்.

6. வாமாசாரத்தில் ஈடுபட்டு அனுஷ்டிப்பவர்களை வாமர்கள் (வாமா:) என்று சொல்லப்படும். அம்பாளுடைய உபாஸனு மார்க்கங்களில் வாமமார்கம், தக்ஷிணமார்க்கம் என்று

இரண்டு பேதங்கள் உண்டு. இவைகளில் வாமமார்க்கத்தால் உபாஸனை செய்பவர்களுக்கு (வாமர்களுக்கு) தேவியாக (உபாஸனாமூர்த்தியாக) இருப்பதால் வாமதேவீ என்று பெயர்.

'பூஜகோऽபி பவேத் வாம: தன்மார்கே ஸததம் ரத: |'

(காளிகா புராணம்)

7. வாம என்றால் விருத்தரூபமான, விபரீதமான என்று அர்த்தம் உண்டு. இந்த அர்த்தமும் வாமாசாரம் என்பதற்கு உண்டு. இவ்விதமான உபாஸனையிலும் அம்பாள் ஸுகத்தைக் கொடுப்பதால் வாமதேவீ என்று பெயர் என்பதாக தேவீ புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'வாமம் விருத்தரூபம் து விபரீதம் து கீயதே |
வாமேன ஸுகதா தேவீ வாமதேவீ தத: ஸ்ம்ருதா ||'

## वयोवस्थाविवर्जिता

## வயோவஸ்த்தா விவர்ஜிதா (470)

வயதின் அவஸ்த்தைகளிலிருந்து விடுபட்டிருப்பவள்.

1. அம்பாள் சாச்வதமாக இருப்பதால் பால்யம், பௌகண்டம், கிசோரம் முதலான ஜீவ அவஸ்தைகள் கிடையாது என்பது ஏற்படுகிறது.

## सिद्धेश्वरी

## ஸித்தேச்வரீ (471)

ஸித்தர்களுக்கு ஈச்வரியாக இருப்பவள்.

1. ஸித்தர்கள் கோரக்ஷர், மத்ஸ்யேந்த்ர நாதர் முதலியவர்கள்.

2. காசியில் இவ்விதமான பெயரோடு அம்பாள் இருப்பதாகச் சொல்லப்படும்.

## सिद्धविद्या

## ஸித்தவித்யா (472)

ஸித்தமான (சாச்வதமான) வித்யா ரூபிணியாக இருப்பவள்.

1. ஸித்தவித்யா என்பது பஞ்சதசியைக்குறிக்கும். அந்த மந்த்ரம் ஸித்தவித்யையாக இருப்பதால் இதர மந்த்ரங்களுக்குச்

செய்யவேண்டியதான ஸித்தாரிசக்ரசோதனம் முதலியவைகள் தேவையில்லையென்பதாக காதிமதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'நித்யாஞம் ஸித்தமந்த்ரத்வாத் நாவேக்ஷ்யாஸ்த்வம்சகாதய: |'

## सिद्धमाता

**ஸித்தமாதா** (473)

ஸித்தர்களுக்கு மாதாவாக (ரக்ஷாகரியாக) இருப்பவள்.

## यशस्विनी

**யசஸ்வினீ** (474)

மஹத்தான யசஸ்ஸோடு கூடியவள்.

1. இதை 'தஸ்ய நாம மஹத்யச:' என்று ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

இனி வரும் 62 நாமங்களில் யோகினீ ந்யாஸக்ரமத்தில் அம்பாளை ஸ்தோத்ரம் செய்யப்படுகிறது. இந்த யோகினிகள் ஏற்கனவே சொல்லப்பட்ட மூலாதாரம் முதலான ஷட் சக்ரங் களிலும் ஸஹஸ்ரகமலத்திலும் இருப்பதாகச் சொல்லப்படும். இவ்விதம் செய்யப்படும் யோகினீ ந்யாஸமானது 'ஷோடாந் யாஸம்' என்று சொல்லப்படும் ஆறுவிதமான ந்யாஸங்களில் ஒன்று.

ந்யாஸம் என்பது அந்தந்த தேவதையை ஸாதகன் தன்னு டைய சரீரத்திலிருக்கும் அந்தந்த அவயவத்தில் ஸ்தாபனம் (இருக்கும்படி) செய்வது. அதாவது அவ்விதம் இருப்பதாக பாவனை செய்வது. இதனுடைய நோக்கமென்னவென்றால் அவ் விதத்தால் தாதாத்ம்யம் ஏற்படுத்திக்கொள்ளவேண்டுமென்பது. ஸ்ரீவித்யா விஷயத்தில் அடையவேண்டியதான இந்த தாதாத்ம்ய மானது ஸ்ரீசக்ரம், ஸ்ரீவித்யா, ஸ்ரீதேவீ, குரு, ஸாதகன் இந்த ஐந்தும் ஐக்யமாக இருப்பதுபோல் அனுஸந்தானம் செய்வதி ஞல் ஏற்படும்.

இவ்விதமான ந்யாஸங்களைப்பற்றி ஹயக்ரீவர் அகஸ்த்ய ருக்கு இந்த ஸஹஸ்ரநாமத்தைச் சொல்லுவதற்கு முன்னமேயே ந்யாஸகண்டத்தில் சொல்லிவிட்டதாக,

"ஷோடாந்யாஸாதயோ ந்யாஸா: ந்யாஸகண்டே ஸமீரிதா: |"

என்று இதின் பூர்வபாகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மேலே சொல்லிய ஐந்து விதமான தாதாம்யத்தைப் பற்றியும் ரஹஸ்ய கண்டம் என்பதில் தனக்கு ஹயக்ரீவரால் சொல்லப்பட்டதாக வும் பூர்வபாகத்தில் சொல்லுகிறுர்.

"சக்ரராஜஸ்ய வித்யாயா: ஸ்ரீதேவ்யா தேசிகாத்மனோ: |
ரஹஸ்யகண்டே தாதாத்ம்யம் பரஸ்பரம் உதீரிதம் ||"

மேலே சொல்லிய ந்யாயங்களில் 'ஷோடாந்யாஸம்' என்பது ஒருவிதம். அது ஆறுவிதமான ந்யாஸம். சரீரத்தின் அவயவங்களில் கீழே சொல்லப்படும் ஆறுவிதமான கூட்டங்கள் இருப்பதாக ந்யாஸம் செய்யவேண்டும். அந்த ஆறு விதமான கூட்டங்கள் என்பவை கணேசர்கள், க்ரஹங்கள், நக்ஷத்ரங்கள், யோகினிகள் ராசிகள், பீடங்கள். ஒவ்வொரு கூட்டத்தைச் சேர்ந்தவைகளை அவயவங்களின் ஒரோர் இடத்தில் இருப்பதாக பாவனை செய்வது அதின் ந்யாஸமாகும்.

கணேசர்கள் 51, க்ரஹங்கள் 9, நக்ஷத்ரங்கள் 27, யோகினிகள் 7, ராசிகள் 12, பீடங்கள் 51, இந்த ஆறு கூட்டங்களையும் ந்யாஸம் செய்தால் தேவீயோடு தாதாத்ம்யம் ஏற்படுவதற்கு ஸாதகமாகும்.

'ஷோடாந்யாஸம் ப்ரகுர்வீத தேவதாத்மத்வ ஸித்தயே |'

ஏனென்ருல் இந்த ஆறு கூட்டங்களுமே அம்பாளுடைய ரூபமாக இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'கணேச க்ரஹ நக்ஷத்ர யோகினீ ராசி ரூபிணீம் |
தேவீம் மந்த்ரமயீம் நௌமி மாத்ருகாம் பீடரூபிணீம் ||'

இந்த ஷோடாந்யாஸத்தின் விபரங்களை பாஸ்கர ராயருடைய ஸேதுபந்தம், வரிவஸ்யா ரஹஸ்யம் இந்த க்ரந்தங்களில் பார்க்கவும்.

இனிவரும் நாமங்களில் யோகினிகளின் ந்யாஸத்தை அனுஸரித்து அம்பாளை ஸ்தோத்ரம் செய்யப்பட்டிருக்கிறதென்று ஏற்கனவே சொல்லப்பட்டது. அந்த யோகினிகள் எழுவர்—டாகினீ, ராகினீ, லாகினீ, காகினீ, ஸாகினீ, ஹாகினீ, யாகினீ என்ற பெயர்களையுடையவர்கள். [இந்த யோகினீக்கூட்டத்தை அவர்களுடைய பெயர்களின் முதல் எழுத்துக்களைக்கொண்டு டரலகஸஹயாத்ய யோகினீ ஸப்தகம் என்று சொல்லப்படும்.]

இவர்கள் முறையே விசுத்தி, அனாஹதம், மணிபூரம், ஸ்வாதிஷ்டானம், மூலாதாரம், ஆக்ஞை, ஸஹஸ்ராரம் என்ற சக்ரங்களின் அதிஷ்டான தேவதைகள். மேலும் இவர்கள் முறையே சரீரத்தின் தாதுக்களான த்வக், அஸ்ருக், மாம்ஸம், மேதஸ், அஸ்தி, மஜ்ஜா, சுக்லம் இவைகளின் தேவதைகள்.

சக்ரங்களைப்பற்றிச் சொல்லுகையில் மூலாதாரத்திலிருந்து ஆரம்பிப்பது வழக்கமென்றாலும் தாதுக்களை மேலே சொல்லிய வரிசைப்படி சொல்லுவது வழக்கமாயிருப்பதால் அந்த வரிசையை அனுஸரித்து இந்த நாமங்களில் விசுத்தி சக்ரத்திலிருந்து ஆரம்பித்து மேலே காணப்படும் வரிசைப்படி சொல்லப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது. மேலும் யோகினிகளின் முகங்களுடைய கணக்குப்படியும் வரிசையாக இருப்பதால் அது பொருத்தமாக இருக்கிறது.

'யோகினீ ந்யாஸமாதத்யாத் விசுத்தௌ ஹ்ருதயே ததா |
நாபௌ ஸ்வாதிஷ்டிதே மூலேப்ருமத்யே மூர்த்தனி க்ரமாத் ||'

'ஷட் சக்ரங்கள்' என்று சொல்லி ஸஹஸ்ராரத்தைத் தனியாக சொல்லுவதுபோல் அங்கிருக்கும் (அதிஷ்டான) யோகினிகளைத் தனியாகச்சொல்லி ஸஹஸ்ராரத்திலிருக்கும் கடைசி யோகினியாகிய யாகினீ தேவியைத் தனியாகச் சொல்வதுமுண்டு. எப்படி ஸஹஸ்ரார கமலமானது எல்லாவற்றிற்கும் மேல்பட்டதாய், எண்ணிக்கையற்ற இதள்களுடன் இருக்கிறதோ அதே மாதிரி யாகினீ தேவதையானவள் ஸர்வ வர்ணங்களோடு சோபிக்கிறவள், ஸர்வமான ஆயுதங்களையும் தரிப்பவள், ஸர்வதோமுகமானவள், ஸர்வ அன்னங்களிலும் ப்ரீதியுள்ளவள் என்று எல்லா விஷயங்களிலும் பூர்ணமானவளாகச் சொல்லப்படுகிறாள். மேலும் ஸகல தாதுக்களுக்கும் ஸாரமானதும் ஸர்வோத்க்ருஷ்டமானதுமான சுக்லத்திற்கு அதிஷ்டான தேவதையாகச் சொல்லப்பட்டது.

இந்த யோகினீ தேவதைகளை சொல்லுகையில் அவர்கள் அதிஷ்டானமாக இருக்கும் சக்ரம், அவர்களுடைய வர்ணம், முகம், ஆயுதம், பரிவாரதேவதைகள், குணங்கள் முதலிய விபரங்களெல்லாம் இனிவரும் நாமங்களில் சொல்லியதைக்காட்டும் (Table) அடுத்தபக்கத்தில் காட்டப்பட்டிருக்கிறது. முதல் ஆறு யோகினிகளைப்பற்றி 'வரிவஸ்யா ரஹஸ்ய'த்தில் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

| நெ. | பெயர் | சக்ரம் | ரூபம் | வர்ணம் | முகம் | ஆயுதம் | குணம் | பரிவாரதேவதை | தாது | ப்ரீதியான அன்னம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | டாகினீ | விசுத்தி | த்ரிலோசனு | ஆரக்தம் | 1 | கட்வாங்காதி | பசுலோக பயங்கரீ | அம்ருதாதி | த்வக் | பாயஸான்னம் |
| 2 | ராகினீ | அனுஹதம் | தம்ஷ்ட்ரோஜ்வலா | ச்யாமம் | 2 | அக்ஷமாலாதி | மஹாவீரேந்த்ரவரதா | காலராத்ர்யாதி | ருதிரம் (அஸ்ருக்) | ஸ்னிக்தான்னம் |
| 3 | லாகினீ | மணிபூரம் | —— | ரக்தம் | 3 | வஜ்ராதி | ஸமஸ்தபக்தஸுகதா | டாமர்யாதி | மாம்ஸம் | குடான்னம் |
| 4 | காகினீ | ஸ்வாதிஷ்டானம் | —— | பீதம் | 4 | சூலாதி | அதிகர்விதா மதுப்ரீதா | பந்தின்யாதி | மேதஸ் | தத்யன்னம் |
| 5 | ஸாகினீ | மூலாதாரம் | —— | —— | 5 | அங்குசாதி | —— | வரதாதி | அஸ்த்தி | முத்கான்னம் |
| 6 | ஹாகினீ | ஆக்ஞா | —— | சுக்லம் | 6 | —— | —— | ஹம்ஸவத்யாதி | மஜ்ஜா | ஹரித்ரான்னம் |
| 7 | யாகினீ | ஸஹஸ்ராரம் | —— | ஸர்வவர்ணம் | ஸர்வதோமுகம் | ஸர்வாயுதம் | —— | —— | சுக்லம் | ஸர்வௌதனம் |

'நரபதி ரவிகாஷ்டா ஷட்ஸமுத்ரத்வி ஸங்க்யை:
அகட பவஹ பூர்வை: அக்ஷரைர் வேஷ்டிதாபி: |
டரலகஸஹ வர்ணுத்யாகினீபிஃது ஷட்பி:
கடித தனுரிதீயம் கத்யதே யோகினீதி ||'

இதில் யோகினிகளுடைய பரிவாரதேவதைகளின் எண்ணிக்கையும் முதல் பெயர்களும் அவர்களுக்குறிய வர்ணங்களும் (அக்ஷரங்களும்) அந்தந்த சக்ரங்களின் தளங்களுடைய கணக்கும் மற்ற விபரங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. நரபதிகள் 16, ரவிகள் (ஆதித்யர்கள்) 12, காஷ்டைகள் (திக்குகள்) 12, ஷட் 6, ஸமுத்ரங்கள் 4, த்வி 2 என்று பரிவாரதேவதைகளின் கணக்கும் அவர்களுக்குறிய மாத்ருகைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. அவர்களில் முதல் தேவதையின் பெயருடைய முதல் அக்ஷரமானது இரண்டாவது வரியில் சொல்லப்பட்டது. அகட பவஹ என்பதினுல் அம்ருதாதி, காலராத்ர்யாதி, டாமர்யாதி, பந்தின்யாதி, வரதாதி, ஹம்ஸவத்யாதி பரிவாரதேவதைகள் குறிக்கப்பட்டார்கள். இவர்கள் முறையே டரலகஸஹ என்ற அக்ஷரங்களை தங்கள் பெயர்களில் முதலாக உடைய யோகினிகளின் பரிவாரதேவதைகள். இம்மாதிரியான யோகினீ தேவதைகளால் சூழப்பட்டவளாய் விச்வரூபிணியாய் அம்பாள் இருப்பதாகச் சொல்லப்பட்டது.

'த்வகாதி தாதுநாதாபி: டாகின்யாதிபிரப்யஸௌ |
வர்காஷ்டக நிவிஷ்டாபி: யோகினீபிச்ச ஸம்யுதா |
யோகினீ ரூபமாஸ்த்தாய ராஜதே விச்வ விக்ரஹா ||'

## विशुद्धिचक्र निलया

**விசுத்திசக்ர நிலயா (475)**

விசுத்தியெனப்படும் சக்ரத்தை தன்னுடைய வாஸ ஸ்தானமாக உடையவள்.

1. விசுத்தி சக்ரமென்பது கண்டதேசத்தில் (கழுத்தில்) இருக்கும் சக்ரம். அதற்குப் பதினறு தளங்கள் உண்டு. ஒவ்வொரு தளத்திலும் ஒவ்வொரு ஸ்வரம் (vowel) ஆக அகாரம் முதல் விஸர்கம் (அ:) உள்பட பதினறு ஸ்வரங்களுமிருப்பதாகச் சொல்லப்படும்.

'விசுத்தாக்யம் கண்டே ஸரஸிஜம் அமலம்
தூமதூம்ராவபாஸம்
ஸ்வரை: ஸர்வை: சோணை: தளபரிலஸிதை:
தீபிதம் தீப்தபுத்தே: |

2. இதிலும் மற்ற சக்ரங்களிலும் தளங்களில் வர்ணங்களை (அக்ஷரங்களை) தக்ஷிணாவர்தமாக (கெடியாரம் ஓடும்போது முள்ளுகள் திரும்புவதுமாதிரி) ஆரம்பம் செய்து பாவனை செய்ய வேண்டும்.

'ஸர்வ வர்ணாத்மகம் பத்ரம் பத்மானாம் பரிகீர்த்திதம் |
தக்ஷிணாவர்தயோகேன லிகனம் சிந்தயேத் தியா ||'

மேலும் அவைகளை பிந்துவோடு கூடியதாக (அம், ஆம், இம், ஈம் என்பதாக பாவனைசெய்யவேண்டும்.

3. இந்த சக்ரத்தில் ஜீவனானவன் ஹம்ஸரூபியான ப்ரம்ஹத்தைப் பார்ப்பதினால் சுத்தனாக ஆகிறபடியால் இதற்கு விசுத்தி என்று பெயர்.

'விசுத்திம் தனுதே யஸ்மாத் ஜீவஸ்ய ஹம்ஸலோகனாத் |
விசுத்தம் பத்மமாக்யாதம் ஆகாசாக்யம் மஹத் பரம் ||'

## आरक्तवर्णा (476)

## ஆரக்தவர்ணா

கொஞ்சம் சிவந்த நிறமுடையவள்.

1. 'ச்வேத் ரக்தஸ்து பாடல:' என்றபடி வெண்சிகப்பு நிறம், அதாவது பாடலீகுஸுமஸமான வர்ணம் சொல்லப்பட்டது.

2. இந்த நாமத்தை, 'ஆரக்தவர்ணா' என்றும் பின்னால் லாகினீ தேவியைப்பற்றிச் சொல்லும்போது வரும் நாமத்தை 'ரக்தவர்ணா' என்றும் வித்யாஸமாகச் சொல்லப்பட்டிருப்பது கவனிக்கவேண்டியது.

## त्रिलोचना (477)

## த்ரிலோசனா

மூன்று கண்களோடு கூடியவள்.

**खट्वाङ्गादिप्रहरणा**

**கட்வாங்காதி ப்ரஹரணு** (478)

கட்வாங்கம் முதலிய ஆயுதங்களை யுடையவள்.

1. *கட்வாங்கம் என்னும் ஆயுதமானது நர கபாலத்தை நுனியில் கோர்த்திருக்கும் தண்டம். டாகினீதேவியின் நாலு கைகளில் கட்வாங்கம், கட்கம், சூலம், மஹாசர்மம் இவைக ளிருப்பதாகச் சொல்லப்படும்.*

2. *கட்வா என்றால் கட்டில் என்று அர்த்தம். கட்வாங்க மென்றால் கட்டில்கால். அது முதலான ஆயுதங்களை யுடையவ ளென்றும் சொல்லலாம்.*

**वदनैकसमन्विता**

**வதனைகஸமன்விதா** (479)

ஒரு முகத்தையுடையவள்.

**पायसान्नप्रिया**

**பாயஸான்னப்ரியா** (480)

பாயஸான்னத்தில் ப்ரியமுள்ளவள்.

1. *பசும் பாலில் அரிசியை வேகவைத்துத் தயாரிக்கப் படுவது பாயஸம். அதுவே பாயஸான்னம்—பரமான்னம்.*

**त्वक्स्था**

**த்வக்ஸ்த்தா** (481)

த்வக் தாதுவின் அபிமானி தேவதையாக இருப்பவள்.

**पशुलोकभयंकरी**

**பசுலோக பயங்கரீ** (482)

பசுலோகத்திற்கு பயத்தை உண்டுபண்ணுகிறவள்.

1. *தானும் பரப்ரஹ்மமும் ஒன்று என்பதான அத்வைத ஞானமில்லாதவனுக்கு பசு என்று பெயர். (த்வைதபாவமாகிற பாசத்தினால் கட்டப்பட்டிருக்கும் வரையில் ஜீவனானவன் பசுவாக இருக்கிறானென்று ஏற்கனவேயே சொல்லப்பட்டது.)*

'யோ அன்யாம் தேவதாம் உபாஸ்தே, அன்யோ஽ஸௌ,
அன்யோ஽ஹமஸ்மீதி ந ஸ வேத யதா பசு: |'
'த்விதீயாத்வை பயம் பவதி'
'ய ஏதஸ்மின்னுதர மந்தரம் குருதே஽த தஸ்ய பயம் பவதி'

## अमृतादिमहाशक्तिसंवृता (483)
## அம்ருதாதி மஹாசக்தி ஸம்வ்ருதா

அம்ருதா முதலிய மஹாசக்திகளால் நன்றாய்ச் சூழப்பட்டவள்.

1. இவர்கள் பெயர் (மேலே சொல்லியபடி பதினாறு ஸ்வரங்களை முதல் எழுத்துக்களாக) அம்ருதா, ஆகர்ஷிணீ, இந்த்ராணீ, ஈசானீ, உமா, ஊர்த்வகேசீ, ருத்திதா, ரூகாரா, லுகாரா, லூகாரா, ஏகபதா, ஐச்வர்யாத்மிகா, ஓம்காரா, ஔஷதி, அம்பிகா, அக்ஷரா, இவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வோர் தளத்தில் இருப்பதாக பாவனை செய்யவேண்டும்.

## डाकिनीश्वरी (484)
## டாகினீச்வரீ

(மேலே சொல்லிய ஒன்பது விசேஷணங்களையுடைய) டாகினீ என்ற ஈச்வரீ ரூபமாக இருப்பவள்.

1. டாகினீ தேவீயை பின்வருமாறு வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

'தஸ்மாதேகாங்குளாதூர்த்வம் விசுத்தம் ஷோடசாக்ஷரம் |
மத்யகா டாகினீ பாஹ்யபத்ரேஷு பரமேச்வரீ |
அம்ருதாத்யக்ஷராந்தா: ஸ்யு: சந்த்ரபிம்பம் ததூர்த்வத: ||'
'க்ரீவாகூபே விசுத்தௌ க்ருபதளகமலே
ச்வேதரக்தாம் த்ரிநேத்ராம்
ஹஸ்தை: கட்வாங்க கட்கௌ த்ரிசிகமபி மஹா |
சர்ம ஸந்தாரயந்தீம் |
வக்த்ரேணைகேன யுக்தாம் பசுஜனபயதாம்
பாயஸான்னைக ஸக்தாம்
த்வக்ஸ்ததாம் வந்தே஽ம்ருதாத்யை: பரிவ்ருதவபுஷம்
டாகினீம் வீரவந்த்யாம் ||'

अनाहताब्जनिलया

அனுஹதாப்ஜநிலயா (485)

அனுஹதமெனப்படும் கமலத்தில் வீற்றிருப்பவள்.

1. இந்த சக்ரமானது ஹ்ருதய ப்ரதேசத்திலிருப்பது. பன்னிரெண்டு தளங்களுடையது. இந்த தளங்களில் க (4) ங, ச (4), ஞ, ட (2) ஆகப் பன்னிரெண்டு வர்ணங்களை பாவனை செய்யவேண்டும்.

श्यामाभा

ச்யாமாபா (486)

ச்யாமள வர்ணமான காந்தியோடு கூடியவள்.

1. பதினாறு வயதுடைய கன்யகைக்கு ச்யாமா என்று பெயராகையால் அந்த ரூபத்தோடு இருப்பவள் என்றும் சொல்லலாம்.

वदनद्वया

வதனத்வயா (487)

இரண்டு முகங்களையுடையவள்.

दंष्ट्रोज्ज्वला

தம்ஷ்ட்ரோஜ்வலா (488)

கோரைப் பல்லுகளுடன் ப்ரகாசிப்பவள்.

अक्षमालादिधरा

அக்ஷமாலாதி தரா (489)

அக்ஷமாலை முதலியவைகளைத் தரித்திருப்பவள்.

1. அகாரம் முதல் க்ஷகாரம் வரையிலுள்ள அக்ஷரங்களின் எண்ணிக்கையோடு கூடிய மாலைக்கு அக்ஷமாலையென்று பெயர்.

2. ராகிணீதேவியின் நான்கு கைகளில் அக்ஷமாலை, சூலம், கபாலம், டமரு இவை நாலும் இருப்பதாகச் சொல்லப்படும்.

**रुधिरसंस्थिता** (490)

*ருதிர ஸம்ஸ்த்திதா*

ருதிர தாதுவின் அபிமானி தேவதையாக இருப்பவள்.

**कालरात्र्यादिशक्त्यौघवृता** (491)

*காலராத்ர்யாதி சக்த்யௌக வ்ருதா*

காலராத்ரி முதலான சக்திக் கூட்டங்களால் சூழப்பட்டவள்.

1. இவர்களின் பெயர்—காலராத்ரி, கண்டிதா, காயத்ரீ, கண்டாகர்ஷிணீ, நார்ணு, சண்டா, சாயா, ஜயா, ஜங்காரிணீ, ஞானரூபா, டங்கஹஸ்தா, டங்காரிணீ. இவர்கள் அனாஹத கமலத்தின் பன்னிரெண்டு தளங்களில் வீற்றிருப்பவர்கள்.

2. தேவியினுடைய மூர்த்தி த்ரயங்களில் ஒன்றான ரௌத்ரியின் பெயர் கால ராத்ரீ என்பதாக வாராஹ புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

> 'யா ஸா நீலகிரிம் யாதா தபஸே த்ருதமானஸா |
> ரௌத்ரீ தமோபவா சக்தி: தஸ்யா: ச்ருணு தரே வ்ரதம் ||
> ... ... ... ... ...
> ரௌத்ரீ தபோரதா தேவீ தாமஸீ சக்திருத்தமா |
> ஸம்ஹாரகாரணீ நாம்னா காலராத்ரீதி தாம் விது: ||'

**स्निग्धौदनप्रिया** (492)

*ஸ்னிக்தௌதனப்ரியா*

நெய் முதலியவைகளின் ஸம்பந்தத்தோடு அன்னத்தில் ப்ரியமுள்ளவள்.

**महावीरेन्द्रवरदा** (493)

*மஹாவீரேந்த்ர வரதா*

மஹா வீரேந்த்ரர்களுக்கு வரங்களைக் கொடுப்பவள்.

1. அஹம், இதம் என்ற இரு பாவங்களையும் போக்கடித்தவர்களாயும் பராக்ரமசாலிகளாயும் ஸ்வாத்மாராமர்களாயும் இருப்பவர்களுக்கு வீரர்களென்று பெயர்.

'அஹமி ப்ரளயம் குர்வன்னிதம: ப்ரதியோகின: |
பராக்ரமம் பரோ புங்க்தே ஸ்வாத்மானம் அசிவாபஹம் ||'

இவர்களில் மஹான்களாயும் இந்த்ரன்போல் ச்ரேஷ்ட மானவர்களாயுமிருப்பவர்களுக்கு வரங்களைக் கொடுப்பதாக இங்கு சொல்லப்பட்டது.

2. வீரர்கள் என்றால் விவிதமான வாக்கையுடையவர்கள், அதாவது சமத்காரமாகப் பேசும் வன்மையுடையவர்கள் என்றும் அர்த்தம்.

3. ஸோமயாகத்தில் உபயோகப்படும் ஒரு பாத்ரவிசேஷத்திற்கு மஹா வீரமென்று பெயர். அவ்விதமான (பான) பாத்ரத்தினால் ப்ரம்ஹரஸாம்ருதத்தைப் பானம் செய்பவர்களுக்கு மஹா வீரர்கள் என்று பெயர் ஏற்படுகிறது. அவ்விதம் (பானம் செய்வதினால்) பரிபக்வமடைந்தவர்கள் ப்ரம்ஹவித்துக்களாக இருக்கிறபடியால் அவர்களுக்கு இந்த்ரர்களென்றும் பெயர். ப்ரம்ஹ ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டு தன்னுடைய ஆத்மாவும் பரப்ரம்ஹமும் அபேதமென்றும் பாக்கியெல்லாவற்றையும் 'இதம்' என்ற பாவனையோடு ஸாக்ஷியாகப் பார்த்திருப்பவர்களுக்கு இந்த்ரர்களென்று பெயர்.

'இதமதர்சம் இதமதர்சமிதி தஸ்மாத் இந்த்ரோ நாம |' (ச்ருதி)

4. 'த்ரிதயாபோக்தா வீரேச:' என்ற சிவ ஸூத்ரத்தில் சொல்லியபடி ஜாக்ரதா, ஸ்வப்னம், ஸுஷுப்தி, இம்மூன்று அவஸ்த்தைகளிலும் துரீய நிலைமையோடு இருப்பவர்களுக்கு வீரேந்த்ரர்களென்று பெயர்.

5. உள்ளும் புறமும் பரவிக்கொண்டு த்வைத புத்தியைக் கொடுத்து அதின் மூலமாக துக்கத்தை விளைவிக்கும் இந்த்ரியங்களுக்கு வீரர்களென்றும், அவைகளை அடக்கி ஆளுபவனுக்கு வீரேசனென்றும் பெயர் என்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'வீரேச இதி வீராணும் பேதவ்யஸனகாரிணும் |
அந்தர்பஹிர் வியாதாம் இந்த்ரியாணும் அதீச்வர: ||'

6, மஹா வீரனென்றால் ப்ரஹ்லாதனுக்குப் பெயர். முன்னொருக்கால் ப்ரஹ்லாதனும் இந்த்ரனும் நூறு தேவவர்ஷம் சண்டைபோட்டுப் பிறகு இருவரும் அம்பாளை ஸ்தோத்ரம் செய்ததாகவும், அப்போது அம்பாள் பிரஸன்னமாகி அவர்

களுக்கு வரங்களைக் கொடுத்ததாகவும் தேவீபாகவதத்தில் நாலாவது ஸ்கந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## राकिण्यम्बास्वरूपिणी
## ராகிண்யம்பா ஸ்வரூபிணீ (494)

(மேலே சொல்லிய விசேஷங்களையுடைய) ராகிணீ யோகினீயின் ஸ்வரூபத்தையுடையவள்.

1. ராகிணீதேவியின் த்யானம் பின் வருமாறு:—

'ஹ்ருத்பத்மே பானுபத்ரே த்விவதன லஸிதாம்
தம்ஷ்ட்ரிணீம் ச்யாமவர்ணாம்

அக்ஷம் சூலம் கபாலம் டமருமபி புஜை:
தாரயந்தீம் த்ரிநேத்ராம் |

ரக்தஸ்த்தாம் காலராத்ரீ ப்ரப்ருதி பரிவ்ருதாம்
ஸ்னிக்த பக்தைக ஸக்தாம்

ஸ்ரீமத் வீரேந்த்ர வந்த்யாம் அபிமதபலதாம்
ராகிணீம் பாவயாம: ||'

## मणिपूराब्जनिलया
## மணிபூராப்ஜநிலயா (495)

மணிபூர பத்மத்தை வாஸ ஸ்தானமாக உடையவள்.

1. மணிபூர பத்மம் நாபியிலிருப்பது. பத்து தளமுடைய கமலம். இந்த தளங்களில் ட (2), ண, த (4), ந, ப (2) ஆகப் பத்து வர்ணங்களிருப்பதாக பாவனை செய்யவேண்டும்.

## वदनत्रयसंयुता
## வதனத்ரயஸம்யுதா (496)

மூன்று முகங்களோடு கூடியவள்.

## वज्रादिकायुधोपेता
## வஜ்ராதிகாயுதோபேதா (497)

வஜ்ராயுதம் முதலான (நான்கு) ஆயுதங்களையுடையவள்.

1. லாகினீ தேவியின் நான்கு கைகளில் வஜ்ரம், சக்தி, தண்டம், அபயமுத்ரை, இவை நாலுமிருப்பதாகச் சொல்லப்படும்.

**डामर्यादिभिरावृता**

டாமர்யாதிபிராவ்ருதா (498)

டாமரீ முதலானவர்களால் சூழப்பட்டவள்.

இவர்கள் பதின்மருக்கும் பெயர்—டாமரீ, டங்காரணீ, ஞார்ணு, தாமஸீ, ஸ்தாண்வீ, தாக்ஷாயணீ, தாத்ரீ, நாரீ, பார்வதீ பட்காரிணீ.

**रक्तवर्णा**

ரக்தவர்ணு (499)

சிகப்பு நிறமானவள்.

**मांसनिष्ठा**

மாம்ஸநிஷ்டா (500)

மாம்ஸதாதுவின் அபிமானி தேவதையாயிருப்பவள்.

**गुडान्नप्रीतमानसा**

குடான்னப்ரீதமானஸா (501)

வெல்லம் கலந்த அன்னத்திஞல் ப்ரீதியடையும் மனதை யுடையவள்.

**समस्तभक्तसुखदा**

ஸமஸ்தபக்தஸுகதா (502)

(தன்னுடைய) எல்லா பக்தர்களுக்கும் ஸுகத்தைக் கொடுப்பவள்.

**लाकिन्यम्बास्वरूपिणी**

லாகின்யம்பாஸ்வரூபிணீ (503)

லாகினீ தேவியின் ஸ்வரூபமாக இருப்பவள்.

1\. லாகினீதேவியைப் பின் வருமாறு வர்ணிக்கப்பட்டிருக் கிறது:—

'திக்பத்ரே நாபிபத்மே த்ரிவதன விலஸத்
தம்ஷ்ட்ரிணீம் ரக்தவர்ணும்

சக்திம் தம்போளி தண்டாவபயமத புஜைர்
தாயெந்தீம் மஹோக்ராம் |
டாமர்யாத்யை: பரீதாம் பசுஜனபயதாம்
மாம்ஸதாத்வேக நிஷ்டாம்
கௌடான்ன ஸக்தசித்தாம் ஸகல சுபகரீம்
லாகினீம் பாவயாம: ||'

(திக்குகள் பத்தானபடியால் திக்பத்ரமென்பது பத்து தளங்களைக் குறிக்கும்))

## स्वाधिष्ठानाम्बुजगता (504)

ஸ்வாதிஷ்டானம்புஜகதா

ஸ்வாதிஷ்டான கமலத்தை அடைந்தவள்.

1. ஸ்வாதிஷ்டான பத்மம் குஹ்யஸ்தானத்திலிருப்பது, ஆறு தளங்களுடையது. இந்த தளங்களில் ப (2), ம, ய, ர, ல என்ற வர்ணங்களிருப்பதாக பாவனை செய்யவேண்டும்.

## चतुर्वक्त्रमनोहरा (505)

சதுர் வக்த்ரமனோஹரா

நான்கு முகங்களோடு அழகாக இருப்பவள்.

## शूलाद्यायुधसंपन्ना (506)

சூலாத்யாயுத ஸம்பன்னா

சூலம் முதலான ஆயுதங்களோடு நிறைந்த (கைகளையுடையவள்.

இந்த ஆயுதங்கள் சூலம், பாசம், கபாலம், அங்குசம்.

## पीतवर्णा (507)

பீதவர்ணா

மஞ்சள் நிறமானவள்.

பொன் நிறத்திற்கும் பீதவர்ணமென்று பெயர். பீதமென்றால் குங்குமப்பூவுக்கும் பெயர்.

## अतिगर्विता (508)

அதிகர்விதா

மிகுந்த கர்வத்தோடு கூடியவள்.

காகினீதேவீ அதிகமான ஸௌந்தர்யம் முதலானவைகளு டனிருப்பதால் கர்வத்தோடிருப்பதாக சொல்லப்பட்டது.

**मेदोनिष्ठा**

**மேதோநிஷ்டா** (509)

மேதஸ் (கொழுப்பு) என்ற தாதுவிலிருப்பவள்.

1. கர்வத்திற்கு மூலதாதுவான கொழுப்பிற்கு அபிமானி தேவதையாக இருப்பதால் அதிக கர்வமடைந்தவள் என்று ஏற்படுகிறது.

**मधुप्रीता**

**மதுப்ரீதா** (510)

மத்யத்தில் ப்ரீதியுள்ளவள்.

1. மது என்றால் தேனுக்கும் பெயர்.

2. அம்பாள் மதுவினால் ப்ரீதியடைவது ச்ருதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

'யன் மதுனா ஜுஹோதி மஹதீமேவ தத்தேவதாம் ப்ரீணாதி'

**बन्धिन्यादिसमन्विता**

**பந்தின்யாதி ஸமன்விதா** (511)

பந்தினீ முதலானவர்களோடு கூடியவள்.

இவர்கள் பெயர் பந்தினீ, பத்ரகாளி, மஹாமாயா, யசஸ்வினீ, ரக்தா, லம்போஷ்டீ.

**दध्यन्नासक्तहृदया**

**தத்யன்னாஸக்த ஹ்ருதயா** (512)

தயிர்கலந்த அன்னத்தில் அதிக விருப்பமுடையவள்.

**काकिनीरूपधारिणी**

**காகினீ ரூபதாரிணீ** (513)

காகினீ தேவியின் ரூபத்தையுடையவள்.

காகினீ தேவியின் த்யானம் பின் வருமாறு:—

'ஸ்வாதிஷ்டானாக்ய பத்மே ரஸதள லஸிதே
வேதவக்த்ராம் த்ரிநேத்ராம்

ஹஸ்தாப்யாம் தாரயந்தீம் த்ரிசிக குணகபா லாங்குசான் |
ஆத்தகர்வாம் |
மேதோதாது ப்ரதிஷ்டாம் அலிமதமுதிதாம்
பந்தினீ முக்ய யுக்தாம்
பீதாம் தத்யோதனேஷ்டாம் அபிமதபலதாம்
காகினீம் பாவயாம: || '

(ஷட்ரஸங்களானபடியால் ரஸதளமென்பது ஆறு தளங்களைக் குறிக்கும். வேதங்கள் நான்கையால் வேதவக்த்ராம் என்பது நான்கு முகங்களைக் குறிக்கும்.)

## मूलाधाराम्बुजारूढा

மூலாதாராம்புஜாரூடா (514)

மூலாதாரபத்மத்தில் ஏறியிருப்பவள்.

1. அதாவது அதின் கர்ணிகையில் இருப்பவள் என்று அர்த்தம்.

2. மூலாதாரபத்மமென்பது குஹ்யஸ்தானம், பாயு (ஆஸனம்) இவற்றின் நடுவிலிருப்பது. நான்கு தளங்களுடையது. இவற்றில் வ, ச, ஷ, ஸ என்ற நான்கு வர்ணங்களிருப்பதாக பாவனை செய்யவேண்டும்.

## पञ्चवक्त्रा

பஞ்சவக்த்ரா (515)

ஐந்து முகங்களையுடையவள்.

## अस्थिसंस्थिता

அஸ்திஸம்ஸ்த்திதா (516)

அஸ்தி (எலும்பு) தாதுவில் இருப்பவள்.

## अङ्कुशादिप्रहरणा

அங்குசாதி ப்ரஹரணா (517)

அங்குசம் முதலிய ஆயுதங்களையுடையவள்.

இந்த ஆயுதங்கள் அங்குசம் (ஸ்ருணி), தாமரை, புஸ்தகம் ஞானமுத்ரை.

## वरदादिनिषेविता

### வரதாதி நிஷேவிதா (518)

வரதா முதலான சக்திகளால் ஸேவிக்கப்பட்டவள்.

இவர்கள் பெயர் வரதா, ச்ரீ (ஸ்ரீ), ஷண்டா, ஸரஸ்வதீ.

## मुद्गौदनासक्तचित्ता

### முத்கௌதனாஸக்தசித்தா (519)

முத்கான்னத்தில் அதிக விருப்பமுடையவள்.

முக்கமென்பது சிறுபயறு. முத்கான்னமென்பது முக்கத்தினால் செய்யப்பட்ட குழம்பில் கலந்த அன்னமென்று அர்த்தம். அது உடைத்த முக்கம், வெல்லம், தேங்காய், மிளகு, உப்புப் பொடி முதலான ஸாமக்ரியைகளால் தயாரிக்கப்படுகிறது.

'ஸுசாலிதண்டுல ப்ரஸ்த்தம் ததர்தம் முத்க பின்னகம் |
சது: பலம் குடம் ப்ரோக்தம் தன்மானம் நாளிகேரகம் ||
முஷ்டி மாத்ரம் மரீசம் ஸ்யாத் ததர்தம் ஸைந்தவம் ரஜ: |
ததர்தம் ஜீரகம் வித்யாத் குடவம் கோக்ருதம் விது: ||
கோக்ஷீரேண ஸ்வமாத்ரேண ஸம்யோஜ்யா கமலாஸனம் |
மந்தாக்னி பசனுதேவ் வித்தான்னமிதமுத்தமம் ||

(குமாரஸம்ஹிதை)

## साकिन्यम्बास्वरूपिणी

### ஸாகின்யம்பாஸ்வரூபிணீ (520)

ஸாகினீ தேவியின் ரூபமாக இருப்பவள்.

ஸாகினீ தேவியின் த்யானம் பின் வருமாறு:—

'மூலாதாரஸ்த்த பத்மே ச்ருதிதள லஸிதே
பஞ்சவக்த்ராம் த்ரிநேத்ராம்
தாம்ராபாம் அஸ்த்தி ஸம்ஸ்த்தாம் ஸ்ருணிமபி கமலம்
புஸ்தகம் ஞானமுத்ராம் |
பிப்ராணும் பாஹுதண்டை: ஸுலலிதவாதா
பூர்வ சக்த்யாவ்ருதாம் தாம்
முத்கான்னு ஸக்தசித்தாம் மதுமதமுதிதாம்
ஸாகினீம் பாவயாம: ||'

आज्ञाचक्राब्जनिलया

ஆக்ஞா சக்ராப்ஜ நிலயா (521)

ஆக்ஞா சக்ரமாகிய கமலத்திலிருப்பவள்.

ஆக்ஞா சக்ரமானது புருவங்களுக்கு நடுவிலிருப்பது. இரண்டு தளங்களுடையது. ஹ, க்ஷ என்ற இரண்டு வர்ணங்களையும் அந்த இரண்டு தளங்களிலிருப்பதாக பாவனை செய்ய வேண்டும்.

शुक्लवर्णा

சுக்லவர்ணா (522)

வெண்மையான வர்ணத்தை யுடையவள்.

षडानना

ஷடானனா (523)

ஆறுமுகங்களையுடையவள்.

मज्जासंस्था

மஜ்ஜாஸம்ஸ்த்தா (524)

மஜ்ஜ எனப்படும் தாதுவின் அபிமானி தேவதையாக இருப்பவள்.

மஜ்ஜ(ன்) என்பது எலும்பு, மாம்ஸம் இவைகளின் ஸாரம், ஊன் என்பது.

हंसवती मुख्यशक्तिसमन्विता

ஹம்ஸவதீ முக்ய சக்தி ஸமன்விதா (525)

ஹம்ஸவதீ முதன்மையாகவுடைய சக்திகளோடு கூடியவள்.

இவர்கள் பெயர் ஹம்ஸவதீ, க்ஷமாவதீ.

हरिद्रान्नैकरसिका

ஹரித்ரான்னைகரஸிகா (526)

மஞ்சள் கலந்த (நிறமான) அன்னத்திலேயே அதிகமான ப்ரியமுள்ளவள்.

**हाकिनीरूपधारिणी**

**ஹாகினீ ரூபதாரிணீ** (527)

ஹாகினீதேவியின் ரூபத்தை தரிப்பவள்.

1. ஹாகினீ தேவியின் த்யானம் பின்வருமாறு:—

'ப்ரூமத்யே பிந்துபத்மே தளயுக கலிதே
  சுக்லவர்ணும் கராப்ஜை:
பிப்ராணும் ஞானமுத்ராம் டமருகமமலாம்
  அக்ஷமாலாம் கபாலம் |
ஷட்சக்ராதாரமத்யாம் மஜ்ஜஸம்ஸ்த்தாம் த்ரிநயனவிலஸிதாம்
  ஹம்ஸவத்யாதியுக்தாம்
ஹாரித்ரான்னைக ஸக்தாம் ஸகலஸுகதரீம்
  ஹாகினீம் பாவயாம: ||'

2. ஹாகினீ தேவியின் நான்கு கைகளில் ஞானமுத்ரை, டமருகம், அக்ஷமாலை, கபாலம் இருக்கின்றன.

**सहस्रदलपद्मस्था**

**ஸஹஸ்ரதளபத்மஸ்த்தா** (528)

ஸஹஸ்ரார கமலத்திலிருப்பவள்.

ஸஹஸ்ரார கமலமென்பது ப்ரம்ஹரந்த்ரத்திலிருப்பது.

**सर्व्ववर्णोपशोभिता**

**ஸர்வவர்ணோபசோபிதா** (529)

ஸர்வவிதமான வர்ணங்களால் சோபிக்கிறவள்.

1. அதாவது பாடல, ச்யாம, ரக்த, பீதம் முதலான எல்லா விதமான வர்ணங்களோடு கூடிய ரூபத்தையுடையவள்—சித்ரவர்ணமாயிருப்பவள்.

2. வர்ணமென்றால் அக்ஷரத்திற்கும் பெயர். இந்த அர்த்தத்தில் அகாரம் முதல் க்ஷகாரம் வரையிலுள்ள ஐம்பது அக்ஷரங்களுக்குரிய அம்ருதா முதல் க்ஷமாவதி முடிய இருப்பவர்கள் ஐம்பது தேவதைகள். இது அனுலோமக்ரமம். இவர்களையே (விலோமக்ரமமாக) க்ஷமாவதி முதல் அம்ருதா முடியக் கணக்கிட்டால் ஐம்பது, ஆக நூறு. இந்த நூறுபேரும் ஒவ்வொருவரும் பத்து தளம் வீதம் வீற்றிருப்பதாய் நூறுபேரும் ஆயிரம்

தளங்களிலிருக்கிருர்கள். இவ்விதம் ஸர்வ வர்ணங்களின் தேவதைகள் தன் ஸமீபத்திலிருக்க விளங்கிக்கொண்டிருப்பதால் யாகினீ தேவியை ஸர்வ வர்ணோப சோபிதா என்று சொல்லப்பட்டது (உப என்றால் ஸமீபத்தில் என்று அர்த்தம்.)

3. வரருசியின் கடபயாதி ஸங்க்யையின்படி உ ப என்பது (உ-0, ப-1) பத்தைக்குறிக்கும். ஓரோர் தேவதையும் பத்து தளங்களிலிருப்பதாக மேலே சொல்லியது இதின் மூலமாகவும் ஏற்படுகிறது.

4. இந்தக் கணக்கையொட்டியே சிலர்கள் யோகினீ ந்யாஸம் செய்யும்போது ஒவ்வொரு தேவதையையும் பத்து தடவை சொல்லி ந்யாஸம் செய்வதுண்டு.

## सर्वायुधधरा

### ஸர்வாயுததரா (530)

ஸகல விதமான ஆயுதங்களை தரிப்பவள்.

இதேவிதமாக ச்ருதியிலும்,

'ஸஹஸ்ராணி ஸஹஸ்ரதா பாஹ்வோஸ்தவ ஹேதய: |

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

## शुक्लसंस्थिता

### சுக்ல ஸம்ஸ்த்திதா (531)

சுக்ல (வீர்ய) தாதுவின் அபிமானி தேவதையாக இருப்பவள்.

ரமண காலத்தில் செய்யவேண்டியதாக பவிஷ்யோத்தர புராணத்தில் சொல்லப்பட்ட ஒரு த்யானத்திற்கு சுக்லமென்று பெயர். அதில் நிலையுள்ளவள் என்றும் அர்த்தம் சொல்லலாம்.

## सर्वतोमुखी

### ஸர்வதோமுகீ (532)

எல்லா திக்குகளிலும் திரும்பிய முகங்களையுடையவள்.

இவ்வாறே 'ஸர்வதோக்ஷி சிரோமுகம்' என்று கீதையிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

**सर्वौदनप्रीतचित्ता**

*ஸர்வௌதனப்ரீத சித்தா* (533)

ஸகலவித்மான அன்னங்களாலும் ப்ரீதியடையும் மனதையுடையவள்.

**याकिन्यम्बास्वरूपिणी**

*யாகின்யம்பாஸ்வரூபிணீ* (534)

யாகினீ தேவியின் ஸ்வரூபத்தையுடையவள்.

*யாகினீ தேவியின் த்யானம் பின்வருமாறு:—*

முண்டவ்யோமஸ்த்த பத்மே தச சததளகே
கர்ணிகா சந்த்ர ஸம்ஸ்த்தாம்
ரேதோ நிஷ்டாம் ஸமஸ்தாயுத கலிதகராம்
ஸர்வதோ வக்த்ர பத்மாம் |
ஆதி க்ஷாந்தார்ண சக்தி ப்ரகட பரிவ்ருதாம்
ஸர்வ வர்ணாம் பவானீம்
ஸர்வான்னஸக்த சித்தாம் பரசிவரஸிகாம்
யாகினீம் பாவயாம: ||'

இவ்விதமாக அம்பாளை யோகினீஸ்வரூபமாய் வர்ணித்து விட்டு இனி வேறு ப்ரகாரங்களால் வர்ணிக்கத் தொடங்குகிறார்.

**स्वाहा**

*ஸ்வாஹா* (535)

ஸ்வாஹா என்ற ரூபமாக இருப்பவள்.

**स्वधा**

*ஸ்வதா* (536)

ஸ்வதா என்ற ரூபமாக இருப்பவள்.

1. 'ஸ்வாஹா தேவஹவிர்தானே ச்ரௌஷட் வௌஷட் வஷட் ஸ்வதா' என்றபடி ஹவிஸ்ஸை யாகாக்னியில் போடும் போது சொல்லப்படும் வசனங்கள் ஸ்வாஹா, ச்ரௌஷட், வௌஷட், வஷட், ஸ்வதா என்பவைகள். இவற்றில் தேவதைகளைக் குறித்துச் செய்யும்போது ஸ்வாஹா என்றதையும், பித்ருக்களைக் குறித்துச் செய்யும்போது ஸ்வதா என்பதையும் பிரயோகம் செய்யப்படும்.

2. இந்தப் பதங்களை ஒருவன் உச்சரிப்பதினால் தேவாதிகளுக்கு எப்படி த்ருப்தி ஏற்படுமோ அதேமாதிரியான த்ருப்தியானது அவர்களுக்கு அவன் அம்பாளுடைய பெயரைச் சொல்வதினால் ஏற்படுவதாகவும், ப்ரம்ஹஞானிகள் அம்பாளுடைய பெயரைச் சொல்வதினாலேயே (ஸ்வாஹா, ஸ்வதா முதலான பதங்கள் சொல்வதின் ப்ரயோஜனமாகிய) தேவாதிகளுடைய ப்ரீதியை அடைவதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸோம ஸம்ஸ்தா: ஹவி ஸம்ஸ்த்தா: பாக ஸம்ஸ்த்தாச்ச சப்த யா: |
தாஸ்த்வதுச்சாரணாத் தேவி க்ரியந்தே ப்ரம்ஹவாதிபி: ||
யஸ்யா: ஸமஸ்த ஸுரதா ஸமுதீரணேன
த்ருப்திம் ப்ரயாதி ஸகலேஷு மகேஷு தேவி |
ஸ்வாஹாஸி வை பித்ருகணஸ்ய ச த்ருப்திஹேது:
உச்சார்யஸே த்வம் அத ஏவ ஜனை: ஸ்வதா ச ||'

(மார்க்கண்டேய புராணம்)

3. ஆகவே அம்பாள் ஸ்வாஹா, ஸ்வதா என்ற ரூபிணியாக இருக்கிறாள் என்பதாக இங்கு சொல்லப்பட்டது.

4. சிவனுடைய அக்னிரூபமான மூர்த்தியின் பத்னிக்கு ஸ்வாஹா என்ற பெயரென்றும், இவரே ஸ்கந்தருடைய தாயாரென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸ்வாஹா வன்ஹ்யாத்மனஸ்தஸ்ய ப்ரோக்தா பசுபதே: ப்ரியா |
ஷண்முகோ பகவான் தேவோ புதை: புத்ர உதாஹ்ருத: ||

(லிங்க புராணம்)

'நாம்னு பசுபதேர்யாது தனுரக்னிர் த்விஜை: ஸ்ம்ருதா |
தஸ்ய பத்னீ ஸ்ம்ருதா ஸ்வாஹா ஸ்கந்தச்சாபி ஸுத: ஸ்ம்ருத: ||'

(வாயு புராணம்)

5. 'ஸ்வாஹா மாஹேச்வரே புரே' என்ற பத்மபுராண வசனத்தின்படி மாஹேச்வரபீடத்தின் அதிஷ்டான தேவிக்கு ஸ்வாஹா என்று பெயர்.

6. இந்த நாமங்களை ப்ரயோகத்தில் 'ஸ்வாஹா நம:', 'ஸ்வதா நம:' என்றும் 'ஸ்வாஹாயை நம:', 'ஸ்வதாயை நம:' என்றும் சொல்லலாம்.

## अमतिः
## அமதி: (537)

அவித்யா ரூபமாக இருப்பவள்.

1. ஸ்ருஷ்டி க்ரமத்தைப்பற்றிச் சொல்லுகையில் முதல் முதலாக இருக்கும் மூலப்ரக்ருதியைப்பற்றி ஏற்கனவே வந்த 397 நாமமாகிய 'மூலப்ரக்ருதி:' என்பதில் சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கு புத்தியினுடைய அடையாளமில்லாமலிருக்கிறபடியால் 'அமதி' என்ற பெயர் ஏற்படுகிறது. அவ்விதமான ரூபமாக அம்பாளிருப்பதாகவும் ஏற்கனவே அங்கே சொல்லப்பட்டிருக்கிறது.

2. அ என்பது கொஞ்சம் என்ற அர்த்தமுடையதாகையால் அதையொட்டி வ்ருத்யாத்மகமான ஞானரூபத்தோடு கூடியவள் என்றும் சொல்லலாம்.

3. இந்த பதத்திற்கே ஸ்வாத்மவிக்ஞானமென்ற அர்த்தமிருப்பதாக துர்கபட்டரால் சொல்லப்பட்டிருக்கிறது.

## मेधा
## மேதா (538)

புத்திவிசேஷரூபமாக இருப்பவள்

1. மேலே சொல்லிய 'அமதி:' என்பதற்கு பிறகு புத்தியோடு கூடியதாக ஏற்படும் ஸ்ருஷ்டிக்கு மேதா என்று பெயராகையால் அந்த ரூபமாகவும் அம்பாளிருப்பதை இங்கு சொல்லப்பட்டது.

2. 'தீர்தாரணாவதீ மேதா' என்ற அக்னிபுராண வசனப்படி ஞாபகசக்திக்கு மேதா என்றும் தீ என்றும் பெயர். முந்திய ஜன்மாந்தரங்களில் செய்த கார்யங்களின் வாஸனையானது அடங்கியொடுங்கி 'அமதி:' என்ற முதல் ஸ்ருஷ்டிரூபத்திலிருந்த பிறகு அவைகளின் ஞாபகம் ஏற்படுவதான இரண்டாவது ஸ்ருஷ்டி ரூபத்திற்கு மேதா என்ற பெயர்.

3. அம்பாள் மேதாரூபமாக இருப்பதை தேவீமஹாத்மயத்தில்

'மேதாஸி தேவி விதிதாகில சாஸ்த்ரஸாரா |'

என்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

4. அம்பாள் ஸகல பூதங்களிலிருக்கும் மேதாரூபமாக இருப்பதை

'யாதேவீ ஸர்வபூதேஷு மேதாரூபேண ஸம்ஸ்த்திதா |'
என்பதாக தேவீமஹாத்ம்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

5. 'மேதா காச்மீர மண்டலே' என்ற பாத்மவசனப்படி காச்மீரத்திலிருக்கும் அம்பாளுக்கு மேதா என்று பெயர்.

**श्रुतिः** (539)
**ச்ருதி;**

வேதங்களின் ரூபமாக இருப்பவள்.

**स्मृतिः** (540)
**ஸ்ம்ருதி:**

ஸ்ம்ருதிகளின் ரூபமாக இருப்பவள்.

1. வேதங்கள் அம்பாளுடைய ரூபமாக இருப்பதை அனேக இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

'சப்தாத்மிகா ஸுவிமலர்க்யஜுஷாம் நிதானம்
உத்கீதரம்ய பத பாடவதாம் ச ஸாம்னாம் |
தேவித்ரயீ பகவதீ பவ பாவனாய
வார்தாவி ஸர்வஜகதாம் பரமார்திஹந்த்ரீ ||'

(தேவீமாஹாத்ம்யம்)

'ருசோ யஜூம்ஷி ஸாமானி த்தைவாதர்வணானி ச |
ப்ரம்ஹண: ஸஹஜம் ரூபம் நித்யைஷா சக்திரவ்யயா ||'

(கூர்ம புராணம்)

2. ச்ருதி என்றால் கேட்பது, ஸ்ம்ருதி என்றால் நினைவு, ஞாபகம் என்றும் அர்த்தம். ஆகவே ச்ரவண ஸ்மரணாத்மகமான ஞானரூபமாக அம்பாளிருப்பதை இந்த நாமங்களில் சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

'யாதேவீ ஸர்வபூதேஷு ஸ்ம்ருதிரூபேண ஸம்ஸ்த்திதா |'

(தேவீமாஹாத்ம்யம்)

ஸ்ம்ருதி: ஸம்ஸ்மரணாத் தேவீ' (தேவீபுராணம்)

'வர்த்தமானான்யதீதானி ததைவானாகதான்யபி |
ஸ்மரதே ஸர்வகார்யாணி தேனாஸௌ ஸ்ம்ருதிருச்யதே ||'

(வாயுபுராணம்)

நடக்கிற, நடந்த, நடக்கப்போகிற ஸகலகார்யங்களைப்பற்றிய நினைவுடனிருப்பதால் அம்பாளுக்கு ஸ்ம்ருதியென்று பெயர்.

अनुत्तमा

அனுத்தமா (541)

தனக்கு மேற்பட்டவரில்லாதவள்.

1. அதாவது அம்பாளைவிட உத்தமமானவர் என்று சொல்லக்கூடியதாக ஒருவருமில்லையென்று தாத்பர்யம்.

'ந தத் ஸமச்சாப்யதிகச்ச த்ருச்யதே' (ச்ருதி)

'ந த்வத் ஸமோऽஸ்த்யப்யதிக: குதோऽன்ய:' (பகவத்கீதை)

2. லோகத்தில் மனுஷ்யர்களில் அதமனுயிருப்பவனை ருத்ரஹீனனென்றுவது விஷ்ணுஹீனனென்றுவது சொல்லாமல் சக்திஹீனனென்று சொல்வது வழக்கமாயிருப்பதிலிருந்து அம்பாளே அனுத்தமமான தைவமென்று ஏற்படுகிறது.

'ருத்ரஹீனம் விஷ்ணுஹீனம் ந வதந்தி ஜனாஸ்ததா |
சக்திஹீனம் யதா ஸர்வே ப்ரவதந்தி நராதமம் ||'

(தேவீபாகவதம்)

3 அல்லது, ந நுத்தா—பிறருடைய அதீனமாக இல்லாத, மா—புத்தி (அல்லது, ஐச்வர்யம்) அதோடு கூடியவள் அனுத்தமா. அதாவது, ஸ்வதந்த்ரமான புத்தி, ஸஹஜமான ஐச்வர்யம் இவைகளையுடையவள் என்று தாத்பர்யம்.

पुण्यकीर्तिः

புண்யகீர்த்தி: (542)

புண்யத்தைகொடுக்கும் கீர்த்தியுடையவள்.

அம்பாளுடைய கீர்த்தியை ஸ்மரிப்பதும் சொல்லுவதும் புண்யத்தைக் கொடுக்குமென்றும் தன்னுடைய பக்தர்களுக்குப் புண்யத்தைக் கொடுப்பதில் கீர்த்திவாய்ந்தவளென்றும் சொல்லலாம்.

पुण्यलभ्या

புண்யலப்யா (543)

புண்யத்தால் அடையக்கூடியவள்.

அதாவது முன்செய்திருக்கும் புண்யவிசேஷத்தின் பலனுகத்தான் அம்பாளுடைய க்ருபையை அடையக்கூடும் என்று தாத்பர்யம்.

'பச்யந்தி புண்யபுஞ்ஜாயே யேவேதாந்தாஸ்தபஸ்வின: |
ராகிணோ நைவ பச்யந்தி தேவீம் பகவதீம் சிவாம் ||'
(தேவீபாகவதம்)

'அதஸ்த்வாம் ஆராத்யாம் ஹரிஹர விரிஞ்சாதிபிரபி
ப்ரணந்தும் ஸ்தோதும் வா கதம் அக்ருதபுண்ய: ப்ரபவதி |'
ஸௌந்தர்யலஹரீ)

## पुण्यश्रवणकीर्तना

## புண்யச்ரவணகீர்த்தனு (544)

புண்யமான ச்ரவண, கீர்த்தனங்களையுடையவள்.

1. அதாவது, அம்பாளுடைய கதாச்ரவணமும் அம்பாளுடைய நாமகீர்த்தனமும் புண்யப்ரதமானவையென்று தாத்பர்யம்.

2. அல்லது, அம்பாளுடைய கதாச்ரவணமும் நாமகீர்த்தனமும் விஹிதமான (அவச்யம் செய்யவேண்டியதான) கர்மரூபமாக இருக்கின்றனவென்றும் சொல்லலாம்.

## पुलोमजार्चिता

## புலோமஜார்ச்சிதா (545)

இந்த்ராணியினல் ஆராதிக்கப்பட்டவள்.

1. நஹுஷன் தேவலோகத்தை ஆளும்போது இந்த்ரனைத் தான் திரும்பவும் அடைவதற்காக இந்த்ராணியானவள் அம்பாளைப் பூஜித்த வ்ருத்தாந்தமானது தேவீபாகவதம் ஆருவது ஸ்கந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## बन्धमोचनी

## பந்தமோசனீ (546)

பந்தங்களிலிருந்து விடுவிப்பவள்.

1. பந்தமென்பது அவித்யாரூபமான பந்தம், ஸம்ஸார பந்தம்.

2. அல்லது, காராக்ருஹம் முதலியவைகளில் கட்டுண்டிருப்பதையும் பந்தமென்று சொல்லப்படும். அவைகளிலிருந்தும் அம்பாள் விடுவிப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'ராக்ஞா க்ருத்தேனசாக்ஞப்தோ வத்யோ பந்தகதோபிவா |

... ... ... ... ...

ஸ்மரன் மமைதச்சரிதம் நரோ முச்யேத ஸங்கடாத் ||'

(தேவீமாஹாத்ம்யம்)

'பந்தே வதே மஹதி ம்ருத்யுபயே ப்ரஸக்தே
வித்தக்ஷயே ச விவிதே ச மஹோபதாபே |
யத்பாதபூஜனமிஹ ப்ரதிகாரமாஹு:
ஸா மே ஸமஸ்த ஜனனீ சரணம் பாவனீ ||'

(துர்க்காசந்த்ரகலாஸ்துதி)

3. பாணாஸுரனால் கட்டுண்ட அனிருத்தன் அம்பாளை ஸ்தோத்ரம்செய்து விடுவிக்கப்பட்ட வ்ருத்தாந்தமானது ஹரி வம்சத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'பாணாஸுர ப்ரஹித பன்னக பந்தமோக்ஷ:
தத் பாஹு தர்பதளனாத் உஷயா ச யோக: |
ப்ராத்யும்னினா க்ருதம் அலப்யத யத் ப்ரஸாதாத்
ஸா மே சிவா ஸகலமப்யசுபம் க்ஷிணோது ||'

(துர்கா சந்த்ரகலாஸ்துதி)

இதே மாதிரி காலகேதுவென்ற அஸுரனால் ஏகாவலீ என்ற ராஜகன்யகையானவள் சிறையிலிடப்பட்டபோது அவளுடைய ஸகியான யசோவதீ என்பவள் அம்பாளை உபாஸித்து ராஜகன்ய கையை விடுதலையடையச் செய்தாள் என்றதான வ்ருத்தாந்த மானது தேவீபாகவதம் ஆறாவது ஸ்கந்தத்தில் சொல்லப்பட் டிருக்கிறது.

## बन्धुरालका

## பந்துராலகா (547)

(அலைகள்போல்) வளைவுகளையுடைய கூந்தலையுடையவள்.

1. அளகமென்றால் முன்னச்சிமயிருக்கும் பெயர்.

2. இந்தநாமத்தை 'பர்பராலகா' என்றும் சொல்வ துண்டு. அப்போது, வளைந்த முன்னச்சி மயிர்களையுடையவள் என்று அர்த்தம். 'பர்பராலகா' என்பதுதான் விசேஷமாக அங்கீகரிக்கப்படும் பாடம்.

'ஆபாடலாதராணாம் ஆநீல ஸ்னிக்த பர்பரகசானாம்'

(லலிதாஸ்தவரத்னம்)

**विमर्शरूपिणी** **(548)**

**விமர்சரூபிணீ**

விமர்சரூபத்தையுடையவள்.

1. பரப்ரம்ஹமானது சிவசக்தி ஸம்மேளனமான ரூபம் என்பது ஸ்ரீ வித்யையின் ஸித்தாந்தம். அதில் சிவன் வேறு, சக்தி வேறு என்பது இல்லை. இவ்விதமான அபேதரூபத்தோடு கூடியிருக்கும் அம்பாளை ப்ரகாச விமர்ச ஸாமரஸ்ய ரூபிணீ என்று சொல்வது வழக்கம். ப்ரகாசமாத்ரமான சிவனானவர் அனன்யோன் முகமான அஹம்ப்ரத்யயத்தையுடையவர் - அதாவது, இதர வஸ்துக்களுடைய ஸம்பந்தமில்லாமல் சுத்தசைதன்ய ரூபமாக இருப்பவர். சக்திரூபிணியான அம்பாள் இந்த சுத்த சைதன்யத்தில் ஒரு ஸ்புரணம் (உணர்ச்சி) ஏற்படுத்தும்போது அதின்மூலமாக ஜகத்தானது (ஏற்கனவே சொல்லப்பட்ட) பஞ்சவித க்ருத்யங்களுக்கு பொருட்டாக ஏற்படுகிறது. இவ்விதமான உணர்ச்சியானது பரமசிவனுக்கு ஸ்வாபாவிகமாக இருந்தபோதிலும் அதை ஏற்படுத்தும் (அவருடைய) விமர்சரூபமென்று சொல்லப்படும்

'ஸ்வாபாவிகீ ஸ்புரத்தா விமர்சரூபாஸ்ய வித்யதே சக்தி: |
ஸைவ சராசரமகிலம் ஜனயதி ஜகதேததபி ச ஸம்ஹரதி ||'

(ஸௌபாக்ய ஸுதோதயம்)

இவ்விதமான விமர்சரூபத்தோடு அம்பாளிருப்பதை இங்கு சொல்லப்பட்டது. ஸ்ரீ வித்யையில் ப்ரகாசரூபத்தை காமேச்வரர் என்றும் விமர்சரூபத்தை காமேச்வரீ என்றும் சொல்வது வழக்கம்.

2, அல்லது, விமர்சமென்றால் வாசக சப்தத்தை (வார்த்தைகளை) குறிக்கும். வாச்யமான (சொல்லவேண்டியதான) ஞானத்திற்கு வார்த்தையானது இன்றியமையாததுபோல் வாசகத்திற்கு வாச்யமானதும் இன்றியமையாததாக இருக்கிறது. அதாவது, வாக்கு, அர்த்தம் இவையிரண்டும் ஒன்றைவிட்டொன்று பிரியாமலிருக்கிறது.

'வாசகேன விமர்சேன வினா கிம் வா ப்ரகாச்யதே |
வாச்யேனாபி ப்ரகாசேன வினா கிம் வா விம்ருச்யதே ||

தஸ்மாத் விமர்சோ விஸ்பூர்த்தௌ ப்ரகாசம் ஸமபேக்ஷதே |
ப்ரகாசச்சாத்மனோ ஞானே விமர்சம் ஸமபேக்ஷதே ||'

(மாத்ருகா விவேகம்)

இவ்விதம் வாக்கு, அர்த்தம் இவையிரண்டும் சேர்ந்திருப்பதுபோல் பார்வதீ, பரமேச்வரர்கள் கலந்திருக்கும் ரஹஸ்யத்தை காளிதாஸரானவர்.

வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தௌ வாகர்த்த ப்ரதிபத்தயே |
ஜகத: பிதரௌ வந்தே பார்வதீ பரமேச்வரௌ ||

என்று ரகுவம்சத்தில் சொல்லியிருக்கிறார். இதில் வாக்கானது விமர்சரூபிணியான அம்பாள், அர்த்தமானது ப்ரகாச ரூபமான பரமேச்வரர்.

## विद्या
## வித்யா (549)

வித்யா ரூபமாக இருப்பவள்.

1. அதாவது, மோக்ஷத்தைக் கொடுக்கும் ஞானஸ்வரூபமாக இருப்பவள் என்று தாத்பர்யம். இதையேதான்,

'வித்யாஸி ஸா பகவதீ பரமா ஹி தேவீ |'

என்று தேவீ மஹாத்ம்யத்திலும்,

'சைதன்யஸ்வரூபா சக்தி: | ஸைவ வித்யா |'

என்று கௌடபாதருடைய ஸ்ரீ வித்யாரத்ன ஸூத்ரத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

2. மாயையினுடைய கார்யங்களைப்பற்றிய விவேகத்தின் மூலமாக ஸரியான ஞானத்தைக் கொடுப்பதும், ஞானக்ரியாத்மகமானதும், தேஜஸ்ஸிலிருப்பதுமான ஒரு கலாவிசேஷத்திற்கு சைவ தந்த்ரத்தின்படி வித்யையென்று பெயர்.

'மாயாகார்ய விவேகேன வேத்தி வித்யாபதம் யயா |
ஸா கலா பரமா ஜ்ஞேயா வித்யா ஞானக்ரியாத்மிகா ||'

அந்த ரூபமாக இருப்பவளென்றும் சொல்லலாம்.

## वियदादिजगत्प्रसूः
## வியதாதி ஜகத் ப்ரஸூ: (550)

ஆகாசம் முதலான ஜகத்திற்கு ஜனனீயாக இருப்பவள்.

'ஆத்மன ஆகாச: ஸம்பூத:' என்பது முதலான ச்ருதி வாக்யங்களிலும் இதையேதான் சொல்லப்பட்டிருக்கிறது.

## सर्वव्याधिप्रशमनी

ஸர்வ வ்யாதி ப்ரசமனீ (551)

ஸகலவிதமான வ்யாதிகளையும் சமனம் பண்ணுகிறவள்.

## सर्वमृत्युनिवारिणी

ஸர்வ ம்ருத்யு நிவாரிணீ (552)

ஸகலவிதமான மரணங்களையும் தடுப்பவள்.

1. எல்லாவிதமான மரணங்களென்பதினால் அபம்ருத்யு (அகால மரணம்), காலம்ருத்யு (வயதினுடைய க்ரமத்தில் ஏற்படும் மரணம்) முதலியவை குறிப்பிடப்பட்டன.

2. அம்பாளுடைய இந்த ஸஹஸ்ரநாம பாராயணத்தினாலேயே ஸகல வ்யாதிகளும் ஸகலவிதமான ம்ருத்யுவும் நீங்குவதாக பலச்ருதி அத்யாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸர்வரோக ப்ரசமனம் ஸர்வஸம்பத் ப்ரவர்த்தனம் ||
ஸர்வாபம்ருத்யு சமனம் காலம்ருத்யு நிவாரணம் |
ஸர்வஜ்வரார்தி சமனம் தீர்காயுஷ்ய ப்ரதாயகம் ||'

3. ப்ரம்ஹஞானம் ஏற்பட்டவனுக்கு மரணம் கிடையாதென்பதாக,

'ஞாத்வா தேவம் ம்ருத்யுமுகாத் ப்ரமுச்யதே |'

என்று ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

## अग्रगण्या

அக்ரகண்யா (553)

முதன்மையாக எண்ணப்படுகிறவள்.

1. அம்பாள் ஸகலவிதமான ஜகத்திற்கும் மூலகாரணமாக இருப்பதால் அம்பாளையேதான் முதன்முதலாகக் கணக்கிட வேண்டியதாக இருக்கிறது.

2. அல்லது, கணங்களையுடையவள் கண்யா அப்பேர்ப்பட்ட கண்யர்களில் முதலாக இருப்பதால் அக்ரகண்யா.

## अचिन्त्यरूपा

### அசிந்த்யரூபா (554)

மனதுக்குக் கோசரமில்லாத ரூபத்தையுடையவள்.

அதாவது, அம்பாள் குணங்களின் ஸம்பந்தமில்லாமலிருப்ப தால் நினைவுக்கு எட்டாத ரூபத்தையுடையவளாக இருக்கிறாள் என்று தாத்பர்யம்.

## कलिकल्मषनाशिनी

### கலிகல்மஷ நாசினீ (555)

கலியுகத்திலிருக்கும் கல்மஷத்தையெல்லாம் நாசம் செய்ப வள்.

'கலௌ பாபைக பஹுளே தர்மானுஷ்டான வர்ஜிதே |'

என்று பலச்ருதி அத்யாயத்தில் சொன்னபடி கலியுகமானது மிகுந்த பாபத்தோடு (மிகுந்த பாபம் செய்கிறவர்களோடு) கூடி யிருக்குமாதலால் அந்த பாபத்தைப் போக்கடிக்க வேறு யாரா லும் ஸாத்யமில்லையென்றும் அதை அம்பாள் ஒருவளே செய்ய ஸாமர்த்யமுடையவளென்றும் தாத்பர்யம். இதையே,

சமாயாலம் ஜலம் வன்ஹே: தமஸோ பாஸ்கரோதய: |
சாந்த்யை கலேரகௌகஸ்ய தேவீ நாமானுகீர்தனம் ||

என்று வாமனபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. தெரிந்தோ, தெரியாமலோ செய்த எப்பேர்ப்பட்ட பாபத்திற்கும் அம்பா ளுடைய பாதஸ்மரணம்தான் பரம ப்ராயச்சித்தமென்பதாக,

'க்ருதஸ்யாகில பாபஸ்ய ஞானதோ ऽஞானதோ ऽபிவா |
ப்ராயச்சித்தம் பரம் ப்ரோக்தம் பராசக்தே: பதஸ்ம்ருதி: ||

என்பதாக ப்ரம்ஹாண்ட புராணத்தில் சொல்லியிருப்பது கவ னிக்கத் தக்கது.

## कात्यायनी

### காத்யாயனீ (556)

கதரென்ற ரிஷியின் கோத்ரத்தில் உத்பவித்தவள்.

1. இந்த 'காத்யாயனீ' என்ற (அம்பாளுடைய) ரூபமா னது ஸகல தேவதைகளுடைய தேஜஸ்ஸின் சேர்க்கையான ரூபம் என்று வாமன புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'தச்சாபி தேஜோ வரமுத்தமம் மஹத்
நாம்னு ப்ருதிவ்யாம் அபவத் ப்ரஸித்தம் |
காத்யாயனீத்யேவ ததா பபௌ ஸா
நாம்னு ச தேனைவ ஜகத்ப்ரஸித்தா ||'

2. ஓட்யாண பீடத்தின் அபிமானினியான தேவதைக்கு காத்யாயனீ என்று பெயர், அந்தரூபமாக அம்பாளிருப்பதை இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம். (ஏற்கனவே சொல்லப்பட்ட ஓட்யாணம், காமரூபம், பூர்ணகிரி, ஜாலந்தரம் என்ற நான்கு பீடங்களிலும் முறையே காத்யாயனீ, காமாக்யா, பூர்ணேச்வரீ, சண்டீ என்ற தேவதைகள் அபிமானினிகளாக இருப்பதாக காளிகாபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.)

'காத்யாயனீ சோட்டியாணே காமாக்யா காமரூபகே |
பூர்ணேச்வரீ பூர்ணகிரௌ சண்டீ ஜாலந்தரே ஸ்ம்ருதா ||'

3. க என்றால் ப்ரம்ஹம், சிரஸ், கல் இவைகளுக்குப் பெயர். அம்பாள் ஜகத்தைத் தாங்குவதினாலும் அதில் பரவியிருப்பதினாலும் காத்யாயனீ என்று பெயர் ஏற்படுகிறது.

'கம் ப்ரம்ஹ கம் சிர: ப்ரோக்தம் அச்மஸாரம் ச கம் மதம் |
தாரணாத் வாஸனாத்வாபி தேன காத்யாயனீ மதா ||'

(தேவீ புராணம்)

## कालहन्त्री

## காலஹந்த்ரீ (557)

காலனை (ம்ருத்யுவை நாசம் செய்கிறவள்.)

ப்ரம்ஹமானது காலனுக்கும் காலனாக இருப்பதாக ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஞ: காலகாலோ குணீ ஸர்வ வித்ய: |'

## कमलाक्षनिषेविता

## கமலாக்ஷ நிஷேவிதா (558)

விஷ்ணுவினால் விசேஷமாக உபாஸிக்கப்பட்டவள்.

விஷ்ணுவானவர் இந்த்ர நீலமயமான ரூபத்தையுடையவளாக தேவியை எப்போதும் உபாஸிக்கிறாரென்றும் அதினால் தனக்கிருக்கும் பதவியை அடைந்தாரென்றும் பத்மபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த்ரநீலமயீம் தேவீம் விஷ்ணுரர்சயதே ஸதா |
விஷ்ணுத்வம் ப்ராப்தவாம்ஸ்தேன... ||

### ताम्बूलपूरितमुखी
### தாம்பூல பூரித முகீ (559)

தாம்பூலத்தோடு நிறைந்த முகத்தை (வாயை) உடையவள்.

அம்பாளுடைய தாம்பூலத்தின் பரிமளத்தைப்பற்றி

'கர்பூர வீடிகாமோத ஸமாகர்ஷத் திகந்தரா |'

என்று இதின் 10வது நாமத்திலும்

'கர்பூர வீடி ஸௌரப்ய கல்லோலித ககுப்தடா |'

என்று லலிதாத்ரிசதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

அந்த தாம்பூல ரஸத்தின் மஹிமையானது காளிதாஸன், காளமேகம் முதலியோர்களுடைய மஹாகவித்வத்திற்குக் காரணமென்பது ஸாமான்யமாகத் தெரிந்த விஷயம்.

### दाडिमीकुसुमप्रभा
### தாடிமீகுஸுமப்ரபா (560)

மாதுளம்பூவின் காந்தியைப்போன்ற காந்தியுடையவள்

### मृगाक्षी
### ம்ருகாக்ஷீ (561)

மானின் கண்களைப்போன்ற கண்களையுடையவள்

### मोहिनी
### மோஹினீ (562)

மோஹமடையும்படிச் செய்பவள்.

1. ஸர்வஜகத்தையும் (தன் ஸௌந்தர்யத்தினால்) மோஹமடையும்படிச்செய்வதால் அம்பாளுக்கு மோஹினீ என்றபெயர் வந்ததாக லகுநாரதீய புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'யஸ்மாதிதம் ஜகத் ஸர்வம் த்வயா ஸுந்தரி மோஹிதம் |
மோஹினீத்யேவ தே நாம ஸ்வகுணோத்தம் பவிஷ்யதி ||'

2. அம்ருதத்திற்காக க்ஷீராப்தியானது கடையப்படும்போது மஹாவிஷ்ணுவானவர் அம்பாளை அபேதபாவனையோடு

த்யானம் செய்து எடுத்த மோஹனீ ரூபத்தை இங்கு சொல்லப் பட்டதாகவும் சொல்லலாம்: ஆதியில் ப்ரம்ஹாவினுடைய த்யான யோகத்தால் அம்பாள் எடுத்த ரூபமானது ப்ரக்ருதியென்றும் இரண்டாவதாக அம்பாள் எடுத்தது இந்த மோஹினீ ரூபமென் றும் ப்ரம்ஹாண்ட புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஆதௌ ப்ராதுரபூத் சக்தி: ப்ரம்ஹணோ த்யானயோகத: |
ப்ரக்ருதிர் நாம ஸா க்யாதா தேவானும் இஷ்டஸித்திதா ||
த்வதீயமுதபூத் ரூபம் ப்ரவ்ருத்தேऽம்ருத மந்தனே |
ஸர்வஸம்மோஹ ஜனகம் அவாங்மனஸ கோசரம் ||
யத்தர்சனாத் அபூதீச: ஸர்வக்ஞோபி விமோஹித: ||'

விஷ்ணுவானவர் அம்பாளை த்யானம்செய்து மோஹினீ ரூபமெடுத்தது

'யத் த்யான வைபவால்லப்தம் ரூபமத்வைதமத்புதம் |
தாமேவானன்யமனஸா த்யாத்வா கிஞ்சித் விஹஸ்ய ஸ: ||
என்று அதிலேயே சொல்லப்பட்டிருக்கிறது.

## मुख्या

## முக்யா (563)

முதன்முதலாக (முக்யமாக) இருப்பவள்.

இதையே ச்ருதியில் 'அஹமஸ்மி ப்ரதமஜா ருதஸ்ய' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

## मृडानी

## ம்ருடானீ (564)

(ம்ருடருடைய) பரமசிவனுடைய பத்னீ

ஜனங்களுக்கு ஸுகத்தைக் கொடுப்பதால் பரமசிவனுக்கு ம்ருட: என்று பெயர்.

'ஜனஸுகக்ருதே ஸத்வோத்ரிக்தௌ ம்ருடாய நமோ நம:'

(சிவாஹஸ்யம்)

## मित्ररूपिणी

## மித்ரரூபிணீ (565)

ஸுஹ்ருத் (அன்பன், மித்ரன்) ஸ்வரூபத்தையுடையவள்

மித்ரர்களென்றால் த்வாதச ஆதித்யர்களைக் குறிக்கும். அவர்களைப்போல் (ப்ரகாசமான) ரூபத்தையுடையவளென்றும் சொல்லலாம். இவர்களே அம்பாளுடைய கிரீடத்திலிழைக்கப்பட்ட ரத்னங்களாக இருக்கிறார்களென்று 'ஸௌந்தர்ய லஹரி'யில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

'கதைர் மாணிக்யத்வம் ககனமணிபி: ஸாந்த்ரகடிதம்
கிரீடம் தே ஹைமம் ஹிமகிரிஸுதே... |'

## नित्यतृप्ता

### நித்யத்ருப்தா (566)

ஸர்வகாலமும் த்ருப்தியோடிருப்பவள்

1. எப்போதும் த்ருப்தியோடிருப்பது மஹேச்வரனுடைய ஆறு குணங்களில் ஒன்று என்பது ஏற்கனவே வந்த 386வது நாமமான 'ஷடங்கதேவதாயுக்தா' என்பதில் சொல்லப்பட்டிருக்கிறது.

2. அல்லது, நித்யமான ஸ்வரூபானந்தத்தினால் த்ருப்தியோடிருப்பவள் என்றும் சொல்லலாம்.

## भक्तनिधिः

### பக்தநிதி: (567)

பக்தர்களுக்கு பொக்கிஷம் போலிருப்பவள்.

1. அதாவது, அவர்கள் விரும்பியவற்றை யெல்லாம் கொடுப்பதால் அம்பாளுக்கு 'பக்தநிதி:' என்று பெயர்.

2. ப்ரயோகத்தில் இந்த நாமாவை 'பக்தநிதயே நம:' என்று சொல்லவேண்டும். 'பக்தநித்யைநம:' என்று அல்ல.

## नियन्त्री

### நியந்த்ரீ (568)

(ஜகத்தையெல்லாம் வழிகாட்டி) அழைத்துப் போகிறவள்.

## निखिलेश्वरी

### நிகிலேச்வரீ (569)

ஸமஸ்தமான ப்ரபஞ்சத்திற்கும் ஈச்வரீயாக இருப்பவள்.

**मैत्र्यादिवासनालभ्या**

**மைத்ர்யாதி வாஸனாலப்யா** (570)

மைத்ரீ முதலான வாஸனைகளால் அடையக் கூடியவள்.

1. பிறரிடமிருக்கக்கூடிய சித்தவ்ருத்திகள் (வாஸனைகள்) நான்குவிதம். ஸுகத்தோடிருப்பவர்களிடம் மைத்ரீ (ஸ்னேஹத்தோடிருப்பது), துக்கப்படுகிறவர்களிடம் கருணை, புண்யவான்களிடம் முதிதா (ஸந்தோஷத்தோடிருப்பது), பாபிகளிடம் உபேக்ஷா (கவனிக்காமலிருப்பது), இவைகளைப்பற்றி (விஷ்ணு) பாகவதத்தில் சொல்லியிருக்கிறது.

2. இந்த வாஸனைகள் சித்தத்தை சோதனம் செய்து பரிசுத்தமாக்குகின்றவை.

'மைத்ரீ கருணா முதிதோபேக்ஷாணும் ஸுகது:க புண்யபாப
விஷயாணும் பாவனாத: சித்தப்ரஸாதனம் |

(யோக ஸூத்ரம்)

3. இவ்விதமான வாஸனைகளால் பரிசுத்தமாக்கப்பட்ட மனதையுடைய ஞானிகள் துக்கத்திலிருந்து விடுபட்டு யோகத்தின் ரஹஸ்யங்களை யறிந்து ஸமாதிநிலையைக்கூட கடந்துவிட விரும்புகிறார்களென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'மைத்ர்யாதி சித்த பரிகர்ம விதோ விதாய
க்லேசப்ரஹாணமிஹ லப்த ஸபீஜயோகா: |
க்யாதீம் ச ஸத்வபுருஷான்யதயாதிகம்ய
வாஞ்சந்தி தாமபி ஸமாதிப்ருதோ நிரோத்தும் ||'

(மாகம்)

**महाप्रलयसाक्षिणी**

**மஹாப்ரளயஸாக்ஷிணீ** (571)

மஹாப்ரளயகாலத்தில் ஸாக்ஷிணியாக இருப்பவள்.

1. மஹாப்ரளயகாலத்தில் பரமசிவனானவர் மஹாஸம்ஹார தாண்டவம் செய்யும்போது ப்ரம்ஹா, விஷ்ணு முதலான தேவர்களெல்லாம் நாசமடைகிறார்களென்றும் அம்பாள் ஒருவளே அப்போது அதற்கு ஸாக்ஷிணியாக இருக்கிறாளென்றும் ஏற்கனவே வந்த 232-வது நாமமாகிய,

'மஹேச்வர மஹாகல்ப மஹாதாண்டவ ஸாக்ஷிணீ |'
என்பதில் சொல்லப்பட்டிருக்கிறது.

2. இவ்விதம் இதர தேவர்களுக்கு அழிவு ஏற்படும் காலத்தில் பரமசிவன் உயிரோடிருப்பதானது அம்பாளுடைய பாதிவ்ரத்யத்தின் பலனென்றும் (மாங்கல்யத்தின் பலனென்றும்), ஆகவே 'ஸுவாஸினீ' என்ற பதத்திற்கு அம்பாள் ஒருவளே உரித்தானவளென்றும் (மஹாப்ரளயகாலத்தில் நாசத்தையடையும் பதிகளையுடைய) ஸரஸ்வதீ முதலியவர்கள் அந்த பதத்திற்குரியவர்களல்லவென்றும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

'விரிஞ்சி: பஞ்சத்வம் வ்ரஜதி ஹரிராப்னோதி விரதிம்
விநாசம் கீநாசோ பஜதி தனதோ யாதி நிதனம் |
விதந்த்ரீ மாஹேந்த்ரீ விததிரபி ஸம்மீலிதத்ருசா
மஹாஸம்ஹாரே ऽஸ்மின் விஹரதி ஸதி த்வத்பதிரஸௌ ||'

(ஸௌந்தர்யலஹரீ)

'ஸுரேந்த்ரருத்ர பத்மஜாச்யுதாதயோ ऽபி யே ம்ருத:
வசம்வதா ந தத்ஸ்த்ரிய: ஸுவாஸினீ பதஸப்ருச: |
மஹேச்வரஸ்ய ம்ருத்யுகஸ்மரஸ்ய ஸாக்ஷிணீ து யா
ஸுமங்கலீரியம் வதூரிமாம் ஸமேத பச்யத ||' (குருகலா)

## पराशक्तिः
## பராசக்தி: (572)

ஸர்வோத்க்ருஷ்டமான சக்திரூபமாக இருப்பவள்.

1. தேஹத்தில் இருக்கும்படியான தாதுக்களில் த்வக், அஸ்ருக், மாம்ஸ, மேதஸ், அஸ்த்தி என்ற ஐந்தும் சக்தியை மூலமாக உடையவையென்றும், மஜ்ஜன், சுக்ல, ப்ராண, ஜீவ தாதுக்கள் நாலும் சிவனை மூலமாக உடையவையென்றும், ஆகவே இந்த ஒன்பது தாதுக்களாலான தேஹமானது நவயோனிகளிலிருந்து உண்டானதென்றும் பத்தாவது தாது ஒன்றே பராசக்தி என்ற பெயரையுடையதென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'த்வகஸ்ருக் மாம்ஸமேதோஸ்த்தி தாதவ: சக்திமூலகா: |
மஜ்ஜ சுக்லப்ராணஜீவ தாதவ: சிவமூலகா: ||
நவதாதுரயம் தேஹோ நவயோனி ஸமுத்பவ: |
தசமீ தாதுரேகைவ பராசக்திரிதீரிதா ||'

(காமிகாகமம்)

இவ்விதம் எல்லா தாதுக்களுக்கும் மேல்பட்டதான பரா சக்தியென்ற தசமீதாது ரூபமாக அம்பாளிருப்பதை இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

2 சக்தியின் சேர்க்கையினால் தான் சிவனுடைய உத்கர்ஷம் ஏற்படுகிறதென்பது தேவீ உபாஸகர்களின் முக்யமான ஸித்தாந்தம். இதைப்பற்றி 'சிவ: சக்த்யா யுக்தோ' என்ற ஸௌந்தர்ய லஹரீ முதல் ச்லோகத்திலும் இதர க்ரந்தங்களிலும் சொல்லப்பட்டிருப்பது ப்ரஸித்தமான விஷயம். இப்படி சக்தனை பரமசிவனுடைய சக்தியானது 'பராஸ்ய சக்தி: விவிதைவ ச்ரூயதே' என்று ச்ருதியில் சொன்னபடி பதார்த்தங்களில் வெவ்வேறு விதமாக இருக்கிறதென்றும் இவ்விதமாக பதார்த்தங்களிலிருக்கும் சக்தியானவை கௌரியினுடைய (பராசக்தியினுடைய) விபூதிகளென்றும் அந்த சக்தியையுடைய பதார்த்தங்கள் மஹேச்வரனுடைய விபூதிகளென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

யஸ்ய யஸ்ய பதார்த்தஸ்ய யா யா சக்திருதாஹ்ருதா |
ஸா ஸா விச்வேச்வரீ தேவீ சக்த: ஸர்வோ மஹேச்வர: ||
சக்திமந்த: பதார்த்தா யே தே வை ஸர்வ விபூதய: |
பதார்த்தசக்தயோ யா யாஸ்தாஸ்தா கௌரீம் விதுர்புதா: ||

(லிங்கபுராணம்)

3. பரா எனப்படும் மந்த்ரத்தின் சக்திஸ்வரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

4. ப்ரயோகத்தில் இந்த நாமத்தை 'பரஸ்யை சக்த்யை நம:' என்றும் 'பராசக்த்யை நம:' என்றும் சொல்லலாம்.

## परानिष्ठा

## பராநிஷ்டா (573)

உத்க்ருஷ்டமான முடிவாக இருப்பவள்.

1. அதாவது, அவ்விதம் முடிவான ஞான விசேஷத்தின் ரூபமாக இருப்பவள் என்று தாத்பர்யம். அவ்விதமான ஞானம் ஏற்பட்டவுடன் ஸகல கர்மாக்களும் ஸகல ஜகத்துக்களும் முடிவடைந்துவிடுவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஞானே பரிஸமாப்யதே |'

(பகவத்கீதை)

இவ்விதமான ஞானத்தைப்பற்றி ஸூதகீதையில் சொல்லப்பட்டிருக்கிறது:— சாஸ்த்ரங்களின் மூலமாகவும் ஆசார்ய உபதேசத்தினுலும் சாஸ்த்ரங்களையொட்டிய தர்க்கங்களாலும் தான் ஸர்வ ஸாக்ஷியாக இருப்பதை நன்ருய் மனதில் நிச்சயம் செய்து கொண்டு, பிறகு ஸ்திரமான பாவனையோடு தன்னைத் தவிர்த்துத் தெரியும் சகல பதார்த்தங்களையும் ஸ்வாத்மா மாத்ரமானது என்று தெரிந்துகொண்டும், திரும்பவும் ஸ்வானுபவத்தினுல் தன்னை அத்வயமானதும் சுத்தமானதுமான ப்ரம்ஹமென்று நிச்சயித்துக்கொண்டும், அதின்மேல் அவ்விதமான நிச்சயத்தை விகாரமில்லாததும் அத்வயமானதுமான தன்னுடைய சித்தத்தில் லயம்செய்து அதற்கும் அப்பால் கேவலம் ப்ரம்ஹவித்தாக நிலைத்து நிற்கும்போது இருக்கும் ஞானமே பராநிஷ்டா என்பது. இதுவே ச்ருதிகளையொட்டினதும் ஸ்வானுபாவாத்மகமுமானது.

'சாஸ்த்ராசார்யோபதேசேன தர்க்கை: சாஸ்த்ரானுஸாரிபி: |
ஸர்வசாக்ஷிதயாத்மானம் ஸம்யங் நிச்சித்ய ஸுஸ்த்திர: ||
ஸ்வாத்மனோऽன்யதயா பாதம் ஸமஸ்தம் அவிசேஷத: |
ஸ்வாத்ம மாத்ரதயா புத்வா புன: ஸ்வாத்மானம் அத்வயம் ||
சுத்தம் ப்ரம்ஹேதி நிச்சித்ய ஸ்வயம் ஸ்வானுபவேன ச |
நிச்சயம் ச ஸ்வசின்மாத்ரே விலாப்யாவிக்ரியே ऽத்வயே ||
விலாபனம் ச சித்ரூபம் புத்வா கேவலரூபத: |
ஸ்வயம் திஷ்டேதயம் ஸாக்ஷாத் ப்ரம்ஹவித்ப்ரவரோ முனி: |
ஈத்ருசீயம் பரா நிஷ்டா ச்ரௌதீ ஸ்வானுபவாத்மிகா ||'

2. இந்த நாமத்தை ப்ரயோகத்தில் 'பராயை நிஷ்டாயை நம:' என்று சொல்லவேண்டும்.

## प्रज्ञानघनरूपिणी

## ப்ராக்ஞான கன ரூபிணீ (574)

நித்யமானதும் கனீபூதமானதுமான ஞானரூபமாக இருப்பவள்.

1. ப்ரக்ஞானமென்பது வ்ருத்தி பின்னமான (மாறுதல்களில்லாத), நித்யமான ஞானம். அது கனீபூதமென்பது

எக்காலத்திலும் அவித்யையின் லேசத்தால் கூட கலப்பு ஏற்படாதது. எப்படி உப்புக்கல்லானது உள்ளும் புறமும் பூராவும் ஒரே ருசியாக (ரஸகனமாக) இருக்கிறதோ அதேமாதிரி ஆத்மாவும் உள்ளும் புறமும் பூராவும் ப்ரக்ஞானகனமாக இருக்கிறதென்று ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸ யதா ஸைந்தவகனோऽனந்தரோऽபாஹ்ய: க்ருத்ஸ்னோ ரஸகன ஏவைவம் வா அரேऽயமாத்மானந்தரோऽபாஹ்ய: க்ருத்ஸ்ன: ப்ரக்ஞான கன ஏவ |'

## माध्वीपानालसा
## மாத்வீபானலஸா (575)

மாத்வீபானத்தினுல் ஆலஸ்யத்தோடு இருப்பவள்.

1. த்ராக்ஷா ரஸத்திலிருந்து தயாராகும் மத்யத்திற்கு மாத்வீ என்று பெயர்.

2. அலஸா என்பதினுல் உள்நோக்கிய நிஷ்டையோடிருப்தால் சீதளமாயிருப்பதைக் குறிக்கப்பட்டது.

## मत्ता
## மத்தா (576)

மயங்கியிருப்பவள்.

1. அதாவது, முந்திய நமத்தையொட்டி மாத்வீபானத்தினுல் மயங்கியிருப்பவள் என்று சொல்லப்பட்டது.

2. மத் என்ற சப்தமானது 'அஹம்' என்பதைக் குறிக்கும். அவ்விதமான அஹமென்ற பாவமானது (அஹம்பாவமானது) மத்தா என்று சொல்லப்படும். இங்கு அம்பாளே மத்தா என்று சொல்லப்படும். இங்கு அம்பாளே மத்தா என்று சொன்னதினுல் பரமசிவனுடைய அஹம்கார ரூபிணியாக அம்பாள் இருப்பதைச் சொல்லப்பட்டது. இதேவிதமாக அம்பாளிருப்பதை,

'புரஸ்தாத் ஆஸ்தாம் நம: புரமதிதுராஹோபுருஷிகா |'

என்று ஆசார்யாள் 'ஸௌந்தர்யலஹரி'யிலும்

'அஹம் தாம் ஆலம்பே த்ருடதரம் அஹந்தாம் பசுபதே: |

என்று நீலகண்டதீக்ஷிதர் 'நீலகண்டவிஜய'த்திலும் வர்ணித்திருக்கிறார்கள்.

## मातृकावर्णरूपिणी

## மாத்ருகாவர்ணரூபிணீ (577)

மாத்ருகாவர்ணங்களின் ரூபமாக இருப்பவள்.

1. அதாவது, ஐம்பத்தோறு ஆக்ஷரங்களின் ரூபமாக இருப்பவள் என்று தாத்பர்யம். (ஸ்வரங்கள் 16, க முதல் ம முடிய 25, ய முதல் க்ஷ முடிய 10, ஆக 51). இவைகளை மாத்ருகைகளென்றும், வர்ணங்களென்றும் சொல்வது வழக்கம்.

2. மாத்ருகைகளுக்கே தனித்தனியான வர்ணங்களுண்டென்பதாகச் சொல்லப்படும். இவ்வித வர்ணங்களின் ரூபமாக அம்பாள் இருப்பதை இங்கு சொல்லப்பட்டதாகவும்சொல்லலாம்.

அகராதி ஸ்வரங்கள் புகைவர்ணமென்றும், க முதலான பனிரெண்டும் ஸிந்தூர வர்ணமென்றும், ட (3) முதலான பத்தும் வெளுப்பு நிறமென்றும், ப (3) முதலான ஐந்தும் அருண வர்ணமென்றும், ல முதல் ஸ முடிய பொன் நிறமென்றும் ஹ, க்ஷ இரண்டும் மின்னல் போன்ற நிறமென்றும் ஸனத்குமார ஸம்ஹிதையில் சொல்லப்பட்டிருக்கிறது.

'அகாராத்யா ஸ்வரா தூம்ரா: ஸிந்தூராபாஸ்து காதய: |
டாதிபாந்தா: கௌரவர்ண அருண: பஞ்ச பாதய: |
லகாராத்யா: காஞ்சனாபா: ஹகாராந்த்யௌ தடின்னிபௌ ||'

இதர தந்த்ரங்களில் இதற்கு மாறாக

'ஸ்படிகாபா: ஸ்வரா: ப்ரோக்தா: ஸ்பர்சா வித்ரும ஸன்னிபா: |
யாதயோ நவ பீதா: ஸ்யு: க்ஷகாரஸ்த்வருணோ மத: ||'

சிலர் எல்லா அக்ஷரங்களும் வெளுப்புநிறமென்று சொல்லுவார்கள். மாத்ருகாவிவேகத்தில்

'அகாரம் ஸர்வதேவத்யம் ரக்தம் ஸர்வ வசம்கரம் |'

என்பது முதலாக ஒவ்வொரு அக்ஷரத்திற்கும் ஓரோர் வர்ணமிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

3. அல்லது, மாத்ருகாவர்ணங்களால் நிரூபிக்கப்பட்டவள் என்றும் சொல்லலாம். எப்படி பரசம்புவானவர் சக்தி, சிவன்

என்ற இரு பிரிவோடு இருக்கிறாரோ அம்மாதிரி மாத்ருகாதேவி யானவள் இரண்டு ரூபமாக இருக்கிறாள் என்றும் ஒரு ரூபத்தில் (ஸ்ரீ கண்டன் முதலான பெயர்களுடைய) சிவ வாசகங்களென் றும் மற்றொரு ரூபத்தில்(பூர்ணோதரீ முதலான பெயர்களுடைய) சக்தி வாசகங்களென்றும் ஸூதஸம்ஹிதை யக்ஞவைபவ கண் டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

யதா பரதர: சம்பு: த்விதா சக்திசிவாத்மனா |
ததைவ மாத்ருகாதேவீ த்விதா பூதா ஸதீ ஸ்வயம் ||
ஏகாகாரேண சக்தேஸ்து வாசிகா சேதரேண து |
சிவஸ்ய வாசிகா ஸாக்ஷாத் வித்யேயம் பதகாமினீ ||'

4. அல்லது, அக்ஷமாலாஸ்வரூபிணியாக இருக்கிறாள் என்று சொல்லலாம். மாத்ருகாவர்ணங்கள் அ முதல் க்ஷ முடிய இருப்பதால் அவையெல்லாம் சேர்ந்த மாலைக்கு (ஸமூஹத்திற்கு) அ க்ஷ மாலா என்று பெயர். அம்பாள் இப்படி சப்தப்ரஹ்மஸ் வரூபிணியாக இருந்தாலும் அதற்கும் அதீதமான ஸ்வரூபத்தை யுடையவளென்பது ரஹஸ்யமான விஷயம்.

'அகார: ப்ரதமோ தேவீ க்ஷகாரோந்த்யஸ்தத: பரம் |
அக்ஷமாலேதி விக்யாதா மாத்ருகாவர்ணரூபிணீ |
சப்தப்ரம்ஹ ஸ்வரூபேயம் சப்தாதீதம் து ஜப்யதே ||'

(ஞானார்ணவம்)

5. அல்லது, மாத்ருகா வர்ணங்களை உண்டுபண்ணுகிற வள், அவைகளின் ஜனயித்ரீ என்றும் சொல்லலாம். சிவனு டைய அனுத்தர ரூபத்தில் இச்சா சக்தியானது சேர்வதால் வர் ணங்கள் உத்பத்தியாவதின் ப்ரகாரமானது ஸௌபாக்ய ஸூதோதயத்தில் சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கவும்.

6. மாத்ருகாவர்ணங்களே ஸ்ரீ சக்ராத்மகமாக இருக்கின் றனவென்றும் சொல்லப்படும். இதைப்பற்றி மாத்ருகா விவே கத்தில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அம்மாதிரி மாத்ருகா வர்ணங்களின் ந்யாஸத்தினால் ஸ்ரீசக்ரத்தை பாவனை செய்வது கைலாஸ ப்ரஸ்தாரமென்றும், திதி நித்யாதேவதை களின் ந்யாஸத்தினால் ஸ்ரீ சக்ரத்தை பாவனை செய்வது மேரு ப்ரஸ்தாரமென்றும், வசின்யாதி தேவதைகளின் ந்யாஸத்தினால் பாவனைசெய்வது பூப்ரஸ்தாரமென்றும் ஸனந்தன ஸம்ஹிதையில்

சொல்லப்பட்டிருக்கிறது. இவைகளில் மாத்ருகா, ஸ்ரீசக்ரம் இவைகளுடைய ஐக்யவிபாவனமாகிய கைலாஸப்ரஸ்தாரத்தை இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

7. மேலேவரும் 'ப்ரசன்டாக்ஞா' என்பதைப் பிரித்து ப்ரசண்டா, ஆக்ஞா என்று இரண்டு நாமங்களாகச் சொல்வது போலும், இதர நாமங்களைப் பிரித்துசொல்வதுபோலும், இந்த நாமத்தை மாத்ருகா, (அ) வர்ணரூபிணீ என்றும் சொல்வதுண்டு. 'ஸ்கந்தோத்பாதேன மாத்ருகா, என்ற தேவீபுராண வசனப் படி ஸ்கந்தருடைய ஜனனியானதினால் அம்பாளுக்கு 'மாத்ருகா' என்று தனியான பெயரும் உண்டு.

## महाकैलासनिलया

## மஹாகைலாஸநிலயா (578)

மஹா கைலாஸமேன்பதை வாஸஸ்தானமாக உடையவள்.

1. மஹா கைலாஸமென்பது கைலாஸத்திற்கும் அப்பால் இருப்பதும், பரமசிவனுடைய இருப்பிடமுமான லோகமென்பது சிவபுராணம் முதலியவைகளில் ப்ரஸித்தமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. [லலிதாம்பிகா ரூபிணியான அம்பாளைப்பற்றிச் சொல்லுகையில் ஸர்வோத்க்ருஷ்டமான தேவதையாகையால் மஹாகாமேச்வரீயென்றும், பரமசிவனை மஹாகாமேச்வரர் என்றும், கணேசரை மஹாகணேசரென்றும், பாசுபதாஸ்த்ரத்தை மஹாபாசுபதாஸ்த்ரமென்றும் தனிப்பெயர்களோடு சொல்லப்பட்டிருப்பது கவனிக்கத் தக்கது.]

2. அல்லது, மேலே சொல்லிய கைலாஸ ப்ரஸ்தாரமென்ற அபேதபாவனை விசேஷத்தை இங்கு கைலாஸமென்று சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம். வசின்யாதி தாதாத்மயமாகிற பூப்ரஸ்தாரமென்ன, நித்யாதாதாத்மயமாகிற மேருப்ரஸ்தாரமென்ன, இவையிரண்டிற்கும் வேற்றுமையானதும் மேல்பட்டதுமாகையால் மஹா என்று விசேஷமாகச் சொன்னது.

3. அல்லது, ப்ரம்ஹாந்த்ரத்திலிருக்கும் ஸஹஸ்ராரத்தையே கைலாஸமென்று சொன்னதாகவும் சொல்லலாம்.

'ஏதத் கைலாஸஸம்க்ஞம் பதமகல பதம்
பிந்துரூபீஸ்வரூபீ, யத்ராஸ்தே தேவதேவ:........ |'
(த்ரிபுராஸாரம்)

**मृणालमृदुदोर्लता**
**ம்ருணாலம்ருதுதோர்லதா** (579)

தாமரைத் தண்டிலிருக்கும் நூலைப்போல் ம்ருதுவான கைகளையுடையவள்.

**महनीया**
**மஹநீயா** (580)

எல்லோராலும் பூஜிக்கத்தக்கவள்.

**दयामूर्तिः**
**தயாமூர்த்தி:** (581)

தயையே மூர்த்தீகரித்ததான ஸ்வரூபத்தையுடையவள்.

**महासाम्राज्यशालिनी**
**மஹாஸாம்ராஜ்யசாலினீ** (582)

மஹத்தான ஸாம்ராஜ்யத்தோடு விளங்குகிறவள்.

அரசர்களுக்கெல்லாம் அரசனாயிருப்பவனுக்கு ஸம்ராட் என்று பெயர். அம்பாள் ஸர்வச்ரேஷ்டமான மஹா கைலாஸத்தின் ஆதிபத்யத்தோடிருப்பதால் மஹா ஸாம்ராஜ்யத்தையுடையவளென்று சொல்லப்பட்டது.

**आत्मविद्या**
**ஆத்மவித்யா** (583)

ஆத்மஞான ரூபிணியாக இருப்பவள்.

1. அதாவது, ஆத்மாவே ப்ரம்ஹமென்று ப்ரதிபாதிக்கும் உண்மையான ஞானரூபமாக இருப்பவள் என்று தாத்பர்யம்.

2. அல்லது, ஆத்மாஷ்டாக்ஷர மந்த்ர ரூபிணீயென்றும் சொல்லலாம்.

## महाविद्या
## மஹாவித்யா (584)

ஸர்வோத்க்ருஷ்டமான வித்யாரூபிணியாக இருப்பவள்.

1. மேலே சொல்லப்பட்ட ஆத்மவித்யையே ஸர்வோத்க்ருஷ்டமானதால் அதையே மஹாவித்யையென்று இங்கு சொல்லப்பட்டது.

2. அல்லது மஹதீயாயும், வித்யாரூபிணீயாகவுமிருப்பவளென்றும் சொல்லலாம். ஸகலவிதமான அனர்த்தங்களேயும் நிவாரணம் செய்வதால் மஹத்வம் ஏற்படுகிறது.

3. நவ (வன) துர்கா வித்யைக்கும் மஹா வித்யையென்ற ஸம்க்ஞை உண்டு.

## श्रीविद्या
## ஸ்ரீவித்யா (585)

பஞ்சதசீ ஸ்வரூபமாக இருப்பவள்.

1. வித்யையை நாலுவிதமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது யக்ஞவித்யா (கர்மாக்களைப் பற்றியது), மஹாவித்யா (உபாஸன வித்யை), குஹ்யவித்யா (மந்த்ரவித்யை), ஆத்மவித்யா (ப்ரம்ஹ வித்யை). இம்மாதிரி வித்யா என்ற பதத்திற்கு அர்த்தமிருப்பதாகவும் அவ்விதமான வித்யைகளெல்லாம் அம்பாளுடைய ரூபங்களென்றும் விஷ்ணுபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'யக்ஞவித்யா மஹாவித்யா குஹ்யவித்யா ச சோபனே |
ஆத்மவித்யா ச தேவி த்வம் விமுக்திபலதாயினீ |
ஆன்வீக்ஷிகீ த்ரயீ வார்த்தா தண்டநீதிஸ் த்வமேவ ச ||'

## कामसेविता
## காமஸேவிதா (586)

மன்மதனுல் உபாஸிக்கப்பட்டவள்.

1. மன்மதன் ஸ்ரீவித்யையின் பேதங்களில் ஒன்றின் ரிஷி (மந்த்ர த்ருஷ்டா) என்பது ஏற்கனவே வந்த 'மனுவித்யா,' 'சந்த்ரவித்யா' முதலிய நாமங்களில் எழுதப்பட்ட

'மனு: சந்தர: குபேரச்ச லோபாமுத்ரா ச மன்மத: |'

என்ற ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த வித்யா பேதமானது அனங்கவித்யை யென்று சொல்லப்படும். இதைப் பற்றி அருணோபநிஷத்தில் வெகு அழகாகவும் சுருக்கமாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. [அங்கே அவன் ஸ்ரீ வித்யையென்ற ஒரு ரத்னத்தைக் கிடைக்கப்பெற்றதாகவும் அதை அவன் (த்வாரம் செய்து) கோர்த்ததாகவும் வர்ணித்திருப்பதையொட்டி இந்த நாமத்தில் வரும் 'ஸேவிதா' என்ற பதத்திற்கு கோர்க்கப்பட்ட (வித்யாரூபியாயிருப்ப)வள் என்றும் அர்த்தம் சொல்லலாம்.] இந்த உபநிஷத்தின் வியாக்யானமானது பாஷ்யத்தின் மூலத்திலும் 'ஸௌந்தர்யலஹரி'க்கு லக்ஷ்மீதரர் எழுதியிருக்கும் வியாக்யானத்திலும் காணப்படும்.

2. மன்மதன் அம்பாளை உபாஸித்து அனுக்ரஹமடைந்ததைப்பற்றி 'ஸௌந்தர்யலஹரி'யில் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸ்மரோபி த்வாம் நத்வா ரதிநயன லேஹ்யேன வபுஷா
முனீனாமப்யந்த: ப்ரபவதி ஹி மோஹாய மஹதாம் ||'
'தனு: பௌஷ்பம் மௌர்வீ மதுகரமயீ பஞ்சவிசிகா:
வஸந்த: ஸாமந்தோ மலயமருத் ஆயோதனரத: |
ததாப்யேகஸ்ஸர்வம் ஹிமகிரிஸுதே காமபி க்ருபாம்
அபாங்காத்தே லப்த்வா ஜகதிதம் அனங்கோ விஜயதே ||'

3. காமனென்றால் மஹாகாமேசரையும் குறிக்கும்.

## श्रीषोडशाक्षरीविद्या

## ஸ்ரீ ஷோடசாக்ஷரீவித்யா (587)

மஹிமைபொருந்திய ஷோடசாக்ஷரீ வித்யா ரூபிணீயாக இருப்பவள்.

1. பதினாறு அக்ஷரங்களோடு கூடியது ஷோடசாக்ஷரீ. மஹிமை வாய்ந்ததும் பதினாறு அக்ஷரங்களையுடையதுமான வித்யை ஸ்ரீ ஷோடசாக்ஷரீவித்யா.

2. கௌடபாதருடைய ஸ்ரீவித்யா ரத்னஸூத்ரத்தில்,

'அத வித்யா அஷ்டாவிம்சத் வர்ண விசிஷ்டா |'

என்று சொல்லப்பட்டிருக்கிறபடி ஷோடசாக்ஷரீ வித்யையானது இருபத்தெட்டு அக்ஷரங்களோடு கூடியிருந்தபோதிலும்

நடுவிலிருக்கும்படியான பஞ்சதசியின் கூடத்ரயத்தை மூன்று அக்ஷரமாக கணக்குப்பண்ணி மொத்தம் பதினாறு ஆகிறதினால் விரோதம் யாதொன்றுமில்லை.

3. அல்லது ஸ்ரீ என்னும் அக்ஷரத்தை பதினாறுவது அக்ஷரமாக உடைய வித்யையென்றும் சொல்லலாம்.

4. ஷோடசாக்ஷரீயே தான் ஸ்ரீவித்யை என்று சொல்லப் படும்.

'வக்த்ர கோடிஸகஸ்ரைஸ்து ஜிஹ்வாகோடி சதைரபி |
வர்ணிதும் நைவ சக்யேயம் ஸ்ரீ வித்யா ஷோடசாக்ஷரீ ||'

## त्रिकूटा

### த்ரிகூடா (588)

மும்மூன்றான ஸமூஹங்களோடு கூடியவள்.

1, இவை த்ரிமூர்த்திகள், அவஸ்த்தா த்ரயம், பீடாத்ரயம், லோகத்ரயம், குணத்ரயம் முதலியவை. இம்மாதிரியான த்ரி கூடங்களின் ரூபமாக அம்பாளிருப்பதை இங்கு ஒரே பதமாகச் சொல்லப்பட்டது.

2 அல்லது, வாக்பவம் முதலான கூடத்ரயத்தோடு அபின்னமாக இருப்பதை சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

## कामकोटिका

### காமகோடிகா (589)

பரமசிவனோடு ஏகதேசமாயிருப்பவள்.

1. பரப்ரம்ஹமானது சிவசக்தி ஸாமரஸ்வரூபமாக இருப்பதால் அம்பாளை காமகோடிகா என்றுசொல்லப்பட்டது. அம்பாள் வேறு, பரமசிவன் வேறு என்பது கிடையாது என்று தாத்பர்யம்.

## कटाक्षकिङ्करीभूतकमलाकोटिसेविता

### கடாக்ஷகிங்கரீபூத கமலாகோடி ஸேவிதா (590)

தன்னுடைய கடாக்ஷத்திற்கு கிங்கரிகளாக இருக்கும் கோடிக்கணக்கான லக்ஷ்மீதேவிகளால் ஸேவிக்கப்பட்டவள்.

1. (கிம் கரோமி) என்ன செய்யவேண்டுமென்று எஜமானனுடைய கட்டளையை எதிர்பார்த்துக்கொண்டிருக்கும்

ஸேவகனுக்கு கிங்கரனென்று பெயர். அம்பாளுடைய கடாக்ஷத்தின் லேசத்தினுல் அனுக்ரஹிக்கப்பட்ட பக்தனை கோடிக் கணக்கான ஸ்ரீ தேவிகள் கிங்கரிகளாக ஸேவிப்பதற்குத் தயாராக இருந்துகொண்டிருக்கிருர்களென்று தாத்பர்யம்.

2. அல்லது, அவர்கள் அம்பாளுடைய கடாக்ஷத்தினுல் வெளியிடப்படும் உத்திரவுகளுக்குக் கார்த்துக்கொண்டிருப்பதாகவும் சொல்லலாம்.

## शिरःस्थिता

சிரஸ்த்திதா (591)

சிரஸில் இருப்பவள்.

அதாவது, ப்ரம்ஹாந்த்ரத்தில் குரு ரூபமாக இருப்பவள் என்று தாத்பர்யம்.

## चन्द्रनिभा

சந்த்ரநிபா (592)

சந்த்ரனைப்போன்ற (காந்தியையுடைய)வள்.

ப்ரம்ஹாந்த்ரத்தின் கீழாக சந்த்ரனிருக்கிறது. அது ஸ்ரீவித்யையின் த்ருதீய கூடாத்மகமானது. ஆகவே அம்பாளுக்கு இந்தப்பெயர் ஏற்பட்டது.

## भालस्था

பாலஸ்த்தா (593)

நெற்றியிலிருப்பவள்.

அதாவது ஹ்ருல்லேகையின் பிந்து ரூபமாக (நெற்றியில்) இருப்பவள் என்று தாத்பர்யம்.

## इन्द्रधनुष्प्रभा

இந்த்ரதனுஷ்ப்ரபா (594)

இந்த்ர தனுஸ்ஸின் ப்ரபைகளைப்போன்ற ப்ரபைகளோடிருப்பவள்.

அதாவது, மேலே சொல்லப்பட்ட பிந்துவுக்கும் மேலாக இருக்கும் அர்தசந்த்ர ரூபமாக இருப்பவள் என்று தாத்பர்யம்.

'தீபாகாரோऽர்தமாத்ரச்ச லலாடே வ்ருத்த இஷ்யதே |
அர்தசந்த்ரஸ்ததாகார: பாதமாத்ரஸ் ததூர்த்வத: ||'

(நித்யாஹ்ருதயம்)

'மத்யே பாலம் பிந்துர் தீப இவாபாதி வர்துளாகார: |
ததுபரி கதோऽர்த சந்த்ரோऽன்வர்த்த: காந்த்யா ததऽऽக்ருத்யா ||'

(வரிவஸ்யா ரஹஸ்யம்)

## हृदयस्था

## ஹ்ருதயஸ்த்தா (595)

ஹ்ருதயத்திலிருப்பவள்.

1. அதாவது, ஹ்ருதயத்தில் த்யானம் செய்யப்படுகிறவளாக இருப்பதால் இந்தப்பெயர்.

2. 'ப்ரபுஹ்ருதயஞாது: பதேபதே ஸுகானி பவந்தி |' என்ற கல்பஸூத்ரவசனப்படி பராபீஜத்திற்கு ஹ்ருதயமென்று பெயர். ஆகவே, அந்த மந்த்ரத்திலிருப்பவளென்றும் சொல்லலாம்.

3. பரமேச்வர ஹ்ருதயமென்று பெயரையுடைய உபநிஷத்தையே ஹ்ருதயமென்று சொல்லப்படும். அதில் அம்பாள் (அந்தர்யாமியாக) ப்ரதிபாதிக்கப்படுவதால் ஹ்ருதயஸ்த்தா என்று பெயர்.

4. ஸர்வ ஜகத்திற்கும் ஹ்ருதயமே பீஜமென்று சொல்லப்படும். இவ்விதமான பீஜத்தில் ஜகத்ரூபமாக அம்பாளிருப்பதை இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

'யதா ந்யக்ரோத பீஜஸ்த்த: சக்திரூபோ மஹாத்ரும: |
ததா ஹ்ருதய பீஜஸ்த்தம் ஜகதேதத் சராசரம் ||'

(அனுத்தரத்ரிம்சிகா)

## रविप्रख्या

## ரவிப்ரக்யா (596)

ஸூர்யனைப்போன்ற (காந்தியை யுடைய)வள்.

1. ஹ்ருதயத்தில் ஸூர்யமண்டல மிருப்பதாலும், அதுவே ஸ்ரீவித்யையின் த்விதீயகூடமாக இருப்பதாலும் இங்கு அம்பாளை ரவிப்ரக்யா என்று சொன்னது.

ஸேவகனுக்கு கிங்கரனென்று பெயர். அம்பாளுடைய கடாக்ஷத்தின் லேசத்தினால் அனுக்ரஹிக்கப்பட்ட பக்தனை கோடிக் கணக்கான ஸ்ரீ தேவிகள் கிங்கரிகளாக ஸேவிப்பதற்குத் தயாராக இருந்துகொண்டிருக்கிறார்களென்று தாத்பர்யம்.

2. அல்லது, அவர்கள் அம்பாளுடைய கடாக்ஷத்தினால் வெளியிடப்படும் உத்திரவுகளுக்குக் கார்த்துக்கொண்டிருப்பதாகவும் சொல்லலாம்.

## शिरःस्थिता

சிரஸ்த்திதா (591)

சிரஸில் இருப்பவள்.

அதாவது, ப்ரம்ஹரந்த்ரத்தில் குரு ரூபமாக இருப்பவள் என்று தாத்பர்யம்.

## चन्द्रनिभा

சந்த்ர நிபா (592)

சந்த்ரனைப்போன்ற (காந்தியையுடைய)வள்.

ப்ரம்ஹரந்த்ரத்தின் கீழாக சந்த்ரனிருக்கிறது. அது ஸ்ரீவித்யையின் த்ருதீய கூடாத்மகமானது. ஆகவே அம்பாளுக்கு இந்தப்பெயர் ஏற்பட்டது.

## भालस्था

பாலஸ்த்தா (593)

நெற்றியிலிருப்பவள்.

அதாவது ஹ்ருல்லேகையின் பிந்து ரூபமாக (நெற்றியில்) இருப்பவள் என்று தாத்பர்யம்.

## इन्द्रधनुष्प्रभा

இந்த்ர தனுஷ்ப்ரபா (594)

இந்த்ர தனுஸ்ஸின் ப்ரபைகளைப்போன்ற ப்ரபைகளோடிருப்பவள்.

அதாவது, மேலே சொல்லப்பட்ட பிந்துவுக்கும் மேலாக இருக்கும் அர்தசந்த்ர ரூபமாக இருப்பவள் என்று தாத்பர்யம்.

'தீபாகாரோऽர்தமாத்ரச்ச லலாடே வ்ருத்த இஷ்யதே |
அர்தசந்த்ரஸ்ததாகார: பாதமாத்ரஸ் ததூர்த்வத: ||'

(நித்யாஹ்ருதயம்)

'மத்யே பாலம் பிந்தூர் தீப இவாபாதி வர்துளாகார: |
தது பரி கதோऽர்த சந்த்ரோऽன்வர்த்த: காந்த்யா ததऽऽக்ருத்யா ||'

(வரிவஸ்யா ரஹஸ்யம்)

## हृदयस्था
## ஹ்ருதயஸ்த்தா (595)

ஹ்ருதயத்திலிருப்பவள்.

1. அதாவது, ஹ்ருதயத்தில் த்யானம் செய்யப்படுகிறவளாக இருப்பதால் இந்தப்பெயர்.

2. 'ப்ரபுஹ்ருதயஞாது: பதேபதே ஸுகானி பவந்தி |' என்ற கல்பஸூத்ர வசனப்படி பராபீஜத்திற்கு ஹ்ருதயமென்று பெயர். ஆகவே, அந்த மந்த்ரத்திலிருப்பவளென்றும் சொல்லலாம்.

3. பரமேச்வர ஹ்ருதயமென்று பெயரையுடைய உபநிஷத்தையே ஹ்ருதயமென்று சொல்லப்படும். அதில் அம்பாள் (அந்தர்யாமியாக) ப்ரதிபாதிக்கப்படுவதால் ஹ்ருதயஸ்த்தா என்று பெயர்.

4. ஸர்வ ஜகத்திற்கும் ஹ்ருதயமே பீஜமென்று சொல்லப்படும். இவ்விதமான பீஜத்தில் ஜகத்ரூபமாக அம்பாளிருப்பதை இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

'யதா ந்யக்ரோத பீஜஸ்த்த: சக்திரூபோ மஹாத்ரும: |
ததா ஹ்ருதய பீஜஸ்த்தம் ஜகதேதத் சராசரம் ||'

(அனுத்தராத்ரிம்சிகா)

## रविप्रख्या
## ரவிப்ரக்யா (596)

ஸூர்யனைப்போன்ற (காந்தியை யுடைய)வள்.

1. ஹ்ருதயத்தில் ஸூர்யமண்டல மிருப்பதாலும், அதுவே ஸ்ரீவித்யையின் த்விதீயகூடமாக இருப்பதாலும் இங்கு அம்பாளை ரவிப்ரக்யா என்று சொன்னது.

2. நிப, ப்ரக்ய என்ற பதங்கள் (ஸாதாரணமாய்) ஸ்மான மாக இருப்பதைக் காட்டுகிறவையாக இருந்தாலும் இங்கு (த்ரு தீய த்விதீய கூடங்களோடு) அபேதமாக இருப்பதைக் காட்டு கின்றன.

## त्रिकोणान्तरदीपिका (597)

த்ரிகோணாந்தரதீபிகா

த்ரிகோணத்திற்குள்ளிருக்கும் தீபமாக இருப்பவள்.

1. மூலாதார பத்மத்தினுடைய கர்ணிகையின் நடுவில் த்ரிகோணமிருக்கிறது. அதில் அக்னிமண்டல மிருக்கிறது. அதுவே ஸ்ரீவித்யையின் ப்ரதம கூடம். அதோடு அம்பாள் அபின்னமாக இருப்பதால் 'த்ரிகோணாந்தர தீபிகா' என்று சொன்னது.

2. மூலாதாரத்தில் அக்னியும், ஹ்ருதயத்தில் ஸூர்யனும், ப்ரம்ஹரந்தரத்தில் சந்த்ரனும் இருப்பதும், அவை மூன்றும் ஸ்ரீவித்யையின் மூன்று கண்டங்களோடு அபின்னமாக இருப்ப தும், தந்த்ர ராஜத்தில் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

'நித்யா நித்யோதிதே மூலாதாரமத்யேऽஸ்தி பாவக: |
ஸர்வேஷாம் ப்ராணினும் தத்வத் ஹ்ருதயே ச ப்ரபாகர: ||
மூர்தனி ப்ரம்ஹரந்த்ராத: சந்த்ரமாச்ச வ்யவஸ்த்தித: |
தத்ரத்யாத்மகமேவஸ்யாத் ஆத்யா நித்யாத்ரிகண்டகம் ||

3. மேருவானது அஷ்டகோணாத்மகமான பர்வதம். இதை ஸூர்யன் ப்ரதக்ஷிணம் செய்து வரும்போது ஒரே ஸம யத்தில் மூன்று கோணங்களைத்தான் ப்ரகாசப்படுததுகிறான். இந்த்ரன், அக்னி, யமன், நிர்ருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் இந்த எட்டு திக்கு கோணங்களில் இந்த்ரபுரத்தில் மத் யான்ஹ ஸமயத்தில் ஸூர்யன் உச்சிலிருந்தால் குபேர புரத்தில் அஸ்தமனமும், யமபுரத்தில் உதயமும் நடைபெறும். இப்படி குபேர, இந்த்ர, யமகோணத்ரயத்திலிருக்கும்போது, அவர்களு டைய மூன்று புரங்களை மட்டும்தான் ப்ரகாசப்படுத்துகிறது. குபேர இந்த்ர, இந்த்ர யம, ரேகைகளின் (அந்தரத்தில்) நடுவி லிருக்கும் ஈசான, அக்னிபுரங்களிலும் அதின் வெளிச்சம் தெரியுமென்பதும் இதிலிருந்து ஏற்படுகிறது. இவையிரண்டில்

ஈசானபுரத்தில் மூன்றாவது யாமமும், அக்னி புரத்தில் முதலாவது யாமமுமாக இருக்கும். ஆகவே, ஸூர்யன் இந்த்ரபுரத்தில் மத்யான்ஹத்திலிருந்தால் குபேர, இந்த்ர, யம திக்த்ரயங்களையும் ஈசான, ஆக்னேய விதிக்குகளிரண்டையும் ப்ரகாசப்படுத்துகிறான். இதே மாதிரியே ஆக்னேய புரத்தில் மத்யான்ஹத்திலிருந்தால் ஈசான, அக்னி, நிர்ருதி திக்த்ரயங்களையும் இந்த்ர, யம விதிக்கு த்வயங்களையும் ப்ரகாசப்படுத்துகிறான். இதே மாதிரியே மற்ற இடங்களில் மத்யான்ஹ காலத்திலிருந்தால் ப்ரகாசிப்பதை சொல்லவேண்டும்.

4, ஆகவே தானிருக்கும் கோணம் ஒன்று, தனக்கு தக்ஷிணவாம பாகங்களிருக்கும் கோணங்கள் இரண்டு, ஆக மூன்று கோணங்கள், அவைகளுக்கு அந்தரமாக இருக்கும் தக்ஷிண, வாம ரேகைகள் இரண்டு, ஆக இந்த ஐந்துபுரங்களை ப்ரகாசப்படுத்தும் ஸூர்ய ரூபமாக இருப்பதால் 'த்ரிகோணாந்தர தீபிகா' என்று அம்பாளுக்குப் பெயர்.

'சக்ராதீனாம் புரே திஷ்டன் ஸ்ப்ருசத்யேஷ புரத்ரயம் |
த்ரிகோணௌ த்வௌ விகோணஸ்த்த: த்ரீன்கோணான் த்வே புரேததா ||'
(விஷ்ணு புராணம்)

## दाक्षायणी
## தாக்ஷாயணீ (598)

தக்ஷனுடைய பெண்.

1. அல்லது, அச்விநீ முதலான நக்ஷத்ரங்களின் ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

'தாக்ஷாயணீ த்வபர்ணாபாம் ரோஹிண்யாம் தாரகாஸு ச |'

2. தர்ச பூர்ண மாஸங்களின் ஆவ்ருத்திக்கு தாக்ஷாயண யக்ஞமென்று பெயர். அந்த ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

## दैत्यहन्त्री
## தைத்யஹந்த்ரீ (599)

(பண்டாஸுரன் முதலான) தைத்யர்களை ஸம்ஹாரம் செய்பவள்.

## दक्षयज्ञविनाशिनी

## தக்ஷயக்ஞ விநாசினீ (600)

தக்ஷனுடைய யக்ஞத்தை நாசம் செய்பவள்.

1. தக்ஷன் என்ற பெயருடையவர்கள் இருவர். ப்ரஜாபதியானவர் ஒருவர். அவருடைய மானுஷ அவதார விசேஷமான ராஜா மற்றொருவர். இவர்களிருவராலும் செய்யப்பட்ட யக்ஞங்களை நாசம் செய்பவளென்று இங்கு சொல்லப்பட்டது. நாசமானது சிவனால் செய்யப்பட்டபோதிலும் அம்பாள் அதற்குக் காரணமாக இருந்ததால் அம்பாளே நாசம் செய்ததாகச் சொல்லப்பட்டது. (இதேவிதமாக மதுகைடப பஞ்ஜனீ என்றும் அம்பாளுக்குப் பெயர் ஏற்பட்டது.)

'அபிவ்யாஹ்ருத்ய ஸப்தர்ஷீன் தக்ஷம் யோऽப்யசபத் புன: |
பவிதா மானுஷோ ராஜா சாக்ஷுஷஸ்ய த்வம் அன்வயே ||
ப்ராசீன பர்ஹிஷ: பௌத்ர: புத்ரச்சைவ ப்ரசேதஸ: |
தக்ஷ இத்யேவ நாம்னா த்வம் மாரிஷாயாம் ஜனிஷ்யஸி ||
கன்யாயாம் சாகினும் சைவ ப்ராப்தே வை சாக்ஷுஷாந்தரே |
அஹம் தத்ராபி தே யக்ஞம் ஹன்மி தேவ்யா: ப்ரியேப்ஸயா ||'

(ப்ரம்ஹ, வாயு புராணங்கள்)

## दरान्दोलितदीर्घाक्षी

## தராந்தோளித தீர்காக்ஷீ (601)

கொஞ்சம் சஞ்சலமானதும் (காது வரையில்) நீண்டதுமான கண்களை யுடையவள்.

1. அம்பாளுடைய நேத்ரங்களின் அழகைப்பற்றி ஆசார்யாள் 'ஸௌந்தர்யலஹரி'யில் பதினொரு ச்லோகங்களில் வெகு அழகாக வர்ணித்திருக்கிறார்கள்.

2. தரமென்றால் பயமென்று அர்த்தம். பயத்தைச் சஞ்சலமாகச் செய்யும், அதாவது பயத்தைப் போக்கும், நீண்ட கண்கள் என்றும் அர்த்தம் சொல்லலாம். அதாவது அம்பாளுடைய கடாக்ஷம் பட்டாலேயே பயமானது நாசமடைகிறதென்று தாத்பர்யம்.

**दरहासोज्ज्वलन्मुखी**

**தரஹாஸோஜ்வலன் முகீ** (602)

புன்சிரிப்பினால் ப்ரகாசிக்கும் முகத்தையுடையவள்.

**गुरुमूर्तिः**

**குருமூர்த்தி:** (603)

குருவின் ரூபமாக இருப்பவள்.

1. குரு, மந்த்ரம், தேவதை இம்மூன்றும் ஒன்று என்பதாக பாவனைசெய்து உபாஸிக்க வேண்டுமென்பதும், இவற்றுடன் ஸ்ரீசக்ரத்தையும் சேர்த்து இந்த நாலும் தன்னுடன் அபேதமாக இருப்பதாக பாவனை செய்யவேண்டுமென்பதும் மந்த்ர சாஸ்த்ரத்தின் ஸித்தாந்தம்.

'தாமிச்சாவிக்ரஹாம் தேவீம் குருரூபாம் விபாவயேத் |'

(நித்யாஹ்நுத்யம்)

'யதா கடச்ச கலச: கும்பச்சைகார்த்த வாசகா: |
ததா மந்த்ரோ தேவதா ச குருச்சைகார்த்த வாசகா: ||

(ஸௌந்தரீ தாபினீயம்)

'இத்தம் மாதா வித்யா சக்ரம் ஸ்வகுரு: ஸ்வயம் சேதி |
பஞ்சானுமபி பேதாபாவோ மந்த்ரஸ்ய கௌலிகார்த்தோऽயம் ||'

(வரிவஸ்யாரஹஸ்யம்)

2. குரு என்ற வார்த்தையானது உண்டானதற்குக் காரணம் பலவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'குகாரஸ்த்வந்தகார: ஸ்யாத் ருகாரஸ்தன்னிவர்தக: |
அந்தகார நிரோதித்வாத் குருரித்யபிதீயதே ||'
'குகார: ஸித்தி ப்ரோக்தோ ருகாரோ ஞானவாசக: |
ப்ரம்ஹஞானைகரூபத்வாத் குருரித்யபிதீயதே ||'

**गुणनिधिः**

**குணநிதி:** (604)

குணங்களுக்கெல்லாம் போக்கிஷம் போலிருப்பவள்.

1. குணங்களென்பது ஸத்வ, ரஜஸ், தமஸ் என்று மூன்றாகச் சொன்னபோதிலும் அவைகளுடைய வ்யக்திகளானது கணக்கற்றவையென்று ஸாங்க்யர்கள் சொல்வார்கள்.

'லகுத்வாதி தர்மை: அன்யோன்யம் ஸாதர்ம்யம் வைதர்ம்யம் ச குணனம் |'
(ஸாங்க்ய பர்வசன ஸூத்ரம்)

இம்மாதிரி அனந்தமான குணங்களுக்கு இருப்பிடமானவள், என்று இங்கு சொல்லப்பட்டது.

2. குணங்களென்றால் வ்யூஹங்களுக்குப் பெயர். அவைகள் நிதிகளின் எண்ணிக்கைபோல (நவநிதிகள் என்றபடி) ஒன்பது வகையென்று சொல்லப்படும். பரமேச்வரரானவர் இந்த ஒன்பது வ்யூஹங்களோடு கூடி நவவ்யூஹாத்மகராக இருப்பதாகச் சொல்லப்படடிருக்கிறது.

'நவ வ்யூஹாத்மகோ தேவ: பரானந்த: பராத்மக: |'
'காலவ்யூஹ: குலவ்யூஹோ நாமவ்யூஹஸ்ததைவ ச |
ஞானவ்யூஹஸ்ததா சித்தவ்யூஹ: ஸ்யாத் ததனந்தரம் |
நாதவ்யூஹஸ்ததா பிந்துவ்யூஹ: ஸ்யாத் ததனந்தரம் |
கல்பவ்யூஹஸ்ததா ஜீவவ்யூஹ: ஸ்யாத் இதி தேநவ ||'

இவைகளின் விபரங்கள் 'தவாக்ஞா சக்ரஸ்தம்' என்ற 'ஸௌந்தர்யலஹரீ' ச்லோகத்தின் வ்யாக்யானத்தில் லக்ஷ்மீதரரால் சொல்லப்பட்டிருக்கின்றன.

2. குண: என்றால் கயிறுக்குப் பெயர். அது இவ்விடத்தில் படகை இழுத்துக்கட்டும் கயிறுக்குச் சொல்லப்பட்டது. அது அம்பாளால் கெட்டியாகப் பிடித்து இழுக்கப்படுவதால் அம்பாளுக்கு குணநிதி: என்ற பெயர். முன்னொருக்கால் ப்ரளயத்தின்போது பகவானுடைய ஆக்ஞையினால் மனுவானவர் ஸமஸ்தபீஜங்களையும், எல்லா ரிஷிகளையும் ஒரு படகில் ஏற்றி, அந்தப் படகின் கயிற்றை பகவானுடைய அவதாரமாகிற மத்ஸ்யத்தின் கொம்பில் கட்டியதாகவும் அப்போது அந்தக் கயிறானது அம்பாளால் அதிஷ்டானமடைந்து த்ருடமாக இருந்ததென்றும் மத்ஸ்ய புராணம், காளீ புராணம் முதலியவைகளில் சொல்லப்டிருக்கிறது.

'நவயோஜனதீர்காம் து யாமத்ரய ஸுவிஸ்த்ருதாம் |
குருஷ்வ சர்மணா தூர்ணம் ப்ருஹதீம் இரிகாவடிம் ||
ஜகத்தாத்ரீ மஹாமாயா லோகமாதா ஜகன்மயீ |
த்ருடயிஷ்யதி தாம் ரஜ்ஜூம் ந த்ருட்யதி யதா ததா ||'

## गोमाता
## கோமாதா (605)

(பசுக்களுக்குத் தாயாரான) காமதேனு ரூபமாக இருப்பவள்.

1. கௌ: என்ற பதத்திற்கு வாக்கு, கிரணம், ஸ்வர்கம் முதலான அனேக அர்த்தங்களுண்டு. இவைகளுக்கெல்லாம் மாதா என்றும் சொல்லலாம்.

'கௌ: ஸ்வர்கே வ்ருஷபே ரச்மௌ வஜ்ரே சந்த்ரமஸி ஸ்ம்ருத: |
அஞ்ஜனீ நேத்ர திக் பாண பூ வாக் வாரிஷு சௌர்மதா ||'

(விச்வ:)

'பாணே வாசி ப சௌ பூமௌ திசி ரச்மௌ ஜலேக்ஷிணி |
ஸ்வர்கே மாதரி வஜ்ரேऽக்னௌ முகே ஸத்யே ச கோத்வனி: ||'

(அனேகார்த்தத்வனிமஞ்ஜரீ)

## गुहजन्मभूः
## குஹஜன்மபூ: (606)

ஸ்கந்தருக்கு உத்பத்திஸ்தானமாக இருப்பவள்.

குஹு என்ற தாதுவுக்கு சூழ்கிறது என்று பொருளாகையால் அவித்யையினால் சூழப்பட்டிருக்கும் ஜீவர்களுக்கு குஹர்கள் பெயர். இந்த ஜீவன்கள் பரப்ரஹ்மஸ்வரூபிணியான அம்பாளிடமிருந்து (நெருப்பிலிருந்து பொறிகள் கிளம்புவதுபோல்) உத்பத்தியாவதை இங்கு சொல்லப்பட்டது.

'யதாக்னே: க்ஷுத்ரா விஸ்புலிங்கா வ்யுச்சரந்தி |' (ச்ருதி)

'நி: ஸரந்தி யதா லோஹபிண்டாத் தப்தாத் ஸ்புலிங்கிகா: |
ஸகாசாத் ஆத்மனஸ் தத்வத் ஆத்மான: ப்ரபவந்தி ஹி ||'

(யாக்ஞ்யவல்க்ய ஸ்ம்ருதி)

## देवेशी
## தேவேசீ (607)

(ப்ரம்ஹா, விஷ்ணு முதலான) தேவர்களுக்கெல்லாம் ஈச்வரியாக இருப்பவள்.

## दण्डनीतिस्था
## தண்டநீதிஸ்த்தா (608)

அர்த்த சாஸ்த்ரத்தில் நிலையுடையவள்.

தண்டநீதி யென்பது குற்றங்களையும், அவைகளுக்காக ஏற்பட்டிருக்கும் தண்டனைகளையும் சொல்லும் சாஸ்த்ரம். ஆகவே அர்த்த சாஸ்த்ரம் முதலானவைகளைக் குறிக்கும். கெட்ட வழிகளில் செல்கிறவர்களை தண்டித்து நல்ல வழியில் திருப்பி அடக்கியாளுவதால் அம்பாளுக்கு தண்டநீதியென்று பெயரென்பதாக தேவிபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

நயாநயததான் லோகான் அவிகல்பே நியோஜனாத் |
தண்டனாத் தமனாத் வாபி தண்டநீதிரிதி ஸ்ம்ருதா ||'

## दहराकाशरूपिणी

## தஹராகாச ரூபிணீ (609)

(ஹ்ருதய குஹரத்திலிருக்கும்) அல்பமான (ஸூக்ஷ்மமான) ஆகாச ஸ்வரூபமாக இருப்பவள்.

இந்த ஸூக்ஷ்மமான ஆகாசமே பரப்ரம்ஹமென்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'தஹர உத்தரேப்ய: |' (ப்ரம்ஹஸூத்ரம்)

அத யதஸ்மின் ப்ரம்ஹபுரே
தஹரம் புண்டரீகம் வேச்ம
தஹரோऽஸ்மின்னந்தராகாச:
தஸ்மின் யதந்தஸ்ததன்வேஷ்டவ்யம் |' (ச்ருதி)

இவ்விதமான உபாஸனா மார்க்கத்தை தஹரவித்யா என்று சொல்லப்படும்.

## प्रतिपन्मुख्यराकान्ततिथिमण्डलपूजिता

## ப்ரதிபன் முக்ய ராகாந்த திதிமண்டல பூஜிதா (610)

ப்ரதமை முதலாக பூர்ணிமாந்தமான திதி ஸமூஹத்தில் பூஜிக்கப்பட்டவள்.

1. ப்ரதிபத் என்பது ப்ரதமை. ராகா என்பது பூர்ணிமா. இவைகளை முறையே ஆதியும் அந்தமுமாக உடைய திதி மண்டலம் பதினைந்து திதிகளுடையது. ஒவ்வோர் திதியிலும் அம்பாளை இன்னவிதமாக பூஜிக்கவேண்டுமென்பதாக தந்த்ரசாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இம்மாதிரியான பூஜா விசேஷங்களின் ப்ரகாரம் அர்ச்சிக்கப்பட்டவள் என்று இங்கு சொல்லப்பட்டிருக்கிறது.

2. சந்த்ரமண்டலத்தில் ஸாதா என்ற கலையைத்தவிர்த்து.

'தர்சா த்ருஷ்டா தர்சதா விச்வரூபா ஸுதர்சனா ஆப்யாயமானா
ஆப்யாயமானா ஆப்யாயா ஸூன்ருதா இரா
ஆபூர்யமாணா ஆபூர்யமாணா பூரயந்தீ பூர்ணா
பௌர்ணமாஸீ'

என்ற ச்ருதிவாக்யத்தின்படி பதினைந்து கலைகளிருக்கிறார்கள், அவர்களே ப்ரதிபத் முதல் பூர்ணிமா முடிய இருக்கும் திதிகள். இவர்கள் இந்த திதி ஸ்வரூபமாக இருப்பதில் காமேச்வரீ முதல் சித்ரா முடிய இருக்கும் நித்யைகளோடு அபின்னமாக இருக்கிறார்கள். அவர்கள் பெயர் காமேச்வரீ, பகமாலினீ, நித்யக்லின்னா, பேருண்டா, வன்ஹிவாஸினீ, வஜ்ரேச்வரீ, சிவதூதீ, த்வரிதா, குலஸுந்தரீ, நித்யா, நீலபதாகா, விஜயா, ஸர்வமங்களா, ஜ்வாலாமாலினீ, சித்ரா.

3. ப்ரதிபத் என்பது காமேச்வரியையும், ராகா என்பது சித்ராவையும் குறிக்கும். ஆகவே 'ப்ரதிபன் முக்ய ராகாந்த திதி மண்டலம்' என்பது மேலே சொல்லிய நித்யா தேவதைகளின் ஸமூஹத்தைக் குறிக்கும். இவர்கள் ஸ்ரீசக்ரத்தின் நடுவான பிந்துவைச் சுற்றியிருக்கும் த்ரிகோணத்திலிருக்கிறார்கள். மத்தியிலிருக்கும் பிந்துவான ஸர்வானந்தமய சக்ரமானது ஸாதா என்ற ஷோடசகலாரூபிணியான ஸ்ரீலலிதா மஹாத்ரிபுரஸுந்தரியின் ஸ்தானம். இப்படி அம்பாளைச் சுற்றி நித்யாதேவதைகளின் மண்டலமானது த்ரிகோணத்தின் ரேகாத்ரய ரூபமாக சூழ்ந்திருப்பதால் அம்பாளுக்கு இந்தப்பெயர் ஏற்பட்டது.

'தர்சாத்யா: பூர்ணிமாந்தாச்ச கலா: பஞ்சதசைவது |
ஷோடசீது கலா ஜ்ஞேயா ஸச்சிதானந்த ரூபிணீ ||'

அந்த த்ரிகோணத்தின் மூன்று ரேகைகளிலும் ரேகை ஒன்றுக்கு ஐந்து நித்யைகளாக, பதினைந்து நித்யைகளுமிருக்கிறார்கள்.

'விபாவ்ய ச மஹத் த்ர்யஸ்ரம் அக்ரதக்ஷோத்தரக்ரமாத் |
ரேகாஸு விலிகேத் பச்சாத் பஞ்ச பஞ்ச க்ரமேண ஹ ||'

(ஞானார்ணவம்)

திதிநித்யா தேவதைகளைப் பற்றியும் அவர்களுடைய உபாஸனா பேதங்களைப்பற்றியும் தந்த்ர ராஜம், ஞானார்ணவம், ஸௌந்தர்யலஹரீ பாஷ்யம் முதலியவைகளைப் பார்க்கவும்.

4. இந்த திதிகளுக்கு அக்னி முதலானவர்கள் தேவதைக ளென்றும் அது ஸம்பந்தமான மற்ற விஷயங்களும் வராஹ புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

**कलात्मिका** **(611)**

**கலாத்மிகா**

கலா ஸ்வரூபமாக இருப்பவள்.

1. கலா என்ற பதத்தினால் அக்னியினுடைய பத்துகலை கள், ஸூர்யனுடைய பன்னிரெண்டு கலைகள், சந்த்ரனுடைய பதினாறு கலைகள், இவைகள் தவிர ப்ரஸித்தமான அறுபத்தி நாலு கலைகள் இவையெல்லாம் குறிக்கப்படும்.

2. ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி, துரீய அவஸ்த்தைகள் வெவ்வேறு கலைகளோடிருப்பதாகச் சொல்லப்படும்.

'உத்பத்திர் ஜாகரோ போதோ வ்யாவ்ருத்திர் மனஸ: ஸதா |
கலா சதுஷ்டயம் ஜாக்ரதவஸ்த்தாயாம் வ்யவஸ்த்திதம் ||
ஜாக்ரத் ஸர்வகுணை: ப்ரோக்தா கேவலம் சக்தி ரூபிணீ |
அபிலாஷோ ப்ரமச்சிந்தா விஷயேஷு புன: ஸ்ம்ருதி: ||
கலாசதுஷ்டயம் தேவீ ஸ்வப்னவஸ்த்தா விதீயதே |
சிவரூபா: சக்திரூபாஸ்தா: கலாஸ் த்ரிபுராத்மிகா: ||
மரணம் விஸ்ம்ருதிர் மூர்ச்சா நித்ரா ச தமஸா வ்ருதா |
ஸுஷுப்தேஷு கலா ஜ்ஞேயாஸ்தா: ஸர்வா ஸ்ரீகலாத்மிகா: ||
வைராக்யம் ச முமுக்ஷுத்வம் ஸமாதிவிமலம் மன: |
ஸதஸத் வஸ்து நிர்தார: துர்யாவஸ்த்தா: கலா இமா: ||'

எழுந்திருப்பது, விழித்திருப்பது, நினைவோடிருப்பது, மனதின் வ்ருத்திகளோடிருப்பது இவை நாலும் ஜாக்ரதையின் கலைக ளென்றும், ஆசை, ப்ரமம், சிந்தை, விஷயங்களைப்பற்றி ஞாபகம் இவை நாலும் ஸ்வப்னத்தின் கலைகளென்றும், மரணம், ஞாபக மறதி, மூர்ச்சை, தாமஸமான நித்ரை இவை நாலும் ஸுஷுப்தி யின் கலைகளென்றும், வைராக்யம் முமுக்ஷுத்வம், மனதின் விமலமான ஸமாதிநிலை, ஸத், அஸத் என்பதாக வஸ்துக்களைப்பற் றிய நிர்தாரணம் இவை நாலும் துரீயத்தின் கலைகளென்றும் சொல்லப்பட்டது. இவைகளில் ஜாக்ரத்தின் கலைகள் ஸகல குணங்களோடும் கூடியவையாய் கேவலம் சக்தி ஸ்வரூப மானவையென்றும், ஸ்வப்னத்தின் கலைகள் சிவ, சக்தி

ரூபமானவையென்றும் ஸுஷுப்தியின் கலைகள் சிவாத்மக மென்றும் சொல்லப்பட்டன.

3. தூரீயாக ப்ரகரணத்தில் காமகலைகள் பதினாறு சொல்லப்பட்டிருக்கின்றன. அந்தராதுரீ ப்ரகரணத்தில் ஸ்ரீவித்யையின் பதினாறு கலைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. இவைகளைத் தவிர பிந்து, அர்தசந்த்ர, ரோதினீ முதலியவைகளுக்கு வெவ்வேறு கலைகளிருப்பதாக ஸ்வச்சந்தபைரவம் முதலான க்ரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன.

4. இவ்விதமான கலைகள் யாவும் அம்பாளுடைய ஸ்வரூபம் தான் என்பதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

## कलानाथा

### கலாநாதா (612)

(மேலே சொல்லிய) கலைகளுக்கெல்லாம் ஸ்வாமினீயாக இருப்பவள்.

சந்த்ரனுக்கு கலாநாதனென்று பெயர். சந்த்ரமண்டலமே ஸ்ரீசக்ர ஸ்வரூபமாக இருப்பதால் அம்பாளை சந்த்ரரூபமாக இருப்பவள் என்று இந்த நாமத்தில் சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

## काव्यालापविनोदिनी

### காவ்யாலாப விநோதினீ (613)

காவ்யங்களுடைய ஆலாபத்தினுல் விசேஷமாக ஸந்தோஷமடைகிறவள்.

காவ்யங்களென்பது வால்மீகி முதலான மஹா கவிகளால் செய்யப்பட்ட ப்ரபந்த விசேஷங்கள். பதினெட்டு லக்ஷணங்களோடு கூடியவைகளென்று சொல்லப்படும். இவைகளைக் கேட்பதில் அம்பாளுக்கு மிகவும் ப்ரியமென்று இங்கு சொல்லப்பட்டது. அதாவது அம்பாளை க்ரமப்படி உபாஸனைசெய்து அனுக்ரஹம் பெற்றவன் சிறந்த காவ்யங்களைச் செய்யும் சக்தியுடையவனுக ஆகிருன் என்று தாத்பர்யம். இதையேதான் ஆசார்யாளும்

'ஸவித்ரீபிர் வாசாம் சசிமணிசிலா பங்கருசிபி:
வசின்யாத்யாபிஸ்த்வாம் ஸஹ ஜனனி ஸஞ்சிந்தயதி ய: |
ஸ கர்தா காவ்யானும் பவதி மஹதாம் பங்கிருசிபி:
வசோபிர் வாக்தேவீ வதன கமலாமோத மதுரை: ||'

என்று 'ஸௌந்தர்யலஹரி'யில் சொல்லியிருக்கிறார்கள்.

## सचामररमावाणीसव्यदक्षिणसेविता
## ஸசாமர ரமாவாணீ ஸவ்யதக்ஷிண ஸேவிதா (614)

சாமரங்களையுடைய லக்ஷ்மீ, ஸரஸ்வதி இவர்களால் (முறையே) இடது, வலது பக்கங்களில் ஸேவிக்கப்பட்டவள்.

1. லக்ஷ்மீதேவி அம்பாளுக்கு இடதுபக்கத்திலும், ஸரஸ்வதீதேவீ வலது பக்கத்திலும் இருந்துகொண்டு அம்பாளுக்கு வெண்சாமரம் வீசிக்கொண்டிருக்கிறார்கள் என்று சொல்லப்பட்டது. அதாவது அம்பாளுடைய பக்தனுக்கு அவர்களிருவரும் கிங்கரிகள்மாதிரி காத்துக்கொண்டு தங்களுடைய பூர்ண அனுக்ரஹத்தைக் கொடுக்கத் தயாராக இருக்கிறார்கள் என்று தாத்பர்யம். இதை ஆசார்யாள்.

'ஸரஸ்வத்யா லக்ஷ்ம்யா விதிஹரிஸபத்னோ விஹரதே |'

என்று 'ஸௌந்தர்ய லஹரி'யில் சொல்லியிருக்கிறார்கள்.

2. ஸாதாரணமாக ஸவ்யமென்றால் வலது என்று அர்த்தம். ஆனால் இங்கு சொல்லப்பட்டபடி சில இடங்களில் இடது என்ற அர்த்தத்திலும் ப்ரயோகம் செய்யப்படும். இவ்விதமான ப்ரயோகமானது.

'தனுர்மன்யே ஸவ்யேதர கரக்ருஹீதம் ரதிபதே: |'

என்று 'ஸௌந்தர்யலஹரி'யிலும் காணப்படுகிறது.

## आदिशक्तिः
## ஆதிசக்தி: (615)

ஆதிசக்தியாக இருப்பவள்.

ஸகல ஜகத்தையும் உத்பாதனம் பண்ணுவதில் ஆதியாய்-காரணபூதையாய் - சக்திரூபிணியான அம்பாளிருப்பதால் ஆதிசக்தியென்ற பெயர் ஏற்பட்டது.

**अमेया**

**அமேயா** (616)

அளவிடமுடியாத ஸ்வரூபத்தையுடையவள்.

அல்லது அம்பாளுடைய ஸ்வரூபத்தை அளக்கும்படியான இதர வஸ்து யாதொன்றுமில்லாதபடியால் இந்தப் பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

'ஸ்வர்க பாதாள லோகாந்த ப்ரம்ஹாண்டாவரணஷ்டகே |
மேயம் ஸர்வம் உமாரூபம் மாதா தேவோ மஹேச்வர: ||'

(லிங்க புராணம்)

**आत्मा**

**ஆத்மா** (617)

ஆத்மரூபிணியாக இருப்பவள்.

1. இதனடுத்த நாமமாகிய 'பரமா' என்பதினல் பரமாத்மாவைச் சொல்லப்பட்டதால் இந்த நாமமானது ஜீவாத்மாவைக் குறிக்கும். இந்த இரண்டுவிதமான ஆத்மாவும் அம்பாள் தான் என்பதாக இந்த நாமங்களில் சொல்லப்பட்டது.

2. ஸகல ஜீவாத்மாக்களும் பரமாத்மாவினுடைய அம்சங்களென்று சொல்லப்படும்.

'விஷ்ணுலிங்கா யதா தாவத் அக்னௌ ச பஹுதா ஸ்ம்ருதா: |
ஜீவா: ஸர்வே ததா சர்வா: பரமாத்மா ச ஸ ஸ்ம்ருத: ||'

(லிங்க புராணம்)

'ஆத்மா தஸ்யாஷ்டமீ மூர்த்தி: சிவஸ்ய பரமா தனு: |
வ்யாபிகேதா மூர்த்தீனும் விச்வம் தஸ்மாத் சிவாத்மகம் ||'

(சிவபுராணம்)

3. இந்த அர்த்தத்தில் இந்த நாமத்தை 'ஆத்மனே நம:' என்றும், இதனடுத்த நாமத்தை 'பரமாயாத்மனே நம:' என்றும் ப்ரயோகத்தில் சொல்லவேண்டும்.

4. ஆத்ம சப்தமானது பரப்ரம்ஹத்தையே (பரமாத்மாவையே) குறிக்கும்.

'யச்சாப்னோதி யத் ஆதத்தே யச்சாத்தி விஷயானிஹ |
யச்சாஸ்ய ஸததோ பாவ: தஸ்மாத் ஆத்மேதி கீர்த்யதே ||'

5. இன்னமும், ஆத்ம சப்தமானது சரீரத்தையும் குறிக்கும்.

'சௌரீரூபாணி ஸர்வாணி சரீராணி சரீரிணும் |
சரீரிணஸ் ததா ஸர்வே சங்கராம்சா வ்யவஸ்த்திதா: ||'

அதாவது, சரீரங்களெல்லாம் அம்பாளுடைய ரூபங்களென்றும், சரீரிகளெல்லாம் சிவாம்சர்களென்றும் சொல்லப்பட்டது.

6. இவைகளைத்தவிர ஆத்ம சப்தத்திற்கு மனஸ், ஸ்வபாவம், த்ருதி, புத்தி முதலிய அர்த்தங்களுமுண்டு.

'ஆத்மா தேஹமனோ ப்ரம்ஹ ஸ்வபாவ த்ருதிபுத்திஷு |'
(விச்வ:)

புத்திரூபமாக அம்பாள் ஸகல ஜீவராசிகளிலுமிருப்பதாக,

'யா தேவீ ஸர்வபூதேஷு புத்திரூபேண ஸம்ஸ்த்திதா |'

என்று தேவீமாஹாத்ம்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## परमा (618)
## பரமா

ஸர்வோத்க்ருஷ்டமாக இருக்கிறவள்.

1. அல்லது பரம் என்ற (அபரிச்சின்னமான) ப்ரம்ஹத்தை பரிச்சின்னமுடையதாக (அளவிலடங்குவதாக) செய்வதால் அம்பாளுக்கு பரமா என்று பெயர்.

2. அல்லது பர: என்ற சிவனுடைய, மா-லக்ஷ்மீயாக இருப்பவள் பரமா.

3. பரப்ரம்ஹத்திற்கு நான்கு ரூபங்களென்று சொல்லப்பட்டிருப்பதில் அவைகளில் ஸர்வோத்க்ருஷ்டமான பரமென்ற ரூபத்தை இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

'பரஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் புருஷ: ப்ரதமம் த்விஜா: |
வ்யாக்தாவ்யக்தே ததைவான்யே ரூபே காலஸ் ததா பரம் ||
ப்ரதான புருஷ வ்யக்த காலாநும் பரமம் ஹி யத் |
பச்யந்தி ஸூரய: சுத்தம் தத் விஷ்ணோ: பரமம் பதம் ||
ப்ரதான புருஷவ்யக்த காலாஸ்து ப்ரவிபாகச: |
ரூபாணி ஸ்திதி ஸர்காந்த வ்யக்தி ஸத்பாவ ஹேதவ: ||'
(விஷ்ணு புராணம்)

## पावनाकृतिः

## பாவனுக்ருதி: (619)

பரிசுத்தமாகச்செய்யும் ஆக்ருதி, சரித்ரம், ஞானம், இவைகளை யுடையவள்.

1. அம்பாளுடைய பாதஸ்மரணையே ஸகலவிதமான பாபங்களையும் போக்கி பாவனமாகச் செய்யக்கூடியதென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'க்ருதஸ்யாகில பாபஸ்ய ஞானதோSஞானதோSபி வா |
ப்ராயச்சித்தம் பரம் ப்ரோக்தம் பராசக்தே: பதஸ்ம்ருதி: ||

2. பூதாத்மாவை தபஸ், வித்யை இவையிரண்டும் பரிசுத்தம் செய்கின்றனவென்றும், புத்தியை ஞானம் பரிசுத்தமாக்குகிறதென்றும், க்ஷேத்ரக்ஞனை ஈச்வரஞானமானது விசேஷமாக சுத்தி செய்கிறதென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'பூதாத்மனஸ் தபோவித்யே புத்தேர் ஞானம் விசோதனம் |
க்ஷேத்ரக்ஞஸ்யேச்வரஞானாத் விசுத்தி: பரமா மதா ||'

(யாக்ஞ்யவல்க்ய ஸ்ம்ருதி)

3. இதேமாதிரியாக அம்பாளை 'புண்யகீர்த்தி:' 'புண்ய ச்ரவண கீர்த்தனு' என்பதாக 542, 544 நாமங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

## अनेककोटिब्रह्माण्डजननी

## அனேககோடி ப்ரம்ஹாண்ட ஜனனீ (620)

அனேககோடிக்கணக்கான ப்ரம்ஹாண்டங்களை உண்டுபண்ணினவள்.

அல்லது, அனேககோடி ப்ரம்ஹாண்டங்களையுடையவர்களின் ஜனனீ என்று பிரித்து அர்த்தம் சொல்லலாம். இவர்கள் விராட் முதலியவர்கள். ஷோடச விதமான விகாரங்களுக்குள்பட்டதும் பஞ்சீக்ருதமான ஸ்தூலபூத கார்யத்தையுடையதுமான ப்ரபஞ்சத்திற்கு ப்ரம்ஹாண்டமென்று பெயர். இதற்கு அபிமானீயாக இருப்பவர் விராட். இவ்விதமான ப்ரம்ஹாண்டத்திலிருக்கும் ஜீவன்களுடைய லிங்க சரீரங்களின் ஸமஷ்டிக்கு அபிமானியாக இருப்பவர் ஸ்வராட். இவையிரண்டுக்கும் காரணமாக அவ்யாக்ருதத்திற்கு அபிமானீயாக இருப்பவர் ஸம்ராட்.

'ப்ராதான்யேன விராடாத்மா ப்ரம்ஹாண்டமபிமன்யதே |
ஸ்வராட் ஸ்வரூபமுபயம் ஸம்ராடித்யப்ரவீத் ச்ருதி: ||

அவ்விதமான விராட் முதலியவர்களின் ஜனனீயென்று அம்பாளே இங்கு சொல்லப்பட்டது.

## दिव्यविग्रहा
## திவ்யவிக்ரஹா (621)

ரமணீயமான தேஹத்தையுடையவள்.

1. அல்லது, திவ்ய-ஆகாசத்தில் நடந்த, விக்ரஹா-யுத்தத்தையுடையவள். அம்பாள் சும்பனோடு யுத்தம் செய்தபோது இருவரும் பூமியைவிட்டுக்கிளம்பி ஆகாசத்தில் யுத்தம் செய்ததை தேவீ மாஹாத்ம்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'தத்ராபி ஸா நிராதாரா யுயுதே தேன சண்டிகா |'

2. விக்ரஹமென்றால் தேஹம், பாகங்களின் விஸ்தாரம் முதலிய அர்த்தங்களுமுண்டு.

'விக்ரஹ: ஸமரே தேஹே விஸ்தார: ப்ரவிபாகயோ: |'
(மேதினீகோசம்)

## क्लींकारी
## க்லீம்காரீ (622)

காமபீஜத்தை செய்கிறவள் (உண்டாக்குகிறவள்)

1. க்லீம் என்பது காமராஜபீஜம்.

2. க்லீம்காரீ என்றால் காமபீஜஸ்வரூபமாயிருப்பவள் என்றும் சொல்லலாம்.

3. க்லீம்காரர் என்றால் சிவகாமர், காமேச்வரர். அவருடைய ஸ்த்ரீ (பத்னீ) க்லீம்காரீ.

## केवला
## கேவலா (623)

கேவல ஸ்வரூபமாயிருப்பவள்.

1. அதாவது எவ்விதமான தர்மத்தோடுமில்லாமல், ஏகாகினியாயிருப்பதால் இந்தப்பெயர்.

2. அல்லது, 'தத் விமுக்திஸ்து கேவலீ' என்ற சிவஸூத்ரத்தில் ப்ரஸித்தமாகச் சொல்லப்பட்ட ஞானவிசேஷரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

3. கேவலமென்றால் முழுவதிலுமிருக்கும் தன்மை. நிர்ணயமான அர்த்தம். அவ்விதமாக இருப்பவள் அல்லது அவையோடு அபின்னமாக இருப்பவள் கேவலா

'கேவலம் ஞானபேதே ஸ்யாத் கேவலச்சைக க்ருத்ஸ்னயோ:
நிர்ணிதே கேவலம் ப்ரோக்தம் கேவல: குஹனே க்வசித் ||'

(விச்வகோசம்)

4 அல்லது, மேலே சொல்லிய 'க்லீம்' என்ற காமராஜ பீஜத்தில் கேவலமாக இருப்பது, அதாவது ககார லகாரங்களான வ்யஞ்ஜனங்களில்லாதிருப்பது. இதனால் பாக்கியிருக்கும் கேவல துர்யஸ்வரூபமான காமகலாரூபிணியென்று இந்த நாமத்தின் அர்த்தம்.

இதைப்பற்றிச்சொல்லும்

'யதீம் ச்ருணோத்யலகம் ச்ருணோதி, நஹி ப்ரவேத ஸுக்ருதஸ்ய பந்தாம் |'

என்ற ச்ருதி வாக்யத்தின் தாத்பர்யமாவது-கேவலம் காமகலையை உபாஸிப்பவன் ஸுக்ருதங்களான ஸத்கர்மாக்களின் பலனான உத்தம லோகங்களையடையமாட்டான். ஆனால் நிர்குண ஞானத்தினால் கிடைக்கும் லோகத்தையடைவான் என்பது. அதாவது காமராஜ பீஜத்தினால் த்ரிவர்கமான தர்மார்த்த காமங்களையடைவானென்றும், காமகலாக்ஷரத்தினால் மட்டும்தான் மோக்ஷத்தையடைவானென்றும் தாத்பர்யம்.

## गुह्या

## குஹ்யா (624)

அதிரஹஸ்யமான அர்த்தத்தையுடையவள்.

1. முந்திய நாமத்தின் கடைசியில் சொல்லிய அர்த்தத்தையே இந்த நாமத்திலும் இதனடுத்து வருவதிலும் சொல்லப்படுகிறது.

2. குஹ்யா என்றால் குஹையில் ப்ரவேசித்திருப்பவள். அதாவது அதிரஹஸ்யமான அர்த்தத்தோடு கூடியவள்.

3. குஹ்யா (குஹாயாம் பவம்) என்பதினால் ஜீவாத்மா, பரமாத்மா இவர்களுடைய ஐக்யமானது சொல்லப்படும்.

'ருதம் பிபந்தௌ ஸுக்ருதஸ்ய லோகே குஹாம் ப்ரவிஷ்டௌ பரமே பரார்த்யே |'

'யோ வேத நிஹிதம் குஹாயாம் பரமே வ்யோமன் |' (ச்ருதி)

அவ்விதமான பலத்தைக் கொடுப்பதான உபாஸனமார்க்கமானது குஹ்யமென்றும் அவ்வித ஐக்யரூபிணியான அம்பாளை குஹ்யா என்றும் சொல்லப்படும்.

## कैवल्यपददायिनी 625

## கைவல்ய பததாயினீ

கைவல்யமான பதவியைக் கொடுப்பவள்.

1. கைவல்யமென்றால் தீக்ஷிதரவர்கள் 'ரத்னத்ரய பரீக்ஷை' யில் சொல்லியிருக்கிறபடி தர்மிமாத்ராவசேஷமான பரப்ரஹ்மஸ்வரூபம். அதைக் கொடுப்பவளென்றால் அவ்விதமான கைவல்ய ஸ்வரூபத்தைக் கொடுப்பவள் என்று அர்த்தம்.

2. மோக்ஷமென்பது ஐந்து வகைப்படும்—ஸாலோக்யம், ஸாரூப்யம், ஸாமீப்யம், ஸாயுஜ்யம், கைவல்யம். இவைகளில் முதல் நாலும் பதங்களென்று சொல்லப்படும். இதை அனுஸரித்து இந்த நாமத்தை 'கைவல்யத்தையும் பதங்களையும் கொடுக்கக்கூடியவள்' என்று பின் விவரித்திருக்கிறபடி அர்த்தம் பண்ணலாம்.

3. விக்ரஹங்கள் முதலானவைகள் மூலமாக உபாஸனை செய்வதனால் ஸாலோக்யம் கிடைக்கும். அவைகள் மூலமாக (வெளிப்படையாக) ஆராதனை செய்யாமல், ஆயினும் தன்னைத் தவிர்த்து வேறானதான தேவதையைத் தனக்குள்ளாக உபாஸனை செய்வதினால் ஸாரூப்யம் கிடைக்கும். இதையே ஸார்ஷ்டிதா என்றும் சொல்லப்படும். இதில் தனக்கில்லாததான ஐச்வர்யாதி விசேஷங்களால் தனிப்பட்டதாக தேவதையானது பாவனை செய்யப்படுவதாய் ரூபஸாம்யம் மட்டும் ஏற்படுகிறது. இதற்கு மேல், உபாஸிக்கப்படும் தேவதையின் ரூபத்தைத் தன்னுடன் ஏகீபாவமாக இருப்பதாக பாவனைசெய்து அதைப்போலவே

ஸகுணமான தாதாத்ம்யம் ஏற்படுவதானது ஸாயுஜ்யம். ஊர்த்வ ரேதஸ்ஸுகளாக இருப்பவர்கள் தங்கள் தங்கள் ஆச்ரமங்களி லிருந்துகொண்டு அந்த ஆச்ரமத்திற்கு யுக்தமான தர்மானுஷ் டானத்தைச் செய்துவருவதால் ஸாமீப்யம் ஏற்படும். இவை களில் முதல் மூன்றை,

'ஏதாஸாமேவ தேவதானும் ஸாயுஜ்யம் ஸார்ஷ்டிதாம்
ஸமானலோகதாமாப்னோதி |'

என்ற தைத்திரீய ச்ருதி வாக்யத்திலும், நான்காவதை,

'தப: ச்ரத்தே யே ஹ்யுபவஸந்த்யரண்யே
சாந்தா வித்வாம்ஸோ பைக்ஷசர்யாம் சரந்த: |
ஸூர்ய த்வாரேண தே விரஜா: ப்ரயாந்தி
யத்ராம்ருத: ஸ புருஷோ ஹ்யவ்யயாத்மே ||'

என்ற மண்டுக ச்ருதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

4. ஆயினும் இவை நான்கும் கர்மாவின் பலன்களாகவும், அநித்யமாகவும், ஒன்றைப் பொருத்ததாகவுமிருக்கிறபடியால் அவைகளை பதங்கள் (ஸ்தானங்கள்) என்று சொல்லப்படும்.

5. ஐந்தாவதான கைவல்யமோ ஞானத்தின் பலனாகவும் நிரதிசயமான ஆனந்தத்தை லக்ஷணமாக உடையதும், நித்யமாக வும் இருப்பது. இதைப்பற்றி,

'ய எவம் வித்வானுதகயனே ப்ரமீயதே...தஸ்மாத்
ப்ரம்ஹணோ மஹிமானமாப்னோதி |'

என்ற தைத்திரீய ச்ருதி வாக்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த மோக்ஷத்தில் சித்சக்தியானது வ்ருத்திகளுடைய ஸம்பந் தமேயில்லாமல் தனக்குள்ளேயே ப்ரதிஷ்டையடைந்திருப்பதாக

'கைவல்யம் ஸ்வரூப ப்ரதிஷ்டா சிதிசக்தே: |'

என்ற கடைசி யோகஸூத்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

6. இவையெல்லாவற்றையும் சேர்த்து சுருக்கமாக,

'ஆத்மபுத்யா ப்ரதீகேன மாத்ருபுத்யாப்யஹம்தியா |
கர்மணாபி பஜன் மர்த்ய: கைவல்யபதமச்னுதே ||'

என்று சக்திரஹஸ்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

7. இவ்விதமான கைவல்ய பதவியே ஸர்வோத்க்ருஷ்ட மான தென்றும் அதையே பகவான் தன் பக்தனுக்குக் கொடுக்கி றாரென்றும் நீலகண்ட தீக்ஷிதரவர்கள் 'சிவோத்கர்ஷமஞ்ஜரி'யில்

வெகு அழகாக வர்ணித்திருக்கிறார்கள். பாக்கி தன்னுல் கொடுக்கக்கூடிய லக்ஷ்மீ முதலிய வேதங்கள் எல்லாவற்றையும் விஷ்ணு, ப்ரம்ஹா முதலானவர்களுக்குக் கொடுத்துவிட்டு தன்னுடைய (ஆகாசரூபமான) வஸ்த்ரத்தையும் தேவர்களுக்குக் கொடுத்து விட்டு தான் கேவலமாக இருக்கும் நிலைமையில் தன் பக்தன் தன்னையண்டி வந்தபோது வேறு ஒன்றும் கொடுப்பதிற்கில்லாதிருப்பதை யோசித்து தயாநிதியான பரமசிவன் கைவல்யத்தையே அவனுக்குக் கொடுத்தாராம். (கேவலம் என்றால் மிகவும் இழிவானதையும் குறிக்கும்)

'தத்தா ஸ்ரீரிஷவே ஸிஸாதயிஷவே வாஸோ க்ருஹீதம் ஸுரை:
ஸுதாய வ்யயிதா கிரச்ச கிமிதோ தாதாஸ்ம்யஹம் கேவல: |
இத்யாலோச்ய தயாநிதி: கலயதே கைவல்யமேவார்த்திநும்
ஸ ஸ்வாமீ மம தைவதம் ததிதரே நாம்நுபி நாம்ஞயதே ||

## त्रिपुरा

(626)

த்ரிபுரா

மும்மூர்த்திகளுக்கு முந்தியிருப்பவள்.

1. அதாவது, ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன் இவர்கள் மூவருக்கும் முன்னதாகவும் ஆதிகாரணமாகவு மிருக்கிறுளென்று சொல்லப்பட்டது. இதிலிருந்து ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயங்களுக்குப் பூர்வமாகவும் அதீதமாகவுமிருப்பதையும் சொல்லப்பட்டது.

'மூர்த்தி த்ரயஸ்யாபி புராதனத்வாத்
தத் அம்பிகாயாஸ் த்ரிபுரேதி நாம |'

2. மும்மூன்ருக இருப்பவைகளையெல்லாம் த்ரிபுரங்களென்று சொல்லப்படும். இவைகளிலெல்லாம் அம்பாள் இருப்பதாகவும் இவற்றிற்கெல்லாம் அதீதமாகவு மிருப்பதாகவும், இந்த நாமத்தில் சொல்லப்பட்டது. ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம், ஸத்வ ரஜஸ், தமஸ், வாக்பவாதி பீஜத்ரயம், அக்னி ஸூர்யாதி (ஸ்ரீவித்யா) கண்டத்ரயம், ஸ்ரீசக்ரத்தின் கோணத்ரயம், ரேகாத்ரயம், பூபுரத்ரயம், பூலோகாதி ஜகத் த்ரயம், ஜாலந்தராதி பீடத்ரயம், இடா முதலான நாடித்ரயம், மனோ புத்தி சித்தம், முதலியன. இதையேதான் 'தத்வ த்ரயேண பிதா' என்ற கௌடபாத ஸூத்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'நாடீத்ரயம் து த்ரிபுரா ஸுஷும்ணா பிங்களா இடா |
மனோ புத்திஸ் ததா சித்தம் புரத்யமுதாஹ்ருதம் |
தத்ர தத்ர வஸத்யேஷா தஸ்மாத்து த்ரிபுரா மதா ||

(த்ரிபுரார்ணவம்)

காளிகா புராணத்தில் இதையே,

த்ரிகோணம் மண்டலம் சாஸ்யா பூபுரம் ச த்ரிரேகம் ||
மந்த்ரோऽபி த்ரயக்ஷா: ப்ரோக்த: ததா ரூபத்ரயம புன: |
த்ரிவிதா குண்டலீ சக்தி: த்ரிதேவானாம் ச ஸ்ருஷ்டயே |
ஸர்வம் த்ரயம் த்ரயம் யஸ்மாத் தஸ்மாத்து த்ரிபுரா மதா' |

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

த்ரிமூர்த்தி ஸர்காத் ச புராபவத்வாத்
த்ரயீ மயத்வாத் ச புரைவ தேவ்யா: |
லயே த்ரிலோக்யா அபி பூரகத்வாத்
ப்ராயோ அம்பிகாயாஸ் த்ரிபுரேதி நாம ||'

'தேவானாம் த்ரிதயம் த்ரயீ ஹுதபுஜாம் சக்தி த்ரயம் த்ரிஸ்வரா
த்ரைலோக்யம் த்ரிபுரீ த்ரிபுஷ்கரமத த்ரிப்ரம்ஹ வர்ணாஸ்த்ரய: |
யத் கிஞ்சித் ஜகதி த்ரிதா நியமிதம் வஸ்து த்ரிவர்காத்மதம்
தத் ஸர்வம் த்ரிபுரேதி நாம பகவத்யன்வேதி தே தத்வத: |'

(லகுஸ்துதி)

## त्रिजगद्वन्द्या
## த்ரிஜகத் வந்த்யா (627)

மூன்று லோகங்களாலும் வணங்கத்தக்கவள்.

## त्रिमूर्तिः
## த்ரிமூர்த்தி: (628)

ப்ரம்ஹாதி மூர்த்தி த்ரய ரூபமாயிருப்பவள்.

1. அல்லது மூன்று வயதுடைய கன்யா ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம். 'த்ரிமூர்த்திஸ்து த்ரிவர்ஷா ஸ்யாத்'

2. முறையே ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களான (அம்பாளுடைய) சுக்ல, ரக்த, மிச்ர சரண த்ரயங்களையுடைய மூர்த்தி த்ரயரூபமாக இருப்பவள் த்ரிமூர்த்தி: (இவற்றின் மந்த்ரோத்தாரம், ஸ்வரூபம் முதலியவைகள் தந்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன.)

3. ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன், வாமா ஜ்யேஷ்டா ரௌத்ரீ, இச்சா ஞான க்ரியா, இம்மாதிரியான மூர்த்தி த்ரயங்களாக அம்பாளிருப்பதை இங்கு சொல்லப்பட்டது.

4. ஒரு ஸமயம் ப்ரம்ஹா, விஷ்ணு, சிவன் இவர்கள் மூவருடைய த்ருஷ்டியின் சேர்க்கையிலிருந்து திவ்ய ரூபமான ஒரு குமாரீ உண்டானதும், அவர்கள் ஸ்தோத்ரம் செய்ததின்பேரில் அந்த குமாரியானவள் அவர்கள் வேண்டுகோளுக்கிணங்கி தன்னுடைய சுக்ல, ரக்த, க்ருஷ்ண வர்ணங்களின் சேர்க்கையோடு கூடியிருந்த சரீரத்தை மூன்ருகப் பிரித்து முறையே ப்ராம்ஹீ, வைஷ்ணவீ, ரௌத்ரீ என்ற சக்திகளாக மாறி ச்வேத, மந்தா, நீல பர்வதங்களில் தபஸ் செய்யப்போனதாக வராஹ புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'அன்யத் ச காரணம் தேவி யத் வக்ஷ்யாமி ச்ருணுஷ்வ தத் |
ஸித ரக்த க்ருஷ்ண வர்ணை : த்ரிவர்ணாஸி வரானனே ||
மூர்த்தித்ரயம் த்ரிபிர்வர்ணை: குரு தேவீ .ஸ்வவிக்ரஹே |
ஏவ முக்தா ததா தேவை: அகரோத் த்ரிவிதாம் தனும் |
ஸிதாம் ரக்தாம் ததா க்ருஷ்ணம் த்ரிமூர்த்தித்வம் ஜகாம ஹ' ||
'ஏஷா தரிமூர்த்திருத்திஷ்டா நயஸித்தாந்த காமினீ |
ஏஷா ச்வேதா பரா சக்தி: ஸாத்விகீ ப்ரம்ஹ ஸம்ஸ்த்திதி: ||
ஏஷைவ ரக்தா ரஜஸி வைஷ்ணவீ பரிகீர்த்திதா |
ஏஷைவ க்ருஷ்ணு தமஸி ரௌத்ரீ தேவீ ப்ரகீர்த்திதா ||
பரமாத்மா யதா தேவ ஏக ஏவ த்ரிதா ஸ்த்திதி: |
ப்ரயோஜன வசாத் சக்தி: ஏகைவ த்ரிவிதாऽபவத் ||'

5. இம்மாதிரி குணங்களுக்குத் தக்கபடி இருக்கும் அம்பாளுடைய ரூப வர்ணங்களை 'சாம்பவீ வித்யா ச்யாமா' என்ற கௌடபாத ஸூத்ரத்திலும்,

'சாம்பவீ சுக்லரூபா ச ஸ்ரீவித்யா ரக்த ரூபிகா ||
ச்யாமளா ச்யாமரூபா ஸ்யாத் இத்யேதா குணசக்தய: ||'

என்று தேவீ பாகவதத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

**त्रिदशेश्वरी**

**த்ரிதசேச்வரீ** (629)

தேவர்களுக்கெல்லாம் ஈச்வரீயாக இருப்பவள்.

1. த்ரி தசைகள் என்ருல் ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி என்ற அவஸ்தைகளைக் குறிக்கும்.

2. த்ரி தசர்களென்ருல் (மூன்ருேடு கூடிய பத்து, அதாவது) பதின்மூன்று விச்வே தேவர்களையும் குறிக்கும்.

3. அல்லது, மூன்று தடவை பத்து, அதாவது முப்பது, த்ரிதசம். இதனுல் (மூன்றைச் சேர்த்து) முப்பத்தி மூன்று (தேவத) கணங்கள் குறிக்கப்பட்டதாகவும் சொல்லலாம்.

## त्र्यक्षरी

### த்ரயக்ஷரீ (630)

மூன்று அக்ஷரங்களின் சேர்க்கையான ரூபமாயிருப்பவள்.

'வாகீச்வரீ ஞானசக்தி: வாக்பவே மோக்ஷரூபிணீ |
காமராஜே க்ரியாசக்தி: காமேசீ காமரூபிணீ
சக்திபீஜே பராசக்தி: இச்சைவ சிவரூபிணீ |
ஏவம் தேவீ த்ரயக்ஷரீ து மஹாத்ரிபுரஸுந்தரீ ||'

(வாமகேச்வரதந்த்ரம்)

2. 'த்ரயக்ஷரீ சுத்தவித்யா குமாரீ' என்ற கௌட பாத ஸூத்ரத்தின்படி த்ரயக்ஷரீ என்பது சுத்தவித்யை, குமாரீ (பாலே) என்று அர்த்தம்.

3. 'தத் ஏதத் த்ரயக்ஷரம் ஹ்ருதயம்,' 'தத ஏதத் த்ரயக்ஷரம் ஸத்யம்' என்ற ச்ருதிவாக்யங்களின்படி த்ரியக்ஷரமென்ருல் ஹ்ருதயம், ஸத்யம் என்று அர்த்தம்.

4. ஷட் பாராயணங்களில் சொல்லப்படும் ஆ, ஈ என்ற சப்தங்களால் பலவிதமான (முடிவாக உடைய) யுகாக்ஷர, மாஸாக்ஷர, நித்யாக்ஷரங்களின் சேர்க்கைக்கு த்ரயக்ஷரீ என்று பெயர். இவ்விதமான அக்ஷரச் சேர்க்கையினுல் ஏற்படும் அம்பாளுடைய நாமங்களைப்பற்றி,

'ஆ ஈ பல்லவிதை: பரஸ்பரயுதை: த்வி த்ரி க்ரமாத்யக்ஷரை:
காத்யை: க்ஷாந்தகதை: ஸ்வராதிபிரத க்ஷாந்தைச்ச தை: ஸஸ்வரை: |
நாமானி த்ரிபுரே பவந்தி கலு யான்யத்யந்த குஹ்யானி தே
தேப்யோ பைரவபத்னி விம்சதி ஸஹஸ்ரேப்ய: பரேப்யோ நம: ||'

என்று 'லகுஸ்துதி'யில் சொல்லப்பட்டிருக்கிறது.

दिव्यगन्धाढ्या

திவ்ய கந்தாட்யா (631)

திவ்யமான பரிமளத்தை பூர்ணமாக உடையவள்.

1. திவ்யமென்றால் தேவலோகத்திலிருப்பது என்றர்த்தம். ஆகவே தேவலோகத்திய ஹரிசந்தனதி விருக்ஷங்களின் பரிமளத்தைச் சொல்லப்பட்டது.

2. அம்பாள் கந்தாட்டையாக இருப்பது ச்ருதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

'கந்த த்வாராம் துராதர்ஷாம்'

3. அம்பாள் ஸாமான்யமான ராஜாக்கள் மாதிரி பூமியிலும் பதார்த்தங்களால் சூழப்பட்டவளல்லவென்றும் (தேவலோகத்திலிருக்கும்படியான) தேவாதிகளான சேதன வஸ்துக்கள், அசேதன வஸ்துக்கள் இவற்றால் முற்றிலும் சூழப்பட்டிருப்பவளாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

4. 'ஸம்யமாத் திவ்யம்' என்ற யோக ஸூத்திரத்தின்படி ச்ரவணேந்த்ரியமான காது, ஆகாசம் இவைகளுடைய ஸம்பந்தத்தில் ஸம்யமத்தோடு (ஏகாக்ரமான முயற்சியோடு) இருக்கும் யோகிக்கு திவ்யமான ச்ரோத்ரம் (அதாவது கேட்கும் சாமர்த்தியம்) ஏற்படும். அந்த மாதிரியே பாக்கி இந்த்ரியங்களுக்கும், இவ்விதம் திவ்யமான கந்தங்களை அறியும்படியான சக்தியானது யோகிகளால் அம்பாளுடைய அனுக்ரஹத்தின் பேரில் ஏற்படுவதால் இந்தப் பெயர் வந்தது என்றும் சொல்லலாம்.

सिन्दूरतिलकाञ्चिता

ஸிந்தூர திலகாஞ்சிதா (632)

ஸிந்தூரத்தினலிடப்பட்ட திலகத்தால் அலங்கரிக்கப்பட்டவள்.

1. ரக்த (சிவப்பு நிறமுள்ள) சூர்ணம் (குங்குமம்), கோரோசனை இவைகளுக்கு ஸிந்தூரமென்று பெயர்.

2. திலகமென்றால் முன்னுச்சி மயிருக்கும் பெயர். இந்த அர்த்தத்தில் ஸிந்தூரம், திலகம் இவைகளோடு கூடிய மனோஹர மான ரூபத்தையுடையவளென்று சொல்லலாம்.

'திலகம் சித்ரகே ப்ராஹுர் லலாமே திலகாளகே |' (விச்வ:)

3. ஸிந்தூர திலகமென்றால் யானைக்கும், (ஜீவித்திருக்கும் பதியோடு கூடிய) ஸ்த்ரீக்கும் பெயர். இவர்களால் சூழப்பட்டிருப்பவள் என்றும் இந்நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம்.

'ஸிந்தூரதிலகே நாகே ஸிந்தூரதிலகா ஸ்த்ரியாம் |' (விச்வ)

'ஸிந்தூரதிலகொ ஹஸ்தீ ஸிந்தூரதிலகாங்கனா |' (ஹேமசந்த்ர:)

4. மேலே ஸிந்தூரதிலகமென்ற பதத்திற்கு சொல்லிய அர்த்தத்தை யொட்டி, யானையைப்போன்ற நடையுள்ளவள் (கஜகாமினீ, ஸாமஜகாமினீ) என்று அர்த்தம் சொல்லலாம். தவிரவும், ஸ்த்ரீகளால் பூஜிக்கப்பட்டவள் என்றும் அர்த்தம் சொல்லலாம். நந்தகோகுலத்தில் கோபஸ்த்ரீகள் தங்களுக்கு க்ருஷ்ணனிடத்திலிருக்கும்படியான ப்ரியத்தின் காரணமாக அவருடைய விரஹத்தை ஸஹிக்க முடியாதவர்களாய், அதின் தீவ்ரமான தாபத்தினால் போக்கடிக்கப்பட்ட அசுபங்களையுடையவர்களாய்,

('துஸ்ஸஹ ப்ரேஷ்ட விரஹ தீவ்ரதாப துதாசுபா: |')

அம்பாளை சரணமடைந்து பூஜித்து,

'காத்யாயனி மஹாமாயே மஹாயோகின்யதீச்வரி |
நந்தகோப ஸுதம் தேவி பதிம் மே குரு தே நம: ||'

என்று வேண்டிக்கொண்டு அம்பாளுடைய அனுக்ரஹத்தின் பேரில் தங்கள் மனோரதத்தின் பூர்த்தியை அடைந்த வ்ருத்தாந்தமானது (விஷ்ணு) பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதிலேயே, ருக்மிணியானவள், தான் சொல்லியனுப்பியும் க்ருஷ்ணன் வருவதற்கு தாமதமாகவே,

'துர்பகாயா ஹி மே தாதா நானுகூலோ மஹேச்வர: |
தேவீ ச விமுகா கௌரீ ருத்ராணீ கிரிஜா ஸதீ ||'

என்று வருத்தப்பட்டுவிட்டு,

கன்யா சாந்த: புராத் ப்ராகாத் படைர் குப்தா அம்பிகாலயம் |
'பத்ப்யாம் வினிர்யயௌ த்ரஷ்டும் பவானீபாதபல்லவம் ||'

என்றபடி அம்பாளை சரணமடைந்து ஆராதித்து அதினால்தன் மனோரத ஸித்தியை அடைந்த வ்ருத்தாந்தமும் சொல்லப்பட்டிருக்கிறது.

## उमा

(633)

**உமா**

உமா என்ற பெயரையுடையவள்.

1. அம்பாளுடைய இந்த நாமமானது விசேஷமான மஹிமையை உடையது.

2. உகாரமானது சிவ வாசகமான அக்ஷரம். மா என்றால் லக்ஷ்மிக்குப் பெயர். ஆகவே சிவனுடைய ஸௌபாக்ய ரூபிணியாக இருப்பவள் என்று சொல்லலாம்.

3. அல்லது, பரமசிவனை (மாதி) பரிச்சின்னமாகச் செய்பவள், அதாவது அகண்டமான பரப்ரம்ஹத்தை அளவிலடங்கும் படியாகச் செய்பவள் என்றும் சொல்லலாம்.

4. உமா என்ற பதத்திற்கு,

'உமா அதஸீ, ஹைமவதீ, ஹரித்ரா, கீர்த்தி, காந்திஷு |'

என்றபடி அதஸீ, குஸுமம் (காயாம்பூ) மஞ்சள், கீர்த்தி, காந்தி என்ற அர்த்தங்களுண்டு. அவ்விதங்களான ரூபங்களோடிருப்பதால் உமா என்று பெயர்.

'யா தேவீ ஸர்வபூதேஷு காந்திரூபேண ஸம்ஸ்திதா |'

5. உ என்பது கூப்பிடும்போதும், மா என்பது தடுக்கும் போதும் உபயோகிக்கப்படும் பதங்கள். அம்பாள் ஹிமவானுக்குப் புத்ரியாகப் பிறந்த பிறகு, ஒரு ஸமயம் கடுமையான தபஸ்ஸைச்செய்ய ஆரம்பித்தபோது தன் தாயாரான மேனையால் கூப்பிடப்பட்டு அவ்விதமான தபஸ் செய்வதிலிருந்து தடுக்கப்பட்ட வ்ருத்தாந்தமானது காளிகாபுராணம், ப்ரம்ஹபுராணம், பத்ம புராணம் முதலியவைகளில் சொல்லப்பட்டிருக்கிறது.

'யதோ நிரஸ்தா தபஸே வனம் கந்தும் து மேனயா |
உமேதி தேன ஸோமேதி நாம ப்ராப ததா ஸதீ ||'
அபர்ணா து நிராஹாரா தாம் மாதா ப்ரத்யபாஷத |
உமா இதி நிஷேதந்தீ உமேத்யேவ ததாபவத் ||

ஸா ததோக்த்வா தயா மாத்ரா தேவீ துச்சரசாரிணீ |
தேனைவ நாம்ஞ லோகேஷு விக்யாதா ஸுரபூஜிதா ||'
'ததோ ऽந்தரிக்ஷாத் திவ்யா வாக் அப்ரவீத் புவனத்ரயே |
உமேதி து த்வயா மேனே யதுக்தம் தனயாம் ப்ரதி |
உமேதி நாம தேனஸ்யா புவனேஷு பவிஷ்யதி ||'

6. உ என்றால் உத்தமமான, மா என்றால் சித்த வ்ருத்தி, அவ்விதமான ரூபத்தையுடையவள் உமா.

'பரானுபூதிம் பவபாசநாசினீம் ஸதாசிவஸ்யாப்யதிசோபனட்யாம் |
உமாபிதாம் உத்தமசித்தவ்ருத்திம் நமாமி நானுவிதலோகவைபவாம் ||'
(ஸூதஸம்ஹிதை)

7. ப்ரணவத்தினுடைய அம்சங்களான அகார, உகார, மகாரங்கள் விஷ்ணு, சிவ, ப்ரம்ஹாக்களைக் குறிக்கும். இந்த மூன்றும் சேர்ந்து உமா என்ற பதமாகிறபடியால் த்ரிமூர்த்யாத்மகமான ரூபத்தையுடையவள் அம்பாள் என்று இந்த நாமத்தினால் சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம். இவ்விதமாக, ப்ரணவத்திற்குச் சொல்லப்படும் எல்லாவிதமான அர்த்தங்களையும் இந்த நாமத்திற்குச் சொல்லலாம்.

8. இந்தக் காரணத்தினால் இந்த உமா என்ற பதமானது தேவீ ப்ரணவமென்பதாக சாஸ்த்ர ரஹஸ்யம் தெரிந்தவர்கள் சொல்லுவார்கள். (சிவ) ப்ரணவத்தில் அகார, உகார, மகாரங்களும், (தேவீ) ப்ரணவத்தில் உகார, மகார, அகாரங்களும் வரிசையாக இருக்கின்றன. இந்த ரஹஸ்யத்தை,

'அகாரோகாரமகாரா மதீயே ப்ரணவே ஸ்திதா: |
உகாரம் ச மகாரம் ச அகாரம் ச க்ரமேரிதம் |
த்வதீயம் ப்ரணவம் வித்தி த்ரிமாத்ரம் ப்லுதமுத்தமம் ||'

என்று பரமசிவன் தேவியைப் பார்த்துச் சொன்னதாக லிங்க புராணத்திலும்,

'ஓம்கார ஸார சக்தித்வாத் உமேதி பரிகீர்த்திதா ||'

என்று மஹாவாஸிஷ்டத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

9. ஸகல ப்ராணிகளும் தூங்கும் போதும், விழித்திருக்கும் போதும் அவர்களுடைய ஹ்ருதயத்தில், அனாஹத நாதமென்று சொல்லப்படுவதும், அகார, உகார, மகாரங்களான இம் மூன்று

மாத்ரைகள் தனியாக இல்லாததும், ப்ரணவ நாதத்தின் பாக மானதும், சப்தப் ரஹ்மாத்மகமானதும், எப்போதும் உச்சாரணம் பண்ணப்படுவதும், ஹ்ருதய கமலத்தில் தஹராகாச ரூபமாயிருப் பதுமான சிவனுடைய சிரஸிலிருக்கும் பிந்துரூபமான இந்து கலைக்கு உமா என்று பெயர் என்பதாகச் சொல்லப்படும்.

'ஸுப்தானுமத புத்தீனும் அமாத்ரோச்சாரணுத் ஹ்ருதி |
நித்யம் த்ரைலோக்ய பூதானும் உமேதீந்துகலோச்யதே ||'

(மஹாவாஸிஷ்டம்)

இதையே வாயவீய ஸம்ஹிதையில் ஓம்காரமே ப்ரம்ஹ மென்பதாகச் சொல்லி அதின் அவயவங்களையும் சொல்லிவிட்டு,

'அர்தமாத்ராத்மகோ நாத: ச்ரூயதே லிங்கமூர்தனி |'

என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஹம்ஸோபநிஷத்தில் ஜீவனுன ஹம்ஸத்தின் வ்ருத்திகள் ஹ்ருதயகமலத்திலிருப்பதைக் சொல்லி விட்டு அதின் ஜாக்ரதாதி அவஸ்த்தா பஞ்சகத்தைப்பற்றிச் சொல்லும்போது ஜீவனுனது தஹராகாச ரூபியான லிங்கத்தை யடையும்போது ஸுஷுப்தி ஏற்படுகிறதென்றும், ஹ்ருதய கம லத்தின் ஆச்ரயத்தைவிட்டு மேலே போகும்போது துரீயாவஸ் த்தை ஏற்படுகிறதென்றும், லிங்கத்தின் சிரோபாகத்திலிருப்ப தான (மேலே சொல்லப்பட்டபடி உமா ரூபமான) நாதத்தில் லயமடைந்தால் துர்யாதீத அவஸ்த்தை ஏற்படுகிறதென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'கேஸரே ஜாக்ரதவஸ்த்தா, கர்ணிகாயாம் ஸ்வப்னம்,
லிங்கே ஸுஷுப்தி: பத்மத்யாகே துரீயம்,
யதா ஹம்ஸோ நாதே லீனே பவதி ததா துர்யாதீதம் |'

10. 'இச்சா சக்திருமாகுமாரீ' என்ற சிவஸூத்ரவசனத் தின்படி, பரபைரவ பாவத்தை யடைந்த யோகிகளுடைய இச்சா சக்திக்கு உமா என்று பெயர்.

'பரபைரவதாம் உக்தாம் க்ரஸமானஸ்ய சாச்வதீம் |
தஸ்யைவ யோகினே யேச்சா சக்திஸ்தாம் நிகதந்த்யுமாம் ||'

11. 'உமாதேவீ விநயகே' என்றபடி விநயகபீடத்திலும், 'உமாஸிந்துவனே நாம்னு' என்றபடி ஸிந்துவனத்திலும் அதிஷ் டானமாயிருக்கும் அம்பிகா ரூபத்திற்கு உமா என்று பெயர்.

12. 'உமா ஷட்வார்ஷிகீ மதா' என்றபடி ஆறுவயதுள்ள கன்யகாரூபமாயிருப்பவள் உமா.

## शैलेन्द्रतनया

### சைலேந்த்ர தனயா (634)

பர்வதராஜனான ஹிமவானுடைய பெண்.

1. அம்பாளுக்கு பார்வதி, ஹைமவதீ, கிரிஜா முதலான பெயர்கள் இந்தக் காரணத்தால் ஏற்பட்டன.

'ஜாதா சைலேந்த்ரகேஹே ஸா சைலராஜஸுதா தத:'

(தேவீ புராணம்)

## गौरी

### கௌரீ (635)

கொஞ்சம் மஞ்சள் நிறமாக இருப்பவள்.

1. தங்கம்போன்ற நிறத்திற்கு கௌரவர்ணமென்று பெயர். அம்பாளுடைய தேஹமானது கௌரவர்ணமாயிருப்பதினால் கௌரீ என்று பெயர் என்பதாக 'கௌரீ கௌராங்க தேஹத்வாத்' என்று மஹா வாஸிஷ்டத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

2. கௌரமென்றால் வெண்மையான நிறத்திற்கும் பெயர். அம்பாள் தக்ஷனுடைய புத்ரியாகப் பிறந்து பிறகு அந்த சரீரத்தை வெறுத்து அதை யோகாக்னியினால் நாசம்செய்து ஹிமவானுக்குப் புத்ரியாக அவதரித்தபோது அம்பாளுடைய சரீரமானது சங்கு, மல்லிகைப்பூ, சந்த்ரன் இவைபோல் வெளுப்பாக இருந்ததினால் கௌரீ என்று பெயர் வந்ததாக தேவீ புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'யோகாக்னினா து யா தக்தா புனர்ஜாதா ஹிமாலயாத் |
சங்க குந்தேந்து வர்ணா சேத்யதோ கௌரீதி ஸா ஸ்ம்ருதா ||'

3. இது தவிர,

'நதீ பேதே ऽபி கௌரீ ஸ்யாத் தசாப்தாயாம் சயோஷிதி |'

என்றபடி ஒரு நதிக்கும், பத்துவயதுள்ள கன்னிகைக்கும் கௌரீ என்று பெயர். 'வருணஸ்ய ப்ரியா கௌரீ' என்றபடி வருண னுடைய பத்னிக்கும் கௌரீ என்று பெயர். இந்த ரூபங்களாக அம்பாளிருப்பதால் இந்தப் பெயர் வந்ததாகவும் சொல்லலாம்.

4. 'கான்யகுப்ஜே ததா கௌரீ' என்ற பத்மபுராண வசனத்தின்படி கான்யகுப்ஜ பீடத்தில் அதிஷ்டானமாயிருக்கும் அம்பாளுக்கு கௌரீ என்று பெயர்.

## गन्धर्वसेविता

### கந்தர்வ ஸேவிதா (636)

(விச்வாவஸு முதலான) கந்தர்வர்களால் ஸேவிக்கப் பட்டவள்.

1. கந்தர்வமென்றால் குதிரைக்கும் பெயர். இந்த அர்த்தத்தில் அம்பாளுடைய சதுரங்க ஸைன்யத்தில் குதிரைப் படைகளுக்கு எஜமானியான அச்வாரூடா தேவியின் ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

2. திவ்யமான (தேவலோகத்திய) கானத்திற்கு கந்தர்வ மென்று பெயர். அதனால் ஸேவிக்கப்பட்டவள் என்றும் சொல்லலாம்.

## विश्वगर्भा

### விச்வகர்பா (637)

ஸகல ப்ரபஞ்சத்தையும் தன் கர்பத்தில் உடையவள்.

## स्वर्णगर्भा

### ஸ்வர்ண கர்பா (638)

ஸ்வர்ணத்திலிருந்து உண்டானவள்.

1. அல்லது, ஸ்வர்ணத்தை கர்பத்திலுடையவள், ஸ்வர்ணத்தையே கர்பமாக உடையவள் என்றும் சொல்லலாம். இதனால் ஹிரண்ய கர்பருக்குப் பெயர் உண்டானதாக வாயு புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஹிரண்யமஸ்யா கர்பேऽபூத் ஹிரண்யஸ்யாபி கர்பஜ: |
யஸ்மாத் ஹிரண்யகர்ப: ஸ புராணேऽஸ்மின்னிருச்யதே ||'

2. அர்ணங்களென்று மாத்ருகைகளுக்குப் பெயர். அந்த அர்த்தத்தில், அர்ணங்களுக்கு கர்ப (சோபன்)த்தைக் கொடுப்பவள், அதாவது மாத்ருகைகளால் ப்ரதிபாதிக்கப்பட்டவள் என்று சொல்லலாம்.

3. இதே அர்த்தத்தில், ஸ்வர்ண சோபனமான மந்த்ரங்கள், யாருடைய கர்ப்பத்திலிருக்கின்றனவோ அவள் ஸ்வர்ண கர்பா என்றும் சொல்லலாம்.

## अवरदा

### அவரதா (639)

அஸுரர்களைக் கண்டிக்கிறவள்.

1. அவரர்களென்றால் அநார்யர்கள், அஸுரர்கள்.

2. அல்லது, காந்தியோடு கூடிய பற்களையுடையவள் என்று சொல்லலாம்.

## वागधीश्वरी

### வாகதீச்வரீ (640)

வாக்குகளுக்கெல்லாம் ஸ்வாமினீயாக இருப்பவள்.

ஸகலவிதமான வாக்குகளும் அம்பாளுடையதே என்பதாக,

'த்வதீயாபிர் வாக்பிஸ்தவ ஜனனி வாசாம் ஸ்துதிரியம்: | '

என்று ஆசார்யாள் 'ஸௌந்தர்யலஹரி'யில் சொல்லியிருக்கிறார்கள்.

## ध्यानगम्या

### த்யானகம்யா (641)

த்யானத்தினால் அறியக்கூடியவள்.

த்யானமென்பது சித்தத்தின் வ்ருத்திகளை நிரோதம்செய்து பாவனை செய்வது. இதனால் அம்பாளை அறியலாமென்று ச்ருதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

'தே த்யானயோகானுகதா அபச்யன்
தேவாத்ம சக்திம் ஸ்வகுணைர் நிகூடாம்'

## अपरिच्छेद्या (642)

### அபரிச்சேத்யா

அளவிட முடியாதவள்.

அதாவது தேசம், காலம் முதலிய அளவுகளுக்கு அடங்காதவள். எப்போதும், எவ்விடமும் இருப்பவள், என்று தாத்பர்யம். பரிபூர்ணஸ்வரூபத்தையுடையவள் என்றும் சொல்லலாம்.

## ज्ञानदा (643)

### ஞானதா

ஞானத்தைக் கொடுப்பவள்.

1. அதாவது, கைவல்யத்தைக் கொடுப்பதினால் விரும்பப்படுவதான ஞானத்தைக் கொடுப்பவள் என்று அர்த்தம். அம்பாளுடைய அனுக்ரஹத்தினால்தான் இவ்விதமான ஞான மேற்படுகிறதென்று சொல்லப்பட்டிருக்கிறது.

தலவகாரோபநிஷத்தில்,

'தஸ்மின் ஆகாசே ஸ்த்ரியமாஜகாம பஹு°சோபமாநாம் உமாம் ஹைமவதீம், தாம் ஹோவாச கிமேதத் யக்ஷமிதி, ப்ரம்ஹேதி ஹோவாச'

என்பது முதலான இடத்திலும், ஸ்காந்தத்தில்

'ஈத்ருசீ பரமா வித்யா சாங்கரீ பவநாசினீ |
ப்ரஸாதாதேவ ஜந்தூனாம் சக்தேரேவ ஹி ஜாயதே ||'

என்றும், ஸூதஸம்ஹிதையில்

'வித்யாரூபா யா சிவா வேதவேத்யா
ஸத்யானந்தானந்த ஸம்வித்ஸ்வரூபா |
தஸ்யா வாச: ஸர்வலோகைக மாது:
பக்த்யைவ ஸ்யாத் அம்பிகாயா: ப்ரஸாதாத் ||'

என்றும் இதைச் சொல்லப்பட்டிருக்கிறது. அவித்யையினால் சூழப்படுவதற்கும், ஞானத்தினால் மோக்ஷமடைவதற்கும் அம்பாள்தான் காரணம் என்று சொல்லப்படும்.

2. அல்லது, பேத பாவத்தைக் கொடுப்பதான (அ) ஞானத்தை நாசம் செய்பவள் என்றும் சொல்லலாம். இவ்விதமான ஞானத்தை பந்தமென்பதாக 'ஞானம் பந்த:' என்ற

சிவஸூத்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. பஹிர்முகமான விஷயங்களில் உன்முகமாகச் செய்து அதனால் ஏற்படும் அந்த: ஸுகத்தினால் அறியப்படுவதும், ஆத்மாவாக இல்லாத வஸ்துக்களில் ஆத்மபாவத்தைக் கொடுப்பதுமான ஞானத்தைப் போக்கடித்து உண்மையான ஞானத்தை அம்பாள் கொடுப்பதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

## ज्ञानविग्रहा

## ஞானவிக்ரஹா (644)

ஞானத்தையே தன் சரீரமாக உடையவள்.

1. அதாவது, ஸர்வ ஜகத்தும் ஞானாத்மகமாக இருப்பதால் இவ்விதமான பெயர் ஏற்பட்டது.

'ஞானமேவ பரம் ப்ரம்ஹ ஞானம் பந்தாய சேஷ்யதே |
ஞானாத்மகமிதம் விச்வம் ந ஞானாத் வித்யதே பரம் |
வித்யாவித்யேதி மைத்ரேய ஞானமேவோபதாரய ||'

(விஷ்ணு புராணம்)

2. விக்ரஹமென்றால் விஸ்தாரமென்றும் அர்த்தமுண்டு. அம்பாளுடைய அனுக்ரஹ விசேஷத்தினால் ஞான விஸ்தாரம் ஏற்படுவதால் இந்தப்பெயர் வந்ததாகவும் சொல்லலாம்.

## सर्ववेदान्तसंवेद्या

## ஸர்வவேதாந்த ஸம்வேத்யா (645)

எல்லா உபநிஷத்துக்களாலும் நன்றாய் அறியப்பட்டவள்.

வேதங்களுக்கு ஞானகாண்டமே முடிவானதாலும், அவைகளை வேதாந்தங்கள், வேத சிரோபாகங்கள் என்று சொல்லப்படும். அவைகளில் அம்பாளுடைய பரப்ரம்ஹ ஸ்வரூபமானது ப்ரதிபாதிக்கப்பட்டிருப்பதால் இந்தப் பெயர் ஏற்பட்டது.

ஏஷா த்ரிசக்திருத்திஷ்டா நயஸித்தாந்த காமினீ |
ஏஷா ஞானாத்மிகா சக்தி: ஸர்வ வேதாந்தகாமினீ ||'

(வராஹ புராணம்)

## सत्यानन्दस्वरूपिणी

## ஸத்யானந்த ஸ்வரூபிணீ (646)

ஸத்யம் ஆனந்தம் இவையே தன் ரூபமாக உடையவள்.

1. ஸத் என்பதானது எப்போதுமிருப்பது, அழிவில்லாதது. அவ்விதமாகவும், ஆனந்தமயமாகவும் அம்பாளுடைய ரூபமிருப்பதாக இங்கு சொல்லப்பட்டது.

2 சிலர் இந்த நாமத்தை ஸத்யா, ஆனந்த ஸ்வரூபிணீ என்று இரு நாமங்களாகப்பிரித்து, அதற்கு பதிலாக அமேயா (616) ஆத்மா (617) என்ற நாமங்களை அமேயாத்மா என்று சொல்லுவார்கள்.

3. ஸத்யா என்பதினால்,

'ஸ்திதி ப்ராணஸ்தீத்யன்னமயம் இத்யஸாவாதித்ய: |'

என்ற ச்ருதிவாக்யத்தின்படி, ப்ராணன், அன்னம், ஆதித்யன் என்பவையும் குறிக்கப்படும்.

4. ஸத்துக்களிடத்தில் ப்ரியமாக இருப்பவள் என்று சொல்லலாம். அல்லது ஸத்யபாமா ஸ்வரூபமாயிருப்பவளென்றும் சொல்லலாம்.

## लोपामुद्रार्चिता

## லோபாமுத்ரார்ச்சிதா (647)

லோபா முத்ரையினால் பூஜிக்கப்பட்டவள்.

1. லோபாமுத்ரையென்பவள் அகஸ்த்யருடைய பத்னீ, அம்பாளுடைய உபாஸகச்ரேஷ்டர்களில் ஒருவளென்றும், ஸ்ரீவித்யையின் பேதங்களில் ஒன்றான ஹாதிவித்யை யென்பதின் ரிஷி (மந்த்ரத்ரஷ்டா) என்றும், ஏற்கனவே வந்த 'மனுவித்யா'. 'சந்த்ரவித்யா' முதலிய நாமங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. தன்னுடைய பக்தர்களில் முக்யமானவள் என்பதாக அம்பாளாலேயே சொல்லப்பட்டதாக ஸ்ரீலலிதாத்ரிசதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

'பத்ன்யஸ்ய லோபாமுத்ராக்யா மாம் உபாஸ்தே அதிபக்தித:'

2. இதனால் அம்பாளுக்கே லோபாமுத்ரா என்று பெயர் என்பதாக த்ரிபுராஸித்தாந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'அகஸ்த்யபத்ன்யா லோபாக்ய முத்ராயா: பரமேச்வரீ |
ப்ரஸன்னத்வாத் இயம் தேவீ லோபாமுத்ரேதி கீயதே ||'

இந்த மாதிரி அர்த்தத்தில் இந்த நாமத்தை லோபாமுத்ரா, அர்ச்சிதா என்று இரண்டாகப் பிரித்துச் சொல்வதும் பொருத்த மாகத்தானிருக்கிறது.

3. அல்லது, லோபாமுத்ரையெனப்படும் வித்யையின் மூலமாக உபாஸிக்கப்படுகிறவள் என்றும் சொல்லலாம்.

'வித்யா த்ருதீய கண்டேன குர்யாத் ஸர்வோபசாரகான் |'

(காதிமதம்)

## लीलाक्लृप्तब्रह्माण्डमण्डला

## லீலாக்ல்ருப்த ப்ரம்ஹாண்ட மண்டலா (648)

ப்ரம்ஹாண்ட மண்டலத்தையெல்லாம் லீலையாகவே நிர்மாணம் செய்பவள்.

அதாவது, அவ்வளவு அனாயாஸமாகச் செய்பவள் என்று தாத்பர்யம்.

இதையே 'ஸ்வேச்சயா ஸ்வபித்தௌ விச்வமுன்மீலயதி— என்று சக்தி ஸூத்ரத்திலும்.

'விதிவிஷ்ணுமுகாமரோதய
ஸ்திதி நாசேஷு சிவோऽப்யனீச்வர: |
ஜகதம்ப தவ த்வயம் க்ரம:
க்ஷணமுத்தாலக புஷ்ப பஞ்ஜிகா ||'

என்று பாஸ்கர ராயருடைய தேவீஸ்தவத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

## अदृश्या

## அத்ருச்யா (649)

பிறரால் பார்க்கமுடியாதவள்.

அதாவது (மாம்ஸ) சக்ஷுஸ் முதலான இந்திரியங்களுக்கு அகோசரமாக இருப்பவள் என்று தாத்பர்யம்.

'ந த்ருஷ்டேர் த்ரஷ்டாரம் பச்யேத் |' (ச்ருதி)

இதையே தேவீபாகவதத்தில் மூன்றாவது ஸ்கந்தத்தில்
'நிர்குணஸ்ய முனே ரூபம் ந பவேத் த்ருஷ்டிகோசரம் |'

என்று ஆரம்பித்து,

1. ஸத் என்பதானது எப்போதுமிருப்பது, அழிவில்லாதது. அவ்விதமாகவும், ஆனந்தமயமாகவும் அம்பாளுடைய ரூபமிருப்பதாக இங்கு சொல்லப்பட்டது.

2 சிலர் இந்த நாமத்தை ஸத்யா, ஆனந்த ஸ்வரூபிணீ என்று இரு நாமங்களாகப்பிரித்து, அதற்கு பதிலாக அமேயா (616) ஆத்மா (617) என்ற நாமங்களை அமேயாத்மா என்று சொல்லுவார்கள்.

3. ஸத்யா என்பதினால்,

'ஸ்திதி ப்ராணஸ்தீத்யன்னமயம் இத்யஸாவாதித்ய: |'

என்ற ச்ருதிவாக்யத்தின்படி, ப்ராணன், அன்னம், ஆதித்யன் என்பவையும் குறிக்கப்படும்.

4. ஸத்துக்களிடத்தில் ப்ரியமாக இருப்பவள் என்று சொல்லலாம். அல்லது ஸத்யபாமா ஸ்வரூபமாயிருப்பவளென்றும் சொல்லலாம்.

## लोपामुद्रार्चिता

## லோபாமுத்ரார்ச்சிதா (647)

லோபா முத்ரையினால் பூஜிக்கப்பட்டவள்.

1. லோபாமுத்ரையென்பவள் அகஸ்த்யருடைய பத்னீ, அம்பாளுடைய உபாஸகச்ரேஷ்டர்களில் ஒருவளென்றும், ஸ்ரீவித்யையின் பேதங்களில் ஒன்றான ஹாதிவித்யை யென்பதின் ரிஷி (மந்த்ரத்ரஷ்டா) என்றும், ஏற்கனவே வந்த 'மனுவித்யா'. 'சந்த்ரவித்யா' முதலிய நாமங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. தன்னுடைய பக்தர்களில் முக்யமானவள் என்பதாக அம்பாளாலேயே சொல்லப்பட்டதாக ஸ்ரீலலிதாத்ரிசதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

'பத்ன்யஸ்ய லோபாமுத்ராக்யா மாம் உபாஸ்தே அதிபக்தித:'

2. இதனால் அம்பாளுக்கே லோபாமுத்ரா என்று பெயர் என்பதாக த்ரிபுராஸித்தாந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'அகஸ்த்யபத்ன்யா லோபாக்ய முத்ராயா: பரமேச்வரீ |
ப்ரஸன்னத்வாத் இயம் தேவீ லோபாமுத்ரேதி கீயதே ||'

இந்த மாதிரி அர்த்தத்தில் இந்த நாமத்தை லோபாமுத்ரா, அர்ச்சிதா என்று இரண்டாகப் பிரித்துச் சொல்வதும் பொருத்தமாகத்தானிருக்கிறது.

3. அல்லது, லோபாமுத்ரையெனப்படும் வித்யையின் மூலமாக உபாஸிக்கப்படுகிறவள் என்றும் சொல்லலாம்.

'வித்யா த்ருதீய கண்டேன குர்யாத் ஸர்வோபசாரகான் |'

(காதிமதம்)

## लीलाक्लृप्तब्रह्माण्डमण्डला

## லீலாக்ல்ருப்த ப்ரம்ஹாண்ட மண்டலா (648)

ப்ரம்ஹாண்ட மண்டலத்தையெல்லாம் லீலையாகவே நிர்மாணம் செய்பவள்.

அதாவது, அவ்வளவு அனுயாஸமாகச் செய்பவள் என்று தாத்பர்யம்.

இதையே 'ஸ்வேச்சயா ஸ்வபித்தௌ விச்வமுன்மீலயதி— என்று சக்தி ஸூத்ரத்திலும்.

'விதிவிஷ்ணுமுகாமரோதய
ஸ்திதி நாசேஷு சிவோऽப்யனீச்வர: |
ஜகதம்ப தவ த்வயம் க்ரம:
க்ஷணமுத்தாலக புஷ்ப பஞ்ஜிகா ||'

என்று பாஸ்கர ராயருடைய தேவீஸ்தவத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

## अदृश्या

## அத்ருச்யா (649)

பிறரால் பார்க்கமுடியாதவள்.

அதாவது (மாம்ஸ) சக்ஷுஸ் முதலான இந்திரியங்களுக்கு அகோசரமாக இருப்பவள் என்று தாத்பர்யம்.

'ந த்ருஷ்டேர் த்ரஷ்டாரம் பச்யேத் |' (ச்ருதி)

இதையே தேவீபாகவதத்தில் மூன்றாவது ஸ்கந்தத்தில் 'நிர்குணஸ்ய முனே ரூபம் ந பவேத் த்ருஷ்டிகோசரம் |'

என்று ஆரம்பித்து,

நிர்குணா துர்கமா சக்தி: நிர்குணச்ச பர: புமான் ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**दृश्यरहिता**

**த்ருச்யரஹிதா** (650)

பார்க்கும்படியான வஸ்துக்களின் ஸம்பந்தமில்லாதவள்.

1. அதாவது, அம்பாள் பரமார்த்திகமான ஸத்ரூபமாக இருப்பதால் வ்யாவஹாரிகமான (அழிவுள்ள) பதார்த்தங்களின் சேர்க்கை யாதொன்றும் கிடையாது என்று தாத்பர்யம்.

2. அல்லது, நிர்விஷயமான ஸம்வித் ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

**विज्ञात्री**

**விக்ஞாத்ரீ** (651)

விசேஷமான அறிவோடு கூடியவள்.

அல்லது, அறியமுடியாத ஸ்வரூபத்தையுடையவள் என்றும் சொல்லலாம்.

'விக்ஞாதாரம் அரேகேன விஜானீயாத் |'. (ச்ருதி)

**वेद्यवर्जिता**

**வேத்யவர்ஜிதா** (652)

தெரியவேண்டியது ஒன்றுமில்லாதவள்.

1. அதாவது, அம்பாள் ஸர்வக்ஞையானபடியால் அறிய வேண்டியதான பதார்த்தாந்தரம் யாதொன்றுமில்லையென்று தாத்பர்யம்.

2. அல்லது பாரமார்த்திகமான ஸத்தாக இருப்பதால் அம்பாளை அறிவதற்கு யாருமில்லையென்றும் சொல்லலாம்.

'அத்யாபி யஸ்யா ஜானந்தி ந மனாகபி தேவதா: |
கேயம் கஸ்மாத் க்வ கேனேதி ஸரூபாரூப பாவனாம் ||'

(நித்யாஷோடசிகார்ணவம்)

**योगिनी**

**யோகினீ** (653)

யோக ஸ்வரூபமாக இருப்பவள்.

**योगदा**

**யோகதா** (654)

யோகத்தைக் கொடுப்பவள்.

**योग्या**

**யோக்யா** (655)

யோகத்திற்குத் தகுந்தவள்.

1. யோகமென்பது ஏகத்வமான (ஐக்யமான) பாவனை. அந்த ரூபமாக அம்பாள் இருப்பதாலும், அதைத் தன் பக்தர் களுக்குக் கொடுப்பதாலும், அதினல் அறியப்பட்ட ஸ்வரூபத் தோடிருப்பதாலும் இம்மூன்று நாமங்களும் ஏற்பட்டன.

மனதுள்பட்ட ஞானேந்த்ரியங்களையெல்லாம் அடக்கி க்ஷேத்ரக்ஞ, பரமாத்மாக்களுடைய ஏகதத்வத்தை பாவனை செய்வதானது யோகம் என்று சொல்லப்படும்.

'ஞானேந்த்ரியாணி ஸர்வாணி நிக்ருஹ்ய மனஸா ஸஹ |
ஏகத்வபாவனு யோக: க்ஷேத்ரக்ஞ பரமாத்மனோ: ||'

(விஷ்ணுபுராணம்)

'யோக: சித்தவ்ருத்தி நிரோத: | (யோகஸூத்ரம்)

இதனல் துக்கத்தினுடைய சேர்க்கையே இல்லாமல் போய் விடுவதாக,

'தம் வித்யாத் துக்கஸம்யோக வியோகம் யோகஸம்ஞிதம் |'

என்று கீதையில் சொல்லப்பட்டிருக்கிறது.

2. யோகமென்பது மந்த்ர, லய, ஹட, ராஜயோகங்க ளென்று நாலு பிரிவுகளையுடையது. ராஜயோகமானது திரும்ப வும் ஸாங்க்ய, தாரக அமனஸ்கமென்று மூன்று பிரிவுகளை யுடையது.

இவைகளின் விபரங்களை யோக சாஸ்த்ரங்களில் பார்த்துக் கொள்ளவும்.

3. ஜ்யோதி: சாஸ்த்ரத்தில் மங்களாமுதல் ஸங்கடாவரையில் பெயருள்ளவர்களும், இருப்பத்தாறு வருஷங்களுக்கு ஒருமுறை பரிவர்தனம் செய்கிறவர்களுமான யோகினிகள் இருப்பதாகச் சொல்லப்படும். இவர்கள் ரூபமாகவும், மந்த்ரசாஸ்த்ரத்தில் சொல்லப்படும் டாகினீ முதலான யோகினிகள் ரூபமாகவும், அம்பாளிருப்பதால் யோகினீ என்று பெயர்.

4. அல்லது, யோகமென்றால் விஷயங்களுடைய ஸம்பந்தத்தையுடைய போகத்திற்கும் பெயர். அந்த அர்த்தத்தில் போக்தா, போகப்ரதன், போக்யம் இம்மூன்றையும் இந்த மூன்று நாமங்கள் முறையே குறிக்கும். போகத்தைப்பற்றிய இம்மூன்றும் ப்ரம்ஹத்தின் ஸ்வரூபமென்பதாக,

'போக்தா போக்யம் ப்ரேரிதாரம் ச மத்வா
ஸர்வம் ப்ரோக்தம் த்ரிவிதம் ப்ரம்ஹைதத் !'

என்று ச்வேதாச்வதரோபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

5. மாயை என்பது ப்ரதானமென்றும், ஸவதந்த்ரமென்றும் ஸாங்க்யர்கள் சொல்லுகையில் வேதாந்திகள் அதை சிவனுடைய சக்தியென்றே சொல்வார்கள். இதனால் சக்தியானது, பரதந்த்ரமென்பது ஏற்படுவதாக ப்ரகாசாத்ம ஶ்ரீசரணாள் தமது விவரணத்தில் சொல்லியிருக்கிறார்கள். இவ்வித சக்தியானது ஸத்வ, ரஜஸ், தமோகுணங்களையுடையது. இந்த குணங்கள் ஒன்றையொன்று அடக்கி மேலிட்டிருக்கும் ஸ்வபாவமுடையவைகள்.

'ரஜஸ் தமச்சாபிபூய ஸத்வம் பவதி பாரத |
ரஜ: ஸத்வம் தமச்சைவ தம: ஸத்வம் ரஜஸ்ததா ||' (கீதை)

இதனால் சக்தியானது மூன்றுவிதமாக முடிவடைகிறது. ரஜஸ், தமஸ் இவை அத்யந்தம் அடங்கி ஸத்வமே மேலிட்டிருப்பது ஒன்று. கொஞ்சமாக வெளிப்பட்ட ரஜஸ், தமோகுணங்களால் மலினமான ஸத்வத்தோடிருப்பது இரண்டாவது. அத்யந்தமாய் அடக்கப்பட்ட ஸத்வ, ரஜோகுணங்களுடையதாய், கேவலம் தமோமயமாயிருப்பது மூன்றாவது. இம்மூன்றில் முதலாவதுடன் சக்தியிருக்கும்போது, சித் ஈச்வரனென்ற பெயர்களோடு, போக ப்ரதமாயிருப்பதால் யோகதா என்று சொல்லப்படும். இரண்டாவதுடனிருக்கும்போது ஜீவனென்ற

பெயருடன் போக்த்ரீயாகயிருப்பதால் யோகினீ என்று சொல்லப்படும். மூன்ருவதுடனிருக்கும்போது ஜடவஸ்துவென்ற பெயருடன் போக்யமான வஸ்துவாக யிருப்பதால் யோக்யா என்று சொல்லப்படும். இம்மூன்றையுமே இந்த மூன்று நாமங்களில் முறையே சொல்லப்பட்டிருக்கிறது.

## योगानन्दा
## யோகானந்தா (656)

யோகத்திலேயே ஆனந்தத்தையுடையவள்.

1. சிவ, சக்திகளுடைய ஸாமரஸ்யத்தை (சேர்க்கையை) யோகம் என்று சொல்லப்படும்.

2. அல்லது, நித்ரையானது ஆனந்தத்தைக் கொடுப்பதால் யோக நித்ரையென்று சொல்லப்படும். ஆகையினுல் அதற்கே யோகானந்தா என்றும் பெயர். அதுவே தேவியின் ரூபமென்று சொல்லப்படும்.

'யா தேவீ ஸர்வ பூதேஷு நித்ராரூபேண ஸம்ஸ்த்திதா |'
(தேவீமஹாத்ம்யம்)

என்று ஆரம்பித்து

தேவஷ்வபி ததாரைஞம் நான்யோ நாராயணுத்ருதே |
ஸகீ ஸதாசிவஸ்யைஷா மாயா விஷ்ணோ: சரீரஜா ||
ஸைஷா நாராயணமுகே த்ருத்யா கமலலோசன |
லோகான் அல்பேன காலேன பஜதே ப்ருசமோஹினீ ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

3. அம்பாளுடைய யோகநித்ரா ஸ்வரூபமானது தேவீ மஹாத்ம்யம் ப்ரதம சரித்ரத்தில் விசேஷமாக வர்ணிக்கப்பட்டிருப்பதைப் பார்க்கவும். இந்த ரூபமான தேவியின் அனுக்ரஹத்தால் விஷ்ணுவானவர் மது, கைடபர்களை ஸம்ஹாரம் செய்ததால் அம்பாளுக்கு மதுகைடபக்னீ மதுகடைபப்ரசமனீ, மதுகடைப பஞ்ஜனீ என்பதான பெயர்கள் உண்டாயின.

4. அல்லது யோகானந்தர் என்று பெயருடைய ந்ருஸிம்ஹ மூர்த்தியின் ரூபத்தையுடையவள் என்றும் சொல்லலாம்.

5. சிலர் இந்நாமத்தை அயோகா, நந்தா என்று இரண்டு நாமங்களாகப் பிரித்து அதற்கு ஸரியாக மோஹினீ, முக்யா

என்ற நாமங்களை ஒரே நாமமாகச் சொல்லுவார்கள். இந்தப் பிரிவை அனுஸரித்து இனி சொல்லப்படும்.

6. யோகமென்றால் பற்றுதல், ஸங்கம். அது இல்லாதவள் அயோகா. 'அஸங்கோ நஹி ஸஜ்ஜதே' என்ற ச்ருதி வாக்யத்தில் இது சொல்லப்பட்டது. அல்லது அய: (இரும்பு) பர்வத ரூபமாக இருப்பவள், அதாவது, அவ்விதமான பர்வதம்போல் அபேத்யமானவள் என்றும் சொல்லலாம், அல்லது சுபாவஹமான கார்யங்களால் பரமசிவனை அடைகிறவள், அவரிடம் பக்தர்களை சேர்ப்பிக்கிறவள் என்றும் சொல்லலாம்.

7. அளகநந்தா என்ற பெயருடைய கங்கா ரூபமாக அம்பாள் இருப்பதை இங்கு நந்தா என்ற பெயரால் சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம். சுக்ல பக்ஷத்திய ப்ரதிபத் (ப்ரதமை), ஷஷ்டி, ஏகாதசீ திதிகளுடைய தேவதைகளுக்கு நந்தா என்று பெயர். அந்த ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

'நந்தா பகவதீ நாம யா பவிஷ்யதி நந்தஜா |'

என்ற மார்க்கண்டேய புராண வசனத்தின்படி நந்தனென்ற கோபனுக்குப் பெண்ணாகப்பிறந்த அம்பாளுடைய மூர்த்தி விசேஷத்திற்கு நந்தா என்று பெயர்.

'நந்தா ஹிமவத: ப்ருஷ்டே' என்ற பத்மபுராண வசனத்தின்படி ஸரஸ்வதீ நதீயானவள் ஹிமாசலத்தின் அருகிலிருக்கையில் நந்தா என்ற பெயரையுடையவள்.

புஷ்கர க்ஷேத்ரத்தின் ஸமீபத்திலிருக்கும் (தக்ஷிணவாஹினியான) நதீ விசேஷத்திற்கும் நந்தா என்று பெயர். அதில் ஸ்னானம் செய்யாதிருந்தாலும், அதின் நாமோச்சாரணத்தினாலேயே ஸகல ஸுகங்களையும் கொடுக்கக்கூடிய மஹிமை வாய்ந்ததென்பதாக பத்ம புராணத்தில் புஷ்கர மாஹாத்ம்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

புண்யா புண்ய ஜலோபேதா நதீயம் ப்ரம்ஹண: ஸுதா |
நந்தா நாம்னீதி விபுலா ப்ரவ்ருத்தா தக்ஷிணாமுகீ ||
அகச்சன்னபி யஸ்தஸ்யா: நாம க்ருண்ஹாதி மானவ:
ஸ ஜீவன் ஸுகமாப்னோதி ம்ருதோ பவதி கேசர: ||'

8. அம்பாளுக்கு இந்த 'நந்தா' என்ற நாமம் ஏற்பட்டதற்குக் காரணம் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

'யதாகதம் து தே ஜக்முக: தேவீம் ஸ்தாப்ய ஹிமே கிரௌ |
ஸம்ஸ்த்தாப்யானந்திதா யஸ்மாத் தஸ்மான் நந்தா து ஸாபவத் ॥'

(வராஹ புராணம்)

'நந்ததே ஸுரலோகேஷு நந்தனே வஸதேऽதவா |
ஹிமாசலே மஹாபுண்யே நந்தா தேவீ தத: ஸ்ம்ருதா ||'

(தேவீ புராணம்)

இவ்விதம் தேவர்களால் ஹிமாசலத்தில் ஸ்தாபனம் செய்யப்பட்டு ஸந்தோஷமாக வீற்றிருப்பதாலும், ஸுரலோகத்திலிருப்பதில் ஸந்தோஷமுடையவளாயிருப்பதாலும், நந்தனோத்யானத்தில் இருப்பதாலும் நந்தா என்ற பெயரோடு கூடிய அம்பாளுடைய ரூப விசேஷத்தின் ஸ்வரூபமானது பின்வருமாறு வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

'காயத்ர்யஷ்ட புஜா யா து சைத்ராஸுரம் அயோதயத் |
ஸைவ நந்தாபவத் தேவீ தேவகார்யசிகீர்ஷயா ||
ஸ்வாயம்புவே ஹதோ தைத்யோ வைஷ்ணவ்யா மந்தரே கிரௌ ||'
மஹிஷாக்யோऽஸுர: பச்சாத் ஸ வை சைத்ராஸுரோऽபவத்
நந்தயா நிஹதோ விந்த்யே மஹாபலபராக்ரம: |
ஞானசக்திஸ்து ஸா தேவீ மஹிஷோऽக்ஞான மூர்த்திமான் |
அக்ஞானம் ஞானநாச்யம் து பவத்யேவ ந ஸம்சய:

இது தவிர தேவீமஹாத்ம்யத்தில் மூன்றுவது சரித்ரத்தில் இந்த நாமத்தைப்பற்றிச் சொல்லியிருப்பதையும் பார்க்கவும்.

## युगंधरा

## யுகந்தரா (657)

நுகத்தடியை தரிப்பவள்.

'யுகம் ஹஸ்தே சதுஷ்கேபி ரதஸீராங்கயோர் யுக: |
யுகம் க்ருதாதௌ யுகளே வ்ருத்தி நாம ஔஷதேऽபி ச ||'

என்ற விச்வகோச வசனத்தின்படி யுகமென்றால் நான்கு முழங்கையளவு, வண்டி, கலப்பை முதலியவைகளின் நுகத்தடி, க்ருதயுகம் முதலான யுகங்கள், இரட்டை (யுகளம், ஜோடி),

வ்ருத்தி என்ற ஔஷதம் முதலியவைகளுக்குப்பெயர். நகத்தடியை அச்வ, வ்ருஷபங்கள் தாங்கி நிர்வாஹம் செய்வதால் இந்தப் பெயர் ஏற்பட்டது. க்ருதயுகம் முதலான யுகங்களையும், சிவ சக்தியுகளமானது தாரணம் செய்வதால் இந்தப்பெயர் பொருத்தமாக இருக்கிறது.

## इच्छाशक्तिज्ञानशक्तिक्रियाशक्तिस्वरूपिणी

## இச்சாசக்தி ஞானசக்தி க்ரியாசக்தி ஸ்வரூபிணீ (658)

இச்சை, ஞானம், க்ரியை இந்த சக்திகளை ஸ்வரூபமாக உடையவள்.

1. இவை மூன்றும் இச்சா, ஞான, யத்ன ரூபமான மூன்று குணங்களைக் குறிக்கும். இவற்றில் இச்சையென்பது சிரஸ்ஸையும், ஞானமென்பது உடலையும், க்ரியை என்பது பாதங்களையும் குறிக்கும். ஆகவே இந்த சக்திகள் மூன்றும் அம்பாளுடைய சரீரத்தின் பாகங்களாக இருக்கின்றன.

'இச்சா சிர: ப்ரதேசச்ச ஞானு ச தததோகதா |
க்ரியா பதகதா ஹ்யஸ்யா ஏவம் சக்திரயம் வபு: ||'

(ஸங்கேத பத்ததி)

2. இம்மூன்று சக்திகளுக்கும் முறையே வாமா, ஜ்யேஷ்டா, ரௌத்ரீ என்று பெயர்களென்றும் அவர்கள் ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன் இவர்களுடைய சக்திகளென்றும் அவர்களே, ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களுக்கு காரணபூதர்களென்றும் சொல்லப்படும்.

'த்ரிபுரா த்ரிவிதா தேவீ ப்ரம்ஹ விஷ்ணவீசரூபிணீ |
ஞானசக்தி: க்ரியாசக்திரிச்சா சக்த்யாத்மிகா ப்ரியே ||'

(வாமகேச்வர தந்த்ரம்)

'யா ஸா சக்திர் ஜகத்தாது: கதிதா ப்ரம்ஹண: பரா |
இச்சாத்வம் தஸ்ய ஸா தேவீ ஸிஸ்ருக்ஷோ: ப்ரதிபத்யதே ||
ஏவமேததிதி ஜ்ஞேயம் நான்யதேதி ஸுநிச்சிதம் |
ஞாபயந்தீ ஜடித்யந்தர் ஞானசக்திர் நிகத்யதே ||
ஏவம் பூதமிதம் வஸ்து பவத்விதி யாதா புன: |
ஞாத்வா ததேவ தத்வஸ்து குர்வந்த்யத்ர க்ரியோச்யதே ||'

(மாலினீ விஜய தந்த்ரம்)

இம்மூன்று சக்திகளையும் தனக்குள் அடக்கிக்கொண்டு இவர்களுக்கு மேல்பட்டதாக இருக்கும் அம்பாளுடைய ஸ்வரூபத்திற்கு அம்பிகா என்று பெயர்.

3. இவ்விதமான ஞான, இச்சா, க்ரியா குணங்கள் ஒன்றொன்றும் அததற்கடுத்தாற்போலிருப்பதான குணத்திற்குக் காரணமாக இருக்கின்றன. க்ரியை என்பது யத்னத்தைக் குறிக்கும்.

4. சலனாத்மகமான (நகர்வது என்பதான) க்ரியையானது ஐந்துவிதமாகப் படிப்படியாக உண்டாகிறதென்பதாக ஸாங்க்ய சாஸ்த்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸ்பந்தச்சைவ பரிஸ்பந்த: ப்ரக்ரம: பரிசீலன: |
ப்ரசார இதி வித்வத்பி: கதிதா: பஞ்ச தா: க்ரியா: ||'

(யக்ஞவைபவ கண்டம்)

## सर्वाधारा

## ஸர்வாதாரா (659)

ஸகலத்திற்கும் ஆதாரமாக இருப்பவள்.

1. அல்லது, எல்லாவிதமான ஆதாரங்களையும் தன்னுடைய ஸ்வரூபமாக உடையவள் என்றும் சொல்லலாம். அம்பாள் ஸர்வாந்தர்யாமியாக இருப்பதால் இப்படி சொல்லப்பட்டது.

2. அல்லது, ஸகல ஜகத்துக்களுடைய தரா (பரம்பரா) ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம். ஜன்ய (உண்டாக்கப் படுவது), ஜனகர் (உண்டாக்குகிறவர்)களுடைய அபேதத்தை யொட்டி இவ்விதமாகவும் அர்த்தம் சொல்லலாம்.

3. அம்பாள் ஸகல வஸ்துக்களுக்கும், ஸகல ப்ரபஞ்சத்திற்கும் ஆதாரமாக இருப்பதை மார்க்கண்டேய புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'யே அர்த்தா நித்யா யே விநச்யந்தி சான்யே
யேர்த்தா: ஸ்தூலா யே ச ஸூக்ஷ்மாச்ச ஸூக்ஷ்மா: |
யச்சாமூர்த்தம் யச்ச மூர்த்தம் ஸமஸ்தம்
யத் யத் பூதேஷ்வேகமேகம் ச கிஞ்சித் |
யேऽர்த்தா பூமௌ யேऽந்தரிக்ஷே ऽன்யதோ வா
தேஷாம் தேவி த்வத்தவோபலப்தி: ||'

## सुप्रतिष्ठा

### ஸுப்ரதிஷ்டா (660)

ஜகத்தில் சோபனமான அதிஷ்டானத்தையுடையவள்.

1. அதாவது, ஜகத்துக்கெல்லாம் சோபையைக்கொடுத்து விளங்கிக்கொண்டிருப்பவள் என்று தாத்பர்யம்.

2. இருபது அக்ஷரங்களோடுகூடிய சந்தோ விசேஷத்திற்கு ஸுப்ரதிஷ்டா என்று பெயர். அந்த ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

## सदसद्रूपधारिणी

### ஸதஸத்ரூபதாரிணீ (661)

ஸத், அஸத் என்ற ரூபங்களை தரித்திருப்பவள்.

1. ஸத் என்பது ப்ரம்ஹம். அஸத் என்பது (ப்ரம்ஹத்திலிருந்து வேறுபட்டதான) ஜகத். இவ்விரண்டு ரூபங்களிலும் அம்பாளிருப்பதாக இங்கு சொல்லப்பட்டது.

2. அல்லது, ஸத் என்பது வ்யாவஹாரிகமான ஸத்யம் அல்லது பரமார்த்திகமான ஸத்யம், இவைகளைக் குறிக்கும். அஸத் என்பது துச்சமான ப்ராதிபாஸிக ஸத்யத்தைக் குறிக்கும். இந்த இரண்டு ரூபங்களாக இருப்பதாகவும் சொல்லலாம்.

3. அல்லது மேலே சொல்லப்பட்ட ஸத், அஸத் இவைகளின் விஷயகமான ஞானஸ்வரூபமாக இருப்பவளென்றும், சொல்லலாம்.

4. ஸத், அஸத் என்ற பதங்கள் முறையே பாவ, அபாவங்களையும் குறிக்கும். இவ்விரண்டும் அம்பாளிடம் அதிஷ்டானமடைந்திருப்பதை இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

'யத் யதஸ்தி தயா பாதி யத் யன்னாஸ்தி தயாபி ச |
தத் தத் ஸர்வம் மஹாதேவ மாயயா பரிகல்பிதம் ||'

(ஸ்காந்தம்)

## अष्टमूर्तिः

### அஷ்டமூர்த்தி: (662)

எட்டுவிதமான மூர்த்திகளையுடையவள்.

1. இந்த எட்டுவிதமான ரூபங்களைப் பலவாறாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'லக்ஷ்மீர் மேதா தரா புஷ்டி: கௌரீ துஷ்டி: ப்ரபா த்ருதி: |
ஏதாபி: பாஹி தனுபி: அஷ்டாபிர் மாம் ஸரஸ்வதீ ||'

(மத்ஸ்ய புராணம்)

ஆத்மாவே குணபேதத்தால் எட்டு விதமாக இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'குணபேதாத் ஆத்மமூர்த்தி: அஷ்டதா பரிகீர்த்திதா |
ஜீவாத்மா சாந்தராத்மா ச பரமாத்மா ச நிர்மல: ||
சுத்தாத்மா ஞானரூபாத்மா மஹாத்மா ஸப்தம: ஸ்ம்ருத: |
அஷ்டமஸ்தேஷு பூதாத்மேத் யஷ்டாத்மான: ப்ரகீர்த்திதா: ||'

(யோகசாஸ்த்ரம்)

பஞ்சமஹாபூதங்கள், ஸூர்யன், சந்த்ரன் இவ்வேழுடன் ஜீவாத்மா, ஸ்வர்கம், தீக்ஷிதன் என்று பலவிதமாகச் சொல்லப்பட்ட எட்டாவதுடன் சேர்ந்த எட்டுவிதமான மூர்த்திகளையும் இங்கு சொன்னதாகவும் சொல்லலாம்.

'பூதானி புஷ்பவந்தௌ ஸ்வரிதி தேவ்யஷ்ட மூர்த்தய: |'

(சக்திஸூத்ரம்)

ஸூர்யோ ஜலம் மஹீ வன்ஹி: வாயுராகாச ஏவ ச |
தீக்ஷிதோ ப்ராம்ஹண: ஸோம இத்யஷ்டௌ மூர்த்தயோ மதா: ||
பத்ன்ய: ஸுவர்ச்சலா சோமா ஸுகேசீ சாபரா சிவா |
ஸ்வாஹா திதிஸ் ததா தீக்ஷா ரோஹிணீ ச யதாக்ரமம் ||
சனைச்சரஸ்ததா சுக்ரோ லோஹிதாங்கே மனோஜவ:
ஸ்கந்த: ஸ்வர்கோ ऽத ஸந்தானோ புதச்சானுக்ரமாத் ஸுதா: ||'

(விஷ்ணு புராணம்)

'அஷ்டௌ ப்ரக்ருதயோ தேவ்யா: மூர்த்தய: பரிகீர்த்திதா: |
ததா விக்ருதயஸ்தஸ்யா தேஹா பத்த விபூதய: ||'

(லிங்க புராணம்)

'பூமிராபோ ऽனலோ வாயு: கம் மனோ புத்திரேவ ச |
அஹங்கார இதீயம் மே பின்னா ப்ரக்ருதிரஷ்டதா ||' (பகவத்கீதை)

'யா ஸ்ருஷ்டி ஸ்ரஷ்டுராத்யா வஹதி விதிஹுதம்
யா ஹவிர் யா ச ஹோத்ரீ
யே த்வே காலம் விதத்த: ச்ருதி விஷயகுணா
யா ஸ்த்திதா வ்யாப்ய விச்வம் |

யாமாஹு: ஸர்வபூத ப்ரக்ருதிரிதி யயா
ப்ராணின: ப்ராணவந்த:
ப்ரத்யக்ஷாபி: ப்ரபன்னஸ்தனுபிரவது வஸ்-
தாபிரஷ்டாபிரீச: ||'
'ஜலம் வன்ஹிஸ் ததா யஷ்டா ஸூர்ய சந்த்ரமஸௌ ததா |
ஆகாசம் வாயுரவனீ மூர்த்தயோऽஷ்டௌ பிநாகின: ||'
'புவி பயஸி க்ருசானெள மாருதே கே சசாங்கே
ஸவித்ரி யஜமானே ऽப்யஷ்டதா சக்திரேகா |
வஹதி குசபராப்யாம் யாऽவனம்ராபி விச்வம்
ஸகல ஜனனி ஸா த்வம் பாஹி மாமத்யவச்யம் ||'
(ஸகல ஜனனீ ஸ்தவம்)

2. கௌலாசாரத்தில் ஸம்பந்தப்படக்கூடிய எட்டுவிதமான குல ஸ்த்ரீகளை (குலாஷ்டகத்தை) இங்கு சொன்னதாகவும் சொல்லலாம்.

'கணிகா சௌண்டிகீ சைவ கைவர்த்தீ ரஜகீ ததா |
தந்த்ரகாரீ சர்மகாரீ மாதங்கீ பும்ச்சலீ ததா ||' (ஸமயாசாரஸ்ம்ருதி)

இவர்களுடைய பெயர்களும் லக்ஷணங்களும் ருத்ரயாமளத்தில் சொல்லப்பட்டிருக்கிறதைப் பார்க்கவும்.

3. இது தவிர, ப்ராம்ஹீ முதலான அஷ்ட மாதாக்கள், வசினீ முதலான அஷ்ட வாக்தேவதைகள், இந்த ரூபங்களையும் இந்த நாமத்தில் சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

## अजाजैत्री
## அஜாஜைத்ரீ (663)

அவித்யையை ஜயித்தவள்.

'அஜாமேகாம் லோஹிதசுக்லக்ருஷ்ணாம்' என்ற ச்ருதி வாக்கியத்தில் சொல்லப்பட்ட அஜா என்ற பதமானது அவித்யையைக் குறிக்கும். அம்பாள் ஞானரூபிணியாகையால் அவ்விதமான அவித்யையை (அக்ஞானத்தை) நாசம் செய்பவளாக இங்கு சொல்லப்பட்டது.

## लोकयात्राविधायिनी
## லோகயாத்ராவிதாயினீ (664)

(சதுர்தச) லோகங்களின் யாத்ரையை நடத்தும் ஸாமர்த்தியமுடையவள்.

யாத்ரை என்பது ப்ரளயம், ஸம்ரக்ஷணம் இவைகளைக் குறிக்கும்.

## एकाकिनी

## ஏகாகினீ

(665)

ஒருவளாக (தனியாக) இருப்பவள்.

அதாவது, இரண்டாவதான வஸ்து யாதொன்றுமில்லாமல் தனியாக (எஞ்சி) இருப்பவள் என்று தாத்பர்யம்.

'ஸோऽபிபேத், தஸ்மாத் ஏகாகீ பிபேதி, ஸஹாய மீக்ஷாம் சக்ரே, யன்மதன்யன்னாஸ்தீ கஸ்மான்னு பிபேமீதி, தத ஏவாஸ்ய பயம் வீயாய |'

(ப்ருஹதாரண்யகம்)

'ஏகைவ லோகான் க்ரஸதி ஏகைவ ஸ்தாபயத்யபி |
ஏகைவ ஸ்ருஜதே விச்வம் தஸ்மாத் ஏகாகினீ மதா |'

(தேவீ புராணம்)

'ஏகைவாஹம் ஜகத்யத்ர த்விதீயா கா மமாऽபரா |
பச்யைதா துஷ்ட மய்யேவ விசந்த்யே மத்விபூதய: ||

(தேவீமஹாத்ம்யம்)

## भूमरूपा

## பூமரூபா

(666)

ப்ரஹ்மஸ்வரூபமாக இருப்பவள்.

1. பூமா என்ற பதத்தினுல் ப்ரஹ்மமே குறிக்கப்படுகிறதென்பதாக ப்ரம்ஹஸூத்ரத்தின் பூமாதிகரணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதையேதான் 'யத்ர நான்யத் பச்யதி நான்யத் ச்ருணோதி' என்று ஆரம்பித்து 'யோ வை பூமா தத் ஸுகம், என்று சாந்தோக்யோபநிஷத்தில் சொல்லப்பட்டது.

2. பூமா என்ற பதத்திற்கு பஹு (அனேகம்) என்ற அர்த்தமுமுண்டு. முந்திய நாமத்தில் சொல்லியபடி அம்பாள் வாஸ்தவத்தில் ஏகாகினியாக இருந்தாலும் உபாதிகளோடுகூடி, நாமரூபங்களோடு இருக்கும்போது பலவாருகத்தோன்றுவதால் இந்த நாமம் ஏற்பட்டது. இதையேதான் பலவிதமான உபமானங்களோடு தேவீபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஏகாப்யுபாதிதோ பூமா சிவா ஸர்வத்ர விச்ருதா |
யதானுரஜ்யதே வர்ணை: விசித்ரை: ஸ்படிகோ மணி: ||
ததா குணவசாத் தேவீ பூமா நரமேதி வர்ண்யதே |
ஏகோ பூத்வா யதா மேக: ப்ருதக்த்வேன ச திஷ்டதி ||
வர்ணதோ ரூபதச்சைவ ததா குணவசாத் உமா |
நபஸ: பதிதம் தோயம் யதா நானாரஸம் பவேத் ||
பூமே ரஸவிசேஷேண ததா குணவசாத் உமா |
யதா த்ரவ்ய விசேஷேண வாயுரேக: ப்ருதக் பவேத் ||
துர்கந்தோ வா ஸுகந்தோ வா ததா குணவசாத் உமா |
யதா வா கார்ஹபத்யோக்னி: அன்ய ஸம்ஞாந்தரம் வ்ரஜேத் ||
தக்ஷிணாஹவநீயாதி ப்ரம்ஹாதிஷு ததைவ ஸா |
ஏகத்வேன ச பூம்னா ச ப்ரோக்தா தேவீ நிதர்சனை: |
தஸ்மாத் பக்தி: பரா கார்யா ஸர்வகத்வ ப்ரஸித்தயே ||'

இதையே கூர்மபுராணத்திலும்

'ஏகா காமேச்வரீ சக்தி: அனேகோபாதியோகத: |
பராவரேண ரூபேண க்ரீடதே தஸ்ய ஸன்னிதௌ ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

## निर्द्वैता

*நிர்த்வைதா* (667)

த்வைத பாவத்திலிருந்து நீங்கப்பெற்றிருப்பவள்.

பரப்ரம்ஹத்திலிருந்து வேறுபட்டதான இரண்டாவது வஸ்து எதுவும் அழிவுள்ளது, சாச்வதமல்ல என்பதாக 'யத்ர நான்யத் பச்யதி' என்று ஆரம்பித்து 'யதல்பம் தன் மர்த்யம்' என்பதாக சாந்தோக்ய உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விதமான இரண்டாவது வஸ்து என்ற பாவமே பரப்ரம்ஹ ஸ்வரூபிணியான அம்பாளிடமில்லையென்பதாக இங்கு சொல்லப் பட்டது.

## द्वैतवर्जिता

*த்வைத வர்ஜிதா* (668)

எக்காலத்திலும் இரண்டாவது வஸ்து என்பது இல்லாதவள்.

முந்திய நாமத்தில் சொல்லப்பட்ட த்வைதமான பாவமானது முந்தியும், பிந்தியும், எக்காலத்திலும் அம்பாளைப் பற்றியவரையில் இல்லையென்பதாக இந்த நாமத்தில் சொல்லப் பட்டது.

**अन्नदा**

அன்னதா (669)

ஸகல ஜனங்களுக்கும் அன்னத்தைக் கொடுப்பவள்.

**वसुदा**

வஸுதா (670)

ஸகல ஜனங்களுக்கும் தனத்தை (அல்லது ரத்னத்தை) கொடுப்பவள்.

இவ்விதம் பரப்ரம்ஹத்தை அறிந்தவனுக்கு அன்னம், வஸு இவைகள் கிடைப்பதை ப்ருஹதாரண்யக ச்ருதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸ வா ஏஷ மஹானஜ ஆத்மான்னாதோ வஸுதானோ
விந்ததே வஸு ய ஏவம் வேத |'

**वृद्धा**

வ்ருத்தா (671)

வயதில் முதிர்ந்தவள்.

1. அம்பாள் ஸகல ப்ரபஞ்சத்திற்கும் முந்தியவளாய், காரண பூதையாய் இருப்பதால் எல்லாவற்றிற்கும் (வயதில்) புராதனமானவள் என்பதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டது. இவ்விதமாயிருக்கும் ப்ரம்ஹத்தின் கிழத்தனத்தை 'த்வம் ஜீர்ணோ தண்டேன வஞ்சஸி' என்று ச்ருதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

2. மிகவும் புராதனமான (அல்லது அபிவிருத்தியடைந்த) இந்த ஜகத்ரூபமாக இருப்பவள் என்றும், ஜகத்தை அபிவிருத்தி செய்கிறவள் என்றும் சொல்லலாம்.

**ब्रह्मात्मैक्यस्वरूपिणी**

**ப்ரம்ஹாத்மைக்ய ஸ்வரூபிணீ** (672)

ப்ரம்ஹ, ஆத்மாக்களுடைய ஐக்யமாகிற ஸ்வரூபத்தை யுடையவள்.

1. அதாவது, சுத்த சைதன்ய ரூபமான ப்ரம்ஹத்திற்கும் ஜீவாத்மாக்களுக்கும் இருக்கும்படியான ஐக்யமானது அம்பாளுடைய நிஜமான (ஸ்வ) ரூபமென்று தாத்பர்யம்.

2. அல்லது, ப்ரம்ஹமென்றால் சிவனைக் குறிக்கும். சிவன், ஜீவன்கள் இவர்களுடைய ஐக்யத்தை உண்டுபண்ணுகிறதான (கொடுக்கக்கூடிய) ஹம்ஸமந்த்ரத்தை தன் ரூபமாக உடையவள் என்றும் சொல்லலாம். அந்த மந்த்ரத்தில் அஹம் என்பதானது ஜீவாத்மாவையும், சக்திமந்த்ரமான ஸகாரமானது பரமேச்வரனையும், குறிக்குமென்றும் ஆகவே ஹம்ஸமந்த்ரமானது ஜீவாத்மா, பரமாத்மாக்களுடைய ஐக்யத்தை ப்ரதிபாதனம் செய்து அவ்விதமான ஞானத்தைக்கொடுக்குமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'அதவா ஜீவமந்த்ரோऽயம் ஜீவாத்மப்ரதிபாதக: |
அஹம் சப்தஸ்ய ரூடத்வாத் லோகே ஜீவாத்மவஸ்துனி ||
சக்திமந்த்ர: ஸகாராக்ய: பரமேச்வரவாசக: |
ப்ரகருதார்த்தே ப்ரஸித்தத்வாத் ப்ரஸித்த: பரமேச்வர: ||
மஹதாத்யணுபர்யந்தம் ஜகத்ஸர்வம் சராசரம் |
ஜாயதே வர்த்ததே சைவ லீயதே பரமேச்வரே ||
ஸம்ஸாரித்வேன பாதோऽஹம் ஸ ஏவ பரமேச்வர: |
ஸோऽஹமேவ ந ஸந்தேஹ: ஸ்வானுபூதி ப்ரமாணத: ||

(ஸூதஸம்ஹிதை, யக்ஞவைபவ கண்டம்)

3. இந்த அர்த்தத்துடன் தான் ஸ்ரீலலிதா த்ரிசதியில் அம்பாளை 'ஹம்ஸமந்த்ரார்த்த ரூபிணீ' என்று சொல்லப்பட்டது.

**बृहती**

**ப்ருஹதீ** (673)

பெரியவள்.

1. 'மஹதோ மஹீயான்' என்றபடி எப்பேர்ப்பட்ட பெரிய வஸ்துவுக்கும் பெரியவளாகையால் இந்தப்பெயர் ஏற்பட்டது'

2. சந்தஸ் சாஸ்த்திரத்தில் முப்பத்தாறு அக்ஷரங்களுடைய ஒரு சந்தோ விசேஷத்திற்கு ப்ருஹதீ என்று பெயர். அந்த ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம். 'காயத்ரீ சந்தஸாமஸி' என்று கூர்மபுராணத்தில் சொல்லப்பட்டபோதிலும், அம்பாள் அவ்விரண்டு சந்தோ விசேஷங்களின் ரூபமாகவுமிருப்பதால் விரோதமான வசனம் யாதொன்றுமில்லை. இதே மாதிரி பகவானுடைய விச்வரூபத்தை கீதையில் வர்ணிக்கையில் 'ப்ருஹத் ஸாம ததா ஸாம்நாம்' என்று சொல்வதற்கும், அம்பாளுடைய விச்வரூபத்தை கூர்மபுராணத்தில் வர்ணிக்கையில் 'ஜ்யேஷ்டம் ஸாம ச ஸாமஸ்வி' என்று சொல்வதற்கும் யாதொரு விரோதமுமில்லை. தலவகாரர்களுடைய சாகையில் 'உதுத்யம்' 'சித்ரம்' என்ற ரிக்குகளில் சொல்லப்படும் ஸாமமானது ஜ்யேஷ்ட ஸாமம் என்பதாக ஹரதத்தர் 'உஜ்ஜ்வல'த்தில் சொல்லியிருக்கிறார். 'ஸத்வம் ந:சித்ர' என்ற ரிக்கில் சொல்லப்படும் ஸாமமானது ப்ருஹத்ஸாமமென்பது ப்ரஸித்தம். ப்ருஹத், ஜ்யேஷ்ட பதங்கள் ஸமானமாகையால் அம்பாளை ப்ருஹத்ஸாமரூபா என்றும், ஜ்யேஷ்ட ஸாமரூபா என்றும் சொல்லலாம்.

## ब्राह्मणी
## ப்ராம்ஹணீ (674)

பரமசிவனுடைய பத்னீ.

1. பரமசிவன் ப்ராம்ஹண ஜாதியைச் சேர்ந்தவரென்பதாகச் சொல்லப்படும். சாந்தோக்யத்தில் 'விரூபாக்ஷோஸி தந்தார்ச்சி:' என்பதாக ஆரம்பித்து சிவனைக்குறித்து 'த்வம் தேவேஷு ப்ராம்ஹணோ஽ஸ்யஹம் மனுஷ்யேஷு ப்ராம்ஹணோ ப்ராம்ஹணமுபதாவத்யுப த்வா தாவாமி' என்று இதைச் சொல்லப்பட்டது. இன்னும் பராசர, ஆதித்ய, கூர்ம, வாஸிஷ்ட, லிங்கபுராணங்களிலும் இது சொல்லப்பட்டிருக்கிறது.

'ப்ராம்ஹணோ பகவான் ஸாம்போ ப்ராம்ஹணானாம் ஹி தைவதம் |
விசேஷாத் ப்ராம்ஹணோ ருத்ரம் ஈசானம் சரணம் வ்ரஜ ||'.

விஷ்ணு பாகவதத்திலும் 'ந மே கர்ப்பமிமம் ப்ரம்ஹன்' என்பது முதலான ச்லோகங்களில் சிவனுடைய கோபத்திற்கு பயந்தவர்களாக ஆதித்யர்களைச் சொல்லுகையில் சிவனுடைய

ப்ராம்ஹணத்வம் வ்யக்தமாகச் சொல்லப்படுவதாக 'சிவதத்வ விவேக'த்தில் சொல்லியிருப்பதையும் பார்க்கவும்.

2. 'ப்ராம்ஹணீ பஞ்ஜிகா ஸ்ப்ருக்கா த்விஜபத்னீஷு விச்ருதா |' என்ற விச்வ கோசத்தின் வசனப்படி ப்ராம்ஹணீ என்ற பதமானது ஒரு ஓஷதி விசேஷத்தையும், த்விஜ ஸ்திரீயையும், ஸம்வித் (ஞான) விசேஷத்தையும் குறிக்கும். கடைசி அர்த்தத்தில்,

'ப்ராம்ஹணீ ச்வேத புஷ்பாட்யா ஸம்வித்ஸா தேவதாத்மிகா |'

என்று ஸமயாசாரஸ்மிருதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ரூபங்களாகவும் அம்பாளிருப்பதால் இந்தப்பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

## ब्राह्मी
## ப்ராம்ஹீ (675)

ப்ரம்ஹபத்னியான ஸரஸ்வதீ ரூபமாக இருப்பவள்.

1. அதாவது, வாகாத்மகமான ரூபத்தோடிருப்பவள் என்று தாத்பர்யம்.

2. அல்லது, அவித்யையிலிருந்து வேறுபட்டதான ஜட ஜாதி இருப்பதற்கு ப்ரமாணம் யாதொன்றுமில்லாததால் இந்தப் பெயர் வந்ததாகவும் சொல்லலாம்.

## ब्रह्मानन्दा
## ப்ரம்ஹாநந்தா (676)

ப்ரம்ஹானந்தத்தையுடையவள்.

அல்லது, (ஸகுணரூபமாயிருக்கும்போது) ப்ரம்ஹத்தையே ஆனந்தமாக உடையவள் என்றும் சொல்லலாம்.

## बलिप्रिया
## பலிப்ரியா (677)

பலசாலிகளிடத்தில் ப்ரியமுள்ளவள்.

1. அதாவது, அவித்யையை நிரஸனம் பண்ணுவதில் (போக்குவதில்) ஸாமர்த்தியமுடையவர்களுக்கு, அல்லது காமாதி சத்ருக்களை ஜயித்தவர்களுக்கு அனுக்ரஹம் செய்பவள் என்று தாத்பர்யம்.

2. பலி சக்ரவர்த்தியிடம் ப்ரியமுள்ள வாமனரூபியான விஷ்ணுவோடு அபின்னமாயிருப்பதால் இந்தப்பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

3. பூஜையில் கொடுக்கப்படும் பலிகளில் ப்ரியமுள்ளவள் என்றும் சொல்லலாம்.

## भाषारूपा

### பாஷாரூபா (678)

பாஷைகளின் ரூபமாக இருப்பவள்.

1. ஸம்ஸ்க்ருதம், ப்ராக்ருதம் முதலான பாஷைகளெல்லாம் அம்பாளுடைய ரூபமாகச் சொல்லப்பட்டது. அம்பாளே ஸகலவிதமான சப்தங்களுக்கும் ஜனனீயென்றும், பரா, பச்யந்தீ முதலான வாக்குகளெல்லாம் அம்பாளுடைய ரூபங்களென்றும் ஏற்கனவே வந்த நாமங்களில் சொல்லப்பட்டது.

2. அல்லது ஸகலவிதமான பாஷைகளாலும் நிரூபணம் (வர்ணனை, ஸ்தோத்ரம்) செய்யப்பட்டவள் என்றும் சொல்லலாம்.

ஸம்ஸ்க்ருதேனைவ கேப்யாஹு: கேசின்ம்லேச்சாதி பாஷயா |
ஸாதாரண்யேன கேபி த்வாம் ப்ராக்ருதேனைவ கேசன ||'

## बृहत्सेना

### ப்ருஹத்ஸேனா (679)

அபாரமான (சதுரங்க பல) ஸேனையை யுடையவள்.

அல்லது, ப்ருஹத்ஸேனன் என்ற பெயருடைய ராஜ விசேஷ ரூபமாயிருப்பவள் என்றும் சொல்லலாம்.

## भावाभावविवर्जिता

### பாவாபாவ விவர்ஜிதா (680)

பாவம், அபாவம் இரண்டுமில்லாதவள்.

1. அதாவது, உத்பத்தி, விநாசம் இவ்விரண்டு மில்லாதவள்.

2. பாவங்களென்பது த்ரவ்ய குணாதிகளைக் குறிக்கும். அபாவங்களென்பது ப்ராகபாவ, த்வம்ஸாபாவ, அத்யந்தா பாவங்களைக் குறிக்கும். அம்பாள் இவ்விதமான பாவாபாவங்களோடு இல்லாமல் பாரமார்த்திக ஸத்தாவோடுகூடிய பரப்ரம்ஹ ஸ்வரூபிணியாய் பாவாபாவங்களுக்கு உள்பட்ட வஸ்துக்களிடங்காத (அவைகளின்) அதிஷ்டானமாக இருப்பதால் இந்தப் பெயர் ஏற்பட்டது. இவ்விதமான அதிஷ்டானத்திற்கு பாவம் இல்லாததோடு அபாவமும் கிடையாதென்பதாக ஸ்காந்தம் யக்ஞவைபவ கண்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'அதிஷ்டானாவசேஷோ ஹி நாச: கல்பித வஸ்துன: |
பாவஸ்யைவ ஹ்யபாவத்வம் நாசோ பாவஸ்ய பாவதா ||
பாவாபாவஸ்வரூபாப்யாம் அன்ய ஏவ ஹி கல்பித: |
அதிஷ்டானஸ்ய நாசோ ந ஸத்யத்வாதேவ ஸர்வதா ||'

## सुखाराध्या (681)

### ஸுகாராத்யா

ஸுகமாக ஆராதிக்கக்கூடியவள்.

1. அதாவது, உபவாஸம் முதலான காயக்லேசங்களில்லாமலும் த்யானிக்கவேண்டிய ரூபத்தைப்பற்றிய நியம, நிர்ப்பந்தங்களில்லாமலும் அம்பாளை ஆராதிக்கலாமென்று தாத்பர்யம். இதையேதான் அடியில் கண்டபடியும் சொல்லப்பட்டது.

'தேஹ க்ஷோபகரைர் ப்ரதைர் பஹுவிதை: தானைச்ச ஹோமைர்ஜபை:
ஸந்தானைர் ஹயமேத முக்ய ஸுமகை: நானாவிதை: கர்மபி: |
யத் ஸங்கல்ப விகல்ப பாவ மலினம் க்யாதம் பதம் தஸ்ய தே
தூராதேவ நிவர்ததே பரதரம் மாத: பதம் நிர்மலம் ||'

(த்ரிபுரா மஹிம்நஸ்தோத்ரம்)

'ரே மூடா: கிமயம் வ்ருதைவ தபஸா காய: பரிக்லிச்யதே
யக்ஞைர் வா பஹுதக்ஷிணை: கிமிதரே ரிக்தீ க்ரியந்தே க்ருஹா: |
பக்திசேத் அவிநாசினீ பகவதீ பாதத்வயீ ஸேவ்யதாம் |
உன்னித்ராம்புருஹாதபத்ர ஸுபகா லக்ஷ்மீ: புரோ தாவதி ||'

(கடஸ்தவம்)

2. இவ்விதம் தன்னை ஸுலபமாக ஆராதிக்கும் வழிகளைப் படிப்படியாக அம்பாள் தன் பிதாவான ஹிமவானுக்குச் சொல்லியதை கூர்மபுராணத்தில்,

'அசக்தோ யதி மாம் த்யாதும் ஐச்வரம் ரூபமவ்யயம் |'
என்பது முதலான ச்லோகங்களில் பார்க்கவும்.

## शुभकरी
### சுபகரீ (682)

(பக்தர்களுக்கு) சுபத்தை(யே) செய்கிறவள்.

நியம நிர்பந்தங்களில்லாமல் அம்பாளை ஆராதித்தால் ஒரு வேளை ஏதாவது கெடுதல் (அல்லது பாவம்) ஸம்பவிக்குமோ என்ற ஸந்தேஹத்தை இந்த நாமத்தில் நிவர்த்திக்கப்பட்டது.

## शोभना सुलभागतिः
### சோபனா ஸுலபா கதி: (683)

சோபனையாயும் ஸுலபையாயும் அடையக்கூடிய ஸ்த்தானமாயும் இருப்பவள்.

1. மோக்ஷம் முதலிய புருஷார்த்த ரூபமாக இருப்பதால் சோபனையென்றும், ஸுகமாக உபாஸிக்கத் தக்கவளாயிருப்பதால் ஸுலபையென்றும், அப்படி உபாஸிப்பவர்களால் அடையக்கூடியவளாயிருப்பதால் கதி: என்றும் சொல்லப்பட்டது.

கதிர் மார்க்கே தசாயாம் ச ஞானே யாதராப்யுபாயயோ: |'
என்ற விச்வகோச வசனத்தின்படி கதி என்ற பதமானது அடையவேண்டிய ஸ்த்தானம் (பலம்), ஞானம், உபாயம், உபாஸனா மார்க்கம் முதலியவைகளைக் குறிக்கும். இதேமாதிரி கூர்மபுராணத்தில்,

'ஏஷைவ ஸர்வபூதானாம் கதீனாம் உத்தமா கதி: |'
என்று சொல்லப்பட்டிருக்கிறது.

2. இந்த பதங்கள் மூன்றும் சேர்ந்து ஒரே நாமமாக இருக்கிறது. ப்ரயோகத்தில் இந்த நாமத்தை 'சோபனாயை ஸுலபாயை கத்யை நம:' என்று சொல்லவேண்டும்.

3. இந்த ஸஹஸ்ர நாமத்தில் சோபனா என்ற பதம் மூன்று இடங்களில் வருகிறது. இந்த இடம் ஒன்று. 'ஸுமுகீ நளினீ ஸுப்ரூ: சோபனா' என்ற இடத்தில் வரும் 462-வது நாமம் ஒன்று. 'ஸுவாஸின்யர்ச்சனப்ரீதா சோபனா' என்ற இடத்தில் வரும் 972-வது நாமம் ஒன்று. இப்படி வருவதில் புனருக்தி

(ஒரே நாமத்தைத் திரும்பச் சொல்வது) என்ற தோஷம் ஏற்படுவதால் அதை நீக்க 462-வது நாமத்தை சோபனு என்றும், இந்த 683-வது நாமத்தை அடுத்த இரண்டு பதங்களுடன் சேர்த்து ஒரே நாமமாகவும், 972-வது நாமத்தை ஆசோபனு என்றும் சொல்லவேண்டும். இதேமாதிரி 537-நாமமான மதி: என்பதை அமதி: என்று ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம் புனருக்தி தோஷத்தைப் பரிஹாரம் செய்வதற்காக ஒரு பதத்தை அதினடுத்த பதத்துடன் சேர்த்தும், ஒரு பதத்திற்கு முன்னுல் அ; ஆ இவைகளைச் சேர்த்தும், ஸ்ரீமத் ஆசார்யாளாலும் விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. 'அவ்யய: புருஷ: ஸாக்ஷீ' என்று வருவதால் 'நிதிரவ்யய:' என்பதை ஒரே நாமமாகவும், இதேமாதிரி ஸ்தவிரோத்ருவ:, சாச்வதஸ்த்தாணு:, ஸர்வவித்பானு:, வாசஸ்பதி ருதாரதீ: என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இன்னும் 'ஜனனோ ஜன ஜன்மாதிர் பீம:, என்று வருவதால் 'அதுல: சரபோ பீம:' என்பதில் வரும் பீம: என்பதை அபீம: என்றும், இதேமாதிரி இஷ்டோ விசிஷ்ட: என்றது போன்ற நாமங்களையும் சொல்லப்பட்டிருக்கிறது.

4. மேலே சொல்லிய புனருக்தி தோஷ பரிஹாரமாக இந்த நாமத்தை சிலர் சோபனுகதி:, ஸுலபாகதி: என்று (கதி: என்ற பதத்தை முந்திய இரண்டு பதங்களோடு தனித்தனியாகச் சேர்த்து) சொல்லுவார்கள். ஏனென்ருல் இவர்கள் 'ப்ரசண்டா' என்ற 827-வது நாமத்தையும் 'ஆக்ஞா' என்ற 828-வது நாமத்தையும் சேர்த்து 'ப்ரசண்டாக்ஞா' என்ற ஒரே நாமமாகச் சொல்லுவார்கள். ஆயினும் அதற்காக கதி: என்பதை முந்திய நாமங்களுடன் இரண்டுதடவை சேர்க்கவேண்டியிருப்பதால் அது பொருத்தமாக இல்லை.

5. இது தவிர இந்த நாமத்தை சோபனு, அஸுலபா, ஆகதி: என்றும், பிரித்தும் அர்த்தம் சொல்லலாம். அப்போது, சோபனமானதும் அஸுலபானதுமான ஆகதியோடிருப்பவள் என்று அர்த்தம். அஸுலபமான ஆகதியென்பது ஸதுர்லபமான (கிடைப்பதற்கரிய) புனராவ்ருத்தி என்று தாத்பர்யம். அதாவது, அம்பாளை ஆராதித்தால் புனராவ்ருத்தி (மறுஜன்மம்)

கிடையாதென்றும், அவ்விதமான மோக்ஷமானது சோபன மானதும் கிடைப்பதற்கரிதானமானது என்று பொருள். இதையே ஸ்ரீ லலிதாத்ரிசதியில்

'யஸ்ய நோ பச்சிமம் ஜன்ம யதி வா சங்கர: ஸ்வயம் |
தேனைவ லப்யதே வித்யா ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ ||'

என்றும்

'ஞாத்வேத்தம் ந புன: ஸ்ப்ருசந்தி ஜனனீகர்பேSர்பகத்வம் நரா: |'

என்று லகுஸ்துதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

6. அல்லது, ஸுதுர்லபமான மானுஷாதி ஜன்மமானது யாரால் சோபனமாக ஏற்படுகிறதோ அப்பேர்ப்பட்டவள் என்றும் சொல்லலாம். இதையே தேவீபாகவதத்தில்,

'யைர் ந ச்ருதம் பாகவதம் புராணம்
நாராதிதா யை: ப்ரகருதி: புராணீ |
ஹுதம் முகே நைவ தராமராணும்
தேஷாம் வ்ருதா ஜன்ம கதம் நராணும் ||'

என்றும், விஷ்ணுபாகவதத்தில் இந்த ச்லோகத்தையே இரண்டாவது அடியை,

'நாராதிதோ யை: புருஷ: புராண: |'

என்று மாற்றியும் சொல்லப்பட்டிருக்கிறது.

7. சிலர் முன்வந்த 462, 463 நாமங்களாகிய சோபனு, ஸுரனுயிகா என்ற நாமங்களை சோபனு Sஸுரநாயிகா என்ற, (அதாவது, மங்களத்தோடு கூடிய ப்ரஹ்லாதன் முதலான அஸுரர்களுக்கு நாயிகா என்ற அர்த்தத்தோடு கூடிய) ஒரே நாமமாகச் சொல்லி இந்த நாமத்தை மேலே சொல்லியபடி மூன்று நாமங்களாகப் பிரித்துச் சொல்லுவார்கள்.

## राजराजेश्वरी

## ராஜராஜேச்வரீ (684)

ராஜராஜர்களுக்கெல்லாம் ஈச்வரீயாக இருப்பவள்.

1. அதாவது, தேவராஜனுன இந்த்ரன் முதலானவர்களுக்கும், ராஜர்களான பிரம்ஹா, விஷ்ணு, ருத்ரர்களுக்கும் ஈச்வரீ என்று அர்த்தம்.

2. குபேரனுக்கு ராஜராஜனென்று பெயர். அவனுக்கு ஈச்வரீ என்றும் சொல்லலாம்.

## राज्यदायिनी

## ரஜ்யதாயினீ (685)

ராஜ்யத்தைக் கொடுப்பவள்.

ராஜ்யம் என்பது ஸ்வராஜ்யம், அல்லது வைகுண்டம், கைலாஸம் முதலியவைகளைக் குறிக்கும்.

## राज्यवल्लभा

## ராஜ்யவல்லபா (686)

(மேலே சொல்லப்பட்ட) ராஜ்யங்களில் ப்ரியமுள்வவள்.

ராஜ்யமென்பதினல் அந்த ராஜ்யங்களின் பதிகளாகிய தேவராஜன், பூபாலர்கள் முதலியோரையும் சொல்லப்பட்டது. இந்த பூபாலர்களெல்லோரும் (அம்பாளுடைய) ஸ்ரீநகரத்தில் 13, 14-வது ப்ராகாரங்களுக்கு நடுவில் வாஸம் பண்ணிக் கொண்டு அம்பாளை உபாஸித்து வருவதாக துர்வாஸரால் 'ஆர்யாத்விசதி'யில் சொல்லப்பட்டிருக்கிறது.

'மத்ய க்ஷோண்யாம் அமுயோ: மகேந்த்ர நீலாத்மகானி ச ஸாம்ஸி |
ஸாதோதரீ ஸஹாயான் பூபாலானபி புன: புன: ப்ரணும: ||

## राजत्कृपा

## ராஜத் க்ருபா (687)

சோபிக்கிற க்ருபையோடு கூடியவள்.

## राजपीठनिवेशितनिजाश्रिता

## ராஜபீட நிவேசித நிஜாச்ரிதா (688)

தன்னை ஆச்ரயித்தவர்களை ராஜபீடங்களில் வீற்றிருக்கும்படி செய்பவள்.

அதாவது, அம்பாள் தன் பக்தர்களுக்கு இந்த்ரன் முதலானவர்களுடைய பதவியைக் கொடுப்பதாகச் சொல்லப்பட்டது. இவ்விதம் தன் பக்தர்களில் ஒருவனுக்கு வித்யாதரர்களும் வணங்கும்படியான சக்ரவர்த்திப் பதவியை அம்பாள் கொடுத்ததை,

'ஜாதோऽப்யல் பரிச்சதே க்ஷிதிபுஜாம் ஸாமான்யமாத்ரேகுலே
ஸி: சேஷாவனி சக்ரவர்த்தி பதவீம் லப்த்வா ப்ரதாபோன்னத: |
யத் வித்யாதர ப்ருந்த வந்திதபத: ஸ்ரீவத்ஸராஜோऽபவத்
தேவி த்வச்சரணாம்புஜப்ரணதிஜ: ஸோऽயம் ப்ரஸாதோதய:

என்று லகுஸ்துதியிலும்,

'ப்ருத்வீபுஜோऽப்யுதயன ப்ரவஸ்ய தஸ்ய
வித்யாதர ப்ரணதி சும்பித பாத பீட: |
தத் சக்ரவர்த்தி பதவீ ப்ரணய: ஸ ஏஷ:
த்வத் பாதபங்கஜரஜ: கணஜ ப்ரஸாத: ||'

என்று சர்ச்சா ஸ்துதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

## राज्यलक्ष्मीः

### ராஜ்யலக்ஷ்மீ: (689)

ராஜ்யாபிமானினியான லக்ஷ்மீரூபமாக இருப்பவள்.

1. அதாவது, ராஜர்களுடைய ஸம்பத்தெல்லாம் அம்பாளால் அனுக்ரஹம் செய்யப்படுகிறவையென்றும், அவை அம்பாளுடைய ரூபங்களென்றும் சொல்லப்பட்டது.

2. இப்பேர்ப்பட்ட ராஜ்யலக்ஷ்மீ சக்தியின் மந்த்ரமானது தந்த்ர ராஜத்தில் சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கவும்.

## कोशनाथा

### கோசநாதா (690)

பொக்கிஷத்திற்கு நாதையாக (ஸ்வாமினீயாக) இருப்பவள்.

1. கோசம் என்பது ராஜாங்கத்திய பொக்கிஷத்தைக் குறிக்கும். அல்லது, அன்னமயகோசம் முதலான (ஜீவனுடைய) பஞ்சகோசங்களையும் குறிக்கும்.

## चतुरङ्गबलेश्वरी

### சதுரங்கபலேச்வரீ (691)

(ரத, கஜ, துரக, பதாதிகளென்ற) சதுரங்க ஸைன்யத்திற்கு ஈச்வரியாக இருப்பவள்.

1. அல்லது, அங்கபலங்கள் என்பது மேலேசொல்லிய சதுரங்கங்களை பலமாக உடைய வ்யூஹங்களைக் குறிக்கும்

[அங்கபலேச்வர சப்தமும் வ்யூஹத்தைக் குறிக்கும்.] வ்யூஹம் என்பது அணிவகுப்பு. தவிரவும் வ்யூஹங்களென்பது வைஷ்ணவ புராணங்களில் சொல்லப்பட்ட வாஸுதேவ, ஸங்கர்ஷண, ப்ரத்யும்ன, அனிருத்த வ்யூஹங்களையும் குறிக்கும். இவைபோன்ற வ்யூஹங்கள் சைவ, சாக்த புராணங்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றன. இம்மாதிரியான சதுர் வ்யூஹாத்மா வாக அம்பாளிருப்பதை இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்ல லாம்.

2. அல்லது, மேலே சொல்லிய வ்யூஹங்கள் பஹ்வ்ரு சோபநிஷத்தில் சொல்லப்பட்ட சரீர புருஷன், சந்த: புருஷன், வேதபுருஷன், மஹாபுருஷன் என்பவைகளைக் குறிப்பதாகவும் சொல்லலாம்.

## साम्राज्यदायिनी

### ஸாம்ராஜ்யதாயினீ (692)

(பக்தர்களுக்கு) ஸாம்ராஜ்யத்தைக் கொடுப்பவள்.

ராஜஸூய யாகம் செய்த மண்டலேச்வரனுக்கு அல்லது பரஜாதி ராஜனுக்கு ஸம்ராட் என்றும் அவனுடைய அப்பேர்ப் பட்ட பதவிக்கு ஸாம்ராஜ்யமென்றும் பெயர்.

யேனேஷ்டம் ராஜஸூயனே மண்டலஸ்யேச்வரச்ச ய | :
சாஸ்தி யச்சாக்ஞயா ராக்ஞ: ஸ ஸம்ராட்........... || '

(அக்னிபுராணம்)

## सत्यसन्धा

### ஸத்யஸந்தா (693)

மீறமுடியாத ப்ரதிக்ஞா, மரியாதைகளையுடையவள்.

1. அதாவது, அம்பாளால் சொல்லப்பட்ட ப்ரதிக்ஞைகள் மரியாதைகள் (எல்லைகள், கட்டளைகள்) இவைகள் யாராலும் மீற முடியாதென்று தாத்பர்யம்.

2. அல்லது, ஸ்த்யஸந்தையாக (தன்னால் செய்யப்பட்ட ஸத்யத்தைக் காப்பாற்றுகிறவளாக) இருப்பவள் என்றும் சொல்லலாம். அம்பாள் ஸகல புவனங்களையும் காப்பாற்றுவதாகப்

ப்ரதிக்ஞை செய்திருப்பதாகவும் அதற்கு எப்போதும் உத்யுக்தையாக இருப்பதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸந்தாவதீ புவனஸந்தாரணே' (அம்பாஷ்டகம்)

'ப்ருவௌ புக்னே கிஞ்சித் புவன பய பங்க வ்யஸனினி |' ((ஸௌந்தர்யலஹரீ)

'இத்தம் யதா யதா பாதா தானவோத்தா பவிஷ்யதி |
ததா தா ऽ வதீர்யாஹம் கரிஷ்யாம்பரிஸம்க்ஷயம் ||' (தேவீமஹாத்ம்யம்)

## सागरमेखला

### ஸாகரமேகலா (694)

ஸமுத்ரங்களையே மேகலையாக (ஒட்யாணமாக, காஞ்சியாக) உடையவள்.

அதாவது, அப்படியிருக்கும் பூமி ரூபமாக இருப்பவள் என்று தாத்பர்யம்.

'ஸமுத்ரவஸனே தேவி பர்வதஸ்தனமண்டிதே |'

என்றபடி ஸமுத்ரங்களை பூமிக்கு வஸ்த்ரமாகவும், இங்கு சொல்லப்பட்டபடி மேகலையாகவும் வர்ணிப்பது வழக்கம்.

மேலே வந்த 684-வது நாமம் முதல் இந்த நாமம் முடிய இருக்கும் நாமங்களில் ராஜராஜேச்வரியான அம்பாளுடைய விசேஷங்களைப் பற்றிச் சொல்லப்பட்டது. இம்மாதிரி ஓரோர் விஷயத்தைப்பற்றி அடுக்கடுக்காக நாமங்கள் இந்த ஸஹஸ்ர நாமத்தில் வருவது மாதிரி வேறு ஸஹஸ்ரநாமங்களில் இருக்காதது பக்தர்கள் கவனிக்கவேண்டிய முக்யமான விஷயம்.

## दीक्षिता

### தீக்ஷிதா (695)

ஞானத்தை அடையும்படி செய்பவள்.

1. தீக்ஷிதன் என்றால் ஞானத்தை அடையச் செய்பவன் என்பதாக ஆதர்வண ப்ராம்ஹணத்தில்,

'அதாதோ தீக்ஷா கஸ்ய ஸ்வித் விதோர் தீக்ஷித இச்யாசக்ஷதே'

என்று ஆரம்பித்து,

'தம் வா ஏதம் தீக்ஷிதம்ஸந்தம் தீக்ஷித இத்யாசக்ஷதே'

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

2. அல்லது, சிஷ்யர்களுக்கு க்ருபையோடு ஞானோபதேசம் செய்து அதினால் அவர்களுடைய பாபங்களைப் போக்கடிப்பதால் தீக்ஷிதன் என்று பெயர் என்பதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

'சிஷ்யேப்யோ ஞான்தானேன பாபம் க்ஷபயதீதிவா |
தீயதே க்ருபயா சிஷ்யே க்ஷீயதே பாபஸம்சய: |
தேன தீக்ஷேதி கதிதா.................. ||'

(பரமானந்த தந்த்ரம்)

3. இவ்விதமான தீக்ஷிதனோடு அபின்னமாயிருப்பவள் என்று இங்கு சொல்லப்பட்டது.

## दैत्यशमनी

## தைத்யசமனீ (696)

(பாண்டரஸுரன் முதலான) தைத்யர்களை நாசம் செய்பவள்.

## सर्वलोकवशंकरी

## ஸர்வலோகவசம்கரீ (697)

ஸகல லோகங்களையும் தன் வசமாக (தனக்கு அதீனமாக) கொடுப்பவள்.

## सर्वार्थदात्री

## ஸர்வார்த்த தாத்ரீ (698)

(தன் பக்தர்களுக்கு) ஸகலவிதமான புருஷார்த்தங்களைச் செய்பவள்.

இதையே தேவீ புராணத்தில் பின்வருமாறு சொல்லப் பட்டது.

தர்மாதீன் சிந்திதான் அர்த்தான் ஸர்வலோகேஷு யச்சதி |
அதோ தேவீ ஸமாக்யாதா ஸர்வை: ஸர்வார்த்தஸாதனீ ||'

## सावित्री

### ஸாவித்ரீ

(699)

ஸாவித்ரீ ரூபமாக இருப்பவள்.

1. ஜகத்தை உண்டுபண்ணுவதால் பரமசிவனுக்கு ஸவிதா என்று பெயர். அவருடைய பத்னியாகையால் அம்பாளுக்கு இந்தப் பெயர் ஏற்பட்டது.

'ப்ராஜாஞம் ச ப்ரஸவனாத் ஸவிதேதி நிகத்யதே |'

(விஷ்ணுதர்மோத்ரம்)

2. ஜகத்தை ஸ்ருஷ்டிப்பதாலும் ஸூர்யனுக்கு (ஸவிதாவுக்கு) ப்ரகாசத்தைக் கொடுப்பதாலும் ஸாவித்ரீ என்று பெயர் என்பதாக

ஸவித்ரு ப்ரகாசகரணாத் ஸாவித்ரீ த்யபிதா பவேத் |
ஜகத: ப்ரஸவித்ரீதி ஹேதுனானேன வாபி ச ||'

என்று பாரத்வாஜஸ்ம்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. இதே மாதிரி 'ஸாவித்ரீ ப்ரவஸ்த்திதா' என்று வாஸிஷ்ட ராமாயணத்திலும் சொல்லப்பட்டது.

3. ஸகல வேதங்களாலும், வேதங்கள், யோகம், இவைகளாலும் பூஜிக்கப்படுவதாலும், ஸ்வபாவமாகவே சுத்தமான ஸ்வரூபமாயிருப்பதாலும் ஸாவித்ரீ யென்ற பெயர் என்பதாக

'த்ரிதசைர் அர்ச்சிதா தேவீ வேயோகேஷு பூஜிதா |
பாவசுத்தஸ்வரூபா ச ஸாவித்ரீ தேன ஸா ஸ்ம்ருதா ||'

என்று தேவீ புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

4. தேஜஸ் (ஒளி) ஆனது ஸ்ரவிப்பதால் (உண்டாகி ஓடி வருவதால்) ஸாவித்ரீ என்பதாக,

'ஸ்ரவணம் ஸ்யந்வனார்த்தே ச தாதுரேஷ நிபாத்யதே |
ஸ்ரவணே தேஜஸோத்பத்தி: ஸாவித்ரீ தேன கத்யதே ||'

என்று தேவீ பாகவதத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

5. 'ஸாவித்ரீ புஷ்கரே நாம்னா தீர்த்தானாம் ப்ரவரே சுபே |'

என்ற பத்மபுராண வசனப்படி புஷ்கரக்ஷேத்ரத்திலிருக்கும் அம்பாளுக்கு ஸாவித்ரீ என்று பெயர்.

## सच्चिदानन्दरूपिणी

### ஸச்சிதானந்த ரூபிணீ (700)

ஸத், சித், ஆனந்தங்களை தன்னுடைய ரூபமாக உடையவள்.

ஸத் என்பது நித்யமானதையும், சித் என்பது ஞான (சைதன்ய)மானதையும் குறிக்கும். அம்பாள் நித்யமானதும் ஞானமயமானதும், ஆனந்தமயமானதுமான ஸ்வரூபத்தை யுடையவள் என்பதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

## देशकालापरिच्छिन्ना

### தேசகாலாபரிச்சின்ன (701)

தேசம், காலம் இவைகளுடைய வருதிக்கு (பாகுபாட்டுக்கு) உட்படாதவள்.

1. அதாவது, இன்ன இடத்தில், அல்லது இன்னகாலத்தில் இருப்பவள் என்று சொல்லமுடியாத ஸ்வரூபத்தையுடையவள் என்று தாத்பர்யம். இன்ன இடத்தில் இல்லை என்பது தேசா பாவம். இன்ன காலத்தில் இல்லையென்பது கலாபாவம். ஒரு வஸ்துவைக் குறித்து அது இந்த வஸ்து இல்லையென்பது அன் யோன்யாபாவமென்று பெயர். மறுபடியும், முன்பு இல்லை (ப்ராகபாவம்), இனி இருக்கப்போவதில்லை (த்வம்ஸாபாவம்) என்பது முதலான அபாவங்கள் இருக்கின்றன. இவையெல்லாம் அம்பாளைப்பற்றிச் சொல்லமுடியாதாகையால் இந்த நாமம் ஏற்பட்டது. இதையேதான் கீழ்கண்ட வாக்யங்களில் சொல்லப்பட்டது.

'ஸ பூர்வேஷாமபி குரு: காலேனானவச்சேதாத்'

(யோகஸூத்ரம்)

'பும்மான் ஆகாசவத் வ்யாபீஸ்வாதிரிக்தம் ம்ருஷா யத: |
தேசத: காலதச்சாபி ஹ்யனந்தோ வஸ்துத: ஸ்ம்ருத. ||'

(ஸௌரஸம்ஹிதை)

அனந்தன் என்ற பெயரும் இந்த அர்த்தத்தோடு கூடியது.

## सर्वगा

### ஸர்வகா (702)

எங்கும் செல்லுபவள் (இருப்பவள்).

1. மேலே சொல்லியபடி அம்பாள் தேசமென்பதினால் அபரிச்சின்னமாயிருப்பதால் எவ்விடத்திலும், எல்லா வஸ்துக்களிலும் வ்யாபித்திருப்பவள் என்று இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

2. ஒருஸமயம் ஸ்ருஷ்டி சக்தியானவள் ச்வேத பர்வதத்தில் தபஸ் செய்யும்போது ப்ரம்ஹாவானவர் தோன்றி வேண்டிய வரத்தைச் சொல்லும்படி கேட்க அம்பாளானவள்,

'பகவன் ஏகதேசேऽஹம் நோத்ஸஹே ஸ்தாதுமஞ்ஜஸா |
அதோऽர்த்தம் த்வாம் வரம் யாசே ஸர்வகத்வம் அபீப்ஸதீ ||'

என்றபடி எங்குமிருக்கும்படியான வரத்தைக்கேட்கவே

'ஏவமுக்தஸ்ததா ப்ரம்ஹா ஸ்ருஷ்ட்யை தேவ்யை ப்ராஜாபதி: |
உபாச ஸர்வரூபே த்வம் ஸர்வகாஸி பவிஷ்யஸி ||'

என்றபடி அப்பேர்ப்பட்ட வரத்தை ப்ரம்ஹாவானவர் கொடுத்ததாக வராஹபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மேலே சொல்லப்பட்ட வாக்யத்தில் அம்பாள் ஸர்வவிதமான ரூபங்களோடும் அபின்னமாயிருப்பதைச் சொல்லி, ஸகல க்ஷேத்ரங்களிலும் (ஜீவன்களிலும்) அம்பாளுடைய ஸகுணமான மூர்த்திகள் இருப்பதையும் சொல்லப்பட்டது. அதாவது அம்பாள் ஸர்வரூபிணியாகவும், ஸர்வவ்யாபினியாகவும், ஸர்வாந்தர்யாமிணியாகவும் இருப்பதை தேவீபுராணத்தில் பின்வருமாறு வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

'தேவ்யா வா ஏஷ ஸித்தாந்த: பரமார்த்தோ மஹாமதே |
ஏஷா வேதாச்ச யக்ஞாச்ச ஸ்வர்கச்சைவ ந ஸம்சய: ||
தேவ்யா வ்யாதத்பமிதம் ஸர்வம் ஜகத் ஸ்தாவரஜங்கமம் |
ஈட்யதே பூஜ்யதே தேவீ அன்னபானாத்மிகா ச ஸா ||
ஸர்வத்ர சாங்கரீ தேவீ தனுபிர் நாமபிச்ச ஸா |
வ்ருக்ஷேஷ்வுர்வ்யாம் ததாவாயௌ வ்யோம்னயப்ஸ்வக்னௌ ச [ஸர்வகா ||
ஏவம் விதா ஹ்யஸௌ தேவீ ஸதா பூஜ்யா விதானத: |
ஈத்ருசீம் வேத்தி யஸ்த்வேனாம் ஸ தஸ்யாமேவ லீயதே ||'

## सर्वमोहिनी (703)

## ஸர்வமோஹினீ

எல்லோரையும் மோஹமடையச் செய்பவள்.

1. மேலே சொல்லியபடி நித்யம், அநித்யம், ஜடம், சித் முதலான பரஸ்பர விருத்தமான குணங்களோடு பரப்ரம்ஹ ஸ்வரூபிணியான அம்பாள் இருப்பதாகத் தோன்றுவதற்கு காரணம் அம்பாளுடைய மாயை என்பதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டது. அதாவது, ஸமஸ்தமான ப்ராக்ருத (ஞானமில்லாத) ஜனங்களும் அம்பாளுடைய மாயையின் காரணமாக மோஹமடைந்து அந்த மோஹத்தால் ப்ரம்ஹமும், ஜகத்தும் வெவ்வேருகத் தோன்றுவதை வாஸ்தவமென்று நினைத்து; அத்வைத விஷயகமான ஞானமில்லாமலிருக்கிருர்கள் என்று தாத்பர்யம். இவ்விதமிருக்கும் அம்பாளுடைய மோஹன சக்தியைப்பற்றி சிவனுல் கூர்மபுராணத்தில் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

> 'இயம் ஸா பாமா சக்தி: மன்மயீ ப்ரம்ஹரூபிணீ |
> மாயா மம ப்ரியாऽனந்தா யயேதம் மோஹிதம் ஜகத் ||
> அனயைதத்ஜகத்ஸர்வம் ஸதேவாஸுர மானுஷம் |
> மோஹயாமி த்விஜச்ரேஷ்டா: ஸ்ருஜாமி விஸ்ருஜாமி ச ||'

2. லோகத்தில் ச்ருதி, ஸ்ம்ருதிகளுக்கு விருத்தமாக இருக்கும் சாஸ்திரங்களெல்லாம் ஜனங்கள் மோஹமடைந்து த்வைத பாவத்தோடிருப்பதற்காக ஏற்பட்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இதுவும் கூர்மபுராணத்தில் (ஹிமவானுக்கு அம்பாளால்) சொல்லப்பட்டிருக்கிறது.

> 'யானி சாஸ்த்ராணி த்ருச்யந்தே லோகேऽஸ்மின் விவிதானிது |
> ச்ருதி ஸ்ம்ருதி விருத்தானி த்வைதவாத ரதானி ச ||
> கபாலம் பைரவம் சைவ சாகலம் கௌதமம் மதம் |
> ஏவம் விதானி சான்யானி மோஹனர்த்தானி தானி து ||
> யே குசாஸ்த்ராபியோகேன மோஹயந்தீவ மாநவான் |
> மயா ஸ்ருஷ்டானி சாஸ்த்ராணி மோஹா யைஷாம் பவாந்தரே ||'

இம்மாதிரி மோஹகரமான சாஸ்திரங்கள் உண்டுபண்ணப் பட்டதைப்பற்றி ஆசார்யாள் 'ஸௌந்தர்யலஹரி'யில் 'சது: ஷஷ்ட்யா தந்த்ரை:' என்ற ச்லோகத்தில் சொல்லியிருக்கிருர்கள்.

3. இவ்விதம் மோஹமடைந்த ஜனங்கள் ஈச்வரனுடைய நிஜமான ஸ்வரூபம் தெரியாமல், ஜனன மரணங்களால் பீடிக்கப் படுவதை ஸூதஸம்ஹிதையிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

'ப்ரஸாதஹீனு: பாபிஷ்டா மோஹிதா மாயயா ஜனு: |
நைவ ஜானந்தி தேவேசம் ஜன்மநாசாதி பீடிதா: ||

4. ஸர்வ என்ற பதத்தினுல் த்ரைலோக்யத்தையும், (மூன்று லோகங்களிலுமுள்ளவற்றையும்) சொல்லப்பட்டதாக வும் சொல்லலாம். இந்த அர்த்தத்தில் இந்த நாமமானது அம் பாள் த்ரைலோக்ய மோஹனமென்கிற சக்ர ரூபிணியாகவும் அதின் வித்யா ரூபிணியாகவும் இருப்பதைச் சொல்லுவதாகவும் சொல்லலாம்.

## सरस्वती

## ஸரஸ்வதீ (704)

ஞானுபிமானினியான ஸரஸ்வதீ தேவியின் ரூபமாக இருப்பவள்.

1. அதாவது ஞானஸமுத்ர ரூபிணியென்று தாத்பர்யம். இங்கு, விஷயங்களின் ஸம்பந்தமில்லாத (அதீந்த்ரியமான ஞான மானது சொல்லப்பட்டது.)

2. மேலே சொல்லியபடி உண்மையில் பேதமில்லாத ஜகத், ப்ரம்ஹம் இவையிரண்டும் மோஹத்தின் (அக்ஞானத்தின்) காரணமாக பேதமுள்ளதாய்த் தோன்றுவது மாதிரி கட, படாதி வஸ்துக்களின் பேதமும் அவ்விதமான மோஹத்தினுல் தான் தோன்றுகிறது. அந்த ஜடபதார்த்தங்களைப் பற்றியவரையில் மோஹத்திற்கு இடமில்லையென்று சொல்லக்கூடுமானுலும்,

'அக்ஞானேனுவ்ருதம் ஞானம் தேன முஹ்யந்தி ஜந்தவ: |'

என்ற கீதா வசனத்தின்படி ஞானமே அக்ஞானத்தினுல் சூழப் பட்டிருப்பதால் இவ்விதமான அக்ஞானமானது எவ்விதமான வஸ்துக்களைப் பற்றியுமிருக்கிறது. ஞானமேற்பட்டால் அத் வைத பாவம் ஏற்படும். அப்போது ஸகலவிதமான அனர்த்தங் களும் நசித்து, பரம புருஷார்த்தமான மோக்ஷமானது கிடைக்கும். இது அம்பாளுடைய பக்தர்களுக்குத்தான்

கிடைக்குமாதலால் அம்பாளுடைய அனுக்ரஹத்திற்கு பாத்ரமா யில்லாதவர்களான பாபிகளுக்கு இவ்விதமான ஞானமானது ஏற்படாதிருப்பதற்காக மோஹமானது அவச்யமாக இருக்கிறது.

3. 'த்விவர்ஷா து ஸரஸ்வதீ' என்ற தௌம்ய வசனத்தின் படி இரண்டு வயதுள்ள கன்யா ஸ்வரூபமாயிருப்பவள் என்றும் சொல்லலாம்.

4. ஸகல ப்ராணிகளின் நாக்குகளிலிருந்துகொண்டு அவர்கள் பேசுவதற்குக் காரணமாயிருப்பதால் ஸரஸ்வதீ என்ற பெயர் என்பதாக.

'யா வஸேத் ப்ராணி ஜிஹ்வாஸு ஸதா வாகுபவர்தனுத் |
ஸரஸ்வதீதி நாம்னேயம் ஸமாக்யதா மஹர்ஷிபி: ||'

என்று பரத்வாஜ ஸ்ம்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. இது தவிர, ஸகல த்ருஷ்டிகளின் (இந்த்ரியங்களின்) மூலமாக ஸரிப்ப தால் (வெளிவருவதால்) ஸரஸ்வதீ என்ற பெயர் என்பதாக,

'ஸரணாத் ஸர்வத்ருஷ்டீனாம் கதிதைஷா ஸரஸ்வதீ |'

என்று வாஸிஷ்ட ராமாயணத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

## शास्त्रमयी

## சாஸ்த்ரமயீ (705)

சாஸ்த்ரங்களில் பூர்ணமாக வ்யாபித்திருப்பவள்.

1. விருத்தமான தர்மங்களில் ப்ரவர்த்திப்பது முதலான ஆயிரக்கணக்கான யுக்திகளால் பேத (த்வைத) பாவமானது அனுமானிக்கப்படுவதால் அதை உண்டுபண்ணும் (மேலே சொல்லிய) மோஹமானது ஸாமான்யமானதன்று. அதைப் போக்கடிப்பது சாஸ்த்ரங்களின் மூலமாக ஏற்படும் ஞானமான தாலும் அவ்விதமான சாஸ்த்ரங்களே 'ஸர்வம் கல்விதம் ப்ரம்ஹ' முதலான வாக்யங்களின் மூலமாக அம்பாளுடைய ஸ்வரூபத்தின் ப்ரதானமான நிரூபணமாக இருப்பதாலும் இந்தப்பெயர் ஏற்பட்டது.

2. ப்ரத்யக்ஷ, அனுமான, சப்த(சாஸ்த்)ரங்களென்ற மூன்றுவித ப்ரமாணங்களில் சாஸ்த்ரங்களின் ப்ரமாணமே பலிஷ்டமென்பதாகச் சொல்லப்படும். இதையேதான் 'சாஸ்த்ர யோனித்வாத்' என்ற ப்ரம்ஹஸூத்ரத்தில் சொல்லப்பட்டது.

இவ்விதம் வேதங்களின் மூலமாகத்தான் ப்ரம்ஹமானது அறியப்படுமென்பதை 'தம் த்வௌபநிஷதம் புருஷம் ப்ருச்சாமः' என்பது முதலான ச்ருதி வாக்யங்களில் காணலாம்.

3. சாஸ்த்ரங்கள் இவ்விதம் ஸகலவிதமான வஸ்து ஜாதங்களும் ப்ரம்ஹத்தோடு அபேதமாக இருப்பதைச் சொல்லுவதாலும், அதுவே ஸ்ரீவித்யையின் மூன்ருவது கூடத்தில் ப்ரதிபாதிக்கப்படுவதாலும் அதற்கு விரோதமாக அனுமானிக்கப்படும் (த்வைத) பாவமான ப்ரமத்தினுல் ஏற்படுகிறதே தவிர வேறல்ல. ஏனென்ருல் எல்லா வேதாந்தங்களும் ப்ரம்ஹம் ஒன்றே என்பதை நிர்ணயிக்க ஒரேமாதிரியாக ப்ரவ்ருத்திக்கின்றன. சந்த்ர மண்டலமானது ஸகல ஜனங்களுடைய பார்வைக்கும் சிறியதாயிருப்பதாகத் தோன்றினும் வாஸ்தவத்தில் ஜ்யோதிஷ் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டபடி மிகவும் பெரிய ரூபத்தோடிருப்பதால் நம் பார்வைக்கு ஏற்படும் தோற்றமானது ப்ரமம் என்று ஏற்படுகிறது. அதேவிதமாய் ஜகத்தானது ப்ரம்ஹத்தினின்றும் வேறுபட்டது என்பதாகத் தோன்றுவதானது சாஸ்த்ர விருத்தமாயிருப்பதால் அதுவும் ப்ரமமென்று ஏற்படுகிறது.

## गुहाम्बा

## குஹாம்பா (706)

ஆகந்தருடைய (ஸுப்ரஹ்மண்யருடைய) தாயார்.

1. முன்னொருக்கால் தாரகாஸுரனுல் பீடிக்கப்பட்ட தேவர்கள் அவனுடைய வதத்திற்காக அம்பாளை ப்ரார்த்தித்ததும், பிறகு சிவ சக்திகளுடைய ஸமாகமமும் அதற்கு, ஏற்பட்ட விக்னமும், அதினுலுண்டான கோப சாபாதிகளும்' சிவனுடைய ரேதஸ்ஸானது அக்னி, கங்கா, சரவணம் முதலியவைகளில் அடுத்தடுத்து தங்கி அதிலிருந்து ஸ்கந்தர் உத்பத்தியானதும் இவை முதலான கதைகளும் சாஸ்த்ர புராணுதிகளில் காணப்படுகின்றன.

2. அல்லது, குஹையிலிருக்கும்படியான அம்பாளென்று சொல்லலாம். குஹை என்ற பதத்தைப்பற்றி ஏற்கனவே வந்த 'குஹ்யா' என்ற நாமத்தைப் பார்க்கவும்.

3. ஹ்ருதய குஹரத்தை குஹை என்று சொல்லப்படும். அதில் சாயா (நிழல்), ஆதப (வெளிச்சம்) என்ற இருவர் இருப்பதாகச் சொல்லும்,

'ருதம் பிபந்தௌ ஸுக்ருதஸ்ய லோகே
குஹாம் ப்ரவிஷ்டௌ பரமே பரார்த்தே |
சாயாதபௌ ப்ரம்ஹவிதோ வதந்தி
பஞ்சாக்னயோ யே ச த்ரிணாசிகேதா: ||'

என்ற ச்ருதிவாக்யத்தில் சொல்லப்பட்ட சாயா ரூபிணியாக அம்பாளிருப்பதாகவும் சொல்லலாம்.

## गुह्यरूपिणी
## குஹ்யரூபிணீ (707)

பரம ரஹஸ்யமான ரூபத்தையுடையவள்.

1. அதாவது, வ்யாவஹாரிகமான த்ருஷ்டிக்கு கோசரமில்லாததான ஞானமே அம்பாளுடைய ரூபமென்பது தாத்பர்யம். இதையேதான்,

'குரு மூர்த்திதராம் குஹ்யாம் குஹ்யவிக்ஞான ரூபிணீம் |
குஹ்ய பக்தஜன ப்ரீதாம் குஹாயாம் நிஹிதாம் நும: ||'

என்று ஸூதஸம்ஹிதையில் சொல்லப்பட்டிருக்கிறது.

2. மேலே சொல்லிய ச்ருதிவாக்யத்தில் சாயை, ஆதபமென்றும், ஸ்கந்தர், அவருடைய தாயார் என்றும் இரண்டாக தனித்தனி லக்ஷணங்களோடு சொல்லப்பட்டதிலிருந்தும் இது மாதிரி இதர ச்ருதி வாக்யங்களிலிருந்தும் த்வைத பாவமானது ஸித்திக்கிறதென்பதாகச் சொன்னாலும், அவையெல்லாம் உபசாரமாகச் சொல்லப்பட்ட பதங்களே தவிர, வாஸ்தவத்தில் அத்வைத பாவத்தைக்காட்டும் வாக்கியங்களே. உதாரணமாக 'யஜமான: ப்ரஸ்தா:' என்ற ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆயினும் அது ப்ரத்யக்ஷத்திற்கு விரோதமாக இருக்கிறது. ஆகவே மேலே சொல்லியவையெல்லாம் நிஜமென்பதாகத் தோன்றினாலும் வ்யாவஹாரிக ஸத்யங்களே தவிர பாரமார்த்திகமான ஸத்யமல்ல. அத்வைதமோ பாரமார்த்திகமான ஸத்யத்தை அவலம்பித்தது. அதின்படி பரஸ்பர விலக்ஷணங்களோடு கூடிய ரூபங்களெல்லாம் ஒரே ப்ரம்ஹத்தினுடைய

ரூபங்களென்றும் இரண்டுவிதமாகச் சொல்லும் ச்ருதிவாக்யங்களெல்லாம் அந்த ஒரே ப்ரம்ஹத்தைத்தான் வாஸ்தவத்தில் சொல்லுகின்றனவென்றும் சொல்லப்படும்.

3. இவ்விதமான (ப்ரம்ஹத்தின் பாரமார்த்திக) ஸத்யரூபமானது மிகவும் ரஹஸ்யமானதால் அம்பாளுக்கு இந்தப்பெயர் ஏற்பட்டது.

4. குஹ்யமென்பதால் குஹ்ரோபநிஷத்தைச் சொன்னதாகவும் சொல்லலாம். உபநிஷத்துகளில் குஹ்யோபநிஷதானது அம்பாளுடைய ரூபமென்பதாக,

'ஸர்வோபநிஷதாம் தேவி குஹ்யோபநிஷதுச்யஸே |'

என்று கூர்மபுராணத்தில் (அம்பாளுடைய விபூதியோகவர்ணனையில்) சொல்லப்பட்டிருக்கிறது.

## सर्वोपाधिविनिर्मुक्ता

### ஸர்வோபாதி வினிர்முக்தா (708)

ஸகலவிதமான உபாதிகளிலிருந்தும் விடுவிக்கப்பட்டவள்.

1. உபாதி என்றால் தேசம், காலம், வஸ்து, முதலிய அளவு (அல்லது எல்லை)களைக் குறிக்கும். இவ்விதமான அளவுகள் யாதொன்றுக்கும் அடங்காத ஸ்வரூபத்தையுடையவள் அம்பாள் என்பதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

2. அம்பாளை இதற்குமுன் வந்த நாமங்களில் குஹாம்பா (ஸ்கந்தருடைய மாதா), சாயா ஆதபமென்பதாக உபாதிகளிலடங்கியதாக ச்ருதிகள் சொல்வதாகச் சொல்லப்பட்டது. இப்படி அம்பாளுடைய ரூபமானது பேதங்களோடு கூடியதென்று சில ச்ருதிவாக்யங்களும், மற்றும் சில ச்ருதிவாக்யங்கள் அந்த ரூபத்தை அபேதமென்றும் இரண்டுவிதமாகச் சொல்லும் போது, அத்வைதமானது எப்படி ஸித்திக்கிறது என்று ஸந்தேஹம் உண்டாகலாம். ஆயினும் அவைகளில் பேதமான ரூபங்களைப்பற்றிச் சொல்லும் வாக்யங்களை அபேதத்தைப் பற்றிய வாக்யங்களைப்போல் அர்த்தம் சொல்லக்கூடாது. அவை ஸாதாரணமாக முத்துச்சிப்பியில் வெள்ளியிருப்பதாகத்தோன்றுவதைக் சொல்வதுபோல் சொல்லுகின்றனவே தவிர வேறல்ல.

வெள்ளியாக இருக்கும் தன்மையானது தோற்றத்திற்குத் தெரியுமே தவிர அது முத்துச்சிப்பியினுடைய உண்மையான லக்ஷணமாகாதல்லவா. அவ்விதம் முத்துச்சிப்பி, வெள்ளியின் தோற்றம் இவைகளுக்கு இருப்பதாகப் புலப்படும் ஸம்பந்தமானது மித்யை(பொய்)யாக இருப்பதுமாதிரி, சில ச்ருதிவாக்யங்களில் சொல்லப்பட்ட பேதபாவமானது ஸ்தூலமாகச் சொல்லப்பட்டதே தவிர வாஸ்தவத்தில் எல்லா வேதாந்தங்களிலும் பாரமார்த்திகமான பரப்ரம்ஹம்தான் சொல்லப்பட்டிருக்கிறது. க்ரஹணங்களைப்பற்றிய சாஸ்த்ரங்களில் 5 அல்லது 6 அங்குலங்களென்று அளவு சொல்வதானது ஸ்தூலத்ருஷ்டிக்காகச் சொல்வதுபோல, மேலே சொல்லிய த்வைத பாவ வாக்யங்களெல்லாம் வ்யாவஹாரிகமாய்த் தோன்றுவதைச் சொல்லுகின்றனவே தவிர அவைகளை அத்வைத பாவ வாக்யங்களோடு ஒரே மாதிரியாக தாத்பர்யம் சொல்லக்கூடாது. ஆகவே பரப்ரம்ஹ ஸ்வரூபிணியான அம்பாளானவள் ஸகண்டமோ, அகண்டமோ எவ்வகையான தர்மங்களுடைய ஸம்பந்தமுமேயில்லாமல் (தர்ம ஸம்பந்த சூன்யையாக) இருப்பதை இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

3. அல்லது தர்க்க சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட உபாதிகளுக்குட்படாதவள், அதாவது (அந்த சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட) ஸத்ஹேதுவினுல் அறியப்படுகிறவள் என்றும் சொல்லலாம்.

## सदाशिवपतिव्रता

### ஸதாசிவ பதிவ்ரதா (709)

ஸதாசிவருடைய பதிவ்ரதை (நெறிதவறாத பத்னி) யாக இருப்பவள்.

1. அல்லது, சிவனே தன் பதியென்பதான நியமத்துடன் எப்போதும் இருப்பவள் என்றும் சொல்லலாம்.

2. மேலே சொல்லியபடி, சக்திரூபிணியான த்ரிபுரஸுந்தரியானவள் தர்மஸம்பந்த சூன்யையாக இருக்கும்பக்ஷத்தில் அவளைப்பற்றி பரமசிவனுடைய பராஹந்தா ரூபமென்ற

தர்மத்தைத் தவிர மற்றபடி சொல்லப்படும் தர்மங்களைச் சொல்லுவதானது மித்யை என்பதாக இந்த நாமத்தில் சொல்லப் பட்டது. சிவனுக இருப்பதானது (அதாவது, ப்ரம்ஹமானது) காலத்ரயத்திலும் பாதிக்கப்படாமலிருப்பதுபோல், சிவனுடைய பத்னியாக இருப்பதும் (அதாவது, ப்ரம்ஹத்தினுடைய சக்தியும்)ஸார்வகாலிகமானது. இதர பதார்த்தமானது, தர்மத்வ மானது நம்மால் கல்பிதமாயிருப்பதுடன் அந்த பதார்த்தங் களுமே கல்பிதமாயிருக்கின்றன. சக்தியைப் பற்றியோ வென்றால் அதில் தர்மத்வம் கல்பிதமாகிறதே தவிர அதனுடைய சக்தித்வமானது கல்பிதமன்று. சக்தியானது ப்ரம்ஹத்தினு டைய கோடியே (முடிவு, அதாவது ப்ரம்ஹமே) , தவிர வேறல்ல.

## संप्रदायेश्वरी

## ஸம்ப்ரதாயேச்வரீ (710)

ஸம்ப்ரதாயத்திற்கு ஈச்வரியாக இருப்பவள்.

1. ஸரியானபடி சிஷ்யபரம்பரையாகச் செய்யப்படும் உபதேசத்திற்கு ஸம்ப்ரதாயமென்று பெயர். அதற்கு ஈச்வரீ, அதாவது அதின் மூலமாக அறியப்படக்கூடியவள் என்று இந்த நாமத்தில் சொல்லப்பட்டது. அம்பாளுடைய நிஜஸ்வரூப மானது ந்யாயங்களாலும் ஸம்ப்ரதாயத்தின் மூலமாயும் அறியக் கூடியது என்று தாத்பர்யம்.

2. அம்பாளுக்கு இருப்பதாகச் சொல்லப்படும் தர்மங்க ளெல்லாம் மித்யை என்று மேலே சொல்லப்பட்டதற்கு ஆதாரம் என்னவென்று ஏற்படும் சங்கைக்கு இந்த நாமத்தில் ஸமாதானம் சொல்லப்பட்டது. ஸம்ப்ரதாய ஞானத்தின் மூலமாக அது அறியக்கூடியது என்று சொல்லப்பட்டது.

3. நிர்தர்மகமான பரப்ரம்ஹத்தினிடம் ஆகாசம் முதலான தர்மங்களை நாம் கல்பிக்கிறோம். திரும்பவும் அந்த ஆகாசம் முதலியவைகளில் சப்த விஷயத்வம், த்ரவ்யத்வம், தர்மத்வம் முதலானவைகளையும், திரும்பவும் அவைகளால் அவச்சின்ன மாகும் சைதன்யங்களுக்கு தர்மங்களையும் கல்பித்துக்கொண்டு போகிறோம். ஆகவே ஒரு வஸ்துவினிடத்தில் தர்மத்வமும்,

தர்மித்வமும் ஏக காலத்திலிருப்பதுமாதிரி நிர்தர்மகமான ப்ரம்ஹத்தினிடத்திலும் தர்ம, தர்மீ பாவங்கள் ஸித்திக்கின்றன. இவ்விரண்டில் தர்மீ (தர்மத்தையுடையவர்) சிவனென்றும், தர்மமானது சக்தியென்றும் ஸம்ப்ரதாயமறிந்தவர்கள் சொல்லுவார்கள்.

4. பஞ்சதசியின் அர்த்தங்கள்,

'பாவார்த்த: ஸம்ப்ரதாயார்த்தோ நிகர்பார்த்தச்ச கௌலிக: |
ததா ஸர்வரஹஸ்யார்த்தோ மஹாதத்வார்த்த ஏவ ச ||'

என்றபடி யோகினீஹ்ருதயம், தத்தாத்ரேய ஸம்ஹிதை முதலியவைகளில் சொல்லப்படுவதில் ஸம்ப்ரதாயமென்று சொல்லப்படும். அர்த்தத்திற்கு ஈச்வரீ என்றும் சொல்லலாம்.

'ஜன்ய ஜனகயோர் பேதாபாவாத் வாச்யஸ்ய வாசகேனபி |
ப்ரம்ஹணி ஜகதோ ஜகதிச விபேதஸ்து ஸம்ப்ரதாயார்த்த: ||'

இவ்விதமான அர்த்தத்தைப்பற்றியும் அது காதிவித்யைக்குத்தான் பொருத்தமானதென்பதையும் வரிவஸ்யா ரஹஸ்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## साधु

### ஸாது (711)

(மேலே சொல்லியிருப்பது) உசிதமாயிருப்பவள்.

1. லோகத்தில் எரிப்பது முதலான சக்திகள் அக்னியின் தர்மமாகத் தெரிவதுபோல் பராஹற்தாரூபிணியான சக்திக்கு தர்மதத்வத்தை (மேற்கண்டபடி) சொல்வது உசிதமென்பதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

2. இந்த நாமம் நபும்ஸகமானதால் ப்ரயோகத்தில் இதை 'ஸாதுனே நம:' என்று சொல்லவேண்டும். ஆகவே பின்னால் வரும் 'ஸாத்வீ ஸக்கதிதாயினீ' என்றதில் வரும் ஸாத்வீ என்ற நாமத்திற்கு பௌனருக்த்யம் ஏற்படாது. (ஏனென்றால் இப்போது வரும் ஸாத்வீ என்பதைப் பிரித்து ஸாது + ஈ என்று இரண்டு நாமங்களாகச் சொல்லப்பட்டிருக்கிறது.)

(காமகலாக்ஷரமான) ஈ கார ரூபிணியாயிருப்பவள். (712)

1. ஈ என்பது நான்காவது ஸ்வரம். அ என்ற முதலாவது ஸ்வரமானது விஷ்ணுவைக்குறிக்கும். அவருடைய பகினி (ஸஹோதரி)யான சக்தியை ஈ என்ற நான்காவது ஸ்வரமானது குறிக்கும். இவ்விருவர்களுடைய சேர்க்கையான ரூபத்தை (அ+ஈ=) ஈ என்பதே குறிக்கும்.

2. ஒரு பெயருடன் ஈ என்பதைச்சேர்த்தால் பார்யா ரூபம் ஏற்படுவது தவிர புத்ரீ, ஸஹோதரீ என்ற ரூபங்களும் ஏற்படும். வஸுதேவருடைய புத்ரியான ஸுபத்ரையை வஸு தேவீ என்றும், இந்த்ர புத்ரனுன ஜயந்தனுடைய ஸஹோதரியை ஜயந்தீ என்றும் சொல்வதுண்டு. அதேமாதிரி,

'நாராயணீ ஸஹசராய நம: சிவாய |'

என்பதில் வரும் நாராயணீ என்ற பதமானது நாராயண னுடைய ஸஹோதரீ என்று அம்பாளைக்குறிக்கும். கீழே சொல் லப்பட்டபடி ஒரே தர்மியினிடத்தில் இருக்கும்படியான இரண்டு தர்மங்களை ஸோதரர்கள் என்று சொல்வது யுக்தமாகத்தானிருக் கிறது.

3. ஆகவே இந்த ஈ என்ற நாமத்தினுல் அம்பாளை விஷ்ணு ரூபிணீயென்றும் அவருடைய பகினீ ரூபிணீயென்றும் சொல்லப் பட்டது.

4. முந்திய நாமங்களில் சொல்லப்பட்டபடி ஒன்றுன ப்ரம்ஹமானது தர்ம, தர்மீ என்ற இரண்டு ரூபங்களையும் அடைந் தது. அதில் தர்மமென்பது திரும்பவும் புமான், ஸ்திரீ என்று இரண்டாக ஆயிற்று. அவர்களிருவர்களில் ஸ்த்ரீ ரூபமான 'அம்பாளானவள் பரமசிவனுடைய மஹிஷியாகவும் புமானுன விஷ்ணுவானவர் ஜகத்திற்கு உபாதான காரணமாகவும் ஆனுர் கள். இவர்கள் மூவரும் சேர்ந்து அகண்டமான ப்ரம்ஹமாக ஆகிறுர்கள் என்பது சைவ மதத்தின் கொள்கை. இது கூர்ம புராணம் முதலியவைகளை அனுஸரித்தது. இதை அப்பய்ய தீக்ஷிதரவர்கள் தமது 'ரத்னத்ரயபரீக்ஷை'யில் விஸ்தாரமாக நிரூபணம் செய்திருக்கிறுர்கள்.

5. மேலே சொல்லப்பட்ட காமகலையின் ஸ்வரூபமானது,

'சூன்யாகாராத் விஸர்காந்தாத் பிந்துப்ரஸ்யந்த ஸம்விக: |'

என்பது முதலான ச்லோகங்களில் வாமகேச்வர தந்த்ரத்திலும்,

'ஈகாராத் விச்வகர்த்ரீயம் மாயா துர்யாத்மிகா ப்ரியா |'

என்பது முதலான ச்லோகங்களில் ஞானார்ணவத்திலும்,

'ஈகார: ஸமனு:ஜ்ஞேயோ ரக்தவர்ண: ப்ரதாபவான் |'

என்பது முதலான ச்லோகங்களில் வாயுபுராணத்திலும், சொல்லப்பட்டிருக்கிறது. இதைப்பற்றியே விஸ்தாரமாக 'காமகலா விலாஸம்' என்ற க்ரந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆசார்யாளும் இது ஸம்பந்தமான மாதனப்ரயோகத்தைப்பற்றி 'ஸௌந்தர்யலஹரி'யில் 'முகம்பிந்தும் க்ருத்வா' என்ற ச்லோகத்தில் சொல்லியிருக்கிறார்கள்.

6. இந்த காமகலாரூபமானது அம்பாளுடைய ஸூக்ஷ்மதரமான ரூபம். இதின் த்யானப்ரகாரமானது பின்வருமாறு:—

'அக்ரபிந்து பரிகல்பிதானனும் அன்யபிந்து ரசித ஸ்தனத்வயீம் |
நாதபிந்து ரசனா குணாஸ்பதாம்கௌமி தே பரசிவாம் பராம் கலாம் ||'
(கல்பஸூத்ரம்)

7. ப்ரயோகத்தில் இந்த நாமத்தை 'யை நம:' என்று சொல்லவேண்டும்.

இவ்விதம் அதிரஹஸ்யமான அம்பாளுடைய ஸ்வரூபமானது குரு முகமாகத்தான் அறியக்கூடியது என்பதை இதனடுத்த நாமத்தில் சொல்லப்பட்டது.

## गुरुमण्डलरूपिणी
## குருமண்டல ரூபிணீ (713)

குருக்களால் பாரம்பர்யக்ரமமாக நிருபணம் செய்யப்பட்ட ஸ்வரூபத்தையுடையவள்.

1. அதாவது, பரமசிவன் முதலாகத் தன்னுடைய குரு பர்யந்தம் இருக்கும்படியான குருக்களால் அவிச்சின்னமாய் (இடைவிடாமல்) பாரம்பர்யக்ரமமாக சிஷ்யர்களுக்கு இந்த ரஹஸ்யமானது உபதேசிக்கப்பட்டு வந்ததாகச் சொல்லப்பட்டது. இந்த ரஹஸ்யமானது கர்ணபரம்பரையாக உபதேசிக்கப்

பட்டதே தவிர புஸ்தகங்களில் எழுதப்பட்டதல்ல. இதையே தான் 'யோகினீஹ்ருதய'த்தில் பின்வருமாறு சொல்லப்பட்டது.

'ச்ருணு தேவி ப்ரவக்ஷ்யாமி யோகினீஹ்ருதயம் பரம் |
த்வத் ப்ரீத்யா கதயாம்யத்ய கோபிதவ்யம் விசேஷத: |
கர்ணாத் கர்ணோபதேசேன ஸம்ப்ராப்தம் அவனீதலம் ||'

இவ்விதம் ரஹஸ்யமாயிருப்பதை பின்வரும் நாலு நாமங்களிலும் சொல்லப்படுகிறது.

## कुलोत्तीर्णा

## குலோத்தீர்ணா (714)

குலத்தை அதிக்ரமித்து இருப்பவள்.

1. குலம் என்ற பதத்திற்கு ஏற்கனவே வந்த நாமங்களில் பலவிதமான அர்த்தங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அது இங்கு இந்த்ரிய ஸமூஹத்தைக் குறிக்கும். அவற்றால் அறிய முடியாத (அவற்றிற்கு அப்பாலிருக்கும்) ரூபத்தையுடையவளென்பதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

## भगाराध्या

## பகாராத்யா (715)

ஸூர்யமண்டலத்தில் உபாஸிக்கப்படுகிறவள்.

1. ஸவித்ரு மண்டலத்தில் அம்பாளை த்யானித்து உபாஸிப்பதைப்பற்றி கல்பஸூத்ரம், நித்யோத்ஸவம் முதலிய க்ரந்தங்களைப் பார்க்கவும். அந்த மண்டலம் ரஹஸ்யோபாஸனைக்குத் தகுந்த இடமாயிருப்பதால் அதைக் குறிப்பிட்டு இங்கு சொல்லப்பட்டது.

2. பகமென்பது பதினோராவது ஸ்வரத்தை (ஏகாரத்தைக் குறிக்கும். அது நாகரலிபியில் ए என்றிருப்பதை ஸம்ப்ரதாய மறிந்தவர்கள் த்ரிகோணாகாரமாக (த்ரிகோணம்போல்) எழுதுவார்கள். ஆகவே, த்ரிகோணத்தில் உபாஸிக்கப்படுகிறவள் என்றும் சொல்லலாம்.

3. அ என்னும் ஸ்வரமானது பரமசிவனையும் ஈ என்னும் ஸ்வரமானது சக்தியையும் குறிக்கும். ஆகவே அ, ஈ இரண்டும்

சேர்வதினுலுண்டாகும் ஏ என்ற ஸ்வரமானது சிவசக்தி ஸம்மேளனமானது. எப்படி சிவசக்தி ஸமாயோகமானது ஜகத்திற்கு பீஜமாக இருக்கிறதோ அதேமாதிரி அந்த ஸம்மேளன ரூபமான ஏகாரமும் பீஜமாகச் சொல்லப்பட்டது.

'யதேகாதசமாதாரம் பீஜம் கோணத்ரயாத்மகம் |
ப்ரம்ஹாண்டாதி கடாஹாந்தம் ஜகத் அத்யாபி த்ருச்யதே ||'

(வாமகேச்வரதந்த்ரம்)

4. பகமென்பதும் த்ரிகோணமென்பதும் யோனியையும் குறிக்கும்.

**माया**

**மாயா** (716)

மாயா ரூபிணியாக இருப்பவள்.

1. எவ்வளவு தெளிவாகத் தெரியக்கூடிய வஸ்துவையும் தெரியாமல் செய்வதற்கு அனுகூலமாக இருக்கும் சக்திக்கு மாயை என்று பெயர்.

2. ஆயினும் மாயையானது தெரியக்கூடியதை மறைக்கும் சக்தியோடு கூடியது மட்டுமல்ல. ஸ்வப்னம், இந்த்ர ஜாலம் முதலியவைகளில் காணப்படுவதுபோல் விசித்ரமான கார்யங்களைச் செய்வதாலும் அசிந்திதமான (எதிர்பார்க்கப்படாத) பலன்களைக் கொடுப்பதாலும் மாயா என்ற பெயர் என்பதாக தேவீபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'விசித்ர கார்யகரணு அசிந்தித பலப்ரதா |
ஸ்வப்னேந்த்ர்ஜாலவல்லோகே மாயா தேன ப்ரகீர்த்திதா ||'

3. இவ்விதமான மாயையின் லீலைகளைப்பற்றி விஸ்தாரமாக வராஹ புராணத்தில் விஷ்ணுவினுல் ப்ருத்விக்கு,

'பர்ஜன்யோ வர்ஷதே தத்ர ஜலபூரச்ச ஜாயதே |
திசோ நிர்ஜலதாம் யாந்தி ஸைஷா மாயா மம ப்ரியே ||
ஸோமோऽபக்ஷீயதே பக்ஷே பக்ஷே சாபி விவர்த்ததே |
அமாயாம் த்ருச்யதே நைவ மாயேயம் மம ஸுந்தரி ||'

என்று ஆரம்பித்து,

'மம மாயாபலம் ஹ்யேதத்யேன திஷ்டாம்யஹம் ஜலே
ப்ரஜாபதிம் ச ருத்ரம் ச ஸ்ருஜாமி ச ஹராமி ச ||'

என்பது முடிய முப்பத்தேழு ச்லோகங்களில் தன்னுடைய

அம்சமான மாயையின் விசித்ரகார்ய கர்த்ருத்வத்தை சொல்லப் பட்டிருக்கிறது. இவ்விதமான கார்யங்களும் மாயையாக இருப்ப துடன் அவைகளைச்செய்யும் சக்திக்குமே மாயை என்று பெயர் என்பதாகவும் சொல்லப்பட்டது.

'தத் சக்திர் மாயா ஜடஸாமான்யாத் |'

(சாண்டில்ய பக்தி, ஸூத்ரம்)

**मधुमती**

**மது மதீ** **(717)**

மதுவோடு இருப்பவள்.

1. அதாவது, பூஜா முதலான ஸமயங்களில் கொடுக்கப் படும் உபஹாரங்களில் தேன் ஒன்ருகையால், அதோடு இருப்ப வள் என்று சொல்லப்பட்டது.

2. அம்பாளுடைய ரூபமே தேன் போன்றது என்பதாக ச்ருதியில்,

மஹத்யை வா ஏதத் தேவதாயை ரூபம் யன்மது |'

என்று சொல்லப்பட்டது.

3 தவிர, 'ஆதித்யோ வை தேவமது' என்ற ச்ருதி வாக் யத்தில் சொல்லப்பட்ட மதுமதீ என்ற வித்யா விசேஷத்தின் ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

4. யோக சாஸ்த்ரங்களில் நாலுவிதமான யோகிகள் இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அவர்கள் நால்வரில் மிகவும் மேல்பட்டவர்களுக்கு கதிக்ராந்தாபாவர்கள் என்று பெயர். அந்த கதிக்ராந்தாபாவர் மற்ற மூன்று வகுப்பாரைவிட உத்தமரென்று சொன்னுலும் அவர் கடக்கவேண்டியதாக ஏழு படிகள் இருக்கின்றன. இந்தப்படிகளில் கடைசிப்படிக்கு மதுமதீ என்று பெயர். அந்த ரூபமாக அம்பாள் இருப்பதாக இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

5. அவ்விதமான கடைசிப்படிக்கு வந்தவுடன் ஏற்படும் ஞானமானது தாரகமானதால் அந்தப்பெயரை அம்பாளுக்குச் சொல்லும்போது ஸ்ம்ஸாரதாரிகா (ஸம்ஸாரத்தைக் கடந்து போகச் செய்பவள்) என்று தாத்பர்யம். இந்த விஷயத்தைப் பற்றி,

'தாரகம் ஸர்வவிஷயம் ஸர்வதா விஷயக்ரமம் சேதி விவேகஜம் ஞானம் |

என்ற யோக ஸூத்ரத்திலும் அதின் பாஷ்யங்களிலும் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

6. மது மதீ என்ற பெயரையுடைய நதீ விசேஷத்தின் ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

இவ்விதமான ரஹஸ்ய ரூபத்தோடு அம்பாளிருந்தபோதிலும் ப்ருத்வீ (பூமி) மாதிரி தெளிவாகத் தெரியக்கூடியவள் என்று அடுத்த நாமத்தில் சொல்லப்பட்டது.

## मही
## மஹீ (718)

பூமி ரூபமாக இருப்பவள்.

1. அம்பாள் ஜகத்திற்கெல்லாம் ஆதாரமாய் மஹீ ரூபமாக இருப்பதை தேவீ மஹாத்ம்யத்தில்,

> 'ஆதாரபூதா ஜகதஸ்த்வமேகாமஹீஸ்வரூபேண யத: ஸ்த்திதாஸி |
> அபாம் ஸ்வரூப ஸ்த்திதயா த்வயைதத் ஆப்யாயதே க்ருத்ஸ்னம்
> [அலங்க்ய வீர்யே ||

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

2. எங்கும் வ்யாபித்திருப்பதால் ப்ரக்ருதிக்கு மஹீ என்ற பெயர் என்பதாக,

> 'மஹத் வ்யாப்ய ஸ்த்திதா ஸர்வம் மஹீதி ப்ராக்ருதிர்மதே | '

என்று தேவீ புராணத்தில் சொல்லப்பட்டது.

3 மஹீ என்ற நதீ விசேஷத்தின் ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

## गणाम्बा
## கணாம்பா (719)

கணங்களுக்கெல்லாம் தாயாராக இருப்பவள்.

1. பரமசிவனுடைய பரிவாரங்களான ப்ரமதர்கள் முதலானவர்களுக்கு கணங்களென்று பெயர். விநயகர் அவர்களுக்கெல்லாம் தலைவரானதால் கணபதி, கணேசன் என்ற பெயர்கள் ஏற்பட்டன.

2. கணமென்றால் கணபதிக்கும் பெயராகையால் இந்த நாமத்திற்கு கணேசஜனனீ என்றும் அர்த்தம் சொல்லலாம்.

## गुह्यकाराध्या

### குஹ்யகாராத்யா (720)

குஹ்யகர்களென்ற தேவ விசேஷர்களால் ஆராதிக்கப் பட்டவள்.

அல்லது, அக்ஞாதமான ரஹஸ்ய ஸ்தலத்தில் பூஜிக்கப் பட்டவள் என்றும் சொல்லலாம்.

## कोमलाङ्गी

### கோமளாங்கீ (721)

ஸுகுமாரமான (ம்ருதுவான) அங்கங்களையுடையவள்.

## गुरुप्रिया

### குருப்ரியா (722)

ஜகத்குருவான (ஜகத்திலிருப்பவர்களுக்கெல்லாம் ச்ரேஷ்ட ரான) சிவனுடைய ப்ரியையாக இருப்பவள்.

1. அல்லது, குருவினிடத்தில் ப்ரியமுள்ளவள் அல்லது, குருவின் பத்னியோடு அபின்னமாயிருப்பவள், என்றும் சொல்லலாம்.

2. குரு என்றால் ப்ருஹஸ்பதிக்குப் பெயர். அவரிடம் ப்ரியமுள்ளவள் என்றும் சொல்லலாம்.

## स्वतन्त्रा

### ஸ்வதந்த்ரா (723)

(பிறருடைய ஆச்ரயத்தை அபேக்ஷிக்காமல்) ஸ்வதந்த்ரமா யிருப்பவள்.

1. அதாவது, எந்தக் கார்யத்தைச் செய்வதற்கும் பிற ருடைய ஒத்தாசையை அபேக்ஷிக்காமல் ஸ்வதந்த்ரமாயிருப்ப வள். இதுவே அத்வைதிகளுக்கும் தாந்த்ரிகர்களுக்கும் இருக் கும் அபிப்பிராய பேதங்களில் முக்யமானதென்று ஏற்கனவே சொல்லப்பட்டது.

2. அல்லது, தன் புருஷனான பரமசிவன் தனக்கு அதீனமாகவும், தான் அவருக்கு அதீனமாகவும், இப்படி பரஸ்பரம் அதீனமாகவுமிருப்பவள் என்றும் சொல்லலாம். இதையேதான் காளிகா புராணத்தில் காமரூப க்ஷேத்ர மாஹாத்ம்யத்தில் பின் வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

'நித்யம் வஸதி தத்ராபி பார்வத்யா ஸஹ கர்மபி: ||
மத்யே தேவீக்ருஹம் தத்ர ததஸ்தீனஸ்து சங்கர: ||
ஈசான்யாம் நாடகே சைலே சங்கரஸ்ய ஸதாச்ரயம் |
நித்யம் வஸதி தத்ரேச: ததீனா து பார்வதீ ||'

3. அல்லது, ஸகல தந்த்ரங்களையும் ஆத்மீயமாய் (தன்னுடையதாய்) உடையவள் என்றும் சொல்லலாம். அதாவது, சைவ, வைஷ்ணவ, காணபத்யாதி தந்த்ரங்களெல்லாம் அம்பாளுடைய விபூதியை (மாஹாத்ம்யத்தை) ப்ரதிபாதிப்பதால் (அம்பாளுடைய) ஆத்மீயங்களென்றும் தாத்பர்யம்.

4. அல்லது, ஸ்வதந்த்ரம் என்று பெயரையுடைய தந்த்ரத்தின் ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம். இது நித்யா தந்த்ரம் என்று பெயரையுடைய தந்த்ரத்தைக் குறிக்கும்.

5. இந்த 'ஸ்வதந்த்ரம்' என்ற பெயர் ஆசார்யாளால் 'ஸௌந்தர்ய லஹரி' யில் 'சதுஷ்ஷஷ்ட்யா தந்த்ரை,' என்ற ச்லோகத்தில்,

'ஸ்வதந்த்ரம் தே தந்த்ரம் க்ஷிதிதலம் அவாதீதரத் இதம் |'

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த 'ஸ்வதந்த்ரம்' என்பது எதைக் குறிக்கிறது என்பதைப்பற்றி வ்யாக்யானகாரர்களுக்குள் அபிப்ராயபேத மிருந்துவருகிறது. சிலர் இது பஞ்சதசீவித்யை என்றும், சிலர் இது 'ஸௌந்தர்ய லஹரி'யே என்றும் சொல்லுவார்கள். இது வாமகேச்வர தந்த்ரத்தைக் குறிக்குமென்று பாஸ்கரராயர் அந்த தந்த்ரத்திற்குத்தான் எழுதியிருக்கும் ஸேதுபந்தம்' என்ற வ்யாக்யானத்தில் சொல்லியிருக்கிறார். அந்த அபிப்ராயம் ஸரியல்லவென்றும், 'தந்த்ரராஜம்' என்ற தந்த்ரம்தான் குறிக்கப்பட்டதென்றும் ஆர்தர் ஏவலன் என்ற பெரியார் தான் வெளியிட்ட 'தந்த்ரராஜ' புஸ்தகத்தின் முகவுரையில் சொல்லியிருக்கிறார்.

## सर्वतन्त्रेशी

**ஸர்வதந்த்ரேசீ** (724)

ஸகல தந்த்ரங்களையும் ஸமர்த்தனம் செய்பவள்.

தந்த்ரங்கள் அறுபத்திநாலு என்று கணக்குச் சொல்லப்படும். அவைகளைப் பொருந்தும்படி செய்பவள், அல்லது அவைகளை அர்த்தத்தோடு இருக்கும்படி செய்பவள், அதாவது அவைகளுக்கு ஆதாரமாயிருப்பவள் என்று தாத்பர்யம்.

## दक्षिणामूर्तिरूपिणी

**தக்ஷிணாமூர்த்தி ரூபிணீ** (725)

தக்ஷிணாமூர்த்தி என்ற ரூபத்தோடு கூடியவள்.

1. ப்ரம்ஹா, விஷ்ணு முதலியவர்களுக்கு உபதேசிப்பவரான சிவனுடைய ரூபத்திற்கு தக்ஷிணாமூர்த்தி என்று பெயர். தக்ஷிணாபிமுகமாக (தெற்கு நோக்கி) இருப்பதால் இந்தப் பெயர் ஏற்பட்டது. வட வ்ருக்ஷத்தின் கீழிருந்து கொண்டு ஸ்வாத்மாராமராய், மௌனியாய், கையில் தரித்த சின்முத்ரையுடன், யுவாவாய், ஆனந்தமான ரூபத்துடன் இருக்கும் இந்த மூர்த்தியே சிவஞானப்ரதத்ராய, குருக்களுக்கெல்லாம் குருவாய், குருமூர்த்தியென்று எல்லோராலும் உபாஸிக்கப்பட்டு வருவது. பரமசிவனுடைய ஞானஸ்வரூபமான ரூபம். ஸனகாதி நால்வர்களும் முக்யமான சிஷ்யர்களாகச் சொல்லப்படுவார்கள். ஆசார்யாளால் குருமூர்த்தியைப் பற்றி செய்யப்பட்ட 'தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ர'மானது மிகவும் விசேஷமானது. இந்த மூர்த்தியைப்பற்றி மந்த்ரங்களும் உபாஸனாக்ரமமும் தந்த்ரங்களில் ப்ரஸித்தமாக இருக்கின்றன.

2. இப்பேர்ப்பட்ட ஞான மூர்த்தியானது பின்வருமாறு வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

> 'மௌன வ்யாக்யா ப்ரகடித பரப்ரம்ஹதத்வம் யுவானம்
> வர்ஷிஷ்டாந்தே வஸத்ருஷிகணை: ஆவ்ருதம் ப்ரம்ஹ நிஷ்டை: |
> ஆசார்யேந்த்ரம் கரகலித சின்முத்ரம் ஆனந்த மூர்த்திம்
> ஸ்வாத்மாராமம் முதிதவதனம் தக்ஷிணாமூர்த்திம் ஈடே ||'
> 'வடவிடபிஸமீபே பூமிபாகே நிஷண்ணம்
> ஸகல முனி ஜனானாம் ஞானதாதாரம் ஆராத் |

த்ருபுவன குருமீசம் தக்ஷிணாமூர்த்தி தேவம்
ஜனன மரண து:கச்சேத தக்ஷம் நமாமி ||'
'சித்ரம் வடதரோர் மூலே வ்ருத்தா: சிஷ்யா குருர் யுவா |
குரோஸ்து மௌனம் வ்யாக்யானம் சிஷ்யாஸ்து சின்ன ஸம்சயா: ||'

3. இவ்விதமான மூர்த்தியையே மேலேவரும் இரண்டு நாமங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

## सनकादिसमाराध्या

## ஸனகாதி ஸமாராத்யா (726)

ஸனகாதி மஹர்ஷிகளால் (யோகிகளால்) ஆராதிக்கப் பட்டவள்.

1. ஸனகர், ஸனந்தனர், ஸனாதனர், ஸனத்குமாரர் இந் நால்வரும் ப்ரம்ஹாவினுடைய மானஸ புத்ரர்கள். யோகிச்ரேஷ்டர்களும் மஹர்ஷிச்ரேஷ்டர்களுமானவர்கள். ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியின் சிஷ்யர்களாகச் சொல்லப்படுவார்கள். அம்பாளுடைய உபாஸனா மார்க்கங்களில் முக்யமான ஸமயமதத்தை ப்ரதிபாதிக்கும் சுபாகம பஞ்சகத்தில் இவர்களால் இயற்றப் பட்டதாக ஸனகஸம்ஹிதா, ஸனந்தன ஸம்ஹிதா, ஸனத்குமார ஸம்ஹிதா என்று மூன்று ஸம்ஹிதைகள் இருந்ததாகச் சொல்லப் படும்.

2. இவர்கள் அம்பாளுடைய பரமபக்தர்களென்று ப்ரம்ஹாண்ட புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

த்வமேவ அனாதிரகிலா கார்யகாரண ரூபிணீ |
த்வாமேவ ஹி விசின்வந்தி யோகின: ஸனகாதய: ||'

இதனால் அவர்களை குருபரம்பரையில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

## शिवज्ञानप्रदायिनी

## சிவக்ஞான ப்ரதாயினீ (727)

சிவ விஷயகமான ஞானத்தை (தன் பக்தர்களுக்கு) கொடுப் பவள்.

1. சின்மாத்ரமும், அமலமும், சாந்தமுமான சிவஸ்வ ரூபமானது (ஸ்பந்தமய) சக்தியின் மூலமாகத்தான்

அறியப்படக் கூடுமென்பதாக வாஸிஷ்ட ராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸ்பந்தேன லப்யதே வாயு: வன்ஹிரௌஷ்ண்யேன லப்யதே |
சின்மாத்ரமமலம் சாந்தம் சிவ இத்யுதிதம் து யத் |
யத் ஸ்பந்தமய சக்த்யைவ லக்ஷ்யதே நான்யதா கில ||'

2. அல்லது, அம்பாளைப்பற்றிய ஞானத்தை சிவனே கொடுப்பதாக இந்த நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம். இது மாதிரி, த்ரிமூர்த்திகளைப்பற்றிய ஞானமானது ருத்ரனை அறிந்தால்தான் ஏற்படுகிறதென்பதாக வராஹபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஏதாஸ்திஸ்ரோऽபி வித்யந்தி யோ ருத்ரம் வேத்தி தத்வத: |'

## चित्कला
## சித்கலா (728)

சித் (ஞானத்)தின் கலையோடு கூடியவள்.

1. சித் என்றால் ஞானம், கலை என்றால் பாகம்.

2. ஸத், சித், ஆனந்தம் என்ற லக்ஷணங்களோடுகூடிய ப்ரம்ஹத்தின் சித் என்ற பாகத்தை தன் ஸ்வரூபமாக உடையவள், அதாவது, சித்ரூபிணீ என்று தாத்பர்யம்.

3. ஜீவனுடைய அந்த:கரணத்திலடங்கிய சைதன்யமானது நிருபாதிகமான (ப்ரம்ஹ) சைதன்யத்தின் ஒரு கலை (பாகம்) என்று சொல்லப்பட்டிருக்கிறது.

'மமைவாம்சோ ஜீவலோகே ஜீவபூத: ஸநாதன |' (கீதை)

4. பத்மபுராணத்தில் அம்பாளுடைய மூர்த்திகளைப் பற்றிச் சொல்லுகையில் ஸகல சரீரிகளுடைய சித்தங்களில் இருப்பதான சித்கலா என்ற சக்தியானது அவற்றில் ஒன்று என்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'சித்தேஷு சித்கலா நாம சக்தி: ஸர்வசரீரிணாம் |'

## आनन्दकलिका
## ஆனந்தகலிகா (729)

ஆனந்தத்தின் அம்ச (மாத்ர)மாயிருப்பவள்

1. அதாவது, ஜீவசைதன்யமானது ப்ரம்ஹ சைதன்யத்தின் கலையென்று முந்திய நாமத்தில் சொல்லியதை அனுஸரித்து இந்த நாமத்தில் ஜீவனுடைய ஆனந்தமானது ப்ரம்ஹானந்தத்தின் ஓர் அம்சமாக இருப்பதைச் சொல்லப்பட்டது.

'ஏதஸ்யைவ ஆனந்தஸ்ய அன்யானி பூதானி மாத்ராம் உபஜீவந்தி !'
(ச்ருதி)

2. அல்லது, ஸச்சிதானந்தமான பரப்ரம்ஹத்தினுடைய ஆனந்தமான அம்சத்தின் ரூபமாயிருப்பவள் என்றும் சொல்லலாம்.

3. அல்லது, 'கலிகா கோரக: புமான்' என்றபடி ஆனந்தமய கோசத்தின் மொக்கு (மொட்டு) மாதிரி இருப்பவள் என்றும் சொல்லலாம்.

## प्रेमरूपा

### ப்ரேமரூபா (730)

ஸ்நேகம் (அல்லது பக்தி) என்ற ரூபத்தோடிருப்பவள்.

1. 'ஆயுர்க்ருதம்' என்ற வசனம் மாதிரி ஒரு வஸ்துவினால் வெளியிடப்படும் ரூபத்தையே அந்த வஸ்துவின் ரூபமாகச் சொல்வதுபோல் அம்பாளுடைய பக்தர்களுக்கு ஏற்படும் ப்ரேமை, அல்லது பக்தியை அம்பாளுடைய ரூபமாக இங்கு சொல்லப்பட்டது.

## प्रियंकरी

### ப்ரியம்கரீ (731)

ப்ரியத்தைச் செய்பவள் (உண்டுபண்ணுகிறவள்.)

1. அதாவது, ஜீவசைதன்யமாக இருந்துகொண்டு, சக்ஷுராதி இந்த்ரியங்களின் மூலமாக ஸ்ரக், சந்தனாதிகளில் ப்ரியத்தை உண்டுபண்ணுகிறவள், அல்லது அவ்விதமான ப்ரியத்தோடிருப்பவள் என்று தாத்பர்யம்.

**नामपारायणप्रीता**

நாமபாராயண ப்ரீதா (732)

(தன்னுடைய) நாமங்களைப் பாராயணம் செய்வதால் ப்ரிய மடைபவள்.

1. அ, ஆ, இ, ஈ என்பது முதல் க்ஷ முடிய இருக்கும் அக்ஷரங்களெல்லாம் அம்பாளுடைய நாமங்கள் தான். இவற்றில் அ முதல் அ: வரையில் ஸ்வரங்கள் 16 பாக்கி அக்ஷரங்களாகிய வ்யஞ்ஜனங்கள் க காரம் முதல் க்ஷ காரம் வரையில் 35 அக்ஷ ரங்கள்.

2. அ காரமும் வ்யஞ்ஜனங்கள் 35-ம் சேர்ந்து ஆகும் 36 அக்ஷரங்களும் முப்பத்தாறு வர்ஷங்களின் ரூபங்களாகின்றன. அவற்றில் ப்ரதி அக்ஷரத்துடன் பதினாறு ஸ்வரங்களை பெருக்கி னால் (36 × 16 = 576) வர்ணங்கள் வருவன அக்னி மாதங்க ளாகின்றன. இந்த 36 வர்ஷங்களை 576 மாதங்களால் பெருக்கி னால் வரும் 20,736 என்ற எண்ணிக்கையானது நாமங்களின் ஸம்க்யையாகின்றது. ஒவ்வொரு நாமமும் ஏழு அக்ஷரங்க ளுடையது. முதல் மூன்று அக்ஷரங்கள் மேலே சொல்லப்பட்ட படி வருவன. அவற்றிற்கப்புறம் ஆம், ஈம், நம: என்று சேர்த் தால் ஏழு ஆகின்றன. (இந்த ஆ, ஈ இவ்விரண்டையும் பல்ல வங்கள்—துளிர்கள், கடைசி அக்ஷரங்கள்—என்று சொல்லப் படும்.)

3. உதாரணமாக, முதல் நாமமானது அம், கம், அய், ஆம், நிம், நம: என்பது. இரண்டாவது அம், கம், கம், ஆம், ஈம், நம: என்பது. மூன்றாவது அம், கம், க₂ம், ஆம், ஈம், நம: என் பது. இம்மாதிரி முதல் மூன்று பீஜங்களையும் மாற்றிச் சொல்ல வேண்டியது.

4. இம்மாதிரி நாமங்கள் ஏற்படுவதில் ஒவ்வொரு நாமத் திலும் ஆதியிலுள்ள பீஜத்ரயமானது முறையே நித்யாக்ஷர, யுகாக்ஷர, மாஸாக்ஷரங்களென்று சொல்லப்படும். இவைதான் மேலே சொல்லியபடி மாறிமாறிக்கொண்டுபோகும். இவற்றில் ஸ்வரங்கள் விமர்சாம்சமென்றும், வ்யஞ்ஜனங்கள் ப்ரகாசாம்ச மென்றும் இவையிரண்டின் ஸம்யோகமானது ப்ரம்ஹஸ்வரூப மென்றும் சொல்லப்படும்.

5. இவ்விதமான நாமபாராயணத்தைப்பற்றிப் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

'ஆ ஈ பல்லவிதை: பரஸ்பரயுதை: த்வித்ரிக்ரமாத்யக்ஷரை:
காதிக்ஷாந்தகதை: ஸ்வராதிபிரத க்ஷாந்தைச்ச தை: ஸஸ்வரை: |
நாமானி த்ரிபுரே பவந்தி கலு யான்யத்யந்தகோப்யானி தே
தேப்யோ பைரவபத்னி விம்சதி ஸஹஸ்ரேப்ய: பரேப்யோ நம: ||'
(லகுஸ்துதி)

'அகாராதி க்ஷகாராந்தை: ஸ்வரைர் வர்ணைஸ்து யோஜிதை: ||
அஸம்க்யேயானி நாமானி பவந்தி ரகுநந்தன ||'
(தேவீபாகவதம்)

6. இப்படிப் பாராயணம் செய்யும்போது முதல் பீஜத்ரயத்திற்குப் பின்னும், பல்லவங்களுக்கு முன்னும், மூலமந்த்ரத்தைச் சேர்த்துச் சொல்லவேண்டும்.

7. இந்த பாராயணக்ரமமானது ஐந்து விதம். ஒரு தினத்திலாவது, ஒரு வாரத்திலாவது, ஒரு பக்ஷத்திலாவது, ஒரு மாஸத்திலாவது, முப்பத்தாறு தினங்களிலாவது செய்யலாமென்று காதிமதத்தில்,

'தினதோ வாரத: பக்ஷான்மாஸாத் ஷட்த்ரிம்சதா தினை: |'

என்பது முதலான ச்லோகங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

8. மேலே சொல்லப்பட்ட லகுஸ்துதி (ச்லோகத்து)க்கு ராகவானந்தர் எழுதிய வ்யாக்யானத்தில் நாமத்திய அக்ஷரங்கள் சேர்ப்பதானது வேறுவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. பாஸ்கரராயருடைய அபிப்ராயம் பின்வருமாறு:—அ முதலான ஸ்வரங்கள் பதினாறு. க முதலான வ்யஞ்ஜனங்கள் ஒவ்வொன்றோடு பதினாறு ஸ்வரங்களையும் சேர்த்தால் ($35 \times 16 =$) 560 வர்ணங்களாகின்றன. ஆகமொத்தம் 576. இவ்விதமான இரண்டு அக்ஷரங்களின் சேர்க்கைகள் ஒவ்வொன்றுடன் அடுத்தாற்போல் (அகாரம் $+ 35$ வ்யஞ்ஜனங்கள் $=$) 36 அக்ஷரங்களில் ஒவ்வொன்றையும் சேர்த்தால் ($576 \times 36 =$) 20,736 பேதங்கள் ஏற்படுகின்றன. இவற்றுடன் ஓரோரு தடவையிலும் (மேலே சொல்லிய) பல்லவத்தைச் சேர்க்கவேண்டும்.

9. அது தவிர இன்னம் பேதங்கள் இருக்கக்கூடுமாதலால் இந்த நாம பாராயணத்தின் ரஹஸ்யங்களை குருமுகமாகவே தெரிந்து கொள்ளவேண்டியது.

10. அல்லது, நாமபாராயணம் என்பதினால் இந்த ஸஹஸ்ர நாம பாராயணமே சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம். இதின் பாராயணத்தின் மஹிமையைப்பற்றி பூர்வபாகத்திலும் உத்தர பாகத்திலும் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. பூஜை, ஜபம் இவை செய்யாவிட்டாலும் ஸஹஸ்ரநாம பாராயணம் செய்தாலேயே அம்பாளுடைய ப்ரியம் ஏற்படுவதாகச் சொல்லப் பட்டது.

'மாம் அர்ச்சயது வா மா வா வித்யாம் ஜபது வா நவா |
கீர்த்தயேன்னம ஸாஹஸ்ரம் இதம மத் ப்ரீதயே ஸதா ||'
'இதம் நாம ஸஹஸ்ரம் மே யோ பக்த்யா படதே ஸக்ருத |
ஸமே ப்ரியதமோ லோகே தஸ்மை காமான் ததாம்யஹம் ||'

## नन्दिविद्या

## நந்திவித்யா (733)

நந்திகேச்வரரால் உபாஸிக்கப்பட்ட வித்யாரூபமாக இருப் பவள்.

## नटेश्वरी

## நடேச்வரீ (734)

நடேச்வரருடைய பத்னீ:

1. அதாவது, சிதம்பர நடனான பரமசிவனுடைய பத்னீ, அவருக்கு அனுகாரிணீ (அவருடன் சேர்ந்து நடனம்செய்பவள்) என்று அர்த்தம். இவர்களிருவரும் நடனம் செய்வதை,

தவாதாரே மூலே ஸஹ ஸமயயா லாஸ்யபரயா
நவாத்மானம் மன்யே நவரஸ மஹாதாண்டவநடம் |'

என்று ஆசார்யாளுடைய 'ஸௌந்தர்யலஹரியிலும்,

'ஜங்கா காண்டோருநாளோ நக கிரணலஸத்கேஸராளீ கராள:
ப்ரத்யக்ராலக்தகாபா ப்ரஸரகிஸலயோ மஞ்ஜுமஞ்ஜீர ப்ருங்க: |
பர்த்துர்ந்ருத்தானுகாரே ஜயதி நிஜதனு ஸ்வச்சலாவண்யவாபீ
ஸம்பூதாம்போஜசோபாம் விதத் அபினவோத் தண்ட பாதோ பவான்யா: ||'

என்றும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

## मिथ्याजगदधिष्ठाना

## மித்யாஜகத் அதிஷ்டானா (735)

மித்யாரூபமான ஜகத்திற்கு அதிஷ்டானமாயிருப்பவள்.

1. அதாவது வெள்ளியின் தோற்றத்திற்கு முத்துச்சிப்பி போல், மித்யையான ஜகத்திற்கு தான் இருந்துகொண்டு அந்த ஜகத்தானது தோன்றுவதற்குக் காரணமாயிருப்பவள் என்று தாத்பர்யம். இப்படி ஜகத்தானது மித்யையென்பதற்கு அனேக வாக்யங்களிருக்கின்றன.

'மயாமாத்ரமிதம் த்வைதம் அத்வைதம் பரமார்த்தத: |'

'நேஹ நாநாஸ்தி கிஞ்சன |'

'ஸர்வம் கல்விதமேவாஹம் நான்யதஸ்தி ஸநாதனம் |'

(தேவீபாகவதம்)

'யத்ர த்ரிஸர்கோ ம்ருஷா |' (விஷ்ணுபாகவதம்)

2. அல்லது, அதிஷ்டா, அன: என்று பிரித்து, அவ்விதமான ஜகத்திற்கு அதிஷ்டாவான (ஜகத்தைத் தாங்குவதான) ப்ரம்ஹமே தன்னுடைய (அன:) ப்ராணனாக உடையவள் என்றும் சொல்லலாம்.

3. அல்லது, மித்யையென்று சொல்லப்படும் ஜகத்தில் அதிஷ்டானமாயிருப்பவள் என்றும் சொல்லலாம்.

4. தாந்த்ரகர்களுடைய மதத்தின்படி ஜகத்தானது (மண்பானையானது மண்ணின் பரிணாமமாயிருப்பதுபோல்) ப்ரம்ஹத்தினுடைய பரிணாமமாயும் அத்யந்தம் அபேதமாயுமிருக்கிறது. ஆகவே ப்ரம்ஹம் ஸத்யமாயிருப்பதால் அதின் பரிணாம ரூபமான ஜகத்தும் ஸத்யமென்பதே அவர்களுடைய கொள்கை. இவ்விதம் வாஸ்தவத்தில் அபேதமான ப்ரம்ஹம், ஜகத் இவ்விரண்டிற்குமிருப்பதாகத் தோன்றும் பேதமானது மித்யை என்று அவர்கள் சொல்லுவதால் அத்வைதத்தைப்பற்றிச் சொல்லும் எல்லா ச்ருதி வாக்யங்களையும் அவர்கள் ஒப்புக் கொள்வார்கள். எப்போது பேதமானது மித்யையென்று சொல்லப்பட்டதோ அப்போதே பேதத்தின்பேரிலேற்படும் ஆதார, ஆதேய பாவமான ஸம்பந்தமும் மித்யையென்று ஏற்படுகிறது. இவ்விதம் மித்யையானது மிகவும் ஸ்வல்பமாக

இருக்கையில் ஜகத்தே மித்யையென்று வேதாந்திகள் சொல்வதானது அனர்த்தகம் என்பதைப்பற்றி சாம்பவானந்த கல்பலதையில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கவும்.

5. ஆகவே ஜகத்திற்கு அதிஷ்டானமானது மித்யாபூதமாக இருப்பதானது, அதாவது பேதபாவத்தோடு கூடிய ஸம்பந்தத்தினால் ஜத்தானது இருப்பதானது அம்பாளால் என்பதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

## मुक्तिदा

## முக்திதா (736)

மோக்ஷத்தைக் கொடுப்பவள்.

அம்பாள் தன்னை உபாஸிப்பவர்களுக்கு முக்தியைக் கொடுப்பதைப்பற்றி அனேக இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

தஸ்மாத் விமுக்திமன்விச்சன் பார்வதீம் பரமேச்வரீம் |
ஆச்ரயேத் ஸர்வபூதானாம் ஆத்மபூதாம் சிவாத்மிகாம் ||'

(கூர்மபுராணம்)

'யேऽர்ச்சயந்தி பராம் சக்திம் விதினாऽவிதினாபி வா |
ந தே ஸம்ஸாரிணோ நூனம் முக்தா எவ ந ஸம்சய: ||'

(ப்ரம்ஹாண்ட புராணம்)

## मुक्तिरूपिणी

## முக்திரூபிணீ (737)

முக்தியையே ரூபமாக உடையவள்.

அவித்யையிலிருந்து விடுபடுவதும் ஐந்தாவது அவஸ்தையை அடைவதும் பரமபுருஷார்த்தமான மோக்ஷமல்லவென்றும் அப்போது தெரியும் ஸ்வாத்மானந்தமே மோக்ஷமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆத்மஸ்வரூபமானது அவித்யையினால் மறைக்கப்பட்டிருப்பதால் அவ்விதமான அவித்யையை வித்யையினால் அகற்றியவுடன் ஆத்மஸ்வரூபமானது தெரிந்து ஸ்வாத்மானந்தம் எற்படுகிறது. இதுவே முக்தி. இந்த (ஆத்மஸாக்ஷாத்கார, ஆத்மானந்த) ரூபமாக அம்பாளிருப்பதை இங்கு சொல்லப்பட்டது. ஞானமானது காரகமல்ல (மோக்ஷத்தைக் கொடுப்பதல்ல). அதினால் நாம் நம்முடைய ஸ்வரூபத்தைப்பற்றி

நினைவுமூட்டப்படுகிறோம். ஞானம் உண்டாகும் வரையில் நம்முடைய ஸ்வரூபமானது அவித்யையினால் மறைவுபட்டு நமக்குப் புலப்படாது இருக்கிறது. இதைப்பற்றி ஸௌரஸம்ஹிதையில் பதினாலாவது அத்யாயத்தில் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஞானம் ந காரகம் வித்வத்போதகம் கலு கேவலம் |'
... ... ... ... ... ... ...
தஸ்மாத் ஆத்மஸ்வரூபைவ பராமுக்திரவித்யயா |
திரோபூதா விசுத்தஸ்ய வித்யயா வ்யஜ்யதேऽனக ||'

## लास्यप्रिया (738)

### லாஸ்யப்ரியா

நர்த்தனத்தில் ப்ரியமுள்ளவள்.

ஸ்த்ரீகளுடைய நர்த்தனத்திற்கு லாஸ்யமென்றும், புருஷர்களுடைய நர்த்தனத்திற்குத் தாண்டவமென்றும் பெயர் சொல்லப்படும்.

## लयकरी (739)

### லயகரீ

லயத்தை உண்டுபண்ணுகிறவள்.

1. சித்தத்தை நிலைநிறுத்துவதில் ஒரு விதத்திற்கு லயமென்று பெயர். அது 'தச த்யானஸமோ லய:' என்றபடி த்யானத்தைவிட பதின்மடங்கு அதிகமென்று சொல்லப்படும்.

2. ந்ருத்தம், கீதம் இவைகளைத் தாளங்களால் ஸமகாலமாக வகுப்பதற்கும் லயமென்று சொல்லப்படும்.

## लज्जा (740)

### லஜ்ஜா

லஜ்ஜா ரூபமாக இருப்பவள்.

1. லஜ்ஜை (நாணம், அடக்கம்) ஸ்த்ரீகளுக்கு, அதிலும் முக்யமாக பதிவ்ரதைகளுக்கு விசேஷமான லக்ஷணமென்று சொல்லப்படும். அது அம்பாளுடைய ரூபமென்பதாக,

'யா தேவீ ஸர்வபூதேஷு லஜ்ஜாரூபேண ஸம்ஸ்த்திதா |'

என்று தேவீமாஹாத்ம்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

2 அம்பாள் லஜ்ஜாரூபமாக இருப்பதால் அம்பாளுடைய ஸர்வோத்க்ருஷ்டமான பீஜாக்ஷரமான ஹ்ரீம்காரத்தை லஜ்ஜா பீஜமென்று சொல்லப்படும். (ஹ்ரீ என்றால் லஜ்ஜை, வெட்கம்) இதை யொட்டியே ஸ்ரீலலிதா த்ரிசதியில் 'லஜ்ஜாபத ஸாமா ராத்யா' என்ற ஒரு நாமமிருக்கிறது.

## रम्भादिवन्दिता

### ரம்பாதி வந்திதா (741)

ரம்பை முதலான அப்ஸர ஸ்த்ரீகளால் வணங்கப்பட்டவள்.

இனிவரும் எட்டுநாமங்களில் ரூபகாலங்காரத்தையொட்டி அம்பாளை பலவிதமாகவும் அழகாகவும் வர்ணிக்கப்படுகிறது கவனிக்கவேண்டிய விஷயம்.

## भवदावसुधावृष्टिः

### பவதாவ ஸுதாவ்ருஷ்டி: (742)

ஸம்ஸாரமாகிற காட்டுத்தீக்கு அம்ருதவர்ஷமாயிருப்பவள்.

1. அதாவது காட்டுத்தீயானது மழையின் வர்ஷத்தினால் எப்படி அணைக்கப்படுமோ அம்மாதிரி ஸம்ஸாரமென்ற காட்டுத் தீயை அணைக்கும் அம்ருதவர்ஷம்போல் அம்பாளிருப்பதாக வர்ணிக்கப்பட்டது.

2. தாவ: என்ற பதம் அரண்யத்தையும் குறிக்கும். அந்த அர்த்தத்தில், ஸம்ஸாரமானது புங்கானு புங்கமாக உண்டாவதாலும் அது அம்மாதிரி உண்டாவதற்கு அம்பாள் காரணமாக அம்ருதவர்ஷம்போலிருப்பதால் இந்தப்பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

3. பவதா, வஸுதா, வ்ருஷ்டி: என்று இந்த நாமத்தை மூன்று பதங்களாகப் பிரித்தும் அர்த்தம் சொல்லலாம். பவ: என்றால் சிவன். அவரைக் கொடுப்பவள் (அதாவது சிவபதம், மோக்ஷம் கொடுப்பவள்) பவதா. வஸு என்றால் ரத்னம், தனம், ஐச்வர்யம். அதைக் கொடுப்பவள் வஸுதா. இவ்விரண்டையும் வர்ஷிக்கிறவள் பவதா வஸுதா வ்ருஷ்டி: அதாவது

அம்பாள் தன் பக்தர்களுக்கு போகம், மோக்ஷம் இவ்விரண்டையும் ஒருங்கே கொடுப்பவள் என்று தாத்பர்யம். இதையே ருத்ரயாமளம் மங்களராஜஸ்தவத்தில் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

'யத்ராஸ்தி போகோ நது தத்ர மோக்ஷ:
 யத்ராஸ்தி மோக்ஷோ நது தத்ர போக: |
ஸ்ரீஸுந்தரீ ஸாதக புங்கவானாம்
 போகச்ச மோக்ஷச்ச கரஸ்த்த ஏவ ||

## पापारण्यदवानला

(743)

## பாபாரண்ய தவாநலா

பாபங்களாகிய அரண்யத்திற்கு காட்டுத்தீயாக இருப்பவள்.

1. துக்கத்தை உண்டுபண்ணுவதால் பாபங்களை அரண்யத்திற்கு ஸமமாகவும், அவற்றை நாசம்பண்ணுவதால் அம்பாளைக் காட்டுத்தீக்கு ஸமமாகவும் இங்கு சொல்லப்பட்டது

2. அல்லது, பாபாரண்யங்களுக்கு தவாநலா என்று பெயரையுடையவளாகச் சொல்லப்பட்ட கங்காரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

'கங்காயா: பரமம் நாம பாபாரண்ய தவாநல: |
பவவ்யாதிஹரீ கங்கா தஸ்மாத் ஸேவ்யா ப்ரயத்னத: ||

(ப்ருஹன்னாரதீயம்)

3. அல்லது, பாபாரண்யங்களுக்கு தவங்களாக (நாசம் செய்யும் உபாயங்களாக) இருக்கும் உபாஸனைகளுக்கு ப்ராணனை (உயிரை)க் கொடுப்பவள், அதாவது, பாபங்களைப் போக்கடிக்கும்படியான கர்மாக்களை வெளிப்படுத்தி ப்ரஸித்தமாகச் செய்பவள் என்றும் சொல்லலாம் அம்பாளுடைய பாதஸ்மரணையே தெரிந்தும், தெரியாமலும், செய்யப்பட்ட ஸகல பாபங்களுக்கும் பரம ப்ராயச்சித்தம் என்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

க்ருதஸ்யாகில பாபஸ்ய ஞானதோऽஞானதோऽபிவா |
ப்ராயச்சித்தம் பரம் ப்ரோக்தம் பராசக்தே: பதஸ்ம்ருதி: ||'

(ப்ரம்ஹாண்ட புராணம்)

மேலும், பக்திச்ரத்தையுடன், ஸ்நானஞ்செய்து, ஜலத்தி லிருந்துகொண்டு, பஞ்சதசாக்ஷரியை 1008 தடவை ஜபித்து, பராசக்தியை ஆராதித்தால் ஸகல பாபங்களும் உடனே நாசமாகி விடுமென்று அதிலேயே சொல்லப்பட்டிருக்கிறது.

'இதம் ச ச்ருணு தேவேந்த்ர ரஹஸ்யம் பரமம் மஹத் |
ஸர்வேஷாமேவ பாபானும் யௌகபத்யேன நாசனம் |
பக்திச்ரத்தாஸமாயுக்த: ஸ்னத்வாந்தர்ஜலஸம்ஸ்தித: |
அஷ்டோத்தர ஸஹஸ்ரம் து ஜபேத் பஞ்சதசாக்ஷரீம் |
ஆராத்ய பரமாம் சக்திம் முச்யதே ஸர்வகில்பிஷை: ||'

## दौर्भाग्यतूलवातूला

### தௌர்பாக்ய தூல வாதூலா (744)

தௌர்பாக்யமாகிய பஞ்சுப்பொதியை சிதற அடிக்கும் சுழற் காற்ருக இருப்பவள்.

1. அதாவது, அம்பாளுடைய க்ருபையிருந்தால் ஸகலவித மான தௌர்பாக்யங்களும் (பஞ்சானது சுழற்காற்றினல் சித றுண்டுபோவதுபோல்) பறந்துபோய் விடுமென்பது தாத்பர்யம்.

2. தௌர்பாக்யமென்பது ப்ராப்த கர்மாவினுடைய அனு பவம். அவ்விதமான அனுபவமானது அக்ஞானம் இருக்கும் வரையில் அவச்யம் இருந்தே தீருமென்றும், ஞானமேற்பட்ட வுடன் அது ஸகல கர்மாக்களையும் அக்னிபோல் தஹித்துவிடு மென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஞானக்னி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத்குருதேऽர்ஜுன |' (கீதை)

3. தௌர்பாக்யத்தைப் பஞ்சுபோல் லகுவாகச் செய்து அகற்றக்கூடிய கர்ம விசேஷங்களுக்கு தௌர்பாக்யதூலங்க ளென்று பெயர். அவைகள் சுழல்காற்றுமாதிரி அம்பாளிட மிருந்து உண்டாவதால், அதாவது அவைகள் அம்பாளுடன் ஸம் பந்தப்பட்டிருப்பதால், அம்பாளுக்கு தௌர்பாக்யதூலவாதூலா என்று பெயர்.

## जराध्वान्तरविप्रभा

### ஜராத்வாந்தரவிப்ரபா (745)

ஜரை (கிழத்தன்மை, மூப்பு) என்கிற அந்தகாரத்தைப்போக் கும் ஸூர்ய ப்ரபையாக இருப்பவள்.

## भाग्याब्धिचन्द्रिका

## பாக்யாப்தி சந்த்ரிகா (746)

பாக்யமாகிற ஸமுத்ரத்தைப் பொங்கச் செய்யும் சந்த்ரிகையாக இருப்பவள்.

## भक्तचित्तकेकिघनाघना

## பக்த சித்த கேகி கனகனா (747)

பக்தர்களுடைய சித்தங்களாகிற மயில்களுக்கு உல்லாஸத்தைக்கொடுக்கும் மேக ஸ்வரூபமாயிருப்பவள்.

1. மயில்கள் நீருண்டமேகத்தைப்பார்த்தால் ஆனந்தமடைந்து நர்த்தனம் செய்வதாகச் சொல்லப்படும்.

2. கனமென்றாலே மேகத்திற்குப் பெயர். அம்பாளுடைய லீலாவிசேஷங்கள் பக்தர்களுடைய மனதிற்கு உல்லாஸத்தைக் கொடுப்பதால் அந்த சித்தங்களாகிற மயில்களுக்கு (உல்லாஸத்தைக் கொடுக்கும்) மேகங்களாக இருக்கின்றன. (பக்த சித்த கேகிகனா) இவ்விதமான சரித்ரங்களை (கனமாக) நிரம்ப உடையவளாகையால் அம்பாளுக்கு இந்தப்பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

## रोगपर्वतदम्भोलिः

## ரோகபர்வத தம்போளி: (748)

ரோகமாகிற பர்வதத்திற்கு வஜ்ராயுதம் மாதிரி இருப்பவள்.

1. வஜ்ராயுதமானது பர்வதங்களைப் பிளந்து நாசம்செய்யும் ப்ரபாவமுடையதென்று சொல்லப்படும்.

2. வ்யாதியானது மலைபோல் பெரிதாகையால் அதற்கு இங்கு ஒப்பிடப்பட்டது.

3. ப்ரயோகத்தில் இந்த நாமத்தை 'ரோக பர்வத தம்போளயே நம:' என்று சொல்லவேண்டும்.

## मृत्युदारुकुठारिका

## ம்ருத்யுதாரு குடாரிகா (749)

ம்ருத்யுவாகிற மரத்தை வெட்டும் கோடாலிபோன்றவள்.

ம்ருத்யுவென்ற பதத்தினுல் மரணமானது குறிக்கப்படுவதுடன் 28-விதமான துக்கங்களும் குறிக்கப்படுகின்றன, இவைகளைப்பற்றி ஏற்கனவே வந்த 'பசுபாசவிமோசனீ' என்ற 354-வது நாமத்திய வ்யாக்யானத்தின் மூலத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. தாரு என்பது மரத்தைக் குறிப்பதுடன் வரருசியின் கடபயாதி ஸங்க்யையின்படி 28-என்ற எண்ணிக்கையையும் குறிக்கும். ஆகவே ம்ருத்யுதாரு என்ற பதமானது பொருத்தமாக இருக்கிறது.

## महेश्वरी

## மஹேச்வரீ (750)

மஹதீயாயும் (பெரியவளாயும்) ஈச்வரியாயும் இருப்பவள்.

ஏற்கனவே இந்த அர்த்தத்துடன் வந்த 208-வது நாமமானது 'மாஹேச்வரீ' என்பதால் இந்த நாமமானது புனருக்தி தோஷத்திற்குட்பட்டதல்ல.

## महाकाली

## மஹா காளீ (751)

மஹதீயாயும் காளியாயுமிருப்பவள்.

1. காலத்தின் வ்ருத்திக்குள்படுத்துகிறவள் (முடிவுசெய்கிறவள்) காளீ, காலனை ம்ருத்யுவுக்கும் முடிவுசெய்வதனுல் மஹாகாளீ என்று பெயர் அம்பாளுக்கு ஏற்பட்டது. இதையேதான் காளிதாஸனுல் பின்வருமாறு சொல்லப்பட்டது.

> 'ஏததம்ப ஸதிதம் து நேதி ந:
> சங்கயா ஹ்ருதி விகல்ப லக்ஷண: |
> யோ யம: ஸ கலு கால்யதே த்வயா
> பூத ஸம்யமன கேளி கோவிதா ||'

2. உஜ்ஜயினீ பீடத்திலிருக்கும் சிவனுடைய மூர்த்திக்கு மஹாகாளர் என்று பெயர். அவருடைய பத்னீ மஹா காளீ.

## महाग्रासा

## மஹாக்ராஸா (752)

பெரியதான பிடியை உடையவள்.

1. அதாவது அபரிமிதமான ப்ரபஞ்சாத்மகமான கபளத்தை யுடையவள்.

'யஸ்ய ப்ரம்ஹ ச க்ஷத்ரம் சோபே பவத ஓதன: |' (ச்ருதி)

2. அந்தர்முகமாக இருக்கும்போது ப்ரபஞ்சத்தையெல்லாம் தனக்குள் அடக்கியிருப்பவள் என்று தாத்பர்யம்.

## महाशना

## மஹாசநா (753)

பெரியதான ஆஹாரத்தையுடையவள்.

1. அதாவது, சராசராத்மகமான ப்ரபஞ்சத்தை கபளமாக வைத்திருப்பதாக முந்திய நாமத்தில் சொல்லியிருப்பதை அனுஸரித்து அவ்வித கபளத்தை சாப்பிடுவதாக இங்கு சொல்லப்பட்டது. விறகை நெருப்பிலிட்டால் அது நெருப்பினால் அனுபவிக்கப்பட்டு நசிக்கப்படுவதுபோல் ப்ரபஞ்சமானது அம்பாள் பஹிர்முகமாயிருக்கும்போது அனுபவிக்கப்பட்டு பிறகு அந்தர்முகமாயிருக்கும்போது நாசமடையும்படி செய்யப்படுவதை இந்த இரண்டு நாமங்களில் சொல்லப்பட்டது.

2. முன்வந்த 'மஹாஸநா' என்ற 229-வது நாமமும் இந்த நாமமும் மூன்றாவது அக்ஷரத்தில் வித்யாஸப்படுவதால் புனருக்தி என்கிற தோஷமில்லாதது கவனிக்கவும்.

## अपर्णा

## அபர்ணா (754)

ருணமில்லாதவள்.

1. அதாவது, தீர்க்கவேண்டியதான கடன் யாதொன்றுமில்லாதவள். பக்தர்களுக்குக் கடன்பட்டிருப்பதைத் தீர்த்தவள் என்று தாத்பர்யம். இந்த அர்த்தத்தையொட்டி பாஸ்கரராயரால் அவருடைய தேவீஸ்தவத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ருணமிஷ்டம் அதத்வைவ த்வன் நாம உபதோ மம் |
சிவே கதம் அபர்ணேதி ரூடிர் பாரயதே ந தே ||'

2. நிருக்தத்தின்படி பர்ணம் என்றால் பதனம் (விழுவது) என்ற அர்த்தமாகையால், பதனம் இல்லாதவள் என்றும் இந்த நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம்.

3. பர்ணம் என்றால் இலை. இலைகூட (ஆஹாரத்திற்கு) இல்லாதவள் அபர்ணா. அம்பாள் ஹிமவானுடைய புத்ரியாக அவதரித்து தபஸ் செய்கையில் இலைகளைக்கூட ஆகாரம்பண்ணாமல் கடுமையான தபஸ் செய்தபடியால் அம்பாளுக்கு அபர்ணா என்ற பெயர் ஏற்பட்டதாகச் சொல்லப்பட்டது.

'ஆஹாரே த்யக்த பர்ணாபூத் யஸ்மாத் ஹிமவத: ஸுதா |
தேன தேவைர் அபர்ணேதி கதிதா ப்ருதிவீதலே ||'

(காளிகா புராணம்)

'அபர்ணா து நிராஹாரா தாம் மாதா ப்ரத்யபாஷத |'

(ப்ரம்ஹ புராணம்)

## चण्डिका
## சண்டிகா (755)

கோபமுள்ளவள்.

1. அதாவது, தன்னிடம் பக்தியில்லாதவர்களிடம் கோபமுள்ளவள் என்று அர்த்தம்.

2. 'சண்டிகா ஸப்தவர்ஷா ஸ்யாத்' என்ற தேவிபாகவத வசனப்படி ஏழு வயதுள்ள கன்யாரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

## चण्डमुण्डासुरनिषूदिनी
## சண்டமுண்டாஸுர நிஷூதினீ (756)

சண்டன், முண்டன் என்ற அஸுரர்களை ஸம்ஹாரம் செய்தவள்.

1. இவர்களிருவரும் அம்பாளுடைய ரூபவிசேஷமான காளீ தேவியால் ஸம்ஹாரம் செய்யப்பட்டதையும், அதனால் காளீதேவிக்கு சாமுண்டா என்ற பெயர் அம்பாளால் கொடுக்கப்பட்டதையும், தேவீபாகவதம், தேவீமாஹாத்ம்யம் முதலியவற்றில் சொல்லப்பட்டிருக்கிறது.

'யஸ்மாத் சண்டம் ச முண்டம் ச க்ருஹீத்வா த்வம் உபாகதா |
சாமுண்டேதி ததோ லோகே க்யாதா தேவீ பவிஷ்யஸி ||'

(தேவீமாஹாத்ம்யம்)

2. அம்பாளுக்கு சாமுண்டா என்ற பெயர் வந்ததற்கு வராஹபுராணத்தில் வேறுவிதமான காரணம் சொல்லப்பட்டிருக்கிறது. முன்னொருக்கால் ருரு என்ற தைத்யனோடு அம்பாள் யுத்தம் பண்ணும்போது அவனைத்தன் சூலாயுதத்தினால் குத்தவே அவனுடைய முண்டம் (சிரஸ்), சர்மம் (உடல்) இவையிரண்டும் தனியாகப்போய் அவற்றை அபஹரித்துக்கொண்டு போனதினால் அம்பாளுக்கு சாமுண்டா (சர்மமுண்டா) என்ற பெயர் ஏற்பட்டதாக அதில் சொல்லப்பட்டிருக்கிறது.

'தேவீ து த்ரிசிகேனைஜௌ தம் ருரும் ஸமதாடயத் |
தயா து தாடிதே தஸ்ய தைத்யஸ்ய சுபலோசனே ||
சர்மமுண்டே உபே ஸம்யக் ப்ருதக்பூதே பபூவது: |
ருரோஸ்து தானவேந்த்ரஸ்ய சர்மமுண்டேக்ஷணாத்யத: |
அபஹ்ருத்யாசரத் தேவீ சாமுண்டா தேன ஸாபவத் ||'

3. அம்பாளுடைய ரூபவிசேஷத்திற்கு இம்மாதிரி பெயர்களிருப்பதை,

'கர்மமோடீ து சாமுண்டா சர்மமுண்டா ச சர்ச்சிகா |'

என்ற அமரகோச வசனத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

4. சண்டங்களான (ப்ரசண்டங்களான, அதாவது அத்யந்தமான கோபமேற்படுவதால் சிவந்த நேத்ரங்களோடுகூடிய) முண்டங்களையுடைய (சிரஸ்ஸுகளையுடைய) அஸுரர்களை ஸம்ஹாரம் செய்பவள் என்றும் சொல்லலாம். இதிலிருந்து, அவ்விதம் ஸம்ஹாரம் செய்யப்பட்ட அஸுரர்களின் முண்டங்களை மாலையாக தரித்திருப்பவளாக வர்ணிக்கப்படும் காளிகாதேவியின் ரூபமானது குறிப்பிடப்படுகிறதாகவும் சொல்லலாம்.

## क्षराक्षरात्मिका

க்ஷராக்ஷராத்மிகா (757)

அழிவுள்ளதும் அழிவில்லாததுமான பதார்த்தங்களை ஸ்வரூபமாக உடையவள்.

1. அல்லது, எண்ணிக்கையற்ற அக்ஷரங்களை (வர்ணங்களை) ஸ்வரூபமாக உடையவள் என்றும் சொல்லலாம். இதையே தான் 'ஏகானேகாக்ஷராக்ருதி: என்று ஸ்ரீலலிதா த்ரிசதியிலும்,

'ஏகாக்ஷரேதி விக்யாதா ஸர்வாக்ஷரமயீ சுபா |
ஸைவ விச்வேச்வரீ தேவீ ஸைவ க்வாப்யமிதாக்ஷரா ||'

என்று வராஹபுராணத்திலும் சொல்லப்பட்டது.

2. ஸகல பூதங்களும் அழிவுள்ளவையாகையால் அவற்றை க்ஷரமென்றும், கூடஸ்த்தனை ப்ரம்மத்தை அக்ஷரமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'க்ஷர: ஸர்வாணி பூதானி கூடஸ்த்தோऽக்ஷர உச்யதே |' (கீதை)

இப்படிப்பட்ட இரண்டுவிதமான ரூபத்தோடு (உபயாத்மகமாக) அம்பாளிருப்பதை இந்த நாமத்தில் சொல்லப்பட்டது. இதையேதான் 'ஸதஸத் க்ஷரமக்ஷரம்' என்று மகாபாரதத்திலும்,

'விஷ்ணோஸ்து த்ரீணீ ரூபாணி புருஷாக்யானி யே விது: |
ப்ரதமம் மஹத: ஸ்ரஷ்டா த்விதியம் த்வண்டஸம்ஸ்த்திதம் |
த்ருதீயம் ஸர்வபூதஸ்த்தம் தானி ஞாத்வா விமுச்யதே ||'

என்று விஷ்ணுபாகவதத்திலும் சொல்லப்பட்டது.

## सर्वलोकेशी
## ஸர்வலோகேசீ (758)

ஸமஸ்தமான லோகங்களுக்கும் ஈச்வரியாக இருப்பவள்.

## विश्वधारिणी
## விச்வதாரிணீ (759)

விச்வத்தை (ஸமஸ்தமான ப்ரபஞ்சத்தையும்) தாங்குகிறவள்.

## त्रिवर्गदात्री
## த்ரிவர்கதாத்ரீ (760)

தர்மார்த்தகாமங்களைக் கொடுப்பவள்.

தர்ம, அர்த்த, காமங்களாகிற ஸமூஹத்திற்கு த்ரிவர்கமென்றும் அம்மூன்றுடன் மோக்ஷத்தைச் சேர்த்த ஸமூஹத்திற்கு சதுர்வர்கமென்றும் பெயர்.

'த்ரிவர்கோ தர்மகாமார்த்தை: சதுர்வர்க: ஸமோக்ஷகை: |' (அமரம்)

**सुभगा** (761)

**ஸுபகா**

சோபனமான பகத்தோடு கூடியவள்.

1. அல்லது, பக பத வாச்யங்களானவைகள் (பகம் என்ற பதத்தினல் குறிக்கப்படுகிறவள்) தன்னிடமிருப்பதால் அவற்றிற்கு சோபயைக்கொடுப்பவள் என்றும் சொல்லலாம்.

2. பகம் என்ற பதத்திற்கு ஸ்ரீ, காம, மாஹாத்ம்ய, வீர்ய, யத்ன, கீர்த்தி முதலிய அர்த்தங்களுண்டு.

'பகம் ஐச்வர்ய மாஹாத்ம்ய ஞான வைராக்ய யோனிஷு |
யசோ வீர்ய ப்ரயத்னேச்சா ஸ்ரீ தர்ம ரவி முக்திஷு ||'
(விச்வகோசம்)

3. அல்லது, ஸூர்யனுக்கு சோபையைக் கொடுக்கிறவள் என்றும் சொல்லலாம். ப்ரம்ஹஸ்வரூபிணியான அம்பாள் அவருக்குள்ளிருப்பதால் அவரால் செய்யப்படும் ஸகலகார்யங்களும் அம்பாளுடைய சக்தியினுல்தான் என்று தாத்பர்யம். இம்மாதிரி ஸூர்யனுடைய ஸகல சக்தியும் அவருக்குள்ளிருக்கும் விஷ்ணு சக்தியினுல்தான் என்பதாக விஷ்ணுபுராணம் இரண்டாவது அம்சத்தில் விஸ்தாரமாக சொல்லப்பட்டிருக்கிறது.

'மாஸி மாஸி ரவிர்யத்ர தத்ர தத்ர ஹி ஸா பரா |
த்ரயீமயீ விஷ்ணுசக்தி: அவஸ்த்தானம் கரோதி வை ||
மூர்த்திரேஷா த்ரயீ விஷ்ணோ: ருக்யஜு: ஸாம ஸம்ஜ்ஞிதா |
விஷ்ணுசக்திரவஸ்த்தானம் ஸதாதித்யே கரோதி யா ||'

4. அல்லது, த்ரிலோகத்திலுமிருக்கப்பட்ட ஸௌபாக்யமானது, சரங்களுடையதோ, அகரங்களுடையதோ, எல்லாம் அம்பாளுடைய ரூபமென்பதாகச் சொல்லப்படும். ஸௌபாக்யத்தையுடைய சரவஸ்துகள் ஸுவாஸினிகளே (உயிரோடிருக்கும் புருஷர்களையுடைய ஸ்த்ரீகளே). அசரவஸ்துக்கள் கரும்பு, அச்வத்த வ்ருக்ஷம், முளைத்திருக்கும் ஜீரகம், கொத்தமல்லி, கோக்ஷீரம் (அதின் விகாரங்களான தயிர், வெண்ணையுள்பட), மஞ்சள் நிறமுள்ள வஸ்த்ரம், புஷ்பம், லவணம் இவை யெட்டும் என்பதாக பத்ம புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

இக்ஷவஸ் தருராஜம் ச நிஷ்பாவா ஜிரதான்யகே |
விகாரவச்ச கோக்ஷீரம் குஸும்பம் குஸுமம் ததா |
லவணம் சேதி ஸௌபாக்யாஷ்டகம் ஸ்த்தாவா முச்யதே ||'

ஸ்த்ரீகள் ஸுபகாவான அம்பாளை உபாஸித்தால் எதுதான் கிடைக்காது (எவ்வித ஸௌபாக்யமும் கிடைக்கும்) என்பதாக அந்த புராணத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது.

'த்ரிவிஷ்டப ஸௌபாக்யமயீம் புக்தி முக்தி ப்ரதாம் உமாம் |
ஆராத்ய ஸுபகாம் பக்த்யா நாரீ வா கிம் ந விந்ததி ||'

5. 'ஸுபகா பஞ்சவர்ஷா ஸ்யாத்' என்ற தௌம்யவசனப்படி ஐந்து வயதுள்ள கன்யாரூபத்தோடு அபின்னமாயிருப்பவள் என்றும் சொல்லலாம்.

## त्र्यम्बका
## த்ர்யம்பகா (762)

மூன்று நேத்ரங்களையுடையவள்.

ஸோம, ஸூர்ய, அனலர்கள் மூவரும் அம்பாளுடைய நேத்ரங்களாக இருக்கிறார்கள் என்று சொல்லப்படும்.

'ஸோம ஸூர்யானலாஸ்த்ரீணீ யன் நேத்ராண்யம்பகானி ஸா |
தேன தேவீ த்ர்யம்பகேதி முனிபி: பரிகீர்த்திதா |'
(தேவீ புராணம்)

அல்லது, த்ரிமூர்த்திகளுடைய அம்பிகையாக (தாயாராக) இருப்பதால் இந்தப்பெயர் வந்ததாகவும் சொல்லலாம்.

## त्रिगुणात्मिका
## த்ரிகுணாத்மிகா (763)

(ஸத்வ, ரஜஸ். தமோகுணங்களாகிய) த்ரிகுணங்களுடைய ஸாம்யமான ரூபத்தோடு கூடியவள்.

## स्वर्गापवर्गदा
## ஸ்வர்காபவர்கதா (764)

ஸ்வர்கமென்ற அநித்யமான ஸுகத்தையும், ப்ரம்ஹானந்தானுபவமான நித்யஸுகத்தையும் கொடுப்பவள்.

1. ஸ்வர்கமென்பது அநித்யமான ஸுகத்தைக் குறிக்கும். அது, செய்யப்பட்ட புண்யத்தின் ப்ரயோஜனமாகக் கிடைக்குமென்றும், அந்த புண்யம் குறைந்துவிட்டால் ஸ்வர்கத்திலிருந்து திரும்பவும் இந்த லோகத்திற்கு திரும்பி வரவேண்டுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'யன் ந து:கேன ஸம்பின்னம் ந ச க்ரஸ்தம் அனந்தரம் |
அபிலாஷோபனீதம் யத் தத் ஸுகம் ஸ்வ: பதாஸ்பதம் ||'
'க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி |'

2. ப்ராம்ஹானந்தானுபவமென்ற நித்யமான (அழிவில்லாத) ஸுகத்தை அபவர்கமென்று சொல்லப்படும்.

## शुद्धा (765)

*சுத்தா*

அவித்யையினுல் ஏற்படும் மாலின்யம் (அழுக்கு, களங்கம்) யாதொன்றுமில்லாத சுத்தமான ஸ்வரூபத்தையுடையவள்.

## जपापुष्पनिभाकृतिः (766)

ஜபாபுஷ்ப நிபாக்ருதி:

செம்பரத்தைப் புஷ்பத்திற்கு ஸமானமான (நிறத்தோடுகூடிய) ரூபத்தையுடையவள்.

1. இந்தநாமத்தை முந்திய நாமத்திலிருந்து பிரிக்கையில் 'அஜபா புஷ்பநிபாக்ருதி:' என்று பிரித்து அஜபா, புஷ்பநிபாக்ருதி: என்று இரண்டு நாமங்களாகச் சொல்லலாம். அவ்விதம் சொல்பவர்கள் பின்னுல் வரும் 955, 956 நாமங்களை ஒன்ருகச் சேர்த்து 'தராதரஸுதா' என்று ஒரே நாமமாகச் சொல்லுவார்கள்.

2. அப்படிச்சொல்லும்போது, அஜபா என்ற மந்த்ர விசேஷத்தின் ரூபமாக இருப்பவள் என்றும், புஷ்பத்திற்கு ஸமமான (மார்தவத்துடனும் அழகுடனும் கூடிய) ரூபத்தையுடையவள் என்றும் அவ்விரண்டு நாமங்களுக்கு அர்த்தம்.

3. அஜபா மந்த்ரத்தைப்பற்றி தக்ஷிணமூர்த்தி ஸம்ஹிதையில்,

'விநா ஜபேன தேவேசி ஜபோ பவதி மந்த்ரிண: |
அஜபேயம் தத: ப்ரோக்தா பவபாச நிக்ருந்தனீ ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

4. புஷ்பம் என்ற பதத்திற்கு ருதுகாலத்தில் ஏற்படும் விகாஸம், குபேரனுடைய விமானம், பூ, நேத்ரவ்யாதி முதலிய அர்த்தங்களுண்டு.

'புஷ்பம் விகாஸ ஆர்த்தவே |
தனதஸ்ய விமானே ச குஸுமே நேத்ரருஜ்யபி ||'

## ओजोवती
## ஓஜோவதீ (767)

ஓஜஸ்ஸை உடையவள்.

1. 'ஓஜோऽஷ்டமதாது:' என்ற வேதபாஷ்ய வசனப்படி தேஹத்திலிருக்கும்படியான ஒன்பது தாதுக்களில் எட்டாவது தாதுவுக்கு ஓஜஸ் என்று பெயர். இதை சிலர் இந்த்ரிய ஸாமர்த்தியம் என்று சொல்லுவார்கள்.

2. 'ஓஜஸ் தேஜஸி தாதூனாம் அவஷ்டம்ப ப்ரகாசயோ: |
ஓஜோ பலே ச தீப்தௌ ச ... ... ... ... ||'

என்ற விச்வகோச வசனத்தின்படி ஓஜஸ் என்றபதத்திற்கு தேஜஸ், தாதுக்களின் வீர்யம், ப்ரகாசம், பலம், காந்தி முதலிய அர்த்தங்களுண்டு. அவையெல்லாம் அம்பாளிடமிருப்பதை இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

## द्युतिधरा
## த்யுதிதரா (768)

காந்தியை தரிப்பவள் (காந்தியோடிருப்பவள்)

## यज्ञरूपा
## யக்ஞரூபா (769)

யக்ஞங்களைத்தன் ரூபமாக உடையவள்.

1. அல்லது, 'யக்ஞோ வை விஷ்ணு:' என்ற ச்ருதிவாக்யத்தின்படி விஷ்ணுவோடு அபின்னமான ரூபத்தையுடையவள் என்றும் சொல்லலாம்.

2. யக்ஞங்கள் ஈச்வரனுடைய ரூபமாக இருப்பதைப் பற்றி ஹரிவம்சம், பத்மபுராணம் முதலியவைகளில் விபரமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

3. 'முக்யாம்நாயரஹஸ்ய'த்தில்,

'இந்த்ரியத்வாரஸம்க்ருஹ்யைர் கந்தாத்யைராத்மதேவதாம் |
ஸ்வபாவேன ஸமாராத்ய ஞாது: ஸோயம் மஹாமக: ||'

என்று சொல்லப்பட்ட மஹாயக்ஞத்தின் ரூபமாக இருப்பவ ளென்றும் சொல்லலாம்.

**प्रियव्रता**
**ப்ரியவ்ரதா** (770)

வ்ரதங்களில் ப்ரியமுள்ளவள்.

அதாவது, ஸகலதேவதைகளைக் குறித்து அனுஷ்டிக்கப் படும் வ்ரதங்களெல்லாம் அம்பாளுக்குப் பிரியத்தைக்கொடுக் கின்றவை என்று தாத்பர்யம். லோகம் முழுவதுமே சிவசக்தி மயமாக இருப்பதால் எந்த தேவதையை உத்தேசித்துச் செய் யப்பட்ட வ்ரதமாயிருந்தாலும் அது அவ்விருவர்களுக்கு ப்ரியத் தைக் கொடுக்குமென்று பவிஷ்யோத்தர புராணத்தில் சொல்லப் பட்டிருக்கிறது.

'தேவம் தேவீம் ச வோத்திச்ய யத் கரோதி வ்ரதம் நர: |
தத் ஸர்வம் சிவயோஸ்துஷ்ட்யை ஜகஜ்ஜனன சீலயோ: |
ந பேதஸ்தத்ர மந்தவ்ய: சிவசக்திமயம் ஜகத் ||'

**दुराराध्या**
**துராராத்யா** (771)

ச்ரமத்தின்பேரில் ஆராதிக்கப்படுகிறவள்.

அதாவது, சபலமான இந்த்ரியங்களையுடையவர்களால் அம்பாளை ஆராதிப்பது ச்ரமமான கார்யம் (அதாவது, முடியாது) என்று தாத்பர்யம். இதையேதான் ஆசார்யாளால்,

'புராராதே: அந்த: புரமஸி ததஸ் த்வச்சரணயோ:
ஸபர்யா மர்யதா தரளகரணனாம் அஸுலபா |'

என்று 'ஸௌந்தர்யலஹரி'யில் சொல்லப்பட்டிருக்கிறது.

**दुराधर्षा**
**துராதர்ஷா** (772)

ஜயிக்கமுடியாதவள்.

அல்லது, மறுக்கமுடியாதவள், வசப்படுத்தமுடியாதவள் என்றும் சொல்லலாம்.

## पाटलीकुसुमप्रिया

**பாடலீ குஸுமப்ரியா** (773)

பாதிரிப்புஷ்பங்களில் ப்ரியமுள்ளவள்.

பாடலீபுஷ்பம் என்பது வெளுப்பும், சிகப்பும் கலந்த நிறமுள்ளது.

'ஸ்ரீவ்ருக்ஷே சங்கரோ தேவ: பாடலாயாம் து பார்வதீ |'

என்ற பத்மபுராண வசனத்தின்படி பில்வ வ்ருக்ஷமானது பரமசிவனுக்கும், பாடலீமரமானது பார்வதிக்கும், ப்ரியமுள்ளதாகச் சொல்லப்படும். (லக்ஷ்மீ நிவாஸம் பண்ணும் ஸ்தானங்களில் பில்வ வ்ருக்ஷத்தை ஒன்றாகச் சொல்லப்படுவதால் அதற்கு ஸ்ரீவ்ருக்ஷம் என்று பெயர்.)

## महती

**மஹதீ** (774)

மிகவும் பெரியவள்.

1. ஸகல வஸ்துக்களும் அம்பாளுடைய பரிணாமரூபங்களாக இருப்பதால் அம்பாள் எல்லாவற்றையும்விடப் பெரியவள் என்று சொல்லப்பட்டது.

2. மஹத் என்ற விசேஷணமானது, பிற வஸ்துக்களுக்கு அளவு கருவியாக இருப்பதால், அல்லது அவற்றால் வணங்கப் படுவதால், ஏற்படுகிறது.

3. நாரதருடைய வீணைக்கு மஹதீ என்று பெயராகையால் அந்த ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

## मेरुनिलया

**மேருநிலயா** (775)

மேருவையே வாஸ ஸ்த்தானமாக உடையவள்.

1. 'மேரு: ஸுமேருர் ஹேமாத்ரி:' என்றபடி மேருவென்பது ஸ்வர்ணமயமான பர்வதம். இதைப்பற்றி ஏற்கனவே வந்த 'ஸுமேருமத்ய ச்ருங்கஸ்த்தா' என்ற 55-வது நாமத்தைப்பார்க்கவும். இதனுடைய நடு சிகரத்தின்மேல் ஸ்ரீநகரமும் அதில் அம்பாளுடைய சிந்தாமணிக்ருஹமும் இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

2. பண்டாஸுரயுத்தம் முடிந்தபிறகு தேவர்களெல்லோரும் காமேச்வரருக்கும் லலிதாம்பிகைக்கும் தகுந்ததான வாஸஸ்த்தானங்களை ஏற்படுத்த உத்தேசம் பண்ணி தேவ சில்பியான விச்வகர்மனையும், அஸுர சில்பியான மயனையும் அழைத்து பதினாறு நித்யைகளின் ரூபமாக இருக்கும் அம்பாளுக்குப் பதினாறு ஸ்ரீநகரங்கள் நிர்மாணம் செய்யும்படியாகக் கட்டளையிட்டார்கள்.

'யுவாப்யாம் லலிதாதேவ்யா: நித்யஞான மஹோததே: |
ஷோடசக்ஷேத்ர மத்யேஷு தத்க்ஷேத்ர ஸமஸங்க்யயா ||
கர்தவ்யா: ஸ்ரீநகர்யோ ஹி நானாரத்னைரலங்க்ருதா: |
யத்ர ஷோடசதா பின்னா லலிதா பரமேச்வரீ |
விச்வத்ராணாய ஸததம் நிவாஸம் ரசயிஷ்யதி ||'

3. அப்படியே அந்த சில்பிகளும் பதினாறு க்ஷேத்ரங்களில் பதினாறு நகரங்கள் நிர்மாணம் பண்ணினார்கள். அவை ஒன்பது பர்வதங்களிலும் ஏழு ஸமுத்ரங்களிலும் இருப்பவை.

'ப்ரதமம் மேருப்ருஷ்டே ச நிஷதே ச மஹீதரே |
ஹேமகூடே ஹேமகிரௌ பஞ்சமே கந்தமாதனே ||
நீலமேஷே ச ச்ருங்காக்யே மஹேந்த்ரே ச மஹாகிரௌ |
க்ஷேத்ராணி வா நவைதானி பௌமானி விதிதான்யத ||
ஔதகானி து ஸப்தைவ ப்ரோக்தான்யகில ஸிந்துஷு |
லவணேக்ஷுஸுராஸர்பி ஸ்ஸுராப்தி க்ருதஸாகரா: ||
ததிஸிந்து: க்ஷீரஸிந்து: ஜலஸிந்துச்ச ஸப்தம: |
பூர்வோக்தா நவ சைலேந்த்ரா: பச்சாத் ஸப்த ச ஸிந்தவ: ||'

3. இந்த நகரங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு நித்யையின் பெயர் இடப்பட்டது. அதாவது, காமேச்வரீபுரீ, பகமாலாபுரீ, நித்யக்லின்னாபுரீ முதலியன.

4. இவற்றில் மேரு பர்வதத்திற்கு இந்த்ர, நிர்ருதி, வாயு திக்குகளில் மூன்று சிகரங்களும் மத்தியில் ஒரு சிகரமும் உண்டு. அந்த மூன்று சிகரங்களில் ப்ரம்ஹ, விஷ்ணு, சிவலோகங்களும், மத்யசிகரத்தில் அம்பாளுடைய நகரமும் இருக்கின்றன.

'ஸ ஜயதி ஸௌவர்ணசைல: ஸகல ஜகச்சக்ர ஸங்கடித மூர்த்தி: |
காஞ்சன நிகுஞ்ஜவாடீ கந்தலதமரீ ப்ரபஞ்ச ஸங்கீத: ||
ஹரிஹர நைர்ருத மாருத ஹரிதாம் அந்தேஷ்வவஸ்திதம்தஸ்ய |
விநும: ஸானுத்ரிதயம் விதி ஹரி கௌரீச விஷ்டபாதாராம் ||
மத்யே புனர் மனோஹர ரத்னருசிஸ்தபக ரஞ்ஜித திகந்தம் |
உபரி சது: சதயோஜனம் உத்துங்கம் ச்ருங்கபுங்கவம் உபாஸே ||'

5. இவ்விதமான ஸ்ரீபுரங்களின் நிர்மாணத்தைப்பற்றி தந்த்ரராஜம் இருபத்தியெட்டாவது படலத்தில்,

'அத ஷோடச நித்யானும் லோகாத்மத்வம் வதாமிதே |'

என்று ஆரம்பித்து, ஸப்த ஸமுத்ரங்கள், த்வீபங்கள், பூமி இவற்றை வர்ணித்துவிட்டு,

'மத்யஸ்த்த மேரௌ லலிதா ஸதைவாஸ்தே மஹாத்யுதி: |
தஸ்யாபிதோ ஜலாப்த்யந்த: சேஷாஸ்தா: ஸ்யுச்சதுர்தச |
தத் பஹி: பரமே வ்யோம்னி த்வந்தே சித்ரா து ஸம்ஸ்த்திதா ||

என்பது முதலான ச்லோகங்களில் விசேஷமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. லலிதோபாக்யானத்திலும் விபரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. மேரு, ஸ்ரீநகரம், சிந்தாமணிக்ருஹம் முதலியவற்றைப்பற்றி லலிதோபாக்யானம், லலிதாஸ்தவரத்னம், சிந்தாமணிஸ்தவம் முதலியவற்றில் விஸ்தாரமாக வர்ணிக்கப்பட்டிருப்பதையும் பார்க்கவும்.

6. சக்ரராஜத்திற்கு (ஸ்ரீசக்ரத்திற்கு) பூமி, கைலாஸ, மேரு ப்ரஸ்தாரங்களென்பதாக மூன்றுவிதமான பாவனு ப்ரகாரங்கள் உண்டு. வசின்யாதி அஷ்டதேவதைகளோடு இருப்பதாக பாவனைசெய்வது பூ ப்ரஸ்தாரம். மாத்ருகாக்ஷரங்களோடு இருப்பதாக பாவனை செய்வது கைலாஸ ப்ரஸ்தாரம். ஷோடச நித்யாதேவதைகளோடு இருப்பதாக பாவனைசெய்வது மேரு ப்ரஸ்தாரம். இவற்றில் மேரு எனப்படும் நித்யா தாதாத்ம்ய பாவனையையே நிலயமாக உடையவள் என்றும் இந்த நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம். இந்தமாதிரியாக பாவனை செய்வதை ஸனத்குமார, ஸனந்தன, வஸிஷ்ட ஸம்ஹிதைகள் மூன்றிலும் மூன்றுவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

7. அல்லது, ஞானார்ணவத்தில் சொல்லப்பட்டபடி,

பூமிச்சந்த்ர சிவோ மாயா சக்தி: க்ருஷ்ணத்வமாதனௌ |
அர்தசந்த்ரச்ச பிந்துச்ச நவார்ணோ மேருருச்யதே ||'

என்றபடி ஒன்பது அக்ஷரங்களையுடைய மந்த்ரத்திற்கு மேரு என்று பெயர். அதையே நிலயமாக உடையவள், அதாவது, தன்னுடைய எல்லா மந்த்ரங்களுக்கும் அதையே உத்பவஸ்த்தானமாக உடையவள் என்றும் இந்த நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம்.

'மஹாத்ரிபுர ஸுந்தர்யா: மந்த்ரா மேருஸமுத்பவா: | '

**मन्दारकुसुमप्रिया**

**மந்தாரகுஸுமப்ரியா** (776)

மந்தார புஷ்பத்தில் ப்ரியமுள்ளவள்.

மந்தாரமென்பது தேவலோகத்திய பஞ்சவ்ருக்ஷங்களில் ஒன்று. ச்வேதார்க்கம் (வெள்ளெருக்கு) என்பதற்கும் இந்தப் பெயர் சொல்லப்படும்.

**वीराराध्या**

**வீராராத்யா** (777)

வீரர்களால் ஆராதிக்கப்படுகிறவள்.

த்வைதபாவத்திற்கு அடையாளமாக இருக்கும் அஹம் (நான்), இதம் (இது) என்ற பாவங்களை ப்ரளயமடையச் செய்து (அவ்வித) பராக்ரமத்தையுடையவர்களாய், துக்கத்தைப்போக்கும்படியான ஆத்மஸ்வரூபத்தை அனுபவிப்பவர்களுக்கு வீரர்கள் என்று பெயர்.

'அஹமி ப்ரளயம் குர்வன் இதம: ப்ரதியோகின: |
பராக்ரமம் பரோ புங்க்தே ஸ்வாத்மானம் அசிவாபஹம் || '

(பராபஞ்சாசிகா)

**विराड्रूपा**

**விராட்ரூபா** (778)

விராட் ஸ்வரூபமாக இருப்பவள்.

ஸ்தூல சரீர ஸமஷ்ட்யபிமானியான ஈச்வரனுக்கு விராட் என்று பெயர்.

**विरजा**

**விரஜா** (779)

பாபமில்லாதிருப்பவள்.

1. உத்கல தேசத்திலிருக்கும் விரஜா என்ற பெயருடைய க்ஷேத்ரத்தில் அதிஷ்டானமாயிருக்கும் அம்பாளுக்கு விரஜா என்று பெயர். அந்த ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

'விரஜே விரஜா மாதா ப்ரம்ஹணு ஸம்ப்ரதிஷ்டிதா |
யஸ்யா: ஸம்தர்சனுத் மர்த்ய: புனுத்யாஸப்தமம் குலம் ||'
(ப்ரம்ஹாண்ட புராணம்)

2. ரஜஸ் என்ற பதத்திற்கு ஜ்யோதி,உதகம், லோகங்கள், என்றும் அர்த்தங்களுண்டு.

3. ப்ரயோகத்தில் இந்த நாமத்தை விரஜஸே நம: என்று சொல்லவேண்டும்.

## विश्वतोमुखी
## விச்வதோ முகீ (780)

எல்லாப் பக்கங்களிலும் முகத்தையுடையவள்.

அதாவது, பக்தனுனவன் எந்த திக்கை நோக்கியும் அம்பாளுடைய ரூபத்தைக் கல்பித்து த்யானம் செய்தபோதிலும் அந்த இடத்தில் அம்பாள் ஆவிர்பாவமாவாள் என்று தாத்பர்யம். இந்த அர்த்தத்தில் தான்,

'விச்வதச் சக்ஷுருத விச்வதோ முக:'

என்றும்,

'ஸர்வத: பாணிபாதம் தத் ஸர்வதோऽக்ஷி சிரோ முகம்'

என்றும் வாக்யங்கள் சொல்லப்படுகின்றன. இவை கல்பிதமான ரூபத்தைச் சொல்வதால், ப்ரம்ஹத்தினுடைய பாரமார்த்திகமான ரூபத்தைச் சொல்லும் 'அபாணிபாதோ ஜவனே க்ரஹீதா' என்பதுபோன்ற வாக்யங்களுக்கு விரோதமில்லை.

## प्रत्यग्रूपा
## ப்ரத்யக்ரூபா (781)

உள்ளே நோக்கித் திரும்புவதினுல் தெரியும் ரூபத்தையுடையவள்.

1. ப்ரதிகூலமாக இருக்கும் வஸ்துக்களை ஒதுக்கிவிட்டு அவைகளிலிருந்து திரும்புவதை ப்ரத்யக் என்று சொல்லப்படும்.

2. இந்த்ரியங்கள் விஷயோன்முகங்களாக (விஷயங்களில் பற்றுதலோடு)இருப்பதை பஹிர்முகத்வமென்றும், பராங்முகத்வமென்றும் சொல்லப்படும். அதைத்தள்ளிவிட்டு அந்தராத்மாவினிடம் உன்முகத்வத்தோடிருப்பதை அந்தர்முகத்வமென்றும்,

ப்ரத்யங்முகத்வமென்றும் சொல்லப்படும். இப்படி பராங்முகமாயிருக்கும்போது தெரியாததும்,ப்ரத்யங்முகமாக இருக்கும்போது தெரிவதுமான (ப்ரத்யகாத்ம) ஸ்வரூபத்தோடிருப்பவள் என்று இந்த நாமத்தின் தாத்பர்யம். இதைப்பற்றி ச்ருதியில்,

'பராஞ்சி கானி வ்யத்ருணத் ஸ்வயம்பூ: தஸ்மாத் பராங் பச்யதிநாந்த
[ராத்மன் |'

என்று சொல்லப்பட்டது.

## पराकाशा

## பராகாசா (782)

உத்க்ருஷ்டமான ஆகாச ஸ்வரூபமாயிருப்பவள்.

1. இந்த ஆகாசம் என்ற பதத்தினால் பரப்ரம்ஹமானது குறிக்கப்படுகிறது.

'ஆகாச இதிஹோவாச ஆகாசோ ஹ்யேவைப்யோ ஜ்யாயான் ஆகாச:
[பராயணம்'

என்ற சாந்தோக்ய வாக்யத்தில் சொல்லப்பட்ட ஆகாசபதமானது பஞ்சபூதங்களில் ஒன்றான (ஸாமான்ய) ஆகாசத்தைக் குறிப்பதில்லையென்றும், அது பரப்ரம்ஹத்தைச் சொல்லுகிறதென்றும் 'ஆகாசஸ் தல்லிங்காத்' என்ற ப்ரம்ஹ ஸூத்ரமானது அதை நிர்ணயிக்கிறதென்றும் சொல்லப்படும். பரப்ரம்ஹஸ்வரூபிணியான அம்பாளானவள் பராகாச ஸ்வரூபமாயிருப்பதை கூர்மபுராணத்தில்,

'யஸ்ய ஸா பரமாதேவீ சக்திராகாசஸம்ஸ்த்திதா |'
'இத்தம் ஹி ஸா ஜகதோ யோனிரேகா
ஸர்வாத்மிகா ஸர்வ நியாமிகா ச |
மாஹேச்வரீ சக்திரனாதி ஸித்தா
வ்யோமாபிதானா திவி ராஜதீவ ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

2. 'பரமே வ்யோமன் ப்ரதிஷ்டித:' என்ற ச்ருதி வாக்யத்தில் சொல்லப்பட்ட வ்யோம (ஆகாச)மானது ப்ரம்ஹாண்ட, பிண்டாண்ட பேதத்தால் இரண்டுவிதமாக இருந்தபோதிலும் இரண்டும் ப்ரம்ஹாபிவ்யக்திஸ்த்தானமான பராகாசமென்று சொல்லப்படும். பிண்டாண்டத்திலிருப்பதான பராகாசமானது

இரண்டுவிதமாக சொல்லப்பட்டிருக்கிறது. ஹ்ருதயத்திலிருக்கும் ஸூர்ய, சந்த்ரர்களுக்கு நடுவிலுள்ள ஆகாசத்தில் அக்னியிருக்கிறதென்றும், அதன் சிகரத்திற்கு மேலிருக்கும் ஆகாசமே பராகாசமென்றும், சித்ககன சந்த்ரிகையில் சொல்லப்பட்டது.

'ஹ்ருத் க்ரியாத்ம சசி பானுமத்யக:
கே சரத்யனலத்ருஷ்டி தாம ய: |
யத்தத் ஊர்த்வ சிகரம் பரம் நப:
தத்ர தர்சய சிவம் த்வம் அம்பிகே ||'

லலாடத்திற்குமேல், கபாலத்தின் உச்சிவரையிலுள்ள இடத்திற்கு த்வாதசாந்த ஸ்த்தானமென்றும், சிரோ தேசத்திற்குமேல் இரண்டு அங்குலம்வரையிலுள்ள இடமானது பரம் வ்யோம (பராகாசம்) என்றும், ஸ்வச்சந்த ஸங்க்ரஹத்தில் சொல்லப்பட்டது.

'த்வாதசாந்தம் லலாடோர்த்வம் கபாலோர்த்வாவஸானகம் |
த்வ்யங்லோர்த்வம் சிரோதேசாத் பரம் வ்யோம ப்ரகீர்த்திதம் ||'

3. அல்லது, ஸப்தஸமுத்ரங்களுக்கும் அப்பாலிருக்கும் ஆகாசத்திற்கு பராகாசம் என்று பெயராகையாலும், அங்கு லலிதாம்பிகையானவள் (பின் சொல்லப்படுகிறபடி) பதினாறுவது வருஷத்திலிருப்பதாலும், அந்த பராகாச ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

4. பூகோளத்திற்கு உத்தரபாகத்தில் மேரு பர்வதமிருக்கிறது. அதின் தக்ஷிண திக்கில் ஜம்பூ, ப்லக்ஷ, சால்மலி, குச, க்ரௌஞ்ச, சாக, புஷ்கரங்களென்ற ஸப்தத்வீபங்களும் அவைகளுக்கு நடு நடுவே பூகோளத்தைச்சுற்றி (வலயாகாரமாய்) லவண, இக்ஷு, ஸுரா, ஸர்ப்பி, மது, க்ஷீர மதுரோதகங்களென்ற ஸப்த ஸமுத்ரங்களும் கடைசியான மதுரோதக ஸமுத்ரத்திற்குத் தெற்காக பராகாசமும் இருப்பதாகச் சொல்லப்படும். இவ்வாறிருக்கும் (மேரு + ஸப்தத்வீபங்கள் + ஸப்தஸமுத்ரங்கள் + பராகாசம்) பதினாறு ஸ்தானங்களில் லலிதாமுதல் சித்ராவரையிலுள்ள பதினாறு நித்யாதேவதைகளும் ஆகியான க்ருதயுகத்தின் முதல் வருஷத்தில் இருக்கிறார்கள். இந்த ஸ்தானங்களின் வரிசையானது மேரு, ஜம்பூத்வீபம், க்ஷாரஸமுத்ரம், ப்லக்ஷத்வீபம், இக்ஷுஸமுத்ரம் என்றவிதமாகச் சொல்லி கடைசியில்

புஷ்கரத்வீபம், மதுரோதக ஸமுத்ரம் ப்ராகாசம் என்று முடிக்கவேண்டும்.

5. இப்படி க்ருதயுக ப்ரதம வருஷத்தில் மேருவிலிருக்கும் லலிதாம்பாளானவள் இரண்டாவது வர்ஷத்தில் ஜம்பூத்வீபத்திற்கும் அடுத்தவர்கள் அவரவர்களுக்கடுத்த ஸ்தானத்திற்கும் கடைசியான சித்ராவானவள் மேருவுக்கும் வருவார்கள். இதே விதமாய் அடுத்தடுத்த வருஷங்களில் ஸ்தானம் மாறி பதினாறு வருஷங்களானவுடன் லலிதாம்பிகை திரும்பவும் மேருவுக்கு வந்து விடுவாள். இம்மாதிரியான பரிவர்த்தனத்தைப்பற்றி,

'க்ருதாதி வர்ஷாதாரப்ய ப்ரதிவர்ஷமிதி ஸ்த்திதா |
த்விதீயாதிஷு வர்ஷேஷு க்ரமாத்தா: பரிவ்ருத்திபி: ||
ஷோடசேப்தே பரே வ்யோம்னி லலிதா ஸலிலாம்புதௌ |
சித்ரா ச பவதீத்தம் ஹி பஜந்தே பரிவர்த்தனம் ||'

என்று காதிமதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

6. பராகமென்றால் ஒருவிதமான க்ருச்சிரத்திற்குப் பெயராகையால் அது இங்கு தபஸ்ஸைக் குறிக்கும். அதனுடைய ஆசா (திக்கு) பராகாசா, அதாவது தபஸினால் அடையக்கூடிய மார்க்கமாயிருப்பவள் என்றும் சொல்லலாம்.

7. அல்லது, மேலே சொல்லப்பட்ட பராகம் முதலான தபஸுகளைச் செய்வதினால் உண்டாகும் பலன்களின் போக்த்ரீ (அனுபவிப்பவள்) என்றும் சொல்லலாம்.

8. 'அகம் பாபே ச து:கேச' என்ற விச்வகோச வசனத்தின்படி அகம் என்ற பதமானது பாபம், துக்கம் இவைகளைக் குறிக்கும். இந்த அர்த்தத்தில் உத்க்ருஷ்டமான (எப்பேர்ப்பட்டதான) பாபதுக்கங்களையும் நாசம் செய்கிறவள் என்று சொல்லலாம்.

9. ப்ரதீகாசமென்றால் உபமா (உவமை) என்று அர்த்தம். பராகாசமென்ற பதமானது ப்ரதீகாசமென்பதற்கு எதிரிடையான பதமாதலால் இந்த நாமத்திற்கு அனுபமா (ஒப்பு, உவமை இல்லாதவள்) என்றும் அர்த்தம் சொல்லலாம்.

## प्राणदा

ப்ராணதா (783)

ப்ராணனைக் கொடுப்பவள்.

1. ப்ராணன்களென்றால் ப்ராண, அபான, ஸமான உதான, வ்யானமென்ற ப்ராண பஞ்சகத்தையும் ஏகாதச இந்த்ரியங்களையும் குறிக்கும்.

2. அல்லது அவ்விதமான ப்ராணன்களை (த்யஷி-கண்டயதி) நசிப்பிக்கிறவள் என்றும் சொல்லலாம்.

## प्राणरूपिणी
## ப்ராண ரூபிணீ (784)

ப்ராண ரூபமாயிருப்பவள்.

1. 'ப்ராணோऽஸ்மி ப்ரஜ்ஞாத்மா தம்மமாம் ஆயுரம்ருதமுபாஸ்வ' என்ற கௌஷீதகி ப்ராஹ்மண வசனத்தில் வரும் ப்ராண என்ற பதமானது ப்ரம்ஹத்தைக் குறிக்குமென்று ப்ரம்ஹஸூத்ரம் ப்ராணாதிகரணத்தில் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இதையே,

'ப்ராணோ ப்ரம்ஹ கம் ப்ரம்ஹ (க்)கம் ப்ரம்ஹ'

என்ற ச்ருதி வாக்யத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

2. 'ப்ரா பூரணே' என்பதிலிருந்து ப்ராணனென்பதினால் பூர்ணமென்று ஏற்படுவதினாலும், 'பூர்ணமத: பூர்ணமிதம்' என்ற ச்ருதிவாக்யத்தில் சொல்லப்பட்டபடி பூர்ணமான வஸ்து ப்ரம்ஹமொன்றே ஆனதாலும் ப்ராணனென்ற பதமானது ப்ரம்ஹத்தையே குறிக்கும்.

3. இப்படி ப்ராணனுக்கு ப்ரம்ஹமென்று அர்த்தமிருப்பதை,

'ஏனமேகே வதந்த்யக்னிம் மனுமன்யே ப்ரஜாபதிம் |
இந்த்ரமன்யே பரம் ப்ராணம் அபரே ச மஹேச்வரீம் ||'

என்று மனுஸ்ம்ருதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

4. அல்லது, ப்ராணன்களென்பது காமேச்வரீ முதலான நித்யாதேவதைகளைக் குறிக்கும். நித்யாதேவதைகள்,

'ஏதா தேவீ ஸ்வரூபா: ஸ்யு: மஹாபல பராக்ரமா: |
ப்ரதமா முக்ய திதிதாம் கதா வ்யாப்த ஜகத்த்ரயா: |
காலரூபா வர்த்தமானா: காலக்ராஸ விசக்ஷணா: ||'

என்றபடி காலரூபிணிகளாக இருக்கிறார்கள். காலத்தினுடைய கணக்குகளான தினம், மாதம் முதலியவை ச்வாஸத்தின்

காலத்திலிருந்து ஏற்படுவதால் காலரூபிணிகளான நித்யா தேவதைகள் அவ்விதமான ச்வாஸத்தின் காரணமான ப்ராண ளுக இருக்கிருர்களென்பதை நித்யா தந்த்ரத்தில்

'அத ஷோடச நித்யானும் காலேன ப்ராணதோச்யதே |'

என்பது முதலான ச்லோகங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விதமான ஷோடச நித்யைகளில் அம்பாள் ஒருவளான தாலும் பாக்கி நித்யைகளுக்கும் அம்பாளுக்கும் யாதொரு விதமான பேதமும் கிடையாதாகையாலும் அம்பாளை இங்கு 'ப்ராண ரூபிணீ' என்று சொல்லப்பட்டது.

5. மேலும்,

'ஸார்த்த த்வாவிம்சதி: ச்வாஸா: க்ரமாத் த்வாதசராசய: |'

என்றபடி இருபத்தி இரண்டரை ச்வாஸங்களே க்ரமமாக பன்னிரெண்டு ராசிகளை ஏற்படுத்துகின்றனவென்றும், இவ்விதம் ச்வாஸங்களிலிருந்தே ராசிகள், சந்த்ர, ஸூர்யாதிகளுடைய கல்ப்பனையானது ஏற்படுகிறதென்றும், சொல்லப்பட்டிருக்கிறது.

## मार्तण्डभैरवाराध्या

## மார்த்தண்ட பைரவாராத்யா (785)

மார்த்தண்ட பைரவரால் ஆராதிக்கப்பட்டவள்.

1. ஸ்ரீபுரத்தில் 22, 23 வது ப்ராகாரங்களுக்கு நடுவிலுள்ள பூமியில் மார்த்தண்ட பைரவரென்ற தேவீ உபாஸகர் இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'சக்ஷுஷ்மதீ ப்ரகாசன சக்திச் சாயா ஸமாச்ரித கேளிம் |
மாணிக்ய முகுடரம்யம் மன்யே மார்த்தண்ட பைரவம் ஹ்ருதயே ||'
(லலிதாஸ்தவரத்னம்)

தேவியின் உபாஸகர்களிடம் விரோதம்பாராட்டி அவர்களை கோபமுள்ள பார்வையுடன் பார்க்கிறவர்களை மார்த்தண்ட பைரவர் அந்தர்களாக (கண்களை இழந்தவர்களாக) செய்து விடுகிருரென்று பலச்ருதி அத்யாயத்தில் சொல்லப்பட்டிருக் கிறது.

'யே க்ரூரத்ருஷ்ட்யா வீக்ஷ்யந்தே நாமஸாஹஸ்ர பாடகம் |
தான் அந்தான் குருதே க்ஷிப்ரம் ஸ்வயம் மார்த்தண்ட பைரவ: ||'

2. முன்னொருக்கால் மணிமல்லனென்ற அஸுரனை ஸம்ஹாரம் பண்ணும்பொருட்டு சிவனனவர் அச்வாரூடராய் கர்ணாடக தேசத்திலிருக்கும் ப்ரேமபுரத்தில் அவதரித்து அவனை ஸம்ஹாரம் பண்ணியதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இவரைப்பற்றி மஹாராஷ்ட்ர தேசத்தில் மிகவும் விசேஷமாகச் சொல்லப்படும். இவருடைய மந்த்ரங்களும் ப்ரயோகங்களும் (ருத்ரயாமளத்திலிருக்கும்) மைராள தந்த்ரத்தில் விசேஷமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இவருக்கு மல்லாரி என்ற பெயரும் உண்டு. இவர் அம்பாளை ஆராதித்ததைப்பற்றி மல்லாரி மாஹாத்ம்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

3. ம்ருதேऽண்டே யேன ஸம்ஜாதோ மார்த்தண்டஸ்தேன பாஸ்கர:।

என்று ஸ்காந்தத்தில் சொல்லப்பட்டபடி மார்த்தண்டரென்று ஸூர்யனுக்குப்பெயர். பைரவர் என்பதனால் வடுகர் முதலானவர்கள் குறிக்கப்படுவார்கள். ஸூர்யன் அம்பாளை ஆராதித்ததைப்பற்றி

'தேவ்யா ரத்னமயீம் மூர்த்திம் பக்த்யா நித்யம் திவாகர: ।
பூஜயித்வா ஆப்தவான் திவ்யம் ஸூர்யத்வம் சுபமுத்தமம் ॥'

என்று பத்மபுராணத்திலும், பைரவர் அம்பாளை ஆராதித்ததை காளிகா புராணத்தில் பல இடங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

4. பீரு என்றால் பயந்த ஸ்வபாவமுள்ளவர், பயப்பட்டவர் என்று அர்த்தம். இவர்களுடைய ஸமூஹம் பைரவமென்று சொல்லப்படும். பயமடைந்தவர்கள் அம்பாளை த்யானித்தால் காப்பாற்றப்படுகிறார்களென்பதை,

'துர்கே ஸ்ம்ருதா ஹரஸி பீதிம் அசேஷ ஜந்தோ: ।'

என்று தேவீ மாஹாத்ம்யத்தில் தேவீ ஸ்துதி ப்ரகரணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

5. ஸ்த்ரீகள் பயந்த ஸ்வபாவமுள்ளவர்களாகையால் அவர்களுக்கும் பீருக்கள் என்று பெயர். அவர்கள் எல்லோராலும் அம்பாள் ஆராதிக்கப்படுவதாகவும் சொல்லலாம்.

6. அல்லது, 'உத்யமோ பைரவ:' என்ற சிவஸூத்ரத்தில் சொல்லப்பட்டபடி பைரவ பதத்திற்கு உத்யோகம் (முயற்சி)

என்று அர்த்தம். அது மோகமாகிற அந்தகாரத்தை (இருட்டை) போக்கடிப்பதால் ஸூர்யனுகச் சொல்லப்பட்டது. இதையே

மோஹஜயாத் அனந்தாபோகாத் ஸஹஜம் வித்யாஜய:'

என்ற சிவ ஸூத்ரத்திலும், அதின் வார்த்திகத்தில்,

'மோஹஸ்தமோ நிஜாக்யாதி: தஜ்ஜயாத் தத் பராபவாத் |
உத்யமார்க்கோத்திதோऽனந்த: ஸம்ஸ்கார ப்ரசமாவதி: ||
ஆபோகோ யஸ்ய விஸ்தார: ஈத்ருசாத் தர்சிதாத்மன: |
பவேத் ஸஹஜவித்யாயா ஜயோ லாபோऽஸ்ய யோகின: ||'

என்றும் சொல்லப்பட்டது.

ஆகவே, (மேலே சொல்லப்பட்டபடி மோஹாந்தகாரத்தைப் போக்குவதினுல்) ஸூர்யனுக்கு ஸமமாயிருக்கும் உத்யோக (முயற்சி) விசேஷத்தினுல் ஆராதிக்கப்படுகிறவள் (அடையப்படுகிறவள்) என்று தாத்பர்யம்.

**मन्त्रिणीन्यस्तराज्यधूः**

**மந்த்ரிணீ ந்யஸ்த ராஜ்யதூ:** (786)

மந்த்ரிணியிடத்தில் வைக்கப்பட்ட ராஜ்யபாரத்தோடிருப்பவள்.

1. மந்த்ரிணிக்கு ஸசிவேசானீ, ச்யாமளாம்பா, ராஜ்ய ச்யாமளா, ஸங்கீதச்யாமளா என்பவை முதலான பெயர்களுண்டு.

ஸங்கீத யோகினீ ச்யாமா ச்யாமளா மந்த்ரிநாயிகா |
மந்த்ரிணீ ஸசிவேசானீ ப்ரதானேசீ சுகப்ரியா |
வீணவதீ வைணிகீ ச முத்ரிணீ ப்ரியகப்ரியா |
நீபப்ரியா கதம்பேசீ கதம்பவனவாஸினீ |

2. மந்த்ரிணியைப்போல் தண்டநாதைக்கும் ஸைன்யம், பூஷணங்கள், ப்ரபாவம், பராக்ரமம், ஆச்ரித ரக்ஷணம், அம்பாளிடம் பக்தி முதலிய அம்சங்கள் ஸமானமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'யதைவ ஸைன்ய ஸன்ஞஹோ மந்த்ரிண்யா: கும்பஸம்பவ |
யதா பூஷண வேஷாதி யதா ப்ராபவ லக்ஷணம் |
யதா புஜஸ்ய விக்ராந்தி: யதைவாச்ரித ரக்ஷணம் |
யதா தைத்யௌக ஸம்ஹாரோ யதா ஸர்வைச்ச பூஜ்யதா |
யதா பக்திர் மஹா ராக்ஞ்யாம் தண்டின்யாச்ச ததாகிலம் ||'

அப்படி ஸமமாக இருந்தபோதிலும் ச்யாமளாம்பா வானவள் அம்பாளுடைய மந்த்ரியாகையால் அம்பாளுடைய ராஜ்யபாரம்முழுவதும் அவளிடத்தில் ஒப்புவிக்கப்பட்டு அதற்கு அடையாளமாக அம்பாளுடைய ஆக்ஞா முத்ரையோடு கூடிய மோதிரத்தை அவள் தரித்துக் கொண்டிருக்கிருளென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'விசேஷஸ்து பரம் தஸ்யா: ஸ்ஸிவேச்யா: பரம் கரே |
மஹாராக்ஞீ விதீர்ணம் ததாக்ஞாமுத்ராங்குளீயகம் ||'
'லலிதா பரமேசான்யா ராஜ்ய சர்ச்சா து யாவதீ |
சக்தீனுமபி யா சர்ச்சா ஸர்வா தஸ்யா வசம் வதா ||'

3. மந்த்ரோபாஸகர்களை மந்த்ரிகள் என்று சொல்லலாம். அல்லது, மனனம், த்ராணம் (காப்பாற்றுவது) என்ற தர்மங்களோடிருப்பதால் நிர்மலமான சித்தத்தையே மந்த்ரமென்றும், அதையுடையவர்களை மந்த்ரிகளென்றும் சொல்லப்படும். இவர்களை அம்பாளோடு ஐக்யமாயிருக்கும் தன்மையை அடையச் செய்யும் ப்ரயத்ன விசேஷத்திற்கு மந்த்ரிணீ என்று பெயர். இவ்விதமான யத்ன விசேஷத்தில் ந்யஸ்தமான (வைக்கப்பட்ட) ராஜ்யத்தினுடைய (தன்னுடைய ஸாம்ராஜ்ய ரூபமான ஐக்ய ரஹஸ்யத்தினுடைய) பாரத்தை (அவ்வித ஸாம்ராஜ்யத்தைக் கொடுக்கும் தர்மத்தை) உடையவள் என்றும் சொல்லலாம். அதாவது உபாஸகர்களுக்கும், யோகிகளுக்கும் ப்ரயத்ன விசேஷத்தினுல் ஐக்யபாவம் கிடைப்பதானது அம்பாளுக்கு அதீனமாக இருக்கிறதென்று தாத்பர்யம்.

## त्रिपुरेशी
## த்ரிபுரேசீ (787)

த்ரிபுரேசீ என்ற தேவீ விசேஷத்தின் ரூபமாயிருப்பவள்.

ஸ்ரீசக்ரத்தின் ஒன்பது பாகங்களில் ஸர்வாசாபரிபூரகமென்ற சக்ரத்தில் அதிஷ்டானமாயிருக்கும் தேவிக்கு த்ரிபுரேசி என்று பெயர்.

'ஸர்வாசாபரிபூரக சக்ரேऽஸ்மின் குப்தயோகினீ ஸேவ்யா |
த்ரிபுரேசீ மம துரிதம் துத்யாத் கண்டா வலம்பிமணிஹாரா ||'
(லலிதாஸ்தவரத்னம்)

**जयत्सेना**

**ஜெயத்ஸேநா** (788)

(பண்டாஸுரன் முதலானவர்களோடு யுத்தம் செய்து) ஜயத்துடனிருக்கும் ஸேனையோடு கூடியவள்.

*அல்லது ஜயத்ஸேனன் என்று பெயருடைய ராஜாவின் ஸ்வரூபமாயிருப்பவள் என்றும் சொல்லலாம்.*

**निस्त्रैगुण्या**

*நிஸ்த்ரைகுண்யா* (789)

குணத்ரயங்கள் நீங்கியிருக்கும் ரூபத்தையுடையவள்.

**परापरा**

*பராபரா* (790)

பர, அபர, பராபர என்ற பதங்களால் குறிக்கப்படும் ப்ரம்ஹத்தின் ஸ்வரூபமாயிருப்பவள்.

*1. பர என்ற பதமானது அன்யனையும் (அதற்கு எதிரான பதமாகிய) அபரமென்பது தன்னைச் சேர்ந்தவனையும் குறிக்கும். அதாவது வைரீ, மித்ரன் என்று அர்த்தம். ப்ரம்ஹமானது இந்த இரண்டு ரூபமாக இருப்பதை,*

*ந மே த்வேஷ்யோऽஸ்தி ந ப்ரிய: |'*

*என்று ஸ்ம்ருதியில் சொல்லப்பட்டது.*

*2. பர என்றால் உத்க்ருஷ்டம் (மேலானது). அபரமென்றால் நிக்ருஷ்டம் (தாழ்ந்தது). ப்ரம்ஹம் இவ்விரண்டு விதமாகவுமிருப்பதை,*

*'ப்ரம்ஹதாஸா ப்ரம்ஹதாசா ப்ரம்ஹேமே கிதவா உத |'*

*என்று ச்ருதியில் சொல்லப்பட்டது.*

*3. பரனென்றால் எட்டியிருப்பவன், அபரனென்றால் அருகிலிருப்பவன். இவ்விதம் ப்ரம்ஹமிருப்பதை 'தூரஸ்தம் சாந்திகேச தத்' என்று ஸ்ம்ருதியில் சொல்லப்பட்டது.*

*இவ்விதமான அர்த்தங்கள் பரமென்ற பதத்திற்கு இருப்பதை,*

*'பர: ஸ்யாத் உத்தமானாத்ம வைரிதூரேஷு கேவல: |'*

*என்று விச்வகோசத்தில் சொல்லப்பட்டது.*

4. ப்ரம்ஹமானது கேவலம் சுத்தஸ்வரூபம், சபளித மான (கலப்புடைய) ஸ்வரூபம் என்ற ரூபபேதத்தை பொட்டி பரம், அபரம் என்று இரண்டுவிதமாக இருப்பதாக ஸாமான்ய மாகச் சொல்லப்படும். பராபரம் என்பது மூன்றாவதான ரூபம்.

'ஏதத்வை ஸத்யகாம பரம் சாபரம் ச |' (ச்ருதி)

'த்வே ப்ரம்ஹணீ வேதிதவ்யே பரம் சாபரமேவ ச |' (ஸ்ம்ருதி)

பரம் என்றால் ப்ரம்ஹத்திற்குப் பிந்தியதானது, அதாவது அதின் விசேஷணம், சக்தி. பரம் அல்லாதது அபரம், முந்தியது, அதாவது விசேஷ்யமானது. சிவன் இவ்விருவருடைய ஸாமரஸ்ய ஸம்பந்தத்தால் ஏற்படும் சக்தியோடுகூடிய சிவஸ்வரூபமே பராபரஸ்வரூபம், பரப்ரம்ஹஸ்வரூபம். அவ்விதமான ரூபத்தையுடையவள் என்று இந்த நாமத்தில் சொல்லப்பட்டது. இப்படி பர, அபர என்ற பதங்களுடைய பிந்திய, முந்திய (அபூர்வ்ய, பூர்வ்ய) என்ற அர்த்தங்களால் சக்தி, சிவன் இருவரும் குறிக்கப்படுவதை ச்ருதியிலும் கீழேகண்டபடி சொல்லப்பட்டிருக்கிறது.

'யுஜே வாம் ப்ரம்ஹ பூர்வ்யம் நமோபி: |'

'ஏஷோ உஷா அபூர்வ்யா வ்யுச்சதி ப்ரியா திவ: |'

இந்த விஷயத்தைப்பற்றி சிவானந்தலஹரியில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கவும்.

5. வ்யோம (ஆகாச)மானது பரம், அபரமென்ற இரண்டு விதமானதென்று சொல்லப்படும். தவிர, வித்யையானது அதே பெயர்களுடைய இரண்டுவிதமானதென்று முண்டகோபநிஷத்தில் சொல்லப்பட்டது. ஆத்மவித்யையே பராவித்யையென்றும், பாக்கியுள்ள வேத, வேதாங்கங்கள் முதலிய எல்லாம் அபரா வித்யை என்பதாகவும் லிங்கபுராணத்தில்,

'த்வே ப்ரம்ஹணீ வேதிதவ்யே பரா சைவாபரா ததா |
அபரா தத்ர ருக்வேதோ யஜுர்வேதோ த்விஜோத்தமா: ||
ஸாமவேதஸ்ததாதர்வவேத: ஸர்வார்த்த ஸாதக: ||
சிக்ஷா கல்போ வ்யாகரணம் நிருக்தம் ச்சந்த ஏவ ச ||
ஜ்யோதிஷம் சாபரா வித்யா பரா அக்ஷரமிதி ஸ்த்திதம் |
தத் அத்ருச்யம் தத் அக்ராஹ்யம் அகோத்ரம் தத் அவர்ணகம் ||
... ... ... ... ... ...
அஸம்வ்ருதம் தத் ஆத்மைவ் பராவித்யா நசான்யதா ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

6. பரம், அபரம் என்று ப்ரணவம் இரண்டு விதமான தென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'பராபரவிபாகேன ப்ரணவோ த்விவிதோ மத: |
பர: பரதரம் ப்ரம்ஹ ப்ரக்ஞானந்தாதி லக்ஷணம் ||
ப்ரகர்ஷேண நவம் யஸ்மாத் பரம் ப்ரம்ஹ ஸ்வபாவத: |
அபர: ப்ரணவ: ஸாக்ஷாத் சப்தரூப: ஸுநிர்மல: ||
ப்ரகர்ஷேண நவத்வஸ்ய ஹேதுத்வாத் ப்ரணவ: ஸ்ம்ருத: |
பரமப்ரணவ ப்ராப்தி ஹேதுத்வாத் ப்ரணவோऽதவா ||'

(ஸ்காந்தம், யக்ஞவைபவகண்டம்)

7. வேதார்த்தமானது பரம், அபரமென்று இரண்டுவித மென்றும், பரமென்பது பராத்பரமான பரம்பொருளென்றும், அபரமென்பது அவ்விதமான பரத்தை அடைவதற்கு ஸாதன மான தர்மமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'பராபரவிபாகேன வேதார்த்தோ த்விவித: ஸ்ம்ருத: |
வேதார்த்தஸ்து பர: ஸாக்ஷாத் பராத்பர தரம் பரம் |
அபரோ தர்ம ஸம்ஞ: ஸ்யாத் தத் பரப்ராப்தி ஸாதனம் ||'

(ஸ்காந்தம். யக்ஞவைபவகண்டம்)

8. யோக சாஸ்த்ரத்தில் பரம், அபரம், பராபரம் என்பதான மூன்றுவிதமான ஞானமிருப்பதாகச் சொல்லப்பட்டது. அவற்றில் பரமென்பது பசு, பாச, ஆத்ம தர்சனத்தைக் கொடுப்பதென்றும், அபரமென்பது கேவலம் பாசதர்சனத்தை மட்டும் கொடுப்பதென்றும், பராபரமென்பது (மனிதன், பூனை இவைகளுக்கு ராத்ரிவேளையில் த்ருஷ்டிபேதம் ஏற்படுவது மாதிரியான) விலக்ஷணமான ஞானமென்றும், சொல்லப்பட்டிருக்கிறது.

'ஞானம் தத் த்ரிவிதம் ஞேயம் பராபர விபேதத: |
தத்ராத்யம் பரமம் ஞானம் பசுபாசாத்ம தர்சனம் ||
த்விதீயம் பரமம் ஞானம் கேவலம் பாச தர்சனம் |
யதா த்ருஷ்ட்யந்தரம் ராத்ரௌ நரமார்ஜார நேத்ரயோ: |
ததா விலக்ஷணம் ஞானம் பராபரமுதீரிதம் ||'

அம்பாளுடைய பூஜையானது பர, அபர, பராபரமென்ற மூன்றுவகைப்படும். பரமென்பது எவ்விதம் செய்தபோதிலும் அத்வைத பாவத்தோடு (ஸாஹம் பாவனே) பூஜிப்பது. அபர மென்பது ஸ்ரீசக்ரபூஜை. அம்பாளுடைய நாநாவிதமான மூர்த்திகளைப் பூஜிப்பது பராபரம்.

'தவ நித்யோதிதா பூஜா த்ரிபிர் பேதைர் வ்யவஸ்த்திதா |
பரா சாப்யபரா கௌரீ த்ருதீயா ச பராபரா ||
ப்ரதமாத்வைதபாவஸ்த்தா ஸர்வப்ரசரகோசரா |
த்விதீயா சக்ரபூஜா ச ஸதா நிஷ்பாத்யதே மயா |
ஏவம் ஞானமயீ தேவீ த்ருதீயா ஸ்வப்ரதாமயீ ||'

(நித்யாஹ்நிகம்)

10. வாக்கானது பரா, அபரா என்ற இருவகையென்றும், அவற்றில் அபரா என்பது பச்யந்தீ, மத்யமா, வைகரீ என்ற மூன்றையும் குறிக்குமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

11. அவஸ்த்தையானது பரா, அபரா என்ற இருவகை யென்றும், அவற்றில் பரா என்பது துர்யாவஸ்தையையும், அபரா என்பது ஜாக்ராதி மூன்று அவஸ்த்தைகளையும், குறிக்கு மென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

12. ஹோமமானது பரம், அபரம் என்ற இருவகை யென்றும், அவற்றில் அபரமென்பது ஸ்தூல, ஸூக்ஷ்ம பேதமாக இருவகையென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்தூலஹோமம் ஸாதாரணமாகத் தெரிந்தது. ஸூக்ஷ்மமென்பது மூலாதாராக்னி யினால் செய்யப்படுவது, ப்ராணாக்னிஹோத்ரத்திற்கு ஸமான மான தர்மத்தையுடையது. பரமென்பது ஞான, ஞாத்ரு, ஞேயங்களையொட்டிய ஸகலவிதமான பேதபாவங்களையும் ஸ்வாத்மரூபமான மஹாக்னியில் ஹோமம் செய்வது.

'வாச்யார்த்தானாம் அசேஷேண வேத்யவேத்ருவிசாத்மனாம் |
ஸ்திதி: பரோ பவேத்ஹோம: ஸர்வபேத விலாபனாத் ||
ஸ்வாத்மரூப மஹாவன்ஹி ஜ்வாலாரூபேஷு ஸர்வதா |
நிருத்தேந்தன ரூபேஷு பரமார்த்தாத்மனி ஸ்த்திரே |
நிர்வ்யுத்தான விலாபஸ்து பரஹோம: ஸமீரித: ||'

(ஸ்வதந்த்ரதந்த்ரம்)

'அந்தர் நிரந்தர நிரிந்தனமேதமானே
மோஹாந்தகார பரிபந்தினி ஸம்விதக்னௌ
கஸ்மிம்ச்சித் அத்புத மரீசி விகாஸபூமௌ
விச்வம் ஜுஹோமி வஸுதாதி சிவாவஸானம் ||'

(சிந்தாமணிஸ்தவம்)

ஸம்விதக்னௌ மஹாஸாரே விமர்சைக சரீரிணி |
பேதபாஸமிதம் ஹவ்யம் ஜுஹோம்யபுனருத்பவம் ||

13. மந்த்ர பார்ராயணத்திலடங்கிய பராபரா என்ற பெயருடைய மந்த்ர விசேஷத்தின் ரூபமாக இருப்பவளென்றும் சொல்லலாம்.

14. ஸ்ருஷ்டி சக்தியை பரா என்றும், வைஷ்ணவீ சக்தியை அபரா என்றும் ரௌத்ரீ சக்தியை பராபரா என்றும் இம்மாதிரி த்ரிமூர்த்திகளையனுஸரித்து மூன்றுவிதமாக அம்பாளிருப்பதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

'தத்ர ஸ்ருஷ்டி: பராப்ரோக்தா ச்வேதவர்ண ஸ்வரூபிணீ |
யா வைஷ்ணவீ விசாலாக்ஷீ ரக்தவர்ண ஸ்வரூபிணீ ||
அபரா ஸா ஸமாக்யாதா ரௌத்ரீ சைவ பராபரா |
ஏதாஸ் திஸ்ரோऽபி வித்யந்தி யோ ருத்ரம் வேத்தி தத்வத: ||'

(வாராஹபுராணம்)

## सत्यज्ञानानन्दरूपा

## ஸத்யஜ்ஞானந்தரூபா (791)

ஸத்ய, ஞான, ஆனந்தமயமான ரூபத்தையுடையவள்.

1. அதாவது, ஸத், சித் ஆனந்த ரூபிணீ என்று அர்த்தம்.

'ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரம்ஹ |' (ச்ருதி)
'நித்யம் விக்ஞானம் ஆனந்தம் ப்ரம்ஹ |' (ச்ருதி)

2. அல்லது, ஸத்வித்யைப்பற்றி அக்ஞர்களாயிருப்பவர்களுக்கு (தெரியாதவர்களுக்கு) அனானந்தத்தை (அதாவது துக்கத்தை) கொடுப்பவள் என்றும் சொல்லலாம். இப்படி ஸத்வித்யோபாஸனையில்லாமல் அவித்யோபாஸனையோடிருப்பவர்கள், ஆனந்தமேயில்லாதவையும் ஒரே இருட்டாக இருப்பவையுமான லோகங்களை அடைவார்களென்பதாக ப்ருஹதாரண்யக, ஈசாவாஸ்ய உபநிஷத்துக்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

'அந்தம் தம: ப்ரவிசந்தி யேऽவித்யாமுபாஸதே |'

3. அல்லது,

'அனந்தா நாம தே லோகா அந்தேன தமஸா வ்ருதா: |
தாம்ஸ்தே ப்ரேத்யாபிகச்சந்தி அவித்வாம்ஸோऽபுதா ஜனா: ||'

என்ற வாக்யத்தின்படி ஸத்வித்யாரூபிணியான அம்பாளைப்பற்றி அக்ஞானத்தோடிருப்பவர்களுக்கு அனந்தங்களான (ஆனந்தமில்லாத) லோகங்களைக் கொடுக்கிறாளென்றும் சொல்லலாம்.

## सामरस्यपरायणा

## ஸாமரஸ்யபராயணு (792)

ஸாமரஸ்யத்தையே உத்க்ருஷ்டமான ஸ்த்தானமாயுடையவள்.

1. கூடுதல், குறைவுகளில்லாமல் ஸமமான ரஸத்தோடிருக்கும் பாவமானது ஸாமரஸ்யமெனப்படும். இவ்விதமான ஸாமரஸ்யத்தோடு சிவ சக்திகளிருப்பதால் அதையே அம்பாளுடைய உத்க்ருஷ்டமான ஸ்த்தானமாகச் சொல்லப்பட்டது.

'பக: சக்திர் பகவான் காம ஈச:
உபா தாதாராவிஹ ஸௌபகானும் |
ஸமப்ரதானௌ ஸமஸத்வௌ ஸமோதயோ :
ஸமசக்திரஜரா விச்வயோனி: || (த்ரிபுராமஹோபநிஷத்)

'பரஸ்பர தப: ஸம்பத் பலாயித பரஸ்பரௌ |
ப்ரபஞ்ச மாதாபிதரௌ ப்ராஞ்சௌ ஜாயாபதீ தும: || '
'போக்த்ரு போக்ய கரணோர்மிஸம்க்ஷயே
ஸாமரஸ்ய ரஸ தோஹினீ சிவா | '

2. அமரர்களோடுகூடிய (ஸாமரஸ்ய) லோகத்திற்கு (தேவலோகத்திற்கு) பராயணமாக (ஆச்ரயமாக) இருப்பவள் என்றும் சொல்லலாம்.

3. (பாடப்படும்) ஸாமகானங்களில் ப்ரியமுள்ளவள் என்றும் சொல்லலாம்,

'பராயணமபீஷ்டம் ஸ்யாத் தத்பராச்ரயயோரபி | ' (விச்வ:)

## कपर्दिनी

## கபர்திநீ (793)

(கபர்தீ என்று பெயருடைய) சிவனுடைய பத்னீ.

1. பரமசிவனுடைய ஜடாஜூடத்திற்கு கபர்தமென்று பெயர்.

'கபர்த: கண்டபரசோ: ஜடாஜூடே வராடகே | ' (விச்வ:)

2. கபர்தமென்பதைப்பற்றி,

'பூமி நிந்தா ப்ரசம்ஸாஸு நித்யயோகேதிசாயனே: | '

என்று ஸூதஸம்ஹிதை வ்யாக்யானத்தில் சொல்லியிருப்பதை அனுசரித்து, விசேஷமாகப் புகழப்பட்டவள் என்றும் சொல்லலாம்.

3. க என்றால் ஜலம். அதினுடைய (பூரம்) ப்ரவாஹத்தை பரிசுத்தம் செய்வது கபர்தம். பரமசிவனுடைய ஜடையானது அதில் விழுந்த கங்காஜலத்தையும் பரிசுத்தம் பண்ணும்படியான மஹிமையுடையதால் கபர்தமென்று பெயர் ஏற்பட்டது.

4. கபர்தமென்றால் வராடகத்திற்கு (வராட்டிக்கு) பெயர். பரமசிவன் மைராலாவதாரம் எடுத்தபோது அம்பாள் மஹாலஸா என்ற ரூபத்தோடு அனுஸரித்ததாகவும் அந்த ரூபத்தில் வராட்டிகளாலான மாலையை தரித்திருந்ததாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

5. பரமசிவனுடைய அறுபத்தெட்டு க்ஷேத்ரங்களில் ஒன்றான சகலண்டமென்ற க்ஷேத்திரத்திலிருக்கும் மூர்த்திக்கு கபர்தீ என்று பெயர் என்பதாக தேவீ புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## कलामाला
## கலாமாலா (794)

(அறுபத்திநாலு) கலைகளின் பரம்பரா ரூபமாக இருப்பவள்.

1. அல்லது, கலைகளையே மாலையாக தரித்திருப்பவள் என்றும் சொல்லலாம்.

2. அல்லது, கலையையும் (லாவண்யத்தையும்) சோபையையும் உடையவள் என்று சொல்லலாம்.

## कामधुक्
## காமதுக் (795)

காமங்களேல்லாவற்றையும் கோடுப்பவள்.

1. அதாவது, பக்தர்களுடைய மனோரதங்கள் யாவற்றையும் பூர்த்திசெய்பவள் என்று தாத்பர்யம்.

2. வேண்டிய அளவு கறந்து கொடுக்குமாதலால் (வேண்டியவற்றையெல்லாம் கொடுக்குமாகையால்) காமதுக் என்று பெயர். இந்த குணம் தெய்வலோகத்துப் பசுவாகிய காமதேனுவுக்கு விசேஷமாக உண்டென்று சொல்லப்படும். அந்த ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

'ஸா நோ மந்த்ரேஷமூர்ஜம் துஹானா தேனுர் வாகஸ்மான் உப [ஸுஷ்டுதைது (ச்ருதி)

## कामरूपिणी
## காமரூபிணீ (796)

காமேச்வரருடைய ரூபத்தோடிருப்பவள்.

1. காமேச்வரர், லலிதாம்பிகை இருவரும் ஒரேவிதமான நிறம், அழகு, வயது, அலங்காரம், ஆயுதங்கள் முதலியவைகளை யுடையவர்களென்று சொல்லப்பட்டிருக்கிறது.

2. 'ஸோऽகாமயத பஹுஸ்யாம் ப்ரஜாயேய' என்ற ச்ருதி வாக்யத்தில் சொன்னபடி ஜகத்தை ஸ்ருஷ்டிபண்ணும் ஆசை யுடன் கூடியிருக்கும்போது ஈச்வரனுக்கு காமேச்வரர் என்று பெயர். இவரைப்பற்றி,

'ய ஏவாயம் காமமய: புருஷ: ஸ ஏவ தைவசாகல்யஸ்தஸ்ய
கா தேவதேதி ஸ்த்ரிய இதி ஹோவாச |'

என்று ச்ருதியில் சொல்லப்பபட்டிருக்கிறது.

3. அல்லது, இஷ்டப்பட்ட ரூபங்களையுடையவள் என்றும் சொல்லலாம்.

## कलानिधिः
## கலாநிதி: (797)

கலைகளுக்கு பொக்கிஷம்போல் இருப்பிடமானவள்.

1. கலைகள் நானுவிதமானவையென்பதாக முன் வந்த நாமங்களில் சொல்லப்பட்டது.

2. 'ஆத்மைவாஸ்ய ஷோடசீ கலா' என்ற ப்ருஹதாரண்யக வசனப்படி கலைகளென்றால் ஆத்மாக்களை (ஜீவன்களை)யும் குறிக்கும்.

3. (சந்த்ர) கலைகளுக்கெல்லாம் இருப்பிடமாகிய சந்த்ர மண்டலத்தின் ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

4. 'யோனிவர்க: கலா சரீரம்' என்ற சிவ ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் கலா என்பது கர்மாவைக்குறிக்குமென்று சொல்லப் பட்டிருக்கிறது. இந்த அர்த்தத்தில் ஸகல கர்மாக்களும் சேர்த்து வைக்கும்படியான (அடங்கும்படியான) இடமாக இருப்பவள் என்று சொல்லலாம்.

'ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஞானே பரிஸமாப்யதே |' (கீதை)

## काव्यकला

**காவ்யகலா** (798)

காவ்யங்களை இயற்றும் கலா ரூபமாக இருப்பவள்.

1. கவிகளால் இயற்றப்படுவது காவ்யம். அது நாடக, சாடக, பாண, டிம, ப்ரகஸனம் முதலான அனேக பேதங்களை யுடையது என்று அக்னிபுராணம் முதலியவைகளில் சொல்லப் பட்டிருக்கிறது. இவைகளை இயற்றுவதான கலையானது சப்த ப்ரம்ஹமயியான அம்பாளுடைய ரூபமென்பதாக இந்த நாமத் தில் சொல்லப்பட்டது.

காவ்யாலபாச்ச யே கேசித் கீதகான்யகிலானி ச |
சப்தமூர்த்திதரஸ்யைதத் வபுர் விஷ்ணோர் மஹாத்மன: || '

(விஷ்ணுபுராணம்)

2. காவ்யங்களை இயற்றும் ப்ரதிபையை (புத்தி, யோசனை யையே) காவ்யகலா என்று சொல்லப்படும். அம்பாளுடைய த்யான விசேஷத்தினால் காவ்யங்களை இயற்றும் சக்தியானது கிடைக்கப்பெறும் என்பதை தந்த்ரங்களில் பல இடங்களில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

'ஸ கர்த்தா காவ்யானாம் பவதி மஹதாம் பங்கிருசிபி:
வசோபிர் வாக்தேவீ வதனகமலாமோத மதுரை: | '

(ஸௌந்தர்யலஹரீ)

3. கவி என்று அஸுர குருவான சுக்ரனுக்குப் பெயர். அவருடைய கலை என்றால் (இறந்தவரைப் பிழைப்புமூட்டும்) ம்ருதஸஞ்ஜீவினீ என்பது. அந்த ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

## रसज्ञा

**ரஸக்ஞா** (799)

(ச்ருங்காரம் முதலிய பத்துவிதமான) ரஸங்களை அறிந்தவள்.

அல்லது, ரஸனேந்த்ரிய ஸ்வரூபமாயிருப்பவள் என்று சொல்லலாம்.

## रसशेवधिः

**ரஸசேவதி:** (800)

ப்ரம்ஹாம்ருதத்தின் நிதிபோன்றவள்.

1. ரஸம் என்பதே ப்ரம்ஹத்தையும் குறிக்கும்.

'ரஸோ வை ஸ: | ரஸம் ஹ்யேவாயம்லப்த்வா ஆனந்தீ பவதி | '

(ச்ருதி)

2. ரஸம் என்பது தேஹகாந்தியைக் கொடுக்குமென்றும், அதுவே ரேதஸ் என்றும் பலவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'ரஸ ஏவ பரம் ப்ரம்ஹ ரஸ ஏவ பராகதி: |
ரஸோ ஹி காந்தித: பும்ஸாம் ரஸோ ரேத இதி ஸ்ம்ருத: | '
'ரஸோ வை ரஸ ஸம்லப்த்யா ஹ்யானந்தீ பவதீத்யபி |
வேதப்ராமாண்ய ஸம்வித்யா ரஸ: ப்ராணதயா ஸ்த்தித: ||
கோ ஹ்யேவான்யாச்ச க: ப்ராண்யாத் இத்யபி ச்ருதிபாஷித: |
ப்ராணாத்மகோ ரஸ: ப்ரோக்த: ப்ராணத: கும்பஸம்பவ || '

(ப்ரம்ஹாண்டபுராணம்)

3. ப்ரயோகத்தில் இதின் முந்திய 797-வது நாமத்தையும் இந்த நாமத்தையும் கலாநிதயே நம: என்றும், ரஸசேவதயே நம: என்றும் சொல்லவேண்டும்.

## पुष्टा

## புஷ்டா (801)

புஷ்டியோடு கூடியவள்.

1. அதாவது, 'முப்பத்தாறு தத்வங்களையுமே தன்சரீரமாக உடையவளாகையால், புஷ்டா என்று சொல்லப்பட்டது.

2. அல்லது அனேக குணங்களால், அல்லது ப்ரம்ஹானந்தத்தினால், அல்லது, ப்ராம்ஹணர்களால் போஷிக்கப்பட்டவள் என்றும் சொல்லலாம்.

'ப்ராம்ஹணை: போஷிதம் ப்ரம்ஹ | ' (ஸ்ம்ருதி)
'ப்ரம்ஹாயுஷ்மதத் ப்ராம்ஹணைராயுஷ்மத் | ' (ச்ருதி)

## पुरातना

## புராதனா (802)

எல்லோருக்கும் முந்தியிருப்பவள்.

அல்லது, புராதனமான குணங்கள் இருக்கப்பெற்றவள் என்றும் சொல்லலாம்.

पूज्या

**பூஜ்யா** (803)

எல்லோராலும் பூஜிக்கத்தகுந்தவள்.

அல்லது, எல்லோராலும் எதிர்பார்க்கப்படுகிறவள் என்றும் சொல்லலாம்.

पुष्करा

**புஷ்கரா** (804)

எல்லோருக்கும் புஷ்டியைக்கொடுப்பவள்.

1. அல்லது, புஷ்கரம் என்ற பெயருடைய தீர்த்த ரூபமாயிருப்பவள் என்றும் சொல்லலாம்.

2. ர, ல என்ற அக்ஷரங்கள் அபேதமாகையால் இந்த நாமத்தை 'புஷ்கலா' என்றும் சொல்லலாம். அப்போது எங்கும் வ்யாபித்திருப்பவள் என்று அர்த்தம்.

पुष्करेक्षणा

**புஷ்கரேக்ஷணா** (805)

தாமரஸ புஷ்பங்களைப்போன்ற நேத்ரங்களையுடையவள்.

1. புஷ்கரமென்ற பதமானது,

'புஷ்கரம் பங்கஜே வ்யோம்னி பய: கரிகராக்ரயோ: |
ஓஷதீ த்வீப விஹகதீர்த்த ராகோரகாந்தரே |
புஷ்கரம் தூர்ய வக்த்ரே ச காண்டே கட்கபலேபி ச ||'

என்ற விச்வகோசவசனப்படி தாமரஸ புஷ்பம், ஆகாசம், ஜலம் முதலிய அனேக அர்த்தங்களுடையது.

2. ஜ்யோதிஷ சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட யோகங்களில் புஷ்கரம் என்று பெயருடையது ஒன்று உண்டு.

'விசாகாஸ்த்சோ யதா பானு: க்ருத்திகாஸு ச சந்த்ரமா: |
ஸம்யோக: புஷ்கரோ நாம புஷ்கரேஷ்வதி துர்லப: ||' (பாத்மம்)

3. புஷ்கரமென்பது பூமியையும் குறிக்கும்.

'யா பத்மகர்ணிகா தேவா: தாம் ப்ருத்வீம் பரிசக்ஷதே |
யே பத்மே ஸாரகுரவ: தான் திவ்யான் பர்வதானிஹ ||
யானி பர்ணானி பத்மஸ்ய ம்லேச்சதேசாஸ்து தே஽பவன் |

யான்யதோபாக பத்ராணி தே ஸர்ப்பாணும் ஸாரத்விஷாம் ||
ஏவம் நாராயணஸ்யார்த்தே மஹீ புஷ்கரஸம்பவா |
ப்ராதுர்பாவோச்ச்ரயஸ் தஸ்மாத் நாம்னு புஷ்கர ஸஞ்ஜிதா ||'

(பாத்மம்)

4. க்ஷணக என்றால் நிர்வ்யாபாரமாக (ஒரு கார்யமும் செய்யாமல்) இருப்பது, காலவிசேஷம், உத்ஸவம் என்பதான அர்த்தங்களுண்டு.

'நிர்வ்யாபார ஸ்த்திதௌ காலவிசேஷோத்ஸவயோ: க்ஷண: |'

(அமரம்)

ஆகவே, மேலே சொல்லப்பட்ட பூமி முதலியவைகளில் நிர்வ்யாபார ஸ்த்திதியோடிருப்பவள் புஷ்கரேக்ஷணு.

5. புஷ்கரமென்பது ந்யக்ரோத வ்ருக்ஷ (ஆலமர)த்தையும் குறிக்கும். அந்த மரங்களிருப்பதினுல் புஷ்கரத்விபத்திற்கு அம்மாதிரிப் பெயர் ஏற்பட்டதாக பத்மபுராணத்தில் சொல்லப் பட்டது.

'ந்யக்ரோத: புஷ்கரத்வீபே புஷ்கரஸ்தேன ஸ: ஸ்ம்ருத: |'
அந்த மரத்தில் ப்ரம்ஹா இருப்பதாகவும் சொல்லப்பட்டிருக் கிறது.

'ந்யக்ரோத: புஷ்கரத்வீபே ப்ரம்ஹண: ஸ்த்தானமுத்தமம் |'

(விஷ்ணு புராணம்)

ஸ ப்ரஜாபதிரேக: புஷ்கரபர்ணே ஸமபவத் |' (ச்ருதி)

6. விஷ்ணுவானவர் ந்யக்ரோதபர்ணத்தில் (ஆலிலையில்) சயனித்திருப்பதாகக் சொல்வது வழக்கமாதலால், புஷ்கர பதத் தினுல் அவரே குறிக்கப்பட்டதாகவும் சொல்லலாம். அவரிடத் தில் அம்பாள் (க்ருபையோடுகூடிய) பார்வையுடனிருப்பதால் இந்தப்பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

'வடபத்ரசயானய விஷ்ணவே பாலரூபிணே |
ச்லோகார்த்தேன ததா ப்ரோக்தம் பகவத்யாகிலார்த்ததம் ||'

(தேவீபாகவதம்)

7. மேலே சொல்லியபடி புஷ்கரமென்ற பதத்திற்கு ஜல மென்ற அர்த்தத்தில் ஜலங்களில் பார்வையோடு கூடியவள் என்றும் சொல்லலாம். ஜலங்களென்றால்,

'தானி வா ஏதானி சத்வார்யம்பாம்ஸி
தேவா மனுஷ்யா: பிதரோऽஸுரா: |'

என்று ச்ருதியில் சொல்லப்பட்டபடி தேவர்கள், மனுஷ்யர்கள், பித்ருக்கள், அஸுரர்கள் என்று அர்த்தம்.

## परंज्योतिः

பரம்ஜ்யோதி: (806)

ஸர்வோத்க்ருஷ்டமான ஜ்யோதி ஸ்வரூபமாக இருப்பவள்.

1. ப்ரம்ஹமானது ஸூர்யன் முதலானவர்களுக்கெல்லாம் ப்ரகாசத்தைக்கொடுக்கும் பரம்ஜ்யோதிஸ்வரூபமாக இருப்பதை

'தத் தேவா ஜ்யோதிஷாம் ஜ்யோதிராயுர் ஹோபாஸதேऽம்ருதம் |

'ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம்
நேமா வித்யுதோ பாந்தி குதோऽயமக்னி: |
தமேவ பாந்தமனுபாதி ஸர்வம்
தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி ||'

'யேன ஸூர்யஸ்தபதி தேஜஸேத்த: |'

'பரம் ஜ்யோதிருபஸம்பத்ய |'

என்பவை முதலான ச்ருதிவாக்யங்களில் சொல்லப்பட்டது.

2. ஜ்யோதி என்பதினால் 'மனோ ஜ்யோதிர்ஜுஷதாம்' 'வாசைவாயம் ஜ்யோதிஷாஸ்தே' என்ற வாக்யங்களில் ப்ரயோகிக்கப்பட்டபடி ப்ரகாசத்தைப்பற்றிச் சொல்லப்பட்டது. ப்ரகாசத்தோடிருக்கும் வஸ்துக்களுக்குள் அனுவ்ருதமான ஆத்ம ஜோதியே எல்லாவற்றிற்கும் மேலானதென்பதாக மேலே சொல்லிய வாக்யங்களின் தாத்பர்யம்.

3. தக்ஷிணாமூர்த்தி ஸம்ஹிதையில் ஐந்தாவது படலத்தில் சொல்லப்பட்ட பரம்ஜ்யோதியென்ற அஷ்டாக்ஷர மந்த்ரத்தின் ஸ்வரூபமாயிருப்பவள் என்றும் சொல்லலாம்.

## परंधाम

பரம்தாம (807)

ஸர்வோத்க்ருஷ்டமான தாம ஸ்வரூபமாயிருப்பவள்.

1. தாம என்ற பதத்திற்கு தேஜஸ், அவஸ்த்தை (நிலை) இருப்பிடம் (பதம்) முதலான அர்த்தங்களுண்டு.

'ந தத் பாஸயதே ஸூர்யோ ந சசாங்கோ ந பாவக: |
யத் கத்வா ந நிவர்த்தந்தே தத் தாம பரமம் மம ||' (கீதை)

'த்ரிஷு தாமஸு யத் போக்யம் போக்தா யச்ச ப்ரகீர்த்தித:
வேதைததுபயம் யஸ்து ஸ புஞ்ஜானோ ந லிப்யதே ||'
ஜாக்ரத் ஸ்வப்ன ஸுஷுப்த்யாக்யம் வேததாமத்ரயம் துய: |
ஸ ஏவாத்மா ந தத் த்ருச்யம் த்ருச்யம் தஸ்மின் ப்ரகல்ப்பிதம் ||'
த்ரிதாம ஸாக்ஷிணம் ஸத்யஞானானந்தாதி லக்ஷணம் |
த்வமஹம் ஸப்தலக்ஷ்யார்த்தம் பரம் தாம ஸமாச்ரயே ||

(ஸூதஸம்ஹிதை)

2. அம்பாள் பர (ஸர்வோத்தம)மான பதஸ்வரூபமாயிருப்பதை,

'ஸைஷா மாஹேச்வரீ கௌரீ மம சக்திர் நிரஞ்ஜனா |
சாந்தா ஸத்யா ஸதானந்தா பரம் பதமிதிச்ருதி: ||'

என்று கூர்ம புராணத்தில் சொல்லப்பட்டது.

3. ப்ரயோகத்தில் இதற்கு முந்திய நாமத்தையும், இந்த நாமத்தையும் பரஸ்மை ஜ்யோதிஷே நம:, பரஸ்மை தாம்னே நம: என்று சொல்லவேண்டும்.

## परमाणुः

## பரமாணு: (808)

மிகவும் ஸூக்ஷ்மமான அணுவாயிருப்பவள்.

1. அதாவது, 'அணோரணீயான்' என்று ச்ருதியில் சொல்லி யிருப்பதுபோல் அணுவுக்கு அணுவாய் இருப்பவள் என்று சொல்லப்பட்டது. அறிவதற்கு முடியாத ரூபத்தை யுடையவள் என்று தாத்பர்யம்.

2. தர்க்க சாஸ்த்ரத்தில்,

'ஜாலாந்த்ரஸ்த்த ஸூர்யாம்சௌ யத் ஸூக்ஷ்மம் த்ருச்யதோரஜ: |
பாகஸ்தஸ்ய ச ஷஷ்டோ ய: ப்ரமாணு: ஸ உச்யதே' ||

என்று சொல்லப்பட்ட (ஸகலபதார்த்தங்களுக்கும் மூலமான) பரமாணுரூபமாக அம்பாளிருப்பதாகவும் சொல்லலாம்.

3. பரம, ஸர்வோத்க்ருஷ்டமான, அணு:- மந்த்ர ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

## परात्परा

## பராத்பரா (809)

உத்க்ருஷ்டமாயிருப்பவற்றையும்விட ச்ரேஷ்டமாயிருப்பவள்.

1. அதாவது, உத்க்ருஷ்டமாகச் சொல்லப்படும் ப்ரம்ஹ, விஷ்ணு, ருத்ரர்களேயும்விட ச்ரேஷ்டதரமாயிருப்பவள் என்று அர்த்தம்.

2. ப்ரம்ஹாவினுடைய ஆயுளின் அளவுக்கு பரம் என்று பெயர். அதற்கு மேல்பட்டவள், அதாவது அவ்விதமான கணக்கு, அளவுக்கு உட்படாதவள் பராத்பரா. அம்பாளுடைய பரம்தாமத்வமும், பரமாணுத்வமும் தான் இதற்குக்காரணம். ப்ரம்ஹாவினுடைய ஆயுளில் ஒரு பகல், ஒரு ராத்ரி சேர்ந்தது பரமென்றும், அவ்விதமான பகலேயும் ராத்ரியையும் தனித் தனியாகச் சொல்லும்போது பரார்த்தமென்றும் சொல்லப்படும்.

'தஸ்ய ப்ரம்ஹஸ்வரூபஸ்ய திவாராத்ரம் ச யத்பவேத் |
தத்பரம் நாம தஸ்யார்த்தம் பாரார்த்தமபிதீயதே ||
ஸ ஈச்வரஸ்ய திவஸ: தாவதீ ராத்ரிருச்யதே |
ஸ்த்தூலாத் ஸ்த்தூலதம: ஸூக்ஷ்மாத்யஸ்து ஸூக்ஷ்மதமோ மத: |
ந தஸ்யாஸ்தி திவாராத்ரி வ்யவஹாரோ ந வத்ஸர: ||'

(காளிபுராணம்)

## पाशहस्ता

### பாசஹஸ்தா (310)

பாசத்தைக் கையிலுடையவள்.

1. அம்பாள் ராகஸ்வரூபமான பாசத்தை தன் இடது கைகளிரண்டில் கீழாக இருக்கும் கையில் தரித்திருக்கிருள் என்று ஏற்கனவேயே சொல்லப்பட்டது.

2. அல்லது, பாசங்களே தன் கைகளால் விலக்குகிறவள் என்றும் சொல்லலாம்.

## पाशहन्त्री

### பாசஹந்த்ரீ (311)

பாசங்களே நாசம் செய்பவள்.

1. அதாவது, அவித்யை, அல்லது ஆசை முதலான பாசங்களேப் போக்கடிப்பவள் என்று அர்த்தம்.

2. அனிருத்தன் பாணாஸுரனுல் போடப்பட்ட நாக பாசத்திலிருந்து கிளம்பிய ஸர்ப்பங்களால் கட்டுண்டிருக்கும்

போது அம்பாளுடைய அனுக்ரஹத்தினுல் அவற்றிலிருந்து அவன் விடுவிக்கப்பட்டதை ஹரிவம்சம், விஷ்ணுபாகவதம் முதலியவைகளில் சொல்லப்பட்டிருக்கிறது.

'நாகபாசேன பத்தஸ்ய தஸ்யோபஹத சேதஸ: |
க்ரோடயித்வா சரைர் நாகபஞ்ஜரம் வஜ்ர ஸன்னிபம் ||
பத்தம் பாணபுரே வீரம் அனிருத்தம் அபாவ்ருத |
ஸாந்த்வயந்தீ ச ஸா தேவீ ப்ரஸாதாபிமுகீ தா ||'

## परमन्त्रविभेदिनी

## பரம மந்த்ர விபேதினீ (812)

எதிரிகளுடைய மந்த்ரங்களை விசேஷமாய் பேதனம் செய்பவள்.

1. அதாவது, தன்னுடைய உபாஸகர்களுக்கு விரோதிகளான ராஜர்களால் தங்களுடைய ப்ரபுசக்தி, மந்த்ரசக்தி, உத்ஸாஹ சக்தி இம்மூன்றின் மூலமாய் ஏவப்படும் சக்தி விசேஷணங்களை த்வம்ஸம் செய்பவள் என்று அர்த்தம்.

2. அல்லது, பிறரால் அபிசாரம் முதலானவற்றைக் குறித்துப் ப்ரயோகம் செய்யப்படும் மந்த்ரங்களை, அல்லது சத்ருக்களால் ப்ரயோகிக்கப்பட்ட அஸ்த்ரமந்த்ரங்களை நாசம் செய்கிறவள் என்றும் சொல்லலாம். இதை ஹரிவம்சத்தில் ப்ரத்யும்னனுக்கு இந்த்ரனுல்,

'ததஸ்தா ப்ரதிக: தாய தேவீம் ஸ்மர்த்துமிஹார்ஹஸி |'
என்று சொல்லப்பட்டது.

3. அல்லது பர (ஸர்வோத்க்ருஷ்டமான) மந்த்ரமாகிய பஞ்சதசியை மனு முதலான தன்னுடைய உபாஸகர்களுக்கு பலவிதமாக விபேதனம் செய்பவள் என்றும் சொல்லலாம்.

4. அவி என்ற பதமானது பாபத்தைக் குறிக்குமென்றும், அவ்விதம் பாபங்களைப் போக்குவதினுல் அவிமுக்த க்ஷேத்ரத்திற்குப் பெயர் ஏற்பட்டதென்றும் லிங்கபுராணத்தில் சொல்லப்பட்டது.

'அவி சப்தேன பாபானி கத்யந்தே ச்ருதிஷு த்விஜை: |
தைர் முக்தம் ந மயா த்யக்தம் அவிமுக்தம் அத: ஸ்ம்ருதம் ||'

இந்த அர்த்தத்தில் பர மந்த்ரிகளுடைய (ஸர்வோத்ருஷ்டர்களான அம்பாளுடைய உபாஸகர்களுடைய) பாபங்களை நாசம் செய்பவள் என்றும் சொல்லலாம்.

## मूर्ता

மூர்த்தா (813)

ரூபத்தோடிருப்பவள்.

## अमूर्ता

அமூர்த்தா (814)

ரூபமே இல்லாதவள்.

1. ரூபத்தோடிருப்பவை மூர்த்தங்கள். வாயு, ஆகாசம் முதலானவை அமூர்த்தங்கள்.

2. அல்லது, பஞ்சீக்ருதமான (ஆகாசம் முதலான ஐந்து) மஹா பூதங்களை மூர்த்தங்களென்றும், அபஞ்சீக்ருதமான மஹா பூத ஸூக்ஷ்மங்களை அமூர்த்தங்களென்றும் சொல்லப்படும். [பஞ்ச மஹாபூதங்களின் தாமஸாம்ச ஸ்வரூபம் ஒவ்வொன்றையும் இரண்டாகப் பிரித்து ஒரு பாதியை தனியாக இருத்தி மற்றொரு பாதியை நந்நான்காகப் பிரித்து திரும்பவும் நாலையும் ஏற்கனவே தனியாக வைக்கப்பட்ட பாதியோடு சேர்த்தால் பஞ்சீகரணம் ஆகிறது. இவ்விதம் பஞ்சீக்ருதமான மஹா பூதங்களிலிருந்து ஸ்தூலசரீரம் உண்டாகிறது. பஞ்சீகரணத்தைப்பற்றி வேதாந்த சாஸ்த்ரங்களில் விசேஷமாகச் சொல்லப் பட்டிருக்கிறது.]

3. 'த்வா வாவ ப்ரம்ஹணோ ரூபே மூர்த்தம் சாமூர்த்தம் ச' என்ற ச்ருதிவாக்யத்திற்கு மேலே சொல்லிய இரண்டுவிதமாகவும் வ்யாக்யானம் சொல்லப்பட்டிருக்கிறது.

4. அல்லது, ப்ரபஞ்சத்தை மூர்த்தமென்றும் சொல்லப் படும்.

'த்வே ரூபே ப்ரம்ஹணஸ்தஸ்ய மூர்த்தம் சாமூர்த்தமேவ ச |
க்ஷராக்ஷரஸ்வரூபே தே ஸர்வபூதேஷ்வ வஸ்த்திதே |
அக்ஷரம் ப்ரம்ஹ கூடஸ்த்தம் க்ஷரம் ஸர்வமிதம் ஜகத் ||'

(விஷ்ணுபுராணம்)

## अनित्यतृप्ता

### அநித்யத்ருப்தா (815)

அநித்யங்களான உபசாரங்களாலேயே த்ருப்தியடைபவள்.

1. அதாவது, அவ்வித உபசாரங்கள் அநித்யமாயிருந்தாலும், பக்தியோடு செய்யப்பட்டால் ப்ரீதியடைகிறவளென்று தாத்பர்யம்.

2. அனிதி என்றால் ச்வாஸம் விடுவது என்று அர்த்தமாகையால் ஜீவனைக் குறிக்கும். ஜீவன்களால் அத்ருப்தா (த்ருப்தியடையாதவள்) அனித்யத்ருப்தா. ப்ரம்ஹமானது 'யஸ்ய ப்ரம்ஹ ச க்ஷத்ரம் சோபே பவத ஓதன:' என்ற ச்ருதி வாக்யத்தில் சொல்லப்பட்டபடி ஸர்வபக்ஷகமானதால் ஜீவன்களால் மட்டும் த்ருப்தியடைவதில்லையென்று இங்கு சொல்லப்பட்டது.

3. அல்லது 'எந்த விதத்திலும் த்ருப்தியடைவதில்லை என்பது இல்லை,' அதாவது, எவ்விதமாக உபசரிக்கப்பட்டாலும் த்ருப்தியடைகிறவள் என்றும் சொல்லலாம், அம்பாளுக்கு த்ருப்தியை விளைவிக்காதது இன்னது என்று சொல்லக்கூடியதாக யாதொன்றுமில்லை. யத்கிஞ்சித்தைக் கொடுத்தாலும் பக்தியோடு மட்டும் அது கொடுக்கப்பட்டால் அம்பாளுக்குத் திருப்தியுண்டாகுமென்று தாத்பர்யம்.

'பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி |
ததஹம் பக்த்யுபஹ்ருதம் அச்னாமி ப்ரயதாத் மன: | ' (கீதை)

## मुनिमानसहंसिका

### முனிமானஸ ஹம்ஸிகா (816)

முனீச்வரர்களுடைய மனதாகிய (மானஸ) ஸரஸில் ஸஞ்சரிக்கும் ஹம்ஸ பக்ஷியாக இருப்பவள்.

இதேமாதிரி முன்வந்த 372-வது நாமமாகிய 'பக்தமானஸ ஹம்ஸிகா' என்பதில் சொல்லியிருக்கும் விஷயங்களைப் பார்க்கவும்.

2. மானஸமென்பதினால் பஹுமானம், மரியாதை, கௌரவம் என்பவை குறிக்கப்படும். ஹம்ஸிகா என்பது 'ஹம்ஸக:

(லெஜ்ஜையை) குறிக்கும். ஆகவே, முனீச்வரர்கள் செய்யும் பஹுமானத்தினால் லெஜ்ஜையணிந்தவள் போலிருப்பவள், அதாவது அதனால் ஸந்தோஷப்பட்டு ந்ருத்யம் செய்கிறவள் போலிருப்பவள் என்றும் சொல்லலாம்.

## सत्यव्रता

ஸத்யவ்ரதா (817)

ஸத்யமான வ்ரதத்தோடு இருப்பவள்.

1. அல்லது, ஸத்யத்தையே வ்ரதமாக உடையவள் என்றும் சொல்லலாம். [ஏற்கனவே வந்த 'ஸத்யஸந்தா' என்ற 693-வது நாமத்தைப் பார்க்கவும்.] மேலும், ஸத்யம் பேசுவது என்பதான வ்ரதத்தினாலேயே அடையக்கூடியவள் என்றும் சொல்லலாம்.

2. ஸத்யமென்பது ப்ரம்ஹத்தைக் குறிக்கும். வ்ரதமென்பது உபசாரமாகச் சொல்லுகையில் பக்ஷ்யத்தைக் குறிக்கும். ('பயோவ்ருதம் ப்ராம்ஹணஸ்ய' என்ற ச்ருதிவாக்யத்தில் வ்ரதமென்பது பக்ஷ்யத்தைக் குறிப்பதற்கு ப்ரயோகம் செய்யப்பட்ட பதம்.) ஆகவே பக்ஷ்யம் மாதிரி ப்ரம்ஹத்தில் ப்ரியமுள்ளவள் என்றும் சொல்லலாம்.

3. ஸத்யமான—சீக்கிரம் பலனைக்கொடுக்கக்கூடிய—வ்ரதங்களையுடையவள் என்றும் சொல்லலாம். அதாவது, அம்பாளைக் குறித்து அனுஷ்டிக்கப்படும் வ்ரதங்கள் சீக்கிரம் பலனைக்கொடுப்பவை என்று தாத்பர்யம். க்ருஷ்ணனை அடைவதற்காக கோபஸ்த்ரீகள் காத்யாயனீ வ்ரதங்களை அனுஷ்டித்ததும், அதனால் அவர்களுடைய மனோரதங்கள் சீக்கிரமாகப் பூர்த்தியானதும் ஹரிவம்சத்திலும் விஷ்ணு பாகவதத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

4. ஸக்ருதேவ ப்ரபன்னாய தவாஸ்மீதி ச யாசதே |
அபயம் ஸர்வ பூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம ||'

என்ற பகவத்வசனத்தில் சொல்லப்பட்ட அமோகமான அபயப்ரதான வ்ரதத்தையுடையவள் என்றும் சொல்லலாம்.

5. 'சரீரவ்ருத்திர் வ்ரதம்' என்ற சிவஸூத்ர வசனப்படி சரீரதாரணத்தையே வ்ரதமாக அனுஷ்டிக்கவேண்டுமென்று

சொல்லப்பட்டது. சிவபக்தியாகிய அம்ருதத்தில் பூர்ணமாயிருக்கும் சரீரத்தை கவனமாக தாரணம் செய்வதே வ்ரதமென்றும், அவ்விதம் தாரணம் செய்வது துச்சமான கார்யமல்லவென்றும், மேலே சொல்லிய ஸூத்ரத்தின் வார்த்திகத்தில் சொல்லப்பட்டது.

'சிவபக்திஸுதாபூர்ணே சரீரே வ்ருத்திரஸ்ய யா |
வ்ரதமேததனுஷ்டேயம் ந துச்சம் தச்ச தாரணம் ||'

அம்பாளுடைய பக்திக்காக மேலே சொல்லப்பட்ட வ்ரதமானது ஸத்யமாக—அவச்யமாக—இருப்பதால் இந்த நாமம் ஏற்பட்டதாகவும் சொல்லலாம். இதை உத்தேசித்தே பட்டோத்பலரால் சரீரதாரணம் ப்ரார்த்திக்கப்பட்டது.

'அந்தருல்லஸிதஸ்வச்ச சக்திபீயூஷ போஷிதம் |
பவத் பூஜோபபோகாய சரீரம் இதமஸ்து மே ||'

6. ஸத்யவ்ரதன் என்ற ப்ராம்ஹணன் ஒருவன் ஒரு பன்றிக்காக பயந்து ஐ, ஐ என்று சப்தம் செய்ததாகவும், அவ்விதமான பிந்து இல்லாத வாக்பவ பீஜத்தைச் சொல்வதான தபஸ்ஸினால் மஹாகவியாகவும், தேவீபக்தனாகவும் ஆனதாகச் சொல்லப்பட்டிருப்பதால், அவ்விதமான ப்ராம்ஹணனோடு அபின்னமாயிருப்பவள் என்றும் சொல்லலாம்.

'அனக்ஷரோ மஹாமூர்க்கோ நாம்னா ஸத்யவ்ரதோ த்விஜ: |
ச்ருத்வாக்ஷரம் கோலமுகாத் ஸமுச்சார்ய ஸ்வயம் தத: ||
பிந்துஹீனம் ப்ரஸங்கேன ஜாதோऽஸௌ விபுதோத்தம: |
ஐகாரோச்சாரணாதேவ துஷ்டா பகவதீ ததா |
சகார கவிராஜம் தம் தயர்த்ரா பரமேச்வரீ ||'

(தேவீபாகவதம்)

'த்ருஷ்ட்வா ஸம்ப்ரமகாரி வஸ்து ஸஹஸா ஐ ஐ இதி வ்யாஹ்ருதம்
யேனாகூதவசாதபீஹ வரதே பிந்தும் வினாப்யக்ஷரம் |
தஸ்யாபி த்ருவமேவ தேவி தரஸா ஜாதே தவானுக்ரஹே
வாச: ஸூக்திஸுதாரஸத்ரவமுசோ நிர்யாந்தி வக்த்ரோதராத் ||'

(லகுஸ்துதி)

## सत्यरूपा

## ஸத்யரூபா (818)

காலத்ரயத்திலும் பாதிக்கப்படாத ரூபத்தைபுடையவள்.

அல்லது, ஸத்யத்தை ரூபவத்தாகச் செய்கிறவள், அதாவது, ஸத்யத்தை ஸம்ரக்ஷிப்பவள் என்றும் சொல்லலாம். ஸத், அஸத் இவையிரண்டில் ஸத் என்பதை ஸோமனுனவர் (அதாவது உமை யோடு கூடிய சிவனுனவர்) காப்பாற்றி, அஸத் என்பதை நாசம் செய்கிறுர் என்பதாக பஹ்வ்ருசத்தில் சொல்லப்பட்டது.

'ஸச்சா ச்ச வசஸீ பஸ்ப்ருதாதே | தயோர் யத்ஸத்யம் யதரத் ருஜீயஸ் ததித் ஸோமோऽவதி ஹந்த்யாஸத் |'

## सर्वान्तर्यामिणी

## ஸர்வாந்தர்யாமிணீ (819)

எல்லோருடைய அந்த:கரணங்களுக்கும் நியாமிகையாக இருப்பவள்.

1. இதேமாதிரி ச்ருதியில்,

'ஏஷத் ஆத்மா அந்தர்யாம்யம்ருத:'

என்றும்,

'ஏஷோऽந்தர்யாம்யேஷயோனி: ஸர்வஸ்ய'

என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

2 அல்லது ஸர்வா, அந்தர்யாமிணீ என்று பிரித்து, ஸர்வ ஸ்வரூபையாயும், எல்லோருக்குள்ளும் ப்ரவேசித்தும் இருப்பவள் என்றும் சொல்லலாம்.

'தத் ஸ்ருஷ்ட்வா ததேவானுப்ராவிசத் ததனுப்ரவிச்ய ஸச்ச த்யச்சாபவத் |' (ச்ருதி)

'ஸர்வஸ்ய ஸர்வதா ஞானத் ஸர்வஸ்ய ப்ரபவாப்யயௌ | ஸதோऽஸதச்ச குருதே தேன ஸர்வேதி கத்யதே ||' (ச்ருதி)

## सती

## ஸதீ (820)

மஹாபதிவ்ரதையாயிருப்பவள்.

1. அல்லது, ஸத் ரூபிணியாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

2. அம்பாளுடைய பாதிவ்ரத்யத்தின் மஹிமையானது ஸர்வோத்க்ருஷ்டமானது என்பதைப்பற்றி ஏற்கனவேயே சொல்லப்பட்டிருக்கிறது.

ब्रह्माणी

ப்ரம்ஹாணீ (821)

ப்ரம்ஹாவை ஜீவித்திருக்கச் செய்பவள்.

1. இதேமாதிரி,

'ப்ரம்ஹாணீ ப்ரம்ஹஜனனுத் ப்ரம்ஹணே ஜீவனேன

என்று தேவீபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

2. ப்ரம்ஹாணரென்றால் பிதாமஹருக்கு (ப்ரம்ஹாவுக்கு) பெயராதலால் அவருடைய ஸ்த்ரீ, பத்னீ ப்ரம்ஹாணீ, ஸரஸ்வதீ. அந்த ரூபமாக இருப்பவளென்றும் சொல்லலாம்.

3. அணீ என்றால்,

'அணிரக்ஷாக்ரகீலே ஸ்யாத் அணி: புச்சேऽக்னிஸீமயோ: |'

என்ற சாச்வதகோச வசனத்தின்படி புச்சத்தை (வாலை) குறிக்கும். ஆனந்தமயகோசத்தின் கடைசியிலிருக்கும் புச்சத்தின் ஸ்வரூபமாக ப்ரம்ஹம் இருப்பதாக 'ப்ரம்ஹ ஆணீஸ்த்த:' என்று ச்ருதியிலும் வேதாந்த ஸூத்ரங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த புச்சப்ரம்ஹரூபமாக இருப்பதாகச் சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

4. தன் சிரஸில் சூலத்தின் கூர் (அணீ, புச்சம்) இருப்பதினால் மாண்டவ்ய மஹர்ஷிக்கு அணீமாண்டவ்யர் என்ற பெயர் ஏற்பட்டது.

ब्रह्म

ப்ரம்ஹ (822)

ப்ரம்ஹ ஸ்வரூபமாயிருப்பவள்.

முக்தியின்போது கிடைப்பதும், பேதபாவம் சிறிதுமில்லாமல், ஸ்வாத்மாவோடு அபின்னமானதுமான ஞானத்திற்கு ப்ரம்ஹமென்று பெயர்.

'ப்ரத்யஸ்தமிதபேதம் யத் ஸத்தாமாத்ரமகோசரம் |
வசஸாம் ஆத்மஸம்வேத்யம் தத் ஞானம் ப்ரம்ஹ ஸம்ஜ்ஞிதம் ||'

(விஷ்ணுபுராணம்)

**जननी**

**ஜனனீ** (823)

ஸகல ப்ரபஞ்சத்தையும் உத்பாதனம் செய்பவள்.

சிலர்கள் இந்த நாமத்தையும் இதற்கு முந்தியதையும் சேர்த்து ஒரே நாமமாக 'ப்ரம்ஹஜனனீ' என்று சொல்லுவார்கள். அப்போது 819-வது நாமமாகிய 'ஸர்வாந்தர்யாமிணீ' என்பதை 'ஸர்வா', 'அந்தர்யாமிணீ' என்று இரண்டு நாமங்களாகப் பிரித்துச்சொல்லுவார்கள். அந்தர்யாமிணீ என்றாலேயே ஸர்வத்திலும் அந்தர்யாமிணீயாக இருப்பதைச் சொல்லப்படுவதால் 'அம்மாதிரிப் பிரிவுக்கு ஸமாதானம் சொல்லப்படுகிறது.

**बहुरूपा**

**பஹுரூபா** (824)

அனேகவிதமான ரூபங்களோடிருப்பவள்.

1. அதாவது, முந்திய நாமத்தில் ஸகல ப்ரபஞ்சத்திற்கும் ஜனனியாக இருப்பதாகச் சொல்லியிருப்பதை அனுஸரித்து அவ்விதமான ப்ரபஞ்சமெல்லாம் அம்பாளுடைய ரூபங்களென்பதாக இங்கு சொல்லப்பட்டது.

'பஹூனி யஸ்யா ரூபாணி ஸ்த்திராணி ச சராணி ச |
தேவமானுஷ திர்யஞ்சி பஹுரூபா தத: சிவா ||'

(தேவீ புராணம்)

2. பரஸ்வரூபத்தில் அம்பாள் அரூபமாயிருந்தாலும் க்ரியாத்மிகையாக இருக்கையில் அனேகவிதமான ரூபங்களோடிருப்பதால் இந்தப் பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

'அரூபா பரபாவத்வாத் பஹுரூபா க்ரியாத்மிகா |'

(தேவீ புராணம்)

3. இதேமாதிரி, அம்பாள் ஒருவளாயிருந்தாலும் பண்டாஸுரஸேனா ஸம்ஹாரம் செய்வது முதலான கார்யங்களுக்காக எடுக்கப்பட்ட வெவ்வேறு ரூபங்களோடிருப்பதால் அனேகரூபா (பஹுரூபா) என்று,

'பண்டாஸுர ஹனனார்த்தம் ஏகைவானேகா |'

என்பதாக கௌடபாத ஸூத்ரத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

4. ஸூதஸம்ஹிதையிலும் வர்ணரூபிணியான அம்பாளைப் பற்றி,

'ஏகதா ச த்விதா சைவ ததா ஷோடசதா ஸ்த்திதா |
த்வாத்ரிம்சத் பேதபின்னு வா யா தாம் வந்தே பராத்பராம் ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதில் த்விதா என்பதினால் ஸ்வரம், வ்யஞ்ஜனம் என்ற இருபேதங்களாக இருப்பதையும், ஷோடசதா என்பதினால் பதினாறு ஸ்வரங்களையும், த்வாத்ரிம்சத் என்பதினால் முப்பத்திரண்டு வ்யஞ்ஜனங்களையும் சொல்லப் பட்டது. பாக்கியான ள, க்ஷ, ஹ என்ற மூன்றில் ள என்பது ல என்பதோடு அபேதமாகையாலும், க்ஷ என்பது க, ஷ இவை களின் சேர்க்கையானதாலும் ஹ என்பது,

'ஹகாரார்ண: கலாரூபோ விமர்சாக்ய: ப்ரகீர்த்தித: |'

என்றபடி விமர்ச ஸ்வரூபமாய் ஸகல வர்ணங்களுக்கும் மூலமாக இருப்பதாலும், அம்மூன்றும் தனியாகக் கணக்கிடப்படவில்லை. அல்லது, முப்பத்திரண்டு என்பதினால் அதற்கடுத்தாற்போலுள்ள எண்ணிக்கையான முப்பத்திமூன்றைச் சொன்னதாக வைத்துக் கொண்டு, ஹ என்பதையும் சேர்த்து முப்பத்திமூன்று வ்யஞ் ஜனங்களையும் 'த்வாத்ரிம் சத்' என்ற பதத்தினால் சொல்லப்பட்ட தாகவும் சொல்லலாம். அல்லது, பரிபாஷா ச்லோகங்களில் சொல்லப்பட்டபடி இந்த நாம ஸாஹஸ்ரத்திய நாமங்களின் ஆரம்பாக்ஷரங்கள் முப்பத்திரண்டு ஆகையால் அதை இங்கு சொன்னதாகவும் சொல்லலாம்.

5. அம்பிகையானவள் பரமார்த்தத்தில் ஒருவளாயிருந் தாலும் நர்த்தகீ (நடிகை) மாதிரி பலவிதமான வேஷங்களை தரித்து பலவிதமான ரூபங்களோடிருப்பதை அநேக இடங்களில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

'லக்ஷ்மீ வாகாதி ரூபேண நர்த்தகீவ விபாதி யா |

(தேவீபாகவதம்)

'விச்வம் பஹுவிதம் ஜ்ஞேயம் ஸா ச ஸர்வத்ர வர்த்ததே |'
தஸ்மாத் ஸா பஹுரூபத்வாத் பஹுரூபா சிவா மதா ||'

(வாமனபுராணம்)

'தாக்ஷாயணீதி குடிலேதி குஹாரிணீதி
காத்யாயனீதி கமலேதி கமலாவதீதி |
ஏகா ஸதீ பகவதீ பரமார்த்ததோऽபி
ஸம்த்ருச்யஸே பஹுவிதா நனு நர்த்தகீவ ||'

(அம்பாஸ்தவம்)

6. அல்லது,

'அஸம்க்யாதா: ஸஹஸ்ராணி யே ருத்ரா அதி பூம்யாம்'

என்று ச்ருதியில் சொல்லப்பட்டபடி ருத்ரனானவர் கோடிக் கணக்கான ரூபங்களோடிருப்பதாலும், ருத்ரனுடைய பத்னியான அம்பாளும் அவ்விதம் கணக்கற்றதான ரூபங்களோடிருப்பதாலும் இந்தப்பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம். ஸகல சக்தி ரூபங்களும் (அம்பிகையின் பதியான) ருத்ரனே அந்த சக்திகளுக்கெல்லாம் பதியென்றும், சொல்லப்பட்டிருப்பதுடன் அவ்விதமான எண்ணிக்கையற்ற ருத்ராணிகளின் பெயர்களும் ஒவ்வொரு மஹாபுராணத்திலும், ஒவ்வொரு தந்த்ரத்திலும் சொல்லப்பட்டிருப்பதால் அம்பாளுக்கு 'பஹுரூபா' என்ற பெயர் ஏற்பட்டருப்பதின் காரணத்தைப்பற்றி அதிகம் சொல்லத்தேவையில்லை.

'யா ரௌத்ரீ தாமஸீ சக்தி: ஸா சாமுண்டா ப்ரகீர்த்திதா |
நவகோட்யஸ்து சாமுண்டாபேதபின்னா வ்யவஸ்த்திதா: ||
யா ஸா து ராஜஸீ சக்தி: பாலனீ சைவ வைஷ்ணவீ |
அஷ்டாதச ததா கோட்யஸ்தஸ்யா பேதா: ப்ரகீர்த்திதா: ||
யா ப்ரம்ஹசக்தி: ஸத்வஸ்த்தா அனந்தாஸ்தா: ப்ரகீர்த்திதா |
ஏதாஸாம் ஸர்வபேதேஷு ப்ருதக் ஏகைகசோ தரே ||
ஸர்வாஸாம் பகவான் ருத்ர: ஸர்வகத்வாத் பதிர் பவேத் |
யாவந்த்யஸ்தா மஹாசக்த்ய: தாவத் ரூபாணி சங்கர: ||
க்ருதவாம்ஸ்தாச்ச பஜதே பதிரூபேண ஸர்வதா |
யாச்சாராதயதே தாஸ்து தஸ்ய ருத்ர: ப்ரஸீததி |
ஸித்யந்தி தாஸ்ததா தேவ்யோ மந்த்ரிணோ நாத்ர ஸம்சய: ||'

(வராஹபுராணம்)

'உமைவ் பஹுரூபேண பத்னீத்வேன வ்யவஸ்த்திதா |'

(நாரஸிம்ஹ உபபுராணம்)

'லோபாமுத்ரா ச ஸௌபாக்யா மஹாவித்யா ச ஷோடசீ |
தாரா: பரசிவஸ்யைதா: கதிதாஸ்து வரானனே ||

ச்யாமளா சுத்தவித்யா ச ஹயாரூடா பரா ப்ரியா |
தாரா: ஸதாசிவஸ்யைதே ஞாதவ்யா: பரமேச்வரீ ||
மஹார்த்தா த்வாதசார்த்தா ச வாராஹீ பகளாமுகீ |
துரீயா புவனேசீ ச ஸ்ரீபரா சாம்பவீ சிவே ||
தாரா ருத்ரஸ்ய தஸ்யைவ ச்ருணு ஸத்யம் ந ஸம்சய: |
ஸ்ரீ திரஸ்கரணீ லக்ஷ்மீ: மிச்ரா காமகலா ப்ரியே ||
விஷ்ணோர் தாரா இதி க்யாதா அன்னபூர்ணா சிவஸ்ய ச |
வாக்வாதினீ ச பாலா ச பத்ன்யௌ தே ப்ரம்ஹண: சிவே ||
நவ தாத்யோ ஹஸந்தீ ச நவ ஸித்தாச்ச தேவதா: |
இமா அன்யாச்ச ரூபாணி பஹூனி தவ ஸுந்தரீ ||'

(த்ரிபுராஸித்தாந்தம்)

## बुधार्चिता

## புதார்ச்சிதா (825)

ஞானவான்களால் பூஜிக்கப்பட்டவள்.

ஈச்வரனை உபாஸிப்பவர்கள் நான்கு வகையானவர்களென்பதாக கீதையில் சொல்லப்பட்டிருக்கிறது.

'சதுர்விதா பஜந்தே மாம் ஜனா: ஸுக்ருதினோऽர்ஜுன |
ஆர்த்தோ ஜிக்ஞாஸு: அர்த்தார்த்தீ ஞானீ ச பரதர்ஷப ||'

இவர்களில் ஞானியானவன் தான் ஆத்மஸாக்ஷாத்காரத்தை அடைந்திருந்தபோதிலும், லோகத்தினுடைய க்ஷேமத்தை உத்தேசித்து உபாஸனை செய்கிறானென்பதாக சொல்லப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி பலச்ருதிபாகத்தில் சொல்லியிருப்பதைப் பார்க்கவும்.

## प्रसवित्री

## ப்ரஸவித்ரீ (826)

யாவற்றையும் படைத்தவள்.

அதாவது, வியத் முதலான ஸகல ப்ரபஞ்சத்தையும், அல்லது ஸகலப்ரஜைகளையும், பெற்றிருப்பதால் இந்தப்பெயர் ஏற்பட்டது.

'ப்ரஜானாம் ச ப்ரஸவனாத் ஸவிதேதி நிகத்யதே |'

(விஷ்ணுதர்மோத்தரம்)

'ப்ரம்ஹாத்யா: ஸ்த்தாவராந்தாச்ச யஸ்யா ஏவ ஸமுத்கதா: |
மஹதாதி விசேஷாந்தம் ஜகத் யஸ்யா: ஸமுத்கதம் |
தாமேவ ஸகலார்த்தானாம் ப்ரஸவித்ரீம் பராம் நும:

(பகவதீபுராணம்)

प्रचण्डा

ப்ரசண்டா (827)

மிகவும் அதிகமான கோபத்தோடு கூடியவள்.

1. அல்லது, அம்பிகையின் தூதர்கள் ப்ரசண்டர்களாக (மிகவும் கோபமுள்ளவர்களாக) இருப்பதால் இந்தப்பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

2. ப்ரம்ஹத்தின் கோபத்திற்குப் பயந்து வாயு, அக்னி, ஸூர்யன் முதலானவர்கள் நடந்துகொள்வதாக 'பீஷாஸ்மாத் வாத: பவதி' என்பது முதலான ச்ருதி வாக்யங்களில் சொல்லப் பட்டிருக்கிறது. அணுவளவான கோபம்கூட இல்லாதவனிடம் ப்ரஜைகள் பயப்படமாட்டார்களென்றும், அப்படி ப்ரஜைகள் எவனிடம் பயப்படவில்லையோ அவன் நீதியை ரக்ஷிக்கமாட்டாதவனென்றும்,

'ந யஸ்ய கோபோऽணுரபி ப்ரஜாஸ்தஸ்ய ந பிப்யதி |
ஸைதாம் நீதிம் கதம் ரக்ஷேத் ப்ரஜா யஸ்ய ந பிப்யதி ||'

என்பதாக காமாந்தகர் நீதிசாஸ்த்ரத்தில் சொல்லியிருக்கிறார்.

3. இவ்விதம் ப்ரம்ஹமானது பயத்தை விளைவிப்பதைப் பற்றி 'மஹத் பயம் வஜ்ரமுத்யதம்' என்ற ச்ருதிவாக்யத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. இங்கு சொல்லப்பட்ட வஜ்ரம் என்ற பதமானது ப்ரம்ஹத்தைக் குறிக்கிறதென்று ப்ரம்ஹ ஸூத்ரத்தில் கம்பனாதிகரணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

4. சண்டா என்று சங்க புஷ்பத்திற்குப் பெயராகையால் அந்த புஷ்பத்தில் மிகவும் ப்ரீதியுள்ளவளென்றும் அர்த்தம் சொல்லலாம்.

'சண்டா தனஹரீ சங்கபுஷ்பீ சண்டோऽதிகோபனே |
ப்ரசண்டோ துர்வஹே ச்வேதகரவீரே ப்ரதாபினி ||'

(விச்வகோசம்)

இதில் சொல்லிய இதர அர்த்தங்களையும் அனுஸரித்து ப்ரதாபத்தோடு விளங்குகிறவள் (ப்ரதாபசீலா) என்பதான அர்த்தங்களும் சொல்லலாம்.

## आज्ञा

## ஆஜ்ஞா (428)

ஆஜ்ஞா (கட்டளை) ரூபமாக இருப்பவள்.

1. வேதவாக்யங்கள் இன்னதைச் செய்யவேண்டும், இன்னதைச்செய்யக்கூடாது என்பதான விதி, நிஷேத வாக்யங்களாக இருப்பதாலும், அவைகள் ஏற்கனவே வந்த 'நிஜாக்ஞா ரூபநிகமா' என்ற நாமத்தில் சொல்லப்பட்டபடி அம்பிகையின் (இச்சா) ஆஜ்ஞா ரூபங்களாக இருப்பதாலும் இந்த நாமத்தில் அம்பிகையே அவ்விதமான ஆஜ்ஞா ரூபமாக இருப்பதாகச் சொல்லப்பட்டது.

'ந ஹ்யேஷா ப்ரக்ருதிர் ஜீவோ விக்ருதிர் வா விசாரத: |
புரா மமாஜ்ஞா மத்வக்த்ராத் ஸமுத்பன்னா ஸநாதனீ |
பஞ்சவக்த்ரா மஹாபாகா ஜகதாம் அபயப்ரதா ||'

(லிங்கபுராணம்)

'ருத்ராஜ்ஞைஷா ஸ்த்திதா தேவீ ஹ்யனயா முக்திரம்பயா | '

(சிவபுராணம்)

2. இந்த நாமத்தை ஜ்ஞா (ज्ञा) என்ற ஏகாக்ஷரத்தை யுடைய நாமமாகவும் சொல்லலாம். அப்போது குணபோக்தா வான புருஷனின் ஸ்வரூபத்தையுடையவள் என்று அர்த்தம்.

'கதயந்தி ஜ்ஞ சப்தேன புருஷம் குணபோகினம் | ' (லைங்கம்)

3. ஜ்ஞ: என்றால் ப்ரம்ஹா, புதன், செவ்வாய், புத்திமான் முதலியவர்களுக்குப் பெயர்.

'ஜ்ஞோ விரிஞ்சௌ புதே ஸௌம்யே | '

அவ்விதமான ரூபங்களோடிருப்பவள் என்றும் சொல்லலாம்.

4. ஜ்ஞ: என்றால் ஈச்வரனையும், அஜ்ஞ: என்றால் ஜீவனையும் குறிக்கும்.

'ஜ்ஞ: காலகாலோ குணீ ஸர்வவித்ய: | ' (ச்ருதி)

'ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீசாநீசௌ | ' (ச்ருதி)

ஆகவே ஜ்ஞா என்பது ப்ரப்ரம்ஹஸ்வரூபிணியான அம்பாளைக் குறிக்கும்.

**प्रतिष्ठा** (829)
ப்ரதிஷ்டா

ஸகல ஜகத்தும் தன்னில் பரதிஷ்டித்திருப்பவள்.

1. அதாவது, ஸகல ப்ரபஞ்சத்திற்கும் அம்பாள் அதிஷ்டானமாயிருப்பதால் அவையெல்லாம் அம்பாளை ஆதாரமாக (அடிப்படையாக)க் கொண்டிருப்பதை இங்கு சொல்லப்பட்டது.

'விச்வஸ்ய ஜகத: ப்ரதிஷ்டா |' (ச்ருதி)

'ப்ரதிஷ்டா ஸர்வவஸ்தூனும் ப்ரஜ்ஞைஷா பரமேச்வரீ |'
(ப்ரம்ஹ கீதை)

2. பதினாறு அக்ஷரங்களையுடைய சந்தோவிசேஷத்திற்கு ப்ரதிஷ்டா என்று பெயர்.

3. ஜலதத்வத்திலிருக்கும் கலைகளில் ஒன்றுக்கு ப்ரதிஷ்டா என்று பெயர். அது ஆத்மாவை சிவபக்தியில் ஸ்தாபிப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'சிவ ராகானுரக்தாத்மா ஸ்தாப்யதே பௌருஷே யயா |
ஸா ப்ரதிஷ்டா கலக ஜ்ஞேயோ......... ||' (சைவாகமம்)

4. இவை தவிர, ப்ரதிஷ்டா என்ற பதத்திற்கு ஸ்த்திரமாயிருத்தல், கௌரவம், யசஸ், ச்லோகத்தின் பாதம் (நாலில் ஒருபாகம்) முதலான அர்த்தங்களுண்டு.

'ப்ரதிஷ்டாஸ்த்தாஸுமாத்ரகே |
கௌரவே யாக நிஷ்பத்திச் சதுரக்ஷர பத்யயோ: | (விச்வகோசம்)

**प्रकटाकृतिः**
ப்ரகடாக்ருதி: (830)

எல்லோராலும் அனுபவிக்கப்படும் (எல்லோருடைய அனுபவத்திற்கும் தெரிவதான) ஸ்வரூபத்தோடு கூடியவள்.

1. ப்ரகடமென்றால் வெளிப்படையாகத் தெரிவது என்று அர்த்தம்.

2. மாயாரூபிணியான அம்பாளை எல்லோரும் அஹம் ப்ரத்யய வ்யாஜத்தினால் அறிகிறார்களென்றும் ஸூதஸம்ஹிதையில் சொல்லப்பட்டிருக்கிறது.

'தாம் அஹம் ப்ரத்யய வ்யாஜாத் ஸர்வே ஜானந்தி ஜந்தவ: |
ததாபி சிவரூபேண ந விஜானந்தி மாயயா ||' (ஸூதஸம்ஹிதை)

3. ஸ்ரீசக்ரத்தின் முதலாவது ஆவரணத்திலிருக்கும் ப்ரகட யோனிகளென்ற பெயரையுடைய தேவிகளின் ரூபமாக இருப்பவளென்றும் சொல்லலாம்.

4. இந்த நாமத்தை 'அப்ரகடாக்ருதி:' என்றும் பிரிக்கலாம். அப்போது, ப்ரகடமாயில்லாத, அதாவது ரஹஸ்யமான, ஸ்வரூபத்தையுடையவள் என்று அர்த்தம்.

5. அல்லது, அப்ஸு (ஜலங்களில்) ப்ரகடா (தெரியும் ஸ்வரூபத்தையுடையவள்) என்றும் அவ்வித நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம்.

'அபாமேகா மஹிமானம் பிபர்த்தி |' (ச்ருதி)
'ஆபோ வா இதம் ஸர்வம் |' (ச்ருதி)

## प्राणेश्वरी
## ப்ராணேச்வரீ (831)

இந்த்ரியங்களுக்கெல்லாம் அதிஷ்டானமாயிருப்பவள்.

1. இந்த்ரியங்களுக்கெல்லாம் அதிஷ்டான தேவதையிருப்பதானது,

'ஜ்யோதிராத்யதிஷ்டானம் து ததாமனனாத் |'

என்று வேதாந்த ஸூத்ரத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

2. அல்லது, ஐந்து வ்ருத்திகளுடைய ப்ராணனுக்கு (பஞ்சப்ராணன்களுக்கு) அதிபதியாயிருப்பவளென்றும் சொல்லலாம்.

ப்ராணஸ்ய ப்ராண: |' (ச்ருதி)

3. ப்ரக்ருஷ்டமான அண: (சப்தம்), அதாவது, வேதம், ப்ராண: அதற்கு ஈச்வரீ என்றால் அதினால் ப்ரதிபாதிக்கப்படும் தேவதை என்று அர்த்தம்.

'ஸர்வே வேதா யத் பதம் ஆமனந்தி |' (ச்ருதி)

## प्राणदात्री
## ப்ராணதாத்ரீ (832)

ப்ராணன்களைக் கொடுப்பவள்.

1. அதாவது, ஸகல ஜகத்தையும் உயிருடனிருக்கும்படி செய்பவள் என்று அர்த்தம்.

2. அல்லது, ஏகாதச இந்த்ரியங்களையும் கொடுப்பவள் என்றும் சொல்லலாம். ப்ராணன் என்ற பதமானது இந்த்ரியங்களைக் குறிக்குமென்பதாக,

'ப்ராணம் அனூத்க்ராமந்தம் ஸர்வே ப்ராணா: அனூத்க்ராமந்தி |'

என்ற ச்ருதிவாக்யத்தின் அர்த்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதே அர்த்தமானது 'ஸப்தகதேர் விசேஷிதத்வாத் ச' என்ற வேதாந்த ஸூத்ரத்திலும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

**पञ्चाशत्पीठरूपिणी**

**பஞ்சாசத் பீடரூபிணீ** (833)

ஐம்பது பீடங்களின் ரூபமாயிருப்பவள்.

1. பஞ்சாசத் என்ற பதமானது ஸாதாரணமாக ஐம்பது என்று அர்த்தமாயிருந்தபோதிலும் இங்கு லக்ஷணையால் (மறை பொருளாக) அதற்கடுத்த எண்ணிக்கையான ஐம்பத்தியொன்றைக் குறிக்கும். இதே காரணத்தால் சாரதா திலகத்தின் முதல் ச்லோகமாகிய,

'நித்யானந்தவபுர் நிரந்தரகலத் பஞ்சாசத் அர்ணை: க்ரமாத் |'

என்பதில் வரும் பஞ்சாசத் என்ற பதத்திற்கு ஐம்பத்தியொன்று என்பதாக ஹர்ஷதீக்ஷிதரால் தன் வ்யாக்யானத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. லோகத்திலும் ஸாதாரணமாக பத்து இருபது என்பதுபோல், பத்துப் பத்தாகச் சொல்லும்போதும், நூறு ஆயிரம் என்பதாகச் சொல்லும்போதும், ஒன்றிரண்டு குறைந்திருந்தாலும். அல்லது கூட இருந்தாலும் அதைப்பாராட்டாமல், எண்ணிக்கை பெரியதாக இருப்பதைமட்டும் காட்டுவதற்காக பூர்த்தியான எண்ணிக்கையாகச் சொல்வதை நாம் பார்த்திருக்கிறோம். இது தவிர, ஸஹஸ்ரேசதம் என்ற ந்யாயத்தின்படி நவாவதாரத்தை தசாவதாரமென்றும், ஜகத்பதியை அயோத்யாதிபதியென்றும் சிற்சில காரணங்களைக்கொண்டு சொல்வதையும் பார்த்திருக்கிறோம். ஸூதஸம்ஹிதையில் த்வாத்ரிம்சத் (முப்பத்திரண்டு) என்ற பதத்தினால் முப்பத்தைந்து வ்யஞ்ஜனங்களையும் சொல்லப்பட்டிருக்கிறது.

2. ஆகவே, அந்தர் மாத்ருகாந்யாஸத்தில் மாத்ருகைகள் ஐம்பதைத்தான் ந்யாஸம் செய்வதையும், வ்யவஹாரத்தில் மாத்ருகைகளை பஞ்சாசத் என்பதாகச் சொல்லப்படுவதையும் நாம் பார்த்தாலும் ல, ள என்பவைகளை ஒன்றாகக் கணக்கிடுவதினாலும், க்ஷ என்பதைத் தனியாகக் கணக்கில் சேர்க்காததினாலும், அக்ஷமாலையில் அதை மேருவிலிருப்பதாகச் சொல்லி பாக்கி மணிகளை ஐம்பதாகச் சொல்வதினாலும் அவ்விதம் பஞ்சாசத் என்று சொல்லப்படுகிறதே தவிர, அது வாஸ்தவத்தில் ஐம்பத்தியொன்று என்பதான எண்ணிக்கையைத்தான் குறிக்கும். இந்த அர்த்தத்தில் கவிகளால்,

'பஞ்சாதத் லிபிபிர் விபக்த முகதோர் யன் மத்ய வக்ஷஸ்த்தலம் |'

'பஞ்சாசத் வர்ணபேதைர் விஹித வதனதோ: பாதயுக் குக்ஷிவக்ஷ: ||'

என்பதாக ப்ரயோகம் செய்யப்பட்டிருப்பதைப் பார்க்கிறோம். ஞானார்ணவத்திலும் ஐம்பத்தியொன்று என்பதாக ந்யாஸத்தைச் சொல்லிவிட்டுக் கடைசியில்,

'பஞ்சாசத் வர்ணரூபேயம் கந்தர்பசிபூஷணம் |'

என்பதாகச் சொல்லப்பட்டது. இவ்விதமாகவே இதர தந்த்ரங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸ்ரீ கண்டாத்யாச்ச பஞ்சாசத் பஞ்சாசத் கேசவாதய: |'

என்பதான ப்ரயோகங்கள் தந்த்ர ஸார ஸங்க்ரஹம் முதலியவைகளில் சொல்லப்பட்டிருப்பவைகளும் மாத்ருகைகளை அனுஸரித்திருப்பதால், அங்கு சொல்லப்பட்ட பஞ்சாசத் என்ற பதமும் இதே அர்த்தத்தில் ஐம்பத்தியொன்று என்பதைத்தான் குறிக்கும்.

3. மேலேசொன்ன காரணங்களினால் இந்த நாமமானது காமரூபம் முதலாக சாயாசத்ரம் முடிய உள்ள ஐம்பத்தோரு பீடங்களைத் தன்னுடைய ரூபமாக உடையவளென்பதாக அம்பாளைச் சொல்லுகிறது. இதனால்தான் ஷோடாந்யாஸத்தின் ஒரு பாகமாகிய பீடந்யாஸத்தில் ஐம்பத்தோரு பீடங்களின் ந்யாஸம் சொல்லப்பட்டது. இவைகளெல்லாம் முறையே ஐம்பத்தோரு மாத்ருகைகளை (வர்ணங்களை)க் குறிக்கும்.

'யாவன் மாத்ருகமுதிதான் யேக ஸமேதானி பஞ்சாசத் |
பீடானி............... ||' (வரிவஸ்யா ரகஸ்யம்)

'தத: பீடானி பஞ்சாசதேகம் ச க்ரமதோ ந்யஸேத் |
... ... ... ... ... ... ... ... ... ...
லிபிக்ரம ஸமாயுக்தான் லிபிஸ்தானேஷு வின்யஸேத் ||'
(லலிதோபாக்யானம்)

இந்த ஐம்பத்தோரு பீடங்களின் பெயர்களைப்பற்றி சிற்சில பாடாந்தரங்களிருப்பதில் வாமகேச்வர தந்த்ரத்தில் சொல்லப் பட்டிருப்பது பின்வருமாறு.—

'காமரூபம் வாராணஸீ நேபாலம் பௌண்ட்ரவர்த்தனம் |
புரஸ்த்திரம் கான்யகுப்ஜம் பூர்ணசைலம் ததார்புதம் ||
ஆம்ராதகேச்வரைகாம்ரம் த்ரிஸ்ரோத: சாமகோடகம் |
கைலாஸம் ப்ருகு நகரம் கேதாரம் சந்த்ரபுஷ்கரம் ||
ஸ்ரீபீடமோங்காரபீடம் ஜாலந்த்ரம் மாலவம் ததா |
அட்டஹாஸம் ச விரஜம் ராஜகேஹம் மஹாபதம் |
கோலாபுர மேலாபுரம் காலேசச்ச ஜயந்திகா ||
உஜ்ஜயின்யபி சித்ரா ச க்ஷீரகம் ஹஸ்திநாபுரம் |
உட்டீசச்ச ப்ரயாகாக்ய: ஷஷ்டீ மாயாபுரீ ததா ||
ஜலேசோ மலய: சைலோ மேருர் கிரிவரஸ்ததா |
மஹேந்த்ரோ வாமனச்சைவ ஹிரண்யபுர மேவ ச ||
மஹா லக்ஷ்மீ புரோட்யானம் சாயா சத்ரம் அத: பரம் |
ஏதே பீடா: ஸமுத்திஷ்டா: மாத்ருகா: ரூபகா: ஸ்த்திதா: ||'

இவற்றின் பெயர்களை ந்யாஸம் செய்யும்போது 'அம் காம ரூபாய நம:' என்பதுபோல் சொல்லவேண்டும்.

4. இந்த பஞ்சாசத் பீடங்களின் பெயர்களைப்பற்றி இதர தந்த்ரங்களிலும் அவற்றின் பாஷ்யங்களிலும் சொல்லியிருப்ப தைப்பற்றியும், அப்படி சொல்லியிருப்பவைகளைப்பற்றித் தனக் கிருக்கும் அபிப்ராய பேதங்களையும் பாஸ்கரராயர் தன்னுடைய பாஷ்யத்தில் விசேஷமாகச் சொல்லியிருப்பதுடன் ஸேதுபந்தத் திலும் சொல்லியிருக்கிறார். இதைப்பற்றியும் பீடங்களின் ந்யா ஸத்தைப்பற்றியும் தெரியவிரும்புகிறவர்கள் அவற்றில் பார்த்துக் கொள்ளவும்.

5. ஐம்பத்தியொன்று என்று தெளிவாகச் சொல்லாத வரையில் பஞ்சாசத் என்பது ஐம்பதைத்தான் குறிக்குமென்று பிடிவாதமாய்ச் சொல்லுகிறவர்களுக்கு இன்னமொரு ஸமாதான மும் உண்டு. இந்த நாமத்தில் வரும் ரூபம் என்ற பதமானது

ஒன்று என்ற எண்ணிக்கையைக் குறிக்குமென்பதாகச் சொல்ல லாம். 'ரூபே சூன்யம்' என்பதான பிங்கள ஸூத்திரத்திற்கு ஹலாயுதர் முதலானவர்கள் அம்மாதிரி அர்த்தம் சொல்லியிருக் கிறார்கள்.

6. பஞ்சாசத் பீடங்களைப்பற்றிச் சொல்லப்படும் வ்ருத் தாந்தம் ஒன்று உண்டு. தக்ஷனுடைய யாகத்திற்கு ஸதீ தேவி யானவள் போனபோது அங்கு தன் புருஷனுக்கும் தனக்கும் செய்யப்பட்ட அவமர்யாதையை ஸஹிக்காமல் தேவியானவள் (அவ்விதம் நிந்திக்கும் தக்ஷனாலுண்டான) சரீரத்தின் மீது வெருப்புற்று அதை விட்டுவிடவும், பரமசிவன் அங்கு வந்து உயிரற்ற சரீரத்தைப்பார்த்து துக்கித்து அதைத்தன் தோளின் மீது சாத்திக்கொண்டு வேறு ஞாபகம் யாதொன்றுமில்லாமல் துக்காக்ராந்தராய் ஸஞ்சரிக்க ஆரம்பித்தார். லோகங்களுக் கெல்லாம் நியந்தாவான அவர் இம்மாதிரியிருக்கவே, ஸமஸ்த தேவர்களும் விஷ்ணுவையடைந்து ஈச்வரனுக்கு ஏற்பட்ட துக் கத்தையும் அதினால் லோகங்களுக்கெல்லாம் ஏற்பட்ட கஷ்டத் தையும் நீக்கும்படி வேண்டவே, ஸதீதேவியின் சரீரம் இருக்கும் வரையில் பரமசிவனுக்கு துக்கம் நீங்காதென்றறிந்த விஷ்ணு வானவர் தன் சக்ராயுதத்தினால் ஸதீதேவியின் சரீரத்தைப் பல துண்டுகளாகச் செய்தாரென்றும், அவ்விதம் தேவின் சரீரம் போனவுடன் பரமசிவன் ஸ்வய ஞாபகமடைந்தாரென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அப்போது ஏற்பட்ட ஐம்பத்தோரு துண்டங்களும் பூமியில் அங்கங்கே விழவும் அந்தந்த இட மெல்லாம் தேவியின் மஹா பீடஸ்த்தானங்களாக ஏற்பட்டன வென்று சொல்லப்படும்.

## विशृङ्खला

## விச்ருங்கலா (834)

கர்மாதி நிர்ப்பந்தங்கள் யாதென்றுமில்லாதவள்.

1. ச்ருங்கலையென்றால் கட்டும் சங்கிலி, விலங்கு, என் றர்த்தம். இங்கு கர்மா முதலான பந்தங்களை ச்ருங்கலையென்று சொல்லப்பட்டது. அவை விதி நிஷேதங்களாலேற்படுவதாலும் அவித்யையின் விஷயங்களாக இருப்பதாலும், அவற்றினால்

அம்பாளுக்கு யாதொரு விதமான பந்தமுமில்லையென்று இந்த நாமத்தின் தாத்பர்யம். பாபத்தைக் கொடுப்பவையும், புண்யத்தைக் கொடுப்பவையுமான கர்மாக்களெல்லாம் விலங்குகளாகச் சொல்லப்பட்டு அவ்விரண்டிலிருந்தும் தன்னை விடுவிக்கவேண்டுமென்று (இந்த அர்த்தத்தில்) அபியுக்த வசனமிருக்கிறது.

'பாதக ப்ரசயவன் மம தாவத் புண்யபுஞ்ஜமபி நாத லுனீஹி ||
காஞ்சனீ பவது லோஹமயீ வா ச்ருங்கலா யதி கோர்ந விசேஷ: ||

தங்கமாயிருந்தாலும் இரும்பாயிருந்தாலும், விலங்கு விலங்கு தானென்று சொல்லப்பட்டது.

2. அல்லது விசேஷமான கர்மாதி நிர்பந்த ரூபமாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

3. ச்ருங்கலா ஸ்யாத் கடிவஸ்த்ர பந்தேऽபி நிகடேऽபி ச |

என்ற விச்வகோசத்தின்படி ச்ருங்கலையென்றால் இடுப்பு வஸ்த்ரத்தின்மீது கட்டிக்கொள்ளும் கடி ஸூத்ரம், அரை ஞாண் என்றும் அர்த்தம். அது இல்லாதவள் என்றால் நக்னமாயிருப்பவள் என்று தாத்பர்யம். அலம்புரா முதலான க்ஷேத்ரங்களில் அம்பாளுடைய மூர்த்தியானது அவ்விதமாக இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அம்பாளுடைய மஞ்சத்தைச் சுற்றியிருக்கும் ஜவனிகா (திரை) ரூபமான திரஸ்கரிணீ தேவியின் த்யானமும் அம்மாதிரியாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'பரிதோ மணி மஞ்சஸ்ய ப்ரலம்பமானா நியந்த்ரிதா பாசை: |
மாயாமயீ ஜவனிகா மம துரிதம் ஹரது மேசகச்சாயா ||'

(லலிதாஸ்தவரத்னம்)

'முக்த கேசீம் விவஸ்த்ரம் ஸர்வாபரண பூஷிதாம் |
ஸ்வயோனி தர்சனாத் முஹ்யத் பசுவர்காம் நமாம்யஹம் |'

ஜவனிகைக்கு வேறு ஜவனிகை தேவையில்லையாகையால் அவ்விதமான த்யானம் பொருத்தமாகத்தான் இருக்கிறது.

## विविक्तस्था

### விவிக்தஸ்தா (835)

ஜனங்களில்லாத இடங்களிலிருப்பவள்.

1. விஜனமான (ஜனங்கள் காணப்படாத) ஸ்தலங்களெல்லாம் பரிசுத்தமானவை யென்பதாக,

ஸர்வத்ர மேத்யா வஸுதா யத்ர லோகே ந த்ருச்யதே |'

என்று ஹாரீதஸ்ம்ருதியில் சொல்லப்பட்டது.

2 'விவிக்தௌ பூத விஜனௌ' என்ற அமரகோச வசனப்படி (பூதமான) பரிசுத்தமான ஸ்தலம் (ஜனங்களோடிருந்தாலும்) அதையும், பரிசுத்தமாயில்லாதபோதும் ஜனங்கலில்லாமலிருந்தால் அதையும், விவிக்தஸ்தலமென்பதாகச் சொல்லப்படும். அப்படி பவித்ரமான ஸ்தலமாயிருப்பதிலும் விஜனமாகவுமிருக்கப்பட்ட ஸ்தலத்தைத்தான் இங்கு குறிப்பிடப்பட்டது. அப்பேர்ப்பட்ட விவிக்தஸ்தலத்திலிருப்பவள் என்று அம்பாளை இங்கு சொல்லப்பட்டது. அபவித்ரமாயிருந்தாலும் ஜனக்கூட்டமிருந்தாலும் த்யானம் செய்வதற்கு தகுதியற்றதாகையால் அவ்விதமான இடங்களில் உபாஸகனுக்கு அம்பாளுடைய ஆவிர்பாவம் உண்டாகாது.

3. அல்லது, ஆத்மா, அனாத்மா என்பவைகளைப்பற்றி விவேகமுடையவர்கள் மனதில் இருப்பவள் என்றும் சொல்லலாம்.

## वीरमाता

வீரமாதா (836)

வீரர்களுக்கு தாயாராக (ஹிதத்தைச் செய்பவளாக) இருப்பவள்.

1. 'அஹமி ப்ரளயம் குர்வன் இதம: ப்ரதியோகின: |
ப்ராக்மபரோ புங்க்தே ஸ்வாத்மானம் அசிவாபஹம் ||'

என்றபடி, பேதபாவத்திற்கு ஆதாரமான இதமென்பதை அதற்கு சத்ருவான அஹமென்ற யுத்த ஸ்தலத்தில் ப்ரளயமடையச்செய்யும் பராக்ரமத்தையுடையவர்களாய், அசிவத்தை (அமங்களத்தை)ப் போக்குகிற ஆத்மாவில் நிஷ்டர்களாயிருப்பவர்களை வீரர்களென்று சொல்லப்படும். அம்மாதிரியான உபாஸக துரந்தரர்களுக்கு ஹிதத்தைச் செய்பவள் என்று இங்கு சொல்லப்பட்டது.

2. அல்லது, யுத்தகளத்தில் (நேரிட்டு சண்டைசெய்து) இறந்தவர்களை வீரர்களென்று சொல்லப்படும்.

3. 'வீரம் மத்யஸ்ய பாஜனே' என்ற விச்வகோச வசனத்தின்படி பான பாத்ரத்திற்கு வீரமென்று பெயர். அதை அளப்பவள் வீரமாதா. அதாவது, பான பாத்ரத்திலடங்கிய மத்யத்தினால் ஆராதிக்கப்படுகிறவள் என்று தாத்பர்யம்.

4. வீரனென்று பெயருடைய கணேச்வரனொருவனை அம்பாள் தன் புத்ரனாக ஸ்வீகரித்துக்கொண்டதால் இந்தப்பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம். அவனைப்பற்றிப் பரமசிவன்,

'ஸ ஏஷ வீரகோ தேவி ஸதா மே ஹ்ருதயப்ரிய: |
நாநுச்சர்ய குருத்வாரி கணேச்வர கணார்ச்சித: ||'

என்று புகழவும், அதைக்கேட்ட அம்பாள் அம்மாதிரியான புத்ரன் தனக்கு வேண்டுமென்பதாக,

'ஈத்ருசஸ்ய ஸுதஸ்யாஸ்தி மமோத்கண்ட்டா புராந்தக |
கதாஹமீத்ருசம் புத்ரம் த்ரக்ஷ்யாம்யானந்த தாயகம் ||'

என்று கேட்டதின்பேரில், அவனை புத்ரனாக எடுத்துக்கொள்ளும்படி,

ஏஷ ஏவ ஸுதஸ்தேऽஸ்து நயநானந்த ஹேதுக: |
த்வயா புத்ர: க்ருதார்த்த: ஸ்யாத் வீரகோऽபி ஸுமத்யமே ||'

என்று பரமசிவன் சொன்னானென்றும், அதற்குமேல் அவனை அழைத்துவரும்படி தன் ஸகியான விஜயா என்பவளை அம்பாள் அனுப்பியதாக,

'இத்யுக்த்வா ப்ரேஷயாமாஸ விஜயாம் ஹர்ஷநேத்ஸுகா |
வீரகாநயநாயாசு துஹிதா பூப்ருத: ஸகீம் ||'

என்று பத்ம புராணத்தில் இந்த வ்ருத்தாந்தம் சொல்லப்பட்டிருக்கிறது. அப்பேர்ப்பட்ட வீரன் என்பவனுடைய மாதா என்று இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லாம்.

## वियत्प्रसूः

## வியத் ப்ரஸூ: (837)

ஆகாசத்தை உண்டுபண்ணியவள்.

'ஆகாசாத் வாயு:, வாயோரக்னி:, அக்னேராப:, ஆப: ப்ருத்வீ' என்று ச்ருதிவாக்யத்தில் சொல்லப்பட்டபடி ஸகலமும் ஆகாசத்திலிருந்து ஏற்பட்டதாலும் அந்த ஆகாசமும் 'ஆத்மன

ஆகாச: ஸம்பூத:' என்றபடி ஆத்மாவிலிருந்து உண்டானதாகச் சொல்லப்பட்டிருப்பதாலும் அவ்வித ஆத்மரூபிணியாக அம்பாளை இங்கு சொல்லப்பட்டது.

**मुकुन्दा**

**முகுந்தா** (838)

முக்தியைக் கொடுப்பவள்.

1. முகு: என்றால் மோக்ஷம். அதைக்கொடுப்பவள் முகுந்தா.

2. அல்லது, விஷ்ணு ரூபமாயிருப்பவளென்று சொல்லலாம். அம்பாள் க்ருஷ்ண ரூபத்தோடு இருந்ததை,

'கதாசித் ஆத்யா லலிதா பும்ரூபா க்ருஷ்ண விக்ரஹா
ஸ்வ வம்ச வாதனாரம்பாத் அகரோத் விவ்சம் ஜகத் ||
தத: ஸ கோபீ ஸம்ஜ்ஞாபி: ஆவ்ருதோऽபூத் ஸ்வ சக்திபி:
ததா தேன விநோதாய ஸ்வம் ஷோடாऽகல்பயத் வபு: |'

என்பது முதலாக தந்த்ர ராஜத்தில் கோபால மந்த்ரபேதங்களைப் பற்றிச் சொல்ல ஆரம்பிக்கையில் சொல்லப்பட்டிருக்கிறது. (கோபிகைகள் அம்பாளுடைய சக்தி விசேஷங்களென்று இதில் சொல்லப்பட்டிருக்கிறது.)

3. 'முகுந்த: புண்டரீகாக்ஷே ரத்னபேதேऽபி பாரதே |'

என்ற விச்வகோச வசனத்தின்படி ஒரு ரத்ன விசேஷத்தையும், பாதரஸத்தையும், முகுந்தமென்று சொல்லப்படும்.

**मुक्तिनिलया**

**முக்தி நிலயா** (839)

முக்திக்கு ஸ்த்தானமாயிருப்பவள்.

ஏற்கனவே சொல்லப்பட்ட ஸாலோக்ய, ஸாமீப்ய, ஸாரூப்ய ஸாயுஜ்ய, கைவல்யமென்ற ஐந்துவிதமான முக்திகளிலும் அடையப்படுகிறவளென்று தாத்பர்யம்.

**मूलविग्रहरूपिणी**

**மூலவிக்ரஹ ரூபிணீ** (840)

ஸகல சக்திகளுக்கும் மூலபூதமான ராஜராஜேச்வரீ ஸ்வரூபமாயிருப்பவள்.

பாலா, பகளா முதலான ஸகல சக்திகளும் சாம்பவீ வித்யா, ச்யாமா என்ற மூன்றுவிதமான (அம்பிகையின்) ரூபங் களிலிருந்து உண்டானவையென்றும், அம்மூன்று ரூபங்களும் ஸ்ரீவித்யாரூபிணியான அம்பிகையிடமிருந்து ஏற்பட்டனவென் றும்,

'ஸைவேயம் அனுமாக்யா ஸ்ரீவித்யா |
தத்வத்ரயேண த்ரிவிதா |
ஸா சாம்பவீ வித்யா ச்யாமா தத்வத்ரயாக்ருதி: த்ரிவிதா ஜாதா |
வித்யாயா: பூர்வோத்தராப்யாம் அனேக வித்யா ஜாதா: |'

என்பவை முதலான ஸூத்ரங்களில் கௌடபாதரால் சொல்லப் பட்டிருக்கிறது. அவ்விதமான ராஜராஜேச்வரீ விக்ரஹ ரூபமாக அம்பிகை இருப்பது இங்கு சொல்லப்பட்டது.

## भावज्ञा

## பாவஜ்ஞா (841)

பாவங்களை அறிகிறவள்.

1. பாவ (भाव) மென்ற பதத்திற்கு அனேகவிதமான அர்த்தங்களுண்டு.

'பாவ: ஸத்தா ஸ்வபாவாபிப்ராய சேஷ்டாத்ம ஜன்மஸு |'

என்று அமரத்திலும்

'பாவோ யோனி புதார்த்தேஷு க்ருபாலீலா விபூதிஷு |'

என்று அமரசேஷத்திலும் சொல்லப்பட்டபடி பாவமென்றால் ஸத்தா (இருக்கை), ஸ்வபாவம், அபிப்ராயம், சேஷ்டை, ஆத்மா, ஜன்மம், யோனி, புத்திமான், அர்த்தம், க்ருபை, லீலை, விபூதி முதலான அர்த்தங்களுண்டு. 'தஸ்ய பாவஸ்த்வதலௌ' என்ற ஸூத்ரத்தில் சொல்லியபடி தர்மத்தையும் குறிக்கும். 'பாவ ப்ரதான மாக்யாதம்' என்று ஸ்ம்ருதியில் சொல்லியபடி பாவத்தையும் குறிக்கும்.

'தாத்வார்த்த: கேவல: சுத்தோ பாவ இத்யபிதீயதே |'

என்றபடி தாதுவின் கேவலம் சுத்தமான அர்த்தத்திற்கு பாவ மென்று பெயர்.

'அஸ்தி ஜாயதே வர்த்ததே பரிணமதே பக்ஷீயதே ம்ரியதே |'

என்று யாஸ்கர் நிருக்தத்தில் சொல்லிய ஆறுவிதமான விகாரங்களுக்கும் ஷட் பாவங்களென்று பெயர்.

2. பாவமென்றால் பக்தியையும் குறிக்கும். தர்க்க சாஸ்த்ரத்தில் சொல்லப்படும் ஷட்பதார்த்தங்களுக்கும் பாவங்களென்று பெயர். பவ: என்று ஸம்ஸாரத்திற்குப் பெயராகையால் அதில் ஸம்பந்தப்பட்டிருப்பவர்களுக்கு (ஸம்ஸாரிகளுக்கு) பாவர்களென்று பெயர். பவ: என்றால் சிவனுக்குப் பெயர். அவரைச் சேர்ந்தவர்களை—சைவர்களை—பாவர்களென்று சொல்லலாம். பா என்றால் காந்தி. அதை வெளிப்படுத்துகிறவர்களான ஸூர்யன் முதலானவர்களை பாவர்களென்று சொல்லலாம். யோகினீ ஹ்ருதயத்தில் மந்த்ரங்களுக்குச் சொல்லப்பட்டிருக்கும் ஆறுவிதமான அர்த்தங்களில் பாவார்த்தமென்பது ஒன்று.

## भवरोगघ्नी
## பவரோகக்னீ (842)

ஸம்ஸாரமாகிற ரோகத்தைப் போக்கடிப்பவள்.

இதேமாதிரி, ஸம்ஸாரமானது ரோகத்திற்கு ஸமமானதென்றும், பரமசிவனே அதைப் போக்கடிக்கவல்லவரென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'நான்யம் பச்யாமி பைஷஜ்யம் அந்தரேண வ்ருஷத்வஜம் |'
(ராமாயணம்)

'வ்யாதீனும் பேஷஜம் யத்வத் ப்ரதிபக்ஷஸ்வபாவத: |
தத்வத் ஸம்ஸாரரோகாணும் ப்ரதிபக்ஷ: சிவாதவ: ||' (சிவ புராணம்)

## भवचक्रप्रवर्तिनी
## பவசக்ர ப்ரவர்த்தினீ (843)

ஸம்ஸார மண்டலத்தை (மேலுக்குமேல்) நடக்கச்செய்பவள்.

1. அல்லது, ஸம்ஸாரத்தை சக்ரம் மாதிரி சுற்றிச்சுற்றிச் சுழலும்படி செய்பவள் என்றும் சொல்லலாம்.

'ஏஷா ஸர்வாணி பூதானி பஞ்சபிர் வ்யாப்ய மூர்த்திபி: |
ஜன்ம வ்ருத்தி க்ஷயைர் நித்யம் ஸம்ஸாரயதி சக்ரவத் ||'
(மனுஸ்ம்ருதி)

'ஈச்வர: ஸர்வபூதானும் ஹ்ருத்தேசேऽர்ஜுன திஷ்டதி |
ப்ராமயன் ஸர்வபூதானி யந்த்ராரூடானி மாயயா ||' (கீதை)

'துரீயா காபித்வம் துரதிசம நிஃஸீம மஹிமா |
மஹாமாயா விச்வம் ப்ரமயஸி பரப்ரம்ஹ மஹிஷீ ||'
(ஸௌந்தர்யலஹரீ).

2. பவ: என்று சிவனுக்குப் பெயர். அவரே ஸகல ஜகத்தினுடைய பந்தமோக்ஷங்களுக்கு ஈச்வரனுயிருப்பதால் ஸம்ஸாரத்தை பவசக்ரமென்று சொல்லலாம்.

'த்வமேவ ஸர்வஜகதாம் ஈச்வரோ பந்தமோக்ஷயோ: ||
தம் த்வாம் அர்ச்சந்தி குசலா: ப்ரபன்னர்த்திஹரம் ஹரம் ||'
(விஷ்ணுபாகவதம்).

3. அனுஹத சக்ரத்தில் சிவன் அவஸ்த்தானத்தோடிருப்பதால் அதையும் பவசக்ரமென்று சொல்லலாம். [ஸாதாரணமாய் கோணங்கள், பத்ரங்கள் (தளங்கள்) இவையிரண்டோடு கூடியதுதான் சக்ரமென்பதாக தாந்த்ரிகர்களுடைய ஸித்தாந்தம்.]

'கோணபத்ர ஸமுச்சயம் சக்ரம் |' (வித்யாரத்னஸூத்ரம்).

அப்படிக்கிருக்க, அனுஹதம் முதலானவைகளில் கோணங்களில்லாதிருக்கும்போது அவற்றை சக்ரங்களென்று எப்படிச் சொல்லலாம்? ப்ரயோகத்திலும் அவற்றை 'அனுஹதாப்ஜநிலயா' என்றது முதலான இடங்களில் கமலங்களென்றுதானே சொல்லப்பட்டிருக்கிறது. கேவலம் பத்திரங்களோடிருந்தால் அதை கமலமென்றும், கேவலம் கோணங்களோடிருந்தால் அதை யந்த்ரமென்றும், சொல்வதுதானே ஸித்தாந்தம். பத்ரங்களையே கோணங்களென்று கௌணமாகச் சொல்லப்படுகிறது என்று சிலர் ஸமாதானம் சொல்வதும் சரியல்லவே. இந்த ஸம்சயத்திற்கு பதிலென்னவென்றல் அந்த ஸ்தானங்களில் தளங்களிலிருப்பதால் கமலமென்று சொல்லக்கூடியதாயிருந்தாலும் மத்தியிலிருக்கும் கர்ணிகையில் த்ரிகோணமிருப்பதாக பாவிக்கப்படுவதால் அவை சக்ரங்கள்தான். ஆகவே சக்ரங்களென்று அவைகளைச் சொல்வது கௌணமாகச் சொல்வதல்ல. இதே அர்த்தத்தில்தான் மேலே வந்த ஸூத்ரத்தின் பாஷ்யகாரர் அபிப்பிராயப்பட்டிருக்கிறர்.

4. ஸ்ரீசக்ரத்திலடங்கிய பிந்து, அஷ்டதளம், ஷோடசதளம், சதுரச்ரம், (பூக்ருஹத்ரயம்) என்றவை சிவசக்ரங்களென்றும், பாக்கியான த்ரிகோணம், அஷ்டகோணம், தசராத்வயம்

மன்வச்ரம் இவையெல்லாம் சக்தி சக்ரங்களென்று சொல்லப்படும்.

'சதுர்பி: சிவசக்ரைச்ச சக்திசக்ரைச்ச பஞ்சபி: |
நவ சக்ரைச்ச ஸம்பித்தம் ஸ்ரீசக்ரம் சிவயோர் வபு: ||
த்ரிகோணம் அஷ்டகோணம் ச தசகோணத்வயம் ததா |
சதுர்தசாரம் சைதானி சக்திசக்ராணி பஞ்ச ச ||
பிந்துச் சாஷ்டதளம் பத்மம் பத்மம் ஷோடசபத்ரகம் |
சதுரச்ரம் ச சத்வாரி சிவசக்ராண்யனுக்ரமாத் ||'

(ஸ்ரீலலிதாத்ரிசதீ)

இவற்றில் சிவசக்ரங்களுக்கு சக்திசக்ரங்களின் சேர்க்கையினால்தான் ப்ரபுத்வம் ஏற்படுகிறதென்பதாக,

'சிவ: சக்த்யா யுக்தோ யதி பவதி சக்த: ப்ரபவிதும்
நசேத் ஏவம் தேவோ ந கலு குசல: ஸ்பந்திதுமபி |'

என்ற 'ஸௌந்தர்யலஹரீ' ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதையேதான் இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

5. சக்ரமென்று மனதிற்குப் பெயரென்றும், இதையேதான் விஷ்ணுவானவர் தன்கையில் சக்ரமாக தரித்துக்கொண்டிருக்கிறாரென்றும், விஷ்ணு புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'சக்ரம் ஹி மன ஏவ |'
'சலத் ஸ்வரூபமத்யந்தம் ஜவேனாந்தரிதானிலம் |
சக்ரஸ்வரூபம் ச மனோ தத்தே விஷ்ணு: கரே ஸ்த்திதம் ||'

ஆகவே பவசக்ரமென்றால் பரமசிவனுடைய மனதைக் குறிக்குமாகையால் அதை ப்ரவர்த்திக்கச் செய்பவளென்றும், இந்த நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம்.

## छन्दःसारा

சந்த: ஸாரா (844)

வேதங்களின் ஸாரமான உபநிஷத்துக்களின் ரூபமாயிருப்பவள்.

1. அதாவது உபநிஷத்துக்களால் நிஷ்கர்ஷிக்கப்பட்ட ஸ்வரூபத்தையுடையவள் என்று தாத்பர்யம்.

2. சந்தஸ் என்ற பதமானது வேதத்தைக் குறிப்பதுடன், காயத்ரீ முதலான சந்தோ விசேஷங்களேயும் பைங்கள தந்த்ரத்தையும் குறிக்கும். ஸாரமென்றால் பலம், ஸ்த்திரமாயிருப்பது, உத்க்ருஷ்டமாயிருப்பது முதலானவையைக் குறிக்கும்.

'சந்த: பத்யே ச வேதே ச ஸ்வைராசாராபிலாஷயோ: |'
'ஸாரே பலே மஜ்ஜனி ச ஸ்த்திராம்சே
ந்யாய்யே ச நீரே ச தனே ச ஸாரம் |' (விச்வகோசம்)

3. சந்தஸ்ஸுகளுக்குள் காயத்ரீ மந்திரமே ஸாரமானதாகையாலும், அந்த காயத்ரியின் ஸாரமாக பஞ்சதசாக்ஷரீ இருப்பதாலும், அம்பாளும் ஸ்ரீவித்யையும் அபேதமாகையாலும், சந்தஸ்ஸாரா என்பதாக அம்பாளுக்கு இந்த நாமம் ஏற்பட்டது. இதைப்பற்றி பாஸ்கரராயரால் 'வரிவஸ்யாரஹஸ்ய'த்தில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'தத் ஞானார்த்தமுபாயா வித்யா லோகே சதுர்தச ப்ரோக்தா: |
தேஷ்வபி ச ஸாரபூதா வேதாஸ்தத்ராபி காயத்ரீ ||
தஸ்யா ரூபத்விதயம் தத்ரைகம் யத் ப்ரபட்யதே ஸ்பஷ்டம் |
வேதேஷு சதுர்ஷ்வபி பரமத்யந்தம் கோபனீயதரம் ||
காமோ யோனி: கமலேத்யேவம் ஸம்கேதிதை: சப்தை: |
வ்யவஹரதி ந து ப்ரகடம் யாம் வித்யாம் வேதபுருஷோऽபி ||'

இதின் கடைசி ச்லோகத்தில் "வேதபுருஷனும் எந்த வித்யையை வெளிப்படையாகச் சொல்லாமல் 'காமயோனி: கமலா' என்பவை முதலான ஸம்கேத பதங்களால் ரஹஸ்யமான விதமாகச் சொல்லியிருக்கிறாரோ" என்று சொன்னது,

'காமோயோனி: கமலா வஜ்ரபாணி:
குஹா ஹஸா மாதரிச்வாப்ரமிந்த்ர: |
புனர்குஹா ஸகலா மாயயா ச
புரூச்யைஷா விச்வமாதா ச வித்யா ||'

என்று அதர்வண வேதத்திய த்ரைபுர ஸூக்தத்தின் 16-வது ருக்காக இருக்கிறது. [இதற்கும் பாஸ்கரராயர் பாஷ்யம் எழுதியிருக்கிறார். இந்த ருக்கில் காதிவித்யை சொல்லப்பட்டிருக்கிறதென்பது குறிக்கத்தக்கது.]

4. பைங்கள தந்த்ரத்தில் 'த்விகௌ க்லௌ1 மிச்ரௌ ச1' என்ற இரண்டு ஸூத்ரங்களில் (ஸ்ரீசக்ரத்தைப்பற்றிய)

மஹாப்ரஸ்தாரமானது சொல்லப்பட்டிருக்கிறது. இந்த விஷயத்தைப்பற்றியும் பாஸ்கரராயர் சந்தஸ் சாஸ்த்ரத்தைப்பற்றி எழுதியிருக்கும் சந்தோபாஸ்கரமென்ற க்ரந்தத்தில்சொல்லியிருக்கிறார். மேலே சொல்லியபடி சந்தஸ் என்ற பதமானது பைங்கள தந்த்ரத்தையும் குறிக்குமாகையாலும், அந்த தந்த்ரத்தில் இங்கு சொல்லப்பட்டபடி ஸ்ரீசக்ரமானது ஸாரமாக ப்ரதிபாதிக்கப் பட்டிருப்பதாலும் இந்த நாமத்திற்கு இந்த அர்த்தமும் பொருந்தும்.

5. ஸாரமென்றால் பலம், அதாவது மஹாத்ம்யம் என்று அர்த்தம். அம்பாளுடைய மஹாத்ம்யமானது சந்தஸ்ஸுகளால் (வைகரீரூபமான வாக்குகளால்) வெளிப்படுத்தப்படுகிறது என்பது இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

6. சந்தஸ் என்றால் ஸ்வைராசாரம் (தன்னிஷ்டம்போல் நடந்துகொள்வது) என்பதைக்குறிக்குமென்று மேலே சொல்லிய விச்வகோச வசனத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மனதானது எங்கெந்த இடத்தில் ஸந்துஷ்டியை அடையுமோ அந்தந்த இடங்களில் அதைச் செலுத்தவேண்டுமென்றும், அப்படியிருக்கும் போது பரமானந்த ஸ்வரூபமானது ப்ரகாசிக்கிறதென்றும்,

> 'யத்ர யத்ர மனஸ் துஷ்டி: மனஸ் தத்ரைவ தாரயேத் |
> தத்ர தத்ர பராநந்தஸ்வரூபம் ஸம்ப்ரகாசதே ||'

என்று விக்ஞானபைரவபட்டாரகரால் சொல்லப்பட்டபடி, உபாஸக துரந்தரனாயிருப்பவனுடைய மனம் எதைச்செய்ய விரும்புமோ அதுவே தர்மம், எதைச்செய்ய விரும்பாதோ அதுவே அதர்மம். இதே அர்த்தத்தில், ஸந்தேஹத்திற்கிடமான வஸ்துக்களில் ஸத்துக்களுக்கு அவர்களுடைய அந்த:கரண ப்ரவ்ருத்தியே ப்ரமாண மென்பதாக,

> 'ஸதாம் ஹி ஸந்தேஹ பதேஷு வஸ்துஷு
> ப்ரமாணம் அந்த:கரண ப்ரவ்ருத்தய: |'

என்று சாகுந்தலத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. 'ப்ரௌடாந்தம் ஸமயாசாரா:' என்று கல்பஸூத்ரத்தில் சொல்லப்பட்ட படி ஸமயாசாரத்தில் சொல்லப்பட்ட நிர்ப்பந்தங்களெல்லாம் ப்ரௌடோல்லாஸம் வரையில்தான். [உபாஸகனுக்கு ஆரம்ப,

தருண, யௌவன, ப்ரௌட, ததந்த, உன்மன, அனவஸத்தங்க ளென்கிற ஏழு தசைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஸமயாசாரத்தில் சொல்லப்பட்ட நியமங்களெல்லாம் உபாஸகன் ப்ரௌடனாகும் வரையில்தான் அவனைக்கட்டுப்படுத்தும்] அதற்குமேற்பட்டவனாக ஆகிவிட்டால் 'அத:பரம் யதாகாமீ' என்ற கல்ப ஸூத்ரத்தின்படி அவன் இஷ்டப்பட்டபடி நடக்கலாமென்று சொல்லப்பட்டது. 'மதோ ऽதர்ம' அதர்மோ தர்ம:' என்று கௌலோபநிஷத்தில் சொல்லியபடி பிறருக்கு அதர்மமாயிருப்பவை அவன் செய்தால் தர்மமாகும். பிறருக்கு தர்மமாகச் சொல்லப்பட்டவைகளை அவன் செய்யவேண்டுவதில்லை. அவை அவனுக்கு அதர்மமானவை. அதாவது, தர்மத்திற்கு ஆதாரமான விதி நிஷேத வாக்யங்களுக்கெல்லாம் அவன் கட்டுப்பட்டவனல்ல, அவை அவனைக்குறித்துச் சொல்லப்பட்டவையல்ல, என்று தாத்பர்யம்.

7. இப்படி ஸ்வைராசாரபரனாக உபாஸகனிருப்பதைப் பற்றிச் சொல்லப்பட்டதானது அஹம், இதம் என்ற பாவங்களின் ஐக்யத்தையறிந்தவனும் 'ஸர்வம் சாம்பவீரூபம், என்று கௌலோபநிஷத்தில் சொல்லியபடி எங்கும் அம்பாளுடைய ஸ்வரூபமாயிருப்பதான பாவனையையுடையவனுமான உபாஸகபுங்கவனைப்பற்றிச் சொல்லப்பட்டதே தவிர பிறரைப் பற்றியதல்ல.

'பிபன் ந்ருத்யன் வமன் கா தன் ஸ்வைரா சாரபர: ஸ்வயம் |
அஹந்தேதந்தயோரைக்யம் பாவயன் விஹரேத் ஸுகம் ||'

(யோகினீஹ்ருதயம்)

அப்பேர்ப்பட்ட மன: ஸமாதியுடையவனுடைய விருப்பத்திற்கு விஷயமாயிருப்பவையெல்லாம் அவச்யம் தர்மமாகத்தானிருக்கும் என்பது இதின் தாத்பர்யம். இதே அர்த்தத்தில், தர்மத்தின் ப்ரமாணங்களைப்பற்றி மனுஸ்மிருதி முதலியவைகளில் சொல்லுகையில்,

'ச்ருதி: ஸ்ம்ருதி: ஸதாசார: ஆத்மனஸ்துஷ்டிரேவ ச |'

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவற்றில் ஆத்மனஸ்துஷ்டி என்பதினால் மனதின் ப்ரவ்ருத்தியைச் சேர்த்ததானது மேலே சொல்லப்பட்டபடி ஸமாஹிதமான மனதைப்பற்றியது. இல்லாவிட்டால் யாரும் எதையும் செய்ய இடமேற்பட்டுவிடும்.

8. இப்பேர்ப்பட்ட சந்தஸ் (ஸ்வைராசரணம், ஸ்வச்சந்த வ்ருத்தி) ஆனதை ஸாரமாக (ந்யாயமாக) உடையவள் சந்தஸ் ஸாரா.

9. சந்தஸ் என்பது அபிலாஷையை (இச்சையை) குறிக்கும். அதையே ஸாரமாக - நிஷ்க்ருஷ்டமான ரூபமாக - உடையவள் சந்தஸ்ஸாரா. இதனால் அம்பாள் இச்சாசக்தி ஸ்வரூபமாக இருப்பது குறிக்கப்பட்டது.

## शास्त्रसारा

சாஸ்த்ரசாரா (845)

சாஸ்த்ரங்களுக்கெல்லாம் ஸாரமாயிருப்பவள்.

## मन्त्रसारा

மந்த்ரஸாரா (846)

மந்த்ரங்களுக்கெல்லாம் ஸாரமாயிருப்பவள்.

1. 'சாஸ்த்ரயோனித்வாத்' என்ற ப்ரம்ஹஸூத்ரத்தில் சொல்லியபடி, சாஸ்த்ரமென்ற பதமானது வேதத்தைக் குறிப்பதுடன் அதை அனுஸரிக்கும் மீமாம்ஸா முதலானவைகளையும் குறிக்கும். இதேமாதிரி, விதி, நிஷேதங்களை (வேதத்தில் சொல்லுவதுபோல்) சொல்லுகிறவையெல்லாம் சாஸ்த்ரங்களென்பதாக தாந்த்ரிகர்கள் ஒப்புக்கொள்வதுடன் பாமதியிலும்

'ப்ரவ்ருத்திர்வா நிவ்ருத்திர்வா நித்யேன க்ருதகேன வா |
பும்ஸாம் யேனோபதிச்யேத தத் சாஸ்த்ரம் அபிதீயதே ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

2. மந்த்ரமென்ற பதமும் வேதத்தைக் குறிக்கும். அத்துடன் தந்த்ரங்களில் சொல்லப்படும் மந்த்ரங்களையும், (அவ்வித மந்த்ரங்களைச் சொல்லும்) தந்த்ரங்களையுமே குறிக்கும். (இந்த தந்த்ரங்கள் 64 என்று கணக்கிடப்படும்.)

## तलोदरी

தலோதரீ (847)

மெல்லியதான இடையை உடையவள்.

1. தலமென்பது கரதலம் (உள்ளங்கை) முதலியவைகளைக் குறிக்கும். அவைபோல மெல்லியதாயும், ஸமமாயுமிருக்கும்

உதரத்தோடு இருப்பவள் தலோதரீ. அம்பாளுடைய இடை யானது அதிஸூக்ஷ்மமாயிருப்பதைப்பற்றி ஏற்கனவே வந்த

'லக்ஷ்ய ரோம லதாதாரதா ஸமுன்னேய மத்யமா |'

என்ற 35-வது நாமத்தில் சொல்லியிருப்பதைப் பார்க்கவும்.

2. இந்த நாமத்தை முந்தியதிலிருந்து 'அதலோதரீ' என்று பிரிக்கலாம். அம்பாளுடைய விராட் ஸ்வரூபத்தில்,

'அதலாதி மஹாலோகா: கட்யதோ பாகதாம் கதா: |'

என்று தேவீ கீதையில் சொல்லியபடி அதலமென்ற லோக மானது உதரப்ரதேசமாயிருப்பதால் அதலோதரீ என்ற பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

3. லலிதோபாக்யானத்திலடங்கிய 'லலிதாஸ்தவராஜ'த் தில் அம்பாளுடைய விராட் ஸ்வரூபத்தை வர்ணிக்கையில்,

'அதலம் து பவேத் பாதௌ விதலம் ஜானுனீ தவ |
ரஸாதலம் கடிதேச: குக்ஷிஸ்தே தரணீ பவேத் ||'

என்று சொல்லியிருப்பதை அனுஸரித்தும், இங்கு தலோதரீ என்று பொதுவாகச் சொல்லியிருப்பதைக்கொண்டும், ரஸாதல மானது குறிப்பிடப்பட்டதாகவும் சொல்லலாம்.

## उदारकीर्तिः

## உதாரகீர்த்தி: (848)

மஹத்தரமான (அல்லது மிகவும் விஸ்தாரமான) கீர்த்தியை யுடையவள்.

1. அல்லது, உத்க்ருஷ்டமானதும், (எங்கும் வ்யாபித்திருப் பதும்) சீக்கிரம் கிடைக்கக் கூடியதுமான கீர்த்தியை தன்னு டைய உபாஸனையினால் கிடைக்கச்செய்பவள் என்றும் சொல்ல லாம். ['லகு க்ஷிப்ரம் அரம் த்ருதம்' என்ற அக்னி புராணத்திய கோசவசனத்தின்படி அரமென்றால் சீக்ரம் என்று அர்த்தம்.]

2. ரு (ऋ) என்பது தேவர்களின் தாயாரைக் குறிக்கும். அதினால் தேவர்களுக்கு அரா: என்று பெயர் ஏற்படுகிறது. ஆகவே, அம்பாள் தேவர்களையும் கடந்ததான கீர்த்தியோடிருப் பதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

3. ஆரமென்றால் மங்களமென்ற அர்த்தமாகையால் செவ்வாய் என்ற க்ரஹத்திற்குப்பெயர். அதைக் கடந்ததான

கீர்த்தியையுடையவளென்று இந்த நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம். அதாவது, செவ்வாய், முதலான துஷ்டக்ரஹங்களால் உண்டாகும் தோஷங்களைப் போக்கடிப்பவள் என்பது தாத்பர்யம்.

4. ஸூர்யமண்டலத்திலிருக்கும் ஸகுணமான சைதன்யத்திற்கு உத் என்ற பெயருண்டு. இதைப்பற்றி ச்ருதியில் 'ய ஏஷோऽந்தராதித்யே ஹிரண்மய: புருஷ:' என்று ஆரம்பித்து 'தஸ்ய உத்திதி நாம' என்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. 'ஆரா சர்மப்ர ஸேவிகா' என்ற கோசவசனத்தின்படி ஆரா என்பது ஒருவிதமான ஆயுதத்தைக் குறிக்கும். அதைப் போன்றதான கீர்த்தியோடிருப்பவளென்றும் சொல்லலாம்.

5. அல்லது, உத் என்றால் (புருஷனுடைய) துக்கத்தைக் கொடுப்பதான கீர்த்தியென்றும், அதை ஜயிப்பதான கீர்த்தியானது அம்பாளுடைய உபாஸனையினால் ஏற்படுவதால் அம்பாளுக்கு உதாரகீர்த்தி: என்று பெயர் என்பதாகவும் சொல்லலாம்.

6. ஸகுண ப்ரம்ஹத்தை உபாஸிப்பவர்களால் அடையப் படுவதாகச் சொல்லப்படும் அபராஜிதம் என்ற பெயருடைய பரப்ரம்ஹநகரத்தில்,

'அரச்சண்யச் சேதி த்வெள ஸூதாஹ்ரதாவர்ணவ துல்யௌ வர்த்தேதே |'

என்ற ச்ருதிவாக்யத்தில் சொல்லப்பட்டபடி அரமென்றும், ண்யமென்றும் இரண்டு அம்ருத மடுக்கள் ஸமுத்திரம்போல் விஸ்தாரமானவை யிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இவற்றைப்பற்றி 'அனுவ்ருத்தி: சப்தாத்' என்ற ப்ரம்ஹ ஸூத்திரத்தின் பாஷ்யத்தில் ஸ்ரீமதாசார்யாளாலும் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி எங்கும் வ்யாபித்திருக்கும் அரமென்ற ஸூதாஹ்ரதம்போல் உத்க்ருஷ்டமான கீர்த்தியையுடையவள் உதாரகீர்த்தி: என்றும் சொல்லலாம்.

### उद्दामवैभवा

### உத்தாமவைபவா (849)

கட்டிலடங்காத வைபவத்தோடு கூடியவள்.

தாமமென்றால் கட்டும் கயிற்றுக்குப் பெயராகையால்

கட்டில் அடங்குவதை, அதாவது, பகுக்கப்படுவதைக் குறிக்கும் அவ்விதமான கட்டைக்கடந்த, அதாவது, அளவிலடங்காத (அனவச்சின்னமான, பகுக்கமுடியாத) வைபவத்தோடு அம்பாள் இருப்பதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

## वर्णरूपिणी
## வர்ண ரூபிணீ (850)

வர்ணங்களின் ரூபமாக இருப்பவள்.

1. 'த்ரிஷஷ்டிச்சதுஷ்ஷஷ்டிர் வா வர்ணா: சம்புமதேமதா: |
ப்ராக்ருதே ஸம்ஸ்க்ருதே சாபி ஸ்வயம் ப்ரோக்தா: ஸ்வயம்புவா ||'

என்று பாணினி சிக்ஷையில் சொல்லியபடி ஆதியில் பரமேச்வரன் அறுபத்திநாலு வர்ணங்களை (அக்ஷரங்களை) உபதேசித்ததாகச் சொல்லப்படும். அவைகளின் ரூபமாக அம்பாளிருப்பதாக இங்கு சொல்லப்பட்டது

2. அல்லது, வர்ணாச்ரமமென்ற பதத்தில் சொல்லப்பட்ட வர்ணங்களின் ரூபமாக இருப்பதாகவும் சொல்லலாம். வர்ண ஸங்கரமானது ஏற்பட்டால் ஜனங்களுக்கு மஹத்தான ஹானி யுண்டாகுமாகையால் வர்ணங்களாகிற கட்டுப்பாடுகளின் ரூபமாக அம்பாள் இருப்பதாக இங்கு சொல்லப்பட்டது.

## जन्ममृत्युजरातप्तजनविश्रान्तिदायिनी
## ஜன்ம ம்ருத்யு ஜரா தப்த ஜன விச்ராந்திதாயினீ (851)

பிறப்பு, இறப்பு, மூப்பு இவைகளால் தபிக்கப்பட்ட ஜனங்களுக்கு விச்ராந்தியைக் கொடுப்பவள்.

அதாவது, அவற்றாலேற்படும் துக்கத்தைப் போக்குவதான ஆத்மஸௌக்யத்தைக் கொடுப்பவள் என்று தாத்பர்யம்.

## सर्वोपनिषदुद्घुष्टा
## ஸர்வோபநிஷதுத்குஷ்டா (852)

ஸகல உபநிஷத்துக்களாலும் உத்கர்ஷத்தோடு ப்ரதிபாதிக்கப்பட்டவள்.

1. உபநிஷதென்ற பதமானது ரஹஸ்யமாயிருப்பதைக் குறிக்கும். இம்மாத்திரியாகத்தான்,

'யதேவ வித்யயா கரோதி ச்ரத்தயா உபநிஷதா
ததேவ வீர்யவத்தரம் பவதி |'

என்ற ச்ருதி வாக்யத்திற்கு அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆத்மாவை அத்வைதமான ப்ரம்ஹத்தினிடம் சேர்த்து அவித்யையையும், அதிலிருந்து உண்டாகின்றவைவையையும் நாசம் செய்வதால் உபநிஷத் என்ற பெயர் ஏற்படுவதாக,

'உபநீய இமமாத்மானம் ப்ரம்ஹாபாஸ்தத்வயம் ஸத: |
நிஹந்த்யவித்யாம் தஜ்ஜாம் ச தஸ்மாத் உபநிஷன்மதா ||'

என்று ஸ்ரீமதாசார்யாளால் சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் தான் ச்ருதியின் சிரோபாகங்களாயும், ரஹஸ்யங்களாயுமிருக்கும் ஐதரேயம் முதலானவற்றிற்கு உபநிஷத்துக்களென்று பெயர் ஏற்பட்டது.

2. உத்குஷ்டா என்றால் உத்கர்ஷமாக கோஷிக்கப்பட்டவள் என்று இங்கு அர்த்தம். உத்கர்ஷமென்றால் ஐகரூப்யம் என்று இங்கு அர்த்தம். உத்கோஷமென்றால் இரைந்து சொல்லுகிறது என்று ஸாதாரணமாகவே அர்த்தமாயிருந்தபோதிலும் இங்கு அது குஷ்டா என்ற பதத்தினாலேயே,

'உச்சைர் குஷ்டம் து கோஷணம்'

என்ற கோசவசனத்தின்படி கிடைத்துவிடுவதால் உத்கர்ஷமாக கோஷிக்கப்பட்டவள் என்று அர்த்தம் சொல்லப்பட்டது.

3. ஐகரூப்யம் என்பதினால் ஒவ்வொரு வேதாந்தத்திலும் சொல்லப்பட்ட ஸகுண ப்ரம்ஹத்தின் உபாஸ்திகளுக்குள் பேதமில்லாதது குறிக்கப்பட்டது. இதுவே 'சோதனாத்யவிசேஷாத்' என்ற வேதாந்த ஸூத்ரத்திலும் சொல்லப்பட்டது. ஸகுண ப்ரம்ஹத்தின் உபாஸனையைப்பற்றி எல்லா வேதாந்தங்களிலும் சொல்லப்பட்டிருப்பவைகளுக்குள் பேதமில்லையாகையால் அம்மாளுக்கு இந்தப் பெயர் ஏற்பட்டது என்று தாத்பர்யம்.

## शान्त्यतीताकलात्मिका

## சாந்த்யதீதா கலாத்மிகா (853)

சாந்த்யதீதமென்ற கலாஸ்வரூபமாயிருப்பவள்.

ஆகாசத்திலிருக்கும் கலைக்கு சாந்த்யதீதமென்று பெயரென்பதாக,

'சாந்த்யதீத கலாத்வைத நிர்வாணானந்த போததா |'

என்று சைவாகமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதோடு அபின்னமாக அம்பாளிருப்பதாக இங்கு சொல்லப்பட்டது.

**गम्भीरा**

**கம்பீரா** (854)

அந்தம் (முடிவு) இல்லாதவள்.

1. கம்பீரமென்றால் (அளவிட முடியாத) ஆழமாயிருப்பதற்குப்பெயர். அதாவது அனந்தமென்று தாத்பர்யம்.

2. அல்லது, மஹாஹ்ரத (மஹத்தான மடு) ஸ்வரூபமாயிருப்பவளென்று சொல்லலாம். அம்பிகை மஹாஹ்ரத ஸ்வரூபமாயிருப்பதையும், அவ்வித ஸ்வரூபத்தை அநுஸந்தானம் செய்வதினால் மந்த்ரத்தின் வீர்யமானது அநுபவமாவதையும்,

'மஹாஹ்ரதானுஸந்தானாத் மந்த்ரவீர்யானுபவ: |'

என்ற சிவஸூத்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ஸூத்ரத்தின் அர்த்தம் பின்வருமாறு வார்த்திகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'மஹாஹ்ரத இதி ப்ரோக்தா சக்திர் பகவதீ பரா |
அநுஸந்தானமித்யுக்தம் தத் தாதாத்ம்ய விமர்சனம் ||
மந்த்ரவீர்யமிதி ப்ரோக்தம் பூர்ணாஹந்தா விமர்சனம் |
ததீயோऽனுபவஸ்தஸ்ய ஸ்புரணம் ஸ்வாத்மன: ஸ்புடம் ||'

அதாவது, மஹாஹ்ரத ஸ்வரூபமாயிருக்கும் அம்பிகையோடு தாதாத்ம்யமாக இருப்பதாக அநுஸந்தானம் செய்து உபாஸித்தால் தன்னுடைய ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தின் அநுபவம் ஏற்படுமென்று தாத்பர்யம். அம்பிகையானவள் ஸகல ஜகத்துக்களையும் தனக்குள்ளிருந்து வெளிப்படுத்துவதாலும் தேசகாலங்களுக்கு அடங்காமல் இருப்பதாலும் மஹாஹ்ரதமென்று பெயரோடிருப்பதாக,

'பரா பட்டாரிகா ஸம்வித் இச்சா சக்தி புர:ஸரம் |
ஸ்தூலப்ரமேய பர்யந்தம் வமந்தீ விச்வமாந்தரம் ||
ப்ரமாத்ரந்தர் பஹீ ரூபா ஹ்ருஷீக விஷயாத்மனாம் |
ப்ரவர்த்தகத்வ ஸ்வச்சத்வ கம்பீரத்வாதி தர்மத: |
மஹாஹ்ரதோ ஜகத்வ்யாபீ தேசகாலாத்யகோசர: ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

3. ग (கம்) என்பது கணபதி பீஜம். ஆகவே அது கணபதியைக் குறிக்கும். அவருடைய பயத்தை போக்கடிப்பவள் என்பதினுல் கம்பீரா என்ற பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

## गगनान्तस्था

**ககனாந்தஸ்த்தா** (855)

ஆகாசத்தின் மத்தியிலிருப்பவள்.

1 இந்த ஆகாச பதமானது தஹராகாசம், (பஞ்சபூதங்களிலொன்ருன) பூதாகாசம், அல்லது பராகாசம் இவற்றைக் குறிக்கும். இவ்விதம் ஆகாசத்தின் மத்தியிலிருப்பதை,

'வ்ருக்ஷ இவ ஸ்தப்தோ திவி திஷ்டத்யேக: |'

என்று ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

2. அல்லது, ககனத்தின் (ஆகாசத்தின்) அந்தத்தில் (நாசகாலத்தில்) கூட, இருப்பவளென்று சொல்லலாம்.

3. ககனம் (ஆகாசம்) என்பது ஹகாரத்தால் குறிப்பிடப்படும். அந்தஸ்த்தங்களென்ருல் ய, ர, ல, வ என்ற எழுத்துக்கள். இவ்வைந்தும் பஞ்சபூதங்களுடைய பீஜாக்ஷரங்கள். (இவை பஞ்ச பூஜையின்போது சொல்லப்படுவது வழக்கம்). இவை இந்த நாமத்தால் குறிக்கப்பட்டதாகவும் சொல்லலாம்.

## गर्विता

**கர்விதா** (856)

கர்வத்தோடிருப்பவள்.

ஜகத்தை நிர்மாணிக்கும் விஷயத்திற்கு காரணமாயிருக்கும் பராஹந்தா ரூபமாக அம்பாளிருப்பதால் இந்த நாமம் ஏற்பட்டது. (கர்வத்தை அஹந்தையென்று ஸாமான்யமாகச் சொல்லப்படும்.)

## गानलोलुपा

**கானலோலுபா** (857)

கானத்தில் விசேஷமான ப்ரியத்தோடிருப்பவள்.

கானமென்பது தத, ஆனத்த, ஸுஷிர, கனமென்ற நான்கு வகைகளையும், வீணை முதலான வாத்யங்களின் கானத்தையும், கந்தர்வகானம் முதலான வாய்ப்பாட்டுக்களையும், ஸாமகானத்தையும் குறிக்கும்.

## कल्पनारहिता

## கல்பனாரஹிதா (858)

கல்பனைகள் யாதொன்றும் இல்லாதவள்.

1. இந்த்ரியங்களுக்கு கோசரமான ஜகத்தைப்பற்றி நம்முடைய மனதில் தோன்றும் எண்ணங்களுக்கு கல்பனைகளென்று பெயர். அவை வாஸனாமயமானவை. அவையெல்லாம் நாமாகக் கல்பித்துக்கொள்வதினால், அம்பாளுக்கு அவ்விதமான கல்பனை யாதொன்றுமில்லை என்பதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

2. அல்லது கல்ப (ப்ரளயகாலத்திலும் கூட), நார (ஜீவன்களுக்கு), ஹிதா (ஹிதத்தைச் செய்பவள்) என்று பிரித்தும் அர்த்தம் சொல்லலாம். 'ஸம்வர்த்த: ப்ரளய: கல்ப:' என்ற கோச வசனத்தின்படி கல்பமென்றால் ப்ரளயமென்று அர்த்தம். ஜீவன்களை ஸரியான மார்க்கத்தில் அழைத்துப்போவதால் பரமாத்மாவுக்கு நரனென்று பெயர்.

'நயதீதி நர: ப்ரோக்த: பரமாத்மா ஸனாதன: |'

ஆகவே, அவரைச் சேர்ந்தவர்களான ஜீவன்களுக்கு நாரா: என்று பெயர். ஸகல வஸ்துக்களும் நாசமடைவதான ப்ரளய காலத்திலும் ஜீவன்களை அவர்களுடைய வாஸனாரூபமாகத் தன்னுடைய உதரத்தில் வைத்துக் காப்பாற்றுவதால், அவர்களுக்கு ஹிதத்தைச் செய்பவளென்று அம்பாளை இந்த நாமத்தில் சொல்லப்பட்டது. அப்படி ப்ரளயகாலத்திலேயே ஹிதத்தைச் செய்யும்போது ஸ்ருஷ்டி, ஸ்திதி காலங்களில் ஹிதம் செய்வதைப்பற்றி சொல்லத் தேவையில்லையென்று தாத்பர்யம்.

'மய்யனந்தே சிதம்போதௌ ஆச்சர்யம் ஜீவவீசய: |
உத்யந்தி க்னந்தி கேலந்தி ப்ரவிசந்தி ஸ்வபாவத: ||'

(அஷ்டாவக்ரகீதை)

**काष्ठा**

**காஷ்டா** **(859)**

வேதாந்த வாக்யார்த்த தத்வங்களில் நிர்ணயிக்கப்பட்ட ரூபத்தோடிருப்பவள்.

1. அதாவது, வேதாந்த வாக்யங்களில் முடிவானதாகச் சொல்லப்படும் ஸ்வரூபமாயிருப்பவள், என்று அர்த்தம்.

'ஸா காஷ்டா ஸா பராகதி: |' (ச்ருதி)

'ப்ரதீதம் அப்ரதீதம் வா ஸதஸச்ச பர: சிவ: |
இதி வேதாந்தவாக்யானாம் நிஷ்டா காஷ்டேதி கத்யதே |
(ஸூதஸம்ஹிதை)

2. கலா, காஷ்டா என்பவை காலநியமத்தின் பேதங்கள். அவற்றில் காஷ்டா என்பது பதினெட்டு நிமிஷம் கொண்டது. அவ்விதமான காலரூபமாயிருப்பவளென்றும் சொல்லலாம்.

'கலா காஷ்டாதி ரூபேண பரிணாம ப்ரதாயினி |
விச்வஸ்யோபரதௌ சக்தே நாராயணி நமோஸ்து தே ||'
(தேவீமாஹாத்ம்யம்)

3 'காஷ்டா தாருஹரித்ராயாம் காலமான ப்ரபேதயோ: |'

என்ற ரபஸகோசவசனத்தின்படி காஷ்டா என்பது ஒருவிதமான மரத்தைக் குறிக்கும். அது சிவ சக்திகளோடு அபின்னமானதென்பதாக மைராளதந்த்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

4. பரமசிவனுடைய அஷ்டமூர்த்திகளில் ஆகாசாத்மகமான மூர்த்திக்கு பீமனென்று பெயர். அவருடைய பத்னீ ரூபத்திற்கு காஷ்டா என்று பெயர். பத்து திக்குகளுடைய ரூபமாயிருப்பவள். இவர்களுக்கு ஸ்வர்கமென்ற குமாரன் இருப்பதாகச் சொல்லப்படும்.

'சராசராணாம் பூதானாம் ஸர்வேஷாம் அவகாசத: |
வ்யோமாத்மா பகவான் தேவ: பீம இத்யுச்யதே புதை: ||
மஹாமஹிம்னோ தேவஸ்ய பீமஸ்ய பரமாத்மன: |
தசஸ்வரூபா திக்பத்னீ ஸுத: ஸ்வர்கச்ச ஸூரிபி: |'
(லிங்கபுராணம்)

'நாம்னா ஷஷ்டஸ்ய யா பீமா தனுராகாச உச்யதே |
திச: பத்ன்ய: ஸ்ம்ருதாஸ்தஸ்ய ஸ்வர்கஸ்தஸ்ய ஸுத: ஸ்ம்ருத: ||'
(வாயு புராணம்)

5. எல்லாவற்றையும் தாண்டி (கடந்து) இருப்பதால் காஷ்டா என்று பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

'அத்யதிஷ்டத் தசாங்குலம் |' (ச்ருதி)

'விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்னம் ஏகாம்சேன ஸ்திதோ ஜகத் ||' (கீதை)

## अकान्ता

## அகாந்தா (860)

பாபத்தைப் போக்குகிறவள்.

'அகம் பாபே ச து:கே ச' என்ற கோசவசனத்தின்படி அகமென்பது பாபம், துக்கம் இவற்றைக் குறிக்குமாகையால் அவைகளை நாசம் செய்பவள் அகாந்தா.

## कान्तार्धविग्रहा

## காந்தார்த விக்ரஹா (861)

தன் புருஷனுடைய சரீரத்தின் பாதியான ரூபத்தையுடையவள்.

1. இதனுல் பரமசிவனுடைய அர்த்தநாரீச்வரரூபமானது சொல்லப்பட்டது.

2. பரமசிவனுடைய ரூபத்தில் பாதியாக அம்பாளிருப்பதாக இந்த நாமத்திற்கு அர்த்தம் சொல்வதுடன் அம்பாளே தன் காந்தனை (பரமசிவனை) தன் சரீரத்தின் பாதியாக உடைத்தாயிருக்கிறுளென்பதாகவும் அர்த்தம் சொல்லலாம். அதாவது, பரமசிவனை ப்ரதானமாகச் சொல்லி அவர் சரீரத்தின் பாதியாக அம்பாளிருக்கிறுளென்றும், அம்பாளை ப்ரதானமாகச் சொல்லி அவள் சரீரத்தின் பாதியாக பரமசிவன் இருக்கிறுரென்றும், இரண்டுவிதமாகவும் இந்த நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம்.

3. க என்ற அக்ஷரத்தின் முடிவிலிருப்பது காந்தம்—அதாவது ख என்ற அக்ஷரம். இது ஸ்வர்கத்தைக் குறிக்கும். அர்த்தமென்ருல் பாகத்தைக் குறிக்கும். ஆகவே ஸ்வர்கத்தைத் தன் சரீரத்தின் ஒரு பாகமாக உடையவள் என்றும் இந்த நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம்.

'பாதோऽஸ்ய ஸர்வா பூதானி த்ரிபாதஸ்யாம்ருதம் திவி |' (ச்ருதி)

## कार्यकारणनिर्मुक्ता

### கார்ய காரண நிர்முக்தா (862)

கார்யம், காரணம் இவைகளிலிருந்து விடுவிக்கப்பட்டவள்.

1. கேவல சைதன்ய ஸ்வரூபமான பரப்ரம்ஹத்துக்கு செய்யவேண்டியதானது யாதொன்றும் கிடையாதென்று சொல்லப்படும்.

'ந மே பார்த்தாஸ்தி கர்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சன |'
(கீதை)

2. காரணமென்பது மூலப்ரக்ருதியையும், கார்யமென்பது மஹத் முதலான தத்வங்களையும் குறிக்கும். இவையிரண்டிற்கும் காரணமாக பரப்ரம்ஹஸ்ரூபிணியான அம்பாளிருப்பதாலும், அம்பாளிடத்தில் அவை பரமார்த்தத்தில் இல்லாததாலும் இந்தப் பெயர் ஏற்பட்டதென்று சொல்லலாம்.

'ந தஸ்ய கார்யம் கரணம் ச வித்யதே |' (ச்ருதி)

## कामकेलितरङ्गिता

### காமகேளி தரங்கிதா (863)

ச்ருங்கார கேளிகளை மேலுக்குமேல் உடையவள்.

1. லலிதாம்பிகை ச்ருங்கார ரஸப்ரதானையென்பதாக ஏற்கனவே சொல்லப்பட்டது. அம்பாளுடைய காமகேளிகள் தரங்கங்கள் (அலைகள்) போல் அடுத்தடுத்து ஏற்பட்டுக்கொண்டிருப்பதாய் இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

2. காமகேளி என்றால் காமேச்வரருடைய கேளிகள் என்றும் சொல்லலாம். காமேச்வரருடைய ச்ருங்கார, க்ரீடா விலாஸங்கள் அம்பாளிடத்தில் (அலைகள்போல்) அடுத்தது ஏற்பட்டுவருவதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

## कनत्कनकताटङ्का

### கனத்கனகதாடங்கா (864)

ப்ரகாசத்தோடு கூடிய ஸுவர்ண தாடங்கங்களையுடையவள்.

## लीलाविग्रहधारिणी

## லீலா விக்ரஹ தாரிணீ (865)

லீலையாக சரீரங்களை தரிப்பவள்.

1. அம்பாள் அவதரிக்கும்போது ரூபங்களையெடுப்பதானது லீலையாக—அதாவது அனாயாஸமாக—எடுக்கப்படுகிறதென்பது தாத்பர்யம்.

2. அல்லது, தன் விளையாட்டுக்காக (விநோதத்திற்காக) ரூபங்களையெடுப்பவள் என்றும் அர்த்தம் சொல்லலாம்.

3. அல்லது, லீலையென்று பெயருடைய பதிவ்ரதாரூபமாக இருப்பவளென்றும் சொல்லலாம். இவள் பத்மராஜனென்பவனுடைய மஹிஷியென்றும், மஹா பதிவ்ரதையென்றும் இவளைப் பற்றிய வ்ருத்தாந்தமும் யோகவாஸிஷ்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## अजा

## அஜா (866)

ஜன்மமில்லாதவள்.

1. அதாவது, பிறப்பில்லாதவள் என்று அர்த்தம். இதே மாதிரி ச்ருதியில்,

'அஜாமேகாம் லோஹிதக்ருஷ்ண சுக்லாம் |'

என்றும்,

'நஜாதோ நஜநிஷ்யதே |'

என்றும், கீதையில்,

'நஹி ஜாதோ ந ஜாயே஽ஹம் ந ஜனிஷ்யே கதாசன |
க்ஷேத்ரஜ்ஞ: ஸர்வபூதானாம் தஸ்மாத்: அஹம் அஜ: ஸ்ம்ருத: ||

என்றும் சொல்லப்பட்டது.

2. பிறப்பிருந்தால் மரணம் நிச்சயமாக உண்டு என்பதாக,

'ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யு: த்ருவம் ஜன்ம ம்ருதஸ்ய ச |'

என்று சொல்லப்படுவதால் ஜன்மமே இல்லாதபோது மரணமும் இல்லையென்பதாக ஏற்படுகிறது. இதையேதான் அடுத்த நாமத்தில் சொல்லப்படுகிறது.

## क्षयविनिर्मुक्ता

### க்ஷயவினிர்முக்தா (867)

மரணமில்லாதவள்.

க்ஷயமென்றால் க்ருஹத்திற்குப் பெயர். அதிலிருக்கும் போதே தன் உபாஸகர்கள் விசேஷமாக முக்தியை அடையும்படி அம்பாள் செய்வதால் இந்தப்பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம். ஸாதாரணமான முமுக்ஷுக்கள் விஷயங்களிலிருந்து பயந்தவர்களாய் க்ருஹங்களை விட்டு ஓடிவிடுகிறார்கள். அம்பிகையின் உபாஸகர்களோ க்ருஹங்களிருந்துகொண்டே முக்தியை அடைகிறார்களென்று தாத்பர்யம். இதையேதான் பாஸ்கரராயர் தன்னுடைய 'சிவஸ்துதி'யில்,

> 'யதி பரமிச்சஸி தாம த்யஜ மா நாம ஸ்வகம் தாம |
> பரபத நியமன தாம ஸ்மர ஹ்ருதி காமத்விஷோ நாம ||'

என்றும், துர்வாஸ தேசிகேந்த்ரா 'தேவீமஹிம்நஸ்தவ'த்தில்,

> 'கேஹம் நாகதி கர்வித: ப்ரவணதி ஸ்த்ரீ ஸங்கமோ மோக்ஷதி' |

என்றும் சொல்லியிருக்கிறார்கள்.

## मुग्धा

### முக்தா (868)

விசேஷமான ஸௌந்தர்யத்தோடு கூடியவள்.

'முக்த: ஸுந்தர மூடயோ:' என்ற கோசவசனத்தின்படி முக்தனென்றால் மூடனையும் குறிக்கும். இந்த நாமத்தை முந்திய நாமத்திலிருந்து 'அமுக்தா' என்று பிரித்து முக்தர்களான (மூடர்களான) உபாஸகர்களில்லாதவள் என்றும் அர்த்தம்சொல்லலாம்.

## क्षिप्रप्रसादिनी

### க்ஷிப்ர ப்ரஸாதினீ (869)

சீக்கிரத்தில் அனுக்ரஹம் செய்பவள்.

1. அதாவது, பக்தர்களுடைய உபாஸனையினால் அம்பிகைக்கு ஸ்வல்ப காலத்திற்குள்ளேயே ஸந்தோஷம் ஏற்பட்டு அனுக்ரஹம் செய்கிறாள் என்று தாத்பர்யம். இதேமாதிரி பரம சிவனைப்பற்றி,

'க்ரமேண லப்யதேऽன்யேஷாம் முக்திராராதனாத் த்விஜா: |
ஆராதனாத் உமேசஸ்ய தஸ்மின் ஜன்மனி முச்யதே ||'

என்று ஸௌரபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

2. இவ்விதம் ஒரு ஜன்மத்திலேயே முக்தி கிடைத்துவிடுவதாகச் சொல்லப்படுவதானது மிகவும் தீவ்ரமான பக்தியோடு கூடிய உபாஸக ச்ரேஷ்டர்களைப்பற்றிச் சொல்லப்பட்டது. ஸாமான்யமான பக்தியுடையவள் மறுஜன்மம் அல்லது நான்காவது ஜன்மத்தில் முக்தியடைவதாகச் சொல்லப்பட்டது.

'அல்ப பாவேऽபி யோ மர்த்ய: ஸோऽபி ஜன்ம த்ரயாத் பரம் |
ந யோனி யந்த்ர பீடாயை பவிஷ்யதி ந ஸம்சய: ||'

(சிவபுராணம்)

'அன்யதா ஸம்ப்ரதாயேன ஜபஹோமார்ச்சனாதிகம் |
க்ருதம் ஜன்மாந்தரே ஸம்யக் ஸம்ப்ரதாயாய கல்பதே ||'

(தந்த்ர ராஜம்)

## अन्तर्मुखसमाराध्या

அந்தர்முக ஸமாராத்யா (870)

அந்தர்முகமாக நன்றாய் ஆராதிக்கப்படக்கூடியவள்.

## बहिर्मुखसुदुर्लभा

பஹிர்முக ஸுதுர்லபா (871)

பஹிர்முகமாக ஆராதிப்பதினால் கிடைப்பதற்கு அரிதாயிருப்பவள்.

அந்தர் முகமென்றால் (ஆத்மாவைக் குறித்து) உள்நோக்கிய சித்த வ்ருத்தி. பஹிர்முகமென்றால் (விஷயங்களைக் குறித்து) வெளிநோக்கிய சித்த வ்ருத்தி. அந்தர்முகமான சித்த வ்ருத்தியோடிருப்பவர்களால் அம்பிகை எளிதில் ஆராதிக்கக்கூடியவளென்றும், பஹிர்முகமான சித்த வ்ருத்தியையுடையவர்கள் அம்பிகையை எளிதில் உபாஸிக்க முடியாதென்றும், இந்த இரண்டு நாமங்களில் சொல்லப்பட்டது. இம்மாதிரி ஸ்ரீமதாசார்யாளும் 'தரளகரணானாம் அஸுலபா' என்பதாக 'ஸௌந்தர்யலஹரி'யில் சொல்லியிருக்கிறார்கள்.

## त्रयी

**த்ரயீ** (872)

(ருக், யஜுஸ், ஸாமமென்ற) மூன்று வேதங்களின் ரூபமாயிருப்பவள்.

1. ஸாதாரணமாக, அதர்வணவேதத்தைக் கணக்கில் சேர்க்காமல் மேலே சொல்லிய மூன்றை மட்டும் சேர்த்து வேதங்களை 'த்ரயீ' என்று சொல்வது வழக்கம்.

'ஸ்த்ரியாம் ருக் ஸாம யஜுஷீ இதி வேதாஸ்த்ரயஸ் த்ரயீ |'
என்பது கோச வசனம். இவை மூன்றும் அம்பிகையின் ரூபங்களாக சொல்லப்பட்டது.

'மமைவான்யா பராசக்தி: வேதஸம்ஜ்ஞா புராதனீ |
ருக் யஜுஸ் ஸாமரூபேண ஸர்காதௌ ஸம்ப்ரவர்த்ததே ||'
என்று அம்பாள் ஹிமவானுக்குச் சொன்னதாக கூர்மபுராண வசனமிருக்கிறது.

'ஆன்வீக்ஷிகீ த்ரயீ தேவி தண்டநீதிச்ச கத்யஸே |' (பத்மபுராணம்)
'ருக் யஜுஸ்: ஸாமபாகேன ஸாங்கவேத கதா யத: |
த்ரயீதி பட்யதே லோகே த்ருஷ்டாத்ருஷ்ட ப்ரஸாதினீ ||'

2. ருக்வேதமானது 'அக்னிமீடே' என்றபடி அகாரத்தோடு ஆரம்பிக்கிறது. ஸாமவேதமும் அதேமாதிரி 'அக்ன ஆயாஹி' என்றபடி அகாரத்தில் ஆரம்பிக்கிறது. யஜுர்வேதமானது 'இஷே த்வோர்ஜே த்வா' என்றபடி இகாரத்தோடு ஆரம்பிக்கிறது. ஆக, இந்த ஆரம்பாக்ஷரங்களான அ, இ, அ என்பவற்றைக் கீழே சொல்லப்பட்டபடி சேர்த்தால் (சுசியென்ற பெயருடைய) வாக்பவபீஜமானது ஏற்படுகிறதென்றும் அதற்கு த்ரயீ வித்யையென்ற பெயரென்பதாக,

'அகாராதி: ஸாமவேதோ ருக்வேதச்ச ததாதிக: |
யஜுர்வேத இகாராதி: தேஷாம் ஸம்யோகத: சுசி: |
தன்னிஷ்பத்திம் ச்ருணு ப்ராஜ்ஞே ப்ரோக்தான் பூர்வாதரக்ரமாத் |
விலிக்ய யோஜயேத் பூர்வம் சப்தசாஸ்த்ரானுஸாரத: ||
குணஸந்த்யா ருக்யஜுஷம் ததஸ்தேனுபரம் ததா |
வ்ருத்திஸந்த்யா ஸமாயுஜ்யாத் இத்யுத்பன்னம் சுசேர் வபு: |
தேன த்ரயீமயீ வித்யா கார்யகாரணயோகத: ||'
என்று தேவீபுராணத்தில் சொல்லப்பட்டது.

ஆகவே த்ரயீ என்பதானது வாக்பவ பீஜத்தைக் குறிப்ப தென்றும், அந்த ரூபமாக அம்பாளிருப்பதாக இங்கு சொல்லப் பட்டதாகவும் சொல்லலாம்.

3. வேதங்களைக் கணக்கிடுவதில் அதர்வண வேதத்தைச் சேர்த்து நான்கு என்பதாகச் சொல்லவேண்டுமென்றும், த்ரயீ என்ற பதமானது வேதங்கள் மூன்று என்பதாகச்சொல்லாமல், எல்லா வேதங்களிலுமுள்ள கர்ம, உபாஸனா, ஞான காண்டங்க ளென்ற மூன்றைத்தான் குறிக்கிறதென்றும், இன்னொருவித அபிப்ராயமுண்டு. இதைப்பற்றி சாரதா திலகத்தின் வ்யாக் யானம் முதலியவற்றைப் பார்க்கவும்.

## त्रिवर्गनिलया

## த்ரிவர்க நிலயா (873)

த்ரிவர்கத்தை வாஸஸ்தானமாக உடையவள்.

'த்ரிவர்கோ தர்ம காமார்த்தை:' என்ற கோசவசனத்தின் படி தர்ம, அர்த்த, காமங்களை த்ரிவர்கமென்றும், அவற்றுடன் மோக்ஷத்தைச்சேர்த்து சதுர்வர்கமென்றும் சொல்லப்படும்.

## त्रिस्था

## த்ரிஸ்த்தா (874)

மூன்று காலத்திலுமிருப்பவள்.

1. அதாவது, பூத, வர்த்தமான, பவிஷ்யத் என்ற மூன்று காலங்களிலும் இருப்பவள் என்று அர்த்தம்.

2. அல்லது, ப்ரணவத்தின் பாகங்களான அகார, உகார, மகாரங்களிலும், அல்லது, மூன்று லோகங்களிலும், அபேதமாக இருப்பதாகவும் சொல்லலாம். தவிர, லோகத்திலுள்ள மும் மூன்றாகச் சொல்லப்படும் த்ரிபுடிகள், எல்லாவற்றிலும் அம்பா ளிருப்பதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

'த்ரயோ லோகாஸ் த்ரயோ தேவாஸ் த்ரைவித்யம் பாவகத்ரயம் |
த்ரீணி ஜ்யோதீம்ஷி வர்காச்ச த்ரயோ தர்மாதயஸ் ததா ||
த்ரயோ குணாஸ் த்ரய: சப்தா: த்ரயோ தோஷாஸ் ததாச்ரமா: |

த்ரய: காலாஸ் ததாவஸ்த்தா: பிதரோऽஹர்நிசாதய: |
மாத்ரா தாயம் ச தே ரூபம் த்ரிஸ்த்தே தேவி ஸரஸ்வதி ||'
(மார்க்கண்டேய புராணம்)

## त्रिपुरमालिनी
## த்ரிபுரமாலினீ (875)

த்ரிபுரமாலினீ தேவியின் ரூபமாயிருப்பவள்.

ஸ்ரீசக்ரத்திலுள்ள அந்தர்தசார சக்ரத்தின் அபிமானினியான தேவதைக்கு த்ரிபுரமாலினீ என்று பெயர்.

## निरामया
## நிராமயா (876)

ரோகமே இல்லாதவள்.

## निरालम्बा
## நிராலம்பா (877)

ஆலம்பம் யாதொன்று மில்லாதவள்.

ஆலம்பமென்றால் பிடிப்பு என்றர்த்தம். லோகத்திலுள்ள ஸகலமும் அம்பிகையால் நிலைபெற்றிருப்பதால் அவற்றிற்கெல்லாம் அவள் ஆலம்பனமாயிருக்கிறாள். அப்படி ஸர்வாலம்பனமாயிருப்பவளுக்குத் திரும்பவும் ஆலம்பனம் இருக்கமுடியாதகையால் இந்தப் பெயர் ஏற்பட்டது.

## स्वात्मारामा
## ஸ்வாத்மாராமா (878)

தன்னுடைய ஆத்மாவினிடத்திலே க்ரீடித்துக்கொண்டிருப்பவள்.

1. அதாவது, தன்னுடைய ஆத்மஸ்வரூபத்தில் ஆனந்தத்தோடு இருப்பவள் என்று சொல்லப்பட்டது.

2. அல்லது, தன்னுடைய ஆத்மாவை இரண்டாகப் பிரித்து அன்யோன்யமாக க்ரீடித்துக்கொண்டிருப்பவளென்றும் சொல்லலாம். ஆதியில் ஒன்றாக இருந்த பரப்ரம்ஹமானது தான் தனியாக இருப்பதினால் ஸந்தோஷமடையாமலிருக்கவே

ஸ்த்ரீ புமான்களாகப் பிரிந்து க்ரீடித்துக்கொண்டு ஸந்தோஷமடைந்ததாக ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸ வை ந ரேமே, தஸ்மாத் ஏகாகீ ந ரமதே ஸ த்விதீயம் ஐச்சத், ஸஹயேதாவாநாஸ யதா ஸ்த்ரீ புமாம்ஸௌ ஸம்பரிஷ்வக்தௌ ஸ இமமேவாத்மானம் த்வேதா பாதயத் தத: பதிச்ச பத்னீ ச அபவதாம் |'

3. ஜகத்தானது ஸ்ருஷ்டிகாலத்தில் அம்பிகையின் மனதிலிருந்து உண்டாகி, ஸம்ஹார காலத்தில் அந்த மனதிலேயே ஒடுங்கி விடுவதாகச் சொல்லப்படும். அவ்விதமான ஜகத்தானது அம்பிகையின் விசித்ரமான க்ரீடோத்யானமாயிருப்பதாலும், அது (மேலே சொல்லியபடி) அம்பிகையின் மனதிலிருப்பதாலும், அந்த (தன்) மனதையே க்ரீடோத்யானமாக (ஆராமமாக) உடையவளென்றும் இந்த நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம்.

'ஏகஸ்து ப்ரபுசக்த்யா வை பஹுதா பவதீச்வர: |
பூத்வா யஸ்மாச்ச பஹுதா பவத்யேக: புனஸ்து ஸ: ||'

(வாயுபுராணம்)

4. ஸ்வ—தன்னுடையதான ஜகத்தென்ன, ஆத்மா—ப்ரம்ஹமென்ன, இவற்றுடன், ஆராம:—க்ரீடனம், விளையாடுதல் என்பதை உடையவள் ஸ்வாத்மாராமா. அதாவது, இரண்டிலுமிருப்பவள் என்று தாத்பர்யம்.

'த்வம் அக்ஷரம் பரம்தேவி யச்ச ஸர்வம் ப்ரதிஷ்ட்டிதம் |
அக்ஷரம் ப்ரம்ஹ பரமம் ஜகச்சைதத் க்ஷராத்மகம் ||
தாருண்யவஸ்த்திதோ வன்ஹி: பௌமாச்ச பரமாணவ: |
ததா த்வயி ஸ்த்திதம் ப்ரம்ஹ ஜகச்சேதம் அசேஷத: ||'

(மார்க்கண்டேய புராணம்)

## सुधासृतिः

ஸுதாஸ்ருதி: (879)

அம்ருத தாரா ஸ்வரூபமாயிருப்பவள்.

1. ஸஹஸ்ராரத்தின் கர்ணிகையில் சந்த்ரமண்டலமிருப்பதாகவும், அது அம்ருதமயமானதென்றும் சொல்லப்படும். குண்டலினீ சக்தியானவள் ஷட்சக்ரபேதனம் செய்து ஸஹஸ்ராரத்திற்கு வந்தபிறகு அங்கிருக்கும் சந்த்ரமண்டலத்திலிருந்து அம்ருதம்

பெருகச்செய்வதைப்பற்றி ஏற்கனவே வந்த 'ஸுதாதாரா பிவர்ஷிணி' என்ற 106-வது நாமத்திலும் அதற்கு முந்தியும் பிந்தியுமுள்ள நாமங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ரீமத் ஆசார்யாளாலும் 'ஸௌந்தர்ய லஹரி'யில் 'மஹீம் மூலாதாரே', 'ஸுதாதாரா ஸாரை:' என்று 9, 10 ச்லோகங்களில் இதைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்கள். அவ்விதமான அம்ருதப்ரவாஹ ரூபமாக அம்பாளிருப்பதாக இங்கு சொல்லப்பட்டது. தவிரவும் அப்படிப்பட்ட ப்ரவாஹத்தை யுண்டுபண்ணும் குண்டலினீ ஸ்வ ரூபமாக இருப்பதாகவும் சொல்லலாம்.

2. இவ்விதமான அம்ருதப்ரவாஹமானது டாகினீ முத லானவர்களுடைய மண்டலங்களை வ்யாபித்து வருவதில் அம்மா திரி ஸ்ரவிப்பதையே அம்பிகையின் ரூபமாக இங்கு சொல்லப் பட்டது.

3. சந்த்ரமண்டலத்தின் அம்ருதவர்ஷங்களிலிருந்து அக்னி, ஸூர்யன் முதலான தேவர்களுக்கு த்ருப்தி ஏற்படுவதாகச் சொல்லப்படும். அவ்விதமான அம்ருதவர்ஷ ரூபமாயிருப்பவ ளென்றும் சொல்லலாம்.

'தசபி: பஞ்சபிச்சைவ ஸுதாம்ருத பரிஸ்ரவை: |
க்ருஷ்ணபக்ஷே ஸதா பீத்வா ஜாயந்தே பீவரா: ஸுரா: |
தத் ஸர்வம் சாம்பவீ மாயா ......... ||' (வாயுபுராணம்)

4. ஜ்வர, விஷஹர ப்ரயோகங்களில் அம்பிகையானவள் அம்ருதவர்ஷிணியாக த்யானிக்கப்படுவது வழக்கம். இதைப் பற்றி ஞானார்ணவத்தில்

'ஸ்ரவத் பீயூஷதாராபி: வர்ஷந்தீம் விஷஹாரிணீம் |'

என்பது முதலான இடங்களிலும், ஸ்ரீமதாசார்யாளுடைய 'ஸௌந்தர்ய லஹரி'யில் 'கிரந்தீம் அங்கேப்ய:' என்ற 20-வது ச்லோகத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விதமான ரூபத் தை இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

## संसारपङ्कनिर्मग्नसमुद्धरणपण्डिता
## ஸம்ஸார பங்க்க நிர்மக்ன ஸமுத்தரண பண்டிதா (880)

ஸம்ஸாரமாகிற சேற்றில் முழுகியவர்களைத்தூக்கி (கரை யேற்றி) விடுவதில் ஸாமர்த்திய முடையவள்.

இதனால்தான் அம்பிகையே சரணமென்பதாக ஒரு க்ஷண மாவது நினைப்பவர்கள் எல்லையற்றதும், ஆழம் கண்டுபிடிக்க முடியாததுமான ஸம்ஸார ஸாகரத்திற்குள்ளாவதில்லையென்பதாகச் சொல்லபப்ட்டது.

'யே மனாகபி சர்வாணீம் ஸ்மரந்தி சரணார்த்தின: |
துஸ்தராபார ஸம்ஸார ஸாகரே ந பதந்தி தே || '

(கூர்ம புராணம்)

## यज्ञप्रिया

## யஜ்ஞப்ரியா (881)

யஜ்ஞங்களை ப்ரியமாக உடையவள்.

1. அதாவது, யஜ்ஞங்களால் அம்பிகையின் ப்ரியமேற்படு மென்று தாத்பர்யம்.

2. அல்லது, 'யஜ்ஞோ வை விஷ்ணு:' என்ற ச்ருதிவாக்யத்தின்படி யஜ்ஞமென்ற பதமானது விஷ்ணுவையும் குறிக்குமாகையால் விஷ்ணுவுக்கு ப்ரியமானவள் என்றும் இந்த நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம்.

## यज्ञकर्त्री

## யஜ்ஞ கர்த்ரீ (882)

யஜ்ஞ கர்த்தாவின் பத்னீ ரூபமாக இருப்பவள்.

யஜ்ஞத்தின் கர்த்தாவாக தீக்ஷிதனாயிருப்பவனுக்கு யஜமானனென்று பெயர். அவனைப் பரமசிவ ஸ்வரூபனென்றும் சொல்லப்படும். அவ்விதம் யஜமான ஸ்வரூபியான பரமசிவனுடைய பத்னிக்கு தீக்ஷா என்றும், புத்ரனுக்கு ஸந்தானனென்றும், பெயரென்பதாகச் சொல்லப்படும். அந்த தீக்ஷா ரூபமாக இருப்பவளென்று இங்கு சொல்லப்பட்டது.

'யஜமானாத்மகோ தேவோ மஹாதேவோ புதை: ப்ரபு: |
உக்ர இத்யுச்யதே ஸத்பி: ஈசானச்சேதி சாபரை: ||
உக்ராஹ்வயஸ்ய தேவஸ்ய யஜமானாத்மன: ப்ரபோ: |
தீக்ஷா பத்னீ புதைருக்தா ஸந்தானாக்யஸ் ததாத்மஜ: || '

(லிங்க புராணம்)

'உக்ரா தனு: ஸப்தமீ யா தீக்ஷிதை: ப்ராம்ஹணை: ஸஹ |
தீக்ஷா பத்னீ ஸ்ம்ருதா தஸ்ய ஸந்தான: புத்ர உச்யதே ||'

(வாயு புராணம்)

## यजमानस्वरूपिणी
## யஜமான ஸ்வரூபிணீ (883)

யஜமானனுடைய ஸ்வரூபமாயிருப்பவள்.

1. பரமசிவனுடைய அஷ்ட மூர்த்திகளில் கடைசியான மூர்த்திக்கு யஜமான மூர்த்தி யென்று பெயர். அதற்கே சிலர் ஆத்மா என்றும் பெயர் சொல்வார்கள்.

'பஞ்ச பூதானி சந்த்ரார்க்கௌ ஆத்மேதி முனிபுங்கவா: |
மூர்த்திரஷ்டௌ சிவஸ்யாஹு: தேவதேவஸ்ய தீமத: |
ஆத்மா தஸ்யாஷ்டமீ மூர்த்தி: யஜமானாஹ்வயா பரா ||'

(லிங்கபுராணம்)

அந்த இரண்டு பெயர்களையும் இந்த நாமத்தில் சொல்லி அந்தப் பெயர்களையுடைய மூர்த்தியின் ரூபமாக அம்பாளிருப்பது சொல்லப்பட்டது. யஜமான, ஸ்வ (=ஆத்மா) என்ற ரூபங்களையுடையவள், யஜமானஸ்வரூபிணீ.

2. அம்பிகையை 881-வது நாமத்தில் யஜ்ஞத்தில் ப்ரியமுள்ளவளென்றும், 883-வது நாமத்தில் யஜ்ஞ கர்த்தாவான யஜமானனின் ஸ்வரூபமானவளென்றும், 882-வது நாமத்தில் அவ்விதமான யஜமானனுடைய பத்னீ ரூபமானவளென்றும் சொல்லப்பட்டதுடன், ஏற்கனவே வந்த 769-வது நாமத்தில் யஜ்ஞத்தின் ரூபமாகவே இருப்பவளென்றும் சொல்லப்பட்டது கவனிக்கத்தக்கது.

3. பரமசிவனுடைய அஷ்ட மூர்த்திகள் பஞ்ச பூதங்கள், சந்த்ரன், ஸூர்யன், யஜமானன் (அல்லது ஆத்மா) என்பவை. இதைப்பற்றி ஏற்கனவேவந்த 'அஷ்டமூர்த்தி:' என்ற 662-வது நாமத்தில் பார்க்கவும். இந்த அஷ்டமூர்த்திகளின் சக்தி ரூபமாக அம்பாளிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'புவி பயஸி க்ருசானௌ மாருதே கே சசாங்கே
ஸவித்ரி யஜமானேऽப்யஷ்டதா சக்திரேகா |
வஹதி குசபராப்யாம் யாऽவனம்ராபி விச்வம்
ஸகலஜனனி ஸா த்வம் பாஹி மாமத்யவச்யம் ||'

(ஸகல ஜனனீஸ்தவம்)

## धर्माधारा

**தர்மாதாரா** (884)

தர்மத்திற்கு ஆதாரமாயிருப்பவள்.

1. அந்தந்த தேசங்களில் சிஷ்டர்களின் பரம்பரையாக வந்ததும், வேதத்திற்கு விருத்தமாயில்லாததுமான ஆசாரங்களுக்கு தர்மங்களென்று பெயர்.

'தேசே தேசே ய ஆசார: பாரம்பர்யக்ரமாகத: |
ஆம்னாயைர விருத்தச்ச ஸ தர்ம: பரிகீர்த்தித: ||

(ஸம்வர்த்த ஸ்ம்ருதி)

2. அவ்விதமான தர்மங்களின், (ஆ=) நாலாபக்கத்திலும் (அதாவது, ஸகல தேசங்களிலும்) பெருகியிருக்கும், தாரா(தடங்கலில்லாத) ப்ரவாஹ ரூபமாயிருப்பவள், தர்மாதாரா என்றும் சொல்லலாம்.

3. அல்லது, தர்மத்தை ஆதாரமாக உடையவள் என்றும் சொல்லலாம். இதையேதான் தர்மத்தில் நிலையாயிருப்பவள் என்றும் சொல்வது. ஸகலமும் தர்மத்தினால் நிலையோடிருப்பதாக 'தர்மே ஸர்வம் ப்ரதிஷ்டிதம்' என்று ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

4. அல்லது, தர்மத்தை எவற்றிற்கும் ஆதாரமாகச் செய்பவள் என்றும் சொல்லலாம். அதாவது, தர்மத்திற்கு ஸர்வாதாரத்வமானது அம்பிகையின் மூலமாக ஏற்பட்டது என்று தாத்பர்யம்.

## धनाध्यक्षा

**தனாத்யக்ஷா** (885)

தனத்திற்கு ஸ்வாமினியாக (அதிபதியாக) இருப்பவள்.

குபேரன் தனத்திற்கெல்லாம் அதிபதியானதாலும், அம்பிகையின் முக்யமான உபாஸகர்கள் பன்னிருவரில் ஒருவனானதாலும், உபாஸகனும் உபாஸிக்கப்படும் தெய்வமும் அபேதமாயிருப்பதாலும், அம்பிகையானவள் குபேரரூபமாயிருப்பவள் என்று இந்த நாமத்தில் சொல்லப்பட்டதாகவும் சொல்லுவர்.

**धनधान्यविवर्धिनी**

**தன தான்ய விவர்தினீ** (886)

(பக்தர்களுக்கு) தனம், தான்யம் இவைகளை விசேஷமாய் அதிகரிக்கும்படிச் செய்பவள்.

**विप्रप्रिया**

**விப்ரப்ரியா** (887)

விப்ரர்களிடத்தில் ப்ரியமுள்ளவள்.

1. பிறப்பினால் ப்ராம்ஹணனென்றும், (அவன்) ஸம்ஸ்காரங்கள் பெற்றபிறகு த்விஜனென்றும், வித்யையை க்ரஹித்த பிறகு விப்ரனென்றும், இம்மூன்றுமிருந்தால் ச்ரோத்ரியனென்றும் சொல்லப்படுப். (வித்யை என்ற பதமானது ஸ்ரீவித்யையைத்தான் குறிக்குமென்பதாக சாக்தர்களுடைய கொள்கை) அவ்விதமான விப்ரர்களால் அம்பிகைக்கு ப்ரீதியானது விசேஷமாய் ஏற்படுவதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

2. அவித்யோ வா ஸவித்யோ வா ப்ராம்ஹணோ மாமகீ தனு: |' என்ற பகவத் வசனப்படி ப்ராம்ஹணன் வித்வானுயிருந்தாலும் இல்லாவிட்டாலும் தன்னுடைய சரீரமாக இருக்கிறனென்பதாக பகவான் சொல்லுவதால், விப்ரர்களாயிருப்பவர்களிடத்தில் விசேஷமான ப்ரீதி ஏற்படுமென்பதைப் பற்றி காரணம் சொல்லத் தேவையில்லை.

**विप्ररूपा**

**விப்ரரூபா** (888)

விப்ரர்களின் ரூபமாயிருப்பவள்.

1. இது மேலே சொல்லிய பகவத் வசனத்திலிருந்தும் ஏற்படுகிறது.

2 விப்ரர்களெல்லோரும் அம்பிகையின் ரூபங்களென்பதாக இந்த நாமத்தின் தாத்பர்யம். வித்யையுடைய ப்ராம்ஹணர்களின் பெருமையைப்பற்றிய வாக்யங்களில் சிலவை பின் வருமாறு.

'யாவதீர் வை தேவதாஸ்தா: ஸர்வா வேதவிதி ப்ராம்ஹணே வஸந்தி|
(ச்ருதி)

'ப்ராம்ஹணு ஜங்கமம் தீர்த்தம் த்ரிஷு லோகேஷு விச்ருதம் |
யேஷாம் வாக்யோதகேனைவ சுத்யந்தி மலிநு ஜநு: ||'
(பாராசர ஸ்மிருதி)

3. அல்லது, விப்ரர்களை (ஏற்கனவே யிருப்பதைவிட அதிகமாக) புஷ்டியடையும்படிச் செய்கிருள். (அதாவது) ப்ரம்ஹ தேஜஸ்ஸையுடையவர்களாகச்செய்கிருள், என்றும் சொல்லலாம். அதாவது, அம்பிகையின் மந்த்ர ஜபாதிகளால் ப்ராம்ஹணர்களுக்கு பூர்ணமான தேஜஸ், தபோபலம் முதலியவை உண்டாகின்றன வென்று தாத்பர்யம். ஸன்மானத்தால் ப்ராம்ஹணனுடைய தபஸ்ஸானது குறையுமென்றும், அபமானத்தினுல் தபஸ்ஸானது விருத்தியடையுமென்றும், பூஜிக்கப்பட்ட ப்ராம்ஹணனுனவன் கறக்கப்பட்ட பசுவைப்போல் சோர்ந்து விடுகிருனென்றும், புல் முதலிய ஆகாரத்தால் பசு எப்படி போஷணை அடைகிறதோ, அம்மாதிரி ப்ராம்ஹணனுனவன் ஜபங்களாலும், ஹோமங்களாலும் போஷிக்கப் படுகிருனென்பதாக ஆபஸ்தம்ப ஸ்மிருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

'அபமானுத் தபோவ்ருத்தி: ஸன்மானுத் தபஸ: க்ஷய: |
அர்ச்சித: பூஜிதோ விப்ரோ துக்தா கௌரிவ ஸீததி ||
ஆப்யாயதே யதாஹஸ்ஸு த்ருணைரம்ருதஸம்பவை: |
ஏவம் ஜபைச்ச ஹோமைச்ச புனராப்பாயதே த்விஜ: ||'

## विश्वभ्रमणकारिणी

## விச்வ ப்ரமண காரிணீ (889)

ஸமஸ்தமான ப்ரம்ஹாண்டங்களுடைய ப்ரமணத்தைச் செய்பவள்.

1. ப்ரமணமென்ருல் சுழலுதல் என்று அர்த்தம். ப்ரம்ஹாண்டங்களுடைய ப்ரமணமென்பது அவற்றின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற யாதாயாதத்தை (போக்குவரத்தை) சொல்வது, இதை அம்பாள் செய்வதாக இங்கு சொல்லப்பட்டது. இதே மாதிரியாக,

'ப்ராமயன் ஸர்வபூதானி யந்த்ரா ரூடானி மாயயா |'
என்று கீதையிலும்,

'ஸ்வபாவமேகே கவயோ வதந்தி
காலம் ததாऽன்யே பரிமுஹ்யமாநா: |
தேவஸ்யைஷ மஹிமா து லோகே
யேனேதம் ப்ராம்யதே ப்ரம்ஹசக்ரம் ||'

என்று ச்ருதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது. இங்கு 'தேவஸ்ய மஹிமா' என்பதானது அவரிடமிருக்கும் சக்தி ரூபிணியான அம்பிகையைக் குறிக்கும்.

2. 'விச்வம் விஷ்ணுர் வஷட்கார:'

என்ற விஷ்ணு ஸஹஸ்ரநாம வசனத்தின்படி விச்வமென்ற பதமானது விஷ்ணுவைக் குறிக்கும். அதினால், விஷ்ணுவுக்கு ப்ரமணத்தைச் செய்பவளென்றும், இந்த நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம். அதைப்பற்றிய வ்ருத்தாந்தமானது காளிகா புராணத்தில் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

ஒரு ஸமயம் விஷ்ணுவானவர் கருடாரூடராக ஆகாசமார்க்கத்தில் செல்லும்போது காமரூபமென்ற தேசத்தின் மேலாகப் போய்க்கொண்டிருந்தார். அப்போது கீழே நீலாசலத்தில் விளங்காநின்ற காமாக்யா என்ற தேவியின் ரூப விசேஷமானது ஸமீபத்திலிருந்தபோதிலும், அவர் அங்கு இறங்கி அம்பிகையை நமஸ்கரிக்காமல் போய்க்கொண்டிருக்க, அம்பிகையின் கோபத்திற்கு ஆளாகி அதினால் ஸமுத்ரத்தில் விழுந்து சுழன்றுகொண்டிருந்தார். இப்படி வெகுகாலம் செல்லவும், தன் பதியைத்தேட ஆரம்பித்த லக்ஷ்மீயானவள், கடைசியாக நாரதர் மூலமாய் நடந்தவற்றைத்தெரிந்துகொண்டு தபஸினால், காமாக்யா தேவியை ஸந்தோஷப்படுத்தி, அதினால் விஷ்ணுவின் சுழலுதலை நிறுத்தி விடுவித்ததாகவும், அதற்குமேல் அவரும் அம்பிகையை ஆராதித்து வைகுண்டம் போய்ச்சேர்ந்தாரென்றும், சொல்லப்பட்டிருக்கிறது.

## विश्वग्रासा

## விச்வக்ராஸா (890)

ஸகல ஜகத்தையும் கபளீகரணம் (அதாவது, ஸம்ஹாரம்) செய்பவள்.

அதாவது, ப்ரளயகாலத்தில் சராசராத்மகமான ஸகல

ப்ரபஞ்சத்தையும் ஸம்ஹாரம்செய்து உட்கொள்ளுவதால் அம்பி கைக்கு இந்தப்பெயர் ஏற்பட்டது. இதையே,

'யஸ்ய ப்ரம்ஹ ச க்ஷத்ரம் சோபே பவத ஓதன: ||
ம்ருத்யுர் யஸ்யோபஸேசனம் க இத்தா வேத யத்ர ஸ: || '

என்று கடோபநிஷத்திலும்,

அத்தா சராசரக்ரஹணாத் | '

என்று ப்ரம்ஹ ஸூத்ரத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

## विद्रुमाभा

## வித்ருமாபா (891)

பவழம்போன்ற காந்தியோடு கூடியவள்.

1. அல்லது வித்—ஞானமாகிற, த்ரும:-வ்ருக்ஷம், அதைப் போன்றவள் வித்ருமாபா.

2. வ்ருக்ஷங்கள் ஒன்றிலிருந்து மற்றொன்று உண்டாகிறது போல் ஞானமானது தோற்றங்களை புங்கானுபுங்கமாக உண் டாக்குவதால் வ்ருக்ஷத்திற்கு ஸமமாகச் சொல்லப்பட்டது. அம்பிகை ஞான ரூபிணீ என்பதாக இதின் தாத்பர்யம்.

## वैष्णवी

## வைஷ்ணவீ (892)

விஷ்ணுவின் சக்தி ரூபமாயிருப்பவள்.

1. அதாவது லக்ஷ்மீ ரூபமாயிருப்பவளென்று அர்த்தம்.

2. மேலே சொல்லியதைத்தவிர, அம்பிகைக்கு வைஷ்ணவீ என்று பெயர் ஏற்பட்டதற்கு வேறு காரணங்கள்—

'சங்க சக்ர கதா தத்தே விஷ்ணுமாதா ததாரிஹா |
விஷ்ணுரூபாऽதவா தேவீ வைஷ்ணவீ தேன கீயதே || '

என்று தேவீபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. விஷ்ணு வைப்போல், சங்க, சக்ர, கதைகளை தரிப்பதாலும், அவருக்கு ஜனனியாக இருப்பதாலும், அவரைப்போலவே சத்ருக்களை ஸம்ஹாரம் செய்வதாலும், வைஷ்ணவீ (விஷ்ணுவைச் சேர்ந்த வள்) என்ற பெயர் அம்பிகைக்கு ஏற்பட்டதாக அதில் சொல்லப் பட்டிருக்கிறது.

विष्णुरूपिणी

**விஷ்ணு ரூபிணீ** (893)

விஷ்ணு ஸ்வரூபமாயிருப்பவள்.

1. அம்பிகையும் விஷ்ணுவும் அபேதமென்பதாக ஏற்கனவே வந்த பல நாமங்களிலும், அவற்றின் குறிப்புகளிலும் சொல்லப்பட்டிருக்கிறது. கோபிகைகளை மோஹிக்கச்செய்த க்ருஷ்ண ரூபமானது தன்னுடைய புருஷ ரூபமென்பதாக,

'மமைவ பௌருஷம் ரூபம் கோபிகா ஜன மோஹனம் |'

என்று லலிதோபாக்யானத்தில் அம்பிகையின் வசனமிருக்கிறது.

அதிலேயே, வீரபத்ரரிடத்தில் விஷ்ணு சொன்னதாக—

'ஆத்யா சக்திர் மஹேசஸ்ய சதுர்தா பின்ன விக்ரஹா |
போகே பவானீரூபா ஸா துர்கா ரூபா ச ஸங்கரே.
கோபே ச காளிகா ரூபா பும்ரூபா ச மதாத்மிகா ||'

என்றுமிருக்கிறது. (மஹேச்வரனுடைய ஆதி சக்தியானவள் போக ரூபத்தில் பவானியாகவும், யுத்தத்தில் துர்கையாகவும், கோபத்தின்போது காளியாகவும், புருஷரூபத்தில் நானாகவும், நான்கு பேதங்களான ரூபத்தோடிருக்கிறாள்.)

2. கூர்ம புராணத்தில் தேவியை ஹிமவான் ஸ்தோத்ரம் செய்கையில் 'க்ஷீராப்தியில் சயனித்திருக்கும் நாராயணனென்ற உன்னுடைய ரூபத்தை நமஸ்கரிக்கிறேன்' என்பதாக,

'ஸஹஸ்ர மூர்தானம் அனந்த சக்திம்
ஸஹஸ்ர பாஹும் புருஷம் புராணம் |
சயானம் அப்தௌ லலிதே தவைவ
நாராயணாக்யம் ப்ரணதோऽஸ்மி ரூபம் |'

என்று சொல்லப்பட்டது. அதே புராணத்தில மங்கணகனுக்கு சிவன் விச்வரூப தர்சனம் தந்தபோது அவர் பக்கத்திலிருப்பவள் யாரென்பதாக,

'கிமேதத் பகவத் ரூபம் ஸுகோரம் விச்வதோ முகம் |
கா ச ஸா பகவத் பார்ச்வே ராஜமானா வ்யவஸ்த்திதா ||'

என்று கேட்டபோது, பரமசிவன் தன்னுடைய ஸ்வரூபத்தின் ப்ரபாவத்தை வர்ணித்துவிட்டு,

'மம ஸா பரமா மாயா ப்ராக்ருதிஸ் த்ரிகுணாத்மிகா |
ப்ரோச்யதே முனிபி: சக்திர் ஜகத்யோனி: ஸனாதனீ |
ஸ ஏவ மாயயா விச்வம் வ்யாமோஹயதி விச்வவித் |
நாராயண: பரோऽவ்யக்தோ மாயா ரூப இதி ச்ருதி: ||'

என்று தன் பக்கத்திலிருக்கும் அம்பிகையே நாராயணன் என்பதாகச் சொன்னதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஸனத்குமார ஸம்ஹிதையில் ப்ரபாகரன் என்ற ராஜாவினுடைய விஷ்ணு பக்தியையும், அவன் மஹிஷியான பத்மினீ என்பவளுடைய பார்வதீ பக்தியையும் வர்ணித்துவிட்டு,

'ஏவம் தேவ்யாத்மனு ஸ்வேன ரூபேண ச ஜனார்தன: |
தம்பத்யோர் ஏக காயத்வாத் ஏக ஏவ த்விதார்ச்சித: ||'

என்று ராஜா, மஹிஷி இருவரும் தனித்தனியானவர்களாயிருந்த போதிலும், தம்பதிகளாகையால் ஒரே சரீரத்தையுடையவர்களென்று சொல்லப்படுவதால் ஒருவராலேயே விஷ்ணுவானவர் இரண்டுவிதமாகப் பூஜிக்கப்பட்டதாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இதேமாதிரி ஆதித்ய புராண, சிவபுராணங்களில்,

'யா தஸ்ய பார்ச்வகா பாலா ஸா பார்வத்யம்சஜோ ஹரி: |'

என்று ஹரியானவர் பார்வதியின் அம்சத்திலிருந்து உண்டானவரென்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அம்பிகையை உபாஸித்தால் விஷ்ணுவுக்கு ப்ரீதி ஏற்பட்டு அவருடைய லோகம் கிடைக்கப் பெறும் என்பதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

'துர்காம் காத்யாயனீம் சைவ யஜன் வாக்தேவதாமபி |
சேதஸா ஸுப்ரஸன்னேன விஷ்ணுலோகமவாப்னுயாத் ||'

(ப்ருஹத் பாராசரஸ்ம்ருதி)

'சண்டிகாம் ஸ்நபயேத் யஸ்து ஐக்ஷவேண ரஸேன ச |
ஸௌபர்ணேன ச யானேன விஷ்ணுனா ஸஹ மோததே ||'

(பத்ம புராணம்)

'பௌர்ணமாஸ்யாம் து யோ மாகே பூஜயேத் விதிவத் சிவாம் |
ஸோऽச்வமேதமவாப்னோதி விஷ்ணுலோகே மஹீயதே ||'

(வாமன புராணம்)

## अयोनिः

## அயோனி: (894)

யாதொன்றிலிருந்தும் உண்டாகாதவள்.

1. அதாவது, ஸகல ப்ரபஞ்சத்திற்கும் அம்பிகையானவள் காரண ஸ்வரூபமாயிருக்கையில், அவளுக்கு யாதொரு காரணமும் கிடையாதென்று தாத்பர்யம்.

2. 'யோனிஷ்ட் — இந்த்ர நிஷதே அகாரி |' (ஹே இந்த்ர! நீ இருப்பதற்காக ஒரு ஸ்தானம் நான் ஏற்படுத்தியிருக்கிறேன்) என்ற ச்ருதிவாக்யத்தில் சொன்னபடி, யோனியென்ற பதமானது ஸ்தானத்தைக்குறிக்கும். அயோனி: என்றால் ஸ்தானம் இது தான் என்பது இல்லாதவள் (அதாவது, அபரிச்சின்னமாயிருப்பவள்) என்று அர்த்தம்.

3. அல்லது: அஸ்ய-விஷ்ணுவினுடைய, யோனி:— தாயாராயிருப்பவள் (விஷ்ணுமாதா) என்றும் அர்த்தம் சொல்லலாம்.

**योनिनिलया**

**யோனி நிலயா** (895)

(ஸகல ப்ரபஞ்சத்திற்கும்) யோனியாயும் நிலயமாயுமிருப்பவள்.

1. ஸம்ஹார காலத்தில் ஜகத்தானது அம்பாளிடம் ஒடுங்கிவிடுவதால் அதற்கு நிலயமாக ஏற்படுகிறாள். அதே ஜகத்தும் அம்பாளிடமிருந்து உண்டாவதால் அதற்கு யோனியாயுமிருக்கிறாள்.

2. தவிர, யோனி என்ற பதமானது ப்ரக்ருதியைக்குறிக்கும். இந்த அர்த்தத்தில் 'கர்தாரமீசம் புருஷம் ப்ரம்ஹயோனிம்' என்ற ச்ருதிவாக்யத்திலும், 'யோனிச்ச ஹி கீயதே' என்ற ப்ரம்ஹஸூத்ரத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

3. யோ யோனிம் யோனிம் அதிதிஷ்டத்யேக: |' என்ற ச்ருதிவாக்யத்திற்கு வ்யாக்யானம் செய்திருக்கிறபடி யோனியென்ற பதமானது மாயையைக்குறிக்கும். அதை பரிச்சேதனம் செய்பவள் (பாகுபாட்டில் வைத்திருப்பவள்) யோனி நிலயா.

4. யோனிகளான-ஜகத்காரணர்களான ப்ரம்ஹாதிகளெல்லோரும் அம்பாளிடத்தில் விசேஷகமாக லயமடைவதால் இந்தப் பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

5. ஸ்ரீசக்ரத்தின் நடுவிலுள்ள த்ரிகோணத்தையே நிலயமாக (வாஸஸ்தானமாக) உடைய பிந்து ரூபிணியான தேவியை இங்கு சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

**कूटस्था**

**கூடஸ்த்தா** (896)

அஜ்ஞானத்திற்கு அதிஷ்டானமாயிருப்பவள்.

1. கூடமென்றால் மோசடி, மறைவு, பொய் என்றர்த்தம். அஜ்ஞானமானது ஆனந்தத்திலிருந்து உண்டான ஆத்மாவின் ரூபத்தை மறைத்து ஸம்ஸாரத்தில் விழச்செய்வதால் அதை கூடமென்று சொல்லப்பட்டது. அவ்விதமான அஜ்ஞானத்திற்கு நாயகியாக இருந்து கொண்டு ஜீவன்களுக்குள் ப்ரமாத்மகமாக இருப்பதை இங்கு சொல்லப்பட்டது. இதையேதான் தேவீ மஹாத்ம்யத்திலும்,

'யா தேவீ ஸர்வபூதேஷு ப்ராந்தி ரூபேண ஸம்ஸ்த்திதா |'

என்று சொல்லப்பட்டது. கீதையிலும் 'கூடஸ்த்தம் அசலம் த்ருவம்' என்று இதே அர்த்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

2. அல்லது, மேலே சொல்லிய அஜ்ஞானத்திற்கு ஸ்தானமாய் (நிலையாய்) இருப்பவளென்றும் சொல்லலாம்.

3. மேலே சொல்லியதைத்தவிர கூடமென்ற பதமானது

'கூடம் யந்த்ரேSந்ருதே ராசௌ நிச்சலே லோஹ முத்கரே |
மாயாத்ரிச்ருங்கயோஸ்துச்சே வீராவயவ தம்பயோ: |
புரத்வாரே ச சம்ஸந்தி ... ... ... ... ... ||'

என்ற கோசவசனத்தின்படி யந்த்ரம், பொய், ராசி, அசையாதிருத்தல், சம்மட்டி, மாயை, மலையின் உச்சி, துச்சமானது, கலப்பையின் ஒரு பாகம், டம்பம், புரத்வாரம், முதலியவற்றைக் குறிக்கும்.

4. மலையின் சிகரம் போல் யாதொரு க்ரியையுமில்லாமல் நிச்சயமாயிருப்பவள் கூடஸ்த்தா.

5. இரும்புக் கொல்லர்கள் சம்மட்டிகளால் அடிப்பதற்கு பூமியில் புதைத்திருக்கும் அடயலுக்கும் கூடமென்று பெயர். அது மாதிரி நிர்விகாரமாயிருப்பவளென்றும் சொல்லலாம்.

6. கூடமென்றால் ஸமூஹம், கூட்டம் என்றும் அர்த்தமுண்டு. லோகத்திலிருக்கும் ஸகல ஸமூஹங்களும் அம்பாளிடம் ஸ்திதியோடிருப்பதால் இந்தப்பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

7. அல்லது வாக்பவம் முதலான கூடத்ரயத்தில் இருப்பவளென்றும் சொல்லலாம்.

8. கூடமென்று புரத்வாரத்திற்குப் பெயராகையால் அது ஸ்ரீசக்ரத்திலிருக்கும் த்ரிகோணத்தைக் குறிக்கும். அதிலிருப்பவள் கூடஸ்த்தா.

### कुलरूपिणी
### குலரூபிணீ 897

குலத்தின் ரூபமாக இருப்பவள்.

ஏற்கனவே வந்த நாமங்களில் குலம் என்பதற்கு மூலாதாரம், கௌலமார்க்கம், பாஹ்யபூஜை, வம்சம், ஆசாரம் முதலான அர்த்தங்கள் சொல்லப்பட்டிருப்பதில் அவையெல்லாம் அம்பிகையின் ரூபங்களென்பதாக இந்த நாமத்தில் சொல்லப் பட்டது.

### वीरगोष्ठिप्रिया
### வீரகோஷ்டிப்ரியா 898

உபாஸக ச்ரேஷ்டர்களுடைய கோஷ்டியில் பிரியமுள்ளவள்.

1. வீரர்களென்றால் யுத்தம் செய்வதில் ஸாமர்த்யமுள்ள வர்களைக் குறிப்பதுடன் உபாஸக புங்கவர்களையும் குறிக்கும் அவர்கள்,

'அஹமி ப்ரளயம் குர்வன் இதம: ப்ரதியோகின: |
பராக்ரமம் பரோ புங்க்தே ஸ்வாத்மானம் அசிவாபஹம் ||'

என்றபடி பராக்ரமத்தோடு கூடியவர்களாகையால் அவர்களுக் கும் வீரர்களென்ற பெயர் ஏற்பட்டது.

2. கோஷ்டியென்றால் ஸபை, ஸல்லாபம் என்ற அர்த்தங்க ளுண்டு.

### वीरा
### வீரா 899

வீர்யமுள்ளவள்.

1. அம்பிகையின் உபாஸகர்கள் வீரர்களாயிருப்பதுடன் தானும் வீர்யமுள்ளவளென்பதாக இங்கு சொல்லப்பட்டது. அம்பிகையின் பராக்ரமத்தைப்பற்றி ஏற்கனவே வந்த பண்டா ஸுர யுத்தத்தைப் பற்றிய நாமங்களில் சொல்லப்பட்டிருப்ப துடன், தேவீ மஹாத்ம்யம் முதலியவைகளில் சொல்லப்பட்டிருப் பதையும் பார்க்கவும்.

2. 'பதி புத்ரவதீ வீரா' என்று நாம மாலையில் சொல்லப் பட்டபடி, பதி புத்ரர்களையுடைய ஸ்த்ரீக்கு வீரா என்று பெயர்.

## नैष्कर्म्या

## நைஷ்கர்ம்யா 900

கர்ம ஸம்பந்தம் யாதொன்று மில்லாதவள்

ப்ரபஞ்சத்தின் கார்யங்களெல்லாம் அம்பிகையே செய்வதாகத் தோன்றினாலும் வாஸ்தவத்தில் கர்மங்களின் சம்பந்தம் கொஞ்சமும் கிடையாதென்று தாத்பர்யம். கர்மாக்கள் செய்யாததினால் (கர்ம லோபத்தினால்) ஏற்படக்கூடிய பலனும் அம்பிகைக்கு கிடையாதென்றும் இதனால் ஏற்படுகிறது.

'ந புண்யபாபே மம |' (கைவல்யோபநிஷத்)

'லிப்யதே ந ஸபாபேன |' (கீதை)

'க்லேச கர்ம விபாகாசயை: அபராம்ருஷ்ட: புருஷவிசேஷ ஈச்வர: |
(யோகஸூத்ரம்)

## नादरूपिणी

## நாதரூபிணீ (901)

நாதரூபமாக இருப்பவள்.

1. ப்ரணவத்தின் சிரோபாகத்திற்கு நாதமென்று பெயர். அந்த ரூபமாக அம்பாளிருப்பதாகச் சொல்லப்பட்டது. இதே விதமாக,

'ஆனந்த லக்ஷணம் அனாஹத நாம்னி தேசே
நாதாத்மனா பரிணதம் தவ ரூபம் ஈசே |
ப்ரத்யங்முகேன மனஸா பரிசீயமானம்
சம்ஸந்தி நேத்ர ஸலிலை: புளகைச்ச தன்யா: ||'

என்பதாக 'அம்பாஸ்துதி'யில் சொல்லப்பட்டது.

2. அல்லது, நாதத்தில் ரூபத்தையுடையவளென்றும் சொல்லலாம். இதைப்பற்றி ஸ்வச்சந்ததந்த்ரத்தில்,

ரோதின்யாக்யம் யதுக்தம் தே நாதஸ்தஸ்யோர்த்வ ஸம்ஸ்த்தித: |'

என்று ஆரம்பித்து,

'தஸ்யோத்ஸங்ககதாம் ஊர்த்வ காமினீம் பரமாம் சிவாம் |
த்யாயேத் ... ... ... ... ... ||'

என்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

3. நாதத்தைப்பற்றி இதற்கு முன்வந்த 'நாத ரூபா' என்ற 299-வது நாமத்தில் பார்க்கவும்.

विज्ञानकलना

விஜ்ஞானகலனா (902)

விஜ்ஞானத்தை உண்டுபண்ணுகிறவள்.

1. விஜ்ஞானமென்பது ப்ரம்ஹ ஸாக்ஷாத்காரம். அதை பக்தனுக்கு கிடைக்கப்பெறும்படி செய்வதாக இங்கு சொல்லப் பட்டது.

2. பதினான்கு வித்யைகளை அவற்றின் அர்த்தத்துடன் மனதில் தாரணைசெய்வதற்கும் விஜ்ஞானமென்று பெயர்.

'சதுர் தசானாம் வித்யானாம் தாரணம் ஹி யதார்த்ததः ।
விஜ்ஞானமிதி தத் வித்யாத் ... ... ... ... ॥'

(கூர்மபுராணம்)

அதைக் கொடுப்பவள் விஜ்ஞானகலனா.

कल्या

கல்யா (903)

கலைகளில் ஸாமர்த்யமுடையவள்.

'கல்யம் ஸர்கே ப்ரபாதே ச கல்யே நீரோக தக்ஷயோः ।
கல்யா கல்யாணவாசீ ஸ்யாத் காதம்பர்யாமபி ஸ்ம்ருதா ॥'

என்ற விச்வகோச வசனத்தின்படி கல்யமென்ற பதத்திற்கு ஸ்ருஷ்டி, உஷःகாலம், ரோகமில்லாதிருத்தல், ஸாமர்த்யமா யிருத்தல், மங்களகரமான வாக்கு, காதம்பரீ என்ற அர்த்தங் களுண்டு. இவற்றையெல்லாம் அனுஸரித்து இந்த நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம்.

विदग्धा

விதக்தா (904)

சாதுர்யத்தோடு கூடிய ஸ்வபாவமுடையவள்.

वैन्दवासना

பைந்தவாஸனா (905)

ஸர்வானந்தமய சக்ரத்தை ஸம்பந்தித்த சக்ரத்தை ஆஸனமா யுடையவள்.

1. ஸ்ரீசக்ரத்தின் மத்தியிலுள்ள த்ரிகோணத்தின் நடுவில் ஸர்வானந்தமய சக்ரமென்றகிற பிந்து இருப்பதால் அதற்கு பைந்தவஸ்த்தானமென்று பெயர்.

2. புருவங்களுக்கு மேலாக வ்ருத்த ரூபமாக இருக்கும் ஸ்த்தானத்திற்கு பைந்தவஸ்த்தானமென்று பெயர். இதைப் பற்றி ஸ்வச்சந்ததந்த்ரத்தில்,

'ஹாகினீ மண்டலாத் ஊர்த்வம் பிந்து ரூபம் து வர்த்துளம் |'

என்பது முதலான ச்லோகங்களில் அங்குள்ள பத்மத்தையும் அதில் வீற்றிருக்கும் சிவனையும் வர்ணித்துவிட்டு அவருடைய வாமாங்கத்தில் மனோன்மனீ ரூபமாக அம்பாளிருப்பதை சொல்லப்பட்டிருக்கிறது.

'வாமபாகே ஸமாஸீனா சாந்த்யதீதா மனோன்மனீ |'

3. தவிரவும், பிந்து ஸ்தானமென்பது ஸுதாஸிந்துவையும், ஸஹஸ்ரார கமலத்தின் கர்ணிகையிலிருக்கும் சந்த்ர மண்டலத்தையும், காமேச்வரருடைய மடியையும் குறிக்கும். அம்மாதிரியான ஆஸனத்தையுடையவள் பைந்தவாஸனா.

4. அல்லது, பிந்துக்களின் ஸமூஹத்தை ஆஸனமாக உடையவள் (அதாவது, பிந்துக்களின் ஸமூஹத்தை ரூபமாக உடையவள்) என்றும் சொல்லலாம். அதாவது, அவற்றால் குறிக்கப்படும் அர்த்தங்களுக்கு ஆதாரமாயிருப்பவள், அவற்றால் ப்ரதிபாதிக்கப்பட்டவள் என்று தாத்பர்யம். இந்த பிந்துக்களைப்பற்றி காமகலா விலாஸம், வரிவஸ்யா ரஹஸ்யம் முதலியவற்றில் சொல்லியிருப்பதுடன் ஞானார்ணவத்தில்,

'பிந்துவ்யூஹம் ப்ரவக்ஷ்யாமி பீஜரூபம் வரானனே |
ஹகாரம் பிந்து ரூபேண ப்ரம்ஹாணம் வித்தி பார்வதி ||
ஸகாரம் பிந்து ஸர்காப்யாம் ஹரிச்சாஹம் ஸுரேச்வரி |
அவினா பாவ ஸம்பந்தௌ லோகே ஹரிஹராவிதி ||'

என்று, தான் பீஜரூபமாயிருப்பதையும், ஹரிஹரர்கள் ஏக ஸ்வரூபமென்பதையும் சொல்லிவிட்டு வாமா முதலான மூவர், இச்சா முதலான மூன்று, இம்மாதிரி மும்மூன்றாயிருப்பவையெல்லாம் பிந்து ரூபமென்பதாகச்சொல்லிவிட்டு, கடைசியில் அந்தந்த மூன்று பிந்துக்களின் சேர்க்கையான ரூபமாகத் தானிருப்பதால் தனக்கு த்ரிபுரா என்ற பெயர் ஏற்பட்டதாகவும் அம்பாள் சொன்னதாக காணப்படுகிறது.

'ஏவம் பிந்துத்ரயைர் யோகாத் த்ரிபுராகாமரூபிணீ ||'

4. அம்பாளுடைய காமகலாஸ்வரூபமும் பிந்துக்களாலானதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'அக்ரபிந்து பரிகல்பிதானனாம்
அன்ய பிந்து ரசித ஸ்தனத்வயீம் |
நாத பிந்து ரசனா குணாஸ்பதாம்
ஸௌமி தே பரசிவாம் பராம் கலாம் ||'

5. இந்த நாமத்தை அதற்கு முந்தியதிலிருந்து 'அபைந்தவாஸனா' என்று பிரித்தும் அர்த்தம் சொல்லலாம். அப்—ஜலத்தில், ஐந்தவ—இந்து ஸமூஹம் போல், அதாவது ஜலத்தில் சந்த்ரனுடைய ப்ரதிபிம்பங்கள் போல், ஜீவ கதம்பங்களில் (ஜீவன்களில்) பிம்ப ரூபமாக இருப்பவள் என்று அர்த்தம். அம்பிகை ஒருவளாக இருந்த போதிலும் ஜீவன்களுக்குள் அனேக ப்ரதிபிம்பங்களாக அபேதமாயிருக்கிறாள் என்பது தாத்பர்யம்.

'ஏகதா பஹுதா சைவ த்ருச்யதே ஜலசந்த்ரவத் |' (ச்ருதி)

## तत्त्वाधिका
## தத்வாதிகா (906)

தத்வங்களைவிட உத்க்ருஷ்டமானவள்.

1. அதாவது, தத்வங்கள் நாசமடையும்போதும் இருப்பவள் என்று அர்த்தம்.

2. ப்ரபஞ்சத்திலிருக்கும் வஸ்துக்களில் ப்ரளயகாலம் வரையிலிருந்து கொண்டு ஸகல ஜீவன்களுக்கும் போகத்தைக் கொடுப்பதான வஸ்துக்களுக்கு தத்வங்களென்று பெயர்.

'ஆப்ரளயம் யத் திஷ்டதி ஸர்வேஷாம் போகதாயி பூதானாம் |
தத் தத்வமிதி ப்ரோக்தம் ந சரீர கடாதி தத்வமத: ||'

(ஸூத ஸம்ஹிதை)

ஆகவே சரீர கடாதிகளை தத்வங்களில் கணக்கிடுவதில்லை. இவை 25, 36, 51, 94 என்று பலவிதமாக சொல்லப்படும். அவ்வித தத்வங்கள் நாசமடையும் காலத்திலும் அம்பிகைக்கு யாதொரு பேதமும் ஏற்படுவதில்லையாகையால் அவற்றைவிட அதிகமானவள் (பெரியவள்)என்பதாக இங்கு சொல்லப்பட்டது.

## तत्त्वमयी

## தத்வமயீ (907)

தத்வங்களின் ரூபமாயிருப்பவள்.

1. அதாவது மேலே சொல்லிய தத்வங்களின் ஸ்வரூபமாயிருப்பவள் என்று அர்த்தம்.

2. அல்லது, இந்த இரண்டு நாமங்களில் தத்வமென்றால் சிவ தத்வமென்றும், தத்வமயீ என்றால் சிவ தத்வத்திற்கு அதிகமான சின்மயீ என்றும், அர்த்தம் சொல்லலாம். சிவ தத்வத்தினால் அஸம்ப்ரக்ஞாத ஸமாதியும் சிவ தத்வத்தின் ஆதிக்யத்தினால் ஸம்ப்ரஜ்ஞாத ஸமாதியும் உண்டாவதாக

'ஸ்வயம்ப்ரஜ்ஞாத ஸ்ம்ஞஸ்து சிவாதிக்யேன ஜாயதே |
அஸம்ப்ரஜ்ஞாத நாமா து சிவதத்வேன வை பவேத் ||

என்பதாக ஞானார்ணவத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதிலேயே இந்த இரண்டு ஸமாதிகளின் லக்ஷணமும் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸவயம்ப்ரஜ்ஞாத பேதஸ்து தீவ்ர தீவ்ரதரோ பவேத் |
அஸம்ப்ரஜ்ஞாத பேதஸ்து மந்த மந்ததரஸ் ததா ||
ஹாஸ்ய ரோதன ரோமாஞ்ச கம்ப ஸவேதாதி லக்ஷண: |
தீவ்ர தீவ்ரதரோ தேவி ஸமாதிருபலக்ஷித: ||
நிமேஷ வர்ஜிதே நேத்ரே வபுஸ் தல்லக்ஷணம் ஸ்த்திதம்: ||
மந்த மந்ததரோ தேவி ஸமாதிருபலக்ஷித: ||'

(ப்ரஜ்ஞானத்தோடு கூடியதான) ஸம்ப்ரஜ்ஞாத ஸமாதியானது மேலுக்குமேல் தீவ்ரமாக ஏற்படுமென்றும், அதின் லக்ஷணங்கள் சிரிப்பு, அழுகை, மயிர்க்கூச்சல், படபடப்பு, வியர்வை முதலியனவென்றும், (ப்ரஜ்ஞான ரஹிதமான) அஸம்ப்ரஜ்ஞாத ஸமாதியானது மந்தம் மந்தமாக ஏற்படுமென்றும், அதின் லக்ஷணங்கள் இமைகொட்டாத பார்வை, அசைவற்ற தேஹம் முதலியவையென்றும் சொல்லப்பட்டது. இவையிரண்டும் தேஜோ விசேஷங்கள். மனதினுடைய தாரணையில் ஏற்படுகிறவை. அந்த தேஜஸ்ஸைப்பற்றி குரு முகமாகத் தெரிந்து கொள்ளவேண்டியது.

3. ஆத்ம தத்வம், வித்யா தத்வம், சிவதத்வம் என்று மூன்று வகையாகச் சொல்லப்பட்ட தத்ஸ்வரூபமாயிருப்பவள் தத்வமயீ என்றும், அம்மூன்று வகைகளின் ஸமஷ்டி (சேர்க்கை) ரூப

மானதால், (ஸர்வதத்வங்களின் ரூபமாயிருப்பதால்) அம்மூன்று தத்வங்களுக்கு அதிகமானவள் தத்வாதிகா என்றும் சொல்லலாம். இந்த ஆத்மா, வித்யா, சிவ, ஸமஷ்டி என்ற நாலுவிதமான தத்வங்களின் ஸ்வரூபமானது,

'மாயாந்தம் ஆத்மதத்வம் வித்யாதத்வம் ஸதாசிவாந்தம் ஸ்யாத் |
'சக்தி சிவௌ சிவ தத்வம் துரீயதத்வம் ஸமஷ்டிரே தேஷாம் ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

மேலே சொல்லிய ஆத்ம, வித்யா, சிவ தத்வங்கள் மூன்றுக்கும் முறையே ஸத், சித், ஆனந்தமென்ற தத்வங்கள் ரூபங்களென்பதாகச் சொல்லப்படும். ஸத், சித், ஆனந்தத்தின் ஸமஷ்டி ரூபமாயிருக்கும் பரப்ரம்ஹத்தினின்றும் உண்டாகும் சிவன் முதல் க்ஷித்யந்தமான தத்வங்களில் சிவ சக்திகளுக்கு ஆனந்தாம்சமானது மறைவுபடாமலிருக்கிறது. அடுத்தவையான ஸதாசிவ, ஈச்வர, சுத்த வித்யா தத்வங்களுக்கு சிதம்சமானது மறைவுபடாமலிருக்கிறது. அடுத்தவையான மாயை முதலாக க்ஷித்யந்தமான பாக்கி தத்வங்களெல்லாவற்றிற்கும் ஸதம்சமானது மறைவுபடாமலிருக்கிறது. அதாவது, க்ஷிதி முதல் மாயாந்தமான தத்வங்களுக்கு ஸதம்சமும், சுத்தவித்யா, ஈச்வர, ஸதாசிவ தத்வங்களுக்கு ஸதம்சமும், சிதம்சமும், சக்தி சிவ தத்வங்களுக்கு ஸத், சித், ஆனந்தமென்ற மூன்று அம்சங்களும், அனுவ்ருதமாக (மறைவுபடாமல்) இருப்பவை. ஆத்ம, வித்யா, சிவ தத்வங்களாகச் சொல்லப்போனால், சிவ தத்வத்தில் ஸத், சித், ஆனந்தாம்சங்கள் மூன்றும் அனுவ்ருதமாயிருப்பதாயும், வித்யாதத்வத்தில் ஸத், சித் என்ற இரண்டு அம்சங்கள் அனுவ்ருதமாயும், ஆனந்தாம்சமானது கொஞ்சம் ஆவ்ருதமாயும், இருப்பதாகச் சொல்லவேண்டும். ஆத்மா என்ற பதமானது (ஆத்மலாபமென்பது போன்ற வார்த்தைகளில் உபயோகப்படுவது மாதிரி) இருப்பது என்ற அர்த்தத்தைக் காட்டும் ஸத் என்பதாகவும், வித்யா என்ற பதமானது ஞான ரூபமானதால் சித் என்பதாகவும், சிவ என்ற பதமானது மோக்ஷ ரூபமானதால் ஆனந்தமென்பதாகவும், ப்ரஸித்தமாகச் சொல்லப்படுகிறவை. ஆகவே ஆத்ம, வித்யா, சிவ என்ற பதங்கள் மூன்றும் சேர்ந்து ஸச்சிதானந்தமென்பதைக் குறிக்குமென்பது

தத்வ த்ரயத்தின் ரஹஸ்யம். அம்பாள் இந்த மூன்று தத்வங்களின் மயமாக இருப்பதாகச் சொல்வதினால் ஸச்சிதானந்த ரூபிணீ என்று சொல்லப்பட்டது.

5. ஷட் (ஆறுவிதமான) அத்வாக்களாலான பரமாத்மாவின் சரீரத்தில் முப்பத்தாறு தத்வாத்மகமான தத்வாத்வா என்பது அவயவமாகச் சொல்லப்படும். ஆகையினால் தத்வமயீ என்ற பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

'ப்ருதிவ்யாதீனி ஷட்த்ரிம்சத் தத்வான் யாகமவேதிபி: |
உக்தான்யமுஷ்ய தத்வாத்வா சுக்ரமஜ் ஜாஸ்த்தி ரூபத்ருக் ||

(காமிகாகமம்)

இந்த ஷடத்வாக்களைப்பற்றி 'ஷடத்வாதீதரூபிணீ' என்ற 991-வது நாமத்தில் பாக்கவும்.

## तत्त्वमर्थस्वरूपिणी

## தத் த்வம் அர்த்த ஸ்வரூபிணீ 908

தத், த்வம் என்ற பதங்களின் அர்த்த ஸ்வரூபமாயிருப்பவள். இவையிரண்டும் மஹா வாக்யங்களில் இருப்பவை. இவை முறையே சிவன், ஜீவன் என்ற அர்த்தமுடையவை.

## सामगानप्रिया

## ஸாமகானப்ரியா 909

ஸாம கானத்தில் ப்ரியமுள்ளவள்.

அல்லது, ஸாமகர்களிடத்தில் தன் உயிரினிடத்திற்போல் ப்ரியத்தைப் பாராட்டுகிறவள் என்றும் சொல்லலாம்.

## सौम्या

## ஸௌம்யா 910

ஸோமயாகத்திற்கு அர்ஹமானவள்.

1. அல்லது, பரமசிவன் உமாவோடு கூடியிருப்பதால் ஸோமனென்று பெயராகையால் அவரை அவயவமாக உடையவள் (அர்த்த சரீரமாக உடையவள்) ஸோம்யா என்றும் சொல்லலாம்.

2. 'ஸோம: கர்ப்பூர சந்த்ரயோ:' என்ற கோசவனத்தின்படி ஸோமனென்று சந்த்ரனுக்கு பெயராகையால் அவன் மாதிரி ஆஹ்லாதத்தைக் கொடுப்பவளென்றும் சொல்லலாம்.

3. இந்த நாமத்திற்கு 'ஸௌம்யா' என்ற பாடாந்தரமும் உண்டு. அப்போது, அழகானவள் அல்லது சாந்தமானவள் என்று அர்த்தம்.

## सदाशिवकुटुम्बिनी

## ஸதாசிவ குடும்பினீ (911)

ஸதாசிவருடைய பார்யையாயிருப்பவள்.

அதாவது, ச்யாமளா, சுத்தவித்யா, அச்வாரூடா முதலான ரூபங்களோடிருப்பவள் என்று தாத்பர்யம்

## सव्यापसव्यमार्गस्था

## ஸவ்யாபஸவ்ய மார்கஸ்த்தா (912)

ஸவ்ய, அபஸவ்ய, மார்கங்களுக்கு அதிகாரியாயிருப்பவள்.

1. அதாவது, லோகத்தைப்பற்றிய விதரணை, ரக்ஷணம், ஆளுகை முதலியவற்றைக் கொடுக்கக்கூடியவள் என்று அர்த்தம். அல்லது, அவை மூன்றும் அம்பாளிடத்தில் நிலையோடிருக்கின்றன வென்றும் சொல்லலாம்.

2. ஸூர்யமண்டலத்திற்கு உத்தர, தக்ஷிண, மத்யமென்ற மூன்று பேதங்களான மார்கங்களிருப்பதாகச் சொல்லப்படும். அதாவது, நக்ஷத்ர மண்டலத்தை ஸூர்யன் ஸஞ்சரிக்கும் வீதிகளாகச்சொல்லி, அவற்றைத் திரும்பவும் மார்கங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. மும்மூன்று நக்ஷத்ரங்கள் கொண்டது ஒரு வீதி. அவ்விதமான வீதிகள் மும்மூன்று கொண்டது ஒரு மார்கம். இதைப்பற்றி வாயுபுராணத்தில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'அச்வினீ க்ருத்திகா யாம்யா நாகவீதீதி சப்திதா |
ரோஹிண்யார்த்ரா ம்ருகசிரோ சஜவீத்யபிதீயதே ||
புஷ்யாச்லேஷா ததாதித்யா வீதீ சைராவதீ ஸ்ம்ருதா |
ஏதாஸ்து வீதயஸ்திஸ்ர உத்தரோ மார்க உச்யதே ||
ததா த்வே சாபி பல்குன்யௌ மகா சைவார்ஷதீ மதா |

ஹஸ்தச்சித்ரா ததா ஸ்வாதீ கோவீதீதி து சப்திதா |
ஜ்யேஷ்டா விசாகானுராதா வீதீ ஜாரத்கவீ மதா |
ஏதாஸ்து வீதயஸ்திஸ்ரோ மத்யமோ மார்க உச்யதே ||
மூலாஷாடோத்தராஷாடா அஜவீத்யபிசப்திதா |
ச்ரவணம் ச தனிஷ்டா ச மார்க்கீ சதபிஷஸ்ததா ||
வைச்வானரீ பாத்ரபதே ரேவதீ சைவ கீர்த்திதா |
ஏதாஸ்து வீதயஸ்திஸ்ரோ தக்ஷிணோ மார்க உச்யதே ||'

3. ஸாதாரணமாய், ஸவ்யமென்பது வலது பக்கத்தையும், அபஸவ்யமென்பது இடது பக்கத்தையும் குறிக்கும். சிற்சில இடங்களில் அவற்றை மாற்றிச்சொல்வதுமுண்டு.

'வாமம் சரீரம் ஸவ்யம் ஸ்யாத் அபஸவ்யம் து தக்ஷிணம் |'
'ஸவ்யம் தக்ஷிணவாமயோ: |'

மார்கமென்பது மத்யமானது (நடுவானது) என்று அர்த்தமுள்ளது. தக்ஷிணமென்றால் வலது, வாமமென்றால் இடது. இந்தப் பதங்களுக்கு இவ்விதமான அர்த்தங்களிருப்பதை அனுஸரித்து மேலே சொல்லிய வாயுபுராணத்திய ச்லோகங்களுக்கு அர்த்தமானது பாஷ்யத்தின் மூலத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

அவ்விதமான ஸவ்ய, அபஸவ்ய, மத்யங்களென்ற மூன்று மார்கங்களிலுமிருப்பவனென்று சொல்லலாம்.

4. அல்லது, ஸவ்யமென்பது தேவயானத்தைக் குறிக்கும். அதையே அர்ச்சிராதி மார்கமென்று சொல்லப்படும். தேஜோரூபமான வழி. இது நிவ்ருத்தியோடு உபாஸிப்பவர்கள் சரீரத்தை விட்டபிறகு தேவ லோகங்களுக்குப் போகும்வழி. அபஸவ்யம் என்பது பித்ருயாணத்தைக் குறிக்கும். தூம்ராதி மார்கமென்றும் சொல்லப்படும். தூம (புகை) மயமான வழி. இது ப்ரவ்ருத்தியோடு உபாஸிப்பவர்கள் சரீரத்தை விட்டபிறகு பித்ரு லோகங்களுக்குப் போகும் வழி. மார்கஸ்தா என்றால் மார்கத்தில் ஸ்திதியைக் கொடுக்கும் த்ருவ நக்ஷத்ரத்தோடு விளங்கும் விஷ்ணுலோகத்தைக் குறிக்கும். ஸூர்யன் முதலான க்ரஹங்களெல்லாம் அவரவர்களுடைய மார்கத்தில் ஸஞ்சரிப்பதானது த்ருவனுக்கு அதீனமாயிருப்பதால் த்ருவ மண்டலத்தை மார்கஸ்தமென்று சொல்லப்படும். இவ்விதமான ஸவ்ய,

அபஸவ்ய, மார்கஸ்தங்களென்ற மார்கங்களின் ரூபமாயிருப்பவனென்றும் இந்த நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம்.

5. பித்ருக்களிருக்கும்படியான லோகத்திற்குப் போகும் வழியானது (பித்ருயானமானது) அகஸ்த்ய ஸ்தானத்திற்கு வடக்கிலும், அஜவீதிக்குத் தெற்கிலும், வைச்வானர வழிக்கு வெளியாகவும், ஸூர்யன் போகும்வழிக்குத் தெற்காகவுமிருக்கிறது. அங்கு மகாத்மாக்களும் அக்னிஹோத்ரிகளுமான ரிஷிகள் வேதத்தைப் புகழ்ந்துகொண்டு, அப்போதைக்கப்போது தங்கள் தங்கள் மரபில் தோன்றி, வேதத்தைஸ்தாபனம் செய்து, ஆசந்த்ர தாரகம் அங்கு இருக்கிறார்களென்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'உத்தரம் யத் அகஸ்த்யஸ்ய அஜவீத்யாச்ச தக்ஷிணம் |
பித்ருயாண: ஸ வை பந்த்தா வைச்வானர பதாத் பஹி: ||
தத்ரா ஸதே மஹாத்மானோ ருஷயோ ஹ்யக்னிஹோத்ரிண: |
பூதாரம்பக்ருதம் ப்ரம்ஹ சம்ஸந்தோ ருத்விகுத்யதா: ||'
ப்ராரபந்தே து யே லோகா: சேஷாம் பந்த்தாஸ்து தக்ஷிண: |
சலிதம் தே புனர்ப்ரம்ஹ ஸ்த்தாபயந்தி யுகே யுகே ||
ஸம்தப்த தபஸா சைவ மர்யாதாபி: ச்ருதேன ச |
ஜாயமானாச்ச பூர்வே ச பச்சிமானாம் க்ருஹேஷு வை ||
பச்சிமாச்சைவ பூர்வேஷாம் ஜாயந்தே நிதனேஷ்விஹ |
ஏவமாவர்த்தமானாஸ்தே திஷ்டந்தி நியதவ்ரதா: |
ஸவிதுர் தக்ஷிணம் மார்க்கம் ச்ரிதா ஹ்யாசந்த்ரதாரகம் ||'

(விஷ்ணுபுராணம்- த்விதீயாம்சம்)

இவர்கள் வேதத்தில் ப்ரவ்ருத்தி மார்கத்தை போதிக்கும் கர்ம காண்டத்தை பின்பற்றுகிறவர்கள். ஒவ்வொரு யுகத்திலும் வேதத்தை ஸ்த்தாபித்து அதில் சொல்லப்பட்ட கர்மாக்களை தெளிவுறச் செய்யவேண்டியபோதெல்லாம் அவர்கள் தங்கள் குலங்களில் தோன்றி ஜனங்களுக்கு வேதமார்க்கத்தையும் மர்யாதைகளையும் காட்டிவிட்டுத் திரும்பவும் தங்களிருப்பிடத்திற்கு பித்ருயாணத்தின் வழியாக வந்துவிடுவார்களென்று சொல்லப்பட்டது.

அகஸ்த்ய ஸ்தானமென்பது லோகாலோக பர்வதத்தின் வடக்கு உச்சியென்பதாகச் சொல்லப்படும். லோக பாலகர்கள் இருக்குமிடத்திற்கு லோகாலோக பர்வதம் என்று பெயர்.

'லோகபாலா: ஸ்த்திதா ஹ்யேதே லோகலோகே சதுர்திசம் |
தஸ்யோத்தரம் அகஸ்த்யஸ்ய ச்ருங்கம் தேவர்ஷி பூஜிதம் ||'

(மத்ஸ்ய புராணம்)

அஜவீதியென்பது மூலம், பூராடம், உத்திராடம் அடங்கியது. வைச்வானர பதமென்பது பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி இவை அடங்கியது.

6. தேவர்களிருக்கும்படியான லோகத்திற்குப் போகும் வழியானது (தேவயானமானது) நாக வீதிக்கு வடக்கிலும், ஸப்தர்ஷிகளிருப்பதற்குத் தெற்கிலும், ஸூர்யனுடைய மார்கத்திற்கு வடக்காகவுமிருக்கிறது. அங்கு, இந்த்ரியங்களை வசப்படுத்தினவர்களும், விமலர்களும், ப்ரம்ஹசாரிகளும், ஸந்ததியை வெறுத்தவர்களும், ஊர்த்வரேதஸ்ஸுகளும், (ஆகவே) ம்ருத்யுவை ஜெயித்தவர்களும், ஸித்தியை அடைந்தவர்களுமான முனீச்வரர்களிருக்கிறார்கள். அவர்கள், லோபத்தை விட்டவர்களாய், மைதுனத்தைத் தள்ளியவர்களாய், இச்சை, த்வேஷம் முதலியவைகளில்லாதவர்களாய், ப்ரவ்ருத்தி மார்க்கத்தை பரித்யாகம் செய்தவர்களாய், சுத்தர்களாய், ப்ரளயகாலம் வரையில் பிறப்பு இறப்பு இல்லாதவர்களாய் இருப்பவர்கள்.

'நாகவீத்யுத்தரம் யச்ச ஸப்தர்ஷிப்யச்ச தக்ஷிணம் |
உத்தர: ஸவிது: பந்த்தா தேவயானஸ்து ஸ ஸ்ம்ருத: ||
தத்ர தே வசின: ஸித்தா விமலா ப்ரம்ஹசாரிண: |
ஸந்ததிம் யே ஜுகுப்ஸந்தி தஸ்மாத் ம்ருத்யுஜிதச்ச தே ||
அஷ்டாசீதி ஸஹஸ்ராணி முனீனாம் ஊர்த்வரேதஸாம் |
உதக் பந்த்தானமர்யம்ண: ஸ்த்திதாச்சாபூதஸம்ப்லவம் ||
தே ஸம்ப்ரயோகாத் லோபஸ்ய மைதுனஸ்ய ச விவர்ஜனாத் |
இச்சாத்வேஷாப்ரவ்ருத்யா ச பூதாரம்ப விவர்ஜனாத் ||
புனச்சாகாமஸம்யோகாத் இச்சாதேர் தோஷ தர்சனாத் |
இத்யேவம் காரணை: சுத்தாஸ்தே அம்ருதத்வம் ஹி பேஜிரே |
ஆபூத ஸம்ப்லவம் ஸ்த்தானம் அம்ருதத்வம் ஹி பாஷ்யதே |
த்ரைலோக்ய ஸ்த்திதிகாலோऽயம் அபுனர்மார உச்யதே ||'

(மத்ஸ்ய புராணம்)

7. ஸப்தர்ஷிகள் ஸ்த்தானத்திற்கு வடக்கானதும் மேலானதும் த்ருவனிருப்பதுவுமான இடத்திற்கு விஷ்ணுபதமென்று பெயர். அது தோஷங்களை இல்லாதவர்களும், இந்த்ரியங்களை

அடக்கினவர்களும், புண்ய பாபங்களில்லாதவர்களும், துக்க ஹேதுக்கள் கொஞ்சமுமில்லாதவர்களுமான யதிகளிருக்குமிடம். அவர்கள் அங்கிருக்கும் விஷ்ணுவோடு தன்மயமாய், ஸதா அவரிடம் சென்ற மனதுடையவர்களான யோகிகள்.

'ஊர்த்வோத்தரம் ருஷிப்யஸ்து த்ருவோ யத்ர வ்யவஸ்த்தித: |
ஏதத் விஷ்ணுபதம் திவ்யம் த்ருதீயம் வ்யோம்னி பாஸுரம் ||
நிர்தூத தோஷ பங்கானும் யதீனும் ஸம்யதாத்மனும் |
ஸ்த்தானம் தத் பரமம் விப்ர புண்யபாப பரிக்ஷயே ||
அபுண்ய புண்யோபரமே க்ஷீணசேஷார்த்திஹேதவ: |
யத்ர கத்வா ந சோசந்தி தத் விஷ்ணோ: பரமம் பதம் ||
திவீவ சக்ஷுராததம் யோகினும் தன்மயாத்மனும் |
விவேக ஞானத்ருஷ்டம் ச தத் விஷ்ணோ: பரமம் பதம் ||'

(மத்ஸ்ய புராணம்)

இவ்விதமான மூன்று லோகங்களின் ரூபமாய் அம்பாளிருப்பதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

8. உபாஸனக்ரமத்தில் வாம மார்கமென்றும், தக்ஷிண மார்கமென்றும் இரண்டு மார்க்கங்களிருக்கின்றன. அவற்றில், வாமமார்கமென்பது தன் தன்னுடைய வர்ணச்ரமப்படி செய்ய வேண்டிய எல்லா கர்மாக்கள் (அக்னிஹோத்ரம் முதலான ச்ரௌத கர்மாக்களென்ன, அஷ்டகம் முதலான ஸ்மார்த்த கர்மாக்களென்ன) எல்லாவற்றிலும் எந்தெந்த தேவதைகள் ப்ரதானமாகவோ, அங்கபூதமாகவோ சொல்லப்பட்டிருக்கிறார்களோ அவர்கள் ஸ்த்தானத்திலெல்லாம் தான் உபாஸிக்கும் (த்ரிபுர பைரவி முதலான) தேவதையை பாவனைசெய்வது. இதற்காக, இந்த மார்க்கத்திலுள்ளவர்கள் கர்மாக்களின் மந்த்ரங்களில் அந்தந்த தேவதையின் பெயர் வரும்போதெல்லாம் அதற்கடுத்தாற்போல் தான் உபாஸிக்கும் தேவதையின் பெயரை எப்போதும் சேர்த்துச் சொல்லுவார்கள்.

'ஸர்வத்ர தேவீ மந்த்ரேஷு வைதிகேஷ்வபி பைரவீம் |
த்ரிபுராம் சிந்தயேன்னித்யம் வேத மந்த்ரேஷு ச க்ரமாத் ||
தேவ நாமஸு ஸர்வேஷு பைரவீதி பதம் ஸதா |
குர்யாத் விசேஷணம் நித்யம் ரோச்சார்யம் நிர்விசேஷணம் ||
ஆப: புனந்து ப்ருதிவீம் உக்த்வா த்ரிபுரபைரவீம் |
குர்யாத் ஆசமனம் விப்ரோ த்ருபதாயாம் ததா சரேத் ||

இதம் விஷ்ணுர் பைரவஸ்து விசக்ரம இதீரிதம் |
ம்ருதாலம்பன க்ருத்யேஷு மந்த்ரமேதம் நியோஜயேத் ||
காயத்ரீம் த்ரிபுராத்யாம் து பைரவீம் உச்சரன் சிவாம் |
மார்த்தண்ட பைரவாயேதி ஸூர்யாயார்க்யம் நிவேதயேத் ||
உதுத்யம் ஜாதவேதஸம் தேவம் வஹந்தி கேதவ: |
த்ருசே விச்வாய ஸூர்யம் த சேஷே பைரவ மீரயேத் ||
தர்ப்பணாதௌ ப்ரயுஞ்ஜீத த்ருப்யதாம் ப்ரம்ஹ பைரவம் |
ஆவாஹனே ச ஸ்வபித்ருன் பைரவானிதி தர்ப்பயேத் ||
த்ருப்யதாம் பைரவீ மாத: பித்ருபைரவ த்ருப்யதாம் |
ஆதௌ ச த்ரிபுராம் பூர்வம் தர்ப்பணேऽபி ப்ரயோஜயேத் ||
ஜ்யோதிஷ்டோமாச்வமேதாதௌ யத்ர யத்ர ப்ரபூஜயேத் |
தத்ர பைரவ ரூபேண தேவீமபி ச பைரவீம் ||
ஏவம் து வாம்யபாவேன யஜேத் த்ரிபுர பைரவீம் |
ஏஷா வாமேன மார்கேண பூஜ்யா தக்ஷிணதாம் விநா || '

(காளிகா புராணம்)

9. மேலே சொல்லிய மார்கத்தில் தேவ, ரிஷி, பித்ருக்களுடைய ருண சோதனம் (கடனைத் தீர்ப்பது) ஏற்படுகிறதில்லையாகையால் அதின் அபாவத்தினாலுண்டாகும் பாபமானது அந்த மார்கத்தைச் சேருகிறது. தக்ஷிண மார்கத்திலோவென்றால், ச்ரௌதம் முதலான ஸகல கர்மாக்களிலும் அதில் சொல்லப்லப்பட்ட தேவதையின் ஸ்தானத்தில் தான் உபாஸிக்கும் தேவதையை பாவனை செய்யவேண்டுமென்ற நிர்பந்தம் யாதொன்றும் கிடையாது.

ருஷீன் தேவான் பித்ரும்ச்சைவ மனுஷ்யான் பூதஸஞ்யான் |
யோ யஜேத் பஞ்சபிர் யஜ்ஞை: ருணனம் பரிசோதனை: ||
விதிவத் ஸ்நான தானப்யாம் ஸர்வம் யத் விதிபூஜனம் |
க்ரியதே ஸரஹஸ்யம் து தத் தாக்ஷிண்ய மிஹோச்யதே || '

(காளிகா புராணம்)

10. வாம மார்கத்திலிருப்பவனுடைய கொள்கையென்னவென்றால்—தான் உபாஸிக்கும் தேவதையைப்பற்றிச் செய்ய வேண்டியதாக அந்தந்த தந்த்ரங்களில் சொல்லியிருக்கும் கர்மாக்களுக்கு மற்ற (ஸாமான்ய) கர்மாக்களெல்லாம் அங்கங்களென்பது. மற்ற தேவதைகளுக்குச் செய்யும் கர்மாக்களும், கொடுக்கும் ஹவிர்பாகம் முதலியவைகளும், தான் உபாஸிக்கும்

தேவதையைத்தான் சேருவதாக அவன் பாவிப்பான். அவர்களையும் தான் உபாஸிக்கும் தேவதையாக அவன் பாவிப்பான். தக்ஷிண மார்க்கத்திலிருப்பவனுக்கு அவ்விதமான பாவனு நிர்பந்தம் யாதொன்றும் கிடையாது. ஆகவே அவன் செய்யும் கர்மாக்களின் மூலமாக தேவ, ருஷி, பித்ருக்களுடைய ருணமானது தீர்ந்து விடுவதால் (வாம மார்கத்தைப்பற்றிச் சொல்லப்பட்ட) பாபமானது ஏற்படுவதில்லை.

11. இவ்விதம் ருணசோதனத்தின் ஸம்பந்தமான பாபம் யாதொன்றும் தக்ஷிண மார்கத்தில் ஏற்படுவதில்லையாகையால் அந்த மார்கத்தில் மோக்ஷமானது சீக்கிரம் கிடைக்கும். வாம மார்கத்திலோ (அவ்விதமான பாபம் ஸம்பவிப்பதான ப்ரதிபந்தத்தின் காரணமாக) மோக்ஷம் கிடைப்பதற்குத் தாமதம் ஏற்படும்.

12. வாம மார்கத்திலிருப்பவன் ஸாமான்ய கர்மாக்களைச் செய்தாலும் செய்யலாம், செய்யாவிட்டாலும் பாதகமில்லையென்பது அவனுடைய கொள்கை. அவனுடைய மார்கத்தில் ஸகலமும் அவன் உபாஸிக்கும் தேவதையைப்பற்றியது. அவன் செய்பவைகளும், கொடுப்பவைகளும் அவன் உபாஸிக்கும் தேவதைக்குப் போய்ச் சேருவதால் மேலே சொல்லிய ருணசோதனம் ஏற்படுவதில்லை அதினால் மோக்ஷமடைய தாமதம் ஏற்படுகிறது.

13. மேலே சொல்லிய மார்கங்களின் பெயர்களை அநுஸரித்து தக்ஷிணமார்கத்தில் அம்பாள் உபாஸிக்கப்படும்போது அம்பாளுக்கு தக்ஷிணு என்றும், உபாஸகனுக்கு தக்ஷிணனென்றும், வாம மார்கத்தில் அம்பாளுக்கு வாமா என்றும், உபாஸகனுக்கு வாமனென்றும் பெயர்கள் சொல்லப்படும்.

'ஸர்வத்ர பித்ருதேவாதௌ யஸ்மாத் பவதி தக்ஷிண: |
தேவீ ச தக்ஷிணு யஸ்மாத் தஸ்மாத் தக்ஷிண உச்யதே ||
யா தேவீ பூஜ்யமானு து தேவாதீனும் அசேஷத: |
யச்சு பாகான் ஸ்வயம் புங்க்தே ஸா வாமா து ப்ரகீர்த்திதா ||
பூஜகோऽபி பவேத் வாமஸ் தன் மார்கே ஸததம் ரத: |
பஞ்சபஜ்ஞான் ந வா குர்யாத் ந குர்யாத் வாமபூஜனே ||
அன்யஸ்ய பூஜாபாகம் ஹி யதோ க்ருஹ்ணாதி வாமிகா |
ய: பூஜயேத் வாம்ப பாவை: ந தஸ்ய ருணசோதனம் ||

பித்ரு தேவ நராதீனும் ஜாயதே து கதாசன |
ஸர்வத்ர த்ரிபுராயோக: தேன மார்கேண கச்சத: ||
யதா ஜாயேத ப்ராஜ்ஞஸ்ய ததா மோக்ஷமவாப்னுயாத் |
சிரேண லபதே மோக்ஷம் வாமேன த்ரைபுரோ நர: |
ருணை சோதனஜை: பாபை: ஆக்ராந்தத்வேன பைரவ ||'

14. இப்படி இவ்விரண்டு மார்கங்களில் வாம மார்கமானது அனுஷ்டானத்தில் கடினமாயும், மோக்ஷம் அடையச் செய்வதில் தாமதமான ஸாதனமாயுமிருக்கையில், சிஷ்டர்களுக்கு அந்த மார்கத்தில் ப்ரவ்ருத்தி ஏற்படுவதை நாம் பார்க்கிறேமே, அதன் காரணமென்ன? சிஷ்டர்களில் இரண்டுவகையுண்டு ஐஹிக போகத்தில் விரக்தர்களான சிஷ்டர்கள் மோக்ஷத்தை அடைவதில் கொஞ்சம்கூட தாமதத்தை ஸஹிக்கமாட்டார்களாதலால் அவர்கள் தக்ஷிண மார்கத்தையே அவலம்பிப்பார்கள். மற்றவர்கள் பல்வகையான ஐஹிக போகங்களை இந்த ஜன்மத்திலேயே அனுபவிக்கவேண்டுமென்கிற ஆசையினல், மோக்ஷமடைவதில் ஏற்படும் தாமதத்தையும் ஸஹித்துக் கொண்டு வாம மார்கத்தைப் பின்பற்றுவார்கள். அந்த மார்கமானது பக்தி, முக்தி, இரண்டையும் கொடுக்குமாதலால் வாமாசாரிகள் விஷயப்பற்றுடையவர்களாய் அந்த மார்கத்தையே அனுஸரிக்கும் ப்ரவ்ருத்தியோடு கூடியவர்களாயிருக்கிறார்கள். வாம மார்கத்தை அனுஸரிப்பவன்—

'இஹலோகே ஸுகைச்வர்ய யுக்த: ஸர்வத்ர வல்லப: |
மதனேபம காந்தேன சரீரேண விராஜதா ||
ஸராஷ்ட்ரகம் ச ராஜானம் வசீக்ருத்ய ஸமந்தத: |
மோஹயன் வனிதா: ஸர்வா: குர்வம்ச்ச மதவிஹ்வலா: ||
ஸிம்ஹ வ்யாக்ராம்ஸ் தரக்ஷும்ச்ச பூதப்ரேத பிசாசகான் |
வசீகுர்வன் விசரதி வாயுவேகோ ஹ்யவாரித: ||'

(காளிகா புராணம்)

என்று சொல்லப்பட்டபடி, ஸகல ஸௌபாக்யத்தோடும், ஸௌந்தர்யத்தோடும் ஸகல ராஜர்களையும் வசப்படுத்திக்கொண்டு, மங்கையர்களுக்கெல்லாம் மன்மதனாய், ஸகல ப்ராணிகளுக்கும் யஜமானனாய், ஸ்வேச்சாசாரியாய் விளங்குகிறானென்பதாகச் சொல்லப்படுவான்.

15. இந்த இரண்டுவிதமான உபாஸனு மார்கங்களில் மஹாமாயா, சாரதா, சைலபுத்ரீ இவர்களை தக்ஷிணமார்கமாகவே உபாஸிக்கவேண்டுமென்றும், மற்றவர்களை இவற்றில் எந்த மார்க மாகவும் உபாஸிக்கலாமென்றும், சொல்லப்பட்டிருக்கிறது.

பாலாம் வா த்ரிபுராம் தேவீம் மத்யாம் வாப்யத பைரவீம் |
யோ யஜேத பரயா பக்த்யா பஞ்ச பாணோபம: க்ருதீ ||
காமேச்வரீம் து காமாக்யாம் பூஜயேத்து யதேச்சயா |
தாக்ஷிண்யாத் அதவா வாம்யாத் ஸர்வதா ஸித்திமாப்னுயாத் ||
மஹாமாயாம் சாரதாம் ச சைலபுத்ரீம் ததைவ ச |
யதா ததா ப்ரகாரேண தாக்ஷிண்யேனைவ பூஜயேத் ||
யோ தாக்ஷிண்யம் விஞ பாவம் மஹாமாயாதிம் அர்ச்சதி |
ஸ பாப: ஸர்வலோகேப்ய: ச்யுதோ பவதி ரோகத்ருக் ||
அன்யாஸ்து சிவதூத்யாத்யா: யா தேவ்ய: பூர்வமீரிதா: |
தா தாக்ஷிண்யாத் வாமதோ வா பூஜனீயாஸ்து ஸாதகை: ||'

(காளிகா புராணம்)

16. ஆயினும் இவ்விருவகையான உபாஸகர்களில் வாமா சாரியின் உபாஸனையானது இதர தேவதைகளுடைய ஆசையைப் பூர்த்தி செய்யாததாலும், தக்ஷிணுசாரியின் உபாஸனையினுல் ஸகல தேவர்களுடைய ஆசையும் பூர்த்தியடைவதாலும் தக்ஷிணமார்கமே உத்தமமானதென்று சொல்லப்பட்டிருக் கிறது.

கிம் து ய: பூஜகோ வாம: ஸோऽன்யாசா பரிலோபக: |
ஸர்வாசா பூரகோ யஸ்மாத் தக்ஷிணஸ் தத உத்தம: ||'

(காளிகா புராணம்)

17. இந்த மார்கங்களைப்பற்றி இந்த நாமத்தில் சொல்லப் பட்டதென்னவென்றால் அம்பாள் ஸவ்ய, அபஸவ்ய (வாம) மென்ற இரண்டு மார்கங்களிலுமிருப்பவள் என்பது. அதாவது, அந்த இரண்டு மார்கங்களாலும் அம்பிகையை உபாஸிக்கலாம் என்று அர்த்தம். வாம மார்கத்தினுலேயே உபாஸிக்கப்படும் த்ரிபுர பைரவி முதலான தேவதைகளும், தக்ஷிணமார்கத்தினுல் மட்டுமே உபாஸிக்கப்படும் சாரதா முதலான தேவதைகளும், யதேச்சமாக (இஷ்டப்பட்டபடி வாம மார்கத்திலாவது தக்ஷிண மார்கத்திலாவது) உபாஸிக்கப்படும் சிவதூதீ முதலான தேவதை களும், பரமார்த்தத்ருஷ்டியோடு பார்த்தால் த்ரிபுரஸுந்தரியோடு

அபேதமாயிருப்பதால், அவர்களை உபாஸிப்பதின் மூலம் அம்பிகை உபாஸிக்கப்படுகிருளென்று ஏற்படுவதால், ஸவ்யாபஸவ்ய மென்ற மார்கங்களிரண்டிலும் அம்பாளிருப்பதை இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

18. 'ஸவ்யாபஸவ்ய ஸௌஷும்ணேஷு'
என்று சிவஸூத்ரத்தில் சொல்லப்பட்டபடி ஸவ்யமென்பது இடா என்ற நாடியையும், அபஸவ்யமென்பது பிங்களா என்ற நாடியையும், மார்கமென்பது ஸுஷும்ணையையும் குறிக்கும். இவற்றிலிருப்பவள், அதாவது இவற்றின் ஸம்பந்தமான யோகாப்யாஸத்தால் அடையப்படுகிறவள் ஸவ்யாபஸவ்ய மார்கஸ்த்தா என்றும் சொல்லலாம்.

மேலே சொல்லிய மார்கங்களிலிருந்து (உபாஸனைக் குறைவினால்) ப்ரஷ்டர்களாயிருப்பவர்கள் மிகவும் கொடியதான ஆபத்திற்குட்படுகிறவர்களாயிருக்கும்போது,
'அத ய ஏதௌ பந்தானௌ ந விதுஸ்தே கீடா:பதங்கா: யதிதம் தந்தசூகம்]'
என்று ச்ருதியில் சொல்லப்பட்டபடி அவர்களுடைய அவ்விதமான ஆபத்தை, அனுயாஸமாகச் செய்யக்கூடிய தன்னுடைய நாமஸ்மரணம் முதலியதான ஸாதனங்கள் மூலமாகவே அம்பாள் பரமதயவுடன் தடுத்துவிடுகிருளென்பதாக அடுத்த நாமத்தில் சொல்லப்படுகிறது.

## सर्वापद्विनिवारिणी

## ஸர்வாபத்விநிவாரிணீ (913)

ஸகலவிதமான ஆபத்துக்களையும் விசேஷமாக நிவாரணம் செய்பவள்.

அம்பிகையே சரணமென்பதாக நினைத்திருப்பவர்கள் யாராயிருந்தாலும் அவர்களெல்லோரையும் அவள் காப்பாற்றுகிருளென்றும், பாக்கி குணங்களில்லாவிட்டாலும் அம்பாளுடைய நாமங்களை மட்டுமாவது ஸ்மரித்துக்கொண்டு அனன்யசித்ததுடன் உபாஸிப்பவர்கள் மலைபோன்ற ஆபத்துக்களுக்குட்பட்டிருந்தாலும் அவர்களையும் அம்பாள் காப்பாற்றுகிருர்களென்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'யே து ஸங்கான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் கதா: |
உபாஸதே ஸதா பக்த்யா யோகமைச்வரம் ஆச்ரிதா: ||
ஸர்வபூத தயாவந்த: சாந்தா தாந்தா விமத்ஸரா: |
அமானினோ புத்திமந்த: தாபஸா: ஸம்யதவ்ரதா: ||
மச்சித்தா மத்கதப்ராணா: மஜ்ஞானகதனே ரதா: |
ஸம்ந்யாஸினோ க்ருஹஸ்த்தாச்ச வனஸ்த்தா ப்ரம்ஹசாரிண: ||
யே சோக்தைர் லக்ஷணைர் ஹீனா அபி மன்னாமஜாபகா: |
தேஷாம் நித்யாபியுக்தானாம் ஆபதாம் பர்வதானபி |
நாசயாமிதராம் ஞானதீபேன நசிராதிஹ || '

(கூர்ம புராணம்)

ஹரிவம்சத்தில் அம்பாளைக்குறித்து விஷ்ணு சொல்லுகையில், மனுஷ்யர்களுக்கு ஏற்படக்கூடிய ஆபத்துக்களைப்பற்றி,

'ந்ருணாம் பந்தம் வதம் ரோதம் புத்ரநாசம் தனக்ஷயம் | '

என்பது முதலாகச் சொல்லிவிட்டு அவற்றையெல்லாம் அம்பாள் நிவாரணம் செய்வதாக,

'ஆபத்ஸு நிகிலாஸு த்வம் ரக்ஷஸ்யேவ ந ஸம்சய: | '

என்பதாகச் சொல்லப்பட்டது. வராஹ புராணத்திலும் ப்ரம்ஹாதிகளால் தேவியைக் குறித்துச் செய்யப்பட்ட ஸ்தோத்திரத்தின் கடைசியில்,

'சரணம் த்வாம் ப்ரபத்யந்தே யே தேவி பரமேச்வரி |
ந தேஷாம் ஆபத: காச்சித் ஜாயந்தே க்வாபி ஸங்கட: || '

என்று சொல்லப்பட்டது. ஆகவே, ஆபத்துக்காலத்தில் செய்ய வேண்டியது அம்பாளுடைய சரண த்யானமொன்றேயென்றும், அந்த ஸ்மரணையானது ப்ரம்ஹாதிகளையும் கிங்கரர்களாகச் செய்துவிடுகிறதென்றும் சொல்லப்பட்டது.

'ஆபதி கிம் கரணீயம் ஸ்மரணீயம் சரணயுகளம் அம்பாயா: |
தத் ஸ்மரணம் கிம் குருதே ப்ரம்ஹாதீனபி கிங்கரீ குருதே || '

## स्वस्था

**ஸ்வஸ்த்தா** (914)

சாஞ்சல்யமே இல்லாதவள்.

1. அதாவது, துக்கத்தினால் ஏற்படும் சாஞ்சல்யம் யாதொன்றும் அம்பாளுக்குக் கிடையாதாகையால் இந்த நாமமேற்பட்டது.

2. அல்லது, தன்னிடமே நிலையுள்ளவள் என்றும் அர்த்தம் சொல்லலாம்.

ஸ பகவ: கஸ்மின் ப்ரதிஷ்டித இதி, ஸ்வே மஹிம்னீதி ஹோவாச |'
(ச்ருதி)

3. ஸ்வ: என்றபதம் ஸ்வர்க்கத்தைக்குறிக்கும். அதற்கு அத்யக்ஷயாக (ஈச்வரியாக) இருப்பவள் ஸ்வஸ்த்தா.

4, ஸு - சோபனமான, அஸ்தா - ஸ்திதியில்லாமலிருப்பது, அதாவது கதி. ஆகவே, சோபனமான கதியைக் கொடுப்பவள் ஸ்வஸ்த்தா.

## स्वभावमधुरा

ஸ்வபாவமதுரா (915)

இயற்கையாகவே யாவராலும் விரும்பப்படுகிறவள்.

1. அதாவது, உபாதிகளின் சேர்க்கை யாதொன்றுமில்லாதிருக்கும்போதே ஸகலமானவர்களுடைய விருப்பத்திற்கும் இடமாயிருப்பவள் என்று தாத்பர்யம். மதுரமென்ற பதத்திற்கு,

'மதுரம் ரஸவத் ஸ்வாது ப்ரியேஷு மதுரோ அன்யவத் |
மதுரா சதபுஷ்பாயாம் மதூலீ நகரீபிதோ: ||'

என்ற விச்வகோச வசனத்தின்படி ரஸத்தோடிருப்பது,இனிப்பு, ப்ரியத்திற்கு ஸ்தானமாயிருப்பது முதலான அர்த்தங்களுண்டு.

2. அல்லது, ஸ்வ—தன்னுடையதான, பாவ—அவஸ்தானம் (இருப்பிடம்) மதுரா—மதுரா நகரமாக உடையவள் ஸ்வபாவ மதுரா என்றும் சொல்லலாம். மீனாக்ஷிதேவீ விளங்கிக்கொண்டிருப்பதும், ஹாலாஸ்ய க்ஷேத்ரமென்று பெயருடையதுமான (தக்ஷிண) மதுரா என்ற இடத்தில் நிவாஸமாயிருப்பவள். அல்லது அந்த க்ஷேத்ர ரூபமாயிருப்பவள் என்று தாத்பர்யம்.

3. ஸ்வ — தன்னுடைய, பா—ப்ரதிபையில், அவமா — முதன்மையானவர்களுடைய, துரா—பாரத்தைத் தாங்குகிறவள் ஸ்வபாவ மதுரா என்றும் சொல்லலாம். அதாவது. ஆத்மஞானத்தில் உத்தமர்களாயிருப்பவர்களுடைய பொருப்பெல்லாம் அம்பாள் ஏற்றுக்கொள்வதாக தாத்பர்யம். எப்படி (தூ:) நுகத்தடியானது வண்டியின் ஸர்வோத்தமமான அங்கமாக இருந்து

கொண்டு அதின் ஸகல பாரத்தையும் தாங்கி நிற்கிறதோ அம்மாதிரி ஆத்மஞானிகளின் பாரங்களையெல்லாம் நிர்வாஹம் செய்கிருள் என்று சொல்லப்பட்டது. [அவம என்ற பதமானது நிக்ருஷ்டமென்ற அர்த்தத்தோடு கூடியதுமட்டுமல்ல, ப்ரதமமென்ற அர்த்தமும் அதற்கு உண்டு என்பதாக பாஷ்யத்தில் ச்ருதிவாக்யங்களிலிருந்து காட்டப்பட்டிருக்கிறது.]

4. ஸ்வ பாம்—ஆத்மஞானத்தை, யே வமந்தி—யார் உண்டு பண்ணுகிருர்களோ (கிடைக்கச் செய்கிருர்களோ), அவர்களுக்குள், அ:—உத்தமமானவள், ஸ்வபா வம தரா என்றும் சொல்லலாம்.

5. ஸு—சோபனமான, அபாவா: — ஸ்வபாவா: ராகம், த்வேஷம், வைஷம்யம், நைர்க்ருண்யம் முதலியவைகளை பாவங்களென்று சொல்லப்படுவதால் அவைகளுக்கு எதிராக (சோபனமாய்) இருப்பவைகளுக்கு அபாவங்களென்று பெயர். அவைகளையே இங்கு ஸ்வபாவங்களென்று சொல்லப்பட்டது. அவற்ருல் மதுரமாயிருப்பவள் ஸ்வபாவ மதுரா. [அபாவங்களை சோபனங்களென்று சொல்லப்படுவதால், மேலே சொல்லிய பாவங்கள் அசோபனங்களென்று ஏற்படுகிறது.]

6. ஸ்வ—தன்னைச்சேர்ந்தவர்களிடத்தில் (தன் பக்தர்களிடத்தில்) பாவ—அவஸ்த்தானமாயிருப்பதால், மதுரா—மதுரமானவள், ஸ்வபாவ மதுரா என்றும் சொல்லலாம்.

7. ஸ்வ - தன் பக்தர்களுடைய, பாவ-பக்தியினுல், மது-உத்தமமான பலத்தை, கொடுப்பவள் ஸ்வ பாவ மதுரா. ['சரன்வை மது விந்ததி' என்ற ச்ருதிவாக்யத்தில் வரும் மது என்ற பதத்திற்கு இம்மாதிரி அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது.]

8. மேலே சொல்லப்பட்டவை மாதிரி, பாவமென்ற பதத்திற்கு இருக்கும் அபிப்பிராயம், அவதாரம் முதலான வேறு அர்த்தங்களையும் ஒட்டி இந்த நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம்.

धीरा

தீரா (916)

பண்டிதையாயிருப்பவள்.

1. அல்லது, தைர்யத்தையுடையவள் என்றும்சொல்லலாம்.

2. அல்லது, (அத்வைத) புத்தியைக் கொடுப்பதினால் தீரா என்று பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம். ஈச்வரனுடைய அனுக்ரஹத்தினால்தான் அத்வைத புத்தியானது ஏற்படுமென்பதாக அவதூத கீதையில்,

'ஈச்வரானுக்ரஹாதேவ பும்ஸாம் அத்வைதவாஸனா |'

என்று சொல்லப்பட்டது.

3. அல்லது, புத்தியைக் கொடுப்பவளான இரா என்ற பெயருடைய தசமீ திதியோடு கூடியவள் தீரா என்றும் சொல்லலாம்.

## धीरसमर्चिता
## தீரஸமர்ச்சிதா (917)

பண்டிதர்களால் நன்றாக அர்ச்சிக்கப்பட்டவள்.

1. தீரர்கள் ப்ரம்ஹத்தை உபாஸிப்பதைப்பற்றி 'தம் தீராஸ: கவய உன்னயந்தி' என்பதாக ச்ருதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

2. 'பாதய வா பாதாளே ஸ்தாபய வா நிகிலலோக ஸாம்ராஜ்யே |
மாதஸ் தவ பதயுகளம் நாஹம் முஞ்சாமி நைவ முஞ்சாமி ||'

என்று கல்யாணசரணர் தன்னைப்பற்றிச் சொன்னதுமாதிரி, உபாஸக ச்ரேஷ்டர்கள் தங்களுக்கு எது நேரிட்டாலும் அதைப் பாராட்டாமல் அம்பாளுடைய சரணயுகளத்தை கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுவார்களாகையால் அவர்களை தீரர்களென்று சொல்லப்பட்டது.

3. அல்லது, தீ-ஞானத்தோடு அபின்னமான, ரஸ-ஆனந்தத்தையுத்தேசித்து, அர்ச்சிதா - உபாஸிக்கப்படுகிறவள். தீரஸமர்ச்சிதா என்றும் சொல்லலாம்.

## चैतन्यार्घ्यसमाराध्या
## சைதன்யார்க்ய ஸமாராத்யா (918)

சித்ரூபமான அர்க்யத்தால் நன்றாய் ஆராதிக்கப்படத்தக்கவள்.

1. சைதன்யமென்பது சித்ரூபம். ஆத்மசைதன்யமென்றால் ஆத்மாவின் சித்ரூபம், சித்ரூபமான ஆத்மா. அதையே

ஆத்மா என்பதாக 'ஆத்மசைதன்யமாத்மா' என்பதான சிவ ஸூத்ரத்தில் சொல்லப்பட்டது. அர்க்யம் என்பது பூஜைக்கு யோக்யமான ஜலம் முதலியவை. நிராதாரமென்று சொல்லப் படும் பூஜையானது சித் (ஞான)த்துடன் அபேத பாவனுரூபமா யிருப்பது என்று சொல்லப்படும். இதையேதான் 'ஞானமர்க் யம்' என்று பாவனோபநிஷத்தில் சொல்லப்பட்டது.

தந்த்ர ராஜத்திலும்,

'ஞாதா ஸ்வாத்மா பவேத் ஞானம் அர்க்யம் ஜ்ஞேயம் ஹவி: ஸ்த்திதம் |
ஸ்ரீசக்ர பூஜனம் தேஷாம் ஏகீகரண மீரிதம் ||'

என்று சொல்லப்பட்டது ஸ்வாத்ம சைதன்யத்தினின்றும் வேறுகத்தோன்றும் ஞாத்ரு, ஞான, ஜ்ஞேயங்களின் பேத ரூபத்தை அனுஸந்தானம் செய்யாமல், சின்மாத்ர ரூபமாக எல்லாவற்றையும் ஏகீகரணம் செய்து பாவனைசெய்வதை சைதன் யார்க்யம் என்று சொல்லப்பட்டது. அவ்விதமான உபாஸனை யினுல் நன்றாய் ஆராதிக்கப்படத் தகுந்தவளென்பதாக இந்த நாமத்தில் சொல்லப்பட்டது. இவ்விதமான உபாஸனையைப் பற்றி 'ஸோஹம் பாவேன பாவயேத்' என்றும் 'ஸாஹம் பாவேன பாவயேத்' என்றும் சொல்லப்பட்டது.

2. அல்லது, சைதன்ய - ஸ்வாத்மாவினுடைய (தன்னு டைய), அர்க்ய-ஞானத்தினுல் (ஸ்வானுபூதியினுல்), நன்கு ஆரா திக்கப்படத்தக்கவள் என்றும் சொல்லலாம். இவ்விதம் ஸ்வானு பூதியினுல் ஆராதிப்பதைப்பற்றி,

'ஸ்வானு பூத்யா ஸ்வடம் ஸாக்ஷாத் ஸ்வாத்மபூதாம் மஹேச்வரீம் |
பூஜயேத் ஆதரேணைவ பூஜா ஸா புருஷார்த்ததா ||'

என்பதாக ஸ்காந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

3. அர்க்ய மென்ற பதத்திற்கு,

'அர்க்ய: பூஜாவிதௌ மூல்யேऽப்யர்க்யோ வித்யா த்ருமூலயோ: |'

என்ற விச்வகோசவசனத்தின்படி வித்யை என்றும் அர்த்த முண்டு. [(பொதுவாக) மந்த்ரங்களென்று சொல்லப்படுவதில் ஸ்திரீ தேவதையைப் பற்றியவைகளுக்கு வித்யை என்றும், புருஷ தேவதையைப் பற்றியவைகளுக்கு மந்த்ரங்களென்றும் இரண்டு பேதங்களுண்டு.] ஆகவே, சைதன்யமென்ற பெயருடைய வித்யையினுல் ஸமாராத்யா என்றும், இந்த நாமத்திற்கு அர்த்தம்

சொல்லலாம். இது புவனேச்வரீ மந்த்ரத்தைக் குறிக்கிற தென்பதாக,

'ஜபித்வா தசஸாஹஸ்ரம் மந்த்ரம் சைதன்யவாசகம் |
மஹாபாதக ஸங்கைச்ச முச்யதே பாதகாந்தரை: ||'

என்ற ஸூதஸம்ஹிதா ச்லோகத்தில் வரும் சைதன்யமென்ற பதத்திற்கு வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்கிறது. அதினுல் சைதன்யார்க்யமென்ற பதமானது புவனேச்வரீ மந்த்ரத்தைக் குறிப்பதாக ஏற்படுகிறது.

4. அல்லது, சைதன்யம் என்பது ஸம்வித்ரூபமான ரஸம் என்று அர்த்தம்.

சேதனு ஸம்விதி ப்ரோக்தா வாச்யவத் ப்ராணினி ஸ்ம்ருதா |'
(விச்வகோசம்)

அதுவே அர்க்யம்—பூஜாத்ரவ்யம். தேவீ பூஜையில் சொல்லப்பட்ட ஸாமான்யார்க்ய பாத்ரம், விசேஷார்க்ய பாத்ரம், இவையிரண்டில் விசேஷார்க்ய பாத்ரத்தில் அதை நிரப்பி ஸம்ஸ்காரங்களால் பூஜார்ஹமாகச் செய்து, அதினுல் செய்யப்படும் தர்ப்பணம் முதலானவைகளால் ஆராதிக்கப்படுகிறவள் சைதன்யார்க்ய ஸமாராத்யா.

'ஸம்விதாஸவயோர் மத்யே ஸம்விதேவ கரீயஸீ |' (ருத்ரயாமளம்)

இதின் விபரங்களைப்பற்றி பரசுராம கல்பஸூத்ரம் முதலியவற்றில் பார்க்கவும்.

5. தாந்த்ரிகர்களால் குண்டகோளோத்பவமென்று சொல்லப்படும் பஞ்சமத்தின் ரஸத்திற்கு சைதன்யமென்று பெயர். (மேலே சொல்லப்பட்ட விச்வகோச வசனத்தின்படி) ப்ராணிகளிடமிருந்து அது ஏற்படுவதால் சைதன்யமென்று பெயர் ஏற்பட்டது. அதினுல் ஸமாராத்யா என்றும் சொல்லலாம்.

## चैतन्यकुसुमप्रिता

## சைதன்ய குஸுமப்ரியா (919)

(சித்) சைதன்யமாகிற புஷ்பத்தில் ப்ரியமுள்ளவள்.

1. 'ஜடானும் சைதன்ய ஸ்தபக மகரந்த ஸ்ருதி ஞரீ'

என்று ஆசார்யாள்'ஸௌந்தர்ய லஹரி'யில் ப்ரயோகித்ததுபோல் சைதன்யத்தை புஷ்பமாகச் சொல்வது கவிகளின் ஸம்ப்ரதாயம்.

மஹத்தான பலத்தைக் கொடுப்பதால் உபமானம் பொருத்தமாக இருக்கிறது.

2. சைதன்ய குஸுமமென்று இங்கு சொல்லப்பட்டது அதையுள்பட (புஷ்பாஷ்டகமென்று சொல்லப்படும், எட்டுவித புஷ்பங்களைக் குறிக்கும்.

'அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம் இந்த்ரியாணும் ச நிக்ரஹ: |
க்ஷாந்தி:புஷ்பம் தயாபுஷ்பம் ஞானபுஷ்பம் பரம் மதம் |
தப:புஷ்பம் ஸத்யபுஷ்பம் பாவபுஷ்ப மதாஷ்டமம் ||'

இவற்றில் ஞானபுஷ்பத்தை (சைதன்யகுஸுமத்தை) பரமென்பதாகச் சொல்லப்பட்டது.

## सदोदिता

ஸதோதிதா (920)

ஸதா உதயமாயிருப்பவள்.

1. அதாவது, அம்பாள் ஸ்வப்ரகாசத்தோடிருப்பதால் நித்ய காலமும் உதயமாகி விளங்கிக்கொண்டிருப்பதாக இங்கு சொல்லப்பட்டது.

2. அல்லது, ஸஜ்ஜனங்களின் மனதில் பூர்ணமாய் விளங்கிக்கொண்டிருப்பவளென்றும் சொல்லலாம்.

## सदातुष्टा

ஸதா துஷ்டா (921)

எப்போதும் ஸந்தோஷத்தோடு கூடியிருப்பவள்.

அல்லது, முந்திய நாமத்திற்குச் சொல்லப்பட்டபடி, ஸஜ்ஜனங்களிடத்தில் பூர்ணமான ஸந்தோஷத்தோடிருப்பவளென்றும் சொல்லலாம்.

## तरुणादित्यपाटला

தருணுதித்ய பாடலா (922)

மத்யான்ஹ காலத்திய ஸூர்யனைப்போல் பாடல வர்ணமாயிருப்பவள்.

1. பாடலமென்ருல் வெளுப்பும் சிகப்பும் கலந்த நிறம்.

2. இப்படிச் சொல்லுவதினால் கௌரீ, ச்யாமா என்று அம்பாளைச் சொல்வதற்கு விரோதம் யாதொன்றுமில்லையென்பது கவனிக்கவேண்டிய விஷயம். அம்பாளுடைய ரூபத்தின் நிறமானது மூர்த்திபேதங்களை யொட்டியும், த்யான பேதங்களை யொட்டியும், வெவ்வேறு விதமாயிருப்பதாகச் சொல்லப்படும்.

'சாந்தா தவளவர்ணாபா மோக்ஷதர்ம ப்ரகல்பனே |
ஸ்த்ரீவச்யே ராஜவச்யே ச ஜனவச்யே ச பாடலா ||
பீதா தனஸ்ய ஸம்பத்தௌ க்ருஷ்ணா மாரணகர்மணி |
பப்ருர் வித்வேஷணே ப்ரோக்தா ச்ருங்காரே பாடலாக்ருதி: |
ஸர்வவர்ணா ஸர்வலாபே த்யேயா ஜ்யோதிர்மயீ பரா ||'

இப்படிப் பல வர்ணமாயிருப்பதைப்பற்றி ச்ருதியிலும்,

'தத் யதா மஹாராஜனம் வாஸோ யதா பண்ட்வாவிகம் யதேந்த்ரகோபம் |'

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

3. தருணாதித்யனென்பதற்கு மாத்யான்ஹிக காலத்து ஸூர்யனென்று பாஸ்கரராயர் அர்த்தம் சொல்லியிருந்தாலும், அந்த பதமானது இளஞ்சூர்யனை (பாலார்க்னை) குறிக்கும்.

## दक्षिणादक्षिणाराध्या
## தக்ஷிணாதக்ஷிணாராத்யா (923)

தக்ஷிண மார்கத்தினாலும் வாம மார்கத்தினாலும் ஆராதிக்கத்தக்கவள்.

1. அல்லது, தக்ஷிணையினால் (பூஜோபஹாரங்களால்) தக்ஷிணர்களால் (பண்டிதர்களால்) ஆராத்யா என்றும் சொல்லலாம்.

2. தக்ஷிணர்களென்றால் பண்டிதர்கள், ஸாமர்த்யசாலிகள். அதக்ஷிணர்களென்றால் மூர்க்கர்கள். இவ்விருவகையாராலும், அதாவது பண்டிதர்களாலும், பாமரர்களாலும், ஆராதிக்கப்பட்டவள் என்றும் சொல்லலாம்.

3. அல்லது, கேவலம் கர்மாவை (கர்ம மார்கத்தை) மட்டும் அறிய விரும்புகிறவர்கள் (கைப்பிடிப்பவர்கள்) தக்ஷிணர்களென்றும், (அதினால்) அதக்ஷிணர்களென்பவர்கள் ப்ரம்ஹ ஞானிகளென்றும் சொல்லலாம்.

இவ்விதமாக, ப்ரம்ஹ ஞானமில்லாதவர்களை தக்ஷிணர்கவென்று,

'வித்யயா ததாரோஹந்தி யத்ர காமா: பராகதா: |
ந தத்ர தக்ஷிணா யந்தி நாவித்வாம்ஸஸ் தபஸ்வின: ||

என்ற ச்ருதிவாக்யத்தின் வ்யாக்யானத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்விருவிதமான உபாஸகர்களாலும் அம்பாள் ஆராதிக்கப்படுவதை இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

'சதுர்விதா பஜந்தே மாம ஜனா: ஸுக்ருதினோऽர்ஜுன |
ஆர்த்தோ ஜிக்ஞாஸு: அர்த்தார்த்தீ ஞானீ ச பரதர்ஷப ||' (கீதை)

## दरस्मेरमुखाम्बुजा

## தரஸ்மேரமுகாம்புஜா (924)

புன்சிரிப்போடு கூடிய முகாரவிந்தத்தையுடையவள்.

1. முகம், கரம், பாதம் இவற்றை தாமரஸ புஷ்பத்திற்கு ஒப்பிடுவது கவிகளின் ஸம்ப்ரதாயம்.

'கராரவிந்தேன பதாரவிந்தம் முகாரவிந்தே விநிவேசயந்தம் |
வடஸ்ய பத்ரஸ்ய புடே சயானம் பாலம் முகுந்தம் மனஸாஸ்மராமி ||

2. முகத்தையே (தாமரஸ) புஷ்பமாக உடையது - அதாவது, முகமாகிற தாமரஸ புஷ்பத்திற்கு அடிக்காம்புபோலிருப்பது கழுத்து, அது தர - சங்கம்போல், ஸ்மேரமாக-சோபிக்கிறதாக உடையவள் தரஸ்மேர முகாம்புஜா என்றும் சொல்லலாம். கழுத்தை இம்மாதிரி சங்கத்திற்கு ஸமமாக 'கம்புகண்டீ' முதலான பதங்களில் சொல்வது கவிகளின் வழக்கம்.

3. அல்லது, தரே–பயகாலத்திலும், ஸ்மேரமான முகாம்புஜத்தையுடையவளென்றும் சொல்லலாம். அதாவது, கல்பாந்தம் (ப்ரளயம்) முதலான பயங்கரமான காலங்களில் பிறருடைய முகங்களில் பயத்தினால் வைவர்ண்யம் ஏற்படுகையில், அம்பாள் அப்போதும் புன்சிரிப்புடன் விளங்கிக்கொண்டிருக்கிறாளென்பது தாத்பர்யம்.

4. தரே—(பக்தர்களை) ஆதரிக்கும் விஷயத்தில், ஸ்மேர—ப்ரஸன்னமான, முகாம்புஜத்தையுடையவளென்றும் அர்த்தம் சொல்லலாம்.

இதற்கடுத்தாற்போல் வரும் பாதிச்லோகமாகிய,

'கௌலினீ, கேவலா, ऽனர்க்ய, கைவல்ய பததாயினீ |'

என்பதில் நாலு நாமங்கள் வருகின்றன, அவற்றில் மூன்று ஏற்கனவே வந்தவை.

'குலாங்கனா குலாந்தஸ்த்தா கௌலினீ குலயோகினீ |'

'க்லீம்காரீ கேவலா குஹ்யா கைவல்ய பததாயினீ |'

ஆகவே, புனருக்தி என்ற தோஷத்தைப் போக்குவதற்காக இவற்றை சரியாகப் பிரிக்கவேண்டிய அவச்யம் ஏற்படுகிறது. அதற்காக சலாக்ஷர ஸூத்ரகாரர் இந்தப் பாதிச்லோகத்தை கௌலினீ', 'கேவலாऽனர்க்ய கைவல்ய பததாயினீ' என்பதாக இரண்டு நாமங்களாகப் பிரித்திருக்கிறார். ஏற்கனவே 'கௌலினீ' என்று வந்தவிடத்தில் அவர் அதை 'கௌலினீ குலயோகினீ' என்று சேர்த்திருப்பதால் அவர் மதத்தின்படி பௌனருக்த்யம் ஏற்படவில்லை. பரிபாஷாச்லோககாரரான ஸ்ரீ ந்ருஸிம்ஹானந்த நாதர் இந்த சலாக்ஷரஸூத்ர விபாகத்தை அனுஸரிக்காமல், 'கௌலினீ கேவலா' என்றும் 'அனர்க்ய கைவல்ய பததாயினீ' என்றுமாகப் பிரித்திருக்கிறார். ஏற்கனவே 'கௌலினீ' என்பது வந்த இடத்தில் அதைத் தனி நாமமாகவும் 'குலயோகினீ' என்பதைத் தனி நாமமாகவும் அவர் பிரித்திருப்பதினால் நாமங்களின் கணக்கு ஒன்றுகூட இருக்குமே என்று தோன்றலாம். ஆயினும்,

ப்ரஸவித்ரீ ப்ரசண்டாக்ஞா ப்ரதிஷ்டா ப்ரகடாக்ருதி: |'

என்பதில் வரும் 'ப்ரகடாக்ருதி:' என்பதை சலாக்ஷர ஸூத்ர காரர் 'ப்ரகடா', 'ஆக்ருதி:' என்று இரண்டாகப் பிரித்திருக்கையில், ஸ்ரீந்ருஸிம்ஹானந்தநாதர் அதை ஒரே நாமமாகச் சொல்லுவதால் கணக்கு சரியாகத்தானிருக்கிறது. பாஸ்கரராயர் தன் பாஷ்யத்தில் இந்த இரண்டு விபாகங்களுக்கும் காரணத்தைச் சொல்லிவிட்டு தன் குருசரணுளுடைய மதப்படி நாமங்களைப் பிரித்து அர்த்தம் சொல்லியிருக்கிறார். அவ்வித நாம விபாகத்தின் காரணத்தைப்பற்றித் தெரிந்துகொள்ள விருப்பமிருந்தால் பாஷ்யத்தின் மூலத்தைப் பார்த்துக்கொள்ளக் கோரப்படுகிறது.

## कौलिनीकेवला

## கௌலினீ கேவலா (925)

கௌல தர்மத்தையும் கேவலமென்ற ஞானத்தையுமுடையவள்.

1. ஈச்வர ஞானத்தை கேவலம் என்று சொல்லப்படும். அவ்விதமான ப்ரயோகங்கள் அனேகம் ஜைன தந்த்ரங்களில் காணப்படுகின்றன.

2. அல்லது, ஸகல தர்மங்களிலிருந்தும் விடுவிக்கப் பட்டவள் (அதாவது, தர்மங்கள் யாதொன்று மில்லாதவள்) கேவலா என்றும் சொல்லலாம்.

3. அல்லது, ஸுக, துக்கங்களிலிருந்து விடுவிக்கப் பட்டவள் கேவலா என்றும் சொல்லலாம். அவ்விதமான அர்த்தமானது 'தத் விமுக்திஸ்து கேவலீ' என்ற சிவஸூத்ரத்தில் கேவல பதத்திற்குச் சொல்லப்பட்டிருக்கிறது. [இங்கு வரும் தத் என்ற பதமானது இதற்கு முந்திய ஸூத்ரமான 'ஸுகா ஸுகயோர் பஹிர் மனனம்' என்பதில் சொல்லப்பட்ட ஸுக, துக்கங்களை குறிக்கும்,

4. கேவலமென்ற பதத்திற்கு,

'கேவலம் ஞானபேதே ஸ்யாத் கேவவச்சைக க்ருத்ஸ்னயோ: |
நிர்ணீதே கேவலம் சோக்தம் கேவல: குஹனே க்வசித் ||'

என்ற விச்வகோச வசனத்தின்படி ஏக (ஒன்றான), க்ருத்ஸ்ன (முற்றிலுமான), நிர்ணயிக்கப்பட்ட, என்ற அர்த்தங்களுண்டு. இவற்றை யொட்டியும் இங்கு அந்தப் பதத்திற்கு அர்த்தங்கள் சொல்லலாம். ஆயினும் இவற்றினால் ஏற்படுவது என்னவென்றால் அம்பாள் கேவலம் கௌலதர்மத்தையே உடையவள் என்ற அர்த்தம் தான்.

5. அல்லது, கௌலினிகள் (கௌலமதத்தை அனுஷ்டிக்கும் ஸ்த்ரீகள்) யாரால் ஞானவதிகளாக ஆகிறார்களோ, அவள் கௌலினீ கேவலா என்றும், கௌலினிகளால் நிர்ணயிக்கப்பட்டவள் கௌலினீ கேவலா என்றும் சொல்லலாம்.

[6. இந்த நாமத்திற்கு 'காலினீ கேவலா' என்ற பாடாந்தரமிருப்பதாக சிலர் சொல்லுவார்கள். (பாஸ்கர ராயர் இதைச் சொல்லவில்லை.) அப்போது, காலதர்மஸ்வரூபிணீயாயும் ஒருவித தர்மமுமில்லாதவளாயுமிருப்பவள் என்று அர்த்தம் ஏற்படும். அல்லது கால நிர்ணய தேவதைகள் யாரால் கேவலைகளாய் (ஸார மில்லாதவர்களாய்) இருக்கிறார்களோ அவள் காலினீ கேவலா

என்றும் சொல்லலாம். அதாவது, கால நிர்ணயத்திற்கு அதீதமாயிருப்பவள் என்று தாத்பர்யம்.]

## अनर्घ्यकैवल्यफददायिनी

## அனர்க்ய கைவல்ய பத தாயினீ (926)

விலையற்றதான கைவல்ய பதத்தைக் கொடுப்பவள்.

1. அதாவது, அமூல்யமான - விலை மதிக்க முடியாத (அபரிச்சின்னமான), கைவல்யமென்ற ஐந்தாவது முக்தியைக் கொடுப்பவள் என்று தாத்பர்யம்.

2. 'அனர்க் யா கைவல்ய பத தாயினீ' என்ற பாடாந்தரத்தில் ஆ (எங்கும் நிறைந்திருக்கும்) கைவல்ய பதமென்றும், அகைவல்ய (கைவல்யம் என்பது வேறு என்று இல்லாததான) பதமென்றும் அர்த்தம் சொல்லலாம்.

## स्तोत्रप्रिया

## ஸ்தோத்ர ப்ரியா (927)

ஸ்தோத்ரங்களில் ப்ரியமுள்ளவள்.

1. ஸ்தோத்திரமென்பது இருவகைப்படும். லௌகிகமான ஸ்தோத்ரமானது குணங்களைப்பற்றிச் சொல்வது. அது நமஸ்காரம், ஆசீர்வாதம், ஸித்தாந்தத்தைச் சொல்வது, பராக்ரமத்தை சொல்லுவது, விபூதியைப்பற்றிச் சொல்லுவது, ப்ரார்த்தனை செய்வது என்பதாக ஆறுவகைப்படும்.

நமஸ்காரஸ் ததாசீச்ச ஸித்தாந்தோக்தி: பராக்ரம: |
விபூதி: ப்ரார்த்தனு சேதி ஷட்விதம் ஸ்தோத்ரலக்ஷணம் ||'

இவ்வகைகளை முறையே த்ரிஜகத்வந்த்யா (627) ஸ்வஸ்திமதீ (448) மித்யாஜகததிஷ்டானு (735) பண்டாரஸுரேந்த்ர நிர்முக்தசஸ்த்ர ப்ரத்யஸ்த்ர வர்ஷிணீ (79) இச்சாசக்தி ஞான சக்தி க்ரியாசக்தி ஸ்வரூபிணீ (658) ஸாம்ராஜ்யதாயினீ (692) முதலியவைகளில் பார்க்கலாம். சொல்லப்படும் மந்த்ரத்தினுல் வசப்படுத்தக்கூடிய தெய்வத்தினிடத்திலிருக்கும் குணத்தைச் சொல்லுவது வைதிகமான ஸ்தோத்திரம். இவ்விருவகையான ஸ்தோத்ரங்களும் அம்பாளுக்குப் பிரியமென்பதாக (அதாவது

அவற்ருல் அம்பாளுக்கு ப்ரியம் ஏற்படும் என்பதாக) இந்த நாமத்தில் சொல்லப்பட்டது.

2. அப் என்ற பதமானது தேவர்கள், மனுஷ்யர்கள், பித்ருக்கள், அஸுரர்கள் என்ற நாலுவகையானவர்களையும் குறிக்கும். இதற்குப் பல ஆதாரங்கள் ச்ருதியில் கிடைக்கப் பெறுகின்றன.

'தானி வா ஏதானி சத்வார்யம்பாம்ஸி |
'பஞ்சம்யாமாஹுதாவாப: புருஷவசஸோ பவந்தி | '
'ஆபோ வா இதம் ஸர்வம் | '

இந்த அர்த்தத்தில், ஸ்தோத்ரம்செய்யும் தேவ, மனுஷ்ய, பிதா, அஸுரர்களிடத்தில் ப்ரியமுள்ளவள் என்றும் இந்த நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம்.

## स्तुतिमती
## ஸ்துதிமதீ (928)

ஸ்துதியை உடைத்தாயிருப்பவள்.

அல்லது, யாருடைய ஸ்துதியினுல் மதி—ஞானமும், ஈ—ஐச்வர்யமும் கிடைக்கப்பெறுமோ அவள் ஸ்துதிமதீயென்றும் சொல்லலாம். அதாவது, யாரை ஸ்தோத்திரம் செய்தால் ஞானம், ஐச்வர்யம் இரண்டும் கிடைக்குமோ அவள் என்று அர்த்தம்.

## श्रुतिसंस्तुतवैभवा
## ச்ருதிஸம்ஸ்துத வைபவா (929)

ச்ருதிகளால் நன்ருக புகழப்பட்ட வைபவத்தையுடையவள்.

1. அல்லது ஸம்ஸ்தவ: ஸ்யாத் பரிசய:' என்ற கோச வசனத்தின்படி ஸம்ஸ்துதியென்ருல் பரிசயம், அனுபவம் என்று அர்த்தம். அப்போது, ச்ருதிகளால் நன்ருய் அனுபவிக்கப் பட்ட, அதாவது, நன்ருய் அறியப்பட்ட, வைபவத்தையுடையவள் என்றும் சொல்லலாம்.

2. யுகாப்தயோऽர்தா: ச்ருதியச்சதஸ்ர:'
என்ற சந்த: ஸூதாகரத்தில் சொல்லப்பட்டபடி ச்ருதியென்ற

பதமானது நாலு என்ற எண்ணிக்கையைக்குறிக்கும். அதாவது, நான்குவிதமாக அனுபவிக்கப்பட்ட வைபவத்தையுடையவ ளென்று சொல்லலாம். அதாவது,

'சரீரபுருஷ: சந்த:புருஷோ வேதபுருஷோ மஹாபுருஷ: |'

என்று பஹ்வ்ருசோபநிஷத்தில் சொல்லப்பட்ட நாலு வ்யூஹ ஸ்வரூபமாயிருப்பவள் என்பதாக தாத்பர்யம்.

3. அம்பிகையானவள் சாந்தி, வித்யா, ப்ரதிஷ்டா, நிவ்ருத்தியென்ற நாலு வ்யூஹஸ்வரூபமாயிருப்பதாகவும், இவ் விதமான வ்யூஹங்களால் சூழப்பட்ட நான்கு மூர்த்திகளாய் பரமசிவன் ஸ்வாத்மானந்தத்தை அநுபவித்துக்கொண்டிருப்ப தாகவும் கூர்மபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

சதஸ்ர: சக்த்யோ தேவ்யா: ஸ்வரூபத்வே வ்யவஸ்த்திதா: |
அதிஷ்டான வசாத் தஸ்யா: ச்ருணுத்வம் முனிபுங்கவா: ||
சாந்திர்வித்யா ப்ரதிஷ்டா ச நிவ்ருத்திச்சேதி தா: ஸ்ம்ருதா: |
சதுர்வ்யூஹஸ் ததோ தேவ: ப்ரோச்யதே பரமேச்வர: ||
அனயா பரமோ தேவ: ஸ்வாத்மானந்தம் ஸமச்னுதே |
சதுர்ஷ்வபி ச தேவேஷு சதுர்மூர்த்திர் மஹேச்வர: ||'

## मनस्विनी

## மனஸ்வினீ (930)

மனதின் ஸ்வாதந்தர்யத்தோடு இருப்பவள்.

அம்பிகையின் மனதானது பிறருக்கு ஆதீனமானதல்ல வென்றும், அம்பிகை ஸ்வாதந்த்ர்யமான மனதோடு கூடியவ ளென்றும் சாக்தர்களுடைய ஸித்தாந்தம்.

## मानवती

## மானவதீ (931)

பெருந்தன்மையோடுகூடிய மனதையுடையவள்.

மானமென்றால் மனதினுடைய பெருந்தன்மை, ஆச்ரவு பக்தர்களுடைய அபராதங்களை மன்னிப்பது, ப்ரமாணம், முதலிய அர்த்தங்களுண்டு. ' அவையெல்லாம் அம்பாளிடமிருப் பதால் மானவதீ என்ற பெயர் ஏற்பட்டது.'

**महेशी**
**மஹேசீ** (932)

மஹேச்வரருடைய பத்னீ.

அம்பாளுக்கு இந்தப்பெயர் ஏற்பட்டதற்கு காரணங்கள்,

'மஹாதேவாத் ஸமுத்பன்னு மஹத்பிர் யத ஆக்ருதா |
மஹேசஸ்ய வதூர் யஸ்மாத் மஹேசீ தேன ஸா ஸ்ம்ருதா ||'

என்பதாக தேவிபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

**मङ्गलाकृतिः**
**மங்களாக்ருதி:** (933)

மங்களரூபமான ஆக்ருதியோடு கூடியவள்.

**विश्वमाता**
**விச்வமாதா** (934)

லோகங்களுக்கெல்லாம் ஜனனீயாயிருப்பவள்.

அல்லது, விச்வ: என்று விஷ்ணுவுக்குப் பெயராகையால், அவருடைய மாதா என்றும் சொல்லலாம். இதேமாதிரி ச்ருதியில் 'ஸோம: பவத' என்று ஆரம்பித்து 'ஜனிதோத விஷ்ணோ:' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**जगद्धात्री**
**ஜகத்தாத்ரீ** (935)

ஜகத்தை தாங்குகிறவள்.

1. அதாவது, ஸகல ஜகத்திற்கும் ஆதாரமாயிருப்பவளென்று தாத்பர்யம்.

2. அல்லது, பூமிரூபமாக இருந்துகொண்டு ஜகத்தை தாங்குகிறவள் என்றும் சொல்லலாம்.

3. தாத்ரீ என்றால் உபமாதா. செவிலித்தாய் என்றும் அர்த்தமுண்டு. செவிலித்தாய்போல் ஜகத்தை பரிபாலித்துப் போஷித்துவருவதால் ஜகத்தாத்ரீ என்று பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

'ஏஷ பூதபால ஏஷ ஸேதுர் விதரண ஏஷாம் லோகானும் அஸம்பேதாய |'
(காண்வ ச்ருதி

4. அம்பாளுக்கு இந்தப்பெயர் ஏற்பட்டதற்குக் காரணம்,
'யஸ்மாத் தாரயதே லோகான் வ்ருத்திமேஷாம் ததாதிச |
டுதாஞ் தாரணே தாதுர் ஜகத்தாத்ரீ மதா புதை: ||'
என்று தேவிபுராணத்தில் சொல்லப்பட்டது.

## विशालाक्षी

விசாலாக்ஷீ (936)

விசாலமான நேத்திரங்களையுடையவள்.

1. 'வாராணஸ்யாம் விசாலாக்ஷீ' என்ற பத்மபுராண வசனப்படி வாராணஸியிலிருக்கும் அம்பிகைக்கு விசாலாக்ஷீ என்று பெயராகையால் அந்த ரூபமாக இருப்பவள் என்றும்சொல்லலாம்.

2. விசாலா என்ற பதமானது பதரிகாச்ரமத்தைக் குறிக்கும். ஆயினும் அது ஹிமாசலத்திலிருப்பதால் அங்கிருக்கும் நேபாள பீடத்தையும் குறிக்கும். அம்பிகையை பீடரூபிணியாக ந்யாஸம் செய்வதில் நேபாளபீடத்தை நேத்ரஸ்தானத்தில் ந்யாஸம் செய்வதென்பதாக ப்ரம்ஹாண்டபுராணம் முதலியவற்றில் சொல்லப்பட்டிருக்கிறது. அதை அனுஸரித்து, விசால பீடத்தை ஆக்ஷிஸ்தானமாக உடையவளென்று இந்த நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம்.

## विरागिणी

விராகிணீ (937)

வைராக்யத்தோடு கூடியவள்.

வைராக்யமென்றால் ராகம் (பற்றுதல்) இல்லாதிருப்பது.

## प्रगल्भा

ப்ரகல்பா (938)

துணிவோடிருப்பவள்.

தைர்யம், பலம் இவற்றோடிருக்கும் ஸ்திரீக்கு ப்ரகல்பா என்று பெயர். அம்பிகையானவள் ஸ்ருஷ்டி முதலான கர்மாக்கள் செய்வதில் ப்ரௌடையாயிருப்பதால் இந்தப்பெயர் ஏற்பட்டது.

## परमोदारा

பரமோதாரா (939)

உத்க்ருஷ்டமான ஔதார்யத்தையுடையவள்.

1. உதாரமென்பது 'உதாரோ தாத்ரு மஹதோ:' என்ற அமரகோச வசனத்தின்படி கொடுப்பதில் தாராளமாயிருப்பதைத் தவிர, மஹத்தானதென்பதையும் குறிக்கும். அம்பிகையானவள் தேசம், காலம் இவற்றைக்குறித்து மஹதீயாயிருப்பதால் பரமோதாரா என்று பெயர் ஏற்பட்டது. இதை 'ஆகாசவத் ஸர்வகதச்ச நித்ய:' என்று ச்ருதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

2. அல்லது, (பர) மேலானதான (மோத) ஆனந்தத்தை (ஆரா) பூர்ணமாய் (ஸர்வவ்யாபகமாய் கொடுக்கிறாள்) என்றும் சொல்லலாம்.

3. அல்லது, பர-மிகவும் அதிகமான, உத-ஜலத்தோடிருப்பது, பரமோதம்-ஸமுத்ரம். அது இங்கு ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தைக் குறிக்கும். அதை நாசம் செய்யும் அரா-ஆயுதவிசேஷம் போன்றவள் பரமோதாரா என்றும் சொல்லலாம்.

4. இதை முந்திய நாமத்திலிருந்து அபரமோதாரா என்று பிரித்தும் சொல்லலாம். அப்போது, அப-போக்கடிக்கப்பட்ட (இல்லாத), ரமா-ஸந்தோஷத்தையுடையவர்கள், அதாவது தரித்ரர்கள் அபராமா:, அவர்களிடத்தில் உதாரமாயிருப்பவள்-ஐச்வர்யத்தைக் கொடுப்பவள் அபரமோதாரா என்று சொல்லலாம்.

## परामोदा

பராமோதா (940)

உத்க்ருஷ்டமான கீர்த்தியையுடையவள்.

1. ஆமோதமென்பது பரிமளத்தைக் குறிக்கும். இங்கு கீர்த்தி என்று அர்த்தம்.

2. அல்லது, பர - உத்க்ருஷ்டமானதும், ஆ - எங்கும் பரவியிருப்பதுமான, மோதா — ஸந்தோஷத்தையுடையவள் என்றும் சொல்லலாம்.

**मनोमयी**

**மனோமயீ** (941)

மனதையே ரூபமாக உடையவள்.

1. சுத்த ப்ரம்ஹமானது சிதாகாச ரூபமாய் மனதிலிருப்பதாயும் அதோடு அபேதமாய் அதின் ஸ்பந்த சக்தியாக அம்பாளிருப்பதாயும் மஹாவாஸிஷ்ட ராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸ பைரவ:சிதாகாச: சிவ இத்யபிதீயதே |
அனன்யாம் தஸ்ய தாம் வித்தி ஸ்பந்தசக்திர் மனோமயீ ||'

2. 'மனஸைவானுத்ரஷ்டவ்ய.' என்று ச்ருதியில் சொல்லப்பட்டபடி ஆத்மஞானம் ஏற்படுவதற்கு மனதுதான் ப்ரதானமாயிருக்கிறபடியால் மன:ப்ரதானையாயிருப்பவளென்றும் அர்த்தம் சொல்லலாம்.

**व्योमकेशी**

**வ்யோமகேசீ** (942)

ஆகாசத்தை கேசங்களாக உடையவள்.

1. அம்பாளுடைய விராட் ஸ்வரூபத்தில் வ்யோமமானது கேசமாக இருப்பதால் இந்தப்பெயர் ஏற்பட்டது.

2. சிவனுக்கும் வ்யோமமானது கேசமாக இருப்பதால் அவருக்கு வ்யோமகேசனென்று பெயர். ஆகவே அவருடைய பத்தினியாகிய அம்பாளுக்கு வ்யோமகேசீ என்று பெயர் ஏற்படுகிறது.

3. ஒரு பதத்திற்கு க என்பதைச் சேர்த்தால் குறைவானது (சிறியது) என்று அர்த்தம் ஏற்படும். ஆகவே வ்யோமக மென்றால் அல்பமான, சிறியதான ஆகாசம் என்று அர்த்தம். அதற்கும் ஈசி என்றால் அங்கும்கூட வ்யாபித்திருப்பவளென்று அர்த்தம்.

4. வ்யோமகேசனான சிவனுக்கு திக்குகள் பத்னீ என்பதாகச் சொல்லப்பட்டிருப்பதால் அவ்விதமான திக் ஸ்வரூபமாக இருப்பவளென்றும் சொல்லலாம்.

**विमानस्था**
**விமாநஸ்த்தா** (943)

விமானத்தில் வீற்றிருப்பவள்.

1. விமானம் என்பது ஆகாசத்தில் போகும் வாஹனம். அதிலிருப்பவர்கள் விமானஸ்தர்கள்—தேவர்கள். அவர்களோடு அம்பாள் அபின்னமாக இருப்பதால் அதே பெயர் ஏற்பட்டது.

2. அல்லது, வி - விசேஷமாக, மான - ஆதரிப்பதில், ஸ்த்தா - ஸ்திதியோடு இருப்பவள், அதாவது, பக்தர்களை ஆதரிப்பதில் விசேஷமான பற்றுதலையுடையவள் என்றும் சொல்லலாம்.

3. அல்லது, விசேஷமான மா - காந்தியோடுகூடியது விமம், அவ்விதமான அன: - சகடத்தோடுகூடியது கிரிசக்ரம் முதலான ரதம். அதில் இருப்பவள் விமானஸ்தா.

4. விமான - பரிமாணமில்லாத (அபரிச்சின்னமான) ப்ரம் ஹம். அதிலிருப்பவள் விமானஸ்தா.

5. மானஸ்த்தா என்றால் பரிமாணத்திலிருப்பவள். அதாவது பரிமாணத்தினால் அவிச்சின்னமானவள். அது இல்லாதவள் விமானஸ்தா.

6. உண்மையான அறிவை (முடிவை) விசேஷமாய் ஏற்படுத்துவதால் வேதத்திற்கு விமானமென்று பெயர். அதிலிருப்பவள், அதாவது, அதில் ப்ரதிபாதிக்கப்படுகிறவள் விமானஸ்தா.

7. விமானங்களில் - வேதத்திற்கு விருத்தமில்லாத மானங்களில் (ப்ராமணங்களில்), தர்ம ப்ரம்ஹ ரூபமாக அம்பாளிருப்பதால் விமானஸ்தா என்று பெயர்.

8. அல்லது, விசேஷமாக மானத்தின் (அளவைப்பற்றிய அறிவின்) ரூபமாயிருப்பதாகச் சொல்லப்படும் புராண, ந்யாய, மீமாம்ஸா முதலான பதினான்கு வித்யாஸ்தானங்களிலிருப்பவள் விமானஸ்த்தா என்றும் சொல்லலாம்.

**वज्रिणी**
**வஜ்ரிணீ** (944)

இந்த்ரனுடைய பத்னியான சசீ ரூபமாயிருப்பவள்.

1. அல்லது வஜ்ராயுதத்தை தரிப்பவளென்றும் சொல்லலாம்.

2. அல்லது, வஜ்ரங்கள் (வைரங்கள்) என்ற ரத்னங்களால் அலங்க்ருதமாயிருப்பவள் என்றும் சொல்லலாம்.

3. 'மஹத் பயம் வஜ்ரமுத்யதம்' என்று ச்ருதியில் சொல்லப்பட்டபடி வஜ்ரமென்ற பதமானது ப்ரஹ்மத்தைக் குறிக்கும். அதை பரிச்சின்னமாக (அளவுக்குட்பட்டதாக) செய்வதான ஸம்பந்தத்தோடு அம்பாளிருப்பதால் ப்ரஹ்மத்தையுடையவளென்று இங்கு சொல்லப்பட்டது.

## वामकेश्वरी

## வாமகேச்வரீ (945)

வாமகேச்வரமென்ற தந்த்ரத்தின் ரூபமாயிருப்பவள்.

1. அல்லது, அந்த தந்த்ரத்தினால் ப்ரதிபாதிக்கப்பட்டவள் என்று சொல்லலாம்.

2. வாம மார்கத்தை அவலம்பித்திருப்பவர்களை வாமர்கள் என்று சொல்லப்படும். அவர்கள் பஞ்சயக்ஞங்களை அவச்யமாகக் கருதுவதில்லையாதலால் அவர்களைக்கொஞ்சம் குறைவாக வாமகர்களென்று சொல்வது வழக்கம். அவர்களுக்கு ஈச்வரீ, அதாவது அவர்களால் உபாஸிக்கப்பட்டவள் வாமகேச்வரீ.

3. ஜகத் ஸ்ருஷ்டி கர்த்தாக்களாகிய தக்ஷன் முதலிய ப்ரஜாபதிகளை வாமகர்களெனப்படும். அவர்களுக்கு ஈச்வரீ என்றும் சொல்லலாம்.

## पञ्चयज्ञप्रिया

## பஞ்சயக்ஞப்ரியா (946)

பஞ்சயக்ஞங்களில் ப்ரியமுள்ளவள்.

1. பஞ்ச (ஐந்து) யக்ஞங்கள் என்ற பதமானது இன்னின்ன யக்ஞங்களென்று குறிப்பிட்டு ஏற்பட்டிருப்பதால் அவற்றை இந்தமாதிரி பஞ்சயக்ஞங்கள் என்ற பெயரால் சொல்லப்படும். ச்ருதியில்,

'ஸ ஏஷ யக்ஞ: பஞ்சவிதோऽக்னிஹோத்ரம்
தர்சபூர்ணமாஸௌ சாதுர்மாஸ்யானி பசு: ஸோம: ||'
என்று சொல்லப்பட்டிருக்கின்றன. ஸ்ம்ருதியில் சொல்லப்பட்ட பஞ்ச (மஹா) யக்ஞங்கள் என்பவை தேவ, ப்ரம்ஹ, பித்ரு, பூத, மனுஷ்ய யக்ஞங்கள்.

2 அல்லது, அடியில் சொல்லப்படும் பூஜா ப்ரகாரங்களை பஞ்சயக்ஞங்களென்றும் சொல்லப்படும். பாஞ்சராத்ராகமத்தில் அவை அபிகமனம், உபாதானம், இஜ்யா, ஸ்வாத்யாயம், யோகம் என்பவை. குலாகமத்தில்,

'கேவலோ யாமளோ மிச்ர: சக்ரயுக் வீரஸம்கார: |
இதி பஞ்சாவிதா பூஜா ... ... ... ||'
என்ற ஐந்துவிதமான பூஜைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. நித்யா தந்த்ரத்தில்,

'ஹேதிபிர் மத்யமாத்யம் ஸ்யாத் த்விதீயம் நவயோனிஷு |'
என்று ஆரம்பித்து,

'இதி பஞ்சப்ரகாரார்ச்சா ப்ரோக்தா ஸர்வார்த்தஸித்திதா ||'
என்று ஐந்து ப்ரகாரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ப்ருஹத் தந்த்ர கௌமுதியிலும், அதையடுத்தான மந்த்ரமஹோததியிலும்,

'ஆதுரீ ஸௌதகீ தௌர்போதீ த்ராவீஸாதனு பாவனீ |'
என்று ஐந்து விதங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

3. இவை தவிர, அக்னிஹோத்ரத்தின்போது ஐந்துவிதமான குண்டங்களில் ஆஹுதிகள் செய்வதையும் பஞ்சயக்ஞங்களென்று சொல்லப்படும். இதைப்பற்றி சாந்தோக்ய உபநிஷத்தில்,

'அக்னிஹோத்ரே ஹூயமானா துக்தாதிரூபா ஆப:
ஸோம, த்யு, ப்ருதிவீ, புருஷ, யோஷித் ரூப குண்டபஞ்சகே
புன: புனர் ஹூயந்தே ததா தா ஏவாப: சரீரபாவம் பஜந்தி |'
என்பது முதலான வாக்யங்களில் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

4. பஞ்ச என்றால் விஸ்தாரமென்றும் அர்த்தமாகையால் பஞ்சயக்ஞமென்பது அயனம் முதலானவற்றையும் குறிக்கும்.

**पञ्चप्रेतमञ्चाधिशायिनी**

**பஞ்சப்ரேதமஞ்சாதிசாயினீ** (947)

பஞ்சப்ரேதங்களாலாகிய மஞ்சத்தில் வீற்றிருப்பவள்.

ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன், ஈச்வரன், ஸதாசிவன் இந்த ஐவரும் வாமா முதலான தங்களுடைய சக்திகளோடு இல்லாத போது அவரவர்கள் தங்கள் தங்கள் கார்யங்களைச் செய்யமுடியாமல் இருப்பார்களாகையால் அவர்களை ப்ரேதங்களென்று சொல்லப்படும். அவர்களாலான கட்டிலின்மீது காமேச்வரரும் அவருடைய வாமாங்கத்தில் காமேச்வரியும் இருப்பதாகச் சொல்லப்படும். அந்தக் கட்டிலுக்கு ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன், ஈச்வரன், இந்நால்வரும் கால்களாயும், ஸதாசிவன் மேல் பலகையாகவும் இருப்பதால் அதற்கு பஞ்சப்ரேத மஞ்சமென்று பெயர்.

'சிவாத்மகே மஹாமஞ்சே மஹேசானோபபர்ஹணே |
ப்ருதகாச்ச சதுஷ்பாதா: கசிபுச்ச ஸதாசிவ: |
தத்ர சேதே மஹேசானீ மஹாத்ரிபுரஸுந்தரீ ||'

(பைரவயாமளம்-பஹுரூபாஷ்டகப்ரஸ்தாரம்)

'ஸதனஸ்யோபரி தாஸாம் ஸர்வானந்தமய நாமகே பிந்தௌ |
பஞ்சப்ரம்ஹாகாரம் மஞ்சம் ப்ரணமாமி மணிகணாகீர்ணம் ||
... ... ... ... ... ... ...
பர்யங்கஸ்ய பஜாம: பாதான் பிம்பாம்புதேந்துஹேமருச: |
அஜஹரிருத்ரேசமயான் அனலாஸுரமாருதேச கோணஸ்தான் ||
பலகம் ஸதாசிவமயம் ப்ரணௌமி ஸிந்தூர ரேணு கிரணபம் ||'

(லலிதாஸ்தவரத்னம்)

'கதாஸ்தே மஞ்சத்வம் த்ருஹிணஹரிருத்ரேச்வா ப்ருத:
சிவ: ஸ்வச்சச்சாயா க்டித கபட ப்ரச்சத பட: |'

(ஸௌந்தர்யலஹரீ)

இந்த மஞ்சத்தைப்பற்றி விபரமாக லலிதோபாக்யானத்தில் சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கவும்.

**पञ्चमी**

**பஞ்சமீ** (948)

ஸதாசிவனுடைய பத்னியாக இருப்பவள்.

1. ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன், ஈச்வரன், ஸதாசிவன் என்ற ஐவரில் முதல் மூவருக்குள் ருத்ரன் மேலானவர் என்றும், அவரைவிட (மாயையோடுகூடிய சிவனை) ஈச்வரன் மேலானவ ரென்றும், அவரையும்விட ஸதாசிவன் மேலானவரென்றும் சொல்லப்பட்டிருப்பதால், அவர்களில் பஞ்சமரான (ஐந்தாவதான) ஸதாசிவருடைய பத்னியாகிய அம்பாளுக்கு பஞ்சமீ என்ற இந்த நாமம் ஏற்பட்டது.

'த்ரிஷு ருத்ரோ வரிஷ்ட: ஸ்யாத் தேஷு மாயீ பர: சிவ: |
மாயாவிசிஷ்டாத் ஸர்வக்ஞாத் ஸாம்ப: ஸத்யாதி லக்ஷண: ||
ஸதாசிவோ வரிஷ்ட: ஸ்யாத் நாத்ர கார்யா விசாரணா ||'

(ஸூதகீதை)

2. பஞ்சமீ என்று வாராஹிக்குப் பெயராகையால் அவளுடைய ரூபமாய் இருப்பவளென்றும் இந்த நாமத்திற்கு அர்த்தம் சொல்லலாம். வாராஹியின் பெயர்கள் பின்வருமாறு.—

'பஞ்சமீ தண்டநாதா ச ஸங்கேதா ஸமயேச்வரீ |
ததா ஸமயஸங்கேதா வாராஹீ போத்ரிணீ சிவா ||
வார்த்தாளீ ச மஹாஸேனாப்யாக்ஞா சக்ரேச்வரீ ததா |
அரிக்னீ சேதி ஸம்ப்ரோக்தம் நாம த்வாதசகம் முனே ||'

(லலிதோபாக்யானம்)

இந்தப் பெயரானது வாராஹியானவள் ப்ராம்ஹீ முதலான மாதாக்களில் ஐந்தாவதாயும், பஞ்சரத்ன தேவதைகளுக்குள் கடைசியாகவும், பஞ்சகோச தேவதைகளில் கடைசியாகவும் இருப்பதால் கணக்கிலிருந்து ஏற்படுவதுடன், வாராஹிக்கே பஞ்சமீ என்று பெயர் இயற்கையாகவே இருப்பதாக 'பூஜயேத் பஞ்சமீஸூதம்', 'கடம் ஸ்ப்ருஷ்ட்வா ஹ்ருதி த்யாத்வா பஞ்சமீம் பரமேச்வரீம்,' 'பஞ்சமீம் சகடம் யந்த்ரம் த்ரிஷு லோகேஷு துர்லபம்' என்பது முதலாக தக்ஷிணாமூர்த்தி ஸம்ஹிதையிலும் மற்றும் பலவிதமான ப்ரயோகங்களிலிருந்தும் தெரிகிறது.

3. பஞ்ச ம காரங்களில் கடைசியானது ஆனந்த ரூபமாயிருப்பதால் அந்த ரூபமாய் இருப்பவளென்றும் சொல்லலாம்.

'ஆனந்தம் ப்ரம்ஹணோ ரூபம், தத் ச தேஹே வ்யவஸ்திதம் |
தஸ்யாபிவ்யஞ்ஜகா: பஞ்ச மகாரா: தைரதார்ச்சனம் குப்த்யா ||'

(பரசுராம கல்பஸூத்ரம்)

தவிர, பஞ்ச - ஐந்து, மா க்களுடைய - மகாரங்களுடைய, சேர்க்கையான ரூபமாயிருப்பவள் பஞ்சமீ என்றும் சொல்லலாம். இந்த பஞ்ச மகாரங்களைப்பற்றி த்ரைபுர ஸூக்தத்தில்,

'பரிஸ்ருதம் சஷமாத்யம் பலம் ச
பக்தானி யோனீ: ஸுபரிஷ்க்ருதானி |
நிவேதயன் தேவதாயை மஹத்யை
ஸ்வாத்மீக்ருத்ய ஸுக்ருதீ ஸித்திமேதி ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவற்றின் தானம், சுத்தி முதலியவைகளைப்பற்றி குருமுகமாகத் தெரிந்துகொள்ள வேண்டியது.

4. அல்லது,

'பஞ்சமாஹுதாவாப: புருஷவசஸோ பவந்தி | '

என்று ச்ருதிப்ரஸித்தமான யக்ஞமானது அங்கு சொல்லப்பட்ட யக்ஞங்களில் ஐந்தாவதாக வருவதால் அதின் ரூபமாக இருப்பதாகவும் அர்த்தம் சொல்லலாம். [இதைப்பற்றி 946 நாமத்தின் 3-வது குறிப்பில் பார்க்கவும்.]

5. அல்லது, கைவல்யமென்று சொல்லப்படும் ஐந்தாவதான முக்தியின் ரூபமாக இருப்பவளென்றும் சொல்லாம்.

## पञ्चभूतेशी

## பஞ்சபூதேசீ (949)

ப்ருதிவீ முதலான பஞ்சபூதங்களுக்கு ஈச்வரியாயிருப்பவள்.

1. ப்ருதிவீ முதலான பஞ்சபூதங்களின் ஸத்தா ரூபமாக அம்பாளிருப்பதால் அவற்றிற்கு அதிகாரிணியாகச் சொல்லப்பட்டது. [இதைப்பற்றி ஸ்ரீவித்யாரண்யாளுடைய பஞ்சதசியில் பஞ்சபூத விவேகத்தில் பார்க்கவும்.]

2. விஷ்ணுவின் வைஜந்தீமாலையானது பஞ்சபூதாத்மகமாயிருப்பதாகச் சொல்லப்படுவதால் அதற்கு ஈச்வரீ அதாவது, விஷ்ணுரூபிணீ என்றும் அர்த்தம் சொல்லலாம்.

'பஞ்சரூபா து யா மாலா வைஜயந்தீ கதா ப்ருத: |
ஸா பூதஹேதுஸங்காதா பூதமாலா பவேத் த்விஜ ||'

(விஷ்ணுபுராணம்)

மேலும் அந்த மாலையானது முத்து, மாணிக்கம், மரகதம்,

இந்த்ரநீலம், வஜ்ரம் (வைரம்) இவற்றின் வர்ணத்தோடிருப்ப தால் அதை பஞ்சரூபா என்று மேலே சொல்லப்பட்டது. இந்த வைரங்கள் பஞ்சபூதங்களிலிருந்துண்டானதால் வைஜந்தி யானது பஞ்சரத்னாத்மகமென்று சொல்லப்படும்.

'ப்ருதிவ்யாம் நீலஸம்ஞானம் அத்ப்யோ முக்தாபலானி ச |
தேஜஸ: கௌஸ்துபோ ஜாத: வாயோர் வைடூர்ய ஸம்ஞகம் ||
புஷ்கராத் புஷ்பராகஸ்து வைஜயந்த்யா ஹரேரிமே ||'

(விஷ்ணுரஹஸ்யம்)

## पञ्चसङ्ख्योपचारिणी

## பஞ்சசங்க்யோபசாரிணீ (950)

ஐந்து என்பதான எண்ணிக்கையோடு கூடிய உபசாரங்களை உடையவள்.

இவை கந்த, புஷ்ப, தூப, தீப, நைவேத்யம் என்பவை. இவற்றை பஞ்சோபசாரங்கள் என்று சொல்லப்படும்.

## शाश्वती

## சாச்வதீ (951)

எப்போதும் இருப்பவள்.

1. 'சாச்வதஸ்து த்ருவோ நித்ய:' என்ற அமரகோச வசனத்தின்படி நித்யமாக இருப்பவள் சாச்வதீ.

'தேஷாம் ஶாந்தி: சாச்வதீ நேதரேஷாம் |' (ச்ருதி)

2. சாச்வத் என்றால் திரும்பத்திரும்ப என்று அர்த்த மாகையால் திரும்பத் திரும்பத் தன் பக்தர்களால் உபாஸிக்கப் படுகிறவள் என்றும் சொல்லலாம்.

## शाश्वतैश्वर्या

## சாச்வதைச்வர்யா (952)

நித்யமான ஐச்வர்யத்தையுடையவள்.

அல்லது, இந்த நாமத்தை மூந்தியதிலிருந்து ஈசாச்வதைச் வர்யா என்றும் சொல்லலாம். அப்போது, ஈச - ஜகதீச்வரர்க ளான ப்ரம்ஹா முதலானவர்கள் (பஞ்சப்ரேதங்களாக இருக்கும் போது, அச்வதா - அச்வமாயிருப்பது (அதாவது வாஹனமாய்

இருப்பது) என்பதான, ஐச்வர்யத்தையுடையவள் என்று அர்த்தம். அதாவது, பஞ்சப்ரேதாஸனாரூடா என்று தாத்பர்யம்.

**शर्मदा**

**சர்மதா** (953)

ஸுகத்தைக் கொடுப்பவள்.

**शंभुमोहिनी**

**சம்புமோஹினீ** (954)

சிவனை மோஹமடையச் செய்பவள்.

1. பக்தர்களுக்கு க்ஷேமத்தைக் கொடுப்பதினால் பரமசிவனுக்கு சம்பு, சங்கரன் என்ற பெயர்களுண்டு.

2. பரமசிவன் ஜிதேந்த்ரியராயிருந்தபோதிலும் அம்பாளிடம் ஈடுபட்டு மோஹித்திருப்பதால் அம்பாளுக்கு இந்தப் பெயர் ஏற்பட்டது.

**धरा**

**தரா** (955)

ப்ருத்வீ ரூபமாயிருப்பவள்.

1. அல்லது, ஸகல ஜகத்தையும் தாங்குவதால் இந்தப் பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

2. அல்லது, ல என்ற அக்ஷரஸ்வரூபமாயிருப்பவள் என்றும் சொல்லலாம். லகாரமானது சைல, வன, கானனங்களையுடையதும், ஐம்பத்தொரு பீடங்களையும் ஸகல தீர்த்தங்களையுடையதுமான ப்ருதிவீ தேவியைக் குறிக்கும்.

'லகார: ப்ருதிவீதேவீ ஸசைலவனகானனா |
பஞ்சாசத் பீடஸம்பன்னா ஸர்வதீர்த்தமயீ பரா ||'

(ஞானார்ணவம்)

**धरसुता**

**தரஸுதா** (956)

(ஹிமவத்) பர்வதத்தின் புத்ரியாயிருப்பவள்.

**धन्या**

**தன்யா** (957)

க்ருதார்த்தையாயிருப்பவள்.

1. அல்லது, தனத்தைக்கொடுப்பவள், தனத்தையுடையவள் என்ற அர்த்தங்களும் சொல்லலாம்.

2. அல்லது, 'மங்களா பிங்களா! தன்யா' என்பதாக ஜ்யோதிஷ சாஸ்த்ரத்தில் ப்ரஸித்தமான தன்யா என்ற யோகினீ விசேஷ ரூபமாயிருப்பவள் என்றும் சொல்லலாம்.

3. சரீரத்திலிருந்து ஜீவன் பிரிவதாகிய கடைசிகாலத்தில் நான்கு விதமான சிந்தைகள் இருக்கக்கூடுமென்றும், அவற்றின் பெயர்கள் ஆர்த்த, ரௌத்ர, தன்ய, சுக்லங்களென்றும் பவிஷ்யோத்ர புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அவற்றில் தன்யா என்று சொல்லப்பட்ட த்யானரூபமாயிருப்பவளென்றும் சொல்லலாம்.

ஆர்த்தமென்பதின் லக்ஷணம்:—

'ராஜ்யோபபோக சயனாஸன வாஹனேஷு
ஸ்த்ரீ கந்த மால்ய மணி வஸ்த்ர விபூஷணேஷு |
இச்சாபிலாஷம் அதிமாத்ரம் உபைதி மோஹாத்
த்யானம் தத் ஆர்த்தமிதி ஸம்ப்ரவதந்தி தஜ்ஞா: ||' என்றும்,

ரௌத்ரமென்பதின் லக்ஷணம்:—

'ஸஞ்சேதனைர் தஹன தாடன பீடனைச்ச
காத்ர ப்ரஹார தமனைர் விநிக்ருந்தனைச்ச ||
யஸ்யேஹ ராக உபயாதி ந சானுகம்பா
த்யானம் து ரௌத்ர மிதி தஸ்ய வதந்தி ஸந்த: ||' என்றும்,

தன்யமென்பது:—

'ஸூத்ரார்த்த மார்கண மஹாவ்ரத பாவனானி
நிர்பந்த மோக்ஷ கமனாகதி ஹேது சிந்தா |
பஞ்சேந்த்ரியாத்யுபசமச்ச தயா ச பூதே
த்யானம் து தன்யமிதி தத் ப்ரவதந்தி ஸந்த: ||' என்றும்,

சுக்லமென்பது:—

'யஸ்யேந்த்ரியாணி விஷயைர் ந விசர்ச்சிதானி
ஸங்கல்ப காசன விகல்ப விகாஸ யோகை: |

தத்வைக நிஷ்ட த்ருதியோக ப்ருதாந்தராத்மா
த்யானம் து சுக்லமிதி தத் ப்ரவதந்தி வித்தா: ||'

என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. சுருக்கமாகச்சொல்லுகையில் ஸ்ரக், சந்தன, வனிதாதி போகங்களில் ஆசையுடனிருப்பதை ஆர்த்தமென்றும், தான் கஷ்டங்களை அனுபவித்திருந்தபோதிலும் மேலேசொல்லிய ஸ்ரக் சந்தனுதிகளில் உபேக்ஷை ஏற்படாமல் ஆசையாயிருப்பதை ரௌத்ரமென்றும், ஸூத்ரார்த்தங்களாலும், மஹாவ்ரதங்களாலும் ஏற்படும் பாவனையோடும், பாசமோக்ஷங்களை பற்றிய அறிவுடனும் இந்த்ரியாதிகளின் சமனத்தோடும், ஸகல பூதங்களிடத்தில் தயையோடும், இருப்பதான த்யானத்திற்கு தன்யமென்றும், விஷயங்களில் பற்றில்லாத இந்த்ரியங்களோடும், தத்வமொன்றிலேயே நிலையோடுகூடியதுமான த்யானத்திற்கு சுக்லமென்றும் பெயர். இவ்விதமான த்யான பேதங்களால் ஏற்படும் பலன்களைப்பற்றி,

'ஆர்த்தே திர்யக் அதோகதிச்ச நியதா த்யானே ச ரௌத்ரே ஸதா
தன்யா தேவகதி: சுபம் பலமதோ சுக்ரே ச ஜன்மக்ஷய: |
தஸ்மாத் ஜன்மருஜாபஹே ஹிததரே ஸம்ஸார நிர்வாஹகே
த்யானே ச்வேததரே ரஜ: ப்ரமதனே குர்யாத் ப்ரயத்னம் புத: ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது, ஆர்த்தத்தில் (புல், பூண்டு, பக்ஷி முதலான) திர்யக் பிறப்பையும், ரௌத்ரத்தினுல் அதற்கும் கீழான அதோகதியையும், தன்யமென்பதினுல் தேவலோகத்தையும், சுக்லமென்பதினுல் முக்தியையும் அடைவதாகக் சொல்லப்பட்டது.

## धर्मिणी

### தர்மிணீ (958)

தர்ம ஸ்வபாவத்தை யுடையவள்.

அல்லது, ஆனந்தானுபவம், நித்யத்வம் முதலான தர்மங்களோடிருப்பவளென்றும் சொல்லலாம்.

## धर्मवर्धिनी

### தர்மவர்தினீ (959)

தர்மத்தை வ்ருத்தி செய்கிறவள்.

1. அம்பிகை தன் பக்தர்களுக்கு ஜிதேந்த்ரியத்வம், சௌசம், மாங்கல்யம், பக்தி முதலிய தர்மங்களை அதிகரிக்கச் செய்வதாக,

ஜிதேந்த்ரியத்வம் சௌசம் ச மாங்கல்யம் பக்திரேவ ச |
சங்கரே பாஸ்கரே தேவ்யாம் தர்மோऽயம் மானுஷ: ஸ்ம்ருத: ||
த்யாத: ஸாம்ய இமான்தர்மான் வ்ருத்திம் யதி தேஹினும் |
என்று வாமன புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

2. வ்ருத் என்ற தாதுவுக்கு சேதனம் (துண்டாகச் செய்கிறது) என்ற அர்த்தமுண்டு. தர்மமென்பது ப்ரம்ஹம், அதிஷ்டானமாயிருக்கும் த்ருச்ய ஜாதம் (கண்ணுக்குப் புலப்படுகிறவை) எல்லாவற்றையும் குறிக்கும். அவை தர்மமாத்ரமாயிருப்பதில் வித்யாஸத்தோடு இருப்பதாக அம்பாள் தோன்றச்செய்வதால் தர்மவர்தினீ என்று பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

## लोकातीता
## லோகாதீதா (960)

லோகங்களுக்குக்கெல்லாம் அப்பாலிருப்பவள்.

1. அதாவது, இந்த்ரலோகம் முதலாக விஷ்ணுலோகம் முடிய இருக்கும் லோகங்களையெல்லாம் கடந்ததும், பரமசிவனுடைய ஸ்தானமானதும் மஹாகைலாஸமென்ற பெயருடையதுமான லோகத்திலிருப்பவள் என்று அர்த்தம். பரசிவபுரமானது ஸர்வலோகங்களுக்கும் அதீதமாயிருப்பது சிவதர்மோத்தரத்தில், கீழிருக்கும் லோகங்களை வர்ணித்துவிட்டு,

'ஞேயம் விஷ்ணுபதாத் ஊர்த்வம் திவ்யம் சிவபுரம் மஹத் |
என்று ஆரம்பித்து,

'இத்யேதத் அபரம் துப்யம் ப்ரோக்தம் சிவபுரம் மஹத் |
தேஹினும் கர்மநிஷ்டானும் புனராவர்த்தனம் ஸ்ம்ருதம் ||'
என்பதாக கர்மடர்கள் அடைவதான சிவபுரத்தை வர்ணித்துவிட்டு,

'ஊர்த்வம் சிவபுராத்ஞேயம் ஸ்தானத்ரயம் அனுத்தமம் |
நித்யம் பரமசுத்தம் ச ஸ்கந்தோமாசங்கராத்மகம் ||'
என்று ஆரம்பித்து,

'யே ஸம்ப்ராப்தா: பரஸ்த்தானம் த்யானயோக ரதா நரா: |
ந தேஷாம் புனராவ்ருத்தி: கோரே ஸம்ஸார ஸாகரே ||
ஸர்வக்ஞா: ஸர்வகா: சுத்தா: பரிபூர்ண மஹேச்வரா: |
சிவதுல்ய பலோபேதா: பரம் சிவபுரம் கதா: ||'

என்பதாக பரசிவபுரத்தை வர்ணித்து அங்கு போகிறவர்களுக்கு புனராவ்ருத்தி கிடையாதென்பதாகச் சொல்லப்பட்டது.

2. அல்லது, லோகங்களுக்கு - ஜீவன்களுக்கு, அதீதமாயிருப்பவள் என்றும் சொல்லலாம்.

## गुणातीता
## குணாதீதா (961)

குணங்களுக்கு அதீதமாயிருப்பவள்.

## सर्वातीता
## ஸர்வாதீதா (962)

ஸர்வத்திற்கும் அதீதமாயிருப்பவள்.

அல்லது, சப்தங்களுக்கெல்லாம் அதீதமாய் (அவற்றால் குறிக்க முடியாதவளாய்) இருப்பவள் என்றும் சொல்லலாம்.

'சப்தாதீதம் பரம் ப்ரம்ஹ கணஞ ரஹிதம் ஸதா |
ஆத்மஸ்வரூபம் ஜானீஹி ... ... |'

(ஞானார்ணவம்)

## शमात्मिका
## சமாத்மிகா (963)

சாந்த ஸ்வரூபமாயிருப்பவள்.

1. அல்லது, ப்ரபஞ்சத்தின் உபசமமே (சாந்தியே) ஸ்வரூபமாக உடையவள் என்றும் சொல்லலாம்.

'ப்ரபஞ்சோபசமம் சிவம் அத்வைதம் சதுர்த்தம் மன்யந்தே |'

(ந்ருஸிம்ஹதாபனீயம்)

2. அல்லது, சம்—ஸுகத்தை ஆத்மாவாக உடையவள் என்றும் சொல்லலாம்.

## बन्धूककुसुमप्रख्या
## பந்தூக குஸும ப்ரக்யா (964)

பந்துஜீவ புஷ்பத்தின் காந்திபோன்ற காந்தியையுடையவள்:

பந்தூக (பந்துஜீவ)மென்பது வங்கதேசத்தில் ப்ரஸித்த மான ஒரு மஹாவ்ருக்ஷம். அதின் புஷ்பமானது அதிகமான சிகப்பு நிறமாகையால் அவ்வித நிறத்தையுடையவள் என்று இங்கு சொல்லப்பட்டது.

## बाला

## பாலா (965)

குமாரீ ஸ்வரூபமாயிருப்பவள்.

1. இதையே ச்ருதியில்,

'த்வம் குமார உத வா குமாரீ'

என்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

2. சிறுபெண்போல் லீலையில் (விளையாட்டில்) ஆசைப்பட் டிருப்பதால் அம்பிகைக்கு பாலா என்று பெயர் என்பதாக,

'பாலா லீலா விசிஷ்டத்வாத் பாலேதி கதிதா ப்ரியே |'

என்பதாக த்ரிபுராஸித்தாந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

3. அல்லது பாலாம்பிகா (பாலை) ஸ்வரூபமாயிருப்பவள் என்றும் சொல்லலாம். பாலாம்பிகை எப்போதும் ஒன்பது வயதுடையவளாய், அம்பாளைப்போன்ற ரூபத்தையுடைய வளாய், அம்பாளுடைய அத்யந்தமான ப்ரியத்திற்கு இருப்பிட மாய் இருப்பதாகச் சொல்லப்படும்.

'குமாரீ லலிதாதேவ்யா: தஸ்யா நிகடவாஸினீ |
ஸமஸ்த சக்திசக்ராணும் பூஜ்யா விக்ரமசாலினீ ||
லலிதாஸத்ருசாகாரா குமாரீ .................. |
யா ஸதா நவவர்ஷைவ ஸர்வவித்யா மஹாகனி: ||
பலாருண தனுச்ரேணீ சோணவர்ண வபுர்லதா |
மஹாராக்ஞீ பாதபீடே நித்யமாஹித ஸன்னிதி: |
தஸ்யா பஹிச்சரா: ப்ராணு யா சதுர்த்தம் விலோசனம் ||'

(லலிதோபாக்யானம்)

பாலாம்பிகை பண்டாஸுரனுடைய புத்ரர்களை வதம் செய்வதைப்பற்றி ஏற்கனவே வந்த 74-வது நாமத்தில் பார்க் கவும். பாலாம்பிகையின் அனுக்ரஹம் ஏற்பட்டால் அம்பாளு டைய அனுக்ரஹமானது ஸுலபமாய் ஏற்பட்டுவிடுமென்பது உபாஸனு ரஹஸ்யம்.

## लीलाविनोदिनी

## லீலாவிநோதினீ (966)

லீலைகளால் (விளையாட்டுக்களால்) ஸந்தோஷமடைகிறவள்.

1. இங்கு லீலையென்பது ப்ரபஞ்ச ஸம்பந்தமான ஸ்ருஷ்டி முதலானவை.

'மந்வந்தராண்யஸங்க்யானி ஸர்க: ஸம்ஹார ஏவ ச |
க்ரீடன்னிவைதத் குருதே பரமேஷ்டீ புன: புன: (மநுஸ்ம்ருதி)
'லோகவத்.........லீலாகைவல்யம் |' (ப்ரம்ஹஸூத்ரம்)

2. அல்லது லீலா என்பவளை, வி—விசேஷமாக, நோதினீ (ஸத்கர்மாக்களில்) தூண்டுகிறவள் என்றும் சொல்லலாம். யோக வாஸிஷ்டத்தில் பத்மராஜனுடைய பார்யையான லீலா என்பவளைப்பற்றி விசேஷமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அவளுடைய தபஸினால் ஸந்தோஷமடைந்த ஸரஸ்வதீ தேவி யானவள் அவளுக்கு ஞானத்தைக்கொடுத்து அவளுடைய புருஷனையும் உயிர்பெறச் செய்தாள் என்பதாக அதில் சொல்லப் பட்டிருக்கிறது.

3. (தன்னுடைய குழந்தைகளான ஜீவகோடிகளை) லாலனம் செய்வதினால் அம்பாளுக்கு லீலா என்று பெயர் என்ப தாக 'லக்ஷ்மீலாலனதோ லீலா' என்று தேவீ புராணத்தில் சொல்லப்பட்டிருப்பதை அனுஸரித்து இந்த நாமத்தை லீலா, விநோதினீ என்று இரண்டு நாமங்களாகவும் பிரித்துச் சொல்ல லாம்.

## सुमङ्गली

## ஸுமங்கலீ (967)

ஸுவாஸினீ ரூபமாயிருப்பவள்.

1. ஸு—சோபனமான, மங்களத்தையுடையவள் ஸுமங் கலீ. ஜீவித்திருக்கும் பதியையுடையவளுக்கு ஸுமங்கலீ, ஸுவாஸினீ என்பதான பெயர்களுண்டு.

2. மங்களமென்ற பதமானது ப்ரம்ஹத்தைக் குறிக்கு மாகையால் சோபனமான ப்ரம்ஹஸ்வரூபமாயிருப்பவளென்றும் அர்த்தம் சொல்லலாம்.

அசுபானி நிராசஷ்டே தனோதி சுபஸந்திதம் |
ச்ருதிமாத்ரேண யத் பும்ஸாம் ப்ரம்ஹ தன் மங்களம் விது: || '

(விஷ்ணுபுராணம்)

3. சரியான கார்யங்களைச் செய்வதும், தப்பான கார்யங்களைச் செய்யாதிருப்பதும் மங்களமென்பதாக,

'ப்ரசஸ்த்தாசரணம் நித்யம் அப்ரசஸ்த விவர்ஜனம் |
ஏதத் ஹி மங்களம் ப்ரோக்தம் ருஷிபிர் ப்ரம்ஹவாதிபி: || '

என்று அத்ரி ஸ்மிருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

## सुखकरी

**ஸுககரீ** (968)

ஸுகத்தைச் செய்பவள்.

## सुवेषाढ्या

**ஸுவேஷாட்யா** (969)

சோபனமான வேஷத்தால் அலங்கரிக்கப்பட்டவள்.

வேஷமென்பது வஸ்த்ர, அலங்கார, மால்ய, பூஷணாதிகளைக் குறிக்கும்.

## सुवासिनी

**ஸுவாஸினீ** (970)

ஸுவாஸினீ ரூபமாயிருப்பவள்.

1. ஜீவித்திருக்கும் பதியையுடையவள் ஸுவாஸினீ. எல்லா ஸுவாஸினிகளோடு அம்பாள் அபின்னமாயிருப்பதால் இந்தப் பெயர் ஏற்பட்டது.

2. அம்பிகையின் புருஷனான பரமசிவனுக்குக் கல்பாந்தத்திலும் அழிவில்லையாதலால் அம்பிகையானவள் நித்ய (ஸர்வகாலமும்) ஸுவாஸினியாக இருக்கிறாள். இதையே ஸ்ரீமதாசாரியாள்,

'விரிஞ்சி: பஞ்சத்வம் வ்ரஜதி ஹரிராப்னோதி விரதிம்
விநாசம் கீனாசோ பஜதி தனதோ யாதி நிதனம் |
விதந்த்ரீ மாஹேந்த்ரீ விததிரபி ஸம்மீலித த்ருசா
மாஹாஸம்ஹாரே஽ஸ்மின் விஹரதி ஸதி த்வத் பதிரஸௌ || '

## सुवासिन्यर्चनप्रीता

ஸுவாஸின்யர்ச்சன ப்ரீதா (971)

ஸுவாஸினிகளுடைய அர்ச்சனையினால் ப்ரீதியடைகிறவள்.

ஸுவாஸினிகளை அர்ச்சிப்பதினால் என்றும், ஸுவாஸினிகள் செய்யும் அர்ச்சனையினால் என்றும் இரண்டுவிதமான அர்த்தம் சொல்லலாம். ஸுவாஸினீ பூஜையென்பது தேவீ பூஜையின் முக்யமான அம்சங்களில் ஒன்றாகும்.

## आशोभना

ஆசோபனா (972)

பூர்ணமான ஸௌந்தர்யத்தையுடையவள்.

## शुद्धमानसा

சுத்தமானஸா (973)

சுத்தமான (நிர்மலமான) மனதையுடையவள்.

## बिन्दुतर्पणसंतुष्टा

பிந்து தர்பண ஸந்துஷ்டா (974)

பிந்து தர்பணத்தால் ஸந்தோஷமடைகிறவள்.

1. பிந்து என்பது ஸ்ரீசக்ரத்தின் மத்தியிலிருக்கும் ஸர்வானந்தமய சக்ரத்தைக்குறிக்கும். அதில் ப்ராம்ஹணன் முதலான நான்கு வர்ணத்தார்களால் க்ரமமாக க்ஷீர, ஆஜ்ய, மது, ஆஸவ பிந்துக்களைக்கொண்டு செய்யப்படும் தர்ப்பணத்தை இங்கு சொல்லப்பட்டது. இதைப்பற்றி 'லகுஸ்துதி'யில்,

'விப்ரா: க்ஷோணிபுஜோ விசஸ்ததிதரே க்ஷீராஜ்யமத்வாஸவை:
த்வாம் தேவி த்ரிபுரே பராவரமயீம் ஸந்தர்ப்ய பூஜாவிதௌ |
யாம் யாம் ப்ரார்த்தயதே மன: ஸ்த்திரதயா தேஷாம் த ஏதே த்ருவம்
தாம் தாம் ஸித்திம் அவாப்னுவந்தி தரஸா விக்னைரவிக்னீ க்ருதா: || '

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதைப்பற்றிய விபரங்கள் அந்த ஸ்தோத்ரத்தின் வ்யாக்யானத்திலும் பரசுராம கல்ப ஸூத்திரத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

2. அல்லது, 'பிந்துரிச்சு:' என்பதில் சொல்லப்பட்ட பிந்து பதத்தை அறிந்தவர்களால் செய்யப்படும் தர்ப்பணத்தினால் ஸந்தோஷமடைகிறவள் என்றும் சொல்லலாம்.

## पूर्वजा
## பூர்வஜா (975)

(எல்லாவற்றிற்கும்) முதலாக ஜனித்தவள்.

1. ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் பரப்ரம்ஹத்தின் இச்சா ரூபிணியாக அம்பாள் இருந்ததைப்பற்றி ச்ருதியிலும்,

'இயமேவ ஸா யா ப்ரதமா வ்யௌச்சத் |'

என்றும்,

'அஹமஸ்மி ப்ரதமஜா ருதஸ்ய |'

என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

2. அல்லது, அபுத்திபூர்வகமானதும், குணத்யரத்தின் ஸாம்யாவஸ்தையோடு கூடியதுமான மூலப்ரக்ருதி ரூபமானவளென்றும் சொல்லலாம்.

## त्रिपुराम्बिका
## த்ரிபுராம்பிகா (976)

த்ரிபுராம்பிகா என்ற தேவியின் ரூபமாயிருப்பவள்.

1. ஸ்ரீசக்ரத்தின் எட்டாவது சக்ரத்தின் அபிமானினியான தேவிக்கு த்ரிபுராம்பிகா என்று பெயர். அந்த தேவியோடு அபின்னமாயிருப்பதாக இங்கு சொல்லப்பட்டது.

2. அல்லது, ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்திகளாகிய மூன்று அவஸ்தைகளையும் உண்டுபண்ணுகிறவளென்றும், அம்மூன்று அவஸ்தைகளையுடைய ஜீவனை உண்டுபண்ணுகிறவளென்றும் சொல்லலாம்.

'புரத்ரயே க்ரீடதி யச்ச ஜீவ: |' (ச்ருதி)

'யதாக்னே: க்ஷுத்ரா விஸ்ப்புலிங்கா வ்யுச்சரந்தி |' (ச்ருதி)

3. அல்லது,

'வாமனுதீனும் புராணும் து ஜனனீ த்ரிபுராம்பிகா |'

என்ற வசனத்தின்படி வாமாதி சக்திகளின் ஜனனீயென்றும், சொல்லலாம். வாமா, ஜ்யேஷ்டா, ரௌத்ரீ என்ற சக்திகள் மூவரும் புருஷ ரூபத்தில் முறையே ப்ரம்ஹ, விஷ்ணு, ருத்ரர்களாகவும், அவர்களுடைய சக்திகளாகிய பாரதீ, லக்ஷ்மீ, ருத்ராணிகளாகவும், ஞான, இச்சா, க்ரியா என்ற சக்தி ரூபிணிகளாகவும், ஸத்வ, ரஜஸ், தம, ப்ரதானைகளாகவும் இருப்பதாகச் சொல்லப்படும். இவர்களுடைய ஜனனீயாகிய அம்பாள் இவர்களுடைய ஸமஷ்டி ரூபமாகவும், சாந்தா என்ற சக்தி ரூபமாகவும், அம்பிகா என்ற பெயருடனிருப்பதாகச்சொல்லப்படும். ஸ்ரீசக்ரத்திலிருக்கும் தேவதைகளாகச் சொல்லுகையில் இவர்கள் மூவரும் அஷ்டமாவரணத்திலிருக்கும் காமேச்வரீ, வஜ்ரேச்வரீ, பகமாலினீ என்ற தேவதைகளாயும் அம்பாள் நவமாவரணமான பிந்துவிலிருக்கும் மஹாத்ரிபுரஸுந்தரியாகவும் இருப்பதாகச் சொல்லப்படும்.

'ஏஷா ஸா பரமா சக்தி: ஏகைவ பரமேச்வரீ |
த்ரிபுரா த்ரிவிதா தேவி ப்ரம்ஹ விஷ்ணீச ரூபிணீ ||
ஞானசக்தி: க்ரியாசக்தி: இச்சாசக்த்யாத்மிகா ப்ரியே |
த்ரைலோக்யம் ஸம்ஸ்ருஜத்யேஷா த்ரிபுரா பரிகீர்த்யதே ||'

(வாமகேச்வர தந்த்ரம்)

## दशमुद्रासमाराध्या

### தசமுத்ரா ஸமாராத்யா (977)

பத்துவிதமான முத்ரைகளால் நன்றாய் ஆராதிக்கப்பட்டவள்.

1. இவற்றின் பெயர்கள் ஸம்க்ஷோபண, த்ராவண, ஆகர்ஷண, வச்ய, உன்மாதன, மஹாங்குச, கேசரீ, பீஜ, யோனி, த்ரிகண்டா என்பவை. இவை பூஜாகாலத்தில் செய்யவேண்டியவை. இவற்றின் லக்ஷணங்கள் தந்த்ரராஜம், வாமகேச்வர தந்த்ரம் முதலியவற்றில் சொல்லப்பட்டிருந்தபோதிலும் அவைகளைப்பற்றியும், அவைகளை எப்படிச்செய்வது, எந்தெந்த ஸமயங்களில் செய்வது என்பதைப்பற்றியும் குருமுகமாகவே தெரிந்து கொள்ள வேண்டியது அவச்யம். பொதுவாகச் சொல்லுகையில் இரு கைகளிலுமுள்ள விரல்களெல்லாவற்றையும் உபயோகப்படுத்தி, இரு கைகளையும் சேர்த்தாற்போல் ஸமானரூபமாக ப்ரதிமுத்ரையையும் செய்யவேண்டியது. ஒவ்வொரு கையிலுமுள்ள ஐந்து விரல்களும் பஞ்சபூதங்களைக் குறிக்குமென்றும்,

வலது கையும் (சரீரத்தின்) அந்தப் பக்கமுமே ப்ரகாசாம்சமான சிவஸ்வரூபமென்றும், இடது கையும், (சரீரத்தின்) அந்தப் பக்கமுமே விமர்சாம்சமான சக்தி ஸ்வரூபமென்றும், சொல்லப் படும். ஆகவே, அந்தந்த முத்ரையில் கைகளைச் சேர்த்துக் காட்டும்போது சிவசக்தி ஸாமரஸ்ய ரூபமாக இருந்து அவர்கள் ஜகத்தைப்பற்றிச்செய்யும் ஸ்ருஷ்ட்யாதி க்ருத்யங்களுக்கு அடையாளமாயிருக்கிறது.

2. லோகத்தில் ஜனங்கள் ஸம்பாஷிக்கும்போது அவர்கள் கைகளால் காட்டும் ஸம்ஜ்ஞைகள் அவரவர்களுடைய மனோ பாவத்தை வெளிப்படுத்துவதை நாம் ஸாதாரணமாய்ப் பார்க் கிறோம். அதேமாதிரி முத்ரைகளைக் காட்டுவதால் தேவதை களுக்கு அந்தந்த பாவமானது ஏற்பட்டு பக்தர்களிடத்தில் பூர்ணமான அனுக்ரஹமேற்படும். இவற்றை ஸரியாகச் செய்தால் தேவதைக்கு ஸந்தோஷம் ஏற்படுவதுபோல், தவறுகச் செய்தால் கோபம் ஏற்படுமென்றும் சொல்லப்படுமாதலால் அவற்றை ஸரியாகச்செய்வது மிகவும் கவனத்துடன் (குருமுக மாக) தெரிந்துகொள்ளவேண்டியது. முதம்—ஸந்தோஷத்தை, ராதி—கொடுக்கிறது, உண்ணுபண்ணுகிறது, என்பதால் முத்ரை யென்று பதம் ஏற்படுகிறது.

'ஸ்வல்ப பேதாத் கோபஹர்ஷௌ ப்ராணினும் ஜனயத்யத: |
தேனைவ ஸர்வமுத்ராணம் முத்ரா ஹர்ஷப்ரதா மதா |
பூஜா காலே தர்சனீயா முத்ராஸ்தா: ஸர்வதா சிவே ||'

(தந்த்ர ராஜம்)

3. முத்ரைகளுக்கு அததின் ரசனை (செய்வது), மந்த்ர, தத்வங்களை யொட்டி ஸ்தூல, ஸூக்ஷ்ம, பரா என்ற அர்த்தபேதங் களுண்டு.

'முத்ரா: ஸ்யுஸ் த்ரிவிதா தேவி ரசனு மந்த்ர தத்வத: |
ஸ்தூல ஸூக்ஷ்ம பராக்யாதா: தத்ரைவித்யம் ச்ருணு ப்ரியே ||'

(தந்த்ர ராஜம்)

அவற்றிற்கு தனித்தனியான பீஜாக்ஷரங்களுமுண்டு.

4. ஸ்ரீசக்ரத்திய நவாவரண பூஜையின்போது அந்தந்த ஆவரண பூஜையின் கடைசியில் இம்முத்ரைகள் காட்டப்படுவது வழக்கம். முதலாவது ஆவரணமாகிய த்ரைலோக்ய மோஹன சக்ர பூஜையின் கடைசியில் ஸர்வஸம்க்ஷோபிணீ முத்ரையையும்,

அதிலிருந்து ஆரோஹணக்ரமத்தில் ஆவரணங்களைப் பூஜிப்பதில் ஸர்வவித்ராவிணீ முதலாக இருக்கும் முத்ரைகளை க்ரமமாகக் காட்டவேண்டும். கடைசியாக ஸர்வானந்தமயசக்ரத்தின் பூஜையின் அர்த்தத்தில் யோனி முத்ரையைக் காட்டவேண்டும். இந்த ஒன்பது முத்ரைகளின் ஸமஷ்டியான ரூபம் த்ரிகண்டா முத்ரை.

'முத்ராऽऽக்யா ஸா யதா ஸம்வித் அம்பிகா த்ரிகலாமயீ |
த்ரிகண்டா ரூபமாபன்னு ஸதா ஸன்னிதி காரிணீ |
ஸர்வஸ்ய சக்ர ராஜஸ்ய வ்யாபிகா பரிகீர்த்திதா ||'

(யோகினி தந்த்ரம்)

## त्रिपुराश्रीवशंकरी

### த்ரிபுராஸ்ரீ வசம்கரீ (978)

த்ரிபுராஸ்ரீ தேவியைத் தன் வசப்படுத்துகிறவள்.

சக்ரத்தின் ஐந்தாவது சக்ரமாகிய ஸர்வார்த்தஸாதக சக்ரத்தின் அதிஷ்டான தேவதையின் பெயர் த்ரிபுராஸ்ரீ,

'ஸர்வார்த்தா ஸாதகாக்யே சக்ரேऽமுஷ்மின் ஸமஸ்த பலதாத்ரீ |
த்ரிபுராஸ்ரீர் மம குசலம் திசதாத் உத்தீர்ண யோகினீ ஸேவ்யா ||'

(லலிதாஸ்வரத்னம்)

## ज्ञानमुद्रा

### ஞானமுத்ரா (979)

ஞானமுத்ரையின் ரூபமாயிருப்பவள்.

1. ஞான முத்ரையென்பது சின் முத்ரை. வலது கை கட்டைவிரல், ஆள்காட்டிவிரல் இவற்றின் நுனிகளைச் சேர்ப்பதினுல் ஏற்படுவது. ஸ்ரீ தக்ஷிணுமூர்த்தியை இந்த முத்ரையோடிருப்பதாக த்யானம் செய்வது வழக்கம்.

2. அல்லது, ஞானத்தினுல் ஸந்தோஷத்தைக் கொடுப்பவள் என்றும் சொல்லலாம்.

3. அல்லது, ஞானம்—சித் அம்சம், முதம்—ஆனந்தாம்சம், இவையிரண்டையும் மறைக்கிறவள் என்றும் சொல்லலாம்.

## ज्ञानगम्या

### ஞானகம்யா (980)

ஞானத்தினுல் அடையப்படுகிறவள்.

அம்பிகையினுடைய நிஷ்களமான ரூபமானது ஞானத்தினுல் மட்டும் அடையப்பெறும் என்பதாக (அம்பிகையால்) கூர்மபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'யத் து மே நிஷ்களம் ரூபம் சின் மாத்ரம் கேவலம் சிவம் |
ஸர்வோபாதி விநிர்முக்தம் அனந்தம் அம்ருதம் பரம் ||
ஞானேனைகேன தல்லப்யம் க்லேசேன பரமம் பதம் |
ஞானமேவ ப்ரபச்யந்தோ மாமேவ ப்ரவிசந்தி தே ||'

## ज्ञानज्ञेयस्वरूपिणी

## ஞான ஞேய ஸ்வரூபிணீ (981)

ஞானம், ஞேயம் இவற்றின் ஸ்வரூபமாயிருப்பவள்.

1. ஞானமென்பது அறிவு. ஞேயம் என்பது அறியப்படும் பொருள். இவ்விரண்டும் அம்பாளுடைய ரூபமென்பதாக இங்கு சொல்லப்பட்டது. இதையே த்ருக், த்ருச்யமென்றும் சொல்லப்படும்.

2. அல்லது, ஞான—ஞானத்தினுல், ஞேய—அறியக்கூடிய ஸ்வரூபத்தையுடையவளென்றும் சொல்லலாம்.

## योनिमुद्रा

## யோனி முத்ரா (982)

யோனி முத்ரையின் ரூபமாயிருப்பவள்.

1. மேலே சொல்லப்பட்ட தச முத்ரைகளில் யோனி முத்ரையென்பது ஒன்பதாவது. இதையே முத்ரைகளில் ப்ரதமமென்று சொல்லப்படும். இது அம்பாளுடைய ஸ்வரூபமென்றும் இதிலிருந்து மற்ற முத்ரைகள் உண்டாயினவென்றும்,

'ஏகா சைஷா மஹாமுத்ரா யோனிமுத்ராத்வமாகதா |
தயா விபக்த: ஸ்வாத்மா து ஸங்க்ஷோபாதி ப்ரபேதத: ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த விஷயத்தைப்பற்றி பாஸ்கரராயருடைய ஸேது பந்தத்தில் பார்க்கவும்.

2. அல்லது, யோனியில் ஸந்தோஷத்தைக் கொடுப்பவள் என்று சொல்லலாம்.

3. அல்லது, யோனியையே ஆச்சாதிகமாக (மறைவாக) உடைய பிந்துவின் ரூபமாயிருப்பவளென்றும் சொல்லலாம்.

4. அல்லது, குதம், மேட்ரம் இவற்றின் நடுவுக்கு யோனி யென்று பெயர். அந்த இடத்தின் ஸம்பந்தமாகச் செய்யப் படும் முத்ரையானது மந்த்ரங்களின் தோஷங்களைப் போக்கு வதற்காகச் செய்வது. இதைப்பற்றி, குருமுகமாகத் தெரிந்து கொள்ளவேண்டியது.

## त्रिखण्डेशी
## த்ரிகண்டேசீ (983)

த்ரிகண்டா முத்ரையின் ஈச்வரியாக இருப்பவள்.

1. த்ரிகண்டா முத்ரையென்பது மேலே சொல்லிய தச முத்ரைகளில் பத்தாவது. இதையே மஹாயோனி முத்ரை யென்று சொல்லப்படும்.

'கனிஷ்டாங்குஷ்ட ஸம்ச்லேஷா மஹாயோனிஸ் த்ரிகண்டிகா |'
(தந்த்ர ராஜம்)

2. அல்லது, ஸ்ரீவித்யையின் ஸோம, ஸூர்ய, அக்னி கண்டங்களென்ற மூன்று கண்டங்களின் அதிதேவதையென் றும் சொல்லலாம்.

## त्रिगुणा
## த்ரிகுணா (984)

ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களோடு கூடியவள்.

1. அதாவது, அம்மூன்று குணங்கள் பொருந்தியதாய் ஸாங்க்யர்கள் சொல்லும் ப்ரக்ருதி ரூபமாயிருப்பவள் என்று அர்த்தம். இந்த குணத்ரயத்தோடு ஸகல சரீரங்களிலும் அம் பிகை வ்யாபித்திருப்பதைப் பற்றி,

'யோகேச்வரீ சரீராணி கரோதி விகரோதி ச |
நாநாக்ருதி க்ரியா ரூப நாம வ்ருத்தி: ஸ்வலீலயா |
த்ரிதா யத் வர்த்ததே லோகே தஸ்மாத் ஸா த்ரிகுணோச்யதே ||'

என்று வாயுபுராணத்திலும்,

'ஸர்வபூதேஷு ஸர்வாத்மன்யா சக்திரபரா தவ |
குணாச்ரயா நமஸ்தஸ்யை சாச்வதாயை ஸுரேச்வரீ ||'

என்று விஷ்ணுபுராணத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

2. விஷ்ணுவானவர் பலிச்சக்ரவர்த்தியை அடக்கி லோகங்களையெல்லாம் அளந்தது மூன்றடியாலாகையால் அவருக்கு த்ரிவிக்ரமனென்று பெயர். கங்கையானவள் ஸ்வர்க்கத்திலிருந்து பூமிக்கு வந்து அங்கிருந்து பாதாளத்திற்குப் போனதால் த்ரிபதகா என்று பெயர். இவ்விருவரும் அம்பிகையின் ரூபமாயிருப்பதாலும், அம்பிகையானவள் ஸத்வாதி குணத்ரயங்களால் உத்பத்தி, ஸ்திதி நாசங்களைச் செய்வதாலும் த்ரிகுணா என்று பெயர் என்பதாக,

'பதைஸ்திரிபிர்பலிர்பத்த: ஸ்வர்க்காதி த்ரிபதான் கதா |
உத்பத்தி ஸ்திதி நாசைச்ச ஸத்வாத்யைஸ் த்ரிகுணோச்யதே ||'

என்று தேவி புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## अम्बा

### அம்பா (985)

(மேலே சொல்லிய குணத்ரயத்திற்கும்) ஜனனியாயிருப்பவள்.

1. அதாவது, அவற்றின் காரணபூதையாயிருக்கிறாளென்று தாத்பர்யம். இந்த ரூபத்தையேதான் மந்த்ர ஜீவமென்று சொல்லப்படும்.

'தேஜஸாம் சக்தி மூர்த்தீனாம் ப்ரபஞ்சஸ்யாபி காரணம் |
குணத்ரயம் அமீஷாம் ச யத் காரணம உதாஹ்ருதம் ||
தத் ஸ்வரூபானுஸந்தான ஸித்தி: ஸம்யக்த்வமீரிதம் |
தன் மந்த்ர வீர்யமுத்திஷ்டம் மந்த்ராணாம் ஜீவ ஈரித: ||'

(தந்த்ர ராஜம்)

2. அல்லது, ஸகல ஜகத்திற்கும் ஜனனியாக இருப்பவள் என்றும் சொல்லலாம்.

## त्रिकोणगा

### த்ரிகோணகா (986)

யோனி சக்ரத்தை அடைந்திருப்பவள்.

ஸ்ரீசக்ரத்தின் மத்தியிலிருக்கும் யோனி சக்ரமாகிய த்ரிகோணமே அம்பிகையின் ரூபமென்பதாகவும், பிந்துவானது சிவஸ்வரூபமென்றும்,

'த்ரிகோணரூபிணீ சக்தி: பிந்துரூப: பர: சிவ: ஸ்ம்ருத: |
அவினபாவ ஸம்பந்த: தஸ்மாத் பிந்து த்ரிகோணயோ: ||'

என்பதாக ஸ்ரீலலிதா த்ரிசதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

## अनघा

### அனகா (987)

அகம் (பாபம், துக்கம்) யாதொன்றுமில்லாதவள்.

## अद्भुतचारित्रा

### அத்புதசாரித்ரா (988)

ஆச்சரியகரமான சரித்திரங்களை உடையவள்.

1. இதனால் பண்ட நிக்ரஹம், அனங்கானுக்ரஹம் முதலான அம்பாளுடைய லீலைகள் சொல்லப்பட்டன.

2. அல்லது, அத்புதங்களின்போது - பூகம்பம் முதலான உத்பாதங்கள் காரணமாக, சரிக்கும்-வெளிவரும், துஷ்ட பலன்களிலிருந்து த்ராணம் செய்கிறவள் (காப்பாற்றுகிறவள்) என்றும் சொல்லலாம்.

## वाञ्छितार्थप्रदायिनी

### வாஞ்சிதார்த்த ப்ரதாயினீ (989)

(பக்தர்களால்) கோரப்பட்ட அர்த்தங்களை அபரிமிதமாய்க் கொடுப்பவள்.

இதர தேவதைகள் போலல்லாமல், அம்பிகையின் சரணங்களே பக்தர்களுடைய மனோரதங்களை விரும்புவதற்கதிகமாகக் கொடுக்கும் சக்திவாய்ந்தவை என்பதாய்,

'த்வதன்ய: பாணிப்யாம் அபயவரதோ தைவதகண:
த்வமேகா நைவாஸி ப்ரகடிதவராபீத்யபிநயா |
பயாத் த்ராதும் தாதும் பலமபி ச வாஞ்சாஸமதிகம்
சரண்யே லோகானாம் தவ ஹி சரணாவேவ நிபுணௌ ||'

என்பதாக ஸ்ரீமதாசார்யாள் 'ஸௌந்தர்யலஹரி'யில் வர்ணித்திருக்கிறார்கள்.

## अभ्यासातिशयज्ञाता
## அப்யாஸா திசயக்ஞாதா (990)

அப்யாஸத்தின் பெருக்கினுல் அறியப்படுகிறவள்.

அதாவது, அடிக்கடி

'ஆஸுப்தே: ஆம்ருதே: காலம் நயேத் வேதாந்த சிந்தயா |'

என்று சொன்னபடி செய்யப்படும் ப்ரஹ்மாத்மைக்யானுஸந்தானத்தின் (தன் ஆத்மாவும் ப்ரஹ்மமும் ஒன்ருயிருப்பதைப் பற்றிய த்ருடபாவனையின்) ஆவ்ருத்தி அதிகரிக்க அதிகரிக்க, அம்பிகையைப் பற்றிய ஞானமானது மேலுக்குமேல் ஏற்படும் என்று தாத்பர்யம். இதையே தான்,

'ஆவ்ருத்திரஸக்ருத் உபதேசாத் |

என்று வ்யாஸஸூத்ரம், கபிலஸூத்ரம் இவற்றில் சொல்லப்பட்டது. ப்ரம்ஹாண்ட புராணத்திலும்,

'த்யானைக த்ருச்யா ஞானங்கீ வித்யாதமா ஹ்ருதயாஸ்பதா |
ஆத்மைக்யாத் வ்யக்திமாயாதி சிரானுஷ்டான கௌரவாத் ||'

என்று சொல்லப்படுகிறது.

## षडध्वातीतरूपिणी
## ஷடத்வாதீத ரூபிணீ (991)

ஆறுவிதமான அத்வாக்களையும் கடந்ததான ரூபத்தையுடையவள்.

1. அத்வா என்பது வழி, மார்க்கம். (அம்பிகையை) உபாஸிப்பதில் ஆறு அத்வாக்களிருப்பதாகச் சொல்லப்படும். அவை வர்ண, பத, மந்த்ர, கலா, தத்வ, புவன அத்வாக்கள்.

'உக்தம் கலாத்வா தத்வாத்வா புவனத்வேதி ச த்ரயம் |'
வர்ணத்வா ச பதாத்வா ச மந்த்ராத்வேத்யபரம் பரம் ||'

(சாரதாதி லகம்)

இவற்றில் அகாராதி க்ஷகாராந்தமான வர்ணங்களாலானது வர்ணத்வா என்றும், வர்ணங்களின் சேர்க்கைகளான பதங்களாலானது பதாத்வா என்றும், மந்த்ரங்களாலானது மந்த்ராத்வா என்றும், கலைகளாலானது கலாத்வா என்றும், தத்துவங்களாலானது தத்வாத்வா என்றும், புவன (அல்லது, புர)ங்களாலானது புவனத்வா என்றும் சொல்லப்படும்.

'நிவ்ருத்யாத்யா: கலா: பஞ்ச கலாத்வேதி ப்ரகீர்த்திதா: |
தத்வாத்வா பஹுதாபின்ன: சிவாத்யாகம பேதத: ||
... ... ... ... ... |
ஈரிதோ புவனத்வேதி புவனானி மனீஷிபி: ||
வர்ணத்வேதி வசந்த்யர்ணன் ஆதி க்ஷாந்தான் மனீஷிண: |
வர்ணஸங்க: பதாத்வா ஸ்யாத் மந்த்ராத்வா மந்த்ர ராசய: ||'

(சாரதா திலகம்)

2. இந்த ஆறு அத்வாக்களில் வர்ண, பத, மந்த்ர, அத்வாக்கள் மூன்றும் சப்தஸ்வரூபமாயிருப்பதால் விமர்சாம்சங்களாய் சக்தி பாகமாயிருக்கின்றன. கலா, தத்வ, புவன அத்வாக்கள் மூன்றும் அர்த்தஸ்வரூபமாயிருப்பதால் ப்ரகாசாம்சங்களாய் சிவபாகமாய் இருக்கின்றன.

'மந்த்ராத்வா ச பதாத்வா ச வர்ணத்வா சேதி சப்தத: |
புவனத்வா ச தத்வாத்வா கலாத்வாசார்த்தத: க்ரமாத் ||'

(வாயவீயஸம்ஹிதை)

'சப்த ஜாதம் அசேஷம் து தத்தே சங்கர வல்லபா |
அர்த்த ஸ்வரூபமகிலம் தத்தே முக்தேந்துசேகர: ||'

(வாயவீயஸம்ஹிதை)

'அஸ்ய விமர்சஸ்ய குண: பத மந்த்ரார்ணத்மகஸ் த்ரிதா பவதி |
புரதத்வ கலாத்வோऽர்த்தோ தர்மிண இத்தம் ப்ரகாசஸ்ய ||'

(விருபாக்ஷபஞ்சாசிகா)

(இதைப்பற்றி மேலே சொல்லிய க்ரந்தங்களுடன் ஞானார்ணவம், ப்ரபஞ்சஸாரம், தக்ஷிணாமூர்த்திஸம்ஹிதை முதலியவற்றையும் பார்க்கவும்.)

அம்பிகை இந்த அத்வாக்களுக்கு அதீதமாயிருப்பதாக இங்கு சொல்லப்பட்டது.

3. அல்லது சிவ, விஷ்ணு, துர்க்கா, ஸூர்யன், கணபதி, இந்து என்ற ஆறு தேவதைகளின் உபாஸனைகளை ஷடத்வாக்களென்று சொல்லலாம். (இந்து உபாஸனை என்பது ஜைன தர்சனம்). இந்த உபாஸனைகளினால் பூர்வ ஜன்மங்களில் சித்த சுத்தியடைந்தவனுக்கு இந்த ஜன்மத்தில் அம்பிகையின் உபாஸ்தியானது கிடைக்கப்பெறுவதாகச் சொல்லப்பட்டிருப்பதால் அந்த ஆறுவிதமான அத்வாக்களுக்கு அதீதமாயிருப்பவள் என்றும் சொல்லலாம்.

'சைவ வைஷ்ணவ தௌர்கார்க காணுபத்யேந்து ஸம்பவை: |
மந்த்ரைர் விசுத்த சித்தஸ்ய குலஞானம் ப்ரகாசதே ||'

(குலார்ணவம்)

## अव्याजकरुणामूर्तिः
## அவ்யாஜ கருணாமூர்த்தி: (992)

அவ்யாஜமான கருணையை ஸ்வரூபமாயுடையவள்.

அவ்யாஜமென்றால் சூது, கபடு இல்லாத, அல்லது பக்ஷபாத மற்ற என்று அர்த்தம். அம்பிகையின் கருணையைப்பற்றி எல்லா பக்தர்களும் எத்தனைவிதமாகவோ புகழ்ந்திருக்கிறார்கள். (ஜயதி கருணா காசித் அருணா, அருணம் கருணாதரங்கிதாக்ஷீம்)

## अज्ञानध्वान्तदीपिका
## அக்ஞான த்வாந்த தீபிகா (993)

அக்ஞானமாகிற இருட்டைப்போக்கும் தீபம் போன்றவள்.

மேலே சொல்லியபடி அம்பிகை பரம கருணாரூபிணியாய் இருப்பதால், ஜீவராசிகளைச் சூழ்ந்திருக்கும் அக்ஞானமாகிற அந்தகாரத்தை அகற்றி அவர்களுக்கு க்ஷேமத்தைக் கொடுக்கிறாள் என்று சொல்லப்பட்டது. இதேமாதிரி கீதையில்,

'தேஷாமேவானுகம்பார்த்தம் அஹம் அக்ஞானஜம் தம: |
நாசயாம்யாத்மபாவஸ்த்தோ ஞான தீபேன பாஸ்வதா ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

## आबालगोपविदिता
## ஆபால கோப விதிதா (994)

குழந்தைகளாலும் இடையர்களாலும் கூட அறியப்படுகிறவள்.

1. அக்ஞானிகளுக்குள் குழந்தைகளையும், இடையர்களையும் உதாஹரணமாகச் சொல்வது வழக்கம். அவர்கள்கூட அறியக் கூடிய ஸ்வரூபத்தை உடையவளென்று சொன்னதினால் அம்பாளுடைய ஸௌலப்யத்தின் அதிசயமானது சொல்லப்பட்டது.

2. அல்லது— பாலர்களான ப்ரஹ்மாதிகளைக் காப்பாற்றுகிறவர் பாலகோபர். இதனால் ஸதாசிவன் குறிப்பிடப்

படுகிறார். திரும்பவும், பாலனும் கோபனுமிருப்பவர் பால கோபன். விஷ்ணுவின் அவதாரமாகிய க்ருஷ்ணன் தவிர, பாலகோபனென்றால் இடையர்களின் சிறிய பையன் என்றும் அர்த்தம். ஆகவே ஆபாலகோபம் என்றால் ஸதாசிவன், க்ருஷ்ணன் முதலாக இடைப்பையன் வரையில் யாவரும் என்று அர்த்தம். இவர்களெல்லோராலும் அறியப்படுகிறவள் என்றால் ஹரிஹராதிகள் முதல் பாமரர்கள் வரையில் யாவரும் அம்பாளை அறிகிறார்கள் என்று தாத்பர்யம்.

3. இதையேதான், ஸகலர்களும் தான் என்ற பாவத்தினால் அம்பாளை அறிகிறார்கள் என்பதாக,

'தாம் அஹம் ப்ரத்யய வ்யாஜேன ஸர்வே ஜானந்தி ஜந்தவ: |'

என்று ஸ்காந்தத்தில் சொல்லப்பட்டது.

4. ஸாமான்யமாக லோக வழக்கத்தில் ஸமஸ்த ஜனங்களையும் குறிப்பதற்காக 'ஆபால கோபாலம்' என்று சொல்வதையும் பார்க்கிறோம்.

இவ்விதம் எல்லோரும் அறியக்கூடியதாயிருப்பதினால் 'அதி பரிசயாத் அவக்ஞா' என்றபடி அம்பாளிடத்தில் மர்யாதைக் குறைவு ஏற்படக்கூடுமே என்ற ஸந்தேஹமானது அடுத்த நாமத்தினால் போக்கப்படுகிறது.

## सर्वानुल्लङ्घ्यशासना

## ஸர்வானுல்லங்க்ய சாஸனா (995)

யாவரும் மீறக்கூடாத கட்டளைகளையுடையவள்.

அதாவது, அம்பாளுடைய ஆக்ஞையை, ப்ரம்ஹா, விஷ்ணு முதலானவர்களும் அதிக்ரமிக்கமுடியாதென்று சொல்லப் பட்டது. இதே அபிப்பிராயத்தில் அம்பாளுடைய புருவத்தின் அசைப்பினால் ஏற்படும் உத்தரவின்பேரில் ப்ரஹ்மா முதலான வர்கள் ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி முதலான பஞ்சக்ருத்யங்களைச் செய்கிறார்களென்று ஸ்ரீமதாசாரியாள் 'ஸௌந்தர்யலஹரி'யில்,

'ஜகத் ஸூதே தாதா ஹரிரவதி ருத்ர: க்ஷபயதி
திரஸ்குர்வன்னேதத் ஸ்வமபி வபுரீசஸ்திரயதி |
ஸதா பூர்வ: ஸர்வம் ததிதம் அனுக்ருண்ஹாதி ச சிவ:
தவாக்ஞாம் ஆலம்ப்ய க்ஷணசலிதயோர் ப்ரூலதிகயோ: ||'

என்று சொல்லியிருக்கிறார்கள்.

## श्रीचक्रराजनिलया

## ஸ்ரீசக்ரராஜ நிலயா (996)

ஸ்ரீசக்ரத்தைத் தன்னுடைய இருப்பிடமாக உடையவள்.

1. 'ஸ்ரீ சக்ரம் சிவயோர் வபு:' என்று ஸ்ரீலலிதாத்ரிசதியில் சொல்லியபடி சரீரமானது ஜீவனுக்கு எப்படி அவஸ்தானமாயிருக்கிறதோ, அவ்விதமாக ஸ்ரீசக்ரமானது சிவன், சக்தி இருவர்களுக்கும் இருப்பிடமாக இருக்கிறதென்று சொல்லப்பட்டது.

2. சக்ரங்களுக்கெல்லாம் ச்ரேஷ்டமானதால் பிந்து த்ரிகோணங்களாகிய நவயோன்யாத்மகமான அம்பாளுடைய சக்ரத்தை ஸ்ரீசக்ரமென்றும், சக்ரராஜமென்றும், ஸ்ரீசக்ரராஜமென்றும் சொல்வது வழக்கம்.

## श्रीमत्त्रिपुरसुन्दरी

## ஸ்ரீமத் த்ரிபுரஸுந்தரீ (997)

ஸ்ரீமதியாயும் பரமசிவனுடைய பார்யையாயுமிருப்பவள்.

ப்ரம்ஹா, விஷ்ணு, சிவன் இம்மூவர்களுடைய சரீரங்களைத் திரிபுரங்களென்றும், அவற்றைத் தன் சரீரத்தின் பாகங்களாக உடைத்தாயிருப்பதால் பரமசிவனுக்கு த்ரிபுரனென்று பெயர் என்பதாக,

> 'ப்ரதானேச்சாவசாத் சம்போ: சரீரம் அபவத் த்ரிதா |
> தத்ரோர்த்வ பாக: ஸஞ்ஜாத: பஞ்சவக்த்ர: சதுர்புஜ: ||
> பத்ம கேஸர கௌராங்க: காயோ ப்ரம்ஹோ மஹேச்வரே |
> தன் மத்யபாகோ நீலாங்க: ஏகவக்த்ர: சதுர்புஜ: ||
> சங்க சக்ர கதா பத்மபாணி: காய: ஸ வைஷ்ணவ: |
> அபவத் தததோபாகே பஞ்சவக்த்ர: சதுர்புஜ: ||
> ஸ்படிகாப்ரமய: சுக்ல: ஸ காயச்சாந்த்ரசேகர: |
> ஏவம் த்ரிபி: புரைர்யோகாத் த்ரிபுர: பரம: சிவ: ||'

என்று காளிகா புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அவருடைய ஸுந்தரீ - பார்யை - த்ரிபுரஸுந்தரீ. அவளே ஸ்ரீயோடு பொருந்தியவளாய் இருப்பதால் ஸ்ரீமத் த்ரிபுரஸுந்தரீ என்று பெயர்.

**श्रीशिवा**

**ஶ்ரீசிவா** (998

ஶ்ரீயையுடைய சிவா.

அம்பிகை சிவனுடைய பத்னியாயிருப்பதுடன் அவரோடு அபேதமாயிருப்பதால் சிவா என்று பெயர். ஆகவே சிவனென்ற நாமத்திற்கு என்னென்ன விதமான அர்த்தங்களுண்டோ அவை எல்லாம் சிவா என்ற நாமத்திற்கும் உண்டு.

**शिवशक्त्यैक्यरूपिणी**

**சிவ சக்த்யைக்ய ரூபிணீ** (999)

சிவன், சக்தி இவர்களுடைய ஸாமரஸ்யத்தையே ரூபமாக உடையவள்.

1. பரப்ரம்ஹ ரூபிணியான அம்பாளை தனியான சிவஸ்வரூபமென்ருவது, சக்திஸ்வரூபமென்ருவது நினைக்காமல் அவ்விருவருடைய (ஒன்ருகக் கலந்த) ஸாமரஸ்ய ரூபமாக எண்ணவேண்டும் என்று தாத்பர்யம். இந்த பாவத்திற்கு அனேகவிதமான உபமானங்களுண்டு. திலத்தில் தைலம் போலவும், சந்த்ரனும் சந்த்ரிகையும்போலவும், ஸூர்யனும் உஷ்ணமும்போலவும், பல விதமாக ஒப்பிடப்பட்டிருக்கிறது.

'பாவகஸ்யோஷ்ணதேவேயம் பாஸ்கரஸ்யேவ தீதிதி: |
சந்த்ரஸ்ய சந்த்ரிகேவேயம் சிவஸ்ய ஸஹஜா சிவா ||'
'சிவேச்சயா பராசக்தி: சிவ தத்வைகதாம் கதா |
தத: பரிஸ்புரத்யாதௌ ஸர்கே தைலம் திலாதிவ ||'

2. இவர்களுடைய ஸாமரஸ்யமென்பது இவர்கள் அத்யந்தம் அபேதமாயிருப்பதைக் குறிக்கும்.

'ப்ரம்ஹணோऽபின்ன சக்திஸ்து ப்ரம்ஹைவ கலு நாபரா |
ததாஸதி வ்ருதா ப்ரோக்தம் சக்திரித்யவிவேகிபி: |
சக்தி சக்திமதோர் வித்வன் பேதாபேதஸ்து துர்கட: ||'

(ஸௌரஸம்ஹிதை)

'யதைகம் பவனஸ்பந்தம் ஏகம் ஔஷ்ண்யானலௌ யதா |
சின்மாத்ரம் ஸ்பந்த சக்திச்ச ததைவேகாத்ம ஸர்வதா ||'

(வாஸிஷ்ட ராமாயணம்)

3. அல்லது, ஸ்ரீசக்ரத்திலிருக்கும் சிவ சக்ரங்கள், சக்தி சக்ரங்கள் இவற்றின் ஐக்கியத்தையே ரூபமாக உடையவள் என்று சொல்லலாம். ஸ்ரீசக்ரத்திய ஒன்பது சக்ரங்களில் மேல்நோக்கி இருக்கும் நான்கு சக்ரங்களை சிவ சக்ரங்களென்றும், கீழ்நோக்கி இருக்கும் ஐந்து சக்ரங்களை சக்தி சக்ரங்களென்றும் சொல்லப்படும். இவற்றின் தத்வார்த்தங்களைப் பற்றியும், இவற்றால் ஸ்ரீசக்ரம் அமையப்பெறுவதைப்பற்றியும் ஸ்ரீமதாசார்யாளுடைய 'ஸௌந்தர்யலஹரி'யின் 11-வது ச்லோகமாகிய 'சதுர்பி: ஸ்ரீகண்டை:' என்ற ச்லோகத்தையும் அதின் வியாக்யானத்தையும் பார்க்கவும்.

4. ஸ்ரீசக்ரத்தினுடைய அமைப்பைப்பற்றியும், அதின் பாகங்கள் ஒன்றுக்குள் ஒன்று அவினாபாவ ஸம்பந்தமாக பொருந்தி இருப்பதைப்பற்றியும், ஸ்ரீலலிதாத்ரிசதியில் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

'சதுர்பி: சிவசக்ரைச்ச சக்தி சக்ரைச்ச பஞ்சபி: |
நவ சக்ரைச்ச ஸம்ஸித்தம் ஸ்ரீசக்ரம் சிவயோர் வபு: ||
த்ரிகோணம் அஷ்டகோணம் ச தசகோண த்வயம் ததா |
சதுர்தசாரம் சைதானி சக்தி சக்ராணி பஞ்ச ச ||
பிந்துச் சாஷ்டதளம் பத்மம் பத்மம் சோஷடச பத்ரகம் |
சதுரச்ரம் ச சத்வாரி சிவ சக்ராண்யனுக்ரமாத் ||
த்ரிகோணே பைந்தவம் ச்லிஷ்டம் அஷ்டாரேऽஷ்டதளாம்புஜம் |
தசாரயோ: ஷோடசாரம் க்ருஹம் புவனாச்ரகே ||
சைவானாமபி சாக்தானாம் சக்ராணாம் ச பரஸ்பரம் |
அவினாபாவ ஸம்பந்தம் யோ ஜானாதி ஸ சக்ரவித் ||
த்ரிகோண ரூபிணீ சக்தி: பிந்துரூப: பர: சிவ |
அவினாபாவ ஸம்பந்த: தஸ்மாத் பிந்துத்ரிகோணயோ: ||'

5. அல்லது, சிவ சக்திகளுடைய ஐக்யத்தை ப்ரதிபாதிக்கும் ஹம்ஸ மந்த்ரத்தின் ரூபமாயிருப்பவள் என்றும் சொல்லலாம். இந்த மந்த்ரத்தைப்பற்றி ஸூதஸம்ஹிதை யக்ஞவைபவ கண்டத்தில்.

'சாந்தாந்தம் சக்திரஸ்யோக்தா ததந்தம் பீஜமுச்யதே |
வித்யா சக்திர்பவேத் பீஜம் சிவ ஏவ ந சான்யதா ||
தேனாऽயம் பரமோ மந்த்ர: சிவ சக்த்யாத்மக: ஸ்ம்ருத: ||'

என்று சொல்லப்பட்டது. [ச என்பதற்கு அந்தமானது ஷ.

அதற்கு அந்தமானது ஸ. இதைத்தான் சாந்தாந்தம் என்றும் சக்தியென்றும் சொல்லப்பட்டது. அதற்கும் அந்தமானது ஹ. இதை பீஜமென்றும் சிவனென்றும் சொல்லப்பட்டது. ஆகவே இவ்விரண்டின் சேர்க்கையான ஹம்ஸமந்த்ரமானது சிவசக்த்யாத்மகம் என்று ஏற்படுகிறது.]

6. அல்லது, சிவனுடைய சக்திகளாகிய தூமாவதீ முதலான ஐவர்களுடைய ஐக்யரூபமாக—ஸமஷ்டியான ரூபமாக, இருப்பவளென்றும் சொல்லலாம். அவர்கள் பெயர்-தூமாவதி, ஹ்லாதா, பாஸ்வதீ, ஸ்பந்தா, விப்வீ. தூமாவதீ திரோதானத்தையும், பாஸ்வதீ தெரியச் செய்வதையும், ஸ்பந்தா க்ஷேபணத்தையும், விப்வீ வ்யாபகத்தையும், ஹ்லாதா புஷ்டியையும், செய்யும் சக்திகள். தவிர, தூமாவதீ ப்ருதிவியிலும், ஹ்லாதா ஜலத்திலும், பாஸ்வதீ தேஜஸிலும், ஸ்பந்தா வாயுவிலும், விப்வீ ஆகாசத்திலும் இருக்கும் சக்திகள். இவர்களால் ஜகத்தானது வ்யாபிக்கப்பட்டிருப்பதாகச் சொல்லப்பட்டது.

'தூமாவதீ திரோதௌ பாஸ்வத்யவபாஸனே Sச்வனும் சக்தி: |
க்ஷோபே ஸ்பந்தா வ்யாப்தௌ விப்வீ ஹ்லாதா து புஷ்டௌ மே ||
தூமாவதீ ப்ருதிவ்யாம் ஹ்லாதாப்ஸு சுசௌ து பாஸ்வதீ ப்ரததே |
வாயௌ ஸ்பந்தா விப்வீ நபஸி வ்யாப்தம் ஜகத்தாபி: ||'

(விரூபாக்ஷ பஞ்சாசிகா)

இம்மாதிரி இதுவரையில் சொல்லப்பட்ட நாமங்களில் முதல் மூன்றாகிய ஸ்ரீமாதா, ஸ்ரீமஹாராக்ஞீ, ஸ்ரீமத் ஸிம்ஹாஸனேச்வரீ என்ற நாமங்களால் ஜகத்தைப்பற்றிய ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற மூன்று கார்யங்களையும் செய்பவளாக அம்பாளைச் சொல்லிவிட்டு, பாக்கி இரண்டு காரியங்களாகிய திரோதானம், அனுக்ரஹம், என்பவை அநந்தமான விஷயங்களைப்பற்றியவையாகையால் சிதக்னிகுண்டஸம்பூதா என்ற அடுத்த நாமம் முதல் இந்த நாமமாகிய சிவசக்த்யைக்ய ரூபிணீ என்பது முடிய வரப்பட்ட நாமங்களில் அந்த இரண்டு கார்யங்களைப்பற்றிச் சொல்லிவிட்டு, இவ்விதமான பஞ்சக்ருத்யங்களைச் செய்பவளான தேவதையை, இதரதேவதைகளுக்கு இல்லாததும், இந்த தேவதைக்கே உரித்தானதும், ஸர்வோத்க்ருஷ்டமானதுமான நாமத்தால் அடுத்தாற்போல் சொல்லுகிறார்.

**ललिताम्बिका**

**லலிதாம்பிகா** (1000)

லலிதையாயும் அம்பிகையாயுமிருப்பவள்.

1. அம்பிகா, அம்பா, முதலிய பதங்கள் தாயாரைக் குறிக்குமாகையால் அம்பாள் ஸகல லோக ஜனனி என்பதாக இங்கு அம்பிகா என்பதினுல் சொல்லப்பட்டது. அதோடு லலிதையாயுமிருப்பதால் லலிதாம்பிகா என்று சொல்லப்பட்டது.

2. லலனம் செய்வதால் லலிதா என்று பெயர். லலனம் என்றால் செல்லமாக விளையாடுவது. அம்பாள் லோகாதீதையாய் க்ரீடித்துக்கொண்டிருப்பதால் லலிதா என்று பெயர் ஏற்பட்டது என்பதாக,

'லோகான் அதீத்ய லலதே லலிதா தேன ஸோச்யதே |'

என்று பத்மபுராணத்தில் சொல்லப்பட்டது. தவிர, லோகங்கள் என்று இங்கு வந்த பதத்தினுல் கிரணங்கள், அதாவது, ஆவரண தேவதைகள் குறிக்கப்படுவதால் அவர்களை அதிக்ரமித்து, (ஸ்ரீசக்ரத்தில்) அவர்களுடைய ஸ்தானங்களுக்கெல்லாம் மேல் பட்டதான பிந்துஸ்தானத்தில் அத்யந்தமான சோபையோடு அம்பிகை விளங்குவதால் இந்தப் பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

3. மனதிற்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கும் ஸகலபாவங்களும் லலிதமென்ற பதத்தினுல் குறிக்கப்படும்.

'சோபா விலாஸோ மாதுர்யம் காம்பீர்யம் ஸ்தைர்ய தேஜஸீ |
லாலித்யம் ச ததௌதார்யம் இத்யஷ்டௌ பௌருஷாகுணா: ||'

என்ற அபியுக்த வசனத்தில் சொல்லப்பட்ட அர்த்தங்களுண்டு. 'ஸௌகுமார்யம் து லாலித்யம்,' லலிதே ஸுந்தரம்' என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த பாவங்களெல்லாம் அம்பாளிடமிருப்பதால் லலிதா என்ற பெயர் ஏற்பட்டது.

இப்படி இந்த மூர்த்தியைப் பற்றியதான ஸகலமும் லலிதமாயிருப்பதால் லலிதா என்ற பெயர் ஏற்பட்டது பொருத்தமாகத்தான் இருக்கிறது என்பதாக,

'லலிதேதி நாம யுக்தம் தவ கில திவ்யா நவா வ்ருதய: |
தனுரைக்ஷவம் அஸ்த்ராண்யபி குஸுமானி ததாகிலம் லலிதம் ||'

என்றும் சொல்லப்பட்டது.

4. தவிர, 'லலிதம் ரதிசேஷ்டிதம்' என்றபடி லலிதமென்ற பதமானது ச்ருங்கார சேஷ்டைகளை (காமோத்தீபனமான பாவ ஹாவங்களை) குறிக்கும். ஆகவே இந்த நாமத்தினல் இங்கு உபாஸிக்கப்படும் அம்பிகையின் மூர்த்தியானது ச்ருங்கார ரஸ ப்ரதானை என்பதாகவும் குறிப்பிடப்பட்டது.

5. பத்மபுராணத்தில் தேவியின் பீடங்களைப்பற்றிச் சொல்லுகையில்,

ப்ரயாகே லலிதா தேவி'

என்று சொன்னபடி ப்ரயாகையிலிருக்கும் அம்பிகையின் ரூபத்திற்கு லலிதா என்று பெயர்.

சுபம்.

உ

ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுரஸுந்தர்யை நம:

# ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமம்.

## உ த் த ர பா க ம்.

### (ப ல ச் ரு தி பா க ம்.)

இம்மாதிரி அம்பாளுடைய ப்ரீதியையே முக்யமான பலனாக உடைய கீர்த்தனத்திற்கு உபயோகப்படும் நாம ஸஹஸ்ரத்தை ஹயக்ரீவர் சொல்லிவிட்டு திரும்பவும் அந்த ப்ரீதியின் மூலமாக ஸகலவிதமான பலன்களும் கிடைக்கக்கூடியதைப்பற்றியும் விசேஷ காம்ய ப்ரயோஜனத்திற்காக (விசேஷமான பலன்கள் கிடைப்பதற்காக) நாமகீர்த்தனம் செய்யவேண்டிய முறைகளைப் பற்றியும் மேலே சொல்லுகிறார்.

1. இத்யேவம் நாம ஸாஹஸ்ரம்
   கதிதம் தே கடோத்பவ ||

இம்மாதிரியாக இந்த நாம ஸஹஸ்ரமானது, ஹே கடோத்பவ! உனக்குச் சொல்லப்பட்டது.

1. இதி என்ற பதமானது நாமஸஹஸ்ரத்தின் முடிவைக் காட்டுவதுடன் அது ஆயிரம் என்ற எண்ணிக்கைக்குக் கூட வாவது குறையவாவது இல்லையென்பதையும் காட்டுகிறது.

2. ஏவம்— நான் சொன்ன ப்ரகாரம், ஆயிரம் நாமங்களடங்கியது (நாமஸஹஸ்ரம்) என்று பெயர் சொன்னபடி ஆயிரமுடையது. ஸரஸ்வதீ, கங்கா முதலிய ஸஹஸ்ரநாமங்களில் எண்ணிக்கையானது ஆயிரத்துக்குக் குறைவாக இருக்கிறபடியால், அவற்றிற்கு ஸஹஸ்ரநாமம் என்று பெயரிடுவது அர்த்த

மற்றது, அல்லது கௌணமானது. இந்த நாமஸஹஸ்ரத்திலோ அம்மாதிரியான குறைவு யாதொன்று கிடையாதாகையால் நாம ஸஹஸ்ரம் என்ற பெயர் பொருத்தமானதென்று தாத்பர்யம்.

ரஹஸ்யாநாம் ரஹஸ்யம் ச
லலிதாப்ரீதி தாயகம் |
அனேன ஸத்ருசம் ஸ்தோத்ரம்
ந பூதம் ந பவிஷ்யதி ||

ரஹஸ்யங்களுக்கெல்லாம் ரஹஸ்யமானதும், லிலிதாம்பாளுக்கு ப்ரீதியைக் கொடுப்பதுமான இதற்கு ஸமானமான ஸ்தோத்ரம் இருந்ததுமில்லை, இருக்கப்போவதுமில்லை.

1. தேவீஸஹஸ்ரநாமம் முதலியவைகள் (கூர்மபுராணம் முதலியவற்றிலிருப்பவை) சரியாக ஆயிரம் நாமங்களோடிருப்பதால் இதற்கு ஸமானமாகுமே என்ற சங்கைக்கு இதில் ஸமாதானம் சொல்லப்படுகிறது. அவை பின்வருமாறு.

2. ந்யாஸம், ஜபம் முதலான ரஹஸ்யங்களோடு இந்த நாம ஸஹஸ்ரமானது இருப்பதால் இது ரஹஸ்யாநாம் ரஹஸ்யமாக— ரஹஸ்யதமமாக இருக்கிறது. அம்மாதிரியான ரஹஸ்யங்களோடு கங்கா ஸஹஸ்ரநாமம் முதலியவைகள் (ஸ்காந்த புராணம் முதலியவற்றிலிருப்பவை) பொருந்தியிருந்தாலும், இதற்கு அவற்றிலில்லாத மஹத்தான இன்னமொரு விசேஷ லக்ஷணமிருக்கிறது.

3. அதாவது, இது லலிதாப்ரீதிதாயகம், அவையெல்லாம் லலிதாம்பாளைவிட அபக்ருஷ்டமான (தாழ்ந்ததான) கங்கா முதலான தேவீ ரூபங்களுக்கு ப்ரீதியைக் கொடுப்பவை. இது ஸர்வோத்க்ருஷ்டமான தேவீரூபமான ஸ்ரீலலிதாம்பாளுக்கு ப்ரீதியை உண்டாக்குவதால் அவையெல்லாவற்றையும் இதுதான் உயர்ந்தது.

4. இம்மாதிரி விசேஷமான ஸ்தோத்ரம் (லலிதாம்பிகையைப்பற்றி) வேறு இருக்கலாகாதா என்ற ஸந்தேஹத்தை 'அனேன............ந பவிஷ்யதி' என்பதினால் நிவர்த்தி பண்ணுகிறார். இப்போது இல்லை என்பது ஏற்பட்டுவிட்டது. இதற்கு

முந்தியுமில்லை, இதற்குப் பின் ஏற்படப்போவதுமில்லை என்பதி
னால் காலத்ரயத்திலும் இது மாதிரி ரஹஸ்யதமமானதும் லலிதா
ப்ரீதிதாயகமுமான ஸ்தோத்ரம் கிடையாது என்று சொல்லப்
பட்டது. இந்த இரண்டு விசேஷணங்களைப்பற்றி மேலேவரும்
ச்லோகங்களிலெல்லாம் சொல்லப்படுகிறது. அவற்றில் ரஹஸ்ய
தமமாயிருப்பது அடுத்த இரண்டு ச்லோகங்களில் சொல்லப்படு
கிறது. 'ப்ரயாஸதாரதம்யாத் பலதாரதம்யம்' என்றந்யாயத்தின்
படி அதிகமான பலன் கிடைப்பதானது அதிகமான ப்ரயாஸை
யின் பேரில்தான் ஏற்படுமென்பது ப்ரஸித்தமாயிருந்தாலும்,
ரஹஸ்ய தமமமென்பதினால் அனேகவிதமான பலன்களை கொடுப்
பதுடன் அல்பாயாஸ ஸாத்யமானது (கொஞ்சம் ச்ரமம் எடுத்துக்
கொண்டாலேயே செய்யக்கூடியது) என்றும் சொல்லப்பட்டது.
இப்படி இந்த நாமகீர்த்தனமானது அல்பாயாஸ ஸாத்யமான
தென்பதை 'ரஹஸ்யானாம் ரஹஸ்யம்' என்பதினால் ஸ்பஷ்டமாகச்
சொல்லப்பட்டதினால் இனி அதினால் கிடைக்கக்கூடிய பல
பூமாவை (விசேஷமான பலன்களை)ப் பற்றி இனி சொல்லுகிறார்.

3. ஸர்வரோக ப்ரசமனம்
ஸர்வ ஸம்பத் ப்ரவர்தனம் |
ஸர்வாப ம்ருத்யுசமனம்
காலம்ருத்யு நிவாரணம் ||

(இந்த ஸ்தோத்ரமானது) ஸகல ரோகங்களையும் அடக்கி
விடும். ஸமஸ்தமான ஸம்பத்துக்களையும் வ்ருத்திபண்ணும்.
ஸகலவிதமான அகால ம்ருத்யுவையும் அடக்கிவிடும். காலக்ர
மத்தில் ஏற்படக்கூடிய மரணத்தையும் நீக்கிவிடும்.

1. அஸாத்யம், அயாப்யம் முதலான பேதங்களையுடைய
ரோகங்களையெல்லாம், அதாவது தெளியமுடியாதென்று சொல்
லப்படும் ரோகங்களைக்கூட போக்கடிக்குமென்று சொல்லப்
பட்டது. தாரித்ரியம் என்பதும் ரோகத்திற்கு ஸமமாகச்
சொல்லப்படுவதால் அதின் அபாவத்திற்கு அவச்யம் இருக்க
வேண்டியதான ஸம்பத்தை (கொடுப்பதுடன் அதை) வ்ருத்தி
செய்யுமென்று அடுத்தாற்போல 'ஸர்வஸம்பத் ப்ரவர்தனம்
என்று சொல்லப்பட்டது.

2. தவிரவும், ஆரோக்யம், ஸம்பத்து இவையிரண்டும் ஸாதாரணமாய்ச் சேர்ந்து இருப்பது அரிதாகையால், ஆரோக்ய மிருக்குமிடத்தில் தாரித்ரயம் அவச்யம் இருந்து தீருமே என்ற ஸந்தேஹத்தைப் போக்குவதற்காக, 'ஸர்வஸம்பத் ப்ரவர்தனம்' என்று 'ஸர்வரோக ப்ரசமனம்' என்பதற்கு அடுத்தாற்போல் சொல்லப்பட்டது. அதாவது இந்த நாமஸஹஸ்ரத்தைக் கீர்த்தனம் செய்தால் ஆரோக்யம், ஸம்பத்து இவையிரண்டும் ஒருங்கே ஏற்படும் என்று சொல்லப்பட்டது.

3. ஸர்வ ஸம்பத் என்பதினால் கஜ, துரகங்களின் ஸம்ருத்தி முதலான ஐச்வர்யத்தின் எல்லா பேதங்களும் சொல்லப்பட்டன.

4. அபம்ருத்யு என்பது அகாலம்ருத்யு, அதாவது, ஸர்ப்பம், புலி முதலானவைகளால் ஏற்படும் அகாலமரணம். இம்மாதிரி இறப்பவர்கள் மிகச் சிலராகையாலும் அவ்வித மரணத்தைப் போக்குவது மிகவும் குறைவான பலனாகத் தோன்றப்போவதே என்பதற்காக அடுத்தாற்போல் 'காலம்ருத்யு நிவாரணம்' என்று சொல்லப்பட்டது. ஆயுளின் அளவு முடிந்தவுடன் (காலக்ரமத்தால்) ஏற்படும் மரணத்தை காலம்ருத்யு என்று சொல்லப்படும். அவ்வித அளவு முடிவதற்குள்ளேயே ஏற்படும் மரணத்தைத் தான் அகாலம்ருத்யு, அபம்ருத்யு என்றுசொல்லப்படும். எண்ணெ, திரி இவைகளையுடைய தீபமானது தானாகவே எரிந்து அணைவது காலம்ருத்யுவுக்கு ஸமானம். அதுவே எண்ணெ, திரி எல்லா மிருக்கும்போதே பெருங்காற்று முதலான காரணங்களால் அணைந்துபோவது மாதிரியானது அபம்ருத்யு.

4. ஸர்வ ஜ்வரார்த்திசமனம்
தீர்க்காயுஷ்ய ப்ரதாயகம் |
புத்ரப்ரதம் அபுத்ராணாம்
புருஷார்த்த ப்ரதாயகம் ||

ஸகலவிதமான ஜ்வரங்களால் ஏற்படும் கஷ்டங்களை நீக்கி விடும். தீர்க்கமான ஆயுளைக்கொடுக்கும். பிள்ளையில்லாதவர்களுக்கு புத்ரஸம்பத்தைக் கொடுக்கும். புருஷார்த்தத்தையும் கொடுக்கும்.

1. ஒரு நாளைய ஜ்வரம் முதல் ஸன்னிபாத ஜ்வரம் வரையி லுள்ள எல்லா ஜ்வர பேதங்களையும் 'ஸர்வ ஜ்வர' என்று சொல்லப்பட்டது. அவைகளால் ஏற்படும் தலைவலி முதலான உபத்ரவங்களையெல்லாம் நாசம் செய்துவிடுமென்று 'ஸர்வ ஜ்வ ரார்த்தி சமனம்' என்பதால் சொல்லப்பட்டது. அல்லது ஸர்வ என்று ஆரம்பித்து மேலே வந்த நாலு பதங்களிலும் ஸர்வ என்ற பதத்திற்கு எல்லாவிதமான என்பதற்கு பதிலாக எல்லோ ருடைய என்றும் அர்த்தம் சொல்லலாம். ஸாதனம் ஒருவர் செய்வதால் பலனை மற்றொருவர் அடைவது என்ற ந்யாயத்தின் படி அதாவது நாமகீர்த்தனம் செய்தால் பிறருக்கு இவ்விதமான பலன்கள் ஏற்படும்படிச் செய்யலாம் என்று தாத்பர்யம்.

உதாரணமாக, வைச்வானரேஷ்டி என்ற (த்வாதசக பாவங்களினால் ஸம்ஸ்காரம் செய்யப்பட்ட) இஷ்டி விசேஷத்தை தகப்பனால் செய்தபோதிலும் அதினுடைய பலத்தைப் பிறந்த குழந்தை அடைவதாகச் சொல்லப்படும்.

2. 'ஸர்வரோக' என்பதிலேயே ஜ்வரங்களும் அவை களால் ஏற்படும் உபத்ரவங்களும் அடங்கியிருக்கையில் இங்கு தனியாக 'ஸர்வஜ்வரார்த்திசமனம்' என்று தனியாகச் சொன்ன தற்குக் காரணம் ரோகங்களில் ஜ்வரமானது விசேஷமானது (முக்யமானது) என்பதைக் காட்டுவதற்காக.

3. அல்லது பின்னால் சொல்லப்போகும் காம்ய ப்ரயோகங் களில் சொல்லியிருப்பதை அநுஸரித்து இங்கும் ஜ்வரத்தைப் பற்றித் தனியாகச் சொன்னதாகவும் சொல்லலாம். அங்கு ரோக சாந்தி முதலிய நான்கு அவயவங்களையுடைய ஒரு (முக்ய மான) பலனைக் கிடைக்கச் செய்யும் ப்ரயோகத்தைச் சொல்லி விட்டு அந்தந்த அவயவத்தை மட்டுமே பலனாக உடைய ப்ர யோகங்களைப்பற்றியும் ஜ்வர சமனத்தைச் செய்யும் ப்ரயோகத் தைப்பற்றியும் தனித்தனியாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இதே மாதிரி 'தீர்காயுஷ்ய ப்ரதாயகம்' என்று தனியாகச் சொல்லப் பட்டதற்கும் ஸமாதானம் சொல்லலாம்.

4. தீர்கமான ஆயுஸ் என்பது பூர்ணமான ஆயுஸ். அதா வது ச்ருதியில் சொல்லப்பட்டபடி சதாயுஸ்(100-வயது). அதைக் கொடுப்பது என்றால் அதற்கு இடையூறாக இருக்கும் க்ரஹங்கள், விஷம் முதலிய கெடுதல்கள் யாதொன்றும் இல்லாமல் செய்வது

5. அல்லது (மேலே சொல்லிய பூர்ணமான) ஆயுளை தீர்க மாக இருக்கச்செய்யும் என்றும் சொல்லலாம், அதாவது, ச்ருதி யின்படி ஆயுளானது 100 வருஷம் என்று சொல்லப்பட்டிருந்த போதிலும், அதற்கு மேற்பட்டுக்கூட இருக்கச்செய்யும்படியான மஹிமை இந்த நாமஸஹஸ்ரத்தின் கீர்த்தனத்திற்குச் சொல்லப் பட்டது. இவ்விதம் ஆயுளை நீடிக்கச்செய்வதானது குளிகை, ஔஷதம், யோகம் இவைகளால் கிடைக்கப்பெறும் என்று சொல்லப்படுவது மாதிரி இந்த நாமஸாஹஸ்ர கீர்த்தனத்தினாலும் கிடைக்கப்பெறுமென்று சொல்லப்பட்டது. [இவ்வித பலனானது உடனே கிடைப்பதாகத் தெரிய ஹேது இல்லாவிட்டாலும் அதைப் பின்னால் கொடுக்கக்கூடியதான அபூர்வம் என்று (மீமாம்ஸகர்களால்) சொல்லப்படும் பலனானது நாமகீர்த்தனம் செய்த உடனேயே கிடைப்பதாக தாத்பர்யம்] ஆகவே இந்த நாமகீர்த்தனத்திற்கு காலம்ருத்யுவை நிவாரணம் செய்யும் பலன் மட்டுமல்ல, ஆயுளை (ச்ருதி வாக்யத்தினால் அதற்கு ஏற்படும் அளவை) நீடிக்கச்செய்யும் பலனுமுண்டு என்று ஏற்பட்டது.

6 'அபுத்ரானாம்' என்பதினால் புத்ரகாமனையுள்ளவர்க ளெல்லாரையும் சொல்லப்பட்டது. அனேகம் பிள்ளைகளுடைய வர்களுக்கு ஸாதாரணமாக இன்னமும் பிள்ளை வேண்டுமென்ற ஆசையிருக்காதாகையாலும், ஸாமான்யமாகப் பிள்ளைகளில்லாத வர்களுக்குத்தான் அம்மாதிரியான ஆசையிருக்குமாகையாலும், இங்கு 'அபுத்ரானாம்' என்று சொல்லப்பட்டது. ஆயினும் பிள்ளை யுடையவர்களும் இன்னமும் பிள்ளைவேண்டுமென்று ஆசைப்பட் டால் அவர்களுக்கும் இந்த நாமகீர்த்தனத்தின் மூலமாகப் பிள்ளை உண்டாகும் என்பது தாத்பர்யம். [ஸ்ம்ருதிகளிலும் ஒரு புத் ரனையுடையவனையும், பிறந்த பிள்ளையை இழந்தவனையும் வந்த்யை- மலடி-என்ற பதத்தினால் குறிக்கப்படுவது காணப்படுகிறது.]

7. இது தவிர, அபுத்ரர்கள் புத்ரன் வேண்டுமென்ற காமனையோடில்லாவிட்டால் (மேலே சொல்லப்படும்) புத்ரகாம ப்ரயோகம் அனுஷ்டிப்பதற்கு அவர்களுக்கு அதிகாரமில்லை யென்பதும் இதிலிருந்து ஏற்படுகிறது. இதேமாதிரி மேலே சொல்லப்படும் காம்ய ப்ரயோகங்களைச் செய்வதில் அந்தந்த ப்ர யோகம் செய்வதினால் கிடைக்கக்கூடிய பலனை விரும்புகிறவர்கள்

தான் அவ்விதமான காம்ய ப்ரயோகத்தைச் செய்வதற்கு அதிகாரிகள் என்பதும் ஏற்படுகிறது. ஒருவன் எல்லாவிதமான காமங்களையும் அபேக்ஷிப்பவனாக இருந்தால் மேலே சொல்லிய காரணத்தால் அவன் எல்லா ப்ரயோகங்களையும் செய்வதற்கு அதிகாரியாக இருக்கிறான். அப்போது அவன் எதை முதலில் செய்யவேண்டுமென்ற சங்கை ஏற்படக்கூடும். அப்போது தந்த்ர ந்யாயத்தின்படி அவன் ஸர்வ பலன்களையும் கொடுக்கக் கூடியதான ப்ரயோகம் ஒன்றையே செய்தால்போதும். [வெவ்வேறு விதமான பலன்கள் கிடைப்பதற்கு ஒரே விதமான ப்ரயோகம் சொல்லப்பட்டிருந்தால், அதைத் திரும்பத் திரும்பச் செய்யாமல் ஒரே தடவை செய்வதானது தந்த்ரமென்று சொல்லப்படும்.]

8. இவ்விதம் சொன்னால் 'தத்ர ஸர்வேऽவிசேஷாத்' என்ற மீமாம்ஸா ஸூத்ரத்திற்கு விரோதமாகத்தோன்றும். அதாவது, அனேகவிதான பலன்களைக் கொடுக்கக்கூடியதாக ஒரு கர்மாவைப்பற்றிச் சொல்லப்பட்டிருந்தால் ஒரு பலன் கிடைப்பதற்காக ஸங்கல்பம் செய்து அந்தக் கர்மாவைச்செய்தால் அந்த பலன்தான் கிடைக்கும். இன்னொருபலன் அங்கு சொல்லப்பட்டதென்னவென்றால் தர்ச, பூர்ணமாஸ, ஜ்யோதிஷ்டோமாதி யாகங்கள் ஸர்வ காமங்களையும் கொடுப்பவையென்றாலும் ஒரு யாகத்தை ஒருதடவை செய்தால் ஒரே பலன்தான் கிடைக்கு. மென்பது ஸித்தாந்தம். மேலே சொல்லப்பட்ட (மீமாம்ஸா) அதிகரணத்தில் வரும் (அம்மாதிரியான) ந்யாயங்களெல்லாம் அல்பமான பலத்தைக்கொடுக்கும் கர்மாக்களைப் பற்றியவையே. தேவதையின் ப்ரீதியோ லோகவிலக்ஷணமாய், நம்மால் எதிர்பார்க்கப்படுவதைவிட அதிகமான பலனைக் கொடுக்கக்கூடியது. இதனால்தான் அம்பாளை 'லோகாதீதா, குணாதீதா, ஸர்வாதீதா' என்று இந்த நாமஸஹஸ்ரத்தில் சொல்லப்பட்டது.

9. கர்மாக்களைப்பற்றி மேலே சொல்லப்பட்ட ந்யாயமானது இதர ரிஷிகளாலும் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. ஒரே ப்ரயோகமாயிருந்தால் ஸகல காமங்களையும் விரும்பிச்செய்யலாம். ப்ரயோகங்கள் பலவாறாக இருந்தால் ஒவ்வொன்றையும் ஓரோர்

காமத்தையுத்தேசித்துச் செய்யவேண்டும் என்பதாக ஹிரண்ய கேசி ஸூத்ரத்தில்,

'ஏக ப்ரயோகே ஸர்வான் காமான் காமயீத,
ப்ரயோக ப்ருதக்த்வே ச ஏகைகம் |'

என்று சொல்லப்பட்டது.

10. விஷயங்களைப்பற்றிய காமனைகளில்லாதவர்களும்கூட இந்தநாம கீர்த்தனத்தைச் செய்யலாம் என்பதை 'புருஷார்த்த ப்ரதாயகம்' என்பதினால் சொல்லப்பட்டது. புருஷர்களால்—அதாவது, புத்திமான்களால்—விரும்பப்படுவது என்றால் மோக்ஷத்தைக் குறிக்கும். நிஷ்காமனாயிருந்தாலும் மோக்ஷத்தை பலனாக உடைய ப்ரயோகத்தைச் செய்வதற்கு அதிகாரமுண்டு என்று தாத்பர்யம். வாஸ்தவத்தில் இந்தப் பதத்தினால் சதுர்விதமான புருஷார்த்தங்களும் கிடைக்கப்பெறும் என்று சொல்லப்பட்டது. ஓரோர் தேவதை உபாஸித்தால் ஓரோர் பலனைத் தான் அடையலாமென்றும் அம்பாளை உபாஸித்தால் சதுர்வர்கமும் (சதுர்வித புருஷார்த்தங்களும்) கிடைக்குமென்று சொல்லப் பட்டிருக்கிறது.

'அத: பரம் சதேவானாம் அர்ச்சனம் காரயேத் புத: |
கணேசம் பூஜயேத் யஸ்து விக்னஸ் தஸ்ய ந பாததே ||
ஆரோக்யார்த்தேऽர்ச்சயேத் ஸூர்யம் தர்மமோக்ஷாய மாதவம் |
சிவம் தர்மார்த்தமோக்ஷாய சதுர்வர்காய சண்டிகாம் ||'

(பத்மபுராணம் புஷ்கரகண்டம் ஆன்ஹிகப்ராகரணம்)

5. இதம் விசேஷாத் ஸ்ரீதேவ்யா:
ஸ்தோத்ரம் ப்ரீதிவிதாயகம் |
ஜபேன் நித்யம் ப்ரயத்னேன
லலிதோபாஸ்திதத்பர: ||

இப்படி ஸ்ரீதேவியினுடைய ப்ரீதியை விசேஷமாகக் கொடுக்கும் இந்த ஸ்தோத்ரத்தை லலிதோபாஸனையில் ஈடுபட்ட பக்தனானவன் தினந்தோறும் ஸர்வ ப்ரய்த்னத்துடன் ஜபம் செய்ய வேண்டும்.

1. பஹுபல ப்ரதத்வம் (அனேக பலன்களைக் கொடுப்பது), அல்பாயாஸ ஸாத்யத்வம் (கொஞ்சமான ப்ரயாஸையின்

பேரிலேயே செய்யக் கூடியது) இவை மேலே சொல்லப்பட்ட ஒன்பது ஸஹஸ்ர நாமங்களிலுமிருப்பதுடன் லலிதாப்ரீதி ப்ர தத்வம் (லலிதாம்பாளுடைய ப்ரீதியைக் கொடுப்பது) என்பதும், கங்கா, ச்யாமளா முதலானவர்களுடைய ப்ரீதி ஏற்படுவதின் மூலமாயும் கிடைக்கக்கூடும். தவிர, லலிதாம்பாளைப்பற்றியே இருக்கும் பஞ்சமீஸ்தவராஜம் முதலான ஸ்தோத்ரங்களாலும் லலிதாம்பாளுடைய ப்ரீதியை அளவற்ற விதமாக ஸம்பாதிக்க லாம். இப்படியிருக்கையில் அவைகளைவிட இந்த ஸ்தோத்ரத் திற்கு என்ன மஹிமை இருக்கிறதென்பதை இந்த ச்லோகத்தில் சொல்லுகிறார்.

2. லலிதாம்பாளுக்கு இதர ஸ்தோத்ரங்களினால் ஏற்படும் ப்ரீதியைவிட இந்த நாமஸஹஸ்ரத்தைக் கீர்த்தனம் செய்தால் ப்ரீதி ஏற்படும் என்பதை,

'இதம் விசேஷாத் ஸ்ரீதேவ்யா: ஸ்தோத்ரம் ப்ரீதிவிதாயகம் |'

என்று சொல்லப்பட்டது. இவ்விதம் விசேஷமான ப்ரீதியைக் கொடுப்பதினால் ரஹஸ்யதமமாயிருப்பதும் இந்த ஸ்தோத்ரம் தான் என்பதும் ஏற்படுகிறது. அக்னிஹோத்ர, தர்சபூர்ண மாஸ, ஜ்யோதிஷ்டோம, விச்வஜித் முதலான கர்மாக்கள் எல்லா வற்றிற்கும் ஸ்வர்கம் என்பது பலனாக இருந்தாலும், அவற்றிற் குள் ப்ரயாஸ தாரதம்யமிருப்பதால் கிடைக்கும் ஸ்வர்கமானது ஒரே மாதிரியானது என்று சொல்லாமல்,அவ்வித தாரதம்யத்தை அனுஸரித்து அந்தந்த கர்மாவினால் கிடைக்கும் ஸ்வர்க்கத்திலும் தாரதம்யம் இருப்பதாக மீமாம்ஸா சாஸ்த்ரத்தில் சொல்லப்பட் டிருக்கிறது. அதே ந்யாயத்தையொட்டி தேவதையின் ப்ரீதி விஷயத்திலும், ப்ரீதியைக் கொடுக்கும் ஸ்தோத்ரங்களில் அந் தந்த ஸ்தோத்ரத்தினால் ஏற்படும் ப்ரீதியில் தாரதம்யமிருக்கும். அப்போது அவற்றில் எது விசேஷமானது என்று ஏற்படக் கூடிய கேள்விக்கு உத்தரமாக 'இதம் விசேஷாத்' என்று இங்கு சொல்லப்பட்டது.

3. இந்த 'விசேஷ'பதம் இங்கு சொல்லப்பட்டதற்கு இன்னமொரு காரணமும் சொல்லலாம். ப்ரயாஸையின் தார தம்யத்தையொட்டி பலன் கிடைப்பதிலும் தாரதம்யம் உண் டென்று சொன்னால், இந்த நாமஸாஹஸ்ர கீர்த்தனத்தைச்

சொல்வதிலிருக்கும் ப்ரயாஸையைவிட அதிகமான ப்ரயாஸை யின்பேரில் வேறு கர்மாவைச் செய்தால் இதைவிட அதிகமான ப்ரீதியானது அம்பாளுக்கு ஏற்படக்கூடும் என்று சொல்வதற்கு இடமில்லையென்று காட்ட இந்த 'விசேஷ'பதத்தை உபயோகித்த தாகவும் சொல்லலாம். இந்தக் காரணத்தாலும் இது ரஹஸ்ய தமமானதென்று ஏற்படுகிறது.

4. ஆகையினால் எப்பாடுபட்டாவது லலிதோபாஸகன் இந்த நாமஸஹஸ்ரத்தை உயிருள்ளவரையில் ஜபித்துக்கொண்டி ருக்க வேண்டுமென்று உத்தரார்த்தத்தில் சொல்லப்பட்டது.

அவ்விதம் ஜபம் செய்வதைப்பற்றிய க்ரமத்தைப்பற்றி மேலே சொல்லுகிறார்.

6. ப்ராத: ஸ்னாத்வா விதானேன
ஸந்த்யாகர்ம ஸமாப்ய ச |
பூஜாக்ருஹம் ததோ கத்வா
சக்ரராஜம் ஸமர்ச்சயேத் ||

காலையில் ஸ்நாநம் செய்து, விதிப்படி ஸந்த்யாவந்தன கர் மாவை முடித்துக்கொண்டு, பிறகு பூஜாக்ருஹத்திற்குப்போய் ஸ்ரீசக்ரத்தை (நன்றாக) அர்ச்சனம் செய்யவேண்டும்.

1. விதானேன என்பதினால் வைதிக, தாந்த்ரிகமென்ற இரண்டு ப்ரகாரங்களின்படியும் என்று அர்த்தம். இந்த இரண்டு விதமான ப்ரகாரங்கள் ஸ்னானத்திலும் ஸந்த்யாகர்மாவிலும் உண்டாகையால் இந்த 'விதானேன' என்ற பதமானது (காகாக்ஷி ந்யாயத்தின்படி) முந்தியும் பிந்தியும் இருக்கும் இரண்டு பதங்க ளுடனும் சேரும்.

2. 'பூஜாக்ருஹ கமனம்' என்பது த்வாரபூஜை முதலான வைகளைக் குறிக்கும்.

3. 'ஸமர்ச்சயேத்' என்பதை ப்ரயோஜக கர்த்தா (பிறருக் குப் பலன் கிடைப்பதற்காக ப்ரயோகத்தைச் செய்பவன்) மூலமாக பூஜை செய்வதையும் குறிக்கும். அதாவது தனக்காக பிறரைக்கொண்டும் ஸ்ரீசக்ர பூஜனத்தைச் செய்யச்சொல்லலாம் என்று அர்த்தம்.

7. வித்யாம் ஜபேத் ஸஹஸ்ரம் வா
த்ரிசதம் சதமேவ வா |
ரஹஸ்யநாமஸாஹஸ்ரம் இதம்
பச்சாத் படேன் நர: ||

அம்பாளுடைய வித்யையை ஆயிரம், அல்லது முந்நூறு, அல்லது நூறு தடவையாவது ஜபம்செய்து, பிறகு இந்த ரஹஸ்ய நாமஸாஹஸ்ரத்தைப் படனம் செய்யவேண்டும்.

1. வித்யா என்பது ஸாதாரணமாய் ஸ்த்ரீ தேவதையைப் பற்றிய மந்த்ரத்தைக் குறிப்பதாயிருந்தபோதிலும் இங்கு பஞ்சதசீ, அல்லது ஷோடசீ என்று அர்த்தம்.

2. 'ஸஹஸ்ரம் வா........வா' என்பதினால் அஷ்டோத்தர சதமும் சொல்லப்பட்டது. த்ரிசதம் என்றால் முன்னூறு (நூற்றிமூன்று அல்ல.)

3. ஜபத்தினுடைய ஸங்க்யை இவ்விதம் சொல்லப்பட்டிருப்பதில் இம்மூன்றும் ஒரேவிதமான பலனைக் கொடுப்பவையல்லவென்று காட்டுவதற்காக 'சதம் ஏவ' என்று சொல்லப்பட்டது. ஆயிரம் தடவை ஜபித்தால் அதிகமான பலன் உண்டு, முன்னூறு தடவை ஜபித்தால் அதற்கடுத்தபடியான பலன் உண்டு, என்பது முதலான தாத்பர்யமேற்படுவதற்காக, ஆயிரம் தடவை ஜபிக்கவேண்டும், அது முடியாவிட்டால் முன்னூறு தடவை ஜபிக்கவேண்டும், அதுவும் முடியாவிட்டால் நூறு தடவையாவது ஜபிக்கவேண்டும் என்பதாக,

'ஸஹஸ்ரம் வா த்ரிசதம் ஏவ வா'

என்று சொல்லப்பட்டது.

4. 'பச்சாத்' என்பதினால் நாமகீர்த்தனமானது வித்யா ஜபத்திற்குப் பிறகும், புஷ்பாஞ்ஜலி தானத்திற்கு முந்தியும், செய்யப்படவேண்டுமென்று சொல்லப்பட்டது. இந்த முறையானது ஜபம், நாமகீர்த்தனம், புஷ்பாஞ்ஜலி என்ற மூன்றும் செய்தால் எது எதற்கு அடுத்தபடியாகச் செய்யவேண்டுமென்ற வரிசையைக் காட்டுகிறதே தவிர ஜபம் செய்தால் தான் நாமகீர்த்தனம் செய்யலாம் என்று அர்த்தமல்ல. (இதேமாதிரி வேத, வேதி கரணங்களுக்கு நடுவில் க்ஷுத்தாசம்னமும், வேதாத்யயன,

ஸ்நானங்களுக்கு நடுவில் மீமாம்ஸாத்யயனமும் செய்யவேண்டு மென்று அவைகளைச்சொல்லும் வாக்யங்களுக்கு மீமாம்ஸையில் அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது.) நாமகீர்த்தனத்தை தவிர மற்றவைகளைச் செய்வதைப்பற்றி இங்கு சொல்லப்பட்டதானது, வேறு விதிவாக்யங்களில் சொல்லியதை அனுவாதம் (ஏற்கனவே சொன்னதைத் திரும்பச்சொல்வது) செய்கிறதே தவிர வேறல்ல. அவைகளுடன் நாமகீர்த்தனத்தைச் சொல்வதானது அது செய்யவேண்டிய காலத்தைக் குறிப்பதற்காக மட்டும்தான். ஆகவே, ஜபம், நாமகீர்த்தனம் இவையிரண்டும் பரஸ்பரம் அங்க, அங்கீ பாவமுடையவையல்ல. (அதாவது ஜபத்திற்கு நாமகீர்த்தனம் அங்கமென்றாவது, நாமகீர்த்தனத்திற்கு ஜபம் அங்கமென்றாவது இல்லை.) இரண்டிற்கும் வெவ்வேறான வாக்யங்களினால் பலமிருப்பதாகச் சொல்லப்படுவதால் 'தர்ச பூர்ண மாஸாப்யாம் இஷ்ட்வா ஸோமேன யஜேத' என்ற வாக்யத்தில் சொல்லப்பட்டமாதிரி, இங்கு அவையிரண்டும் செய்வதாயிருந் தால் எது முந்தியும், எது பிந்தியும் செய்யப்படவேண்டுமென்ற காலத்தைப்பற்றிய வரிசைமட்டும் சொல்லப்பட்டது. ப்ரதான கர்ம பஞ்சகமான ப்ராத.ஸ்நாநம், ஸந்த்யாகர்ம, ஸ்ரீசக்ர பூஜனம், வித்யாஜபம், நாமகீர்த்தனம் இவைகளை அடுத்தடுத்துச் சொல்வதினால் செய்யவேண்டிய க்ரமத்தின் விபரங்கள் சொல்லப் பட்டனவே தவிர அவற்றில் ஒரு ப்ரதான கர்மாவைச் செய்யா விட்டால் பாக்கி ப்ரதானங்களைச் செய்வதின் பலனானது பாதிக் கப்படும் என்ற சங்கையானது 'அனபாயோ ஹி காலஸ்ய' என்ற ந்யாயத்தினால் நிராஹரிக்கப்பட்டது.

இவ்விதம் அம்பாளுடைய ப்ரீதியானது இதர ஸ்தோத்ரங் களைச் சொல்வதினால் ஏற்படுவதைவிட இந்த நாமஸாஹஸ்ர கீர்த்தனத்தினால் விசேஷமாக ஏற்படுமென்று சொல்லப்பட்ட போதிலும், அவ்விதமான விசேஷத்தைப்பற்றிய ஞானமில்லா விட்டால் ஏற்படக்கூடியது எவ்வளவென்றே தெரியாமல் போய் விடுமே என்பதற்காக அந்த 'விசேஷ' பதத்தினால் குறிக்கப் பட்ட (ப்ரீதியின்) அளவை இனிவரும் ச்லோகங்களில் சொல்லு கிறார்.

8. ஜன்ம மத்யே ஸக்ருச்சாபி
 ய ஏவம் படதே ஸுதீ: |
 தஸ்ய புண்யபலம் வக்ஷ்யே
 ச்ருணு த்வம் கும்பஸம்பவ ||

நல்ல அறிவுடைய ஒருவன் தன் ஆயுசுக்குள் ஒரு தடவை யாவது இம்மாதிரி கீர்த்தனம் செய்தால் அதினால் அவனுக்கு ஏற் படும் புண்ய பலனைச் சொல்லுகிறேன். ஹே கும்பஸம்பவ! கேள்.

1. மேலே சொல்லியபடி ஜன்ம மத்தியில் ஒரு தடவை இந்த நாமஸஹஸ்ரத்தைக் கீர்த்தனம் செய்தால், அப்போது, அதிலுள்ள ஒரு நாமத்தைச் சொல்வதினால் ஏற்படும் பலனானது இனி சொல்லப்படப் போகிறது. அந்த ஒரு நாமத்திய பலனை ஆயிரம் மடங்கு பெருக்கினால் நாமஸஹஸ்ரத்தைச் சொல்வதின் பலன் கிடைக்கும். இது நாமஸஹஸ்ரத்தை ஒரு தடவை சொல் வதின் பலன். நாமஸாஹஸ்ர கீர்த்தனத்தை உயிருள்ள வரை யில் செய்து வந்தால், அதினுடைய பலனானது அந்த ஆவ்ருத்தி களின் மொத்த எண்ணிக்கையினால் ஒரு தடவை கீர்த்தனம் பண்ணுவதின் பலனைப் பெருக்கினால் கிடைக்கும். இந்த அள வாக அம்பாளுடைய ப்ரீதியானது ஏற்படுமென்பது புத்திமான் களால் ஊஹித்தறியலாமென்பதற்காக ஒருநாமத்தை ஒருதடவை சொல்வதினால் ஏற்படும் பலனைமட்டும் சொல்லப்போகிறார்.

2. அப்படிச் செய்வதையே மனதில் வாங்கிக்கொள்வது ச்ரமமான காரியமாயிருக்குமாதலால் சிஷ்யரான அகஸ்த்யர் தான் சொல்லப்போவதை கவனத்துடன் கேட்கவேண்டுமென் பதற்காக தான் புண்ய பலத்தைச் சொல்லப்போவதாக 'தஸ்ய புண்யபலம் வக்ஷ்யே' என்று எச்சரிக்கைசெய்து அவர் அதை ஸாவதானமாகக் கேட்கவேண்டுமென்பதை 'ச்ருணுத்வம் கும்ப ஸம்பவ' என்று சொல்லுகிறார்.

9. கங்காதி ஸர்வதீர்த்தேஷு
 ய: ஸ்நாயாத் கோடிஜன்மஸு |

கங்கை முதலான ஸகல புண்ய தீர்த்தங்களில் ஒருவன் கோடி ஜன்மங்களில் ஸ்நானம் செய்தாலும்,

1. கங்காதி தீர்த்தங்களென்பதினுல் புஷ்கரம் முதலான தீர்த்தங்களும் சொல்லப்பட்டன. 'புஷ்கராத்யானி தீர்த்தானி' என்று ஸகல தீர்த்தங்களுக்கும் முதலாக புஷ்கரத்தைச் சொல்வது ப்ரஸித்தமாயிருந்தாலும், அதற்கும் ஆதியாக (முந்தியதாக) கங்கையை இங்கு சொல்வதற்குக் காரணம்—கங்கையானது த்ரிலோகத்திலும் ப்ரவஹிப்பதால், அதை ஆதியாக உடைய ஸர்வதீர்த்தங்களென்று சொன்னுல் ஸ்வர்க, பூலோக, பாதாளங்களிலிருக்கும் ஸகல தீர்த்தங்களையும் குறிப்பதாக ஆகும். கங்கா என்ற பதமே கங்கையானது ஸ்வர்க்கத்திலிருந்து பூமிக்கு வந்ததினுல் ஏற்பட்டது என்பதாக,

'யஸ்மாத் பகீரதோ தேவி ஸ்வர்காத் காம் த்வாமிஹானயத் |
அதஸ்த்வம் முனிபி: ஸர்வை: கங்கேதி பரிகீர்த்யஸே ||'

இதர தீர்த்தங்களின் பெயரை ஆதியாகச் சொன்னுல் பூலோகத்திலிருக்கும் தீர்த்தங்கள் குறிக்கப்படுமே தவிர (கங்கையை ஆதியாகச் சொன்னுல் மேலே சொன்னபடி ஏற்படுவது மாதிரி) த்ரிலோகங்களிலிருக்கும் தீர்த்தங்கள் குறிக்கப்படமாட்டா.

இங்கு சொல்லப்பட்டதிலும் இனி சொல்லப்படும் (இந்த பலனைப்பற்றிய) ச்லோகங்களிலும் 245-வது ச்லோகத்தில் சொல்லப்பட்ட ப்ரதிதினம், ச்ரத்தயா பாயா, ஸஹஸ்ரபரிவத்ஸரான் என்ற பதங்களைச் சேர்த்து அர்த்தம் செய்யவேண்டும், அதாவது இது ஸம்பந்தமாகச் சொல்லப்படும் கர்மாக்களை தினந்தோறும், பரமச்ரத்தையுடன், பன்னீராயிரம் வருஷங்கள் செய்தால் ஏற்படக்கூடிய புண்யத்தை ஒரு எண்ணிக்கையாகச் சொல்லப்பட்டது. (பரிவத்ஸரமென்ற பதத்திற்கு 245-வது ச்லோகத்தில் அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது.) அதேமாதிரி இங்கு சொல்லப்பட்ட கோடிஜன்மஸு என்ற பதத்தை மற்ற இடங்களிலும் சேர்த்துச்சொல்லவேண்டும்.

3. ஆகவே, இந்த பதங்களைச் சேர்த்து இந்த கர்மாவுக்கு அர்த்தம் கீழே சொல்வதுமாதிரி இதர கர்மாக்களுக்கும் அர்த்தம் சொல்லவேண்டும். அதாவது—த்ரிலோகங்களிலுமிருக்கப்பட்ட கணக்கற்ற தீர்த்தங்களில் ஒரு தீர்த்தத்தில், ப்ரதிதினம், விதிப்படி, பரமச்ரத்தையோடு ஸஹஸ்ர பரிவத்ஸரம் ஸ்நானம்

செய்யவேண்டியது. இது ஒரு ஜன்மத்தியதாகையால் கோடி ஜன்மங்களில் ஏற்படுவது இதைக் கோடியால் பெருக்கினுல் வரும். இப்படி வருவது ஒரு தீர்த்தத்தைப்பற்றியதாகையால் த்ரி லோகங்களிலுமுள்ள எண்ணிக்கையற்ற தீர்த்தங்களில் ஸ்நாநம் செய்வதினுல் ஏற்படும் புண்யமானது அவற்றின் எண்ணிக்கை யால் ஒரு தீர்த்தத்திய புண்யத்தைப் பெருக்கினுல் வரும். (ப்ரதிதினம், விதிப்படி, பரமச்ரத்தையோடு தீர்த்த ஸ்நாநம் செய்வது × ஸஹஸ்ர பரிவத்ஸரம் × கோடி ஜன்ம × த்ரிலோகங் களிலுமுள்ள தீர்த்தங்கள்) இப்படி வரும் புண்யராசியானது ஒன்று.

கோடிலிங்க ப்ரதிஷ்டாம் து
யः குர்யாத் இவிமுக்தகே ||

அவிமுக்த க்ஷேத்ரத்தில் ஒருவன் கோடிலிங்கங்களை ப்ர திஷ்டை செய்தாலும்,

1. 'ஏகஸ்மின் ஸ்தாபிதே லிங்கே விச்வம் ஸம்ஸ்தாபிதம் பவேத் |' என்றது முதலான வசனங்களின்படி இதரதேவதைகளை ப்ர திஷ்டை செய்வதைவிட ஒரு லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்வ தினுல் அதிகமான பலன் ஏற்படுவதாகச் சொல்லப்படும். அவ் வாறு கோடிலிங்கங்களை, அதுவும் அவிமுக்த க்ஷேத்ரத்தில் (ப்ரதி தினம், சரத்தயாபரயா, ஸஹஸ்ர பரிவத்ஸரம், கோடிஜன்மஸு) ப்ரதிஷ்டை செய்வதினுல் ஏற்படும் புண்யராசியானது இரண் டாவது.

2. காசியில் காசீ, வாராணஸீ, அவிமுக்தம், அந்தர்க் ருஹம் என்று நாலு ஸ்தானங்கள் இருப்பதாக ப்ருஹத்ஜாபாலம் முதலியவைகளில் சொல்லப்பட்டிருக்கிறது, அவை காசிக்குள் வாராணஸீ, வாராணஸிக்குள் அவிமுக்தம் என்பதாக (தேஹத்தி லிருக்கும் பஞ்சகோசங்கள்மாதிரி) ஒன்றொன்றும் அதற்கு முந்தியதால் வ்யாபிக்கப்பட்டு ஒவ்வொன்றும் அதற்கு முந்தி யதைவிட புண்யமானதாயிருப்பதாகச் சொல்லப்படும். ஆகவே அந்தர்க்ருஹம் என்பதுதான் மற்ற எல்லாவற்றையும்விட உத்த மோத்தமமானது. அது பரமசிவனுடைய சரீரமே. அந்த சரீரம், சரீரீ (சரீரத்தையுடையவன்) இவ்விரண்டும் அபேதமாகை

யாலும், நித்யமாகையாலும் அதற்கு அவ்விதமான மஹிமை ஏற்பட்டது.

3. அவி என்ற பதமானது பாபங்களைக் குறிக்கும். பாபங்களைப் போக்கடிப்பதாலும் தான் எப்போதும் அங்கு இருப்பதாலும் அவிமுக்தம் என்று அந்த க்ஷேத்ரத்திற்குப் பெயர் ஏற்பட்டதென்று பரமசிவனால் சொல்லப்பட்டதாக,

'அவி சப்தேன பாபானி கத்யந்தே த்விஜஸத்தம |
தைர்முக்தம் ந மயாத்யக்தம் அவிமுக்தம் அத: ஸ்ம்ருதம் ||'

என்று லிங்கபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

4. மேலே சொல்லப்பட்டபடி அந்தர்க்ருஹம்தான் உத்தமோத்தமமானது என்று ஏற்பட்டாலும் அதின் பெயரை இங்கு சொல்லாமல் அவிமுக்தத்தைச் சொன்னதற்குக் காரணம், அந்தர்க்ருஹத்தைவ்யாபித்து அவிமுக்தமிருப்பதாலும், அவிமுக்தமென்ற பதத்திற்கு மேலே சொல்லப்பட்ட அர்த்தமானது அந்தர்க்ருஹத்திற்குத்தான் விசேஷமாகப் பொருந்துமாதலாலும், ஸாதாரணமாய் பண்டிதர்களும், பாமரர்களும் அந்த இரண்டிற்கும் பேதம் பாராட்டாமல் இரண்டும் ஒரே இடமாகச் சொல்வது வழக்கமாதலாலும், அவிமுக்தமென்று இங்கு சொல்வதினால் அந்தர்க்ருஹமே சொல்லப்பட்டது.

அந்தர்க்ருஹம் என்பதின் பெயரைக் குறிக்காமல் அவிமுக்தமென்று சொன்னதினால் அந்த அவிமுக்தமென்ற பதத்திற்குச் சொன்ன அர்த்தத்தை ஞாபகப்படுத்தி அது மிகவும் புண்யமான ஸ்தானம் என்று குறிப்பிடப்பட்டது.

10. குருக்ஷேத்ரே து யோ தத்யாத்
கோடிவாரம் ரவிக்ரஹே |
கோடிம் ஸௌவர்ணபாராணாம்
ச்ரோத்ரியேஷு த்விஜன்மஸு ||

குருக்ஷேத்ரத்தில் ஸூர்யக்ரஹணத்தின்போது கோடிபாரம் இடையுள்ள தங்கத்தை ச்ரோத்ரியர்களான ப்ராஹ்மணர்களுக்கு கோடித்தடவைகள் தானம் செய்தாலும்,

1. தானம் செய்வதினால் கொடுப்பவனுக்கு எவ்வளவு புண்யம் ஏற்படுமோ, அவ்வளவு பாபம் தானம் வாங்குகிற வனுக்கு ஏற்படுகிறதென்றும், ஆகையால் தானம் வாங்குகிறவன் அதற்குத் தகுந்த ப்ராயச்சித்தம் செய்யவேண்டுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதற்காக எல்லா தானங்களுக்கும் ப்ராயச்சித்தங்கள் சொல்லப்பட்டிருக்கையில் குருக்ஷேத்ரத்தில் ஸூர்யோபராகத்தின்போது ப்ராம்ஹணன் தானம் வாங்கினால் அதற்கு ப்ராயச்சித்தமே கிடையாதென்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸர்வத்ர ஸர்வதா ஸர்வம் க்ருண்ஹன் முச்யேத கர்ஹிசித் |
உபராகே குருக்ஷேத்ரே க்ருண்ஹன் விப்ரோ ந முச்யதே ||'

தானம் வாங்குகிறதற்கு ப்ராயச்சித்தங்கள் எவ்வளவுக் கெவ்வளவு கடினமாகச் சொல்லப்பட்டிருக்கின்றனவோ, அவ் வளவுக்கவ்வளவு அந்த தானத்தைச் செய்கிறவனுக்கு புண்யம் அதிகமென்று சொல்லப்படுவதாலும், மேலே சொல்லிய விதமாக குருக்ஷேத்ரத்தில் தானம் வாங்கினால் ப்ராயச்சித்தம் கிடையவே கிடையாதென்று சொல்லப்படுவதாலும், அவ்விதமாக தானம் செய்தால் அளவற்ற புண்யமேற்படுமென்று ஸித்திக்கிறது.

2. தானம் செய்யப்படும் பதார்த்தங்களில் ஸுவர்ண தானம்தான் உத்க்ருஷ்டமானதென்று சொல்லப்படும்.

'த்ரீண்யாஹு: அதிதானானி காவ: ப்ருத்வீ ஸரஸ்வதீ |'

என்று ப்ருஹஸ்பதி ஸ்ம்ருதியில் சொல்லியபடி பசுக்கள், பூமி, வித்யை இந்த தானங்கள் மிகவும் ச்ரேஷ்டமான தானங்கள் என்று சொல்லப்பட்டபோதிலும், அவையெல்லாம் ஸ்வர்ணத்தி னால் (பணத்தினால்) ஏற்படக்கூடியவையாகையால் ஸுவர்ண தானமானது அவைகளையும்விட உயர்ந்ததென்று ஏற்படுகிறது

3. 'துலா ஸ்த்ரியாம் பலசதம் பார: ஸ்யாத் விம்சதிஸ்துலா: |' என்ற கோசவசனத்தின்படி 100-பலம் 1-துலாம், 20-துலாம், 1-பாரம்.

4. 'த்ரிபி: ச்ரோத்ரிய உச்யதே' என்ற ப்ரம்ஹவைவர்த்த வசனப்படி ஜன்ம, உபநயன, வித்யைகளால் ஸம்ஸ்காரமடைந்த வர்கள் ச்ரோத்ரியர்கள் என்று சொல்லப்படுவார்கள்.

6. தானங்களால் ஏற்படும் புண்யமானது தேச, கால, பாத்ர, தேய (கொடுக்கும் வஸ்து), ச்ரத்தா, ஞான, ரஹஸ்யம் முதலியவைகளைப் பொருத்து மேலுக்கு மேல் அதிகமாக ஏற்படுமாகையால், அவையெல்லாம் இங்கு சொல்லப்படாவிட்டாலும், சேர்த்துத்தான் அர்த்தம் செய்துகொள்ளவேண்டும்.

7. குருக்ஷேத்ரத்தில் ரவி க்ரஹணத்தின்போது மேலே சொல்லப்பட்ட ஸத்பாத்ரத்திற்கு கோடி ஸுவர்ணபாரதானம்— இதை கோடி தடவைசெய்வது - மறுபடி இதை ஸஹஸ்ர பரிவத்ஸரங்களிலுள்ள தினங்களின் எண்ணிக்கையால் பெருக்கி திரும்பவும் அதை கோடி ஜன்மங்களால் பெருக்கிவரும் புண்ய ராசியானது மூன்றுவது

இதற்கடுத்த ச்லோகத்தின் இரண்டு பாதிகளில் முறையே இஷ்டா பூர்த்தங்களைச் சொல்லப்படுகிறது. இஷ்டமென்பது யாகங்களைச்செய்து தானங்கள் செய்வது, பூர்த்தமென்பது பொதுஜன ஸௌகர்யத்திற்காக வாபீ, கிணறு, குளம், கோவில், அன்னஸத்ரம், உத்யானம் முதலியவைகளை ஏற்படுத்துவது.

வாபீ கூப தடாகாதி தேவதாயதனானி ச |
அன்னப்ரதானமாராமா: பூர்தம் அர்த்யா: ப்ரசக்ஷதே ||
ஏகாக்னிகர்ம ஹவனம் த்ரேதாயாம் யச்ச ஹூயதே |
அந்தர்வேத்யாம் ச யத்தானம் இஷ்டம் தத் அபிதீயதே ||'

11. ய: கோடிம் ஹயமேதானாம்
ஆஹரேத் காங்கரோதஸி |
ஆசரேத் கூபகோடீர்யோ
நிர்ஜலே மருபூதலே ||

கங்கைக்கரையில் கோடி அச்வமேத யாகங்களை ஒருவன் செய்தாலும், நிர்ஜலமாயிருக்கும் பாலைவன ப்ரதேசத்தில் கோடிக் கணக்கான கிணர்களை வெட்டிவைத்தாலும்,

1. 'தரதி ப்ரஹ்மஹத்யாம் தரதி
பாப்மானம் யோऽச்வமேதன யஜதே'

என்று ச்ருதிவாக்யத்தில் சொல்லப்பட்டபடி அச்வமேதம் என்ற க்ரது விசேஷமானது ப்ரஹ்மஹத்தி முதலான எப்பேர்ப்பட்ட பாபத்தையும் போக்கக்கூடியது.

2. கங்காதீரத்தில் ச்ரோத்ரியர்களான ரித்விக்குகளுடன் ஸாங்கமான அச்வமேதயாகங்கள் கோடி செய்வதினுலுண்டாகும் புண்யம்—அதை மேலே சொல்லிய தினங்கள், ஜன்மங்கள் இவைகளின் கணக்கினுல் பெருக்கினுல் வரும் புண்யராசியானது நான்காவது.

3. கூபம் (கிணறு)என்பதினுல் வாபீ, தடாகம் முதலியவைகளும் குறிக்கப்பட்டன.

4. (ப்ராணிகள் உயிருடன் வாழமுடியாத) பாலைவனத்திற்கு மரு என்று பெயர். ஆகவே (அது ஸாதாரணமாய் ஜலமில்லாத பூமியாயிருந்தாலும்) இங்கு 'நிர்ஜலே' என்று சொன்னது அர்த்தமில்லாததல்ல.

5. அப்பேர்ப்பட்ட இடத்தில் கோடிக்கணக்கான கிணறு முதலியவைகள் வெட்டுவதினுல் ஏற்படும் புண்யம்—அதை மேலே சொல்லிய தினங்கள், ஜன்மங்கள் இவைகளின் கணக்கினுல் பெருக்கினுல் வரும் புண்யராசியானது ஐந்தாவது.

12. துர்பிக்ஷே யः ப்ரதிதினம்
கோடி ப்ராஹ்மண போஜனம் |
ச்ரத்தயா பரயா குர்யாத்
ஸஹஸ்ர பரிவத்ஸரான் ||

க்ஷாமகாலத்தில் பரம ச்ரத்தையுடன் தினந்தோறும் கோடி ப்ராஹ்மணர்களுக்கு போஜனம் போட்டு (அம்மாதிரி) பன்னீராயிரம் வருஷங்கள் செய்தாலும்,

1. ஸகல தேசங்களிலும் பிக்ஷை துர்லபமாக இருக்கும் காலத்தை துர்பிக்ஷகாலமென்று சொல்லப்படும். அப்போது கோடிக்கணக்கான உத்தம ப்ராஹ்மணர்களுக்கு உத்தம ஷட்ரஸோபேதமான அன்னத்தை தானம் செய்வதினுலுண்டாகும் புண்யம்—அதை மேலே சொல்லிய தினங்கள், ஜன்மங்கள் இவைகளின் எண்ணிக்கையினுல் பெருக்கினுல் வரும் புண்யராசியானது ஆருவது.

2. வருஷங்களை ப்ரபவ முதல் சொல்லுகையில், ப்ரபவ முதலான பன்னிரண்டை ஸம்வத்ஸரமென்றும், ப்ரமாதி

முதலான பன்னிரண்டை பரிவத்ஸரமென்றும், கர முதலான பன்னிரண்டை இடாவத்ஸரமென்றும், சோபன முதலான பன்னிரண்டை இத்வத்ஸரமென்றும், ராக்ஷஸ முதலான பன்னிரண்டை அனுவத்ஸரமென்றும் சொல்வது வழக்கம். அப்படியிருந்தபோதிலும், ஸாதாரணமாகப் பன்னிரண்டு வருஷங்களைக் குறிப்பதாக 'பரிவத்ஸரம்' என்று இங்கு சொல்லப்பட்டது.

13. தத் புண்யம் கோடிகுணிதம்
 லபேத் புண்ய மனுத்தமம் |
 ரஹஸ்யநாம ஸாஹஸ்ரே
 நாம்னோப்யேகஸ்ய கீர்த்தனாத் ||

அந்தப் புண்யத்தின் கோடி மடங்கானதும், அனுத்தமமானதுமான புண்யத்தை இந்த ரஹஸ்யநாம ஸாஹஸ்ரத்திலிருக்கும் ஒரு நாமத்தைச் சொன்னாலேயே அடையலாம்.

1. 'தத்புண்யம் கோடிகுணிதம்' என்று சொன்னது மேலே சொல்லிய தீர்த்த ஸ்நான, லிங்கப்ரதிஷ்டை, ஸ்வர்ணதானம், அச்வமேதம், கூபதானம், ப்ராம்ஹண போஜனம், இவை ஒவ்வொன்றிற்கும் சொல்லப்பட்ட அளவு புண்யங்களை ஒன்றாகச் சேர்த்து அப்படி வருவதைக் கோடிக்கணக்காகப் பெருக்கி ஏற்படும் புண்யம் இந்த ஸஹஸ்ர நாமத்தின் ஒரு நாமம் சொன்னால் கூட வந்துவிடும் என்று அர்த்தம்.

2. ஒரு நாமத்திற்கே இப்படி அளவுகடந்த புண்யம் ஏற்படும்போது நாமஸஹஸ்ரத்தைச் சொன்னால் எவ்வளவு ஏற்படும் என்பதை ஊஹித்துக் கொள்ளலாம்.

3. இவ்விதம் சொல்லப்பட்ட மஹத்தான புண்யராசியானது (முழு) ஸ்தோத்ரபடனத்தினுடையது என்று தோன்றக்கூடிய எண்ணத்தை அடுத்தாற்போல் 'நாம்னோப்யேகஸ்ய' என்பதினால் போக்கடிக்கப்பட்டது. அதாவது, இவ்விதமான புண்யம் ஒரு நாமத்தைச்சொல்வதினாலேயே ஏற்படுவதாகச்சொல்லப்பட்டது.

இப்படி ஒரு நாமத்தைக் கீர்த்தனம் செய்வதினால் ஏற்படும் புண்ய ராசியைச் சொல்லிவிட்டு அதேமாதிரி விஸ்தாரமாக அதற்கு பாபங்களைப்போக்கும் சக்தியிருப்பதைப்பற்றி மேலே சொல்லுகிறார்.

14. ரஹஸ்ய நாம ஸாஹஸ்ரே
நாமைகமபி ய: படேத் |
தஸ்ய பாபானி நச்யந்தி
மஹாந்த்யபி ந ஸம்சய: ||

யாராயினும் ஒருவன் இந்த ரஹஸ்ய நாமஸஹஸ்ரத்தில் ஒரு நாமத்தைச் சொன்னாலும்கூட அதினால் அவனுடைய மஹத்தான பாபங்களும் நசித்துப்போகின்றன. அதில் ஸம்சயம் இல்லை.

மஹத்தான பாபங்களே (மஹாபாதகங்களே) போய் விடும்போது உபபாதகங்களைப் பற்றிச் சொல்லத் தேவையில்லை யென்பதைக் காட்டுவதற்கு 'மஹாந்த்யபி' என்று சொல்லப் பட்டது.

15. நித்யகர்ம அனனுஷ்டானாத்
நிஷித்த கரணாதபி |
யத்பாபம் ஜாயதே பும்ஸாம்
தத் ஸர்வம் நச்யதி த்ருதம் ||

நித்ய கர்மாக்களை அனுஷ்டிக்காமலிருந்தாலும், நிஷித்தமான கர்மாக்களைச் செய்தாலும், அவற்றால் மனிதர்களுக்கு எந்த பாபம் ஏற்பட்டாலும் அதெல்லாம் உடனே நாசமடைகிறது.

1. தினந்தோறும் அவச்யம் செய்யப்படவேண்டிய கர்மாவை நித்ய கர்மா என்று சொல்லப்படும். இந்த கர்மாக்கள் அந்தந்த வர்ணாச்ரம பேதத்தை அனுஸரித்து ச்ருதி, ஸ்ம்ருதி, தந்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. அவை ஸந்த்யாவந்தனம், அக்னிஹோத்ரம் முதலியவை. இவைகளைச் செய்யா விட்டால் பாபம் ஏற்படுமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

2. நித்யகர்மாக்கள் என்று இங்கு சொல்லப்பட்டது நைமித்திகமான கர்மாக்களையும் குறிக்கும். (உதாஹரணம் க்ரஹணத்தின்போது ஸ்நானம் செய்வது.)

3. இவையெல்லாம் ச்ருதியின் விதிக்கப்பட்ட கார்யங்கள். ச்ருதியில் சில கார்யங்கள் (செய்யக்கூடாதென்று) நிஷேதிக்கப் பட்டிருக்கின்றன. அவைகளைச் செய்தால் பாபம் ஸம்பவிக்கு

மென்று சொல்லப்பட்டிருக்கிறது. [உதாஹரணம் - ந களஞ்ஜம் பக்ஷயேத் - களஞ்ஜத்தை சாப்பிடாதே. களஞ்ஜமென்றால் புகையிலை போன்ற வஸ்து அல்லது விஷம் தடவின அம்பினால் கொல்லப்பட்ட மிருகத்தின் மாம்ஸம் என்று அர்த்தம்.]

4. மேலே சொல்லப்பட்ட நித்ய கர்மாவைச் செய்யாவிட்டாலும், நிஷேதிக்கப்பட்ட கர்மாவைச் செய்தாலும், பாபம் ஸம்பவிக்கும். அப்படி ஸம்பவித்தால், இந்த நாமஸாஹஸ்ரத்தின் ஒரு நாமத்தைச் சொன்னவுடனேயே அந்த பாபமெல்லாம் போய்விடுமென்று இங்கு சொல்லப்பட்டது. 'த்ருதம்' என்ற பதத்தினால் வேறுவிதமான ப்ராயச்சித்தத்தின் தேவையில்லாமல் இந்த நாம கீர்த்தனத்தினாலேயே போய்விடுவது சொல்லப்பட்டது.

5. மேலே சொல்லிய இரண்டுவிதமான பாபங்களைத் தவிர இந்த்ரிய நிக்ரஹமில்லாததினால் ஏற்படுவது மூன்றாவதுவிதமான பாபமென்பதாக,

'விஹிதஸ்ய அனுஷ்டானாத் நிந்திதஸ்ய ச ஸேவனாத் |
அனிக்ரஹாத் சேந்த்ரியாணாம் நர: பதனம்ருச்சதி ||'

என்று ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்டபோதிலும், அது யோஜித்துப் பார்த்தால் மேலேசொல்லிய இருவகையான கார்யங்களில் அடங்கிப்போவதால், இங்கு பாபத்தை இரண்டுவிதமாகச் சொல்லப்பட்டது. இந்த்ரிய நிக்ரஹம் இருந்தால் தான் நித்ய கர்மாவை விடாமலும், நிஷித்த கர்மாவைச் செய்யாமலுமிருக்கலாம். இந்த்ரிய நிக்ரஹமில்லாவிட்டால்தான் அவ்விரண்டு வகையிலும் ப்ரவர்த்தி ஏற்படக்கூடும்.

இந்த நாமஸாஹஸ்ர கீர்த்தனத்தினால் ஏற்படும் மஹத்தான புண்யராசியைப்போலவே அதினால் நாசமாகும் பாபத்தின் ராசியும் மஹத்தானது என்பது புத்திமான்களால் தான் ஊஹித்தறியலாம் என்ற எண்ணத்துடன் சிஷ்யரான அகஸ்த்யர் தான் சொல்வதை ஸாவதானமாய்க் கேட்கவேண்டுமென்று மேலே எச்சரிக்கை செய்கிறார்.

16. பஹுனாத்ர கிமுக்தேன
ச்ருணு த்வம் கலசீஸுத |

அதிகம் சொல்லுவானேன், ஹே கலசீஸுத! நான் சொல்வதைக் கேள்.

அத்ரைகநாம்னோ யா சக்தி:
பாதகானாம் நிவர்த்தனே |
தன்னிவர்த்யம் அகம் கர்த்தும்
நாலம் லோகாச்சதுர்தச ||

இதினுடைய ஒரு நாமத்திற்கிருக்கக்கூடிய பாபஹரண சக்திக்குப் போதுமான பாபம் செய்ய பதினாலு லோகங்களாலும் முடியாது.

1. அதாவது, எவ்வளவு பாபத்தை ஒரு நாமத்தைச் சொன்னால் போக்கடிக்கலாமோ, அவ்வளவு பாபத்தை பதினாலு லோகங்களிலிருக்கும் ப்ராணிகள் சேர்ந்து செய்தாலும் செய்ய முடியாது என்று சொல்லப்பட்டது.

2 ஸமஸ்த புவனங்களிலிருக்கும் ஸகல ப்ராணிகளும், இடைவிடாமலும், இறக்கும் வரையிலும், தங்களுடைய கோடி கோடி ஜன்மங்களிலும் செய்யக்கூடிய எல்லாவிதமான பாபங்களுடைய ராசிகூட ஒரு நாமத்தின் பாபஹரண சக்திக்குப் போதாதென்றால், இதிலிருக்கும் ஆயிர நாமங்களையும் சொன்னால் அவற்றிற்கிருக்கும் பாபஹரண சக்தியை மனதால்கூட அறிந்து கொள்வது அஸாத்யமான கார்யமென்று ஏற்படுகிறது.

17. யஸ்த்யக்த்வா நாமஸாஹஸ்ரம்
பாபஹானிமபீப்ஸதி |
ஸ ஹி சீதநிவ்ருத்யர்த்தம்
ஹிமசைலம் நிஷேவதே ||

எவனொருவன் இந்த நாமஸாஹஸ்ரத்தைத் தவிர்த்து (வேறு உபாயத்தினால்) பாபத்தைப் போக்கடிக்க விரும்புகிறானோ, அவன் குளிர் நீங்குவதற்காக பனிக்கட்டி மலையை அடைவதுபோல் இருக்கிறான்.

1. குளிரைப் போக்குவதற்காக சூடான பதார்த்தங்களைத் தேடாமல் பனிக்கட்டிகளாலான மலையை அடைவது மிகவும்

முட்டாள்தனமானதும், பரிஹஸிக்கத்தகுந்ததுமான கார்யமல்லவா.

2. மேலும், ஸ்ரீவித்யோபாஸகனுயிருப்பவன் (இப்படி விசேஷமான பாபஹரண சக்தியையுடைய) நாமஸாஹஸ்ர கீர்த்தனம் செய்யாமல், ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்ட ப்ராயச்சித்தங்களைச்செய்யவிரும்பினுல், அவனுடைய கடமையாகிய நாமஸாஹஸ்ர கீர்த்தனத்தை அனுதாவு செய்வதினுல் உண்டாகும் பாபராசியானது நீக்கமுடியாதவையாக ஏற்பட்டுவிடுமாதலால் இதர ப்ராயச்சித்தங்கள் செய்தாலும் அவனுடைய பாபமானது போய்விடாது. தேளுக்குப்பயந்து ஓடுகிற ஒருவன் தன்னைக் காப்பாற்றிக்கொள்வதற்காக கோபம்கொண்ட ஸர்ப்பத்தின் வாயில் அகப்பட்டுக்கொள்வதுமாதிரி ஆகும்.

ஆனுல் இதர ப்ரயாச்சித்தங்களைச் சொல்லும் சாஸ்த்ரங்கள் அர்த்தமற்றவையா என்ற ஸந்தேஹத்தைப் போக்குவதற்காக இந்த நாமஸாஹஸ்ர கீர்த்தனத்தினுல் ஏற்படக்கூடிய அம்பாளுடைய ப்ரீதிவிசேஷத்தைப்பற்றித் திரும்பவும் சொல்லுகிருர்.

18. பக்தோ ய: கீர்த்தயேன்னித்யம்
இதம் நாமஸஹஸ்ரகம் |
தஸ்மை ஸ்ரீலலிதாதேவி
ப்ரீதா அபீஷ்டம் ப்ரயச்சதி ||

எந்த பக்தனுனவன் இந்த நாமஸஹஸ்ரத்தை தினந்தோறும் கீர்த்தனம் பண்ணுகிருனே அவனிடம் ஸ்ரீலலிதாதேவியானவள் ஸந்தோஷமடைந்து அவன் விரும்பியவற்றையெல்லாம் கொடுக்கிருள்.

1. பக்தன்—உபாஸகன். நித்யம்—உயிருள்ளவரையில். இதம் என்பதினுல் இதுவரையில் விபரமாக வர்ணிக்கப்பட்டிருப்பதினுல் மனதிலிருக்கக் கூடியது என்பதைக் குறிக்கப்பட்டது. ப்ரீதா என்பதினுல் அம்பாள் விசேஷமான ப்ரீதியடைவதைச் சொல்லப்பட்டது. அபீஷ்டம் என்பது மேலே சொல்லப்பட்ட புண்ய ராசியை அடைவதும், பாபராசியைப் போக்குவதுமான இருவகை அபீஷ்டங்களையும் குறிக்கும்.

2. இந்த நாமஸஹஸ்ரத்தைச் சொல்வதினால் அம்பாளுடைய ப்ரீதியானது விசேஷமாக ஏற்படுகிறது என்பதை,

'இதம் விசேஷாத் ஸ்ரீதேவ்யா: ஸ்தோத்ரம் ப்ரீதிவிதாயகம் |'

என்று ஆரம்பித்துச் சொல்லியதில் நாமகீர்த்தனம் செய்வதைப் பற்றிய விசேஷணங்கள் நாலு சொல்லப்பட்டன. அதாவது, உபாஸகனால் அவச்யம் செய்யப்படவேண்டியது, ஸ்தோத்ரத்தை ஸம்பூர்ணமாகச் சொல்வது, உயிருள்ள வரையில் செய்யவேண்டியது, ப்ராதஸ்நானம் முதலான நாலு ப்ரதான கர்மாக்களுடன் சேர்த்துச் செய்வது. இப்படி உபக்ரமத்தில் (ஆரம்பத்தில்) சொல்லப்பட்ட இந்த நாலு விசேணங்களும் இந்த உபஸம்ஹார (முடிவான) ச்லோகத்திலும் சொல்லப்பட்டன. [ஏதாவது ஒரு விஷயத்தைப்பற்றிச் சொல்லும்போது உபக்ரமத்தில் எது சொல்லப்பட்டதோ, அதுவே உபஸம்ஹாரத்திலும் சொல்லப்பட வேண்டுமென்று ஒரு ந்யாயம் உண்டு.]

3. இந்த நாலு விசேஷணங்களில் முதலாவதினால் ப்ராயச்சித்த சாஸ்த்ரங்கள் வ்யர்த்தமா என்ற ஸந்தேஹமானது நீக்கப்பட்டது. அவையெல்லாம் உபாஸகர்களைத் தவிர மற்றவர்களுக்கு மட்டுமே ஏற்பட்டிருப்பதால், அவர்கள் அவற்றைச் செய்யலாமென்றும் உபாஸகனைப்பற்றியவரையில் இந்த நாம கீர்த்தனமே எவ்விதமான ப்ராயச்சித்தத்திற்காகவும், மற்ற எந்தக் காரணத்திற்காகவும், அவச்யம் செய்யப்படவேண்டுமென்றும் ஏற்பட்டது. அதை இங்கு 'பக்த:' என்பதினால் குறிக்கப்பட்டது.

4. 'நாமஸஹஸ்ரகம்' - என்பதினால் ஸம்பூர்ணமான ஸ்தோத்ரத்தையும் கீர்த்தன செய்யவேண்டுமென்று ஏற்படுவதால், ஒரு நாமத்தைமட்டும் சொல்லிவிட்டு க்ருதக்ருத்யனாக நினைத்துக்கொள்வது கூடாது என்பது ஏற்படுகிறது. ஒரு நாமத்தைமட்டும் சொல்வது என்பதான ப்ரயோகம் யாதொன்றும் சொல்லப்படவில்லை. அவ்விதம் ஒரு நாமத்தைச் சொன்னாலும் நாம ஸஹஸ்ரத்தைச் சொல்வதினால் ஏற்படும் புண்யத்தினளவு ஏற்படாது. ஆயினும் 'நாம்னோப்யேகஸ்ய கீர்த்தனாத்', 'நாமைகமபி ய: படேத்' என்பது முதலான வாக்யங்களில் ஒரு நாமத்தைக் கீர்த்தனம் செய்வதைப்பற்றிச் சொல்லப்பட்டு

இருந்தாலும், அவைகளிலிருந்து ஏகநாமகீர்த்தனம் என்பதான ப்ரயோகம் சொல்லப்பட்டதாக ஏற்படாது. உபக்ரமிக்கப்பட்ட விஷயமும், உபஸம்ஹாரம் செய்யப்பட்டவிஷயமும், ஒன்ருகவே இருக்கவேண்டுமென்று ந்யாயமானதாலும் இங்கு நாமஸாஹஸ்ரத்தின் கீர்த்தனமே இங்கு சொல்லப்பட்ட விஷயமாகையாலும், நடுவில் ஓரோர் நாமத்தின் கீர்த்தனத்தைப்பற்றிய மஹிமையைப் பற்றிய வாக்யங்களெல்லாம் நாமஸாஹஸ்ரத்தையும், கீர்த்தனம் செய்வதின் மஹிமையை ஏற்படுத்துமே தவிர, வேறல்ல. நாம் ஞோபி, நாமைகமபி என்ற வார்த்தைகளில் வரும் அபி என்ற பதத்தினுல் ஒரு நாமத்தைச் சொன்னுலேயே அவ்விதமான விசேஷ பலன் ஏற்படுமென்று சொல்லப்பட்டாலும், அது (ஒரு நாமத்தைச் சொன்னுலேயே இவ்விதமான பலன் ஏற்படும் போது) ஆயிரம் நாமங்களைச் சொன்னுல் இன்னம் அதிகமான பலன் ஏற்படும் என்று காட்டுமே தவிர, ஒரு நாமத்தைமட்டும் சொல்வது என்பதான ப்ரயோகத்தை ஏற்படுத்காது. இது தவிர அக்ஷரங்களின் கணக்கை வெவ்வேருக உடைய நாமங்களெல்லாம் ஸமமான பலனையுடையவை என்று சொல்வதும் சரியல்ல.

5 'நித்யம்' என்று ப்ரதிதினமும், உயிருள்ள வரையிலும் செய்யப்படவேண்டியதென்று சொல்லப்பட்டதினுல், நாம ஸாஹஸ்ர கீர்த்தனத்திற்கு இதுவரையில் சொல்லப்பட்ட பலனை, அதை நியமமில்லாமலும், சிற்சில தினங்களில் மட்டும் செய்வதினுல் அடையமுடியுமா என்ற ஸந்தேஹமானது நீக்கப்பட்டது. ஆயினும்,

'ஜன்ம மத்யே ஸக்ருத் சாபி ய ஏவம் படதே ஸுதீ: |'

என்பது முதலான வாக்யங்களில் நாமஸாஹஸ்ரத்தை ஒரு தடவை கீர்த்தனம் செய்வதினுல் உண்டாகக்கூடிய பலனைப் பற்றிச் சொல்லப்பட்டாலும், அவைகளும் (மேலே சொல்லிய ஏக நாமகீர்த்தனத்தைப்பற்றிய வாக்யங்களைப்போலவே) நித்யம் கீர்த்தனம் செய்வதின் மஹிமையைக் குறிப்பவையே தவிர, ஒரு தடவை கீர்த்தனம் செய்வதோடு நின்றுவிடலாமென்பதைச் சொல்பவையல்ல.

6. 'கீர்த்தயேத்' என்பதினுல் மேலே சொல்லியபடி ப்ராதஸ்நாநம், ஸந்த்யாகர்ம, சக்ரராஜார்ச்சனம், ஸ்ரீவித்யா ஜபம்

இவைகளுடன் சேர்த்துச் செய்யவேண்டியது என்றும், அப்படிக் கில்லாவிட்டால் பலன் இல்லையென்றும் சொல்லப்பட்டது. இதே மாதிரி, தர்சபூர்ணமாஸங்களில் ஆக்னேயாதி ஆறு கர்மாக்கள் சொல்லப்பட்டிருப்பதில் அவை ஆறும் செய்தால்தான் பலன் ஏற்படுமென்றும், அவற்றில் ஏதேனும் ஒன்று செய்யாமலிருந்தாலும் பலன் ஏற்படாது என்றும் சொல்லப்படும். ஆயினும் இவ்விரண்டிற்கும் ஒரு முக்யமான வித்யாஸமிருப்பது கவனிக்கத்தக்கது. தர்சபூர்ணமாஸங்களைப்பற்றிய வாக்யத்தில் ஆக்னேயாதி கர்மாக்கள் சேர்த்துச் சொல்லப்பட்டு அவைகளுக்கெல்லாம் சேர்த்தான ஒரு பலன் சொல்லப்படிருப்பதால், அவற்றில் ஒன்று குறைந்தாலும் (செய்யப்படாமலிருந்தாலும்) பலனானது ஏற்படவேமாட்டாது. இவ்விடத்திலோ ஸஹஸ்ரநாமகீர்த்தனம் செய்யாவிட்டாலும், பாக்கி சொல்லப்பட்ட ப்ரதான கர்மாக்கள் செய்தால் அதததற்குச் சொல்லப்பட்ட பலன்கள் ஏற்படும். அப்படிக்கிருக்கையில் அவைகளுடன் சேர்ந்து செய்யாமல் நாமகீர்த்தனத்தைமட்டும் செய்தால், நிஷ்பலமானது என்று எப்படிச் சொல்லலாமென்றால்—இவ்விதமான ப்ரயோகத்தினால் ஏற்படக்கூடிய பலன் ஏற்படாதென்று சொல்லப்பட்டதே தவிர நாமஸ்மரணத்தினால் ஏற்படுவதாக இதர வாக்யங்களில் சொல்லப்பட்ட இதர பலன்கள் கிடைக்காதென்று அர்த்தமல்ல.

இனி, நாமகீர்த்தனமானது உபாஸனையின் பாகமாகவே இருப்பதாலும், அவச்யம் செய்யப்படவேண்டியது என்பதைச் சொல்லுகிறார்.

19. அகிர்த்தயன் இதம் ஸ்தோத்ரம்
கதம் பக்தோ பவிஷ்யதி ||

இந்த ஸ்தோத்ரத்தைச் சொல்லாமல் ஒருவன் எப்படி பக்தனாக ஆகக்கூடும்.

1. அதாவது, ஆகமுடியாது என்று அர்த்தம். உபாஸகர்களுக்கு, உபாஸிக்கப்படும் தேவதையின் ப்ரீதியை உண்டு பண்ணுவதைவிட உயர்ந்ததான புருஷார்த்தம் கிடையாதாகையால், அவ்விதமாக ப்ரீதியை உண்டுபண்ணும் கர்மாவில் அனாதரவாக இருந்தால் அது பக்தியாகுமோ? (அம்பாளுடைய)

பக்தனுக்கு அம்பாளுடைய ப்ரீதி அவச்யமானதாலும், அந்த ப்ரீதியானது இந்த நாமஸாஹஸ்ர கீர்த்தனத்தினுல் விசேஷமாக ஏற்படுவதாலும், இதைக் கீர்த்தனம் செய்யாதவன் பக்தனுக ஏற்படமாட்டான் என்று இங்கு சொல்லப்பட்டது.

2. ஈச்வரனை பஜிக்கிறவர்கள் நாலுவகையானவர்களென்பதாக,

'சதுர்விதா பஜந்தேமாம் ஜநா: ஸுக்ருதிநோऽர்ஜுன |
ஆர்த்தோ ஜிக்ஞாஸு: அர்த்தார்த்தீ ஞானீ ச பரதர்ஷப ||'

என்று கீதையில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்நால்வருக்கும் நாமகீர்த்தனம் எப்படி அவச்யமென்ருல்:—

ஆர்த்தனென்பவன் கஷ்டப்படுகிறவன், பாபங்களால் பீடிக்கப்படுகிறவன், அவனுக்கு பாபநிவாரணத்திற்காக இது அவச்யமானது.

ஜிக்ஞாஸு என்பவன் ஞானம் அடைய விரும்புகிறவன். அவன் யாதொரு காமனையுமில்லாதிருந்தாலும், இந்த நாமகீர்த்தனத்தினுல் அவனுக்கு சித்தசுத்தி ஏற்படுமாகையால் அவச்யமானது.

அர்த்தார்த்தீ என்பவன் பொருள், இன்பம் முதலியவைகளை யடைய விரும்புகிறவன். இவை இந்த நாமகீர்த்தனத்தின் மூலமாக யதேஷ்டம் ஏற்படுமாகையால் அவனுக்கும் அவச்யமானது.

ஞானீ என்பவன் ஆத்ம ஞானம் ஏற்பட்டவன். அவன் இதைக் கீர்த்தனம் செய்தால் லோகத்திற்கே க்ஷேமம் ஏற்படுமாகையால் அவனுக்கும் இது அவச்யமானது.

ஆகவே இந்த நான்கு வகையான பக்தர்களுக்கும் நாமகீர்த்தனமானது அவச்யமென்று ஏற்படுகிறது. இந்த விஷயத்தைப்பற்றி பக்தி மீமாம்ஸா பாஷ்யத்தில் விபரமாகச் சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கவும்.

மேலே சொல்லிய நாலு விசேஷணங்களில் நித்யமும் நாமகீர்த்தனம் செய்வது என்பது முடியாதவனுக்கு அதற்கடுத்த படியாகச் செய்யக்கூடிய விதத்தைப்பற்றி மேலே சொல்லுகிருர்:

20. நித்யம் ஸம்கீர்த்தனு சக்த:
கீர்த்தயேத் புண்யவாஸரே |
ஸம்க்ரான்தௌ விஷுவே சைவ
ஸ்வஜன்மத்ரிதயேऽயனே ||

21. நவம்யாம் வா சதுர்தச்யாம்
ஸிதாயாம் சுக்ரவாஸரே |

நித்யம் கீர்த்தனம் செய்யமுடியாதவன் புண்யதினங்களிலும், ஸங்க்ராந்தியிலும், விஷுவிலும், ஜன்மத்ரிதயமாகிற மூன்று தினங்களிலும், அயனங்களிலும், சுக்லபக்ஷத்திய நவமி, சதுர்தசி திதிகளிலும், சுக்ரவாரத்திலும், இவைகளிலாவது கீர்த்தனம் செய்யவேண்டும்.

1. 'புண்யவாஸரம்' என்பது கபிலாஷஷ்டீ, அர்த்தோதயம் முதலான தினங்களைக்குறிக்கும். அல்லது, அடுத்தாற்போல் சொல்லப்படும் ஸங்க்ராந்தி முதலான நாட்களைப் பொதுவாக இப்படிச் சொன்னதாகவும் சொல்லலாம்.

2. விஷு என்பது மேஷராசி, துலாராசிகளில் ஸூர்யன் ப்ரவேசிக்கும் தினம்.

3. 'ஸ்வ ஜன்ம த்ரிதயம்' என்பது தன்னுடையதும், தன் பார்யையுடையதும், தன் புத்ரனுடையதுமான ஜன்ம நக்ஷத்ரங்களுள்ள தினங்களைக் குறிக்கும். அல்லது, தன் ஜன்ம நக்ஷத்ரம், அதற்கு முந்தியதும் பிந்தியதுமான நக்ஷத்ரங்களுள்ள தினங்களென்றும் சொல்லலாம். அல்லது, தன் ஜன்ம நக்ஷத்ரம், அதிலிருந்து பத்தாவது நக்ஷத்ரமும் பத்தொன்பதாவது நக்ஷத்ரங்களுமுள்ள தினங்கள் என்றும் சொல்லலாம். அல்லது தான் பிறந்ததினம், தீக்ஷையடைந்த தினம், பூர்ணாபிஷேகமடைந்த தினம் இம் மூன்றுமென்றும் சொல்லலாம். இப்படிப் பலவிதமாக அர்த்தம் செய்யமுடியுமாகையால்,

'தந்த்ராணாம் பஹுரூபத்வாத் கர்த்தவ்யம் குருஸம்மதம் |'

என்றபடி குருவினால் உபதேசிக்கப்பட்ட ஸம்ப்ரதாயத்தை யனுஸரித்து எந்த மூன்று தினங்களென்று நிர்ணயிக்கவேண்டும்.

4. அயனமென்பது ஸூர்யனானவன் கடகராசி, மகரராசி இவைகளில் ப்ரவேசிக்கும் தினங்கள்.

5. ஸங்க்ராந்தியைப்பற்றிச் சொன்னதினாலேயே விஷு, அயனம் முதலியவை அடங்கியிருக்கும்போது, அவற்றைத் தனியாகச் சொன்னதினால் 'கோபலீவர்த்தந்யாய'த்தின்படி அவைகள் மிகவும் புண்யமான தினங்களென்றும், அந்தக் காரணத்தினால் அவற்றின்போது நாமகீர்த்தனம் அவச்யம் செய்யப்பட வேண்டுமென்றும், குறிப்பிடப்பட்டது. அந்தந்த ஸங்க்ரமணத்திற்கு முந்தியுள்ள சில நாட்களை அந்தந்த அயனங்களென்று ஜ்யோதி: சாஸ்த்ரத்தில் சொல்லப்படுவதால் அவைகளை இங்கு அயனமென்ற பதத்தினால் குறிப்பிட்டதாகவும் சொல்லலாம்.

6. 'நவம்யம் வா' என்பதினால் அஷ்டமீயும் சேர்த்துச் சொல்லப்பட்டது.

7. 'ஸிதாயாம்'—சுக்லபக்ஷத்திய—என்பது நவமீ, சதுர்தசீ, சுக்ரவாரம் என்ற மூன்று தினங்களுக்கும் விசேஷணமானது, அல்லது சதுர்தசிக்கு மட்டும் விசேஷணமென்பதாகவும் சொல்லலாம்.

8. இரண்டாவது அடியில் வரும் 'ச' என்பதினால் உயிருள்ளவரையில் தினந்தோறும் கீர்த்தனம் செய்யமுடியாதவன் ஸங்க்ராந்தி, விஷு, ஸ்வஜன்மத்ரிதயம், அயனம் இந்த தினங்களிலாவது விடாமல் கீர்த்தனம் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டது. அதுவும் முடியாதவன் ஏதாவது ஒன்றை விட்டுவிடலாம் என்பதைக் காட்டுவதற்காக அடுத்த அடியில் 'வா' என்ற பதம் உபயோகிக்கப்பட்டது.

அப்படி விடப்படும் நாள்கள் எவையாக இருந்தாலும் பௌர்ணமி தினத்தன்று நாமகீர்த்தனம் செய்வதை விடக்கூடாது என்று மேலே சொல்லுகிறார்.

கீர்த்தயேன் நாம ஸாஹஸ்ரம்
பௌர்ணமாஸ்யாம் விசேஷத: ||

விசேஷமாக (விடாமல், கட்டாயம்) பௌர்ணமியில் இந்த நாமஸஹஸ்ரத்தைக் கீர்த்தனம் செய்யவேண்டும்.

1. இவ்விதம் சொல்லப்பட்ட நவமீ முதலான திதிகளில் ஜன்ம நக்ஷத்ரம், ஸங்க்ராந்தி, சுக்ரவாரம் முதலியவைகளும் ஏற்பட்டால் அப்போது தந்த்ர ந்யாயத்தின்படி ஒரு தடவை ஸஹஸ்ரநாம கீர்த்தனம் செய்தால் போதுமானது.

இம்மாதிரி இதுவரையில் இந்த ஸஹஸ்ரநாமமானது ரஹஸ்யதமமாயும், லலிதாம்பாளுக்கு ப்ரீதியைக் கொடுப்பதாயும் இருப்பதைச் சொல்லிவிட்டு, இனியும் அவ்விரண்டு விசேஷணங்களை விவரித்துச் சொல்லுகிறார். அவற்றில் ரஹஸ்யதமமென்ற விசேஷணத்தைப்பற்றி முன் சொல்லுகையில் சரீர ஸௌக்யத்தைக் கொடுக்கும் பலன்களில் ரோக ப்ரசமனம் முதலியவைகளைப்பற்றி முதலில் சொல்லப்பட்டதால், அதேவிதமாக இங்கும் ரோக ப்ரசமனம் முதலான நான்கு விதமான பலன்களைக் கொடுக்கும் காம்ய ப்ரயோகத்தைப்பற்றி முதலில் சொல்லுகிறார்.

22. பௌர்ணமாஸ்யாம் சந்த்ரபிம்பே
  த்யாத்வா ஸ்ரீலலிதாம்பிகாம் |
 பஞ்சோபசாரை: ஸம்பூஜ்ய
  படேன் நாம ஸஹஸ்ரகம் ||

பௌர்ணமாஸ்யையில் சந்த்ரபிம்பத்தில் ஸ்ரீலலிதாம்பிகையை த்யானம்செய்து, பஞ்சோபசாரங்களால் பூஜித்து, இந்த நாமஸஹஸ்ரத்தைக் கீர்த்தனம் செய்யவேண்டும்.

1. பௌர்ணமாஸ்யா என்பது 'தர்சாத்ருஷ்டா' என்ற அநுவாகத்தில் சொல்லப்பட்டபடி சுக்லபக்ஷத்திய கடைசி ராத்ரியைக் குறிக்கும். ஆகையால் இந்த ப்ரயோகம் பௌர்ணமாஸ்யையானது ராத்ரி வ்யாபித்திருக்கும் திதியில் செய்ய வேண்டியது என்று ஏற்படுகிறது.

'கர்மணோ யஸ்ய ய: கால: தத்கால வ்யாபினீ திதி: |'

இந்த ப்ரயோகம் செய்யவேண்டிய காலத்தின் நிர்ணயத்தைப்பற்றி அதிகம் தெரிய விரும்புவோர்கள் பாஷ்யத்தின் மூலத்தைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்.

2. சந்த்ரபிம்பம் என்று இங்கு சொல்லப்பட்டது - சந்த்ரனுடைய பூர்ணமான மண்டலம். அப்போது அதில் வளர்வு, குறைவு, இவையில்லாமல் எப்போதுமிருப்பதும் ஸ்ரீத்ரிபுரஸுந்தரீ ரூபமானதுமான ஸாதா என்ற கலையானது இருப்பதாகச் சொல்லப்படும். பாக்கியான பதினைந்து கலைகளும் வளர்வு, குறைவுகளுடையவை. அவை காமேச்வரீ முதலாகவும் சித்ரா

கடைசியாகவுமுள்ள திதி நித்யா தேவதைகள் பதினைந்து பேரு டைய ஸ்வரூபமாயிருப்பவை,

'தர்சாத்யா: பூர்ணிமாந்தாச்ச கலா: பஞ்சதசைவ து |
ஷோடசீ து கலா ஜ்ஞேயா ஸச்சிதானந்தரூபிணீ ||'

ஆகவே, அந்தக் கலைகளெல்லாம் பரிபூர்ணமாயிருக்கும்போது சந்த்ரமண்டலத்தில் ஷோடச நித்யைகளும், அவர்களுடைய கிரண ரூபமான தேவதைகளான அணிமாதிகளும், ஒருங்கே சேர்ந்திருப்பதால் அதுவே ப்ரத்யக்ஷமான ஸ்ரீசக்ரமாக இருக் கிறது. இதனால்தான் அம்பாளுக்கு 'சந்த்ரமண்டல மத்யகா' என்பது முதலான பெயர்கள் உண்டு.

3. சாலக்ராமம், பாணம் முதலியவைகளில் முறையே விஷ்ணுவும், சிவனும் அத்யந்தமாகவும், இடைவிடாமலும் ஸான் னித்யத்தோடிருப்பதால் அவற்றில் அவர்களை ஆவாஹனம் செய்யவேண்டியது அவச்யமில்லை. அதேமாதிரி, மேலே சொல் லப்பட்டபடி த்ரிபுரஸுந்தரியானவள் சந்த்ரமண்டலத்தில் எக் காலமும் ஸான்னித்யத்தோடிருப்பதால், ஆவாஹனமும் அதற் கான முத்ரைகளும் செய்யத் தேவையில்லை.

4. 'த்யாத்வா ஸ்ரீலலிதாம்பிகாம்' — ஸ்ரீலலிதாம்பிகையை ஏற்கனவே சொல்லப்பட்ட அவயவ விசேஷணங்களோடும், ஆவ ரணதேவதைகளோடும், லோகாதீதமாயும் இருப்பதாக த்யானம் செய்து என்று அர்த்தம். [லலிதாம்பிகா என்ற பதமே இங்கு சொல்லப்பட்டதால், பாத்மம் முதலானவைகளில் அந்தப்பதத் திற்குச் சொல்லப்பட்ட அர்த்தங்களை அனுஸரித்து த்யானம் செய்யவேண்டும்.]

5, பஞ்சோபசாரம் என்பது கந்த, புஷ்ப, தூப, தீப, நைவேத்யங்களான ஐந்து உபசாரங்கள்.

6. 'ஸம்பூஜ்ய' என்பதினால்,

'தத் யோऽஹம் ஸோऽஸௌ, யோऽஸௌ ஸோऽஹம்,
தத் த்வமேவ த்வமேவ தத் |'

என்பது முதலான ச்ருதிவாக்யங்களில் சொல்லப்பட்டபடி, தானும் தான் உபாஸிக்கும் தேவதையும் ஐக்யமாக இருப்பதாக பாவனைசெய்து பூஜிப்பது சொல்லப்பட்டது. இவ்விதமான ஐக்ய பாவனை செய்து பூஜிப்பதே உபசாரங்களைவிட ப்ரதான

மானது. அந்த பூஜைக்கு இந்த உபசாரங்களெல்லாம் அங்கங்களாகையால், சொல்லப்படும் பலனெல்லாம் அங்கியாகிய ஐக்ய பாவனையோடு கூடிய பூஜைக்குத்தான்,

'அச்வமேத ஸஹஸ்ராணி வாஜபேயசதானி ச |
லலிதா பூஜனஸ்யைதே லக்ஷாம்சேனாபி நோ ஸமா: ||
ஸ தாதா ஸ முனிர்யஷ்டா ஸ தபஸ்வீ ஸ தீர்த்தக: |
ய: ஸதா பூஜயேத் தேவீம் கந்தபுஷ்பானுலேபனை: ||'

இதனால்தான் 'கந்த புஷ்பானு லேபனை:', 'பஞ்சோபசாரை:' என்று (அவைகளால், அவைகளைக்கொண்டு என்று) சொல்லப் பட்டது.

7. உபசாரங்களுக்கே பலனிருப்பதாக சில வாக்யங்கள் காணப்படுகின்றன.

கந்தானுலேபனம் க்ருத்வா ஜ்யோதிஷ்டோமபலம் லபேத் |'
'சந்தன கருகர்ப்பூரை: ஸூக்ஷ்ம பிஷ்டை: ஸகுங்குமை: |
ஆலிப்ய லலிதாம் லோகே கல்பகோடீர் வஸேன் நர: ||'

இவையெல்லாம் அங்கியான பூஜையின் ப்ரசம்ஸையையே சொல்லும் அர்த்தவாதங்களாகவும், அல்லது ஓரோர் விசேஷ பலனைக்கொடுப்பதாக ஓரோர் உபசாரமான அங்கத்தைப்பற்றிச் சொல்லி அதை அங்கமாக உடைய பூஜையின் மஹிமையைச் சொல்லும் வாக்யங்களுமே தவிர வேறல்ல. அவைகளுக்கு விசேஷ பலன் சொல்லப்பட்டால் பூஜையின்போது செய்யப்ப படும் அங்கங்களாயிருக்கும்போதுதான் அவற்றிற்கு அவ்வித பலன் உண்டு. தனியாகச்செய்தால் ஏற்படாது.

8. அல்லது,

'அந்தர்யாக பஹிர்யாகௌ க்ருஹஸ்த்த: ஸர்வதாசரேத் |'

என்று பூஜையானது அந்தர்யாகம், பஹிர்யாகம் என்ற இருவித மானதென்று சொல்லப்படுவதில் ஐக்ய பாவனையானது அந்தர் யாகமென்று சொல்லலாம். பஹிர்யாகம் (பாஹ்யபூஜை) என் பது கந்த புஷ்பாதிகளை நிவேதனம் செய்வது என்பதான மானஸ ஸங்கல்பம். அவ்வித நிவேதனத்திற்கு அவை காரணங் களாயிருப்பதால் புஷ்பாதிகள் அங்கங்களாயிருக்கின்றன.

'த்யாத்வா' என்பதற்கு பிறகு கடைசியில் 'படேத்' என்று வருவதில் அவ்விதமாக செய்யப்பட்ட த்யானத்துடனேயே படனமும் செய்யவேண்டுமென்று தாத்பர்யம்.

23. ஸர்வே ரோகா: ப்ரணச்யந்தி
தீர்க்கமாயுச்ச விந்ததி |
அயமாயுஷ்கரோ நாம
ப்ரயோக: கல்பனேதித: ||

(அதினுல்) ஸகல ரோகங்களும் நசித்துப்போகின்றன. தீர்கமான ஆயுளும் பெறுவான். 'ஆயுஷ்கரம்' என்று பேருடைய இந்த ப்ரயோகமானது கல்பஸூத்ரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

1. 'ப்ரணச்யந்தி' என்பதினுல் ரோகங்கள் ஏற்பட்டிருந்தால் நசித்துப்போவதும் தவிர, ரோகங்களே ஏற்படாமலிருக்கச் செய்வதும் குறிப்பிடப்பட்டது.

2. 'தீர்காயுஷ்யம்' என்பது அபம்ருத்யு, காலம்ருத்யு இவ்விரண்டும் ஏற்படாமல் தீர்கமான ஆயுள் என்று அர்த்தம்.

3. 'தீர்கமாயு:' என்பதற்குப் பிறகு வரும் ச என்பதினுல் ஸகலவிதமான ஸம்பத்துகளும் சேர்த்துச் சொல்லப்பட்டன.

4. ஆகவே, ரோகங்கள் நீங்கப்பெற்று, ஸகல ஸம்பத்துக்களுடன் கூடிய சிரஞ்ஜீவித்வம் (சிரஞ்ஜீவியாயிருப்பது) என்பது இந்த ப்ரயோகத்தில் உத்தேசித்துச்செய்யப்படுவதும், அதனுல் கிடைப்பதுமான ப்ரயோஜனமாகிறது. மேலும் ரோகிகளுக்கு இதைச் செய்வதில் அதிகாரமிருப்பதுபோல், ரோகமில்லாதவர்களும் தங்களுக்கு ரோகங்களே ஏற்படாமலிருப்பதற்காக இந்த ப்ரயோகத்தைச் செய்வதற்கு அதிகாரமுண்டென்றும் ஏற்படுகிறது.

5. ஸங்கல்பம் முதலியவைகளில் இந்த ப்ரயோகத்தை எப்படிச் சொல்வதென்பதற்காக இதன் பெயர் 'ஆயுஷ்கரம் என்று சொல்லப்பட்டது. 'ஆயுஷ்கரோ நாம' என்பதினுல் அது அந்தப் பெயரால் குறிக்கப்படுவதுடன், அந்தப் பெயரோடு ப்ரஸித்தமாக இருப்பதும் சொல்லப்பட்டது.

6 'கல்பனேதித:'—கல்பத்தில் (கல்பஸூத்ரத்தில், அதாவது பரசுராம கல்பஸூத்ரத்தில்) கோடிகாட்டப்பட்டது என்று அர்த்தம். வெவ்வேறு சாகைகளில் சொல்லப்பட்ட க்ரியைகளின் அங்கங்களையெல்லாம் ஒன்று சேர்த்து ப்ரகல்பித்து

யோகவிதிகளாக கல்பித்துச் சொல்வதினால் கல்ப ஸூத்ரங்கள் என்று பெயர். ஆகையால் அவற்றில் (நித்யார்ச்சனம் முதலான சில ப்ரயோகங்கள் மட்டும் சொல்லப்பட்டு) இந்த ப்ரயோகம் ஸ்பஷ்டமாகச் சொல்லப்படாவிட்டாலும் அவற்றில் கோடி காட்டப்பட்டிருப்பதாக தாத்பர்யம்.

7. அல்லது, கல்பஸூத்ரங்களுக்கு ஸமமான தந்த்ரங்களில் வெகு ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறது என்றும் சொல்லலாம்.

8. அல்லது, பாவ்யம் (கிடைக்கவேண்டியது), கரணம் (அதற்கு ஸாதனமாயிருப்பது) இவைகளின் கல்பனையினால்—அதாவது, கார்ய, காரண பாவங்களைப்பற்றிய கல்பனையினால்—ஏற்படுத்தப்பட்டது என்றும் சொல்லலாம்.

9. அல்லது, கல்பத்திலும் (அதாவது, ப்ரளயகாலத்திலும்)கூடச் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டது என்றும் அர்த்தம் சொல்லலாம். ப்ரளயத்திற்கு முந்திய காலத்திலிருந்த ஸாதகர்கள் வரப்போகும் ப்ரளயத்தில் ஏற்படக்கூடிய மரணத்தைத் தடுத்து தீர்கமான ஆயுளைப்பெறவேண்டுமென்ற எண்ணத்துடன் இந்த ப்ரயோகத்தைச் செய்தார்களென்றும், அதினால் ரக்ஷிக்கப்பட்டார்களென்றும் தாத்பர்யம்.

10. இந்த ப்ரயோகத்தை இன்னவிதமாகச் செய்வது என்பது பாஷ்யத்தின் மூலத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இது தன்னை உத்தேசித்தும் செய்யலாம், பிறருக்காகவும் செய்யலாம். தேவையுள்ள ஆவ்ருத்திகள் செய்யலாம். இதிலும் மற்ற ப்ரயோகங்கள் செய்வதிலும் கவனிக்கவேண்டிய முக்யமான விஷயம் என்னவென்றால்—நித்யகர்மாக்களைச் செய்கிறவர்கள்தான் நைமித்திகமான கர்மாக்களைச் செய்யலாம். இரண்டையும் செய்கிறவர்கள்தான் இம்மாதிரியான காம்ய கர்மாக்களைச் செய்ய அதிகாரமுடையவர்கள். இது இதர தந்த்ரங்களிலிருந்து ஏற்பட்ட ஸித்தாந்தமாகையால் மறந்துவிடக் கூடாது.

இவ்விதம் ஆதியில் சொல்லப்பட்ட,

'ஸர்வரோக ப்ரசமனம் ஸர்வஸம்பத் ப்ரவர்த்தனம் |
ஸர்வாப ம்ருத்யு சமனம் காலம்ருத்யு நிவாரணம் ||'

என்ற நாலு விசேஷணங்களைப்பற்றிய ப்ரயோகத்தைச் சொல்லி விட்டு, அடுத்தாற்போல் சொல்லப்பட்ட ஸர்வ ஜ்வரார்த்திசமனம் என்பதைப்பற்றிய ப்ரயோகத்தை மேலே சொல்லுகிறார்.

24. ஜ்வரார்த்தம் சிரஸி ஸ்ப்ருஷ்ட்வா
படேன் நாம ஸஹஸ்ரகம் |
தத்க்ஷணாத் ப்ரசமம்யாதி
சிரஸ்தோதோ ஜ்வரோऽபி ச ||

ஜ்வரத்தினால் பீடிக்கப்பட்டவனுடைய தலையில் கையை வைத்துக்கொண்டு இந்த ஸஹஸ்ரநாமத்தைச் சொன்னால், அந்த க்ஷணத்திலேயே ஜ்வரமும் (அதனாலுண்டான) தலைவலியும் போய்விடும்.

1. சிரஸ்தோதம் (தலைவலி) என்பதினால் ஜ்வரத்தினால் ஏற்பட்ட ஸகல விதமான துன்பங்களும் குறிக்கப்பட்டன.

2. இதின் ப்ரயோகமும் பாஷ்யத்தின் மூலத்தில் சொல்லப்பட்டிருப்பதால் தேவையுள்ளவர்கள் அங்கு பார்த்துக் கொள்ளவும்.

3. பூர்வபாகத்தைச் சொல்லிய பிறகு, நாமங்களடங்கிய பாகத்தைச் சொல்லுகையில் தன் வலது கையை ஜ்வரத்தோடிருப்பவனுடைய சிரஸின்மேல் வைத்துக்கொண்டு சொல்லி விட்டு, பிறகு கையை எடுத்துவிட்டு பலச்ருதிபாகத்தைச் சொல்லவேண்டும். தனக்கே ஜ்வரமாயிருந்தால் தன் கையையே தன் சிரஸின்மேல் வைத்துக்கொள்ளவேணும். ஸம்ப்ரதாயத்தின்படிக்கும், மீமாம்ஸா சாஸ்த்ரத்தின் 'ஆவ்ருத்திரஸக்ருதுபதேசாத்' என்ற அதிகரணத்தில் சொல்லப்பட்டபடிக்கும், பலன் ஏற்படும் வரையில் ஆவ்ருத்தி செய்யவேண்டும். அப்போது, சிரஸில் கையை வைத்துக்கொண்டு நாமங்களடங்கிய பாகத்தை வேண்டிய அளவு ஆவ்ருத்திகள் செய்யவேண்டும். இதேமாதிரி இனி சொல்லப்படும் ப்ரயோகங்களிலும் ஆவ்ருத்திகள் செய்ய வேண்டியிருந்தால் செய்யவேண்டும்.

இதற்குமேல், பொதுவாக ஜ்வரம் முதலான வ்யாதிகள் தீருவதற்காகச் செய்யவேண்டிய ப்ரயோகத்தைப்பற்றிச் சொல்லுகிறார்.

25. ஸர்வ வ்யாதி நிவ்ருத்யர்த்தம்
ஸ்ப்ருஷ்ட்வா பஸ்ம ஜபேதிதம் |
தத் பஸ்ம தாரணுதேவ
நச்யந்தி வ்யாதய: க்ஷணுத் ||

ஸகல வ்யாதிகளேயும் போக்கடிப்பதற்காக விபூதியைத் தொட்டுக்கொண்டு இதை (இந்த நாமஸஹஸ்ரத்தை) கீர்த்தனம் பண்ணவேண்டும். அந்த பஸ்மத்தை தரிப்பதிஞலேயே வ்யாதிகளெல்லாம் ஒரு க்ஷணத்தில் போய்விடும்.

1. 'ஸர்வ வ்யாதி' என்ருல் எல்லா வ்யாதிகள், அல்லது, (தான் உள்பட) எல்லோருடைய வ்யாதிகள் என்று அர்த்தம் சொல்லலாம்.

2. 'ஸ்ப்ருஷ்ட்வா'—முந்திய ப்ரயோகத்திற்குச் சொன்ன படி நாமங்களடங்கிய பாகத்தைச் சொல்லும்போதெல்லாம் வலது கையால் விபூதியைத் தொட்டுக்கொண்டிருக்கவேண்டும்.

3. தாரணம் என்ருல் உத்தூளனம், தெளித்துக்கொள்வது, பூசிக்கொள்வது.

இனி, ஏற்கனவே அடுத்தபடியாகச் சொல்லப்பட்ட தீர்க்காயுஷ்ய ப்ரதாயகம் என்பதான ப்ரயோகத்தைப்பற்றிச் சொல்லுகையில துஷ்ட க்ரஹங்களுடைய உபத்ரவத்தை நீக்குவதற்கான ப்ரயோகத்தை முதலில் சொல்லிவிட்டுப் பிறகு விஷங்களேப் போக்குவதற்கான ப்ரயோகத்தைச் சொல்லுகிருர்.

26. ஜலம் வபம்மந்த்ர்ய கும்பஸ்த்தம்
நாமஸாஹஸ்ரதோ முனே |
அபிஷிஞ்சேத் க்ரஹ க்ரஸ்தான்
க்ரஹா நச்யந்தி தத் க்ஷணுத் ||

குடத்திலிருக்கும் ஜலத்தை இந்த நாமஸாஹஸ்ரத்திஞல் மந்த்ரிதமாகச் செய்து, ஹே முனே! க்ரஹங்களின் வசப்பட்டவர்கள்மீது (அதை) அபிஷேகம் செய்யவேண்டும். அந்த க்ஷணத்திலேயே க்ரஹங்கள் நாசமடைந்துவிடும்.

1. முந்திய ப்ரயோகத்தில் சொல்லிய மாதிரி, கும்பத்தின் முகத்தில் (வாயின்மேல்) கையைவைத்துக்கொண்டு நாமங்களடங்கிய பாகத்தைச் சொல்லவேண்டும்.

2. க்ரஹங்கள் என்பது பால க்ரஹங்கள் முதலியவை, பிசாசங்கள், துஷ்ட (கெடுதலான) ஸ்தானங்களிலிருக்கும் நவக்ரஹங்கள் என்று அர்த்தம். அவைகளால் க்ரஸ்தமாயிருப்பவர்களென்றால் அவைகளால் ஏற்படும் பீடையினால் ப்ராணனை விடக் கூடத் தயாராக இருப்பவர்கள்.

27. ஸுதா ஸாகர மத்யஸ்த்தாம்
த்யாத்வா ஸ்ரீலலிதாம்பிகாம் |
ய: படேன் நாமஸாஹஸ்ரம்
விஷம் தஸ்ய விநச்யதி ||

ஸ்ரீலலிதாம்பிகையை ஸுதா ஸமுத்ரத்தின் நடுவிலிருப்பவளாக த்யானித்து எவனொருவன் இந்த நாமஸாஹஸ்ரத்தை கீர்த்தனம் செய்கிறானோ, அவனுடைய (அவனைப் பீடிக்கும்) விஷமானது நாசமடைகிறது.

1. ஸ்ரீபுரம் எங்கெங்கு இருக்கிறதோ அங்கங்கு ஒரு ஸுதாஸாகரம் (அம்ருத ஸமுத்ரம்) இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஸகுண ப்ரம்ஹோபாஸனை செய்தவர்கள் அடைவதாகச் சொல்லப்படும் அபராஜிதமென்ற நகரத்தில் அரமென்றும் புண்யமென்றும் இரண்டு ஸமுத்ரங்களிருப்பதாக சொல்லப்பட்டிருக்கிறது. ப்ரம்ஹரந்த்ரத்திலும் ஒன்று இருக்கிறது. அவற்றின் நடுவில் அம்பாளுடைய ஸ்ரீபுரமிருப்பதால் அவரவர்கள் அதிகாரியாயிருப்பதற்குத் தக்கவாறு இருக்கும் ஸுதாஸாகரத்தின் நடுவில் அம்பாளிருப்பதாக த்யானம்செய்து மனதால் அர்ச்சித்து (அந்த த்யானத்துடன்) இந்த ப்ரயோகத்தைச் செய்ய வேண்டும்.

2. விஷம் என்பது ஸ்தாவர வஸ்துக்களால் ஏற்படுவதும், ஜங்கம ப்ராணிகளால் ஏற்படுவதுமான இருவகையான விஷங்களையும் குறிக்கும்.

3. இந்த ப்ரயோகமானது ஸாதாரணமாக பலனில்லாதிருக்கமாட்டாது.

இதற்குமேல், முன்பு அடுத்தபடியாகச் சொல்லப்பட்ட 'புத்ரப்ரதம் அபுத்ராணும்' என்பதான ப்ரயோகத்தைப்பற்றிச் சொல்லுகிருர்.

28. வந்த்யாணும் புத்ரலாபாய
நாமஸாஹஸ்ர மந்த்ரிதம் |
நவனீதம் ப்ரதத்யாத் து
புத்ரலாபோ பவேத் த்ருவம் ||

மலடாயிருப்பவர்களுக்கு (பிள்ளை இல்லாதவர்களுக்கு) பிள்ளை கிடைப்பதற்காக இந்த நாமஸாஹஸ்ரத்தால் மந்த்ரிதமான வெண்ணெயைக் கொடுத்தால் கட்டாயம் புத்ரலாபம் ஏற்படும்.

1. வந்த்யா என்ற பதமானது குழந்தையே பெருதவள், குழந்தைபெற்று இழந்தவள். பெண் குழந்தையையே பெறுகிற வள், ஒரே பிள்ளையைப் பெற்றவள் (அப்ரஜா, ம்ருதப்ரஜா, ஸ்த்ரீ ப்ரஜா, காகவந்த்யா) என்ற நான்குவிதமான மலடிகளையும் குறிக்கும்.

2. 'புத்ர லாபாய' என்ருல் பொதுவாகக் குழந்தை கிடைக்கவேண்டியதற்காக என்று அர்த்தமே தவிர, பிள்ளைக் குழந்தை கிடைப்பதற்காக என்று மட்டும் அர்த்தமில்லை. ஆகவே பெண் குழந்தையை விரும்புகிறவர்களுக்கும் இந்த ப்ரயோகத்தில் அதிகாரமுண்டு.

3. மந்த்ரிதமான வெண்ணெயை வந்த்யையிடம் கொடுப்பதென்ருல் அப்படிக் கொடுத்ததை அவள் சாப்பிடுவதைச் சொல்லப்பட்டது.

4. வந்த்யையாயிருப்பவள் உபாஸனையுள்ளவளாளுல் அவளே இதில் சொல்லியபடி வெண்ணெயை மந்த்ரித்துச் சாப்பிடலாம்

5. 'புத்ரலாபோ பவேத் த்ருவம்' என்பதிஞல் பிள்ளை, பெண் என்ற இருவிதமான ஸந்தான ஸம்பத்தும் நிச்சயமாக ஏற்படும் என்று சொல்லப்பட்டது.

இனிவரும் முப்பத்தைந்து ச்லோகங்களில், மேலே அடுத்த படியாகச் சொல்லப்பட்ட 'புருஷார்த்த ப்ரதாயகம்' என்ற ப்ரயோகத்தைச் சொல்லுகிருர். அதில், முதல் மூன்ருக (த்ரிவர்க

மென்று) சொல்லப்படும் தர்ம, அர்த்த, காமங்களில் காமமென்பது கடைசியாக இருந்தாலும், தற்போது (இதின் முந்திய ச்லோகத்தில்) புத்ர ப்ரதமான ப்ரயோகத்தைப் பற்றிச் சொல்லப்பட்டிருப்பதாலும் அது ஸ்த்ரீயின் மூலமாகத்தான் ஏற்படக்கூடுமாகையாலும், அடுத்தாற்போல் ஸ்த்ரீ வச்யத்தைப்பற்றிய ப்ரயோகத்தைச் சொல்லுகிறார்.

29. தேவ்யா: பாசேன ஸம்பத்தாம்
ஆக்ருஷ்டாம் அங்குசேன ச |
த்யாத்வாபீஷ்டாம் ஸ்த்ரியம்
ராத்ரௌ படேன் நாமஸஹஸ்ரகம் ||

இரவில் (ஸாதகனானவன்) தனக்கு இஷ்டப்பட்ட ஸ்த்ரீயை தேவியினுடைய பாசத்தினால் நன்கு கட்டப்பட்டவளாகவும், (தேவியினுடைய) அங்குசத்தினால் இழுக்கப்பட்டவளாகவும், த்யானித்து இந்த நாமஸஹஸ்ரத்தைக் கீர்த்தனம் செய்யவேண்டும்.

1. அதாவது, தான் விரும்பும் ஸ்த்ரீயை அம்பாள் தன்னுடைய பாசத்தினால் கட்டி அங்குசத்தினால் இழுப்பதாக (அம்பாளை) த்யானம் செய்துகொண்டு நாமஸாஹஸ்ரத்தைச் சொல்ல வேண்டுமென்று தாத்பர்யம். மந்த்ரத்தை ஜபிக்கும்போது அதினுடைய தேவதையை த்யானிப்பதுதான் அவச்யமானதாகையால் இங்கு சொல்லப்பட்ட 'த்யாத்வா' என்ற பதமானது அம்பாளைப்பற்றியதே தவிர அபீஷ்டமான ஸ்த்ரீயைப்பற்றியதல்ல.

2. 'ராத்ரௌ'—ராத்ரி முழுவதும், 'படேத்'—ஆவ்ருத்தி செய்யவேண்டும். அப்படி இரவு முழுவதும் நாமஸாஹஸ்ரத்தைத் திரும்பத் திரும்ப கீர்த்தனம் செய்துகொண்டிருந்தால் ஏற்படும் பலம் என்னவென்றால்,

30. ஆயாதி ஸ்வஸமீபம் ஸா
யத்யப்யந்த:புரம் கதா |

(அப்போது) அந்த ஸ்த்ரீயானவள் அந்த:புரத்திலிருந்தபோதிலும் தன்னுடைய (உபாஸகனுடைய) ஸமீபம் வருவாள்.

1. 'அந்த: புரம்' என்பது வேறு புருஷர்கள் போகக்கூடாத (ராஜக்ருஹத்திலிருக்கும்) இடம் அப்பேர்ப்பட்ட இடத்தில் அந்த ஸ்த்ரீ இருந்தாலும் இந்த ப்ரயோகத்தினுல் ஆகர்ஷணம் பண்ணப் பட்டு (இழுக்கப்பட்டு) உபாஸகனிடம் வந்து சேருவாள் என்று சொல்லப்பட்டது.

இனிமேல், த்ரிவர்கத்தில் காமத்திற்கு அடுத்தாற்போல் முந்தியதான அர்த்தமென்பதைக் கொடுக்கும் ப்ரயோகங்களைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்து அவற்றில் முக்யமானதான ராஜா கர்ஷணமான (ராஜாவை வச்யப்படுத்தும்) ப்ரயோகத்தை அடுத் தாற்போல் சொல்லுகிருர்.

ராஜா கர்ஷண காமச்சேத்
ராஜாவஸததிங்முக: ||

31. த்ரிராத்ரம் ய: படேத் ஏதத்
ஸ்ரீதேவீ த்யான தத்பர: |

ராஜாவை ஆகர்ஷணம் (தன்னிடம் இழுத்து வச்யப்படுத்து வது) செய்ய விரும்பினுல் அந்த ராஜா இருக்குமிடத்தின் திக்கை நோக்கி ஸ்ரீதேவியின் த்யானத்தில் ஈடுபட்டு, மூன்று ராத்ரி இதை எவனுவது கீர்த்தனம் செய்வானேயாகில்,

ஸ ராஜா பாரவச்யேன
துரங்கம் வா மதங்கஜம் ||

32, ஆருஹ்ய யாதி நிகடம்
தாஸவத் ப்ரணிபத்ய ச |
தஸ்மை ராஜ்யம் ச கோசம் ச
தத்யாதேவ ந ஸம்சய: ||

அந்த ராஜா இவனுக்கு வசப்பட்டு குதிரையையோ, யானை யையோ ஏறிக்கொண்டு அருகில்வந்து தாஸன்போல் வணங்கி தன்னுடைய ராஜ்யத்தையும், பொக்கிஷத்தையும் கொடுத்தே தீரு வான். அதில் ஸந்தேஹமேயில்லை.

1. 'ராஜாகர்ஷண காமச்சேத்' என்பதினுல் ராஜாவை தன் வசப்படுத்த வேண்டுமென்ற விருப்பமுடையவன்தான் இந்த ப்ரயோகத்தைச் செய்யலாமென்று சொல்லப்பட்டது. இதன்

பிறகு மேலே சொல்லப்போகும் ஆறு ப்ரயோகங்களோவென்றால் அந்தந்த பலனை உத்தேசித்து செய்தால் ஸித்தியைக்கொடுப்பதும் தவிர, உத்தேசமில்லாமல் செய்தாலும் ஸித்தியைக் கொடுப்பவைகளாக இருக்கின்றன.

2. 'ராஜா வஸத திங்முக:'—தானிருக்குமிடத்திலிருந்து ராஜா இருக்குமிடம் எந்த திக்கிலிருக்கிறதோ அந்தப் பக்கமாக திரும்பிக்கொண்டு என்று அர்த்தம்.

3. 'த்ரிராத்ரம்'—மூன்று நாள் இடைவிடாமல் அஹோராத்ரமாக (பகல் இரவு எல்லாம்) என்று அர்த்தம். இதிலிருந்து, நித்யகர்மாவை சுருக்கிக்கொண்டு, லௌகிக கர்மாவையும் அவச்யமான அளவுமட்டும் செய்துகொண்டு, இடைவிடாமல் இந்த நாம கீர்த்தனத்தை இருபத்திநாலு மணி நேரமும் செய்ய வேண்டுமென்பது சொல்லப்பட்டது. அதினால்தான், இத்தனை ஆவ்ருத்தி நாமகீர்த்தனம் செய்யவேண்டுமென்பது சொல்லப்படவில்லை.

4. 'ஸ்ரீதேவீ த்யான தத்பர:'—தன் வசப்படுத்த விரும்பிய ராஜாவை அம்பாள் தன்னுடைய பாசத்தினால் கட்டி அங்குசத்தினால் இழுப்பதாக (அம்பாளை) த்யானம் செய்வதில் ஈடுபட்டு நாமகீர்த்தனத்தைச் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டது.

5. இதற்கும் இதற்கு முந்திச் சொல்லப்பட்ட ஸ்த்ரீவச்யகர ப்ரயோகத்திற்கும் இரண்டு வித்யாஸங்களுண்டு. அதில் நாலு ஜாமங்களடங்கிய ஒரு ராத்ரிமட்டும் த்யானகாலமாகச் சொல்லப்பட்டது. மேலும் கிழக்கு அல்லது வடக்கு முகமாகத் திரும்பி உட்கார்ந்துகொண்டு கீர்த்தனம் செய்வது என்பது இஷ்டத்தைப் பொருத்ததாக இருக்கிறது. ராஜாகர்ஷண ப்ரயோகத்திலோவென்றால், மூன்று நாள் அஹோராத்ரம் செய்ய வேண்டுமென்பதும், ராஜா இருக்குமிடத்தை நோக்கி உட்கார்ந்து கொண்டு நாமகீர்த்தனம் செய்யவேண்டுமென்பதும் விசேஷமான நியமங்கள். ஆயினும், வாஸ்தவத்தில், நாமகீர்த்தனம் எவ்வளவு காலம் செய்யவேண்டுமென்பதைப்பற்றித்தான் இந்த இரண்டு ப்ரயோகங்களுக்கும் வித்யாஸம். ஆகர்ஷணம் பண்ணவேண்டியவர்கள் இருக்குமிடத்தை நோக்கியேதான் ஆகர்ஷண ப்ரயோகத்தைச் செய்யவேண்டுமென்பது இதர தந்த்ரங்களிலிருந்து ஏற்படு

கிறது. ஆகையினல்தான், ஸ்த்ரீ வச்யத்தை உத்தேசித்துச் செய்யப்படும் ப்ரயோகத்தின்போதும், வசப்படுத்தவேண்டிய ஸ்த்ரீயானவள் இருக்கும் திக்கை நோக்கிக்கொண்டே நாம கீர்த்தனத்தைச் செய்யவேண்டுமென்பதும் அவற்றில் சொல்லப் பட்டிருக்கிறது. வாமகேச்வர தந்த்ரத்தில்,

'ததாசாபிமுகோ பூத்வா த்ரிபுரீக்ருத விக்ரஹ: |
பத்வா து க்ஷோபிணீ முத்ராம் வித்யாம் அஷ்டசதம் ஜபேத் ||'

என்று ஆரம்பித்து,

'ப்ரமந்தீம் பாவயேன் நாரீம் யோஜனனும் சதைரபி |'

என்று சொல்லப்பட்டிருக்கிறது. நித்யா தந்த்ரத்திலும் குருகுல்லா படலத்தில்,

'வித்யாம் த்ரயோ தசார்ணும் து தத்திக் வக்த்ராஸ் த்ரிபிர் தினை: |
ஸ்த்ரிய மாகர்ஷயேத்...................... ||'

என்றும், ஞானர்ணவத்தில்,

'ததாசாபிமுகோ பூத்வா ஸ்வயம் தேவீ ஸ்வரூபக: |'

என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதேமாதிரி தக்ஷிணமூர்த்தி ஸம்ஹிதை முதலியவற்றிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

6. 'ஸ ராஜா'—உபாஸகன் எந்த ராஜாவை வசப்படுத்த உத்தேசித்திருக்கிருனே அந்த ராஜா என்று அர்த்தம்.

7. 'துரங்கம் வா மதங்கஜம் ஆருஹ்ய'—என்பதினல் அந்த ராஜாவானவன் (மேலே சொல்லிய அபீஷ்டமான ஸ்த்ரீ வருவது மாதிரி) ரஹஸ்யமாக வராமல், வெளிப்படையாக குதிரை அல்லது யானையின் மேலேறி வந்து உபாஸகனுடைய அடிபணிந்து அவன் கட்டளைக்கு வசப்பட்டவனுக ஆகிருன் என்று சொல்லப்பட்டது.

இவ்விதமாக ஆகர்ஷணத்தைப்பற்றிய ப்ரயோகத்தைச் சொல்லிவிட்டு, அதைப்போன்ற வசீகரணம் முதலான ஷட்கர் மாக்களைப்பற்றிய ப்ரயோகங்களைப்பற்றி இனி சொல்லுகிருர். இந்த ஷட்கர்மாக்கள்,

'சாந்திர் வச்யம் ஸ்தம்பனம் ச வித்வேஷோச்சாட மாரணம் |'

என்பதாக சாபரசிந்தாமணி முதலியவற்றில் சொல்லப்பட்டிருக் கிறது. அதாவது, ஸமாதானம் செய்தல், வசப்படுத்துதல், தடைசெய்தல், பகை ஏற்படுத்துதல், உச்சாடனம் (ஏவுதல்,

துரத்துதல்) செய்தல், மரணம் உண்டாக்குதல், இவ்வாரைத் தவிர வேறு கர்மாக்கள் சொல்லப்பட்டிருந்தாலும் அவை யெல்லாம் இவற்றில் அடங்குவதால் இந்த ஷட்கர்மாக்கள் தான் ப்ரதானமானவை.

'ரக்ஷா சாந்திர் ஜபோ லாபோ நிக்ரஹோ நிதனம் ததா |
ஷட்கர்மாணி ததம்சத்வாத் அன்யேஷாம் அப்ருதக் ஸ்த்திதி: | '
(தந்த்ர ராஜம்)

இந்த விஷயத்தைப்பற்றி அதிகம் தெரிந்துகொள்ளவேண்டு மானல் ஸௌபாக்யரத்னகரம் இருபத்திமூன்ருவது தரங்கத்தில் பார்க்கவும்.

33. ரஹஸ்யநாம ஸாஹஸ்ரம் ய:
கீர்த்தயதி நித்யச: |
தன்முகாலோக மாத்ரேண
முஹ்யேத் லோகத்ரயம் முனே ||

இந்த ரஹஸ்யநாம ஸாஹஸ்ரத்தை எவனெருவன் தினந் தோறும் கீர்த்தனம் செய்கிருனே அவனுடைய முகத்தைப் பார்த்த வுடனேயே மூன்று லோகங்களும் மயங்கிவிடுகின்றன.

1. 'நித்யச:' தினந்தோறும், நித்யகர்மாவுக்கு விரோதம் (இடைஞ்சல்) இல்லாமல் என்று தாத்பர்யம். தவிர, உயிருள்ள வரையில், இடைவிடாமல் ப்ரதிதினமும் என்றும் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

2. 'முகாலோக மாத்ரேண'— என்பதினல், மோஹ னத்தை உத்தேசித்து உபாஸகன் நாமகீர்த்தனம் செய்யவேண்டு மென்பது தேவையில்லையென்றும், அவன் நித்யமும் நாமகீர்த் தனம் செய்துகொண்டுவந்தால் மூன்று லோகத்தார்களும் அவன் முகத்தைப் பார்த்தமாத்ரத்திலேயே அவனுக்கு வசப்படு வார்கள் என்று சொல்லப்பட்டது. ஆகவே இந்த ப்ரயோகத் தில் நாமகீர்த்தனத்தைச் செய்யுமுன் சொல்லப்படும் ஸங்கல்பத் தில் 'லோகத்ரய மோஹனர்த்தம்' என்று சொல்வது தேவை யல்ல என்பதும் ஏற்படுகிறது.

இதற்குமேல், ஸ்வல்ப ப்ரயாஸையினல் (அதிக ச்ரமமில்லாமல்) செய்யக்கூடிய ப்ரயோகங்களைப்பற்றிச் சொல்ல ஆரம்பித்து முதலில் மாரண ப்ரயோகத்தைச் சொல்லுகிறுர்.

34. யஸ் த்விதம் நாமஸாஹஸ்ரம்
ஸக்ருத் படதி பக்திமான் |
தஸ்ய யே சத்ரவஸ்தேஷாம்
நிஹந்தா சரபேச்வர: ||

எவனெருவன் இந்த நாமஸாஹஸ்ரத்தை பக்தியோடு ஒரு தடவை கீர்த்தனம் செய்கிறுனே, அவனுக்கு யார் சத்ருக்களோ அவர்களை சரபேச்வரர் நாசம் செய்கிறுர்.

1. இதில் 'ஸக்ருத் படதி' என்பதுடன் 'நித்யச:' என்பதையும் சேர்த்துக்கொண்டு, தினந்தோறும் ஒருதடவை என்று அர்த்தம் சொல்லவேண்டும்.

2. சரபேச்வரர் என்பவர் சிவனுடைய அவதாரங்களில் ஒருவர். பூர்வம் விஷ்ணுவானவர் நரஸிம்ஹ ரூபமெடுத்து ஹிரண்யகசிபுவை ஸம்ஹாரம் செய்தபிறகும் கோபம் தணியாமல் லோகங்களையே அழித்துவிடுகிறவர்போலிருந்தபோது பரமசிவனனவர் சரபரூபமெடுத்து நரஸிம்ஹத்தை அடக்கியதாக லிங்க புராணம், காளிகா புராணம் முதலியவைகளில் சொல்லப் பட்டிருக்கிறது. [ந்ருஸிம்ஹமானது மனிதன், ஸிம்ஹம் இரண்டும் சேர்ந்த ரூபம். சரபமானது மனிதன், ஸிம்ஹம், பக்ஷி மூன்றும் சேர்ந்த ரூபம்.]

3 இதை அனுஸரித்து, நரஸிம்ஹ ப்ரயோகங்களைத் திருப்புவதற்கும், அடக்குவதற்கும் சரபஸாளுவங்களென்ற ப்ரயோகங்கள் தந்த்ரங்களில் மிகவும் ப்ரஸித்தமாய்ச் சொல்லப் பட்டிருக்கின்றன. மஹா உக்ரமாகச் சொல்லப்படும் ந்ருஸிம்ஹத்தையும் ஸம்ஹாரம் செய்ததிலிருந்து சரபமூர்த்தியே மாரக ப்ரயோகங்களுக்கு மிகவும் உத்தமமானவர் என்று ஏற்படுவதால் அவரையே இங்கு சொல்லப்பட்டது. இதிலிருந்து இன்னம் ஏற்படுவது என்னவென்றுல்—

4. இப்பேர்ப்பட்ட பலவானுன சர்பமூர்த்தியின் ஒத்தாசையை ஸம்பாதிப்பதற்குத் தனியான ப்ரயோகங்கள் சொல்லப்பட்டிருந்தபோதிலும், ஸ்ரீ வித்யோபாஸகன் அவரைத் தெரிந்துகொள்ளாமலும், அவரைக்குறித்து உபாஸனைகள் செய்யாமலும் இருந்தபோதிலும், சரபமூர்த்தியானவர் தானுகவே வந்து அவனுடைய சத்ருக்களை ஸம்ஹாரம்செய்து விடுவதாகச் சொல்லப்பட்டது. ஆகவே சரபமூர்த்தியை உபாஸிக்கிறவர்களைவிட லலிதாம்பாளுடைய உபாஸகர்களுக்கு எல்லையற்ற மாஹாத்ம்யம் உண்டென்பது இதிலிருந்து ஏற்பட்டது. அப்படிக்கில்லாவிட்டால் சரபமூர்த்தியின் பிரஸ்தாபமேயில்லாமல்,

'தஸ்ய யே சத்ரவ: ஸத்யோ நச்யந்தி ஸ்வத ஏவ தே |'

என்பதாகச் சொல்லியிருக்கலாம். இதேவிதமாக இனி சொல்லப்படும் ப்ரத்யங்கிரா முதலானவர்களைப்பற்றியும் சொல்லப்பட்டதாக அறியவேண்டும். அவர்களெல்லோரும் லலிதோபாஸகனுக்குத் தாமாகவே ஒத்தாசைசெய்யக் காத்துக்கொண்டிருப்பதாகவும், அவர்களைக் குறித்து அவன் தனியாக உபாஸிக்க வேண்டியது தேவையில்லையென்றும் தாத்பர்யம்.

35. யோ வாபிசாரம் குருதே
நாமஸாஹஸ்ர பாடகே |
நிவர்த்ய தத் க்ரியாம் ஹன்யாத்
தம் வை ப்ரத்யங்கிரா ஸ்வயம் ||

எவனொருவன் இந்த நாம ஸாஹஸ்ரத்தைக் கீர்த்தனம் செய்கிறவனைக் குறித்து அபிசார கர்மாவைச் செய்கிறானோ, அந்த கர்மாவை ப்ரத்யங்கிராதேவியானவள் தானுகவே திருப்பிவிட்டு அவனையும் கொன்றுவிடுகிறாள்.

1. அபிசார கர்மா என்பது தெரியாத விதமாக எதிரியினுடைய மரணத்தை விளைவிப்பது—ச்யேனயாகம் முதலியவை.

2. அவ்விதமான கர்மாவை ஒருவன் ஸ்ரீவித்யோபாஸகனைக் குறித்துச் செய்தால் அப்போது (அந்த உபாஸகனுடைய வேண்டுதலில்லாமலேயே) ப்ரத்யங்கிரையானவள் தானுகவே வந்து அந்த கர்மாவை தடுத்துத் திருப்பி அந்த கர்மாவைச்

செய்கிறவனையும் ஸம்ஹாரம் செய்துவிடுவதாகச் சொல்லப் பட்டது.

3. ப்ரத்யங்கிரா தேவியானவள் அதர்வண வேதத்தில் சொல்லப்பட்ட பத்ரகாளீ தேவதை. ப்ரத்யங்கிரையைக் குறித்து அதர்வண வேதத்திய மந்த்ரகாண்டத்தில் சௌனக சாகையில் முப்பத்திரண்டு ருக்குகளும், பிப்பலாத சாகையில் நாற்பத்தியெட்டு ருக்குகளும் இருக்கின்றன. அவளைக்குறித்துச் செய்யப்படும் ப்ரயோகங்கள் நாரத தந்த்ரத்தில் சொல்லப் பட்டிருக்கின்றன.

4. சரபமூர்த்திக்கு ப்ரத்யங்கிரா, சூலினீ இருவரும் பத்னிகள் என்று சொல்லப்படும்.

36. யே க்ரூர த்ருஷ்ட்யா வீக்ஷயந்தே
நாமஸாஹஸ்ர பாடகம் |
தான் அந்தான் குருதே க்ஷிப்ரம்
ஸ்வயம் மார்த்தண்ட பைரவ: ||

எவர்கள் இந்த நாமஸாஹஸ்ர கீர்த்தனம் செய்கிறவனை கோரமான பார்வையுடன் பார்க்கிறார்களோ, அவர்களை மார்த்தண்ட பைரவரானவர் தானாகவே வெகு சீக்ரத்தில் குருடர்களாகச் செய்துவிடுகிறார்.

1. 'க்ரூர த்ருஷ்ட்யா'— கோபத்தினால் சிவந்த கண்களுடன்.

2. மார்த்தண்ட பைரவரைப்பற்றி ஏற்கனவே வந்த 'மார்த்தண்ட பைரவராத்யா' என்ற 785-வது நாமத்தில் சொல்லியிருப்பதைப் பார்க்கவும்.

37. தனம் யோ ஹரதே சோரை:
நாமஸாஹஸ்ர ஜாபின: |
யத்ர குத்ர ஸ்த்திதம் வாபி
க்ஷேத்ரபாலோ நிஹந்தி தம் ||

இந்த நாமஸாஹஸ்ர கீர்த்தனம் செய்கிறவனுடைய தனத்தை எவனொருவன் திருடர்கள் மூலமாக அபஹரிக்கிறானோ அவன் எங்கேயிருந்தாலும் அவனை க்ஷேத்ரபாலர் கொல்லுகிறார்.

1. திருடர்கள் மூலமாக அபஹரிக்கிறவன் என்று திருடர்களுடைய அரசனைச் சொன்னது. அவனைக்கூட க்ஷேத்ரபாலர் ஸம்ஹாரம் செய்கிறார் என்று சொன்னதினால் ஸாமான்யமான திருடனுடைய கதியைப்பற்றிச் சொல்லத்தேவையில்லை.

2. க்ஷேத்ரபாலரைப்பற்றி ஏற்கனவே வந்த 'க்ஷேத்ரபால ஸமர்ச்சிதா' என்ற 345-வது நாமத்தில் சொல்லியிருப்பதைப் பார்க்கவும்.

38. வித்யாஸு குருதே வாதம் யோ
வித்வான் நாமஜாபிநா |
தஸ்ய வாக் ஸ்தம்பனம் ஸத்ய:
கரோதி நகுலீச்வரீ ||

எந்த வித்வானானவன் இந்த நாமஸாஹஸ்ர கீர்த்தனம் செய்கிறவனோடு வித்யைகளில் வாதம் செய்கிறானோ, அவனுடைய வாக்கை நகுலீச்வரியானவள் உடனே ஸ்தம்பனம் செய்துவிடுகிறாள்.

1. 'வித்யாஸு'—சதுர்தச வித்யைகளில். அவையாவன—ருக், யஜுஸ், ஸாம, அதர்வண வேதங்கள், சிக்ஷா, வ்யாகரணம், கல்பம், சந்தஸ், ஜ்யோதிஷம், நிருக்தம் என்ற வேதாங்கங்கள் மீமாம்ஸா, ந்யாயம், புராணம், தர்மசாஸ்த்ரம், ஆகப்பதினாலு.

2. 'வாதம்' என்பது ஜல்பம் (உளருகிறது, தாறுமாறுமாகப் பேசுகிறது), விதண்டாவாதம் (தப்புக் கக்ஷியை பிடிவாதமாக ஸாதிப்பது) இவைகளைக் குறிக்கும்.

3. வாக்குக்கு அதிபதியான தேவதைகளில் ஒருவளான நகுலீச்வரியானவள் வாக்கை ஸ்தம்பனம் (தடை, கட்டிவிடுகிறது) பண்ணும் சக்தியுடையவள். (இதைப்பற்றி பூர்வ பாகத்தில் சொல்லியிருப்பதைப் பார்க்கவும்) இவளுடைய மந்த்ரமானது ருக்வேத ஆரண்யகத்தில் சொல்லப்பட்டு, பரசுராம கல்பஸூத்ரத்திலும் எடுக்கப்பட்டிருக்கிறது. ப்ரயோகங்கள் ப்ரபஞ்சஸாரம், முதலியவைகளில் சொல்லப்பட்டிருக்கின்றன.

39. யோ ராஜா குருதே வைரம்
நாமஸாஹஸ்ரஜாபின: |
சதுரங்கபலம் தஸ்ய தண்டினீ
ஸம்ஹரேத் ஸ்வயம் ||

எந்த ராஜாவானவன் இந்த நாமஸாஹஸ்ர கீர்த்தனம் பண்ணுகிறவனிடம் பகை கொள்ளுகிருனே, அவனுடைய சதுரங்க ஸைன்யத்தையும் தண்டினியானவள் தாளுகவே ஸம்ஹாரம் செய்கிருள்.

1. 'சதுரங்கபலம்'—கஜ, ரத, துரக, பதாதிகளோடுகூடிய ஸைன்யம்.

2. தண்டினீ (தண்டநாதா) தேவியைப்பற்றி பூர்வபாகத்திலும், பண்டாஸுர யுத்தத்தைப்பற்றிய நாமங்களிலும் சொல்லியிருப்பதைப் பார்க்கவும். வாராஹீதந்த்ரம் முதலியவைகளிலும் ப்ரஸித்தமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

3 'ஸம்ஹரேத்'—ஸேனையிலிருப்பவர்களில் சிலருக்குள் பரஸ்பரம் கலகம் உண்டுபண்ணியும், சிலர்களை பிரிந்துபோகச் செய்தும், சிலர்களை நாசம் செய்தும், இப்படி நாளுவிதமாக அழித்து விடுவதாகச் சொல்லப்பட்டது. ஆகவே இதில் வித்வேஷணம், உச்சாடனம், மாரணம் இம்மூன்றும் அடங்கியிருக்கின்றன.

இதற்குமேல், அர்த்தப்ரதமான இரண்டு ப்ரயோகங்களைச் சொல்லுகிருர்.

40. ய: படேன் நாம ஸாஹஸ்ரம்
ஷண்மாஸம் பக்திஸம்யுத: |
லக்ஷ்மீ: சாஞ்சல்ய ரஹிதா
ஸதா திஷ்டதி தத்க்ருஹே ||

எவஞெருவன் இந்த நாமஸாஹஸ்ரத்தை ஆறுமாதம் பக்தியுடன் கீர்த்தனம் செய்கிருனே, அவனுடைய வீட்டில் லக்ஷ்மியானவள் சாஞ்சல்யமில்லாமல் (இடைவிடாமல்) எப்போதும் இருப்பாள்.

1. அதாவது, எவனொருவன் இந்த நாமஸாஹஸ்ரத்தை தினந்தோறும் ஒரு தடவையாக ஆறும்ாதகாலம் பக்தியுடன் கீர்த்தனம் செய்கிறானோ, அவனுடைய க்ருஹத்தில் லக்ஷ்மியானவள் ஸதா (அவன் உயிருள்ளவரையில்) வாஸம் செய்கிறாள் என்று சொல்லப்பட்டது.

2. லக்ஷ்மியானவள் சஞ்சல ஸ்வபாவமுடையவள். ஒரே இடத்தில் வெகுகாலம் இருக்கமாட்டாள். 'ஸ்வபாவோ துரதிக்ரம:' என்றபடி ஸ்வபாவத்தை விட்டுவிடுவது மிகவும் கஷ்டமான கார்யமாக இருந்தபோதிலும், இந்த நாமகீர்த்தனம் செய்கிறவனுடைய விஷயத்தில் லக்ஷ்மியானவள் தன்னுடைய (சஞ்சல) ஸ்வபாவத்தைக்கூட விட்டுவிட்டு அவனுடைய க்ருஹத்தில் எப்போதும் ப்ரஸன்னமாக இருப்பாளென்று சொல்லப்பட்டது.

41. மாஸமேகம் ப்ரதிதினம்
த்ரிவாரம் ய: படேன் நர: ।
பாரதீ தஸ்ய ஜிஹ்வாக்ரே
ரங்கே ந்ருத்யதி நித்யச: ॥

தினம் மூன்று முறையாக ஒருமாத காலம் இந்த நாமஸாஹஸ்ரத்தை எவனொருவன் கீர்த்தனம் செய்கிறானோ, அவனுடைய நாக்கின் நுனியாகிற ரங்க ஸ்த்தலத்தில் ஸரஸ்வதீ தேவியானவள் எப்போதும் நர்த்தனம் செய்துகொண்டிருக்கிறாள்.

1. முந்திய ச்லோகத்தில் சொல்லிய ஆறுமாத காலத்திற்கு மாறாக ஒருமாதமென்றும், தினம் ஒருமுறையென்று சொன்னதற்கு மாறாக தினம் மூன்று தடவையென்றும் இங்கு சொல்லப்பட்டது. அப்படி மூன்று தடவை செய்வதை ஒரேடியாக சேர்ந்தாற்போல் செய்யலாம். அல்லது, ஸந்த்யாவந்தனம் மாதிரி மூன்று ஸந்த்யா காலங்களில் காலம் ஒன்றுக்கு ஒரு ஆவ்ருத்தி வீதம் செய்தாலும் செய்யலாம்.

2. ரங்கம் என்பது ந்ருத்யபூமி, நாடகமேடை. நர்த்தனம் செய்வது என்றால் ரங்கபூமி வேண்டுமாதலால் இங்கு உபாஸகனுடைய நாக்கின் நுனியையே ரங்கபூமியாகச் சொல்லப்பட்டது.

அங்கு எப்போதும் ஸரஸ்வதீ தேவியானவள் தாண்டவமாடிக் கொண்டிருக்கிறுள் என்றுல் அவனுக்கு ஸகல வித்யைகளும் ஒரு ச்ரமமுமில்லாமல் தெரிந்து ஒருபோதும் மறக்காமல் அவனுடைய வாக்கிலேயே குடிகொண்டிருக்குமென்று தாத்பர்யம். ஸாதாரணமாக வித்யாப்யாஸத்தில் செய்யவேண்டிய கோஷண, குணனிகா, பூர்வாவலோகன, (ஏற்கனவே கற்றதை ஞாபகப் படுத்திக்கொள்ளுதல்,) பாடன, என்பதானவைகள் அவனுக்குத் தேவையில்லையென்று தாத்பர்யம். ஆயினும் வித்யை கிடைப்பதற்கு குருவானவர் அத்யாவச்யமான காரணமாகையால் அவரிடம் அத்யயனம் செய்யவேண்டியது அவச்யமானது.

இவ்விதம் அனேகவிதமான ப்ரயோகங்களைச் சொல்லிவிட்டுத் திரும்பவும் ஸிம்ஹாவலோகன ந்யாயமாக காமப்ரதமான ப்ரயோகத்தைச் சொல்லுகிறுர்.

42. யஸ்த்வேகவாரம் படதி
பக்ஷமேகம் அதந்த்ரித: |
முஹ்யந்தி காமவசகா:
ம்ருகாக்ஷ்யஸ் தஸ்ய வீக்ஷணாத் ||

எவனொருவன் சோம்பலில்லாமல் இந்த நாமஸாஹஸ்ரத்தை தினம் ஒருமுறையாக ஒரு பக்ஷம் கீர்த்தனம் செய்கிறுனே அவனுடைய பார்வையாலேயே ஸகல ஸ்த்ரீகளும் காமத்தின் வசப்பட்டு மோஹம் அடைகிறுர்கள்.

1. முந்திய ப்ரயோகத்தில் சொன்னதற்கு மாருக மாஸம் என்பதற்கு பதிலாக பக்ஷமென்றும், த்ரிவாரம் என்பதற்கு பதிலாக ஏகவாரம் என்றும் இங்கு சொல்லப்பட்டது.

2. 'அதந்த்ரித.'— நித்ரை, சோம்பல், களைப்பு இவையில்லாமல் என்று அர்த்தம். இவையில்லாதிருப்பது ஸாதாரணமாக எல்லா ப்ரயோகங்களைச் செய்யும்போது அவச்யமானுலும், இந்த ப்ரயோகத்தைச் செய்யும்போது அவை கூடவே கூடாது என்று எச்சரிக்கை செய்வதற்காகக் குறிப்பிடப்பட்டுச் சொல்லப்பட்டது. இதிலிருந்து இந்த ப்ரயோகமானது (நடு) ராத்ரியில் செய்யப்படவேண்டுமென்பது ஏற்படுகிறது.

3. இங்கு 'செய்த மாத்ரத்தால்' அல்லது 'பார்த்த மாத்ரத்தால்' என்பதான பதங்களில்லாததினால், ப்ரயோகத்தின் ஆரம்பத்தில் சொல்லப்படும் ஸங்கல்பத்தில் 'ஸ்த்ரீணாம் வசீகரணார்த்தம்' என்பதாகக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

இவ்விதம் அர்த்த காமங்களைக்கொடுக்கும் ப்ரயோகங்களைச் சொல்லிவிட்டு, இனிமேல் தர்ம ப்ரதான ப்ரயோகங்களை அனேக விதமான ப்ரகாரங்களால் சொல்ல ஆரம்பித்து, முதல் முதலாக நாமகீர்த்தனத்தைச் செய்வதினால் கிடைக்கக்கூடிய தர்மத்தை முதலில் சொல்லுகிறார்.

43. ய: படேன் நாமஸாஹஸ்ரம்
ஜன்ம மத்யே ஸக்ருன் நர: |
தத் த்ருஷ்டி கோசரா: ஸர்வே
முச்யந்தே ஸர்வ கில்பிஷை: ||

எவனொருவன் தன்னுடைய ஜன்மாவில் இந்த நாம ஸாஹஸ்ரத்தை ஒரு தடவை கீர்த்தனம் செய்கிறானோ, அவனுடைய கண்ணுக்குத் தென்படும் ஸகல ப்ராணிகளும் தங்களுடைய ஸமஸ்தமான பாபங்களிலிருந்தும் விடுவிக்கப்படுகிறார்கள்.

1. 'ஜன்ம மத்யே'—இதுவரையில் சொல்லப்பட்ட யாவத் ஜீவம், ஷண்மாஸம், ஏகமாஸம், ஏக பக்ஷம் இவைகளுக்கெல்லாம் மாறாக, தன் ஆயுளில் ஒருதடவை என்று சொல்லப்பட்டது. இதிலிருந்தே ஒரு தடவை என்பது ஏற்பட்டாலும் முந்திச் சொல்லப்பட்ட த்ரிவாரம் என்பதான சங்கை ஏற்படக்கூடாது என்பதற்காக 'ஸக்ருத்' என்று குறிப்பிடப்பட்டது.

2. 'தத் த்ருஷ்டி கோசரா: ஸர்வே'—அவனுடைய கண் பார்வைக்கு புலப்படும் ஸகல ப்ராணிகளும் என்று அர்த்தம்.

இனி தானதர்மத்தைப்பற்றிச் சொல்லுகையில், தானத்தினுடைய விசேஷமானது தானம் பெறுகிறவனுடைய யோக்யதையைப் பொறுத்திருப்பதால், லலிதோபாஸகனுக்கு தானம் பெறும்படி இருக்கும் யோக்யதையானது இந்த நாமஸாஹஸ்ர கீர்த்தனத்தினால் ஏற்படுவதைப்பற்றியும் அப்பேர்ப்பட்டவனுக்குத்தான் உபாஸகன் தானம் செய்யவேண்டுமென்பதைப்பற்றியும் மேலே சொல்லுகிறார்.

44. யோ வேத்தி நாமஸாஹஸ்ரம்
தஸ்மை தேயம் த்விஜன்மனே |
அன்னம் வஸ்த்ரம் தனம் தான்யம்
நான்யேப்யஸ்து கதாசன ||

எவனொருவன் இந்த நாமஸாஹஸ்ரத்தை அறிந்திருக்கிறானோ, அந்த ப்ராம்ஹணனுக்குத்தான் அன்னம், வஸ்த்ரம், தனம், தான்யம் இவைகளைக் கொடுக்கவேண்டும். மற்றவர்களுக்கு ஒரு பொழுதும் கொடுக்கவே கூடாது.

1. இதிலும் பின்வரும் மூன்று ச்லோகங்களிலும் தானத்தைப்பற்றிச் சொல்லுகையில் லலிதோபாஸகனாக இருப்பவன் யாருக்குத்தானம் கொடுக்கலாம் என்பதைப்பற்றிச் சொல்லப்படுகிறது. 'ஸ்ரீதேவீ ப்ரீதிமிச்சதா' — அம்பாளுடைய ப்ரீதியை அடைய விரும்புகிறவனால் — என்று பின்னால் சொல்லப்படுவதால் அவன் தானம் கொடுப்பதைப்பற்றித்தான் இந்த நியமங்கள் சொல்லப்படுகின்றன. அவ்விதமான உபாஸகனாயில்லாதவன் இங்கு சொல்லப்பட்டவர்களைத் தவிர பிறரிடமும் தானம் கொடுப்பதைப்பற்றி இதில் யாதொரு தடையும் சொல்லப்படவில்லை.

2. 'த்விஜன்மனே' — ப்ராம்ஹணனுக்கு என்று அர்த்தம். சாம்பவீசக்ரம் ஏற்பட்டபோது அதில் சேர்ந்திருப்பவர்கள் எல்லோரும் த்விஜர்கள்தான் என்றும், ஒருவருக்கொருவர் ஜாதி வித்யாஸம் கிடையாதென்றும் சொல்லும்,

'ப்ரவ்ருத்தே சாம்பவீ சக்ரே ஸர்வே வர்ணா த்விஜாதய: |'

என்பதான குலார்ணவ தந்த்ர வசனமிருந்தபோதிலும், அது ச்ருதி, ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்டதான விஷயங்களைப்பற்றியது அல்ல யாகஸமயத்தில் அஸ்ப்ருச்யதை (தீண்டாமை) கிடையாது என்று சொல்வதுபோல், சாம்பவீ சக்ரமேற்படும் ஸமயத்தைப்பற்றி அந்த வசனம் சொல்லப்பட்டது.

3. அன்னம் முதலியவற்றால் தானம் கொடுக்கப்படும் வஸ்துக்களெல்லாம் குறிக்கப்பட்டன.

4. 'அன்யேப்ய:' — இந்த நாமஸாஹஸ்ரத்தில் ஆதரவு இல்லாதவர்கள் போலி உபாஸகர்களான ப்ராம்ஹணர்கள்.

5. 'கதாசன' — ச்ருதி, ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்ட யாகம், ச்ரார்த்தம் முதலானவைகள் செய்யும்போது கூட என்று தாத்பர்யம். அந்தக் காலங்களில் கொடுக்கப்படும் தானங்கள் கூட உபாஸ்திபரர்களுக்குத்தான் கொடுக்கப்படவேண்டுமென்பதாகச் சொல்லப்பட்டது.

45. ஸ்ரீமந்த்ரராஜம் யோ வேத்தி
ஸ்ரீசக்ரம் ய: ஸமர்ச்சதி |
ய: கீர்த்தயதி நாமானி தம்
ஸத்பாத்ரம் விதுர்புதா: ||

எவன் ஸ்ரீவித்யையை அறிந்திருக்கிறானோ, எவன் ஸ்ரீசக்ரத்தை நன்றாக அர்ச்சிக்கிறானோ, எவன் இந்த நாமஸாஹஸ்ரத்தைக் கீர்த்தனம் செய்கிறானோ, அவனைத்தான் நல்ல பாத்ரமானவனென்று அறிஞர்கள் தெரிந்துகொள்ளுகிறார்கள் (சொல்லுவார்கள்.)

1. 'மந்த்ர ராஜம்' என்பது ஸ்ரீவித்யை.

2. இங்கு மூன்று விசேஷணங்கள்— சக்ரராஜார்ச்சனம் தெரிவது, ஸ்ரீவித்யை தெரிவது, நாமஸாஹஸ்ர கீர்த்தனம் தெரிவது—சொல்லப்பட்டன. இவை மூன்றும் ஒருங்கே ஒருவனிடம் சேர்ந்திருந்தால் அவன் ஸத்பாத்ரன், மூன்றில் ஒன்றில்லாவிட்டால் தாரதம்யம், மூன்றுமே இல்லாவிட்டால் பாத்ரமென்பது இல்லவேயில்லை, என்பது ஏற்படுகிறது. ஆயினும் இதைச்சற்று யோசித்தால் அடியில்கண்டபடி ஏற்படும்.

3. பாத்ரமாயிருப்பதின் விசேஷணங்களான இம்மூன்றில் ஒவ்வொன்று உடையவராக இருப்பவர் மூன்று பேர்கள். இரண்டிரண்டாக உடையவர்கள் (1, 2; 1, 3; 2, 3) மூன்று பேர்கள். மூன்றையும் உடையவன் ஒருவன். மூன்றுமே இல்லாதவன் ஒருவன். ஆக பாத்ரமாயிருப்பவர்கள் ஏழுவிதம். பாத்ரமேயில்லாதவன் ஒன்று, ஆக மொத்தம் எட்டுப்பேர். இப்படியிருப்பதாகத் தோன்றினும் மந்த்ரராஜம் தெரிந்தவர்களுக்குள் சக்ரராஜார்ச்சனம் தெரிந்தவன் என்பவன் அடங்கிவிடுவதால் (அதாவது மந்த்ரராஜம் தெரிந்தவன்தான் சக்ரராஜமும் தெரிந்தவனாக இருக்கக்கூடுமாதலால்) சக்ரராஜம்

மட்டும் தெரிந்தவன் ஒருவன் என்பது கிடையாது. அதே காரணத்தால் சக்ரராஜம், நாமகீர்த்தனம் இவ்விரண்டுமட்டும் தெரிந்தவன் ஒருவன் என்பதும் கிடையாது. ஆகவே மேலே சொல்லிய ப்ராம்ஹணர்கள் எட்டுப்பேர்களில் வாஸ்தவமாக ஆறுவிதமானவர்கள் தானிருக்கக்கூடும். அவர்களில், மூன்று குணங்களையும் உடையவன் உத்தமன். சக்ரம்—மந்த்ரம், நாமம்—மந்த்ரம் இந்த இரண்டிரண்டு உடையவர்கள் இருவர். இவ்விருவர்களுக்குள் சக்ரம்—மந்த்ரம் தெரிந்தவனைவிட நாமம்—மந்த்ரம் தெரிந்தவன்தான் ச்ரேஷ்டமானவன். மந்த்ரம் மட்டும், அல்லது நாமம் மட்டும் தெரிந்த இருவர்கள் அடுத்தபடியானவர்கள். அவ்விருவர்களுக்குள் நாமம் மட்டும் தெரிந்தவனை விட மந்த்ரம் மட்டும் தெரிந்தவன் மேலானவன். ஏனென்றால் மந்த்ரம் தெரியாமல் நாமகீர்த்தனம் செய்யக்கூடுமானாலும் மந்த்ரம் தெரியாதவன் நாமகீர்த்தனம் செய்வதற்கு அதிகாரம் கிடையாது. அப்படி அனதிகாரியாக இருப்பவன் நாமகீர்த்தனம் செய்தால் அது சூத்ரன் வேதாத்யயனம் செய்வதுமாதிரி ப்ரயோஜனமற்றதாக இருக்கும். மூன்று குணங்களுள் ஒன்றுமேயில்லாதவன் பாத்ரமேயில்லை.

46. தஸ்மை தேயம் ப்ரயத்னேன
ஸ்ரீதேவீ ப்ரீதிமிச்சதா |

(ஆகையால்) ஸ்ரீதேவியின் ப்ரியத்தையடைய விரும்புகிறவன் பாடுபட்டாவது அம்மாதிரியான ஸத்பாத்ரனுக்கு தானம் செய்யவேண்டும்.

1. அதாவது, அவனுக்குத்தான் தானம் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டது.

2. அப்பேர்ப்பட்ட உத்தமனானவன் கிடைக்காவிட்டால், மத்யமனாயிருப்பவனுக்கும் தானம் செய்யலாமென்பது ந்யாயத்தினால் ஊஹித்துச் சொல்லக்கூடியதாயிருப்பதுடன் அதுவும் விதியாகத்தானிருக்கிறது. விதிகள் நாலுவிதமென்று புலஸ்த்ய ஸ்ம்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

'அத்ருஷ்டார்த்தோ விதி: ப்ரோக்தோ த்ருஷ்டார்த்தச்ச த்விதீயக: |
உபயார்த்தஸ் த்ருதீயஸ்து ந்யாய மூலச்சதுர்த்தக: ||'

[ஸ்வர்கம் முதலிய அத்ருஷ்டமான (நேரில் தெரியாத) பலன்களைச் சொல்வது ஒன்று. த்ருஷ்டமான (தனம் முதலிய) பலன்களைச் சொல்வது இரண்டாவது. மேலே சொல்லிய இரண்டுவிதமான பலன்களையும் சொல்வது மூன்றாவது. ந்யாயத்தின் மூலமாக ஏற்படுவது நாலாவது.] உத்தமனில்லாவிட்டால் மத்யமனுக்குக் கொடுக்கலாம் என்பது ந்யாயமூலகமானதாகையால் மேலே சொல்லியது நான்காவதான விதியாக இருக்கிறது.

இந்த அர்த்தத்தைச் சொல்வதுடன் ஏற்கனவே 44-வது ச்லோகத்தில் வந்த 'நான்யேப்யஸ்து கதாசன' என்பதைப் பற்றியும் விவரித்து அடுத்தாற்போல் சொல்லுகிறார்.

ந கீர்த்தயதி நாமானி
மந்த்ரராஜம் ந வேத்தி ய: |
47. பசுதுல்ய: ஸ விக்ஞேய:
தஸ்மை தத்தம் நிரர்த்தகம் ||

எவனொருவன் இந்த நாமங்களைச் சொல்லாமலும் மந்த்ர ராஜத்தை அறியாமலுமிருக்கிறானோ, அவன் பசுவுக்கு ஸமமானவனென்று அறியத்தகுந்தவன். அவனுக்குக் கொடுத்தது அர்த்தமில்லாதது (ப்ரயோஜனமற்றது).

1. இங்கு நாமஸாஹஸ்ரம், மந்த்ர ராஜம் இவ்விரண்டைப் பற்றி மட்டும் சொல்லப்பட்டிருந்தபோதிலும், சக்ரராஜத்தைப் பற்றியும் சேர்த்துச் சொல்லப்பட்டதாகத்தான் அறியவேண்டும். எப்படி அவை மூன்றுமுடையவனே பாத்ரனென்று சொல்லப் பட்டதை அனுஸரித்து அந்த மூன்றும் சேர்ந்தாற்போலில்லாதவர்களையெல்லாம் இங்கு பசுவென்று சொல்லப்பட்டது மந்த்ர ராஜம் தெரிந்தவன்தான் சக்ரராஜத்தையும் தெரிந்தவனாக இருக்கக்கூடுமாகையால் மந்த்ரராஜத்தைத் தெரியாதவன் என்று இங்கு சொல்வதினால் சக்ரராஜத்தைத் தெரியாதவனையும் உள் படுத்திச் சொல்லப்பட்டது.

2. 'பசு துல்ய:' — பசுவுக்கு ஸமானமானவன். பசு என்ற பதமானது நாலு கால்களையுடைய பசுவை ஸாதாரணமாகக் குறிக்கும். அது தவிர, 'வித்யா விஹீன: பசு:' என்றபடி

வித்யையில்லாதவனையும் பசுவென்று சொல்லப்படும். அந்த அர்த்தத்தில் ஸ்ரீவித்யை இல்லாதவனை இங்கு பசுவென்று சொன்னதாகவும் சொல்லலாம். மோக்ஷத்திற்கு ஒரே (முக்ய மான) காரணமான ஸ்ரீவித்யைதான் வித்யையென்ற பெயருக் குறியதென்றும், அதைத் தெரிந்தவன்தான் வித்வான் என்று சொல்லப்படக்கூடியனென்றும் ப்ரம்ஹாண்ட புராணத்தில் (லலிதாத்ரிசதியில்) சொல்லப்பட்டிருக்கிறது.

'ந சில்பாதி ஞானயுக்தே வித்வத் சப்த: ப்ரயுஜ்யதே |
மோக்ஷைக ஹேது வித்யாவான் ய: ஸ வித்வானிதீர்யதே |
மோக்ஷைக ஹேதுவித்யா ச ஸ்ரீவித்யா நாத்ர ஸம்சய: ||'

3. மேலே சொல்லிய ஆறு பேர்களில் சக்ரம், நாமம், மந்த்ரம் இம்மூன்றையுமுடையவன் உத்தமனென்றும், அம் மூன்றுமில்லாதவன் பசுவென்றும் ஏற்பட்டுவிடுகிறது. பாக்கி நால்வராகிய மந்த்ரம்+சக்ரம், மந்த்ரம்+நாமம், மந்த்ரம் மட்டும், நாமம் மட்டும் இவையுடையவர்களில் முதல் மூவர்கள் மந்த்ரம் தெரிந்தவர்கள். அப்படி அவர்கள் வித்யை தெரிந்தவர் களாயிருந்தாலும் சக்ரார்ச்சனம், நாமகீர்த்தனம் இரண்டையும் செய்ய அதிகாரிகளாயிருக்கையில் அவ்விரண்டையும் செய்யா திருப்பதால் வித்யை இருந்தும் இல்லாததுபோல் ஆகிறது. ஆகவே அவர்கள் 'வித்யாவிஹீன: பசு:' என்று சொல்லப்பட்ட பசு துல்யர்கள்தான். மந்த்ரம் தெரியாமல் நாமகீர்த்தனம் செய்கிறவனோவென்றால் அவன் நாலுகால் பசுவுக்குத் துல்ய மானவன்.

4. 'நிரர்த்தகம்' — அர்த்தமில்லாதது. அர்த்தமென்பதி னால் தரதம பாவங்களோடு கூடிய பலன்களைச் சொல்லப்பட்டது. ஸத்பாத்ரமானவனுக்கு தானம் செய்தால் விசிஷ்டமான (உத்க் ருஷ்டமான) பலன் கிடைக்கும். மத்யமமான பாத்ரனுக்குக் கொடுத்தால் ஸாமான்யமான பலன் கிடைக்கும். பாத்ரமேயில் லாதவனுக்குக் கொடுத்தால் பலனே கிடையாது என்று சொல் லப்பட்டது. [மேலே சொன்ன ஆறு பேர்களில் நாமம்+மந் த்ரம், சக்ரம்+மந்த்ரம், மந்த்ரம் மட்டும், நாமம் மட்டும் இவ் விதமாக உடையவர்கள் மத்யமர்கள். அவர்களுக்கு தானம் செய்வதினால் ஏற்படும் பலனானது வரிசைக்கிரமமாக குறைந்து கொண்டுவரும்.]

இவ்விதம் தானத்திற்கு பாத்ரர்களாயிருப்பவர்களைப் பற்றிச் சொல்லிவிட்டு அதினால் ஏற்படும் முடிவைத் தெளிவாகச் சொல்லுகிறார்.

பரீக்ஷ்ய வித்யா விதுஷ:
தேப்யோ தத்யாத் விசக்ஷண: |

(ஆகையினால்) புத்திமானாயிருப்பவன் வித்யை தெரிந்தவர்களை பரீக்ஷித்து (சீர்தூக்கி, தாரதம்யத்தைத் தெரிந்துகொண்டு) அவர்களுக்குக் கொடுக்கவேண்டும்.

1. 'வித்யா விதுஷ: பரீக்ஷ்ய'— ஸ்ரீவித்யை விஷயத்தில் வித்வானாயிருப்பவர்களை அதாவது, வாஸ்தவமாக (உள்ளபடியே) உபாஸனையோடிருப்பவர்களை பரீக்ஷித்து என்று அர்த்தம். அதாவது, அவர்கள் ஸ்ரீவித்யையைத் தெரிந்தவர்களாக இருந்த போதிலும் உபாஸனையின் மற்ற அம்சங்களான சக்ரராஜார்ச்சனம், நாமகீர்த்தனம் என்ற இரண்டையும் உடையவர்களா என்று பரிசோதித்துப் பார்த்து அப்படி உடையவர்களுக்குக் கொடுக்கவேண்டுமென்பது தாத்பர்யம்.

2. 'தேப்ய:' என்பதற்கு அவர்களுக்கு, அதாவது, மேலே சொல்லியபடி உபாஸனையின் மூன்று அம்சங்களையுமுடையவர்களுக்கு என்று ஒரு அர்த்தம். அல்லது 'மேலே சொன்ன ஹேதுக்களால்' என்றும் அர்த்தம் சொல்லலாம். மேலே சொல்லியபடி உபாஸனையின் மூன்று அம்சங்களையும் பொருந்தியவன் தான் ஸத்பாத்ரனென்று சொல்லப்பட்டதாலும், மற்றவர்களிடத்தில் ஸத்பாத்ரதை இல்லாததாலும், பாத்ரமாயிருப்பவருக்குத்தான் தானத்தைச் செய்யும்படி சொல்லப்பட்டிருப்பதாலும், பாத்ரமாயில்லாதவர்களுக்கு தானம் செய்யக்கூடாது என்று சொல்லப்பட்டிருப்பதாலும், இந்தக் காரணங்களைக் கொண்டு புத்திமானானவன் ஸ்ரீவித்யோபாஸகர்களைப் பரீக்ஷித்து தானம் செய்யவேண்டும் என்று சொல்லப்பட்டது.

இனி, மேலே சொல்லிய மூன்று குணங்களும் ஸத்பாத்ரதைக்கு எப்படி இன்றியமையாத அம்சங்களாக இருக்கின்றனவென்று காட்டுவதுடன் அவற்றையே பரஸ்பரம் உபமான, உபமேயங்களாகச்சொல்லி அதின் மூலமாக அவை மூன்றும் ஸர்வோத்தமமானவை என்பதாகவும் சொல்லுகிறார்.

48. ஸ்ரீமந்த்ரராஜ ஸத்ருசோ
யதா மந்த்ரோ ந வித்யதே |
தேவதா லலிதாதுல்யா
யதா நாஸ்தி கடோத்பவ ||

49. ரஹஸ்யநாமஸாஹஸ்ர
துல்யா நாஸ்தி ததா ஸ்துதி: |

ஸ்ரீமந்த்ரராஜத்திற்கு ஸமானமான மந்த்ரம் எப்படி இல்லையோ, லலிதாம்பாளுக்கு ஸமானமான தேவதை எப்படி இல்லையோ, அதே மாதிரி, ஹே கடோத்பவ! ரஹஸ்ய நாம ஸாஹஸ்ரத்திற்கு ஸமானமான ஸ்தோத்ரமும் கிடையாது.

1. அதாவது, மந்த்ரங்களுக்குள் ஸ்ரீவித்யையும், தேவதைகளுக்குள் லலிதாம்பிகையும், நாமஸாஹஸ்ரங்களுக்குள் ரஹஸ்ய நாம ஸாஹஸ்ரமும் உத்தமமென்பதாகச் சொல்லப்பட்டது. அந்தந்த வகையில் ஸர்வோத்தமமாயிருப்பதுடன் அப்படி உத்தமமாயிருப்பது எதுமாதிரியென்றால் இம் மூன்றையும்தான் ஒன்றுக்கொன்றை உபமான, உபமேயங்களாகச் சொல்ல வேண்டுமே தவிர வேறொன்றையும் சொல்வதற்கில்லையென்றும் சொல்லப்பட்டது.

2. ஸ்ரீசக்ரமே லலிதாம்பிகையின் ரூபமாக இருப்பதால் இங்கு 'ஸ்ரீசக்ரத்திற்கு ஸமானமான சக்ரம் எப்படி இல்லையோ' என்று சொல்லாமல் (சக்ர ரூபிணிகளான) தேவதைகளுக்குள் லலிதாம்பிகையின் ச்ரேஷ்டத்வம் சொல்லப்பட்டது.

இதற்குமேல், இந்த ஸ்தோத்ரமானது உபாஸகர்களாயில்லாதவர்களுக்கும் தர்மத்தைக்கொடுக்கும் (தர்ம ப்ரதம்) என்பதாகச் சொல்லப்படுகிறது.

லிகித்வா புஸ்தகே யஸ்து
நாமஸாஹஸ்ரமுத்தமம் ||

50 ஸமர்ச்சயேத் ஸதா பக்த்யா
தஸ்ய துஷ்யதி ஸுந்தரீ |

எவனொருவன் இந்த உத்தமமான நாமஸாஹஸ்ரத்தை புஸ்தகத்தில் எழுதி (அதை) எப்போதும் பக்தியுடன் பூஜிக்கிறானோ, அவனிடத்தில் ஸ்ரீ ஸுந்தரியானவள் ஸந்தோஷம் அடைகிறாள்.

1. 'ய:'—உபாஸகனோ, உபாஸகனில்லையோ, யாராயிருந்தாலும் என்று அர்த்தம். உபாஸகனாயில்லாதவனுக்கு நாம கீர்த்தனம் செய்வதற்கு அதிகாரமில்லாமற்போனாலும், அவன் இந்த நாமஸாஹஸ்ரம் எழுதிய புஸ்தகத்தை அர்ச்சிப்பதற்கு அதிகாரமுடையவன் என்பதில் யாதொரு தடையுமில்லை.

2. 'ஸதா'—உயிருள்ளவரையில்.

3. இப்படி அனுபாஸகனாயிருப்பவனுக்கே இவ்விதமான பலன் சொல்லியிருக்கும்போது அதையே உபாஸகன் செய்தால் அதற்குப் பலன் அதிகமாயிருக்குமென்று சொல்லத் தேவையில்லை. மேலும் நாமஸாஹஸ்ர மெழுதிய புஸ்தகத்தை பூஜித்தாலேயே அம்பாளுக்கு ஸந்தோஷம் ஏற்படுவதாகச் சொல்லப்படுகையில் அதைக் கீர்த்தனம் செய்தால் அம்பாளுக்கு ஏற்படும் ப்ரீதிக்கு அளவேயில்லையென்பதாக நாம் தெரிந்துகொள்ளவேண்டியது. ஆகவே இங்கு சொல்லியதெல்லாம் நாமஸாஹஸ்ர கீர்த்தனத்தின் அவச்யத்தையும், விசேஷ பலனையும் சொல்லியதாக அறியவேண்டும். ஆகையினால்தான் கீழே 51வது ச்லோகத்தில்

'தஸ்மாத் உபாஸகோ நித்யம் கீர்த்தயேத் இதம் ஆதராத் |'

என்று சொன்னபடி உபாஸகன் இதைத் தன்னுயிருள்ளவரையில் தினந்தோறும் கீர்த்தனம் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டது.

பஹுனாத்ர கிமுக்தேன
ச்ருணு த்வம் கும்பஸம்பவ ||

(இதைப்பற்றி) அதிகமாகச் சொல்லி என்ன, ஹே கும்பஸம்பவ! கேள்.

51. நானேன ஸத்ருசம் ஸ்தோத்ரம்
ஸர்வ தந்த்ரேஷு வித்யதே |
தஸ்மாத் உபாஸகோ நித்யம்
கீர்த்தயேத் இதம் ஆதராத் ||

ஸமஸ்தமான தந்த்ரங்களிலும் இதற்கு ஸமானமான (இதைப்போன்ற) ஸ்தோத்ரம் கிடையாது. ஆகையினால் உபாஸகனானவன் இதை ச்ரத்தையுடன் தினந்தோறும் (உயிருள்ள வரையில்) கீர்த்தனம் செய்யவேண்டும்.

1. நாம ஸாஹஸ்ரத்தின் உபயோகம் மூன்று விதமானது. நாமங்களின் அர்த்தங்களைப் பூர்ணமாக அறிந்து கீர்த்தனம் செய்வது ஒன்று; அவ்வித அர்த்தங்களை அறியாமல் கீர்த்தனம் செய்வது இரண்டாவது. அந்த இரண்டு விதங்களும் முடியாமல் புஸ்தகத்தில் எழுதி அதைப்பூஜிப்பது மூன்றாவது.

2. அர்த்த ஞானத்தோடு கீர்த்தனம் செய்வதுதான் உத்தமமானது. 'ஸ்வாத்யாயோऽத்யேதவ்ய:' என்ற வசனத்தில் சொல்லப்பட்ட அத்யயன பதமானது குருமுகத்தினால் அத்யயனம் பண்ணுவதைத்தான் குறிக்கும். குருவின் உபதேசம் இல்லாமலே வேதத்தைச் சொல்லமுடியுமானாலும் அவர் மூலமாக ஏற்படும் அர்த்தஞானம் முதலியவை முக்யமானதால் அவரிடத்தில் தான் வேதாத்யயனம் செய்யவேண்டும். அதேமாதிரி இங்கு 'கீர்த்தயேத்' என்ற பதமானது அர்த்தஞானத்தோடு கீர்த்தனம் செய்யவேண்டுமென்று சொல்வதாக அர்த்தம் பண்ணுவதற்கு யாதொரு விவாதமுமிருக்கமுடியாது. உபாஸகன் அர்த்தத்தோடு ஒரு நாமத்தைச் சொன்னாலும்கூட, கல்பகோடிகாலம் ஸ்ரீலலிதாம்பாளுடைய லோகத்தில் வஸிப்பானென்பதாக தேவீ புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'அப்யேகம் நாம யோ வேத்தி தத்வார்த்த நிகமாதிபி: |
ஸோऽபி ஸ்ரீலலிதாலோகே கல்பகோடீர் வஸேன் நர: ||'

தவிர, அர்த்தஞானமில்லாமல் சொல்வதானது (அணைந்த) சாம்பலில் ஆஹுதி பண்ணினால் எப்படி ஜ்வலிக்காதோ அம்மாதிரியானதென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'அனதீதம் அவிக்ஞாதம் நிகதேனைவ பட்யதே |
அனக்னாவிவ சுஷ்கைதோ ந தத் ஜ்வலதி கர்ஹிசித் ||'

3. மேலே சொல்லிய இரண்டு ச்லோகங்களும் முறையே அர்த்த ஞானத்தைப் புகழ்ந்தும், அர்த்தஞானம் இல்லாமலிருப்பதை இகழ்ந்தும் சொல்லுகிறவை. ஆயினும் அர்த்த ஞானம் ஸம்பாதிக்க ஸாமர்த்யமில்லாதவன் இந்த நாமஸாஹஸ்ரத்தை

ஸாதாரணமாய் வாசிக்கவாவது வேண்டும். அர்த்தத்தோடுகூடிய பதங்களை வாசித்தாலேயே அவற்றிற்கு சக்தியுண்டென்பதாக,

'ஆக்யாதானும் அர்த்தம் ப்ருவதாம் சக்தி ஸஹகாரிணீ |'

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதனால்தான்,

'யோऽர்த்தக்ஞ இத் ஸகலம் பத்ரமச்னுதே,
நாகமேதி ஞான விதூதபாப்மா |'

(அர்த்தத்தைத் தெரிந்தவன் ஸகலவிதமான மங்களங்களையு மடைந்து ஞானத்தால் போக்கப்பட்ட பாபங்களையுடையவனாய் ஸ்வர்கத்தையடைகிறான்) என்ற ச்ருதி வாக்யத்தில் அர்த்த ஞானத்தினால் பூர்ணமான பலன் கிடைக்கையில், சப்த ஞானம் மட்டுமிருந்தால் அந்த பூர்ண பலனில் கொஞ்சமாவது கிடைக்கு மென்பதாக அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது.

4. இதேவிதமான ந்யாயத்தினால் நாம ஸாஹஸ்ரத்தை வாசிக்கக்கூடத் தெரியாதவன் (சப்த ஞானமில்லாதவன்) அதை யுடைய புஸ்தகத்தையாவது ஸம்பாதித்துப் பூஜிக்கலாமென்று ஏற்படுகிறது. (அர்த்தஞானமில்லாமல்) உச்சாரணம் மட்டும் செய்தால் அது அடுத்த ஜன்மத்தில் அர்த்த ஞானத்தைக் கொடுப்பதுபோல், புஸ்தகத்தை ஸங்க்ரஹம் செய்து (பூஜித்து) வந்தால் அதுவே அடுத்த ஜன்மத்தில் உச்சாரணம் செய்யும் ஸாமர்த்யத்தைக் கொடுக்கும். இம்மாதிரியான காரணத்தினால் தான், ஸம்ப்ரதாயத்தை அனுஸரிக்காமல் அங்கஹீனமாகச் செய்யப்படும் உபாஸனையானது மறு ஜன்மத்தில் ஸாங்கமும் ஸம்ப்ரதாய சுத்தமுமான உபாஸனையைக் கொடுக்குமென்பதாக தந்த்ர ராஜம் முதலியவைகளில் சொல்லப்பட்டிருக்கிறது.

5. ஆகவே, புஸ்தகார்ச்சனமும் தர்ம ப்ரதமான கார்யம் தான், தவிர, அதை உபாஸகனல்லாதவன் செய்யக்கூடாது என்பதான நிஷேதம் யாதொன்றுமில்லையாகையால் மறு ஜன்மத்தில் உபாஸனை செய்யும் பாக்யம் கிடைப்பதை யுத்தேசித்து அனுபாஸகன் புஸ்தகார்ச்சனம் செய்யலாம். உபாஸகனாயிருப்பவன் யாராவது நாமபடனம் செய்ய ஸாமர்த்யமற்றவனாக இருந்தால், அவனும் புஸ்தக ஸங்க்ரஹம் செய்து அர்ச்சிக்க வேண்டும். ஏனென்றால் நாமபடனம் செய்யவேண்டுமென்பதாக உபாஸகனுக்குச் சொல்லப்பட்டிருக்கும் விதியை அவன்

அதனுல் (அதாவது, புஸ்தகார்ச்சனத்தின் மூலமாய்) தன்னுல் இயன்றவரையில் அனுஷ்டித்ததாக ஆகுமாகையால் அவனும் புஸ்தகார்ச்சனத்தை அவசியம் செய்யவேண்டும்.

6. இவ்விதம் அனுபாஸகன்கூட நாமஸாஹஸ்ரமடங்கிய புஸ்தகத்தைப் பூஜிக்கலாம் என்று சொல்லப்படுவதில் அது 'குலபுஸ்தகானி கோபயேத்' என்ற கல்பஸூத்ர வசனத்திற்கு விரோதமாயிருப்பதாகத் தோன்றலாம். குல புஸ்தகங்களை, அதாவது, குலாசாரத்தைப்பற்றிய புஸ்தகங்களை, ரஹஸ்யமாக வைத்துக் காப்பாற்றவேண்டும் என்று அந்த வாக்யத்தின் தாத்பர்யம். அதிகாரமில்லாதவர்களுக்கு அவை கிடைக்காத விதமாய்க் காப்பாற்றவேண்டுமென்றும் இல்லாவிட்டால் யோகினிகளின் சாபம் ஏற்படுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியிருக்கையில் அனுபாஸகன் புஸ்தகார்ச்சனம் செய்வதற்கு எப்படி அதிகாரமுடையவனுக ஆவான் என்று தோன்றக்கூடும். ஆனுல் அந்த வாக்யமானது அர்த்தஞானத்தை கொடுக்கும் ஸ்வபாவமுடைய துர்ஜனர்களைப்பற்றிச் சொல்லப்பட்டதேதவிர உபாஸனை கிடைக்கவேண்டுமென்ற விருப்பத்தை யுடைய ஸஜ்ஜனர்களைப்பற்றிச் சொல்லப்பட்டதல்ல. அப்பேர்ப் பட்ட விருப்பமானது மறுஜன்மத்தில் உபாஸனையைக்கொடுக்கும் அத்ருஷ்டார்த்தத்தோடு கூடியது.

7. உபாஸகர்களுக்குள் நாமபடனம்செய்ய சக்தியற்றவர் களாயிருப்பவர்கள் புஸ்தகார்ச்சனத்தையாவது அவச்யம்செய்ய வேண்டுமென்பது ஸூலபமாக ஏற்படுகிறது. இதே ந்யாய மானது, இந்த நாம ஸாஹஸ்ரத்தின் அர்த்தஞானம் கிடைப்ப தற்கு உபாயமாயிருக்கும் இந்த பாஷ்யத்தை வாசிப்பதைப்பற் றியும் பொருந்துமென்ற எண்ணத்துடன் பாஸ்கரராயரால் தன் பாஷ்யத்தின் முடிவில் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது:

அம்ப தவத் பதயோ ஸமர்ப்பிதமிதம் பாஷ்யம் த்வயா காரிதம்
த்வன் நாமார்த்த விகாஸகம் தவ முதே பூயாத் அதத்வாம் பஜன் ।
யோ நைனத் பரிசீலயேத் ந ச படேத் ய: புஸ்தகஸ்யாபி வா
ஸம்க்ராஹம் ந கரோதி தஸ்ய லலிதோபாஸ்திர் வ்ருதாஜாயதாம்॥'

(இதின் அர்த்தமானது அங்கு சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கவும்.)

8. இவ்விதம் இந்த நாம ஸாஹஸ்ரமானது அனுபாஸகர்களுக்கே ரக்ஷகமாயிருக்கும்போது அது உபாஸர்களுக்கு ரக்ஷகமாயிருப்பதைப்பற்றிச் சொல்லவேண்டியது அனுவச்யமென்பதாக, இதுவரையில் சொல்லியதையெல்லாம் முடிவுகட்டி பஹுனுக்ரகிமுக்தேன...........கீர்த்தயேத் இதமாதராத்' என்று இங்கு சொல்லப்பட்டது.

இதற்குமேல், மிகவும் உத்க்ருஷ்டமான தர்மத்தைக் கொடுப்பதும், முன்சொன்ன ஆறு ராசிகள் முதலான அளவினுல்கூட புத்தியினுல் அறியக்கூடாத பலத்தைக் கொடுப்பதுமான ப்ரயோகத்தைப்பற்றிச் சொல்லுகிருர்.

52. ஏபிர் நாம ஸஹஸ்ரைஸ்து
ஸ்ரீசக்ரம் யோऽர்ச்சயேத் ஸக்ருத் |

இந்த ஆயிரம் நாமங்களால் (மேலே சொல்லப்படும் புஷ்பங்களைக்கொண்டு) ஸ்ரீசக்ரத்தை எவனொருவன் ஒரு தடவையாவது அர்ச்சிக்கிருனோ,

1. 'நாம ஸஹஸ்ரை:' என்றதினுல் ஒவ்வொரு நாமத்தையும் தனித்தனியாகச் சொல்லி ஆயிரம் நாமங்களையும் முடிக்க வேண்டுமென்று ஏற்படுகிறது. லக்ஷபூஜை முதலியவைகளிலும் இதேமாதிரியாகச் சொல்லி ஆயிரம் நாமங்கள் முடிந்தவுடன் அதேமாதிரி திரும்பித்திரும்பி ஆவ்ருத்தி செய்யவேண்டுமென்றும் ஏற்படுகிறது.

2. அல்லது, இந்த நாமஸாஹஸ்ரத்தில் நாமங்களெல்லாம் பூஜைக்குத் தக்கபடி தனித்தனியாகச் சொல்லும்படியான ரூபத்தோடில்லாதிருப்பதாலும், அவற்றைத் தனித்தனியாகச் சொல்லும்போது நான்காவது வேற்றுமையுடனும் நம: என்ற முடிவுடனும் சொல்லவேண்டியதாக இருப்பதாலும் நாமஸாஹஸ்ரமென்று சொல்லாமல் ஆயிரம் நாமங்களென்பதாக இங்கு சொல்லப்பட்டது. (உதாரணம் - ஸ்ரீமாத்ரே நம:...............லலிதாம்பிகாயை நம:)

பத்மைர் வா துளஸீ புஷ்பை:
கல்ஹாரைர் வா கதம்பகை: |

53. சம்பகைர் ஜாதிகுஸுமை:
மல்லிகா கரவீரகை: |
உத்பலைர் பில்வபத்ரைர் வா
குந்த கேஸர பாடலை: ||

54. அன்யை: ஸுகந்திகுஸுமை:
கேதகீ மாதவீ முகை:

தாமரைப் புஷ்பங்கள் அல்லது துளஸியின் புஷ்பங்கள் அல்லது செங்கழுநீர் புஷ்பங்கள் அல்லது நானாவிதமான கதம்ப புஷ்பங்கள், அல்லது சம்பக புஷ்பங்கள் அல்லது ஜாதி புஷ்பங்கள் அல்லது மல்லிகைப் புஷ்பங்கள் அல்லது அரளிப் புஷ்பங்கள் அல்லது நெய்தல் புஷ்பங்கள் அல்லது பில்வ பத்ரங்கள் அல்லது முல்லைப் புஷ்பங்கள் அல்லது குங்குமப்பூக்கள் அல்லது பாடலீ புஷ்பங்கள் அல்லது தாழம்பூ, வாஸந்தி முதலான நல்ல மணமுள்ள வேறு புஷ்பங்களால் (எவனொருவன் ஸ்ரீசக்ரத்தை இந்த ஆயிரம் நாமங்களைச் சொல்லி ஒரு தடவையாவது அர்ச்சிக்கிறானோ),

1. துளஸீ புஷ்பங்களென்று சொன்னதினால் துளஸியின் தளங்கள் விலக்கப்பட்டு, அதில் புஷ்பம்மாதிரி மலர்ந்திருக்கும் பாகத்தை மட்டும்தான் அங்கீகரிக்கப்பட்டது. அம்பாளுடைய பூஜையின் விஷயத்தில் துளசியை விலக்கிச்சொல்வதானது அதின் தளங்களைப்பற்றியதே தவிர துளஸியையே அடியோடு விலக்கப்பட்டதல்ல. இது நீலாதந்த்ரத்தில்,

'நானோபஹார பலிபி: நானாபுஷ்பைர் மனோரமை: |
அபாமார்க தளைர் ப்ருங்கை: துளஸீதள வர்ஜிதை: |
பூஜனீயா ஸதா பக்த்யா ந்ருணாம் சீக்ர பலாப்தயே ||'

என்று ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

2. நிஷித்தமான (விலக்கப்பட்ட) புஷ்பங்களால் கூட அம்பாளைப் பூஜை செய்யவேண்டுமென்பதாக அதே தந்த்ரத்தில்

'தேவீ பூஜா ஸதா சஸ்தா ஜலஜை: ஸ்தல ஜைரபி |
விஹிதைச்ச நிஷித்தைர் வா பக்தியுக்தேன சேதஸா ||'

என்று சொல்லப்பட்டபோதிலும் அவ்விதம் நிஷேதிக்கப்பட்ட புஷ்பங்களையும் ஏற்றுக்கொள்வதானது பக்தியின் ஆவச்ய

கத்தைக் காட்டுவதற்கே தவிர அவைகளை ஒப்புக்கொண்டதாகச் சொல்லப்பட்டதல்ல.

மேலும் புஷ்பங்களகப்படாவிட்டால் அந்த புஷ்பச்செடிகளின் பத்ரங்களால் (இலைகளால்) பூஜை செய்யலாமென்பதாக,

'புஷ்பாணு மப்யலாபே து தத் பத்ரைர் அர்ச்சயேத் சிவாம் |'

என்று காளீ புராணத்தில் சொல்லப்பட்டதானது நித்ய கர்மாவாகச் செய்யப்படும் பூஜையைப்பற்றியது. இங்கு சொல்லப்படும் ப்ரயோகம் போன்றதான காம்ய கர்மாக்களில் அவ்விதம் ப்ரதிநிதியான வஸ்துக்கள் உபயோகிக்கக்கூடாது என்று (மீமாம்ஸா சாஸ்த்ரத்தில்) சொல்லப்பட்டிருக்கிறது.

3. 'ஸுகந்திகுஸுமை:' என்றதினால் துர்கந்தமுள்ள புஷ்பங்கள் விலக்கப்பட்டனவே தவிர நிர்கந்தமான ஜபா (செம்பரத்தை) புஷ்பங்கள் போன்ற சிகப்பு புஷ்பங்கள் விலக்கப்படவில்லை. (சிகப்புநிறமுள்ள புஷ்பங்களில் அம்பாளுக்கு ப்ரியமென்பதாகச் சொல்லப்படும்.)

4. 'கேதகீ மாதவீ முகை:' என்றதினால் புன்னாக புஷ்பம், மகிழம்பூ முதலியவைகளும் சொல்லப்பட்டன.

5. இவ்விதம் எடுத்துக்கொள்ளப்பட்ட புஷ்பங்களுக்குள் அம்பாளுடைய ப்ரீதியை உண்டுபண்ணும் விஷயத்தில் இருக்கும் தாரதம்யமானது ஆதித்யபுராணம், காளிகாபுராணம் முதலியவற்றில் சொல்லப்பட்டிருக்கிறது.

6. புஷ்பங்களையாவது, பத்ரங்களையாவது, பழங்களையாவது பூஜையில் அர்ப்பணம் பண்ணும்போது அவற்றை அதோமுகமாகப் போடக்கூடாது. அப்படிப்போட்டால் துக்கத்தை விளைவிக்கும். அவை ஸ்வபாவத்தில் மரங்களில் அல்லது செடிகளில் (ஊர்த்வமுகமாக) இருப்பதுபோலவே அர்ச்சனையிலும் போடவேண்டும். ஆயினும் இந்த நியமமானது புஷ்பாஞ்ஜலியில் மட்டும் கிடையாது. அப்போது புஷ்பங்களை இரண்டு கைகளாலும் வாரி எடுத்துப்போடுவதால் இதை அனுஷ்டிக்க முடியாது.

'புஷ்பம் வா யதி வா பத்ரம் பலம் நேஷ்டமதோ முகம் |
து:கதம் தத் ஸமாக்யாதம் யதோத்பன்னம் ததார்ப்பயேத் |
அதோ முகார்ப்பணம் நேஷ்டம் புஷ்பாஞ்ஜலிவிதிம் விநா ||'

(பேட்காரிணீ தந்த்ரம்)

7. லக்ஷபூஜையில்கூட ஒவ்வொரு புஷ்பத்தையும் தனித் தனியாகப் போடவேண்டும். அப்படிக்கில்லாமல், சேர்ந்தாற் போல் அள்ளியள்ளிப்போட்டால் லக்ஷபூஜையாகாது.

'லக்ஷபூஜாதிஷு புன: புஷ்பம் ஏகைகம் ஸமர்ப்பயேத் |
ஸமுதாயேன சேத் பூஜா லக்ஷ புஷ்பார்ப்பணம் ந தத் ||'

(பேட்காரிணீ தந்த்ரம்)

புஷ்பங்கள் அனேக ஜாதிகளாக இருந்தால் அந்தந்த ஜாதியை மற்றவைகளுடன் கலக்காமல் உபயோகித்துவிட்டுப் பிறகு மற்றொரு ஜாதியை எடுத்துக்கொள்ளவேண்டும்.

தஸ்ய புண்ய பலம் வக்தும்
ந சக்னோதி மஹேச்வர: |

அதனால் ஏற்படும் புண்யபலனைச் சொல்லுவதற்கு மஹேச் வரனால் (கூட) முடியாது.

1. மஹேச்வரர் என்பவர் அம்பாளுடைய பஞ்சப்ரேத மஞ்சத்தின் கால்களில் ஒன்றாயிருப்பவர். (ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன், மஹேச்வரர் இந்நால்வரும் கால்களாகவும் ஸதா சிவனானவர் மேற்பலகையாகவும் இருப்பதாகச் சொல்லப்படும்.) அப்பேர்ப்பட்ட மஹேச்வரர்கூட, ஸர்வக்ஞராயில்லாதபடியால் இந்த ப்ரயோகத்தினால் கிடைக்கும் புண்யபலனுடைய அளவைப் பற்றிச் சொல்லமுடியாது என்று சொல்லப்பட்டது. அப்படிக் கிருக்கும்போது (ஏற்கனவே சொல்லப்பட்ட) ராசி முதலான அளவுகளால் நாம் அறியவாவது சொல்லவாவது எப்படி முடியு மென்பதும் ஏற்படுகிறது. ஆகவே இதனால் புண்யபலனானது எல்லையற்றது என்பதாகச் சொல்லப்பட்டது.

அதைப்பற்றிச் சொல்வதானால் ஸர்வக்ஞையான அம்பா ளால் தான் முடியுமென்பதாக மேலே சொல்லுகிறார்.

55. ஸா வேத்தி லலிதாதேவீ
ஸ்வ சக்ரார்ச்சனஜம் பலம் |
அன்யே கதம் விஜானீயு:
ப்ரம்ஹாத்யா: ஸ்வல்பமேதஸ: ||

தன்னுடைய சக்ரத்தை அர்ச்சனம் பண்ணுவதினால் ஏற்படும் பலன் எவ்வளவென்று லலிதாதேவிக்குத்தான் தெரியும். (அப்படியிருக்கும்போது) ஸ்வல்பமான புத்தியையுடைய ப்ரம்ஹாதிகள் அதை எப்படி அறிவார்கள்.

1. 'ஸ்வல்பமேதஸ:' என்று ப்ரம்ஹாதிகளைச் சொல்வதிலிருந்தே அவர்கள் இந்த புண்யத்தின் அளவைத் தெரியமுடியாமலிருப்பதின் காரணமும் சொல்லப்பட்டது.

2. விஷயங்களை க்ரஹித்து அவற்றை ஞாபகத்தில் வைத்திருக்கும் சக்திக்கு மேதையென்று பெயர்.

3. இந்த புஷ்பார்ப்பண ப்ரயோகமோ ஸுலபமாகச் செய்யக்கூடியதாயிருப்பதுடன் அளவற்ற பலனைக் கொடுப்பதாக இருக்கையில், ஏற்கனவே சொல்லிய ஆறு ராசிகளான புண்யத்தைக்கொடுக்கும் ப்ரயோகமானது கடினமாயிருப்பதுடன் அதைவிடக்குறைவான புண்யத்தைக்கொடுப்பதாயிருக்கிறதே, அப்படியிருக்கும்போது யாரும் இந்த ஸுலபமான புஷ்பார்ப்பண ப்ரயோகத்தைச் செய்ய விரும்புவார்களே தவிர கடினமாயிருப்பதும் ராசிஷட்கமென்ற அளவுடைய புண்யத்தைமட்டும் கொடுப்பதுமான ப்ரயோகத்தைச் செய்வதில் ப்ரவ்ருத்தி ஏற்படாதே. ஆகவே அந்த ப்ரயோகமானது அனுஷ்டானத்திலில்லாமல் ப்ராமாண்யமற்றதாக ஆகிவிடுமே என்ற ஸந்தேஹம் ஏற்படக்கூடும். ஆயினும் அப்படியல்ல.

4. கடினமாகத் தோன்றும் அந்த ப்ரயோகத்தைப் பற்றிச் சொல்லும் வாக்யங்களெல்லாம் 'அநிசம்', 'நித்யம்' முதலான வார்த்தைகளோடிருப்பதாலும், அதைச்செய்யாவிட்டால் ப்ரத்யவாயமேற்படுமென்று சொல்வதாலும், அந்த ப்ரயோகமானது தினந்தோறும் அவச்யம் செய்யப்படவேண்டியது. மேலும் நித்யகர்மாவான அந்த ப்ரயோகத்தைச் செய்யாவிட்டால் ஆயுஷ்கரம், புஷ்பார்ப்பணம் முதலான காம்ய ப்ரயோகங்களைச் செய்வதற்கு அதிகாரம் கிடையாதென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இது தவிர, அக்னிஹோத்ரத்தைப்பற்றிச் சொல்லப்படுவது மாதிரி, நித்யகர்மாவுக்கே வசனபலத்தினால் காம்யத்வமும்

இருக்கலாம். ஆகவே நித்யகர்மாவாகச் சொல்லப்பட்ட ப்ரயோகத்தில் ஜனங்களுக்கு ப்ரவ்ருத்தி இருக்காதோ என்ற சங்கைக்கு இடமில்லை.

5. இங்கு சொல்லப்பட்ட ப்ரயோகத்தைப்பற்றிய சில விசேஷங்கள் பின்வருமாறு—சக்ரார்ச்சனத்தை ஆரம்பிக்கும் போதே அபரிமித புண்ய ப்ராப்த்யர்த்தம் (இன்ன புஷ்பங்களென்பதாக அவற்றின் பெயரைச் சொல்லி) குஸுமை: தேவீம் பூஜயிஷ்யாமி என்று ஸங்கல்பித்து, ப்ரஸன்ன பூஜைக்குப் பிறகு (இந்த நாமஸாஹஸ்ரத்தின்) பூர்வ பாகத்தைப் படித்துவிட்டு, ந்யாஸத்ரயத்தைச் செய்து, ப்ரணவத்தை உச்சரித்து, ஓரோர் நாம மந்த்ரத்தையும் நாலாவது வேற்றுமையுடனும் த்விதாரீயை முதலிலும், நம: என்பதைக் கடைசியிலுமுடையதாயும்(உதாரணமாக—ஹ்ரீம் ஸ்ரீம் ஸ்ரீமாத்ரே நம:—என்று) சொல்லி, ஓரோர் மந்த்ரம் சொன்னவுடன் ஓரோர் புஷ்பத்தையும் அது உண்டான விதமாகவே (காம்பு கீழாகவும் புஷ்பம் மேல்நோக்கியும்) எடுத்து (சக்ரத்தின் மத்தியிலிருக்கும்) பிந்துவில் போட்டு, வேறு ஜாதியைச் சேர்ந்த புஷ்பங்களின் கலப்பில்லாமல் ஒரே ஜாதியான புஷ்பங்களால் நாமங்கள் ஆயிரத்தையும் பூர்த்திசெய்து, கடைசியில் ப்ரணவத்தை உச்சரித்து, ந்யாஸத்ரயத்தைச்செய்து, பலச்ருதிபாகத்தைப் படித்து, பாக்கி பூஜையை முடிக்கவேண்டும். [இதேமாதிரியாக, பாராயணம் பண்ணுவதைப் பற்றிச் சொல்லப் பட்டிருப்பதை பரிபாஷா ச்லோகங்களடங்கிய பாகத்தில் பார்க்கவும். ந்யாஸத்ரயம் என்பது ரிஷ்யாதிந்யாஸம், கரந்யாஸம், அங்கந்யாஸம். த்விதாரீ என்பது ஹ்ரீம் ஸ்ரீம். த்ரிதாரீ என்பது வாங்மாயா கமலா:—ஐம், ஹ்ரீம், ஸ்ரீம்.]

இம்மாதிரி சதுர்வித புருஷார்த்தங்களில் தர்ம, அர்த்த, காமங்களை (த்ரிவர்கத்தை) கொடுப்பதைப்பற்றி இதுவரையில் சொல்லிவிட்டு இதற்குமேல், அடுத்ததான மோக்ஷமென்ற நான்காவது புருஷார்த்தத்தைக் கொடுப்பதைப்பற்றிச் சொல்ல ஆரம்பித்து, முதலாக கைவல்யமெனப்படும் ஐந்தாவது முக்தியைக் கொடுக்கும் ப்ரயோகத்தைச் சொல்லுகிறார்.

56. ப்ரதிமாஸம் பௌர்ணமாஸ்யாம்
ஏபிர் நாம ஸஹஸ்ரகை: |
ராத்ரௌ ய: சக்ரராஜஸ்த்தாம்
அர்ச்சயேத் பரதேவதாம் ||

ஒவ்வோருமாதமும் பௌர்ணமியில் ராத்திரியில் ஸ்ரீசக்ரத்தி லிருக்கும்படியான பரதேவதையை எவனொருவன் மேலே சொன்ன புஷ்பங்களைக்கொண்டு இந்த ஆயிரம் நாமங்களால் அர்ச்சனை செய்கிறனோ,

57. ஸ ஏவ லலிதா ரூப:
தத்ரூபா லலிதா ஸ்வயம் |
ந தயோர் வித்யதே பேத:
பேதக்ருத் பாபக்ருத் பவேத் ||

அவனே ஸ்ரீலலிதாம்பாள் ரூபமாக ஆகிறன். ஸ்ரீ லலிதாம் பாளோ, தானும் அவன் ரூபமாக ஆகிறள். அவர்களிருவருக் குள் பேதமே கிடையாது. (அப்படி அவர்களுக்குள்) பேதத்தைக் கல்ப்பிக்கிறவன் (பாராட்டுகிறவன்) பாபம் செய்தவனுக ஆவான்.

*1. ப்ரதி பௌர்ண மாஸமென்று சொல்லாமல் ப்ரதிமாஸ மென்று சொன்னது யாவஜ்ஜீவம் (உயிருள்ளவரையில்) என்று அறியவேண்டியதற்காகச் சொல்லப்பட்டது.*

*2. ஏபி: — முன் சொல்லப்பட்டவையும் மற்றுமுள்ள புஷ்பங்களால் என்று அர்த்தம்.*

*3. ஒருதடவை அர்ச்சித்தாலேயே ஏற்படும் பலத்தின் அளவானது லலிதாம்பாளுக்கு மட்டும்தான் தெரியும் என்று சொல்லப்படுவதால், அவ்விதம் திரும்பத்திரும்ப (இங்கு சொல் லப்பட்டபடி) அர்ச்சித்தால் உபாஸகனே லலிதாம்பாளாகவும், லலிதாம்பாளே உபாஸகனுகவும் ரூபதாதாத்ம்யம் ஏற்படுவது ந்யாயஸித்தமானது என்பதாக 'ஸ ஏவ லலிதா....ஸ்வயம்'என்று சொல்லப்பட்டது*

*4. பரஸ்பரம் ப்ரதியோகியாக இருக்கும் தாதாத்ம் யத்தைச் சொல்வதற்காக 'ஸ ஏவ லலிதா ரூப:', 'தத் ரூபா லலிதாஸ்வயம்' என்று இரண்டுவிதமாகவும் சொல்லப்பட்டது.*

5. பேதம் வாஸ்தவமாயிருக்கையில் தாதாத்ம்யமென்று இங்கு சொல்லப்பட்டதானது உபமான, உபமேயங்களென்ற அலங்காரத்தை அநுஸரித்துச் சொல்லப்பட்டதென்று தோன்றக்கூடிய ப்ரமத்தை 'ந தயோர் வித்யதே பேத:', என்பதினால் நீக்கப்பட்டது. தயோ - தேவீ, பக்தன் இவர்களுக்குள் பேத: என்றால் வாஸ்தவமான பேதம் என்று அர்த்தம். வாஸ்தவமான பேதம் ஒன்றுமில்லையென்று இங்கு சொல்வதானது ஸகல விதத்திலும் இருவரும் ஸமானமாயிருப்பதுடன் அபேதத்தைச் சொல்வதல்ல, இருவருக்குமுள்ள தாதாத்ம்யத்தையே குறிப்பது.

6. இவ்விதமிருக்கும் அபேதத்தை ஒப்புக்கொள்ளாமல், எப்படியிருந்தாலும் வாஸ்தவத்தில் பேதம்தான் என்று ஆக்ரஹம் கொள்பவனை 'பேதக்ருத் பாபக்ருத் பவேத்' என்பதாக அடுத்தாற்போல் கண்டிக்கிறார். அம்பாள் அமர்த்யை (இறப்பு இல்லாதவள்); உபாஸகன் மர்த்யன் (நிச்சயம் இறப்பவன்), அல்லது அம்பாள் பூஜிக்கப்படுகிறவள், உபாஸகன் பூஜிப்பவன். இம்மாதிரியான பேதபாவத்திற்கு மூலமாகத் தோன்றும் அநுமானங்களையுடையவனே பேதக்ருத் என்று இங்கு சொல்லப்பட்டது. அத்வைத சாஸ்த்ரத்தைப்பற்றி, ப்ரம்ஹம் பரிசுத்தமானது, ஜீவன் அங்கங்களோடிருப்பதால் அசுசியானவன், ஆகவே ஜீவ, ப்ரம்ஹ ஐக்யம் ஒப்புக்கொள்ளக்கூடியதல்ல என்று ஆக்ஷேபணை சொல்லுகிறவர்கள் எப்படி பரிஹாஸத்திற்கு ஆளாவார்களோ அதேமாதிரி அம்பாளுக்கும் உபாஸகனுக்கும் பேதபாவத்தை கல்பிக்கிறவனும் பரிஹாஸம் பண்ணுவதற்கு இடமாவான்.

7. இம்மாதிரியான தப்பான ஹேதுக்களை (ஹேத்வாபாஸங்களை, ஹேதுப்போலிகளை) நினைப்பதினாலும் சாஸ்த்ர விருத்தமாயிருப்பதாலும் பேதக்ருத்தாயிருப்பவன் பாபக்ருத்தாக (பாபம் செய்கிறவனாக, பாபிஷ்டனாக) ஆகிறான் என்று சொல்லப்பட்டது.

7. உபாஸகன் மரணமடைகிறவனாயிற்றே என்ற சங்கையும்,

ந தஸ்ய ப்ராணா உத்க்ராமந்தி அத்ரைவ ஸமவலீயந்தே |'

(முக்தனுடைய ப்ராணன்கள் அவனைவிட்டு வெளியில் செல்லுகிறவையல்ல, அவனிடமே அடங்கிவிடுகின்றன) என்ற ச்ருதிவாக்யத்தினால் நீக்கப்பட்டது என்று தாத்பர்யம்.

இவ்விதம் சொல்லப்பட்ட ப்ரயோகத்தைவிட ஸுலப மானதும் நான்குவிதமான முக்தியைக் கொடுப்பதானதுமான ப்ரயோகத்தை மேலே சொல்லுகிறார்.

58. மஹாநவம்யாம் யோ பக்த:
ஸ்ரீதேவீம் சக்ரமத்யகாம் |
அர்ச்சயேன் நாமஸாஹஸ்ரை:
தஸ்ய முக்தி: கரே ஸ்த்திதா ||

எந்த பக்தனானவன் மஹாநவமிதினத்தில் ஸ்ரீசக்ரத்தின் மத்தியிலிருப்பவளான ஸ்ரீதேவியை (இந்த) ஆயிரம் நாமங்களால் அர்ச்சிக்கிறானோ அவனுக்கு முக்தியானது கையிலிருக்கிறது

1. இங்கு சொல்லியிருப்பதுடன், யாவஜ்ஜீவம் என்ற அர்த்தத்தைக் கொடுக்கும் ப்ரதிமாஸம் என்பதையும், ராத்ரியில் என்பதையும் சேர்த்துக்கொள்ளவேண்டும். அதாவது, உபா ஸகனானவன் தன்னுயிருள்ளவரையில் ப்ரதி மஹாநவமியிலும் ராத்ரியில் இந்த ப்ரயோகத்தைச் செய்யவேண்டுமென்பது சொல்லப்பட்டது.

2. நவராத்ரியின் கடைசி இரண்டு தினங்களையும் மஹா நவமீயென்று சொல்லப்படும். மஹாநவமீ என்பது சிவ, சக்தி ஸாமரஸ்யரூபமானது. அப்போது ஸர்வ ஜாதிகளுக்கும் அம்பிகையைப் பூஜிப்பதற்கு அதிகாரமுண்டு.

3. நவராத்திரியென்பதில் சாரத நவராத்ரியென்றும் வாஸந்த நவராத்ரியென்றும் இரண்டு நவராத்ரிகளுண்டு.

'சரத்காலே மஹாபூஜா க்ரியதே யா ச வார்ஷிகீ |'

என்ற தேவீமாஹாத்ம்ய வசனத்தில் வார்ஷிகீ என்ற பதத்திற்கு வருஷ ஆரம்பத்தில் அதாவது, வஸந்தருதுவில் செய்யப்படும் (மஹாபூஜை)யென்பதாக ஸம்ப்ரதாயமறிந்தவர்களால் அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது. 'யா ச வார்ஷிகீ' என்பதில் வரும்

ச காரத்தினுல் 'சரத்காலத்திலும் வர்ஷாரம்பத்திலும்' என்று அந்த அர்த்தம் ஏற்படுகிறது சிலர் 'வார்ஷிகீ' என்பதற்கு சாதுர் மாஸமென்ற வர்ஷருதுவில் இருக்கும் (சரத்காலே) என்று அர்த்தம் செய்வதில் வர்ஷருதுவில் சரத்ருது அடங்கியதாக ஏற்படுவதால் அவ்வித அர்த்தம் சரியல்ல. பின்னும் சிலர் 'ப்ரதி வர்ஷம் செய்யப்படும்' என்று அர்த்தம் செய்வதிலும் அவ்விதம் சொல்லப்படும் விசேஷணமானது அனுவச்யமானதால் அந்த அர்த்தமும் சரியல்லவென்று ஏற்படுகிறது. நவராத்ரியானது இருவகைப்பட்டதென்பது ருத்ரயாமளத்தில்,

'வாஸந்தே நவராத்ரேऽபி பூஜயேத் ரக்ததந்திகாம் |'

என்று ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டது.

4. இந்த இரண்டுவிதமான நவராத்ரிகள் எந்தெந்த மாதங்களில் வருகின்றனவென்ற விஷயத்தில் தேவீபாகவதம், மூன்றுவது ஸ்கந்தத்தில் காமபீஜோபாஸகனுன ஸுதர்சனனுக்கு அம்பாள் சொன்னதாக வரும்,

'சரத்காலே மஹாபூஜா கர்த்தவ்யா மம ஸர்வதா |
நவராத்ரோத்ஸவம் ராஜன் விதிவத் பரிகல்பய ||
சைத்ரே சாச்வயுஜே மாஸி த்வயாகார்யோ மஹோத்ஸவ: |
நவராத்ரே மஹாராஜ மம ப்ரீதிவிதாயக: ||'

என்ற வாக்யங்களில் சைத்ரம், ஆச்வயுஜம் என்ற மாதங்களில் வருவதாகச் சொல்லப்பட்டது. ஸௌபாக்ய ரத்னுகரத்தில் அவை ஆஷாட, பௌஷ மாதங்களில் வருவதாகச் சொல்லப்பட்டது.

5. இந்த இரண்டு நவராத்ரிகளில் சரத்கால நவராத்ரியின் அஷ்டமீ, நவமீ இரண்டிற்கும் மஹா என்ற பதத்தை முன்னதாகச் சேர்த்துச் சொல்வது வழக்கம்.

'ஆச்வினஸ்ய து சுக்லஸ்ய யா பவேத் அஷ்டமீதிதி: |
மஹாஷ்டமீதி ஸா ப்ரோக்தா தேவ்யா: ப்ரீதிகரீ பரா ||
ததோऽனு நவமீ யா ஸ்யாத் ஸா மஹாநவமீ ஸ்ம்ருதா |
ஸா திதி: ஸர்வலோகானும் பூஜனீயா சிவப்ரியே ||'

(காளிகா புராணம்)

அதாவது, ஆச்வின மாதத்திய சுக்லபக்ஷத்தில் வரும் அஷ்டமியை மஹாஷ்டமீயென்றும் அதற்கடுத்த தினத்தை

மஹாநவமீயென்றும் சொல்லப்பட்டது. இதேமாதிரி தௌம்யர் சொல்லுகையில்,

'ஆச்விநே மாஸி சுக்லே து யா ஸ்யாந் மூலேந சாஷ்டமீ |
ஸா மஹாத்யஷ்டமீ ஜ்ஞேயா தத்ர தேவீ க்ருதாலயா ||'

என்று மூலநக்ஷத்ரம் அஷ்டமீதிதியிலிருந்தால் மஹாஷ்டமீ யென்று சொல்லுகிறார். இவ்விதமாகவே,

'கன்யா ஸமாச்ரிதே பானௌ யா ஸ்யாந் மூலேந சாஷ்டமீ |
ஸா மஹாத்யஷ்டமீ ஜ்ஞேயா ந முக்தா நவமீயுதா ||'

என்று ப்ரம்ஹாண்ட புராணத்திலும் சொல்லப்பட்டது. அவ்விதம் மூல நக்ஷத்ரம் சேருவதைச் சொன்னது ஸாதாரணமாய் ஸம்பவிப்பதைக்குறித்தது. மூலநக்ஷத்ரம் சேராமல் (அதற்கடுத்தான) பூராடம் (பூர்வாஷாடம்) சேர்ந்திருந்தாலும் அந்த அஷ்டமீ மஹாஷ்டமீ தான்,

'மூலருக்ஷ ஸமாயுக்தா பூஜநீயா ப்ரயத்நத: |
மூலாபாவேऽபி கர்த்தவ்யா யதிஸ்யாத் தோயஸம்யுதா ||'

(இதில் தோயம் என்பது பூர்வாஷாடத்தைக் குறிக்கும்.)

6. ஆகவே, அஷ்டமீ திதியில் மூலமிருந்தாலும் பூராடமிருந்தாலும் இரண்டுமிருந்தாலும் மஹாஷ்டமீ என்று சொல்லப்படுவதுடன் மஹா நவமீயென்றும் பெயருண்டு.

ஆச்வயுக் சுக்லபக்ஷே து யாஷ்டமீ மூலஸம்யுதா |
பூர்வயாஷாடயா ஸார்தம் ருக்ஷத்வயயுதாபி வா |
ஸா மஹாநவமீ நாமத்ரைலோக்யேऽபி ஸுதுர்லபா ||'

(ந்ருஸிம்ஹப்ரஸாதம்)

பவிஷ்யோத்தர புராணத்திலும்,

'கன்யாகதே ஸவிதரி சுக்லபக்ஷேऽஷ்டமீ யுதா |
மூலநக்ஷத்ரஸம்யுக்தா ஸா மஹா நவமீ ஸ்ம்ருதா' ||

என்றும், விச்வரூபாசார்யாளால்,

'ஆச்வயுக் சுக்லபக்ஷே து யாஷ்டமீ மூலஸம்யுதா |
யதி ஸ்யாத் ரவிவித்தாபி ஸா மஹா நவமீ ஸ்ம்ருதா ||'

என்றும் சொல்லப்பட்டது. இவ்விதம் அஷ்டமீ, மூலம் இரண்டும் சேர்ந்த திதிக்கும் மஹாநவமீ என்று பெயர் என்பதாகச் சொல்லப்படுவதால் நவமீ திதிக்குத்தான் மஹாநவமீ என்ற

பெயர் என்பதாகச் சொல்லுகிறவர்கள் கக்ஷியை ஆதரிப்பது அனுவச்யம்.

7. அஷ்டமீ, நவமீ திதிகள் பரஸ்பரம் கலந்த தினங்களாயிருந்தால் அந்த தினங்கள் மிகவும் விசேஷமானவையென்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அஷ்டமீ ருத்ரனுக்கு விசேஷமான தினமென்றும் நவமீ அம்பாளுக்கு விசேஷமான திதியென்றும், அவையிரண்டும், கலந்திருக்கும் திதியானது அர்த்த நாரீச்வரரூபமான உமாமஹேச்வர ஸ்வரூபமானதால் மிகவும் விசேஷ மென்றும் சொல்லப்பட்டது.

'அஷ்டம்யா நவமீ யுக்தா நவம்யா சாஷ்டமீயுதா |
அர்தநாரீச்வரப்ராயா உமாமாஹேச்வரீ திதி: ||'

(விஷ்ணுதர்மோத்தரம்)

போஜராஜரும் பின்வருமாறு சொல்லியிருக்கிறார்.

'அஷ்டம்யாம் பூஜயேத்ருத்ரம் நவம்யாம் சக்திரிஜ்யதே |
உமாயா நவமீ ப்ரோக்தா ஹரஸ்ய திதிரஷ்டமீ |
த்வயோர் யோகே மஹாபுண்யா உமாமாஹேச்வரீ திதி: ||'

8. இதேவிதமாக வாஸந்த நவராத்ரியிலும் அஷ்டமீ, நவமீ திதிகளை நிர்ணயிக்கவேண்டுமென்பதாக நவராத்ர ப்ரதீபத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. விச்வரூபாசார்யரும் இரண்டு நவராத்ரிகளைப்பற்றிச் சொல்லுகையில்,

'அஷ்டமீ நவமீ யுக்மே சிவக்ஷேத்ரே மஹோத்ஸவ: |
சிவசக்த்யோ: ஸாமரஸ்யாத் பக்ஷயோருபயோரபி ||'

என்று அஷ்டமீ, நவமீ இரண்டையுமுடைய திதியானது சிவ சக்திகளுடைய ஸாமரஸ்ய ரூபமாயிருப்பதினால் சிவக்ஷேத்ரத்தில் மஹோத்ஸவ காலமாயிருப்பதாகச் சொல்லி அது இரண்டு நவராத்ரிகளிலும் உண்டு என்பதை 'பக்ஷயோருபயோரபி' என்பதால் குறித்திருக்கிறார். வாஸந்தம், சாரதம் என்பதாக நவராத்ரியில் இரண்டு பக்ஷங்களிருப்பதை 'உபயோ: பக்ஷயோ:' என்று சொல்லப்பட்டது.

9. அஷ்டமியில் அம்பாளைப் பூஜிப்பதைப்பற்றி,

'ஆச்வயுக் சுக்ல நவமீ த்வஷ்டமீ மூலஸம்யுதா |
ஸா மஹாநவமீ தஸ்யாம் ஜகன்மாதரம் அர்ச்சயேத் ||'

என்று தேவீபுராணத்திலும், நவமியில் அம்பாளைப் பூஜிப்பதைப் பற்றி,

'நவம்யாம் ஸ்ரீஸமாயுக்தா தேவை: ஸர்வை: ஸுபூஜிதா |
ஜகான மஹிஷம் துஷ்டம் அவத்யம் தேவதாதிபி: ||
லப்த்வாபிஷேகம் வரதா சுக்லே சாச்வயுஜஸ்ய து |
தஸ்மாத் ஸா தத்ர ஸம்பூஜ்யா நவம்யாம் சண்டிகா புதை: ||
மஹத்வம் ஹி யத: ப்ராப்தா அத்ர தேவீ ஸரஸ்வதீ |
அதோऽர்த்தம் மஹதீ ப்ரோக்தா நவமீயம் ஸதா புதை: ||'

என்று பவிஷ்யோத்தர புராணத்திலும் சொல்லப்பட்டது.

10. இப்படி செய்யப்படும் பூஜையில் அஷ்டமிதிதியன்று செய்வது பாதிராத்திரியில் (நடு இரவில்) செய்யப்படவேண்டும்.

'ஆச்விநே மாஸி மேகாந்தே மஹிஷாஸுர மர்தினீம் |
தேவீம் ச பூஜயித்வா யே அர்த்தராத்ராஷ்டமீஷு ச ||'

(தேவீ புராணம்)

கன்யா ஸம்ஸ்த்தே ரவாவீசாம் சுக்லாஷ்டம்யாம் ப்ரபூஜயேத் |
ஸோபவாஸோ நிசார்த்தே து மஹாவிபவ விஸ்தரை: ||'

(சக்திரஹஸ்யம்)

விச்வரூபாசார்யரும் பின்வருமாறு சொல்லியிருக்கிறார்.

'அஷ்டமீ ராத்ரிமாஸாத்ய பூஜாம் க்ருண்ஹாதி பார்வதீ |
நிசார்த்தே பூஜிதா தேவீ வைஷ்ணவீ பாபநாசினீ |
தஸ்மாத் ஸர்வ ப்ரயத்னேன ஹ்யஷ்டம்யாம் நிசி பூஜயேத் ||'

ஆயினும் சிலர் பவிஷ்யோத்தர புராணத்தில்,

'தத்ராஷ்டம்யாம் பத்ரகாளீ தக்ஷயக்ஞ விநாசினீ |
ப்ராதுர்பூதா மஹாகோரா யோகினீகோடிபி: ஸஹ |
அதோऽர்த்தம் பூஜனீயா ஸா தஸ்மின்னஹனி மானவை: ||'

என்று சொல்லியிருப்பதை வைத்துக்கொண்டு அஷ்டமியில் செய்யும் பூஜையானது பகலில் செய்யப்படவேண்டுமென்பதாகச் சொல்லுகிறார்கள். ஆயினும் அது தவறு. அங்கு சொல்லப்பட்ட 'தஸ்மின் அஹனி' என்ற பதத்திற்கு அந்த தினத்தில் அஹோராத்ரமென்று அர்த்தம்.

11. நவமியில் செய்யப்படும் பூஜையானது பகலில்தான் செய்யப்படவேண்டுமென்று சொல்லப்படும்.

12. இந்த இரண்டு தினங்களில் செய்யப்படும் பூஜையானது தனித்தனியாக ஏற்பட்டபோதும் பலனைக்கொடுப்பதில் ஒன்றையொன்று பொருத்தமாயிருக்கிறபடியால் இரண்டும் செய்தால்தான் பூர்ணமான பலன் கிடைக்கும்.

'அஷ்டம்யாம் ச நவம்யாம் ச ஜகன்மாதரமம்பிகாம் |
பூஜயித்வா ச்வினே மாஸி விசோகோ ஜாயதே நர: ||'

என்ற பவிஷ்யோத்தர புராண வசனத்தில் இரண்டு திதிகளின் பூஜையையும் சேர்த்து ஒரே ப்ரயோகமாகச் சொல்லப்பட்டிருப்பதாலும், 'அஷ்டமீ நவமீயுக்மே' என்று இரண்டு திதிகளையும் சேர்த்து முந்திவந்த வசனத்தில் சொல்லப்பட்டிருப்பதாலும் இது ஏற்படுகிறது. ஆகவே இந்த பூஜையானது ஸாதாரணமாய் நவராத்ரியில் செய்யப்படுவதைத் தவிர வேறான கர்மாவென்பது ஸித்தாந்தமாகிறது.

13. இந்த பூஜையைச்செய்ய ஸகல ஜாதியர்களுக்கும் அதிகாரம் உண்டு. பவிஷ்யோத்தர புராணத்தில் இந்த பூஜையைப்பற்றிச் சொல்ல ஆரம்பிக்கும்போது இந்த விஷயம் சொல்லப்பட்டிருக்கிறது.

'பூஜனீயா ஜனைர்தேவீ ஸ்த்தானே ஸ்த்தானே புரே புரே |
க்ருஹே க்ருஹே சக்திபரை: க்ராமேக்ராமே வனே வனே ||
ஸ்நாதை: ப்ரமுதிதைர் ஹ்ருஷ்டைர் ப்ராம்ஹணை:க்ஷத்ரியைர்விசை:|
சூத்ரை: பக்தியுதைர் ம்லேச்சைர் அன்யைச்ச புவி மானவை: |
ஸ்த்ரீபிச்சகுருசார்தூல தத்விதானமிதம் ச்ருணு ||'

இங்கு 'சக்திபரை:' என்பது சண்டீதேவியிடத்தில் பரம பக்தியோடிருப்பதைக் குறித்தது. ம்லேச்சர்களென்பது சபர, கிராத, புளிந்தர்கள் முதலானவர்களைக் குறிக்கும். அன்யை: என்பது அனுலோம, ப்ரதிலோம ஜாதிகளைக் குறிக்கும்.

14. இப்படி பூஜிப்பதில் (பலி, கந்தம், அனுலேபனம்,) நைவேத்யம் முதலான பூஜாகார்யங்களில்) தன் தன்னுடைய குலாசாரத்தை மீறாமல் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'யஸ்ய யஸ்ய ஹி யாதேவீ குலமார்கேண ஸம்ஸ்த்திதா |
தேன தேன ச ஸாபூஜ்யா பலிகந்தானுலேபனை: |
நைவேத்யைர் விவிதைச்சைவ பூஜயேத் குலமாதரம் ||'

(வ்ரதகண்டம்)

15. மேலே சொல்லிய காரணங்களினால் மஹாநவமீயென்ற பதத்தினால் நவராத்ரியின் அஷ்டமீ, நவமீ திதிகளென்றும் நவராத்ரியென்பதே சாரத நவராத்ரீ, வாஸந்த நவராத்ரீ

என்ற இருவகையென்றும், ஏற்படுவதில் இங்கு சொல்லப்பட்டது என்ன என்றால்—அந்த நான்கு திதிகளிலும் இங்கு சொல்லப்பட்ட பூஜையைச் செய்யவேண்டுமென்பது ஏற்படுகிறது. ஆகவே, உயிருள்ளவரையில் இந்த நான்கு தினங்களிலும், சக்ரமத்தியில் (அதாவது சக்ரத்தின் மத்தியிலிருக்கும் பிந்து ஸ்தானத்தில்) இருப்பவளாக ஸ்ரீத்ரிபுரஸுந்தரியை எந்த பக்தனானவன் தன்னுடைய குலாசாரத்தை யனுஸரித்து, அர்த்த ராத்திரியில், இந்த ஆயிரம் நாமங்களால் பூஜிக்கிறானோ, அவனுக்கு நான்குவிதமான முக்திகளும் கைக்குள்ளிருப்பவைபோல் கிடைக்கின்றன, என்று இங்கு சொல்லப்பட்டது. அதாவது அவ்வளவு ஸுலபமாகக் கிடைத்து விடுகிறதென்று தாத்பர்யம். மஹாநவமீ என்பது நாலு தினங்களென்று ஏற்படுவதாலும், நான்குவிதமான முக்தி கிடைப்பதாகச் சொல்லப்படுவதாலும், ஒருநாள் பூஜை செய்தவுடன் ஸாலோக்யம் மட்டும், இரண்டுநாள் பூஜையானவுடன் ஸாரூப்யமும், மூன்றுநாள் பூஜையானவுடன் ஸாமீப்யமும், நான்குநாள் பூஜைசெய்துவிட்டால் ஸாயுஜ்யமும் கிடைப்பதாகவும் இம்மாதிரியாக பலனைப்பற்றிய தாரதம்யமானது ந்யாயமூலமாக ஏற்படுவதால் அதைப்பற்றி இங்கு மூலத்தில் விவரித்துச் சொல்லப்படவில்லை.

இவ்விதம் தனித்தனியாக, போகங்களைமட்டும் பலன்களாக உடையவைபும், மோக்ஷத்தைமட்டும் பலனாக உடையவையுமான ப்ரயோகங்களைச் சொல்லிவிட்டு, போகம், கைவல்யம் இவ்விரண்டையும் ஒருங்கே கொடுக்கக்கூடிய ப்ரயோகத்தை மேலே சொல்லுகிறார்.

59. யஸ்து நாமஸஹஸ்ரேண
சுக்ரவாரே ஸமர்ச்சயேத் |
சக்ர ராஜே மஹாதேவீம்
தஸ்ய புண்யபலம் ச்ருணு ||

எவனொருவன் வெள்ளிக்கிழமையில் மஹாதேவியை ஸ்ரீசக்ரத்தில் இந்த நாம ஸஹஸ்ரத்தால் நன்றாக அர்ச்சனம் பண்ணுகிறானோ அவனுடைய (அவனுக்குக் கிடைக்கும்) புண்ய பலனை (சொல்லுகிறேன்) கேள்.

1. 'நாம ஸஹஸ்ரேண' என்பது ஒரே பதமாகக் கருதப் பட்டால் (இந்த) நாம ஸஹஸ்ரத்தினால் என்று அர்த்தமாகும். அல்லது நாம ஸஹஸ்ரேண என்றும் பிரிக்கலாம். அப்போது நாம என்பது ப்ரஸித்தியைக்காட்டும் அவ்யய பதமாகும். ஸஹஸ்ரம் என்ற பதமே இதுவரையில் சொல்லப்பட்ட ஸந்தர் பத்தையொட்டி நாமஸஹஸ்ரத்தைக் குறிக்கப்போதுமானது.

2. 'சுக்ரவாரே' என்பது முந்தி வந்தவைகளைப்பற்றி யாவஜ்ஜீவம் (உயிருள்ளவரையில்) என்று சொன்ன ரீதியாக ப்ரதி சுக்ரவாரமும் என்று அர்த்தமுடையது.

60. ஸர்வான் காமான் அவாப்யேஹ
ஸர்வ ஸௌபாக்ய ஸம்யுத: |
புத்ர பௌத்ராதி ஸம்யுக்தோ
புக்த்வா போகான் யதேப்ஸிதான் ||

இங்கேயே தன்னுடைய விருப்பங்கள் யாவற்றையும் அடைந்து, ஸகலவிதமான ஸௌபாக்யத்தையுடையவனாய், புத்ர பௌத்ராதிகளோடு கூடியவனாய், தான் இஷ்டப்பட்ட போகங் களை அனுபவித்துவிட்டு,

1. இஹ—இந்த (பூ) லோகத்திலேயே, இந்த பதத்தினால் அவனுக்கு இங்கு சொல்லப்பட்ட ப்ரயோகத்தின் மூலமாக ஏற்படும் புண்யமானது மிகவும் அதிகமானது என்று குறிக்கப் பட்டது.

'அத்யுத்கடை: புண்ய பாபை: இஹைவ பலமச்னுதே |'

என்றபடி புண்யமாவது, பாபமாவது மிகவும் அதிகமாக இருந் தால் அதின் பலனுடைய அனுபவமானது இந்த லோகத்தி லேயே—அதாவது, இந்த ஜன்மத்திலேயே—ஏற்படுமென்று சொல்லப்படும்.

2. ஸர்வ ஸௌபாக்ய ஸம்யுத: — ஸந்ததி, ஸம்பத்து, ஆரோக்யம், வித்யை, பலம் என்பவை முதலான ரூபங்களை யுடைய ஸௌபாக்யங்கள் யாவற்றையுமுடையவனாய், என்று அர்த்தம்.

3. புத்ர பௌத்ராதி ஸம்யுக்தோ — ஆதி என்ற பதத் தினால் பிள்ளையின் பேரன் (கொள்ளுப்பேரன்) முதலான

பந்துக்களும், ப்ருத்யர்கள் (வேலைக்காரர்கள்), ஸ்நேஹிதர்கள் இவர்களும் குறிக்கப்பட்டார்கள். 'ஸர்வ ஸௌபாக்ய ஸம்யுத:' என்ற பதத்தினாலேயே இவர்களெல்லோரும் சொல்லப்பட்டாலும் இப்படித் தனியாகச் சொன்னதினால் அவன் அவர்களுடன் கூடவே (அடுத்தபடி சொல்லப்பட்ட) போகங்களை அனுபவிப்பதாக தாத்பர்யம். அதாவது புத்ராதிகளுடன்கூட இஷ்டப்பட்ட போகங்களையெல்லாம் அனுபவித்துவிட்டு என்று அர்த்தம்.

61. அந்தே ஸ்ரீலலிதா தேவ்யா:
ஸாயுஜ்யம் அதிதுர்லபம் |
ப்ரார்த்தனீயம் சிவாத்யைச்ச
ப்ராப்னோத்யே ந ஸம்சய: ||

கடைசியாக, ஸாமான்யமாய்க் கிடைக்கக்கூடாததும், சிவன் முதலிய தேவர்களாலும் வேண்டப்படுவதுமான ஸ்ரீலலிதாம்பாளுடைய ஸாயுஜ்யத்தை அடைகிறான். அதில் ஸந்தேஹமில்லை.

1. அந்தே--இந்த தேஹம் விழுந்துபோன பிறகு, தேவையான மார்க்கத்தில்போய் என்று அர்த்தம். இதைப்பற்றி ஏற்கனவே வந்த 'ஸவ்யாப ஸவ்யமார்க்கஸ்தா' என்ற 912-வது நாமத்தில் பார்க்கவும்.

2. அதிதுர்லபமான ஸாயுஜ்யம் என்பதினால் கைவல்ய மோக்ஷமானது சொல்லப்பட்டது.

3. சிவாதிகளால் ப்ரார்த்திக்கப்படுவது என்பதினால் ப்ரம்ஹாவோடுகூட சிவன் முதலான தேவர்களெல்லோரும் கல்பாந்தத்தில் முக்தியடைவதைச் சொல்லப்பட்டது. ஸகுண ப்ரம்ஹோபாஸனை செய்தவர்கள் தேவையான மார்க்கத்தால் ப்ரம்ஹலோகத்தையடைந்து அங்குள்ள சிவன் முதலானவர்களுடன் ப்ரளயகாலம் வரையில் இருந்து, ஆத்மசிந்தனம்செய்து கொண்டு அங்குள்ள போகங்களை யனுபவித்துவிட்டு, ப்ரளயமேற்பட்டவுடன் ப்ரம்ஹாவோடுகூட அம்பாளிருக்கும்படியான ஸர்வோத்க்ருஷ்டமான லோகத்தை (பரமபதத்தை) சேருவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'ப்ரம்ஹணா ஸஹ தே ஸர்வே ஸம்ப்ராப்தே ப்ரதிஸஞ்சரே |
பரஸ்யாந்தே க்ருதாத்மான: ப்ரவிசந்தி பரம் பதம் ||'

(கூர்ம புராணம்)

இங்கு 'பரஸ்ய அந்தே' என்பதில் வரும் பரமென்ற பதமானது ப்ரம்ஹாவினுடைய ஆயுளைக் குறிப்பது.

ப்ரம்ஹண: பூர்ணமாயுர் யத் வர்ஷாணாம் சதகம் மதம் |
தத் பரம் நாம தஸ்யார்த்தம் பரார்த்தம் அபிதீயதே ||'

இந்த அர்த்தத்தை அனுஸரித்து இங்குவந்த 'அந்தே' என்ற பதத்தினால் 'பரஸ்யாந்தே' என்று சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம். (கைவல்ய) மோக்ஷத்தையடைவதற்கு ப்ரளய காலம்வரையில் ப்ரம்ஹலோகத்தில் தாமதிப்பதானது தோஷமுள்ளதாகச் சொல்லமுடியாது. போகம், மோக்ஷம் இவ்விரண்டையும் பலமாக உடைய இந்த ப்ரயோகத்தின் மூலமாக ஐஹிக போகங்களுக்குப் பிறகு ஆமுஷ்மிக போகங்கள் அவச்யம் ஏற்படுமாகையால் மோக்ஷமடைய தாமதமானால் யாதொரு கெடுதியுமில்லை.

4. இதே காரணத்தால் 'போகான்' என்ற பதமானது ஐஹிக, ஆமுஷ்மிக போகங்களிரண்டையும் குறிப்பதாகச் சொல்லலாம். இவ்விரண்டுவிதமான போகங்களையும் பக்தன் 'புத்ர பௌத்ராதி ஸம்யுக்த'னாக அனுபவிக்கிறான் என்று சொல்லப்பட்டது. கேவலம் தன்னுடைய ஆத்மஸ்வரூபத்தில் நிலைத்திருப்பது என்பதான மோக்ஷத்தில் அவர்களுடன் சேர்ந்திருப்பது அஸம்பாவிதமாகையால் புத்ரபௌத்ராதி ஸம்யுக்தனாக இருப்பது போகங்களை அனுபவிப்பதில் மட்டும்தான் என்று ஏற்படுகிறது.

இனி, மேலே சொல்லப்பட்ட பலனைவிட உயர்ந்ததான பலன் யாதொன்றும் கிடையாதாகையால் அவ்வித பலனையே (யாவத் ஜீவம் செய்யவேண்டிய ப்ரயோகத்தின் மூலமாக அல்லாமல்) ஸ்வல்பதினங்களுக்குள்ளாகவே அடையச்செய்யும் ப்ரயோகத்தை மேலே சொல்லுகிறார்.

62. ய: ஸஹஸ்ரம் ப்ராம்ஹணானாம்
ஏபிர் நாம ஸஹஸ்ரகை: |
ஸமர்ச்ய போஜயேத் பக்த்யா
பாயஸாபூப ஷட்ரஸை: ||

எவனொருவன் பக்தியோடு ஆயிரம் ப்ராம்ஹணர்களை இந்த ஸஹஸ்ர நாமங்களால் நன்றாகப் பூஜித்து, பாயஸம், அபூபம் முதலிய ஷட்ரஸோபேதமான வஸ்துக்களால் போஜனம் செய்விக்கிறானோ,

63. தஸ்மை ப்ரீணாதி லலிதா
ஸ்வஸாம்ராஜ்யம் ப்ரயச்சதி |
ந தஸ்ய துர்லபம் வஸ்து
த்ரிஷு லோகேஷு வித்யதே ||

அவனிடம் ஸ்ரீலலிதாம்பாளானவள் ப்ரீதியடைந்து தன்னுடைய ஸாம்ராஜ்யத்தை அவனுக்குக் கொடுக்கிறாள். அவனுக்குக் கிடைப்பதற்கரிதான வஸ்து இந்த மூன்றுலோகத்திலும் யாதொன்றுமில்லை.

1. இந்த ப்ரயோகத்தில் (முந்திய ப்ரயோகங்கள் சிலவற்றில் வந்த) யாவஜ்ஜீவம் (அனிசம்) என்பதான பதங்கள் சொல்லப்படவில்லை.

ஏவம் ய: குருதே பக்த்யா ஜன்ம மத்யே ஸக்ருன் நர: |
என்பதுபோல் இந்த ஸஹஸ்ர ப்ராம்ஹண போஜனத்தை ஆயுசுக்குள்ளாக ஒரு தடவை செய்தாலே போதுமானது.

2. 'ப்ராம்ஹணானும்' என்பதினால் ஸ்ரீவித்யோபாஸகர்களை மட்டும் சொல்லப்பட்டது.

3. பாயஸமென்பது பரமான்னம். அரிசி மிகக்குறைவாகவும் பாலை நிறையவுமுடையது. அபூபம் என்பது மாவைப் பிசைந்து செய்யப்படும் பூரி முதலியவைகள். இவைகளைப்பற்றி போஜனகுதூஹலம் முதலிய க்ரந்தங்களில் விபரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

4. 'ஸ்வ ஸாம்ராஜ்யம்'—தன்னுடன் அத்யந்தம் அபேதமாயிருப்பது, கைவல்யம் என்று அர்த்தம். இப்படிச்சொன்னது 'ஜகத்வ்யாபார வர்ஜம் ப்ரகரணாத் அஸன்னிஹிதத்வாத் ச' என்று ஔபநிஷதர்கள் (வேதாந்திகள்) சொல்வதை அனுஸரித்துச் சொல்லப்பட்டது. வாஸ்தவத்தில் இங்கு சொல்லப்பட்ட ஸாம்ராஜ்ய பதமானது ஜகத்வ்யாபாரத்தையும் சேர்த்துக் குறிக்கும்

இதையும் பக்தனுக்கு அம்பாள் கொடுப்பதாக இங்கு சொல்லப் பட்டது. அவ்விதம் சொல்வதினல் கேட்டிருப்பதற்கு ஹானி யாவது அச்ருத (கேள்விப்படாத) கல்பனையாவது ஏற்பட மாட்டாது.

5. ஜகத்வ்யாபாரம் என்பது ஜகத்தைப்பற்றிய ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் முதலியவைகளைக் குறிப்பது. வேதாந்தி களின் மதத்தின்படி ஜீவனுனவன் மோக்ஷத்தைப் பெற்று ஈச்வர ஸ்வரூபத்தையடையும்போது அவனுக்கும் ஈச்வரனுக்கும் ஸாயு ஜ்யம் ஏற்பட்டாலும் அவனுக்கு ஜகத்வ்யாபாரத்தைச் செய்யும் அதிகாரம் கிடையாதென்றும், அவ்வித அதிகாரமானது ஈச் வரன் ஒருவருக்கு மட்டுமே உண்டென்றும்,

'ஜகத்வ்யாபாரவர்ஜம் ப்ரகரணாத் அஸம்நிஹிதத்வாத் ச |'

என்று ப்ரம்ஹஸூத்ரம் (4—4—17) ஜகத்வ்யாபாராதிகரணத் தில் சொல்லப்பட்டிருக்கிறது.

6. வாஸ்தவத்தில் ஸாம்ராஜ்யமென்ற பதத்திற்கு பூர்ண மான அர்த்தத்தைக் கொடுக்கவேண்டுமே தவிர, வேதாந்தி களின் மதப்படி அதைக்குறைத்து ஜகத்வ்யாபாரத்தைத் தவிர பாக்கியெல்லா ஐச்வர்யமும்தான் இங்கு சொல்லப்பட்டதாக சொல்வதற்கு யாதொரு காரணமுமில்லையென்பதை பாஸ்கர ராயர் பலவிதமான காரணங்களைக்கொண்டு நிரூபித்திருக்கிருர். இந்த ப்ரயோகமானது முந்தியதைவிடப் பலனையுடையது என் பது இந்தக் காரணத்தாலே ஏற்படுகிறது. ஸ்ரீவித்யோபாஸகர் களான ஆயிரம் ப்ராம்ஹணர்களுடைய ஆசீர்வாதம் கிடைக்கும் போது பக்தனுக்கு அஸம்குசிதமான (குறைவில்லாத) ஸாம் ராஜ்யம் ஏற்படுவதில் ஒருவிதமான அஸம்பாவிதமும் கிடையாது.

7. இப்படி ஸாம்ராஜ்யம் கிடைப்பதில், ஒரே காலத்தில் அனேகம் பக்தர்கள் இந்த ப்ரயோகத்தைச்செய்தால் அதன் மூலமாக அவர்களெல்லோருக்கும் ஜகத்வ்யாபாரத்தில் ஸ்வா தந்தர்யம் ஏற்படுமே, அப்போது அவர்களுடைய எண்ணங் களில் பேதமேற்பட்டால் ஒன்றுக்கொன்று எதிரிடையாயிருக் குமே என்ற சங்கை ஏற்படும். அப்படியல்ல. ஸ்ருஷ்டிக்கப்படப் போகிற ப்ராணிகளுடைய கர்மங்களையனுஸரித்துத்தான் பக வான் ஸ்ருஷ்டியில் ப்ரவ்ருத்திக்கிருர் என்றும், அப்படிக்கில்லாமல்

அவர் இஷ்டப்படி ஸ்ருஷ்டித்தால் வைஷம்யம் (வித்யாஸம் பாராட்டுதல், பக்ஷபாதம்) நைர்க்ருண்யம் (இரக்கமில்லாமலிருப்பது) முதலியவைகளுக்கு இடங்கொடுக்கும் என்றும் வேதாந்திகளே சொல்லியிருக்கிறார்கள்.

'வைஷம்ய நைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத் ததாஹி தர்சயதி |'
(ப்ரம்ஹஸூத்ரம் 2—1—34)

ஸ்ருஷ்டியானது இப்படிக் கர்மானுஸாரமாக மட்டும் ஏற்படுவதால் ஸ்ருஷ்டிக்க ஸ்வாதந்த்ர்யமுள்ளவர்கள் பலராயிருந்தாலும் அவர்களுடைய ஸ்ருஷ்டியானது ஏக ரூபமாகத்தானிருக்குமே தவிர பேதப்படாது.

8. அப்போது, அவர்களுக்கு ஸ்வாதந்த்ர்யமுண்டென்று சொல்வதில் பங்கம் ஏற்படுமோவென்றால் அவர்கள் ஸ்வேச்சானுஸாரிகளாக இருந்தாலும், தங்களுக்குள் பரஸ்பரமிருக்கும் இச்சையை அனுஸரித்தே ப்ரவர்த்திப்பார்களாதலால் அவ்வித பங்கம் ஏற்படாது. இம்மாதிரி எட்டு ஸஹோதரர்கள் அம்பாளுடைய வரத்தினால் ஏக காலத்தில் இந்த ஸமஸ்தமான பூலோகத்தையும் யாதொரு பங்கமுமில்லாமல் ஆண்டுவந்ததைப்பற்றி வாஸிஷ்டராமாயணத்தில் குந்தந்தோபாக்யானத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

9. ஜகத்தின் ஸாம்ராஜ்யமானது ஈச்வரனுக்கு இயற்கை (ஸ்வாபாவிகம்) ஆயிற்றே, அது இந்த்ர பதவிமாதிரி கர்மாக்கள் செய்வதினால் கிடைக்கக்கூடியதல்லவே, அப்படி அவருக்கு ஸ்வபாவமாக இருப்பது பிறருக்குக் கிடைக்குமா என்ற ஸந்தேஹம் ஏற்படலாம். ஈச்வரனுக்கு ஸ்வாபாவிகமாக இருந்தபோதிலும், பிறருக்கு அது கர்மாவின் மூலமாகக்கிடைக்கும் என்று சொல்வதற்கு பாதகம் யாதொன்றுமில்லை. அவ்விதமாகக் கிடைப்பது ஸாலோக்யம் முதலான பலன்களிலிருந்தும் தெரிகிறது.

10. இவ்விதம் அனேக ஸமாதானங்களைக் கொண்டும் பல ச்ருதிவாக்யங்களைக்கொண்டும், உபாஸ ச்ரேஷ்டர்களுக்கு (ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயங்களாகிற கார்யங்களுள்பட) ஸாம்ராஜ்யம் பூர்ணமாக உண்டென்று பாஸ்கரராயர் தன்னுடைய பாஷ்யத்தில் ஸாதித்திருக்கிறார். வேதாந்தவாதிகள் சொல்லக்கூடிய ஆக்ஷேபங்களுக்கும் ஸமாதானம் சொல்லி

யிருக்கிறார். இந்த விஷயத்தைப்பற்றி நன்றாய் தெரிந்துகொள்ள விருப்பமுள்ளவர்கள் பாஷ்யத்தை மூலத்தில் பார்த்துக் கொள்ளும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறது.

11. இப்பேர்ப்பட்ட பூர்ண ஸாம்ராஜ்யம் உபாஸகனுக்குக் கிடைக்கும்போது அவன் விரும்பக்கூடிய வஸ்துக்களெல்லாம் அவனுக்குக் கிடைப்பது ஸுலபமான கார்யமென்பதாக,

'ந தஸ்ய துர்லபம் வஸ்து த்ரிஷு லோகேஷு வித்யதே |'

என்று சொல்லப்பட்டது. உபநிஷத்துக்களில் ஸர்வோத்தமமான உபாஸனையையுடையவனைப்பற்றிச் சொல்லுகையில்,

'ஸங்கல்பாதேவ அஸ்ய பிதர: ஸமுத்திஷ்டந்தி |'

என்பதுபோன்ற ச்ருதிவாக்யங்களில் அவனுடைய மஹிமையானது சொல்லப்பட்டிருந்தபோதிலும், ஜகத் ஸாம்ராஜ்யம் என்ற ஒரு வஸ்துமட்டும் அவனுக்குக் கிடைப்பதில்லையென்றும், அதைத் தவிர்த்ததான மற்ற வஸ்துக்களெல்லாம் அவனுக்குக் கிடைக்குமென்றும் வேதாந்திகள் சொல்லுவார்கள். அவ்விதமான மஹிமையின் ஸங்கோசமானது (குறைவானது) அம்பாளுடைய உபாஸகனுக்குக் கிடையாதென்பதாக இங்கு சொல்லப்பட்டது. இங்கு சொல்லப்பட்ட ப்ரயோகத்தைச்செய்த உபாஸகனுக்கு அகுண்டிதமான (குறைவில்லாத) மஹிமையுண்டு ஆகையால் அவனுக்குக் கிடைக்காத வஸ்து மூன்று லோகத்திலும் யாதொன்றுமில்லை என்றும், ஆகவே ஸாம்ராஜ்யமென்ற வஸ்துவும் அவனுக்கு ஸுலபமாகக் கிடைக்கும் என்று சொல்லப்பட்டது.

12. இப்படிப்பட்ட ப்ரயோகமானது அதிரஹஸ்யமானதாகையால் அதைப்பற்றிய விபரங்கள் இவ்விடத்தில் சொல்லப்படவில்லை. ஆயினும் ஸ்ரீலலிதாத்ரிசதியில் (அதின்படி செய்யப்படும் த்ரிசத ப்ராம்ஹண போஜனத்தைப்பற்றிச் சொல்லிவிட்டு ஸஹஸ்ர ப்ராம்ஹணபோஜனமும் அவ்விதமாகவே செய்யப்படவேண்டுமென்பதாகக் குறிப்பிடப்பட்டது.

'ரஹஸ்ய நாமஸாஹஸ்ர போஜனேப் யேவமேவ ஹி |
ஆதௌ நித்யாபலிம் குர்யாத் பச்சாத் ப்ராம்ஹண போஜனம் ||'

13. ஸஹஸ்ர ப்ராம்ஹண போஜனத்தைப்பற்றி போதாயனருடைய தர்ம ஸூத்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த கண்டத்திற்கு பாஸ்கரராயர் ஒரு வ்யாக்யானம் எழுதியிருப்பதாகத் தெரிகிறது. அதில் அந்த விஷயத்தைப்பற்றி விசேஷமாகச் சொல்லியிருப்பதுடன் இந்த ஸஹஸ்ரநாம வ்யாக்யானத்திலும் பல விஷயங்கள் சொல்லியிருக்கிறார். இதில் இரண்டு பாகங்களுண்டு. முதலாவது நித்யாபலி என்பது. (சில புஸ்தகங்களில் நித்யபலி என்று கண்டிருப்பது தவறு. ஷோடச நித்யைகளைக் குறித்துச் செய்யப்படுவதால் இந்த கர்மாவுக்கு நித்யாபலி என்று தான் பெயர்.) இதினுடைய க்ரமமானது:—

'மஹா ஷோடசிகாரூபான் விப்ரான் ஆதௌ து போஜயேத் |
அப்யக்தான் கந்ததைலேன ஸ்நாதானுஷ்ணேன வாரிணா ||
அப்யர்ச்ய வஸ்த்ர கந்தாத்யை: காமேச்வர்யாதி நாமபி: |
அபூபை: சர்க்கராஜ்யைச்ச பலை: புஷ்பை: ஸுகந்திபி: ||
வித்யாவிதோ விசேஷேண போஜயேத் ஷோடசத்விஜான் |
ஏவம் நித்யாபலிம் குர்யாத் ஆதௌ.............. ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த நித்யாபலி செய்தவுடன்,

'..........................ப்ராம்ஹண போஜனம் |
த்ரிசதைர் நாமபி: பச்சாத் ப்ராம்ஹணான் க்ரமசோऽர்ச்சயேத் ||
தைலாப்யங்காதிகம் தத்யாத் விபவே ஸதி பக்தித: |
சுக்லப்ரதிபதாரப்ய பௌர்ணமாஸ்யாவதி க்ரமாத் ||
திவஸே திவஸே விப்ரா: போஜ்யா விம்சதி ஸங்க்யயா |
தசபி: பஞ்சபிர்வாபி த்ரிபிரேகேன வா தினை: ||
த்ரிம்சத் ஷஷ்டி: சதம் விப்ரா: ஸம்போஜ்யா: த்ரிசதம் க்ரமாத் |
ஏவம் ய: குருதே பக்த்யா ஜன்மமத்யே ஸக்ருன்நர: |
தஸ்யைவ ஸபலம் ஜன்ம முக்திஸ்தஸ்ய கரே ஸ்த்திதா ||'

என்று ப்ராம்ஹண போஜனத்தைப்பற்றியும், அதின் பலனைப் பற்றியும் (ஸ்ரீலலிதாத்ரிசதியில்) சொல்லப்பட்டது.

14 இவ்விதமான நித்யாபலி, ப்ராம்ஹண போஜனம் என்ற இரண்டு கர்மாக்களில் இரண்டும் ஸமப்ரதானமா அல்லது ஒன்றுக்கொன்று அங்காங்கி பாவமானவைகளா என்ற விஷயத்தைப்பற்றி பாஸ்கரராயர் நீண்டதோர் விசாரணை செய்திருக்கிறார். முதலில் இரண்டும் ஸமப்ரதானமென்ற பூர்வ பக்ஷத்தை

விஸ்தாரமாக எடுத்துச்சொல்லி, பிறகு நித்யாபலியானது ப்ராம்ஹண போஜனத்திற்கு அங்கமென்பதாக பலவிதமான ந்யாயங்களால் ஸித்தாந்தப்படுத்தியிருக்கிறார். அதற்குமேல் ப்ரயோக விதியையும் சொல்லியிருக்கிறார். இதைச் செய்ய விரும்புவோர்கள் பாஷ்யத்தின் மூலத்தையே பார்த்துக்கொள்ளவேண்டும்.

இவ்விதமாக முப்பத்தைந்து ச்லோகங்களால் இந்த நாம ஸாஹஸ்ரமானது புருஷார்த்த ப்ரதாயகமாகவும், ரஹஸ்யதமமாகவுமிருப்பதைப்பற்றிச் சொல்லிவிட்டு, அதனடுத்தபடியாக,

'இதம் விசேஷாத் ஶ்ரீதேவ்யா: ஸ்தோத்ரம் ப்ரீதிவிதாயகம் |'

என்று சொல்லியபடி இந்த நாமஸாஹஸ்ரத்தினால் அம்பாளுக்கு விசேஷமான ப்ரீதி ஏற்படுவதைப்பற்றி மேலே சொல்லுகிறார்.

64. நிஷ்காம: கீர்த்தயேத் யஸ்து
நாமஸாஹஸ்ர முத்தமம் |
ப்ரம்ஹஞானம் அவாப்னோதி
யேன முச்யேத பந்தனாத் ||

நிஷ்காமனாக எவனொருவன் இந்த உத்தமமான நாம ஸாஹஸ்ரத்தைக் கீர்த்தனம்செய்கிறானோ அவன் பந்தங்களிலிருந்து விடுவிப்பதான ப்ரம்ஹஞானத்தை அடைகிறான்.

1. நிஷ்காமனென்றால் விஷயங்களில் (ஆசை, விருப்பம்) இல்லாதவன் என்று அர்த்தம்.

2. ப்ரம்ஹ ஞானம் என்பது ஜீவனும், ப்ரம்ஹமும் அபேதமென்பதைப்பற்றியிருக்கும் (அதாவது அவ்வித அபேதத்தை மறைக்கும்) ப்ரமத்தைப் போக்குவதும், மஹாவாக்யங்களால் ஏற்படுவதும், ஆத்மாவை மட்டுமே விஷயமாகவுடையதும், நிர்விகல்பமென்று சொல்லப்படும் கடைசி வ்ருத்தியின் ரூபமானதும், அனுபவாத்மகமுமான ஞானம். இவ்விதமான ஞானமேற்பட்டவுடன் உபாஸகனானவன் பந்தத்திலிருந்து விடுவிக்கப்படுவதாகச் சொல்லப்பட்டது. பந்தம் என்பது அனாதியாக இருப்பதும், நான், என்பது முதலான ரூபங்களையுடைய வாஸனைகள் யாவற்றையும் குறிக்கும்.

3. இந்த ப்ரயோகம் செய்வதற்கு ஸங்கல்பம் செய்யும் போது ஸாதாரணமாகச்சொல்லும் 'உபாத்த துரித க்ஷயார்த்தம்' என்ற பதங்களுக்குப் பதிலாக 'ஸ்ரீ த்ரிபுரஸுந்தரீ ப்ரீத்யர்த்தம்' என்று சொல்லவேண்டும். இவ்விதம் ஸங்கல்பம் செய்தாலேயே ப்ரம்ஹஞானமானது ஏற்பட்டுவிடுமென்பதாகச் சொல்லப் பட்டது. ஆயினும், இங்கும் (அம்பாளுடைய ப்ரீதி கிடைக்க வேண்டுமென்பதான) காமனையிருக்கும்போது இதை நிஷ்காம ப்ரயோகமென்று எவ்விதம் சொல்லக்கூடுமென்ற ஸந்தேஹம் தோன்றலாம். அப்படியல்ல. விஷயங்களைப்பற்றிய காமனை யிருந்தால்தான் ஸகாமமென்று சொல்வது வழக்கம். ஆகை யினால்தான் 'பரமேச்வர ப்ரீத்யர்த்தம்' என்ற ஸங்கல்பத்தோடு கூடிய கர்மாவை நிஷ்காமனென்றே சொல்லப்படும்.

'ஸ்ரீமாது: ப்ரீதயே நாம ஸாஹஸ்ரம் யஸ்து கீர்த்தயேத் |'

என்று சொல்லாமல் 'நிஷ்காம: கீர்த்தயேத் யஸ்து' என்று சொல்லப்பட்டதினால், இந்த ப்ரயோகம் செய்கிறவன் ஒரு பொழுதும் விஷயகாமனையையுடைய ப்ரயோகத்தைச் செய்யக் கூடாது என்று காட்டப்பட்டது. இதேமாதிரியாக,

'நித்ய நைமித்திகைரேவ குர்வாணோ துரிதக்ஷயம் |'

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்விதம் ப்ரம்ஹ ஞானத்தைக்கொடுக்கும் இந்த ப்ரயோ கத்தைச் செய்கிறவன் ஒருக்கால் ப்ரமாதத்தினால் (தவறிப்போய் அல்லது மறந்துபோய், அல்லது கவனக்குறைவினால்) காமத்தை யுத்தேசித்து ப்ரயோகம் செய்தால் அப்போது அவன் விரும்புகிற காமனையெல்லாம் கிடைக்குமென்பதாக மேலே சொல்லுகிறார்.

65. தனார்த்தீ தனமாப்னோதி
யசோர்த்தீ ப்ராப்னுயாத் யச: |
வித்யார்த்தீ சாப்னுயாத் வித்யாம்
நாமஸாஹஸ்ர கீர்த்தனாத் ||

இந்த நாம ஸாஹஸ்ரத்தைக் கீர்த்தனம் செய்வதினால் தனத்தை விரும்புகிறவன் தனத்தை யடைகிறான். யசஸ்ஸை விரும்புகிறவன் யசஸ்ஸை அதிகமாக அடைகிறான். வித்யை விரும்புகிறவன் வித்யை அடைகிறான்.

1. இங்கு வித்பார்த்தீ என்று சொன்னது வேதம், சாஸ்த்ரம் முதலிய அபரிமிதமான வித்யைகளையடைய விரும்புவனைப்பற்றிச் சொல்லப்பட்டதே தவிர, ஸ்ரீவித்யையை அடைய விரும்புவனைப் பற்றியல்ல. ஏனென்றால், ஸ்ரீவித்யை உபதேசமாகி உபாஸகனுயில்லாதவனுக்கு இந்த ப்ரயோகம் செய்வதற்கு அதிகாரமில்லையென்றும், அனதிகாரியாயிருப்பவன் செய்தால் பலமேற்படாததோடு அனர்த்தமும் ஏற்படுவதாகச் சொல்லப்படுவதால் ஸ்ரீவித்யையை இங்கு வித்யை என்ற பதத்தினால் குறிப்பிடப்படவில்லை.

2. விஷயகாமனை பொதுவாக இல்லாதிருப்பதை நிஷ்காமத்வம் என்று சொல்லப்படும். நடுவில் விஷயகாமனை ஒருதடவை ஏற்பட்டாலும், நிஷ்காமத்வத்திற்கு பங்கமேற்படும். நிஷ்காமமாக ப்ரயோகம்செய்ய ஆரம்பித்து நடுவில் புத்தி சாஞ்சல்யத்தினால் ஏதாவது ஒரு காமனையையும் உத்தேசித்து ப்ரயோகம் செய்தால், அப்போது நிஷ்காம ப்ரயோகமாயிருந்தாலும், காமனை கலப்பதினால் பலமானது குறைவுற்று அந்தந்த காமனை ஏற்படுமே தவிர ப்ரம்ஹஞானம் கிடைக்காது என்பது தாத்பர்யம்.

3. அல்லது, வித்யா சப்தமானது ப்ரம்ஹஞானமென்றும் சொல்லலாம். 'அம்பா ப்ரீத்யர்த்தம்' என்பதுபோல 'ப்ரம்ஹ ஞான ப்ராப்த்யர்த்தம்' என்று ஸங்கல்பம் செய்து ப்ரயோகம் செய்தாலும் அவ்வித ஞானம் கிடைக்குமென்பது தாத்பர்யம்.

4. தனம், யசஸ் இவற்றைச் சொன்னது த்ருஷ்டாந்தத்திற்காகவே தவிர வேறல்ல. தனத்தை விரும்புகிறவன் தனத்தையடைவான். அதேமாதிரி எதைதை விரும்பிச் செய்தாலும் அததை அடைவான் என்று தாத்பர்யம். இதனால், மேலுக்குமேல் உத்க்ருஷ்டமான பலன்கள் கிடைக்கச்செய்யும் ப்ரயோகங்களைப் பற்றி சொல்லிக்கொண்டேவந்து ஸர்வோத்க்ருஷ்டமான ப்ரயோகத்தைப்பற்றிச் சொல்லிவிட்டு, அதற்குமேல் (திரும்பவும்) தனம், யசஸ் முதலியவைகள் கிடைப்பதைப்பற்றிச் சொல்லப்படுவது பொருத்தமற்றது என்று சொல்லக்கூடிய ஆக்ஷேபமானது நீக்கப்பட்டது.

66. நானேன ஸத்ருசம் ஸ்தோத்ரம்
போக மோக்ஷ ப்ரதம் முனே |
கீர்த்தனீயமிதம் தஸ்மாத் போக
மோக்ஷார்த்திபுர் நரை: ||

ஹே முனே! போகம், மோக்ஷம் இவையிரண்டையும் கொடுக்கக்கூடிய ஸ்தோத்ரம் இதற்கு ஸமானமானது ஒன்றுமில்லை. ஆகையினால் போக மோக்ஷங்களை விரும்பும் நரர்கள் அதை கீர்த்தனம் செய்யவேண்டும்.

1. இதற்கு ஸமானமான ஸ்தோத்ரம், அதாவது, நிஷ்காம ப்ரயோகம்செய்ய ஆரம்பித்து அதிலிருந்து நழுவி காமனையோடு செய்தாலும், அதனால் கெடுதல் செய்யாமல் விரும்பப்பட்ட அந்தந்த காமனையைக் கொடுக்கும் இந்த ஸ்தோத்ரம் மாதிரி என்று அர்த்தம். ஆகவே இதற்கு ஸமானமான ஸ்தோத்ரம் வேறு டாதொன்றுமில்லையென்று சொல்லப்பட்டது.

2. 'போகமோக்ஷப்ரதம்'—போக ப்ரதமான ப்ரயோகத்தைச் செய்ய ஆரம்பித்துத் தவறி விட்டாலும், மோக்ஷத்தைக் கொடுக்கிறதென்றும், மோக்ஷ ப்ரதமான ப்ரயோகத்தைச்செய்ய ஆரம்பித்துத் தவறிவிட்டாலும், போகத்தைக் கொடுக்கிறதென்றும், இரண்டையும் அபேக்ஷித்துச் செய்தால் இரண்டையும் கொடுக்கிறதென்றும், அப்படிக்கொடுப்பதில் முதலில் போகத்தையும் பிறகு மோக்ஷத்தையும் கொடுக்கிறதென்றும் அர்த்தம். இதேவிதமாக ப்ரம்ஹாண்ட புராணத்தில்,

'தஸ்மாத் அசேஷலோகானாம் த்ரிபுராராதனம் வினா |
நஸ்தௌ போகாபவர்கௌது யௌகபத்யேன குத்ரசித் ||
தன்மனா: தத்கதப்ராணா: தச்யாஜீ தத்கதேஹக: |
சதாத்மைக்யேன கர்மாணி குர்வன் முக்திம் அவாப்ஸ்யதி |
ஏதத் ரஹஸ்யமாக்யாதம் ஸர்வேஷாம் ஹிதகாம்யயா ||'

என்று சொல்லப்பட்டது.

3. அல்லது, முந்திய ச்லோகத்தில் வரும் வித்யை என்ற பதத்திற்கு ப்ரம்ஹஞானமென்று அர்த்தம் செய்தால், அதற்கு ஸாதனமான வைராக்யத்தைக் கொடுப்பதாக இங்கு 'போக மோக்ஷப்ரதம்' என்று சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

போகங்களிலிருந்து—விஷயங்களிலுள்ள விருப்பங்களிலிருந்து, மோக்ஷம் - விடுதலையைக் கொடுப்பது, அதாவது அவற்றினுடைய வாஸனையைப் போக்கடிப்பது 'போகமோக்ஷப்ரதம்' இதே விதமாக அஷ்டாவக்ரகீதையில்,

'முக்திம் இச்சஸி சேத் தாத விஷயான் விஷவத் த்யஜேத் |'

என்று சொல்லப்பட்டது.

இப்படி இந்த விஷயத்தைப்பற்றிச் சொல்வதை இத்துடன் நிறுத்திக்கொண்டு, தாந்த்ரிகர்மாக்களைச் செய்யவேண்டுமென்ற நிர்பந்தமில்லாதவர்களும் ச்ரௌத, ஸ்மார்த்த கர்மாக்களில் ஈடுபட்டவர்களுமாயிருப்பவர்களுக்கும் இந்த நாமஸாஹஸ்ர கீர்த்தனமானது உபகாரகம் என்பதை மேலே சொல்லுகிறார்.

67. சதுராச்ரம நிஷ்டைச்ச
கீர்த்தனீயமிதம் ஸதா |
ஸ்வதர்ம ஸமனுஷ்டான
வைகல்ய பரிபூர்த்தயே ||

நான்கு வர்ணத்திலிருப்பவர்களாலும் தங்கள் தர்மத்தை சரிவர அனுஷ்டிப்பதில் ஏற்படக்கூடிய குறைவுகளைப் பூர்த்தி செய்வதற்காக இந்த நாமஸாஹஸ்ரமானது எப்போதும் கீர்த்தனம் செய்யப்படவேண்டும்.

1. ப்ரம்ஹசாரி, க்ருஹஸ்தன், வானப்ரஸ்த்தன், ஸன்யாஸி, இவர்களுக்குள் அவாந்தரமான பேதங்கள் எல்லாவற்றையும் சேர்த்து சதுராச்ரமமென்று சொல்லப்பட்டது.

2. ஸமனுஷ்டானமென்பது சாஸ்த்ரப்படிக்கு அனுஷ்டிப்பது. சதுராச்ரமிகளுக்கு ச்ருதி, ஸ்ம்ருதிகளில் என்னென்ன கர்மாக்கள் விதிக்கப்பட்டிருக்கின்றனவோ, அவையெல்லாம் சரிவரவும், எல்லா அங்கங்களை விடாமலும் செய்கிறவனுக்குத்தான் பலப்ரதமாயிருப்பவை. அப்படி எல்லா அங்கங்களையும் விடாமல் செய்வதானது இக்காலத்தியவர்களுக்கு அனேகமாய் முடியாத கார்யம். இதைப்பற்றி பாஸ்கரராயர் தன்னுடைய சிவஸ்தவத்தில் பின்வருமாறு சொல்லியிருக்கிறார்.

'ஸ்வாமின் அங்கேஷு ஸர்வேஷ்வபி விரசிதேஷ்வேவ கர்மாணி கிஞ்சித்
துச்சம் யச்சந்தி நோ சேத் நிரயதுரவடே ஸம்சயம் வாஸயந்தி |
மந்த்ரைர் யந்த்ரார்த்த போதான் குருகுல நியமான் தேசகாலார்த்தசோதாத்
காடம் கூடம் ச தத்வாத் கதம் அதிகடினோ பேயுஷீ சேமுஷீ ந: ||'

ஆகவே அங்கலோபம் அவச்யம் ஏற்படுமாகையால் அத னால் நேரிடக்கூடிய பாபத்தைப் போக்கடித்து அதின் மூலமாக ஸாத்குண்யத்தை ஸம்பாதிப்பதற்காக இந்த நாம ஸாஹஸ்ர கீர்த்தனமானது எல்லோராலும் கட்டாயம் செய்யவேண்டிய தென்று இங்கு சொல்லப்பட்டது. இதையேதான் தேவீபாக வதத்தில் மூன்றாவது ஸ்கந்தத்தில் அம்பாளால் தேவர்களுக்குச் சொல்லப்பட்டது.

'மன்னுமோச்சாரணாத் ஸர்வே மகேஷு ஸகலேஷு ச |
ஸதா த்ருப்தாச்ச ஸந்துஷ்டா: பவிஷ்யத்வம் ஸுரா: கில ||'

3. இதனால் இந்த நாமஸாஹஸ்ரத்தின் கீர்த்தனமானது க்ரத்வர்த்தம், புருஷார்த்தம் என்ற இரண்டு ரூபமாயுமிருப்பது சொல்லப்பட்டது கவனிக்கவேண்டிய விஷயம்.

இவ்விதம் கர்மாக்கள் செய்வதில் அங்கலோபங்கள் ஏற் படக்கூடியதாயிருந்தாலும், அவ்வித லோபங்களுக்கு ப்ராயச் சித்தமாகச் செய்யவேண்டிய கர்மாக்களைப்பற்றி அங்கங்கே சொல்லப்பட்டிருப்பதால், அவைகளைச் செய்தாலேயே ஸாத்குண் யம் ஏற்படுமே, அப்படிக்கிருக்கையில் இந்த ஸஹஸ்ரநாம கீர்த் தனத்தினால் என்ன ப்ரயோஜனம் என்று தோன்றக்கூடிய ஸந் தேஹத்திற்கு ஸமாதானம் மேலே சொல்லுகிறார்.

68. கலௌ பாபைக பஹுளே
தர்மானுஷ்டான வர்ஜிதே |
நாமானு கீர்த்தனம் முக்த்வா
ந்ருணாம் நான்யத் பராயணம் ||

பாபமே மேலிட்டிருப்பதும், தர்மானுஷ்டான மில்லாதது மான கலியுகத்தில் நரர்களுக்கு நாமகீர்த்தனத்தை விட்டால் வேறு ஆச்ரயம் கிடையாது.

1. தர்மமானது ஆதியில் நான்கு பாதங்களுடன் இருந்த தில் மூன்று பாதங்கள் யுக க்ரமத்தில் பாபத்தினால் மறைந்து விட்டதாகவும், கலியுகத்தில் ஒரு பாதத்தோடுதான் இருப்ப தாகவும் சொல்லப்படும். அதனால்தான் அதை இங்கு பாபைக பஹுளம் என்று சொல்லப்பட்டது.

2. அனுகீர்த்தனமென்றால் தொடர்ந்தாற்போல் அல்லது வெளிப்படையாகச் சொல்லுவது.

3. தங்கள் தங்கள் கர்மாக்களை மட்டும் செய்துகொண்டு நாமானு கீர்த்தனத்தை விட்டுவிட்டிருப்பவர்களுக்கு வேறு ஆச்ர யம் கிடையாதென்று இங்கு சொல்லப்பட்டது. வேறு ப்ராயச்சித் தங்கள் ச்ருதி, ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்டிருப்பவையெல்லாம் நாமானு கீர்த்தனமானது எப்படி வைகல்ய பரிபூரகமாயிருக்கிற தோ அம்மாதிரி அவையில்லாதபடியால், அவற்றை ஆச்ரயமாக ஒப்புக்கொள்ளப்படவில்லை. இவ்விதம் இதர ப்ராயச்சித்தங்களை விட நாமானு கீர்த்தனத்திற்கிருக்கும் விசேஷ மஹிமையானது,

'ப்ராயச்சித்தான் யசேஷாணி தப: கர்மாத்மகானி வை |
யானி தேஷாம் அசேஷாணாம் க்ருஷ்ணானுஸ்மரணம் பரம் ||'

என்று க்ருஷ்ண நாமத்தைப்பற்றியும்,

'யத் க்ருத்யம் தன்னக்ருதம் யதக்ருத்யம் க்ருத்யவத் ததாசரிதம் |
உபயோ: ப்ராயச்சித்தம் சிவ தவ நாமாக்ஷரத்வயம் கதிதம் ||'

என்று சிவநாமத்தைப்பற்றியும்,

'கிமன்யேன முனிச்ரேஷ்டா: ப்ராயச்சித்தேன கர்மணா |
ப்ராயச்சித்தம் அகௌகஸ்ய தேவீநாமானு கீர்த்தனம் ||'

என்று அம்பாளுடைய நாமத்தைப்பற்றியும் சொல்லப்பட்டிருக் கிறது.

4. மேலே சொல்லிய மூன்று ச்லோகங்களில் மூன்றாவதில் 'ப்ராயச்சித்தேன கர்மணா' என்பதில் கவனிக்கவேண்டிய விஷ யம் ஒன்றிருக்கிறது. ப்ராயச்சித்தத்தையும் ஒரு கர்மாவாகச் சொல்லப்பட்டிருப்பதால், அதையும் ஸாங்கமாகச் செய்தால்தான் பலப்ரதமாயிருக்கும். ஆயினும் ஏற்கனவே சொல்லியபடி, அங்கலோபமில்லாமல் எந்தக் கர்மாவையும் செய்வது ஸாதாரண மாக முடியாதாகையால், இந்த ப்ராயச்சித்த கர்மாவைச்

செய்வதிலும் அங்கலோபமேற்படக்கூடும். அப்போது அதற்குத் திரும்பவும் ப்ராயச்சித்தத்தைத் தேடவேண்டிவரும். இவ்விதமாக மேலுக்குமேல் ப்ராயச்சித்தத்தைத் தேடவேண்டிய ச்ரமம் யாதொன்றும் நாமகீர்த்தனத்திற்குக் கிடையாது. நாமகீர்த்தனத்தை கர்மாவென்று சொல்லக்கூடியதாயிருந்தாலும், அதற்குக்கண்டு பிடிக்க முடியாத அங்கம் யாதொன்றும் கிடையாதாகையால் அங்கலோபம் ஏற்பட ந்யாயமில்லை. ஏனென்றால் நாம ஸ்மரணம் செய்தாலேயே பாபமானது போய்விடுவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. எந்தக் காரணத்தைக்கொண்டு நாமோர்ச்சாரணம் செய்தாலும் அது பாபத்தைப் போக்கும்.

'ஸாங்கேத்யம் பாரிஹாஸ்யம் வா ஸ்தோபம் ஹேளனமேவவா |
வைகுண்டநாம க்ரஹணம் அசேஷாகஹரம் விது: ||'

(விஷ்ணு பாகவதம்)

(ஸாங்கேத்யமென்றால் புத்ரன் முதலானவர்களுக்குப் பெயரிடுதல். ஸ்தோபமென்றால் அர்த்தமில்லாத சப்தம்.)

'அவசேனாபி யன்னாம்ன: கீர்த்தனாத் முச்யதே நர: |
ஸ கதம் ந மகாதேவ: ஸேவ்யதே புத்திசாலிபி: ||'

(சிவரஹஸ்யம்)

'அஸ்பஷ்டமபி யன்னாம ப்ரஸங்கேனாபி பாஷிதம் |
ததாதி வாஞ்சிதானர்த்தான் துர்லபானபி ஸர்வதா ||'

(தேவீபாகவதம்)

'மதாத் ப்ரமாதாத் உன்மாதாத் உத்ஸ்வப்னாத் ஸ்கலனாதபி |
கதிதம் நாம தே கௌரி ந்ருணாம் பாபாபனுத்தயே ||'

(சக்தி ரஹஸ்யம்)

(மதமென்பது ஸுராபானம் முதலியவற்றால் உண்டாவது. ப்ரமாதமென்பது அஜாக்ரதை, கவனமில்லாதிருத்தல். உன்மாதமென்பது பூதங்கள் முதலானவற்றின் ஆவேசம். உத்ஸ்வப்னமென்பது நித்ரையில் பேசுவது. ஸ்கலனமென்பது ஒன்றைப் பேச நினைத்து ஆரம்பித்து அதில்லாமல் வேறொரு சப்தத்தைச் செய்வது.) இவ்விதமான வகைகளிலெல்லாம்கூட அம்பாளுடைய நாமமானது சொல்லப்பட்டால் ஸகல பாபமும் போய்விடுமென்பதாகச் சொல்லப்பட்டது.

5. ந்யாயங்களில் கூபகானக ந்யாயமென்பது ஒன்று உண்டு. அது மஹாபாஷ்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஒருவன் தாக சாந்திக்காகக் கிணறு வெட்டும்போது அதற்குள்ளிருக்கையில் வெட்டிய மண்ணில் கொஞ்சம் அவன் பேரில் விழுந்தால் கிணற்றில் ஊறும் ஜலமானது அவனுடைய தாக சாந்திக்கு ப்ரயோஜனமாயிருப்பதுடன் (அந்தக் கார்யத்திலிருக்கும்போது) அவன்மீது விழுந்த மண்ணை அலம்புவதற்கும் உபயோகப்படும். இதைத்தான் கூபகானக ந்யாயமென்று சொல்லப்படும். அம்மாதிரி, பாபங்களைப் போக்குவதற்காக செய்யப்படும் நாமஸ்மரணமும் ஏற்கனவேயுள்ள பாபத்தைப் போக்குவதுடன் அவ்வித ஸ்மரணத்தில் ஏற்படக்கூடிய அங்கலோபத்தினுண்டாகும் பாபத்தையும் போக்கிவிடும். ஆகவே நாமஸ்மரணத்தை ப்ராயச்சித்த கர்மாவாக வைத்துக்கொண்டாலும், அது தான் மேலானது என்பது இந்தக் காரணத்தாலும் ஏற்படுகிறது.

6. இந்த அர்த்தத்தில் பாஸ்கரராயரால் தன் பாஷ்யத்தின் கடைசியில்,

'ததாப்யந்த: ஸந்த: ஸதயஹ்ருதயா நாமமஹிமா—
ப்யபூர்வஸ் தஸ்மான் மே ந கலு கலபாபோபய பயம் ||'

என்பதாகச் சொல்லப்பட்டது. (அதாவது, தான் இந்த பாஷ்யம் செய்ததில் அனேகம் பிழைகள் இருக்கக்கூடியதாயிருந்தபோதிலும், ஸாதுக்கள் தயவோடுகூடிய ஹ்ருதயத்தையுடையவர்களாகையாலும், நாமங்களின் மஹிமையானது அபூர்வமானதாலும் தனக்கு கெட்டவர்களிடமிருந்து பயமும், பாபத்திலிருந்து பயமும், ஆக இவ்விரண்டு விதமான பயமும் கிடையாதென்று சொல்லப்பட்டது.) நாமமஹிமையானது அபூர்வமென்று சொன்னதின் தாத்பர்யம்— ப்ராயச்சித்த கர்மாவாக இருப்பதினால் பாபத்தைப் போக்குவதான பூர்வ பலனோடிருப்பதைத்தவிர, தன்னுடைய (நாமகீர்த்தன கர்மாவினுடைய) அங்கலோபத்தினால் ஏற்படும் பாபத்தைப் போக்குவதான அபூர்வ பலனோடு இருப்பதாகச் சொல்லப்பட்டது.

7. நாமகீர்த்தனம் செய்வதானது ச்ருதி, ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்ட ப்ராயச்சித்த கர்மாக்கள் ஸாங்கமாயிருக்கும்படியாகச் செய்வதற்கு உபயோகப்படட்டுமே என்று சிலர்

சொல்லலாம். அப்படியல்ல. இதனால்தான் பாஸ்கரராயருடைய 'சிவஸ்தவ'த்தில் பின்வருமாறு சொல்லப்பட்டது.

'வேதா வைதாபராதானபி சிவ பஹூதா தான் ஸமாதாதும் ஆதாத்
ப்ராயச்சித்தானி வித்தாதி பஜனஸூவிதேயானி வைஷம்யபாஞ்ஜி |
கச்சேऽபச்சேதமாப்தே புனரபி யஜனம் பூர்ண யக்ஞாங்கராயே
த்வேகால்பாஞ்யேன பூர்ணுஹூதிரிதிபஹூசஸ் தத்வமேதன் ந ஜானே ||'

'க்ருத்யஸ்யாகரணேऽப்யக்ருத்ய காணேऽப்யுக்தம் புராணகிஷூ
ப்ராயச்சித்தகணே பரம் சிவ சிவேத்யுச்சாரணம் பக்தித: |
க்ருத்வா கர்ம மஹேச தத்ப்ரதிஸமாதானய சேத் த்வத் ஸ்ம்ருதி:
ஸாதாவேவ க்ருதா ந தாரயதி கிம் தஸ்மாத் த்யஜாமி க்ரியா: ||'

[செய்யவேண்டியதைச் செய்யாதிருந்தாலும், செய்யக்கூடாததைச் செய்தாலும் அவற்றிற்கு ப்ராயச்சித்தங்களாக இருப்பவைகளில் பக்தியோடு சிவ சிவ என்று சொல்வது மேலானது என்பதாகப் புராணங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி கர்மாவைச்செய்து அதற்கு ஸமாதானமாக (பூர்த்திகரமாக) உன் நாமத்தைச் சொல்வதாயிருந்தால், அப்படிப்பட்ட நாமஸ்மரணத்தை நான் ஆதியிலேயே செய்துவிட்டால் அதுவே என்னைக் கரையேற்றாதா? ஆகையால் நான் கர்மாக்களை விட்டு விட்டேன்.] ஒரு கர்மாவுக்கு ஸமாதானமாகச் செய்வது ப்ராயசித்தம். அதற்கும் ஸமாதானமாக இருப்பது ப்ரிதிஸமாதானம்.

7. இவ்விதங்களான காரணங்களினால் நாமகீர்த்தனமே பராயணம் என்று ஏற்படுகிறது. அதில், நாமகீர்த்தன ஸாமான்யத்திற்கே பாபத்தைப் போக்கும் சக்தியிருக்கையில் இந்த (ஸஹஸ்ர) நாமகீர்த்தனத்திற்கிருக்கும் தனியான சக்தி என்ன என்று ஸந்தேஹம் ஏற்படக்கூடும். அது மேலே வரும் ச்லோகங்களால் நீக்கப்படுகிறது. புண்யத்தோடுகூடிய நாமங்களால் பாபநாசம் ஏற்படுவது உண்மைதான். ஆயினும், இருட்டைப் போக்குவதில் மினுமினுப்பூச்சி முதல் அக்னி, சந்த்ர, ஸூர்யாதிகளான தேஜோ விசேஷங்களில் (தமோநாசன) தாரதம்யமிருப்பதுபோல், நாமங்களுக்குள் அம்மாதிரியான (பாபநாசன) தாரதம்யம் இருக்கிறதென்றும் அவ்வித நாமங்களுக்குள் இந்த நாமங்கள்தான் ஸர்வ ச்லாக்யமானதென்றும் காட்டுவதற்காக, நாமங்களுக்குள்ளிருக்கும் பூமிகாபேதங்களை (படிப்படியாக மேலுக்குமேல்) வர்ணிக்கிறார்.

## 69. லௌகிகாத் வசனுன்முக்யம் விஷ்ணுநாமானு கீர்த்தனம் |

லௌகிகமான வசனங்களைவிட விஷ்ணு நாமானுகீர்த்தனமானது முக்யமானது.

1. கடபடாதி ஸாமான்ய சப்தங்களின் ப்ரயோகத்திற்கே புண்யமிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஏக: சப்த: ஸம்யக் ஞாத: ஸுஷ்டு ப்ரயுக்த:
ஸ்வர்கே லோகே காமதுக் பவதி | ' (ச்ருதி)

[நன்ருக அறியப்பட்டதும், அழகாக ப்ரயோகம் செய்யப்பட்டதுமான ஒரு (ஸாமான்ய) சப்தமானது ஸ்வர்கலோகத்திற்கு அழைத்துப்போய் விரும்பிய காமங்களைக் கொடுக்கும்.]

இப்படிப்பட்டதான ஸாமான்ய சப்தங்கள் ஆயிரத்தைக் காட்டிலும் விக்ரமார்க்கன் முதலிய புண்ய ச்லோகர்களான மனுஷ்யர்களைச் சொல்லும் ஓரோர் சப்தத்தினுடைய உச்சாரணமானது விசேஷமான பலனைக் கொடுக்கும்.

'த்ருவம் ப்ரம்ஹருஷீன் ஸப்த புண்யச்லோகாம்ச்ச மானவான் |
உத்தாயாபரராத்ராந்தே ப்ரயதா: ஸுஸமாஹிதா: |
ஸ்மரந்தி மமரூபாணி முச்யந்தே தேऽம்ஹஸோऽகிலாத் || ' (விஷ்ணு பாகவதம்)

இப்பேர்ப்பட்ட நாமஸாஹஸ்ரங்களைக் காட்டிலும் என்பதாக 'லௌகிகாத் வசனுத்' என்று இங்கு சொல்லப்பட்டது.

2. 'விஷ்ணு நாம:' என்பதற்கு விஷ்ணுக்களின் நாமமென்று அர்த்தம். அனந்தமான எண்ணிக்கையுடைய விஷ்ணுக்களுக்குள் யாரேனும் ஒருவருடைய நாமம் ஒன்றைச் சொல்வதே லௌகிக வசனங்கள் எல்லாவற்றையும்விட முக்யமானதென்று சொல்லப்பட்டது. நாமனுகீர்த்தனம் என்ருல் ஒரு நாமத்தையே துடர்ந்தாற்போல் சொல்லுதல்.

3. இதேமாதிரியாக பின்வரும் சிவநாமானுகீர்த்தனம் முதலாகச் சொல்லப்படுமிடங்களிலும் அறியவேண்டும்.

## 70. விஷ்ணுநாம ஸாஹஸ்ராச்ச சிவநாமைக முத்தமம் |

விஷ்ணுநாமங்கள் ஆயிரத்தைவிட சிவநாமம் ஒன்று உத்தமமானது.

1. மேலே சொல்லியபடி, சிவநாமமென்றால் சிவன்களுடைய நாமங்கள்:— அதாவது, ருத்ர, ஈச்வர, சிவ, மஹேச்வர, ஸதாசிவன் என்றவர்களுடைய நாமங்கள். இந்த பேதங்கள்,

'சிவ மேகம் விஜாநீயாத் ஸாதாக்யம் பஞ்சதா பவேத் |
மஹேச்வரோ மஹாஸேன: பஞ்சவிம்சதி பேதவான் ||'

என்பதாக வாதுளசுத்தாகமத்திலும் பிறவிடங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

2. இங்கு சொல்லப்பட்டதின் தாத்பர்யம் பின்வருமாறு:— விஷ்ணுக்களுடைய அனந்தமான நாமங்கள் எல்லாம் சேர்ந்து ஒரு படியாகும். ருத்ரன் முதலாகச் சொல்லப்பட்ட ஒவ்வொருடைய நாமங்களும் அதற்கு மேலுக்குமேல் ஓரோர் படியாகும். அதில் ஒவ்வொருவருக்கும் அனந்தமான நாமங்களுண்டு. ஒவ்வொருவருக்கும்,

'மஹேச்வரோ மஹாஸேன: பஞ்சவிம்சதி பேதக: |'

என்று சொல்லப்பட்டதுபோல் அனேக வ்யூஹங்களிருப்பதை இங்கு சேர்த்துக்கொள்ளவேண்டும். ஆகையினால்தான் இங்கு சொன்னதில் ருத்ரன் என்பதாகச் சொல்லாமல் எல்லோரையும் குறிக்கும் சிவன் என்ற பதம் சொல்லப்பட்டது.

3. இதனால் ஏற்படுவதென்னவென்றால் முதலில் விஷ்ணு நாமம், அதற்குமேல் ருத்ரநாமம், அதற்குமேல் ஈச்வர நாமம், இவ்விதமாக மேலுக்குமேல் பூமிகைகளை (படிகளை) அறிய வேண்டும்.

அந்தந்த அஸாதாரணமான சப்தங்களும் எப்படியாவது சொல்லப்பட்டாலும் உத்தமமானவைதான். ஆகையினால்தான் பரமசிவனைச் சொல்லுமிடத்து சிவன் முதலான சப்தங்களெல்லாம் முக்யமானவை யென்பதாக,

'நாமானி ஸர்வாணி து கல்பிதானி ஸ்வமாயயா நித்யஸுகாத்மரூபே |
ததாபி முக்யாஸ்து சிவாதிசப்தா: பவந்தி ஸங்கல்பனயா சிவஸ்ய ||'

என்று ஸூதஸம்ஹிதையில் சொல்லப்பட்டது. விஷ்ணுவின் நாமங்களைக் காட்டிலும் ருத்ரன் முதலான நாமங்கள்

உத்தமமானவை யென்பதாக சதானந்தரால் யமனுக்குச் சொல்லப்பட்ட வாக்யமானது அதிலேயே இருக்கிறது.

'சிவருத்ராதி சப்தான்யோ விசிஷ்டான் வேத மானவ: |
நாராயணாதி சப்தேப்ய: தம் த்வம் பரிஹர ப்ரபும் || '

பராசர புராணத்திலும், தேவர்களெல்லோரையும்விட ஸ்ருஷ்டிகர்த்தாவான ப்ரம்ஹாவும், அவரைவிட பாலனகர்த்தாவான விஷ்ணுவும், அவரையும்விட ஸம்ஹார கர்த்தாவான ருத்ரனும் ச்ரேஷ்டமென்பதாகச் சொல்லப்பட்டது.

'தேவதாப்ய: ஸமஸ்தாப்ய: ஸ்ரஷ்டா ப்ரம்ஹா பர: ஸ்ம்ருத: |
ப்ரம்ஹணச்ச மஹாவிஷ்ணுர் வரிஷ்ட: ஸர்வபாலக: |
விஷ்ணோரபி பர: ஸாக்ஷாத் ருத்ர: ஸம்ஹாரகாரக: || '

ஸூதகீதையிலும்,

'த்ரிஷு ருத்ரோ வரிஷ்ட: ஸ்யாத் ததோ மாயீ பர: சிவ: |
மாயாவிசிஷ்டாத் ஸர்வஞாத் ஸாம்ப: ஸத்யாதி லக்ஷண: ||
வரிஷ்டோ முனய: ஸாக்ஷாத் சிவோ நாத்ர விசாரணா |
சிவாத் வரிஷ்டோ நைவாஸ்தி மயா ஸத்யமுதீரிதம் || '

என்று சொல்லப்பட்டது. இதில் மாயீ என்ற பதத்தினால் ஈச்வர, சிவ, மஹேச்வர, ஸதாசிவர்களெல்லோரும் அபேதமாகக் குறிக்கப்பட்டார்கள். அம்பாளுடைய மஞ்சத்தைப்பற்றிச் சொல்லுகையில்,

'ப்ரம்ஹா விஷ்ணுச்ச ருத்ரச்ச ஈச்வரச்ச ஸதாசிவ: |
ஏதே பஞ்சமஹாப்ரேதா: பாதமூலே வ்யவஸ்த்திதா: || '

என்று சொல்லப்பட்டபடி, ஸதாசிவனே ஈச்வரனின்றும் வேறாகச் சொல்லப்படும். தவிரவும் சிவன் கட்டிலாகவும், மஹேசானன் தலையணையாகவும், ஸதாசிவன் மெத்தையாகவும், ப்ரம்ஹ, விஷ்ணு ருத்ரேச்வரர்களாகிய நாலு கூலியாட்களும் நாலு கால்களாகவும், மஹேசன் தம்பலப்படிக்கமாகவும் உடைய கட்டிலின்மீது பரமேசானியாகிய அம்பிகை விற்றிருப்பதாகச் சொல்லும்,

'சிவாத்மகே மஹாமஞ்சே மஹேசானோபபர்ஹணே |
அதிரம்யதலே தத்ர கசிபுச்ச ஸதாசிவ: |
ப்ருத்காச்ச சதுஷ்பாதா: மஹேசச்ச பதத்க்ரஹ: |
தத்ராஸ்தே பரமேசானீ மஹாத்ரிபுரஸுந்தரீ || '

என்ற பைரவயாமள வசனத்தில் காமேச்வரரைத் தவிர்த்தவர்களாக ஆறுபேர்களைச் சொல்லப்பட்டிருக்கிறது.

4. மேலே சொல்லிய ஸூதகீதை வசனத்தில் 'ஸாம்ப:' என்பதால் த்ரிபுரஸுந்தரியோடு அபின்னமான காமேச்வர சிவனைச் சொல்லப்பட்டது. அவரே ஸத்யாதி லக்ஷணத்தை யுடையவர்.

'ஸத்யம் ஸர்வகதம் ஸூக்ஷ்மம் கூடஸ்த்தம் அசலம் த்ருவம் |
யோகினஸ் தத்ப்ரபச்யந்தி மஹாதேவ்யா: பரம் பதம் ||
ஆனந்தகம் பரம் ப்ரம்ஹ கேவலம் நிஷ்களம் பரம் |
பராத் பரதரம் தத்வம் சாச்வதம் சிவமவ்யயம் ||
அனந்த ப்ரக்ருதௌ லீனம் தேவ்யாஸ் தத் பரமம் பதம் ||
சுப்ரம் நிரஞ்ஜனம் சுத்தம் நிர்குணம் தைன்யவர்ஜிதம் |
ஆத்மோ பலப்தி விஷயம் தேவ்யாஸ் தத்பரமம் பதம் ||'

என்று கூர்மபுராணத்தில் இந்த ஸத்யாதி லக்ஷணங்களைச் சொல்லப்பட்டிருக்கிறது.

5. இப்படி சிவனுக்கு நாமத்தாலும், ரூபத்தாலும், அவாந்தரபேதங்களிருந்தாலும் உண்மையில் அவர்களெல்லோரும் ஐக்யமானதாலும், நாமங்கள் ஒன்றோடொன்று கலப்புள்ளவையாகையாலும், அந்தந்த மூர்த்தியை ப்ரதானமாகச் சொல்லும் புராணங்கள் வெவ்வேறாக இல்லாததாலும், இங்கு 'சிவநாமைகம்' என்று சொல்லப்பட்டது. இந்தக் காரணத்தால்தான் 'சக்தி ரஹஸ்ய'த்தின் ஆரம்பத்தில் ப்ரம்ஹா முதலானவர்களுடைய கால அளவைப்பற்றிச் சொல்லும்,

'சதுர்யுக ஸஹஸ்ராணி ப்ரம்ஹணோ தினம் உச்யதே |
பிதாமஹ ஸஹஸ்ராணி விஷ்ணோ ரேகா கடீ மதா ||
விஷ்ணோர் த்வாதசலக்ஷாணி நிமேஷார்த்தம் மஹேசிது: |
தசகோட்யோ மஹேசானாம் ஸ்ரீமாதுஸ் த்ருடி ரூபகா ||'

என்ற வசனத்தில் விஷ்ணுவுக்கும் தேவிக்கும் நடுவில் மஹேசனை மட்டும் சொல்லப்பட்டது.

6. இப்படிச் சொல்லுவதில், விஷ்ணுவினுடைய உத்கர்ஷத்தைப் பற்றிச் சொல்லுகிறவைகளால் விஷ்ணு புராணம், விஷ்ணு பாகவதம், ப்ருஹன்நாரதீயம் முதலியவைகளில் ஏராளமான

வசனங்களிருக்கின்றனவேயென்று கேட்டால்—ஆம், இருப்பது வாஸ்தவம்தான். ஆயினும் அவை விஷ்ணுவின் பரத்வத்தைச் சொல்லும்போதெல்லாம் தத்வார்த்தத்தில் சிவனோடு ஐக்யமாயிருப்பதான அபிப்ராயத்தின் பேரில்தான் அப்படிச் சொல்லுகின்றனவாதலால் இங்கு சொல்லப்பட்டதற்கு கொஞ்சமும் விரோதமில்லை. இது,

'வைஷ்ணவேஷு புராணேஷு யோऽபகர்ஷஸ்து த்ருச்யதே |
ருத்ரஸ்யாஸௌ ஹரஸ்யாஸ்ய விபூதேரேவ கேவலம் ||'

என்று பராசர உபபுராணத்திலும்,

'விஷ்ணு ப்ரஜாபதீ இந்த்ராணும் உத்கர்ஷம் சங்கராதபி |
ப்ரவதந்தீவ வாக்யானி ச்ரௌதானி ப்ரவிபாந்த்யபி ||
தானி தத்வாத்மனு தேஷாம் உத்கர்ஷம் ப்ரவதந்தி ஹி |
விஷ்ணு ப்ரஜாப தீந்த்ரேப்யோ ருத்ரஸ்யோத்கர்ஷம் ஆஸ்திகா: ||
வதந்தி யானி வாக்யானி தானி ஸர்வாணி ஹேத்விஜா: |
ப்ரவதந்தி ஸ்வரூபேண வதா தத்வாத்மனுபி ச |
நைவம் விஷ்ண்வாதி தேவானும் இதி தத்வ வ்யவஸ்த்திதி: ||'

என்று ஸூதஸம்ஹிதையிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த, ருத்ரனென்ற பதத்தினல் ஸாம்பனுன காமேச்வரரைக் குறிக்கப்பட்டது. 'விஷ்ண்வாதி தேவானும்' என்பதினல் விஷ்ணுவுக்கும் தேவிக்கும் நடுவிலுள்ள சிவரூபங்களெல்லாம் சொல்லப்பட்டன. இந்த ரூபங்களெல்லாம் இவ்வளவு அதிரஹஸ்யமானதாகையால் குருமுகமாகத்தான் தெரிந்துகொள்ள வேண்டும்.

7. திரும்பவும், இங்கு சொல்லப்பட்டதற்கு விரோதமாக, விஷ்ணு முதலானவர்களுக்கு விநாசம் (அழிவு, நாசம்) இல்லையென்பதாகச் சொல்லும் வசனங்கள் காட்டப்படலாம். அவை விரோதமல்ல. தத்வ த்ருஷ்டியில், 'அஹம் மனுரபவம் ஸூர்யச்ச' என்று வாமதேவர் சொன்ன மாதிரி, அவையும் திரும்பத் திரும்ப உண்டாவதையே குறிப்பதாகும். நம்மை உத்தேசித்து அவர்கள் சிரஜீவிகளாயிருப்பதாலும், ஸ்வரூபத்தோடு உண்டாவதாலும், அவர்களுடைய ஜன்ம, மரணங்கள் நமக்குத் தெரியாதிருப்பதாலும், அவர்களுக்கு விநாசமில்லையென்பதாக நாம் வழக்கமாகச் சொல்லுகிறோம். இது மத்ஸ்ய புராணத்தில்,

'சதாயு: புருஷோ யஸ்து ஸோऽனந்த: ஸ்வல்பஜன்மன: |
ஜீவதோ யோऽம்ருதச்சாக்ரே தஸ்மாத் ஸோऽமர உச்யதே |
அத்ருஷ்ட ஜன்ம நிதனேஷ்வேவம் விஷ்ணவாதயோமதா: ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்விதமாக காமேச்வரருடைய ஆதிக்யமானது ஸித்திக்கும்போது, அவரோடு அபேதமாயிருப்பதாலேயே அவருடைய சக்தியான தேவிக்கும் முன் சொல்லப்பட்டவர்களைவிட உத்தமமாயிருப்பது ஸித்தித்துவிடுகிறது. அப்போது அவர்களிருவர்களுக்குள்,

'சக்த்யா விநா சிவே ஸூக்ஷ்மே நாம தாம ந வித்யதே |'

என்றது போன்ற தந்த்ர வசனங்களிலும்,

'சிவ: சக்த்யா யுக்தோ யதி பவதி சக்த: ப்ரபவிதும்
ந சேத் ஏவம் தேவோ பவதி குசல: ஸ்பந்திதுமபி |'

என்ற 'ஸௌந்தர்ய லஹரி' வசனத்திலும் சொல்லப்பட்டமாதிரி சிவனுடைய உத்கர்ஷமானது சக்திமூலகமானதென்பதாக யுக்தியாலும், எல்லோருடைய அனுபவஸித்தமாயும் ஏற்படுகிறது. இதிலிருந்து 'தத்ஹேதோரேவாஸ்து' என்ற ந்யாயத்தினுல் சிவோத்கர்ஷத்திற்கு ஹேதுவாயிருக்கும் அம்பாளுக்குத்தான் ஸர்வோத்தமத்வம் ஸித்திக்கிறதென்ற அபிப்ராயத்தோடு மேலே சொல்லுகிருர்.

## 70. சிவநாம ஸஹஸ்ராச்ச தேவ்யா நாமைகமுத்தமம் |

ஆயிரம் சிவநாமங்களைக்காட்டிலும் தேவியினுடைய ஒரு நாமம் மேலானது.

1. தேவ்யா :— பரசிவாபின்னையான த்ரிபுரஸுந்தரியினுடைய நாமம் என்று அர்த்தம். இப்படிக் குறிப்பிட்டுச் சொன்னதினுல் தேவீ மாதிரி இன்னம் அனேகம் பேர்களிருக்கிறார்களென்ற சங்கையானது நீக்கப்பட்டது. அவளையேதான் பராசக்தி முதலான பெயர்களால் சொல்லப்பட்டது.

'சிவஸ்ய து பராசக்தி: ஸஹஸ்ராம் ச ஸமுத்பவ: |
பராசக்தே: ஸஹஸ்ராம்சாத் ஆதிசக்தி ஸமுத்பவ: ||
ஆதிசக்தி ஸஹஸ்ராம்சாத் இச்சாசக்தி ஸமுத்பவ: |

இச்சாசக்தி ஸஹஸ்ராம்சாத் ஞானசக்தி ஸமுத்பவ: |
ஞானசக்தி ஸஹஸ்ராம்சாத் க்ரியா சக்தி ஸமுத்பவ: ||

என்று வாதுளசுத்ததந்த்ரத்தில் சொல்லப்பட்டபடி இதர சக்திகளெல்லோரும் பராசக்தியினுடைய அம்சங்களே தவிர, பராசக்தி ஒருவள்தான்.

2. தேவியினுடைய ஸர்வோத்தமத்வமானது

'நிவேதயன் தேவதாயை மஹத்யை'

என்பதுபோல் த்ரிபுரோபநிஷத் முதலான உபநிஷத்துக்களிலெல்லாம் அடிக்கடி சொல்லப்படுவதிலிருந்தும் சிவன் முதலான தேவர்களை உண்டுபண்ணுவதாகச் சொல்லப்படுவதிலிருந்தும் ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. தனியாக மஹதீ தேவதா என்றால் அம்பாளொருவளைத்தான் குறிக்கும். கர்மகாண்டத்தில் இதர தேவதைகளைப் பற்றிச் சொல்லுகையில் அவர்களுடைய அஸாதாரணமான பெயர்களால் சொல்லிவிட்டு நடுநடுவே அவர்களைக் குறிக்கவேண்டி வரும்போது,

'மஹத்யை வா ஏதத் தேவதாயை ரூபம்
மஹதீமேவ தத்தேவதாம் ப்ரீணாதி |'

என்பதாக மஹதியான இந்த தேவதை என்று குறிப்பிடப்படுவதை நாம் பார்க்கிறோம். அம்மாதிரிக் குறிப்பிடாமல் 'மஹதீ தேவதா' என்று சொல்வதானது அம்பாள் ஒருவளுக்குத்தான்.

3. மேலும் அம்பாள் ஸகலதேவதைகளுக்கும் மேலானவள் என்பது,

'அனேக ஜன்ம புண்யௌகை: தீக்ஷிதோ ஜாயதே நர: |
தத்ராப்யனேக பாக்யேன சிவ்விஷ்ணு பராயண: ||
தத்ராப்யனேக புண்யௌகை: சக்திபாவ: ப்ரஜாயதே |
மஹோதயேன தத்ராபி ஸுந்தரீபாவதாம் வ்ரஜேத் ||
தத்ராபி ச துரீயாக்யா பாக்யைரந்தர்கதா பவேத் |
நாமஸங்கீர்த்தனம் தஸ்யா: தத்ராப்யதி ஸுதுர்லபம் ||
யத்ர ஜன்மனி ஸா நித்யா ப்ரஸன்னா நாமகீர்த்தனாத் |
ஜீவன்முக்திர் பவேத்தத்ர கர்த்தவ்யம் நாவசிஷ்யதே ||'

என்ற ருத்ரயாமள வசனம் போன்றவைகளாலும்,

'ப்ரம்ஹணோ ஹ்ருதயம் விஷ்ணு: விஷ்ணோரபி சிவ: ஸ்ம்ருத: |
சிவஸ்ய ஹ்ருதயம் ஸந்த்யா தேனோபாஸ்யா த்விஜாதிபி: || '

என்பதுபோன்ற ஸ்ப்ருதி வசனங்களாலும்,

கௌர்ம, பாத்ம, ஸ்காந்தாதி புராணங்களெல்லாவற்றிலும் அங்கங்கேயும், தேவீ, காளிகா, ப்ரம்ஹாண்ட மார்க்கண்டேயாதி புராணங்களில் வெகு இடங்களிலும், சக்தி ரஹஸ்ய, தேவீ பாகவத த்ருதீய ஸ்கந்தாதிகளில் இதே விஷயமாக எல்லாவிடங்களிலும், ஞானார்ணவ குலார்ணவாதி தந்த்ரங்களில் அபரிமிதமாகவும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

தேவீ நாம ஸஹஸ்ராணி
கோடிச: ஸந்தி கும்பஜ ||

ஹே அகஸ்த்ய! தேவியின் ஸஹஸ்ர நாமங்கள் கோடிக் கணக்காக இருக்கின்றன.

71. தேஷு முக்யம் தசவிதம்
நாமஸாஹஸ்ர முச்யதே |
ரஹஸ்யநாம ஸாஹஸ்ரம்
இதம் சஸ்தம் தசஸ்வபி ||

அந்த (கோடிக்கணக்கான) ஸஹஸ்ரநாமங்களில் பத்துவிதமான நாமஸாஹஸ்ரமானது முக்யமாகச் சொல்லப்படுகிறது. அந்தப் பத்துக்குள் இந்த ரஹஸ்யநாம ஸாஹஸ்ரம் ச்லாக்யமானது.

1. இந்தப் பத்துவித ஸஹஸ்ரநாமங்கள் அவற்றின் பெயர்களின் முதல் அக்ஷரங்களைச் சேர்த்து ஒரே வரியாக,

'ஏதே தசஸ்தவா கங் கா ச்யா ல கா பா ல ரா ஸ பா | '

என்று சொல்லப்பட்டிருக்கின்றன. (கடைசி அக்ஷரம் ப என்பதுதான். பஹு வசனத்திற்காக பா என்று சொல்லப்பட்டது) அவையாவன:—

'கங்கா பவானீ காயத்ரீ காளீ லக்ஷ்மீ: ஸரஸ்வதீ |
ராஜராஜேச்வரீ பாலா ச்யாமளா லலிதா தச || '

2. த்ரிபுர ஸுந்தரியின் பேயருடனேயே பத்துவிதமான ஸஹஸ்ர நாமங்கள் தந்த்ரங்களிலிருப்பதாகவும் சொல்லப்படும்.

72. தஸ்மாத் ஸங்கீர்த்தயேன் நித்யம்
கலிதோஷ நிவ்ருத்தயே |

ஆகையினல், கலியினல் ஏற்படும் தோஷத்தைப் போக்கு வதற்காக இதை நித்யமும் கீர்த்தனம் செய்யவேண்டும்.

1. கலியுகத்தில், தங்கள் தங்கள் கர்மாக்களை அனுஷ்டிப் பதில் ஏற்படும் வைகல்யத்தை — அங்கலோபத்தை — போக்கி, அவற்றுக்கு அங்கபூர்த்தி செய்வதற்காக இந்த ரஹஸ்யநாம ஸாஹஸ்ரத்தை தினந்தோறும் (இடைவிடாமல்) பாராயணம் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டது.

2. ஆயினும் இங்கு வைகல்யம் என்பதினல் அங்கலோபம் மட்டும் சொல்லப்படவில்லை, ப்ரதான லோபமும் சொல்லப் பட்டது. கலிதோஷ மென்பதினல் எல்லா லோபங்களும் வித் யாஸமில்லாமல் சொல்லப்பட்டன. ஆகவே, இந்தக் காலங்க ளில் கர்மடர்களென்று தங்களை நினைத்திருக்கும் எல்லோருக்கும் இந்த கீர்த்தனமானது அத்யாவச்யம் என்று ஏற்படுகிறது. உதா ரணமாக, யாகமென்பது ஒரு தேவதையை உத்தேசித்து த்ரவ் யத்தை த்யாகம்செய்வது. அப்போது அதில் மானஸிகமான ஸங்கல்பம்தான் முக்யமானது. அதில்லாமல் 'அக்னயே நமம' என்பது போன்ற பதங்களை ஸ்பஷ்டமாகச் சொன்னலும் ப்ர தானலோபம் ஏற்படக்கூடியதாயிருக்கிறது. இதேமாதிரி, ஸந் த்யாவந்தனத்தின்போது சொல்லப்படும் 'அஸாவாதித்யோ ப்ரம்ஹா' என்ற மந்த்ரத்திற்கு, ஆதித்யனிலிருக்கும் சைதன்யத் தோடு தன்னிடமுள்ள சைதன்யமானது அபேதமாயிருப்ப தான பாவனையானது ப்ரதானமானது. அவ்விதமான பாவ னையை சிஷ்டர்களுக்குள் ரஹஸ்யமறிந்தவர்கள்கூட எப்போ தாவதுதான் செய்வார்களேயல்லாது ஸர்வகாலமும் செய்வார்க ளென்று நிச்சயமாகச் சொல்லமுடியாது. ஆகவே ப்ரதான லோபமும் யாருக்கும் நேரிடக் கூடியதாயிருக்கிறது. அவ்வித லோபமானது (அங்கபூர்த்தியை யுத்தேசித்துச் செய்யப்படும்) ப்ராயச்சித்த கர்மாக்களால் ஸமாதானமாகக் கூடியதல்ல.

அங்கலோபங்களுக்காக மட்டும்தான் அவை சொல்லப்பட்டிருக்கின்றன. ப்ரதானலோபத்திற்கு அவை ப்ரயோஜனப்படமாட்டா. அப்போது (அங்கக் கர்மாவை) திரும்பச் செய்ய வேண்டும் என்பதுதான் ஸித்தாந்தம். இந்த நாமகீர்த்தனமோ அவ்விரண்டு விதமான லோபங்கள் நேரிடும்போதும் ஸமாதானமாயிருப்பதால் அதினுடைய உத்கர்ஷமானது தெளிவாக ஏற்படுகிறது.

அப்படியானல், கர்மகாண்டத்தில் சொல்லப்பட்டிருக்கும் ப்ராயச்சித்தங்களெல்லாம் ப்ரயோஜனமற்றவைதானே என்ற ஸந்தேஹத்தைக் குறித்து, மேலே சொல்லுகிறுர்.

முக்யம் ஸ்ரீமாத்ரு நாமேதி
ந ஜானந்தி விமோஹிதா: ||

73. விஷ்ணு நாம பரா: கேசித்
சிவ நாம பரா: பரே |
ந கச்சிதபி லோகேஷு
லலிதாநாம தத் பர: ||

மோஹமடைந்த புத்தியையுடையவர்கள் அம்பாளுடைய நாமம்தான் முக்யமென்பதை அறிவதில்லை. சிலர் விஷ்ணு நாம பரர்களாயும், பிறர்கள் சிவ நாம பரர்களாயுமிருக்கிறுர்கள். லலிதாம்பாளுடைய நாம தத்பரர்களாக லோகங்களில் ஒருவர் கூட இல்லை.

1. மாயையினல் மோஹமடைந்த சித்தத்தையுடையவர்கள் அல்பமான தேவதைகளிடத்தில் மஹத்வ புத்தியோடு கூடியவர்களாய் அந்தந்த தேவதையின் உபாஸனையில் ஈடுபடுகிறுர்கள். இவ்விதமான ப்ரவ்ருத்தியைப்பற்றி பாஸ்கரராயர் தன்னுடைய 'சிவஸ்தவ'த்தில்

'மாயோப நேத்ர பரிகூஹித நேத்ரகஸ்ய
லேகோ மஹானிவ விபாதி யதல்பகோபி | '

என்பதாகச் சொல்லியிருக்கிறுர்கள்.

இவ்வித சேதோ வ்ருத்தியானது எண்ணிக்கையற்ற விதங்களாய் இருக்கக்கூடுமாகையால் யார் யாருக்கு எப்படியெப்படி

ருசியிருக்குமோ அதனை உத்தேசித்து அந்தந்த சாஸ்த்ரங்கள் சொல்லுகின்றன. போகத்திலும் சிலர்கள் பெரியதும் கடினமானதுமான உபாயத்தையும், சிலர்கள் லகுவான உபாயத்தையும், அவரவர்கள் மனதின்படி தேடுவதை நாம் பார்க்கிறோம். ஆகவே லோகத்திலிருக்கும் ஸகலஜனங்களையும் அனுக்ரஹிக்கும் உத்தேசத்துடன் அவர்களுடைய பின்னருசிக்குத் தக்கபடி அந்தந்த சாஸ்த்ரங்களை அம்பாள் ஏற்படுத்தியிருப்பதால் அவைகள் ப்ரயோஜனமற்றவையென்று சொல்வது கூடாது. மேலும் ஊற்றுக்கால்வாய்மாதிரி அவற்றிலிருந்து ஸஹஸ்ரநாம பாடத்திற்கு ருசியுண்டாவதாலும் அவைகளால் ப்ரயோஜனமிருக்கிறது.

2. இந்த ரஹஸ்யநாமபடனமாகிய லகுவான உபாயமிருந்தும் ஜனங்கள் கடினமான இதர உபாயங்களைத் தேடும் ப்ரவ்ருத்தியானது அவரவர்களுடைய கர்மானுஸாரமாக இருக்கும் வ்யாமோஹத்தினல் ஏற்படுகிறதென்பது 'முக்யம்................... விமோஹிதா:' என்பதின் தாத்பர்யம்.

3. ச்ரௌத, ஸ்மார்த்த கர்மாக்கள் செய்வதிலேயே முயற்சியுடையவர்கள் அனேக ஜன்மங்களில் அந்தக் கர்மாக்களைச் செய்வதிலிருந்து ஏற்படும் புண்ய பரிபாகத்தினல் அவர்களில் அனேகம் பெயர்களுக்கு விஷ்ணு நாமங்களில் ப்ரீதி ஏற்படுகிறது என்பதை 'விஷ்ணு நாம பரா: கேசித்' என்பதினல் சொல்லப்பட்டது. அவ்விதம் விஷ்ணுநாம கீர்த்தனத்தைச் செய்வதினல் சில ஜன்மங்களுக்குப் பிறகு அவர்களிற் சிலருக்கு சிவநாமங்களில் ப்ரீதி ஏற்படுகிறதென்பதை 'சிவநாம பரா: பரே' என்பதினல் சொல்லப்பட்டது.

4. சிவனுடைய ரூபங்களோ படிப்படியாக அனேக விதங்களாயிருப்பதினல் சிவநாமபரர்களாயிருப்பவர்கள் அந்த ரூபங்களுக்கு பரஸ்பரமிருக்கும் தாரதம்யமானது அறிவதற்கு முடியாததாயிருப்பதால், அனேக ஜன்மங்களின் ப்ரயத்னத்தினல் மேலான படியை அடைந்தபோதிலும், மத்தியில் (நடுவில்) தானிருப்பவர்களாக இருப்பார்கள். சிவகனுடைய ரூபங்கள் அதிரஹஸ்யமானதால் இன்னவென்று நிர்ணயிப்பது ஸுலபமான விஷயமல்ல. இப்படி ஏராளமான ஜன்மங்களில் சிவநாம

பர்களாயிருந்து அவற்றில் ஸம்பாதித்த புண்யராசி காரணமாக அதிரஹஸ்யமான தேவீநாமங்களில் ப்ரீதி ஏற்படுவதால், அது கிடைப்பது மிகவும் துர்லபமானதென்று ஏற்படுகிறது. இத னால்தான்,

'யஸ்ய நோ பச்சிமம் ஜன்ம யதி வா சங்கர: ஸ்வயம் |
தேனைவ லப்யதே வித்யா ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ ||'

என்று ஸ்ரீ லலிதாத்ரிசதியில் சொல்லப்பட்டது. (யாருக்கு அடுத்த ஜன்மமில்லையோ, யார் சங்கர ஸ்வரூபமாகவே இருக் கிறானோ, அவனால் மட்டுமே ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ வித்யை யானது அடையப்பெறுகிறது.) இங்கு, க்ரமமாக சங்கரர் களுடைய ரூபங்களோடு அபேதமாயிருப்பதை அநுஸந்தானம் பண்ணுவதான உபாஸனையின் மூலமாக கடைசியான சங்கர ரூபத்தோடு தாதாத்ம்யம் அடைந்தவனை 'யதிவா சங்கர: ஸ்வயம்' என்று சொல்லப்பட்டது.

5. தேவீ நாமத்தில் தத்பரனாயிருப்பது இவ்வளவு துர்லப மாக இருப்பதால், அதை அனேகமாய் இல்லையென்றே சொல்ல வேண்டுமென்ற அபிப்ராயத்தோடு இங்கு,

'ந கச்சிதபி லோகேஷு லலிதா நாம தத்பர: |'

என்று சொல்லப்பட்டது. (லோகேஷு என்பதினால் மனுஷ் யர்கள், தேவர்கள், தானவர்கள் இவர்கள் எல்லோரையும் சொல்லப்பட்டது.)

இதற்குமேல், தான் இதுவரையில் சொல்லாமல் வைத் திருந்த அபிப்ராயத்தை வெளிப்படையாகச் சொல்லுகிறார்.

74. யேனான்யதேவதா நாம
கீர்த்திதம் ஜன்மகோடிஷு |
தஸ்யைவ பவதி ச்ரத்தா
ஸ்ரீதேவீநாமகீர்த்தனே ||

எவனால் கோடிகள் கணக்கான ஜன்மங்களில் இதர தேவதைகளின் நாமங்கள் கீர்த்தனம் செய்யப்பட்டனவோ, 'அவ னுக்கு மட்டுமேதான் ஸ்ரீதேவியின் நாமகீர்த்தனத்தில் ச்ரத்தை உண்டாகிறது.

1. விஷ்ணு, ருத்ர, ஈச்வராதிகளான இதரதேவதைகளின் ஒவ்வொருவருடைய நாமத்தையும் ஜன்மகோடிகளில் கீர்த்தனம் செய்து, படிப்படியாக அந்தந்த தேவதையின் தாதாத்ம்யத்தை அனுஸந்தானம்செய்து உபாஸித்து, கடைசியாக சிவரூபங்களில் கடைசியான ரூபத்தோடு தாதாத்ம்யமடைந்தவனான உத்தம புருஷனுக்குத்தான் ஸ்ரீதேவீ நாமகீர்த்தனத்தைப்பற்றியதான ச்ரத்தையானது ஏற்படுமே தவிர மற்றவர்களுக்கு ஏற்படாது என்பது இதின் தாத்பர்யம்.

ஆயினும், இப்படி தேவீ நாமகீர்த்தனத்தில் ச்ரத்தை யேற்பட்டும் திரும்பத்திரும்ப ஜன்மமேற்படுவதாயிருந்தால் என்ன ப்ரயோஜனம் என்ற கேள்விக்கு, மறு ஜன்மமே கிடையா தென்ற பதிலை த்ருஷ்டாந்தத்தோடு மேலே சொல்லுகிறார்.

75. சரமே ஜன்மனி யதா
ஸ்ரீவித்யோபாஸகோ பவேத் |
நாம ஸாஹஸ்ர பாடச்ச
ததா சரம ஜன்மனி ||

எப்படி ஒருவன் கடைசி ஜன்மத்தில் ஸ்ரீவித்யோபாஸகனாக ஆவானோ, அதேமாதிரி நாமஸாஹஸ்ர பாடமும் கடைசி ஜன்மத்தில் ஏற்படும்.

1. இதைச் சொல்லுவதற்கு வேறு உபமானமில்லாததினால் தேவியின் நாமத்திற்கு தேவியின் மந்த்ரமே உபமானமென்ற அபிப்ராயத்தோடு இம்மாதிரி சொல்லப்பட்டது.

2. 'ஸ்ரீவித்யோபாஸக:' என்பதினால் ஸ்ரீவித்யையினுடைய உபாஸனை சொல்லப்பட்டது. உபாஸனையென்பது குரு, தேவதை, மந்த்ரம் இவற்றோடு தான் ஐக்யமாக இருப்பதான பாவனையின் மூலமாக ஸித்திப்பதால், அவ்வித தாதாத்ம்யம் ஸித்திக்கப் பெற்றவனே இங்கு உபாஸகனென்று குறிக்கப்பட்டு அவ்விதமான உபாஸ்தியை 'ஸ்ரீவித்யோபாஸக:' என்ற பதத்தின் மூலமாகச் சொல்லப்பட்டது. அவ்விதமான தாதாம்யமானது கடைசி ஜன்மத்தில்தான் ஏற்படுமென்பது ஏற்கனவே சொல்லப்

பட்ட 'யஸ்ய நோ பச்சிமம் ஜன்ம' என்ற ஸ்ரீ லலிதாத்ரிசதீ வசனத்தில் சொல்லப்பட்டது. (அவ்விதமான உபாஸ்தி ஏற்பட்டுவிட்டால் மறு ஜன்மம் கிடையாதாகையால் அது கடைசி ஜன்மத்தில்தான் ஏற்படும் என்று வேறு விதமாகச் சொல்லப் பட்டது.)

4. அல்லது, 'நாமஸாஹஸ்ர பாட:' என்ற பதமானது நாம ஸாஹஸ்ரத்தைப் படனம் செய்கிறவனைக் குறிக்கும். அப்போது எப்படி கடைசி ஜன்மத்தில் ஸ்ரீவித்யோபாஸகனாக ஆவானோ, அம்மாதிரி கடைசி ஜன்மத்தில் நாமஸாஹஸ்ர பாடகனாக ஆவான் என்று அர்த்தம் சொல்லலாம். எப்படி உபாஸகனென்ற பதமானது உபாஸ்தியைக் குறிப்பதாக வைத்துக்கொண்டு அதற்கு உபமானமாக படனத்தைச் சொல்லலாமோ, அது போல பாட: என்ற பதமானது பாடகனைக் குறிப்பதாக வைத்துக்கொண்டு உபாஸகனுக்கு உபமானமாக பாடகனைச் சொல்லலாம்.

4. ஆகவே, ஸ்ரீவித்யோபாஸ்திக்கு நாமஸாஹஸ்ர படனமும், ஸ்ரீவித்யோபாஸகனுக்கு நாமஸாஹஸ்ர பாடகனும்தான் பரஸ்பரம் உபமான உபமேயமென்று தாத்பர்யம்.

இப்படி நாமஸாஹஸ்ர பாடகனுக்கு உபமானமாக ஸ்ரீவித்யோபாஸகனை ஸ்தூலமாகச் சொல்லிவிட்டு, அவ்வித உபமானத்தின் லக்ஷணத்தை அடுத்தாற்போல் தெளிவாகச் சொல்லுகிறார்.

76. யதைவ விரளா லோகே
ஸ்ரீவித்யா சாரவேதின: |
ததைவ விரளோ குஹ்ய
நாமஸாஹஸ்ர பாடக: ||

எப்படி உலகத்தில் ஸ்ரீவித்யையின் ஆசாரத்தை அறிந்தவர்கள் மிகக்குறைவாக இருக்கிறார்களோ, அதேவிதமாக ரஹஸ்யநாம ஸாஹஸ்ரத்தை படனம் பண்ணுகிறவனும் மிகக் குறைவாக இருக்கிறான்.

1. ஸ்ரீவித்யா மந்த்ரத்தைமட்டும் கிடைக்கப்பெறுவதை உபாஸ்தி என்று சொல்லமுடியாது. அது ஸுலபமான உபாயத்தால், புஸ்தங்கள் முதலியவைகளால் கூட, கிடைத்துவிடும். ஆயினும் அது ஸம்பந்தமாக, பாஹ்ய, ஆந்தர பேதங்களால் வெவ்வேறுன ஆசாரமெல்லாவற்றையும் பற்றிய பூர்ண ஞானத்தோடு அனுஷ்டிப்பதிருக்கிறதே அது மிகவும் குறைவாகக் காணப்படும். இதனால்தான் கௌலமார்கத்தில் குரு என்று சொல்லிக்கொள்பவர்கள் எண்ணிக்கையற்றவர்கள் என்பதாக 'கௌலிகே குரவோऽனந்தா:' என்று 'சக்திரஹஸ்ய'த்தில் சொல்லப்பட்டது.

2. ச்ரௌத, ஸ்மார்த்த ஆசாரங்களைப்பற்றிய க்ரந்தங்கள் அனேகம் இருப்பதாலும், அந்த ஆசாரங்களைப்பற்றி பூர்ணமான ஞானத்தோடு கூடியவர்கள் அனேகம் பெயர்கள் இருப்பதாலும் ஒரு குருவின் மூலமாகவே (அல்லது இரண்டு, மூன்று குருக்கள் மூலமாயாவது) சிஷ்யனுடைய மனோரதமானது பூர்த்தியடையக் கூடும். ஸ்ரீவித்யாசாரத்தைப்பற்றி அவ்விதம் சொல்லமுடியாது. ஸ்ரீவித்யையைப்பற்றிய ஆசாரங்கள் எந்த க்ரந்தங்களிலும் பூராவாகச் சொல்லப்பட்டவையல்ல. (அப்படிச் சொல்வதாயிருந்தால் யோகினிகளின் சாபம் ஏற்பட்டுவிடுமென்று சொல்லப்பட்டிருக்கிறது.) ஆகையினால் தான் உத்தர சது:சதியில் இதைப்பற்றிச் சொல்லும்போது, ஸ்ரீவித்யையின் உபதேசமானது கர்ண பரம்பரையாக வந்ததென்று சொல்லப்பட்டதே தவிர, புஸ்தக பரம்பரையாக வந்ததென்று சொல்லப்படவில்லை.

'கர்ணாத் கர்ணோபதேசேன ஸம்ப்ராப்தம் அவனீ தலம் |'

குருக்களின் முகமாகவேதான் ஸமஸ்தமான ஆசாரத்தைப் பற்றிய ஞானமானது அடையப்படக்கூடுமென்பது இதின் தாத்பர்யம். இதனால்தான், ஞானத்தைத்தேடும் சிஷ்யன் அனேகம் குருக்களை அண்டி உபதேசம் பெறலாம் என்பதாக

'மதுலுப்தோ யதா ப்ருங்க: புஷ்பாத் புஷ்பாந்தரம் வ்ரஜேத் |
ஞானலுப்தஸ் ததா சிஷ்யோ குரோர் குர்வந்தரம் வ்ரஜேத் ||'

என்று அனுமதிக்கப்பட்டு, அதற்கு

'பூர்ணாபிஷேக கர்த்தா யோ குருஸ் தஸ்யைவ பாதுகா |'

என்று எல்லையும் காட்டப்பட்டிருக்கிறது.

3. ஆகவே, மந்த்ரம் கிடைத்திருப்பதே அரிதாயிருந்தாலும் அது இங்கு போதுமான உபமானமல்ல. அதிலும் அரிதான ஸ்ரீவித்யாசாரவேதனம் தான் நாம ஸாஹஸ்ர படனத்திற்கு உபமானமென்று இங்கு சொல்லப்பட்டது.

4. இதின் இரண்டாவது அடியில் 'குஹ்ய' என்பதற்குப் பதிலாக 'லோகே' என்ற பாடாந்தரம் உண்டு.

மந்த்ரராஜ ஜபம், சக்ரராஜத்தின் அர்ச்சனம் இவையிரண்டும் ஸ்ரீவித்யோபாஸ்தியில் அடங்கிய பாகங்கள். இவ்விரண்டும் அரிதாயிருப்பதாயும், ரஹஸ்யநாமபடனமும் அரிதாயிருப்பதாயும் சொல்லப்பட்டிருப்பதிலிருந்து அவை மூன்றும் சேர்ந்தாற்போல் ஒருவரிடமிருப்பது இன்னம் அரிதாயிருக்குமாதலால் அதைப்பற்றி மேலே சொல்லுகிறார்.

77. மந்த்ரராஜ ஜபச்சைவ
சக்ரராஜார்ச்சனம் ததா |
ரஹஸ்யநாம பாடச்ச
நால்பஸ்ய தபஸ: பலம் ||

ஸ்ரீவித்யையின் ஜபமும், ஸ்ரீசக்ரத்தின் அர்ச்சனமும், ரஹஸ்ய நாமஸாஹஸ்ரத்தின் படனமும், அல்ப (சொல்பமான) தபஸ்ஸின் பலமல்ல.

அதாவது, அவை மூன்றும் அளவற்ற தபஸ்ஸினுல் ஏற்படக்கூடியவையே தவிர, ஸாமான்யமான தபஸ்ஸினுல் கிடைக்கமாட்டாதென்று தாத்பர்யம்.

இவ்விதம் இந்த நாமஸாஹஸ்ர படனத்தினுல் தேவியின் ப்ரீதியேற்படுவதையும், ஸர்வகாமங்களடைவதையும் சொல்லிவிட்டு இதற்குமேல், அவ்வித படனமில்லாவிட்டால் அம்பாளுடைய ப்ரீதியாவது இஷ்டஸித்தியாவது கிடைக்காது என்பதை உதாரணங்களோடு சொல்லுகிறார்.

78. அபடன் நாமஸாஹஸ்ரம்
ப்ரீணயேத்யோ மஹேச்வரீம் |
ஸ சக்ஷுஷா விஞ ரூபம்
பச்யேதேவ விமூடதீ: ||

